91/1

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

சிவசண்முகன் றுணை.



ஸ்ரீகாஞ்சிபுரத்தில், ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுளின்

வரப்பிரசாதராயெழுந்தருளியிருந்த

கச்சியப்பசிவாசாரிய சுவாமிகளியற்றிய

# கந்தபுராண மூலமும்

முத்தமிழ் ரத்நாகரம்

ம. தி. பானுகவி அவர்களியற்றிய

கலாபூஷணமென்னும் உரையும்

இவை

தா-குப்புசாமிநாயகர் கம்பெனியாரால்

தமது

சென்னை ஸ்டார் ஆப் இந்தியா பி...

பதிப்பிக்கப்...




1907.

VOL. I. Reg... 

Title page Printed. at The Caslon & Co, Madras, 18-12-16.

உ
கணபதிதுணை.
திருச்சிற்றம்பலம்.
சிவசண்முகபரப்பிரஹ்மமணேநம:.

# கந்தபுராணம்.

## விநாயகர்காப்பு.

திகட சக்கரச் செம்முக மைந்துளான்
சகட சக்கரத் தாமரை நாயகன்
அகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

(இதன்பதப்பொருள்.) திகழ்- விளங்குகின்ற, தசக்கரம் - பத்துத்திருக்கரங்களையும், செம்முகம் ஐந்துளான்- செவ்விய ஐந்து திருமுகங்களையுமுடைய சிவபெருமானது, சகடம்-(பூமியாகிய) இரதத்திற்கு, சக்கரம் - சக்கரமாகவமைந்த, தாமரைநாயகன்-தாமரைநாயகனாகிய (சூரியனானவன்,) அகட - தமது திருவயிற்றினிடத்ததாகிய, சக்கரம் - வட்டவடிவமைந்த, வில்மணியாக - ஒளிபொருந்திய மாணிக்கம்போல,உறை-வசிக்கப்பெற்ற,விகடசக்கரன்-விகடசக்கரவிநாயகக்கடவுளது, மெய்ப்பதம் - மெய்ம்மையாகிய திருவடிகளை, போற்றுவாம் - (யாம்)துதிசெய்வோம்.—(என்றவாறு.)

விளங்குகின்ற பத்துத்திருக்கரங்களையும், செவ்விய ஐந்துதிருமுகங்களையுமுடைய சிவபெருமானது தேர்ச்சக்கரமாகவமைந்த சூரியனானவன், தமது திருவயிற்றினிடத்ததாகிய வட்டவடிவமைந்த ஒளிபொருந்திய மாணிக்கம்போல்வசிக்கப்பெற்ற விகடசக்கர விநாயகக்கடவுளது மெய்ம்மையாகிய திருவடிகளைத் துதிப்பாம். என்க.

ஸ்ரீகுமரகோட்டத்தெம்பெருமானது திருவருட்பிரசாத வள்ளலாராகிய இந்நூலாசிரியர் தாம் பாடத்தொடங்கிய கந்தபுராணம் இடையூறின்றி இனிது முடிதற்பொருட்டு முதற்கண் மங்கலமொழியும், அந்நூற்றலைவர் குமாரக்கடவுளாதலின் குமரப்பொருத்தமும், மற்றும் நூற்குவேண்டிய பல்வகைப்பொருத்தங்களு மமையக்கூறவேண்டுவது இன்றியமையாத தாகலின், அவையனைத்து மடங்க முதற்கண், 'திகழ்' என்றும், மேல் கடவுள் வாழ்த்தில் 'திருவந்த' என்றுங் கூறினர்.

பரமபதியாகிய சிவபெருமான், வேல், அபயம், சூலம், மாத்திரைக்கோல், துடி என்பனவற்றை யேந்திய ஐந்து வலத்திருக்கரங்களும், வரதம், மாதுளம்பழம், சர்ப்பம், ஜபவடம், நீலோற்பலம் என்பனவற்றை யேந்திய ஐந்து இடத்திருக்கரங்களுமாகிய பத்துத்திருக்கரங்களும் பகலவன் போன் றொளிவிசப்பெற்றுள்ளவரென்பார், 'திகடசக்கரம்' என்றும், ஊர்த்துவதிசைநோக்கிப் பளிங்குநிறமுற்று விளங்கும் ஈசானமுகமும், கீழ்த்திசைநோக்கிப் பொன்னிறமுற்று விளங்கும் தற்புருடமுகமும், தென்றிசைநோக்கிக் கருநிறமுற்றுவிளங்கும் அகோரமுகமும், மேற்றிசைநோக்கிச்

தென்றிசைநோக்கி விளங்கும் வாமதேவமுகமும், வடதிசைநோக்கி வெண்ணிறமுற்று விளங்குஞ் சத்தியோசாதமுகமுமாகிய ஐந்து திருமுகங்களாலும்,—"இன்னவை யிரண்டியைந்தருள்வலியாலின்றநான்மறையையங்நான்கும், பின்னிவனருளாலளவில வானபிரணவமாதிமந்திரமு, மன்னவாமுனதாரகத்தகார மாதியக்கரங்களுமுதித்து, சொன்னவக்கரந்திற்சிவாகமநூலிச்சுரவரனடுமுகத்துதித்த." "கீட்டிசைமுகத்தென்றமெய்த்தாலைந்திற்பிளந்ததா லிருக்கதுவென்பா, லீட்டியவிரண்டாம்வேதநூறுருவோடெழுந்ததுகுடதிசைமுகத்தி, னீட்டியசாமமாயிரமுகத்தா னிமிர்ந்ததுவடதிசைமுகத்தி, நீட்டியவொன்பதுருவொடுகிளைத்துநடந்ததுநான்கதாமறையே." என்னும் பிரமாணப்படி வேதசிவாகமங்களை யருளிச்செய்த அருள்வள்ளலென்பார், 'செம்முகமைந்துளான்' என்றும், புரத்துறுமவுணரைப் பொடித்தற்பொருட்டுப் பெருமானெழுந்தருளிய இரதத்திற்குப் பூமியேதேர்த்தட்டாக வமைந்ததென்பார், 'சகடம்' என்றும், அத்தகைய சகடத்திற்கு உருளைகளாயமைந்த இருசுடர்களுள், குமுதநாயகனாகிய சந்திரனிற்கக் கமலநாயகனாகிய சூரியனே பேரொளிப்பிழம்பைப் பெற்றுள்ளானென்பார், 'சகரந்நாமரைநாயகன்' என்றும், ஸ்ரீவிநாயகப்பெருமான் பிரமனுக்குச் சிருட்டித்தொழிலை யுணர்த்தற்பொருட்டு விச்சுவருபங்கொண்ட காலத்து அவரது திருமுடி அண்டகடாக முடுருவிச்சென்றும், திருவடி பாதல முடுருவிச் சென்றும், இடை சூரியமண்டலத்தியைந்தும் விளங்கலின், இடைக்கண்ணமைந்த சூரியன் அவ்வெம்பெருமான் உதரபந்தனமாக வணிந்த பேரணியிற் பதித்த பெருமொளிவீசும் முழுமணிபோன்று விளங்கினனென்பார், 'அகடசக்கரவின்மணியாவுறை' என்றும், விண்டுவின் சேனாதிபதியாகிய விடுவசேனன் சக்கரம் பெறுதற்பொருட்டுத் திருமுன்னின்று விகடக்கூத்தாட வதனைக்கண்டு மகிழ்கூர்ந்து அச்சக்கரங்கொடுத்தருளியகாரணத்தான் விளங்குந்திருநாமமுடையாரென்பார், 'விகடசக்கரன்' என்றும் இந்திரபதமுதலிய பதங்களிலுள்ள புண்ணியத்தளவு பசுபோக நுகர்ந்து, அஃதொழிந்துழிமீண்டும் ஜனனமரணப்பட்டுழலுமாறுபோலன்றி, பெருமானது திருவடிப்பேறு மீண்டுவாரா மெய்ந்நிலையைத் தருமென்பார், 'மெய்ப்பதம்' என்றும், அத்தகைய மெய்ப்பதத்தைப் போற்றி வணங்குதலே எமக்குத்திறனுமென்பார் 'போற்றுவாம்' என்றுங் கூறினார்.

விகடசக்கரச்செம்முகமைந்துளான், என்றது, சிவபெருமானது இருபத்தைந்து மூர்த்தங்களிற்சிறந்த சதாசிவமூர்த்தத்தை அவை "மதியணியுஞ்சடையாருமைகேள்வர்மழவிடையார் - சதியினடம்புரிவார் கலியாணர்தலையினுண்பார் - கதிமதற்செற்றவர்காலற்குங் காலரெயிலெரித்தார் - துதியிற் சலந்தரனைவதைத்த சுதந்திரரே. அத்தியுரித்தவர் வேள்வியழித்தவர் மாலத்தனார் - சத்தியொர்பாகர் கிராதர் கங்காளர் சண்டேசருக்குச் - சித்தியளித்தவ ராலாலமுண்டவர் செம்பொறியான் - பத்தியினுக்கொரு சக்கரமீந்தபரம்பரனே. கரிமுகனுக்கருள்செய்தார் சோமாக்கந்தர்காலொன்றுளா - சூரியசுகாதனர் ஞானோபதேசரிலிங்கத்துற்ற - இருபத்தைந்தடைந்த விக்கிரகங்களெனுமிவர்தாந் - தெரிவுறக்கொண்டமைத் தாமாளவந்தசெயலிதுவே" என்னுஞ் செய்யுட்களாலுணர்க.

பலநூல்களிலும், "எண்டோள் வீசிநின்றுடும்பிரான்றனை" "எண்கரத்திறைனை" என்று பலவாறுஎட்டுத்திருக்கரங்களையேகூறியிருக்க, ஈண்டுத் தசக்கரம் என்றுகூறியது, செம்முகமைந்துளான் என்றதற்கேற்பவென்க. பத்துத் திருக்கரங்களுடைமையினை, "[illegible]

[illegible]

வ்யாஸஸூத்ராவ்ருத்த்வகஷதிஶிவயோஸ்யபாஐ||" என்னும் ஸ்ரீ ஹரதத்தாசாரியசுவாமிகள் திருவாக்காறுணர்க.

'அகடசக்கரவின்மணியா' என்பதற்கு, அகடு - வயிற்றின்கண் அசக்கு-அசங்கத்தரித்த, அரவின்மணியா-நாகரத்தினம்போல, எனப்பொருள்கூறினுமாம்.

மனம்-வாக்கு-காயம் என்னுந் திரிகரணவழிபாடும்நூல்களிற் கேட்கப்பட்டவாறுபோன்றுஈண்டமையாமல்,போற்றுதலாகிய வாக்கின்றொண்டொன்றே ஈண்டுக் கூறப்பட்டதெனின், "ஒருமொழியொழிதன் னினங்கொளற் குரித்தே"என்னும் இலக்கணத்தால், இடைவிடாது சிந்தித்தலாகிய மனத்தின்றொண்டும், அவன் திருப்பணிசெய்தலாகிய காயத்தின்றொண்டும் போந்தவாறுகாண்க.

திகழ் + தசக்கரம் = திகடசக்கரம் எனப்புணர்ந்தது. இதனை:—

" நான்கொடுமூன்றொன்பதாமுயிரின்பின்புநவ்வருமே
லேன்றனுஞாரமதாகும்பதினைந்தொடெண்ணிரண்டாய்த்
தோன்றுடற்பின்னர்த்தகாரம்வரினிரண்டுந்தொடர்பா
லான்றவைந்தாமுடலா முன்பிலொற்றுக்கழிவுமுண்டே" என வீரசோழியத்துச் சந்திப்படலத்திற் பதினைந்தாஞ் செய்யுளானுணர்க. சகடம் சக்கரம், என்பது சகடசக்கரம் எனத்தொகுத்தல் விகாரம்பெற்றது. அகட என்னுங் குறிப்புப் பெயரொச்சம் மணியென்னும் பெயர்கொண்டு முடிந்தது. ஆக என்பது, ஆ என ஈறுகெட்டு நின்றது. போற்றுவாம் என்பது, தனித்தன்மைப்பன்மை.

திகடசக்கரச் செம்முகமைந்துளான் - சகடசக்கரத் தாமரை நாயகன், என்பதனுள்ளடங்கிய சரித்திரவரலாறு:—முன்பொரு காலத்தில், தாரகாசுரன்புதல்வர்களாகிய தாரகாக்ஷன்-கமலாக்ஷன் - வித்யுந்மாலி என்னும் மூன்றசுரர்கள் பிரமனை நோக்கித் தவஞ்செய்யப் பிரமன் பிரத்தியக்ஷமாய், உங்கட்குவேண்டிய வரத்தைக் கேளுங்களென்ன, அவர்கள் திரிலோகங்களிலும் சஞ்சரிக்கத்தக்க பொன்-வெள்ளி-இரும்புகளாலாகிய மூன்றரண்களிலிருந்து அநேககோடிகாலம் தனித்தனியரசு செய்யவும், ஆயிரம் வருடத்திற்கொருமுறை அம்மூன்றும் ஒன்றாகக்கூடவும், எங்கட்கு இறுதிக்காலம் நேரிடுவதாயின், சிவபெருமானையன்றி வேறொருவராலழியாதிருக்கவும் வேண்டுமென்ன, பிரமன் அவ்வாறே வரங்கொடுத்துச்சென்றனன். பின்பு அவர்களவ்வாறே, மூன்றரண்களிலுமிருந்து சிவநேசந்திறம்பாது அரசாண்டு, தேவர்கள் முதலியோர்க்கு இடுக்கண் விளைத்துவந்தனர்; அதனால் இந்திரன் முதலியதேவர்கள் திருமாலிடஞ்சென்று தங்குறை கூறியிரக்க, அவர், இவ்வசுரர்கள் சிவநேசர்களாயிருத்தலால் இவர்களை வெல்வதரிதெனக்கருதி, தாம் ஓர் புத்தவடிவெடுத்து நாரதமுனிவரைத் தமக்குச் சீடராக்கிக்கொண்டு, அவ்வசுரர் புரங்களிற் சென்று தாமியற்றிய பிடகாகமத்தை யவர்கட்குப்போதிக்க, அம்மூவர்கள் தவிர, மற்றையர்யாவரும் சிவநேசநீங்கினர். உடனே திருமால் தேவர்களோடு திருக்கயிலையையடைந்து சிவபெருமானைவணங்கி விண்ணப்பஞ்செய்து அவ்வெம்பெருமானது கட்டளையால் இரதமுதலிய கருவிகளமைக்கக்கருதி, பூமி தேர்த்தட்டாகவும், சூரியனும் சந்திரனும் இரண்டு சக்கரங்களாகவும், மேருமலை வில்லாகவும், ஆதிசேஷன் நாணாகவும், அக்கினி-வாயு-திருமால் இம்மூவரும் பாணமாகவுமமைந்தனர், மற்றைத்தேவர்கள் அவ்வவ்வவயவங்களாக வமைந்தனர். சிவபெருமான் அந்தகையஇரதத்தின்மிசெழுந்தருளிச் சென்றபொழுது, தேவர்களனைவரும் நம்மாலன்றோ சிவபெருமான் திரிபுரமழித்தற்கெழுந்தருளினானென் றகங்கரித்தனர். அதனையுணர்ந்த பெருமான் புன்னகைகொண்டருள, அந்நகையினால் அப்புரங்கள் வெந்து நீறாயின;

இரதமுங்கலைந்தது. அப்பொழுது திருமால் இடபவடிவங்கொண்டு கடவுளைத்தாங்கினர். பின்பு அம்முப்புரங்களினின்று மிறவாது பிழைத்த சிவநேசர்களாகிய அம்மூவரும் பெருமானைச்சரணடைய, அவர்களிலிருவர் தமது திருக்கோயிலிற்றிருவாயிற் காவலாளராகவும், ஒருவர் குடமுழாமுழக்கவுமாகக் கட்டளையிட்டருளினர், என்பதாம். இதனை:—

" மூவெயில்செற்றஞான்றுய்ந்த மூவரிலிருவர்நின்திருக்கோயிலின்வாய்தல்
காவலாளரென்றேவியபின்னை யொருவநீகரிகாடரங்காக
மானைநோக்கியோர்மாநடமகிழ மணிமுழாமுழக்கவருள்செய்த
தேவதேவநின்றிருவடியடைந்தேன் செழும்பொழிற்றிருப்புன்கூருளானே" என

வருந்தேவாரத்தானுணர்க.

விகடசக்கரவிநாயகர் என்னும் பெயருண்டானகாரணம், திருமாலானவர்-தக்கன்செய்தயாகத்தில் வீரபத்திரக்கடவுள்மீது விடுத்த சுதரிசனமென்னுஞ்சக்கரத்தை அக்கடவுளணிந்த வெண்டலையிலொன்று கௌவியது. அவரது சேனாதிபதியாகிய விடுவசேனன் திருமால் பொருட்டு அச்சக்கரத்தைப்பெறக்கருதி, காஞ்சிநகரத்தையடைந்து சிவலிங்கந்தாபித்துப் பூசைசெய்தனன். வீரபத்திரக்கடவுள் அங்கெழுந்தருளியபோது விடுவசேனன் அச்சக்கரத்தைத்தரும்படி யவரைப் பிரார்த்திக்க, அவர், "சக்கரம் நம்மிடத்து இல்லை; கபாலங்கௌவியதாயின், எவ்விதத்திலேனும் அதுவேதரப்பெற்றுக்கொள்" என்று கூறியருளினர். விடுவசேனன் காலிரண்டையுங் கையிரண்டையும் வளைத்து,வாயையும் நாசியையுங் கண்களையுஞ் சுளித்துஅசைத்துப் பற்கடோன்ற விகடக்கூத்தாடினன். அதனைக்கண்டோ ரனைவரும் நகைக்க, வெண்டலையும் நகைத்தது. நகைத்தலும் சக்கரம் அதன்வாயினின்றும் பூமியில் விழ, அதனை விநாயகக்கடவுள் விரைந்து கவர்ந்துகொண்டு ஒன்றுமறியார் போன்றிருந்தனர். விடுவசேனன் அதனைக்கண்டு அவர் திருமுன்னும் விகடக்கூத்தாடி வேண்ட, அவர் அச்சக்கரத்தை அவன் கையிற் கொடுத்தருளினர். இக்காரணத்தால் அவ்விநாயகக்கடவுளுக்கு விகடசக்கர விநாயகர் என்னுந் திருநாமமுண்டாயிற்றென வறிக. இதனை,—

காஞ்சிப்புராணம்.

" போராழியதன்வாயிற்கழிந்துபுவி மிசைவிழப்பொருக்கென்றங்கை
யோரானைமுகக்கடவுளதுகவர்ந்தங் கறியான்போன்றிருப்பநோக்கிப்
பேராண்மைப்படைத்தலைவனினிச்செயலே தென்றழுங்கிப்பேதுற்றந்தச்
சீராளன்றிருமுன்புங்கைசுண்ட விகடநடஞ்செய்துவேண்ட.
எக்கறவானவனியற்றும் விகடநடங்கண்டபோதெம்பெருமானேச்சி
மாக்கருணைசுரந்தருளியாழியவன் றனக்களித்தான்வரத்தான்மிக்கோர்
போக்கறுமிக்காரணத்தாலன்றுமுதற் காஞ்சியிலப்புழைக்கைத்தேவை
யூக்கமுறுந்திறல்விகடசக்கர விநாயகனென்றுலகக்கூறும்" என்று வரு

வனவற்றுனுணர்க. (க)

உச்சியின் மகுட மின்ன வொளிர்தர நுதலி னோடை
வச்சிர மருப்பி னொற்றை மணிகொள்கிம் புரிவ யங்க
மெய்ச்செவிக் கவரி தூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியின் விகட சக்ர கணபதிக் கன்பு செய்வாம்.

(இ-ள்.) திருமுடியில் மகுடம் மின்னவும், திருநுதலில் நெற்றிப்பட்டம் விளக்கவும், வயிரம்போன்ற ஏகதந்தத்தில் இரத்தினங்கள்பதித்த தந்தப்பூண்விளங்

ரவும், மெய்ம்மைபொருந்திய திருச்செவியாகிய சாமரைகள் வீசவும் பெருமைமிக்க யானைமுகங்கொண்டவதரித்தருளிய ஸ்ரீகாஞ்சிப்பதியில் (ஆயிரக்கால் மண்டபத் தருகில்) வீற்றிருந்தருளும் விகடசக்கர விநாயகக்கடவுளுக்கு (இடைவிடாது) அன்புசெய்வோம்.—எ-று.

ஸ்ரீவிகடசக்கர விநாயகப்பெருமான் மாறுபட்டுள்ள திருமேனியையுடையவ ராகலின், 'வேழமாமுகங்கொண்டுற்ற' என்று கூறினர். அவர் வேழமாமுகங்கொண் டதற்கேற்பவே, 'வச்சிரமருப்பினொற்றை மணிகோள்கிம்புரி' என்றும், மெய்ச்செ விக்கவரி, என்றுங் கூறப்பட்டன. இப்பெருமான் சிவகணநாதராகலின், 'உச்சியின் மருடமின்ன வொளிர்தருநுதலினோடை' என்றும், எத்தகைய வலிய ஆயுதங்களாலு மிறவா வரம்பெற்ற அசுரனை மிக விலேசானே யழித்த வன்மை பெற்றுள்ளது இவ ரது திருக்கோடாகலின், 'வச்சிரமருப்பின்' என்றும், சாமரகர்ணனென்னுந் திருநாம முடையாராகலின், 'மெய்ச்செவிக்கவரி' என்றுங்கூறினர். யானைக்கு இருமருப்பிரு த்தல் வேண்டியிருப்ப, ஈண்டு ஒற்றைமருப்பைக்கூறிய தென்னையெனின், எவ்வகை யாயுதங்களாலு மிறவாவரம்பெற்ற கயமுகாசுரனை யழித்தற்பொருட்டு முரித்த ஒரு மருப்புநீங்க, எஞ்சிநின்ற ஒற்றைமருப்பே யமைந்துளதாகலின் என்க. எல்லா அங் கங்களினும் சிரம் உத்தமாங்கமாகலானும், அது பிரணவவடிவினதாகலானும், 'வேழ மாமுகம்' என்று கூறினர். இவர் மாறுபட்ட திருவுருவமுடையவரென்பது சிரமுந் திருமேனியும் வேறுபட்டிருத்தல் நோக்கியெனவறிக. அதனை:—

" மணிகொண்டகோடொருமருங்குண்மையாலாண்மை வடிவென்றுமஃதின்மை மருங்குண்மையாற்பெண்மைவடிவென்றுமீதுகிழ் மாறியதிருக்காட்சியா [யோர் லணிகொண்டவுயர்திணையதென்றுமஃறிணையென்று மார்க்குங்கிளத்தலரிதாம் ஐங்கரச்சிந்தரம்" எனச் சிவஞானமுனிவர் கூறியதனானுணர்க.

'கச்சியின் விகடசக்ரகணபதி' என்று கூறவே, ஆயிரக்கால்மண்டபத்தருகில் என வருவித்துப்பொருள் கூறினும், அதனை:—

" சாற்றரியவாயிரக்கான் மண்டபத்தின்சார்வாக
வேற்றமுடனே யினிதிருந்து—போற்றும்
விறல்விகடசக்ரவிநாயகனையேத்துந்
திறல்விகட சக்ராயுதம்" என்று கூறிய இரட்டைப்புலவர் திருவாக்கா

னுணர்க, மின்ன-ஒளிர்தர-வயங்க-துங்க என்னும் வினையெச்சங்கள் உற்ற என்னும் பெயரெச்சத்தையும், அது விகடசக்ரகணபதிஎன்னும்பெயரையுங்கொண்டுமுடிந்தன.

ஒருகாரியஞ்செய்யத் தொடங்குவோர் அஃது முட்டின்றிமுடிதற்பொருட்டு முன்னர் விநாயகக்கடவுளைவணங்கித் தொடங்குதல்முறைமையாகலின், இந்நூலா சிரியரும் தாம்பாடத்தொடங்கிய கந்தபுராணம் இனிது நிறைவேறும்பொருட்டு ஸ்ரீ விகடசக்கரவிநாயகக்கடவுளை இரண்டு திருவிருத்தங்களால் முதலில்துதித்தனர். அதனை.—

இந்நூல் - கயமுகனுற்பத்திப்படலம்.

"என்னரேயாயினும் யாவதொன்றெண்ணுதன்
முன்னரேயுனதுதாண் முடியுறப்பணிவரே
லன்னார்தஞ்சிந்தைபோ லாக்குதியலதனை
யுன்னலார்செய்கையை யூறுசெய்திடுதிநீ" எனவருமாற்றானுணர்க.

இவ்விருசெய்யுள்களும் மேற்செய்யுள்களும் பாடாண்டிணையுள் கடவுள்வாழ்த்தென்னுந் துறை. இதனை, "அமரர்கண்முடியுமறுவகையானும்-புரைதீர்காமம்புல்லிய வகையினும்-ஒன்றன்பகுதியொன்றுமென்ப" எனவரும் தொல்காப்பியம் பொருளதிகாரம் புறத்திணையியற் சூத்திரத்தானுணர்க. (உ)

## சுப்பிரமணியர்காப்பு.

மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
யேவருந் துதிக்க நின்ற வீராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேள் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

(இ-ள்.) காஞ்சிப்பதியின் மாவிருக்ஷத்தடியில் வீற்றிருந்தருளும் ஸ்ரீசுப்பிரமணியக்கடவுளுடைய ஆறு திருமுகங்களுக்குவந்தனம்; அவ்வாறுதிருமுகங்களும் பொழியாநின்ற பெருங்கருணைவெள்ளத்திற்குவந்தனம்; யாவருந் துதிசெய்யும்படி விளங்காநின்ற பன்னிரண்டு திருத்தோள்களுக்குவந்தனம்; செந்தாமரைமலர்போன்ற திருவடிகளுக்குவந்தனம்; அவ்வெம்பெருமானது(துவசமாகிய)சேவலுக்கும்,(வாகனமாகிய) மயிலுக்கும் வந்தனம்; அவரது திருக்கரத்திலுள்ள வேற்படைக்குவந்தனம் வந்தனம்.—எ-று.

"அண்டகோடிகளுடன்றந்தவுடல் யாவையு மரியமறைமுதலகலையு - மக்கமுமெய்ப்பதமு மைங்கலையுமந்திரமு மானபதகதியும்வாக்கு - மண்டியுண்டாகவரு குண்டலியொடைஞ்சத்தி மாமுகமெனப்படைத்த - வள்ளிநாயகன்" என்னும் பிரமாணப்படி, இச்சை-ஞானம்-கிரியை-ஆதி-பரை என்னும் ஐந்துசத்திகளுடன் குண்டலிசத்தியுங்கூடிய ஆறுசத்திகளையும் ஆறுதிருமுகங்களாகப் பெற்றுள்ளவராகலின், 'மூவிருமுகங்கள்போற்றி' என்றும், அச்சத்திவடிவாயமைந்த ஆறுதிருமுகங்களும் வேண்டினோர் வேண்டியவண்ணம் பொழிவன அவரது பெருங்கருணையேயாகலின் 'முகம்பொழிகருணைபோற்றி' என்றும், சூரபன்மனாதியரால் இடுக்கணுற்றுழன்ற அரிபிரமேந்திராதி தேவர்களனைவரும் அவ்வசுராதியரால்நேர்ந்த துன்பத்தையொழித்துத் தாங்களின்புற்றிருப்ப வேண்டற்பாலது முருகப்பெருமானது திருத்தோட்டிறலேயாகலான், 'ஏவருந்துதிக்கநின்ற வீராறுதோள்போற்றி' என்றும், முத்திநகரங்களேழனுட் சிறந்தகாஞ்சிப்பதியின் கண்ணதாய வேதவடிவமாகிய மாவிருக்ஷத்தடியில் சத்ரூபமாயும்,சித்ரூபமாயும் விளங்கும் இறைவனும் இறைவியும் வேதப்பொருளாய் விளக்கல்போல் ஆனந்தரூபியாகிய தாமும் அவ்வேதப்பொருளேயென் றுணர்த்தற்பொருட்டு வீற்றிருந்தருளும் முருகக்கடவுளது திருவடிகளைவணங்குதலே புண்ணியபூமியுட் சனித்துச்சகலவேதங்களையு மோதியுணர்ந்து முத்திப்பேறடைதற் கேதுவாகலின், 'காஞ்சிமாவடிவைகுஞ் செவ்வேள் மலரடிப்போற்றி' என்றும், மாவடிவங்கொண்டசூரனது இருகூறாயபின்னருள் ஒன்றுசேவலாகவும் மற்றொன்றுமயிலாகவு முருவங்கொண்டுவர முன்னதைப்பதாகையாகவும் பின்னதைப் பரியாகவுங்கொண்டேற்றலின் அவற்றைப்பணிதல் புண்ணியத்துட் சிறந்த பெரும்புண்ணியமாகலின், 'அன்னான் சேவலும் மயிலும் போற்றி' என்றும், தமக்குநேர்ந்த சத்துருபயத்தைத் தவிர்த்து மும்மைப் பயனைத் தரத்தக்கது அவரது திருக்கரத்தமைந்த வேற்படையேயாகலின், 'திருக்கைவேல்போற்றிபோற்றி' என்றுங்கூறினார்.

பொழி என்றதற்கேற்பக்கருணையை வெள்ளமெனக்கூறினும். ஈராறெனற்பாலது இராறு என குறுக்கல் விகாரம்பெற்றது. (௩.)

## நூற்பயன்.

இந்திர ராகிப் பார்மே லின்பமுற் றினிது மேவிச்
சிந்தையி னினைந்த முற்றிச் சிவகதி யதனிற் சேர்வர்
அந்தமி லவுணர் தங்க ளடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணந் தன்னைக் காதலித் தோது வோரே.

(இ-ள்.) முடிவில்லாத அசுரர்களது வலிமைகெடும்படி கோபித்து அழித்த சிவந்தவேற்படையையுடைய முருகக்கடவுளது மான்மியமாகிய இக்கந்தபுராணத்தைவிரும்பிப் பாராயணஞ்செய்யு மெய்யடியார்கள் தேவேந்திரபட்டம் பெற்றுப் (போகத்தை யனுபவித்துப்) பின் இந்நிலவுலகத்தில் (அரசர்களாகப்பிறந்து) மிக்க இன்பத்தையடைந்து இனிமையாக வாழ்ந்திருந்து, தங்கள் மனத்தில்நினைந்திருந்த இஷ்டகாமியங்கள் நிறைவேறப்பெற்று, பின் சிவபதமடைவார்கள்.—எ-று.

அசுராதியர்களையழித்து அரிபிரமேந்திராதியர்களைக் காத்தருளிய கந்தப்பெருமானது புராணத்தைவிரும்பியோதும் ஆன்மாக்கள் போகங்களிற் சிறந்த இந்திரபோகந்துய்த்திருப்பரென்பார், 'இந்திராகி' என்றும், பின் அப்போகசேடத்தை நுகர்தற்கேதுவாகிய அரசராய்ப்பிறந்து இந்நிலத்தில் வாழ்ந்திருப்பரென்பார் 'பார்மேலின்பமுற்றினிதுமேவி' என்றும், அவ்விண்ணுலகிலும் இம்மண்ணுலகிலும் சிந்திக்கற்பாலவாய அணிமாமுதலிய எண்வகைச்சித்திகளும், சற்புத்திரப்பேறு முதலிய பதினாறுபேறுகளும், மற்றையவின்பங்களும் இனிது கைகூடப்பெறுவரென்பார், 'சிந்தையினினைந்தமுற்றி' என்றும், அவையனைத்தும் நுகர்ந்துமுடிந்தபின், நிஜாமுத்தியாகிய சிவசாயுச்சியம் பெற்றுவாழ்வரென்பார், 'சிவகதியதனிற்சேர்வர்' என்றுங்கூறினார். அல்லதூஉம், இந்திராகி என்றதனால் மறுமையின்பத்தையும், பார்மேலின்பமுற்றென்றதனால் இம்மையின்பத்தையும், சிவகதியதனிற் சேர்வரென்றதனால் வீட்டின்பத்தையும் முறையே அடைவரொன்பதூஉமாம்.

'இந்திராகிப்பார்மேலின்பமுற்று' என்பதற்கு, நரேந்திரர்களாய்ப்பிறந்து உலகத்தில் இன்புற்றுவாழ்ந்து, என்ற பொருள்கூறினும் பொருந்தும். அந்தமிலவுணர் என்றது ஆயிரத்தெட்டண்டங்களினும் நிறைந்துவாழ்ந்திருந்த எண்ணில்கோடியசுரர்களை. அவ்வசுரர்களனைவரையும் முருகக்கடவுள் ஊங்காரத்தாலுந் திருஷ்டிமுதலிய பிறவாற்றாலுமழித்திருக்கச் செவ்வேல்முனிந்த தென்றதென்னையெனின், அவ்வசுரர்கட்கிறைவனாய் அவ்வண்டங்களனைத்தையு மாண்டுவந்த சூரபன்மனையழித்தமைகருதியென்க. அவ்வாறன்றி, முனிந்த என்னும்பெயரெச்சத்தைக்கந்தவேள் என்பதனோடுங்கூட்டி, செவ்வேல் என்பதனை கந்தவேளுக்கு விசேடணமாக்கினும் பொருந்தும். காதலித்தோதுவோர், ஆகி-உற்று-மேவி-முற்றி-சேர்வரெனக்கூட்டுக. கதியதனில் என்பதில், அது - பகுதிப்பொருள்விகுதி, கந்தவேள்-இருபெயரொட்டுப்பண்புத்தொகை. (௪)

## வாழ்த்து.

வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக வுலக மெல்லாம்.

(இ-ள்.) சிறந்த மேகங்கள் காலந்தவறாமல் மழைபெய்யக்கடவன; நிறைந்த பலவகை வளங்கள் அதிகரிக்கக்கடவன; அரசன்செங்கோல்முறைப்படி அரசுசெலுத்தக்கடவன்; எல்லாவுயிர்களும் சிறிதுங்குறைவின்றிச் சுகித்து வாழக்கடவன; நான்கு வேதங்களிலுங்கூறப்பட்ட அறங்கள் சிறந்தோங்கக்கடவன; நல்லதவங்களும் யாகங்களும் விருத்தியடையக்கடவன; மேன்மைபொருந்திய சைவசமயமானது உலகமெங்கும் விளங்கக்கடவது.—எ-று.

"கைம்மாறுவேண்டாகடப்பாடு மாரிமாட்டென்னாற்றுங்கொல்லோவுலகு" என்றபடி, மேகங்கள் கைம்மாறுகருதாமல் உலகிற்கு நீரைப்பொழிதலின் 'வான்முகில்' என்றும், வேண்டுங்காலத்துப்பெய்யா தொழிதலும், வேண்டாக்காலத்துப் பெய்து உள்ளவளங்களை யழித்தலுமின்றி, முறைப்படி மாதமும்மாரிபெய்கவென்பார், 'வழாதுபெய்க' என்றும், அவ்வாறுபெய்யவே முப்போகமுந்தப்பாதுவிளைகவென்பார், 'மலிவளஞ்சுரக்க' என்றும், வளஞ்சுரக்கவே அரசன் ஆறிலொருகடமைபெற்று நீதிகோடாது அரசுரிமையைச் செலுத்துவனென்பார், 'மன்னன்கோன்முறையரசுசெய்க' என்றும், "அரசனெவ்வழி யவ்வழிகுடிகள்" என்றபடி மன்னன் செங்கோல்செலுத்தவே குடிகளுங்குறைவின்றித்தங்குலமுறைதவறாது இனிது வாழ்வரென்பார், 'குறைவிலாதுயிர்கள்வாழ்க' என்றும், குடிகள் இனிதுவாழவே நல்லறங்கள் நாளுக்குநாள் விருத்திபெறுமென்பார், 'நான்மறையறங்களோங்க' என்றும், அவையோங்கவே அதற்குலடையவேண்டியதவமும்,இம்மை மறுமைகட்கேதுவாகிய வேள்வியுமினிதோங்குமென்பார். 'நற்றவம்வேள்விமல்க' என்றும், இவையனைத்து மினிதுவளர்ந்தோங்கவே வீட்டின்பத்திற்கேதுவாகிய சித்தாந்தசைவஞ் செழித்தோங்குமென்பார், 'மேன்மைகொள்சைவநீதிவிளங்குக' என்றுங்கூறினார்.

இதனால் மழைபெய்வதால் வளஞ்சுரக்குமெனவும், அவ்வளத்தால் அரசன் கொடுங்கோலசெலுத்தாது செங்கோல் செலுத்துவனெனவும், அச்செங்கோலால் உலகினர் இன்புற்றுவாழ்வரெனவும், இம்முறையான் இம்மையின்பம் அநுபவிக்கப்பெற்றவர் மறுமையினும் இன்பமேபெருக நான்மறைகளில் விதிக்கப்பட்ட அறங்களையும், தவங்களையும் வேள்விகளையுமே செய்வரெனவும், இம்மையினும் மறுமையினும் அநுபவிக்கப்பெற்ற வின்பத்தின் மேம்பட்ட பேரின்பமும் தகரச் சைவநீதியிற்றலைப்படுவரெனவுங் கூறியவாறுமாகும். "வேதநெறிதழைத்தோங்க" என்றும், "மிகுசைவத்துறைவிளங்க" எனவும் பெரியோர் கூறினாராதலின், இந்நூலாசிரியரும் வேதத்திற் கடைகோடாத மேன்மைகொள் சைவநீதி என ஆகமத்திற் கடைகொடுத்துக் கூறினர்.

(௧)

---

கணபதிதுணை.

# கடவுள்வாழ்த்து.

## சிவபெருமான்.

திருவந்த தொல்லைப் புவனத்தொடு தேவர் போற்றிப்
பெருவந் தனைசெய் தறிதற்கரும் பெற்றி யெய்தி
யருவந் தனையு முருவத்தையு மன்றி நின்று
ளொருவன் றனது பதந்தன்னை யுளத்துள் வைப்பாம்.

(இ-ள்.) சிறப்புமிக்க பழைமையாகிய நிலவுலகத்துள்ள பெரியோர்களும் தேவர்களும் மிக்கவந்தனைசெய்து உணர்தற்கருமையாகிய பெருந்தன்மையையடைந்து,அருவம்-உருவமென்னு மிரண்டையும் அன்றி நின்றவனாகிய ஒப்பற்ற சிவபெருமானது திருவடிகளை (யாம்) எமது உள்ளத்திற் சிந்தித்துத்துதிப்போம். எ-று.

கருமபூமியாகிய இந்நிலவுலகமே சிந்தையுமனமுஞ் செல்லாநிலைமைத்தாய வீட்டின்பத்தை விளைந்தெய்தற்கேதுவாந் தன்மையதென்பதும், மற்றைய விண்ணுலகாதி போகபூமிகள் புண்ணியத்தளவு போகநுகர்தற்பயனைத் தருதலேயன்றி வீட்டின்பத்தைத் தராவென்பதும், இவ்வேதுக்களால் இந்நிலவுலகமே மற்றைச் சுவர்க்கமாதி யெவ்வுலகினும் பெருஞ்சிறப்பினதென்பதுந்தோன்ற 'திருவந்த' என்றும், அத்தகைய மேன்மையமையப்பெற்ற இவ்வுலகம் சிவபெருமானது பரிக்கிரக சத்தியாகிய மாயையின் காரியப்பாடெனபது தோன்ற, 'தொல்லைப்புவனம்' என்றும், மும்மலப்பசுக்களாக வெண்ணப்பட்ட பசுஞானிகளும் அவர்களுட்சிறந்த பிரமன் முதலியோரும் தற்போதவயத்தர்களாய்ப் பெருமானை வந்தித்துணர முயன்றுலும் "உணர்ந்தார்க்குணர்வரியோனும்" "விறகிற்றீயினன் பாலிற்படுநெய்போல்" மறைந்து நிற்பவனுமாகலின் அம்முயற்சியா லுணர்தற்கரியானென்பது தோன்ற, 'புவனத்தொடுதேவர்போற்றிப் - பெருவந்தனைசெய்தறிதற்கரும்பெற்றியெய்தி' என்றும், அருவுருவாதியனைத்தும் ஆன்மாக்கட் கருள்செய்தற் பொருட்டுக்கொண்டருளும் நாடகப்படிவமேயன்றித் தனக்கென வொன்றில்லானெம்பெருமா னென்பது தோன்ற, 'அருவந்தனையு முருவத்தையுமன்றி நின்றன்' என்றும், தன்னிகருயர்ச்சியில்லாத் தலைவனென்பதுதோன்ற, 'ஒருவன்' என்றும், அவவெம்பெருமானது திருவடிப்பேறே சிறந்தமுத்தியாகலின், அத்திருவடியைவணங்குதலே பொருத்தமுடைத்தென்பதுதோன்ற, 'பதந்தன்னை' என்றும், மனம் வாக்குக்காயம் என்னுந்திரிகரணங்களில் மனங்கலவாதம்பாது மற்றிரண்டுமின்மையால், அம்மனத்தால் வழிபடுதலே சிறந்ததென்பது தோன்ற, 'உளத்துள்வைப்பாம்' என்றுங்கூறினர்.

உலகம் மாயையின் காரியப்பாடென்பதனை:—

சிவஞானசித்தியார்.

" தோற்றமுநிலையுமிறு மாயையின்றொழிலதென்றே
சாற்றிடுமுலகம்வித்துச் சாகாதியணுக்களாக
வேற்றதேலீண்டிநிற்கு மில்லதேவில்லையாகு
மாற்றநீமறந்தாயித்தான் மாயையைமதித்திடாயே." என்பதனாலும்,

சிவபெருமான் அருவமுமுருவமுமன்றி நின்றவனென்பதனை.—

சிவப்பிரகாசம்.

" பலகலையாகமம்வேதம்யாவையினுங்கருத்துப் பதிபசுபாசந்தெரித்தல்பதிபரமேய னிலவுமருவுருவின்றிக்குணங்குறிகளின்றி நின்மலமாயேகமாய்நித்தமாகி [அதா யலவிறுயிர்க்குணர்வாயசலமாயி யகண்டிதமாயானந்தவுருவாயன்றிச் செலவரிதாய்ச்செல்கதியாய்ச்சிறிதாகிப் பெரிதாய்த்திகழ்வதுசத்சிவமென்பர்தெ ளிந்துளோரே." எனவும்.

இந்நூல்-சூரனமைச்சியற்படலம்.

" அருவுமாகுவனுருவமு மாகுவனருவு
முருவுமில்லதோர் தன்மையுமாகுவனூழின்
கருமமாகுவனிமித்தமு மாகுவன்கண்டாய்
பரமனுடலையாவரே பகர்ந்திடற்பாலார்" எனவும் வருமாற்றுறுணர்க.

*புவனம் - இடவாகுபெயர். நின்றான் என்பது, முற்றெச்சம். (௧)

ஊனாகி யூனு ளுயிராயுயிர் தோறு மாகி
வானாகி யான பொருளாய்மதி யாகி வெய்யோ
னானாகி யாண்பெண் ணுருவாகிச் சரா சரங்க
ளானான் சிவன்மற் றவனீள்கழற் கன்பு செய்வாம்.

(இ-ள்.) சிவபெருமான் சரீரமாகியும், அச்சரீரங்கடோறுமுலாவுகின்ற உயி ராகியும், அவ்வுயிர்க்குயிராகியும், ஆகாயமுதலிய பஞ்சபூதப்பொருளாகியும், சந்திர னுகியும், சூரியனாகியும், ஆணுருவாகியும், பெண்ணுருவாகியும், மற்றைச்சராசரங்க ளனைத்துந் தாமேயாகியுமுள்ளான்; ஆதலால், அத்தகைய வெம்பெருமானது சிறந்த திருவடிகளுக்கு (யாம் இடைவிடாது) பேரன்புசெய்வோம்.—எ-று;

சிவன் இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளுமாய் நிற்பவனாதலால்'சரா சரங்களானான்' எனவும், அச்சராசரங்கள் ஆண் பெண்ணுருவாய் நிற்றலால் ஆண் பெண்ணுருவாகி எனவும், அவ்விரண்டுருபங்களும் பஞ்சபூதபௌதிக வடிவங்களா யும்,அவ்வடிவங்கள் சந்திரசூரியர்களால் விளங்குதலால் 'வானாதியான பொருளாய் மதியாகி வெய்யோன்றானாகி' எனவும், இவையாவும் ஆன்மாவன்றி இயங்காவாக லான் 'உயிராய்' எனவும், அவ்வுயிர் உடலன்றிக் காணக்கூடாதாகலான் 'ஊனாகி' எனவுங்கூறினார்.

வானாதியானபொருளாய் மதியாகிவெய்யோன்றானாகி என்பதுகாறும் இறை வனுக்குக்கூறியிருக்கும் எண்வகை வடிவங்களாக; இவை இறைவனுக்கு வடிவங் களேயாயினும் அருள்வடிவுபோலன்றென்பதுதோன்ற அவ்வடிவங்களை ஆண்பெண் ணென்றும், சராசரங்களென்றும், இவற்றை உண்மையாகவேவடிவமாகவுடைய வர் உயிர்களென்பது தோன்ற ஊனினுயிராயென்றுங் கூறினார். ஆயினும்"அவனன் றியோரணுவுமசையாது" என்பது பிரமாணமாகலின் அருள்வடிவினனாகிய இறை வன் கருணையான் ஊன்முதலாகக் கூறிய யாவுமாயசைவித்தனனாதலால் சராசரங்க ளானான் சிவனென்றார்.இதனால் சிவன்யாவுமானது அருளாலென்றுபெறப்பட்டது. படவே அவனீள்கழற்கன்பு செய்வாமென்றுங் கூறினார்.

ஊன்முதல் சராசரங்க ளிறுதியாகவுள்ளான் சிவபெருமா னொருவனே யென்பதனை;—

" வானாகிமண்ணாகி வளியாகியொளியாகி, யூனாகியுயிராகியுண்மையுமா யின் மையுமாய்க், கோனாகியானெனதென் றவரவரைக்கூத்தாட்டு, வானாகிநின்றாயை

யென்சொல்லிவாழ்த்துவனே'' எனவும், "நிலநீர்நெருப்புயிர் நீள்விசும்புநிலாபபக லோன்,புலனுயமைந்தனேடென்வகையாய்ப்புணர்ந்துநின்ரு,னுலகேழெனத்திசை பத்தெனத்தானொருவனுமே, பலவாகிநின்றவா தோணேக்கமாடாமோ'' எனவும், "அன்னுமலையானடிக்கமலஞ் சென்றிறைஞ்சும், விண்ணேர்முடியின்மணித்தொகை வீறற்ருற்போற், கண்ணுரிரவிகதிர்வந்து கார்கரப்பத், தண்ணுரொளிமழுங்கித் தாரகைகடாமகலப், பெண்ணுகியாணுயலியாய்ப் பிறங்கொளிசேர், விண்ணுகிமண்ணுகி யித்தனையும்வேருகிக், கண்ணுரமுதமாய்நின்ருன் கழல்பாடிப் - பெண்ணே யிப்பூம் புனல் பாய்ந்தாடேலோரெம்பாவாய்'' எனவும், "ஒன்று நீயல்லையன்றியொன்றில்லை யாருனையறியகிற்பாரே'' எனவும் அருளிச்செய்த ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் திருவாக்கானுணர்க. நீட்சி-ஈண்டுச்சிறப்பென்னும்பொருட்டு. ஆகி என்னும் வினையெச்சங்களனைத்தும் ஆனுன் என்னும் வினையாலணையும் பெயரைக்கொண்டுமுடிந்தன. சிவன் ஆனுன் அவனின்கழற்கன்பு செய்வாம், எனக்கூட்டுக. (உ)

வேறு.

பிறப்பது மிறப்பதும் பெயருஞ் செய்கையு
மறப்பது நினைப்பதும் வடிவம் யாவையுந்
துறப்பது மின்மையும் பிறவுஞ் சூழ்கலாச்
சிறப்புடை யரனடி சென்னி சேர்த்துவாம்.

(இ-ள்.) (தாய்வயிற்றிற்றங்கிப்) பிறத்தலும், பின் இறத்தலும், பெயரும், தொழிலும், (ஒன்றை) மறத்தலும்,பின்நினைத்தலும், எத்தகையவடிவங்களையுந் துறந்துநிற்றலும், அஃதின்மையும் (இவைபோன்ற) மற்றவையனைத்துமடையப் பெருத பெருஞ்சிறப்பினையுடைய சிவபெருமானது திருவடிகளை(யாம்) எமது சிரசின்கண்வைத்து வணங்குவோம்.—எ-று.

பிறரது பிறப்பிறப்புக்களையொழித்து வீடருள்வல்ல பேரருளானனுகிய சிவபெருமான் மண்ணிற்பிறந்திருந்து மாளுந்தெய்வங்களோ டெண்ணப் படாதவனென்பார், 'பிறப்பது மிறப்பதும்' என்றும். நாமமற்றவனென்பார், 'பெயரும்' என்றும், சூரியனுக்குமுன்னே மலர்தலாதி முத்தொழிலுந்தாமே நிகழ்தல்போலத் தமது திருமுன்னே மும்மூர்த்திகளும் முத்தொழிலைச்செய்திருப்பத்தாஞ்செயலற்றிருப்பவனென்பார். 'செய்கையும்'என்றும், மாயையின்வலியால் மறப்புநினைப்புண்டுழலும் மாலயனுதியர்போலாது அவற்றைக்கடந்து நிற்பவரென்பார், 'மறப்பதுநினைப்பதும்'என்றும், எத்தகையவடிவமுந் தமக்கெனப் பெற்றுள்ளவரன்றென்பார், வடிவம் யாவையுந்துறப்பது மின்மையும்' என்றும், இத்தகையபதியிலக்கணத்திற் பழுதாயுள்ளனவற்றுளொரு சிறிதுமடையப்பெருதவரென்பார், பிறவுந்சூழ்கலாச் சிறப்புடையரன், என்றுங்கூறினர்.

மேலைச்செய்யுளில் இறைவன்யாவுமாயிருந்தியக்குந்தன்மையைக் கூறியதாகும். எங்ஙனமெனின் அதில் சராசரங்களானுன் சிவனென்ருர்.இச்செய்யுளில் பிறவுஞ்சூழ்கலாச்சிறப்புடையரனென்ருர். அச்சிறப்பு ஈதென்றுணர்த்தவே இறைவன் இன்னவிடத்திற் பிறந்தான் இன்னகாலத்திலிறந்தான் இப்பிறப்பிலோ அவன் இன்னபெயருஞ் செய்கையுமுடையவன், வினைவழியே வேண்டியவற்றை மறத்தலும் வேண்டாதனவற்றை நினைத்தலுமாகிய மாயாமயக்குடையவன், ஓர்கால் இம்மாயாமயக்கொழிய முத்திநெறியிற்றலைப்பட்டவன், அன்றி ஆணவச்செருக்கான் நன்னெறியிற் றலைப்படாதவன், அங்நன்னெறியிற்றலைப்படாமையான் பிறவிப்பேதங்களை யடைதற்குரிய வினைகளையெல்லாம் நாட்டற்குரியவன்,என்று பெத்தான்மாக்களுக்குக்கூறும் பாசவிலக்கணங்களில்லாத பதி என்னுஞ் சிறப்பிலக்கணமுடைய அநாதிமலமுத்தனென்று கூறியவாரும்.

சிவபெருமான் பிறப்பிறப்பற்றவரென்பதனை:—

சிவஞானசித்தியார்.

"யாதொருதெய்வங்கொண்டீரத்தெய்வமாகியாங்கே
மாதொருபாகனார்தாம்வருவர்மற்றத்தெய்வங்கள்
வேதனைப்படுமிறக்கும்பிறக்குமேல்வினையுஞ்செய்யு
மாதலாலிவையிலாதானறிந்தருள்செய்வனன்றே"

அருணகிரியந்தாதி.

" எல்லார்பிறப்புமிறப்பு மியற்பாவலர்தஞ்
சொல்லாற்றெளிந்தோஞ்சோணேச - நில்லிற்
பிறந்தகதையுங்கேளேம் பெருலகில்வாழ்ந்
திறந்தகதையுங்கேட்டிலேம்" என்பதனாலும்,

பெயரற்றவ ரென்பதனை:—

திருவாசகம்.

" திருமாலும்பன்றியாய்ச்சென்றுணராத்திருவடியை
யுருநாமறியவோரந்தணனாயாண்டுகொண்டா
னொருநாமமோருருவமொன்றுமில்லாற்காயிரந்
திருநாமம்பாடிநாந்தெள்ளேணங்கொட்டாமோ" என்பதனாலும்,

செய்கையற்றவரென்பதனை:—

திருவிளையாடற்புராணம்.

" பூவண்ணம்பூவின்மணம்போலமெய்போதவின்ப
மாவண்ணமெய்கொண்டவன்றன்வலியாணைதாங்கி
மூவண்ணறன்சந்நிதி மூத்தொழில்செய்யவாளா
மேவண்ணலன்னான் விளையாட்டின்வினையையெல்லாம்." என்பதனாலும்,

மறப்பு நினைப்பற்றவரென்பதனை:—

கந்தரநுபூதி.

" உதியாமரியா வுணராமறவா
விதிமாலறியா விமலன்புதல்வா
அதிகாவனகாவபயாவமரா
பதிகாவலசூரபயங்கரனே." என்பதனாலு முணர்க. (௩).

பூமலர் மிசைவரு புனித னாதியோர்
தாமுணர் வரியதோர் தலைமை யெய்தியே
மாமறை முதற்கொரு வடிவ மாகியோன்
காமரு செய்யபூங் கழல்கள் போற்றுவாம்.

(இ-ள்.) பொலிவினையுடைய தாமரைமலரின்கண்ணெழுந்தருளிய பிரமன் முதலிய தேவர்களா லுணர்தற்கரிதாகிய ஒப்பற்றமுதன்மையையடைந்து, சிறந்த வேதத்தின் முதற்பொருளாகிய பிரணவத்திற்கு ஒருதிருவுருவமாக வமைந்துள்ள சிவபெருமானது அழகுபொருந்திய செந்தாமரைமலர்போன்ற திருவடிகளை (யாம்) துதிப்போம்.—எ-று.

பிரமன் முதலியதேவர்கள் தற்போத முற்றுள்ளவர்க ளாகலான்அவர்களா லுணரப்படாதவரென்பதுதோன்ற, 'பூமலர்மிசைவருபுனிதனாதியோர்' என்றுகூறினார். மாமறைமுதல் என்றதனால் வேதத்தின்மூலமந்திரமாகிய பிரணவம்எனப்பொருள் கூறினும். 'பூமலர்மிசைவரு புனிதனாதியோர் - தாமுணர்வரியதோர் தலைமை' என்பதனை:—

சிவஞானசித்தியார்.

" மறையினாலயனான்மாலான் மனத்தினால்வாக்கான்மற்றுங்
குறைவிலாவளவினாலுங் கூறொணாதாகிநின்ற
இறைவனார்கமலபாத மின்றியானியம்புமாசை
நிறையினார்குணத்தோர்க்கெல்லாம் நகையினைநிறுத்துமன்றே" எனவும்,

போற்றிப்பஃறொடை.

பூமன்னுநான்முகத்தோன் புத்தேளிராங்கவர்கோன்
மாமன்னுசோதி மணிமார்பன்—நாமன்னும்
வேதம்வேதாந்தம் விளக்குஞ்செய்விந்துவுடன்
நாதநாதாந்தநடுவேதம்—போதத்தா
லாமளவுந்தேட வளவிறந்தவப்பாலை" எனவும் வருமாற்றானுணர்க.
சாமரு என்பதில் உகரம் சாரியையாக வந்தது. (௫)

பங்கயன் முகுந்தனும் பரமென் றுன்னியே
தங்களி லிருவருஞ் சமர்செய் துற்றுழி
யங்கவர் வெருவர வங்கி யாயெழு
புங்கவன் மலரடி போற்றி செய்குவாம்.

(இ-ள்.) பிரமன் திருமாலென்னுமிருவரும் (ஒருவருக்கொருவர்) தாமே பரம் என்றுகருதி, தங்களுள்ளே போர்செய்திருந்தபொழுது, அவ்விருவரும் அஞ்சும்படி (நடுவில்) அக்கினிஸ்தம்பமாக வெழுந்தருளிய சிவபெருமானது தாமரைமலர்போன்ற திருவடிகளைத் துதிசெய்வோம்.—எ-று.

பிரமவிஷ்ணுக்க ளிருவருந்தாங்களே பரம்பொருளெனக் கருதிப்போர் புரிந்த வரலாறு:—

முன்பொருகாலத்தில் திருமாலினுடைய நாபிக்கமலத்திற்றோன்றிய பிரமனானவன் தானே பரப்பிரமமென்றகங்கரித்துத் திருமாலையடைந்து நீயாவனென்று கேட்டனன். அதற்கு அவர் நானுன் பிதாவல்லவோவென, பிரமன் கோபித்தெழுந்து பலவாறிகழ்ந்து கூறி, நாமிருவரும் போர்புரிவோம், அப்போரில் வென்றவரே பரமாவர் என்றுகூற, இருவருஞ் சம்மதித்து நெடுநாள் பெரும்போர் புரிந்தனர். அப்பொழுது சிவபெருமான் அவர்கட்குமத்தியில் அக்கினிமலை யுருவங்கொண்டு பூமிக்கும் ஆகாயத்துக்கு மொன்றாயோங்கி நின்றருளினர். அவர்கள் அதனைக்கண்டு போர் செய்தலை யொழிந்து, இம்மலையின் அடிமுடியைக்கண்டவர்களே பரமாவாரென்று கூறி, பிரமன் முடியைக்காணும்பொருட்டு அன்னப்பறவை யுருவங்கொண்டு ஆகாயத்திற் பறந்து சென்றனன். திருமால் பன்றியுருவங்கொண்டு பாதலத்தைக் கீண்டு சென்று நெடுநாள் வருந்தியுந் திருவடியைக்காணாது திரும்பிவந்தனர். பிரமன் அனேககோடிகாலம் பறந்து சென்று சிறகுகள்முரிந்து வருந்தித்திருமுடியைக் காணாமல், அங்குத்தோன்றிய ஓரசரீரிவாக்கினால் மனந்தெளிந்து திரும்பிவந்து திருமாலைக்கண்டு நின்றனன், பின் இருவரும், தாங்கள் அகாரணரென்பதை யுணர்ந்து அகந்தையொழிந்துசிவலிங்கந்தாபித்துப்பூசிக்க, பெருமான்பார்வதிசமேதராயெழுந்தருளி உங்கட்குவேண்டிய வரங்களைக்கேளுங்களென்ன, அவர்கள் எம்பெருமானே! அடியேங்கட்குத்தேவரீரது திருவடிக்கண் அன்பு ஒன்றே வேண்டுமென்று வணங்கினர்; பெருமான் அவ்வாறேயருளி, அவர்களைத்தங்கள் பதவியிலிருக்க அநுக்கிரகித்து, அவ்வழல்வடிவாக வெழுந்தருளிய தமது வடிவத்தைச்சுருங்கி, ஒருமலையுருவாக வெழுந்தருளினர்; அஃதே இன்றும் சோணசலம் அருணசலம்முதலிய பலகாரணப்பெயரோடு விளங்குகின்றது. எனவறிக. (௬)

காண்பவன் முதலிய திறமுங் காட்டுவான்
மாண்புடை யோனுமாய் வலிகொள் வான்றொடர்
பூண்பதின் றாய்நயம் புணர்க்கும் புங்கவன்
சேண்பொலி திருநடச் செயலை யேத்துவாம்.

(இ-ள்.) காண்பான்-காட்சி-காட்சிப்பொருள் என்னும் மூவகைத்திறமுந் தாமாகவே யுள்ளவரும், அவற்றைத் தம்மையடைந்தார்க்குக் காட்டுபவராகிய மாட்சிமையுடையவரும், வலிமைபொருந்திய மிகுந்த பந்தத்தையடையாதவராய்த்(தம்மையடைந்த ஆன்மாக்களுக்குப்) பேரின்பசுகத்தை யுண்பித்தருளும் மேன்மைபெற்றவருமாகிய சிவபெருமான் செய்தருளும் சிதாகாசத்தில் விளங்குகின்ற ஆனந்தத் தாண்டவத் திருச்செயலைத் துதிசெய்வோம்.—எ-று.

ஞாதுரு ஞான ஞேயங்களாகிய திரிபுடிப்பொருள்கள் தாமாகவேயுள்ளவரென்பார், 'காண்பவன்முதலிய திறமும்'என்றும்,அவற்றைத்தாமாய்நிற்குஞ் ஞானமுடையோர்க்குத்தாமாகவே காட்டுதலன்றித்தனக்கன்னியமாகவுங்காட்டும் பேராற்றலுடைய பெருமானென்பார். "காட்டுவான் மாண்புடையோனுமாய்" என்றும், இயல்பாகவே பாசங்களிங்கினவனென்பார்:'வலிகோள்வான்தொடர் பூண்பதின்றாய்' என்றும், இயல்பாகவே பாசங்களுடைய ஆன்மாக்களுக்கு அவையொழியுமாறு திரோதானசத்தியான் உருசிப்பித்தொழிக்கும் பேரருளுடையவனென்பார், 'நயம் புணர்க்கும் புங்கவன்' என்றும், அவ்வெம்பெருமான் சிதாகாசத்தில் பஞ்சாக்கரமே திருமேனியாகக்கொண்டு செய்யுந் திருநடனம் பரப்பிரயோசனங் கருதியேயன்றி ஸ்வப்பிரயோசனங்கருதி யன்றாகலானும், பஞ்சகிருத்தியத் திருத்தாண்டவமாகலானும் அதுவே பெருஞ்சிறப்பினதென்பார், 'சேண்பொலி திருநடச்செயல்' என்றுங் கூறினார்.

அல்லதூஉம் வலிகொள்வான்றொடர் பூண்பதிலானுகிய பெருமான் திருநடனச்செயலைச் செய்தல் அவ்வலி கொள்வான்றொடர் புடையோராகிய ஆன்மாக்களுக்கு அந்தொடர்பொழிக்கவேயாகலான் திருநடச்செயலை யேத்துவாம் என்றானவும், அந்நடனச்செயலால் விளையுமுத்திநயம் காண்பான்முதலிய திருபுடிகளுந்தோன்றுவதுமின்றி தோன்றுமற்போதலுமின்றி யுள்ளனவா யின்பத்தைவிளைவித்தலின் காண்பவன்முதலிய திறமுங் காட்டுவான்மாண்புடையோனுமாய் நயம் புணர்க்கும்புங்கவனென்றானவுங்கொள்ளலு மொன்று.

சிவபெருமான் பஞ்சாக்கரமே திருவுருவாகக்கொண்டு நடித்தருளுவரென்பதனை;—

உண்மைவிளக்கம்.

" ஆடும்படிகேணல்லம்பலத்தானையனே
நாடுந்திருவடியிலே நகரம்—கூடு
மகரமுதரம்வளர் தோள்சிகரம்
பகருமுகம்வா முடியப்பார்.

சேர்க்குந்துடிசிகரம் சிக்கனவாவிசுகரம்
ஆர்க்கும்யகரமபயகரம்—பார்க்கிலிறைக்
கங்கிநகரமடிக்கீழ் முயலகனார்
தங்குமகர மதுதான்" எனவும்,

பஞ்சகிருத்தியத்திருத்தாண்டவமென்பதனை:—

" தோற்றந் துடியதனிற் றோயுந் திதியமைப்பிற்
சாற்றியிடமெங்கியிலே சங்கார—மூற்றமா
யூன்றுமலர்ப்பதத்தி லுற்றதிரோதமுத்தி
நான்றமலர்ப்பதத்தே நாடு" எனவும் வருமாற்றானுணர்க.

திருவந்த என்னுஞ்செய்யுளால் பரசிவத்தின் நிஷ்களசொருபத்தையும், ஊனாகி என்னுஞ்செய்யுளால் அச்சிவம் யாவுமாயிருக்குந் தன்மையையும், பிறப்பநும் என்னுஞ்செய்யுளால் அல்லவாயிருக்குந் தன்மையையும், பூமலர், பங்கயன் என்னும் இவ்விரண்டுசெய்யுள்களால் எல்லாமாயல்லவுமாயிருக்கும் அச்சிவம் சகளவடிவங் கொண்டருளுந் தன்மையையும், காண்பவன் என்னுஞ்செய்யுளால் முத்திநிலையை ஆன்மாக்களுக்கருளுந் தன்மையையும் விளக்கியவாறாகும். (சு)

சிவசத்தி.

செறிதரு முயிர்தொறுந் திகழ்ந்து மன்னிய
மறுவறு மானிட மரபின் மேவியே
யறுவகை நெறிகளும் பிறவு மாக்கிய
விறைவிதன் மலரடி யிறைஞ்சி யேத்துவாம்.

(இ-ள்.) (உலகத்தில்) நெருங்கியுள்ள ஆன்மாக்கடோறும் விளங்கிவீற்றிருந்தருளுங் குற்றமற்ற சிவபெருமானது இடப்பாகத்தில் முறைமைப்படி பொருந்தியிருந்து, அறுவகைச்சமய நெறிகளையும் மற்றைச்சமயபேதங்களையும் நிலைபெறச் செய்தருளிய முதல்வியாகிய உமாதேவியாரது தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கித்துதிசெய்வோம்.—எ-று.

எண்ணிறந்த ஆன்மாக்கடோறும் உயிர்க்குயிராயுவந்தெழுந்தருளும் பெருமானென்பதும், அவ்வாறெழுந்தருளியிருப்பினும் அவ்வான்மபாசத்திற் பிணிப்புறாதவனென்பதுந்தோன்ற,'செறிதருமுயிர்தொறுந்திகழ்ந்து மன்னிய மறுவறுசிவன்'என்றும், அவ்வெம்பெருமானோடு நீரிற்றண்மைபோல அபேதமாயுள்ளா ரெம்பெருமாட்டியாரென்பதுதோன்ற, 'அரனிடம்மரபின்மேவி' என்றும், வேதாகமங்களிற்கூறும் அறுவகைச் சமயபேதங்களையும் மற்றைச்சமயபேதங்களையும் நிலைபெறச் செய்தவரென்பதுதோன்ற,'அறுவகைநெறிகளும்பிறவுமாக்கியஇறைவி' என்றுங்கூறினர்.

ஆன்மாக்களுக்குச் சமயநெறிகள் பாசச்சேதம் வரச்செய்து சத்திபதிவித்தல் சத்தியின்செயலேயன்றிச் சத்தன்செயலன்றாகலான், 'அறுவகைநெறிகளும் பிறவுமாக்கிய விறைவி' என்றார்.

சிவபெருமான் உயிர்கடோறு மெழுந்தருளியுள்ளவரென்பதனை:—

சிவஞானதீபம்.

" எவ்வுயிரும்பராபரன் சந்நிதியதாகு
மிலங்குமுயிருடலனைத்து மீசன்கோயில்" என்பதனாலும்,

உமாதேவியார் சிவபெருமானிடப்பாகத்துள்ளவரென்பதனை:—

திருவாசகம்.

" தோலுந்துகிலுங்குழையுஞ்சுருடோடும்
பால்வெள்ளைநீறும் பசுஞ்சாந்தும்பைங்கிளியுஞ்
சூலமுந்தொக்கவளையு முடைத்தொன்மைக்
கோலமேநோக்கிக் குளிர்ந்தூதாய் கோத்தும்பீ" என்பதனாலுமுணர்க.

வேதாகமங்களிற் கூறியபடி அறுவகைச்சமயங்களாவன:—சைவம்-பாசுபதம்-மகாவிரதம்-காளாமுகம்-வாமம்-வைரவம்என்பன. மற்றைச்சமயபேதங்களாவன,—உலோகாயதம்-நால்வகைப்பௌத்தமாகிய சௌத்திராந்திகம்-யோகாசாரம்-மாத்மிகம்-வைபாடிகம்-ஆருகதம் என்னும் புறப்புறச்சமயங்களும், தார்க்கிகம், மீமாஞ்சம்-மாயாவாதம்-சாங்கியம்-யோகம்-பாஞ்சராத்திரம் என்னும் புறச்சமயங்களுமாம். அறுவகை நெறியெனப்பொதுப்படக் கூறியதனால், பாஷாண மோகஷவாதம்-சங்கிராந்தவாதம். அவிகாரவாதம்-நிமித்தகாரணபரிணமவாதம் - ஐக்கியவாதம் - பேதவாதம் என்னும் உட்சமயங்களையுங்கொள்க. (எ)

விநாயகக்கடவுள்.

மண்ணுலகத்தினிற் பிறவி மாசற
வெண்ணிய பொருளெலா மெளிதின் முற்றுறக்
கண்ணுத லுடையதோர் களிற்று மாமுகப்
பண்ணவன் மலரடி பணிந்து போற்றுவாம்.

(இ-ள்.) நிலவுலகத்திற் பிறத்தலாகிய குற்றம் நீங்கும்பொருட்டும் (மனதிற்) கருதியபொருள்களனைத்தும் எளிதாக முற்றுப்பெறுதற்பொருட்டும் நெற்றிக்கண்ணையுடைய ஒப்பற்ற யானைமுகமுள்ள ஸ்ரீவிநாயகக்கடவுளது தாமரை மலர்போன்ற திருவடிகளை (யாம்) வணங்கித்துதிசெய்வோம்.—எ-று.

மாயையினாற் பந்திக்கப்பட்டு மண்ணுலகத்தில் நால்வகைத்தோற்றத்தெழுவகைப்பிறப்பினுழன்று பிறந்திறத்தல் பெருந்துன்பமுடைத்தாகலான் அதுநீங்கவென்பார், 'மண்ணுலகத்தினிற் பிறவிமாசற' என்றும், உயிர்க்குப் பேரின்பும், பேருறுதியுந்தருவதாகிய இம்மை மறுமை வீடென்னும் மும்மைப்பயன்களும் எளிதினெய்துகவென்பார், 'எண்ணியபொருளெலா மெளிதின்முற்றுற'என்றும், மாசறச்செய்தற்கும் முற்றுறச்செய்தற்குங் காரணராயுள்ள பெருமான் அஃறிணையாகிய யானைமுகமுடையவராயிருப்பினும்பரம்பொருளாயுள்ளவரேயென்பார்,'கண்ணுதலுடையதோர் களிற்றுமாமுகப்பண்ணவன்' என்றும்,அப்பெருமானடியை வணங்கிவாழ்த்தவே மேற்கூறியவிரண்டுமினிது கைகூடுமென்பார்,'மலரடிபணிந்துபோற்றுவாம்' என்றுங் கூறினர். (அ)

வைரவக்கடவுள்.

பரமனை மதித்திடாப் பங்க யாசன
னொருதலை கிள்ளியே யொழிந்த வானவர்
குருதியு மகந்தையுங் கொண்டு தண்டமுன்
புரிதரு வடுகனைப்போற்றி செய்குவாம்.

(இ-ள்.) முற்காலத்தில் சிவபெருமானை மதியாமலகங்கரித்திருந்த கமலாசனனாகிய பிரமனுடைய ஒருதலையைக்கிள்ளி,அப்பிரமனொழிந்த மற்றத்தேவர்களுடைய உதிரத்தையும் அகங்காரத்தையுங் கொண்டு (அவர்களைத்) தண்டனைபுரிந்தருளிய வைரவக்கடவுளைத் துதிசெய்வோம்.—எ-று.

அகிலகாரணராகிய சிவபெருமானே பரமபதியென்பார், 'பரமன்' என்றும் பாசவசத்தாற்பரமனைமதித்திடாத பசுக்களிலொன்றாய்ப்படிக்கப்பட்டவனென்பார், 'பங்கயாசனன்' என்றுக் கூறினர். பங்கயாசனன் ஒருதலை கிள்ளியவரலாறு.—

முன்பொருகாலத்தில் திருமால் பிரமனென்னுமிருவரும் மேருமலையிலிருக்கும் பொழுது முனிவர்களுந்தேவர்களும் வந்துவணங்கிநின்று திரிமூர்த்திகளிற் சிறந்தவர்

யாவரென்று வினவினார்கள். அப்பொழுது பிரமன் நானேபரம்பொருளென்று கூறி னன்; திருமாலும் அவ்வாறே கூறினர். இவ்வாறு இருவரும் நான் பரம் நான் பரம் என்று போர் புரியுங்கால் சிவபெருமான் ஒரு சோதிவடிவமாய் அங்கெழுந்தருளக் கண்டு திருமால் வணங்கி வைகுந்தஞ் சென்றனர். பிரமன் அகங்கரித்து அவ் வெம் பெருமானை யிகழ்ந்துகூறினன். அப்பொழுது சிவபெருமான் தமது மனத்தில் வயி ரவரை யுண்டாக்க, அவர் சென்று தமது நகத்தினால் பிரமனது நடுத்தலையைக்கிள்ள வும் அவன் அஞ்சி வணங்க, அருள் செய்து, வைகுந்த மடைந்து திருமாலைக் கண்டு உதிரபலி கேட்டனர். உடனே திருமால் தன் நெற்றியைப்பிளந்து உதிரம் பொழிய, அதனைப் பிரமகபாலத்தில் நெடுநா ளேற்றனர். அதனால் திருமால் மூர்ச்சித்து விழ, அவரை யெழுப்பி அகங்கரித்துள்ள மற்றத்தேவர்க ளுதிரங்களை யேற்று ஸ்ரீகைலாய த்தை யடைந்து, சிவபெருமான் திருவருளால் சகல அண்டங்களையுங் காவல்செய்தி ருந்தனர் என்பதாம். (ரு)

வெஞ்சினப் பரியழன் மீது போர்த்திடு
மஞ்சனப் புகையென வால மாமெனச்
செஞ்சுடர்ப் படிவமேற் செறித்த மாமணிக்
6 கஞ்சுகக் கடவுள்பொற் கழல்க ளேத்துவாம்.

(இ-ள்.) வெவ்விய கோபத்தினையுடைய வடவாமுகாக்கினியின்மேல் போர்க்கப்பட்ட கருநிறம்பொருந்திய புகைபோலவும், ஆலாகல விஷம்போலவும் விளங்கும்படி சிவந்த சூரியன்போல் விளங்குந் தமது திருமேனியின்மேல் போர்த்தருளிய சிறந்த நீலநிறத்தையுடைய (வாமனனது தோலாகிய) மேற் போர்வையையணிந்த வைரவக்கடவுளது அழகிய திருவடிகளைத் துதி செய்வோம்.—எ-று.

கடல்நீரைச் சதாகாலமும் விரைந்துண்டு வற்றச்செய்யும் வடவா முகாக்கினி யென்னும் பெருந்தீயானது பெட்டைக் குதிரை முகம்போல்வ தாகலின், 'வெஞ்சினப்பரியழல்' என்று கூறினர். பரியழன்மீது போர்த்த புகையைப்போலவும் விஷத்தைப்போலவும் தமது சிவந்த திருமேனியின்மேல் போர்க்கப்பட்டநீலச்சட்டையை யுடைய வயிரவக்கடவுளென்க. செஞ்சுடர்ப் படிவமேற் செறித்த மாமணிக் கஞ்சுக மாவது, திருமாலவதாரமாகிய வாமனனது தோலை யுரித்துப் போர்த்த சட்டையை அதன் வரலாறு.—திருமால் பிருகு முனிவரது சாபத்தினால், காசிபமுனிவருக்குப் புத்திரராக வாமனனென்னும் பெயரோடு தோன்றி, அசுரராஜனாகிய மாபலிச்சக்கரவர்த்தியிடஞ்சென்று மூன்றடிமண்ணை யாசித்துப்பெற்று, ஓரடியினால் இந்நிலவுலகத்தை யளந்து, மற்றோரடியால் மேலண்டங்களை யளந்து, மூன்றாவதடிக் கிடமில்லாமல் அவன் தலைமீது வைத்தழுத்தித் தனது பேருருவத்தால் ஆகாய மறையும்படி அகங்கரித்து நின்றனர். அதனை யுணர்ந்த பிரமன் முதலிய தேவர்கள் திருக்கயிலையை யடைந்து சிவபெருமானை வணங்கித் தங்குறைகூறி வேண்டச் சிவபெருமான் அவர்கள் வேண்டுகோட்கிரங்கி வயிரவக்கடவுளை நோக்கியருள, வயிரவர் சிவபெருமானது திருவுள்ளக் குறிப்பை யுணர்ந்து அத்திரிவிக்கிரமனிடஞ் சென்று, "நீ கொண்ட இவ்வுருவையும் அகங்காரத்தையு மொழிக்கக்கடவை" என்று கூற, அவ்வாமனன் பின்னுஞ் செருக்குற்று நின்றனன். அதனால் வயிரவர் கோபங்கொண்டு தமது தண்டாயுதத்தினால் வீசியடித்துக் கீழேதள்ளி மிதித்து அவ்வாமனனது கரியமேற் றோலையுரித்து ஆடையாகத் தரித்து முதுகெலும்பைப் பிடுங்கித் தண்டமாகத் திருக்கரத்தில் தரித்தனர். அதனால் அவ்வாமனனாகிய திருமால் செருக்கொழிந்து சிவபெருமானை வணங்கித் தம்பழைய வுருவோடு வைகுந்தத்தை யடைந்தனர் என்பதாம், இதனை:—

உபதேசகாண்டம் - வாமனாவதாரச் சருக்கம்.

"சென்றன னெதிரா நின்றோ ராணவச் செருக்கி னிற்கு
மன்றளந் துளவி னோற்கு மாமயக் கொழிய நேரா
வின்றியல் பிறவுஞ் சொன்னா னஃதவன் சிறிது மெண்ணான்
கன்றிய வெகுளி மிக்கான் வயிரவக் கடவுட் செல்வன்.

பற்றினன் வயிரத் தண்டம் பரிரண்ட மதிர வோச்சிச்
சுற்றின னுருமுக் காலத் தெழித்தனன் றுளவ மார்பி
னெற்றின னெற்ற லோடு மெறிபடு சண்ட வாயு
முற்றுற விற்று வீழு மூரிவெங் கிரியிற் சாய்ந்தான்.

கருநிறக் கமஞ்சூன் மேகக் காரத லுரித்து வாங்கித்
திருநிறத் தலையக் காள கஞ்சுக மென்னச் சேர்த்தி
வெரிநுறப் பிடுங்கு மென்பு தண்டென விடுத்துக் கொண்டான்
மருமலர்த் துளவ மாயோ னுணவ மயக்கந் தீர்ந்தான்" எனவும்,

காஞ்சிப்புராணம்.

எளியரை வலியர் வாட்டின் வலியரை யிருநீர் வைப்பி
னளியறத் தெய்வம் வாட்டு மெனுமுரைக் கமைய வன்றே
தெளியுமா வலியைச் செற்றோற் செகுத்துரிக் கவயம் போர்த்த
வளியுளர் கச்சி காவல் வயிரவர்க் கன்பு செய்வாம்". எனவும் வருவனவு
முணர்க. (கo

வீரபத்திரக்கடவுள்.

அடைந்தவி யுண்டிடு மமரர் யாவரு
முடிந்திட வெருவியே முனிவர் வேதிய
ருடைந்திட மாமக மொடியத் தக்கனைத்
தடிந்திடு சேவகன் சரணம் போற்றுவாம்.

(இ-ள்.) (தக்கன்செய்த வேள்வியை) அடைந்து அவிப்பாகத்தைப்பெற்று உண்ட தேவர்க ளனைவரு மிறக்கவும், முனிவர்களும் வேதியர்களும் அஞ்சி யோடவும் அவன்பெருமையோடுசெய்த வேள்வியழியவும் தக்கனை வெட்டி யழித்தருளிய வீரபத்திரக்கடவுளது திருவடிகளை வணங்குவோம்.—எ-று.

பிரமபுத்திரனாகிய தக்கன் செய்த யாகம் நற்காரியமாயிருப்பினும் அது சிவபெருமானை விரோதித்துச் செய்தமையான் தீமையாகவே யமைதலின்,அதனை யொழித்தற்பொருட்டுத் தக்கனைத் தடிந்தருளின னென்பார் 'தக்கனைத் தடிந்திடுசேவகன்' என்று கூறினார். இச் சரிதம் மேல் தக்ஷகாண்டத்து விளங்கக் கூறுதலின் ஆண்டுக் கண்டுணர்க. தக்கன் செய்த வேள்வி தீமையாயிற் றென்பதனை:—

சிவஞானசித்தியார்.

"அரனடிக் கன்பர் செய்யும் பாவமு மறமதாகும்
பரனடிக் கன்பி லாதார் புண்ணியம் பாவ மாகும்
வரமுடைத் தக்கன் செய்த மாவேள்வி தீமையாகி
நரரினிற்பாலன் செய்த பாதக நன்மை யாய்த்தே."—என்பதனானுணர்க. ()

சுப்பிரமணியக்கடவுள்.

இருப்பரங் குறைத்திடு மெஃக வேலுடைப்
பொருப்பரங் குணர்வுறப் புதல்வி தன்மிசை
விருப்பரங் கமரிடை விளங்கக் காட்டிய
திருப்பரங் குன்றமர் சேயைப் போற்றுவாம்.

(இ-ள்.) இரும்பு-இரும்பினுற் செய்யப்பட்ட, அரம் - அரத்தினுல், துறை த்திடும் - அராவப்பெற்ற, எஃகவேலுடைய - எஃகமாகிய வேற்படையை யுடைய, பொருப்பர் - குறவர்கள், புதல்விதன்மிசை விருப்பு - தங்கள் புதல்வியாகிய வள்ளி நாச்சியார்மீது வைத்துள்ள விருப்பத்தை, அரங்கு அமரிடை-(பகைவர்கள்) அழிதற் கேதுவாகிய போர்க்களத்தில், உணர்வுற - அறியுமாறு, விளங்கக் காட்டிய-(இனிது) விளங்கும்படி காட்டியருளிய, திருப்பரங்குன்றுஅமர் சேயை- திருப்பரங்குன்றமெ ன்னுந் திருப்படைவீட்டி லெழுந்தருளிய குமாரக்கடவுளை, போற்றுவாம்-துதிசெய் வோம்.—எ-று.

வேற்படை யேந்திய குறவர்கள் தங்கள் புதல்வியாகிய வள்ளிநாச்சியார் மீது தாம் வைத்துள்ள விருப்பத்தைப் போர்க்களத்தில் அறியும்படி விளங்கக் காட் டியருளிய திருப்பரங் குன்றத் தெம் முருகப்பிரானைத் துதிப்பாமென்க.

குறிஞ்சிநிலமாக்களாகிய குறவர்கள் கூரிய வேற்படையினைப் பெற்றுள்ள வர்க ளென்பார், இருப்பரங் துறைத்திடு மெஃக வேலுடைப் - பொருப்பர்' என் றும், அத்தகைய குறவர்கள் தாங்கள் புத்திரியாகப் பாராட்டிப் பெருவிருப்புடன் வளர்த்துவந்த வள்ளிநாச்சியாரிடத்து முருகப்பெருமான் தாமும் பெருவிருப்புற்றுள் ளா ரென்பதை யவர்களோடு புரிந்த போர்க்களத்து விளங்கக்காட்டியருளின ரென் பார், அங் துணர்வுறப் புதல்வி தன்மிசை - விருப்பாங் கமரிடை விளங்கக் -காட் டிய-திருப்பரங் குன்றமர் சேய்" என் றுங் கூறினர்.

இத்தலம் பராசரபுத்திரர்களுக்கு ஞானோபதேசஞ் செய்யப்பெற்றதும், புரந்திரன்மகளாகிய தெய்வயானை நாச்சியாரைத் திருமணம்புரியப்பெற்றது மாகிய பழமன்மையோடு விளங்குவதும், திருப்படைவீ டாறனுள்ளே முத லெண்ணப்படுவ தும், பாண்டித் திருநாட்டுள்ள மதுராபுரிக்கு மேற்றிசைக்கண் ணுள்ளது மாமென வறிக. இதனை:—" மலையுருக் கொண்ட வுடல்வா ளரக்கர் - வெள்ளமுஞ் சூரும் புள் ளியற் பொருப்பும் - நெடுங்கடற் கிடங்கு மொருங்குயிர் பருகிய - மணிவேற் கும ரன் முதனிலை வாழுங் - குன்று" என வருங் கல்லாடத்தானும், "மாடமலி மறுகிற் கூடற் குடவயி - னிருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த-முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக் - கட்கமழ் நெய்த லூதி யெற்படக் - கண்போன் மலர்ந்த காமர் சுனைமல - ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங்-குன்றமர்ந் துறைதலு முரியன்" என வருந் திருமுருகாற்றுப்படையானு முணர்க.

அரங்கமரிடை என்றதனுல், பகைவர்கள் என வருவித்துப் பொருள் கூறி னும். இரும்பு என்பது தொடைநோக்கி இருப்பு என வலித்தல் விகாரம் பெற்றது. எஃகவேல் - இருபெயரொட்டுப் பண்புத்தொகை; அன்றி எஃகினுற் செய்யப்பட்ட வேல் என மூன்ரும்வேற்றுமைத் தழாநிலைத்தொடராகக் கொள்ளினுமாம். உடைய என்னுங் குறிப்புப் பெயரெச்சம் ஈறுகெட்டு நின்றது. அரங்கு முதனிலைத்தொழிற் பெயர். (கஉ)

சூரலை வாயிடைத் தொலைத்து மார்புகீண்
டீரலை வாயிடு மெஃக மேந்தியே
வேரலை வாய்தரு வெள்ளி வெற்பொரீஇச்
சீரலை வாய்வரு சேயைப் போற்றுவாம்.

(இ-ள்.) சூர் - சூரபதுமனை, அலைவாயிடைத் தொலைத்து - கடலினிடத் துக்கொன்று, மார்பு கீண்டு - மார்பைப் பிளந்து, ஈரலைவாய் இடும் - அவன் ஈருலை வாயிற்கொண்ட, எஃகம் ஏந்தி - வேற்படையைத் தாங்கி, வேரல் ஐவாய்தரு - பிரப பங் காடுகள் அழகாக வாய்க்கப்பெற்றுள்ள, வெள்ளி வெற்பு ஒருவி - வெள்ளியங்கிரி

யை யகன்று, சீரலை வாய்வரு - திருச்சீரலைவாய் என்னுந் திருப்படைவீட்டி லெழுந் தருளிய, சேயை - குமாரக்கடவுளை, போற்றுவாம் - துதிப்போம்.—எ-று.

கடலிற் சூரபதுமனை விட்டிய வேலையேந்தித் திருச்சீரலைவா யென்னுந் திருப்பதியி லெழுந்தருளிய குமாரக்கடவுளைத் துதிப்பாமென்க.

வேற்படைக் கஞ்சியகன்றோடி மாவடிவங் கொண்டு கடற்கண்ணிருந்த சூரனை இருகூறாகப்பிளந்த வேல் என்பார், 'நூலை வாயிடைத் தோலைந்து மார்பு கிழ்ண் மாலை வாயிடு மெஃகம்' என்றும், அவ்வெஃகப் படையேந்திய பெருமான், சூரதியனையழித்த பிரதமத்தில் எழுந்தருளியது இத்திருப்பதியேயென்பார், 'வெள் ளிவெற்பொரீஇச் -சீரலைவாய் வருசேய்' என்றுங் கூறினர். சூர்-என்றது, சூரபது மனை. சீரலைவாய்தரு என்பதற்கு,'சிரப்பங்காடுகளைவாய்க்கப்பெற்றஎன இரண்டாம் வேற்றுமைத்தொகாநிலைத்தொடராகப்பொருள்கூறினுமாம். வெள்ளிவெற்புஎன்றது திருக்கயிலாயத்தை. இத்தலத்திற்கு செயந்தி நகரம், சந்தனசைலம், சீரலைவாய், செ தில் எனப் பல திருநாமங்கள் நூல்களிற் கூறப்படும். சீரலைவாய் என்றது, கட களைக் கருதிவிருத்தல் கருதியென வறிக. 'மார்புதின் டீரலைவாயிடு மெஃகம்' என்றது வேற்படையினது வீரத்தைச் சிறப்பித்துக்கூறியபடி. அலைவாயிடை என்புழி உருப ன்மேலுரு பேற்றது. அலை என்பது வினையாகுபெயராய்க் கடலையுணர்த்தியது. ஈருள் என்பது - ஈரல் என மரீஇயது. ஒரீஇ - சொல்லிசை யளபெடை. எந்தி ஒரீஇ - வ சேய் எனக் கூட்டுக. (கக

காவினன் குடிலுறு காமர் பொன்னகர்
மேவினன் குடிவர விளியச் சூர்முதல்
பூவினன் குடிலையம் பொருட்கு மாலுற
வாவினன் குடிவரு மமலற் போற்றுவாம்.

(இ-ள்.) காவினன் - இந்திரனானவன், குடில் உறு - ஆகாயத்திற்பொருந் திய, காமர்-அழகிய, பொன்னகர் - பொன்னுனகரத்தை, மேவினன் - அடைந்தவனாய், குடிவர - குடியேறப் பெறவும், சூர்முதல் - சூரபதுமனாகிய முதல்வன், விளிய - இறக் கவும், பூவினன் - தாமரைமலரில் வசிக்கும் பிரமன், குடிலையம் பொருட்கு - பிரண வப் பொருளுக்கு, மால் உற - (சொல்லத்தெரியாமல்) மயக்கமடையவும், ஆவினன் குடிவரும் - திருவாவினன் குடி என்னுந் திருப்படைவீட்டி லெழுந்தருளிய, அமலன்- மலரகிதராகிய குமாரக்கடவுளை, போற்றுவாம் - துதி செய்வோம்.—எ-று.

இந்திரன் பொன்னகரிற் குடிபுகவும், சூரபதும னிறக்கவும், பிரமன் பிரண வப்பொருள் தெரியாது மயங்கவும் திருவாவினன்குடியி லெழுந்தருளிய முருகக்கட வுளைத் துதிப்பா மென்க.

கற்பகம்-மந்தாரம்-அரிசந்தனம்-பாரிசாதம்-சந்தானம் என்னும் பஞ்சதருக் களுக்குந் தலைவனென்பார், 'காவினன்' என்றும், அவன் வாழுலகம் விண்ணகத்துள தென்பார், 'குடிலுறு' என்றும், பசும்பொன்மயமாய்ப் பேரழகோடு பொலியும் பெரு நகரென்பார், 'காமர்பொன்னகர்' என்றும், சூரபதுமன் மூத்தமகனாகிய பானுகோப னால் நீக்கொளுத்தப்பட்டுப் பின்னர் குமாரக்கடவுளால் குடியேறப் பெற்றனனென் பார், 'மேவினன்குடிவர' என்றும், சிங்கமுகன் - தாரகன் முதலியோரனைவரும் இவ னுக்குள்ளிட்டவரே யென்பார், 'விளியச்சூர்முதல்' என்றும், பிரணவப்பொருளுணரா து குழறிய நான்முகனைச் சிறையிடப்படுத்த அவன் மயக்குற்று வருந்தினனென் பார், 'பூவினன் குடிலையம் பொருட்டு மாலுற' என்றும், காவினன்குடி வருதற்கும், சூர்முதல் விளிதற்கும், பூவினன்மாலுறுதற்குங் காரணராயுள்ளவர் ஸ்ரீகுமாரக்கடவு

ளேயென்பார், 'ஆவினன்குடிவரு மமலன்' என்றும், அவ்வமலனைப் போற்றின், இந்திராதிபோகமும், சத்துருசங்காரமும், மெய்ப்பொருளுணர்ச்சியும் மேவிவாழ்தல் அருமையன்றென்பார், 'போற்றுவாம்' என்றுங் கூறினர்.

காவினன் என்பதற்கு, காவின் கூட்டங்கட் கிறைவன் [இந்திரன்] எனப் பொருள்கொள்க. இனம்=கூட்டம். குடிவுறு காமர் பொன்னகர் என்பதற்கு, வசிக்கின்ற அழகிய பொன்னகரை எனப் பொருள்கூறுதலு மொன்று. மேவினன்-முற்றெச்சம். பூவினன் என்புழி இன்சாரியை. மேவினன் குடிவர என்பதற்கு, அடைந்து நல்ல குடியேறப்பெறவும், எனப் பொருள் கூறினுமாம். இத்தலம் இக்காலத்துப் பழநி என வழங்குகின்றது. (கச)

நீரகத் தேதனை நினையு மன்பினோர்
பேரகத் தலமரும் பிறவி நீத்திடுந்
தாரகத் துருவமாந் தலைமை யெய்திய
வேரகத் தறுமுக னடிக ளேத்துவாம்.

(இ-ள்.) நீர் அகத்து - நற்குண மமைந்த மனத்தினால், தனை நினையும் - தம்மைச் சிந்திக்கின்ற, அன்பினோர் - அன்பினையுடைய மெய்யடியார்களது, பேரு அகத்து - பெரிய மனத்தின்கண், அலமரும் - சுழலச்செய்யும், பிறவி நீத்திடும் - பிறப்பினை யொழிக்கின்ற, தாரகத்து உருவம் ஆம் - பிரணவப்பொருளின் வடிவமாகிய தலைமை யெய்திய - தலைமைப்பாட்டினை யடைந்த, ஏரகத்து அறுமுகன்-திருவேரகமென்னுந் திருப்படைவீட்டி லெழுந்தருளிய ஆறு திருமுகங்களையுடைய குமாரக்கடவுளது, அடிகள் - திருவடிகளை, ஏத்துவாம் - துதிசெய்வோம்.—எ-று.

தம்மை விரும்பித் துதிக்கும் மெய்யன்பர்களுடைய பிறவித்துன்பத்தை யொழித்தருளுந் தாரக சொரூபராகிய திருவேரகத் திருப்பதியி லெழுந்தருளும் சண்முகப்பெருமான் திருவடிகளைத் துதிப்பாமென்க.

பேரன்போடு இடைவிடாது சிந்திக்கும் மெய்யன்பின ரென்பார், 'நீரகந் தேதனை நினையு மன்பினோர்' என்றும், அருளிக் கூறினும் வெகுண்டு கூறினும் அவ்வப் பயனைத் தரத்தக்க, நிறைமொழிமாந்தராகலான் அவர் மனஞ் சிறப்புடையதென்பார், 'பேரகம்' என்றும், அத்தகைய மனத்தையுங் கலங்கச்செய்வது இப் பிறவியேயென்பார், 'அலமரும் பிறவி' என்றும், அப் பிறவியை யொழிக்கத்தக்கது தாரகமந்திரமென்பார், 'நீத்திடுந் தாரகம்' என்றும், அத் தாரகவடிவமாயுள்ள முதற்கடவுள் குமாரக்கடவுளேயென்பார், 'தாரகத் துருவமாந் தலைமையெய்திய ஏரகத்தறுமுகன்' என்றுங் கூறினர். தாரகம்=பிரணவம். ஏரகம் என்பது மலைநாட்டகத்ததோர் திருப்பதி; இதனை—'ஏரகத் துறைதலு முரியன்' என்னுந் திருமுருகாற்றுப்படைக்கு நச்சினார்க்கினியர் கூறிய வுரையா னுணர்க. அஃது இக்காலத்துஉடுக்கைச் சுப்பிரமணியமென வழங்குகின்றது. அன்றிச் சோழநாட்டகத்துள்ள சுவாமிமலையெனக் கூறுவாரு முண்டு.

குமாரக்கடவுள் பிரணவப்பொருளா யுள்ளவர் என்பதுதோன்ற, தாரகத் 'துருவமாந் தலைமை யெய்திய-ஏரகத் தறுமுகன்' என்று கூறினர். இதனை. இப்புராணம், உற்பத்திகாண்டம். அயனைச் சிறைபுரி படலத்தில் :—"முகத்தி லொன்றதா வஃவெழுத் துடையதோர் முருக-னகைத்து முன்னெழுத் தினுக்குரை பொருளென நவில- மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித் - திகைத்தி ருந்தனன் கண்டில னப்பொருட் டிறனே." எனவும், மகேந்திரகாண்டம். அவைபுகுபடலத்தில். தாம ரைக்கணான் முதலிய பண்ணவர் தமக்கு - மேமு றப்படு மறைக்கெலா மாதியெ பெற்றியது - மோமெ னப்படுங் குடிலையே யொப்பிலா முருகன்-மாமு கத்து ளொன் றும வன் றன்மையார் வகுப்பார்." எனவும், காஞ்சிப்புராணம். குமரகோட்டப்படலத்தில்:-

'புக்கிறைவன் றனைவணங்கி நிகழ்ந்தவெலாம் விண்ணப்பஞ்செய்யப் பூந்தே - னக்க னறுந்தொடையலிதழிக் கடவுளவர் தமைநோக்கி நவில்வா னென்னே - அக்கமலன் விளம்பியவா நம்மையுநம் புதல்வனையு மன்றே மான - மிக்கபுகழ்ச் சுருதியெலாம் பிரணவத்தின் பொருளாக விளம்பு மாறே." எக்கலைக்கும் பூதங்க ளெவற்றினுக்கும் பிரமனுக்கு மீச னென்னத் - தக்கமுதல் பரம்பிரமஞ் சதாசிவனே மெனவேதஞ் சாற்று மல்லால் - முக்கனல்சூழ் வேள்வியிற்சுப் பிரமணிய னேமெனவு முக்காற் கூறு - மிக் கருத்தை யறியாமை யெவ்வாறு விடுவிப்ப தியம்பு மின்றே." எனவும் வருவனவற்றானுணர்க. குடிவர - விளிய - மாறுற - வருமமலன், எனக் கூட்டுக. (கரு)

ஒன்றுதொ றுடலை யொருவி யாவிமெய்
துன்றுதொ றுடலைத் தொடங்கி யைவகை
மன்றுதொ றாடிய வள்ளல் காமுறக்
குன்றுதொ றாடிய குமரற் போற்றுவாம்.

(இ-ள்.) ஆவி - உயிர்கள், ஒன்றுதொறு - சங்காரத் தொடுங்குந்தோறும், ஆடலை ஒருவி-திருநடனஞ்செய்தலை யொழிந்தும், மெய்துன்றுதொறு - (அவ் வுயிர்கள்) உடம்பிற் பொருந்துஞ் சிருஷ்டிதோறும், ஆடலைத் தொடங்கி- திருநடனஞ் செய்யத்தொடங்கியும், ஐவகை மன்றுதொறு - பஞ்சசபைகளிலும், ஆடியவள்ளல்-திருநடனஞ் செய்தருளுஞ் சிவபெருமான், காமுற -விரும்பும்படி, குன்றுதொறு ஆடிய குன்றுகள்தோறுந் திருவிளையாடல் புரிந்தருளும், குமரன்-குமாரக்கடவுளை, போற்றுவாம் - துதிசெய்வோம்.—எ-று.

தமது ஆடலைச் சர்வசங்காரகாலத்து ஒழிந்தும், சிருட்டிக்காலத்துத் தொடங்கியும், பஞ்சசபைகளில் திருநடனஞ்செய்தருளும் சிவபெருமான் விரும்பும்பொருட்டுக் குன்றுதொறாடுங் குமாரக்கடவுளைத் துதிப்பாமென்க.

மகா சங்காரகாலத்தில் அனைத்தும் ஒடுங்குதலான் அக்காலத்தும் பஞ்சகிருத்தியத் திருத்தாண்டவ மொழிந்திருப்பரென்பார், 'ஒன்றுதோ றுடலை யொருவி' என்றும், பின் சிருஷ்டிக்காலத்து அதனைச் செய்தருளுவரென்பார், 'ஆவிமெய் துன்றுதோ றுடலைத்தொடங்கி' என்றும், அவ்வாடலைக் கனகசபைமுதலிய பஞ்சசபைகளிலுஞ் செய்தருளுவரென்பார், 'ஐவகைமன்றுதோறாடியவள்ளல்' என்றும், அவர் மன்றுதொறாடியபடியே இளையபிள்ளையார்குன்றுதொறாடுதலின் அச்சிவபெருமானுக்குப் பெருமகிழ்வு விளையுமென்பார், 'காமுற' என்றும், குறிஞ்சிநிலக்கடவுளென்பார். 'குன்றுதோ றாடிய குமரற்போற்றுவாம்' என்றுங் கூறினர். இதனால் சிவபெருமான் செய்தருளும் திருநடனம் பஞ்சகிருத்திய நடனமாகலான் சிருஷ்டிதொடங்கிய காலத்து நடித்தலும் அஃதொழிந்த காலத்துவிடுத்தலுங்குறித்தவாறாயிற்று. பஞ்சசபையாவன திருவாலங்காட்டில் இரத்தினசபையும், தில்லையில்கனகசபையும், மதுரையில் இரசிதசபையும், திருநெல்வேலியில் தாமிரசபையும். திருக்குற்றாலத்தில் சித்திரசபையுமாம். தொறு என்பது ஏழாவதன்பொருண்மைக்கண்வந்த பன்மையுருபிடைச்சொல். ஒன்று-துன்று என்னும் வினைத்தொகை வினைச்சொற்கள் தொறு என்னு மிடைச்சொல்லைக்கொண்டு முடிந்தன. ஆவி என்பது சாதியொருமை. வள்ளல் என்பது ஈகைத்தன்மை: அது பண்பாகுபெயராய் அதனையுடைய சிவபெருமானுக் காயிற்று. காமம் உற என்பது, காமுற எனத் தொகுத்தல் விகாரம்பெற்றது. (கசு)

எழுமுதி ரைப்புனத் திறைவி முன்புதன்
கிழமுதி ரிளநலங் கிடைப்ப முன்னவன்
மழமுதிர் களிறென வருதல் வேண்டிய
பழமுதிர் சோலையம் பகவற் போற்றுவாம்.

(இ-ள்.) முதிரைப்புனத்து - முதிரை விளையும் புனத்தில், இறைவிமுன்பு எழ - வள்ளிநாச்சியார் முன்னே எழுந்தருளுதலும், தன் கிழம்-தாம் கொண்டருளிய கிழப்படிவத்திலேயே, முதிர் இளநலம் கிடைப்ப - மிக்க இளமைப்பருவத்திற்குரிய காமவின்பந் துய்க்கும்படி, முன்னவன் - தம் முன்னவராகிய விநாயகக் கடவுள், மழமுதிர்களிறு என-இளமை முதிர்ந்த யானை வடிவமாக, வருதல்வேண்டிய-வருதலை விரும்பியருளிய, பழமுதிர்சோலை யம்பகவன்-பழமுதிர்சோலை யென்னுந்திருப்படை வீட்டிலெழுந்தருளும் அழகிய குமாரக்கடவுளை, போற்றுவாம்- துதிப்போம்.—எ-று.

வள்ளிநாச்சியார் தினைப்புனத்தின்கண் முன்செல்ல அவரைத்தழுவும் பொருட்டுத் தம் முன்னோனை யானையாக வரும்படிவேண்டிய பழமுதிர்சோலையி லெழுந்தருளிய கந்தப்பிரானைத் துதிப்பா மென்க.

இது குமாரக்கடவுள் விருத்த வேதிய வடிவங்கொண்டு வள்ளிநாச்சியாரிடத்துச் சென்று நீர்விடாய் தணிக்கவேண்டவும், அவ்வம்மையார் சுனையருகழைத்துச் சென்று நீருண்ணச்செய்து திரும்புங்கால், தம் முன்னவராகிய விநாயகக்கடவுள் யானையுருவெடுத்து அவ்வள்ளிநாச்சியார் முன்னே வரும்படி வேண்டினரென்பது. இதன் வரலாற்றை இந்நூலில் தக்ஷகாண்டம் வள்ளிநாச்சியார் திருமணப்படலத்தில் விளங்கக் கூறுதலின் ஆண்டுக்கண்டுணர்க. முதிரிள நலம் என்பது, மிக்க யவ்வனபருவத்திலனுபவிக்கும் காமம் என்னும் பொருள்பட நின்றது, மழமுதிர்களிறு=இளமைமுதிர்ந்த களிறு, அதாவது பெருங்களிறு என்னும்பொருளில் வந்தது. தன்கிழமுதிர் என்பதற்கு,தன்முதிர்ந்த கிழப்பருவத்தில் எனப் பொருள்கூறினுமாம். ஐசுவரியம்-வீரியம்-புகழ்-திரு - ஞானம் - வைராக்கியம் - என்னும் ஆறுக்கும் பகமென்னும் பெயருண்மையால். பகவனென்பதற்கு இவ்வாறுகுணங்களையு முடையோனென்பதுபொருள். முதிரை-துவரைப்பயறு முதலியன. முதிரைப்புனத்து எழ எனக்கூட்டுக. இத்தலம் இக்காலத்துச் சோலைமலை என்று வழங்குகின்றது. (கஎ)

ஈறுசேர் பொழுதினு மிறுதி யின்றியே
மாறிலா திருந்திடும் வளங்கொள் காஞ்சியிற்
கூறுசீர் புனைதரு குமர கோட்டம்வா
ழாறுமா முகப்பிரா னடிகள் போற்றுவாம்.

(இ-ள்.) யுகாந்தகாலத்திலும் அழிவில்லாமல் (சிறிதும்) மாறுபாடின்றியிருக்கும் வளப்பமிக்கோங்குகின்ற ஸ்ரீ காஞ்சிப்பதியில் (கலைகளால் புகழ்ந்து) கூறும் சிறப்பினையுடைய் குமரகோட்டமென்னுந் திருக்கோயிலில் வீற்றிருந்தருளும் ஆறு திருமுகங்களையுடைய குமாரக்கடவுளது திருவடிகளைத்துதிசெய்வோம்.—எ-று.

பிரமகற்பங்கடோறு மழிவுபெறாது சிறந்து வளர்ந்தோங்குவது இக்காஞ்சிப்பதியே யென்பார், ஈறுசேர் பொழுதினு மிறுதி யின்றியே - மாறிலா திருந்திடும் வளங்கோள் காஞ்சி' என்றும்,வேதாதி கலைகளிற் புகழ்ந்தோதப் பெறுவதென்பார் 'கூறுசீர் புனைதரு குமரகோட்டம்' என்றும், அக் குமரகோட்டத்துள் வீற்றிருந்தருளும் விழுப்பொருளாயுள்ள பெருமான் ஸ்ரீசண்முகக்கடவுளென்பார், 'ஆறுமாமுகப் பிரான்' என்றுங் கூறினர்.

ஈறுசேர் பொழுதினு மிறுதி யின்றியே மாறிலா திருந்திடும் வளங்கொள் காஞ்சி. என்பதனை,—

" சுருதியா னுறங்கு மிராத்தொறு முடிவிற் றுஞ்சிய வூழிகடோறும்
விரையவந் துலக மழித்திடுங் கடலவ் வியன்பதி யெல்லையுட் சிறிதும்
வருவதை யஞ்சிப் புறந்தனிற் சூழ வந்தொரு சத்திகாத் திடலாற்
பிரளய சித்தென் றொருதிரு நாமம் பெற்றதக் காஞ்சியம் பேரூர்." என இந்நூலிற் பின் வருமாற்றா னுணர்க. (கஅ)

### திருநந்திதேவர்.

ஐயிரு புராணநூ லமலற் கோதியுஞ்
செய்யபன் மறைகளுந் தெரிந்து மாயையான்
மெய்யறு சூள்புகல் வியாத னீட்டிய
கையடு நந்திதன் கழல்கள் போற்றுவாம்.

(இ-ள்.) சிவபெருமானுக்குப் பத்துப்புராணங்களை யோதியும், செவ்விய பல வேதங்களை யாராய்ந்தறிந்தும், மாயையினால் (மயங்கி) மெய்யுணர்ச்சி யில்லாத பொய்ச்சத்தியங்கூறிய வியாசமுனிவன் நீட்டிய கையை ஸ்தம்பிக்கச்செய்த திருநந்திதேவரது திருவடிகளை வணங்குவோம்.—எ-று.

"எதிரில் சைவமே பவிடிய மார்க்கண்ட மிலிங்க - மதிகொள் காந்தகல் வராகமே வாமன மற்சம் - புதிய கூர்மமே பிரமாண்ட மிவைசிவ புராணம்" என்று இந்நூலிற் கூறப்பட்டபடி வியாசமுனிவன் சிவபெருமானே பரமெனப் பத்துப் புராணத்துங் கூறியதுமன்றி, வேதங்களையு மோதா துணர்ந்தானென்று கூறுதலான், 'ஐயிரு புராணநூ லமலற்கோதியுஞ் செய்யபன்மறைகளுந் தெரிந்தும்' என்றும், அவ்வாறு ஓதியும் உணர்ந்தும், சிவனருள் விரவாமையால், விண்டுவே பரமென மயங்கிப் பொய்ச்சத்தியஞ் செய்தனனென்பார், 'மாயையான் மெய்யறு சூள்புகல் வியாதனீ' என்றும், அவன் சத்தியஞ்செய்ய நீட்டிய கையை அவ்வாறே ஸ்தம்பிக்கச் செய்தனரென்பார், 'நீட்டிய கையடுநந்தி' என்றுங் கூறினார். வேதங்கள் சிவபெருமானாலருளிச்செய்யப்பட்டமையின், 'செய்ய' என்றும், அவை ஆயிரமெனச் சங்கேதமாகலின், 'பல்' என்றும் அடைகொடுக்கப்பட்டன.

"மாயையான் மெய்யறுசூள் புகல்வியாத னீட்டிய கையடுநந்தி' என்றதன் வரலாறு.—பராசரபுத்திரராகிய வியாசமுனிவர் காசிப்பதியை யடைந்து தவஞ்செய்யுங்கால், அங்குவசிக்கும் முனிவர்களடைந்து வணங்கி, சுவாமி! வேதாந்தப் பொருளை விரித்துரைக்கவேண்டுமென்று வேண்ட, வியாசர் வேதாதிகலைகளைத் தனித்தனி விரித்துரைக்கக் கேட்டு, முனிவர்கள் தெளிவுபெறாமல், ஒரு வார்த்தையினால் முடிந்தபொருளிதுவென்று தொகுத்துரைக்கவேண்டுமென்று பிரார்த்திக்க, வியாசமுனிவர் அவ்வாறே யுணர்த்துதுமென்று முன்னதற்கு விரோதமாய் "நாராயணனே பரப்பிரமம், இது சத்தியம் சத்தியம்" என்று கையெடுத்துக் கூறினர். அதுகேட்ட முனிவர்கள் நீர் கூறியது சத்தியமாயின் விசுவநாதர் திருமுன்னே கையெடுத்துக் கூறுமென் றுரைப்ப, வியாசமுனிவர் அவ்வாறேசென்று நின்று, சிறிதும் பயப்படாமல் கை தூக்கி, நாராயணனேபரப்பிரமம் என்று முக்காற் கூறினர். அப்பொழுது திருநந்திதேவர் வெகுண்டு எடுத்த கைகள் அவ்வாறே ஸ்தம்பிக்கும்படி சபித்தனர். அதனால் வியாசர் செயலற்று திருமாலைச்சிந்திக்க, அவரெழுந்தருளித் தாம் பசுவென்பதும், சிவபெருமான் ஒருவரே பசுபதியென்பதும் விளங்க வுணர்த்தி, அவ்வெம்பெருமானைத் துதிக்கும்படி கட்டளையிட்டு மறைந்தருளினர். பின் வியாசர் சிவபெருமானைத் துதிக்கவும், ஸ்தம்பித்த கைகள் முன்போ லமைந்தன. பின் அம்முனிவர் சிவபெருமானைப் பலவாறுபுகழ்ந்து துதிக்கவும் பெருமா னெழுந்தருளி வேண்டிய வரங்களைக் கொடுத்து மறைந்தருளினர். பின்பு வியாசமுனிவர் சிலகாலஞ்சென்று காசியினின்று நீங்கிக் காஞ்சிப்பதியையடைந்து சிவலிங்கந்தாபித்துப்பூசித்து வேண்டிய வரங்களைப்பெற்று மகிழ்ந்துசென்றனர் என்பதாம். இதனை—காஞ்சிப்புராணம் - சார்ந்தாசயப்படலம். "உறுவர் யாரையு நோக்கிமுன் னுரைக்குமா றுகத்-தறுகணுண்மையிற் கூறுத லுற்றனன்றவத்தி-ரறிவு நூலெலாம் பன்முறை யாயினுந் தெளியப் - பெறுவ தோன்றது நாரணனே பரப் பிரமம். வண்ண மாமறை நாற்குமே னூலிலை மதியோ - ரென்று கேசவன் றனக்குமேற் றெய்வமு மில்லை - கன்னு மெவ்வகை நூல்

கட்குந் துணிபிது காண்மி-னுண்மை யுண்மையி தெனக்கர மெடுத்துநின் றுரைத்தான். கேட்ட மாதவர் வெரீஇனர் கிளர்மறைப் பொருட்குக்-கோட்ட மாயிது வெம்மனோர் கோட்டகத்தன்று - னூட்டி யீங்கிவன் புகன்றதென் னென்றுள நடுங்கி - நீட்டு செஞ் சடை முனிவரன் றன்னைநேர் நோக்கி" "வாதராயணை நீயிவண மொழிதரு மாற்றம்- வேத நூற்பொரு ளுண்மையே யாமெனில் விசுவ - நாத னார்திரு முன்பெமக் குரை யெனாவின்று-ரோதுமேனென மூர்க்கனு மெழுந்துசென் றுற்று" "விச்சுவேசன்முன் னின்றிரு கரமிசை நிமிர்த்தாங் - கச்ச மின்றிமுன் புகன்றதே புகன்றன னந்தோ விச்சைநூல்பல கற்பினுஞ் சிவனருள் விரவாக்-கொச்சை யோர்தமை விடுவதோ கொடு மலச் செருக்கு". "நந்தி யெம்பிரான் வெகுண்டுநாண் மலர்க்கர மெடுத்த - வந்த வண்ணமே யசைவற நிற்குமா சபிப்ப - மந்த னாயினு னிமிர்த்தகை யடக்கவல் லாமை- நிந்தை யாற்சிலைத் தூணமொத் தசைவற நின்றான்" என வருவனவற்றா னுணர்க.

திருஞானசம்பந்தமூர்த்திநாயனார்.

பண்டைவல் வினையினாற் பாயு டுத்துழல்
குண்டரை வென்றுமுன் கூடல் வைகியே
வெண்டிரு நீற்றொளி விளங்கச் செய்திடு
தண்டமிழ் விரகன்மெய்த் தாள்கள் போற்றுவாம்.

(இ-ள்.) முற்பிறப்பிற்செய்த வலிய தீவினையினால் (இடையில்) பாயை யுடுத்துத் திரிந்த சமணர்களாகிய கீழ்மக்களை வெற்றிகொண்டு முன்பு நான்மாடக் கூடலாகிய மதுரைப்பதியி லெழுந்தருளித் திருவெண்ணீற்றினொளி (தமிழ்நாடு முழுதும்) விளங்கும்படி செய்தருளிய தண்ணிய தமிழ் விரகனென்னுந் திருஞானசம்பந்தப் பிள்ளையாரது மெய்ம்மைபொருந்திய திருவடிகளைத் துதிப்போம்.—எ-று.

ஈச்சம்பாயை இடையி லுடுத்துழல்வது சமணர்களது முன்னைய தீவினைப் பயனென்பார், 'பண்டைவல்வினையினாற் பாயுடுத்துழல்குண்டர்' என்றும், அவரைப் புனல்வாதம், அனல்வாதம் என்னு மிரண்டாலும் வெற்றிகொண்டு கழுவேற்றினரென்பார், 'வென்று' என்றும், குலச்சிறையாரும் பாண்டிமாதேவியாரும் வேண்டிக்கொண்ட அன்புகாரணமாக வெழுந்தருளினரென்பார், 'முன் கூடல்வைகி' என்றும், பாண்டியன் சுரந்தீர்த்துக் கூனையுமொழித்து அவனை வைதிகசைவத் தொழுகச் செய்ததுமன்றி, அப்பாண்டிநாடும் பிறநாடுகளும் சிவநேசமெய்தத் திருநீறுசாத்துவித்தருளினரென்பார், 'வெண்டிரு நீற்றொளி விளங்கச் செய்திடு' என்றும், அவ்வாறு செய்தவர் ஆளுடைய பிள்ளையாரென்பார், 'தண்டமிழ் விரகன்' என்றுங் கூறினார்.

திருஞானசம்பந்தப்பிள்ளையார் பாண்டிநாட்டிற் கெழுந்தருளக்கண்ட சமணர்கள் பொறாது, அவரெழுந்தருளிய திருமடத்திற் றீயிட்டனர். அதைக்கண்ட பரிசனங்கள், பிள்ளையார்க் கறிவிக்கப் பிள்ளையார், "பொய்யராமமணர் கொளுவுஞ்சுடர்-பையவேசென்று பாண்டியற் காகவே" என்றமைத்துத் திருப்பதிகம் பாடியருள, அது வெப்புநோயாய்ப் பாண்டியனை வருத்தியது. அது காரணமாகக் குலச்சிறையாரும் பாண்டிமாதேவியாரும் பிள்ளையாரை வணங்கிவேண்டப் பிள்ளையார், "மந்திரமாவது நீறு" என்னு முதலையுடைய திருநீற்றுத் திருப்பதிகம் பாடியருளி அந்நோயைத் தணித்துப் பாண்டியனுக்குத் திருநீறுசாத்த, அதைக்கண்ட சமணர்கள் மனம்பொறாது வாதுக்கழைப்ப, அவ்வாறுசென்று, "போகமார்த்த பூண்முலையாள்" என்னு முதலையுடைய திருப்பதிகந்தீட்டிய திருவேட்டைத் தீயிலிட்டு வேகா திருக்கச்செய்தும், "வாழ்கவந்தணர்" என்னு முதலையுடைய திருப்பதிகத்தைப் பாடி வைகையி விட்டெதிரேறச்செய்தும் அவர்களைக் கழுவேற்றினமையால், 'பண்டைவல் வினையினால் பாயு டுத்துழல் குண்டரை வென்று' என்றும், பின்னர் மதுராபுரியில் வீற்றிருந்

தருளித் திருநீற்றொளிவிளங்கச் செய்தமையால், 'முன்கூடல்வைகியே வெண்டிருநீற் றொளிவிளங்கச் செய்திடும்' என்றுங் கூறினர். (௨௰)

### திருநாவுக்கரசுநாயனர்.

பொய்யுரை நூல்சில புகலுந் தீயமன்
கையர்கள் பிணித்துமுன் கடல கத்திடு
வெய்யகற் றோணியா மிதப்ப மேற்படு
துய்யசொல் லரசர்தா டொழுது போற்றுவாம்.

(இ-ள்.) பொய்ப்பொருளை (மெய்ப்பொருளாகப் புனைந்துரைக்கின்ற) சில நூல்களைக் கூறுங் கொடிய சமணர்களாகிய கீழ்மக்கள் தம்மைக் கட்டிக் கடலிற் போடப்பட்ட கொடிய கருங்கல்லே தோணியாக மிதப்ப, அக்கல்லின்மேல் (ஒரு அபாயமுமின்றி வந்தருளிய) தூய்மையாகிய திருநாவுக்கரசு சுவாமிகளுடைய திருவடிகளை வணங்கித் துதிப்போம்.—எ-று.

முத்தியின்பத்தைப் பயவாது நிரயத்துன்பத்தைப் பயக்கும் நூலென்பார், 'பொய்யுரை நூல்' என்றும், அவையுஞ் சிலவே யென்பார், 'சில' என்றும், அவற்றை நன்மை பயப்பனவாகக் கடைப்பிடித் துழலுங் கொடியவர்களென்பார், 'புகலுந் தீயமன்கையர்கள்' என்றும், அவ்வமணர்கள் எமது ஆருடைய வரசைப்பிணித்துக் கடலிற் செலுத்தப்பட்ட கல் கருங்கல்லென்பார், 'பிணித்துமுன் கடலகத்திடு வெய்ய கல்' என்றும், அக்கல்லே தெப்பமாகக்கொண்டு கரையேறப்பெற்றது தாம் அருளிச்செய்த "சொற்றுணை வேதியன்" என்னும் முதலையுடைய தேவாரத் திருப்பதிகமே யென்பார், 'தோணியா மிதப்பமேற்படு தூய்ய சொல்' என்றும், இத்தகைய மாண்பியம் விளங்கப்பெற்றவர் எமது திருநாவுக்கரசுசுவாமிகளே யென்பார், 'சொல்லரசர்' என்றுங் கூறினர். இதனை— "அப்பரிசவ் வினைமுற்றி யரசகன்றே யயின்னார் - ஒப்பறுமாக் கடல்புக்க வுறைப்புடைமெய்த் தொண்டர்தாமும் - எப்பரிசா யிடுகினுமாக வேத்துவனெந் தையையென்று-செப்பிய வண்டமிழ் தன்னாற் சிவனஞ் செழுத்துந் துதிப்பார்." "சொற்றுணைவேதிய னென்னுந் தூமொழி-நற்றமிழ் மாலையா நமச்சிவாயவென்-றற்றமுன் காக்குமைந் தெழுத்தை யன்பொடு பற்றிய வுணர்விஞற்பதி கம்பாடினர்." "பெருகியவன்பினர் பிடித்த பெற்றியா-லருமலரோன் முதலமரர்வாழ்த் துதற்-கரியவஞ் செழுத்தையு மரசு போற்றிடக்-கருநெடுங் கடலினுட் கன்மி தந்ததே." "அப்பெருங் கல்லுமங் கரசுமேற்கொளத்-தெப்பமாய் மிதத்தலிற் செறிந்தபாசமும் - தப்பிய ததன்மிசை யிருந்த நாவிற்சீர் - மெய்ப்பெருந் தொண்டனர் விளங்கித் தோன்றினர்" என்று வரும் பெரியபுராணத்தில் திருநாவுக்கரசுசுவாமிகள் புராணத்தாலுணர்க. (௨௧)

### ஸ்ரீசுந்தரமூர்த்திநாயனர்.

வறந்திடு பொய்கைமுன் னிரம்ப மற்றவ
ணுறைந்திடு முதலைவந் துதிப்ப வன்னதா
லிறந்திடு மகன்வளர்ந் தெய்தப் பாடலொன்
றறைந்திடு சுந்தர னடிகள் போற்றுவாம்.

(இ-ள்.) நீர்வற்றியிருந்த பொய்கை முன்னே நிரம்பவும், அப்பொய்கையில் வசித்திருந்த முதலை (யினவும்) வந்து தோன்றவும், அம்முதலையினல் (உண்ணப்பட்டு) இறந்த பிராமணச்சிறுவன் தன் பருவம் வளர்ந்து தோன்றவும் ஒரு திருப்பதிகம் பாடியருளிய ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகளது திருவடிகளைத் துதிப்போம்.—எ-று.

ஸ்ரீ சுந்தரமூர்த்திசுவாமிகள் முதலையுண்ட பிராமணச்சிறுவனைத் திருப்பதிகம் பாடியருளி யெழுப்பின வரலாறு.

திருநாவலூரராகிய ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகள் கொங்குநாட்டிலுள்ள அவி நாசியைத் தரிசிக்கச் சென்றபொழுது அந்நகரத்தின் அக்கிரகாரத்தில் ஒரு மாளிகை யில் அழுகுரலோசையும், மற்றொருமாளிகையில் மங்கலவாத்தியவோசையுமாயிருப் பக்கண்டு தம் பரிசனங்களை விடுத்துக் கேட்ப, அவ்வூரார் அவர்களைப்பார்த்து, இங்கு இரண்டு பிராமணச்சிறுவர்கள் ஒரு பொய்கையில் நீராடச்சென்றனர். அவர்களிலொ ருவன் முதலைவாய்க்கிரையாயினன். மற்றொருவன் பிழைத்துவந்தான். பிழைத்தவனு க்கு இங்கு உபநயனச் சடங்கு நடக்கையால், இறந்தபிள்ளையின் தாய்தந்தையர்கள் வருந்தி யழுகின்றனரென்று கூறினர். அதைக்கேட்ட பரிசனங்கள் ஸ்ரீசுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குத் தெரிவிக்க, அவர் இறந்தபுதல்வனை யெழுப்புவேனென்று அத்தடா கத்தருகிற் சென்று, அவிநாசிப்பெருமானை, "உரைப்பா ருரையுகந் துள்கவல்லார் தங்க ளுச்சியாய் - அரைக்கா டரவா வாதியு மந்தமு மாயினாய் - புரைக்காடு சோலைப் புக்கொளி யூரவி நாசியே - கரைக்கான்முதலையைப் பிள்ளைதரச்சொல்லு காலனையே" என்னுந் தொடையுடைய திருப்பதிகம் பாடியருளி, வறண்ட பொய்கைநீர் நிரம்பச் செய்து முதலையை வருவித்து இறந்த புதல்வனை அக்காலத்தில் நிரம்பின பருவத் துடன் வருவித்தனரென் றறிக. இதனை—"நன்னீர்ப் பொன்னித் திருநாட்டு நாதர் மகிழுந் திருப்பதிகண் - முன்னி யிறைஞ்சி யகன்றுபோய் முல்லைப் படப்பைக் கொ ல்லைமான் - றுன்னி யுகைக்குங் குடக்கொங்கி லணைந்து தூய மதிவாணர் - சென்னி மிசைவைத் தவர்செல்வத் திருப்புக்கொளியூர் சென்றடைந்தார்". "மறையோர் வாழு மப்பதியின் மாடவீதி மருங்கணைவார் - நிறையுஞ் செல்வத் தெதிர்மனைக ளிர ண்டி னிகழ்மங் கலவியங்கள் - அறையு மொலியொன் றினிலொன்றி லழுகை யொ லிவந் தெழுதலுமாங் - குறையு மறையோர் களையிரண்டு முடனே நிகழ்வ தென்னெ ன்றார்". "அந்த ணாளர் வணங்கியரும் புதல்வ ரிருவ ராயாண்டு-வந்த பிராயத் தினர் குளித்த மடுவின் முதலை யொருமகவை - முந்த விழுங்கப் பிழைத்தவனை முந்நூ லணியுங் கலியாணம் - இந்த மனைமற் றந்தமனை யிழந்தா ரழுகை யென்றுரைத்தார்". "இத்தன் மையினைக் கேட்டருளி யிரங்குந் திருவுள் ளத்தினரா - மொய்த்த முகை த்தார் வன்றொண்டர் தம்மை முன்னே கண்டிறைஞ்ச - வைத்த சிந்தை மறையோனு மனைவி தானு மகவிழந்த - சித்த சோகந் தெரியாமே வந்து திருத்தா ளிறைஞ்சினார்". "துன்ப மகல முகமலர்ந்து தொழுவார் தம்மை நோக்கியந்த-இன்ப மைந்தன் றனை யிழந்தீர் நீரோ வென்ன வெதிர்வணங்கி - முன்பு புகுந்து போனத்து முன்னே வண ங்க முயல்கின்றேம் - அன்பு பழுதா காமலெழுந் தருளப் பெற்றே மெனத்தொழு தார்". "மைந்தன் றன்னை யிழந்ததுயர் மறந்து நான்வந் தணைந்ததற்கே - சிந்தை மகிழ்ந்தார் மறையோனு மனைவி தானுஞ் சிறுவனையான் - அந்த முதலை வாய்நின்று மழைத்துக் கொடுத்தே யவிநாசி - யெந்தை பெருமான் கழல்பணிவே னென்றார் செ ன்று ரிடர்களைவார்". "இவ்வா றருளிச் செய்தருளி யிவர்கள் புதல்வன் றனைக்கொ டிய - வெவ்வாய் முதலை விழுங்குமடு வெங்கே யென்று வினவிக்கேட் - டவ்வாழ் பொய்கைக் கரையிலெழுந் தருளி யவனை யன்றுகவர் - வைவ்வா ளெயிற்று முதலை கொடு வருதற் கெடுத்தார் திருப்பதிகம்". "உரைப்பா ருரையென் றெடுத்ததிருப் பா ட்டு முடியா முன்னுயர்ந்த-வரைப்பான் மையினீ டடம்புயத்து மறலி மைந்த னுயிர் கொணர்ந்து - திரைப்பாய் புனலின் முதலைவயிற் றுடலிற் சென்ற வாண்டுகளுந் - தரைப்பால் வளர்ந்த தெனநிரம்ப முதலை வாயிற் றருவித்தான்". "பெருவாய் முதலை கரையின்கட் கொடுவந் துமிழ்ந்த பிள்ளைதனை, யுருகா நின்ற தாயோடி யெடுத்துக் கொடுவந் துயிரளித்த - திருவா ளன்றன் சேவடிக்கீழ்ச் சில மறையோ ரெடுவீழ்த் தாண்-மருவார் தருவின் மலர்மாரி பொழிந்தார் விசும்பில் வானோர்கள்."—என வரும் பெரியபுராணம் வெள்ளானைச் சருக்கத்தா னுணர்க. (உ௨)

மாணிக்கவாசகசுவாமிகள்.

கந்தமோ டுயிர்படு கணபங் கம்மெனச்
சிந்தைகொள் சாக்கியர் தியங்க மூகராய்
முந்தொரு மூகையை மொழிவித் தெந்தைபால்
வந்திடு மடிகளை வணக்கஞ் செய்குவாம்.

(இ-ள்.) உயிர்கள் பஞ்சகந்தங்களோடு கணந்தோறுந் தோன்றி யழியுமென்று தமது சிந்தையில் துணிவுகொண்டிருக்கும் பௌத்தர்கள் ஊமையர்களாய் மயங்க, முன்னே ஒரு ஊமைப்பெண்ணைப் பேசுவித்து எமது சிவபெருமானை யடைந்தருளிய ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகளை வணங்குவோம்.—எ-று.

பஞ்சகந்தங்கெடுதலே முத்தியென்பவராகலின், 'கந்தமோ டுயிர்படு கணபங் கம்மெனச் சிந்தைகொள் சாக்கியர்' என்றும், அவர்களை மூகராகச்செய்தமையின், 'தியங்க மூகராய்' என்றும், மூகையாய்ப் பிறந்த ஈழராஜபுத்திரியைப் பேசுவித்து மெய்ப்பொருளுரைப்பச் செய்தமையின், 'முந்தொரு மூகையை மொழிவித்து' என்றும், திருச்சிற்றம்பலத்தில் ஸ்ரீ நடராஜப்பெருமான் திருவடியிற் சோதிமயமாயிரண்டறக் கலந்தமையின், 'எந்தைபால் வந்திடு மடிகள்' என்றுங் கூறினர்.

கணபங்கம் என்பது கணந்தோறுந் தோன்றி யழிதல். கந்தம் = கூட்டம். அவை-உருவம்-வேதனை-குறிப்பு-செய்கை-ஞானம் என்பன. "நின்றவுரு வேதனையே குறிப்புச் செய்கை நேர்கின்ற ஞானமென நிகழ்ந்த வைந்து-மொன்றியகந் தத்தழிவே முத்தியென்ன வுரைசெய்தான் பிடகநூ லுணர்வு மிக்கான்" எனப் பெரியபுராணத்தும், "உருவியல் பூத மோடங் குபாதான ரூப மாகு-மருவியல் சித்தங் கன்ம மெனவிரண் டாகும் விட்டின்-மருவியல் குற்றங் கந்த மெனவழங் கிடும் வழக்கி- னிருவிய துள்ள தோடங் கில்லதா மியம்புங் காலே" எனச் சிவஞானசித்தியார் பரபக்கத்தும், "எட்டிவை யுருவ மூன்று வேதனை யாறு ஞான - மொட்டிய குறிப்போ ராறு செய்கையு மிருப தாகக் - கட்டிய பஞ்ச கந்தங் கணத்தினிற் பங்க மாகித் - தொட்ட நாற் பத்து மூன்றுஞ் சுகதநூற் றுணிவு தானே" எனப் பௌத்த நூலினும் வருமாற்றானுணர்க.

பவுத்தர்களை மூகராய்ச் செய்து மூகையைப் பேசுவித்தன வென்பதனை, "அந்த வஞ்சகர் நாவி னின்று மகன்ற பின்பவர் தாமெலாம்- நஞ்ச ருந்தினர் போலொ டுங்கி நடுங்கி மூகர்க ளாயினார் - நெஞ்ச நொந்துபி னீழ நாட னிறைந்தி டுந்தவ ஞானநூ - லெஞ்ச லின்றிய செல்வர் பாத மிறைஞ்சி நின்றிது கூறினன். சொல்ல வல்லவர் மூகை யாயினர் சொல்லி லாவொரு மூகையாம் - வல்லி யென்புதல் விக்கு மூகைம றைந்து நல்லுரை கூடிடு - னல்ல தொண்ட னுமக்கு நானென நாயனு ரவ டன்னைநீ - யொல்லை யிங்கழை யென்ன வந்தவ ளுண்மை சேரவை நண்ணினாள். நண்ணி யங்குமு னின்ற கன்னியை நன்மை யாளரு நாடியே - கண்ணி லின்னருள் செய்த பின்னர் கரைந்து முன்ன ரிருத்தியே - யுன்ன டுங்கி யிருந்த புத்த னுரைத்த தர்க்க மவைக்கெலாந் - தன்ன றுங்குழல் வல்லி நல்லுரை சாற்று கென்று விளம்பினார்." என வருந் திருவாதவூரர் புராணத்தா னுணர்க. (௨௩)

திருத்தொண்டர்கள்.

அண்டரு நான்முகத் தயனும் யாவருங்
கண்டிட வரியதோர் காட்சிக் கண்ணவா
யெண்டரு சிவனடி யெய்தி வாழ்திருத்
தொண்டர்தம் பதமலர் தொழுது போற்றுவாம்.

(இ-ள்.) தேவர்களும் நான்குமுகங்களையுடைய பிரமனும் மற்றையாவரும் காணுதற்கரிதாகிய காட்சியினிடத்தாகி யாவரும் சிந்திக்கத்தகுந்த சிவபெருமானது திருவடிகளையடைந்து சிவானந்தப் பெருவாழ்வடைந்த திருத்தொண்டர்களுடைய திருவடித்தாமரைகளை வணங்கித் துதிப்போம்.—எ-று.

பிரமன் முதலிய தேவர்க ளனைவரும் பசுஞானிக ளாதலின் அவர்களால் காண்டற்கருமையும், சிவனடியைச் சிந்தித்திருக்கும் மெய்யடியார்கள் சிவஞானிக ளாகலான் அவர்களா லடைதற் கெளிமையுந் தோன்ற, அண்டரும் * * * எய்திவாழ் திருத்தொண்டர் என்று கூறினர். "அண்டருக்கரியாய்போற்றி யடியவர்க் கெளியாய் போற்றி" என்றார் பெரியோரும்.

பசுபாசஞானங்களால் சிவபெருமானைக் காண்டற் கருமையும் பதிஞானத் தாற் காண்டற் கெளிமையுந் தோன்ற 'எண்டகுசிவன்' என்றார்; இதனை, "தொல்லை மால் வரைபயந்த தூயாடன் திருப்பாகன் - அல்லலிர்ந் துலகுய்ய மறையளித்த திரு வாக்கால் - தில்லைவா ழந்தணர்த மடியார்க்கு மடியேனென் - றெல்லையில்வண் புக ழாரை யெடுத்திசைப்பா மொழியென்றார்." என்றும், "மன்னுசீர் வயலாரூர் மன்ன வரை வன்றொண்டர் சென்னியுற வடிவணங்கித் திருவருண்மேற் கொள்பொழுதின்- முன்னமா லயனறியா முதல்வர்தா மெழுந்தருள - அங்கிலைகண் டடியவர்பாற் சார்வ தனுக் கணைகின்றார்" என்றும், "தூரத்தேதிருக்கூட்டம் பலமுறையாற்றொழுதன்பு- சேரத்தாழ்ந் தெழுந்தங்கு சென்றெய்தி நின்றழியா-வீரத்தா லெல்லார்க்குந் தனித்த னிவே றடியேனென் - றார்வத்தாற் றிருத்தொண்டப் பதிகமவை யருள்செய்வார்." என்றும், "தம்பெருமான் கொடுத்தமொழி முதலாகத் தமிழ்மாலைச்-செம்பொருளாற் றிருத்தொண்டத் தொகையானதிருப்பதிகம் - உம்பர்பிரான் றானருளு முணர்வுபெற வுலகேத்த - எம்பெருமான் வன்றொண்டர் பாடியவ ரெதிரணைந்தார்.' என்றும்வருந் திருத்தொண்டர் புராணத்தானறிக. எண்டகுதொண்டர் எனக்கொண்டு யாவரானு மெண்ணத்தகுந்த தொண்டரெனக்கொள்ளினு மமையும். தொண்ட ரென்பது தனித் தொண்டரையும், கூட்டத்தாரையுமாம். பிரமன்மாலென்னுமிருவர் தம்மறியாமையாற் பரமமியாம் பரமமியாமென்று இறைவனழற்பிழம்பாய் நின்றவழி அதனடிமுடிகளைப் பன்றியு மன்னமுமாகத் தேடி யறியாமையான் 'அண்டரு நான்முகத் தயனும் யாவ ருங் - கண்டிட வரியதோர் காட்சி' என்றுகூறினர். இதனை, "பிரமனரியு மிருவருந் தம்பேதைமையாற் - பரமமியாம் பரமமென் றவர்கள் பதைப்பொடுங்க-அரனாரழ லுருவா யங்கே யளவிறந்த - பரமாகி நின்றவா தோணோக்க மாடாமோ' எனவும், 'பிரமன்மா லறியாப் பெற்றியோனே' எனவும்வருந் திருவாசகத்தானுணர்க. (உச)

சரசுவதி.

தாவரு முலகெலாந் தந்த நான்முகத்
தேவுதன் றுணைவியாய்ச் செறிந்த பல்லுயிர்
நாவுதொ றிருந்திடு நலங்கொள் வாணிதன்
பூவடி முடிமிசைப் புனைந்து போற்றுவாம்.

(இ-ள்.) கெடுதே லில்லாத உலக முழுதுஞ் சிருட்டித்த நான்கு முகங்களை யுடைய பிரமதேவனுக்கு மனையாளாகி, இவ் வுலகிற் பொருந்திய பல உயர்திணைப் பொருள்களினுடைய நாக்கடோறு மிருந்து நன்மையைச் செய்யுங் கலைவாணியி னு டைய் தாமரைமலர்போன்ற பாதங்களை முடிமேல் அலங்கரித்துத் துதிப்பாம். எ-று.

மாயையின் காரியமாகிய பிரபஞ்ச மழியினும் காரணமாகிய மாயை யழி யாமையால் 'தாவரு முலகெலாம்' என்றும், அவற்றைச் சிவபெருமானது திருவரு ளாற் காரியப்படுத்திச் சிருட்டித்தொழில் செய்வதனுன் 'தந்தநான்முகத்தேவு' என்

றும், அவன் இல்லறத்துக்குரியாளா யிருமையும் பயத்தலால் துணைவியாய் என்றும், சிறப்புடை யுயர்திணையொன்றே பேசுதற் றொழிலுடைமையாற் 'செறிந்த பல்லுயிர் நாவுதொ றிருந்திடு' என்றும், அவ்வுயிர்கள் சிவபெருமானை வாழ்த்தச்செய்கின்றமை யால் 'நலங்கொள்வாணி' என்றும், பூவினுட் சிறந்த தாமரைமலரை யடிகட்கு ஒப்புமையாகக்கூறலால் 'பூவடி' என்றும், அதனை முடிக்கழகுபெறச் செய்து வாழ்த்தினல்லது நால்வகைச்சொல்லினாலாகியநல்லதோர்பாமாலையியற்றப்பெருமையான், 'சென்னியிற்புனைந்துபோற்றுவாம்' என்றுங்கூறினர். நாவுதொறிருந்திடும் என்றது நாமகளென்னும் பெயர்பற்றி யென்க. வாணியென்றது வாக்கிறைவியென்பதுகருதி. பூவினுட்டாமரை சிறந்ததென்றது "பூவினுக் கருங்கலம் பொங்குதாமரை" என்றும், பூவிற்குத் தாமரையே பொன்னுக்குச்சாம்புநதம்' என்றும்வரும் அருமைத்திருவாக்குகளா னுணர்க. (உரு)

கடவுள் வாழ்த்து முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௩0.

---

## அவையடக்கம்.

இறைநில மெழுதுமு னிளைய பாலகன்
முறைவரை வேனென முயல்வ தொக்குமா
லறுமுக முடையவோ ரமலன் மாக்கதை
சிறியதோ ரறிவினேன் செப்ப நின்றதே.

(இ-ள்.) ஆறு திருமுகங்களையுடைய ஒப்பற்ற அநாதிமலமுத்தனாகிய குகப்பெருமான் பெருமையமைந்த இக் கந்தபுராணத்தை சிற்றறிவினையுடைய அடியேன் சொல்லப்புகுந்தது (யாதுபோலுமெனில்) இளஞ்சிறுவன் விரலாற் பூமியி லெழுதுவதற்கு முன்னமே ஒருபுத்தகத்தை யெழுதுவனென்று முயல்வதை யொக்கும். எ-று.

இறை ஆகுபெயர். அறுமுக னென்றதற்கு மேலே யுரைத்தாம். அமலனென்றார் நின்மலவடிவனாகலின். இவன் பிறப்புடையனன்றோ வெனின் பிறவாதே தோன்றினா னென்பதுபற்றி யென்க. யான் சிற்றறிவுஞ் சிறுதொழிலு முடையேனாகலின் இவனது காதையைக் கூறவல்லனல்லே னென்பார் 'இறைநில மெழுதுமு னிளைய பாலகன் - முறைவரை வேனென முயல்வ தொக்கும்' என வுவமைமுகத்தாற் கூறினார். ஆல் அசை. யான் புகழ்கூறுதற்குக் கடவனல்லே னென்றவாறு.

அவையடக்கமாவது - கல்வி கேள்விகள் நிறைந்த அவையிலுள்ள புலவர்கள் பலர்க்கும் வழிபடுகிளவியாக அடங்கிக் கூறுவது. அதனை இங்கு, 'இறைநில மெழுதுமுன்' என்பது முதலாகப் பல செய்யுட்களாற் பலபடக்கூறினர். தொல்காப்பியம் பொருளதிகாரம்-செய்யுளியலில், "அவையடக் கியலே யரிறபத் தெரியின்-வல்லார் கூறினும் வகுத்தனர் கொண்மினென் - றெல்லா மாந்தர்க்கும் வழிமொழிந் தன்றே" என வருஞ் சூத்திரத்தால் அவையடக்கவிலக்கண முணர்க. (க)

ஆன சொற்றமிழ் வல்ல வறிஞர்முன்
யானு மிக்கதை கூறுதற் கெண்ணுதல்
வான கத்தெழும் வான்கதி ரோன்புடை
மீனி மைப்ப விரும்பிய போலுமால்.

(இ-ள்.) யாவரும் விரும்புதற்கேதுவான சொற்களையுடைய தமிழினை நன்றாகக்கற்றுவல்ல அறிவுடையோர்முன்பு அறிவிலியாகியசிறியேனும் இக்காதையைச்

சொல்வதற்கெண்ணியது ஆகாயத்தின்கணெழுகின்ற சிறந்த கதிரையுடைய சூரியன் முன்னே நக்ஷத்திரங்கள் பிரகாசிக்க விரும்பியவா றொக்கும்.—எ-று.

பத்தழகையும்பெற்றுப் பத்துக்குற்றமுநீங்கியிருப்பதுபற்றி, 'ஆனசொற்றமிழ்' என்றும், "அர்ச்சனை பாட்டே யாகு மாதலா னம்மை யென்றுஞ்-சொற்றமிழ் பாடுகென்றார் தூய்மறை பாடும் வாயார்" என இறைவனே நம்மைப் பாடுகவென்று கூறியநலமுடைமையான், 'சொற்றமிழ்' என்றும், இனிமைமிகுந்த மொழியாதலால், 'தமிழ்' என்றும், அதனை முறையாகக் கற்றோரை,'வல்லவறிஞர்' என்றும்,அத்துணைச் சிறப்பினொன்றுமில னென்பதுபற்றி 'யான்' என்றும், தமிழ்ப்பெருமையினையும் தன் சிறுமையினையுமுணர்த்த இழிவு சிறப்பும்மை விரித்து 'யானும்' என்றும், அவ்விறைவன் தன்னை யடைந்தார்க்கெளியனென்பது தோன்ற அண்மைச்சுட்டால், 'இக்கதை' என்றும், யான் இக்கதையினை அறிஞர் முன்னே கூற எண்ணுதல் பயனற்ற தாகுமன்றிச் சிறப்பெய்தா தென்பதுபற்றி உவமை முகத்தால், 'வானகத்தெழும் வான்கதிரோன்புடை மீனிமைப்ப விரும்பியபோலும்' என்றுங் கூறினர். (உ)

முன்சொல் கின்ற முனிவட நூறெரீஇத்
தென்சொ லாற்சிறி யேனுரை செய்தலான்
மென்சொ லேனும் வெளிற்றுரை யேனும்வீண்
புன்சொ லேனு மிகழார் புலமையோர்.

(இ-ள்.) முன் இந்தப் புராணத்தைச் சொல்லிய வியாசமுனிவருடைய வடநூற்புராணத்தைத் தெரிந்து தமிழ்மொழியால் அறிவிற்சிறியேன் சொல்லுதலால் அறிவிற் சிறந்த புலவர்கள் இது மெல்லியசொல்லெனினும், பொருளீடில்லாத சொல்லெனினும், பயனில்லாத அற்பமொழி யெனினும் ஒரு பொருளாகக்கொண்டு இகழமாட்டார்கள்.—எ-று.

வியாசர் தமக்கு முன் இக்கந்தபுராணங் கூறினமையான், 'முன் சொல்கின்ற முனி' என்றும், அவர் வடமொழியிற் கூறினமையான் அதனை யறிந்தே கூறவேண்டுதலின், 'வடநூறெரீஇ' என்றும், அதனைத் தமிழாற் கூறத்தொடங்கிய ஆசிரியர் தாம் அறிவிற் சிறியரென்பது தோன்ற 'தென்சொலாற் சிறியே னுரைசெய்தலால்' என்றும், தாழ்ம்பட்ட ஓசையுடைய சொல்லென்பது தோன்ற 'மென்சொலேனும்' என்றும், பொருள்புணராமொழியென்பதுதோன்ற 'வெளிற்றுரையேனும்' என்றும், பயனில்சொல்லென்பது தோன்ற 'வீண் புன்சொலேனும்' என்றும், தாம் வடநூல் தெரிந்தே கூறலான் இகழப்படுவ தன்றென்பது தோன்ற 'இகழார்' என்றும், இது அறிவுடையோர் செயலென்பது தோன்ற 'புலமையோர்' என்றுங் கூறினர். தென் சொலென்பதற்கு அழகிய சொல்லெனினுமாம். உம்மை எண்ணின்கணின்றன. (௩)

சிந்து மென்பு சிரம்பிறை தாங்கினோன்
மைந்த னாதலின் மற்றவன் றானுமென்
சந்த மில்லுரை யுந்தரிப் பானெனக்
கந்த னுக்குரைத் தேனிக் கதையினை.

(இ-ள்.) சிந்துகின்ற எலும்பையும் தலைமாலைகளையும் இளம்பிறையையுமணிந்த சிவபெருமானுடைய திருக்குமாரராகலின், அவர் அடியேனுடைய ஓசை புணராத சொல்லையும் (அங்கீகரித்து) அணிந்தருளுவாரென்றுகருதிக் கந்தப்பெருமானுக்கு இக்கதையினைத் தமிழிற் கூறினேன்.—எ-று.

என்பும் சிரமும் பிறையும் தாழ்வாகிய பொருள்களேனும் அவற்றைத் தாழ்வாயினவாகக்கொள்ளாது தன் சென்னிமேற்கொள்ளுதல்சிவபெருமானதுஇயற்கை

வென்பார் 'சிந்துமென்பு சிரம்பிறை தாங்கினேன்' என்றும், 'மகனறிவு தந்தையறிவு' என்றபடி தானுமென் நலமில்லாத புன்சொல்லுந் தரிப்பானென்பார் 'மைந்த னுத லின் மற்றவன் ருனுமென் சந்தமில்லுரையுந் தரிப்பான்' என்றும், அதுபற்றியே யான் கூறியதன்றி வேறன்றென்பார் 'கந்தனுக் குரைத்தே னிக்கதையினை' என்றுங் கூறினார். பிறை தாங்கினமை தக்கன் மகளிர் இருபத்தெழுவராகிய அசுவினி முதலியோரைச் சந்திரனுக்கு மணஞ்செய்வித்து யாவரிடத்து மொரோதன்மையாகக் காதல்வைத்திருவென்றனுப்பச் சந்திரன் அதனைமறுத்துஉரோகணியிடத்துஅதிக காதல்கொண்டிருக்க, ஏனையோர் பொழுது தந்தையிடத்து முறையிட அவன் கலையெல்லாங்குறையும்படி சபிக்க அச் சாபவசத்தனுகிச் சந்திரன் திருக்கயிலையை யடைந்து சிவபெருமானால் ஒற்றைக்கலை புனையப்பெற்று பதினைந்துநாள்களிற் கலைநிரம்பவும், பின்னர் குறையவும் இவ்வாறு வரம்பெற்றனெனவும், சிந்துமென்பு சிரமென்றது, பிரமன் மால் முதலிய தேவர்கள் சர்வசங்காரகாலத்துத் தமிக்கப்படுகையில் அவர்களென் பினையும் சிரங்களையும் மாலையாகத் தரித்தனரெனவும் மேல் தக்ஷகாண்டத்து வருமாற்ற னுணர்க. (௪)

வெற்றெ னத்தொடுத் தீர்த்து வெளிற்றுரை
முற்று மாக மொழிந்தவென் பாடலிற்
குற்ற நாடினர் கூறுப தொல்லைநூல்
கற்று ணர்ந்த கலைஞரல் லோர்களே.

(இ-ள்.) (பொருளென்னுங் கருக்கொள்ளாமல்) வெளிறுபடச் சொற்களைச் சேர்த்துவைத் திழுத்துப் (பொருள் புணராத) வெள்ளைச்சொற்களே முழுது நிரம்ப வமைத்துக்கூறிய வெனது பாடலில்,பழமையான நூற்களை வாசித்தறிந்த கலைவாணரல்லாத கீழ்மக்கள் குற்றங்களை நாடிக் கூறுவார்கள்.—எ-று.

வெள்ளறிவினேன் ஆதலால், என் சொற்களனைத்தும் பயனில் வெளிற்றுரையன்றி வேறன்றென்பார் 'வெற்றெனத் தொடுத்தீர்த்து வெளிற்றுரை முற்றுமாகமொழிந்த வென்பாடலில்' என்றும், கல்லாதார் பிறர்குற்றங்காண்பதன்றிக் கற்றோர் பிறர்குற்றங் காணாரென்பார் 'தொல்லை நூல் கற்றுணர்ந்த கலைஞரல்லோர்கள் குற்றநாடினர்கூறுப' என்றுங்கூறினர். இதனை;—"நல்லோர் பிறர்குற்ற நாடார் நலந் தெரிந்து-கல்லார் பிறர்குற்றங் காண்பரோ-தொல்லுலகி லென்போல்வா ரொன்னை யிகழ்வரோ வென்கவிக்குப்-பின்பாரோ காண்பார்பிழை" எனப் பிறருங் கூறுதல் காண்க. உம்மை-முற்று. நாடினர் - முற்றெச்சம்.

குற்ற மேதெரி வார்குறு மாமுனி
சொற்ற பாவினு மோர்குறை சொல்வராற்
கற்றி லாவென் கவிவழு வாயினு
முற்று நாடிவல் லோருய்த் துரைக்கவே.

(இ-ள்.) பிறர் நூலிற் குற்றமாராய்ந்து சொல்பவர்கள் சிறந்த அகத்திய முனிவர் அருளிச்செய்த பாவேயாயினும் அதனிடத்து மொருகுற்றங் கூறுவார்கள். ஆதலால், கற்றறிவில்லாத என்கவிகள் வழூஉச் சொற்புணர்க்கப்பட்டனவேனும் அறிவுடையோர் பொருந்தி நாடி ஆராய்ந்துரைக்கக்கடவர்.—எ-று.

குற்றங்கூறு மியல்புடையோர் தமிழ்த்தலைவராகிய அகத்தியர் கூறிய பாவேயாயினும், அதற்கு மொருகுற்றம் கூறுதலியற்கை யென்பார்,'குற்றமேதெரிவார் குறுமாமுனி சொற்ற பாவினுமோர் குறைசொல்வர்' என்றும், அவரை நோக்க யான் கல்வியென்பதனுந் துணையுமில்லாதவ னென்பார் 'கற்றிலா'என்றும, யான் பாடிய கவிகள் வழூஉச் சொற்புணர்த்தல், சென்று தேய்ந்திறுதல், முதலிய குற்றங்கட் கிட

ஞுமென்பார், 'என்கவிவழுவாயினும்' என்றும், அறிவுடையோர் பிறனைக் குற்றங்கூறு ரென்பார், 'உற்று நாடிவல்லோருய்த் துணைக்க' என்றுங்கூறினர். உம்மை இரண்டில் முன்னது உயர்வு சிறப்பு, பின்னது-இழிவுசிறப்பு. வல்லோர் என்றது கல்வி கேள்வி களை யுடையோரை. (௬)

வேறு

குறைபல மாமதி கொளினு மன்னதா
லுறுபய னோக்கியே யுலகம் போற்றல்போற்
சிறியவென் வெளிற்றுரை சிறப்பின் றாயினு
மறுமுகன் கதையிதென் றறிஞர் கொள்வரே.

(இ-ள்.) சந்திரன் பல குறைகளை யுடையனு யிருந்தாலும் அச்சந்திரனால் விளையும் மிகுந்தபிரயோசனத்தைக்கருதி உலகினர் அச்சந்திரனைத் துதிப்பதுபோல, அறிவாற் சிறிய என் வெளிற்றுமொழியானது சிறப்பில்லையாயினும், இது, ஆறுதிரு முகங்களையுடைய சுப்பிரமணியக்கடவுளது கதையென்று அறிவுடையோர் அங்கீகரிப் பார்கள்.—எ-று.

'குறைபல மாமதி' என்றது, களங்கமும் கலைகுறைதலும் கயரோகமுமுதலி யன. களங்கத்தை முயலென்றும் மானென்றுங் கூறுவர். கலைகள் குறைதல் தக்கன் சாபமும், கயரோகமுடைமை வியாழபகவான் மனைவியாகிய தாரையை விரும்பிய வழி அவனாற் பெற்ற சாபமுமென்க. 'அன்னதாலுறுபயனோக்கியே யுலகம்போற்றல்' என்றது, பைங்கூழை வளரச்செய்தல் முதலியன; "குண நாடிக் குற்றமுநாடி யவற்றுண் மிகை நாடி மிக்க கொளல்" என்பதுபற்றி 'அன்னதா லுறுபயனோக் கியே யுலகம் போற்றல் போல்' என்றார். போற்றலென்றது-மேலாக மதித்தல். உலகம் - ஆகுபெயர். ஆயினு மென்ற வும்மை ஆகாமையை யுணர்த்திநின்றது. (எ)

நாதனு ரருள்பெறு நந்தி தந்திடக்
கோதிலா துணர்சனற் குமரன் கூறிட
வாதரா யணமுனி வகுப்ப வோர்ந்துணர்
சூதனே தியதுமூ வாறு தொல்கதை.

(இ-ள்.) சிவபெருமானது திருவருளைபெற்ற திருநந்திதேவரருளிச்செய்ய, அதனைக் குற்றமறத் தெரிந்துணர்ந்த சனற்குமாரமுனிவர் சொல்ல, (அதையுணர்ந்த) வியாசமுனிவர் வகுத்துரைப்ப ஆராய்ந்தறிந்த சூதமுனிவர் சொன்னது பதினெண் புராண மெனப்படும்.—எ-று.

புராணங்கள் மிகச் சிறந்தனவென்பதும், வேதத்தோ டொத்தன வென்பது நோக்கியன்றே ஆளுடையபிள்ளையார் "வேதம் முதல்வன் முதலாக விளங்கி வைய-மேதப் படாமே யுலகத்தவ ரேத்தல் செய்யப் - பூதம் முதல்வன் முதலே முதலாப் பொலிந்த - சூதன் னொலிமாலை யென்றே கலிக்கோவை சொல்லே' என்றருளிச்செய்த தமிழ்வேதத்தானும், வேத முதல்வம் னென்னு மெய்த்திருப் பாட்டினினோர் - ஆதி யுலகோ ரிடர்நீங்கிட வேத்த வாடும் - பாத முதலாம் பதினெண் புராணங்க ளென்றே-யோதென் றுரைசெய்தனர் யாவுமோதா துணர்ந்தார்" என்ற திருத்தொண்டர் புராணத்தானுமறிக. எப்பொருட்குமிறைவனுதலான் நாதனுரென்றதென்க. மூவாறு தொல்கதை என்றது சைவம், பவுடியம், மார்க்கண்டம், இலிங்கம், காந்தம், வராகம், வாமனம், மற்சம், கூர்மம், பிரமாண்டம், பிரமம், பதுமம், காருடம், நாரதம், விஷ்ணு, பாகவதம், ஆக்கினேயம், பிரமகைவர்த்தமென்பன. இவை முறையே சிவபெருமானுக்குப் பத்தும், பிரமனுக் கிரண்டும், திருமாலுக்கு நான்கும், அக்கினிக் கொன்றும், சூரியனுக் கொன்றுமாம். "அன்னல்பாற் றெளிந்த நந்தியடிகள்பாற் சனற்கு மார-

னூன் ஞனிறை யன்பி னுய்ந்து வியாதனுக் குணர்த்த வந்தப்-புண்ணிய முனிவன் சூதற் கோதிய புராணமூவாறு" எனவருந் திருவிளையாடற்புராணத்தானு முணர்க. (௮)

சொல்லிய புராணமாந் தொகையு ளீசனை
யல்லவர் காதைக ளனையர் செய்கையு
ணல்லன விரித்திடு நவைகண் மாற்றிடு
மில்லது முகமனு லெடுத்துக் கூறுமே.

(இ-ள்.) மேலெடுத்துக்கூறிய புராணமாகிய தொகைகளில் இறைவனாகிய சிவபெருமானை யொழிந்த (பிரமன் மால் அக்கினி சூரியனென்னும்) தேவர்களைச்சிறப்பித்துக் கூறிய புராணங்கள் அவர் செய்கைகளில் நல்லனவற்றை விரித்துக் கூறும், (அவர்க் குள்ளனவாகிய) குற்றங்களை மறைத்துக் கூறும், அவர்கட் கில்லாத சிறப்புக்களை உபசாரமாக வெடுத்துக் கூறும்.—எ-று.

இராசத தாமதகுணங்களையுடையராதலின் 'அனையர்செய்கையு ணல்லன விரித்திடு நவைகண் மாற்றிடும், என்றும், அவர்கள் பரம்பொருளல்லாமையாற் பரம்பொருளென உபசரித்துக் கூறுதலின், 'இல்லது முகமனுலெடுத்துக் கூறும்' என்றுங் கூறினர். அவர்கள் பரம்பொரு ளல்லாமையைச் சிறுவிதி யாகிய தக்கன்யாகத்து நிகழ்ந்தசெயலாற் பரக்கக் காண்க. முகமன் - உபசாரம்; அது இல்லதனை உள்ளதுபோல உபசரித்துக்கூறுவது. தொகையுள், செய்கையுள் என்புழி ஏழனுருப் கூட்டிப் பிரித்தற் பொருளது. ஈசன் என்றது தன்னை யடைந்தோர்க்கு அருட்செல்வந் தருபவனென்னும்பொருளது. (௯)

பிறையணி சடைமுடிப் பிரான்றன் காதைக
ளிறையுமோர் மறுவில யாவு மேன்மையே
மறைபல சான்றுள வாய்மை யேயவை
யறிஞர்க ளாடியே யவற்றைக் காண்கவே.

(இ-ள்.) இளம்பிறையையணிந்த சடைமுடியினையுடைய சிவபெருமானது புராணங்கள் ஒருசிறிதேனும் குற்றமில்லாதன; அவையனைத்துஞ் சிறப்புடையனவேயாம்; அவற்றிற்குப் பலவேதங்கள் சான்றாகவுள்ளன. அவையனைத்துஞ் சத்தியமே. அவற்றினை அறிவுடையோர் ஆராய்ந்து காணக்கடவர்.—எ-று.

சத்துவகுணமுடைமையானும் அநாதிமலமுத்தசித்துருவாயுள்ளவராகையானும் அவர்புகழினை யெடுத்துக்கூறும்புராணங்கள் 'மறுவில' என்றும், 'மேன்மை' என்றுங் கூறியதன்றி, அவர் பரம்பொருளென்பதற்கு, 'மறைபலசான்றுள வாய்மையேயவை' என்றுங் கூறினரென வறிக. (௧௦)

புவியின ரேனையர் புராணந் தேரினுஞ்
சிவகதை யுணர்கில ரென்னிற் றீருமோ
வவர்மய லரசனை யடைந்தி டாரெனி
லெவரெவ ராக்கமு மினிது போலுமால்.

(இ-ள்.) பூமியின்கணுள்ளோர் பிறகடவுளருடைய புராணங்களைத் தெளிந்தாராயினும் சிவபெருமானைக்குறித்துக் கூறும் புராணங்களைத் தெளியாராயின் அவர்மயக்கம் நீங்குமோ? (நீங்காது). (அஃது எதுபோலுமெனின்,) அரசனை யடையாராயின் எவரெவர்களுடைய செல்வமு மினியதுபோலும்.—எ-று.

பிறர் கதை யவகதை யாகலின், சிவகதை கேட்டாலன்றிக் கழிபேருவகை யொருவர்க் கெய்தாமையின், 'சிவகதை யுணர்கிலரென்னிற் றீருமோ' என்றார். போலும் என்றது ஒப்பில் போலி; "ஒப்பில் போலியு மப்பொருட் டாகும்" என்பதனு.

னறிக. அரசச் செல்வத்தினேடு பிறர் செல்வத்தை யொப்புமை கூறுவது நிரம்பா தென்பனே உவமை முகத்தாற் சுட்டி யறிவித்தார். எவரொவ ரொன்று மடுக்குப் பன்மை. ஆல் - அசை. (கக)

மங்கையோர் பங்குடை வான நாயகற்
கிங்குள பலபுரா ணத்து ளெஃகவேற்
புங்கவன் சீர்புகழ் புராண மொன்றுள
தங்கதி லொருசில வடைவிற் கூறுகேன்.

(இ-ள்.) உமாதேவியை இடப்பாகத்திலுடைய தேவர்கள் நாயகராகிய சிவபெருமானைச் சுட்டிக் கூறும் இங்குள்ள பல புராணங்களில் கூர்மையாகிய வேலாயுதத்தையேந்திய பரிசுத்தராகிய முருகக்கடவுளது புகழினை யெடுத்துச்சொல்லும் புராணமொன்றுண்டு, அதில் சிலவற்றை முறைபடச் சொல்லுவேன்.—எ-று.

மங்கையோர் பங்குடையா னென்பது, "தென்பா லுகந்தாடுந் தில்லைச்சிற் றம்பலவன்-பெண்பா லுகந்தான் பெரும்பித்தன் காணேடி-பெண்பா லுகந்திலனேற் பேதா யிருநிலத்தோர் விண்பாலி யோகெய்தி வீடுவர்காண் சாழலோ' என்ற திருவாக்கானு மறிக. எந்தப்புராணத்தும் முருகக்கடவுள் புகழ்மை நிரம்ப விரவாமையானும், இதிற் சிறப்பித்துக் கூறப்படுவதனுனும், இதுவே சிறந்ததென்பார், 'வான நாயகற் கிங்குள பல புராணத்து ளெஃகவேற் புங்கவன் சீர்புகழ் புராண மொன்றுளது' என்றும், அதனை என்னெரு நாவான் முற்றுங் கூறுந்தன்மையதன்றென்பார், 'அங்கதி லொருசில வடைவிற் கூறுகேன்' என்றுங் கூறினர். (கஉ)

புதுமயி லூர்பரன் புராணத் துற்றிடாக்
கதையிலை யன்னது கணித மின்றரோ
வதுமுழு தறையவெற் கமைதற் பாலதோ
துதியுறு புலமைசேர் சூதற் கல்லதே.

(இ-ள்.) புதுமையாகிய மயிலை வாகனமாக ஏறி நடத்தும் முருகப்பெருமானைச் சிறப்பித்துக் கூறும் இப்புராணத்தி லடையாத கதைகளொன்றுமில்லை; அவற்றிற்குக் கணிதமுமில்லை; அக்கதைகளை முழுது மெடுத்துச்சொல்ல, யாவரானுந் துதிக்கப்படுகின்ற புலமையமைந்த சூதமுனிவருக்கன்றி, அடியேன் அவை முழுதுஞ் சொல்லுதற் கமையும் பகுதியதோ.—எ-று.

இந்திரனை யூர்தியாகக்கொண்டு கடைநாட்போரிற் சூரபதுமனேடு பிள்ளையார் போர்செய்துவருகையில், மாமர வுருக்கொண்டு கடலிற்புகுந்த தன்னை வேலாற் பிளக்கக்கண்டு, தனக்குய்தியில்லை யெனத்துணிந்த கெடாத வரமுடையானுகலின் மயிலுஞ் சேவலுமாக வர, அம் மயிலை யேறி நடத்தினமையால் 'புதுமயி லூர்பரன்' என்றூர். இதனை—"கீழ்மே னின்றவக் கொடுந்தொழிற் கொக்கின் - கூறிரண் டாய வொருபங் கெழுந்து - மாயாப் பெருவரத் தொருமயி லாகிப் - புடவிவைத் தாற்றிய பஃறலைப் பாந்தண் - மண்சிறுக விரித்த மணிப்படந் தூக்கி-விழுங்கிய பல்கதிர் வாய்தொறு முமிழ்ந்தென - மணிநிரை சிந்தி மண்புக வலைப்பக் - கார்விரிந் தோங்கிய மலைத்தலைக் கதிரென - வோவறப் போகிய சிறைவிரி முதுகிற் - புவனங் காணப் புகழொடு பொலிந்தோய்" எனக் கல்லாடர் கூறியதனுனு முணர்க. எந்தக்கதையுங் காந்த மொன்றிலேயே யமைந்திருக்கும் என்றுகூறுவது உலகவழக்காகலின்,'புதுமயி லூர்பரன் புராணத் துற்றிடாக் - கதையிலை யன்னது கணிதமின்று' என்று கூறினர். அரோ-அசைநிலை. (கங)

காந்தமா கியபெருங் கடலுட் கந்தவேள்
போந்திடு நிமித்தமும் புனிதன் கண்ணிடை
யேந்தல்வந் தவுணர்கள் யாரு மவ்வழி
மாய்ந்திட வடர்த்தது மற்றுங் கூறுகேன்.

(இ-ள்.) காந்தபுராணமாகிய பெரிய கடலின்கண் கந்தப்பெருமான் அவதரித்தருளிய காரணமும், சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணினிடத்து அவ்வெம்பெருமான் அவதரித்து அசுரர்கள் யாவரு மவ்வழியில் அழியும்படி போர்செய்து அழித்த சரித்திரமும் மற்றைச் சரித்திரங்களையும் கூறுகின்றேன்.—எ-று.

சூரபதுமன் தேவர்களைவருத்த அதனைப்பொறாத தேவர்கள் சிவபெருமானை வேண்டி நின்றாராக, பெருமான் நமது குமாரனால் உங்கள் துன்பமனைத்துந் திருமென்றாராகலின், 'கந்தவேள் போந்திடுநிமித்தமும்' என்றும், அவர்நெற்றிக்கண்ணிற் றீப்பொறியாகத் தோன்றி, வாயுவும் அக்கினியும் சிவபெருமானாணையிற் கங்கையில் விடுப்பக் கங்கையும் சரவணப்பொய்கையில் விடுப்ப அப்பொய்கையிற் பதுமப்பாசடையிற் சிறுகுழந்தைகளாக அறுமீன் முலைப்பாலுண்டு விளையாடிக்கொண்டிருப்ப, சிவபெருமானது ஏவலாற்சென்று உமையம்மையெடுத்தலும் ஆறு திருமுகங்களும் பன்னிருதிருக்கரங்களுமாக விளங்கினராகலின், 'புனிதன் கண்ணிடை யேந்தல் வந்து' என்றும், அவ்வெமது குகப்பெருமான் சூரபதுமன் சிங்கமுகன் தாரகன் முதலிய அவுணர்களைக்கொன்று சத்துரு சங்காரஞ்செய்து தேவர்கட்குத் தத்தம்பதங்களை யளித்தமையால், 'அவுணர்கள் யாரு மவ்வழிமாய்ந்திட வடர்த்ததும்' என்றும், வள்ளிநாச்சியார் தெய்வயானை நாச்சியார் திருமணமுதலியனவுங் கூறுதலின், 'மற்றுங்கூறுகேன்' என்றுங் கூறினார். புராணம் பதினெட்டனுள் காந்தபுராணம் இலக்ஷங் கிரந்தமுடைமையானும், பிறபுராணத்திற்கு அத்தனைக் கிரந்த மின்மையானும், 'காந்தமாகிய பெருங்கடலுள்' என்றதென்க. (கச)

வேறு.

ஏதி லாக்கற்ப மெண்ணில சென்றன
வாத லாலிக் கதையு மனந்தமாம்
பேத மாகுமப் பேதத்தி னுள்விரித்
தோது காந்தத்தி னுண்மையைக் கூறுகேன்.

(இ-ள்.) குற்றமில்லாத கற்பகாலங்கள் அளவில்லாதன கழிந்தன ; ஆகையால், இக்கதையும் அளவற்ற பேதங்களாகும். அப்பேதத்தினுள்ளே விரித்துச்சொல்லும் காந்தபுராணத்தினுடைய வுண்மையைச் சொல்லத் தொடங்கினேன்.—எ-று.

கற்பங்கள் சிவபெருமானது கட்டளையா னிகழ்தலின், 'ஏதிலாக்கற்பம்' என்றும், அவை பலவாக நிகழ்தலின், 'எண்ணில சென்றன' என்றும், அக்கற்பங்கடோறும் நிகழுமற்புத சரிதங்கள் வேறுபடுதலின், 'ஆதலா லிக்கதையு மனந்தமாம் பேதமாகும்' என்றும், அவ்வேறுபாடுகெழிய உண்மை யின்னதென் றுணர்த்துங் காந்தபுராணம் சத்தியமா யுள்ளதென்பது தோன்ற, 'அப்பேதத்தினுள்விரித்தோது காந்தத்தினுண்மையைக் கூறுகேன்' என்றுங் கூறினார். (கரு)

முன்பு சூதன் மொழிவட நூற்கதை
பின்பி யான்றமிழ்ப் பெற்றியிற் செப்புகே
னென்ப யன்னெனி ன்றமிழ்த் தேசிகர்
நன்பு லத்தவை காட்டு நயப்பினால்.

(இ-ள்.) முன்னாளில் சூதமுனிவர் சொல்லியருளிய வடமொழிப் புராணத்தைப் பின்னே அடியேன் தமிழ்ப்பாவினால் சொல்லத் தொடங்கினேன்; அதனால் யாது பிரயோசனமெனின், இனிமையான தமிழையறிந்த ஆசிரியத்தன்மை யுடையோரது நல்ல சபையில் அவற்றைக்காட்டும் விருப்பத்தினாலாகும்.—எ-று.

நன்புல மென்றார்; அறிஞர்களது கல்விக்கழகம் நன்மை பயத்தலன்றித் தீமை பயவாமையா னென்க. (கசு)

தோற்ற மீறின்றித் தோற்றிய சூர்ப்பகைக்
கேற்ற காதைக் கெவன்பெய ரென்றிடி
னாற்று மைம்புலத் தாறுசென் மேலையோர்
போற்று கந்த புராணம தென்பதே.

(இ-ள்.) ஆதியு மந்தமுமில்லாமல் (பிறவாமே) பிறந்த சூரசங்காரமூர்த்தியாகிய கந்தப்பெருமானுக்குத் தக்க இப்புராணத்திற்கு யாது பெயரெனின், ஐம்புலன்களையு மடக்கி நன்னெறியிற் சென்ற மெய்யுணர்ச்சியையுடைய பெரியோர்கள் புகழ்ந்து கூறுங் கந்தபுராணமென்று சொல்லப்படுவதாம்.—எ-று.

செத்துப்பிறக்கின்ற தெய்வங்கள் மணவாளராகிய முருகப்பெருமான் பிறவாதே தோன்றினவரென்பார், 'தோற்ற மீறின்றித் தோற்றிய சூர்ப்பகை' என்றும், அவர் சரிதங்கூறும் புராணத்திற்கு அவ்வெம்பெருமானது சம்பந்தமாகவே பெயரமைய வேண்டுமென்பார், 'மேலையோர் போற்று கந்தபுராணம தென்பதே' என்றுங் கூறினார். ஐம்புலன்களையு மவித்த மெய்ஞ்ஞானிகளே அந்நூலைப் போற்றத்தக்கவராகலின் 'ஐம்புலத்தாறு சென்மேலையோர் போற்று' என்றார். (கஎ)

பகுதி கொண்டிடு பாக்களி னத்தினுண்
மிகுதி கொண்ட விருத்தத் தொகைகளாற்
றொகுதி கொண்டிடு சூர்கிளை சாய்த்தவன்
றகுதி கொண்ட தனிக்கதை சாற்றுகேன்.

(இ-ள்.) பலவகைப் பகுதியைக் கொண்டிருக்கின்ற பாக்களினத்தில் மிகுதியைக்கொண்ட விருத்தத்தின் தொகைகளால், தொகையை மிகுதியாகக்கொண்ட சூரபதுமனை அவன் வருக்கத்தோடு கொன்றருளிய முருகக்கடவுளது தகுதிப்பாட்டினையுடைய ஒப்பற்ற கதையைச் சொல்லுவேன்.—எ-று.

வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா என்னும் பாக்கள் நான்கனுள் ஒவ்வொன்றினும் தாழிசை, துறை, விருத்தம் என்பனஉண்மையால், இந்நூல் முழுதும் பெரும்பாலும் வெண்பா, வஞ்சியொழிந்த பாக்களினமாகிய விருத்தத்தாற் செய்யப்பட்டமையான், 'பகுதிகொண்டிடு பாக்களினத்தினுள் மிகுதிகொண்ட விருத்தத் தொகைகளால்' என்றும், சூரபதுமனைச் சிங்கமுகன் தாரகன் என்னும் தம்பியருடனும், பானுகோபன்முதலிய புத்திரவர்க்கத்துடனும் ஆயிரவெள்ளம் அவுணப்படைகளுடனும் கொன்று வெற்றிகொண்டமை தோன்ற, 'தொகுதிகொண்டிடு சூர்கிளைசாய்த்தவன்' என்றும், அவன் கதையை யல்லது வேறு கதையை யறியே னென்பது பற்றி 'தகுதி கொண்ட தனிக்கதை சாற்றுகேன்' என்றுங்கூறினார். கிளை-ஆகுபெயர்.

செந்த மிழ்க்கு வரம்பெனச் செப்பிய
முந்து காஞ்சியின் முற்றுணர் மேலவர்
கந்த னெந்தை கதையினை நான்முறை
தந்தி டென்னத் தமிய னியம்புகேன்.

(இ-ள்.) செந்தமிழ்மொழிக்கு எல்லையாக(ப்புலவர்களால்) சொல்லப்பட்ட முதன்மைபொருந்திய காஞ்சிநகரத்திலுள்ள முழுதுமறிந்த அறிவுடையோர் கந்தனுடைய எமது கடவுளது புராணத்தை நூலின் முறையாகச் சொல்லென்று கட்டளையிட, தன்னந்தனியனாகிய அடியேன் சொல்லத் தொடங்குவேன்.—எ-று.

செந்தமிழ்க்கு வடக்கு எல்லையாகிய வேங்கடத்தைத் தன்னகத்தடக்கிய நாடாகலின் தொண்டைநாட்டிலுள்ள காஞ்சியை, 'செந்தமிழ்க்கு வரம்பெனச் செப்பிய' என்றும், உமையம்மை தழுவக்குழைந்தமையானும், வளைச்சுவடும் முலைச்சுவடும் பெற்றமையானும் அச்சிறப்பினையெய்திய காஞ்சியை 'மூந்துகாஞ்சியின்' என்றும், அருட்பணிக்குரிய மகேச்சுரர்முதலாநால்வரும் பொருந்தியிருப்பதனான், 'முற்றுணர் மேலவர்' என்றும், தான் வழிபடுமிறைவனாகலின் அவர் காதையை, 'கந்தனெந்தை கதையினை' என்றும், வடநூற்படி கூறுகவென்பார் சொல்லைக் கடைப்பிடித்துச் செய்தலின், 'நான்முறை தந்திடென்னத் தமியனியம்புகேன்' என்றுங் கூறினர். ()

வெம்பு சூர்முதல் வீட்டிய வேற்படை
நம்பி காதையை நற்றமிழ்ப் பாடலா
லும்பர் போற்ற வுமையுடன் மேவிய
கம்பர் காஞ்சியிற் கட்டுரைத்தே னியான்.

(இ-ள்.) கோபிக்கின்ற சூரபதுமனை வேரோடுங் களைந்த வேற்படையையுடைய சுப்பிரமணியக் கடவுளது சரித்திரத்தை நல்ல தமிழ்ப்பாடல்களால் தேவர்கள் போற்றும்படி உமாதேவியுடனெழுந்தருளியிருக்கும் திருவேகம்பநாதரது ஸ்ரீ காஞ்சிநகரத்தின்கண் அடியேன் உறுதிபடக் கூறினேன்.—எ-று.

தேவரைப் பகைத்தழித்தது வேற்படையேயாகலின் 'வெம்புசூர்முதல் வீட்டியவேற்படை' என்றும், அதனையுடைய முருகப்பெருமான்சரித்திரத்தை, 'நம்பி காதையை' என்றும், அவரைச் சுட்டிக்கூறிய தமிழ்ச்செய்யுளாகலின், 'நற்றமிழ்ப்பாடலால்' என்றும், தேவர்கள் நெருங்கி வாழ்த்துவதனால், 'உம்பர் போற்ற' என்றும், ஏலவார்குழலாளுடன் எழுந்தருளி இகபரங்களைத்தருகின்றதிருநகரமாதலின், 'உமையுடன் மேவியகம்பர் காஞ்சியில்' என்றும், அவரருளாற் கூறுதலால், 'கட்டுரைத்தேனியான்' என்றுங் கூறினர்.

கம்பர் எனப் பொதுப்படக் கூறியதனால் திருவேகம்பப் பெருமானையன்றி, உருத்திரரால் வழிபடப்பட்ட நல்ல கம்பரையும், மாயோனால் வழிபடப்பட்ட கள்ளக்கம்பரையும், பிரமனால் வழிபடப்பட்ட வெள்ளைக்கம்பரையுங் கொள்க. இதனை ஏலவார்குழலாளுமை நங்கையென்றுமேத்தி வழிபடப்பெற்ற காலகாலனைக் கம்பனெம்மானை" என்றும் "நல்ல கம்பனை யெங்கள் பிரானை" என்றும், "கள்ளக்கம்பனை யெங்கள்பிரானை" என்றும்வருந் தேவாரத்தானுணர்க. காஞ்சிப்புராணத்து இதனைப் பரக்கக் கூறுதலானுமறிக. முதல்-ஆகுபெயர். (௨௦)

அவையடக்கம் முற்றிற்று.

ஆக திருவிருத்தம். ௨௦.

௳

முருகன்றுணை.

# ஆற்றுப்படலம்.

செக்கரஞ் சடைமுடிச் சிவனுக் கன்பராய்த்
தக்கவ ரறிஞர்க டவத்தர் செல்வராய்த்
தொக்கவர் யாரும்வாழ் தொண்டை நாட்டினின்
மிக்கதோ ரணியிய லதுவி ளம்புகேன்.

(இ-ள்.) செவ்வானம்போலும் அழகிய சடைமுடியையுடைய சிவபெருமானுக்கு மெய்யன்பர்களாயுள்ள தக்கவர்களும், புலவர்களும், தவசிரேஷ்டர்களும், செல்வவான்களாய் நெருங்கியுள்ளவர்களு மாகிய யாவரும் (சேர்ந்து)வாழ்கின்ற தொண்டைநாட்டினது சிறந்துவிளங்குவதாகிய ஒப்பற்ற அழகின் இயலை (யான்) சொல்லத் தொடங்குவேன்.—எ-று.

"பொன்வண்ண மெவ்வண்ண மவ்வண்ண மேனி பொலிந்திலங்கு-மின்வண்ண மெவ்வண்ண மவ்வண்ணம் வீழ்சடை" என்னும் பிரமாணப்படி மின்போற் செந்நிறமுற்று விளங்குவது எம்பெருமானுடைய சடைமுடியென்பார், 'செக்கரஞ் சடைமுடிச் சிவன்' என்றும், 'அன்பினிற் கும்பிடலேயன்றி வீடும் வேண்டா விறலினர் என்பார், 'அன்பராய்த் தக்கவர்' என்றும், கல்வி கேள்விகளால் நிரம்பிய பேரறிவினரென்பார், 'அறிஞர்கள்' என்றும், சிவபரம்பொருளைச்சிந்தையினிருத்திப் பெருந்தவம் புரியும் பெட்பினரென்பார், 'தவத்தர்' என்றும், அளகேசனு மஞ்சத்தக்க பெருநிதிக்குவையினரென்பார், 'செல்வராய்த் தொக்கவர்' என்றும், சிவனுக்கன்பராய்த் தக்கவர்களும் அறிஞர்களும் தவத்தர்களும் செல்வராய்த் தொக்கவர்களுமாகிய யாவரும் நன்னிலையுடைய தென்று விரும்பி வாழ்தற்குரியது இத் திருநாடே யென்பார், 'யாரும்வாழ் தொண்டைநாடு' என்றும், அத்தகைய தொண்டைநாட்டினணியியலைக் கூறுதலே யமைவுடைத்தன்றி ஏனைய நாட்டியலைக் கூறுதல் கற்பனை மாத்திரமாகலா னதனை யொழித்து உள்ளதை யுள்ளபடியே கூறுத லுயர்ச்சியாகலின் யானு மந்நெறியே நின்று, அந்நாட்டி னணியியலைக் கூறுவனென்பார், 'மிக்கதோ ரணியியலது விளம்புகேன்' என்றுங் கூறினர். இதனை,—

"வேழ முடைத்து மலைநாடு மேதக்க
சோழ வளநாடு சோறுடைத்து—பூழியர்கோன்
தென்னாடு முத்துடைத்துத் தெண்ணீர் வயற்றொண்டை
நன்னாடு சான்றோ ருடைத்து." என்று ஒளவையார் கூறியதனானுணர்க.

சுந்தர மாயவன் றுயிலு மாழிபோ
லிந்திர னூர்முகிலி யாவு மேகியே
யந்தமில் கடற்புன லருந்தி யார்த்தெழீஇ
வந்தன வுவரியின் வண்ண மென்னவே.

(இ-ள்.) தேவேந்திரன் வாகனமாக வூர்ந்துசெல்லும் மேகங்க ளனைத்தும் அழகிய திருமால் பள்ளிகொள்ளும் பாற்கடல்போலப் (பரவிச்) சென்று, முடிவில்லாத கடல்நீரை யுண்டு (ஆகாயத்தில்) ஆரவாரித்து எழுந்து, உவர்நீர்க்கடலின் வண்ணம்போல (த்திரும்பி) வந்தன.—எ-று.

திருமறு மார்பினனாகிய திருமால் ஆடவர் பெண்மையை யவாவும் பேரழகினனென்பார், 'சுந்தரமாயவன்' என்றும், அத்திருமால் பள்ளிகொள்ளும் பாற்கடல் வெள்ளொளி வீசும் விழுப்பமிக் குடையதென்பார், 'துயிலுமாழி' என்றும், சம்வர்த்தம் - ஆவர்த்தம் - புட்கலாவர்த்தம் - சங்காரித்தம் - துரோணம் - காளமுகி - நீலவருணம் என்னுஞ் சப்தமேகங்களும் சுவர்க்காதி பியாகிய இந்திரனுக்கிசைந்த வாகனமென்பார், 'இந்திரனூர்முகில்' என்றும், அம்முகிலேழும் நீர்ப்பசையற்றுப் பாற்கடல் போலவெண்ணிறமுற்றுப் பரவிச்சென்றன வென்பார், 'ஆழிபோல் யாவுமேகி' என்றும், எத்தகைய கணிதர்களாலு மளவிட்டுரைத்தற்கரிய பெருங்கடலென்பார், 'அந்தமில்கடல்' என்றும், அப்பெருங்கடனீரைப் பருகிச் சூல்கொண்டு இடிமுழக்கத்துடனெழுந்தன வென்பார், 'புனலருந்தியார்த் தெழீஇ, என்றும், அவ்வாறெழுந்த மேகம் உவர்நீர்க் கடல்போற் கருநிறமுற்றுக் கவிந்துவந்தன வென்பார், 'வந்தன வுவரியின் வண்ணமென்ன' என்றுங் கூறினர். ஆழி-ஆழத்தையுடையது, உவரி-உவர்நீரையுடையது. உவர்=உப்பு. எழீஇ-சொல்லிசை யளபெடை. முகில் ஏகி - அருந்தி-எழீஇவந்தன வெனக்கூட்டுக. (உ)

பார்த்தென துலகடும் பரிதி யென்னொடும்
போர்த்தொழில் புரிகெனப் பொங்கு சீற்றத்தால்
வேர்த்தெனப் பனித்துவெள் ளெயிறு விள்ளநக்
கார்த்தென வேதடித் தசனி கான்றவே.

(இ-ள்.) (சூரியனைப்) பார்த்து எனது உலகத்தை (க்காய்ந்து) அழித்துவருகின்ற சூரியனே! நீ என்னுடன் போர்த்தொழில் செய்யக்கடவை யென்று மிகுந்த கோபத்தினால் வியர்த்தைப்போலப் பனித்து, வெள்ளிய பற்கள் தெரியும்படி சிரித்து ஆர்ப்பரித்தாற்போல மின்னி இடியைக் கக்கின.—எ-று.

பெருங்கோப முற்றவர்களுக்கு உடல் வியர்த்தலும் வீரநகையாற் கனைப்பு முதலியன தோன்றலு முண்மைபோல, மேகங்களும் பனித்து மின்னி இடித்தனவென்க. எனதுலகு என்பது-என்னாற் பாதுகாக்கப்பட்டு வருகின்ற உலகமென்னும்பொருட்டு. போர்முதனிலைதிரிந்த தொழிற்பெயர். புரிக, வேர்த்தது-ஆர்த்தது, என்பவை ஈறுதொகுத்தலாய் நின்றன. (ங)

சுந்தர வயிரவத் தோன்றன் மீமிசைக்
கந்தடு களிற்றுரி கவைஇய காட்சிபோன்
முந்துறு சூன்முகின் முழுது முற்றுற
நந்தியம் பெருவரை மீது நண்ணிய.

(இ-ள்.) அழகிய வயிரவக்கடவுளின்மேல் கட்டுத்தறியை முரிக்கின்ற மதயானையினது தோலைப் போர்த்த காட்சியைப் போல முற்பட்டெழுந்த சூலினைக் கொண்ட மேகங்களனைத்தும் பெரிய நந்திமலையின்மேல்வந் தடைந்தன.—எ-று.

வயிரவக்கடவுள்மேல் யானைத்தோலைப் போர்த்தாற்போல கரியமேகங்கள் நந்திமலையைச் சூழ்ந்து கவிந்தன வென்க. (௪)

## வேறு.

வாரா கான்றநித் திலமென வாலிகண் மயங்கச்
சீரா கான்றிடு தந்திரி நரம்பெனச் செறிந்த
தாரா கான்றவோ ரிருதுவி னெல்லையுந் தன்பால்
வீரா கான்றிடு தன்மைய தாமென மேகம்.

(இ-ள்.) சப்தமேகங்களும் குளிர்ந்த திருப்பாற்கடலை (யுண்டு) கக்குந் தன்மையைப்போல ஒரு கார்காலமாகிய இரண்டுமாதவனாயிலும் மூங்கிலினின்றுஞ் சிந்திய முத்துக்களைப்போல நீர்த்திவலைகள் மயங்கும்படி, தாளவொத்தைத் தெரிவிக்கின்ற யாழின் நரம்பைப்போல நெருங்கிய நீர்த்தாரைகளைச் சிந்தின.—எ-று.

வரை என்பது வாரை என நீட்டல் விகாரம் பெற்றது. "தந்தி வராக மருப்பிப்பி பூகந் தழைகதலி-நந்து சலஞ்சல மீன்றலை கொக்கு நளினமின்னார்-கந்தரஞ் சாலி கழைகன்ன லாவின்பல் கட்செவிகா ரிந்து வுடும்பு கராமுத்த மீனு மிருபதுமே" என்றபடி, இருபதிடங்களிற் றோன்றும் முத்துக்களில் மூங்கிலினின் றுதிரும் முத்தைப்போல நீண்ட நீரொழுக்கினிடத் தவாய் ஆலிகள் மயங்கலின் 'வாரை கான்ற நித்திலமென வாலிகண் மயங்க' என்று கூறினர். சீரை கான்றிடு என்னும் இரண்டாம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடரில் ககரம் மிகாமல் விகாரத்தாற் றொக்கது.

சீர் - தாளவொத்து; அதனையுடைய யாழ்-பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என நால்வகைப்படும், அவற்றிற்கு நரம்புகொள்ளுமிடத்து, பேரியாழிற்கு இருபத்தொன்றும், மகரயாழிற்குப் பதினேழும், சகோடயாழிற்குப் பதினாறும், செங்கோட்டியாழிற்கு ஏழுமாம். இவற்றை, "பேரியாழ் பின்னு மகரஞ் சகோடமுடன், சீர்பொலியுஞ் செங்கோடு செப்பினார்-தார்பொலிந்து, மன்னுந் திருமார்ப வண்கூடற் கோமானே, பின்னு முளவே பிற."—எனவும், "ஒன்று மிருபது மோரேழ்மேற்பத்துடனே, நின்ற பதினாறேழு நேடுங்காற் - குன்றாத, நால்வகை யாழிற்கு நன்னரம்பு சொன்முறையே மேல்வகை நூலோர்விதி" எனவும், வருமாற்றானுணர்க. இவ் வியாழ்வகையின் விரிவை இசைநூலிற் காண்க.

இவ்வாறன்றி, சீரை கான்றிடு தந்திரி என்பதற்கு, உறைச்சீலையினின்று நீங்கிய யாழ் எனப் பொருள் கூறினும் பொருந்தும். இருது இரண்டுமாதங்கொண்ட பருவம். அது ஒரு வருடத்திற்கு ஆறு பருவங்களாகப் பகுக்கப்பட்டு, அவ்வாறனுள் கார்ப்பருவமே மழை பெய்தற்குரிய பருவமாகலின் அதனை வேறு பிரித்தற்கு, 'ஓரிருதுவினெல்லையும்' எனக் கூறினர். "காரே கூதிர் முன்பனி பின்பனி-சிரிளவேனில் முதுவேனி லென்றாங்-கிருமூன்று திறத்தது தெரிபெரும் பொழுதே" என்ற அகப்பொருள்விளக்கத்துங் காரை முற்கூறியது இதுபற்றியே யென்க.

உயிர்களுக் கின்பம் பயப்ப மேகங்கள் நீரைப்பொழிவதால் யாழினிசை போலுமென்று கூறினர். மேகம் தாரைகான்ற எனக் கூட்டுக.

இச்செய்யுள்முதல்மேகங்கள் நீர் பொழிதலின் சிறப்பெடுத்துக்கூறுவதாகும்.

பூட்டு கார்முகந் தன்னொடுந் தோன்றிய புயல்வா
யூட்டு தண்புன னந்தியங் கிரிமிசை யுகுத்தல்
வேட்டு வக்குலத் திண்ணனார் மஞ்சனம் விமலற்
காட்டு கின்றதோர் தனிச்செயல் போன்றுள தன்றே.

(இ-ள்.) பூட்டப்பட்ட இந்திரதனுசோடும் விளங்குகின்ற மேகங்கள் வாயினால் உண்ட குளிர்ந்தகடல்நீரை நந்திமலையின்மேல் பொழிதல் (எதுபோலுமெனின்) வேடுவக்குலத்தி லவதரித்த ஸ்ரீ கண்ணப்பசுவாமிகள் அநாதிமல முத்தராகிய சிவபெருமானுக்குத் திருமஞ்சனஞ் செய்கின்ற ஒப்பற்ற செயலை யொத்திருந்தது.—எ-று.

திண்ணனரது செயலை யீண்டுவமையாகக்கூறிய தென்னையெனின், சிவபெருமான்போல் நந்தியங்கிரி செந்நிறமுடைமையானும், திண்ணனார் வில்லைப் பிடித்துப் பொன்முகலியாற்றுநீரைத் தம் வாயினான் முகந்து சிவபெருமான் திருமுடியிற் றிருமஞ்சனஞ் செய்தல்போல் புயல் இந்திரதனுசுடன் விளங்கித் தம்வாயினின்றும்

நீரை அந் நந்திவரையிற் சொரிதலாலும், திண்ணனார் கரிய திருமேனியராய் விளங்க ல்போல், புயல் சூல்கொண்டு கருநிறமுற்று விளங்கலானும், வேட்டுவக்குலத்திண்ண னார் மஞ்சனம் விமலற்காட்டுகின்றதோர் தனிச்செயல் போன்றுளது என்றுகூறினர். வளைந்த இந்திரதனுசு என்னும் பொருள்பட, 'பூட்டு கார்முகம்' என்றார்.

திண்ணனார் விமலற்கு மஞ்சனமாட்டிய திருச்செயலாவது:—திண்ணனார் பொத்தப்பிநாட்டிலே உடுப்பூரிலே வேடர்குலத் தலைவனாகிய நாகனுக்கும் அவன் மனைவி தத்தை யென்பவளுக்கும் புத்திரராகத் தோன்றி நாணன் காடன் என்பவர்க ளுடன் வேட்டையாடச்சென்று சீகாளத்தித் திருமலையை யடைந்து காளத்திநாத ரைத் தரிசித்து அவர் திருமுடியில் நீர் வார்த்து மலரிட்டிருக்கக் கண்டு நீங்காத பேர ன்பினால், இதுதான் எம்பெருமானுக் கிசைந்ததுபோலுமென்று தாமு மவ்வாறே செ ய்யக் கருதி, முன்பு வேட்டையில் வீழ்த்திய பன்றி இறைச்சியைப் பாகஞ் செய்து தேக்கிலைக் கல்லையி லெடுத்துக்கொண்டு மலர்களைப் பறித்துத் தமது குடுமியிற் செரு கிக்கொண்டு பொன்முகலியாற்று நீரை வாயினால் முகந்துகொண்டுவந்து சிவபெரு மானை யடைந்து அவர் திருமுடியி லணிந்திருந்த மலர்களைத் தமது செருப்புக்காலா லகற்றி, வாயிற் கொண்டுவந்த நீரை சுவாமியினுடைய திருமுடியி லுமிழ்ந்து திருமஞ் சனமாட்டி, குடுமியிற் செருகிக்கொணர்ந்தமலரைப் பெருமான் திருமுடியிற் சாத்திக் கல்லையிற் கொண்டுவந்த இறைச்சியை யூட்டி யன்புசெய்து வந்தனர். இவ்வாறு ஐந் துநாள் செய்துவர, ஆறுநாள் இவரது அன்பைச் சிவகோசரியாருக்கு வெளிப்படுத் தும்பொருட்டுச் சிவபெருமான் தமது வலத்திருக்கண்ணில் உதிரம் பெருகச் செய்த னர். அதனைக்கண்ட திண்ணனார் எம்பெருமானுக்கு இவ்விடுக்கண் யாவர் விளைத்த னரோ வென்று வருந்தி அது எவ்வகையிலுந் தீராமைகண்டு பின் தமது கண்ணைப் பிடுங்கிப் பெருமான் திருக்கண்ணி லப்ப அவ்வுதிர நின்று செவ்வையான துணர்ந்து மகிழ்ந்து சென்று பின் வந்து பார்த்தபொழுது, இடக்கண்ணிலு முதிரம் பெருகக் கண்டு வருந்தித் தமது மற்றொரு கண்ணையுந் தோண்டி யப்பத் தொடங்கும்பொழுது சிவபெருமான் அவ்விலிங்கத்திடமாக வெழுந்து தமது திருக்கரத்தினால் அவரது திருக்கரத்தைத் தடுத்து "நில்லுகண்ணப்ப" என்று அருளிச்செய்து அவருக்குமுன் போலக் கண்ணையருளித் தமது வலப்புறத்திருக்கத் திருவருள்செய்தனர். இக்காரண த்தால் அவருக்குக் கண்ணப்பநாயனா ரென்னுந்திருநாமமுண்டாயிற்று எனவறிக.

இச்செய்யுளால் ஏனையோரன்பு கண்ணப்பரன்புக் கொப்பாகாமைபோல், இந் நாட்டிற்பெய்தமழை ஏனையநாட்டிற்பெய்த மழைபோலன்றென்று கூறியதாகும்.

கல்லென் பேரிசைப் புனன்மழை பொழிதலாற் கானத்
தொல்லும் பேரழல் யாவையு மிமைப்பினி லொளித்த
வெல்லுந் தீஞ்சல மருவுமிக் காருக்கு வியன்பார்
செல்லுங் காலையி லங்கண்விற் றிருப்பரோ தீயோர்.

(இ-ள்.) (எல்லாப் பொருள்களையும்) வெல்லத்தக்க மதுரமாகிய நீர் பொரு ந்திய இம்மேகங்கள் விசாலமாகிய இந் நிலவுலகத்தில்பரவிச் செல்லும்பொழுது அங் குத் தீத்தொகுதிகள் வீறுபாட்டுடன் இருக்குமோ? (இரா); ஆதலால், மேகங்கள் கல்லென்னும் பேரோசையினையுடைய நீரைப் பொழிதலால் காட்டில் பொருந்திய பெரிய தீத்திரள்களனைத்தும் இமைப்பொழுதில் (அவிந்து) ஒளித்தன.—எ-று.

'வெல்லுந் தீஞ்சல மருவுமிக் காருக்கு வியன்பார் - செல்லுங் காலையி ல ங்கண்விற் றிருப்பதோர் தீயோர்' என்பதனைச் சிலேடைவகையாகப் பொருள்கொ ள்ளுங்கால், எல்லாவற்றையும் வெல்லத்தக்க கொடிய கோபத்தை யடைந்த பெரி

யோர்கள் பெரிய நிலவுலகத்தில் செல்லும்பொழுது அங்குத் தீயவர்கள் அவர்களுக்கு முன்னேநிற்பார்களோ? (நில்லார்) என வேறுபொருள்படமொழுசாண்க. கல் என்பது அநுகரணவோசை. கானத்தொல்லும்பேரழல் - காட்டில் மரங்களொன்றோடொன்று தேய்தலாலுண்டாகு மழல். சிலேடைப்பொருள் பயத்தல்கருதித் தீயோர் எனப் பலர்பால்விகுதியேற்றிக் கூறினர்.

இச் செய்யுளால் குணமென்னுங் குன்றேறி நின்ற பெரியோர் வெகுளியை மேற்கொள்வாராயின் எவ்வளவு பெருந் தீயோரும் அடங்கி அவர்வழிநிற்றல்போல், அந்நாட்டில் பெருங்கொடுமை பயந்திருந்த மிக்க வெப்பம் கணப்பொழுதில் மாறியது அவ் வெள்ளத்தாலென்று அதன் பெருமையைக் கூறியதாகும். (எ)

தேக்கு தெண்டிரைப் புணரிநீர் வெம்மையைச் சிந்தி
யாக்கி வாலொளி யுலகில்விட் டேகலா லடைந்தோர்
நீக்க ரும்வினை மாற்றிநன் னெறியிடைச் செலுத்திப்
போக்கின் மேயின தேசிகர்ப் பொருவின புயல்கள்.

(இ-ள்.) மேகங்கள் பொங்குகின்ற தெள்ளிய அலைகளையுடைய கடல்நீரின் வெம்மையை யொழித்து வெள்ளொளியாகச் செய்து உலகத்திற் பொழிந்து செல்லுதலால், அவை தம்மை யடைந்த ஆன்மாக்களினது நீக்குதற்கரிய இருவினைகளை யொழித்து நன்மார்க்கத்திற் செலுத்தி நடத்துதலிற் சிறந்துவிளங்கும் ஞானசாரியர்களை யொத்திருந்தன.—எ-று.

புயல்கள் கடல்நீரின் வெம்மையைத் தணித்து வெண்ணிறமுடையதாக்கி உலகுக் குபகரித்துச் செல்லுதலாலும், தேசிகர் ஆன்மாக்களின் வினைகளாகிய வெம்மையை யொழித்துச் சுத்தர்க ளாக்கி நன்னெறியிற் செலுத்துதலாலும் 'தேசிகர்ப் பொருவின புயல்கள்' என்று கூறினர். தேக்கு-வலித்தல்விகாரம். நீக்கு-முதனிலைத் தொழிற்பெயர்.

மேலைச் செய்யுளில் பெரியோர் அடங்காரிடத்துக் கொள்ளும் மறக்கருணைபோல், அடங்கினவரிடத்து அப் பெரியோர் செய்யும் அறக்கருணைபோலாகும் இவ் வெள்ளத்தால் விளையும் பயனென்று இச் செய்யுளாற் கூறியதாகும். (அ)

கழிந்த பற்றுடை வசிட்டன திருக்கையாக் கவிஞர்
மொழிந்த நந்தியம் பெருவரை மொய்த்தசூன் முகில்கள்
பொழிந்த சீதநீர் பொற்புறு சாடியிற் பொங்கி
வழிந்த பாலெனத் திசைதொறு மிழிந்தன மன்னோ.

(இ-ள்.) பாசபந்தங்க ளொழியப்பெற்றுள்ள வசிட்டமுனிவரரது வாசஸ்தானமாகக் கவிவல்லோர்களால் சொல்லப்பட்ட பெரிய அழகிய நந்திமலையைச் சூழ்ந்த சூல்கொண்ட மேகங்கள் பொழிந்த குளிர்ச்சிபொருந்திய நீர்ப்பெருக்குகள் அழகுபொருந்திய சாடியினின்றும் பொங்கிவழிந்த பாலைப்போலத் திக்குகள்தோறும் பரவி யோடின.—எ-று.

வசிட்டர் சப்த முனிவர்களிற் சிறந்தவரும், முற்றத்துறந்த முனிவர்களும் வணங்கத்தக்க முதல்வருமாக விளங்குகின்றவ ராகலின், 'கழிந்த பற்றுடை வசிட்டன்' என்று கூறினர்.

இதனுள் நந்திவரையே சாடியாகவும், அதன்மேற் பெய்யும் மழைநீரே அச் சாடியினின்றும் பொங்கிவழிந்த பாலாகவும் உவமைப்படுத்திக் கூறினர்.

கவிஞர் என்றது கல்வி கேள்விகளிற் றேர்ந்த அறிஞராகியபெரியோர்களை. முகில்கள் நந்திவரையிற் பொழிந்த நீர் சாடியிற்பொங்கிவழிந்தபாலென இழிந்தன வெனக் கூட்டுக.

இச்செய்யுளால், பால் உடம்புநோயின்றி வளரச்செய்யும் ஆற்ற லுடைத் தாயிருத்தல்போல, அச்சிறப்புத்தன்மை இவ் வெள்ளத்தி லிருக்கின்றமை நோக்கிப் பாலென வென்று கூறியதாகும். (சு)

சீல மேதரு பகீரதன் வேண்டலுஞ் சிவன்றன்
கோல வார்சடைக் கங்கையம் புனலினைக் குன்றின்
மேலே நாள்விட வந்தென நந்தியிழ் விரிநீர்
பாலி யாறெனும் பெயர்கொடு நடந்தது படிமேல்.

(இ-ள்.) முற்காலத்து நல்லொழுக்கத்தையே தகுதியாகப்பெற்ற பகீரதமகாராசன் வேண்டவும் சிவபெருமான் தமது அழகிய நீண்ட சடைமுடியிலுள்ள கங்கைநீரை இமயமலையின்மேல் விட (அக்கங்கைநீர்) பெருக்கெடுத்துவந்தாற்போல, நந்திமலையினின்றும் (பெருகி)விழுகின்ற விரிந்த நீர்ப்பெருக்கானது பாலிநதியென்னும் பெயரைக்கொண்டு நிலவுலகத்திற் சென்றது.—எ-று.

தங்குலத்துமுன்னோராகிய சகரர்கள் அறுபதினாயிரவரும், நரகத்தினின்று நீங்கிச் சுவர்க்கம்பெற் றுய்யும்பொருட்டுப் பெருந்தவஞ்செய்து அவ் வெண்ணம் நிறைவேறப்பெற்ற நல்லொழுக்கின னென்பார், 'சீலமேதரு பகீரதன்' என்று கூறினார். பகீரதன் சிவபெருமான் திருமுடியினின்றுங்கங்கையைக்கொணர்ந்தவரலாறு:-

பூர்வத்தில் அயோத்தியாபுரியை யாண்ட சகரமகாராசன் அஸ்வமேதயாகஞ்செய்ய விடுத்த குதிரையைத் தேவேந்திரன் வஞ்சகமாகக்கொண்டுபோய்ப் பாதலத்தில் கபிலமகாமுனிவர் தவஞ்செய்யுமிடத்தில் ஒளித்துவைத்தனன். அதனை அவ்வரசன் புத்திரர்களாகிய சகரர்கள் அறுபதினாயிரம்பேரும் உலகெங்கும் தேடியுங் காணாமல், பூமியைத் தோண்டிப் பாதலத்திற் சென்று அங்குத் தவஞ்செய்திருந்த கபிலமுனிவருக்குச் சமீபத்தில் குதிரையைக் கண்டு, அவர் அதனைக் களவுசெய்ததாக எண்ணி வைதார்கள். அப்பொழுது முனிவர் கோபத்தினால் விழித்துப் பார்க்க, அவ்வறுபதினாயிரம்பெயரும் சாம்பராயினர். அதனை யுணர்ந்த அஞ்சுமா னென்பவன் அவர்க்கு இதங்கூறிக் குதிரையைக் கொணர்ந்து தனது பிதாமகன்செய்யும் வேள்வியை முடித்தான். அவன் சந்ததியில் வந்த பகீரதனென்பவன் கபிலமுனிவர் கோபத்தினால் சாம்பலாயெரிந்து நரகமடைந்த தன் முன்னோர்களாகிய சகரர்கள் அறுபதினாயிரம்பெயரையும் சுவர்க்கத்திற் சேர்க்கக் கருதிப் பிரமனை நோக்கித் தவஞ்செய்தான். அப்பொழுது பிரமன் பிரசன்னமாய் ஆகாயகங்கை வந்து அவர்கள் அஸ்தியில் படின் சுவர்க்கமடைவார்கள். அக் கங்கை பூமியில் வரின் அதன் வேகத்தைச் சிவபெருமானையன்றித் தடுப்பவ ரொருவருமில்லை; ஆதலால், அவரை நோக்கித் தவஞ்செய்யென்று கூறியகன்றனன். அவ்வாறே பகீரதன் சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து கங்கையைப் பெற்றுவருகையில் அது சுவர்க்க மத்திய பாதலமென்னும் மூன்றுலகமும் நடுங்கும்படியாக விரைந்து வர, அதனைப் பெருமா னுணர்ந்து தமது சடையின் ஒரு நுனியில் தரித்தனர். பின்பு பகீரதன் வருந்தி வேண்டி அதில் ஒரு சிறுதுளியைப் பெற்றுக்கொண்டு வரும்பொழுது அக் கங்கை வழியில் தவஞ்செய்து கொண்டிருந்த சன்னுமுனிவருடைய யாகசாலையை யழிக்க, அவர் அதனை உள்ளங்கையில் வைத்துப் பானஞ்செய்தனர். இப்பால் பகீரதன் தன்பின்னே கங்கை வராததைக் கண்டு, இது இம் முனிவரால் நேரிட்டதென் றறிந்து அவரை வருந்திவேண்ட,

சன்றுமுனிவர் இயங்கி அக் கங்கையைக் காதின்வழியாகப் பூமியில்விட்டார். பின்பு பகீரதன் பாதலத்திற் கொண்டுபோய்ச் சாம்பராய்க் கிடந்த சகரர்கள் எலும்பிற் படிவித்து அவர்களைச் சுவர்க்கத்திற் சேர்த்தான் என்பதாம். கங்கை பகீரதனால் பூமியிற் கொண்டுவரப்பட்டமையால் பாகீரதி என்றும், சன்றுமுனிவர் காதின்வழியே வந்தமையால் சானவி என்றும் சொல்லப்பட்டது.

மேலைச் செய்யுளில் பால்போலென்று பொதுமையாற் கூறி அதனை இச் செய்யுளில் பாலியாறென்றே கூறினர். (௪0)

வாலி தாகிய குணத்தினன் வசிட்டனென் றுரைக்குஞ்
சீல மாமுனி படைத்ததோர் தேனுவின் றீம்பால்
சால நீடியே தொல்லைநாட் படர்ந்திடு தன்மைப்
பாலி மாநதிப் பெருமையான் பகர்வதற் கெளிதோ.

(இ-ள்.) பரிசுத்தமாகிய நற்குணத்தினையுடைய வசிட்டனென்று சொல்லப்படும்நல்லொழுக்கமிக்கசிறந்த முனிவரர் (அடையப்) பெற்றதாகிய காமதேனுவின் மதுரம் பொருந்திய பாலானது முன்னாளில் மிகப் பெருகிப் பரந்த தன்மையையுடைய பெரிய பாலிநதியின் மேன்மையினை யான் சொல்வதற் கெளிதாகுமோ (ஆகாது.)—எ-று.

இச் செய்யுள் பாலியாறென்றதைக் காரணங்காட்டி வலியுறுத்தியதாகும்.

மெய்யுணர்வினராகிய சிவபெருமானைக் குறித்துச்செய்யுந்தவத்தாற் றூய்மைபெற்றுள்ளவனென்பார் 'வாலிதாகிய குணத்தினன்' என்றும், 'ஒழுக்கத்து நீத்தார் பெருமை' என்றபடி யாவினும் தென்பதைத் துறத்தலே முதற்குண மாகலின் அதனையே கடைப்பிடித்துள்ளவ னென்பார், 'வசிட்டனென்றுரைக்குஞ்சீலமாமுனி' என்றும், அவர் சொல்லின்வழியே யொழுகி யேவல்புரியப்பெற்றதென்பார், 'படைத்ததோர் தேனு' என்றும், அம்முனிவர் நந்திமலையை யடைந்தபொழுது அங்கு இடபதேவனைக் கண்டு மோகித்த காரணத்தா னெழுகிய பாற்பெருக்கென்பார், 'தீம்பால் சாலநீடியே தொல்லைநாட்படர்ந்திடுதன்மைப் பாலி மாநதி' என்றும், அத்தகைய நதியினீரைப் பரிசித்தோரும் பருகினோரும் அடைந்த புத்திமுத்திப்பயன் என்னாற் சொல்லப்படுந்தரத்ததன்றென்பார், 'பெருமையான்பகர்வதற் கெளிதோ' என்றுங் கூறினர்.

வாலிது மெய்ம்மையை யுடையது. இதனை,—"கற்றதனா லாய பயனென் கொல்.வாலறிவ-னற்றாடொழாஅரெனின்" என்னுந் திருக்குறளுக்குப் பரிமேலழகர் கூறிய உரைவிசேடத்தா னுணர்க. 'தேனுவின் றீம்பால் - சால நீடியே தொல்லை நாட் படர்ந்திடு தன்மைப் பாலி மாநதி' என்பதன் வரலாறு.—முன்னொருகாலத்தில் வசிட்டமுனிவர் நந்திபருவதத் தெழுந்தருளியிருந்தபோது அவரிடத்துள்ள காமதேனுவானது, சிவபெருமான் வாகனமாகிய இடபதேவனைக் கண்டு காமுற்று அதனால் பால் வற்றி நிற்க, அதனை யுணர்ந்த முனிவரர் ஒரு தருப்பையைக் கன்றாகச் சமைத்தனுப்ப, அதனைக் காமதேனு நோக்கிப் பாலைச்சுரக்கவும், அப்பால் ஆறாகப்பெருகிய காரணத்தால் பாலாறு எனப் பெயராயிற்றெனவறிக. இதனை," மேகமுட்டி விழும்புனல் சிந்தும்வி ளைப்பொழில் - நாக முட்டி யுடன்றம ராற்ற கசிற்றணை - யாக முட்டர மாதர்க ளேக்கின ராட்டயர்- மாக முட்டி வளர்ந்துயர் நந்தி வரைக்கணே. மாதவத்தி னுயர்ந்த வசிட்டன் மகத்தினுக் - கேத மில்சுதைத் தீம்பய மீந்திடு தேனுவக்-கோத நஞ்ச மிடற்றவ னூர்விடை யேற்றினைக்- காத லாலொரு நாள்விழி முந்துறக் கண்டதால். கண்டு மீமிசை மிக்குல வாதெழு காமநோய் - கொண்டு நொந்துவிம்

பரிந்து மெலிந்து குழைந்தபான் - மண்டி யூறு செருத்தலும் வற்றி யுலர்ந்ததா - லண்டர் யாரு முவப்பி லடங்கிய தேனுவே. அன்ன தன்மை வசிட்ட னறிந்து தருப்பையை - மன்னு மாமனு வாலொரு கன்றின் வரச்செய்து - முன்ன ருய்த்தலு மோந்துடனக்கி முகிழ்த்தெழு - நன்ன ரன்பி னயந்தது காம நலிந்ததே. மலையெ லாங்குழுமிச்சொரி மான்பென வோகையாற் - கழிய நீண்முலைத் தாரைகள் கான்றன கான்றபான் - முழுது மோர்நதி யாயவ ணின்றுமுந் நீர்புகுந் - தழிவி லும்பரு மாட்டயர் தீர்த்தம தாயதே"—என வருங் காஞ்சிப்புராணச் செய்யுள்களா லுணர்க.

சுந்தரமாயன் - என்னுஞ் செய்யுள் முதல் இச்செய்யுள்காறும் பாலிநதியின் வரலாற்றைக்கூறியதாகும். (கக)

எய்யும் வெஞ்சிலைப் புளிஞரா மெயிற்றியர் தொகையைக்
கைய ரிக்கொடு வாரியே சிறுகுடி கலக்கித்
தூய்ய சந்தகில் பறித்துடன் போந்தது தொன்னாள்
வெய்ய சூர்படை வான்சிறை கவர்ந்துமீண் டதுபோல்.

(இ-ள்.) முற்காலத்தில் கொடிய சூரபதுமனது சேனைகள் விண்ணுலகத்தைச்சிறைகவர்ந்து மீண்டதுபோல, (அம்பை) எய்கின்ற கொடிய வில்லையுடைய வேடர்களையும், வேடுவமாதர் கூட்டங்களையும் அரித்து வாரிக்கொண்டு, அவர்களது சிறிய குடியிருப்பினைக் கலக்கி, தூய்மையாகிய சந்தனவிருக்ஷங்களையும், அகில் விருக்ஷங்களையும் வேரோடு பறித்து, அடித்துக்கொண்டுவந்தது.—எ-று.

வேடர்கள் மறத்தொழில்புரியும் வில்லினரொன்பார், 'எய்யும் வெஞ்சிலைப் புளிஞர்' என்று கூறினார். அசமுகியென்பவள் சாத்தாவினுடைய எவலாளராகிய மாகாளரால் அவயவபங்க முற்றுவருந்திச் சூரபதுமனிடத்து முறையிட, அவன் தன் புத்திரனாகிய பானுகோபனைப் போர்செய்தற் கனுப்ப அப் பானுகோபன் சென்று தேவர்களையும் தேவமாதர்களையுஞ் சிறைகவர்ந்து அவர்கள் குடியிருப்பை நெருப்பிட்டழித்துப் பஞ்சதருக்களையும் பறித்துச் சென்றமைபோல, பாலிநதி புளிஞரையும் எயிற்றியர் தொகையையும் வாரிக்கொண்டும், சிறிகுடியைக் கலக்கி யழித்தும், சந்து அகில்முதலிய மரங்களைப் பறித்துஞ் சென்றதென உவமைமுகத்தாற் கூறினார். புளிஞர் எயிற்றியர் பாலைநிலமாக்க ளாகலானும், சந்து மகிலுங் குறிஞ்சிநிலக் கருப்பொருளாகலானும் இவ் விரண்டும் விரவக் கூறினமையான் இச் செய்யுள் திணைமயக்கங் கூறியவாறாயிற்று. குடி-வான் என்பன ஆகுபெயர்.

இச் செய்யுளால் பாலிநதி குறிஞ்சித்திணையி னின்றும் பாலைத் திணையையடையுந் தொடக்கங் கூறியதாகும். (கஉ)

காக பந்தரிற் கருமுகிற் காளிமங் கனலு
மாக நீள்கரி யானையுங் குழுவொடும் வாரிப்
போகன் மேயின மேற்றிசைப் புணரியுண் டமையா
மேக ராசிகள் குணகடன் மீதுசெல் வனபோல்.

(இ-ள்.) மேகக்கூட்டங்கள் மேற்குத்திசையிலுள்ள சமுத்திரநீரை யுண்டு அமையாமல் கீழ்த்திசைக்கடலின்மேல் போகுந் தன்மைபோல, பாலிநதி காகங்கள் பந்தரிட்டாற்போன்றுள்ள கருமையாகிய மேகத்தினது கருமைத்தன்மை யமைந்த மிகவு நீண்ட யானைகளனைத்தையும் அதன் கூட்டத்துடன் வாரிக்கொண்டு போயின.—எ-று.

மேகங்கள் மேற்றிசைக்கடலையுண்டமையால் கீழ்த்திசைக்கடன்மேற் செல்வனபோல, பாலிநதி கீழ்த்திசைநோக்கி யானைகளை வாரிச் சென்றன வென்க.

காகபந்தரில் என்றது மேகத்தினது கருமையைச் சிறப்பித்துக்கூறியபடி. முகில் கரு நிறமுற்று இடித்து நீரைப்பொழிதல்போல, யானைகள் கருநிறமுடையனவாய்ப் பிளி றிட்டு மதநீரைப் பொழிதலின், 'கருமுகிற் காளிமங் கனலு மாகநீள் கரி' என்று கூறி னர். மாகநீள்கரி = ஆகாயமளவு முயர்ந்த யானை. கனலல் = நெருங்கல். காளிமம் = கரு மை. மாகநீள் கரி என்றது, இலக்கணை. அமையா என்பது ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம்.

இந்த விரண்டு செய்யுளால் அந் நாட்டிற் பரவிய பாலிநதியின் பெருமை கூறும் அவாவான் அந் நதி மலையினின்றும் சந்து அகில்முதலியவற்றைப் பறித்து யா னைகளைப் புரட்டிவரும் பெருவெள்ளமென்று கூறியதாகும். (௧௫)

குவட்டு மால்கரிக் குருகுமீதே ரரிபுலிக் குவைபுண்
டெவட்டி யுந்திடு திரைப்புனன் மதூகநல் லுழிஞ்சில்
கவட்டி னோமைசாய்த் தாறலை கள்வரூர் கலக்கித்
தெவிட்டி வந்தது பாலையுட் கொண்டிடு செருக்கால்.

(இ-ள்.) மலைபோலும் பெரிய யானைகளின் மூளைகளைத் தேர்ந்துண்ணு கின்ற சிங்கங்களையும், புலிக்கூட்டங்களையுந்தன்னுட்கொண்டு உவட்டெடுத்துத்தள் ளுகின்ற அலைகளையுடைய நீர் வெள்ளமானது இருப்பை மரங்களையும், நல்ல உழிஞ் சில் மரங்களையும், கிளைகளையுடைய ஓமைமரங்களையுஞ் சரியச்செய்து, வழிபறிக்குங் கள்வர்களுடைய ஊரைக்கலக்கியலைத்து, பாலை உட்கொண்ட செருக்கினல் தெவிட் டெடுத்து வந்தது.—எ-று.

'பாலை யுட்கொண்டிடு செருக்கால்' என்பதற்கு, காமதேனுவின் பாலைத் தன்னுட்கொண்ட செருக்கினு லெனவும், பாலைத்திணையைத் தன்னிடங்கொண்ட செருக்கினுல் எனவும் சிலேடைப்பொருள் அமைத்துக்கொள்க. குவட்மோல்கரி என் பதற்கு, மலைகளில் வசிக்கும் மதமயக்கத்தையுடைய யானை எனப் பொருள்கூறினுமா ம். குருகு = யானையின் மத்தகத்திலுள்ள மூளை. மதூகம், உழிஞ்சில், ஓமை என்பன பாலைநிலக்கருப்பொருள்கள். ஓமை - என்பது பாலைநிலத்துள்ள ஒருவகைமரம், இத ற்கு மாமரமெனப் பொருள்கூறுவாருமுளர். அது பாலைநிலக் கருப்பொருளன்மை யான் விடுக்க.

அன்றியும், மதூகம் - உழிஞ்சில் - ஓமை என்னும் மரங்களைக் குறிஞ்சிநில க்கருப் பொருளாகக்கொண்டு உரை கூறுவாருமுளர். அவை பாலைநிலக் கருப்பொரு ளேயன்றிக் குறிஞ்சிநிலக்கருப்பொரு ளன்மையான், உரையன்றென வறிக. இவை பாலைக்குரிய கருப்பொருளென்பதனை, "கன்னி விடலை காளை மீளி-யின்னகை யெ யிற்றி யெயின ரெயிற்றியர்-மறவர் மறத்தியர் புறவுபருந் தெருவை - கழுகு செந்நாய் கல்கெழு குறும்பு-குழிவறுங் கூவல் குரா அ-மரா அ-வுழிஞை பாலை யோமை யிருப் பை - வழங்குகதிக் கொண்டன செழும்பதிக்கவர்ந்தன-பகைத்துடி பாலையாழ் பஞ் சுரம் வெஞ்சமம் - பகற்சூறை யாடல் பாலைக்கருப்பொருளே" என்னும் அகப்பொ ருள் விளக்கத்தானுணர்க.

இச் செய்யுளால் பாலிநதி பாலைநிலத்தின் குணத்தைப் போக்கித் தன்குண த்தைக் காட்டியதென் றுணர்த்தப் பாலையுட் கொண்டிடு செருக்கா லென்று கூறிய தாகும்.

இது பாலைத்திணையிற் பாலிநதி சென்றமையை யறிவித்தது. (௧௬)

காலை வெம்பகல் கதிரவன் குடதிசைக் கரக்கு
மாலை யாமம்வை கறையெலாஞ் செந்தழல் வடிவாய்

வேலை யும்பரு கியலெழும் வெம்மைபோய் விளிந்து
பாலை காண்கிலா வாரியின் பெருமையார் பகர்வார்.

(இ-ள்.) காலைப்பொழுதும், வெவ்விய நடுப்பகலும், சூரியன் மேற்றிசையில் அஸ்தமிக்கும் மாலைக்காலமும், நள்ளிரவும், விடியற்காலமுமாகிய சிறுபொழுதைந்திலும் வெந்த அக்கினிவடிவமாய்க் கடலையு முண்ணும்படி யெழுகின்ற வெப்பம் நீங்கியழிந்து அப்பாலைத்திணையைக் காணவறியாத வெள்ளத்தின் பெருமையை யாவரெடுத்துச் சொல்ல வல்லவர்கள். (ஒருவருமில்லை.)—எ-று.

மிக்க வெப்பந்தரும் பொழுதாகலின், 'வெம்பகல்' என்று கூறினர். காலை முதல் வைகறையீறாக வுள்ள வைந்துஞ் சிறுபொழுதென்க. இதனை :—"காலையும் பகலுங் கையறு மாலையும்-ஊர்துஞ் சியாமமும் விடியலு மென்றிப்-பொழுதிடை தெரியிற் பொய்யே காமம்" என வருங் குறுந்தொகையானும், "மாலை யாமம் வைகறை யெற்படு - காலை வெங்கதிர் காயுநண் பகலெனக்-கைவகைச் சிறுபொழு தைவகைத் தாகும்" என வரும் அகப்பொருள்விளக்கத்தானு மறிக. பருகிய என்பது செய்திய வென்னும் வாய்பாட்டு வினையெச்சம். யார் என்னும் வினாவினைக் குறிப்பு வினைமுற்று ஈண்டு இன்மைப்பொருளை யுணர்த்தி நின்றது.

இச் செய்யுளால் பாலிநதி பாலையை யுட்கொள்ளவே அந்நாட்டில் காலை முதலாகக் கூறும் ஐந்துகாலங்களிலும் அதன் தன்மையையே விளக்கியதென்றுணர்த்த வெம்மைபோய் விளிந்து பாலை காண்கிலா என்று கூறியதாகும். (கரு)

குல்லை மாலதி கொன்றைகா யாமலர்க் குருந்து
முல்லை சாடியே யானிரை முழுவது மலைத்து
மெல்ல மற்றவை நீங்கலுங் கரைக்கண்விட் டேகதாற்
றொல்லை மாநதி யான்வழித் தோன்றிய தொடர்பால்.

(இ-ள்.) பழமையாகிய பெரிய அப் பாலிநதியானது வெட்சியும், மல்லிகையும், கொன்றையும், காயாவும், மலரையுடைய குருந்தும், முல்லையுமாகிய இவைகளை மோதி, பசுக்கூட்டங்கள் முழுவதையு மலைத்து, அப் பசுநிரைகள் மெல்ல நீந்துதலும், தான் காமதேனுவின் வழியே தோன்றிய சம்பந்தத்தினால் அவைகளைக் கரையிடத்து விட்டுச் சென்றது.—எ-று.

பாலிநதி குல்லை மாலதி முதலியவற்றை மோதிக்கொண்டும், பசுநிரைகளை யலைத்து அவை நீந்தக் கரையில் விடுத்துஞ் சென்றதென்க. பாலிநதி, 'இனத்தை யினங்காக்கும்' என்னும் பழமொழிக் கிணங்க, ஆனிரை நீந்தக் கரையில் விடுத்துங் குல்லைமுதலியவற்றை யலைத்துஞ் சென்றமை காமதேனுவின் வழியே தோன்றிய முறைமை கருதியென வறிக. குல்லை மாலதி முதலியன முல்லைக் கருப்பொருள்.

இச் செய்யுளால் பாலிநதி தன் குணத்தைக் காட்டியதுபோல் பெருஞ் சிறப்புற்றகாலத்து இனத்தார்க் கிடுக்கணுற்றுழி அதனைப் போக்கிப் பாதுகாப்பதில் மறவாத தன்மையை யுணர்த்த மற்றவை நீந்தலும் ஆன்வழித் தோன்றிய தொடர்பால் கரைக்கண் விட்டதென்று கூறினர்.

இது முல்லைத்திணையில் பாலிநதி வந்தமை கூறியது. (கசு)

கனையு டைப்பல் வாசினி பூகமாந் துடவை
யுளைம லர்ச்சினை மருதமோ டொழிந்தன பிறவுங்
களைத ஆற்றுமாட் டெறிந்தது கன்னகன் குடிஞை
யளவின் மிக்குறு பானிபெற் றதற்கவை யரிதோ.

(இ-ள்.) விசாலமாகிய பாலிநதியானது சுளைகளையுடைய பலா-ஈரப்பலா-கமுகு-மா இவைகளடர்ந்ததோட்டத்தையும், அரும்பிய மலர்கள் நிறைந்த கிளைகளையுடைய மருதமரத்தோடு மற்ற மரங்களையுங் களைந்து பக்கங்களில் வீசியது ; அளவில்லாதமிகுந்த நீரைப்பெற்ற அந்நதிக்கு அக்காரியம் அரிதாகுமோ? (ஆகாது.)—எ-று.

அளவின் மிக்குறு பாணி பெற்றதற்கு, என்பதற்குச் சிலேடை வகையால், அளவில்லாத மிகுந்த கைகளைப் பெற்றதற்கு எனப் பொருள் கூறி, அளவற்ற கைகளைப் பெற்ற அந்நதிக்குப் பலாமுதலிய அவற்றைப் பிடுங்கி யெறிதல் மிகவிலேசாகுமெனவும் பொருளமைத்துக்கொள்க.

இது மருதத்திணையில் ஆறு நடந்தமை கூறியது. (கஎ)

இலைவி ரித்துவெண் சோறுகால் கைதையு மெழுதுங்
கலைவி ரித்திடு பெண்ணையுங் களைந்திடுங் களைபோ
யலைவி ரித்திடு கடல்புக வொழுகுமா றனந்தன்
றலைவி ரித்துழி யுடனெளித் தன்னதோர் தகைத்தால்.

(இ-ள்.) இலைகளை விரித்து வெண்மையாகிய சோற்றைச் சிந்துகின்ற தாழையும், எழுதுகின்ற நூல்களை விரிக்கின்ற பனையுமாகிய களைகின்ற களைகள் சென்று அலைகளைவிரிக்கின்ற கடலிற் செல்லும்படி ஓடுகின்ற பாலிநதியானது, ஆதிசேடன் தலையை விரிக்கும்பொழுது தன்னுடலை நெளித்தாற்போலுந் தன்மையையுடையது.—எ-று.

இலைகளை விரித்து வெண்சோறிடுவதுபோலத் தாழை தன்மடல்களை விரித்து வெள்ளிய மகரந்தங்களை அவற்றின்மேற் சிந்துதலின், 'இலைவிரித்து வெண்சோறு கால் கைதை' என்றும், சகல சாஸ்திரங்களையும் பனையேட்டில் வரைந்தோதுவது தொன்றுதொட்டுள்ள மரபாகலின், 'எழுதுங்கலை விரித்திடு பெண்ணையும்' என்றுங் கூறினர். கைதையும் பெண்ணையும் அடியோடு களையப்பட்டுத் தன்மேல் வளைந்துவளைந்துசெல்வது எதுபோலுமெனின், ஆதிசேடன் தலையை விரித்துழி அவனுடல் வளைந்து நெளிவதுபோன் றிருந்ததென்க.

இது ஆனினங்களாகிய நாற்காற்பசுக்களைப் பாதுகாத்ததுபோலும், ஏனைய விருகாற்பசுக்களையும் பாதுகாக்க இன்றியமையாத சாலிக்கு இனமில்லாத ஏனையவற்றை யொழிக்கும் தண்டச்செயலு முடையதெனவும், உவர்நீரைப்பருகி உவரைப்போக்கி நன்னீராகப் பெய்ததுபோல் தான்பரவியநிலத்திலுள்ள களைகளைக் களைந்து நல்லிடமாக்கியதெனவும் கூறியதாகும்.

இது பாலிநதி நெய்தற்றிணையி லடைந்தமை கூறியது. (கஅ)

கொங்கு லாமலர்க் கொன்றைகூ விளங்குர வுழிஞை
பொங்கு மாசுணந் தாதகி பாடலம் புன்னை
துங்க மார்திருத் தலைமிசைக் கொண்டுறுந் தொடர்பா
லெங்க ளைபகன் றன்னையு மொத்ததவ் விருநீர்.

(இ-ள்.) அப் பெரிய பாலிநதிப்பிரவாகமானது வாசனை வீசுகின்ற மலர்களையுடைய கொன்றையும், வில்வமும், குராவும், உழிஞையும், விஷம் பொங்குகின்ற பாம்பும், ஆத்தியும், பாதிரியும், புன்னையும் ஆகிய இவற்றை உயர்வமைந்த சிறந்த அலைகளின் மேற்கொண்டடையுஞ் சம்பந்தத்தினால், எமது முதல்வராகியசிவபெருமானையும் ஒத்திருந்தது.—எ-று.

சிவபெருமானுக்குச் சிலேடைவகையாகப் பொருள் கொள்ளுங்கால், கொன்றைமலர்முதல் புன்னை யீறாக வுள்ள மலர்களனைத்தையுஞ் சிவபெருமான்

தம்மு திருமுடியிற் றரித்தலால் நதி அவ்வெம்பெருமானை யொத்ததெனக் கொள்க. திருத்தலை என்பதை, திருத்து-அலை என்றும், திரு-தலை என்றும் சிலேடை நோக்கிப் பிரித்துப் பொருளமைத்துக்கொள்க. (கக)

கொலைகொள் வேன்மற வீரர்த மிருக்கையிற் குறுகாச்
சிலையும் வாளொடு தண்டமுந் திகிரிவான் படையு
நிலவு சங்கமுங் கொண்டுசென் றடல்புரி நீரா
னுலகு மேழையு முற்பக லயின்றமா லொக்கும்.

(இ-ள்.) (வெள்ளமானது) கொலைத்தொழிலைக் கொண்ட வேலையேந்திய மறவர்க ளிருக்கையிற் சென்று, வில்லையும், வாளையும், தண்டையும், சிறந்த சக்கரத்தையும், விளங்குகின்ற சங்கையும் அடித்துக்கொண்டு சென்று வலிமைமிகுந்தோடும் நீரினாலும் (சிலேடைவகையால்) வில்லையும், வாளையும், தண்டத்தையும், சிறந்தசக்கரப்படையையும், விளங்குகின்ற சங்கத்தையும் பிடித்துச் சென்று போர்செய்யுந் தன்மையினாலும் (அது) சப்தலோகங்களையும் முன்னாளில்உண்ட திருமாலை ஒத்திருக்கும்.—எ-று.

மறவர்கள் கொடுந் தொழிலின ராகலின், 'கொலைகொள் வேன் மறவீரர்' என்று கூறினார். நிலவு சங்கம் என்றது, வெள்ளொளி வீசுதலும் ஊதுங்கால் பேரொலி பிறங்கலுங் கருதி யென்க. பிரமப்பிரளயத்து உலகமுழுதும் நீரான் மூடியகாலத்துத் திருமால் அவ் வுலகனைத்தையுந் தமது திருவயிற் றடக்கிக் காத்தலான், 'உலகமேழையு முற்பக லயின்றமால்' என்று கூறினார். அடல் என்பதற்கு, வலிமை-போர் எனவும், நீர் என்பதற்கு, ஜலம். குணம் எனவும், சிலேடை நோக்கிப் பொருள் வகுத்துக் கூறப்பட்டது. குறுகா - செய்யா என்னும் வாய்பாட்டு வினையெச்சம். உம்மைகள் எண்ணின்கணின்றன. ஒக்கும் என்னும் பயனிலைக்கேற்ப வெள்ளமென்னுந் தோன்றாவெழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. (உ0)

தேன்கு லாவிய மலர்மிசைப் பொலிதரு செயலா
னான்க வாமுகந் தொறுமறை யிசையோடு நணுகிக்
கான்கு லாவிய கலைமரை மான்றிகழ் கவினால்
வான்கு லாமுல களிப்பவ னிகர்க்குமால் வாரி.

(இ-ள்.) வெள்ளமானது தேன்பொருந்திய (பலவகை) மலர்கள் தன்மேல் விளங்கப்பெற்ற செயலினாலும், நான்கு திக்குகடோறுஞ் சப்திக்கின்ற பேரோசையோடு மடைந்து, காட்டில் வசிக்குங் கலைமானும்-மரையும் - வெளிமானும் விளங்கும் அழகினாலும், (சிலேடை வகையால்) தேன் பொருந்திய தாமரைமலரின்மேல் விளங்குஞ் செயலினாலும், நான்காகிய முகங்களிலும் வேதவோசையோடும் பொருந்தி நறுமணங் கமழும் வெண்டாமரையில் வீற்றிருக்கும் கலைமகள் விளங்கும் அழகினாலும், உயர்வு பொருந்திய உலகத்தைச் சிருஷ்டிக்கும் பிரமனை யொத்திருக்கும்.—எ-று.

சிலேடை நோக்கி, 'மலர்மிசை' என்பதற்கு, மலர்கள்தன்மேல் என்றும், தாமரைமலரின்மேல் என்றும், 'நான்கவாமுகம்' என்பதற்கு, நான்கு திக்கு என்றும், நான்காகிய முகம் என்றும், அறையிசை என்றும், மறையிசை என்றும், கான்குலாவிய என்பதற்கு, காட்டில் வசிக்கும் என்றும், நறுமணங் கமழும் என்றும், கலைமரைமான் என்பதற்கு, கலையும், மரையும், மானும் என்றும், கலைமகளாகிய வெண்டாமரை மான் என்றும் பிரித்துப் பொருள் கூறப்பட்டன. மான் என்பதற்குக் கலைமகள் சார்பாய்ப் பொருள்கொள்ளுங்கால உவமையாகுபெயர். தாமரை என்பது மரை என முதற்கு

றையாயிற்று. முத்தொழிலின் முதற்றொழிலாகிய சிருட்டியைச் செய்பவ ராதலின், 'வான்குலா முலகளிப்பவன்' என்று கூறினர்.

கொங்குலாமலர் என்னுஞ் செய்யுள்முதல் இம் மூன்றுசெய்யுள்களால் உலகினைப் படைத்தளித் தழிக்கும் ஆற்றலுடைய மும்மைத்தேவர்களையும் இந்நதி யொத்திருந்ததென் றுணர்த்தியதாகும். (உக)

மீது போந்திரி சங்கையின் னிடையின்மீ னொடும்
போத லாயுற வீசலாற் சலமிகும் புலனாற்
றீதின் மாக்களைச் செறுத்தலா லளித்திடுஞ் செயலாற்
காதி காதல னிகர்க்குமாற் கன்னிமா நீத்தம்.

(இ-ள்.) அழியாத பெருவெள்ளமானது நீர்மேற் செல்கின்ற சுரிமுகத்தினையுடைய சங்குகளை மச்சங்களோடும் ஆகாயத்திற் செல்லும்படி (அலைக்கரங்களால்) வீசுதலாலும், நீர் நிறைந் திருக்கும் இடத்தினாலும், குற்ற மற்ற மிருகங்களையழித்தலாலும், (அவைகளைக்) காக்குஞ்செயலினாலும், (சிலேடைவகையால்) மேற்சென்ற திரிசங்குமகாராசனை ஆகாயத்திலுள்ள நக்ஷத்திரமண்டலத்தோடும் போகும்படி செலுத்துதலாலும், கோப மிகுந்திருக்கு முணர்வினாலும், குற்றமற்ற மனிதர்களைக் கோபித்தலாலும், (அவர்களைக்) காக்குஞ் செயலினாலும், காதி புத்திரராகிய விசுவாமித்திரமுனிவரை யொத்துள்ளது.—எ-று.

சிலேடை நோக்கி, திரிசங்கு என்பதற்கு, சுரிமுகச் சங்கு என்றும், திரிசங்குராசன் என்றும், மீன் என்பதற்கு, மச்சங்கள் என்றும், நக்ஷத்திரங்கள் என்றும், சலம் என்பதற்கு, நீர் என்றும், கோபம் என்றும், புலம் என்பதற்கு, இடம் என்றும், அறிவு என்றும் பொருள் கூறப்பட்டன. புலன் மொழியீற்றுப்போலி. 'மீதுபோந்திரிசங்கை' என்பதனை, மீதுபோந்து இரி சங்கை எனப் பிரித்து நீர்மேற் சென்றோடுகின்ற சங்குகளை எனப் பொருள்கூறினும் பொருந்தும். (உஉ)

தெழித்த மால்கரி யினங்கட மெயிற்றினாற் சிதையக்
கிழித்த பேரிறால் சொரிந்ததேன் கிரியுள வெல்லாங்
கொழித்து வந்துற வனைதரும் பாலியின் கொள்கை
சுழித்த நீர்க்கங்கை யமுனையைக் கலந்தெனத் தோன்றும்.

(இ-ள்.) பிளிறுகின்ற மதமயக்கத்தையுடைய யானைக்கூட்டங்கள் தமது கோடுகளினால் சிதையும்படி கிழித்த பெரிய தேன்கூடுகள் பொழிந்த தேன்கள் மலையிடங்களிலுள்ளன வனத்தையு மலைத்துவந்து பொருந்தப்பெருகுகின்ற பாலிநதியின் தன்மை (எதுபோலுமெனின்,) சுழித்தலையுடைய நீர்நிறைந்த கங்கைநதியானது யமுனாநதியைக் கலந்த காட்சிபோன்று விளங்கும்.—எ-று.

தேன்பெருக்கு யமுனை யாகவும், பாலிநதிப்பெருக்குக் கங்கையாகவும், அத் தேன்பெருக்கை யலைத்துவருதல் கங்கை யமுனையைக் கலந்ததுபோலவும் உவமித் துரைக்கப்பட்டது. பாலிநதி வெண்ணிறமும் தேன் கருநிறமு மமைந்துள்ளனவாகலின், வெண்ணிறமுடைய கங்கை கருநிறமுடைய யமுனையைக் கலந்தமைபோன்றிருந்ததென் றுவமைகூறினர். எக்காலத்தும் நீங்காப் பெருக்குடன் நீர்சுழித்துவருந்தன்மையதாகலின், 'சுழித்தநீர்க்கங்கை' என்று கூறினர். கலந்தென என்பது தொகுத்தல் விகாரம்.

இச்செய்யுளால் தெய்வத்தா லாகுங் காரியங்களை உலகினர்க் கறிவுறுத்தித் தீயமார்க்கங்களை யொழித்து நல்லோரை மேலுலகிற் செலுத்தும் அருளுடைய முனிவர்கள் தன்மையையும் இந் நதியடைந்ததெனெ னுணர்த்தியதாகும். (௨௫)

சங்க மார்த்திடத் திரையெழ நதிபுரிந் தகைமை
யங்கம் வெம்பினை பனிக்கதி ரல்லைநீ யழலா
யிங்கு வாதினத் தேகுதி யெனக்கர மெடுத்தே
பொங்கும் வாய்விடா விரவியை விளிப்பதுபோலும்.

(இ-ள்,) சங்கங்க ளிரைச்சலிடவும், அலைகள் மேலெழுந்து வீசவும் பாலிநதி பொருந்தியிருக்குந் தன்மை (எதுபோலுமெனின்,) வெவ்விய கிரணங்களையுடைய சூரியனே! நீ உடல்வெதும்பினாய், குளிர்ந்த கிரணமுடையையல்லை; (ஆதலால்) இங்கேவா; (உனது வெம்மைதணிய) முழுகிச் செல்லென்று தனது கைகளைநீட்டிப் பெரியவாயைத் திறந்து அச் சூரியனை யழைப்பதை யொத்திருக்கும். எ-று.

நதியில் சங்குக ளிரைச்சலிடுதல், சூரியனை வாய்விட்டழைப்பதுபோலவும், அலைகளெழுதல் கைநீட்டி யழைப்பதுபோலவு மிருந்தனவென்க. பேரிரைச்சலுடைமையின், 'வாய்விடா விரவியை விளிப்பதுபோலும்' என்று கூறினார். (௨௬)

வேத மேமுதல் யாவையு முணர்கினு மேலா
மாதி வானவன் கறைமிடற் றிறையென வறியாப்
பேதை மாக்கட முணர்வென வலைந்துபேர் கின்ற
சீத நீரெலாந் தெளிதலின் றாயது சிறிதும்.

(இ-ள்.) வேதம்முதலாகிய கலைகளனைத்தையு முணர்ந்தாலும், மேலாகிய முதற்பெருங்கடவுளாயுள்ளவர் காளகண்டராகிய சிவபெருமானேயென் றுணராத மூடர்களுடைய அறிவைப்போல, அலைந்து பெயர்ந்தோடுகின்ற குளிர்ந்த நீர்ப்பெருக்குகளனைத்தும் சிறிதுந் தெளிவில்லாமல் கலங்கலாயிருந்தன. எ-று.

வேதம் வேதாங்கம் ஸ்மிருதிபுராணேதிகாசமுதலியவனைத்து மடங்க, 'வேதமே முதல் யாவையும்' என்றும், "நல்லன நூல்பல கற்பினுங் காண்பரிதே-யெல்லையிலாத சிவம்" என்றபடி அக்கலைகளனைத்தையு மோதியுணரினும், நஞ்சுண்டமருமிடா காட்டிய வெம்பெருமானை யல்லது பிறதெய்வங்களைப் பதியெனக்கருதலுந் தாமே பிரமமெனக் கருதலுமுடைய மாக்களறிவினர்களாகலின், 'மேலாமாதி வானவன் கறைமிடற் றிறையென வறியாப் பேதைமாக்கள்' என்றும், அவர்க ளுணர்வு ஒரு நிலையின்றிச் சதாகலக்கமுற்றிருக்குந் தன்மையவாகலின், 'உணர்வென' என்றுங் கூறினார். உயர்திணையாகிய மக்களினத்திற் சேர்க்காது அஃறிணையாகிய விலங்கினத்திற் சேர்க்கத்தக்கவ ரென்பதுதோன்ற, மக்களென்னாது, 'பேதைமாக்கள்' என்றார். பேதைமாக்களுணர்வைப்போலச் சீதநீர் தெளிவின்றிக் கலங்கியதென்க. ஆயது என்பது, வழுவமைதி. (௨௭)

செம்பொன் மால்வரை யல்லன கிரிகளுந் திசையு
மும்பர் வானமுந் தரணியுந் துளங்கவந் துறலா
லெம்பி ரான்முனம் வருகென நதிகளோ டெழுந்த
கம்பை மாநதி போன்றது கரைபொரு பாலி.

(இ-ள்.) கரையைமோதுகின்ற பாலிநதியானது, பெரிய மேருமலையொழிந்தனவாகிய மற்றையமலைகளும் திக்குகளும் தேவர்கள் வசிக்கும் விண்ணுலகமும் மண்ணுலகமும் நடுங்கும்படி பெருகிவருதலால், எமது சிவபெருமான் முற்காலத்து

வருகவென் றழைப்ப, எல்லா நதிகளுடன்வந்து பெருகிய கம்பாநதியை யொத்துள் ளது.—எ-று.

செம்பொன்மால்வரை உலகிற் கச்சாணிபோன்றுள தாகலின், அது துளங் கின் அனைத்துங் கெடுமாகலின் அது நீங்கவென்பார். 'செம்பொன்மால்வரை யல்ல னகிரிகளும்' என்று கூறினர். 'எம்பிரான் முனம்வருகென நதிகளொடெழுந்த கம் பைமாநதி' என்பதன்வரலாறு:—ஸ்ரீ மகாகயிலாசத்தில் சிவபெருமானிடத்துச் சிவ பூசனையின் மேன்மையைக் கேட்டுணர்ந்த உமாதேவியார் அவ்வெம்பெருமானைப் பூசி க்கக்கருதிக் காஞ்சிப்பதியையடைந்து மாவிருக்ஷத்தடியில் சிவலிங்கப்பெருமானைப் பிரதிஷ்டைசெய்து அன்புடன் பூசித்துவருகையில், பெருமான் அவ்வம்மையாருக் குத் திருவருள்செய்யவேண்டி ஒரு திருவிளையாட்டாகச் சப்தசமுத்திரங்களு மொன் ருகப் பெருகிவருவதுபோலக் கம்பாநதியைப் பெருகிவரச் செய்தருளினர். அதனையு ணர்ந்த உமாதேவியார், அஞ்சி மனம்பதைத்து அவ்வெள்ளத்தைத் தடுக்க, அது தடை படாமையால், சிவலிங்கப் பெருமானைத் தமது முலைச்சுவடும் வளைச்சுவடும் பொருந் தத் தழுவிக்கொள்ளவும், பெருமான் அம்முலைச்சுவட்டையும் வளைச்சுவட்டையும் வி ரும்பியேற்றருளினர். கம்பாநதியும் வணங்கி யொதுங்கியோடியது என்பதாம். இத னை:-பெரியபுராணம். "நாதரும்பெருவிருப்பொடு நயந்து நங்கையர்ச்சனைசெய்யு மப் பொழுதிற் - காதன் மிக்கவோர் திருவிளையாட்டிற் கனங்குழைக்கருள்புரிந்திட வே ண்டி-யோதமார்கட லேழுமொன்ருகி யோங்கி வானமு முட்படப் பரந்து - மீது செ ல்வதுபோல்வரக் கம்பை வெள்ளமாங் திருவுள்ளமுஞ் செய்தார். அண்ணலாரருள்வெ ள்ளத்தை நோக்கி யங்கயற்கண்ணி தம்பெருமான்மேல்-விண்ணெலாங் கொளவரும் பெருவெள்ள மீது வந்துறுமென வெருக்கொண்டே-யுண்ணிலாவிய பதைப்புறுகாத லுடன் றிருக்கையாற் றடுக்கநில்லாமை - தண்ணிலாமலர் வேணியினுரைத் தழுவிக் கொண்டன டன்னையே யொப்பாள். மலைக்குலக்கொடி பரிவுறுபயத்தான் மாவின் மேவிய தேவர்நாயகரை - முலைக்குவட்டொடு வளைக்கையா னெருக்கி முருகுகாதலா லிறுகிடத் தழுவச் - சிலைத்தனித் திருநுதறிரு முலைக்குஞ் செந்தளிர்க் கரங்களுக்கு மெத்தெனவே-கொலைக்களிற் றுரிபுனைந்த தம்மேனி குழைந்து காட்டினர் விழைந்த கொள்கையினர்" எனவும், காஞ்சிப்புராணம்:—"விழுமியவண்டத்துள்ளும் புறத்தி னும் விரவுந்தீர்த்த - முழுவது மொருங்குநண்ண முன்னினர் முன்னலோடு - மொ ழுகுநீர்க் கம்பையாற்றி னுடன்விராய்க் கடைக்கால்வெள்ள - மெழுவது கடுப்பவெ ல்லாப் புனலும்வந் திறுத்தவன்றே." எனவும், "ஒருகோடி யெழுந்துசெம்பொ னு யர்வரைக் குவடுதன்னை - யிருகொழுந் திருபாற்போக்கித் தழீஇயென வெழுந்துவல் லே - முருகலர் வேதியும்பர்த் தன்வல முழந்தாளூன்றிக்- கருமணிப் பாவையன்னாள் கணவனைத் தழுவிக்கொண்டாள். மணிமுலைக் குவட்டினேடு வளைக்கையா னெருக் கிப்புல்லித் - தணிவருங் காதல்விம்மக் காதலி தழுவலோடுந் - திணியிரு ளறுக்குஞ் சோதித் திருவுருக் குழைந்துகாட்டி - யணிவளைத் தழும்பினேடு முலைச்சுவ டணிந் தாரையர்." எனவும் வருவனவற்று னுணர்க.வருகவென என்பது, வருகென' எனத் தொகுத்தலாயிற்று. (உசு)

உதிரு கின்றசிற் றுலண்டிகொண் டொலிபுனற் சடைமேன்
மதுரை நாயகன் மண்சுமந் திட்டமா நதியின்
முதிரு முத்தமிழ் விரகன தேடென மொய்ம்பீ
னெதிர்பு குந்திடப் போவது பாலியா மியாறு.

(இ-ள்.) ஸ்ரீ சொக்கலிங்கப்பெருமான் உதிர்கின்ற பிட்டைக் கூலியாகப் பெற்று, சப்திக்கின்ற கங்கைநதியை யணிந்த சடைமுடியின்மேல் மண்சுமக்கப் பெ

ற்ற பெரிய வைகைநதியில் முதிர்ந்த முத்தமிழ்விரகராகிய திருஞானசம்பந்தப்பிள்ளையார் இட்டருளிய (திருப்பதிகத்) திருவேட்டைப் போல, நெருங்கிய மீன்கூட்டங்கள் (வெள்ளத்தின்) எதிர்செல்லும்படி போகப் பெறுவது பாலிநதி.—எ-று.

'அரிமருர்த்தன பாண்டியன் தன்பொருளைச் செலவிட்ட வாதவூரடிகளை வைகைநதியிலிட்டுத் துன்புறுத்த, அதனைப்பொறாத சிவபெருமான் வைகையாறு பெருக்கெடுப்பச் செய்தனர். அதனை மன்னவனுணர்ந்து வாதவூரடிகளை வருவித்து இந்நதிப் பெருக்கு நம்மூரிற் பெருகாதிருப்பக் கரை கோலுகவென, அவ்வாறே அவரும் அவ்வூரவர்க்குக் கோலிட்டளந்து கொடுப்ப. அப்பங்கிற்பட்டவளாகிய பிட்டுவிற்றுண்பாள் இதற்கு யாது செய்வதென்று வருந்தச் சிவபெருமான் அவள்பொருட்டு, மண் சுமந்து வைகையையடைப்பக் கூலியாளாய்வந்து உதிர்ந்தபிட்டைக் கூலியாகப்பெற்றன ரென்பதும், திருஞானசம்பந்தப்பிள்ளையார் மந்திரியாரும் மங்கையர்க்கரசியாருங்கொண்ட அன்புகாரணமாக மதுராபுரிக் கெழுந்தருளுங் கால், அங்குவசித்திருந்த சமணர்கள் பொறாது வாதுக் கழைப்பப் பிள்ளையார் முன்னர் அனல்வாதத்தில், "போகமார்த்த பூண்முலையாள்" என்று முதலையுடைய திருப்பதிகமெழுதிய திருவேட்டைத் தீயிலிட்டு வேகாதிருப்பச் செய்தும், பின்னர் புனல்வாதத்தில், "வாழ்க வந்தணர்வானவரானினம்-வீழ்கதண்புனல்வேந்தனுமோங்குக-ஆழ்க தீயதெல் லாமரனாமமே - சூழ்கவையக முந்துயர்தீர்கவே" என்னு முதலையுடைய திருப்பதிகம் அருளிச்செய்து எழுதிய திருவேட்டை வைகைநதியிலிட்டு எதிரேறச் செய்து அச்சமணர்களைக் கழுவேறச்செய்தருளின ரென்பதும் புராணவரலாறு. ஓதியுணர்ந்து தேர்ந்த முத்தமிழறிஞர்போலாது, மூவாண்டின்மெய்ஞ்ஞானப் பாலூட்டியவளவே சகலகலைஞானங்களையு மோதா துணரப்பெற்றவ ராகலின், 'முதிரு முத்தமிழ் விரகன்' என்று கூறினார். சலசரங்களாகிய வாளை முதலிய மீன்வர்க்கங்கள் பாலிநதிப்பெருக்கில் எதிரேறிச் செல்லுதல்,திருஞானசம்பந்தப்பிள்ளையார் வைகைநதியிலிட்ட திருப்பதிகத்திருவேடு எதிரேறிச்சென்றதன்மையை யொத்திருந்தனவென உவமைமுகத்தாற் கூறினார். (உஎ)

வேறு.

மாசறத் துளங்கு துப்பு மரகதத் திடைவந் தென்னப்
பாசடை நடுவட் பூத்த பங்கயத் தடாகம் யாவுந்
தேசுடைத் தரங்க நீத்தச் செலவினாற் சிதைந்த மன்னோ
பேசிடிற் சிறுமை யெல்லாம் பெருமையா லடங்கு மன்றே.

(இ-ள்.) குற்றமற்றுவிளங்குகின்ற பவளமானது மரகதரத்தினத்திடையில் வந்தாற்போல, பசிய இலைகளுக்கு நடுவில் பூத்த தாமரைமலர்களை யுடைய தடாகங்களனைத்தும் அழகமைந்த அலைகளையுடைய வெள்ளப்பெருக்கினால் அழிந்தன ; சொல்லுமிடத்தில் சிறுமை யனைத்தும் பெருமையினால் அடங்கிவிடும்.—எ-று.

பச்சிலையின் நடுவில் பூத்திருக்கின்ற தாமரைமலர்கள்,மரகதரத்தினத்திடையில் பவளம்வந் தமைந்ததுபோலுங் காட்சியி னமைந்து தோன்றலின்,'மாசறத்துளங்குதுப்பு மரகதத்திடை வந்தென்னப் பாசடைநடுவட் பூத்தபங்கம்' என்றுகூறினர். பவளம் செந்நிறமும் மரகதம் பச்சைநிறமு மாகலின் பவளத்தைத் தாமரைக்கும் மரகதத்தைப் பச்சிலைக்குமாக வுவமித்துக்கூறினர். பெருமையாற் சிறுமை யடங்குதல் போலச் சிறிதாகிய தாமரைத் தடாகங்க ளனைத்தும் பெரிய நீர்ப்பெருக்கினா லடங்கினவென்க. (உஅ)

வளவயன் மருத வைப்பின் வாவியங் கமலம் யாவுங்
கிளையொடும் பறித்து வாரிக் கேழுறப் பொலிந்த தோற்றம்
விளைதரு பகையிற் றேலா வெவ்வழற் சிறுமை நோக்கிக்
களைதலைப் புரிந்து பற்றிப் பெயர்ந்ததெனக் காட்டிற் றன்றே.

(இ-ள்.) (நீத்தமானது), வளவிய வயல்களையுடைய மருதநிலத்தூரிலுள்ள தடாகங்களில் மலர்ந்த அழகிய தாமரைக ளனைத்தையும் கிளைகளுடன் பிடுங்கி வாரிக்கொண்டு ஒளிவிளங்கும்படி பொலிவுபெற்றிருக்குங் காட்சியானது (எதுபோலுமெனின்,) மேன்மேலு முண்டாகின்ற பகைமையினின்று நீங்காத கொடிய அக்கினியின் சிறுமையைப் பார்த்து அவற்றைக் களைந்து பற்றிக்கொண்டு சென்றாற்போலக் காட்டியது.—எ-று.

நீர்வளத்தாற் செழித்தோங்குந்தன்மையதென்பார், 'வளவயல்' என்றும், தடாகத்திற் கழகுசெய்வன தாமரையே யென்பார், 'வாவியங் கமலம்' என்றும், அக்கமலத்தை இலை நாளத்தோடு பறித்துச் சென்றதென்பார், கிளையொடும் பறித்துவாரி' என்றும், நீங்காப் பெரும்பகை யென்பார், 'விளைதரு பகையிற் றேலா' என்றும், எப்பொருள்களையு மெரித்தழிக்குந் தீ யென்பார், 'வெவ்வழல்' என்றுங் கூறினார். நீத்தம் பெயர்ந்ததெனக் காட்டிற்று எனக் கூட்டுக. கமலம் செந்நிறமுடையதாகலின் அதனையும் நெருப்பின்றன்மையதென் றலைத்துச் சென்றதென்க. நீத்தம் தோன்றா வெழுவாய். (உகூ)

திரைகட னீத்தங் கொண்மூ வினத்தொடு சேண்போய் நோக்கித்
தரையிடை யிழிந்து சென்று தன்பொருள் கொடுபோந் தென்னப்
பரதவ ரளவர் வாரிப் படுத்தமீ னுப்பின் குப்பை
யிருபுடை யலைத்து வெளவி யேகிய தெறிநீர்ப் பாலி.

(இ-ள்.) திரைகின்ற கடல்வெள்ளமானது மேகக்கூட்டங்களோடும் ஆகாயத்திற் சென்று நோக்கிப் பூமியி லிறங்கிச் சென்று தனது பொருளைக் கொண்டுபோனாற்போல, அலை யெறிகின்ற நீரையுடைய பாலிநதியானது பரதவர்களும் அளவர்களும் சமுத்திரத்தில் பிடித்த மீன்குவியல்களையும் உப்புக்குவியல்களையும் இருபக்கங்களிலும் அலைத்து வாரிக்கொண்டு சென்றது.—எ-று.

பரதவர் அளவர் என்பவர்கள் நெய்தநிலமாக்கள். பரதவர் படுத்த மீன் குப்பைகளையும், அளவர்கள் படுத்த உப்புக் குப்பைகளையும் எறிநீர்ப் பாலி வெளவி யேகியதென்க. அளவர்—உப்பமைப்போர். வாரிப்படுத்தமீன் என்பதற்கு, வாரிக் குவித்த மீன் எனப் பொருள்கூறினுமாம். கடனீரோ மழைநீராகலின், 'திரைகட னீத்தங் கொண்மூவினத்தொடுஞ் சேண்போய்' என்றுகூறினர். திரைகடல்-வினைத்தொகை, அலைகின்றகடல். போந்தென்ன - தொகுத்தல்விகாரம். (௩௦)

பாரிடை யினைய பண்பிற் படர்ந்திடு பாலி யந்தத்
தாருயி ரனைத்துந் தத்த மருவினைக் கமைந்த நீராற்
சேருறு கதிக ளென்ன மரபினிற் றிறமே யென்னத்
தாருவின் கிளைக ளென்னத் தனித்தனி பிரிந்த தன்றே.

(இ-ள்.) நிலவுலகத்தில் இவ்வகையாகிய தன்மையோடும் படர்ந்து செல்கின்ற பாலிநதியானது, சர்வசங்கார காலத்தில் அரிய உயிர்க ளனைத்தும் தத்தமது அரிய வினைகளுக் கேற்ப வமைத்த முறைமைப்படி அவைகளடையும் (சுவர்க்கநரகாதி) கதிகளைப்போலவும், அவ்வக்குலமரபின் றிறத்தைப்போலவும், மரத்தினின்றும் பிரிந்த கிளைகளைப்போலவும் வெவ்வேறாகப் பிரிந்து சென்றது.—எ-று.

சர்வசங்காரகாலத்தில் எல்லாவுயிர்களு மொடுங்குங்கால், தத்தம் வினைக்கமைந்த கதிகளையடைதலுண்மையால், ‘அந்தத் தாருயி ரனைத்துந் தத்த மருவினைக் கமைத்த நீரால் சேருறு கதிக ளென்ன’ என்று கூறினார். பாலி தனித்தனி பிரிந்தது எனக் கூட்டுக. (௯௧)

கால்கிளர் கின்ற நீத்தங் கவிரிதழ்க் கலசக் கொங்கைச்
சேல்கிளர் கரியவுண்கட் டிருநுதன் மிழற்றுந் தீஞ்சொன்
மேல்கிளர் பரவை யல்குன் மெல்லிய றெண்மென் கூந்தன்
மால்கிளர் கணிகை மாதர் மனமெனப் போயிற் றுமால்.

(இ-ள்.) பல கால்களாக விளங்கியோடுகின்ற பாலிநதியின்வெள்ளமானது முருக்கம்பூப்போன்ற இதழையும், கலசம்போன்ற கொங்கையையும், சேற்கெண்டைபோல் விளங்கும் கரிய மையுண்ணப்பெற்ற கண்களையும், அழகிய நெற்றியையும், (யாழோசைபோன்று) இசைக்கும் மதுரமாகிய சொற்களையும், உயர்ந்து விளங்குகின்ற கடல்போன்று விசாலித்த நிதம்பத்தையும், மெல்லிய சாயையினையும், கருமணல்போலும் மிருதுவாகிய கூந்தலையு முடைய மயக்க மிக்க விலைமாதர்களது மனம்போலப் பலவாறு பிரிந்து சென்றது.—எ-று.

விலைமாதர்களது மனம் ஒருவழி நில்லாமல் பலபுருடர்கள்மேலுஞ் சென்றலைதல்போல, பாலிநீத்தமும் பல கால்களாகப் பிரிந்தோடுந் தன்மையுண்மையால் அதனைக் கணிகைமாதரது மனத்தோடுவமித்துக் கூறினார். கால் கிளர்கின்ற நீத்தம் போயிற்று எனக் கூட்டுக. (௯௨)

பாம்பளை புகுவ தேபோற் பாய்தரு பரவைத் தெண்ணீர்
தூம்பிடை யணுகு மாற்றாற் சொன்முறை தடைசெய் வோரிற்
றும்புடை பெயரா வண்ணந் தலைத்தலை தள்ளு மள்ள
ரேம்பலோ டார்க்கு மோதை யுலகெலா மிறுக்கு மாதோ.

(இ-ள்.) பாய்ந்து செல்கின்ற பரந்த தெள்ளிய நீர்வெள்ளமானது பாம்புகள் புற்றில் நுழைவதுபோலக் கால்வாய்களில் அடைந்து செல்லும் வகையினால், சொல்லப்பட்ட முறைமைப்படி அந்நீரைத் தடைசெய்பவர்களில் இடம்விட்டுப் பெயராத விதமாக அவ்வவ்விடங்களில் நீரைத் தடுத்தொதுக்குகின்ற மள்ளர்கள் எம்பலித்தலோடு ஆரவாரிக்கும் பேரோசையானது உலகமுழுதுஞ் சென்றடையும்.—எ-று.

பாலி நீர்ப்பெருக்கு வாய்க்காலிடங்களில் வளைந்தோடுதலின், ‘பாம்பளை புகுவதேபோல்’ என்றும், அதனைத் தடைசெய்து வயல்களுக்குப்புகட்டும் மள்ளர்கள் பெருங்களிப்போடு ஆரவாரித்தலின், ‘சொன்முறை தடைசெய்வோரிற்-றும்புடை பெயராவண்ணந் தலைத்தலை தள்ளுமள்ள-ரேம்பலோடார்க்கு மோதை’ என்றும், அவ்வோதை அந்நாடெங்கும் நிறைந்து பரவுதலின், ‘உலகெலா மிறுக்கும்’ என்றுங் கூறினார். எம்பல்=அங்கலாய்த்தல். மாது ஓ-அசைநிலைகள். (௯௩)

பணையொலி யிரலை யோதை பம்பையின் முழக்க மங்கட்
கிணையொலி மள்ள ரார்ப்புக் கேழ்கிளர் தரங்க நன்னீ
ரணையொலி யவற்றை வானத் தார்ப்பொலிக் கனிதானு
மிணையொலி காட்டிற் றேவென் றெண்ணுவார் விண்ணு ளோரும்.

(இ-ள்.) முரசினோசையும், ஊதுகொம்பினோசையும், பம்பை வாத்தியவோசையும், அழகிய கண்களோடு கூடிய மருதநிலப் பறையினோசையும், மள்ளர்களது ஆரவாரமும், ஒளிவிளங்கும் அலைகளையுடைய நல்ல நீரைத் தடைசெய்தணைக்கின்ற

வோசையுமாகிய அவ்வோசைகளைத்தேவர்களுங் கேட்டு நமது விண்ணுலகத்தில் முழங்குமொலிக்கு இந்நிலவுலகமும்சமமாகிய ஒலியைக் காட்டினதோவென்று நினைப்பார்கள்.—எ-று.

விண்ணுலகத்திற் சதா மங்கலகரமாக முழங்குகின்ற தேவதுந்துபியின் ஒலிபோல, இந்நாட்டிலும் பணையொலி முதலிய பல்வகை யொலிகளும் இடைவிடாது பெருகி யோங்குதலின் "வானத்தார்ப் பொலிக் கவனிநாறு - மின்னையொலி காட்டிற்றேவென் றெண்ணுவார் விண்ணு ளோரும்' என்று கூறினர். (ருச)

இயல்புகுங் களிநல் யானை யினந்தெரிந் தெய்து மாபோற்
கயல்புகுந் துலவுஞ் சின்னீர்த் தடம்புகுங் காமர் காவி
னயல்புகுங் கோட்ட கத்தி னகம்புகு மார்வத் தோடி
வயல்புகுங் களிப்பு நீங்கா மாக்களின் மயங்கு மாதோ.

(இ-ள்.) இயல்பாகச் செல்லுகின்ற மதச்செருக்கினையுடைய யானையானது தன்னினத்தைத் தெரிந்து அடையுமாறுபோல, (வெள்ளநீரானது) கயல்மீன்கள் புகுந்து உலாவுகின்ற சில நீரையுடைய தடாகத்திற் புகுந்து செல்லும், அழகிய சோலைகளினயலில் புகுந்துசெல்லும், பெரிய குளங்களில் புகுந்து செல்லும், இளைச்சலிட்டோடிவயல்களிற் புகுந்து செல்லும், இவ்வாறு களிப்பு நீங்காத மாந்தரைப்போல மயங்கிச்சுழலும்.—எ-று.

மதயானை தன்னினமுள்ள விடங்களை யறிந்து விரைந்துசெல்லுதல்போல, நீர்ப்பெருக்குந் தடாகமுதலிய விடங்களில் விரைந்து செல்லுதலால், இயல்புகுங் களி நல்யானையையும், மதுக்களிப்புக் காமக்களிப்புடையோர் ஒரு நெறிப்படாது பல விடத்தும் மயங்கி நிற்றல்போல அவ்வவ்விடங்கடோறுந் தங்கிநிற்றலால், களிப்பு நீங்காமாக்களையும் உவமையாகக் கூறினர். (ருரு)

எங்கணு நிறைந்து வேறோ ரிடம்பிறி தின்மை யாகச்
சங்கமா யீண்டு மள்ளர் தாங்குபல் லியமு மார்ப்பப்
பொங்கிய நகரந் தோறும் புறமெலாம் வளைந்த நீத்த
மங்கண்மா ஞாலஞ் சூழு மளக்கரை நிகர்த்த தாமே.

(இ-ள்.) வெற்றிடஞ் சிறிதுமில்லாமல்எவ்வெவ்விடங்களிலு நிறைந்து கூட்டமாக நெருங்கிய மள்ளர்கள் ஏந்தியபலவாத்தியங்களும் ஆரவாரிக்கச்சிறந்த நகரங்கள்தோறும் புறவிடங்கள்முழுதும் வளைந்த பாலிநதிப் பிரவாகமானது, அழகிய இடமகன்ற பெரிய நிலவுலகத்தைச்சூழ்ந்த சமுத்திரத்தை யொத்துள்ளது.—எ-று.

பாலிநீத்தம் பிரவகித்து மேடுபள்ளங்களைச் சமப்படுத்தி வெற்றிடமின்றி நிறைந்து நிற்றலின், 'எங்கணு நிறைந்து வேறோரிடம் பிறிதின்மையாக' என்றும், அவ்வெள்ளப் பெருக்காற் களிகூர்ந்து மள்ளர்க ளொருங்கு கூடிப் பல்லிய முழக்கலின், 'சங்கமா யீண்டுமள்ளர் தாங்குபல்லியமு மார்ப்ப' என்றும், நகரங்களின்மேற் செல்லாது அணைசெய்து தடுத்தலின், 'பொங்கிய நகரந்தோறும் புறமெலாம் வளைந்த நீத்தம்' என்றும், நகரங்களை நீத்தஞ் சூழ்ந்திருத்தல் உலகைச்சூழ்ந்த கடல்போன்று விளங்கலின், 'அங்கண்மா ஞாலஞ்சூழு மளக்கரை நிகர்த்ததாமே' என்றுங் கூறினர்.

மாறடு மள்ள ருய்ப்ப மருதத்தி னிறைந் து விஞ்சி
யேறிய நார மீட்டு மிருங்கட லேனக்கிச் சென்ற
வேறுகொள் புலனை வென்றோர் மேலைநன் னெறிபுய்த் தாலுந்
தேறிய வுணர்வி லாதோர் செல்வழிச் செல்வ ரன்றே.

(இ-ள்.) வெருகக்கொண்ட ஐம்புலன்களை வென்ற பெரியோர்கள் மேன்மையாகிய நன்னெறியிற் செலுத்தினாலும் தேர்ந்த நல்லுணர்வில்லாத கீழ்மக்கள் (அந்நன்னெறியிற் செல்லாமல்) தாங்கள் செல்லுந் தீநெறியே செல்வார்கள், (அதுபோல) பகைமையை யொழித்த மள்ளர்கள் (தடுத்துச்) செலுத்த மருதநிலத்தில் நிறைந்து மிகுதியாகப் பொங்கிய நீர்ப்பெருக்குகள் பெரியகடலைநோக்கிச்சென்றன.—எ-று.

புலனை வெல்லுதலாவது—ஐம்புலன்களின் வழியே மனதைச் செலுத்தாமல் அடக்கித் தன் வசப்படுத்துதல். புலனை வென்றோர் நல்லறிவுணர்த்தி நன்னெறியிற் செலுத்தினும் கீழ்மக்கள் அவ்வாறு செல்லாமல் தமது தீயவழியே செல்லுமாறு போல, மள்ளர்கள் நீரைத் தடுத்தடைப்பினும் தடைபடாமற் கடந்து சென்றனவென்க. நல்லுணர்ச்சியில்லாக் கீழ்மக்கட்கு நல்லுணர்வைப் பன்னாளுணர்த்தினுந்தந் தீய நெறியே செல்வ ரென்பதனை ;— " பாலாற் கழீஇப் பலநா ளுணக்கினும் - வாலிதாம் பக்க மிருந்தைக் கிருந்தன்று-கோலாற் கடாஅய்க் குறினும் புகலொல்லா - நோலா வுடம்பிற் கறிவு."—என வரும் நாலடியாரா னுணர்க. செல்வுழி என்னுமிடத்து வகரம் உடம்படு மெய்யல்லாத மெய்பெற்றது. (ருஎ)

வாளெனச் சிலையெ தென்ன வால்வளை யென்னத் தெய்வக்
கோளெனப் பணிக ளென்னக் குலமணி குயிற்றிச் செய்த
மீளிவெஞ் சரங்க ளென்ன வேலென மிடைந்து சுற்று
நாளெனப் பிறழு மீன்க ளடைவின நார மெங்கும்.

(இ-ள்.) வாளைப்போலவும், வில்லைப்போலவும், வெள்ளிய சங்கைப்போலவும், தெய்வத்தன்மைபொருந்திய நவகோள்களைப்போலவும், பாம்புகளைப்போலவும், சிறந்த இரத்தினங்க ளிழைத்துச்செய்த வீரர்கள்கையிலுள்ள வெவ்விய அம்புகளைப்போலவும், வேலைப்போலவும், நெருங்கிச் சுற்றுகின்ற நக்ஷத்திரங்களைப்போலவும் விளங்குகின்ற மீன்கள் நீர்ப்பெருக்கெங்கும் மேய்ந்தன.—எ-று. (ருஅ)

மாண்டகு பொய்கை தோறும் வயறொறு மற்று மெல்லாம்
வேண்டிய வளவைத் தன்றி மிகுபுனல் விலக்கு கின்ற
வாண்டகை மள்ளர் தம்பா லமைந்திடுங் காலை யெஞ்சி
யீண்டிய வெறுக்கை வீசு மிடைப்படு வள்ள லொத்தார்.

(இ-ள்.) மாட்சிமை மிக்க தடாகங்களிலும், வயல்களிலும், மற்றெவ்விடங்களிலும் தங்களுக்கு வேண்டிய அளவினதல்லாமல் மிகுதியாக வருகின்ற நீரைத் (தடுத்து) விலக்குகின்ற ஆண்தன்மையையுடைய மள்ளர்கள் (செல்வம்) தம்மிடத் தடைந்தபொழுது தமக்கு மிஞ்சிப் பொருந்திய செல்வத்தை இரவலர்க்குத் தானஞ்செய்கின்ற இடையெழு வள்ளலை யொத்தார்கள்.—எ-று.

நீர் நிலைபேறுடையதாய் அன்னபானாதிகளுக் காதாரமாயுள்ள தாகலின், 'மாண்டகு பொய்கை' என்று கூறினர். இடைப்படு வள்ளல்கள் தம்மளவைக்கு வேண்டியவற்றை வைத்துக்கொண்டு அதிகமாயுள்ளவற்றைக் கொடுத்தல்போல மள்ளர்கள் தமக்கு வேண்டிய நீரைத்தடுத்து அணைசெய்து மற்ற நீரைப் புறத்திற் போகவிடுதலால், 'எஞ்சியீண்டிய வெறுக்கைவீசு மிடைப்படு வள்ளலொத்தார்' என்று கூறினர்.

ஆற்றுப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - அக.

---

முருகன் றுணை.

# திருநாட்டுப்படலம்.

அவ்வியல் பெற்றிடு மாற்றன் மள்ளர்கள்
மைவரு கடலுடை மங்கை தன்னிடை
மெய்வளங் கொள்வதை வேண்டி யந்நிலச்
செவ்வி கண்டுடியே யினைய செய்குவார்.

(இ-ள்.) அத்தன்மையாகிய இயல்பினைப்பெற்ற வலிமைமிக்க உழவர்கள் கருநிறமமைந்த கடலை ஆடையாகவுடைய பூமிதேவியினிடத்தில் மெய்ம்மையாகிய வளப்பமிக்க பொருள்களைப் பெறவேண்டி அவ்வந்நிலங்களின் பக்குவங்களையறிந்து இக்காரியங்களைச் செய்வார்கள்.—எ-று.

நீர்ப்பெருக்கின் மிகுதியால் களிகூர்ந்து அதற்கு வேண்டிய பிரயத்தனங்களைச் செய்வதில் சிறிதுஞ் சோர்வில்லாதவர்க ளென்பார், 'அவ்வியல் பெற்றிடு மாற்றன் மள்ளர்கள்' என்றும், உவர்நீர்க்கடல் கருநிறமமைந்துள்ள தென்பார், 'மைவரு கடல்' என்றும், அக்கடல் நிலத்தைச்சூழ்ந்திருத்தல், நிலமகளிடையிற்றரித்த ஆடைபோன்றமைந்துள்ள தென்பார், 'கடலுடைமங்கை' என்றும், அந்நிலத்திடை விளையுஞ் செல்வங்கள் என்று மழியா நன்னலத்தவாகலி னவ்வளத்தையே பெற விருப்புறுவரென்பார் 'மெய்வளங்கொள்வதை வேண்டி' என்றும், பக்குவமறிந்து பயிர்செய்தாலன்றி அவ்வளங்கள் கைகூடாவாகலான் பதமறிந்தே பண்படுத்துவரென்பார், 'செவ்விகண்டுடியேயினைய செய்குவார்' என்றுங் கூறினர். (க)

சேட்டிளந் திமிலுடைச் செங்க ணேற்றொடுங்
கோட்டுடைப் பகட்டினம் விரவி கோன்முறை
காட்டினர் நிரைபட வுழுப காசினி
பூட்டுறு பொலன்மணி யாரம் போலவே.

(இ-ள்.) (மள்ளர்கள்) உயர்ந்த இளமையாகிய முசுப்பினையுடைய சிவந்த கண்களமைந்த எருதுகளோடும் கொம்புகளையுடைய எருமைக்கடா வினினங்களையுங் கலந்து பூமிதேவியானவள் தரித்த அழகிய இரத்தினமாலைபோல, தாற்றுக்கோல்களை முறையாகக் காட்டினவர்களாய் வரிசையாக உழுவார்கள்.—எ-று.

மள்ளர்கள் எருதுகளையும் எருமைகளையும் பூட்டி வரிசைப்பட வயல்களில் எருழுதல்,பூமிதேவிகழுத்திற்பூட்டிய இரத்தினமாலைபோன்றுவிளங்குந்தன்மையால், 'காசினி பூட்டுறு பொலன்மணியாரம்போல வுழுப' என்று கூறினர். சேட்டிளந்திமில் - மிக்க இளந்திமில் எனினுமாம். காட்டினர் - முற்றெச்சம். மள்ளர் என்னு மெழுவாய் வருவித் துரைக்கப்பட்டது. மள்ளர்கள் பொலன்மணியாரம் போல நிரைபட வுழுப எனக்கூட்டுக.

செங்கணேறு, பகட்டினம் எனவும், பொலன் மணி எனவும், கூறியதனுல் பொன்னார மெனவும், மணியார மெனவும் கொள்ளலு மொன்று. கோன்முறை என்

றதனால் அரசன் செங்கோலைச்செலுத்து முறைமையைக் காட்டினனெனக் கொள்ளலுமொன்று. (௨)

காற்றினு மனத்தினுங் கடுமை சான்றன
கோற்றொழில் வினைஞர்தங் குறிப்பிற் செல்லுவ
வேற்றினஞ் சேறலு மிரிந்த சேலினம்
பாற்றின மருளவிண் படர்ந்து பாயுமால்.

(இ-ள்.) வாயுவேகத்தினும் மனவேகத்தினும் மிக்க கடுமை நிரம்பப் பெற்றுள்ளனவும், தாற்றுக்கோலால் ஓட்டுந் தொழிலையுடைய உழவர்களது குறிப்பின் வழியே செல்வனவுமாகிய பகட்டினங்கள் (வயலில்உழுது) செல்லவும், அங்கு நின்று நீங்கிய சேற்கெண்டையினினங்கள் பருந்தின் கூட்டங்கள் மயங்கும்படி ஆகாயத்தில் சென்று பாயும்.—எ-று.

பகடு - எருதும் எருமைக்கடாவுமாம். அவ்விடங்களிலுள்ள மீனினங்களானவை ஏற்றினங்கள் வயல்களிடத்து வரவும், தமக்கினமல்லாத வேற்றினங்கள் வந்தனவென்றெண்ணி விண்ணிலுள்ள மீன் நக்ஷத்திரங்களோடு படர்ந்தனவென்று கொள்ளலுமொன்று. (௩)

சால்வளை தரவுழும் வயலிற் றங்கிய
வால்வளை யினம்வெரீஇ யலவன் மாப்பெடைச்
சூல்வளை புகுவதங் கறிஞர் சூழ்விலைக்
கோல்வளை மகளிர்பாற் கூட்ட மொத்ததே.

(இ-ள்.) படைச்சால்கள் வளையும்படி யுழுகின்ற வயல்களிற் பொருந்திய வெள்ளிய சங்கினங்கள் வெருவுற்றுச் சூல்கொண்ட பெரிய பெட்டை நண்டுகளின் வளைகளிற் புகுதல் (எதுபோலு மெனின்) மெய்யறிவினையுடைய பெரியோர்கள் அழகிய வளையையணிந்த விலைமாதர்களிடத்துச் சேருந்தன்மையை யொத்திருந்தது.

வெரீஇ - சொல்லிசை யளபெடை. அங்கு - அசைநிலை. கோலம் என்பது கோல் எனக் கடைக்குறையாயிற்று. கூட்டம் - தொழிற்பெயர். சங்குகள் நண்டுவளையிற் புகுதல் அறிஞர்கள் வேசையர் வீட்டிற் புகுதல் போன்றிருந்த தென்க.

இவ்விரண்டு செய்யுளாலும் தாங்கள் தாங்கள் வாழுமிடத்திற்கு இடையூறு நேர்ந்துழி இனவொற்றுமையாவது இடவொற்றுமையாவது அடுத்ததொன்றைஅமைத்துக்கொள்வதும் மரபென்று குறித்ததாமென்று கொள்ளலு மொன்று. (௪)

உலத்தொடு முறழ்புயத் துழவர் பொன்விளை
புலத்தினும் வியத்தகு வயலிற் போக்கிய
கலத்திடைப் பிறழ்மணி வேள்வி யாற்றிடு
நிலத்திடைப் பிறந்தமின் னிகர்க்கு நீர்மைய.

(இ-ள்.) திரண்ட கல்லை யொத்த புயத்தினையுடைய உழவர்கள் பொன்விளையத்தக்க பூமியினுஞ் சிறப்பாக வியக்கத்தக்க வயல்களில் செலுத்திய கலப்பையினிடத்து விளங்குகின்ற மணிகள், (சனகமகாராஜன்) புத்திரகாமேட்டி யாகத்தைச் செய்யத்தொடங்கிய யாகபூமியில் தோன்றிய சீதேவியை யொத்திருக்குந் தன்மையனவாய் விளங்கும்.—எ-று.

சனகமகாராசன் புத்திரப்பேறு கருதியாகஞ் செய்தற்பொருட்டு நிலத்தினை யுழுங்கால், அவ்வுழுபடைச்சாலின்வழியே சீதை வெளிப்பட்டு அப்பிள்ளைகலிதீர்த்தனளென்பது புராணவரலாறு. சிறந்தவளமுடையதென்பார், 'பொன்விளை நில

த்தினும் வியத்தகுவயல்' என்றும், அவ்வயலில் எருழும்படைச்சாலில் விளங்கும் முத்துமுதலிய மணிகள் சிதேவி போன்று சிறந்து விளங்கினவென்பார், 'வயலிற் போக்கிய வலத்திடைப் பிறழ்மணி வேள்வியாற்றிடு நிலத்திடைப்பிறந்த மின்னிகர்க்கு நீர்மைய' என்றுங் கூறினர். உலம்=திரண்டகல். மின் - உவமையாகு பெயர். மணி மின்னிகர்க்கும் நீர்மைய எனக்கூட்டுக. (௫)

நாறுசெய் குநர்சிலர் நார நீர்வய
லூறுசெய் குநர்சில ரொற்ந பான்மையிற்
சேறுசெய் குநர்சிலர் வித்திச் செல்லுநீர்க்
காறுசெய் குநர்சில ரளப்பின் மள்ளரே.

(இ-ள்.) சிலர் நாற்றங்கால் விதைக்கின்றவர்களும், சிலர் தண்ணீரை வயல்களில் ஊறச்செய்கின்றவர்களும், சிலர் நீரூறிப் பதமாயிருக்குந் தன்மையினல் (வயலைச்) சேடையாக்குகின்றவர்களும், சிலர் (விதை) விதைத்துச் செல்லுகின்ற தண்ணீர்க்கு (க்கால்வெட்டி) வழிவிடு கின்றவர்களுமாக (இவ்வாறு) அளவில்லாத உழவர்கள் (இருப்பார்கள்).—எ-று.

ஒருவனுக்குச் செல்வப்பெருக்கம் ஒரேகாலத்தி லுண்டாயினும் அதுகொண்டு பல தொழில்செய்து வளம்பெறுத லியல்பாதல்போல, பாலிநதிப்பெருக்கு ஏககாலத்திற் பிரவேசித்த தெனினும், அதுகொண்டுசெய்யுந் தொழில் பலவாக வுண்மையால், மள்ளர்களிலும், நாறு செய்குநரும், ஊறு செய்குநரும், சேறு செய்குநரும், ஆறுசெய்குநருமாகத் தந்தந்தொழில்களை வெவ்வேறாகச் செய்தன ரெனவறிக.இதனை: தணிகைப்புராணம் - "உழுநர்க ளொருபா லுழுதசே றழுந்த லொண்புனல் பாய்த்துன ரொருபா-லழுகுசே றறிந்து மறுவலும் விளாவி யைதுறக் குழப்பிநேராக்கி - விழுமிய முளைக டெய்வதம் போற்றி மேதக வித்துந ரொருபாற்-கெழுமுளை சேற்றிற் பதிந்தபின் றெளிநீர் கீழ்மடை கவிழ்க்குந ரொருபால்" என்பதனுனுணர்க. நாரநீர்-இருபெயரொட்டுப் பண்புத்தொகை. இருப்பார்கள் என்னும் பயனிலை வருவிக்கப்பட்டது.

இச்செய்யுள் நிலந்திருந்திய பின்னர் செய்யத்தகுந் தொழிலிது வென்றுணர்த்தியதாகும். (௬)

குச்செனப் பரிமிசைக் குலாய கொய்யுளை
வைச்செனத் தளிர்த்தெழு நாற்றின் மாமுடி
யச்செனப் பதித்தனர் கடைஞ ராவியா
நச்சின மகளிரை நினைந்து நைந்துளார்.

(இ-ள்.) உழவர்கள் தமதுயிர்போல விருப்பமுற்றிருக்கின்ற பரஸ்திரீகளை நினைந்து (அதனல்) மனம் வருந்தி யிருக்கின்ற உழத்தியர்கள் பாவாற்றியைப்போலவும், குதிரையின்மேற் பொருந்திய புறமயிரை வைத்தாற்போலவுந் தளிர்த்தெழுகின்ற நாற்றினது பெரிய முடிகளை அச்சுப்போல வரிசைப்படநட்டார்கள்.—எ-று.

பாவாற்றியாவது, நெசவுத்தொழில் செய்வோர் நூற்பாவுகளை ஒழுங்குபடச் செய்தற்பொருட்டு, அப்பாவுகளின்மேல் ஈர்த்துச்செல்லும் ஒருவகைக் கருவி. கொய்யுளை - கத்திரித்த புறமயிர். அச்சு - ஒழுங்கென்னும்பொருட்டு. வைத்த என்பது வைச்ச எனப் போலியாயிற்று. வைச்சென என்புழி நிலைமொழி யீறுதொக்கது. நைந்துளார்-வினையாலணையும்பெயர். நைந்துளார் நாற்றின்மாமுடி பதித்தனர் எனக்கூட்டுக.

இச் திருவிருத்தத்திற்கு இவ்வாறு பொருள் கூறுதலன்றியும், ‘ குச்செனப் பரிமிசைக்குலாய கொய்யுளை-வைச்செனத்தளிர்த்தெழுநாற்றின் மாமுடி-அச்செனப் பறித்தனர்’ எனவும், ‘ கடைஞ ராவியா-நச்சின மகளிரை நினைந்து நைந்துளார்’ எனவும் இரண்டு முடிபாகப் பிரித்துப் பொருள்கொள்ளுதலுமாம்; இவ்வாறு பொருள் [illegible]ர்கால், முன்னதற்கு, உழத்தியர் என்னுந் தோன்ருஎழுவாயை வருவித் [illegible]த்தனர் என முடித்தும். பின்னதற்கு, கடைஞர்கள் தம் உயிர்போல விரு[illegible]கின்ற தங் குலமாதர்கள் (செய்யுங் கஷ்டத்தொழிலை) நினைந்து மனம் வருந்தினுர்கள், எனப் பொருள்விரித்தும் அமைத்துக்கொள்க. இவ்வாறு பொருள்கொள்ளுங்கால் நைந்துளார், என்பதனை வினைமுற்ருகக் கொள்க. இவ்வாறன்றி, கடைஞர் குச்செனப் பரிமிசைக் குலாய கொய்யுளை வைச்செனத் தளிர்த்தெழு நாற்றின் மாமுடி அச்செனப் பறித்தன ராகிப் (பின்னர்) ஆவியா நச்சின மகளிரை நினைந்து (பிரிவாற்ருமையால்) நைந்துளார் எனக் கூட்டிப் பொருள்கூறுவாருமுளர்.

இச் செய்யுளால் இந்நிலத்துள்ள உழத்தியர்கள் மனம் வருத்தமுற்ற காலத்தும் செய்யுந் தொழிலிற் றிறம்பாது முறைபடச் செய்வவொன்று குறித்ததாகும். (எ)

வாக்குறு தேறலை வள்ள மீமிசைத்
தேக்கின ருழவர்தந் தெரிவை மாதரார்
நோக்குறு மாடியி னுனித்து நோக்கினர்
மேக்குறு காதலின் மிசைதன் மேயினர்.

(இ-ள்.) உழவர்களது மாதர்களாகிய உழத்தியர்கள் கிண்ணத்தில் ஊற்றிய மதுவினைத் தேக்கெறிந்துண்டவர்களாய்ப் (பின்) பார்த்தற்குரிய கண்ணுடியைப்போல அதனை நிதானித்துப்பார்த்து, மிகுதியாகப்பொருந்திய பெருவிருப்பினுல் (பின்னும் அம் மதுவைக்) குடிக்கத்தொடங்கினுர்கள்.—எ-று.

நுனித்து நோக்குதல் = உற்றுப்பார்த்தல். மது வுண்போர் தம்முன்னே வள்ளத்திற் பெய்துள்ளதை உண்டு, மிகுந்த கள்ளில் தங்கள் முகத்தை நிதானித்துப் பார்த்துப் பின்றும் ஆனந்தத்தால் உண்ணுவ வொன்பார் நோக்குறு மாடியி னுனித்து நோக்கினர் - மேக்குறு காதலின் மிசைதன்மேயினர்’ என்று கூறினுர்.

மீமிசை-ஒருபொருட்பன்மொழி. தேக்கினர்-நோக்கினர் என்பன முற்றெச்சம். தெரிவை மாதரார்-இருபெயரொட்டு. மாதரார் என்பது விகுதிமேல் விகுதிபெற்றது. (அ)

வாடுகின் ருர்சிலர் மயங்கி நெஞ்சொடு
மூடுகின் ருர்சில ருயிர்க்கின் ருர்சிலர்
பாடுகின் ருர்சிலர் பணிகின் ருர்சில
ராடுகின் ருர்சிலர் நறவ மார்ந்துளார்.

(இ-ள்.) மதுவையுண்ட உழத்தியர்கள் சிலர் (வெறியால்) வாட்டமுறுகின்றவர்களும், சிலர் மயக்கமுற்று மனத்தோடும் பிணங்குகின்றவர்களும், சிலர் பெருமூச்சு விடுகின்றவர்களும், சிலர் (மருதநிலக்கடவுளைப்) பாடுகின்றவர்களும், சிலர் பணிகின்றவர்களும், சிலர் குரவையாட்டாடுகின்றவர்களும் (ஆக இருந்தார்கள்).—எ-று.

வாடுதல் முதலிய செய்கைக ளனைத்தும் நறவமார்ந்ததனுலுண்டாகிய செயற்கைக்குணமேயன்றி, உழத்தியர்களது இயற்கைக்குணமன்ருகலின், ‘ நறவ மார்ந் துளார்’ வாடுகின்ருர், ஊடுகின்ருர் என் றித்தொடக்கத்தனவாகக் கூறினுர்.

குரவைக்கூத்தாவது காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச்செய்யுள் பாட்டாக எழுவரேனும்எண்மரேனும்ஒன்பதின்மரேனும் கைபிணைந்தாடுவது. இதனை,

"குரவை யென்பது கூறுங் காலைச்-செய்தோர் செய்த காமமும் விறலு-மெய்த வுரைக்கு மியல்பிற் றென்ப" எனவும், "குரவை யென்ப தெழுவர் மங்கையர் - செந்நிலை மண்டலக் கடகக் கைகோத் - தந்நிலை கொட்பநின் றாட லாகும்" எனவும் வருவனவற்றா லுணர்க. (கூ)

அந்தரப் புள்ளொடு மளிக டம்மொடும்
வந்தடுத் தவரொடு மயக்கு தேறலை
யிந்திரத் தெய்வத மிறைஞ்சி வாமமாந்
தந்திரக் கிளைஞர்போற் றாமு மேயினர்.

(இ-ள்.) உழத்தியர்கள் சத்தியை வணங்கி மதுவுண்ணும் வாமதந்திரச் சமயிகளைப்போல அறிவை மயக்குகின்ற மதுவினை இந்திரனாகிய தெய்வத்தை வணங்கி, ஆகாயத்திற்பறந்துசெல்லும் பறவைகளோடும் வண்டுகளோடுந் தம்மைவந்தடுத்த உறவினரோடும் உண்டார்கள்.—எ-று.

"மாயோன் மேய காடுறை யுலகமுஞ்-சேயோன் மேய மைவரை யுலகமும்-வேந்தன் மேய தீம்புன லுலகமும்-வருணன் மேய பெருமண லுலகமு - முல்லை குறிஞ்சி மருதநெய் தலெனச்-சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" என்றபடி இந்திரன் மருதநிலக் கடவுளாகலின் அவனை வணங்கிப் பருகுதல் முறைமை யென்பது கருதி இறைஞ்சின ரென்பார், 'இந்திரத் தெய்வத மிறைஞ்சி' என்றும், வாமதந்திரிகள் சத்திபூசை செய்யுங்கால் மது முதலிய லாகிரி வஸ்துக்களைப் படைத்துண்ணுமாறுபோல இவர்களும் அம்மதுவை விரும்பி யுண்ணுதலின், 'வாமமாந் தந்திரக் கிளைஞர்போற் றாமு மேயினர்' என்றுங் கூறினர். இந்திரத் தெய்வதம்-இருபெயரொட்டு. கிளைஞர்-பிரிவினர் என்னும் பொருளில் வந்தது. (க0)

விள்ளுறு நாணினர் விரகத் தீயின
ருள்ளுறு முயிர்ப்பின ருலேயு நெஞ்சினர்
தள்ளுறு தம்முணர் வின்றிச் சாம்பினர்
கள்ளினு முளதுகொல் கருத்த ழிப்பதே.

(இ-ள்.) வெட்க நீங்கப் பெற்றவர்களும், காமத் தீயை யுடையவர்களும், உள்ளே பொருந்திய பெருமூச்சை யுடையவர்களும், (நிலையற்று) அழிந்த மனமுடையவர்களுமாகிய உழத்தியர்கள் (தொழில்களில்) செலுத்துகின்ற தம்முடையஇயற்கையுணர்ச்சி யில்லாமல் சோர்ந்திருந்தார்கள்; (ஆதலால்) மனக்கருத்தை யழிக்கின்ற பொருள் கள்ளைப்பார்க்கிலும் வேறொன்றுண்டோ? (இல்லை.)—எ-று.

"நாணென்னு நல்லாள் புறங்கொடுக்குங் கள்ளென்னும்-பேணாப் பெருங் குற்றத் தார்க்கு" என்றபடி கள்ளுண்பார்க்கு நாண மகலுமென்பார், 'விள்ளுறு நாணினர்' என்றார். விள்ளுறு நாணினர்=நீங்கிய நாணுடையவர்கள்; அதாவது நாண நீங்கினவர்கள் என்பது பொருள். எத்தீயினுங் காமத்தீ கொடிதாகலின், 'விரகத்தீயினர்' என்று கூறினர். இதனை—"ஊரு ளெழுந்த வுருகெழு செந்தீக்கு-நீருட் குளித்து முயலாகும்—நீருள்-குளிப்பினுங் காமஞ் சுடுமே குன்றேறி-யொளிப்பினுங் காமஞ் சுடும்" என்பதனா லுணர்க. (கக)

பளிக்கறை யன்னதோர் படுகர்ப் பாங்கினுந்
தளிர்ப்புறு செறுவினுந் தவறுற் றேகுவார்

தெளிப்பவ ரின்மையி னெறியிற் சென்றிலர்
களிப்பவர் தமக்குமோர் கதியுண் டாகுமோ.

(இ-ள்.) பளிங்கின்பாறையை யொத்துள்ளதாகிய தடாகங்களின் பக்கங்களிலும், (பயிர்கள்) தளிர்த்திருக்கின்ற வயல்களிலும் தவறி விழுந்துபின்னெழுந்து செல்கின்ற உழத்தியர்கள் (இது வழியென்று) தெரிவிப்பவர்க ளில்லாமையினால் வழியே நடந்து செல்லார்கள்; (கள்ளையுண்டு) களிப்பவர்களுக்கும் ஒரு கதியுண்டாருமோ?—எ-று.

பால்போற் றெண்ணீ ரமையப்பெற்றுள்ள தென்பார், 'பளிக்கறை யன்னதோர் படுகர்' என்றும், தவத்தான் வருந்தி இடைவிடாது சிந்திப்பவர்க்கே நற்கதியுண்டாமன்றிக் களியாட்டு முதலியவற்றாற் களிகூர்ந்திருப்பார்க்கு நற்கதி கிட்டாவென்பார், 'களிப்பவர் தமக்குமோர் கதியுண்டாகுமோ' என்றுங் கூறினர். தெளிப்பவர்-பிறவினை வினையாலணையும்பெயர். (கஉ)

இன்னன பற்பல வியற்றி யீண்டினர்
ருன்னருந் தொல்லையி னுணர்வு வந்துழிக்
கன்னெடுந் திரள்புயக் கணவ ரேவலிற்
றுன்னின ரவரொடுந் துவன்றிச் சூழ்ந்துளார்.

(இ-ள்.) கல்லைப்போலுந் திரண்டபுயத்தினையுடையதங்கள் கணவர்களது ஏவுதலினால், இத்தன்மையாகிய பற்பலதொழில்களைச்செய்து நெருங்கிய உழத்தியர்கள் நினைத்தற்கரிய முன்னுணர்ச்சி வந்தபொழுது, அக்கணவர்களோடும் நெருங்கிச் சூழ்ந்தவர்களாய்ப் பொருந்தினார்கள்.—எ-று.

ஈண்டினர் தொல்லையி னுணர்வு வந்துழி துவன்றிச் சூழ்ந்துளார் எனக் கூட்டுக. ஈண்டினர்-வினையாலணையும்பெயர். உன்னரும்-வந்துழி என்பன தொகுத்தல் விகாரம். (கங)

மள்ளர்தம் வினைபுரி மழலைத் தீஞ்சொலார்
கள்ளுறு புதுமணங் கமழும் வாலித
முள்ளுறு நறுவிரை யுயிர்த்து வீசிய
வெள்ளிய குமுதமென் மலரின் மேவுமே.

(இ-ள்.) உழவர்களது ஏவற்றொழிலைச் செய்கின்ற மதுரமாகிய மழலைச் சொல்லையுடைய உழத்தியர்களது கள்ளமைந்த புதிய வாசனையானது வீசப்பெற்ற வெள்ளிய இதழ்கள், உள்ளே பொருந்திய நற்கந்தத்தைப் பெற்று வீசுகின்ற வெண்மையாகிய மெல்லிய குமுதமலர்போலப் பொருந்தி விளங்கும்.—எ-று.

கள்ளுண்ட உழத்தியர்களது இதழ்கள் செந்நிற நீங்கிச் சிவிர்த்து விளர்த்திருத்தலாலும், கள்ளின் நாற்ற முள்ளிருந்து வெளியே வீசிப் பரவுதலாலும், அம்மணம் கள்ளுண்டகாரணத்தா லுண்டாதலானும், 'கள்ளுறு புதுமணங் கமழும் வாலித - முள்ளுறு நறுவிரை யுயிர்த்து வீசிய - வெள்ளிய குமுதமென் மலரின் மேவும்' என்று கூறினர். வெள்ளிய குமுதம்=வெள்ளல்லி. (கச)

நட்டதோர் குழுவினை நடாத தோர்குழு
வொட்டலர் போலநின் றுறுத்த லுன்னியே
யட்டன ராமென வடாத வான்களை
கட்டனர் வேற்றுமை யுணருங் காட்சியார்.

(இ-ள்.) நடப்பட்டதாகிய பயிர்க்கூட்டங்களை, அவ்வாறு நடப்படாத களைக் கூட்டங்கள் பகைவர்களைப்போல இடையிடையே நின்று அழித்தலைச்சிந்தித்து(ச்சமயமறிந்து) அவற்றை யழித்தாற்போல, (பயிரிது களையிதுவென்று) வேறுபாட்டை யுணருங் காட்சியினையுடைய உழத்தியர்கள் பயிருக்கடாத பெரிய களைகளைப் பிடுங்கி யெறிந்தார்கள்.—எ-று.

'நட்டதோர் குழுவினை நடாத தோர்குழு - வொட்டலர் போலநின் றொருத்த லுன்னி - வேற்றுமை யுணருங் காட்சியார் அட்டனராமென' என்பதற்கு, நட்புக்கொண்டிருக்கும் ஒரு கூட்டத்தாரை நட்பில்லாத மற்றொரு கூட்டத்தார் பகைவர்களைப்போலநின்று வருத்துதலைச் சிந்தித்து, வேற்றுமை யுணருங் காட்சியாராகிய நடுவுநிலைமையை யுணர்ந்த பெரியோர்கள், அந் நட்பில்லாத கூட்டத்தாரை அறநெறிப்படி நெருங்கிநின் றழித்தல்போல, எனச் சிலேடைவகையால் வேறொரு பொருளுந் தொனிக்குமாறு காண்க. (கரு)

ஏயின செயலெல்லா மியற்றி வேறுவே
றுயிடை வேண்டுவ நமைய வாற்றியே
மாயிரும் புவிமிசை மகவைப் போற்றிடுந்
தாயென வளர்த்தனர் சாலி யீட்டமே.

(இ-ள்.) பொருந்திய பயிர்த்தொழில்க ளனைத்தையுஞ் செய்து, வெவ்வேறாக அங்குச் செய்யவேண்டுவதாகிய காவல் முதலியவற்றைப் பொருந்த நடத்தி மிகப் பெரிய நிலவுலகத்தில் தங் குழந்தைகளைப் பாதுகாக்கின்ற தாயைப்போலச் செந்நெற்பயிர்த்தொகைகளை வளர்த்தார்கள்.—எ-று.

தாயென வளர்த்தலாவது :—தாய் தன்குழந்தைகளுக்குப் பாலூட்டி நோய் முதலியன அணுகாமற்காத்து மகிழ்வூட்டி வளர்த்தல்போல, நெற்பயிர்களுக்குக் காலமறிந்து நீர் பாய்ச்சிக் களைகளைந்து அவற்றிற் கொருகுறைவும் நேரிடாமற் பாதுகாத்தல். இதனை.— காஞ்சிப்புராணம். "இளமகப் பசிதனக் கேந்து கொங்கைப்பாலளவறிந்தூட்டுதாய் மான வாறறி - களமர்கண் முளைப்புனல் செவ்வி கண்டுநீள் - வளவயல்பாய்த்தித்தம் மகவி னோம்புவார்."—என்பதனு னுணர்க.

குச்சென என்னுஞ் செய்யுள்முதல் இச் செய்யுள்காறும் உழவர் உழத்தியர்கள்செய்யுந் தொழில் இவையென் றுணர்த்தியதென்க. (கசு)

மன்சுடர் கெழுமிய வயிர வான்கணை
மின்சுடர் தூணியின் மேல கீழுறத்
தன்சுடர் பொலிதரச் செறித்த தன்மைபோற்
பொன்சுட ரிளங்கதிர் புறத்துக் கான்றவே.

(இ-ள்.) நிலைபெற்ற ஒளிவிளங்குகின்ற சிறந்த வயிரக்கணையை மின்போல் விளங்கும் அம்பறாத்தூணியில் மேல்கீழாகப் பொருந்தும்படி தன்னொளி வீச நெருக்கிவைத்த தன்மையைப்போல, (பயிர்கள்) பொன்போ லொளிவீசும் இளங்கதிர்களை வெளியில் காட்டின.—எ-று.

இச்செய்யுளால்,தொண்டைநாட்டிற்பரவிய வெம்மையென்னும் பகைவனை யழிக்கவெழுந்தது பாலிநதியாகலின் அதனை அரசனாகவும், அந்நதியால் விளைந்த பயிர்களை அம்பாகவும் கூறவேண்டுவது மரபாகலின், வயல்களில் முளைத்த பயிர்க்கதிர்களை அம்பறாத்தூணியில் தலைகிழாக நிறைத்துவைத்த பாணங்களாகக் கூறியதாகும்.

பச்சிளங் காம்புடைப் பணையின் மீமிசை
வச்சிரத் தியற்றுமோ ரிலைகொள் வான்படை
யுச்சிமே லுறநிறீஇ யொருங்கு செய்தெனக்
குச்சுறு சாலிமென் கதிர்கு லாவுமால்.

(இ-ள்.) வயிரத்தினுல் செய்யப்பட்ட ஒப்பற்ற அச்சவடிவாகிய சிறந்த வேற்படைகளைப் பசிய இளங்காம்பினையுடைய மூங்கிலின்மேல் அதனுச்சியில் பொருந்த நிறுத்தி வரிசைப்படச் செய்துவைத்தாற்போலக், கொத்தாகப் பொருந்திய செந்நெற்பயிரினது மெல்லிய கதிர்கள் விளங்கும்.—எ-று.

பயிர்கள் பச்சைநிறமும் கதிர்கள் வெண்ணிறமு முடையனவாகலின், பச்சிளங்காம்புடைப்பணையைப் பயிர்த்தாளுக்கும், வச்சிரத்தியற்றுமோரிலைகொள்வான் படையை நெற்கதிருக்குமாக வுவமைகூறினர்.

இச்செய்யுளால், முன்வயல்க ளென்கிற அம்பறுத்தூணிகளில் செருகிவைத்த பாணங்களைத் தொடுத்துப் பிரயோகஞ்செய்வது மரபாகலின், வச்சிரத்தினுற் செய்த படைகளை மூங்கிலினுச்சியில் வைத்தாற்போலச் செந்நெற்பயிர்கள் மேலோங் கிவளர்ந்தன வென்று கூறியதாகும். (௧அ)

சுற்றுறு பஃறலைச் சுடிகை மாசுணம்
பெற்றுறு குழவிகள் பெயர்த லின்றியே
முற்றுறு நிவப்பொடு முறையி னிற்றல்போ
னெற்றுறு பசுங்கதிர் நிமிர்தன் மிக்கவே.

(இ-ள்.) சூழ்ந்துள்ள பல தலைகளில் உச்சிக்கொண்டையையுடைய பெரும் பாம்பானது பெற்ற குட்டிகள் இடம் விட்டுப் பெயராமல் அவை முழுதும் நிமிர்தலோடும் முறையே நிற்றல்போல, நெற்கள் பொருந்தப்பெற்ற பசுங் கதிர்கள் நிமிர்ந்தோங்கின.—எ-று.

சுத்தவீரர்கள் பகைமையின் திறத்தை நோக்கிப் போர்முகத்தில் அநேகமாயிரம் பாணங்களை யேககாலத்திற்றொடுத்தல் வீரச்செயலாதலால், அதுபோலாகும் இப் பசுங் கதிர்கள் ஒழுங்குபட நிமிர்ந்து செவ்வனே நிற்றலெனவும், அவ் வீரர்கள் விடும் பாணங்கள் செல்லுங்கால் சர்ப்பவேகமாகச் செல்லுதல் மரபாதலால் அவ் விளம்பயிர்களைப் பாம்பின் குட்டிகளாகவும் இச் செய்யுளாற் கூறியதாகும்.

மன் என்னுஞ் செய்யுள் முதல் இச் செய்யுள்காறும் உழவர் உழத்தியரால் விளைந்த பயிர்களின் சிறப்பைக் கூறியதாகும். (௧௯)

மைபுறு கணிகையர் மகிழ்நர் வந்துழிப்
பொய்புறு மன்பெனப் பயனில் புன்கதிர்
கைபுறு முவகையாற் பணியுங் கற்பினோர்
மெய்புறு பரிவென விளைந்து சாய்ந்தவே.

(இ-ள்.) மை தீட்டிய (கண்களையுடைய) விலைமாதர்கள் ஆடவர்கள் வந்தவிடத்துப் பொய்யாகப் பாராட்டுகின்ற அன்பைப்போல, (அரிசியாகிய) உள்ளீடில்லாத சாவிக்கதிர்கள், ஒழுக்க மமைந்த பெருவிருப்போடும் பணிகின்ற கற்பினையுடைய குலமாதர்களது மெய்ம்மை பொருந்திய அன்பைப்போன்று (நெற்கதிர்களோடும்) விளைந்து சாய்ந்தன.—எ-று.

விலைமாதர்கள் தம்மை யணைதற் பொருட்டுப் பரபுருடர்கள் வந்தவிடத்து அவர்களிடத்துள்ள பொருளைப் பறிக்க விரும்பி உள்ளன்பின்றி வெளிக்கு அன்பு

போல் நடித்து உபசரித்து நிற்றல்போலச் சாவிக்கதிர்களும் அரிபியென்று முன்னீடி ல்லாமல் அந் நெல்லைப் போன்றிருத்தலின், 'மையுறு கணிகையர் மகிழ்நர் வந்துழிப்-பொய்யுறு மனியெனப்பயனில் புன்கதிர்' என்றும், "தெய்வந்தொழாஅள் கொழுநற் றொழு தெழுவாள்-பெய்யெனப் பெய்யு மழை" என்றபடி தங்கணவனையே தெய்வமாக வழிபட்டு வணங்கி நிற்குங் கற்புடை மகளிர்போலச் செந்நெற்கதிர்களுடன் சாவிக்கதிர்களும் விளைந்து சாய்ந்திருத்தலின், 'கையுறு முவகையாற் பணியுங் கற்பினோர் - மெய்யுறு பரிவென விளைந்து சாய்ந்த' என்றுங் கூறினர். வந்துழி என்பது, தொகுத்தல். கை = ஒழுக்கம். புன்கதிர் விளைந்து சாய்ந்த எனக் கூட்டுக. (௨௦)

மாறுறு பொன்னகர் மருவு மன்னற்குப்
பாலுறு நிம்பதம் பலவு மார்த்தியே
மேலுறு சாலியின் விளைவு நோக்கியே
கோலிநின் றரிந்தனர் குழாங்கொண் மள்ளரே.

(இ-ள்.) கூட்டமாகவுள்ள உழவர்கள் பெருமை பொருந்திய சுவர்க்கலோகத்தில் வசிக்கும் இந்திரனுக்கு இனிமை மிக்க பலவகைப் பாற்சோற்றைப் பொங்கலிட்டு நிவேதித்து, உயர்ந்து வளர்ந்திருக்கின்ற செந்நெற்பயிரின் விளைவைப்பார்த்துச் சூழ்ந்து நின்று அரிந்தார்கள்.—எ-று.

சுவர்க்காதிபதியாகிய இந்திரன் பெரும்போகந் துய்த்து வாழ்தற்கமைந்துள்ள விண்ணுலகானது இந்நிலவுலகம் போன்று மண்ணினானமையாது பசும்பொன்னினா னமையப் பெற்றுள்ளதாகலின் பெருஞ்சிறப்பினதே யென்பார், 'மாலுறு பொன்னகர்' என்றும், அந்நகர்க்கதிபனாகிய தேவேந்திரன் மருதநிலக்கடவுளாகலின் அந்நிலமாக்கள் தாங்கள் அருமையாகப் போற்றிவளர்த்த செந்நெலரிசியை முதற்கணறுத்துப் பாற்பொங்கலிட்டு நிவேதித்துப் பின்னரவற்றை யரிந்து போரிடுதல் முறைமையாகலின், 'பாலுறுநிம்பதம் பலவுமார்த்தி' என்றும், நெல்விளைவின் முதிர்ச்சியை நோக்கி முன் பின் வரிசைக்கிரமமாக அறுக்கவேண்டுதலின், 'மேலுறு சாலியின் விளைவு நோக்கி' என்றும், அவ்விளைவை நோக்கியரியுங்கால் தனித்தனியே யரியாமல் குழாங்குழாமாகக்கூடிச் சூழ்ந்துநின் றரித லியல்பாகலின், 'கோலிநின் றரிந்தனர் குழாங்கொண் மள்ளர்' என்றுங் கூறினர். "—'மாலுறு பொன்னகர் மருவுமன்னன்' என்பதற்கு, மேகத்தை வாகனமாகவுடைய சுவர்க்காதிபதியாகிய இந்திரன் எனப் பொருள் கூறினுமாம். (௨௧)

அரிந்திடு சுமைகளா லவனிப் பேருடல்
னெரிந்திடச் சேடனு நெளிந்து நீங்கிடத்
தெரிந்திடும் போர்கள்சே ணளவுஞ் சேறலால்
விரிந்திடு கதிர்சுலா மேரு வாயவே.

(இ-ள்.) அவ்வாறு அரிந்துபோடப்பட்ட சுமைகளினால் பூமிதேவியினது உடல் வருந்தவும், ஆதிசேடனும் உடல் நெளிந்து நீங்கவும், காணப்பட்ட அரிப்போர்கள் ஆகாயமளவு முயர்ந்திருக்குங் காரணத்தினால் ஒளி விளங்குகின்ற சந்திர சூரியர்கள் சூழ்ந்து வலம்வருகின்ற மேருமலைபோல விளங்கின.—எ-று.

எங்கும் பரவி விளைந்திருந்த நெற்பயிர்களையரிந்து ஓரிடத்துச் சுமையாகப் போர் செய்தலின் பூமிதேவிக்கு உடல்நெரிதலும், வயல்களெங்கும் பரவியிருந்த பளுவை யோரிடத்திற் கூட்டிச் சேர்த்தலின் ஆதிசேடன தாயிரம்பணாமுடிகளினு நிறைந்திருந்த பளுவனைத்து மாறி யொவ்வோ ரிடத்துப் பளு வுறுத்துதலின் அவன் நெளிந்து நீங்குதலு முண்மையால், 'அரிந்திடு சுமைகளா லவனிப் பேருட-னெரிந்தி

டச் சேடனு நெளிந்து நீங்கிட' என்றும், யாவர்க்குந் தெரியத்தக்க பெரும்போரொன்பார், 'தெரிந்திடும் போர்கள்' என்றும், அப் போர்கள் விண்ணளவு முயர்ந்தோங்கியிருக்கு மென்பார், 'சேணளவுஞ் சேறலால்' என்றும், அவை செந்நிறமுற்றுப் பெருமலைபோ லுயர்ந்துவிளங்கலின், செம்பொன்மயமாகிய மேருவேயென் றுரைக்கத்தக்கதாகு மென்பார், 'விரிந்திடு கதிர்சுலா மேரு வாயவே' என்றுங் கூறினர். தெரிந்திடு போர்கள் என்பதற்கு, இடந்தெரிந்து போட்ட போர்கள் என்றுரைப்பினுமாம். மேருமலைபோன்று பெரும்போர்க ளிட்டன ரென்பதனை—"கொடும்பிறை வடிவிற்செய்த கூனிரும் பங்கை வாங்கி - முடங்குகால் வரிவண் டார்ப்ப முள்ளரைக் கமல நீல - மடங்கவெண் சாலி செந்நெல் வேறுவே றரிந்தீ டாக்கி-நெடுங்களத் தம்பொற் குன்ற நிரையெனப் பெரும்போர் செய்தார்." என வருந் திருவிளையாடற் புராணத்தானும், "அரிவர் சேர்ப்ப ரடுக்குவர் சிக்கென - வரிவர் சென்னியில் வைப்பர் களஞ்செலப் - புரிவர் பொன்னங் கிரியெனப் போர்செய்வர் - பிரிவர் மீள்வரிப் பெற்றியரெங்கணும்" "சிறைசெய் திம்புன ளுட்டிறை செற்றுமுன்-சிறையரிந்த வரைகளைச் சீற்றத்தாற் - சிறைசெ யக்கரு தித்தன் னிலத்தொரு - சிறைவைத் தாலெனப் போர்கள் சிறக்குமால்" எனவருங் காஞ்சிப்புராணத்தானு முணர்க.

இச்செய்யுளால் விளைந்த பயிரின் மிகுதியைக் கூறியதாகும். (உஉ)

ஏற்றொடு பகட்டின மிசைத்துப் போருரு
மாற்றினர் வலமுறை திரித்து வாழ்த்தொலி
சாற்றினர் பரனொடு தமது தெய்வதம்
போற்றினர் மீமிசை பொலிகென் றோதுவார்.

(இ-ள்.) (உழவர்கள்) அந்நெற்போரி னுருவத்தைக் கலைத்து எருதுகளோடு எருமைக்கடா வினங்களையுஞ் சேர்த்துப் பூட்டி, வலமுறையாகச் சூழ்வித்து வாழ்த்தொலி கூறிச் சிவபெருமானையுந் தங்கள் கடவுளாகிய இந்திரனையுந் துதித்தவர்களாய் (இந் நெற்குவைகள்) மேலுமேலும் விருத்தியாகுக வென்று கூறுவார்கள்.எ-று.

போரடிப்பவர்கள் போரைச் சரித்துக் கடாக்களைப்பூட்டி வலமுறையாக மிதிப்பித்துச் சீர்ப்படுத்துதல் முறைமையாகலின், 'ஏற்றொடு பகட்டின மிசைத்துப் போருரு-மாற்றினர் வலமுறை திரித்து' என்றும், அக்கால் மங்கலவாழ்த்துக்கூறின் நெல்வள மிகுமென்பது கருத்தாகலின், 'வாழ்த்தொலி சாற்றினர்' என்றும், இகபரங்களை இனி தறிந்தூட்டு முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானையும், அம் மருதநிலக்கடவுளாகிய இந்திரனையுந் துதிக்கவேண்டிய தின்றியமையாததாகலின், 'பரனொடு தமது தெய்வதம் போற்றினர்' என்றும், வாழ்த்தொலி சாற்றுதலும் தெய்வதம் போற்றுதலும் நெற்போர்ப்பொலிவைக் கருதியே யாகலின், 'மீமிசைப்பொலிகென் றோதுவார்' என்றுங் கூறினர். தமது தெய்வம் என்பதற்கு, தங்கள் குல தெய்வங்களை யெனினுமாம். மாற்றினர்-சாற்றினர்-போற்றினர் என்பன முற்றெச்சம். பொலிகென்றோதுவார் என்பது தொகுத்தல் விகாரம். உழவர் என்னுந் தோன்றாவெழுவாய் வருவித்துரைக்கப்பட்டது. (உழவர்) இசைத்து - மாற்றி - சாற்றி - போற்றி ஓதுவார் எனக் கூட்டுக.

இச்செய்யுளால் பூமிதேவியும் ஆதிசேடனும் தாங்கப்பெறாது வருந்துதலைக் கண்டு ஆற்றாது உழவர்கள் அப்போர்களைப் பகட்டினங்களால் மாற்றினரென்று கூறியதாகும். (உ௩)

தொங்கலம் பூமுடித் தொழுவர் போரினை
யங்குறப் படுத்துவை யகற்றி யாக்கிய
பொங்கழிப் பதடிகள் புறத்து வீசியே
யெங்கணு நெற்குவை யியற்று வாரரோ.

(இ-ள்.) அழகிய மலர்மாலையையணிந்த முடியினையுடைய உழவர்கள் நெற்போர்களை அம் மருதநிலத்திற் பொருந்தச்சிர்ப்படுத்து, வைக்கோல்களை நீக்கிச் சேர்த்த தூற்றாத நெற்குவியலிலுள்ள பதர்களைப் புறத்தில் வீசி யொதுக்கி, அவ் வயலிடமெங்கும் நெற்குவியல்களைச் சேர்ப்பார்கள்.—எ-று.

உழவர்கள் களத்தொழில் செய்யுங்கால் மலர்மாலையணிதல் முதலியவற்றை யொழித்துச் செய்தலுண்மையால், ஈண்டுக்கூறியது அவர்கள் சிறப்பிலக்கணங்கருதி யெனவறிக. பொங்கழி = தூற்றாத நெல். தொங்கல்-ஆகுபெயர். அரோ-அசைநிலை.

இச்செய்யுளாலும் மேற்கூறிய இருவருக்கும் பெரும்பாரமாயிருந்த பெரும் போரை மாற்றிச் சிறிய பாரமாக்க உழவர்கள் வைக்கோல் முதலியவை மாற்றி நெற்குவையாக்குவாரெனக் கூறியதாகும். (உச)

களப்படு கைவலோர் கால்க ளான்முகந்
தளப்புறு நெற்குழா வற்றுண் மன்னவற்
குளப்படு கடன்முறை யுதவி மள்ளருக்
களித்தனர் வேண்டிய தனைய நாட்டுளோர்.

(இ-ள்.) அத்தன்மையாகிய வளப்பமிக்க தொண்டைநாட்டிலுள்ள வேளாண்டலைவர்கள், களத்திலிருக்கின்ற அளவாளிகளால் மரக்கால்களைக்கொண் டளக்கப்பட்ட நெற்குவைகளுள் அரசனுக்குக்கொடுக்கவேண்டிய ஆறிலொருகடைமையை முறைப்படி கொடுத்துப் பின் உழவர்களுக்குவேண்டிய நெற்களைக் கொடுத்தார்கள்.

இல்வாழ்வோன், "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்க லுனென்றாங் -கைம்புலத்தா றோம்ப றலை" என்றபடி, ஐந்தறங்களுஞ் செய்தற்குரியவ னுகலான், தனக்குண்டாகிய விளைவினை ஆறாகப் பகிர்ந்து அரசனுக்கொன்றும் தனக்கைந்துமாகக் கொள்ளவேண்டியது முறைமை யாகலான், அவ்வாறே ஆறிலொருகடமை யுதவினரொன்பார், 'மன்னவற் குளப்படு கடன்முறை யுதவி' என்றும், மள்ளர்கள் செய்த களத்தொழிலிற் கிசைந்த படித்தொகைகளை நிரம்பக் கொடுத்தன ரொன்பார், 'மள்ளருக் களித்தனர் வேண்டியது' என்றுங் கூறினர். நாட்டுளோர் மன்னவற்கு உதவி மள்ளருக் களித்தனர் எனக் கூட்டுக.

இச்செய்யுளால் உழவர்கள் வானைநோக்கிவாழும் இயற்கையுடையராயினும் அரசன் கோனோக்கமன்றி ஒன்றும் அமையா வென்னும் நீதியை யுணர்ந்து அந்நெறியிற் றவறாதவரொன்றுணர்த்த முன்னர் மன்னரளவையைக் கொடுத்துப் பின்னர் மள்ளருக்களித்தனரொன்று கூறியதாகும். (உரு)

சொற்குவை வழிபடப் புகழிற் றோன்றுதம்
மிற்குவை வேண்டுவ தேவி யெஞ்சிய
நெற்குவை குரம்பையி னிரப்பு வித்தனர்
பொற்குவை யரிந்தனர் பொதிவித் தென்னவே.

(இ-ள்.) (அவ்வேளாண்டலைவர்கள்) புலவர்கூட்டங்களால் துதிக்கப்படும் புகழோடும் விளங்குகின்ற தமதுமாளிகைகளுக்கு அந்நெற்குவைகளில் வேண்டுவன

வற்றைச் செலுத்தி மிகுதியாகிய நெற்குவைக ளனைத்தையும் பொற்பிரள்களை யரிந்துவந்தவர்கள் (அவற்றை) மறைத்து மூடிவைத்ததுபோலக் கூடுகளிற் சேர்த்து நிறைவித்தார்கள்.—எ-று.

"உழுவா ருலகத்தார்க் காணியஃ தாற்றா - தெழுவாரை யெல்லாம் பொறுத்து" என்றும், "உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்மற் றெல்லாந்-தொழுதுண்டு பின்செல் பவர்" என்றும், "மேழிச் செல்வங் கோழை படாது" என்றுங் கூறிய அருள் வாக்கியப்படி மேழிச்செல்வமே சிறந்தசெல்வமாகலின், அதனையுடைய வேளாண்டலைவர்களை ஆசு-மதுரம்-சித்திரம்-வித்தார மென்னு நாற்கவிப்புலவர்களு நண்ணிப்புகழ்த லியல்பாகலின், 'சொற்குவை வழிபடப் புகழிற்றோன்று தம் இல்' என்றும், தம்மில்லத்திற்கு வேண்டுவனமாத்திரங் கொள்வரென்பார், 'வேண்டுவ தேவி' என்றும், எஞ்சியவற்றைக் கூடுகளி னிரப்பிப் பொன்னேபோற் பொதிந்து காப்பரென்பார், 'பொற்குவை யரிந்தனர் பொதிவித் தென்ன எஞ்சிய நெற்குவை குரம்பையினிரப்பு வித்தனர்' என்றுங் கூறினர். சொல் என்பது ஆகுபெயராய் அதனை யுணர்ந்த புலவர்களை யுணர்த்திற்று. உவை-பன்மைச்சுட்டு. மேலைச்செய்யுளிலுள்ள 'நாட்டுளோர்' என்னுமெழுவாய் ஈண்டுவருவித்துப் பொருள்கூறப்பட்டது. நாட்டுளோர் வேண்டுவது எவிக்குரம்பையி னிரப்புவித்தனர், எனக் கூட்டுக.

இச்செய்யுளால் அரசனுக்கும் எவலாளிகளுக்கும் அளவறிந்து கொடுத்தவைபோக நின்றவற்றுள் இல்லறவியல் நடத்த அளவிட்டுக்கொடுத்து எஞ்சியவற்றைப்பொன்னிலுஞ் சிறந்து காத்தாரென்று கூறியதாகும்.

ஏற்றெருடு என்னுஞ் செய்யுள்முதல் இச்செய்யுள்காறும் விளைந்த பயிரைநெற்குவையாக்கிய வகையையும், அக்குவையை அரசன் முதலாயினருக்கு வகுத்த வகையையும், பின் தம்மில்லிற்கு அளவிட்டுக்கொடுத்த வகையையும், இங்ஙில என்றுங் குன்றாதிருக்க வமைத்துக்கொண்ட சேமநிலையையுங் கூறியவாறாகும். (உசு)

தலத்திடை வேறிடத் தொதுங்குந் தன்னிய
குலத்திடைப் பிறந்தவர் கூட்ட மாமெனா
நலத்திடை வந்திடு முதிரை நல்வள
நிலத்திடை யொருசிறை விளையு நீரவே.

(இ-ள்.) நிலவுலகத்தில் வேறாகிய தனியிடத்தில் ஒதுங்கி வசிக்கும் இழிகுலத்திற்பிறந்த கீழ்மக்களது கூட்டத்தைப்போல, நன்மையாகத்தோன்றிய (துவரை-பயறு முதலிய) புன்செய்த் தானியங்களாகிய நல்ல வளப்பமிக்க பயிர்வகைகள், அம்மருதநிலத்தில் ஒருபுறத்தில் விளையுந் தன்மையவாயின.—எ-று.

ஊர்ப்புறக் குடிகளாகிய பஞ்சமர் முதலிய கீழ்மக்கள் தீண்டப்பெறாதவர்களாகலின் ஊரினுள்ளே செல்லப்பெறாமல் புறத்திற்றங்கி வசித்தலுண்மையால், தலத்திடைவேறிடத் தொதுங்குந் தன்னிய - குலத்திடைப் பிறந்தவர் கூட்டம், என்றும், அவ்விழிகுல மாக்களைப்போல முதிரைப்பயிர்கள் நன்செய்ப்புலத்தில் விளைதலின்றி அதன்புறத்துள்ள புன்செய்களில் விளையுந்தன்மைய வாகலின், 'நலத்திடை வந்திடு முதிரைநல்வள - நிலத்திடையொருசிறை விளையுநீரவே' என்றுங்கூறினர்; தன்னிய குலத்திடைப்பிறந்தவர் வேறிடத்தொதுங்கி வசித்தல்போல முதிரைநல்வளம் ஒருசிறைவிளையுநீர என்க, தன்னியகுலம்=இழிகுலம் 'நலத்திடைவந்திடு' என்பதற்கு, நன்மைமிக்க யாகாதிகாரியங்களுக்கு மிக்க பிரயோசனமாக வருகின்ற எனப்பொருள் கூறினுமாம். ஆகுமென என்பது, ஆமென எனவந்தது.

ஊர்ப்புறத்திலுள்ள பஞ்சமர் செழித்திருந்தாலன்றி உழவர்சிறப்புற்றிருத்தல் கூடாமைபோல் மருதநிலப்புறத்தில் விளையும் முதிரைமுதலிய பயிர்கள்வளம்பெறவிளைந்தாலன்றி ஏனையதானியம் நிலைபெற்றிராவாகலான், 'நலத்திடைவந்திடு முதிரைநல்வளம்' என்றாரென்னறு மொன்று. இச்செய்யுளால் புன்செய் நிலத்தின் வளத்தைக்கூறியதாகும். (உஎ)

பிறப்பதும் வளர்வதும் பின்னர் மூப்புவந்
திறப்பதும் வைகறு முலகி லேய்ந்தெனச்
சிறப்புட னடுவதும் பருவஞ் செய்வது
மறுப்பதுந் தொகுப்பது முலப்பின் றுயவே.

(இ-ள்.) பிறத்தலும், வளர்தலும், பின்னர் முதுமைப்பருவம்வந்து இறத்தலுமாகிய இவைகள் எப்பொழுதும் உலகத்தில் இயல்பாகவே யமைந்துள்ளவாறுபோன்று (பயிர்களைச்) சிறப்போடு நடுவதும் காலமறிந்து வளர்ப்பதும், அவற்றையரிவதும், போர்களாகக் குவிப்பதுமாகிய வித்தொழில்கள் கெடுதலின்றி மிகுத்தோங்கின.—எ-று.

ஆன்மாக்க ளுலகில் பிறந்து வளர்ந் திறந்தொழிதல் போலப் பயிர்களும் தோன்றி வளர்ந்து அறுபட்டுத் தொகுக்கப்படுமெனவறிக. எய்ந்தால் என என்பது, எய்ந்தென எனத்தொகுத்தலாயிற்று.

சிவபெருமானுடைய முத்தொழிலும் நீங்காதிருத்தல்போல பயிருக்குரிய நடுதல் முதலியதொழில்களும் நீங்காதிருக்குமென்று இச்செய்யுளால் கூறியதாகும்.

முழவொலி விண்ணவர் முதல்வற் காக்குறும்
விழவொலி கிணையொலி விரும்பு மென்சிறார்
மழவொலி கடைசியர் வள்ளைப் பாட்டொலி
யுழவொலி யல்கறு முலப்பு றுதவே.

(இ-ள்.) முழவின் ஒலியும், (மருதநிலக்கடவுளாகிய) தேவேந்திரனைக்குறித்துச் செய்யுந் திருவிழாவினொலியும், மருதநிலப்பறையினொலியும், விரும்புகின்ற மெல்லிய சிறுவர்கள் (சிறுதே ருருட்டுதல் முதலியவற்றா லுண்டாகிய) இளஞ்சொற்களி னொலியும், உழத்தியர்கள்பாடும் வள்ளைப்பாட்டினொலியும், உழவுத்தொழில் செய்தலா லுண்டாகின்ற வொலியும் எந்நாளும் நீங்காதனவா யிருக்கும்.—எ-று.

முழவு—அகமுழவு, அகப்புறமுழவு, புறமுழவு, புறப்புறமுழவு, பண்ணமை முழவு, நாண்முழவு, காலைமுழவு என எழுவகைப்படும். அவற்றுள் அகமுழவாவன உத்தமமான மத்தளம் சல்லிகை இடக்கை கரடிகை பேரிகை படகம் குடமுழாவென விவை; "தரித்த மதங்க மத்தளஞ் சல்லி - பெருத்த கரடிகையே பேரி—யுரத்த, படகங் குடமுழவம் பாங்காய வேழு - மடைவே முதற்கருவி யாம்." எனவரும் சுத்தாநந்தப்பிரகாசத்தா னுணர்க. அகப்புறமுழவாவன, மத்திமமான தண்ணுமை, தக்கை, தகுணிச்ச முதலாயின; புறமுழவாவன - அதமக்கருவியான கணப்பறை முதலியன; புறப்புறமுழவாவன-நெய்தற்பறை முதலியன; பண்ணமை முழவாவன, முரசு, நிசாளம், துடுமை திமிலை என்னும் வீரமுழவு நான்குமாம். நாண்முழவ வது, நாட்பறை; அதாவது நாழிகைப்பறை. காலைமுழவாவது துடியென்பது. கிணை = மருதநிலப்பறை. வள்ளைப்பாட்டாவது - உலக்கைப்பாட்டு. அது-சிலப்பதிகாரம் "தீங்கரும்பு நல்லுலக்கை யாகச் செழுமுத்தம் - பூங்காஞ்சி நீழல்வைப்பார் புகார்மகளி - ராழிக் கொடித்திண்டேர்ச் செம்பியன் வம்பலர்த்தார்ப் - பாழித் தடவரைத்தோட் பாடலே பாடல் - பாவைமா ராரிக்கும் பாடலே பாடல்" என்றிதுபோன்றுவருவன.

" மனையளகு - வள்ளைக் குறங்கும் வளநாட வள்ளுவனார் வெள்ளைக் குறட்பா விரி" என்றார் திருவள்ளுவமாலையினும், முழவொலி முதல் உழவொலி யீறாகிய பல்வகை யொலிகளும் என்று நீங்கா நிலைமையான் பெருவள முடையதென்பது பெறப்பட்டமை காண்க.

அந்நிலமாக்கள் தாங்கள் செய்த உழவுத்தொழிலால் விளைந்த பெருஞ்செல்வ நோக்கி களிப்பாடலைச் செய்யத்தொடங்கினாரென்று இச் செய்யுளாற் கூறியதாகும். (உகூ)

காலுற நிமிர்ந்திடு காமர் சோலையு
நீலமுங் கமலமு நிறைந்த பொய்கையு
மாலையங் கழனியு மநங்கற் காயுத
சாலைக ளிவையெனச் சாற்ற நின்றவே.

(இ-ள்.) கால்கள் பொருந்த வுயர்ந்திருக்கின்ற அழகிய சோலைகளும், நீலோற்பலமுந் தாமரைகளும் நிறைந்திருக்கின்ற தடாகங்களும், கரும்பையுடைய அழகிய வயல்களு மாகிய இவைகள் மன்மதனுக்கு ஆயுதசாலைக ளென்று சொல்லும்படி நிலைத்திருந்தன.—எ-று.

விண்ணளாவோங்கும் பெருஞ்சோலையென்பார் 'காலுற நிமிர்ந்திடுகாமர்சோலை' என்றுகூறினார். மன்மதனுக்குப் பூஞ்சோலை படைவீடும், அங்குள்ள அசோகமலர் மாமலர் முல்லைமலர் தடாகத்துள்ள நீலமலர் கஞ்சமலர் இவைகள் அம்புகளும், வயற்கண்ணுள்ள கரும்பு வில்லும் ஆக வமைந்துவிளங்கலான், "சோலையும் பொய்கையுங் கழனியும் அநங்கற் காயுதசாலைக ளிவையெனச் சாற்றநின்ற' என்றார். இவற்றை:— " தொடையிலஞ்சிமஞ்சளிளஞ் சோலை படைவீடு, படைமங் கையர்கமுகம் பாளை - யிடெவரி, காளாஞ்சி மல்லிகையாங்காரிகையீர் மாரனுக்கு, வாளாமோலைப்பூவுமால்" " ஆலைக் கரும்பு சிலை யைங்கணைபூ நாண்சுரும்பு, மாலைக் கிளிபுரவி மாருதந்தேர்— வேலை, கடிமுரசங் கங்குல் களிறுகுயில் காளங் - கொடிமகரந் திங்கள் குடை" " குடைகவித்த நன்கஞ்சங் கோதறுகு தப்பூ. கடியுமசோ கந்தளவு காவி—படையெடுத்து, வாங்காச் சமர்விளக்கு மாரனுக்கெப் போதுமங்கை, நீங்காக் கணையாகினை" எனவரும் இரத்தினச்சுருக்கத்தா னுணர்க.

மேற்கூறிவந்த உணவுப்பொருள்களும் சோலை முதலியவைகளும் நிறைந்திருக்குமாயின் அந்நாட்டிலுள்ளார் இம்மையி லனுபவித்தற்குரிய சிற்றின்பத்தைப் பேரின்பமாகவே யனுபவித்தற் குரியவராவா ரென்பது தோன்ற 'அனங்கற் காயுதசாலைகளிவை யெனச் சாற்ற நின்ற' என்று இச் செய்யுளாற் கூறினார். (௩௦)

நெறியிடை பொழுகலா விழுதை நீரரை
மறலிதன் னகரிடை வருத்தல் போலுமாற்
குறைபடத் துணித்தவன் குவைசெய் கன்னலை
யறைபடு மாலைக ளிடையிட் டாட்டலே.

(இ-ள்.) துண்டாக வெட்டப்பட்ட வளவிய குப்பலாக வுள்ள கருப்பங்கழிகளை அறைத்துப்பிழிகின்ற ஆலைகளி லிட்டு ஆட்டுதல் (எதுபோலுமெனின்) நன்மார்க்கத்திற்கடவாத இழிகுணமாக்களை இயமனானவன் தமது (சயமினி யென்னும்) நகரத்தில் (ஆலையிலிட்டு) வருத்துவதுபோல விளங்கும்.—எ-று.

கருப்பங்கழிகளை ஆலையிலிட் டாட்டுஞ் செயல், தீவினை யுடையோரை இயமன் தன்னகரத்து ஆலையிட்டாட்டன் முதலிய கொடுமைகளைச்செய்து அவர்கள் தீமையை யொழிக்குந்தன்மைபோன்று விளங்குமென்க.

நன்னெறியொழுகி நல்லறப்புரியாக் கீழ்மக்க ளறிவினரே யென்பார், 'நெறியிடை யொழுகலா விழுதை நீரனா' என்றும், அவர்கட்கே நரகவேதனை யுண்டா மென்பார், 'மறலிதன் னகரிடை வருத்தல்' என்றும், பெருங் கழிகளை யாலையிலிடுதல் கூடாமையின், 'குறைபடத் துணித்த' என்றும், நீர்வளத்தாற் பருத்துச் செழித்துள்ளனவென்பார், 'வண் குவைசெய் கன்னல்' என்றும், அவற்றை நெருக்கிப் பிழியும் நிலைமைய வென்பார், 'அறைபடு மாலைகள்' என்றுங் கூறினர்.

"தாயினும் நல்ல சங்கரன்" என்னுந் தமிழ்வேதப்படி சிவபெருமான் எவ்வுயிர்கட்குந் தாய்போற் றண்ணருள் புரியுந் தலைவனுயிருந்தும் உயிர்கள் நரகவாதனையிற் றுன்புறச் செய்வித்த னன்றே வெனின், அஃது அவ்வவ் வான்மாக்கள் செய்யுந் தீவினைக் கீடாகத் தண்டித்து அத் தீமையை யொழித்துப் புனிதராக்கற் கமைந்த மறக்கருணையேயாமென்க. இதனை, போற்றிப்பஃறொடை, "நட்டோங்கு, மிந்நிலைமைமானுடருக் கேயன்றியெண்ணிலா, மன்னுயிர்க்குமிந்தவழக்கேயாய்—முன்னுடைய, நாணுள்வளாயி லுடல்பிரித்துநல்வினைக்கண், வாணுளின்மாலா யயனுடு—நீணுகர், வானுடர்கோமுதலாம் வந்தபெரும்பதத்து, நானுவிதத்தா னலம்பெறுநாட்—டான்மாள, வெற்றிக்கடுந்தூதர் வேகத்துடன்வந்து, பற்றித்தம்வெங்குருவின் பாற்காட்ட—விற்றைக்கு, மில்லையோபாவி பிறவாமையென்றெடுத்து, நல்லதோரின்சொனவோகச்—சொல்லியிவர், செய்திக்குத் தக்க செயலுறுத்து வீரென்று, வெய்துற்றுறைக்கவிடைகொண்டு—மையறருஞ்,செக்கினிடைத்திரிந்துந் தீவாயிலிட்டெரித்துந், தக்கநெருப்புத்தூண்டழுவுவித்து—மிக்கோங்கு, நாராசங்காய்ச்சிச் செவிமடுத்துநாவரிந்து, மீராவுன்னூனைத்தின் னென்றடித்தும்—பேராம, லங்காழ்நகரத் தழுத்துவித்தும்பின்னுந்தம், வெங்கோபமாருத வேட்கையரா—யிங்கொருநா, ளெண்ணிமுதற் காணுத வின்னற்கடுநரகம், பன்னெடுநாட் செல்லும் பணிகொண்டு—முன்னுடிக், கண்டுகெடன்கழித்தல் காரியமாமென்றெண்ணிக், கொண்டுவருநோயின் குறிப்பறிவார்—மண்டெரியிற், காய்ச்சிச்சுடவறுக்கக் கண்ணுரிக்கநன்னிதிய, மீய்ந்தூத்தாய் தந்தைதம ரின்புறுதல்—வாய்த்தநெறி, யோடியதேரின்கீ ழுயிர்போனகன்றாலே, நீடு பெரும்பாவமின்றே நீங்குமென—நாடித்தன், மைந்தனையுமூர்ந்தோன் வழக்கேவழக்காக, நஞ்சனையசிந்தை நமன்றூதர்—வெஞ்சினத்தா, லல்லலுறுத்து மருநரகங்கண்டு நிற்க, வல்லகருணை மறம் போற்றி" என வருமாற்றா னுணர்க.

இச்செய்யுள் நரகயாதனை உவமையால் கரும்பினையாட்டுந் தன்மையை விளக்கியவாறுகும். (கூக)

ஏறுகாட் டியதிற லிளைஞ ரெந்திரங்
கூறுகாட் டியகழை யழுங்கக் கோறலுஞ்
சாறுகாட் டியதரோ யாதுந் தம்மிடை
யூறுகாட் டினர்க்கலா லுலோப ரீவரோ.

(இ-ள்.) ஆண் சிங்கம்போலும் வல்லமை பொருந்திய இளைஞர்கள் ஆலையின்கண் துண்டாக வெட்டப்பட்ட கருப்பங்கழி யழுந்தும்படி இட்டு ஆட்டுதலும் (அக்கழி) சாற்றைப் புறத்திற்சிந்தியது ; உலோபர்கள் தம்மிடத்து யாதேனும் சிறிது துன்பஞ் செய்பவர்களுக் கல்லாமல் (அவ்வாறு செய்யாதவர்களுக்குக்) கொடுப்பார்களோ ? (கொடார்).—எ-று.

"ஈயார் தேட்டை தீயார் கொள்வர்" என்றபடி தாமுண்ணுமலும் பிறர்க்குக் கொடாமலுஞ் சேகரித்துச்சேமித்துவைத்திருக்கு முலோபர்தம்முடைய செல்வ

த்தைக் கள்வர் முதலிய தீயோர் வருத்தப் பறிகொடுத் திழந்து துன்புறுவதுபோலக் கரும்பும் ஆலையிலிட்டாட்டச் சாற்றைப் பொழிதலின் அவ் வுலோபரோ டுவமித்துக் கூறினர். "உடாஅது முண்ணாதுந் தம்முடம்பு செற்றுங் - கெடாஅத நல்லறமுஞ் செய்யார்—கொடாஅது, வைத்திட்டி ஞரிழப்பர் வான்றோய் மலைநாட, வுய்த்திட்டுந் தேனீக் கரி" எனவரும் நாலடியா ரூமுணர்க. அரோ-அசைநிலை.

இதுவும் உலோபகுணத்தார் உதாரம் தங்களை வருத்துவோரிடத்ததென்று இவ்வுவமையாற் கூறியதாகும். (கூஉ)

மட்டுறு கழையினும் வலிதிற் கொண்டபி
னிட்டகொள் கலங்களி னிருந்த தீம்புன
லொட்டிடு கடலெனத் தோன்று மன்னவை
யட்டதோர் புகைமுகி லனையிற் றொக்குமே.

(இ-ள்.) அளவாகத் துண்டிக்கப்பட்ட கரும்பினின்றும் (சாற்றினை) வலிதாகக் கொண்டபின்பு, (ஆலையினருகில்) வரிசையாக வைத்துள்ள பாத்திரங்களில் ஊற்றிவைக்கப்பட்ட மதுரம்பொருந்திய அச்சாற்றின் பெருக்குகள் சகரர்களால் தோண்டப்பட்ட கடலைப்போல விளங்கும்; அச்சாற்றின்பெருக்குகளைக் காய்ச்சப்பட்டதனாலுண்டாகிய ஒப்பற்ற பெருப்புகையானது மேகங்கள் நிறைந்திருத்தலை யொத்திருக்கும்.—எ-று.

சகரர்கள் அறுபதினாயிரவரால் அசுவத்தைத் தேடும்பொருட்டுத் தோண்டப்பட்ட கடலாதலின் 'தொட்டிடுகடல்' என்று கூறினர். கலசத்திலுள்ள சாறு கடல்போன்றும் அதனைக் காய்ச்சும் புகை மேகம்போன்றும் விளங்குமென்க.

தீயோருக்கும் உலோபருக்கும் சான்றாய் நின்ற கருப்பாலையின் சிறப்பை இச் செய்யுளாற் கூறியதாகும். (கூகூ)

கூடின தேனிசை யிளமென் கோகிலம்
பாடின மயில்சிறைப் பறைய டித்தன
வாடின வஞ்சிதந் தலைய சைத்திடா
நாடின பாதவம் புகழ்வ நாரையே.

(இ-ள்.) வண்டுகள் இசைகூடின; இளமை பொருந்திய மெல்லிய அன்னப்பறவைகள் பாட்டுப்பாடின; மயில்கள் தஞ் சிறகுகளாகிய பறைகளையடித்தன; பூங்கொடிகள் ஆடின; மரக்கிளைகள் தந் தலைகளையசைத்து அவற்றைவிரும்பின; நாரைகள் புகழ்வனவாக விருந்தன.—எ-று.

ஒருவன் நடிக்கத்தொடங்கின் அதற்குப் பாடலும், இசையும், பறையும், தலையசைத்துக் கேட்போரும், புகழ்வோரும் வேண்டுவது அவசியமானவாறுபோல, அஃறிணைப் பொருள்களாகிய தேன்முதல் நாரையீறாக வுள்ள வனைத்தும் இசைகூட்டல் முதலிய தொழில்களைக் குறைவின்றிச் செய்தனவென்க. (கூச)

காசொடு நித்திலப் பொதிபுங் காட்டியே
பாசடை மாதுனை சினையிற் பைங்குயில்
பேசிட நிற்பன பெறிஇயர் வம்மென
விசுதல் கருதிய விளித்தல் போன்றவே.

(இ-ள்.) பச்சிலைகளை யுடைய மாதுளைமரங்கள் இரத்தினக்கிழிகளோடு முத்துக்கிழிகளையுங் காட்டிக் கிளைகளில் பசிய குயில்கள் பேசும்படி (உயர்ந்து) நிற்றல் (எதுபோலுமெனின், அவற்றை வேண்டுவோர்க்குக்) கொடுக்கக்கருதிப் பெற வேண்டியவர்கள் வாருங்களென்று அழைத்தலை யொத்திருந்தன.—எ-று.

மாதுளங்கனி விதை செந்நிறமும், காய் விதை வெண்ணிறமு முடையன வாகலின், செந்நிறம் காசுப்பொதியாகவும், வெண்ணிறம் நித்திலப்பொதியாகவு முவமித்துக்கூறினார். வீசுதல் = எறிதல்; அதாவது, சிறிதும் அஞ்சாது விரைந் தீதல். பொதி = முடிச்சு. பொதிகிழி என்பன ஒருபொருட்கிளவி. பொதி-முதனிலைத்தொழிலாகுபெயர். கனிகாய்கள் நிறைந்துள்ள மாதுளை மரங்கள் கிளைகளில் குயிலிருந்து கூவும்படி நிற்றல் தானங்கொடுக்க இரவலரை யழைத்தல்போன்றிருந்தனவென்க.

சித்திரக் கதலிமா வருக்கைத் தீங்கனி
துய்த்திட வரும்பய னுதவுந் தோற்றத்தா
லுத்தம முதலிய குணத்தி னோங்கிய
முத்திறத் தவர்கொடை மொழிய நின்றவே.

(இ-ள்.) அழகிய வாழையும், மாவும், பலாவுமாகிய இவற்றின் மதுரம்பொருந்திய பழங்கள் (யாவரும்) உண்ணும்படி வருகின்ற பயனைத்தருகின்ற காட்சியினால், உத்தமமுதலாகிய முக்குணங்களோடுஞ் சிறந்து விளங்குகின்ற மூவகை வள்ளல்களது ஈகைத்தன்மையை (யொப்பாகச்) சொல்லும்படி நின்றன.—எ-று.

மூவகை வள்ளலாவார்-முதலெழுவள்ளல், இடையெழுவள்ளல், கடையெழுவள்ளலென்பவர்கள். இவருள், முதலெழுவள்ளல் உத்தமகுணத்தோடு வரைவின்றி யாவர்க்குங் கொடுக்கும் வள்ளற்றன்மைபோல, கதலியும் உண்ண விரும்பியவர்கள் இலேசானே தோலை யுரித்தவுடனே யுண்ணப் பயன்படுந்தன்மையால் அதனை முதலெழுவள்ளலோ டுவமித்தும், இடையெழுவள்ளல் மத்திமகுணத்தோடு தம்பாலடைந் திரந்தோர்க்குக் கொடுக்குந் தன்மைபோல, மாவும் உண்ண விரும்பியவர்கள் சுரிகையா லரிந்து அல்லது கடித்துண்ணப் பயன்படுந் தன்மையால், அதனை இடையெழுவள்ளலோ டுவமித்தும், கடையெழுவள்ளல் அதமகுணத்தோடு தம்மைப் புகழ்வோர்க்குக் கொடுக்குந் தன்மைபோல வருக்கையும் உண்ண விரும்பியவர்கள் சுரிகையால் முட்புறத்தோலை யறுத் தகற்றிப் பிளந்து சுளைகளைச்சூழ்ந்துள்ள நரம்புமுதலியவற்றைக் களைந்தெறிந்தபின்னுண்ணப் பயன்படுந் தன்மையால் கடையெழுவள்ளலோ டுவமித்துங் கூறினார். மூவெழுவள்ளலாவா ரிவரென்பதனை—" மிக்கசெம்பியனே காரி விராடனே நிருதி தானுந்-தக்கதுந் துமாரி தானுஞ் சகரனு நளனுந் தாமுன் - னக்கிரன் சந்தி மானொ டந்திமான் சிசுபா லன்னே - வக்கிரன் கன்னன் சந்த னிடைவள்ளல் வகுத்த வாறே" பாரியா யெழிலி நள்ளி பசுந்தொடை மலையன் பேக - னோரியே கடையி லுற்றோ ருறுபொரு டண்டா தீந்தும் - வாரியி லிரந்தோர்க் கிட்டும் வளர்புகழ் துதிக்க வீந்தும் - பேரியல் வைய மெண்ணப் பெற்றனர் முப்பாலாகும்" என வருஞ் சூடாமணி நிகண்டா னுணர்க. பல்வேறுவகைப்பட்ட நிறங்களையு முருவங்களை யுமுடைமையால், 'சித்திரக்கதலி' என்றும், முக்கனிகளில் மதுரமிக்கதென்பார், 'வருக்கைத் தீங்கனி' என்றுங் கூறினார். (௩௬)

வீசுகால் பொரவசை விசும்பிற் றுழைக
டேசுலாம் பரிதிமெய் தீண்டுஞ் செய்கைய

காசினி தன்கையாற் கலைவெண் டிங்கள்போன்
மாசுறு வகைதுடைத் திடுதன் மாறுமே.

• (இ-ள்.) வீசுகின்ற காற்றுனது மோதுதலால் ஆகாயத்திலுயர்ந்து அசைகின்ற தென்னமரங்கள் ஒளிவிளங்குகின்ற சூரியனது உடலைத் தொடுகின்ற செய்கை பெறுபோறுமெனின், கலைகள் பொருந்திய வெள்ளிய சந்திரனைப்போல அழுக்கடையாவண்ணம் பூமிதேவியானவள் தன்னுடைய கைகளினால் (அச்சூரியனைத்) துடைத்தலை யொத்திருக்கும்.—எ-று.

காற்று சதாகதி யென்னும் பெயரினதாகலின், 'வீசுகால்' என்றும், அது உரத்துத் தாக்குதலின், 'பொர' என்றும், அதுகாரணமாக அவ்வாயுமண்டலத்தையுங் கடந்தோங்கிய தாழைகளசைதலின், 'அசைவிசும்பிற்றாழைகள்' என்றும், முச்சுடரினும் முதற்சுடராய சூரியன் எச்சுடரையுந் தன்னொளியுள் ளடக்கி யோங்கும் பேரொளியினனாதலின், 'தேசுலாம்பரிதி' என்றும், காற்றுனசையுந் தென்னமரங்களச்சூரியனைத் தொடுதல் உடற்களங்கத்தையுடைய சந்திரனைப்போலக் களங்குறுவண்ணம் பூமிதேவி தன் கையாற் றுடைத்தல் போன்று விளங்குதலின், 'மெய்தீண்டுஞ் செய்கைய - காசினி தன்கையாற் கலைவெண் டிங்கள்போன் - மாசுறு வகைதுடைத் திடுதன் மாறும்' என்றுங் கூறினர். தாழைகள் தீண்டுஞ் செய்கைய காசினி தன் கையால் துடைத்திடுதல் மாறும்' எனக் கூட்டுக. (கூஎ)

வாசநீள் பொழும்பரின் மைந்தர் மாதர்கள்
காசுநூன் மேகலை பரியக் கைவளை
பூசலிட் டலமரப் புணருஞ் செய்கைகண்
டாசைமிக் கழுங்குவ பிரிந்த வன்றிலே.

(இ-ள்.) வாசனைமிக்க பூஞ்சோலைகளில் ஆடவர்களும் மங்கையர்களும், இரத்தினநூல்களி னமைக்கப்பட்ட மேகலாபரணம் நெகிழவும், கையிலணிந்த வளையல் ஒன்றோடொன்று தாக்கி யலைந்து சப்திக்கவும் புணர்கின்ற செய்கையைப் பார்த்துத் (தன் துணையைப்) பிரிந்த அன்றிற்பறவைகள் காமமிக்கு வருந்துவனவாகும்.

அன்றிற்பறவைகள்தந் துணையைப் பிரிந் திறையளவேனுந் தனித்துத் தரித்திரா த் தன்மையன வாகலின் அவை மைந்தரும் மங்கையரும் புணர்தலைக் கண்டு தந் துணையைச் சிந்தித்து நாமுமிவ்வாறு புணர்தற் கமையவில்லையே யென்று வருந்தின வென்பார், 'ஆசைமிக்கழுங்குவபிரிந்தவன்றில்' என்று கூறினர். அன்றில்-பிரிவாற்றுப்பறவை வர்க்கத்துட் சிறந்தது.

கூடின என்னுஞ் செய்யுள்முதல் இச்செய்யுள்காறும் பறவைகளின் சிறப்பும் பல விருக்கங்களின் சிறப்பும் வியந்து கூறியதாகும். (கூஅ)

கானுலா நந்தன வனமுங் காமான
வானுலாந் தண்டலை மருங்கும் வைகலும்
வேனிலா னன்னவர் மகளிர் மேயினு
ரூனுலாங் குரம்பையு ளுயிருற் றென்னவே.

(இ-ள்.) நறுமணங்கமழும் நந்தனவனங்களிலும், மேகம்போன்று விண்ணுலகத்தை யளாவிய சோலைகளி னருகிலும் நாள்தோறும் ஊன் அமைந்த உடம்பின்

கண் உயிர் பொருந்தி யிருப்பதுபோல், மன்மதனையொத்த (அழகினையுடைய) புருட ர்களும் மாதர்களுங் கலந்திருந்தார்கள்.—எ-று.

பல்வகை மலர்களும் பூத்து மணம்விரியப்பெற்றதாகலின், 'காறுலா நந்த னவனம்' என்றும், செழித்து வளர்ந் தோங்கி யிருக்கப்பெற்ற தாகலின், 'கானொ வாறுலாந் தண்டலை' என்றும், காமவின்பந் துய்த்தற்கு வசதியாயுள்ளன நந்தனவன முதலியனவே யாகலின், 'நந்தவனமும் தண்டலைமருங்கும் வைகலும் வேனிலா னன் னவர் மகளிர் மேயினர்' என்றும், அவர்கள் உடலு முயிரும்போல நீங்கா துடனுறை யப்பெற் றின்புற்றிருத்தலின், 'ஊனுலாங் குரம்பையு ளுயிருற் றென்ன' என்றுங் கூறினர். வசந்தகாலம் மன்மதனுக்குரியதாகலின், அவனுக்கு 'வேனிலான்' என்னும் பெயர் வழங்கப்பட்டது.

இச் செய்யுளால் மேற்கூறிய வளமிக்க அச்சோலை காமுகருக்கு அந்தரங்க விடமா யுள்ளதென்று கூறியதாகும். (௬௯)

அசும்புறு மகன்புன லறுத சூழலின்
விசும்புற வோச்சிய விரைமென் றூதினாற்
பசும்பொனிற் குயிற்றிய பதியிற் றூபிகைத்
தசும்பெலாம் வெள்ளிய தாக்குந் தாழையே.

(இ-ள்.) சுரக்கின்ற மிக்க நீர்நீங்காத நல்லிடங்களினின்றும், ஆகாயத்திற் பொருந்தும்படி வீசிய நறுமணங்கமழும் மகரந்தப்பொடிகளினால், அவ்வந் நகரங்க ளில் பசும்பொன்னினாற் செய்யப்பட்ட ஸ்தூபிகைக் கலசங்க ளனைத்தையும் தாழை கள் வெண்ணிறமாகச்செய்யும்.—எ-று.

மழை இடை விடாது மாதமும்மாரி பெய்யுங் காரணத்தால் சதாகாலமும் சுரப்பு நீர் மிகுதியாகப் பெற்றிருக்குந் தன்மையுண்மையால், 'அசும்புறு மகன்புன லறுத சூழலின்' என்றும், தாழைகள் மடலவிழ்ந்து வீசிய மகரந்தங்கள் விண்ணளவுஞ் சென்று பரவுதலினால், 'விசும்புற வோச்சிய விரைமென் றூதினால்' என்றும், அம் மக ரந்தங்கள் பரவிப் படியுங் காரணத்தால் மாளிகைகளின் மேலமைந்துள்ள பசும்பொற் கலசங்களனைத்தும் அப் பொன்னிற நீங்கி வெண்ணிறமுற்று விளங்கலால், 'பசும் பொனிற் குயிற்றிய பதியிற் றூபிகைத்-தசும்பெலாம் வெள்ளிய தாக்குந் தாழை' என் றுங் கூறினர்.

இச்செய்யுளால், மாளிகைகளின்மேலுள்ள பசும்பொற் கலசங்கள் வெண் பொற்கலசங்கள்போன்று விளங்கி, அவற்றை யுடையோர்க்கு வியப்புண்டாகச் செய் யுமென்று கூறியதாகும். (௭0)

உற்றிட வரிதவ னுழவர் நீத்ததார்
சுற்றிடுந் தாண்மிசை யிடறுஞ் சூல்வளை
தெற்றிடும் பூங்கொடி புடைக்குஞ் சேலின
மெற்றிடுந் தேம்பழ மிழுக்குந் தேன்களே.

(இ-ள்.) உழவர்கள் கழற்றியெறிந்த மாலைகள் கால்களில் சுற்றிக்கொள் ளும், சூல்கொண்ட சங்கினங்கள் காலிடறச்செய்யும், பூங்கொடிகள் தடுக்கும், சேற் கெண்டையின் கூட்டங்கள் சுழன்றடிக்கும், மதுரமாகிய பழங்கள் மோதும், தேனீ

ன் பெருக்குகள் காலை வழுக்கும்; ஆதலால், அம் மருதநிலவிடங்களில் யாவரும் அடைதற் கருமையாகும்.—எ-று.

உழவர்கள் தமது தொழிற் கிடையூறுயுள்ள காரணத்தால் நீக்கிய மலர்மாலைகள் கயிறுபோன்று வளைந்தும் நீண்டுமிருக்கின்றமையால், 'உழவர் நீத்ததார் தாள்மிசை சுற்றிடும்' என்றும், சங்கினங்கள் அங்கங் குயர்ந்து கற்குண்டுகள் போன்று காலிடறச்செய்தலின், 'இடறுஞ் சூல்வளை' என்றும், பூங்கொடிகள் கயிறுபோலக் கால்களைத் தடுத்தலின், 'தெற்றிடும் பூங்கொடி' என்றும், சேலினங்கள் தாவிப்பாய்தலின், 'புடைக்குஞ் சேலினம்' என்றும், தேம்பழங்களும் சேலினம்போலவே வீழ்ந்து தெறித்துத் தாக்குதலின், 'எற்றிடுந் தேம்பழம்' என்றும், தேன் பெருக்குகள் சேறுபோலக் கால்வழுக்கச்செய்தலின், 'இழுக்குந் தேன்கள்' என்றும், இத்தகைய பல காரணங்களால் அவ்வயலிடங்களில் எவர்களு மடைதற் கருமையாகலின், 'உற்றிட வரிதவண்' என்றுங் கூறினார்.

இச்செய்யுளால் தொண்டைநாட்டிலுள்ள மருதநிலம் அந்நிலமாக்களோடு ஏனைய நில மாக்களாலும் அடைதற்கரிதென்று கூறியதாகும். (சுக)

கானிமிர் கந்திகள் கான்ற பாளைமேன்
மீனினம் பாய்தலுஞ் சிதறி வீழ்வுறு
வானறோர் மருதவைப் படையுந் தன்மைய
வானுறு தாரகை வழுக்கிற் றொக்குமால்.

(இ-ள்.) கால்க ளுயர்ந்திருக்கின்ற கமுகமரங்கள் ஈன்ற பாளைகளின்மேல் சேற்கெண்டையினினங்கள் தாவிவிழவும் அப்பாளைகள் சிதறுண்டு வீழ்ந்து நீர்வளமிக்க வயலிடங்களை யடையுந் தன்மையனவாயிருத்தல் (எதுபோலுமெனின்,) ஆகாயத்திற் பொருந்திய நக்ஷத்திரங்கள் தவறி விழுதலை யொத்திருக்கும்.—எ-று.

மீனினம் பாய்தலால் கமுகம்பாளையி னரும்புகள் சிதறி வீழ்ந்து வயலிடங்களை யடைதல் நக்ஷத்திரங்கள் வழுக்கி வீழ்தல் போன்றிருக்குமென்று கூறியதனால், அவ்வரும்புகள் வெண்ணிறமுடையதென்பதும், அவ்வரும்பையுடைய கமுகமரங்கள் விண்ணளவும் வளர்ந்தோங்கியுள்ளன வென்பதுங் கூறியதாகும். அன்றியும், தாரகைகள் விண்மீன் என்னும் பெயரினவாகலின், அவ் விண்மீன் இம் மண்மீனோடு பொருந்திய நட்பின் றன்மையாலும், அவ் விண்ணகத்திலும், இம் மண்ணகத்துள்ள மருதவைப்பே தாம் குறைவின்றி வசித்தற்குரிய நீர்வளமுடைமையாலும் இங்கு வசித்தற்குக் கருதி வழுக்கி வீழ்ந்தது போன்றிருந்ததெனக் கூறலும் ஒன்று. (சுஉ)

மாகுல வல்லியின் மஞ்ஞை யாடல்போற்
கோகில மார்தருக் குழாத்தி னூசன்மேற்
பாகுல வின்சொலார் பவிக்கு மெல்லிடைக்
காகுலம் பிறர்கொள மகிழ்வி னாடுவார்.

(இ-ள்.) சிறந்த பூங்கொடியின்மேல் மயில்க ளாடுவதுபோலக், குயில்கள் வசிக்கின்ற மாமரக்கூட்டங்களிற் கட்டிய ஊசல்களின்மேல் பால்போலும் இனிய சொற்களையுடைய மாதர்கள் துவளுகின்ற மெல்லிய இடையைக்குறித்துப் பிறர் துன்பமுறும்படி சந்தோஷத்தோடும் ஆடுவார்கள்.—எ-று.

நறுமலர்பொலியும் பூங்கொடியென்பார், 'மாகுலவல்லி' என்றும், குயிற்ளுெகுகிகள் சிறந்து வசித்தற்குரியன மாந்தருக்களென்பார்,'கோகிலமார்தருக்குழாம்' என்றும், பால்போலு மினிமையுந் தெளிவு முடைய சொல்லின ரென்பார், 'பாகுல வின்சொலார்' என்றும், அத்தகைய சொற்களையுடைய மாதர்களாடுதலின் இடை துவளுந்தன்மையால், அதனைக் காண்போரும் அம்மாதர்கட்குரிய நாயகர்களும் வருந்துவரென்பார்' 'பளிக்கு மெல்லிடைக் காகுலம் பிறர்கொள' என்றும், அவ்வாறு அவர்கள் வருந்திலும் தங்கட்குச் சிறிதுந் துன்பின்றி மகிழ்ந்தாடுவரென்பார், 'மகிழ் விஞடுவார்' என்றுங் கூறினர். (௪௩)

வேறு.

ஊச லுற்றவர் குழைக்குடைந் திடுதலா லுவளை
வீச லொப்பன வாடுதல் கிளிமொழி வெருவிப்
பேச லொப்பன வீழ்ந்திலர் பிழைந்ததீ தென்று
வேச லொப்பன கோகிலப் பறவைக ளிசைத்தல்.

(இ-ள்.) ஊசல்கள் ஆடுதல் (எதுபோலுமெனின்) தம்மேலேறி யாடுகின்ற மாதர்களுடைய செவிகளுக்கு(ஒப்பாகாமல்)தோற்ற தன்மையினால், அம் மாதர்களை வீசுதலை யொத்திருக்கின்றன; கிளிகள் சொல்லும் சொற்கள் (அவ்வாறு எறிதலைக்கண்டு)பயந்துபேசுதலை யொத்திருக்கின்றன; குயிற்பறவைகள் பேசுதல் (அம்மாதர்கள் அவ்வீசுதலினால்) கீழே விழாதவர்களாய்ப் பிழைத்திருத்தல் ஈதென்ன வியப்பென்று அவர்களை இகழ்தலை யொத்திருக்கின்றன.—எ-று.

"காதிற்கு வள்ளை-ஒப்பரிய கத்தரிகை யூசலாம்" என்றபடி காதிற்கு உவமிக்கப்படு பொருள்களில் ஒன்றாகவுள்ள ஊசல், மாதர்களது செவிகளுக்குத் தோற்ற காரணத்தால் அவர்களை வீசி யெறிவது போன்று விளங்குதலின், 'ஊச லுற்றவர் குழைக்குடைந் திடுதலா லுவளை-வீச லொப்பன வாடுதல்' என்று கூறினர். வீழ்ந்திலர் பிழைத்த தீது என்பதற்கு, இம்மாதர்கள் விழாமல் பிழைத்ததன்மை தீமையாகும் எனப் பொருள் கூறினுமாம். (௪௪)

கூர்ப்புக் கொண்டகட் கொடிச்சியர் குளிர்புனங் காப்போ
ரார்ப்புக் கொண்டுகை விசைத்தெறி மணிக்கல்வந் தணையச்
சார்ப்புக் கொண்டதஞ் சிறகரால் விலக்கியத் தடத்துப்
பார்ப்புக் கொண்டுகொண் டெழுவன தோலடிப் பறவை.

(இ-ள்.) குளிர்ந்த வயல்களைக் காக்கின்றவர்களாகிய கூரிய தன்மையைக் கொண்ட கண்களை யுடைய உழத்தியர்கள் ஆரவாரித் தெழுந்து தங் கைகளால் வீசி யெறிகின்ற மாணிக்கக்கற்கள் வந்தடைதலினால் தோலடிகளையுடைய அன்னப்பறவைகள் சார்பாகக்கொண்ட தமது சிறகுகளினால் அக்கற்களைத் தடுத்து, அத்தடாகங்களிலுள்ள தங் குஞ்சுகளை யணைத்துக்கொண்டு செல்வனவாகும்.—எ-று.

வேல்போற் கூரிய கண்ணினராகலின், 'கூர்ப்புக்கொண்ட கட்கொடிச்சியர்' என்றும், நீங்கா நீர்வளத்தனவாகலின், 'குளிர்புனம்' என்றும், அப் புனங்காப்போர் வளங்களை யழிக்கும் பறவைகளைத் துரத்துங்கால் ஒருவகைப் பேரிரைச்சலுடன் மணிக்கற்களை வீசுதலின், 'ஆர்ப்புக் கொண்டு கை விசைத்தெறி மணிக்கல்' என்றும், அக்கற்களை வீசுதலால் அன்னப்பறவையினங்கள் அவற்றைச் சிறகாற் றடுத்துத் தங்

குஞ்சுகளைத் தூக்கிப் பறந்து செல்லுதலின், 'சார்புக் கொண்டதஞ் சிறகரால் வில க்கியத் தடத்துப்-பார்ப்புக் கொண்டுகோண் டெழுவன தோலடிப் பறவை' என்றுங் கூறினர். சார்பு என்பது சார்ப்பு என விரித்தல் விகாரம் பெற்றது. (௬௫)

வேறு.

கடற்பரு கியமுகில் பெய்யுங் காட்சிபோ
லடற்பெரு மேதிக ளனைத்தும் புக்குராய்த்
தடப்புனல் வறிதெனப் பருகித் தம்முலைக்
குடத்திழி பாலினாற் குறையைத் தீர்க்குமே.

(இ-ள்.) கடல் நீரை யுண்ட மேகங்கள் பின் மழை நீரைப் பெய்யுங் காட்சி யைப்போல, வலிமைமிக்க பெரிய எருமைக்கடாக்க ளனைத்துஞ் சென்று விழுந்து கலக்கித் தடாகத்துள்ள நீரை யில்லையென்று சொல்லும்படி யுண்டு, தம் மடிகளாகிய குடங்களினின்று மொழுகுகின்ற பாற்பெருக்கினால் அத்தடாகத்தின் நீர்க்குறையை யொழிக்கும்.—எ-று.

இதனால், கடனீரைப் பருகிய மேகங்கள் அந்நீரை நன்னீராக்கி அக்கடலுக் குத் தருந்தன்மைபோல, தடாகத்துள்ள நீரை யுண்ட எருமையினங்கள் அந்நீரைப் பானீராகத் தம் மடிவழியே தருமென்றதனால், அஃறிணையாகிய மேதியினங்களும் கைம்மாறு கருதிச் செய்யுமென்று குறித்ததாகும். (௬௬)

பாட்டிய லளிமுரல் பதுமக் கோயிலி
னாட்டிய நிமலன்மு னந்தி நீரிடை
மாட்டிய பல்பெருஞ் சுடரை மானுமாற்
கோட்டுயர் தடந்தொறுங் குவளை பூத்தவே.

(இ-ள்.) கரைகளினாலுயர்ந்திருக்குந் தடாகங்கடோறும் செங்குவளை மலர் கள் பூத்திருக்குங் காட்சியானது, (எதுபோலுமெனின்) பாட்டினியலை யுணர்ந்த வண்டுகள் சூழ்ந்து மொய்க்கின்ற கமலாலயமென்னுந் திருக்கோயிலில் வீற்றிருந்தரு ளுஞ் சிவபெருமான் றிருமுன்னே நமிநந்தியடிகளாயனார் (திருக்குளத்து) நீரைவார்த் துக் கொளுத்திய பெரிய பல தீபங்களை யொத்திருக்கும்.—எ-று.

பதுமம் என்றதற்கேற்பப் 'பாட்டியலளி,' என்று கூறினர். முத்தமிழ்ப் பா ட்டி னியலையுணர்ந்த (மெய்யடியார்களாகிய) வண்டுகள் சூழ்ந்து துதிக்கின்ற கமலா லயம் என்னும் பொருள் விளங்க, 'பாட்டியலளி முரல்பதுமக் கோயில்' என்றார்.

'நிமலன்முனந்திநீரிடை - மாட்டியபல்பெருஞ்சுடர்' என்பதன் வரலா று.—சோனாட்டில் ஏமப்பேரூரில் அந்தணர் குலத்திற்பிறந்த நமிநந்தியடிகளாய னார் திருவாரூருக் கெழுந்தருளி அத்தலத்திலுள்ள அரனெறியப்ப ராலயத்திற் சென்று தரிசனஞ் செய்கையில் அவ்வாலயத்தில் தீபங் குறைவாயிருந்தமை கண்டு மிகுதியுந்தீபம் வைக்கவேண்டுமென்று அன்பு மேற்கொண்டு, அருகிலிருந்த வீடுக ளிற் சென்று நெய்கேட்க, அவர்கள் சமணராகையால் உங்கள் கடவுள் கையில் தீயி ருக்கையால் வேறு தீபம் வைக்கவேண்டுமென்பது மிகையென்றும், அவ்வாறு தீபம் வைக்கவேண்டுமென்ற கருத்துண்டாயின் இத்திருவாரூர்க் கமலாலய தீர்த்தத்தி னீரையே யகலிற்பெய்து விளக்கெரிக்கலாமென்றுமிகழ்ந்துகூற, அதைக்கேட்டு மன ம்வருந்திநின்றனர். அப்பொழுது சிவபெருமான் அசரீரிவாக்கால் அன்பனே நீயஞ்ச

வேண்டா, நீ இத் திருக்குளத்து நீராலே தீபமேற்றலாமென்ன, அவ்வாறேயவ் வால யத்தி னகல்களிற் பெய்து விளக்கெரித்தனரொன்பதாம். (௪௭)

கலனிடைத் தருவதுங் கானந் துள்ளதும்
பொலனுடைப் பொருப்பிடைப் பொருளு மல்லது
நலனுடை நாட்டவர் நயந்த லின்றியந்
நிலனிடைப் பொருள்பகர் வழக்க நீத்ததே.

(இ-ள்.) சப்பல்களிற் கொண்டுவரப்பட்ட கடல்படு பொருள்களும், காட்டிலுள்ளதாகிய காடுபடுபொருள்களும், பொற்சுரங்கங்களையுடைய மலைகளிலுள்ளதாகிய மலைபடுபொருள்களுமேயன்றி, நன்மைமிக்க அந்நாட்டிலுள்ளவர்கள் வேறுபொருள்களை விரும்பி வாங்குத லின்மையினால், நாடுபடுபொருள்களை விற்கின்றவழக்கத்தை அந்நாடு ஒழிந்துள்ளது.—எ று.

கடல்படுபொருள் ஐந்து,—அவை-ஒக்கோலை, உப்பு, சங்கு, பவளம், முத்து என்பன ; காடுபடுபொருள் ஐந்து,—அவை-அரக்கு, இருல், தேன், நாவி, மயிற்பீலி யென்பன ; மலைபடுபொருளைந்து,—அவை-கோட்டம், மிளகு, அகில், தக்கோலம், குங்குமம் என்பன ; நாடுபடுபொருளைந்து,—அவை கரும்பு, சிறுபயறு, செந்நெல், செவ்விளநீர், வாழையென்பன. (௪௮)

யாழ்க்கையர் பொருநருக் கிறைவ ரேழிசை
வாழ்க்கைய ரளவையின் வகுத்த பாடலைக்
கேட்குநர் நன்றென மருப்புக் கிம்புரிப்
பூட்கைக ளுதவுவார் பொதுவி றோறுமே.

(இ-ள்.) யாழைக்கையிலுள்ளவர்களும், ஆடலாசிரியர்களும், சப்தசுரங்களும் இனிதுவாழப்பெற்றவர்களு மாகிய சங்கீதவித்துவான்கள் (பாணியின்) அளவைப்படி வகுத்துப் பாடுகின்ற இசைப்பாடல்களைக் கேட்கின்ற பிரபுக்கள் நன்றென்று மதித்து பூண்கட்டப்பட்ட தந்தங்களையுடைய யானைகளைப் பரிசாகச் சபையிடங்கடோறுங் கொடுப்பார்கள்.—எ-று.

நால்வகை யாழினையும் இடைவிடாது வாசித்தலிற் கைதேர்ந்தவர்களென்பார், 'யாழ்க்கையர்' என்றும், பலவிடத்தும் நடித்துத்தேர்ந்தவர்களென்பார், 'பொருநருக்கிறைவர்' என்றும், சப்தசுரங்களுங் குடிகொண்டிருக்கப்பெற்ற கொள்கையினரொன்பார், 'ஏழிசைவாழ்க்கையர்' என்றும், அவர்களுக்குப் பரிசாகத்தருவது மதயானைகளேயென்பார், 'மருப்புக்கிம்புரிப் பூட்கைகளுதவுவார்' என்றுங்கூறினர்.

நால்வகையாழ்:—பேரியாழ்-சகோடயாழ்-மகரயாழ் - செங்கோட்டியாழென்பன, இவற்றின் வகையை முன்னர்க் காண்க.

எழிசை யாவன :—குரல் - துத்தம் - கைக்கிளை - உழை - இளி - விளரி - தாரம் என்பன. இவையே சப்தசுரமெனவும், வீணையினேழ் நரம்பெனவும் பெயர்பெறும் இவற்றுள், குரலே குரலாயிற் செம்பாலையும், துத்தமே குரலாயிற் படுமலைப்பாலையும், கைக்கிளையே குரலாயிற் செவ்வழிப்பாலையும், உழையே குரலாயின் அரும்பாலையும், இளியே குரலாயிற் கொடிப்பாலையும், விளரியே குரலாயின் விளரிப்பாலையும், தாரமே குரலாயின் மேற்செம்பாலையுமாகும். செம்பாலைக்குப் படுமலைப்பாலையும், படுமலைப்பாலைக்குச் செவ்வழிப்பாலையும், செவ்வழிப்பாலைக்கு அரும்பாலையும், அரும்பாலைக்குக் கொடிப்பாலையும், கொடிப்பாலைக்கு விளரிப்பாலையம், விளரிப்பாலைக்கு மேற்செம்பாலையும் வலியன. தாரத்துள் உழையும், உழையுள் குரலும்,

குரலுள் இளியும், இளியுள் துத்தமும், துத்தத்துள் விளரியும், விளரியுள் கைக்கிளையும் பிறப்பதுசகுறி. இவற்றுள் மிடற்றால் குரலும், நாவினால் துத்தமும், அண்ணத்தால் கைக்கிளையும், சிரத்தால் உழையும், நெற்றியால் இளியும், நெஞ்சால் விளரியும், மூக்கால் தாரமும் பிறக்கும்; இவற்றிற்கு மாத்திரை குரல்நான்கு, துத்தம்நான்கு, கைக்கிளைமூன்று, உழை இரண்டு, இளிநான்கு, விளரிமூன்று, தாரம் இரண்டு. இவற்றிற்கோசை வண்டு - கிளி - குதிரை - யானை-குயில் - தேனு - ஆடு. இவற்றினெழுத்து, ஆ - ஈ - ஊ - ஏ - ஐ - ஓ - ஔ. இவற்றின்மணம்- மௌவல், முல்லை, கடம்பு, வஞ்சி, நெய்தல், தாமரை, புன்னை. இவற்றின் சுவை-பால், தேன், கிழான், நெய், ஏலம், வாழை, மாதுளங்கனி. இவற்றிற்குத் தலைவர் - விசுவாமித்திரன் - இயமன் - அங்கி - சந்திரன் சூரியன், கௌதமன், காசிபன் என்பவர்களாம். இவற்றை :—"குரலேதுத்தங் கைக்கிளையுழையே - யிளியேவிளரிதாரமென்றிவை - யேழும் யாழினிசை யெழுத்தம்பே" எனவும், "குரல் குரலாயிற் செம்பாலையென்ப" "துத்தங்குரலாகிற் படுமலைப்பாலை" "கைக்கிளை குரலேற் செவ்வழிப்பாலை" "உழைகுரலாகில ரும் பாலையென்ப" "இளிகுரலாகிற் கொடிப்பாலையென்ப" "விளரிகுரலாகின் விளரிப்பாலை" "தாரங்குரலேன்மேற்செம்பாலை" எனவும், "ஆயவையேழும் பாலையவற்றுட் - செம்பாலைக்குப் படுமலைப்பாலை - படுமலைப்பாலைக்குச் செவ்வழிப்பாலை - செவ்வழிப்பாலைக் கரும்பாலையாகும் - அரும்பாலைக்குக் கொடிப்பாலைவலிதே - கொடிப்பாலைக்கு விளரிப்பாலை - விளரிப்பாலைக்கு மேற்செம்பாலை - வலிதென் றுணாத்தனர் வான்றமிழ்ப்புலவர்" எனவும், தாரத்துளுழையு முழையுட் குரலுங்-குரலுளிளியு மிளியுட்டுத்தமுந்-துத்தத்துள் விளரியும் விளரியுட் கைக்கிளையுந்-தம்மிற்பிறக்குந் தகுதியவென்ப" எனவும், "குரலதுமிடற்றிற் றுத்தநாவினிற் - கைக்கிளை யண்ணத்திற் சிரத்திலுழையே - இளிநெற்றியினில் விளரிநெஞ்சினில் - தாரநாசியிற் றம்பிறப்பென்ப" எனவும், "நான்கு நாலு மூன்றுமிரண்டு - நான்கு மூன்றுமிரண்டு மாத்திரை - குரன்முதலாகக் கூறுமென்ப" எனவும், "வேண்டியவண்டுமொண்டகுகிளியுங் - குதிரையும் யானையுங் குயிலுந்தேனுவு-மாடுமென்றிவை யேழிசையென்ப" எனவும், "ஆஈ ஊஏ ஐஓ ஔ வென்-றேழுமேழிசைக் கெய்துமக்கரங்கள்" எனவும், "மௌவன் முல்லை செவ்விணர்க்கடம்பு - வஞ்சிநெய்தல் வனசம் புன்னை - எஞ்சலில்லா வேழிசைமணமே" எனவும், "பாலுந்தேனுங் கிழானுநெய்யு - மேலமும் வாழையு மாதுளங்கனியு - மாகுமேழிசைக் கமைந்தநன்சுவையே" எனவும், "விசுவாமித்திரனியமனங்கி - திங்கள் வெய்யோன் கௌதமன் காசிப - னென்றிவரேழிசைக்கிறைவரென்ப" எனவும் வரும் பிங்கலந்தைச் சூத்திரங்களானுணர்க. (௪௧)

கஞ்சிமீதப்ப் புண்டகில் கமழும் பூந்துகில்  
வஞ்சிமேதப்ப் புண்டன மருங்குலாரடி  
பஞ்சிமேதய்ப் புண்டன பணியத் தாக்கலாற்  
குஞ்சிமேதய்ப் புண்டன குமரர் கூட்டமே.

(இ-ள்.) கஞ்சியினால் தேய்க்கப்பெற்று அகில்மணம்வீசுகின்ற அழகிய ஆடையையணிந்த பூங்கொடிபோலுஞ் சிற்றிடையினையுடைய மாதர்களது கால்கள் செம்பஞ்சின் குழம்பூட்டப்பெற் றன்னன, ஆடவர்கள் வணங்க அம்மாதர்கள் உதைத்தலினால் புருடர் கூட்டங்கள் தலைமயிர்தேய்ப்புண்டன.—எ-று.

மாதராருடலில் ஆடவர் அவர் காண்மலரிற் பணிதலியற்கை; அது ஊடனீக்கும்பொருட்டென்க. அவ்வூடனிகழாமையிற் காமவின்பந் தோன்றாதெனவறிக. இதனை - "ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங் - கூடி முயங்கப்பெறின்" என

வருந் திருக்குறளா லுணர்க. இதுபற்றியே "குளிர்புனமொய்த்திட்ட சாரலிற்போய்ச் சிறு குறவர்மகட்குச் சலாமிடற்கேக்கறுகுமரனே" எனவும், "வேதாமுதல் விண்ணவர் சூடுமெலர்ப்-பாதா குறமின்பதசேகரனே" எனவும் ஆன்றோ ரருளிச்செய்தமை யானு மறிக. (ருo)

அன்றிலம் பெடைகளை யணுகி யன்னைகே
ளான்றென வினையின்மே னடந்த நாயக
ரின்றுவந் திடுவரிங் கெம்பொ ருட்டினு
லொன்றுநீ யிரங்கலென் றுரைக்கின் றார்சிலர்.

(இ-ள்.) அந்நாட்டிலுள்ள சிலமாதர்கள் அழகிய அன்றிற்பேடைகளையடைந்து, தாயே! இதனைக்கேட்பாயாக; நன்றென்றுகருதிவினைவயிற்பிரிந்த தலைவர் இன்றைக்கு இவ்விடத்துவந்துவிடுவார், ஆதலால், எங்கள் நிமித்தமாக நீசிறிதும் வருந்தாதேயென்றுசொல்லுவார்கள்.—எ-று.

போர்வயிற்பிரிந்த தலைமகன் பாசறைநீங்கி வருதல் கார்ப்பருவநோக்கியாகலானும் தேரோசை சேய்மையிலேயே கேட்டுக் களிப்பாளாகித் தன்னைக் குறித்து இதுகாறும் வருந்திய அன்றிலைநோக்கி வருந்தாதையென்றுளென்க. (ருக)

ஆடியல் கருங்கணுஞ் சிவப்புற் றங்கமும்
வாடுவ தாகியே மதன வேர்வுறுக்
கூடிய மகளிருங் குமரர் தங்களை
யூடிய மகளிரு முலப்பின் றாயினார்.

(இ-ள்.) இமைக்கு மியல்பினையுடைய கரியகண்களுஞ் செந்நிறமுற்றுத் தேகமும் வாட்டமுறுவதாய் மதனவியர்வையரும்பித் (தங்கள் நாயகரைத்) தழுவுகின்ற மாதர்களும், தங்கள் நாயகரிடத்து ஊடல்கொண்டிருக்கின்ற மாதர்களும் அளவற்றிருந்தார்கள்.—எ-று.

கலவியினை யனுபவிக்கு மாதர்கட்கு விழி சிவத்தலும் தேகம் வாட்டமுறுதலுமியல்பாதலால், 'ஆடியல் கருங்கணுஞ் சிவப்புற் றங்கமும் வாடுவதாகி' என்றார். "வாயிற் சிவப்பை விழிவாங்க மலர்க்கண் வெளுப்பை வாய்வாங்கத், தோயக்கலவிய முதளிப்பீர்" எனப் பிறருங் கூறுதல் காண்க. (ருஉ)

அகனமர் கணிகைய ரடிகள் சூடியே
முகனுறு முவகையான் முயங்கி யன்னவர்
நகனுறு குறிகொளீஇ நாளுங் காமநூற்
றகைமைசெய் காளையர் தொகுதி சான்றதே.

(இ-ள்.) மனத்தில் விருப்பங்கொண்டிருக்கின்ற விலைமாதர்களுடைய கால்களை (த்தங்கள்தலையில்) வைத்துக்கொண்டு, அவர்கள் முகத்தினிடத்திற் பொருந்திய மகிழ்ச்சியினுல் தழுவி, அவ்விலைமாதர்களது நகக்குறிகளைப்பெற்று, எந்நாளும் மதனுகமத்தினது முறைமைப்படி கலவிசெய்தொழுகுகின்ற ஆடவர்களது கூட்டங்கள் நிரம்பப்பெற்றுள்ளது; (அந்நாடு).—எ-று.

காமநூல் என்றது மதனுகமம், அந்நூல் வல்லாராகிக் கலவியின்பந் துய்க்கின்ற ஆடவரை அந்நாடுடைமையான் 'காமநூற் - றகைமைசெய் காளையர் தொகுதி சான்றதே' என்றார். கொளீஇ - கொண்டு, நகக்குறிகலவியினிகழ்வ தென்பதனை— "முலைமீது கொழுநன்ற னகமேவுகுறியை - முன்செல்வமில்லாத வர்பெற்றபொருள்போல்" எனப் பிறருங் கூறுதல்காண்க. (ருந)

வாளைக ளிகல்புரி வயலும் வாவியும்
பாளையொ டுற்பலம் பதும நாறுமால்
வேளையர் தடங்கணார் விரைமென் றாளிணை
காளையர் குஞ்சியுங் கரமு நாறுமால்.

(இ-ள்.) வாளைமீன்கள் (ஒன்றோடொன்று) போர்செய்கின்ற வயல்களிலும் தடாகங்களிலும் பூம்பாளைகளோடு நீலோற்பலமலர்களும் தாமரைமலர்களும் விளங்கும்; மன்மதனும் சோர்வடையத்தக்க விசாலமாகிய கண்களையுடைய மாதர்களது மணம்வீசுகின்ற மெல்லிய இரண்டு கால்களில் புருடர்களது குடுமியும் கைகளும் விளங்கும்.—எ-று.

மாதரார் கண்ணை ஆடவரை வருத்துமியல்புடையதாகலின், அதனையுடையாரை 'வேளையர் தடங்கணார்' என்றும், அவர் பாதமலரால் ஆடவர் குஞ்சியிலுதைப்ப அவ்வுதைபடச் சிவத்தலால், 'விரைமென் றாளிணை காளையர் குஞ்சி நாறும்' என்றும், கைகளால் அம் மாதர்களது பாதமலரை வருடலால், 'கரமு நாறும்' என்றும் கூறினார். 'வயலும் பாளையொ டுற்பலம் பதும நாறும்' என்றும், வாவியும் பாளையொடுற்பலம் பதும நாறும்' என்றும் பிரித்துப் பொருள் கொள்க. பாளை வயலுக்குக் கூறுங்கால், பதர் என்றும், வாவிக்குக் கூறுங்கால் பூம்பாளை யென்றும் பொருளமைத்துக்கொள்க. 'வாளைகளிகல்புரி' என்பது வயல்-வாவி இரண்டிற்கும்விசேடம்.

சேவக மணைவன கரிகள் சேனைகள்
காவக மணைவன கலைகள் புள்ளினம்
பூவக மணைவன பொறிவண் டாயிடைப்
பாவக மணைவன பாட லாடலே.

(இ-ள்.) அந்நாட்டில், கரிகள் சேவகமணைவன = யானைகள் துயிலுமிடத்தைச் சேர்வன; சேனைகள் சேவகமணைவன = சேனைவீரர் கூட்டங்கள் வீரத்தன்மையைப் பொருந்துவன; கலைகள் காவகமணைவன = சாஸ்திரங்கள் (அறிஞர்களுடைய) பாதுகாக்கத்தக்க மனத்தின்கண் நிலைபெற்றிருப்பன; புள்ளினம் காவகமணைவன = பறவைக்கூட்டங்கள் சோலையினிடத்தைப் பொருந்துவன; பொறி பூ அக மணைவன = அஷ்டலக்ஷ்மிகளும் பொலிவினையுடைய வீடுகள்தோறும் வாழ்வார்கள்; வண்டு பூவகமணைவன = வண்டுகள்மலரிடங்களைப்பொருந்துவன; பாடல் பாவகமணைவன = பாடல்கள் பாக்களிலுறுப்பைப் பொருந்துவன; ஆடல் பாவகமணைவன = நிருத்தங்கள் அபிநயத்தைப் பொருந்துவனவாம்.—எ-று.

சேவகம் - காவகம் - பூவகம் - பாவகம் என்னுஞ் சொற்களை இருவகைச் சிலேடைப்பொருள் விளங்கவமைத்துக் கூறினார். சேவகம் என்பதைக் கரிகளுக்கியையப்பொருள் கொள்ளுங்கால் துயிலிடம் எனவும், சேனைகட்குக் கொள்ளுங்கால் வீரம் எனவும், காவகம் என்பதைக் கலைகட்குக் கொள்ளுங்கால் (புலன்களின் வழியே செல்லாமற்) காக்கத்தக்க மனம் எனவும், புள்ளினத்திற்குக் கொள்ளுங்கால் சோலையினிடம் எனவும், பூவகம் என்பதைப் பொறிக்குக்கொள்ளுங்கால் பொலிவினையுடைய வீடுகள் எனவும், வண்டுகளுக்குக் கொள்ளுங்கால் மலர்களினிடம் எனவும், பாவகம் என்பதைப் பாடலுக்குக் கொள்ளுங்கால் பாக்களினிடம்எனவும், ஆடலுக்குக்கொள்ளுங்கால் அபிநயம் எனவும் பொருளமைத்துக் கொள்க. இவ்வாறன்றி, பூவகம் - என்பதற்கு பொறி, வண்டு இரண்டிற்கும் பூவினிடம் என்றே யமைத்துப்

பொருள்கூறுவாரு முளர். அங்ஙனங்கூறின், சிலேடைப்பொருள்பயவாமையின் அஃது மரபன்றென விடுக்க. (௫௫)

ஆடக மாமதி லம்பொற் கோபுர
நீடிய மண்டப நெறிகொ ளாவணம்
பாடலை யாடிடம் பிறவும் பாலிநன்
னாடுள பதிதொறு நன்னரி யோங்குமே.

(இ-ள்.) பொன்மயமாகிய பெரியமதில்களும், அழகிய பொன்னாலாகிய கோபுரங்களும், பெரியமண்டபங்களும், (விசாலமாகிய) வழிகளையுடைய கடைவீதிகளும், பாடகசாலைகளும், நாடகசாலைகளும் மற்றுஞ் சிறந்தவிடங்களும் பாலிநதி சூழ்ந்த நல்ல தொண்டைநாட்டிலுள்ள நகரங்கடோறும் நிலைபெற்றோங்கும்.—எ-று.

ஆடகம்-கிளிச்சிறை-சாதரூபம்-சாம்பூநதமென்னும் பொன்வகை நான்கில் ஆடகமென்பதுமொன்று, பிறவுமென்றது பட்டிமண்டபமுதலியன. பாலிநாடென்னாது நன்னாடென்றது "தெண்ணீர் வயற்றொண்டை நன்னாடுசான்றோ ருடைத்து" என்றமை கருதியென்க. (௫௬)

தெண்டிரை யுலகினிற் சீர்பெற் றோங்கிய
மண்டல மெங்கணு மதிக்க நின்றதோர்
தொண்டைநன் னாட்டணி சொல்லி னாமினித்
தண்டமிழ் வளநகர்த் தன்மை கூறுவாம்.

(இ-ள்.) தெள்ளிய அலைகளையுடைய சமுத்திரஞ்சூழ்ந்த இந்நிலவுலகத்தில் சிறப்புற்றோங்கிய எந்தநாடுகளும் புகழும்படி நிலைபெற்றுள்ளதாகிய ஒப்பற்ற நல்ல தொண்டைவளநாட்டின் சிறப்பைச் சொல்லினோம்; இனி குளிர்ந்த தமிழ்வளம் பொருந்திய காஞ்சிமாநகரத்தினது மேன்மையைச் சொல்லுவோம்.—எ-று.

மண்டலமென்றது, உலகத்தைத் தனித்தனியாகப் பிரித்துப் பல்வேறரசர்களால் அரசாட்சி செய்யப்பெற்ற ஐம்பத்தாறுதேசங்களை; அவர்கள் மதித்தலாவது - சிவராஜதானியாக வுள்ளதும், முத்தித்தலங்களேழனுட் சிறந்ததும், சகலசெல்வங்களும் நிரம்பப்பெற்றிருப்பதுங் கருதிப் புகழ்ந்து கூறுதல். (௫௭)

திருநாட்டுப்படலம்

முற்றிற்று.

---

ஆ. திருவிருத்தம் - ௧௪௬.

முருகன் றுணை.

# திருநகரப்படலம்.

மாவுல கெங்கு மலர்த்தட மாகத்
தாவறு சீர்புனை தண்டக நாடே
மேவிய கஞ்சம தாவதின் மேவுந்
தேவினை யொத்தது சீர்பெறு காஞ்சி.

(இ-ள்.) பெருமைமிக்க இந் நிலவுலகமனைத்துந் தாமரைத் தடாகமாகவும், கெடாதசிறப்பினையுடையதொண்டைநாடே நிலைபெற்றதாமரைமலராகவும் விளங்கி, சிறப்புப்பொருந்திய காஞ்சிமாநகரமானது அத்தாமரைமலரிற் பொருந்திய பிரமனை யொத்துள்ளது.—எ-று.

இம்மை மறுமைப்பயனை யடைதற்கேதுவாகிய புண்ணிய பூமியாகலின், "மாவுலகு' என்றும், பல வேறுவகையாகிய செல்வங்களு நிரம்பப்பெற்ற சான்றோரி னிது வாழுந் திருநாடாகலின், 'தாவறு சீர்புனை தண்டகநாடு' என்றும், திரைமுதலிய வற்றாற் சலிப்பினையடையும் நீர்க்கமலம் போலாது என்றும் நிலைபேறுடைமையின், 'மேவிய கஞ்சமதா' என்றும், அக்கஞ்சத்தின்கண்வாழும் பிரமன் நான்கு முகங்களை யுடையவனும், அம்முகங்களின் வழியாக வேதங்களை யோதுந் தன்மையையுடையவ னும், சகல கலாவல்லியாகிய சரஸ்வதிவாழும் நன்னாவினை யுடையவனும், சராசரப் பிரபஞ்சங்க ளனைத்தையுஞ் சிருட்டிக்கும் பேராற்றலுடையவனும், ஆன்மநாயகராகிய சிவபெருமானைத் தனஇதய புண்டரீகத் திருத்தித் தியானிக்குஞ் சிந்தனையுடையவனு மாயிருத்தல்போல, இக்காஞ்சித் திருநகரமும் நான்கு திக்குகளினும் நான்கு திருவா யிலை யுடையதும், வேதப்பயனாகிய சதுர்வித புருஷார்த்தங்களும் வெளிப்படுதற் கே துவாயுள்ளதும், பதினெண்டேசத்து மொழிகளினும் பிறமொழிகளினுந் தேர்ந்து வல்ல அறிஞர்கள் இனிது வாழப்பெறுவதும், அணியாடை முதலிய வெல்லாப்பொ ருள்களுந் தோன்றி விருத்திசெய்யப் பெறுவதும், அப்பிரமனால் பூசிக்கப்பட்ட சிவ பெருமான் திருக்கோயில் கொண்டெழுந்தருளியிருக்கப் பெறுவதுமாகிய பெருந்தன் மையுடைமையின், 'அதின் மேவுந் தேவினையொத்தது சீர்பெறுகாஞ்சி' என்றுங் கூறி னார். சீர்பெறு காஞ்சி தேவினை யொத்தது, எனக்கூட்டுக. (௧)

பூங்கம லத்துறை புங்கவன் மாயோன்
பாங்குறை தேவர்பல் லாண்டிசை பரவ
வோங்கிய புள்ளின மூர்ந்தவ ணுறலா
லாங்கவர் மேவு மரும்பத மாமே.

(இ-ள்.) பொலிவினையுடைய தாமரை மலரில்வாழும் பிரமனும், திருமாலும் தம் பக்கங்களிற் பொருந்தி வசிக்கின்ற மற்றைத்தேவர்கள்வாழ்த்தொலிகூறித் துதிக் கும்படி சிறந்த அன்னமுங் கருடனுமாகிய பறவைகளை யேறிச்செலுத்தி அங்குவருங்

காரணத்தினால் (அக்காஞ்சிநகரம்) அவர்கள் வசிக்கின்ற அருமையாகிய பிரமபதத்தையும் விண்டுபதத்தையும் ஒத்திருக்கும்.—எ-று.

"பூவினுக்கருங்கலம் பொங்கு தாமரை" என்று கூறுந் தமிழ்வேதப்படி மலர்களுட் சிறந்தது தாமரைமலரே யாகலான், 'பூங்கமலம்' என்றும், அக்கமலத்து வாழும் பிரமன் முதற்றொழிலாகிய சிருட்டித் தலைவனாகலின், 'புங்கவன்' என்றும், திதித்தலைவனாகிய திருமால் மாயாவிசித்திரங்களைப் புரிந்தருளுந் திறத்தினனாகலின், 'மாயோன்' என்றும், இவ்விரு தேவர்களும் திரிமூர்த்திகளுட் சேர்த்தெண்ணப் பட்டவராகலா னிவர்களைச் சூழ்ந்து போற்றிசைத்தல் மற்றைத் தேவர்கட் குரிய கடமையாகலின், 'பாங்குறை தேவர் பல்லாண்டிசைபரவ' என்றும், அவ்விரு வகைத் தேவரையுஞ் சுமக்கும் அன்னமும் கருடனும் பெருநலத்தனவாகலின், 'ஓங்கிய புள்ளினம்' என்றும், அவை அவ்விருதேவர்க்கு முரிய வாகனமாகலினவற்றை யூர்ந்து வந்தமையின், 'ஊர்ந்தவருறலால்' என்றும், அவர்கள் வந்துவந்துறையுங் காரணத்தாலவர்கள் வாழும் புண்ணியப்பதவிகளோடுவமைகூறுதல் தக்கதேயாகலின், 'ஆங்கவர்மேவு மரும்பதமாம்' என்றுங் கூறினர். பல்லாண்டு=பல்லூழிகாலம் வாழ்குகவென்று கூறும் மங்கலவாழ்த்து. அது-"மன்னுக தில்லைவளர்க நம்பத்தர்கள் வஞ்சகர்போயகலப் - பொன்னின்செய் மண்டபத்துள்ளே புகுந்து புவனியெல்லாம் விளங்க - வன்னநடைமட வாளுமைகோனடி யோமுக்கருள் புரிந்து - பின்னைப்பிறவி யறுக்கநெறிதந்த பித்தர்க்குப் பல்லாண்டு கூறுதுமே." என்றித் தொடக்கத்தனவாகவருந் திருவிருத்தங்கள். (உ)

இன்னிய றேர்தரு மிந்திரன் முதலா
மன்னிய வானவர் மற்றுளர் யாருந்
துன்னின ராயிடைச் சூழ்ந்துறை செயலாற்
பொன்னக மென்று புகன்றிட லாமால்.

(இ-ள்.) இனிய இலக்கணத்தைத்தேர்ந்துணர்ந்த இந்திரன்முதலாகிய நிலை பெற்ற தேவர்களும் மற்றை யாவரும் அங்கடைந்து சூழ்ந்து வசிக்குஞ் செய்கையினால், (அக்காஞ்சிநகரம்) பொன்னுலகமென்று சொல்லத்தகும்.—எ-று.

ஐந்திரமென்னும் வடமொழிவியாகரணத்தையியற்றிய முதல்வனாகலின், 'இன்னியறேர்தருமிந்திரன்' என்றும், அவ்விந்திரன்முதலிய முப்பத்துமுக்கோடி தேவர்கூட்டங்களுஞ் சேர்ந்துள்ளாராகலின், 'முதலாமன்னியவானவர் மற்றுளர்யாரும்' என்றும், இவர்களனைவரும் தங்கள் பொன்னுலகத்தைவிட்டுஇத்திருப்பதியை யடைந்து சூழ்ந்துறையுங் காரணத்தாலப்பொன்னுலகமே இஃதாமென் றுரைக்கத் தக்கதாகலின், 'துன்னினராயிடைச் சூழ்ந்துறைசெயலாற் பொன்னகமென்று புகன்றிடலாமால்' என்றுங் கூறினர். (ங)

கின்னரர் சித்தர் கெழீஇயத னாலத்
தந்நிக ரில்லவர் தம்பதி போலும்
பன்னக வேந்தர் பராயின ருறலா
லன்னவர் தம்பதி யாகிய தன்றே.

(இ-ள்.) (இக்காஞ்சிநகரமானது) கின்னரர்களும் சித்தர்களும் நெருங்கி வசிக்குங்காரணத்தினால், ஒப்பற்றவர்களாகிய அக்கின்னர சித்தர்கள்வாழுங் கின்னரலோகத்தையுஞ் சித்தலோகத்தையு மொத்திருக்கும்; நாகேந்திரர்கள் (சிவபெருமானைத்) துதித்து வசிக்குங் காரணத்தினால் அவர்கள்வாழும் நாகலோகத்தை யொத்திருக்கும்.—எ-று.

கின்னரர் சித்தர் என்பவர்கள் தேவர்கள் வகுப்பிற் சேர்ந்தவர்கள். நரவுருவமும் குதிரைமுகமுமுடையவராகலின், 'கின்னரர்' என்றார். கிஞ்சித் நரர் என்பது பொருள். தன்னிகரில்லவர்-தங்களுக்குத் தாங்களே சமானரா யுள்ளவர்கள். செழீஇயது - சொல்லிசையளபெடை. பராயினர்-முற்றெச்சம். (ரு)

எண்டிசை காவலர் யாவரு மீண்டப்
பண்டவர் பெற்ற பதங்களை மாறு
மண்டல மார்சுடர் மற்றைய வுறலா
லண்டமு மாகிய தப்பதி யென்பார்.

(இ-ள்.) அஷ்டதிக்குப்பாலகர்கள் யாவரும் நெருங்கியிருக்குங் காரணத்தினால் முன்னாளில் அத்திக்குப்பாலகர்கள் (சிவபெருமானைப்பூசித்துப்) பெற்றபதவிகளையொத்திருக்கும்; வட்டவடிவாகிய சந்திர சூரியர்கள் முதலிய சுடர்களனைத்துமடைந்து வசிக்குங் காரணத்தினால் இப்பிரமாண்டத்தையு மொத்துள்ளது இக்காஞ்சிநகரம்.—எ-று.

எண்டிசையாவன;—கிழக்கு, தென்கிழக்கு,தெற்கு தென்மேற்கு, மேற்கு, வடமேற்கு, வடக்கு, வடகிழக்கு என்பன; அத்திசைக்காவலர்கள்:—இந்திரன்- அக்கினி-இயமன்-நிருதி-வருணன்-வாயு - குபேரன் - ஈசான் என்பவர்கள். அவர்கள் சிவபெருமானைப் பூசித்துப் பெற்ற பதங்களாவன:—இந்திரனுலகம், அக்கினியுலகம், இயமனுலகம், நிருதியுலகம், வருணனுலகம், வாயுவினுலகம், குபேரனுலகம், ஈசானனுலகம் என்பன. இவ்வெண்டிசைக்காவலரும் முன்னாளில் சிவபெருமானைப் பூசித்து அவரருளால் தத்தமக்குரிய பதங்களைப் பெற்றனராகலின், 'பண்டவர்பெற்ற பதங்கள்' என்றும், அத்திசைக்காவலர்சதா இத்திருப்பதியில் நெருங்கிச் சூழ்தலால், 'பதங்களைமாறும்' என்றும், அண்டத்தின் சார்பாயுள்ள சந்திரசூரியர்களும் மற்றைச் சுக்கிரன்முதலிய பிறகோள்களும் அடைந்து சூழ்தலால் இப்பிரமாண்டத்தையே யிந்நகரமொத்தலின் 'மண்டலமார்தரு மற்றையவுறலா - லண்டமுமாகிய தப்பதி' என்றும், இஃது நூல்வழக்கு மான்றோர்வழக்கு மாகலின், 'என்பார்' என்றுங்கூறினார்.

மேல் மூன்றுசெய்யுட்களால் பிரமலோகமுதல் பலவுலகங்களை யொக்குமெனத் தனித்தனிக்கூறி, இச்செய்யுளால் அவையனைத்து மொருங்கே யமையம்பெற்றுள்ளதாகிய இவ்வண்டத்தையே யொக்குமெனக் கூறிமுடித்தனர். (சு)

இப்படி யாவரு மெய்திய திறனு
லொப்பன போல வுரைத்திட லொப்போ
வப்பதி யேயத னுக்கிணை யன்றிச்
செப்பரி தாற்பிற சீர்கெழு காஞ்சி.

(இ-ள்.) இவ்வாறு பிரமன்முதலிய தேவர்களனைவரு மடைந்து வசிக்குந் தன்மையினால் (அவரவர்கள்வாழும் பதங்களை) ஒத்திருத்தல்போலக் கூறுதல் தகுதியோ? சிறப்பு மிக்க அக்காஞ்சிநகரமானது, அந்நகரமே தனக்கு ஒப்பன்றி வேறு பதிகளை அதனோடு ஒப்புக்கூறுத லரிதாகும்.—எ-று.

பிரமனாதியர் தத்தம்பதங்களைவிட்டு இத்திருப்பதியில் விரும்பி வசிக்குங் காரணத்தா லொருவாறு ஒப்புக்கூறுதல் உபசாரமேயன்றி உண்மையாக விசாரிக்குமிடத்தில் ஒப்பாகாதென்பார் 'ஒப்பனபோல வுரைத்திடலொப்போ' என்றும், தனக்கு ஒப்புமுயர்வும் வேறொன்றெய்தப் பெறாத அத்திருப்பதி தனக்குத்தானே யொப்

பன்றி வேறொப்பின்றென்பார், 'அப்பதியே யதனுக்கிணையன்றிச் செப்பரிதால்' என்றும், "ஆதிநான்முக்கணெம்மா னயன்றனைப் படைத்துவேத - மோதுவித்தருளி னோக்கி யுலகெலாம் படையென்றேவும் - போதிதுபார்த் திவ்வாறு படையெனப்புக ன்றுவைத்தா - வீதெனலாகுங்காஞ்சி யென்னுமா யளவைத்தாமே" என்றபடி சிவபெருமானால் பிரமனது சிருட்டிகாரணமாகப் படைக்கப்பட்ட பெருமையினதென்பார், சீர்செழுகாஞ்சி' என்றுங் கூறினர். (சு)

மறைமுத லோர்தனி மாவி னிழற்கீ
ழுறைதரு காஞ்சி தனக்குல கெல்லாம்
பெறுமய னதியர் பெற்றிட வன்று
னிறுவிய தொன்னக ரோநிக ராமே.

(இ-ள்.) வேதத்திற் கூறும் மூலகாரணராகிய சிவபெருமான் ஒப்பற்ற மா விருக்ஷத்தின்கீழ் (ஏகாம்பரநாதரென்னுந் திருப்பெயரோடு) எழுந்தருளியிருக்கப்பெற்ற ஸ்ரீ காஞ்சிமாநகரத்திற்கு, உலகமனைத்தையுஞ் சிருட்டிக்கின்ற பிரமன் முதலிய தேவர்கள் பெற்று வாழும்பொருட்டு அவ்வெம்பெருமானால் படைத்துக் கொடுக்கப்பட்ட பழைமையாகிய நகரங்களோ? ஒப்பாகக் கூடியன.—எ-று.

வேதமே மாமரமாகலின், 'ஓர் தனிமா' என்றும், அம்மாவின்கீழ் வீற்றிருந்தருளும் மறைமுதற் பெருங்கடவுளாகிய சிவபெருமான் விருப்புற்று வாழும் காஞ்சித் திருப்பதிக்கு, அயனாதியர் பொருட்டு அவ்வெம்பெருமானால் சிருட்டித்துத் தரப்பட்டபிரமலோகம் விஷ்ணுலோக முதலிய மற்றைய நகரங்க ளொப்பாகாமையின், 'அயனாதியர் பெற்றிட வன்ன - னிறுவிய தொன்னகரோ நிகராமே' என்றுங் கூறினர்.

வேதமே மாமரமென்பதனை—"மீது மன்னிய மூலமுங் கிழக்குநோக்கு சாகையு மாய்வினா கமழும், பாத வந்தனை யுணர்ந்தவன் வீடு பற்று மாங்கது பலகனிப டைத்துச்-சீத வார்புன லொழுக்கருக் கம்பைத் திருந திக்கரை மருங்கொலி வேதச்-சூத மாமர மெனத்திகழ்ந் தொளிருந் தொல்லை வையகம் பெரும்பயன் படைப்ப" எனவும், "எழிரட்டிய கல்வியு மதன்மேன் மல்லி கைக்கொடியெனப் படர்ந்தமரும், பாழி விச்சைகட் கிறைவியாங் காமக் கண்ணியத்தகு பசுங்கொடிக் கினியா - னூழியீற்றினு முலப்பருந் தகைசான் றோங்கு மாவினுக் குரிமையம் யாமே, யாழி யேந்திய நாரணன் விரிஞ்ச னரனெனப்படு மன்புடைப் புதல்வீர்" எனவும் வருங் காஞ்சிப் புராணத்தானுணர்க.

சிவபெருமான் தன்னை வழிபட்டுய்ந்த பிரமன்முதலிய தேவர்களுக்கு அமைத்துக் கொடுத்தருளிய சத்திய லோகாதிபதங்கள் அவ் வெம்பெருமான்தானே விரும்பிவீற்றிருந்தருளும் ஸ்ரீ காஞ்சிப்பதிக்கு ஒப்பாகாவென்பது இதனாற் கூறப்பட்டது.

மேயதொல் லூழியில் வேலைக ளேழுந்
தூயத னெல்லை சுலாவுற நிற்ற
லாய பரஞ்சுட ராங்குள தாயு
மாயைகள் சுற்றிய மன்னுயி ரொக்கும்.

(இ-ள்.) மெய்ம்மைபொருந்திய பரஞ்சுடராயுள்ள சிவபெருமான் அதன் மத்தியி லெழுந்தருளியிருந்தும் பழைமையாகிய ஊழிக்காலத்தில் சப்த சமுத்திரங்களுந் தூய்மையாகிய அக்காஞ்சித்திருப்பதியி னெல்லையைச் சூழ்ந்து நிற்றல் (எது போலுமெனின்) மாயைகளால் சுற்றப்பட்டிருக்கின்ற நிலைபெற்ற ஆன்மாக்களை யொத்திருக்கும்.—எ-று.

நெடுநாட் கடந்து தோன்றுதலும், அவ்வாறு தோன்றியக்கால், பன்னெடு நாள் நிலைபெற்றிருத்தலு முடைமையின், 'மேயதொல்லூழியில்' என்றும், அவ்வூழியில் சப்த சமுத்திரங்களு மொன்றாய்ப் பொங்கியெழும் பெருவெள்ளமானது உள்ளே புகப்பெறாமல் வேலிபோற் சூழ்ந்து நிற்றலின், 'வேலைகளேழுந் தூயதனெல்லை சுலாவுற நிற்றல்' என்றும், எச்சுடருந் தன்னுள்ளடங்க அவ்வச் சுடர்கட்குக் காரணமாக விளங்கும் பெருஞ்சுடராயுள்ளவர் சிவபெருமானாகலின், 'ஆயபரஞ்சுடர்' என்றுங் கூறினர். தூயவதன் என்பது, தூயதன் எனத் தொகுத்தலாயிற்று.

ஸ்ரீ காஞ்சிப்பதியின்கண் சிவபெருமான் எழுந்தருளியிருந்தும் அதனைப் பிரளய வெள்ளஞ் சூழ்ந்திருத்தல், ஆன்மாக்களுடைய இதய புண்டரீகத்திற் சிவபெருமா னெழுந்தருளியிருந்தும் அவ்வான்மாக்களை மாயைகள் சூழ்ந்திருப்பதுபோலு மென உவமைமுகத்தாற் கூறினர். (அ)

வேறு.

பாழி மால்வரை யெறிதிரை வையகம் பலவும்
வாழு மண்டங்கள் சிற்றுரு வமைந்துவந் தென்னச்
சூழு நேமியம் புள்ளின முதலிய சுருங்கு
மாழி நீத்தம தொத்தது மதிற்புறத் தகழி.

(இ-ள்.) வலிமைமிக்க பெரிய மலைகளும், அலையெறிகின்ற கடல்சூழ்ந்த பலவுலகங்களும் பொருந்திய பலவண்டங்கள் சிற்றுருவங் கொண்டுவந்தாற்போலச் சூழ்ந்துள்ள சக்ரவாகமுதலிய பறவையினங்கள் நெருங்கப்பெற்ற மதிலின்புறத்துள்ள அகழியானது பெரும்புறக்கடலின் வெள்ளத்தை யொத்துள்ளது.—எ-று.

ஒவ்வோரண்டங்களிலும் எண்ணில்கோடிமலைகளும் பலபுவனங்களும் நெருங்கியிருத்தலின், 'பாழிமால்வரையெறிதிரை வையகம்பலவும் - வாழுமண்டங்கள்' என்றும், அத்தகைய அண்டகோடிகள் சிற்றுருக்கொண்டு நெருங்கியிருத்தல்போல, உருண்டைவடிவாகவுள்ள சக்கரவாகப்பறவைகள் அகழியில் மிகுதியாக நெருங்கியிருத்தலின், 'அண்டங்கள் சிற்றுருவமைந்து வந்தென்னச்-சூழு நேமியம்புள்ளின முதலிய சுருங்கும்' என்றும், மதிலைச்சூழ்ந்த அகழியானது சக்ரவாளகிரியைச் சூழ்ந்த பெரும்புறக்கடல்போல் விசாலித்திருத்தலின், 'ஆழிநீத்தம தொத்தது மதிற்புறத்தகழி' என்றுங்கூறினர்.

இத்திருவிருத்தத்திற்கு இவ்வாறு பொருள்கூறுதலன்றி, 'சுருங்கும் நேமியம் புள்ளினமுதலியவை ஆழிநீத்தம தொத்ததாகிய மதிற்புறத்தகழியில், பாழிமால் வரை யெறிதிரைவையகம் பலவும் வாழுமண்டங்கள் சிற்றுருவமைந்து வந்தென்னச் சூழும்' என அந்வயித்துக்கூட்டி நேமியம் புள்ளினத்தை யெழுவாயாகக்கொண்டு பொருள்கூறுவாருமுளர். (௯)

மண்ட லப்பொறை யாற்றுவான் பற்பல வகுத்து
முண்ட காசன மிமிசை யிருந்திடு முதல்வ
னண்ட கோளகை தாங்கவோர் சுவர்த்தல மதுவும்
பண்டு செய்தென வோங்கிய நெடுமதிற் பரப்பு.

(இ-ள்.) தாமரைமலராகிய ஆசனத்தின்கண் வீற்றிருக்கின்ற பிரமதேவன் பூமியாகிய பலுவைத்தாங்கும்படி பற்பல பொருள்களைவகுத்து, பின் அண்டகோளகையைத்தாங்கும்படி ஒரு சுவர்த்தலத்தையும் முன்னாளில் சிருஷ்டித்தமைத்ததுபோலநீண்ட மதிலின்பரப்பு ஓங்கியுள்ளது.—எ-று.

பற்பலவாவன:—அஷ்டகுலபருவதங்கள் அஷ்டதிக்யானைகள், அஷ்டமாநாகங்கள் கூர்மம் முதலியன. அண்டகோளகை - அண்டவுருண்டை. மதிற்பரப்புகள் நூதனமாகச் செய்யப்பட்டதன்றி நெடுங்காலத்திற்குமுன்னமே செய்யப்பட்டமைந்தன்னதுபோல உயர்ந்து விளங்கலின், 'பண்டுசெய்தெனவோங்கிய'. என்று கூறினூர். (௧௦)

இதனால் இம்மதிற் பரப்பு அளவைக்கடந்து விண்ணூடுருவச் சென்றோங்கியிருத்தலின், அண்டகோளகையைத் தாங்கும்பொருட்டமைக்கப்பட்டனவேயன்றி வேறன்றென அதனுயர்ச்சியைச் சிறப்பித்துக் கூறியதாகும்.

சென்று முப்புரி மெழ நகைத்தவன் செழும்பொற்
குன்று தோளுற வாங்கலு முலகெலாங் குலைந்து
வன்று நான்முக னனைத்தையுந் தாங்குகென் றருள
நின்ற தென்னவும் பாதலம் புகுந்துமே னீண்ட.

(இ-ள்.) மேலும்,அம்மதிலானது (போர்செய்யச்) சென்று முப்புரங்களெரியும்படி புன்னகைகொண்டருளிய சிவபெருமான் செழிய மேருமலையை வில்லாகவளைக்கவும், (அதனால்) உலகமனைத்துந் தத்தம் நிலைகலங்கிய அக்காலத்தில் நான்குமுகங்களையுடைய பிரமதேவன் அவ்வுலகனைத்தையுந் தாங்குவாயாக வென்றருள, ஓங்கிநின்றாற்போன்று பாதலவளையிற் புகுந்து மேலுயர்ந்து நீண்டன.—எ-று.

திரிபுரசங்காரத்தின் பொருட்டு மேருமலை வில்லாகவமையவும், அதுகாரணத்தால் உலகம் நிலைகுலையவும் அதனையுணர்ந்த பிரமன் அம்மேருவுக்கிணையாக இச்சுவர்த்தலத்தை யமைத்துத் தாங்கவிடுக்கவும், அது பாதலவளையினுழ்ந்து அண்டமுகடளவாயி னுயர்ந்ததுபோன் றிருந்ததென்க. தாங்குகவென்று என்பது, தாங்குகென்று, எனத் தொகுத்தலாயிற்று. (௧௧)

மேக நாட்டிற்கும் விஞ்சையர் நாட்டிற்கும் விண்ணோர்
மாக நாட்டிற்கு மலரய னாட்டிற்கு மற்றை
நாக நாட்டிற்கும் பாதல நாட்டிற்கு நணுகிப்
போக நாட்டிய பொன்மதி லானதப் புரிசை.

(இ-ள்.) அம்மதிலரணனது மேகமண்டலத்திற்கும், வித்தியாதர ருலகத்திற்கும், தேவர்கள்வாழும் விண்ணுலகத்திற்கும், பிரமனுலகத்திற்கும், மற்றைய நாகலோகத்திற்கும் பாதலலோகத்திற்கும் அடைந்து செல்லும்பொருட்டு அமைத்துள்ள பொன்மதில்போன் றுள்ளது.—எ-று.

முதலில் மேகமண்டலமும் அதன்மேல் வித்தியாதருலகமும், அதன்மேல் தேவர்களுலகமும், அதன்மேல் பிரமனுலகமும் ஒன்றன்மேலொன்றாக உயர்ந்திருத்தலானும், கீழே நாகருலகமும், அதன்கீழ்ப் பாதல வுலகமுந் தாழ்ந்திருத்தலானும், இம்மதில், அம்மேலுலகங்களுக்கு ஏறிச்செல்லவும், கீழுலகங்களுக் கிழிந்துசெல்லவுமாக உயர்ந்துந் தாழ்ந்துமிருத்தலின்,அவ்வந்நாட்டிற்குச் சோபானமுறைப்படி செல்ல நிறுத்தப்பட்ட பொன்மதில்போன் றிருந்ததென்றார்.

இதனால் அம்மதிலின் அஸ்திவாரம் பாதலம்வளையி லாழ்ந்துள்ளதென்பதும். உயரம் எல்லாவுலகங்களையுங் கடந்து மேலோங்கியுள்ளதென்பதுங் கூறியவாறாயிற்று. (௧௨)

முதிரா வன்னமா நவமணிக் குவையும்வான் முளைக்குங்
கதிரி னெல்லெனும் பொருளொடு மனைவுங் காட்டிப்

பொதிவ தாகியே முழுவது நிரம்புதல் பொருந்தா
நிதிய மேயகூ டொத்தது நெடியமா மதிலே.

(இ-ள்.) உயர்ந்த பெரிய மதிலானது நவதானியவண்ணமாகப் பொருந்திய நவரத்தினக்குவைகளையும், ஆகாயத்திற்றோன்றுகின்ற சூரியனொளிபோன்று விளங்கும் பொன்னென்னும் பொருளுடன் மற்றப்பொருள்களையும் விளக்கிப் பொதியப்பெற்றதாய் முழுவதும் நிரம்பப்பெற்றுப் பல்வகைப்பொருள்களும் பொருந்தப்பெற்றுள்ள நிக்ஷேபத்தை யொத்துள்ளது.—எ-று.

முதிரை என்றது புன்செய்ப்பொருளாகிய நவதானியங்களுக்கும் பொதுப்பெயர்; அவை, கோதுமை - பச்சமுது - துவரை - பயறு, கடலை - மொச்சை-எள்-உழுந்து - கொள் என்பன. நவமணியாவன - மாணிக்கம் - முத்து. பவளம்-மரகதம் - புருடராகம் - வச்சிரம் - நீலம் - கோமேதகம் - வைடூரியம் என்பன. நவதானிய நிறம் போல நவமணிகளும் விளங்குதலின் 'முதிரைவண்ணமா நவமணிக்குவையும்' என்றும், பொன்னொளியுங் கதிரொளிபோன்று விளங்கலின், 'வான்முளைக்குங் கதிரினெல்லெனும் பொருள்' என்றும், மதில்கள் நவமணிகளும் பொன்னும் மற்றப்பொருள்களும் முழுவது மமைத்திருக்கப் பெறுதலின், 'பொதிவதாகியே முழுவதுநிரம்புதல் பொருந்தா நிதிய மேயகூடொத்தது' என்றுங் கூறினர். முதிரை யெனவும், கதிரினெல்லெனும் பொருளெனவுங் கூறியதனால், நவதானியங்களும் நெல்லும் பொதிந்த கூடு எனச் சிலேடைப் பொருளுந் தோன்றுமாறு காண்க. (கங)

நிறையும் வார்கடல் சுற்றிய நேமியு நேமிக்
குறையு ளாகிய கணிப்பிலா வண்டமு மொப்ப
சிறையில் வான்கிரி நிரையெனச் செவ்விதிற் கிளர்ந்து
மறுகெ லாந்திகழ் மாளிகைப் பத்திசூழ் மதிலே.

(இ-ள்.) சிறகில்லாத பெரிய மலைவரிசைகளைப் போலச் செப்பமாக வுயர்ந்து வீதிகள் தோறும் விளங்குகின்ற மாளிகை வரிசைகளைச் சூழ்ந்த மதிலானது, நீர் நிறைந்த பெரும்புறக்கடலாற் சூழப்பட்ட சக்கரவாளகிரியையும், அச்சக்கரவாள கிரிக்கிருப்பிடமாகிய அளவில்லாத அண்டங்களையும் ஒத்திருக்கும்.—எ-று.

எல்லாக் கடல்நீரினும் பெருநீருடையதும், சக்ரவாளகிரிக்கப் புறத்தது மாகலின், 'நிறையும் வார்கடல் சுற்றிய நேமியும்' என்றும், அந்நேமி தன்னுள்ளடங்கப் பெற்று உயர்ந்திருத்தலின், 'நேமிக்குறையுளாகிய கணிப்பிலா வண்டமும்' என்றும், அச்சக்ரவாளகிரியும், அதற்குறையுளாகிய அண்டமும் உலகைச்சூழ்ந்து வட்டமாயுயர்ந்திருத்தல்போல இம்மதிலும் இந்நகரத்தை வட்டமாகச் சூழ்ந்துயர்ந்திருத்தலின், 'ஒப்ப' என்றும், இந்நகரத்துள்ள மாளிகைகள் மலைபோலுயர்ந்து வரிசைவரிசையாக விருத்தலின், சிறையில் வான்கிரி நிரையெனச் செவ்விதிற்கிளர்ந்து' என்றும், மாளிகைகளைச் சூழ்ந்து மதிலிருத்தல், மலைகளைச் சூழ்ந்து சக்ரவாளமும், அண்டச்சுவரு மிருத்தல் போன்றிருத்தலின், 'மாளிகைப்பத்தி சூழ்மதில் ஒப்ப' என்றும் உவமித்து முடித்துக் கூறினர். (கச)

தடுக்கு மாற்றலர் நால்வகைப் படையொடுஞ் சாய
முடுக்கும் வாள்கொடு விதிர்த்திடு மெழுவினுன் முருக்கு
மெடுக்கு மெற்றிடு மெறிந்திடும் விழுங்கிடு மீர்க்கும்
படுக்கும் கன்மழை சொரிந்திடும் விற்படை பயிலும்.

(இ-ள்.) (மதின்மேலுள்ள பொறிகள் பகைவர்கள் வரவொட்டாமல்) தடுக்கும்; அப்பகைவர்கள் சதுரங்க சேனைகளோடுந் தோற்றோடும்படி தாக்கும்; (அவர்களுக்கெதிரில்) வாளைக்கொண்டு சுழற்றும்; எழுந் தண்டினால் கோபித்தடிக்கும்; அவர்களை மேலே யெடுக்கும், பின்னும் நிலத்தில் மோதும், வீசி எறியும், வாய்விட்டு விழுங்கும்; (பிடித்துவெளியில்) இழுக்கும்; (அப்பகைவர்களைக்) பின்னுங் கொல்லும்; கல்மழையைச் சிந்தும்; வில்வித்தையைப் பயிற்றும்.—எ-று.

நால்வகைப்படையாவன—இரதம் கஜம் துரகம் பதாதி யென்பன. மேல் திகழும் வெங்கனல் என்னுஞ் செய்யுளிலுள்ள, 'மதின்மேலுறும் பொறிகள்' என்பதனை ஈண்டு எழுவாயாக வருவித்துப் பொருள்கூறப்பட்டது.

பொறிகளென்றது எந்திரங்களை; அவை நகரத்து மதிலின்கண் அமைந்திருந்து பகைவர் முதலியோர் படையெடுத்துவராமல் ஆயுதங்களைப் பயிற்றிக் காத்து நகரத்திற் கழகுசெய்வது, இதனை:—

"நொச்சியுச்சிவேய்ந்துநீண்ட நொச்சியோடுபோர்செய - இச்சையுற்றுமன்னர்வந் தெதிர்க்கும் வண்ணமுண்டெனின் - நச்சுமிந்நகர்க்கண்வாழு நல்லவீரர் வேண்டுமோ - மெச்சவெந்திரங்களே விளைந்துபோர்விளைக்குமே"—"வந்துமன்னர்நொச்சிமுற்றின் வார்ந்ததண்டமோச்சியே - எந்திரக்கடாக்களிற் றினங்கதிர்த்த தோடுடன்-முந்தவோடிமாமடங்கள் முற்றும்வேழமட்டெழும்-குந்தமள்ளர்வாம்பரிக் குலஞ்சவட்டும்வெங்கையே"—"எழுக்கள்சப்பணங்கள்வேலிருப்புலக்கைநாந்தகம்-கழுக்கடைக்குலங்குயங் கதைக்குலங்கலப்பைகள் - மழுக்கள்பிண்டிபாலம்வார்வில் வாளிசூலநேமிகள் - முழுக்கவுய்க்குமோடுநீளு மொய்ம்பினெந்திரங்களே"—"செருப்புகன்றுவந்தமன்னர் சேனைமேலுருக்கிய - விருப்புநீர்கள்செப்புநீர்க ளீயமோடிவைப்பன - நெருப்பினோடுகெல்லுலோக நீளிடைச்செலுத்துவ-உருப்பமிக்கயாவுமங்குலப்பிலாதமல்குமே."—எனவரும் விநாயக புராணத்தானுணர்க. (௧௫)

உருக்குஞ் செம்பினை வங்கத்தை யிழுதொடு மோச்சும்
வெருக்கொ ணேமிக ளெறிந்திடும் வச்சிரம் வீசி
யிருக்கு நின்றிடுங் குப்புறுஞ் செறுநரை யிகலி
நெருக்குந் தாழ்ந்திடு முலகளந் தோனென நிமிரும்.

(இ-ள்.) உருக்கிய செம்பினையும் ஈயத்தையும் நெய்யோடு காய்ச்சி வீசும்; (யாவரும்) அஞ்சத்தக்க சக்கரங்களையெறியும்; வச்சிரப்படையை வீசிக்கொண்டிருக்கும்; நிற்கும்; அவ்வாறு நின்று குதிக்கும்; பகைவர்களைக் கோபித்து எதிர்க்கும்; சற்றுத்தாழ்ந்து செயலற்றிருக்கும்; இருமாந்து உலகத்தையளந்த திரிவிக்கிரமனைப் போல வுயர்ந்துவளரும்.—எ-று.

உலகத்தையளந்த திரிவிக்கிரமனென் றுவமைகூறினர், நீண்டமைநோக்கி; மாபலிச்சக்கரவர்த்தி உலகமுழுதுந் தன்னடிப்படுத்து இந்திர திருவனைத்தையுந்தான் கவரக்கருதுகையில் தேவர்கள் திருமாலிடத்துச் சென்று முறையிட, அவர் காசிபனுக்கும் அதிதிக்கும் வாமனத்திருவுருவத்தையுடையமகனாகப் பிறந்து, மாபலி வேள்விசெய்யத் தொடங்குகையில் அவ்வேள்விச்சாலையிற் சென்று மூவடிமண்தானங் கேட்ப, அதற்கு மாபலிகொடுப்பதாகத் துணிகையில்அசுரகுருவாகிய சுக்கிராசிரியர் தடுப்பவும், தான் அதை மேற்கொள்ளாமல் அவருக்கேதானங்கொடுக்க, அவர் திரிவிக்கிரமனாக நீண்டனரென்க. (௧௬)

பீடு தங்கிய பணைமுர சியம்பிடும் பிடிக்குங்
கோடு மார்த்திடுந் துடிகளு மொலித்திடுங் கொட்புற்

கூடி மீயுயர் புள்ளையு மெதிர்ந்திடு மரண்மே
லோடி மீளுமக் கதிரையுந் தடுப்பபோ லார்க்கும்.

(இ-ள்.) வலிமைபொருந்திய வேய்ங்குழலையும், முரசவாத்தியத்தையும் முழக்கும், கையிற்பிடித்த சங்குகளையூதும்; உடுக்குகளையொலிக்க வடிக்கும், சுழன்றாடும்; ஆகாயத்தில் உயர்ந்துசெல்கின்ற பறவைகளையும் மோதும், மதிலின்மேலோடிச்செல்லும், சென்று மீண்டிரும்பும்; ஆகாயத்துலாவும் சந்திரசூரியர்களாகிய அவ்விருசுடர்களையுந் தடுப்பனபோன்று பாயும்.—எ-று.

மிடல்-வன்மை; பணை-மூங்கில், அது அதனாலாகிய குழலுக்காயிற்று. கொட்புறல் - சுழலல்; அரண்-நீரரண், நிலவரண், காட்டரண், மதிலரண் என நான்கேனும் ஈண்டரணென்றது மதிலரணை. அக்கதிரென்றது சூரியசந்திரர்களை. (கஎ)

சூலம் வீசிடுந் தோமரம் வீசிடுஞ் சுடர்வே
லாலம் வீசிடுஞ் சுடுமணல் வீசிடு மளப்பில்
சாலம் வீசிநின் றீர்த்திடு மகழியிற் றள்ளுஞ்
சீலம் வீசிய பாரிட மாமெனத் திரியும்.

(இ-ள்.) சூலம் - தோமரம் - விளங்குகின்ற வேல்-ஆலம்- சுடுமணல் இவற்றை யெடுத்துவீசும்; அளவற்ற வலைகளை வீசிநின்று பகைவர்களைப்பற்றி யிழுக்கும்; மீண்டும் அவர்களை அகழியில் விழத்தள்ளும், ஒழுக்கமற்ற பூதத்தைப்போன்று உலாவும்.—எ-று.

ஆலம்=ஓர் ஆயுதம்; சீலம் வீசியபாரிடம் - நல்லொழுக்கத்தை யொழித்த பூதம். (கஅ)

திகழும் வெங்கன லுமிழ்ந்திடு மொன்னலர் செலுத்தும்
பகழி மாரியை விழுங்கிடும் பறவையிற் படரு
மிகழு நாவையு மனத்தையு மெறிந்திடு மென்றாற்
புகழு நீரவன் றம்மதின் மேலுறும் பொறிகள்.

(இ-ள்.) பிரகாசிக்கின்ற வெவ்விய அக்கினியைக்கக்கும்; பகைவர்கள்விடுகின்ற பாணவருஷத்தை விழுங்கும், பறவைகளைப்போலப் பறந்து செல்லும், தம்மையிகழ்ந்து கூறுகின்றவர்களது நாவையும் மனோநிலையத்தையும் எறியும்; (ஆதலால்) அம்மதிலின்மேற் பொருந்திய பொறிகளின் சிறப்புக்கள் என்னால் புகழ்ந்துரைக்குந்தன்மையுடையனவல்ல.—எ-று.

பெருமழைபோன்று விடாது அம்பைச் சொரிதலின் 'பகழிமாரி' என்றார்.

பூணி னேர்தரும் பொன்னவாம் புரிசைமேற் புனைந்த
வாணி லாநெடுந் துகிலிகை பெயர்வன மலரோன்
சேணு லாயதிஞ் சுடரொளுங் கோபுர சிகரங்
காண வேபல வெகினமாய்த் தேடல்போற் கவினும்.

(இ-ள்.) இத்தகைய பொறிகள் ஆபரணங்களைப்போன்று அழகுசெய்யப்பெற்றுப் பொன்னாலமைக்கப் பெற்றுள்ள மதிலின்மேல் கட்டிய ஒளிபொருந்திய சந்திரிகையை வீசும் நீண்டவெண்கொடிகள் அசைந்துகொண்டிருக்குந் தோற்றம் (எதுபோலுமெனின்,) பிரமதேவன் ஆகாயத்தி லுயர்ந்தோங்கிய செழிய சுடரொன்றுகூறுங் கோபுரத்தின் சிகரத்தைக் காணும்பொருட்டுப் பல அன்னப்பறவைகளாக உருவங்கொண்டு தேடுதல்போல அழகுற்று விளங்கும்.—எ-று.

பிரமன் அவிச்சைவலியால் தானே பிரமமென்று அழலுருவாய் நின்ற சிவ பெருமானை யறியாமையாற் பலவன்னவுருவங்கொண்டு இக்கோபுரசிகரமெல்லைகாணுந் சுடனாயுந் தேடுவோனாயினனெனக் கற்பித்துக் கூறினமை காண்க. (உ0)

ஈர்த்த மாமதி சசியென்ப துலகுளோ ரிட்ட
வார்த்தை யல்லது சரதமோ கடிமதின் மருங்கிற்
றூர்த்த கேதன மவன்மணி மேனியிற் றுடக்கப்
போர்த்த வெண்ணிலாக் கஞ்சுகம் பீறிய போலாம்.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய சந்திரனை முயற்களங்க முடையவனென்று கூறுவது உலகத்தார் இட்டுவழங்கும் கற்பனைவார்த்தையேயன்றி உண்மையாகுமோ? ஆகாது, (மற்றென்னையோவெனின்) காவலமைந்த மதிலின்பக்கத்திலே நெருங்கப் பெற்றுள்ள கொடிகள் அச்சந்திரனது கறுத்த சரீரத்தில்பொருந்தத் தாக்குதலினால் அவன்மேற் போர்த்துள்ள வெண்ணிலாவாகிய சட்டையானது கிழிந்தனவேயாம்.

தண்ணிய கதிரினையும் சிவபெருமான் திருமுடிமீதிருக்குஞ் சிறப்பினையு முடையவனாகலின், 'ஈர்த்தமாமதி' என்றும், அச்சந்திரனிடத்து மானுளதென்றும், மற்றும் பலவகைப் பொருளுளதென்று முலகத்தார் கூறுதல்போல, முயற்களங்க முள்ளானென்று கூறுதல் உலகவழக்கேயன்றி உண்மையன்றாகலின், 'சசியென் பதுலகு ளோரிட்ட வார்த்தையல்லது சரதமோ' என்றும், அதன் உண்மையைவிசா ரிக்குமிடத்து, அச்சந்திரன் கறுத்ததேகமுடையவனென்பதும், அவன்தன்மேற்போ ர்த்துள்ள போர்வையே வெண்ணிலாவை வீசுகின்றதென்பதும், அது இம்மதின்மேற் கட்டிய கொடிகளால் கிழிப்புண்டபோது அவன் தேகத்தின் கருநிறந்தானே விளங் குகின்ற தென்பதும், அவனை 'வெண்கதிர்' முதலிய பல சொற்களாற் சிறப்பித் துக் கூறுதல் உபசாரமேயென்பதுந் தோன்ற 'கடிமதின்மருங்கிற் - றூர்த்தகேதன மவன்மணிமேனியிற்றுடக்கப் - போர்த்தவெண்ணிலாக் கஞ்சுகம் பீறியபோலாம்' என்றுங் கற்பனையாகக் கூறினார். "ஒழுகொளிவிரிந்த கதிர்மணிவண்ண னுந்தியந் தாமரையுறைவோன் - முழுமதிக்கலையு ணிறைந்தபேரழகை மொண்டுகொண்டரிபர ந்தகன்ற-மழைமதர்நெடுங்கண்டமயந்திவதனம்வகுத்தனன் கரத்தினாலெடுத்த-புழை வழித்தோன்றும் விசும்பினையன்றோ களங்கமென்றின்னமும் புகல்வார்" என்றார் பிறரும்.

இவ்வாறன்றி, சசி என்பதற்குக் கர்ப்பூரமெனப் பொருள்கூறி, அக்கர்ப்பூரம் போல் வெண்ணிறமுடையனா யிருக்குங் காரணத்தினால் சசி எனச் சந்திரனுக்குப் பெயர்வந்ததெனக் கூறுவாருமுளர். அவ்வாறு கொள்ளின் கர்ப்பூரம் வெண்ணிறமு டைத்தாயிருத்தல்போலச் சந்திரன் சுத்தவெண்ணிறமுடையனா யிராமல், உடற்கள ங்கமுடையனா யிருத்தலின் அஃதுரையன் றெனவிடுக்க. சசி = முயற்களங்கமுடைய வன். சசம் = முயல்.

இச்செய்யுளில் சந்திரன் கறுத்த சரீரமுடையவனென்றும், அவன் மேற் சட்டையே வெண்ணிறத்த தென்றும், அஃது இக்கொடிதாக்கிப் பீறியதனால் வெளி யாகியதென்றுங் கூறியது உண்மையோவெனின்,அற்றன்று, உபசாரமேயாம்.ஈண்டு, மதிற்கொடிகளின் சிறப்பைக்கூறத் தொடங்கினவர். அக்கொடிகள் சந்திரமண்டல த்தளவு முயர்ந்தோங்கியிருக்கின்றனவென ஓர் காரணவணியாகக் கற்பித்துக்கூறிய தேயாம்.

இதனால் மதிலின் உயர்வு கூறப்பட்டது. (உக)

காட்சி மேயவக் கடிமதிற் கதலிகை கானூடச்
சூட்சி நாடிய பரிதியுங் கிழுறத் தொடர்ந்தான்

மாட்சி தெய்த்திலன் வரன்முறை மனப்படு மதியோர்
தாட்சி செய்யினு மவையர்பா லுறுகுமோ தவறு.

(இ-ள்.) இத்தகைய பலவகைத் தோற்றங்க ளமையப்பெற்ற அந்தக் காவலோடுகூடிய மதிலின்மேற் பொருந்திய கொடிகளைப்பார்த்துத் தந்திரத்தில் வல்ல சூரியனும் அக்கொடிகளின் கீழேநுழைந்து சென்றனன்; அதனால் அவன் தனது பெருமையில் சிறிதுங் குறைவற்றனுயினான், நன்னெறியின் முறைமையினை மனதிற் கொண்டுள்ள பெரியோர் தாங்கள் வணக்கமாக அடங்கி நடந்தாலும் அவர்களிடத்துச் சிறிதுந் தவறுகளுண்டாகுமோ? உண்டாகா.—எ-று.

தாழ்ந்தவர்கள் உயர்வார்களென்றும், உயர்ந்தவர்கள் தாழ்வார்களென்றுங் கூறிய பழமொழிப்படி, சூரியன் கொடிகளின்கீழே நுழைந்து சென்றதனால் தனக்கொரு குறையு நேராமற் செவ்விதிற் சென்றான். சந்திரன் அவ்வாறு நுழைந்து செல்லாமையால் தனது உடற்களங்ககம் பெறப்பெற்றான். ஆதலால், தாழ்வோர்க்கு ஒரு குறையு மடையாதென்பதும், இறுமாப்பா லுயர்வோர்க்குத் தீங்குண்டா மென்பதுங் குறிப்பித்ததாயிற்று. சூழ்ச்சி-தாழ்ச்சி என்பன, தொடைநோக்கி, சூட்சி-தாட்சி என வந்தன.

மேற்செய்யுளாலும் இச்செய்யுளாலும் சந்திரமண்டலம் கொடியின் சிகரத்துள்ளதென்றும், சூரியமண்டலம் அக்கொடிக்குக் கீழேயுள்ளதென்றுங் கூறியவாறு காண்க. (௨௨)

புடைப ரப்பிய புரிசையி னாற்றிசைப் புறத்துந்
தடநி லைப்பெருங் கோபுர முளதழ னிறத்துக்
கடவு ளுச்சியின் வதனமொன் றின்றியே காண்பா
னடைத லுற்றிடு திசைமுகம் பொருவின வவையே.

(இ-ள்.) இடமகன்ற மதிலின் நான்கு திசைகளிலும் விசாலமாகிய பெரிய நிலைகளையுடைய கோபுரங்களுள்ளன; அக்கோபுரங்கள் அக்கினி வண்ணராகிய சிவபெருமானது உச்சியின்கண்ணுள்ள முகமொன்று நீங்க மற்ற நான்கு முகங்களும் இந்நகரைக் காணும்படி வந்த தன்மையை யொத்தன.—எ-று.

அஸ்திவாரமகன்று கனத்து வலிபெற்றுள்ள மதிலென்பார், 'புடைபரப்பிய புரிசை' என்றும், அப்புரிசையைக்கடந்து உள்ளே புகுதற்கு நாற்றிசையிலும் நான்கு பெருநிலைக் கோபுரங்களுள வென்பார், 'நாற்றிசைப் புறத்துந் தடநிலைப் பெருங் கோபுரமுள' என்றும், அவை சூரியமண்டலம் அக்கினிமண்டலம் வரையினுயர்ந்தோங்கிச் செந்நிற முற்றிருத்தலான், தழல்வண்ணராகிய சிவபெருமானது ஐந்து திருமுகங்களுள் நடுமுகமொழிய மற்ற நான்கு திருமுகங்களும் நாற்றிசையினும் நின்று அந்நகரக் காட்சியைக் காண்பானமைந்து தோன்று மாறுபோன்று விளங்குமென்பார், 'தழனிறத்துக் கடவுளுச்சியின் வதனமொன் றின்றியே காண்பா - னடைத லுற்றிடு திசை முகம் பொருவினவவை' என்றுங் கூறினார். 'தழனிறத்துக் கடவுள்' என்பதற்குப் பிரமன் எனப் பொருள்கூறுவாருமுளர், தழல்நிறம்பிரமனுக்கு எந்நூலினுங்கூறாமையான் அஃதுரையன்மை தெளிக. கோபுரமுள அவை திசைமுகம் பொருவின, எனக்கூட்டுக. (௨௩)

என்று மாமதிக் கடவுளும் பிறருமீ ரியல்பாங்
குன்ற மேமெனக் கீழ்த்திசை யதனெடுங் குடபா
லின்ற கோபுரங் கடக்கலர் வாய்தலி னெறியே
சென்று சென்றுபோ யப்புறத் தேகினர் திரிவார்.

(இ-ள்.) சூரியனும், பெருமைவாய்ந்த சந்திரனும், மற்றைக் கோள்களும் உதயாஸ்தமனங்களுக்கு இடமாகிய உதயகிரி அஸ்தகிரிகளைப்போல, கீழ்த்திசைக் கோபுரத்தையும் மேற்றிசைக் கோபுரத்தையுந் தாண்டிச் செல்லாதவர்களாய் அக்கோபுர வாயிலின் வழியே நுழைந்து நுழைந்து வெளியிற் சென்று திரிவார்கள்.—எ-று.

என்றூ=சூரியன். ஈரியல்பாங் குன்று=உதயகிரி அஸ்தமனகிரிகள். சூரிய சந்திரர்களும் மற்றைச்சுடர்களுங் கிழக்கே யுதயமாய்க்கீழ்த்திசைக் கோபுரவாயிலின் வழியே நுழைந்து பின் மேற்றிசைக் கோபுரவாயிலின் வழியே புகுந்து சென்று விண்ணிற்படர்ந்து அஸ்தமனகிரியை யடைவார்களென்று கூறியதனால், அவ்விரு திசைக் கோபுரங்களுஞ் சூரியசந்திர மண்டலத்தையுங் கடந்து மேலோங்கி யுள்ளன வென்று கூறியவாறாயிற்று.

மேலைச் செய்யுளில் நாற்றிசையினும் கோபுரங்க ளுளவென்று கூறி, இச் செய்யுளில் அக்கோபுரங்களில் கீழ்த்திசை மேற்றிசைக் கோபுரங்களி னுயர்ச்சியைக் காட்சிப் பிரமாண முகத்தாற்கூறி முடித்தனர். இவ்விரு கோபுரங்களி னுயர்ச்சியைக் கூறவே, மற்றைத் தென்றிசை வடதிசைக் கோபுரங்களி னுயர்ச்சியும் அத்தகையினவே யென்பது தானே கொள்ளக் கிடந்தமை காண்க. (௨௪)

தீபு ரத்திடை மடுத்தவ னுணையாற் சிறந்த
மாபு ரத்திடை வான்றொடுங் கடிமதில் வளைப்பி .
லாபு ரத்தவாய்க் கிளர்ந்தவே யமைத்தவன் றென்னக்
கோபு ரத்திடைக் கொழுந்துபோ லோங்கிய கொடிகள்.

(இ-ள்.) தமது புன்சிரிப்பாலுண்டாகிய அக்கினியைத் திரிபுரங்களழியச் செலுத்திய சிவபெருமானது ஆக்கினையினால் சிறப்புற்று விளங்குகின்ற பெரிய இக் காஞ்சிநகரத்தின்கண் ஆகாயமளாவிய காவலையுடைய மதிலினிடத்து அந்நகரத்தோடுண்டாயினவேயன்றி இடையி லேற்படுத்தப்பட்டன வல்லவென்றுகூறும்வண்ணம் கோபுரத்தினிடத்தில் அவற்றின் துளிர்போன்று கொடிகள் உயர்ந்துள்ளன. —எ-று.

பிரமனது சிருட்டி காரணமாகச் சிவபெருமானால் ஆதியில் சிறப்புறப்படைக்கப்பட்ட திருநகரமென்பார், 'தீபுரத்திடைமடுத்தவனாணையாற் சிறந்த மாபுரம்' என்றும், அந்நகரைச் சூழ்ந்த மதில் மலரயனாட்டுக் கப்புறத்து மோங்கியுள்ளதாகலின், 'வான்றொடுங் கடிமதில்வளைப்பின்'என்றும்,அம்மதிலோடமைந்த கோபுரத்தின்மேல் அவற்றின் கொழுந்து போன்றோங்கிய கொடிகள், நகரோடு மதில்கோபுர முதலியவற்றைச் சிவபெருமான் சிருட்டித்த காலத்து அவற்றுடனே இவையுஞ் சிருட்டிக்கப்பட்டனவேயன்றி இடையிற் பிறரா லமைக்கப்பட்டனவன்றாகலி னவற்றின் கொழுந்தே யாகுமென்று கண்டோர் புகழ்ந்துரைக்க விளங்குமென்பார், 'ஆபுரத்தவாய்க் கிளர்ந்தவே யமைத்தவன் றென்னக் - கோபுரத்திடைக் கொழுந்துபோ லோங்கி கொடிகள்' என்றுங் கூறினர். அமைத்தவன் றென்ன என்பதை, அன்று அமை என்ன, எனப்பிரித்து அக்காலத்துச் சிவபெருமான் சிருட்டித்த தன்மைபே ல எனப் பொருள்கூறியமைத்துக் கொள்ளினுமாம். ஆபுரத்தவாய் என்பதை, புரத்த யாக எனக்கூட்டுக.

இதனால், அந்நகர்க் கோபுரக்கொடிகள் நெடுங்காலமாகவே யுள்ளன வெனவும், அவை அக்கோபுரக் கொழுந்துகளே யாமெனவுங் கூறியதாயிற்று.

இது கோபுரக்கொடிகளின் சிறப்பைக் கூறியதாகும். (௨௫)

மாட மாளிகை மண்டபங் கோபுர மறுகிற்
கோடி கோடியின் மேலுமுன் டன்னதார் குணிப்பா
ராடு கேதனத் தளவையு மன்னதே யகல்வா
னூடு போகலா தலமரும் பறவைக ளொப்ப.

(இ-ள்.) மாடங்களும் மாளிகைகளும், மண்டபங்களும் கோபுரங்களும் ஒவ்வொரு வீதிகளில் கோடா கோடிகளினும் அதிகமாகவே யுள்ளன; அவற்றை யாவர் கணித்துரைக்க வல்லவர், அகன்ற ஆகாயத்தில் பறந்து செல்லமாட்டாமல் சுழல்கின்ற பறவைகளைப்போல அசைகின்ற கொடித்தொகைகளி னளவும் அவ்வாறளவில்லனவேயாம்.—எ-று.

மாடமாளிகை முதலியன அளவில்லனவாய்ப் பெருகி நெருங்கியிருத்தலின், எத்தகையாராலுங் கணக்கிட்டுரைப்பக் கூடாமையின், 'அன்னதார் குணிப்பார்' என்றும், கொடிகளு மவ்வாறே மிகுதியாகப் பெருகி ஆகாயத்திற் பறந்து செல்லாப் பறவைகள் போன்று கட்டப்பட்ட அவ்வவ்விடங்களிலேயே சுழன்றிருத்தலின், 'ஆடு கேதனத் தளவையு மன்னதே யகல்வா-னூடு போகலாதலமரும் பறவைகளொப்ப' என்றுங் கூறினர்.

இது, கொடிகளின் மிகுதியையும் அவை காற்றாலசையுங் காட்சியையுங் கூறியதாகும். (உசு)

சிகர மால்வரை யன்னமா ளிகைதொறுஞ் செறிவுறு
மகர தோரணை மாடிகள் பல்வுற வயங்க
லிகலும் வெய்யகோ ளிரண்டுமா யொருவடி வெய்தி
யகல்வி சும்பிடைக் கதிர்களின் புறமறைத் தனைய.

(இ-ள்.) சிகரங்களையுடைய பெரிய மலைகள் போன்ற மாளிகைகள்தோறுங் கட்டியுள்ள மகரதோரணங்கள் பல நிறக்கண்ணாடிகளிற் பொருந்த விளங்குதல் (எது போலுமெனின்) பகைக்கின்ற கொடிய இராகுகேதுக்களிரண்டும் ஒரு வடிவங் கொண்டு பெரிய ஆகாயத்தில் (சந்திர சூரியர்களென்னும்) இரு சுடர்களின் புறத்தை மறைத்த தன்மையை யொத்திருக்கும்.—எ-று.

மாளிகைகடோறுங் கட்டிய மகர தோரணங்கள் ஒருருவங்கொண்ட இராகு கேதுக்களாகவும், அவை பல நிறக்கண்ணாடிகளிற் பிரதிபிம்பப் படுங்கால், செந்நிறக் கண்ணாடியிற் படிதல் சூரியன் புறத்தைக் கேதுக்கோள் மறைத்தல் போலவும், வெண்ணிறக் கண்ணாடியிற் படிதல் சந்திரன் புறத்தை இராகுக்கோள் மறைத்தல்போலவும் விளங்குமென உவமித்துக் கூறினர்.

இது மாளிகைகளிற் கட்டிய மகரதோரணச்சிறப்பைக் கூறியதாகும். (உஎ)

செம்பொ னிற்புரி நிலையுடைத் திகிரியந் தேர்க
ளம்ப ரத்திடை வசியுற விற்றுவிற் றுருகுந்
தம்ப முற்றல மருவன செய்யகோற் றலையிற்
பம்ப ரத்துருத் திரிப்புறக் கறங்கிப படிய.

(இ-ள்.) பசும்பொன்னினாற் செய்த பல அடுக்குகளையுடைய சுழற்றேர்கள் ஆகாயத்தில் தம் நுனிபொருந்த வெவ்வேறாகிய பல ஸ்தம்பங்களையடைந்து சுழன்று கொண்டிருத்தல் (எது போலுமெனின்,) செப்பமாகிய கோல்களி னுச்சியிலே பம்பரத்தி னுருவத்தைச் சுழற்ற, அவை சுழன்று கொண்டிருக்குந் தன்மையை யொத்துள்ளன.—எ-று.

சுழற்றேர்கள் மாளிகைகள்தோறும் பலவகைத் தம்பங்களி னுச்சியிற் கூர்மைபொருந்தச் சுழன்றுகொண்டிருத்தல் கோலினுச்சியிற் பம்பரஞ் சுழன்றுகொண்டிருக்குந் தன்மையை யொக்குமென்று கூறியதனால், தம்பங்கோலாகவும், அத்தம்பத்தின்மேற்சுழலுந் திரியந்தேர் பம்பரத்துருவமாகவும், அத்தேர்ச்சுழற்சி பம்பரச்சுழற்சியாகவும் உவமைகூறப்பட்டது. வீற்றுவீற்றாருந்தம்பமாவன - பொன்வெள்ளி முதலியவற்றா னமைத்த பன்னிறத்தம்பங்கள். திரித்தல் = நாற்றிசைகளினுஞ் சுழலச் செய்தல். இது மாளிகைகடோறுங் கட்டப்பட்டு இரவும்பகலுமாகச் சுழன்றுகொண்டிருக்கும் ஒருவகைச்சுழற்றேர். இஃது காற்றினா லசைக்கப்பட்டுச் சுழலுதலின், மரக்காற்றாடியெனவும், இராட்டினமெனவும் வழங்கும். கறங்கோலையென்பது மிதுவே "கறங்கோலைபோல்வ தோர் காயப்பிறப்போடிறப்பு" என்றார், ஸ்ரீ மாணிக்கவாசகசுவாமிகளும்.

இது சுழற்றேரின் சிறப்புக் கூறியதாகும். (உஅ)

பளிங்கி னாற்செய்த தெற்றியின் றலைமிசைப் பனிதோய்
வளங்கொ ணித்திலஞ் செம்மணி குயிற்றிய வைப்பிற்
றுளங்க நாற்றிய பொன்மணிப் பாலிகை தொகுவ
குளங்கொ டாமரை மலர்ப்பொகுட் டாயின குறிக்கின்.

(இ-ள்.) பளிங்குக்கற்களினாற் செய்யப்பட்ட திண்ணைகளின்மேல் குளிர்ச்சியும் வளப்பமுந்தங்கிய முத்துக்களும் மாணிக்கங்களும் பதிக்கப்பட்ட இடங்களின்மேல் விளங்கும்படி நிறுத்திய பொன்னாலாகிய அழகிய பாலிகைகள் சேர்ந்திருத்தல், ஆலோசிக்குமிடத்து, தடாகத்திற் பூத்த தாமரைமலரினது பொகுட்டையொத்திருக்கும்.—எ-று.

பளிங்குக்கற்படுத்த திண்ணையே தடாகமாகவும், அதன்கண் முத்தினையும் மாணிக்கத்தையும் பதித்திருத்தல் வெண்டாமரை செந்தாமரைமலர்களாகவும், ஆங்கு மணிப்பாலிகைதொகுவன மலர்ப்பொகுட்டாகவும் உருவகப்படுத்திக் கூறினர். (உகூ)

ஓவி யத்தியன் மரகதத் தலத்தின தும்பர்த்
தாவி லாடகத் தலமிசை நித்திலத் தலமேற்
கோவை பட்டசெம் மணித்தலம் பொலிதலாற் கொண்மூ
மூவ கைக்கதிர் வியலிடந் தெரிப்பதம் மூதூர்.

(இ-ள்.) சித்திரங்கள்பொருந்திய மரகதநிலையின்மேல் கெடுதலற்ற பொன்னிலையும், அதன்மேல் முத்துக்களாலாகிய நிலையும், அதன்மேல் வரிசையாயமைக்கப்பட்டுள்ள மாணிக்கநிலையும் விளங்குதலால், அவை மேகமண்டலமும், சூரியமண்டலமும் சந்திரமண்டலமும் அக்கினிமண்டலமும் ஒன்றின்மேலொன்றாக இருக்குந் தன்மையை அப்புராதனநகரமானது காட்டுகின்றதாகும்.—எ-று.

மரகதத்தலத்தை மேகமண்டலமாகவும், ஆடகத்தலத்தைச் சூரியமண்டலமாகவும், நித்திலத்தலத்தைச் சந்திரமண்டலமாகவும், செம்மணித்தலத்தை அக்கினிமண்டலமாகவும் உருவகஞ்செய்து அவை முறையே ஒன்றற்கொன்று உயர்ந்துள்ளனவென்பதையுங் குறித்தவாறு காண்க. (௩0)

கன்னல் வேளனா மைந்தரு மாதருங் கலந்து
மன்னு நித்தில மாளிகைப் பந்தியின் மாடே
பொன்ன வாஞ்சிறை மணிமயிற் குழாத்தொடும் போகு
மன்ன மாமதி முகிலிடை நுழைந்துபோ யனைய.

(இ-ள்.) கரும்புவில்லினையுடைய மன்மதனென்று சொல்லத்தக்க (அழகினையுடைய) வாலிபர்களும், மாதர்களுங்கூடி வசிக்கின்ற நிலைபெற்ற முத்துமாளிகைவரிசையின் பக்கத்தில், பொன்னினுஞ் சிறந்த வொளியமைந்த சிறகுகளையுடைய அழகிய மயிற்கூட்டத்தோடு (தனித்துச்) செல்லும் அன்னப்பறவையானது, (கரிய) மேகங்களின் நடுவில் பூரணச்சந்திரன் நுழைந்துசென்ற தன்மையையொக்கும்.

வேளென முருகனுக்கும் மன்மதனுக்கும் பெயரேயாயினும், கன்னலென்றமையாற் கன்னல்வேள் பிறிதினியைபுநீக்கிய விசேடணமாயிற்று என்க. பத்தியென்றது வடமொழிச்சிதைவு. பொன் அவாம் என்றதற்கு அழகென்பதை யவாவப்படுகின்றவெனினு மமையும். மயிற்கூட்டம் கலாபத்தை விரித்துக் கொண்டேகலான் மேகமண்டலமாகவும், அதனருகே செல்லுவதாகிய அன்னத்தைச் சந்திரனாகவுங் கூறுதலான், 'அன்னமாமதி முகிலிடைநுழைந்து போயனைய' என உவமை முகத்தாற்கூறினார். (௫௧)

தண்ட மாகிய புரியுறு பணிபெலாந் தழுவி
யண்ட மிமிசை யிரவியு மதியமு மடைதல்
கண்டு மாளிகைச் சூளிகை மருங்குமேற் பாய்க் கவர்வான்
கொண்ட சீற்றத்தி னுமிழ்தரு நன்னபூங் கொடிகள்.

(இ-ள்.) ஆகாயத்தில் சூரியசந்திரர்கள்உதயமாய்வருதலைப்பார்த்து உலகின்கண்ணுள்ள பாம்புகளனைத்து மொருங்குசேர்ந்து தண்டாகாரமாய் நிமிர்ந்து (அந்நகரினிடத்துள்ள) மாளிகைகளுக்கும் மண்டபங்களுக்கும் அருகிற்சென்று அவர்களைப் பிடிக்கும்பொருட்டுத் தாங்கொண்டகோபத்தினால் தங்கள் (பிளவினையுடைய) நாவைநீட்டியசைத்ததன்மையையொக்கும்; அழகியகொடிகளசையுங்காட்சி.—எ-று.

சூரியசந்திரர் உதயமாய்வருதலைநோக்கிப் பாம்பனைத்துஞ்சென்று அவர்களைப் பிடிப்பதற்குத் தம்பிளப்பாகிய நாவைநீட்டி யசைத்தல்போல, கொடிகளுயரப்பெற்றுப் பிளவாகக் கத்திரித்துக் கட்டப்பட்டிருக்குந் தன்மையாலும், பலவகைச் சித்திரங்களோடும் விளங்குகின்றமையாலும், அவை பாம்புகள் உயர்ந்து நாவை நீட்டியசைத்தல் போலுமென உவமை முகத்தாற் சிறப்பித்துக் கூறினார். (௫௨)

தேனை வென்றசொல் லாரொடு மைந்தருந் திளைக்கு
மீன வாவிபோல் வியன்படி கத்தினால் விளங்குந்
தான மிமிசைத் தயங்கிய முழுமணித் தலந்தான்
வான நின்றிடு தெய்வத மானமே மானும்.

(இ-ள்.) தேனினும் இனிய சொற்களையுடைய மாதர்களோடு புருடர்களும் மூழ்குகின்ற மீன்களையுடைய தடாகத்தைப்போல, விசாலமாகிய படிகக்கற்களினால் விளங்குகின்ற இடத்தின்மேல் பிரகாசிக்கின்ற மாணிக்கக்கற்களமைத்த மேன்மாளிகை விளங்குதல் (எதுபோலுமெனின்,) அந்தரத்தில் நிற்கின்ற தெய்வவிமானத்தை யொத்திருக்கும்.—எ-று.

நாள்செல்லக் கேட்டழியுந் தேன்போலாது, கேட்கக்கேட்க மிகுதியுமினிமை பயத்தலானும், அத்தேன் உண்டவழி மயக்கத்தைத் தருவதன்றிக் கேட்டவழியே மயக்கத்தைத் தருவதன்றுதலானும் 'தேனைவென்ற சொல்லார்' என்றார். (௫௩)

தேவர் தானவர் முனிவரர் சித்தரோ டியக்கர்
வாவு கின்னரருவணர்க் கருவர்மற் றுள்ளோர

தேவ ருந்தம நகன்பதி யிகந்தவ ரெய்தா
மேவு கின்றன தனித்தனி யிருக்கைகண் மிகுமால்.

(இ-ள்.) தேவர்களும், அசுரர்களும், முனிவர்களும், சித்தர்களும், இயக்கர்களும், தாவிச்செல்கின்ற கின்னரர்களும், கருடர்களும், கந்தருவர்களும், *மற்றைத் தேவர்களனைவரும் தங்கள் தங்களுடைய பெரிய நகரங்களினின்று நீங்கி இந்நகரத்தை யடைந்து வாசஞ்செய்கின்றனவாகிய வெவ்வேறிடங்கள் மிகுதியாக நிலைபெற்றிருக்கும்.—எ-று. (௫௪)

தூங்கு குண்டிகை யருகுறக் காலெதிர் தூண்டி
யோங்கு நாசிமேல் விதிமுறை நயனங்க ளுய்த்தி
யாங்கொ ராசனத் திருந்தர னடியகந் தடக்கிப்
பாங்கர் மாதவம் புரிகுநர் சாலைகள் பலவால்.

(இ-ள்.) கையினிடத்தில் தொங்குகின்ற கமண்டலம் பக்கத்திலிருக்க, பிராணவாயுவை யெழுப்பி (இரேசக பூரக கும்பகங்களைச்செய்து) உயர்ந்த நாசிநுனியில் விதிப்படியே விழிகளைச் செலுத்தி (ஒன்பதுவகை யாசனத்தில்) ஒருவகை ஆசனத்திலிருந்து சிவபெருமான் திருவடிகளை இருதய கமலத்திருத்தி, பக்கங்களிலிருந்து மகத்தாகிய தவத்தைச் செய்கின்றவர்களது பன்னசாலைகளும் (அந்நகரத்தில்) பல வுள்ளன.—எ-று.

இத்தகைய யோகத்திற்குரிய அங்கங்கள்-இயமம், நியமம், ஆதனம், பிராணாயாமம், பிரத்தியாகாரம், தாரணை, தியானம், சமாதி என எட்டுவகைப்படும். இவற்றுள், இயமமாவன-கொல்லாமை, மெய்ம்மைகூறல், கள்ளாமை, பிறர் பொருளிச்சியாமை, இந்திரியமடக்கல் என்பன. நியமமாவன-தவம், தூய்மை, தத்துவநூலோர்தல், மனமுவந்திருத்தல், தெய்வம் வழிபடல் என்பன. ஆதனம்-சுவத்திகம், கோமுகம், பதுமம், வீரம், கேசரி, பத்திரம், முத்தம், மயூரம், சுகம் என ஒன்பதுவகை; அவற்றுள், சுவத்திகம்-தொடைக்குமுழங்காற்கு நடுவே இரண்டுள்ளங் காலையுஞ் செலுத்தி யிறுமாந்திருத்தல். கோமுகம் - சகனப்பக்கத்தி லிருகாற் பரட்டையு மாறவைத்து அவ்விருகாற்பெருவிரலைக் கையிற்பிடித்திருத்தல். பதுமம்-இருதொடை மேலுமிரண்டுள்ளங்காலையுமாறித்தோன்றவைத்தல். வீரம்-வலத்தொடையி லிடக்காற்பரட்டைச் சேர்த்தி யிறுமாப்புற்றிருத்தல். கேசரி - பீசத்தின் கீழ்ச்சீவனியிடத்துப் பரட்டை வைத்திட முழங்கையை முழந்தாளில் வைத்து அங்குலிவிரித்து நாசியைப் பார்த்திருத்தல். பத்திரம்-பீசத்தின்கீழ்ச்சீவனியிடத்துஇருகாற்பரட்டையும் வைத்து அவ்விருபதத்தையு மிருகையாலிறுகப் பிடித்தசையா திருத்தல். முத்தம்-இடக்காற்பரட்டாற் சீவனியை யழுத்தி வலக்காற்பரடு அப்பரட்டின் கீழுந்தவிருத்தல். மயூரம்-முழங்கையிரண்டு முந்திப் புறத்திலழுந்தப் புவியிற் கையூன்றிக் காலீட்டித் தலை நிமிர்ந்திருத்தல். சுகம்-சுகமுந்திடமு மெவ்வாறிருக்கி னெய்துமோ அவ்வாறிருத்தல். பிராணாயாமமாவது - பிராணவாயுவை இரேசக பூரக கும்பகஞ்செய்தல். பிரத்தியாகாரமாவது,—உபாதியை நீக்கி யுண்ணோக்கல். தாரணையாவது,—கண்டம், இதயம், நெற்றி, கபாலம், நாபி இவற்றி லொன்றிற் சந்ததம் சிந்தைவைத்தல். தியானமாவது,—ஐம்புலனை யடக்கி யோகஞ் சேர்தல். சமாதியாவது—இந்திரிய முதலிய தத்துவ சேட்டைகட் கேதுவா யாக்கையு ளின்றவற்றோடு கூடினுமவற்றிற் பற்றின்றியிருக்கு மான்மாவாகிய தன்னைத்தான் காண்டல், எனவறிக. இதனை:—"இயமநன் னியமமேத்து மாசனம் பிராணாயாம-முயிர்புலனுளத்தில் வாங்கும் பிரத்தியாகாரமோங்கு - தயையுடன் சித் தஞ்சேர்த்துந் தாரணை தியானமென்று-மயர்வறு சமாதியெட்டும் வகுத்தநல் யோகத்

தங்கம்'' எனவருங் கூர்மபுராணத்தானும், '' இயம நியம மாசனமே யிலங்கு பிராணு யாமமே, வயமார் பிரத்தி யாகாரம் வருதாரணையே தியானமே, பயமார் சமாதியென வெட்டெட் பகர்முன் னின்றவியமந்தா, நயமார் பத்துவகையாகு நவில்வாமவற்றையுங் கேண்மின் '' எனவருஞ் சூதசங்கிதையானும், 'காலெதிர் தூண்டி-யோங்குநாசிமேல் விழிமுறை நயனங்களுறுத்தி' என்பதனை :—'' நெற்றிற்கு நேரே நிறைந்த வொளிகா ணில்-முற்றுமழியாதுடம்பு'' எனவும், ''புருவத்திடையிருந்து புண்ணியனைக்காணி-லுருவற்று நிற்குமுடம்பு'' எனவும், ''மயிர்க்கால் வழியெல்லா மாய்கின்ற வாயு-வுயிர் ப்பின்றி யுள்ளேபதி'' எனவும், '' வாயு வழக்க மறிந்து செறிந்தடங்கி-லாயுட் பெருக் கமுண்டாம் '' எனவும் வரும் ஔவைக்குறளா லுணர்க. (௬௫)

பாடு நான்மறை யந்தணர் வேள்விகள் பயில
மூடு தண்புகை யண்டமுங் கடந்தன முன்னந்
தேடு கின்றதோர் பரஞ்சுடர் மீட்டுமித் திறத்தா
னீடு கின்றதோ வென்றுநான் முகத்தனு நினைய

(இ-ள்.) முன்னாளில் நாம் திருமுடியைத் தேடும்வண்ணம் ஒப்பற்ற தழல் வடிவாய்நின்ற சிவபெருமான் மீண்டும், இத்தகைய உருவத்தோடு உயர்ந்திருக்கின்ற னரோவென்று பிரமதேவனுஞ் சிந்திக்கும்பொருட்டு,(சந்தவிலக்கணந் தவறாது) ஓதத்தக்க நான்கு வேதங்களையுமுணர்ந்த வேதியர்கள் வேள்விகளைச் செய்வதனால் நிரம் பிய தண்ணிய புகைப்படலம் அண்டமுகட்டையுங்கடந்து சென்றன.—எ-று.

வேதம் ஸ்ருதிவடிவா யுள்ளதாகலின், 'பாடுநான்மறை' என்றுரைத்தனனென்று மொன்று. முன்பு செந்நிறப் பிழம்பாய்நின்ற சிவபெருமான், இப்பொழுது கருநிறப் பிழம்பாய்த் தோன்றினரோவென்று ஐயுறும் வண்ணம் புகைப்படலம் அண்ட மூடு ருவிப் படர்ந்திருந்தன வென்று குறிப்பித்தவாறு காண்க. (௬௬)

நான்ம றைக்குலத் தந்தணர் நவையறு காட்சி
யூன்ம றைத்திடு முயிரென வோம்பிய வொழுக்கார்
மேன்மு றைக்கணே ரைம்புலப் படிற்றினை வென்றோர்
வான்ம றைத்திடு மாளிகை வீதியு மலிந்த.

(இ-ள்.) நான்குவேதங்கட்குரிய அந்தணர்குலத்திற் பிறந்தவர்களும், குற்ற மற்ற மெய்யறிவினால் உடம்பால் மறைக்கப்பட்ட உயிரைப்போலப் பாதுகாக்கின்ற நல்லொழுக்கமுடையவர்களும், மேலாகிய முறைமையில் நிற்பவர்களும், பஞ்சேந்திரியமாகிய பொய்ம்மையைச் செயித்தவர்களுமாகிய வேதியர்களது ஆகாயத்தையளாவிய மாளிகைவீதிகளும் (அக்காஞ்சிநகரத்துள்) நிறைந்துள்ளன.—எ-று.

அந்தணரென்றது அழகிய தட்பமாகிய குணமுடையா ரென்க. வேதாந்தத்தை யவாவுவாரென்பாருமுளர். ''மறப்பினு மோத்துக் கொளலாகும் பார்ப்பான்-பிறப்பொழுக்கங் குன்றக் கெடும்' என்றாராகலின் வேதவுணர்ச்சியினு மொழுக்கமே சிறந்ததாகலின் ''ஊன் மறைத்திடு முயிரென வோம்பிய வொழுக்கார்'' என்று கூறினர். இந்திரியங்களை யவித்தமைவோராதலால் ' ஐம்புலப் படிற்றினை வென்றோர் ' என்று கூறினர்.

இச்செய்யுள் வேதியர்வீதியின்விழுப்பமுரைத்தது. (௬௭)

வவு பல்படை வலியினர் வெஞ்சம மிகந்தோர்
நாவி னுண்மறை பயில்பவர் நனுகுறு நலத்தாற்

கோவு மீனகர் மறுகெலாங் குருமணிச் சிகரத்
தேவு மீனகர் நிலைமையே போல்வது தெரியின்.

(இ-ள்.) (பகைவர்கள்மேல்) பிரயோகிக்கும் பலவகையாயுதங்களையுடைய பலசாலிகளும், வெவ்விய போரைக் கடந்தவர்களும், நான்குவேதங்களை யப்பியசிக்கும் நாவினை யுடையவர்களுமாகிய அரசர்களது நன்மைமிக்க நீண்ட இராஜவீதிகளனைத்தும் ஆராயுமிடத்தில், நன்னிறம் விளங்கும் மணிகளிழைத்த சிகரங்களை யுடைய பெரிய தேவலோகத்தின் சிறப்பினை யொத்து விளங்கும்.—எ-று.

ஏவு பல்படை வலியினர் வெஞ்சம மிகந்தோர் - நாவி னான்மறை பயில்பவ ரொன்றூர்; அரசர் அறுதொழிலில் படைக்கலம்பயிறலும், பொருதலும், வேதமோதலுமே சிறப்புடைமைபற்றி; ஏனைய உலகோம்பல், வேட்டல், ஈதலென்பன. அந்தணர் ஓதலும் ஓதுவித்தலும், அரசர் ஓதலும், வணிகர் கேட்டலு முரிமை யுடைமையான் இருபிறப்பாளரொன்னுஞ் சிறப்புப்பற்றி, நாவி னான்மறை பயில்பவரொன விதந்தார்.

இது அரசர்வீதியின் அணியினை யுரைத்தது. (௫அ)

அணியி னோங்கலும் பன்மணிக் குவால்களு மார்வந்
தணிவி லாடகக் குவைகளும் பிறவுமுன் றழைப்பக்
கணிக ணானூறு கற்பக மனையன காட்சி
வணிக ராவணத் தெற்றிகள் வயின்றொறும் வயங்கும்.

(இ-ள்.) ஆபரணக்குன்றுகளும், பல நவமணிக் குவைகளும், விருப்பநீங்காத பொற்குவைகளும், மற்றைப்பொருள்களும் முன்னே மிகுதியாக நிறைந்திருக்க, கணிதர்களும் (அளவிடக்கூடாமல்) நாணடையத்தக்க கற்பகத்தருவினை யொத்தனவாகிய (வளப்பமிக்க) தோற்றத்தினையுடைய வைசியர்களது கடைவீதிகள் அவ்வவ்விடங்கடோறும் விளங்கிக்கொண்டிருக்கும்.—எ-று.

கணிகள்-கணிதர் ; அவர் கணிதத்தினு மளவைபடாதனவாகிய பல்வகைப் பொருள்களும் நிறைந்திருக்கும் மாட்சிமை சிறத்தலின் கற்பகத்தை யுவமங் கூறினர்.

இது வைசியர் வீதியின் வண்மை யுரைத்தது. (௫௯)

கங்கை மாமக டொல்பெருங் குலத்தர்கா சினியின்
மங்கை யாளருள் புரிதரு மகாரெனும் வழக்கோர்
செங்கண் மானிகர் வெறுக்கைய ரயன்பதஞ் சேர்ந்தோர்
துங்க வீதிபு மேனையர் மறுகொடுந் தொகுமே.

(இ-ள்.) பெருமை பொருந்திய கங்காதேவியினது பழைமையாகிய சிறந்த குலத்திற் பிறந்தவர்களும், பூமிதேவி பெற்ற புத்திரர்களென்று கூறும் வழக்கத்தினையுடையவர்களும், செந்தாமரை மலர்போலுங் கண்ணையுடைய திருமாலை யொத்த பெருஞ் செல்வத்தை யுடையவர்களும், பிரமதேவனது பாதத்திற் பிறந்தவர்களுமாகியவேளாளர்களது உயர்ந்த வீதிகளும் மற்றைய முக்குலத்தவர்களுடைய வீதிகளுடன்சேர்ந்திருக்கும்.—எ-று.

கங்கைமாமகள் தொல்பெருங் குலத்தர் என்றது வேளாளரை ; இதனை கங்கைதன் மரபின்வந்த விழுக்குடிப் பிறப்பு என்ற திருவிளையாடற் புராணத்தானும், ' பரப்புநீர்க் காவிரிப் பாவைதன் புதல்வர் ' என்ற சிலப்பதிகாரம் நாடுகாண் காதையானும் அதனுரையானு மறிக.

பிரமதேவனது முகத்தில் பிராமணர்களும், புயத்தில் க்ஷத்திரியர்களும், துடையில் வைசியர்களும், பாதத்தில் சூத்திரர்களுந் தோன்றினமையின். 'அயன்பத

ஞ்சேர்ந்தோர்' என்று கூறினர். இதனை "மதுமடை யுடைக்குஞ் செந்தா மரைமலர்ப்பீடமேலோன் - விநுமுகர்ரினின் முன்றேற்ற விளங்குவாசனையான்முன்னோர்-கதுமென மடவாரோடு முதித்தனர் கவின்செய்தோளின் - வருவைசெய் மடவாரோடு மன்னவருதித்தாரன்றே" "வாருவி ஞயகர்மாத ருடனுதித் தனராற் பின்னோர்-சாருமா மடவாரோடுந் தாளிடையுதித்தாராக - வாருமிந்நால்வர் கூட்டத்தாயினபற்பல்சாதி - யோருமாறுனைப்பமற்றீ துலகுபகர்ரமாமால்" எனவருஞ் சூதசங்கிதையானுணர்க.

இது வேளாளர் வீதியின் மேன்மை யுரைத்தது. (௪0)

கண்டு கேட்டவை யுண்டுயிர்த் துற்றறி கருவி
கொண்ட வைம்புல னொருங்குற நடாத்திய கொள்கைத்
தொண்டர் கூட்டமும் விழிவழிப் புனலுகத் தொழுங்கை
யண்டர் கூட்டமு மாலயந் தொறுந்தொறு மகலால்.

(இ-ள்.) கண்டும் கேட்டும் உண்டும் உயிர்த்தும் உற்றும் அறிகின்ற கருவிகளைக்கொண்டிருக்கின்ற ஐம்புலவுணர்ச்சிகளையும் ஒருவழிப்படுத்திச் செலுத்துகின்ற கோட்பாட்டினையுடைய மெய்யடியார்களது திருக்கூட்டங்களும், விழிகளின்வழியே ஆனந்தபாஷ்பஞ் சிந்தச் (சிரசிற் குவித்து) வணங்குகின்ற கைகளையுடைய தேவர் கூட்டங்களும் ஆலயங்கள்தோறும் நீங்காதிருக்கும்.—எ-று.

கண்ணுதி யைந்தினையுங் கருவியாகக்கொண்டு புலனறியுந் தன்மையாதலான், 'கண்டுகேட்டவை யுண்டுயிர்த்துற்றறிகருவி - கொண்ட வைம்புலன்' என்றார். பொறியாவன-கண் செவி வாய் மூக்கு மெய் யென்பன; இவற்றைப்புலனைந்துமறிகருவியாகக் கொண்டறிதலின் அங்ஙனங் கூறியதென்க. இதனை "ஐந்துபேரறிவுங் கண்களே கொள்ள வளப்பருங் கரணங்க ளுன்குஞ் - சிந்தையே யாகக் குணமொரு மூன்றுந் திருந்துசாத் துவிதமே யாக, இந்துவாழ் சடையா னுமோ னந்த வெல்லையி றனிப்பெருங் கூத்தின், வந்தபே ரின்ப வெள்ளத்துட் டிளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்" என்னுந் திருத்தொண்டர் புராணத்தானு மறிக. இறைவனைக் கண்டவழி அன்பிற் கரைந்து கண்ணீரொழுகப் பெறுதலானும் சிரமேற் கைகூப்புதலானும் 'விழிவழிப் புனலுகத் தொழுங்கை யண்டர்கூட்டமும்' என்றதென்க. (௪க)

ஆதி நான்முக னெகினத்தி னடிகளு மமலன்
பாதி யாளன்ற னுவணத்தி னடிகளும் பனிக்கார்
நாத னூர்தரு தந்தியி னடிகளு நாளும்
வீதி வீதிக டொறுந் தொறுங் காண்வர விளங்கும்.

(இ-ள்.) முதல்வனாகிய பிரமதேவனது வாகனமாகிய அன்னத்தினுடைய அடிச்சுவடும், மலரகிதராகிய சிவபெருமானது பாதித் திருமேனியிலுள்ள விஷ்ணுவினது வாகனமாகிய கருடனுடைய அடிச்சுவடும், குளிர்ந்த மேகாதிபதியாகிய இந்திரனேறிச் செலுத்துகின்ற வெள்ளையானையினுடைய அடிச்சுவடும் எந்நாளும் (காஞ்சிநகரத்தின்) அவ்வவ்வீதிகள்தோறும் யாவரும் பார்க்கும்படி விளங்கிக்கொண்டிருக்கும்.

பிரமன் பஞ்சகிருத்தியங்களிற் சிருட்டிமுதல்வனாகலான் 'ஆதிநான்முகன்' என்றும், சிவசத்தியைப்போலவே மாயோனும் சிவபிரானிடப்பாகம் பெற்றோனாகலின் 'அமலன்பாதியாளன்' என்றுங்கூறினர். அமலன் பாதியாளனென்றதனை "இடமால் வலந்தானிடப்பாகுழாய் வலப் பாலோண்கொன்றை, வடமாலிடந்துகில் தோல்வலமாழி யிடம் வலமான், இடமால் கரிதால்வலஞ்சே திவனுக் கெழினலஞ்சேர்,

குடமா லிடம்வலங் கொக்கரை யாமெங்கள் கூத்தனுக்கே" என்ற பொன்வண்ண த்தந்தாதி யானுமுணர்க. (சஉ)

மாவி னோசையுங் களிற்பின தோதையு மருங்கின்
மேவு தேர்களி னோசையுங் கவிகையாய் விரிந்த
காவு சூழ்தரு மன்னர்சி ரோதையுங் கறங்குந்
தேவ துந்துபி யோதையு மிறுத்தில தெருவு.

(இ-ள்.) குதிரைகளின் கனைப்போசையும், யானைகளின் பிளிறோசையும், பக்கங்களிற் பொருந்திய தேர்களினோசையும், குடையாக விரிந்த சோலைசூழ்ந்த அரசர்களது சிறப்புமிக்க வோசையும், (இடைவிடாது) ஒலிக்கின்ற தேவதுந்துபிகளி னோசையும் அவ்வவ்வீதிகளும் நீங்காதிருந்தன.—எ-று.

குடைகளின் மிகுதிபற்றிக் கவிகையாய் விரிந்தகாவென் றுவமித்தார்.
" கலகல முழக்குங் களகள முழக்குங் கலின்கலின் முழக்கமுங் கருவிச்
சலசல முழக்குஞ் சளசள முழக்குஞ் சடசட முழக்கமு மென்னச்
சிலசில முழக்கு மரகர முழக்குஞ் செயசெய முழக்குமெண் டிசைவாய்ப்
பலபல முழக்கு மடைத்துமே லோங்கிப் படியொடு வானமு நிறைப்ப"—
என்றதனால், மாவினோசை முதலிய வாய ஓசைகள் இறுத்தில தெருவு என்றதென்க.

நாட்டி யச்செயல் யாவையுஞ் சிவனது நடனம்
பாட்டி சைத்திறம் யாவையு மன்னதே பதியோர்
கேட்டி ருப்பன யாவையு மவனிசைக் கேள்வி
கூட்டம் யாவையு மன்னவன் றொண்டுசெய் கூட்டம்.

(இ-ள்.) (அந்நகரத்திற்செய்யும்) நடனங்களனைத்தும் சிவபெருமானுக்குச் செய்யும் நடனங்களேயாம்; பாடல்களின் இசைப்பகுதிகளனைத்தும் அவ் வெம்பெ ருமானைக்குறித்துச் செய்யுந் தோத்திரப்பாடல்களேயாம்; (அந்நகரத்துள்ளவர்கள் செவிகொடுத்துக்) கேட்டுக்கொண்டிருப்பன வனைத்தும் அவ் வெம்பெருமானது புக ழாகிய கேள்விகளேயாம்; (அவ்வவ்விடங்களிற் சூழ்ந்துள்ள) கூட்டங்களனைத்தும் அவ்வெம்பெருமானுக்குரிய திருத்தொண்டுகளைச் செய்கின்ற அடியார் கூட்டங்களே யாம்.—எ-று.

அந்நகர மாந்தரெல்லாரும் சிவ நேசமுடைய ராதலின், அவராடுதல் சிவநட னம் என்றும், கூறுதல் எல்லாம் அவனது தோத்திரப்பாட்டே என்றும், கேட்டலும் அவனது புகழேயென்றும், அங்குள்ளார்கூட்டமுந் திருத்தொண்டர் கூட்டமே யெ ன்றுங் கூறினமை அமைந்துகிடந்ததென்க. " வாவியெல்லாந் தீர்த்த மணலெல்லாம் வெண்ணீறு-காவணங்க ளெல்லாங் கணநாதர்-பூவுலகில்-ஈது சிவலோக மென்றென் றே மெய்த்தவத்தோர்-ஓதுந் திருவொற்றி யூர்' என்றார் பட்டினத்துப்பிள்ளையாரும்.

பாலு றுந்ததி யிழுதுதே னிருக்கைகள் பலவுங்
கோல மாகுமந் நகரிடை யவையுறை கூவல்
போலு மாயிடை மாதவத் தவளறம் புரியுஞ்
சாலை யாயின வரம்பிலா வடிசிலஞ் சாலை.

(இ-ள்.) அழகுபொருந்திய அக்காஞ்சிமாநகரத்தில் பாலும், பொருந்திய தயிரும், நெய்யும், தேனுமாகிய பலபொருள்களும் அவ்வப்பொருள்களிருக்குங் கிண றுகள் போன்றிருக்கும், அளவற்ற அன்னசத்திரங்கள் அந்நகரத்தில் மகத்தாகிய தவத்தினையுடைய ஸ்ரீ காமாட்சியம்மையார் முப்பத்திரண்டு தருமங்களைச் செய்த ருளிய அன்னசாலையை யொத்திருக்கும்.—எ-று.

இறைவி சிவபெருமானைப் பூசனையாற்றியதன்றி முப்பத்திரண்டறமுஞ் செய்தமையின் அந்நகரின் அடிசிலஞ்சாலையை அறப்பெருஞ் செல்வியின் அறசாலை யோடுவமித்தார். அம்மையா ரறஞ்செய்தனளென்பதனை "எண்ண ரும்பெரு வரங்கள் முன்பெற்றங் கெம்பி ராட்டிதன் பிரான்மகிழ் தருள-மண்ணின் மேல்வழி பாடு செய்தருளி மனைய நம்பெருக் குங்கரு ணையினால், நண்ணு மன்னுயிர் யாவையும் பல்க நாடு காதலி னீடிய வாழ்க்கைப்-புண்ணி யத்திருக் காமக்கோட் டத்துப் பொலிய முப்பதோ டிரண்டறம் புரக்கும்" என்ற திருத்தொண்டர் புராணத்தானுமறிக. (சடு)

அளவில் பற்பக றம்மினு நீங்கியோ ரடுத்த
கிளைஞர் வந்துழி யெதிர்தழீஇ நன்னயங் கிளத்தி
யுளம கிழ்ந்தவர்க் கூட்டுமின் னடிசில்போ லுறுவோ
ரொளிநி னுங்கிட வழங்குமா லோதன விருக்கை.

(இ-ள்.) (அக்காஞ்சிமாநகரத்துள்ள) அன்னசாலைகள் அளவற்ற பலகாலங் களுக்கு முன்னே தம்மினின்றும் நீங்கினவர்களாகிய நெருங்கிய பந்துக்கள் (தம் வீட்டிற்கு) வந்தபோது (அவர்களை) எதிர்கொண்டு தழுவி இனிய மொழிகளைக்கூறி மனமகிழ்ந்து அவர்களுக்கு உண்பிக்கின்ற இனிய உணவைப்போலத் தம்மிடத்து வருகின்றவர்கள் இலேசாக வுண்ணும்படி யுதவும்.—எ-று.

விருந்தோம்பலுக்கு முதற்கண் இன்முகம் வேண்டுமாதலானும், மனத்தினுவகையை வெளிப்படுத்துவதாகிய இனிய மொழிவேண்டப் படுவதானும், இனியமொழியை விதந்து கூறினார். இதனை "இன்சொலா லீர மளைஇப் படிறிலவாம்-செம்பொருள் கண்டார்வாய்ச் சொல்" என்ற திருக்குறளா னறிக. (சசு)

வேறு.

மாட மாளிகை வாயி றொறுந்தொறு
நீடு கஞ்றுள ராமென நின்றுநின்
றாடு சித்திரப் பத்தி யமரரு
நாடி நோக்கி நயந்திடப் பட்டதே.

(இ-ள்.) மேல்மாடங்க ளமைந்த மாளிகைகளின் வாயில்கடோறும் உயர்ந் தாடுகின்ற கழைக்கூத்தர்களைப்போல அவ்வவ்விடங்களில் நிலைத்து ஆடுகின்ற சித்திரப்பதுமைகளின் வரிசைகள் தேவர்களும் உற்றுப்பார்த்து விரும்பத்தக்கனவாயிருக்கும்.—எ-று.

மேல்மாடங்கள் ஆகாயமளாவி யிருத்தலால் தேவர்கள் உற்றுப்பார்த்து விரும்பத்தக்கனவா யிருக்குமென்பார், 'அமரரு நாடிநோக்கி நயந்திடப்பட்டது' என்றார். உம்மை உயர்வு சிறப்பு. (சஎ)

எல்லை தீர்ந்த விரவிக டுண்டிய
சில்லி யாழித் திகிரிகள் மானுமான்
மல்லன் மாநகர் மைந்தர்க ளூர்தரும்
பல்வ கைச்சுடர்ப் பன்னுறு தேர்களே.

(இ-ள்.) வளப்பமிக்க சிறந்த காஞ்சிமாநகரத்திலுள்ள இளஞ்சிறுவர்கள் ஊர்ந்து விளையாடுகின்ற பலவகைப் பிரகாசத்தோடும் அலங்கரிக்கப்பட்ட சிறுதேர்கள் அளவற்ற பல சூரியர்கள் செலுத்திய துவாரமமைந்த சக்கரத்தேர்களை யொத்திருக்கும்.—எ-று.

உமையவள் தவஞ்செய்யப்பாக்கியமுடைமையாலும், நகரத்திற் சிறந்த நகரமெனப் படுவதனாலும், 'மல்லன் மாநகர்' என்றார். சிறுவர்கள் யாவரும் சிறுதேருருட்டி விளையாடுவதனால், சூரியனுற்றை யுருளைத் தேரோடுவமித்துக்கூறினார். (சஅ)

வெள்ளை யாதி வியன்கவி யாவையுந்
தெள்ளி தின்மொழி தென்கலை யேமுத
லுள்ள பல்கலை யோதுகின் றூர்களும்
வள்ளி யோர்களு மன்றுதொ றீண்டுவார்.

(இ-ள்.) வெண்பாமுதலிய சிறந்த பாக்களனைத்தையும் தெளிவாகப் பாடுகின்ற தமிழ்ப் பாஷையே முதலாகப் பொருந்தியுள்ள பல பாஷைகளையு மோதுகின்றவர்களும், இரப்போர்க்கில்லை யென்னுது கொடுக்கும் வள்ளற்றன்மையையுடைய கொடையாளிகளும் (அந்நகரத்திலுள்ள) சங்கங்கடோறும் நெருங்கியிருப்பார்கள்.

"எல்லாப்-புலவர்க்கும் வெண்பாபுலி" என்பவாகலின், 'வெள்ளையாதி வியன்கவி' என்றார். வெள்ளையென்றது வெண்பாவை; ஆதியென்றமையான் ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பாவென்பனவும் அவற்றினினமாகிய தாழிசை துறை விருத்தங்களுமாம்.

தமிழ்ப்பாஷை யொழிந்த பாஷைகளாவன :—'சிங்களஞ் சோனகஞ் சாவகஞ் சீனந் துழுக்குடகம், கொங்கணங் கன்னடங் கொல்லந்தெலுங்கங் கலிங்கம் வங்கம், கங்க மகதங் கடாரங் கவுடங் கடுஞ்குசலந், தங்கும் புகழ்த்தமிழ் சூழ்பதினேழ்புவி தாமிவையே' என்றதனாலும், இவற்றுள் செந்தமிழே சிறந்த தென்பதனை- "சந்தனப் பொதிகைச் செந்தமிழ் முனிவனுஞ்-சவுந்தர பாண்டிய னெனுந்தமிழ் நாடனுஞ்-சங்கப் பலகையுந் தழைத்தினி திருந்த-மங்கலப் பாண்டி வளநா டென்ப" என்றதனானு முணர்க. (சக)

இகலும் வேழத் தெயிற்றினை யேய்ந்திடு
நகிலி னார்க ணறுங்குழன் மேலிடு
மகிலி னாவிபு மாய்மணி மாடமேன்
முகிலும் வேற்றுமை யின்றி முயங்குமே.

(இ-ள்.) போர்செய்கின்ற யானைக்கோடுகளை யொத்த ஸ்தனங்களையுடைய மாதர்கள் நறுமணங்கமழுந் தங்கள் கூந்தலின் மேலிட்ட அகிற்கட்டையின் புகையும் சிறந்த மணிகள் பதித்துள்ள மேலுப்பரிகைகளின் மேலுலாவும் மேகங்களும் ஒன்றற்கொன்று வேற்றுமை தோன்றாது கலந்திருக்கு மென்க.—எ-று.

மாதர் குழற்கிடு மகிற்புகைக்கும், மேன்மாடத்திற் றங்கு மேகங்கட்கும் வேற்றுமை தோன்றாது கலந்திருக்கு மென்க. (ருO)

பண்ணி னோசையும் பானலை வென்றிடுங்
கண்ணி னார்கள் களிநட வோசையுந்
தண்ண ரம்பிய றந்திரி யோசையும்
விண்ணு ளோர்க்கும் விருந்தென லாயவே.

(இ-ள்.) நால்வகைப் பணிகளினோசையும், நீலோற்பல மலரைவென்ற கண்களையுடைய மாதர்கள் செய்யுங் களிப்பைத்தருகின்ற நடனத்தினோசையும், குளிர்ந்த நரம்புகளி னிசையையுடைய வீணைகளி னோசையும், தேவர்களது செவிகளுக்கும் விருந்தென்று சொல்லத்தக்கனவா யிருக்கும்.—எ-று.

நால்வகைப் பண்ணென்றது:—"பாலை குறிஞ்சி மருதஞ் செவ்வழியென-நால்வகையாழா நாற்பெரும் பண்ணே" எனவும், அவற்றுள் பாலையாழ்:—"அராகநேர்திறமுறுப்புக் குறுங்கலி,யாசானைந்தும் பாலையாழ்த்திறனே" என்றும், குறிஞ்சியாழ்:—"நைவளங் காந்தாரம் படுமலை மருளொடு, வயிர்ப்புப் பஞ்சுர மாற்று செந்திற-மிவ்வகை யெட்டுங் குறிஞ்சியாழ்த்திறனே" என்றும், மருதயாழ் :—'நவிர் வடுகு வஞ்சி செய்திற நான்கு-மருதயாழ்க்கு வருந்திறனாகும்'' என்றும், செவ்வழியாழ்:—"நேர்திறம் பெயர்திறஞ் சாதாரி முல்லையென-நாலுஞ் செவ்வழி நல்யாழ்த்திறனே" என்றுங் கூறிய பிங்கலந்தைச் சூத்திரத்தானறிக

நடனமெனினுங் கூத்தெனினுமாம்.

கூத்து: சாந்தியும் விநோதமு மென்றிருவகைப்படும், என்னை ? "அவைதாம்-சாந்திக்கூத்தும் விநோதக்கூத்துமென், றுய்ந்துறவகுத்தன னகத்தியன்றனே" என்றாராகலின், "சாந்திக்கூத்தே தலைவனவிநய - மேந்தி நின்றாடிய வீரிருநடமவை-சொக்கமெய்யே யவிநய நாடக - மென்றிப் பாற்படஉ மென்மனார் புலவர்" என்பதனால், நாயகன் சாந்தமாக ஆடிய கூத்துச் சாந்திக் கூத்தெனப்படும். இவற்றுள், சொக்க மென்பது சுத்த நிருத்தம். அது நூற்றெட்டுக் கரண முடைத்து. மெய்க்கூத்தாவது, தேசி வடுகு சிங்களமென மூவகைப்படும். இவை மெய்த்தொழிற்கூத்தாகலின் மெய்க்கூத்தாயின. இவைஅகச்சுவைபற்றியெடுத்தலின்,அகமார்க்கமென நிகழ்த்தப்படும். அகச்சுவையாவன இராசதம், தாமதம், சாத்துவிக மென்பன. "குணத்தின் வழியதகக் கூத்தெனப்படுமே" எனக்குண நூலுடையாரும். "அகத்தெழு சுவையானகமெனப்படுமே" எனச்சயந்த நூலுடையாருங் கூறலானும், அவிநயக் கூத்தாவது நிருத்தத்தை தழுவாது, பாட்டினது பொருளுக்குக்கைகாட்டி வல்லபஞ்செய்யும் பலவகைக் கூத்து. நாடகம்-கதைதழுவி வருங்கூத்து. விநோதக்கூத்தாவது குரவை, கலிநடம், குடக்கூத்து, கரணம், நோக்கு, தோற்பாவை என்பர். இவற்றுள் - குரவையென்பது, காமமும் வென்றியும் பொருளாகக் குரவைச்செய்யுள் பாட்டாக எழுவரோனும் எண்மரோனும் ஒன்பதின்மரோனுங் கைபிணைந்தாடுவது. கலிநடம் என்பது கழாய்க் கூத்து. குடக்கூத்து பஞ்சலோகங்களாலும் மண்ணாலுங்குடங்கொண் டாடுவது. கரணமாவது பதிந்தவாடல். நோக்கென்பது பாரமுநுண்மையுமாயமு முதலானவற்றை யுடையது. தோற்பாவை என்பது தோலாற் பாவைசெய்து ஆட்டுவிப்பது. இன்னும் வசைக்கூத்தோடேழென்பாருமுளர் அவை யிழிந்தோராடற்குரியன. இதனை, "இருவகைக் கூத்தி னிலக்கணமறிந்து" என்ற சிலப்பதிகார வரங்கேற்று காதையில் அடியார்க்கு நல்லாருரைத்தலானு மறிந்துகொள்க. இன்னும் விரிப்பிற் பெருகும் ஆண்டுக்காண்க. (ருக)

அணிகு லாவு மரம்பையர் காளையர்
நணிய தோளை நயப்புற நாகருங்
கணிகை மாதரைக் காமுற மேவலான்
மணிகொள் காஞ்சி மதனர சாயதே.

(இ-ள்.) அழகு விளங்குகின்ற அரம்பைமாதர்கள் (அந்நகரத்திலுள்ள) வாலிபர்களது அழகுபொருந்திய புயங்களைத் தழுவ விருப்பங்கொள்ளவும், தேவர்களும் அந்நகரத்துள்ள விலைமாதர்களை விரும்பவும் அங்கு அடைகின்ற காரணத்தினால் அழகுபொருந்திய காஞ்சிமாநகரமானது மன்மதனுடைய இராஜதானியை யொத்துள்ளது.—எ-று.

இயற்கை யழகுடையராதலால் அணிகள் தாமழகுபெற விரும்புதலின், 'அணிகுலாவு மரம்பையர்' என்றார்."அன்றியுங் காமக்கிறையவர் தனத ரனையவர் கோடியர்த் தரலா,லென்றுமோ ரியல்பி னெங்கணும் விரவி யெவற்றினுங் கடந்தபே ரொளியைக், குன்றுழற் கொம்மைக் குவிமுலைத் தடத்தாற் குழைத்தருள் கருணையெம்பிராட்டி, நன்றுவீற் றிருக்கும் பேரொளிப் பிலத்திற் கப்பெயர் நாட்டனு மாமால்" என்றகாஞ்சிபுராணத் திருவிருத்தத்தின்படி இந்நகரம் அநேக மன்மதருக் கிருக்கையாதலானும், 'மணிகொள் காஞ்சி மதனர சாயதே' என்ற தென்க. கன்மநோய்க் குடைபவர் கடப்பச்செய்திடும்-பன்மலர் துவன்றிய தீர்த்தத்தி னீராடும்பெருமிதத்தால் அங்குள்ளவாடவர்தேவர்களைப்போல் அழகுமுதலியன பெற்றிருத்தலின் அவருடைய தோளை அரம்பையர் நயந்தாரெனவும், தேவகன்னிகையர் மிக்கவழகுடையராயிருந்தும் தம் இறைவனுக்குக்குற்றேவல்செய்யு மாட்சியினால் தம்மடந்தையரினு மிவனை மிகவிரும்புகின்றமையால், 'நாகரும் கணிகைமாதரைக் காமுற'எனவுங் கூறினர். ()

கூற்றிற் செல்லுங் கொலைக்கரித் தானமு
மேற்றிற் செல்லு மிடையர்தஞ் சேரியி
னூற்றிற் செல்லு மொண்பாலு முடனுரு
வாற்றிற் செல்லுமவ் வாவணந் தோறுமே.

(இ-ள்.) இயமன்போல(பூமிநடுங்கச்)செல்கின்ற கொலைத்தொழிலையுடைய யானைகளின் மதநீர்ப் பெருக்கும், இடபத்தின்மே லேறிச் செல்கின்ற இடையர்களுடைய சேரிகளில் ஊற்றுபோலச் சுரந்து பாய்கின்ற வெள்ளொளி பொருந்திய பாற்பெருக்கும் ஒன்றாகக் கலந்து அந்நகரத்துள்ள கடைவீதிகடோறும் ஆறுபோலப் பெருகியோடும்.—எ-று.

அந்நகரத்து யானையின் மதநீரும் பாலு மொன்றாய்க்கலந்து ஆவணவீதிகளில் ஆறுபோற் பெருகும் என்றதனால், அது பெருஞ்செல்வ முடையதென்பது கூறியதாயிற்று. ஏற்றிற் செல்லு மிடையர் என்பதற்கு, இடபம்போற் செல்லு மிடையர் எனினு மாம். (௫௬)

வே று.

பண்ணுளர் நரம்பியல் பாணிக் கேற்றிட
வெண்ணுள கணிகைய ரினத்தொ டாடலுங்
கண்ணுள ராடலுங் காம னாடலும்
விண்ணுள ராடலும் வெறுப்ப மேவுமே.

(இ-ள்.) பண்ணைத் தருகின்ற வீணையின் நரம்புகள் தாங்கள் பாடும் இசைக்குப் பொருந்தும்படி, யாவரும் மதிக்கத்தக்க விலைமாதர்கள் தங்கள் கூட்டத்தினரோடு ஆடுதலும், கழைக்கூத்தர்களாடுதலும், மன்மதன் (அங்குள்ள ஸ்திரீபுருஷர்கள்மேல்) போர்செய்தலும், விண்ணுலகத்துள்ள அரம்பைமாதர் நடித்தலும் யாவரும் வெறுக்கும்படி மிகுதியாக நெருங்கியிருக்கும்.—எ-று.

நரம்பு-வீணைநரம்பு, பண் என்றது நரப்படைவால் நிறந்தோன்றப் பண்ணப்படாநின்ற பண்ணும், பண்ணியற்றிறமும், திறமும், திறத்திறமுமாம். பண்ணென்னும் பெயர்க்குக்காரணம், "பாவோ டணைத லிசையென்றார் பண்ணென்றார்-மேவார்பெருந்தான மெட்டானும் - பாவா-யெடுத்தன் முதலா விருநான்கும் பண்ணிப் - படுத்தமையாற் பண்ணென்று பார்" என்பதனா னுணர்க. பாணி என்றது இருவகைத்தாளவிகற்பங்கள். (௫௭)

அரிவையர் மைந்தர்க ளணிந்து நீத்தவே
திருமகள் காமுறுஞ் செல்வ மாகுமேற்
கருதரு நான்முகக் கடவுட் காயினும்
பொருவரு நகர்வளம் புகலற் பாலதோ.

(இ-ள்.) (அங்நகரத்துள்ள) மாதர்களும் புருஷர்களும் அணிந்து நீக்கிய அணியாடை முதலிய பொருள்களே இலக்ஷ்மி விரும்பத்தக்க செல்வமாக விருக்குமாயின், ஒப்பற்ற அங்நகரத்தின் வளப்பத்தை நினைத்தற்கரிய நான்கு முகங்களையுடைய பிரமனுக்காயினுஞ் சொல்லமுடியுமோ? (முடியாது.)—எ-று.

திருமகள் யாவருக்கும் பெருந்திருவளிக்குந் தெய்வமகளேனும் அங்நகரத்தாடவரு மாதரு மணிந்து நீத்த வணிகளையே அவள் காமுறுவாளாயின் அங்நகரஞ் செல்வத்திற் கிருப்பிடமென்பது கூறாமே விளங்கிக்கிடந்தது. (ருரு)

வேறு.

மாறாய்ச் சிறார்க ளெறிந்தாடிய மான்ம தத்தாற்
சேறாய்ப் பொற்சுண்ணத் துலர்வாய்ப்பனி நீர்கள் சிந்த
வாறாய்ப் பசிதத் தினில்வாலுகத் தாறு மாகி
வேறாய்ப் புவியோ ருணர்வாமென மேய வீதி.

(இ-ள்.) சிறுவர்கள் ஒருவர்மேலொருவர் மாறுபட்டு வீசிவிளையாடிய கஸ்தூரிக்குழம்பினால் சேறாகியும், பொற்சுண்ணத்தினாலுலர்ந்தும், பனிநீரைச் சிந்துதலினால் ஆறாகியும், பச்சைக்கர்ப்பூரப் பொடியால் வெண்மணல் வழியாகியும், இவ்வாறு பல வேறுவிதமாகியும், உலகத்துள்ள ஆன்மாக்களின் அறிவைப்போலப் பொருந்தியிருந்தன; அங்நகரத்து வீதிகளனைத்தும்.—எ-று.

வீதிகளெல்லாம் சிறுவர்கள் விளையாட்டால் வீசிய கஸ்தூரியாற் சேறுபட்டும், அவையே பொற்சுண்ணத்தா லுலர்ந்தும், பனிநீரைச் சிந்துதலால் ஆறாகியும், பச்சைக்கருப்பூரப் பொடியால் வெண்மணல் வழியாயுந் தோன்றுதலால், புவியோருணர்விற் குவமை கூறினார். (ருசு)

தண்டாமரை யேந்திய வானவன் றன்னை யொத்தா
னெண்டாவிய மாமத னேந்திழை யாரி லஞ்சி
வண்டாமரை பூத்தன வொத்தனர் வந்து செந்தே
னுண்டாடிய தேன்களை யொத்தன ரோங்கன் மைந்தர்.

(இ-ள்.) யாவராலும் மதிக்கத்தக்க சிறப்பினையுடைய மன்மதனானவன் குளிர்ந்த தாமரை மலரைத் தனது திருக்கரங்களில் தாங்கிய சூரியனை யொத்தான்; சிறந்த ஆபரணங்களையணிந்த மாதர்கள் தடாகங்களில் வளவிய தாமரைமலர் பூத்தத ன்மையை யொத்தார்கள்; வலிமைபொருந்திய வாலிபர்கள் அத்தாமரை மலரையடைந்து செவ்விய தேனையுண்டு களித்து விளையாடுகின்ற வண்டுகளை யொத்தனர்.—எ-று.

மன்மதனுடைய கணைகளில் தாமரை யொன்றாகலின், அவன் கையிற் றாமரைமலரைப் பிடித்திருப்பதனால் தாமரைமலரைக் கையிலேந்திய சூரியனை யொத்தனனென்றும், கண்முகம் கைகால் முதலியன தாமரை மலர்களோடொப்பவாகலின் ஏந்திழையார் தடாகத்திற் பூத்த தாமரைமலரை யொத்தனரென்றும், ஆடவர் அவர்களின் பமாகிய தேனைநுகர்தலின், தாமரைமலரில் தேனைநுகரும்வண்டினை யொத்தனரென்று முவமை கூறினார். (ருஎ)

ஏமங் குலவு முரசங்க ளிரட்ட வாசத்
தாமங் கமழ்பந் தரினூடு தமக் கியன்ற
வோமங் களின்மா மணஞ்செய்தன ரூர்கு லாவு
மாமங் கலமே யுலப்பின்றி மலிந்த தன்றே.

(இ-ள்.) இன்பத்தைத் தருகின்ற முரசவாத்தியங்களடிக்கவும், நறுமணங் கமழும் மலர்மாலை கட்டிய மணப்பந்தல்களில் தங்கள் தங்களுக்கியன்ற ஓமங்களை வளர்த்துச் சிறந்த கலியாணஞ்செய்து ஊர்க்கோலம் வருகின்ற மிக்க மங்கலவாத்திய ங்களே நீங்காமல் அந்நகரமெங்கும் நிறைந்திருந்தது.—எ-று.

மணம் எண்வகைத்தாதலின், 'தமக்கியன்ற ஓமங்களின் மாமணஞ் செய் தனர்' என்று கூறினர். எண்வகை மணமாவன:—பிரமம், தெய்வம், ஆரிடம், பிரசா பத்தியம், ஆசுரம், காந்தருவம், இராக்கதம், பைசாச மென்பன. இவற்றுள், பிரமம்- பிரமசாரிக்குக் கன்னியைத் தீமுன்னர்க் கொடுப்பது. தெய்வம் - வேள்வியால் வந்த கன்னியைத் தீமுன்னர்க் கொடுப்பது. ஆரிடம் - ஒன்றிரண்டு பசுவு மெருதும் வாங் கிக்கொண்டு கன்னியைத் தீமுன்னர்க் கொடுப்பது. பிரசாபத்தியம் - தலைமக னின த்தார் வேண்டத் தலைமக ளினத்தார் உடன்பட்டு அவளைத் தீமுன்னர்க்கொடுப்பது. ஆசுரம்-பெண்ணுக்குப் பொன்பூட்டிச் சுற்றத்தார்க்கு வேண்டிய பொன்னைக்கொடு த்துக் கொள்வது. காந்தருவம்-கேட்பாருங் கொடுப்பாரு மின்றி இருவருந் தனியி டத் தெதிர்ப்பட்டுத் தாமே கூடுவது. இராக்கதம் - பெண்ணும் பெண்ணி னினத்தா ரும் உடன்படாமல் வலிதிற் கொள்வது. பைசாசம் - துயிலுறுபவளைச் சென்றுகூடு வது, என்றறிக. இவற்றை:—"பிரமநற் றெய்வ மாரிடம் பிரசா பத்திய மாசுரம் பெ ட்பின் - மருவுகாந் தருவ மிராக்கதம் பசாச மெனமண மெட்டவை யவற்றுள் - கருது மூற் பிரம மொருவனை யழைத்துக் கலனொடுங் கன்னியை யளித்த - லருளுமத் தெரி வை பயந்தசேய் மூவேழ் குலமுநற் கதியுற வளிக்கும்." "மகவினை விதியி னூற்று வித் தோர்க்கு மகட்கொடுத் தருளுதல் தெய்வம் - புகலுமாங் கவள்சே யீரொழு மரபு ம் பொருவருங் கதியிடைப் புகுத்துந் - தகைவினை னிரண்டு பகர்பொருள் கவர்ந்து தன்மகட் கொடுத்தலா ரிடமா - முகிண்முலைப் புதல்வன் மூவிரு குலனு முறையி னிற் கதியினுய்த் திடுமால்." "அற்பொடு பிரசா பத்தியங் கேட்போர்க் கரிவையை ப் பொருள்கொளா தளித்தல் - கற்புடை யவள்சேய் மூவிரு குலனுங் கருதுநற் கதி யிடைப் போக்குஞ் - சொற்றவிந் நான்கு மறையவர்க் குரிய தொகுபொருள் விழை வொடுங் கவர்ந்து - பொற்றொடி நெடுங்கட் கன்னியை யளித்த லாசுர மாமெனப் புகல்வார்." "கன்னியுங் காதற் குமரனுந் தம்மிற் கலத்தல்காந் தருவம்ராக் கதந் தான்-வன்மையைப் பற்றிக் கன்னியைக் கோடல் வகுத்தவிம் மூன்றுமன் னவர்க்கா- முன்னருங் களவிற் களிப்பினிற் றுயிலின் முகிண்முலைக் கன்னியைக் கலத்த-லின் னவ்கூர்ப் பசாச மணமிஃ துலகி லிகழ்ந்திடு மணமென விசைப்பார்." என வருங் காசிகண்டத்தா னுணர்க. (கஅ)

மாகந் திகழு மகிலாவிகொள் மாட மீதிற்
பாகின் மொழியா ரிளமைந்தர்தம் பாலி னேச்சப்
போகுஞ் சிவிறிப் பனிநீர்புறஞ் சிந்த வென்று
மேகஞ் சிதறும் பெயலென்ன விளங்கும் வீதி.

(இ-ள்.) ஆகாயத்திலுயர்ந்து விளங்கும் அகிற்புகை படிந்துள்ள மாடங்க ளின்மேல் பால்போலும் இனிய சொற்களையுடைய மாதர்கள் வாலிபர்களிடத்து விசி றவும் அவ்விசிறியிலுள்ள பனிநீரானது வெளியே சிதறுதலால், அந்நகரத்து வீதிகள்

எக்காலத்திலும் மேகங்கள்சிந்துஞ் சிறு துளிகளைப்போன்று விளங்கிக்கொண்டிருக்கும்.—எ-று.

மாளிகை மேற்படரும் அகிற்புகையை மேகமாகவும், மாதர் ஆடவர்மேல் விசிறும் பனிநீரை மழைத்துளியாகவும் உவமித்துக்கூறினர். (இகூ)

வன்மா முலையைக் தியமங்கையர் மைந்த ராேனோர்
தொன்மாட மீதி லெறிந்தாடுபொற் சுண்ண மோடு
நன்மா மலர்த்தாது விசும்புற நண்ண மேகம்
பொன்மா முகிலாய்ப் பனிநீரிற் பொழியு மன்றே.

(இ-ள்.) சூதாடு கருவியைப்போன்ற சிறந்த ஸ்தனங்களையுடைய மாதர்களும், புருஷர்களும் பழைமையாகிய மேல்மாடங்களிலிருந்து வீசி விளையாடுகின்ற பொற்சுண்ணத்துடன் நறுமணங் கமழுஞ் சிறந்த மலர்களிலுள்ள மகரந்தப்பொடிகள் ஆகாயத்திற் பொருந்துதலால், அங்குள்ள மேகங்கள் பொன்னிறமுள்ள பெரிய மேகங்களாகப் பனிநீரைப்போல மழையைப் பெய்யும்.—எ-று.

மேன்மாடங்களில் மாதர்கள் வீசியெறியும் பொற்சுண்ணமும், மலரினுள்ள மகரந்தப்பொடியும் மேகத்திற்கலந்து பொன்னிற மேகமென்னத் தோன்றுவதனல் மயக்கவணியாம். பொன்மாமுகிலாய் என்புழி,ஆய் என்பது ஆக்கப்பொருள் குறித்து நின்றது. (சுo)

தாராற் பொலிபொற் புயவீரர் தவாது செல்லுந்
தேரார்ப்பு நால்வாய்க் கரியார்ப்பும்வெஞ் சேனை யார்ப்பு
மேரார்ப்பு மிக்க பதிமானவ ரீண்டு மார்ப்புங்
காரார்ப்பும் வேலைக் கடலார்ப்புங் கடுத்த வன்றே.

(இ-ள்.) மாலைகளால் விளங்குகின்ற அழகிய புயங்களையுடைய வீரர்கள் இடைவிடாமல் ஊர்ந்து செல்கின்ற இரதங்களி னரவாரமும், துதிக்கையையுடைய யானைகளி னரவாரமும், கொடிய சேனைவீரர்களி னரவாரமும், ஏருழுதலாலுண்டாகுமரவாரமும்,பலதேசத்திருந்துவந்தமனிதர்கள் ஒருவரோடொருவர் நெருங்குதலாலுண்டாகுமரவாரமும், (எவைபோலு மெனின்) மேகமுழக்கத்தையுஞ் சமுத்திர முழக்கத்லதயு மொத்துள்ளன.—எ-று.

நால்வாய் = தொங்கும்வாய்; துதிக்கை. சேனைவீரர் கோபத்தையே மேற்கொண்டுள்ளவ ராகலின், 'வெஞ்சேனை' என்றும், பசிணெண்டேயமாக்களும் நெருக்கியிருத்தலின், 'மிக்கபதி மானவர்' என்றுங் கூறினர். (சுக)

வானேக்கி நிற்கு முலகென்னவு மன்னவன் செங்
கோனேக்கி நிற்குங் குடியென்னவுங் கோதினும்ப
ரானேர்க்கு நாக ருலகோர்க்கு மவனியோர்க்கு
மேனேர்க்கு நாடு நகராகி யிருந்த தவ்வூர்.

(இ-ள்.) மழையை யெதிர்நோக்கியிருக்கு முயர்களைப்போலவும், அரசனுடைய செங்கோன் முறைமையை யெதிர்பார்த்திருக்கின்ற குடிகளைப்போலவும், குற்றமற்ற தேவர்களாயுள்ளவர்களுக்கும், நாகலோகவாசிகளுக்கும், இந்நிலவுலகத்துள்ளவர்களுக்கும் மற்றைய உலகங்களில் வசிப்பவர்களுக்கும் விரும்புதற்குரிய நகரமாயிருந்தது அக்காஞ்சிமாநகரம்.—எ-று.

"மழையின்றி மாநிலத்தார்க் கில்லை" என்றபடி, மழையே யுயிர்களுக்கின்றியமையாததாகலின், 'வானேக்கி நிற்கு முலகென்னவும்' என்றும், குடிகள்

அரசன் செங்கோல் முறைமைப்படி நடக்கவேண்டுதலின், ' மன்னவன்செங் - கோ ேனாக்கி நிற்குங் குடி யென்னவும்' என்றுங் கூறினார். இதனை—" வானோக்கி வாழு முலகெல்லா மன்னவன் - கோனோக்கி வாழுங் குடி " என்னுந் திருக்குறளானு முணர்க.

நோக்கிவாழ்தல் - இன்றியமையாமை; வானினுயவுணவை வானென்றும், கோலினுய வேமத்தைக் கோலென்றுங் கூறினாரென்பர் பரிமேலழகர். ' உலகெலாம் வியப்ப - எவ்வுகங்களுமுள்ளதென் றியாவருமேத்தக்-கைவ்விளங்கிய நிலையது காஞ்சிமாநகரம் ' எனப்படுதலின், கோதிலும்ப-ரானோர்க்கு நாகருலகோர்க்கு மவனியோர்க்கு, மேனோர்க்குநாடு நகராகியிருந்ததவ்வூர் ' என்றார். (சுஉ)

கோடு நெறியு மிகலும்மனக் கோட்ட மாய
கேடும் பிணியு முதலாகிய கேதம் யாவு
நீடும் பரிவோ டுறைவா ரிடைநீங்க லாலே
வீடந் நகரோ வெனிலென்னின் விளம்ப வற்றோ.

(இ-ள்.) துன்மார்க்கமும், பகைமையும், மனக்குற்றத்தால் விளையுங்கெடுதிகளும், நோய்முதலிய துன்பங்களனைத்தும் மிக்கவிருப்பத்தோடும் அங்குவசிப்பவர்களிடத்தினின்றும் நீங்கியிருத்தலால்,அக்காஞ்சிமாநகரமே மோக்ஷஸ்தானமென்று சொல்வார்களாயின், (அதன்பெருமை) என்னால் சொல்லுந்தரத்ததோ ?—எ-று.

கோடுநெறி - கோட்டமாகியநெறி. இகல் - பகை. பிணி-நோய். பரிவான் அந்நகரில் வசிக்குமாடவர்மகளிரிடத்துக் கோடு நெறிமுதலிய கேதமனைத்துங் கெடுதலான் 'வீடந்நகரோ'என்றார். கேதம்யாவுமென்றது வாக்கின் குற்றம், காயக்குற்றம், மனக்குற்றங்களை. (சுரு)

வேறு.

ஏமமே தருவாச் சினைகளு மனைத்தா விலைதளிர் செய்யபூந் துகிராக்
காமர்பூ மணியா வுதித்தொரு காஞ்சி கண்ணரோ ரைவர்முன் கண்டு
தாமினி தருளும் பொய்கையின் மருங்கே தன்னிழல் பிரிகிலா துறலாற்
பூமியெல் காஞ்சி மாபுர மெனும்பேர் புனைந்ததப் பொருவிலா நகரம்.

(இ-ள்.) பொன்னேமரமாகவும், கிளைகளும் அப்பொன்னேயாகவும், இலைகளும் துளிர்களும் பொலிவினையுடைய சிவந்த பவளங்களாகவும், அழகியமலர்கள் நீலரத்தினங்களாகவும் தோன்றி (விளங்குகின்ற) ஒப்பற்ற காஞ்சிவிருக்ஷமானது, ஐந்து அவதார விஷ்ணுக்களை தனக்குமுன்னேபார்த்து, அவ்விஷ்ணுக்களால் இனிமையாகவமைக்கப்பட்ட தடாகத்தின்பக்கத்தில் தன்னிழலானது இடம்விட்டுப் பெயராமல் நிலைத்திருக்குங்காரணத்தில், ஒப்பில்லாத அந்த நகரம் உலகத்தாரால் மதிக்கத்தக்க சிறந்த காஞ்சிபுரமென்னும் பெயரைப்பெற்றது—எ-று.

பொன்மணிகளாலாகிய உறுப்பினமைந்த காஞ்சிவிருக்ஷ மிருக்குங்காரணத்தா லிதற்குக் காஞ்சிபுரமெனப் பெயர் வந்த தென்பதனை—" முழங்குமறை யாக மநூல் வடிவமாகி மூலமுதன் முழுவதுஞ்செங் கனகமாகிச் - செழுங்கனிபூத் தளிர் கணவ மணிகளாகிச் சேர்ந்தவர்க்கு நாற்பயனு மளிப்பதாகி - வழங்கிரவி மண்டலத் தின் காறுமோங்க வளர்ந்துநிழல் பிரியாத வண்மைத்தாய - தழங்குபுகழ்த் திருக் காஞ்சி நிலைபேறெய்துந் தன்மையினாற் காஞ்சியெனும் பெயரிற்றாமால்" என வருங் காஞ்சிப்புராணத்தானுமுணர்க.—அன்றியும், காஞ்சி யென்பதனை, க-அஞ்சி எனப் பிரிக்கப்பட்டு-க-பிரமம், பிரமன் என்றும் அஞ்சித்தல்-பூசித்தல் என்றும் அக்காரண

த்தால் காஞ்சி யெனப் பெயர்வந்ததென்றும், மற்றும் பல காரணங்களுங் கூறப்ப டும். இவற்றை :—“ கறங்கு வண்டிமிர் கமலமுந் துழாயுங் கடுக்கை மாலையுந் துயல் வரு புயத்தீர்-பிறங்கு கவ்வெனு மொழிப்பொருள் பிரமம் பிரம மானயா மஞ்சிக்கப் படலா-லுறங்கி டாப்புகழ்க் காஞ்சியென் றுரைக்கு மொருதி ருப்பெய ரெய்துமிந் நகர-மறங்க ளாந்தநா லெமைப்பரம் பிரம மகில காரண மென்பதுதெளிவீர்.” “ இ லகு வாண்கை யரிமதர் மழைக்க ணிருண்ட வார்குழல் வேய்மருள் பணைத்தோட்- சலப மாமயி லியலெழின் மடவா ருந்தித் தானத்தைக் காஞ்சி யென்றுரைப்ப-சுலவு வெண்டிரைப் பனிக்கட லுடுக்கைத் தொல்லை மாநில மடக்கொடி தனக்குக் - குலவு காஞ்சிநற் முனமாய்ப் பொலிந்த கொள்கை யானுமத் திருப்பெயர் வழங்கும்” “ மற் றுங் கவ்வெனல் சென்னியோ டின்ப மலர வன்றனை யுணர்த்துமஞ் சித்தல்-சொற்ற பூசனை யடைவுமாம் யாருஞ் சென்னி மேற்கொடு தொழத்தகுஞ் சிறப்பாற் - பற்றி வைகுநர் பேரின்ப் முறலாம் பங்க யத்தவன் வழிபட லானும்-பெற்ற தாகுமித் திரு ப்பெய ரிதனுற் பிரம லோகமென் றுரைக்கவும் படுமால்” எனவும், “ இன்னுமொரு வாறியம்பக் கேண்மதிநீ கம்மென்றல் சிரமா மந்தச்-சென்னிமிசைச் சயனமுறு வது கேச மதுதனையஞ் சித்தல் காஞ்சி-யன்னதனுற் காஞ்சியொடு கேசமொரு பொருட் கிளவி யாருந் தேம்பு - மின்னிடையாய் கேசாந்த மாவதுமே தகுகாஞ்சி யந்த மா மால்” எனவும், “ ஆசில் கவ்வெனு மயனஞ் சித்திடு - மாசில் சீர்மையி னுனு மாநகர்- காசி லாப்புகழ்க் காஞ்சி யாயதாற்-பேசு காரணம் பிறவு முள்ளவே” எனவும் வருங் காஞ்சிப்புராணத் திருவிருத்தங்களானு முணர்க. கண்ணரோ ளாவர் என்றது, பஞ் சகிருத்தியங்களில் திதித்தொழில் புரிந்து, தம் வாணு ளுலப்ப விறந்துபட்ட மூல விஷ்ணுக்களை. (சுஅ)

சுருதியா னுறங்கு மிராத்தொறு முடிவிற் றுஞ்சிய வூழிக டோறும்
விரையவந் துலக மழித்திடுங் கடலவ் வியன்பதி யெல்லையுட் சிறிதும்
வருவதை யஞ்சிப் புறந்தனிற் சூழ வந்தொரு சத்திகாத் திடலாற்
பிரளய சித்தென் றொருதிரு நாமம் பெற்றதக் காஞ்சியம் பேரூர்.

(இ-ள்.) பிரமதேவன் நித்திரைகொள்ளுமிரவாகிய தினகற்பங்கடோறும், அவன் முடிவிலிறக்கின்ற ஊழிக்காலங்கடோறும் விரைந்துவந்து உலகத்தை யழிக் கின்ற கடலானது அந்த விசாலமாகிய காஞ்சிமாநகரத்தின் எல்லைக்குள்ளே சிறிதும் பிரவகித்து வருவதற்குப்பயந்து வெளியிலே சூழ்ந்துபோகும்படி ஒரு சத்தியானவள் சதாவந்து காத்திருக்குந்தன்மையினுல் அழகுபொருந்திய அக்காஞ்சிமாநகரமானது பிரளயசித்து என்று ஒருசிறந்த பெயரைப்பெற்றது.—எ-று.

சுருதியானுறங்கு மிரவாவது-பிரமனது தினகற்பம். முடிவிற்றுஞ்சிய வூழி யாவது-அப்பிரமனுயுள் முடிந்து இறக்குங்காலம். அவை; கிரேதாயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் ஆகிய சதுர்யுகங்களுக்கு வருஷம் நாற்பத்துமூன்றுலக்ஷத் திருபதினுயிரம். இந்தச் சதுர்யுகம் ஆயிரங் கொண்டது பிரமனுக் கொருபகல். ஆயி ரம் சதுர்யுகங்கள் பிரமகற்பமென்று சொல்லப்படும். இரவும் அவ்வளவினவே. அப் பகலு மிரவுங் கூடியது ஒருநாள். அத்தகைய நாட்களாலாகிய வருஷங்கள் நூறுசெ ன்றால் அப்பிரமனுயுள்சென்று இறந்துவிடுவன். அது ஊழியெனப்படும். இதனை:— “ ஈண்டுமோ ரிருபா னுயிரந் தலையிட் டியன்றநாற் பத்துமூன் றிலக்க-யாண்டெனப் படுவ நான்குகத்தளவை யிம்முறை யாயிர மிறந்தாற்-காண்டகு மயனுக் கொருபக லதுவே கற்பமா மிரவுமத் துணைத்தவ்-வாண்டகைக் கந்நாண் முப்பதோர்திங்க ளஃ

தொரு பன்னிரண் டாண்டே" "பகர்ந்தவாண் டொருநூ றிருவகைப் பாரார்த்தம் பற்றறில் வெள்ளிவண் டோடு - நுகர்ந்திட வுடைத்து முடங்குகான் ஞிமிறு தழங்கிசைப் பேட்டொடு நறுந்தே-னுகர்ந்துபண் பயிற்றும் பொருட்டலர் கமல னோன்மலரணங்கினுக் கரங்க - நிகர்ந்தநா வகத்துப் பழமறை கொழிக்கு நெடுந்தகைக் கிறுதிவந் தெய்தும்" என வருங் காஞ்சிப்புராணத்தா னுணர்க. இவ்வா றுண்டாகு மிருவகைப் பிரளயங்களினும் பிரவகிக்குங் கடற்பெருக்கு இந்நகர்மேற் புரண்டுசெல்லாமல் வேலிபோற் சூழ்ந்து நிற்கும் வண்ணம் ஒரு சிவசத்தியாற் காக்கப்படுதலாற் பிரளயசித்து என்னும் பெயரைப்பெற்றதென்க. இதனை:—இலயப்புனல் வெள்ள மெழாது தணிந்-துலையப்புரி யுத்தமி மீண்டருளா - லலையப்பணி வார்திரு முன்னமர்பூ-வலயத் தவர் போற்ற வதிந்தனளே." "வெருவிப் பருவந்த வினைரெவருங் - கருணைச் செயல் கண்டு களித்தனர்நோ - யொருவித் தனிமா வடியும்பர்பிரா - னிருபொற் கழலேத்தி யிறைஞ்சினரால்." "எற்றித் திரைபா யிலயப் புனலை - வெற்றித் திறல்காட்டி விலக்குதலாற் - றெத்துப் பொழில் சூழ்நகர்தானிலய - சித்துப் பெயர்வாய்ந்து திகழ்ந்ததுவே" எனவருந் திருவிருத்தங்களானு முணர்க. பிரளயசித்தெனினும், இலயசித்தெனினு மொக்கும். (சுரு)

கயிலையி லரனை யம்மைபூங் காவிற் கண்களை மூடலு முலகிற்
பயினுறு கொடிய வினையிரு ளகலும் பான்மையால் வந்துமா நிழற்கீ
ழியலொடும் பரமன் பூசனை யியற்றி யிரைத்தெழு கம்பைகண் டஞ்சிச்
செயன்முறை தழுவக் குழைந்தருள் செய்யச் சிவபுர மானதச் சீரூர்.

(இ-ள்.) திருக்கயிலாயத்தில் திருநந்தனவனத்திலே உமாதேவியார் சிவபெருமானது திருக்கண்களை மூடியபோது உலகத்தில் நிறைந்த கொடிய தீவினையென்னுமிருள் நீங்கும்பொருட்டு உலகத்தில்வந்து மாவிருக்ஷத்தின்கீழே சிவாகமமுறைமைப்படி சிவபெருமானைப்பூசித்து (அப்பூசனையை யழிக்கும்படி) இரைச்சலிட்டுப் பிரவகித்துவந்த கம்பாநதியைப்பார்த்துப்பயந்து, தழுவவேண்டிய முறைமைப்படி தழுவிக்கொள்ளுதலும் சிவபெருமான் திருமேனிகுழைந்து திருவருள்புரிந்த காரணத்தினால், அச்சிறப்புப்பொருந்திய காஞ்சிமாநகரமானது சிவபுரமென்னும் பெயரைப் பெற்றது.—எ-று.

உமாதேவியார் சிவபெருமானது திருக்கண்களை மூடுதலும் உலகமெங்கும் இருள் மூடிக்கொண்ட தென்பதனை:—"நாயகன் கண்ணை யப்பா னுயகி புதைப்பவெங்கும்-பாயிரு ளாகி மூடப் பரிந்துல கினுக்கு நெற்றித் - தூயநேத் திரத்தி னாலே சுடரொளி கொடுத்த பண்பிற்-றேயமா ரொளிக ளெல்லாஞ் சிவனுருத் தேச தென்னூர்" என வருஞ் சிவஞானசித்தியாரானும், "கைம்மிக் கெழுகாதல் விருப்புமீ தூர் குறிப்பின்-விம்மிப் பணைத்துப் புடைவீங்கி யெழுந்த கொங்கைப் - பொம்மற் பெருமாட்டி வெரிந்புறத் தெய்திவல்லே - செம்மற்பிறை வேணிய னார்திருக் கண்புதைத்தாள்" "இருண்ட பூங் குழலாள் செங்கை யிறுகுறப் புதைத்த லோடு - மிருண்டகந் தரத்தார் நோக்கி னிருசுடர் மறைந்த வாற்று-லிருண்டது புவனி முற்று மிருண்ட வெண் டிசையு மென்று - மிருண்டறி யாத விண்ணோ ரிருக்கையு மிருண்ட தந்நாள்" என வருங் காஞ்சிப்புராணத்தானும், அவ்வம்மையார், சிவபெருமானைப் பூசனைபுரியுங்கால் கம்பையாறு பெருகி வரவும் அதனைக்கண் டஞ்சிச் சிவபெருமானைத் தழுவக் குழைந்தருளின னென்பதனை.—"மலைக்குலக்கொடி பரிவுறு பயத்தான் மாவின்மேவிய தேவர் நாயகனை - முலைக்கு வட்டொடு வளைக்கையா னெருக்கி முருகு காதலா லிறுகிடத் தழுவச்-சிலைத்தனித்திரு நுதறிரு முலைக்குஞ் செந்தளிர்க் கரங்க

ளுக்கு மெத்தெனவே - கொலைக்களிற்றுரி புனைந்த தம்மேனி குழைந்து காட்டினர் விழைந்த கொள்கையினர்" என வரும் பெரியபுராணத்தாலும், இக் காஞ்சிமாநகரம் சிவபுரமென்னும் பெயரினைப்பெற்ற தென்பதனை :—"தூய வைந்தொழி லுயிர்க் கெலா மியற்றிமின் றுறுத்த-பாய மேகலை வழிபடப் பரிந்துவீற் றிருக்கு - மாய சீர் மையா லகிலமும் புகழ்திருக் காஞ்சி - மேய தாற்சிவ புரமெனு மேதகு நாமம்" என வருங் காஞ்சிப்புராணத்தாலு முணர்க. (சுசு)

விண்ணுறை மகவான் கரிபுரி தவத்தால் வெற்பதாய்த் தன்னைமுன் றாங்கு
புண்ணிய கோடி யிபகிரி மிசையே பொருவிலா வேதியுத் தரத்தி
லெண்ணலங் கமலத் திசைமுகன் வேள்வி யாற்றவு மவற்கருள் செய்வான்
கண்ணன்வந் திடலால் விண்டுமா புரமாங் கட்டுரை பெற்றதக் காஞ்சி.

(இ-ள்.) தேவலோகத்தில் வாழும் இந்திரனுடைய வெள்ளையானையானது செய்ததவத்தினால் மலையுருவங்கொண்டு தன்னைமுன்னேதாங்கப்பெற்ற புண்ணிய கோடியென்னும் யானைமலையின்மேல் ஒப்பற்ற உத்தரவேதியிலே பெருமைபொருந்திய அழகியதாமரைமலரில் வசிக்கும் பிரமதேவன் யாகஞ்செய்யவும் அப்பிரமனுக்கு வேண்டிய வரங்களைக் கொடுத்தருளும்பொருட்டுத் திருமால் அங்குவந்தகாரணத்தினால், அக்காஞ்சிமாநகரமானது சிறந்த விண்டுபுரமென்று கூறுமுறுதியான பெயரைப்பெற்றது.—எ-று.

இதனை :—"நாற்றக்கஞ்சநறும்பொகுட்டண்ணறு - ளூற்றப்புக்க மகத்தவிப் பாகநீ - யேற்றிட்டுத்தர வேதியிருத்தியென் - றூற்றுத்தேமொழியோதி யருளினர்" "தயங்கு செஞ்சடையாரருடாங்கியங் - கியங்குவேள்வியி னின்னவிப்பாகமேற்-று யங்கு சிற்றிடை யொண்டிருமாதொடும்-வயங்குமுத்தரவேதி வதிந்தனன்" "ஆங் கணன்னணங் கம்ப ரருளினற் - பூங்கள் வார்துள வப்புயல் வைகலா - லோங்குவி ண்டு புரமெனவோர்பெயர்-தீங்கு தீர்திருக் காஞ்சி புனைந்ததே" எனவருங்காஞ்சிப் புராணத்தாலுமுணர்க, புண்ணியகொடியிபகிரி என்றது, புண்ணிய கோடீசமாகிய அத்தி கிரியை. இது, திருமால் சிவபெருமானைப்பூசித்து வரதராசன்,தாமரைக்கண்ணனென்னும் பெயரைப்பெற்றது. (சுஎ)

கார்த்திரு மேனித் தண்டுழாய் மௌலிக் கண்ணனுங் கமலமே லயனு
மார்த்திடுந் தரங்கப் பகீரதி மிலைந்த வவிர்சடை யமலனு மாகு
மூர்த்திக டத்த முலகமே போல முன்னியப் பதியமர் செயலாற்
சீர்த்திரி மூர்த்தி வாசமா கியபேர் சிறந்ததக் கச்சிமா நகரம்.

(இ-ள்) மேகம்போலுங்கரிய திருமேனியையும், குளிர்ந்த துளசிமாலையையணிந்த திருமுடியையுமுடைய திருமாலும் தாமரைமலரில்வசிக்கும் பிரமனும், சப்திக்கின்ற அலைகளையுடைய கங்கைநதியைத்தரித்தவிளங்குகின்றசடைமுடியையுடைய சிவபெருமானுமாகிய மும்மூர்த்திகளும் தங்கள் தங்களுலகமாகிய வைகுந்தம் சத்திய லோகம் சிவலோகங்களைப்போல விரும்பி அந்நகரத்தில் வசித்தருளுங் காரணத்தினால், அக்காஞ்சிமாநகரமானது சிறப்பினையுடைய மும்மூர்த்திவாசமென்னும் பெயர் சிறக்கப்பெற்றது—எ-று.

விடவேகத்தாற்கறுத்த திருமேனியினையுடைய பேரழகராதலின், 'கார்த்திருமேனித்தண்டுழாய் மௌலிக்கண்ணன்' என்றும், அத்திருமாலின் நாபியங்கமலத்துறைவோனாகலின், 'கமலமேலயன்' என்றும், நதியரசாகிய, கங்கையை உலக சம்ரக்ஷணார்த்த முடித்த பெருமானாகலின், 'ஆர்த்திடுந்தரங்கப்பகீரதி மிலைந்தவவிர் சடையமலன்' என்றும், இவர்கள் மூவரும் முத்தொழிற் கர்த்தர்களாதலின், 'மூர்

த்திகள்' என்றும், அத்திருமூர்த்திகளுந் தத்தம் பதியைப்போல விரும்பிவசித்தலின் அம்மூர்த்திகளது திரிலோகத் தன்மைகளையும் இதுதன்னுள்ளடக்கி யிருத்தலின், 'சீர்த்திரிமூர்த்தி வாசமாகிய பேர்சிறந்தது கச்சிமாநகரம்' என்றுங் கூறினர். இத னை—"இருவருநாடொறு விறைவரோடிமற்-றிருவருமின்னணம்வதியு டேதுவான்-மருமலிகாஞ்சி மும்மூர்த்திவாசமென்-றொருபெயர் படைத்ததா லுலகுபோற்றவே" எனவருங்காஞ்சிப் புராணத்தாலுமுணர்க. (கூஅ)

காவலிகண் முழுதும் புரிதரும் விரிஞ்சன் றன்மனம் புனிதமாம்பொருட்டாற்
றிருமகள் கணவன் கமடமாய்ப் பூசை செய்திடு கச்சபா லயத்தி
லரனடி பரவி யருச்சனை யியற்றி யங்கவ்விற் றிருந்திடு நெறியால்
வரமிகு பிரம புரமென வொருபேர் மன்னிய தன்னதோர் நகரம்.

(இ-ள்.) சர்வலோகங்களையுஞ் சிருட்டித்த பிரமதேவன் தன் மனம் பரிசுத்தமடையும்பொருட்டு மலர்மகள் மணாளனாகிய மாயோன் ஆமைவடிவத்தோடு பூசனைபுரிந்த கச்சபாலயத்தில் சிவபெருமான் திருவடிகளைத் தொழுது பூசித்துக்கொண்டு அவ்விடத்தில்வசித்திருந்த காரணத்தினால், ஒப்பற்ற அக்காஞ்சிமாநகரமானது சிறப்பு மிக்க பிரமபுரமென்னு மொரு பெயரைப்பெற்றது.—எ-று.

'திருமகள்கணவன் கமடமாய்ப் பூசைசெய்திடு கச்சபாலயம்' என்பதன்வரலாறு:—தேவர்களுமசுரர்களும் அமுதம்பெறும்பொருட்டுத் திருப்பாற்கடலைக்கடைந்தபொழுது மத்தாகிய மந்தரமலை கடலிலாழவும் திருமால் ஆமையுருவெடுத்து அம்மலையைத்தாங்கி முன்போலநிறுத்தி அதுகாரணத்தாலகங்கரித்து,உலகம்வருந்தும்வண்ணம் அக்கடலைக்கலக்க, சிவபெருமான் எழுந்தருளி அவ்வாமையைக்கொன்று அதனோட்டையாபரணமாக வணிந்தருளினர். அதனல்,திருமால்வருந்தி இக்காஞ்சிநகரையடைந்து சிவபெருமானைப்பூசித்து வேண்டிய வரங்களைப்பெற்றுச் சென்றனன், என்பதாம், இதனை—அச்சநீத்தாருயி ருய்வகை யருள்சுரந்தாங்குறி இக்-கச்சபத்தின் னுயிர்செற்றதனோட்டினைக்கதுமென-நச்சியவெண்டலைமாலிகை நடுவுறக்கொண்டனன் - பச்சிளங்கிள்ளைபால் வீற்றிருந்தருளிய பண்ணவன்" எனவும், "இப்பெரும் பிழைதவிர்ந் துய்யுமா நாரணனெம்பிரான் - வைப்பெனுங் காஞ்சியிற் சோதி லிங்கத்தினைவழிபடூஉ - மெய்ப்படு மன்பினு லிரந்திரந்தேத்தலும் விடைமிசைத் - துப்புறழ்செஞ்சடைத் தோன்றலங்கவனெதிர் தோன்றினன்" எனவும் வருந்திரு விருத்தங்களானுணர்க. 'வரமிகு பிரமபுரமென வொருபேர் மன்னியது' என்பதனை:—"நாறுதாமரைச் சேக்கையான்றன்பதநாடி-யேறுயர்த்தவரருள் கிடைத்திருந்த காரணத்தாற் - பேறுதந்தருள் பிரமமாபுரமெனு நாம - மீறுகண்டிடாக் காஞ்சிமாநகரமெய்தியதே" என்பதனானுமுணர்க. (சுக)

வீடுறு முத்தி போகமென் றவற்றில் வெஃகிய வெஃகியாங் கென்றுங்
கூடுறு தவத்தால் வழிபடு வோர்க்குக் கொடுத்திடுந் தன்மையாற் காம
பீடமென் றொருபேர் பெற்றது மலர்மேற் பிரமனே முதலினோர் தவத்தை
நாடினர் செயலாற் றபோமய மெனும்பேர் நணியது கச்சிமா நகரம்.

(இ-ள்.) பாசநீக்கத்தினையுடைய மோக்ஷமும் போகமுமென்று கூறுமிவற்றில் அவரவர்கள் விரும்பியவண்ணம் முக்காலத்திலும் பொருந்திய தவத்தினல் பூசிப்பவர்களுக்கு, (அபீஷ்டங்களைக்) கொடுத்தருளும் முறைமையால் காமபீடமென்னு மொரு பெயரைப்பற்றது; அன்றியும், தாமரைமலரில் வசிக்கும் பிரமன் முதலிய தேவர்கள் தவத்தை விரும்பிச்செய்யுங் காரணத்தினல் தபோமயமென்னும் பெயரைப் பெற்றது. அக்காஞ்சிமாநகரம்.—எ-று.

'காமபீடமென்ெருருபேர் பெற்றது' என்பதனை :—"இவ்வாறு காமுற்ற நாற்பயனுமொருங்கீந்த-வவ்வாய்மை யாற்காம பீடமென வயங்கியதாற் -செவ்வாய் மைக்காசிமுதற் றிருத்தகுமுவிருநகரு - மொவ்வாதமேன்மையதாயோங்கு புக்ழ்த்தி ருக்காஞ்சி" எனவும், தபோமயமெனும்பேர் நணியது, என்பதனை—"பிறைநுதல் வாணிநீத்தப்பெருக்கினைத் தவிர்ப்பச்செய்யு - நறைமலர்ப்பொகுட்டு மேலா னற்ற வம் வளர்த்தவாற்ரு-விறையினி விம்மையொப்புந் தபோமயமென்னுநாம - மறைபு னற்பழனக்காஞ்சியணிநகரடைந்ததன்றே" எனவும்வருஞ்செய்யுட்களானுமுணர்க. விடு - முதனிலை திரிந்ததொழிற்பெயர். கச்சிமாநகரம் பெற்றது நணியது எனக்கூட்டுக. (௭०)

சகங்களோர் மூன்றி லறம்பெரி துளதிக் தரணியிந் தரணிமா நகர்க்குண்
மிகுந்தரு மத்தின் பலத்தினைத் தரலால் வியன்சகற் சாரமென் ஞெருபேர்
புகும்புரி சடைய தட்டசித் திகளும் பொருவின்மா தவர்க்கரு டிறந்தாற்
பகர்ந்திடுஞ் சகல சித்தியென் ஞெருபேர் படைத்தது கச்சியம் பதியே.

(இ-ள்.) மூன்றுலகங்களிலும் இந்நிலவுலகமே மிகுந்த தருமத்தை யுடையது ; இவ்வுலகின்கண்ணுள்ள பெரிய நகரங்களுக்குள் இந்நகரமானது மிக்க தருமத்தின் பலனை (ஒன்று கோடியாக உடனே) கொடுத்தருளுங் காரணத்தினுல் சிறந்த சகற்சாரமென்னு மொருபெயரைப் பெற்றுள்ளது. அணிமாமுதலிய அட்டமா சித்திகளையும் ஒப்பற்ற தவத்தினையுடைய பெரியோர்களுக்குக் கொடுத்தருளுங் காரணத்தினுல் (யாவரும்) புகழத்தக்க சகல சித்தியென்னு மொரு பெயரைப் பெற்றது; அக் காஞ்சிமாநகரம்.—எ-று.

இக்கருமபூமியே புண்ணியபூமியாகலின்,'சகங்களோர் மூன்றிலறம்பெரிதுள தித்தரணி'என்றும், இக்காஞ்சிமாநகரம் ஒன்றுகோடியானபயனையுடனேதருதலின், 'வியன்சகற்சாரம்' என்றுங்கூறினர்.அட்டசித்திகளாவன:—அணுமா-மகிமா-கரிமா-இலகிமா-பிராத்தி-பிராகாமியம்-ஈசத்துவம்-வசித்துவம் என்பன. அவற்றுள்,அணிமா அணுப்போலாதல். மகிமா-மகத்தாதல்.கரிமா-தன்னுடல்கண்டிப்பின்ருய்க் கண்டிப்புள்ளவற்றை யுருவவல்லவனுதல். இலகிமா-இலகுத்துவமாதல். பிராத்தி-வேண்டுவனவற்றை யடைதல். பிராகாமியம்-நிறையுளனுதல், ஈசத்துவம் - ஆட்சியுளனுதல். வசித்துவம்-எல்லாந்தன் வசமாக்கவல்லனுதல் என்பனவாம். இவற்றை :—"அணிமா மகிமா விலகிமா வரியகரிமாப்பிராத்திமலப்-பிணிமாசுடையோர்க்கடைமரிய பிராகாமியமீசத்துவமெய்-துணிமாயோகர்க்கெளியவசித்துவமென்றெட்டாமிவையுளக்கண் -மணிமாசறுத்தோர்விளையாட்டின்வகையாமவற்றின்மரபுணைப்பாம்,""அறவுஞ்சிறிய வுயிர்தொறுந்தான்பரமகாட்டையனுவாய்ச்சென்-றுறையுஞ் சிறுமையணிமாவாமுவ ரிஞாலமுதன்மேலென்-றுறையுஞ்சிவாந்த மாறுறுமுள்ளும் புறனுமகலாதே-நிறையும் பெருமைதனையன்ரே மகிமாவென்னு நிரம்பியநூல்." "இலகுமேருபாரம்போ விருக்கும் யோகிதனையெடுத்தா-விலகுவானதூலமென விருப்பதிலகிமாவாகு-மிலகுவான பரமாணுப்போலிருக்கும்யோகிதனையெடுத்தா-விலகுமேருபாரமென விருப்பதன்ரே கரிமாவாம்" "பிலத்திலிருந்தோனய னுலகிற்புகுதன்மீண்டும் பிலமடைதல்-பலத்தின் மிகுந்தபிராத்தியதாம்பரகாயத்தி னண்ணுதல்வான்-புலத்தினியங்க லிச்சித்தபோகமனைத்துந்தானிருக்குந்-தலத்தினினைந்தபடி வருதல் பிராகாமியமாந் தவக்கொடியீர்." "விண்ணிலிரவி தன்னுடம்பின் வெயிலாலனைத்தும் விளக்குதல்போல் - மண்ணிலுளவாம் பொருள்பலவுங்கால மூன்றும் வானத்தின்-கண்ணிலுளவாம் பொருளுந்தன்காயத்தொளியாலிருந்தறித-லெண்ணி விதுவுமறையொருசார் பிராகாமியமென்றி யம்புமால்." "ஈசனென முத்தொழிலுந்த னிச்சைவழிசெய்தெழுபுரவித் - தேசன்

முதற்கோள் பணிகேட்பத் திகழ்வதீசத்துவமாகும் - பூச லவுணர் புள்விலங்கு பூத மனிதர் முதலுலகும் - வாசவாதி யெண்மருந்தன் வசமாக்கொள்கை வசித்துவமாம்'' எனவருந் திருவிளையாடற் புராணத்தானும், சகற்சாரமென் றொருபேர் புரும்பரிசு டையது என்பதனை,—'' மற்றைக் கற்பத் ததினின்றுஞ் சிறிது வாங்கி வண்டினங்க ண் - முற்ற மதுநண் ணிதுவற்றி முருகு நாறி யிதழ்துறுமிப் - பொற்ற மலர்ப்பூஞ் சேக்கையினான் புவனம் படைத்த காரணத்தா - லற்ற மறுஞ்சீர் முப்புவன சார மெ னும்பே ரணிந்ததுவே.'' எனவும், '' சகல சித்தி யென்றொருபேர் படைத்தது என்ப தனை,—'' காதர மிரிக்குங் காமக் கண்ணித னருளால் வேந்தன்-தீதறு சித்தி யெட் டுந் திருத்தகப் பெற்ற வாற்றான்-மேதகு சருவ சித்தி கரமென விளங்கு நாம-மாதர் வண் மதில்சூழ் காஞ்சி மாநகர் பூண்ட தன்றே.'' எனவும் வருங் காஞ்சிப்புராணத் தானு முணர்க.

உன்னருங் கயிலை நாயக னுமையை யொருபக னீலியென் றுரைப்ப
வன்னவ டனது காளிமங் கழிப்ப வங்கதி லையைவந் தெழலு
முன்னவ னவளை யிந்நக ரிருந்து முறைபுரிந் தருளென விடுப்பக்
கன்னிகாத் திடலாற் கன்னிகாப் பென்னுங் கவின்பெய ருடையது கச்சி.

(இ-ள்.) நினைத்தற்கரிய கயிலாசபதியாகிய சிவபெருமான் ஓர் நாள் உமா தேவியாரை நீலியென்று கூற, அவ்வுமாதேவியார் தமது கருநிறத்தை நீக்க அதில் துர்க்கைதோன்றி முன்னே வரவும், முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் அத்து ர்க்கையை (ப்பார்த்து) இந்நகரத்திலிருந்து முறைப்படி காக்கக்கடவையென்று கட் டளையிடவும் அக்கன்னி காக்குங் காரணத்தினால், அக்காஞ்சிமாநகரமானது கன்னி காப்பென்னும் பெயரைப் பெற்றது.—எ-று.

சிவபெருமா னுமாதேவியாரைக்காளியென்றழைப்ப, அவ்வம்மையார் அக்கா ளிமத்தைக்கழித்தன ரென்பதனை—'' வாளை வென்றுமதர்த்துக் குடங்கையி- னீளும் வேல்விழி நித்திலவெண்ணகைத்-தாளமென்முலைப் பார்ப்பதித்தையலைக் - காளியெ ன்றுகரைந்துவிளித்தனர்'' '' கருணைநாயகர் காளியென்றோதிய-வுரைசெவித்துளை யேறலுமொய்யெனப்-பொருமியுள்ளம் புழுங்கித்தவம்புரிந் - தருளினாலவ்வுருத்தனை நீக்கினாள்'' எனவும், அக்காளிதுர்க்கையென்னும் பெயரோடு இக்காஞ்சிநகரைக்கா த்தலால், கன்னிகாப்பு எனப்பெயர்பெற்றதென்பதனை :—'' அருளும்வண்ணமவுண ரையாவியுண்- டிருளுமென்மலர்ச் சோலைகளீண்டிய-தெருளுலாந்திருக் காஞ்சியைக் காவல்பூண் - டொருமையன்பி னுறைந்தனள் கன்னியே.'' '' அன்னை காளிமவாக் கையிற்றோன்றிய - கன்னிகாத்தருள் காரணத்தாற்றிருக் - கன்னிகாப்பெனு நாமங் கைக்கொண்டதா - லன்னமாமெகன்றுறைக் காஞ்சியே'' எனவும் வருங்காஞ்சிப் புராணத்தானுமுணர்க. (எஉ)

அரியதோர் கயிலைக் கணங்களி லொருவ னுனதுன் டீரன்மா லதிபாற்
பெருமயல் கொள்ளச் சிவனிவ ளொடுநீ பிறந்திருந் தின்பமுற் றெம்பால்
வருகென நிலமேன் மன்னர்பாற் றோன்றி மற்றவ ளோடுசேர்ந் தரசு
புரிதரு செயலாற் காஞ்சிதுண் டீர புரமெனப் புகலநின் றதுவே.

(இ-ள்.) ஒப்பற்ற அருமையாகிய திருக்கயிலாசத்தில் வசிக்கின்ற சிவகணங் களி லொருவனாகிய துண்டீரனென்பவன் மாலதியென்னும் பெண்ணின்மீது மிகுந்த காதல்கொண்டதையுணர்ந்தசிவபெருமான் (அவனைநோக்கித்துண்டீரனே !) நீ இம் மாலதியோடு பூமியிற்பிறந்து இவளது கலவியின்பத்தை யனுபவித்துப் பின்னர் எம் மிடத்திற்குவருவாயாகவென்று கட்டளையிட்டவண்ணம் (அத்துண்டீரன் நிலவுலகு

த்தில் அரசர்குலத்திற்பிறந்து அம்மாலதியைமணந்து இந்நகரத்திருந்து அரசாட்சிசெய்த காரணத்தினால் இக்காஞ்சிமாநகரம் துண்டீரபுரமென்னும் பெயரைப்பெற்றது.

துண்டீரனென்னுஞ் சிவகணத்தவன் மாலதியென்பாள்மீதுகொண்ட காதல் காரணமாகப்பிறந் தரசாண்டமையால் துண்டீரபுரமென்னும் பெயர்வந்ததென்பதனை:—"எற்றுதெண்டிரைவேலைசூழ் ஞால மேந்துதாளிணை பரித்திகல்கடந்து - முற்றுசீர்த்தியன்வயங்குதுண்டீரன் முழுத்தகேள்வியனுண்டகாரணத்தாற் - கற்றைவார்சடைத்தெய்வநா யகனோ கம்பநாயகர்காக்குநாயகர்வாழ் - பொற்றமாநகர்காஞ்சி துண்டீரபுரமெனும் பெயர்பூண்டதுமாதோ" என்பதனானுணர்க.

'ஏமமேதருவா' என்னுந் திருவிருத்தந்தொடங்கி இத்திருவிருத்தங்களாலும் ஸ்ரீ காஞ்சிமாநகரத்திற்குள்ள பன்னிரண்டு திருநாமங்களையும் அவற்றின் காரணங்களோடு விளக்கிக் கூறினமை காண்க. "உருக்காஞ்சிமூப்புவன சாரங்காமபீடமுயர் தபோமயமும் மூர்த்திவாச - மிருக்காலுந்துண்டீரபுரம்வாழ்வெய்து மிலயசித்துப் பிரமபுரமிருண்டநெஞ்சிற் - றிருக்கீரும்விண்டுபுர மருளானந்த சிவபுரமேசகல சித்திகரமேயுள்ளப்-பருக்காழைத்தபுங்கன்னிக்காப்பென்றேதப் பட்டன பன்னிரு திருப்பேராகுமாலோ" எனவும், "புவனசாரமும்மூர்த்திவாசம் விண்டு புரங்காஞ்சி-தவமார்கலிசித்திலயசித்து சகலசித்திதபோமயவூர் - கவினார் பிரமபுரமாதி பீடங்கன்னிகாப்புவிணைப் - பவநோயறுக்குஞ்சிவபுரமாம் பகர்பன்னிரண்டுதிருப்பெயர்த்தால்" எனவும் வருங் காஞ்சிப்புராணத்தானு முணர்க. (எரு)

தன்னையே யருச்சித் திடமலர்க் கேகித் தடந்தனிற் கராவின்வாய்ப் பட்டுத்
தன்னையே நினைந்து தன்னையே யழைத்த தந்தியைக் காத்தவொண் புயமா
றன்னையே வேண்டித் தழன்மகஞ் செய்யத் தண்டகற் கெண்டிசை யரசு
தன்னையீந் திடலாற் றண்டக புரமாந் தனிப்பெயர் பெற்றதத் தனியூர்.

(இ-ள்.) தன்னை அருச்சிக்கும்வண்ணம் மலரைவிரும்பிச் சென்று தடாகத்தில் முதலையின்வாயி லகப்பட்டுக்கொண்டு தன்னைச் சிந்தித்துத் தன்னை (ஆதிமூலமேயென்று ஓலமிட்டு) அழைத்த கஜேந்திரனென்னும் யானையைப் பாதுகாத்தருளிய அழகிய புயங்களையுடைய திருமாலினைக்குறித்து அக்கினிசம்பந்தமாகிய வேள்வியைச் செய்த தண்டகனுக்கு எட்டுத் திக்கையும் ஆளுகின்ற அரசுரிமையைக் கொடுத்தகாரணத்தினால், அவ்வொப்பற்ற காஞ்சிமாநகரம் தண்டகபுரமென்னும்பெயரைப் பெற்றது.—எ-று.

திருமாலைவேண்டி யாகஞ்செய்த தண்டகனென்பவனுக்கு அத்திருமால் அரசளிக்க வருள்செய்தகாரணத்தினால் அவனரசாட்சிசெய்தமையால், தண்டகபுரமென்னும் பெயரைப்பெற்றதெனவறிக. இதனை:—"தண்ணளிபுரிதுண்டீரனுநள்ளார் சமர்த்தொழில்கடந்ததண்டகனும் - அண்ணலங்கரிகால்வளவனும்பிறந் மரசுசெய்தளித்ததநகரம்" என மேல்வருமாற்றானும், "அண்டரும்புகழ்துண்டீரனுண்டு துண்டீரநாடாய்த்-தண்டகன்பின்னராண்டுதண்டகநாடாய்ப்பின்னைத்-தொண்டைமானுண்டுதொண்டை நாடெனத்துலங்கிற்றென்ப - பண்டியன்படைப்புத்தொட்டுப் பயிலுமித்தொல்லைநாடு" எனவரும் விநாயகபுராணத்தானு முணர்க. (எச)

அழகிய வயோத்தி மதுரையே மாயை யவந்திகை காசிநற் காஞ்சி
விழுமிய துவரை யெனப்புவி தன்னின் மேலவாய் விடருள் கின்ற
வெழுநக ரத்துட் சிறந்தது காஞ்சி யென்றுமுன் னெம்பிரா னுமைக்கு
மொழிதரு நகரந் நகரெனி லதற்கு மூவுல கத்துநே ருளதோ.

(இ-ள்.) அழகுவாய்ந்த அயோத்தியும், மதுரையும், மாயையும், அவந்தியும், காசியும், நல்லகாஞ்சியும், சிறப்பு மிக்க துவாரகையுமென்று இந்நிலவுலகத்தில் மேன்மையினையுடையனவாய் முத்தியைக்கொடுக்கின்ற இவ்வேழுநகரங்களுள் காஞ்சி நகரமே சிறப்பினையுடையதென்று ஆதிகாலத்தில் எமது சிவபெருமான் உமாதேவியாருக்கு உபதேசித்தருளிய நகரம் அக்காஞ்சிமாநகரமேயாயின், திரிலோகங்களினும் அதற்குச் சமானமான நகரம் வேறொன்றுண்டோ? (இல்லை.)—எ-று.

அயோத்திமுதலிய வேழுநகரங்களும் முத்தியைத்தரும் நகரமாதலின், 'வீடருள்கின்ற - வெழுநகர்' என்று கூறினர். இதனை:—"காசிமாயாபுரியவந்திகாஞ்சிமற் - றேசைகொளயோத்திவண்டுவரையொப்பறு - மேசிலாமதுரையென்றுரைக்குமேழ்பதி- மாசறுமுத்தியைவழங்குமென்பவே" எனவருங் காசிகண்டத்தானும், அவ்வேழ்நகரத்துள்ளுங் காஞ்சியேசிறந்ததென்பதனை:—"கயிலையிலிழைத்தகுற்றங் கழுவுதல்வேண்டிப்போந்த - மயிலியலுமையாளாறு நகரையும்வழியிற்போக்கி - யுயரியநகரிதென்றே யுற்றமாகாஞ்சிமூதூர் - செயிரறத்தான்பாற்கொண்டு சிறந்தது தொண்டைநாடு" எனவரும் விநாயகபுராணத்தானு முணர்க. (எ௫)

பங்கமில் வசிட்டன் பசுப்பொழி பாலி படர்ந்திடு முத்தரஞ் சேயைச்
செங்கம லத்தோன் முதலினோ ராட்டுந் திருநதி தென்றிசைச் செல்லு
மங்கவற் றிடையே கம்பமே முதலா மாலயத் தந்தரு வேதி
கங்கைகா ளிந்தி யிடைப்படுந் தலத்தின் முற்படுங் காஞ்சிமா நகரம்.

(இ-ள்.) குற்றமற்ற வசிட்டமுனிவருடைய காமதேனுவானது பொழியப்பெற்றுவருகின்ற பாலிநதியானது வடதிசையிற்செல்லாநிற்கவும், முருகக்கடவுளைச் செந்தாமரைமலரில் வாழும் பிரமன்முதலிய தேவர்கள் அபிஷேகஞ்செய்த சேயாறானது தென்றிசையிற் செல்லாநிற்கவும் அவ்விருநதிகளுக்கும் நடுவில்திருவேகம்பமுதலாகிய ஆலயங்களையுடைய அந்தர்வேதியாகிய காஞ்சிமாநகரம், கங்கைக்கும் யமுனைக்கும் நடுவிலுள்ள அந்தர்வேதியாகிய காசியினுஞ்சிறந்துவிளங்கும்.—எ-று

வடதிசைப்பாலியாற்றிற்குந் தென்றிசைச் சேயாற்றிற்குமிடையிலுள்ள அந்தர்வேதியாகிய காஞ்சிமாநகரம், கங்கையாற்றிற்கும் யமுனையாற்றிற்குமிடையிலுள்ள அந்தர்வேதியாகிய காசிமாநகரினுஞ் சிறந்ததென்பது கருத்து. அந்தர்வேதி- நடுவிலுள்ளசமபூமி. காஞ்சிநகரம் - பாலியாற்றிற்கும் சேயாற்றிற்குமிடையிலுள்ளதென்பதனை—"மருமலர்க்குவையல்கொட்கும் வளந்திரைப்பாலியென்று - வருகெழுமணிகளுந்தி யொழுகுபூஞ்சேயாறென்று-மிருவகைநதியுங்காஞ்சி யெழினகர்வடபாற்றென்பான்- மருவிடுமெல்லையாகித் தீர்த்தமாய்வயங்குமன்றே" எனவும், "அச்செழுநதிகளுப்ப ணந்தருவேதியாகி - யெச்சமில்யமுனைகங்கை யிடைப்படுமந்தர்வேதிக் - குச்சமாய்முதுவதாயெவ் வூழியுமழிவின்றோங்கும்-கச்சிமாநகரமங்க ணிகழ்சிலகாதைசொல்வாம்" எனவும் வருங் காஞ்சிப்புராணத்தானு முணர்க. (எசு)

தொல்லையோர் பிரமன் றுஞ்சிய காலைத் தோன்றிய நீத்தமே லரிபோற்
செல்லுமார்க் கண்டன் கரத்தினிற் கம்பை சேர்ந்ததோர் தனிப்பெருஞ் சூத
மெல்லைநீ ரிகந்து வளர்தலு மருப்பொன் றெய்தவக் கொம்பர்தொட்டிழிந்து
நல்லுமை குறிக்கொண் முதல்வனை வணங்கி நயந்தவ ணிருந்ததந் நகரம்.

(இ-ள்.) முன்னாளில் ஒருபிரமனது ஆயுள்முடிவிலுண்டாகிய ஜலப்பிரளயத்தின்மேல் தவளையைப்போலச் சென்ற மார்க்கண்டமுனிவரது திருக்கரத்தில் கம்பாநதியினருகிலுள்ள ஒப்பற்ற பெரிய மாமரமானது அவ்வூழெல்லையைச் சூழ்ந்து

நிற்கின்ற பிரளய வெள்ளத்தினையுங்கடந்து உயர்ந்து வளர்ந்து நிற்கவும், அதன்கிளை யொன்று கிடைக்க, அக்கிளையைப்பிடித்துக்கொண் டிறங்கி, சிறந்த உமாதேவியா ரது வளைச்சுவடும் முலைச்சுவடும்பெற்ற ஏகாம்பரநாதனைவணங்கி அம்முனிவரர் விரு ம்பி வசிக்கப்பெற்றது அக்காஞ்சிமாநகரம்.—எ-று.

அரி = தவளை. தவளை நீரில் மூழ்கியும் மேற்கிளம்பி நீந்தியுஞ் செல்லுமாறு போல, மார்க்கண்டேயமுனிவர் சிரஞ்சீவித்துவமுள்ளவராகலின், இறவாமல் நீருள் மூழ்கியும் வெள்ளமேன் மிதந்துஞ் சென்றன ரென்பார், 'நீத்தமே லரிபோற்செல்லு மார்க்கண்டன்' என்று கூறினர். பிரளயப் பெருக்கு நகர்மேற் செல்லாது புறத்தில் வேலிபோற் சூழ்ந்தோங்கியிருத்தலின், மாமரத்தின் கிளை அவ் வெள்ளத்தினைக் கட ந்தோங்கித் தழைத்திருத்தலான் அதனைத் தொட்டிழிந்து சிவபெருமானை வணங்கின ரென்க. நல்லுமை குறிக்கொண்முதல்வன் என்றது, உமாதேவியாரது முலைத்தழும் பும் வளைத்தழும்பும் பெற்ற ஏகாம்பரநாதனை. மார்க்கண்டேயமுனிவர் மாமரக் கிளை யைத்தொட்டிழிந்து சிவபெருமானைப் பூசித்த வரலாறு:—முன்பொரு பிரமப்பிரளய த்தில் உலகமுற்று மழிய, அவ்வெள்ளத்தில் மிதந்து சென்ற மார்க்கண்டமுனிவரர் அதன்மேல் சேஷசயனத்தில்பள்ளிகொண்டிருந்த திருமாலைக்கண்டு வணங்கி, உலக த்திலுள்ள பொருளனைத்து மெங்ககன்றனவென்று கேட்கத் திருமால் அவை யனை த்தும் என் வயிற்றினிடத் துளவாகலின் நீர் சென்று காண்கவென் றுரைப்ப, அ தைக்கேட்ட முனிவரர் அத்திருமாலையிகழ்ந்து கூறி அப்பாற்செல்ல, அங்கு மாமரத் தின் கிளையைக்கண்டு அதனைப்பிடித்திறங்கிக் காஞ்சிநகரையடைந்து மாவடிப்பெரு மானைப் பூசித்துப் போற்றினர் என்பதாம். இதனை:—"முள்ளரைச்செழுந்தாண் ம லர்முனரிவீற்றிருக்கும் - வள்ளல்கற்பமொன்றிறுதலும் யாவையுமலங்கப் - பொள் ளெனப்பரந்துலகெலாம்விழுங்கியபுணரி - வெள்ளநீர்மிசைமிதந்தனன்மார்க்கண்டி மேலோன்" எனவும், செல்லுமெல்லை நீர்மிசைத்தோன்றும்வேதமாஞ்சினைப்-பல்ல வங்கள்கண்டவை பற்றியுள்ளிழிந்தன - ஞெல்லையங்கணேக்கினு ஞெளிப்பிழம்பி னிடிய - மல்லலம்பொனிஞ்சிசூழ் மாடக்காஞ்சிமாநகர்" "எற்றுதெண்டிரைப்புன லிஞ்சியின்வளைப்பவெண் - புற்புதத்தினுள்வெளிப் பொற்பெனத்திகழ்ந்துநீ-ளொற் றைமாவி ஞரருளொளிதுளும்பமன்னுமூ - ரற்புதத்தைநோக்குதோ றற்புதத்தனுயி னன்." "அங்கணெய்ப்புநீத்தபி னண்ணல்கம்பவாணனை - யுங்கணெய்தியர்ச்சனை யுஞற்றியவ்விராவெலாந் - துங்கமாவினீழல்வாழ் சோதிமுன்னர்வைகினன்-சங்கமா ழியேந்தியோன் குனுந்தொடரநண்ணினன்" எனவும் வருங் காஞ்சிப்புராணத்தா லுணர்க. (எஎ)

சமையமா றினையுந் தாயென வளர்த்துச் சராசர வனுக்களுய்ந் திடுவா
னமைதரு மெண்ணான் கறத்தினைப் போற்றி யாதிபீ டத்தில்வீற் றிருக்கு
முமையமர் காமக் கோட்டியைக் கதிரோ னுடுபதி கணங்கள்சூழ் தரலா
லிமையவர் தமக்குந் திசைமயக் கருத வியல்புடைத் தந்நக ரென்றும்.

(இ-ள்.) அறுவகைச்சமயங்களையுந் தாய்போல்வளர்த்து, சராசரங்களா கிய உயிர்களுய்யும்பொருட்டுப் பொருந்திய முப்பத்திரண்டு தருமங்களையுஞ்செய்து ஆதிபீடத்தி லெழுந்தருளியிருக்கின்ற உமாதேவியார் வீற்றிருந்தருளுங் காமகோட் டிப் பீடத்தைச் சூரியசந்திர நக்ஷத்திரங்கள் பிரதக்ஷணமாகச் சூழ்ந்து செல்லுதலால் அக்காஞ்சிமாநகரம் எக்காலத்தும் தேவர்களுக்குந் திசைமயக்கத்தைச் செய்யும் இய ல்பினையுடையது.—எ-று.

ஆன்மாக்களின் பரிபாகங்கட்கேற்ப வடைந்தனுபவித்தற்பொருட்டு அறுவகைச்சமயங்களையும் விருத்திசெய்தல் இன்றியமையாதனவாகலின், 'சமயமாறினையுந்தாயென வளர்த்து' என்று கூறினார். சராசரவணுக்களென்றது, இயங்கியற்பொருளும் நிலையியற்பொருளுமாயுள்ள ஆன்மாக்களை. அமைதருமெண்ணான்கறங்கள், ஆதுலர்க்குச்சாலை முதலியன; அவற்றை ;-" ஆதுலர்சாலை யோதுவார்க்குணவறு-சமயத்தார்க்குண்டிபசுவிற்குவாயுறை - சிறைச்சோறைய நடைதின்பண்ட - மறவைச்சோறுமகப்பெறுவித்தன் - மகவுவளர்த்தன் மகப்பால்வார்த்த - லறவைப்பிணஞ்சுடுதலறவைத்தூரியஞ - சுண்ணநோய்மருந்து வண்ணார் நாவிதர் - கண்ணாடி காதோலை கண்மருந்து தலைக்கெண்ணெய் - பெண்போகமற்றும் பிறர்துயர்காத்த - றண்ணீர்ப்பந்தர் மடந்தடங்காவே - யாவுரிஞ்சுதறி விலங்கிற்குணவே - டேறுவிடுத்தல் விலைகொடுத்துயிர்விடுத்த - றன்னிலையுயர்ந்த கன்னிகாதான - மிந்நான்கெட்டு மிறைவிசெய்தருமம்." என்னும் பிங்கிலந்தைச்சூத்திரத்தானுணர்க.

உமாதேவியார் வீற்றிருந்தருளுங் காமக்கோட்டிபீடம், சத்திபீடம் அறுபத்து நான்கினுள் முதற்பீடமாதலால், " ஆதிபீடத்தில் வீற்றிருக்கு முமையமர்காமக்கோட்டியை" என்று கூறினார். இதனை :—" விந்துவின் மயங்கி யம்மைவீற்றிருக்கும் வியன்றிருச்சக்கரவடிவாம் - அந்தவான்பிலந்தாளியம்பியகாம மனைத்திற்கு மாதரமாகிப் - பந்தமில் காமக்கோட்டமென்றொருபேர் பரித்திடுமற்றெவற்றினுக்கு-முந்திய பீடமாதலினாதி பீடமுமொழிந்திடப்படுமால்" எனவருங் காஞ்சிப் புராணத்தானுமுணர்க.

சத்திபீடம் அறுபத்துநான்காவன:—(க) காமக்கோட்டிபீடமும், (உ) அன்னபூரணி பீடமும் ஸ்ரீகாஞ்சியிலுள்ளன. (௩) இலக்ஷுமி பீடம் கோபாலபுரத்திலுள்ளது. (௪) ரேணுகா பீடமும், (௫) துளஜா பீடமும், (௬) சப்தசிருங்க பீடமும் மாதுபுரத்திலுள்ளன. (௭) ஜ்வாலாமுகி பீடம் இங்குலையிலுள்ளது. (௮) பிராமரி பீடம் சாகம்பரியிலுள்ளது. (௯) துர்க்கை பீடமும், (க௦) விந்தியாசல பீடமும் ஸ்ரீரர்த்ததந்திகையிலுள்ளன. (கக) பீமாதேவிபீடம் விமலையிலுள்ளது. (கஉ) கௌசிகிபீடம் ஸ்ரீசந்திரலையிலுள்ளது. (க௩) நீலாம்பரிபீடம் நீலபருவதத்திலுள்ளது. (க௪) சாம்புநதேஸ்வரி பீடம் ஸ்ரீநகரத்திலுள்ளது. (க௫) இரகசியகாளி பீடம் நேபாளத்திலுள்ளது. (க௬) மீனாக்ஷி பீடம் மதுரையிலுள்ளது. (க௭) சுந்தரிபீடம் வேதாரணியத்திலுள்ளது. (க௮) யோகேஸ்வரிபீடம் மகாலசத்திலுள்ளது. (க௯) நீலசரஸ்வதிபீடம் சீனாவிலுள்ளது. (உ௦) வகலைபீடம் வைத்தியநாதத்திலுள்ளது. (உக) புவனேஸ்வரி பீடமும், (உஉ) காமயோனிமண்டலமென்னுந் திரிபுரபைரவிபீடமும் மணித்தீபத்திலுள்ளன. (உ௩) காயத்திரிபீடம் புஷ்கரத்திலுள்ளது. (உ௪) சண்டிகை பீடம் அமரேசத்திலுள்ளது. (உ௫) புஷ்கரேக்ஷணி பீடம் பிரபாசத்திலுள்ளது. (உ௬) தேவிபீடம் நைமிசத்திலுள்ளது. (உ௭) புருகூதபீடம் புஷ்கராக்ஷத்திலுள்ளது. (உ௮) இரதிபீடம் ஆஷாடத்திலுள்ளது. (உ௯) தண்டினிபீடம் சண்டமுண்டியிலுள்ளது. (௩௦) பூதிபீடம் பாரபூதியிலுள்ளது. (௩க) நகுலேஸ்வரிபீடம் நாகுலத்திலுள்ளது. (௩உ) சந்திரிகைபீடம் அரிச்சந்திரத்திலுள்ளது. (௩௩) சாரதாபீடம் ஸ்ரீகிரியிலுள்ளது. (௩௪) திரிசூலபீடம் பஞ்சநதத்திலுள்ளது. (௩௫) சூக்ஷுமபீடம் ஆம்பிராதகேஸ்வரத்திலுள்ளது. (௩௬) சாங்கரிபீடம் மகாகாளத்திலுள்ளது. (௩௭) சர்வாணிபீடம் மத்திய மாபிதத்திலுள்ளது. (௩௮) மார்க்கதாயினி பீடம் கேதாரத்திலுள்ளது. (௩௯) பைரவி பீடம் பைரவத்திலுள்ளது. (௪௦) மங்களைபீடம் கயையிலுள்ளது. (௪க) ஸ்தாணுப்பிரியை பீடம் குருக்ஷேத்திரத்திலுள்ளது. (௪உ) ஸ்வாயம்புபீடம் வியபிநாகுலத்திலுள்ளது. (௪௩) உக்கி

சபீடம் கனகலத்திலுள்ளது. (௪௪) விஸ்வேசைபீடம் விமலேச்வரத்திலுள்ளது. (௪௫) மஹாநந்தை பீடம். அட்டகாசத்திலுள்ளது. (௪௬) மகாந்தகை பீடம் மகேந்திரத்திலுள்ளது. (௪௭) பீமபீடம் பீமத்திலுள்ளது. (௪௮) பவானிபீடம் வஸ்திராபதத்திலுள்ளது. (௪௯) உருத்திராணிபீடம் அர்த்தகோடிகையிலுள்ளது. (௫௦) விசாலாக்ஷி பீடம் அவிமுத்தத்திலுள்ளது. (௫௧) மகாபாகைபீடம் மகாலயத்திலுள்ளது. (௫௨) பத்திரகாளி பீடம் கோகர்ணத்திலுள்ளது. (௫௩) பத்திரைபீடம் பத்திரிகர்ணிகத்திலுள்ளது. (௫௪) உற்பலாக்ஷி பீடம் சுவர்ணாக்ஷத்திலுள்ளது. (௫௫) ஸ்தாண்வீசை பீடம் ஸ்தாணுவிலுள்ளது. (௫௬) கமலை பீடம் கமலாலயத்திலுள்ளது. (௫௭) பிரசண்டை பீடம் சகலண்டத்திலுள்ளது. (௫௮) திரிசந்திரிகை பீடம் குரண்டலத்திலுள்ளது. (௫௯) மகுடேஸ்வரி பீடம் மாகோடத்திலுள்ளது. (௬௦) சாண்டிகை பீடம் மண்டலேசத்திலுள்ளது. (௬௧) காளிபீடம் காலஞ்சரத்திலுள்ளது. (௬௨) தொனி பீடம் சங்குகர்னத்திலுள்ளது. (௬௩) தூலபீடம் தூலசேஸ்வரத்திலுள்ளது. (௬௪) பரமேஸ்வரிபீடம் சிவஞானிகளிதய கமலத்திலுள்ளது. என்க. இவ்வாறு வடமொழித் தேவிபாகவதத்திற் கூறப்பட்டுள்ளன. உடுபதி - சந்திரன். கணம் - நக்ஷத்திரக்கூட்டம். உய்ந்திடுவான் - வினையெச்சம். அந்நகர் என்றும் திசைமயக்குறாத வியல்புடைத்து எனக்கூட்டுக.

பாவமோர் கோடி புரியினு மொன்றாம் பரிவினிற் றருமமொன் றியற்றி
னேவரும் வியப்பக் கோடியாய் மல்கு மின்னதோர் பெற்றியை நாடித்
தேவர்கண் முனிவர் தம்பதம் வெறுத்துச் சிவனருச் சனைபுரிந் தங்கண்
மேவினர் தவஞ்செய் திருத்தலாற் காஞ்சி வியனகர்ப்பெருமையார்விரிப்பார்.

(இ-ள்.) (அந்நகரத்தில்) கோடி பாவங்களைச் செய்யினும் ஒன்றாகச் சுருங்கும், அன்புடன் ஒருதருமத்தைச்செய்தால் அது யாவர்களும் அதிசயிக்கும்படி கோடியாய்ப் பெருகும், இத்தன்மையாகிய கிரமத்தை யாலோசித்துத் தேவர்களும் முனிவர்களுந் தங்கள்தங்கள் பதங்களை வெறுத்துச் சிவார்ச்சனை செய்து அவ்விடத்திலேயே தவஞ்செய்துகொண்டிருக்குந்தன்மையால் சிறந்த காஞ்சிமாநகரத்தின் மேன்மையை யாவர் விரித்துச்சொல்லவல்லவர்கள்.—எ-று.

தீவினைச் சுருக்கத்தையும் நல்வினைப் பெருக்கத்தையுந் தருந்திருநகரமாகலின், 'பாவமோர் கோடிபுரியினுமொன்றாம் பரிவினிற் றருமமொன்றியற்றி-னேவரும் வியப்பக்கோடியாய் மல்கும்' என்றும், இஃது சர்வலோகப் பிரசித்தமாயுள்ளதாகலினிதனையுணர்ந்த தேவர்கள் முதலியோரடைந்து சிவபூசனை புரிந்து அங்குத் தவஞ்செய்து ஒன்று கோடியான புண்ணியப்பயனைப் பெறுதலான், 'இன்னதோர் பெற்றியைநாடித் - தேவர்கண் முனிவர் தம்பதம் வெறுத்துச் சிவனருச்சனை புரிந்தங்கண் - மேவினர் தவஞ்செய் திருத்தலாற் காஞ்சி வியனகர்ப் பெருமையார் விரிப்பார்' என்றுங் கூறினர். புண்ணியப்பயன் ஒன்று கோடியாய்ப் பெருகுமென்பதனை, —" ஒருமுறை யங்கட் காமமாந் தரும முஞற்றுநர் தமக்கு மத்தருமந் - தருபயன் கோடி யாதலிற் கரடத் தடத்திழி கடாம்படு கலுழிப்-பெருவணா வதனப்பிள்ளையைக் குகனைபெற்றவ ளமர்பில மதுதான்-கருதரு காமக்கோடியென்றுலகிற் காரணப் பெயரினால் விளங்கும்" எனவருங் காஞ்சிப்புராணத்தானுமுணர்க. (௭௯)

கங்கைதன் சிறுவ னருள்பெறு வேதாக் கல்படை கொண்டகா லையினு
மங்கவன் றுஞ்சும் பொழுதினுங் காஞ்சி யழிவுறா திருந்தபான் மையினாற்
றுங்கவெண் பிறையு மிதழியு மரவுஞ் சுராதிபர் முடிகளு மணிந்த
மங்கையோர் பங்கன் படைத்ததே யன்றி மலரயன் படைத்ததன் றதுவே.

(இ-ள்.) கங்காதேவி புத்திரராகிய ஸ்ரீகுமாரக்கடவுளினது திருவருளைப்பெற்ற பிரமன் நித்திரைசெய்யும்பொழுதும் அவனிறக்கும்பொழுதும் (உண்டாகும் பிரளயத்தில்) காஞ்சிமாநகரம் அழியாதிருந்த தன்மையால், அந் நகரம் பரிசுத்தமான வெள்ளிய இளம்பிறையையும், கொன்றைமாலையையும், பாம்பையும், இந்திராதியர்களது சிரமாலைகளையு மணிந்தருளிய பார்வதிபாகராகிய சிவபெருமான் படைத்ததேயல்லாமல், தாமரை மலரில் வசிக்கும் பிரமன் படைத்ததன்று.—எ-று.

ஸ்ரீ சுப்பிரமணியப் பெருமான் அனற்பொறி யுருவாய் விளங்கி அக்கினிதேவனும் வாயுதேவனுந் தாங்கிச் சென்று கங்கையிலுய்ப்ப, அங்குச் சரவணத்திற் பச்சிளங் குழவியாய் விளங்கித் தோன்றினமையின், 'கங்கை தன் சிறுவன்' என்றும், அவ்வெம்பெருமானை மதியாது வணங்கிச்சென்ற பிரமனைச் சிறையிடைப்படுத்திப் பின்னர் சிவபெருமானது கட்டளையால் அருள்செய்து விடுத்தமையின், 'அருள்பெறு வேதா' என்றுங் கூறினர். கண்படைகொண்ட காலை-நினைகற்பமும், அங்கவன்றுஞ் சும்பொழுது-ஊழிக்காலமுமாம். சந்திரன் அமுத கிரணமுடையவனாகலின், 'துங்க வெண்பிறை' என்றும் சிவபெருமான் ஆன்மாக்களுக்குப் போகமோக்ஷங்களைத்தரும் அருள்வள்ளலாகலின், 'மங்கையோர் பங்கன்' என்றுங் கூறினர். 'மங்கையோர் பங்கன் படைத்தது' என்பதனை—"ஆதிநாண் முக்கணெம்மா னயன்றனைப்படைத்துவேத-மோதுவித் தருளினோக்கி யுலகெலாம் படையென்றேவும்-போதிது பார்த்திவ்வாறு படையெனப் புகன்றுவைத்தா-னீதெனலாகுங் காஞ்சி யென்னுமா யளவைத்தாமே" எனவும், "அக்காஞ்சி கலிநாசப் பொருட்டுநாம் படைத்துவைத்த தாதலாலே - யெக்காலு மந்நகரி னகத்துயரும் வினைத்துயரு மெய்தாவாகு - மைக்காளஞ்சுவையழ்தின் மணந்தவிழி மணிநீவி யல்கு லெட்டுத் - திக்காளர் தமைப்பொதியும் பெருங்கீர்த்தி நகரவளஞ் சிறிது கேட்டி" எனவும்வருங் காஞ்சிப்புராணத்தானு முணர்க.

அரியபல் லிசையு மறைபுனல் கங்கை யருஞ்சிலை யிலிங்கமங் குறைவோர்
சுரர்தரு வனைத்துங் கற்பக மின்பந் துய்ப்பது வேள்வியூண் பூசை
யுரைசெப நடத்தல் வலம்வருந் தன்மை யுன்னலே தியானம்வீழ்ந் திடுதல்
பரனடி வணக்க மாவது காஞ்சிப் பதிக்கலா லெங்நகர்க் குளதே.

(இ-ள்.) அருமையான பலவித இசைக ளனைத்தும் வேதமும், நீரனைத்துங் கங்கையும்; அரிய கற்களனைத்துஞ் சிவலிங்கமும்; அங்கு வசிப்பவர்களனைவருந் தேவர்களும்; மரங்க ளனைத்துங் கற்பகவிருக்ஷமும்; இன்ப மனுபவிப்பவை யனைத்தும் வேள்வியும்; உண்ணுதலனைத்தும் பூசையும்; சொல்லும் வார்த்தைக ளனைத்துஞ் செபமும்; நடத்த லனைத்தும் பிரதக்ஷணஞ்செய்தலும்; நினைத்த லனைத்துந் தியானமும்; வீழ்தலனைத்துஞ் சிவபெருமான் திருவடியில் வணக்கமுமாக வுள்ளது காஞ்சிமாநகரத்திற்கன்றி வேறு எந்த நகரத்திற் குண்டு?—எ-று.

சிவபெருமான் திருவாக்காயுள்ள எழுதாக்கிளவியாகிய வேதம் இசைவடிவினவாகலின், 'அரிய பல்லிசையுமறை' என்றும் எத்தகைய தீர்த்தங்களினுங் கங்கைநதி தீர்த்தமே சிறந்ததாகலின், 'புனல்கங்கை' என்றும், அங்குள்ள கற்களனைத்துஞ் சிவவடிவமாகலின், 'அருஞ்சிலையிலிங்கம்' என்றும், தேவர்கள் புண்ணியப்பயன் புசிப்பவராகலின், 'அங்குறைவோர் சுரர்' என்றும், கற்பகம் வேண்டுவார் வேண்டியவற்றை யுதவுஞ் சிறப்பினவாகலின், 'தருவனைத்துங் கற்பகம்' என்றும், வேள்விப்பயன் பேரின்பம் பயப்பனவாகலின், 'இன்பந் துய்ப்பது வேள்வி' என்றும், உண்ணுதல் சிவபூசை செய்வதோ டொப்பனவாகலின், 'ஊண்பூசை' என்றும், அந்நகரத்துள்ளார் கூறும் வார்த்தைகளனைத்துஞ் செபஞ் செய்தலோ டொப்பனவாக

யின், 'உமைமேசபம்' என்றும், அவர்கள் நடத்தல் சிவாலயத்தைப் பிரதக்ஷணஞ் செய்தலோ டொத்தலின், 'நடத்தல் வலம்வருந் தன்மை' என்றும், அவர்களொன்றைச் சிந்தித்திருத்தல் சிவத்தியானஞ் செய்தலோ டொப்பனவாகலின், 'உன்னலே தியானம்' என்றும், அவர்கள் பூமியில் விழ்தல் சிவபெருமான் திருவடியை நமஸ்கரித்தலோ டொப்பனவாகலின், 'வீழ்ந்திடுதல் பரனடிவணக்கமாவது' என்றும், இவ்வாறு ஒன்று மற்றொன்றாகிய புண்ணியப்பயனைத் தருவது இக்காஞ்சிமாநகரத்திற்கன்றி வேறொன்றற்கின்மையின், 'காஞ்சிப்பதிக்கலா லெங்கணர்க்குளதே' என்றுங் கூறினர்.

கணமுகில் செக்கர் போர்த்தெனுங் கரிய கஞ்சுகச் செந்நிறக் கடவுண்
மணிசுடர் வயிரக் கிம்புரி மருப்பு மால்கரி முகத்தவன் வருசூர்
துணிபட வெறிந்த வேலவ னயன்போற் றோன்றிய சாத்தன்மால் விசயை
யிணையில்சீர்க் காளி முதலினோ ரென்று மினிதுகாத் திடுவதந் நகரம்.

(இ-ள்.) (நீருண்டு) தடித்த மேகத்தால் சூழப்பட்ட செவ்வானம்போல, கரிய கஞ்சுகத்தை யணிந்த சிவந்த திருமேனியை யுடைய வைரவக்கடவுளும், அழகிய ஒளியோடுகூடிய வயிரங்க ளிழைத்த கிம்புரிகட்டிய தந்தத்தை யுடைய பெரிய யானைமுகக்கடவுளும், சூரபதுமனுடல மிருபிளவாகும்வண்ணம் எறிந்த வேற்படையையுடைய குமாரக்கடவுளும், பிரமனைப்போலத் தோன்றிய சாத்தனும், திருமாலும், துர்க்கையும், ஒப்பற்றசிறப்பினையுடையகாளியும் முதலியவர்களால் எப்பொழுதும் இனிமையாகக் காக்கப்படுவது அக் காஞ்சிமாநகரம்.—எ-று.

'கணமுகில் செக்கர் போர்த்தெனுங் கரிய கஞ்சுகம்' என்றது, மாவலிபாற் சென்று மூவடிமண்பெற் றுலகினையளந்த விஷ்ணுவாகிய வாமனனது தோலாகிய சட்டையை. இதனை :—"வெஞ்சுடர்ப் பரியழன் மீது போர்த்திடு - மஞ்சனப்புகையெனவாலமாமெனச் - செஞ்சுடர்ப் படிவமேற் செறித்தமாமணிக்-கஞ்சுகக்கடவுள்" என முன்னர்க்கூறியதனானும், "தெளியுமாவலியைச் செற்றோற் செகுத்துரிக் கவயம் போர்த்த - வளியுளர் கச்சிக்காவல் வயிரவர்" எனவருங் காஞ்சிப்புராணத்தானு முணர்க. கிம்புரி—தந்தப்பூண். பிரமனைப்போலச் சிவ விஷ்ணுக்களிடத்தினின்றுந் தோன்றினமையால், 'அயன்போற்றோன்றிய சாத்தன், என்றார். உமாதேவியாரது காளிமத்துருவாய் வந்தனளென்பது தோன்ற, 'இணையில் சீர்க்காளி' என்றுகூறினர். வயிரவக்கடவுள் முதலியோர் காஞ்சிமாநகரத்தைக் காவல்பூண் டொழுகுவனென்பதனை—"துற்கையுஞ் சாத்தனு மிரவியும் வயிரவத்தோன்றலு - நற்கரிமுகனுடனைவருங் கச்சபநாயகன் - பொற்கம லப்பதம் பூசனை யாற்றியங் குடனமர்ந்-தொற்கமில் கணங்களோடப்புரிகாவல்பூண்டுறுவரால்" எனவருங்காஞ்சிப்புராணத்தானுமுணர்க.

அறுசம யத்திற் கடந்தசை வத்தி னன்றிவீ டிலதெனத் தெளிந்து
பிறரறி யாது தொன்மைபோ லிருந்து பிஞ்சகன் மீதுகன் மலரா
வெறிதரு தேர ரன்பர்தங் கலிங்க மெழிலிக ணனைத்தலுஞ் சிரத்தை
முறைபுரி சிலைமேன் மோதினோர் முதலோர் முத்திபெற் றுடையதம் மூதூர்.

(இ-ள்.) அறுவகைச் சமயங்களினும் மேம்பட்டுள்ள சைவசமயத்திலல்லாமல் மற்றைச் சமயங்களில் முத்தியில்லை யென்று தெளிந்து அயலா ரறியாவண்ணம் முன்னிருந்த வேடத்துடனே யிருந்து சிவபெருமான்மீது கல்லை மலராகக்கொண்டு எறிந்து பூசித்த சாக்கியநாயனாரும், அடியார்களது ஆடையை மழைநீர் நனைத்தமையால் தமது தலையைத் தந்தொழில் முறையைச் செய்கின்ற பாறையின்மேல் மோதிய திருக்குறிப்புத்தொண்டநாயனாரும் முதலிய அடியார்கள் முத்திபெற்ற ஸ்தானமாயுள்ளது, அப் பழைய காஞ்சிமாநகரம்.—எ-று.

'அறுசமயம்' எனப்பொதுப்படக்கூறியதனுல், புறப்புறம், புறம்-அகப்பு றம் - அகம் என்றுகூறும் நான்குவகையினை யுடையனவாய் ஒவ்வொன்றினும் அறு வகைப்பேதங்களையுமுடைய இருபத்துநான்கு வகைச்சமயபேதங்களையுங் கொள்க. இவருள் புறப்புறச்சமயத்தார் அறுவருள், உலகாயதன் பதி பசு பாசம் என்பன இல வாம். மகளிரிடத்துண்டாம் இன்பமொன்றுமே பொருளென்று கூறுவன். புத்தரிற் சௌத்திராந்திகன் உருவம்-ஞானம் - வேதனை - குறிப்பு - வாசனை என்னும் பஞ்ச கந்தங்களுந் தொடர்ச்சியாயழிவது பந்தமென்றும், அவைமுற்றுமொழிதலே முத்தி யென்றுங்கூறுவன். யோகாசாரன் சௌத்திராந்திகனிற் சிறிதுவேறுபட்டு அறிவு அரூபமென்றும் பிரபஞ்சம் பொய்யென்றுங்கூறுவன். மாத்மீகன் அறிவும், அறியப் படுபொருளுஞ் சூனியமென்றும், அதனுலேபிரபஞ்சந் தோன்றுதென்றுங் கூறுவன். வைபாடிகன் மஞ்சளுஞ் சுண்ணம்புங் கூடியவிடத்துச் செந்நிறந் தோன்றுமாறு போல இந்திரியங்கள் கூடியவிடத்துப் பிரபஞ்சந் தோன்றுமென்று கூறுவன். ஆருக தன் ஞானுவரணீய முதலிய எண்வகைக்கன்மத்தையும், பசித்தல்முதலிய பதினெண் குணத்தையும், அரசிகம்முதலிய ஆறுகுணத்தையும் விடுத்து முன்னைக்கன்மம்புசித் துத் தொலைந்தவிடமே முத்தியின்பமென்று கூறுவன்.

இனி, புறச்சமயத்தா ரறுவருள், தார்க்கிகன் வித்தியா கற்பனை, தோஷம், பிரவிருத்தி, சனனம், துக்கமென்பவைகளைத் தனித்தனி நீக்கிச்செல்ல, முடிவினி ன்ற துக்கமொழியுமென்றும், இதுவே முத்தியென்றுங் கூறுவன். மீமாஞ்சகன் வே தம் அநாதியென்றும், ஈசனை வேண்டாது கன்மமே பலனைக் கொடுக்குமென்றுங் கூறுவன். மாயாவாதி சுத்தமாகிய பரப்பிரமம் மாயோபாதியினுலே வாதிக்கப்பட்டுச் சரீரத்தினுள்ளே சீவான்மாவாக நிற்குமென்றும், சீவான்மாவும் விவேக ஞானமடை ந்து மாயாவத்தை கடந்து பரமான்மாவோடு கடாகாசமும் மகாகாசமும்போல் அபே தமாய் விடுமென்றுங் கூறுவன். சாங்கியன் புமானுகிய சுத்தபுருடன் அறியாமை யுற் றபோது பிரபஞ்சமெல்லாந் தானே விரிந்து நிற்பனென்றும், விவேகஞான மெய்திய போது அவை யனைத்தும் பிரகிருதிக்கேயன்றித் தனக்கில்லையென்றுங் கூறுவன். யோகி நின்மல சத்துவபரிணும ரூபமாகிய சித்தவிருத்திகளை உன்முகமாகத் திரும்பி, அவைகளை அவற்றின் முதற்காரணத்தினுலே ஒடுக்குதலே முத்தியென்று கூறுவன், பாஞ்சராத்திரி நாராயணர் தம்மை வழிபட்டவர்களுடைய பாசபந்தத்தை யொழித்து அவர்களை விரசாநதியிலே மூழ்குவித்துச் சுத்தர்களாக்கி, வைகுண்டத்திலே தமது சாரூபத்தைக் கொடுத்தருளுவரொன்று கூறுவன்.

மேல், அகப்புறச்சமயத்தா ரறுவருள். சைவன் சிவபெருமான் தாண்டவ பூஷணமூர்த்தியா யருளுவரொன்றும், பாசுபதன் விபூதியுஞ் சடைமுடியுந்தரித்த மூர் த்தியா யருளுவரொன்றும், மகாவிரதன் என்பு மாலைதரித்த மூர்த்தியா யருளுவரொன் றும், காளாமுகன் படிகமும் புத்திர தீபமணியுந்தரித்த மூர்த்தியா யருளுவரொன்றும், வாமன் அக்கினியும் உபவீதமுந் தரித்த மூர்த்தியா யருளுவரொன்றும், பைரவன் தமருகமுஞ் சிலம்புந் தரித்த மூர்த்தியாயருளுவரொன்றுங் கூறுவர்.

இனி, அகச்சமயத்தா ரறுவருள், பாடாணவாதசைவன் ஆன்மா முத்தியி லும் சகசமலம் நீங்காது கல்லைப்போற் கிடக்குமென்று கூறுவன். சங்கிராந்தவாத சைவன் விகாரமின்றி நிற்கும் ஆன்மசந்நிதியிலே அசத்தாகிய கருவிகளே சத்தாகிய சிவத்தைத் சிவகரணமா யறியுமென்று கூறுவன். அவிகாரவாதசைவன் கொடிய வெய்யிலிலே யடைந்தோரா லடையப்படுகின்ற மரநிழல்போல, கடவுள் விகாரமி ன்றி நிற்ப, ஆன்மாவானது தானே பக்குவமடைந்தபோது ஞானம்பெற்றுப் பதி

யைச் சேருமென்று கூறுவன். பரிணாமவாதசைவன் உயிர்கெட்டுக் கூடிச் சிவபெருமானது திருவடியில் ஒன்றாய் விடுமென்று கூறுவன். சுத்தசைவன் ஆன்மாவுஞ் சிவமுங் கூடியவிடத்து ஆன்மா சிவாநுபவத்திற் குரித்தாகாதென்று கூறுவன். பேதவாதசைவன் ஆன்மா மெய்ஞ்ஞானத்தை யடைந்தபொழுதே மலம் நீங்கிவிடுமென்றும் இதுவே முத்தியென்றுங் கூறுவன்.

இத்தகைய முத்திபேதங்களையும் மூர்த்திபேதங்களையுமுடைய நாற்பகுப்பாகிய அறுவகைச் சமயபேதங்களையுங் கடந்த சமயாதீதமாகிய சித்தாந்த சைவமே சிந்தையு மொழியுஞ் செல்லா நிலைமைத்தாய முத்தியைத்தருவதாகலின், 'அறுசமயத்திற் கடந்த சைவத்தினன்றி வீடிலது' என்று கூறினர். இதனை:—"பேயன்ன புறச்சமயப் பிணக்குநூல் வழியனைத்தும் பிழையேயன்றி-வாயன்மை தெளிந்துசைவ சித்தாந்த வழிதேறி யறிதவாழ்விற்-போயன்மி யஞ்செழுத்துந் திருநீறுங் கண்டிகையும் பொருளாக்கொண்ட - நாயன்மார் திருக்கூட்டம் பணிந்திறைஞ்சும் பெரும்பேறு நான்பெற்றேனல்" எனவருங் காஞ்சிப்புராணத்தானும், இச் சைவசித்தாந்தமே முத்தியைத் தரத்தக்க தென்பதனையும், இதனினுஞ் சிறந்தது வேறொன்றின்றென்பதனையும், "தன்மையு முன்னிலையுந் தானாய்ப் படர்க்கையுமா, யென்ஞெறிவி லின்பமாயின்பு மிது-வென்னாத, வேதாந்த சித்தாந்த மேபிறவா வீடென்றான்-ஓதாமல் வேதமுணர்ந்தோன்" எனவரும் ஒழிவிலொடுக்கத்தானும், "பல்லுயிர்த் தொகுதியும் பயன்கொண்டுய்கெனக் - குடிலையென்னுந் தடவயனுப்ப-னருள்வித்திட்டுக் கருணைநீர்பாய்ச்சி - வேதமென்னும் பாதபம் வளர்த்தனை-பாதபமதனிற் படுபயன்பலவே - அவற்றுள், இலைகொண் டுவந்தனர்பலரே யிலையொரீஇத் - தளிர்கொண் டுவந்தனர் பலரே தளிரொரீஇ - யரும்பொடு மலர்பிஞ் சருங்கா யென்றிவை - விரும்பினர்கொண்டுகொண் டுவந்தனர் பலரே - யவ்வாறுறுப்பு மிவ்வாறு பயப்ப - ஒரும்வே தாந்த மென் றுச்சியிற் பழுத்த - வாராவின்ப வருங்கனி பிழிந்து - சாரங்கொண்ட சைவசித்தாந்தத்-தேனமு தருந்தினர் சிலரே" எனவரும் பண்டார மும்மணிக்கோவையானும், "தெய்வஞ்சிவனே சிவனருள்சமயஞ்-சைவஞ்சிவத்தொடு சம்பந்தமென்றான் - சைவம் வளர்க்குஞ் சம்பந்தமூர்த்தி" எனவருந் திருச்செந்தூரகவலானும், "விண்ணவரிந் திரன்முதலோர் நாரதாதி விளங்குசப்த ரிஷிகள்கன வீணைவல்லோ - ரெண்ணரிய சித்தர்மனுவாதிவேந்த ரிருக்காதி மறைமுனிவ ரெல்லாமிந்தக் - கண்ணகன்ஞா லம்மதிக்கத் தானேயுள்ளங் கைநெல்லிக்கனிபோலக்காட்சியாகத்-திண்ணியநல் லறிவாலிச்சமயத்தன்றேசெப்பரியசித்திமுத்திசேர்ந்தாரொன்றும்," "செப்பரிய சமயநெறியெல்லாந் தன்றன் றெய்வமே தெய்வமெனுஞ் செயற்கையான - வப்பரிசாளருமவரேபிடித்தாலிப்பாலடுத்ததந்நூல் களும்விரித்தே யனுமனுதி - யொப்ப விரித்துரைப்பரிங்வன் பொய்மெய்யென்ன வொன்றிலையொன் றெனப்பார்ப்ப தொவ்வாதார்க்கு - மிப்பரிசாஞ் சமயமுமா யல்லவாகி யாதுசமயமும்வணங்கு மியல்பதாகி" "இயல்பென்றுந் திரியாம லியமமாதி யெண்குணமுங் காட்டியன்பா லின்பமாகிப் - பயனருளப் பொருள்கள்பரி வாரமாகிப் பண்புறவுஞ் சௌபான பக்ஷங்காட்டி - மயலறுமந் திரஞ்சிக்ஷை சோதிடாதி மற்றங்க நூல்வணங்க மௌனமோலி - யயர்வறச்சென் னியில்வைத்து ராசாங்கத்தி லமர்ந்ததுவை திகசைவ மழகிதந்தோ" "அந்தோவீ ததிசயமிச் சமயம்போலின் றறிஞரெலா நடுவறிய வணிமாவாதி - வந்தாடித் திரிபவர்க்கும் பேசாமோனம் வைத்திருந்த மாதவர்க்கு மற்றுமற்று - மிந்த்ராதி போகநலம் பெற்றபேர்க்கு மிதுவன்றித் தாயகம்வே றில்லையில்லை - சந்தான கற்பகம்போலருளைக்காட்டத் தக்கநெறி யிந்நெறியே தான்சன்மார்க்கம்" எனவும், சைவசமய

மேசமயஞ் சமயாதீதப் பழம்பொருளைக் - கைவந்திடவே மன்றுள்வெளி காட்டுமிந் தக் கருத்தைவிட்டுப் - பொய்வந்துழலுஞ் சமயநெறி புகுதவேண்டா முத்திதரும் - தெய்வச்சபையைக் காண்பதற்குச் சேரவாருஞ் செகத்தீரே." எனவும் வருந் தாயுமானவர் திருவாக்கானும், "சைவத்தின் மேற்சம யம்வே றிலை யதிற் சார்சிவமாந் - தெய்வத்தின் மேற்றெய்வ மில்லெனு நான்மறைச் செம்பொருள்வாய்-மைவலத்த சீர்த்திருத் தேவார மூந்திரு வாசகமு - மூய்மைவத் தரச்செய்த நால்வர்பொற் றுளெம் முயிர்த்துணையே." எனவருந் திருவருணைக்கலம்பகத்தானு முணர்க.

'பிஞ்சகன் மீதுகன் மலரா லெறிதரு தேரர்' என்பதன் வரலாறு:—சாக்கியநாயனர் சங்கமங்கையென்னும்பதியி லவதரித்துப் பௌத்தசமயஞ்சார்ந்து அதற்குரிய நூல்களையோதி யுணர்ந்து அது பொய்ச்சமயமென்று கழித்து, ஸ்ரீ காஞ்சிபுரத்தையடைந்து அப் பௌத்தவேட நீங்காமலேயிருந்து சிவலிங்கப்பெருமானைக் கண்டு செங்கல்லையே மலராகக்கொண்டு அருச்சித்து உணவுகொள்ளும் நியமம் பூண்டொழுகுநாள்களில்,ஒருநாள் அக் கல்லெறிதலை மறந்து உணவுகொள்ளச் செல்லுங்கால் ஞாபகம் வரவும், உடனே திடீரென்றெழுந்து விரைந்தோடிவர, சிவபெருமான் இடபாரூடராயெழுந்தருளி முத்திதந்தருளினு ரென்பதாம். இதனை:—"நாடோறுஞ் சிவலிங்கங் கண்டுண்ணு மதுநயந்து-மாடோர்வெள் ளிடைமன்னுஞ் சிவலிங்கங் கண்டுமன - நீடோடு களியுவகை நிலைமைவரச் செயலறியார் - பாடோர்கற் கண்டதனைப் பதைப்போடு மெடுத்தெறிந்தார்." எனவும், "கல்லாலே யெறிந்ததுவு மன்பான படிகானில் - வில்வேடர் செருப்படியுந் திருமுடியின் மேவிற்றால் - நல்லார்மற் றவர்செய்கை யன்பாலே நயந்ததனை-யல்லாதார் கல்லென்பா ரரனார்க்கஃதலராமால்." "அங்கொருநா ளருளாலே யயர்ந்துண்ணப் புகுகின்ற - ரெங்கள்பிரா னனையெறியா தயர்த்தேன்யா னெனவெழுந்து - பொங்கியதோர் காதலுடன் மிகவிரைந்து புறப்பட்டு-வெங்கரியி னுரிபுனைந்தார் திருமுன்பு மேவினார்." "கொண்டதொரு கல்லெடுத்துக் குறிகூடும் வகையெறிய - உண்டிவினை யொழிந்தஞ்சி யோடிவரும் வேட்கையொடுங்-கண்டருளுங் கண்ணுதலார் கருணைபொழி திருநோக்காற் - றெண்டரொதிர் நெடுவிசும்பிற் றுணைவியொடுந் தோன்றுவார்." எனவும்வரும் பெரியபுராணத்தா னுணர்க.

'அன்பர்தங் கலிங்க மெழிலிக ணனைத்தலுஞ் சிரத்தை - முறைபுரி சிலைமேன் மோதினேர்' என்பதன் வரலாறு.—ஸ்ரீ காஞ்சிபுரத்திலே ஏகாலியர்குலத்திலே யவதரித்த திருக்குறிப்புத்தொண்டநாயனர் சிவனடியார்களது அழுக்காடையைத் தோய்த் துலர்த்திக் கொடுக்குந் திருத்தொண்டு செய் தொழுகுநாளில், சிவபெருமான் விருத்த அடியார்வேடங் கொண்டு வர, நாயனர் அவரை யுபசரித்து அவர்மேற் போர்த்திருந்த கந்தையைத் தோய்த்துலர்த்திப் பொழுதுபோவதற்குள் கொடுப்பதாக உறுதிகூறி வாங்கித் தோய்க்குங்கால், சிவபெருமான் திருவருளால் இடிமின்னலுடன் பெருமழை பெய்ய, அதனல் அக் கந்தைவஸ்திர முலராமையை யுணர்ந்த நாயனர் தமது சொற்றவறியதோடு அடியவர்க் கபராதமிழைத்தோமே யென்னும் வருத்தத்தினுல் ஆடையொலிக்கும்பாறையில் தன்றலையை மோதிக்கொள்ளச் சிவபெருமானது திருக்கரம் அப்பாறையின்வழியாக வெளிப்பட்டுத் தடுத்து பின்ன ரிடபாரூடராயெழுந்தருளி முத்திதந்தருளின ரென்பதாம். இதனை.—"விழுந்தமழை யொழியாது மெய்த்தவர்சொல் வியவெல்லை- கழிந்ததுமுன் பொலிவித்துமனைக் காற்றேற்க வறிந்திலேன் - செழுந்தவர்தந் திருமேனி குளிர்காணுந் தீங்கிழைத்த - தொழும்பனேற்கினியிதுவே செயலென்று துணிந்தெழுந்தார்." "கந்தைபுடைத் திடவெற்றுங் கற்பாறை மிசைத்தலையைச் - சிந்தவெடுத் தெற்றுவனென் றணைந்துசெழும் பாறைமி

சைத் - தந்தலையைப் புடைத்தெற்ற வப்பாறை தன்மருங்கு - வந்தெழுந்து பிடித்த தனி வளைத்தழும்பர் மலர்ச்செங்கை " என வரும் மேற்படி புராணத்தானு முணர்க.

ஈசன தருளாற் கயிலையை நீங்கி யிமையமா மயிலறம் புரிவான்
காசியி லிருந்து முடிவுறு தேகிக் கனகமா நீழலிற் பரனைப்
பூசனை புரிந்து கம்பைகண் டஞ்சிப் பூண்முலை வளைக்குறிப் படுத்தி
யாசிலா வருள்பெற் றின்னுமீதாற் றிடலா லனையகாஞ் சிக்குநே ரதுவே.

(இ-ள்.) சிவபெருமானுடைய திருவருளினால் உமாதேவியார் திருக்கயிலையினின்று நீங்கித் தருமங்களைச் செய்யும்பொருட்டுக் காசிப்பதியிலிருந்து அவைமுற்றுப்பெறுமையால், அவ்விடத்தினின்றும்வந்துபொன்மயமாகிய மாவிருக்ஷத்தினீழலில் சிவபெருமானைப் பூசித்து, (அதற்கிடையூறாகத் தோன்றிய) கம்பாநதியைக் கண்டு பயந்து ஆபரணங்களையணிந்த முலைச்சுவடும் வளைச்சுவடும் அவ்வெம்பெருமானுக்குண்டாகச்செய்து, பின் குற்றமற்ற திருவருளைப் பெற்று இன்னுந் தவஞ்செய்யுங் காரணத்தினால், அக் காஞ்சிமா நகரத்திற்கு ஒப்பா யுள்ள ஸ்தலம் அந்தஸ்தலமே; (வேறில்லை.)—எ-று.

"மறைகளி னுருவாய்ப் பொன்மலர் தனிமா" என மேற்கூறுவதனால் 'கனகமா' என்று கூறினார். மயில்-உவமையாகுபெயர். 'இமையமா மயிலறம் புரிவான் காசியிலிருந்து முடிவுறு தேகி' என்பதனை:—"மண்ணகத்து வைகுமாந்த ரின்னராக மாணிழைப் - பெண்ணினல்ல வள்விமான நின்றுமிப் பெரும்புவிப் - புண்ணியத் தலங்கடோ றிழிந்திழிந்து போர்விடை - யண்ணலா ரிலிங்கபூசை செய்துகாசியன்மினாள்." "முச்சகம் புகழ்ந்துபோற்று மொய்கொள்காசி மாநகர் - விச்சுவேசர் பூசையாற்றி வேறிலிங்க மொன்றமைத் - தர்ச்சனைத் திறத்தினேத்தி வைகியங் ககன்றசீர்க் - கச்சியம் பதிக்கண்வைத்த காதலுய்ப்ப வேகினாள்." எனவருங் காஞ்சிப்புராணத்தானும், 'கனகமாநீழலிற் பரனைப் பூசனை புரிந்துகம்பை கண்டஞ்சிப் பூண்முலை வளைக்குறிப் படுத்தி' என்பதனை,—"அண்ண லாரருள் வெள்ளத்தை நோக்கியங்கயற்கண்ணி தம்பெருமான்மேல்-விண்ணெ லாங்கொள வரும்பெருவெள்ள மீதுவந்துறு மெனவெருக் கொண்டே - யுண்ணி லாவிய பதைப்புறு காத லுடன்றிருக்கையாற் றழீக்கில் லாமை - தண்ணி லாமலர் வேணியினாைத் தழுவிக் கொண்டனடன்னையே யொப்பாள்." எனவும், "மலைக் குலக்கொடி பரிவுறு பயத்தான் மாவின் மேவியதேவர் நாயகனா - முலைக் குவட்டொடு வளைக்கையா னெருக்கி முறுகுகாதலின் விடுகிடத் தழுவச் - சிலைத்த ளித்திரு நுதறிரு முலைக்குஞ் செந்தளிர்க் கரங்களுக்கு மெத்தெனவே -கொலைக்க ளிற்றுரி புனைந்ததம் மேனி குழைந்து காட்டினார் விழைந்தகொள்கையினார்." எனவும், "பூதியாகிய புனிதநீராட்டிப் பொங்குகங்கைதோய் முடிச்சடை புனைந்து - காதில் வெண்குழை கண்டிகை தாழக் கலந்தயோகத்தின் மருவியசருத்தா - லாதிதேவனு ராயுமாதவஞ்செ யவ்வரங்கொலோ வகிலமீன் றளித்த - மாதுமெய்ப்பயன் கொடுப்பவே கொண்டு வளைத்தழும் புடன்முலைச்சுவ டணிந்தார்." எனவும் வரும் பெரியபுராணத்தானு முணர்க. (அச)

ஆருயிர் முழுதும் விடுபெற் றுய்யலா னறம்புரி சாலைய தனித்தாப் [றும்
பேரா விறைவன் றவத்தின்மு னிருந்த பிலத்திடைக் கோயில்கொண் டென்
பூரணி நோற்று வழிபட வல்லாள் பூசனை கொண்டியா வர்க்குங்
காரணமான பரசிவ னநந்த கல்லியொடு நிலையதக் காஞ்சி.

(இ-ள்.) அருமையாகிய ஆன்மாக்க ளனைத்தும் முத்திபெற் றுய்யும்பொருட்டு (முப்பத்திரண்டு) தருமங்களைச்செய்கின்ற அறச்சாலையினருகாகக் (கார்க்கோட

கனென்னும்) பெரிய நாகராசன் முன்னந் தவஞ்செய்துகொண்டிருந்த பிலத்துவாரத்தினிடத்துத் திருக்கோயில்கொண்டு எப்பொழுதும் ஸ்ரீகாமாட்சியம்மையார் தவஞ்செய்து பூசிக்க, அவ் வம்மையாரது பூசையையேற்றுக்கொண்டு அகிலகாரணராகிய சிவபெருமான் அளவற்ற கலைகளோடும் எழுந்தருளியிருப்பது அக்காஞ்சிமாநகரம்.

ஸ்ரீகாமாக்ஷியம்மையார் முப்பத்திரண்டு தருமங்களையுஞ் செய்தருளினமை உயிர்களின்மேல்வைத்த அன்புகாரணமேயன்றித் தனக்கென வோரறப்பயன் கருதியன்றாகலின், 'ஆருயிர்முழுதும் வீடுபெற்றுய்வானறம்புரிசாலை' என்று கூறினர். 'பேரரவிறைவன்' என்றது கார்க்கோடகனென்னும் சர்ப்பராசனை; 'பிலத்திடைக் கோயில் கொண்டென்றும் பூரணிநோற்றுவழிபட' என்பதனை:—"முற்றுவித்தெழுந்துமீண்டு மொய்யொளிப்பிலத்தின் பாங்க - ரற்றமிலறமெண்ணான்கு மருள்வழிவளர்ப்பாளாகிப்-பற்றலர் புரஞ்செற்றானை யிம்முறை யெண்ணில் பன்னாள்-சிற்றிடையெம்பிராட்டி பூசனைசெய்து வாழ்நாள்" எனவருங்காஞ்சிப் புராணத்தானுணர்க. 'யாவர்க்குங்காரணமான பரசிவன்' என்றதனால், திருமால் முதலிய மற்றைத் தேவர்களனைவரும் அகாரணர்களென்று குறிபித்தவாறாயிற்று. சிவபெருமானது அநந்தகலைகளுள் ஓர் கலையே மற்றெல்லா க்ஷேத்திரங்களினுஞ் சென்றுலாவிவர, ஈண்டுப் பெருமான் பூரண கலைகளோடும் வீற்றிருந் தருளுதலின், 'அநந்த கலையொடு நிலையதக்காஞ்சி' என்று கூறினர். (அ)

இன்னமு முமையா ளேறாற்றிடு மாங்கீழ் இறப்பினும் பிறப்பினு நிலையாய்
மன்னினு மிமைப் பொழுதுமொருகண மேனும் வைகினு மறைகளாந் தனிமா
நன்னிழ லிருந்த பரஞ்சுடர் புரியு நடந்தரி சிக்கினு மதனை
யுன்னினு முத்தி வழங்குகாஞ் சியைப்போ லுலகில்வே றொருநக ருளதோ.

(இ-ள்.) ஸ்ரீ காமாட்சியம்மையார் இப்பொழுதுந் தவஞ்செய்துகொண்டிருக்கின்ற அவ்விடத்தில் இறந்தாலும் பிறந்தாலும் நிலைபெற்று வாழ்ந்தாலும், ஒரு க்ஷணநேரந் தங்கி வசித்தாலும், வேதவடிவமாகிய ஒப்பற்ற மாவிருக்ஷத்தின் நல்ல நீழலி லெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானால் செய்யப்படுந் திருநடனத்தைத் தரிசித்தாலும், அதனைச் சிந்தித்தாலும் முத்தியைத் தருகின்ற காஞ்சிமாநகரத்தைப்போல இந்நிலவுலகத்தில் வேறே யொரு நகரமு முளதோ? (இல்லை.)—எ-று.

"தில்லையைக்காணக் காசியிலிறக்கச் சிறக்குமாரூர்தனிற்பிறக்க - எல்லையிலருணகிரிதனை நினைக்கவெய்தலாமுத்தி" என்றபடி, பிறத்தல் இறத்தல் தரிசித்தல் நினைத்தலாதிய ஒவ்வொன்றினால் முத்தியைத்தரும் பிற க்ஷேத்திரங்களைப்போலாது, இறத்தல் - பிறத்தல்- நிலைத்துவசித்தல் - நினைத்தலாதிய எவ்வகையினாலும் முத்தியைத்தருத லுண்மையால், 'காஞ்சியைப்போலுலகில் வேறொரு நகருளதோ' என்றுகூறினர். இதனை,—"எண்ணிலவாம் யாமருவு மிடங்களென வுரைத்தருள விறைவிகேளா-வண்ணலே யிவற்றுள்ளுஞ் சிறந்ததலம் யாதென்ன வருளிச்செய்வான்-புண்ணியமெய்த்திருக்காஞ்சி யெவற்றினு மேம்படுபுரியா மவ்வூர்தன்னை - யெண்ணினுங்கேட்பினுஞ் சொலினும் வணங்கினும் பேரின்பவீடெவர்க்கு நல்கும்" எனவும், "தோற்றநிலயிறுதி மறைப்பருளென்னு மைந்தொழிலுநடாத்தயாமே-யேற்றமுடையேகம்பநாதனெனுந்திருப்பெயர்பூண் டிலிங்க மானோம்-தேற்றுமித னாற்காஞ்சி யெவற்றினுக்கு மதிகமெனத் தெளிவாயங்கட்-போற்றியொருநாளேனு மமர்ந்துறையின் முத்திநிலை புகுதலால்" எனவும், "வழிச்செலவிற் புகுந்தேனு மறந்தேனும் பொருளாசை மருவியேனும் - கழிப்பருஞ்சீர்க்காஞ்சியினிற் கணப்பொழுது வதிந்தோருங் கலப்பர்முத்தி-பழிப்பிலாக் காஞ்சியெனத் தன்னியல்பாளொருபொழுது பகரிற்கண்

னி-லொழிப்பரும் பாதகமனைத்துமொழிந்து பெருந்துறக்கவீ டுறுசலுண்மை" எனவும் வருங் காஞ்சிப்புராணத்தாலுமுணர்க. (அசு)

கண்ணுதற் பரனுந் தண்டுழாய் மௌலிக் கடவுளுங் கமலமே லயனும்
விண்ணவர்க் கிறையுங் கொற்றமா லினியு மேலைநாட் பிறந்ததொன் மனுவுந்
தண்ணளி புரிதுண் டீரனு நள்ளார் சமர்த்தொழில் கடந்ததண் டகனு
மண்ணலங் கரிகால் வளவனும் பிறரு மரசுசெய் தளித்ததந் நகரம்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணை யுடைய சிவபெருமானும், குளிர்ந்த துளபமாலையையணிந்த திருமுடியினையுடைய திருமாலும், தாமரைமலரில் வசிக்கும் பிரமனும், தேவர்கள் தலைவனாகிய இந்திரனும், வெற்றிபொருந்திய துர்க்கையும், முன்னாளில் பிறந்த பழையமனுவும், குளிர்ந்த அருளையுடைய துண்டீரனும், பகைவர்களதுபோரை வென்ற தண்டகனும், பெருமைபொருந்திய கரிகாற்சோழனும் மற்றவர்களும் அரசு செய்து பாதுகாத்தது, அக்காஞ்சிமாநகரம்.—எ-று.

முதன் மனுவாதலான் 'மேலைநாட் பிறந்ததொன்மனு' என்றும், சிவபெருமானது திருவருளையாற் றிருக்கயிலையினின்றும் வந்து அறநெறிவிளக்கியரசு புரிந்தமையால், 'தண்ணளிபுரிதுண்டீரன்' என்றும், திருமாலது திருவருளைப்பெற்றுத் திக்குவிசயம்புரிந்து திசைக்காவலனு யரசுபுரிந்தமையால், 'சமர்த்தொழில் கடந்த தண்டகன்' என்றும், காட்டை நாடாகத்திருத்தி அரசுபுரிந்தமையால், 'அண்ணலங்கரிகால்வளவன்' என்றுங் கூறினர். பிறர் என்றது, அவனுக்குப்பின் வந்தமற்றையவேந்தர்களை. (அஎ)

வேலைசூ ழுலகி னெங்கணு மிருபால் வீட்டினை வெஃகி னோர்க் குதவு
மாலய நூற்றெட் டுள்ளமற் றவற்று ளைம்முகப் பரஞ்சுட ரமருங்
கோலமார் நிலய மிருபது மாயோன் கோநக ரெட்டுமாக் குழுமி
நாலெழு தான முள்ளவந் நகர்போ னும்புகழ் நகரமற் றெவனோ.

(இ-ள்.) சமுத்திரஞ்சூழ்ந்த இந்நிலவுலகத்தி லெவ்விடத்தும் இருவகைப்பகுதியினையுடைய முத்திகளை விரும்பினவர்களுக்குக் கொடுக்கின்ற தேவாலயங்கள் நூற்றெட்டுள்ளன. அவற்றுள், ஐந்து திருமுகங்களையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுஞ் சிவாலயங்க ளிருபதும், திருமால் எழுந்தருளும் உயர்ந்த விஷ்ணுவாலயங்க ளெட்டுமாகக் கலந்து ஆக இருபத்தெட்டுத் தேவாலயங்க ளிருக்கின்ற அக்காஞ்சிமாநகரத்தைப்போல நம்மால் புகழத்தக்க நகரம் வேறு யாதுளது?—எ-று.

இருபால்வீடு - என்பன, சாலோக சாமீப சாரூபமாகிய பதமுத்திகளும், சாயுச்சியமாகிய பரமுத்தியுமாம். இவற்றைப் பதமுத்தியென்றும், முத்தி முடிவென்றுங்கூறுவர். இதனை:— "சன்மார்க்கஞ் சகமார்க்கஞ் சற்புத்திரமார்க்கந் தாதாமார்க்கமென்று சங்கரனையடையும் - நன்மார்க்க நாலிவைதா ஞானயோக நற்கிரியை சரியையென நவிற்றுவதுஞ்செய்வர் - சன்மார்க்கமுத்திகள் சாலோக்கிய சாமீப்பிய சாரூப்பிய சாயுச்சியமென்று சதுர்விதமா - முன்மார்க்க ஞானத்தா லெய்துமுத்தி முடிவென்பர் மூன்றினுக்கு முத்திபதமென்பர்." எனவரும் சிவஞான சித்தியானுணர்க. வெஃகினோராவார், லோகதர்மிணிதீக்ஷைபெற்றுப் பதமுத்திகளை விரும்பிய புத்திகாமிகளும், சிவதர்மிணிதீக்ஷைபெற்றுப் பரமுத்தியை விரும்பிய முத்திகாமிகளுமாம். ஆலயநூற்றெட்டுள்ள என்றதனை, "அவற்றுணூற்றெட்டுமேலா மவற்றினுங் காமற்காய்ந்த - சிவச்சுடர்க்கினியவைப்பி னிருபதுசிறந்தமன்னு-மூவப்புறழமிர்தம் விண்ணோர்க் கூட்டியதிருமால் வைப்பி - னவைத்தொகையிரியநூறு நாலிரண்டதிகமாமால்" எனவருங் காஞ்சிப்புராணத்தானுமுணர்க. அந்நூற்றெட்டு சிவக்ஷேத்திரங்

களையும், காஞ்சிப்புராணம் இருபத்தெண்டளிப் படலத்துள் அவ்வம்மூர்த்தித் திருநாமங்களோடு விளங்கக் கூறியிருத்தலைக்காண்க. உலகுயிர்கள்பேறுதற் பொருட்டு நான்குவேதங்களையும் இருபத்தெட்டுச் சிவாகமங்களையும் அருளிச்செய்த பெருமானாகலான், 'ஐம்முகப்பரஞ்சுடர்' என்றார். ஐம்முகங்களாவன.-ஈசானம் - தற்புருடம் - அகோரம் - வாமம் - சத்தியோசாதம் என்பன. இவற்றின்வகையை முன்னர்க்காண்க (அஅ)

கச்சபா லயமே கம்பமே மயானங்கவின்கொள்கா ரோணமா காளம்
பச்சிமா லயநல் லநேகபங் கடம்பை பணாதர மணிச்சுரம் வராக
மெய்ச்சுர கரமுன் னிராமம்வீ ரட்டம் வேதநூ புரமுருத் திரர்கா
வச்சிர னகரம் பிரமமாற் பேறு மறைசையாஞ் சிவாலய மிருபான்.

(இ-ள்.) கச்சபாலயம், திருவேகம்பம், திருமயானம், அழகு பொருந்திய திருக்காயாரோகணம், மகாகாளேசம், திருமேற்றளி, அநேகபேசம், கடம்பை, பணாதரேசம், மணீசம், வராகேசம், மெய்ம்மைபொருந்திய சுரகரேசம், பரசுராமேசம், வீராட்டகாசம், வேதநூபுரம், உருத்திரர்கா, இந்திராலயம், சதுர்முகசங்கரம், திருமாற்பேறு, திருவோத்தூர் என்னுஞ் சிவாலயங்களிருபதாகும்.—எ-று.

திருமால் கூர்மாவதாரத்தில் சிவபெருமானைப்பூசித்து வேண்டிய வரங்களைப்பெற்ற காரணத்தால் விளங்குங் கச்சபாலயமும், உமாதேவியார் வேதவடிவமாகிய மாமரத்தடியில் சிவபெருமானைப் பூசித்துக் கம்பாநதியைக்கண்டு தழுவிக்கொள்ள அவ்வம்மையாரது முலைச்சுவடும் வளைச்சுவடும் பெற்றுச் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருவேகம்பமும், பிரமனிடத்து வரம்பெற்ற பண்டாசுரனாலுண்டாகிய துன்பத்தை நீக்கும்பொருட்டுச் சிவபெருமான் சர்வ ஆன்மகோடிகளினுங் கலந்துநின்ற அவ்வசுரனை யழிக்கத்திருவுள்ளங்கொண்டு அவ்வுயிர்களனைத்தையும் யாகாக்கினியிற் செலுத்தி யழித்தகாரணத்தால் விளங்குந் திருமயானமும், பிரளயவெள்ளத்திற் கஞ்சியடைந்த பிரமவிஷ்ணுக்களைச் சிவபெருமான் தமது திருத்தோள் மீதேற்றிவைத்திருந்து அவ்வெள்ளம் நீங்கியபின் அவர்களை யிறக்கியருள் செய்தகாரணத்தால் விளங்கும் திருக்காயாரோகணமும், திடவிரதனென்னு மரசன் தனது விடப்பிணி நீங்கச் சிவபெருமானைப்பூசித்து அந்நோயை நீக்கிக்கொண்ட காரணத்தால் விளங்கும் மகாகாளேசமும், திருமால் சிவசாரூபம் பெறவேண்டித் தவஞ்செய்து திருஞானசம்பந்தப்பிள்ளையாரது திருப்பதிகத்தினால் அச்சிவசாரூபம் பெற்ற மேன்மையால் விளங்குந் திருமேற்றளியும், ஸ்ரீ விநாயகப்பெருமான் கசமுகாசுரனைக்கொன்று அவனது கோட்டின்கண்ணுள்ள முத்துக்களால் சிவபெருமானைப்பூசித்த காரணத்தால் விளங்கும் அநேகபேசமும், குமாரக்கடவுள் சத்திவேல்பெறக்கருதிச் சிவபெருமானைப்பூசித்தகாரணத்தால் விளங்குங் கடம்பையும், ஆதிசேடன் வாயுவினாலிழந்த வலிபெறும் பொருட்டுச் சிவபெருமானைப் பூசித்துத் தனதாயிரம் பணாமுடிகளை அவ்வெம்பெருமான் திருமுடிமீது குடையாகக் கவித்துத் திருவருள்பெற்ற காரணத்தால் விளங்கும் பணாதரேசமும், வாசுகியென்னும் நாகராஜன் தன் சுடிகாரத்தினங்களால் சிவபெருமானைப் பூசித்து அஷ்ட நாகங்களுள் முதன்மையும், அவ்வெம்பெருமான் திருமார்பிலாரமுமாக விளங்கப் பேறுபெற்றகாரணத்தால் விளங்கும் மணீசமும், சிவபெருமானது திருவடியைக் காண்பலென்று சென்றதிருமாலாகிய வராகம் பூசித்துப் பேறுபெற்ற காரணத்தால் விளங்கும் வராகேசமும், தனது பார்வையினால் உயிர்களுக்குச் சுரநோய் விளைத்துவருத்திய சுரலோசனனென்னு மசுரனைச் சிவபெருமான் குபேரனைக்கொண்டழித்து, அக்குபேரனுக்குவேண்டிய வரங்களைக்கொடுத்தருளிய காரணத்தால் விளங்குஞ் சுரகரேசமும், பரசிராமன் தனதுதந்தையாகிய சமதக்கினி

முனிவரைக்கொன்ற கார்த்தவீரியார்ச்சுன னிமித்தம் க்ஷத்திரியர்களைக்கொல்லும்பொருட்டுச் சிவபெருமானைப் பூசித்துப் பரசு என்னுமாயுதம் பெற்றகாரணத்தால் விளங்கும் பரசிராமேசமும், எல்லாப் பொருள்களு மொடுங்கும் மகாப்பிரளய காலத்துச் சிவபெருமானொருவரேயின்று வீராட்டகாசத்தோடு திருநடனஞ்செய்தருளியகாரணத்தால் விளங்கும் வீராட்டகாசமும், வேதங்களைத் திருவடிச் சிலம்பாக வணிந்த சிவபெருமானைப் பிரமன் பூசித்து அவ்வேதங்களைக்கைவரப் பெற்றகாரணத்தால் விளங்கும் வேதநூபுரமும், பிரமனது சிருட்டிகாரணமாகச் சிவபெருமான் ஏகாதசருத்திரர்களைத் தந்தருளிய காரணத்தால் விளங்கும் உருத்திரர்காவும், இந்திரன் சிவபெருமானைப் பூசித்து இந்திரபதம் பெற்ற காரணத்தால் விளங்கும் இந்திராலயமும், பிரமன்தனது சிருட்டித்தொழில் மல்கும்பொருட்டுச் சிவபெருமானைப் பூசித்து அவர்கிருபையினால் தன்முகங்களில் வேதங்கள் தோன்றப்பெற்ற காரணத்தால் விளங்கும் சதுர்முகசங்காரமும், திருமால் ஆயிரந்தாமரைமலர்களால் சிவபெருமானைப் பூசித்தபொழுது அதிலொருமலர் குறையத்தனது கண்ணிடந்தப்பிச்சக்கரம் பெற்ற காரணத்தால் விளங்கும் திருமாற்பேறும், சிவபெருமான் அரிபிரமேந்திராதி தேவர்களுக்கும் முனிவர்களுக்குஞ் சந்தைகூட்டி வேதங்களை யோதுவித்த காரணத்தால் விளங்குந் திருமேற்றளியும் ஆகிய இருபது சிவக்ஷேத்திரங்களையுடையது, அக்காஞ்சிமாநகரமெனவறிக.

இதனை:—"கருணைகூர் திருவேகம்பங் கச்சபாலயங்காரோணம், பரவுமேற்றளியோடிந்திராலயம்பலுதரீசந், நரவுடுத்துயர்மணீச நான்முக சங்கரஞ்சீர், விரவியகூரகரீசமேசகுபரசிராமம்." "உருத்திரசுகர் மாகாளம் வராகமோத்தூர்மாற்பேறு, விரித்தசிரநேகபேசம் வேதநூபுரமயானங், கருத்தபு கடம்பை மன்னும் வீராட்டகாசமென்னத், தெரித்திடுமிவை நாலைந்துஞ் சிவபிரான் றளிகளாமால்." எனவருங்காஞ்சிப்புராணத்தானுமுணர்க. (அக)

கரிகிரி யட்ட புயந்திரு வெஃகாக் கருதுமூ ரகஞ்சகா ளாங்கஞ்
சுரர்புகழ் நிராகா ரந்நிலாத் திங்கட் டுண்டநற் பாடக மீனைய
வரிதிரு முற்ற மெட்டவை யன்றி யறுபதி னாயிர நிலயம்
பரசிவன் சத்தி குமரர்மால் புறத்தோர் பலரும்வீற் றிருப்பவப் பதியே.

(இ-ள்.) அத்திகிரி, அட்டபுயம், திருவெஃகா, (யாவருஞ்) சிந்திக்கின்ற திருவூரகம், சகாளாங்கம், தேவர்களால் புகழத்தக்க நிராகாரம், நிலாத்திங்கட்டுண்டம், நல்லதிருப்பாடகம் என்னும் விஷ்ணுவாலயங்க ளெட்டாகும்; அவை யன்றியும், அறுபதினாயிர வாலயங்கள் சிவபெருமான், சத்தி, அவர்கள் திருக்குமாரர்கள், திருமால், மற்றைப் புறத்தெய்வங்களாகிய பலரும் வீற்றிருக்கப்பெறுவது அக்காஞ்சிமாநகரம்.

இந்திரனது வெள்ளையானை திருமாலைப்பூசித்து வரம்பெற்றுத்தனதொரு அமிசத்தால் அத்திருமாலைத் தாங்கப்பெற்ற காரணத்தால் விளங்கும் அத்திகிரியும், திருப்பாற்கடலிற்றோன்றிய திருமகளைத்திருமால் எட்டுப்புயங்களோடிருந்து திருமணம்புரிந்தமேன்மையால் விளங்கும் அட்டபுயமும், பிரமன்செய்த வேள்வியை யழித்தற்பொருட்டுவந்த வேகவதியைத் தடுக்கவேண்டித் திருமால் பள்ளிக்கொண்ட மேன்மையால் விளங்கும் திருவெஃகாவும், மாவலிச்சக்கிரவர்த்தியினிடத்து மூன்றடி யாசப்பெற்ற மண்ணையளந்த நின்றகோலத்தோடு திருமால் எழுந்தருளிய மேன்மையால் விளங்குந் திருவூரகமும், கிருஷ்ணசன்மா வென்னும் வேதியன் தன்னுடன் சபதஞ்சூறிய வேதியர்கள் பொருட்டுக் கம்பாநதிக்கரையில் யாவருங்காணப் பாலகிருஷ்ணனையழைப்பித்துகாட்ட, திருமால் அக்கிருஷ்ணகோலத்தோடு எழுந்தருளு

ங்காரணத்தால் விளங்குஞ் சுகாளாங்கமும், திருமால் சிவபெருமானைப் பூசித்துத்த னது கரியவண்ணநீங்கிப் பவளவண்ணம்பெற்று எழுந்தருளியமேன்மையோடு விள ங்கும் நிராகாரமும், திருப்பாற் கடலிற்றோன்றிய விடவேகத்தைத் தணித்தற்பொரு ட்டுத் திருமால் சிவபெருமானது திருச்சடையிலுள்ள சந்திரகலை தன்மேற்படும்வண் ணம் அவ்வெம்பெருமானைப்பூசித்துநின்ற மேன்மையோடு விளங்கும் நிலாத்திங்கட் டுண்டமும், திருமால் தனுர்வேதத்தையியற்றி அத்தொழிற்றலைவர்களுக்கருளி யெழுந் தருளிய மேன்மையால் விளங்கும் திருப்பாடகமும் ஆகிய எட்டு விஷ்ணுஸ்தானங் களையுடையது, அக்காஞ்சிமா நகரமெனவறிக.

இதனை :—கடைமலை யோங்கல் வெஃகா நகைநிலாத் துண்ட மேன்மை - யடைநிரா கார மட்ட புயஞ்சகா ளாங்கந் தீமை - யிடையுழ ரகமேர் தங்கும் பாடக மிவையோ டெட்டுங் - குடையெனப் பறம்பு தாங்குங் குரிசிலுக் கினிய தானம்."— என வருங் காஞ்சிப்புராணத்தானு முணர்க. குமரர் என்றது, விநாயகக்கடவுள் குமா ரக்கடவுள் வயிரவர் சாத்தா முதலியோர்களை. புறத்தோர் என்றது அருகன் புத்தன் முதலியோர்களை. 'இவையன்றி யறுபதிநாயிரநிலயம் பரசிவன் சத்தி குமரர்மால் புற த்தோர் பலரும்வீற் றிருப்பதப் பதியே' என்பதனை—"செப்ப ரும்புகழ் பூண்ட மற்றவற்றினுட் சினகர முளவான - முப்ப திற்றுமூன் றிரட்டிய பத்துநூ றெனப்படு முறைசான்ற - வப்பெ ருந்தகு தளிகளுட் பணிவளை யணங்குபூண் முலைதோய்ந்த- துப்பு வார்சடை யண்ணலார் தளிகளெட் டிரட்டியா யிரஞ்சூழல்." "காமக் கோட் டத்தி னிருந்தறம் புரிந்தருள் காமநோக் குடைமென்பூந் - தாமப்பூங்குழ லம்பிகை க்குரியநற் சத்திகளமர்கின்ற - வேமக்கோயில்களைந்துறழாயிர மெரிதவழ் சுடராழி- நாமத்திண்படை நாயகனிருக்கை மூந்நான்குபத் துறழ்நூறே." "உலகெலாந்தரு நான்முகற் கொருபதினாயிரத்தெழுநூறு - விலகுமுக்குடைவானவற் கொன்பதி னா யிரத்தெழுநூற்று - றலைமைசால்புகழ்ப்புத்தனுக்கெட்டுறை ழாயிரஞ்சகம்போற்றக் - குலவுகொற்றவை வயிரவன் சாத்தனுக் கொவ்வொராயிரங் கோயில்." "வயங்கு நெட்டிலை வேற்படைப் பண்ணவன் வாணிலாப் பிறைக்கோட்டா - னுயங்க வெம் பகை முடித்தரு ளேங்கரத் தொருமுத லுயர்வானத் - தியங்கு செங்கதிரிருக்கைகள் வேறுவேறைந்து நூறெனச்சொல்வர் - தயங்கு மேதகை யனந்தன்வாழ் மந்திரஞ் சாற்றிலொன் றெழுநூறே." என வருங் காஞ்சிப்புராணத்தா னுணர்க. (௯0)

ஒன்றுதீ விளக்க மீரிட மொருமூன் றுற்றிடு தெற்றிநான் கரணை
நின்றிடு தருவைந் தாறுபுள் ளேழு நெடுநதி யெண்பொது வொன்பான்
மன்றலம் பொய்கை வியன்சிலை யொருபான் மன்றவை பத்தின்மே லொன்று
நின்றமர்ந் தொழுகு நெறியிலற் புதமாய் நிகரிலா துறையுமந் நகரம்.

(இ-ள்.) ஒரு தூண்டாவிளக்கும், இரண்டு இடமும், மூன்று தெற்றியும், நான்கு எல்லையும், நிலைத்திருக்கின்ற ஐந்து தருக்களும், ஆறு பறவைகளும், ஏழு நதிகளும்,எட்டுப்பொதுக்களும், மணம்பொருந்திய ஒன்பதுதடாகங்களும், பெரியப த்துக்கற்களும், பதினொருசபைகளும் நிலைபெற்றோங்கி விளங்குகின்ற அற்புதமாக ஒப்பற்றுப் பொருந்தப்பெற்றுள்ளது, அக்காஞ்சிமாநகரம்.—எ-று.

ஒன்று முதல் பதினொன்றீறாகிய விம்மிதக்களனைத்தும் எக்காலத்து மாறா மல் நிலைபெற்று விளங்குதலின், 'நின்றமர்ந்துறையு நெறியிலற்புதமாய் நிகரிலாது றையு மந்நகரம்' என்று கூறினார். இதனை.—"மற்று மூன்றிடம் வேதிகை வயல்களு ற் றவிசு - பொற்ற வைந்தருத் தடமறு புட்களேழ் பொதியில்-பற்றுமெண்பொய்கை யொன்பது சிலைபொழில் பத்தாங்-கொற்ற மன்றுபத் தோடொரு கூவலுங் குலவும்." எனவருங் காஞ்சிப்புராணத்தானு முணர்க. (௯௧)

சிறந்திடு மதியு மிரவியு மாழ்கச் செகமெலாந் தனதொளி பரப்பி, யறம்புரி காமக் கோட்டமந் திரத்து ளெம்மைவாழ் பிலத்தினு ளழியா, துறைந்திடு தூண்டா விளக்கமொன் றுதித்த வுயிர்த்தொகை யிறந்திடா விடமொன், றிறந்திடு முயிர்கள் பிறந்திடா விடமொன் றெம்பிரா னிருந்தவி ரிடமே.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய சந்திர சூரியர்கள் (தம்மொளி) மழுங்கும்படி யுலகமுழுவதுந் தனது பேரொளியை வீசி, (முப்பத்திரண்டு)தருமங்களைச் செய்தருளிய காமக்கோட்டமென்னு மாலயத்தில் ஸ்ரீகாமாக்ஷியம்மையா ரெழுந்தருளியிருக்கின்ற பிலத்துவாரத்தில் கெடாதிருக்கின்ற தூண்டாவிளக்கம் ஒன்று. பிறந்த உயிர்க்கூட்டங்கள் இறவாத இடம் ஒன்றும், இறந்த உயிர்கள் பிறவாத இடம் ஒன்றும் ஆக எமது சிவபெருமான் வீற்றிருந்தருளும் இரண்டிடங்களாம்.—எ-று.

தண்கதிர் வீசுஞ் சந்திரனும் வெங்கதிர் வீசுஞ் சூரியனும் பேரொளியினராகலின், 'சிறந்திடுமதியு மிரவியும்' என்றார். மந்திரம்=கோயில். 'உதித்த வுயிர்த்தொகை யிறந்திடா விடமொன் - றிறந்திடு முயிர்கள் பிறந்திடா விடமொன்று' என்பன, இறவாத்தானம் பிறவாத்தான மென்னுந் தேவாலயங்களை. (கஉ)

தோற்றுயிர்க் குணவு நல்குமோர் தெற்றி சொற்றவை யுதவுமோர் தெற்றி
தேற்றமொன் மூகர்க் களிக்குமோர் தெற்றி தெற்றிமூன் றிவைநகரெல்லை
யீற்றினிற் கீழ்பா லளக்கருந் தென்பா லியற்பெரும் பெண்ணைநன் னதியு
மேற்றிசைப் பவள சயிலமும் வடபால் வேங்கட வெற்புநான் கரணே.

(இ-ள்.) தோன்றுகின்ற உயிர்களுக்கு உணவைத் தருகின்ற ஒருதெற்றியும், கேட்ட பொருள்களைத் தருகின்ற ஒரு தெற்றியும், ஊமைகளுக்குத் தெளிவான சொற்களைத்தருகின்ற ஒரு தெற்றியும் ஆக மூன்று தெற்றிகளாம். அந்நகரத்தின் கீழ்க்கோடியில் கடலும், தென்கோடியில் அழகிய பெரிய பெண்ணையாறும், மேற்றிசைக்கோடியில் பவளமலையும்,வடதிசைக்கோடியில் வேங்கடமலையும் ஆகஎல்லைகள் நான்காகும்.—எ-று.

'தெற்றிமூன்றிவைநகரெல்லை' என்பதனை.—"ஊங்க ணைந்தவர்க் கமுதுநீருதவிடு மொன்று - பாங்கின் வேட்டன யாவையும் பயந்திடு மொன்று - மூங்கை பேசவும் பேசினேன் மூங்கைமை யுறவும் - ஆங்க ளிப்பதொன் றூகமுத் தெற்றியு முளவால்." எனவருங் காஞ்சிப்புராணத்தானுமுணர்க. தொண்டைநாட்டெல்லையே காஞ்சிமாநகரத்து அரணெல்லையாகக் கூறுதலின், நகரெல்லை - யீற்றினிற் கீழ்பா லளக்கருந் தென்பா லியற்பெரும் பெண்ணைநன் னதியு-மேற்றிசைப் பவள சைலமும் வடபால்வேங்கட வெற்புநான் கரணே' என்றார். இதனை—"மேற்குப் பவளமலை வேங்கடநேர் வடக்கா - மார்க்கு மூவரி யணிகிழக்குப்—பார்க்குளுயர் - தெற்குப் பிணாகி திகழிருப தின்காதம் - நற்றொண்டை நாடெனவே நாட்டு." எனவரும் வெண்பாவானு முணர்க. (கங)

மறைகளி னுருவாய்ப் பொன்மலர் தனிமா மலரொடு காயிலா தென்றுஞ்
செறிதரு பலங்க ளுதவிநாங் கினர்க்குச் சித்திகள் வழங்குறு மெகினம்
வெறிமலர் பலவு மலர்ந்திடு மதூகம் விண்ணினை நோக்குமோ ரத்தி
நறுநிழல் பிரியா திருந்ததோர் காஞ்சி நன்னகர் தன்னிலைந் தருவே.

(இ-ள்.) வேதவடிவமாய்ப் பொன்மலர் மலருகின்ற ஒப்பற்ற மாமரமும், மலருங்காயுமில்லாமல் எந்நாளும் நெருங்கிய பழங்களைக்கொடுத்து அவற்றையுண்டவர்களுக்குச் சித்திகளைக் கொடுக்கின்ற புளிமாமரமும், நறுமணங் கமழும் பல்வகை மலர்கள் மலர்கின்ற இருப்பைமரமும், ஆகாயத்தைநோக்கி யுயர்ந்தோங்குகின்ற ஒரு

அத்திமரமும், நல்லநிழல் தன்னடிவிட்டுப் பிரியாதிருக்கிற ஒரு காஞ்சிமரமும் ஆகச் சிறந்த அக்காஞ்சிமாநகரத்தில் ஐந்துமரங்களாம்.—எ-று.

'நன்னகர் தன்னிலைந்தரு' என்பதனை :—ஒவாமை யமுதொழுக்கும் பொலம்பூச் சூதந் தன்னிழலைப் பிறர்க்குதவாக் காஞ்சியொன்று - பூவாது காயாது கனிக ணல்கும் பூம்புளிபல் வகைப்போதுந் தரும தாகம் - தாவாத செம்பொன்மல ரத்தியென்றுச் சாற்றரிய தெய்வதமாத் தருக்களைந்துந் - தேவாதி தேவரினித மருங்காஞ்சித் திருநகரினிறும்பூது திகழவோங்கும்." எனவருங்காஞ்சிப்புராணத்தானுமுணர்க.

உம்பரூன் பகிருஞ் சாதக மணிக ளுதவிடு மன்னநூ லுணாத்துக்
கொம்புறு கிள்ளை யலகுசொல் லாந்தை குறைபெறிற் கூவுறுக் கோழி
யிம்பரிற் பாவந் துடைத்திடு நேமி யிவையறு புள்ளெழு நதிதான்
கம்பைநற் பம்மை மஞ்சனீர் பிச்சி கலிச்சிபொன் மண்ணிவெஃ காவே.

(இ-ள்.) தேவாமுதத்தைக் கொடுக்கின்ற சாதகப்பறவையும், நவரத்தினங்களைக் கொடுக்கின்ற அன்னப்பறவையும், சகல சாஸ்திரங்களையுணர்த்து மரக்கொம்பில் வசிக்கின்ற கிளியும், கணிதமுணர்க்கும் ஆந்தையும், குறைவு வரும்பொழுது கூவாதகோழியும், இவ்விடத்தில் பாவத்தைநீக்குகின்ற சக்கரவாகப்பறவையும், ஆக இவை ஆறுபறவைகளாம். கம்பையும், நல்ல பம்பையும், மஞ்சனீரும், பிச்சியும், கலிச்சியும், பாலியும், வேகவதியும் ஆக வழுநதிகளாம்.—எ-று.

உம்பரூண்=தேவாமிர்தம். மணிகள் என்றது, நவரத்தினங்களை. பாவந்தீமையைப் பயத்தலான், 'இம்பரிற்பாவந் துடைத்திடு நேமி' என்றார். எழுநதி என்பதனை:—"பம்பை கம்பை புண்ணியநீர் மஞ்சணதி வேகவதிபாலிசேயா-றென்பனவே மூலகுமிடு மேழ்மாலை யென வொழுகு மெய்துவோரைச் - செம்பதுமக் கரமெடுத்து வினாயநகர் விளிப்பதுபோற் றெங்கு நீளும் - வம்பவிழ்பூஞ் சோலைகளுண் மழைமறைத்த கதிர்போல வயங்கு மூதூர்" எனவருங் காஞ்சிப்புராணத்தானு முணர்க.

குரைபுனல் வேட்டோர்க் குதவியே திரியுங் கூவலம் பொதுக்குறு முயல்போய்க், கரிதொடர் பொதுவே ழிசையுறு பொதுமால் கண்டுயின் றிடுபொது வேறோ, ருருவுசெய் பொதுவோர் புற்றின்மா முழவ மொலித்திடும் பொதுத்திசை மயக்கம், புரிதரு பொதுவென் னம்மைநோற் றருளும் பொற்பொது விவைகளெண் பொதுவே.

(இ-ள்.) ஒலிக்கின்ற நீரை விரும்பினவர்களுக்குக் கொடுத்துத்திரிகின்ற கிணற்றையுடைய அழகியபொதுவும், சிறிய முயலானதுசென்று யானையைவெருட்டுகின்ற பொதுவும், சப்த சுரங்களையுடைய பொதுவும், திருமால் பள்ளிகொண்டிருக்கும் பொதுவும் (ஒரு உருவத்தை) வேறொரு உருவமாகச் செய்கின்றபொதுவும், ஒரு புற்றின்கண் பெரிய மத்தளமொலிக்கின்றபொதுவும், திசைமயக்கத்தைச்செய்கின்ற பொதுவும், எனதன்னையாகிய ஸ்ரீகாமாக்ஷியம்மையார் தவஞ்செய்தருளுகின்ற அழகிய பொதுவும் ஆக இவைகள் எட்டுப் பொதுக்களாம்.—எ-று.

குரைபுனல் - வினைத்தொகை. கரி=கரத்தையுடையது ; யானை. எழிசை - சப்த சுரங்கள். இவற்றின் வகையை முன்னர்க்காண்க. (கக)

முன்னுறு பிணிகண் மாற்றிடும் பொய்கை முதல்வர்கண் முடிவுறுங் காலைச், செந்நிற மாகும் பொய்கைமுக் காலந் தெரித்திடும் பொய்கைகண் ணுதலோன், றன்னடி காட்டும் பொய்கைவேண் டியது தந்திடும் பொய்கைமெய்ஞ் ஞானம், பொன்னிறஞ் செல்வம் வசிகரந் தருநாற் பொய்கையோ டொன்பதாம் பொய்கை.

(இ-ள்.) முன்னே யடைந்துள்ள வியாதிகளை நீக்குகின்ற பொய்கையும், அரசர்களிறக்குங்காலத்துச் செந்நிறமடைகின்ற பொய்கையும், முக்காலங்களையுந் தெரிவிக்கின்ற பொய்கையும், சிவபெருமானது திருவடிகளைக்காட்டுகின்ற பொய்கையும், (அவரவர்கள்) விரும்பிய பொருள்களைக் கொடுக்கின்ற பொய்கையும், மெய்ஞ்ஞானமும், பொன்னிறமும், செல்வங்களும் வசீகரமுமாகிய இந்நான்கையுந் தருகின்ற நான்குபொய்கைகளுடன் ஒன்பது பொய்கைகளாம்.—எ-று.

முதல்வர்கள் என்றது, அரசர்களை. "மூழ்குநர்க்குப் பொன்னுருவ மளிக்குமொன்று முழுமணியோர் தருமொன்று விண்ணோர் கோமான் - வாழ்வளிக்கு மொன்று மனக்கினிய வெல்லாந் தருமொன்று வேண்டியதை வழங்குமொன்று - வீழ்தசைத்தா மெய்ஞ்ஞான மளிக்கு மொன்று வீடுதவு மொன்றுவினைப் பிணிநோய் முற்றும் - பாழ்படுத்து மொன்றென்ன மலங்கண் மாற்றும் பனிமலர்ப்பூம் பொய்கையிருநான்கு மேவும்." என்றார் காஞ்சிப்புராணத்தும். (கஎ)

விடந்தனை யகற்று மொருகலா ருயிர்கள் மெய்ப்பிணி மாற்றிடு மொருக
லடைந்தவ ரெல்லா மிமையவ ராக வளித்திடு மொருகல்வெம் படையாற்
றடிந்திட வேறுய்த் துனிபடு முடலஞ் சந்துசெய் வித்திடு மொருக
னெடும்படை வரினு மழியிரிந் தோட நிலைபெறீஇ நிற்குமாங் கொருகல்.

(இ-ள்.) விஷத்தை நீக்குகின்ற ஒரு கல்லும், அழகிய ஆன்மாக்களின் உடம்பின்கண்ணுள்ள வியாதியை நீக்குகின்ற ஒரு கல்லும், தன்னிடத்து வந்தவர்களனைவரையும் தேவர்களாகச்செய்கிற ஒருகல்லும், கொடிய ஆயுதங்களால் வெட்டஅதனால் துண்டாக வேறுபட்ட சரீரத்தைக் கூட்டுவிக்கின்ற ஒருகல்லும், பெருஞ்சேனைகள் எதிர்த்துவந்தாலும் அவை முரிந்தோடும் வண்ணம் அங்கு நிலைபெற்று நிற்கின்ற ஒருகல்லும்.—எ-று.

உயிர்களுக்கூறுவிளைக்குங் கொடுமை யுடையனவாகலின், 'வெம்படை' என்று கூறினார். 'நெடும்படை' என்றமையால், பிரமாஸ்திரம் நாராயணாஸ்திரமுதலியவைகளுங் கொள்ளக் கிடந்தமையுணர்க. பெறீஇ-சொல்லிசை யளபெடை. இச்செய்யுளும் அடுத்த செய்யுளும் ஒரு தொடரா யிருத்தலின் குளகமெனப்படும். இதனை :—"குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்னுந்தண்டியலங்காரத்தானுணர்க.

துஞ்சினர் தம்மை யெழுப்புமாங் கொருக றொல்வழக் கறுத்திடு மொருக
லெஞ்சலி னிதியங் கெடுத்துளோர் வினவி னீதெனக் காட்டிடு மொருகல்
விஞ்சிய வினைக டீர்த்திடு மொருகல் வேந்தருக் கரசிய லுதவித
றஞ்சம தாக நின்றிடு மொருக றக்ககல் லையிரண் டவையே.

(இ-ள்.) இறந்தவர்களை யெழுப்புகின்ற ஒருகல்லும், பழமையாகிய வழக்கைத்தீர்த்துக் கொடுக்கின்ற ஒருகல்லும், குறைவற்ற பெருந்திரவியத்தை யிழந்தவர்கள் அடைந்துகேட்டால் இதுவே என்று காட்டுகின்ற ஒருகல்லும், மிகுதியாகவுள்ள தீவினைகளை நீக்குகின்ற ஒருகல்லும், அரசர்கட்கு அரசாட்சியைக் கொடுத்து அவர்களுக்கு ஆதரவாகநிற்கின்ற ஒருகல்லும் ஆகத் தகுதியாகியகற்கள் பத்தாகும்.—எ-று.

தீராவழக்கென்பார், 'தொல்வழக்கு' என்றும், பெரும்பொரு ளென்பார், 'எஞ்சலினிதியம்' என்றும், நீங்காவினை யென்பார், 'விஞ்சிய வினைகள்' என்றும், அரசர்கள் செய்யு மரசாட்சிக்குற்ற துணையாயிருக்கு மென்பார் 'அரசியலுதவித்தஞ்சமதாக நின்றிடும்' என்றுங் கூறினார், இதனை :—தீண்டினரைத் தேவாக்கு மொருகல் பாம்பின் கடிவிடந்தீர்த் திடுமொருகல் சித்தியெல்லா - மூண்டளிக்கு மொருகலுயி

ருதவுமோர்கல் வழக்கனைத்து நவொய்நின் றறுக்கு மோர்கல் - மூண்டபிணித் தழும் புறுபுண் மாற்று மோர்கன் மொய்யொளி மெய்த் தூணியுறுப்பைப் பொருத்துமோர்க- லீண்டியதீ வினையிரிக்கு மோர்கல் ஞானந் தருமொருக லெனச் சிலைக ளொருப தோங்கும்.'' எனவருங் காஞ்சிப்புராணத்தானு முணர்க. (கக)

அயன்மனைச் சென்றோர் கணவரைப் பிழைத்தோ ரடிகளை யிகழ்ந்து ளோ ரனுகிற், றுயருறு மூகை யாக்குமோர் மன்றஞ் சோரர்முன் சுழலு மோர் மன்றம், வியனிறம் பலவாத் தோன்றுமோர் மன்றம் விஞ்சைகள் வ ழங்குமோர் மன்ற, மயல்புரி கின்ற பொழுதொடு திசையின் மயக்கறத் தெ ளிக்குமோர் மன்றம்.

(இ-ள்.) அயல் வீட்டிற்சென்றவர்களும், தங்கள் நாயகர்களுக்குப் பிழை செய்தவர்களும், ஆசாரியர்களைப்பழித்துக் கூறியவர்களும் வந்தடைந்தால் துன்பத் தைச்செய்யு மூமையாகச் செய்கின்ற ஒரு மன்றும், திருடர்களுக்கு முன்னே சுழலு கின்ற ஒரு மன்றும், விசாலமாகிய பல நிறங்களோடு விளங்குகின்ற ஒரு மன்றும், வித்தைகளைத்தருகின்ற ஒரு மன்றும், மயக்கத்தைத் தருகின்ற பொழுதுடன் திசை க்கமும் நீங்கத்தெளிவிக்கின்ற ஒரு மன்றும்.—எ-று.

பிறவிமூகரா யுள்ளோர்க்கு, இடையிலுண்டா மூக ரடையுந் துன்பத்தைப் போலப் பெருந்துன்பம் விளையாமையின், 'துயருறு மூகை' என்று கூறினர்.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (௪00)

நாகரு ருப்க்கும் பிலத்ததோர் மன்ற நவமணி யுதவுமோர் மன்ற
மாகர்பே ரமிர்த மிருக்குமோர் மன்றம் வடிவினை மறைப்பதோர் மன்ற
மேகநின் றுறுது பொழியுமோர் மன்றம் வியன்பகல் கங்குலாக் கங்கு
லாகிய பகலா விருப்பதோர் மன்ற மையிரண் டொன்றுமன் றவையே.

(இ-ள்.) நாகலோகத்திற் செலுத்துகின்ற பிலத்துவாரத்தையுடைய ஒரு மன்றும், நவரத்தினங்களைத் தருகின்ற ஒரு மன்றும், தேவர்களது பெரிய அமுதமா னது பொருந்தியிருக்கின்ற ஒரு மன்றும், (அடைந்தவர்களது) உருவத்தை மறைக் கின்ற ஒரு மன்றும், மேகங்கள்பொருந்தி இடைவிடாமல் மழையைப் பொழிகின்ற ஒரு மன்றும், மிக்க பகல் இரவாகவும், இரவு பகலாகவுமிருக்கின்ற ஒரு மன்றும் ஆக அவை பதினொருமன்றுகளாம்.—எ-று.

பாற்கடலிற் கடைந்தெடுக்கப்பட்ட அருமைதோன்ற, 'மாகர்பேரமிர்தம்' என்று கூறினர். இம்மன்றின் விம்மிதங்களை :—"சொல்லருமா பாவியுறின் மூங்கை யாக்குஞ் சோரர்களை மருளுறுத்துங் கல்வி தேற்றும் - பல்வகைய வடிவுதவுஞ் சாவா மேன்மை பாலிக்கும் பாதலஞ்சேர் பிலத்தைக் காட்டும் - வல்லவர்க்குந் திசைமயக் கும் பொன்மாணிக்க மழைபெய்யும் பகலிரவு மாறக் காட்டுஞ் - செல்லுநரைப் பிறர் காணு வியப்புஞ் செய்யு மிவைமன்ற மொருபதெனத் திகழு மாலோ." எனவருங் காஞ்சிப்புராணத்தானு முணர்க. (௪0௧)

ஈங்கிவை யன்றிச் சிலைகளுந் தருவு மிடங்களுங் கூவலு நதியும்
பாங்குறு குளனுந் தீர்த்தமும் பிலமும் பழனமுஞ் சோலையும் பிறவு
மாங்கவை யனந்த கோடியுண் டோரோன் றளவிலற் புதத்தன வவற்றைப்
பூங்கம லத்தோன் சுருக்கற விரித்துப் புகலினு முலப்புற வற்றோ.

(இ-ள்.) இக்காஞ்சிமாநகரத்தில் இவ்விம்மிதங்களேயன்றி, கற்களும், விரு க்ஷங்களும், இடங்களும், கிணறுகளும், நதிகளும், செவ்வியகுளங்களும், தீர்த்தங்க

ளும், பிலத்துவாரங்களும், வயல்களும், சோலைகளும், மற்றவைகளுமாகிய இவைகள்
அநேககோடியுள்ளன. அவை ஒவ்வொன்றும் அளவற்ற அற்புதத்தையுடையன. அவ்
வற்புதங்களைப் பொலிவினையுடைய கமலாசனனாகிய பிரமன் நன்றாகவிரித்துச் சொ
ல்லினாலும் முடிவுபெறுமோ?—எ-று.

'ஈங்கிவையன்றிச் சிலைகளுந் தருவு மிடங்களுங் கூவலு நதியும்-பாங்குறு
குளனுந் தீர்த்தமும் பலமும் பழனமுஞ் சோலையும் பிறவும்' என்பதனை :—"ஒற்றை
மறை - மாவு மிருசுடரும் வான்விலங்கு மொண்கோட்டத் - தேவியமை தீர்த்தங்க
ளோரிரண்டு - மேவினர்க்குப் - பல்பவத்துத் தாதையரைத் தாயரைப்பல் கேளிரை
யில் - வொல்பவத்துக் காட்டுமிட மோர்மூன்றும் - வெல்பனுவல் - வாக்கியிழி
மூகையென மூகைமொழி வாக்கியென - வாக்குவது நீரமுது மார்த்துவதுந் - தேக்
கெறிய - வேட்டன யாவும் விளைப்பதுவு மென்னவிரு-ளோட்டுமணித் தெற்றியொரு
மூன்று - மீட்டுழவொன்- றின்றி விளைவிப்பதுவித் திட்டஞான் றேவிளைவு - துன்று
வது சொய்யுந் தொறுமீள - நன்று - விளைவதென மும்மை வியனுலகும் போற்றும் -
வளமலிந்த செய்வயன் மூன்று - மொளிருமென் றாழ் -வேதனரியரனை விண்ணோர்
தெழுத்தெரிக்கு - மாதிமடங்க லணைநான்கு - மாதரமிழ் - தூற்றுபொலம் பூஞ்சுத
மொண்ணிழல்சா யாக்காஞ்சி - தோற்றுதுயில் பூவில் சுவைப்புளிபல் - வேற்றலரும்-
பூக்கு மிருப்பைமலர் பொன்னத்தி யென்ற விண்ணைத் - தாக்குங் கடவுட் டருவைந்
தாங் - தேக்கமல - மெல்லிற் பகற்குமுத மேய்ந்தலர்வ தோர்நாளத் - தல்லிக்கமலத்
தலர்மூன்று -புல்லுவது - வானர மாக்குவது வண்மை தருவதொன்றார்க் - கூனமுய்
ப்ப தாந்தடங்க ளோரைந்தும் - வானமழை - காலமன்றிப் பெய்யக் கரைமஞ்ஞை
வேட்ட வெலாஞ் - சாலவரு ணேமிமறை சாற்றுகிளி - நூலிசைவல் - பூவை முழுது
ணர்க போதங் கணித்தாந்தை - பாவு புகழ்ப்பறவை யோராறுந் - தேவர்மொழி- கே
ட்ப வரகர்மொழி கேட்ப விண்ணூர் காணவிழு - தேற்பநின்றித் தீப மெரியமுயற்-
கார்ப்பொடிப - மங்கத் திசைமயக்க மல்கவொலித் தந்துமிகள் - பொங்கத்திகழ்ந்த
பொதுவேழுந் - தங்குபிணி - சிப்ப மனக்கினிய சேர்ப்ப விழைந்தவெலாம் - யாப்ப
மணி யெரிசைப்ப வேமவுருக் - கோப்பப் - புரவலன்வாழ் வுய்க்கமெய்ஞ்ஞா னம்
புணர்த்த வீடு - தரவமைந்த தண்பொய்கை யெட்டும் - வரவிமையோ - ராக்கவிடந்
தீர்க்கசித்தி யார்த்தவுயிர் நல்கவழக் - கூக்கி யறுக்க வுறுபிணிபுண்—போக்கவுடல்-
பட்ட துணிபொருத்தப் பாற்றவினை மெய்ஞ்ஞான - மொட்ட வமைந்தசிலை யொன்
பது-மட்டு-மிரசதம்பொ னாரமில கிந்திர நீலங்-குருவிந்தங் கோதில் வயிரம்-புருடரா-
கங்கலுழப் பச்சை கதிர்த்தவயி ரேியமென் - பொங்குமழை நல்குபொழி லொன்ப
துங் - தங்கிற் - றிசைமயக்கக் கல்விநலந் தேற்றமருள் சோரர்க் - கிசைவிப்பப் பல்வ
டிவு மேய்ப்ப - வசைவினைஞர் - மூங்கையுறப் பாதலத்தின் மூற்றுபிலங் காட்ட வுற்
றோர் - தாங்கள்பிறர் காணாத் தகுதிபெற - வோங்கொளிப்பொன் - மாணிக்க மாரி
பொழியவரஞ் சாவாமை - பேணிக் கொடுக்கப் பிறங்குபக - லேணிரவு - மாறுபெ
றக் காட்ட வமைந்து வயங்கியிடர்க் - கூறுசெயு மன்ற மொருபதும் - பாறயிர்நெய் -
தேன்கருப்பஞ் சாறு திகழ்ந்தனநன் முத்திநெறி-வான்கதிமற் றேனையுல கத்துவழி-
தான்கருதக்-காட்டுவன சாயைபிணிப் பக்கலந்தோர் தாமயரார்-மீட்சியுற வித்தின்றி
மென்பயிர்க-ளீட்ட-விளையந்தநறு நீரினவென் றெவ்வுலகும் போற்ற-வுயர்ந்தமணிக்
கூவல்பதி னொன்றும் - நயந்து தன்பா - லிட்டவெட்கு நெய்யொருபா லீயுந் தனிச்
செக்குந்-தொட்டனபொன் னாக்குஞ் சுடர்ச்சிலையு - முட்டும்-வினைப்பயனைத் தாமே
விளைக்குமொரு கல்லுந்-தனைப்பொருவுங் கற்பாவை தானு - மெனைத்துமரு - டாவா

வயிரவனூர் தாங்குநட னச்சிலம்பார்ப் - போவாது சேட்கு மொலியிடமும்-பாவாணை-ரொண்ணித் தாரவின்று மீண்டுபல விம்மிதமும்''—என வருங் கச்சியானந்த ருத்திரேசர் வண்டுவிடுதூதா லுணர்க. ஆங்கவை யனந்த கோடியுண்டு' என்பதனை :— ''இன்னனவா மதிசயங்கண் மற்றுமுள்ள வெல்லையிலை யவை முழுது மறிவாரியாரோ - மூன்றுயுகத்தி னெல்லார்க்குங் காட்சியெய்து மூண்டகொடுங் கலியுகத்திற்படிலும் வாழ்க்கை - மன்னினோர் சிலர்க்கன்றித் தோன்றா முத்தி மருவினர்க்கு மேலுலகின் வைத்தவண்ண - மன்னமலி வயற்காஞ்சி வரைப்பின் வாழ்வா ரகங்களிப்பக் கண்ணுதலா ரமைத்தவாகும்'' எனவருங் காஞ்சிப்புராணத்தானு முணர்க. (கoஉ)

தோட்டலர் வனசத் திசைமுகன் முன்னஞ் சொற்றனன் வனடி வணங்கிக்
கேட்டருள் சனகன் வியாதனுக் குரைப்பக் கேடில்சீர் வியாதனங் குணர்ந்து
மாட்டுறு சூதன் றனக்கியம் புதலு மற்றவன் முனிவரர்க் கிசைத்த
பாட்டினிலடங்காக்காஞ்சியின்பெருமைபகர்ந்திடத்தமியனுக்கெளிதோ.

(இ-ள்.) இதழ்களலர்ந்த தாமரைமலரிலிருக்கின்ற நான்குமுகங்களையுடைய பிரமன் முன்னாளில்சொல்ல, அப்பிரமனது பாதங்களைவணங்கிக் கேட்டருளிய சனகமுனிவர் வியாசமுனிவருக்குச் சொல்ல, அழிவற்ற சிறப்பினையுடைய அவ் வியாசமுனிவர் அங்கறிந்து அருகிலிருந்த சூதமுனிவருக்குச்சொல்லவும் அச்சூத முனிவர் முனிசிரேஷ்டர்களுக்குச்சொல்லிய செய்யுளிலடங்காத காஞ்சிமாநகரத் தின்மேன்மையை அடியேன் சொல்லுதற்செளிதாகுமோ ? (ஆகாது).—எ-று.

சிவபெருமான் றிருவருளால் வேதங்களை யோதா துணர்ந்தவ னென்பார், 'கேடில்சீர் வியாதன்' என்றும், அவரை யடுத்து ஏவல்செய் தொழுகி நீங்காதிருந்து முறைப்படி கேட்டவ னென்பார், 'மாட்டுறு சூதன் றனக்கியம் புதலும்' என்றுங் கூறினர். இதனை :—''அழலி னீங்கா னணுகா னஞ்சி-நிழலி னீங்கா னிறைந்த நெஞ்சமோ - டெத்திறத் தாசா னுவக்கு மத்திறம் - அறத்திற் றிரியாப் படர்ச்சிவழி பாடே.'' எனவருஞ் சூத்திரத்தா னுணர்க. (கoஙு)

வேறு.

சொற்படு மினைய காஞ்சித் தொன்னக ரதற்கு நாப்பண்
கற்புறு மிமைய வல்லி கருணையால் வைகி நோற்கும்
பொற்புறு காமக் கோட்டம் போலவே யதற்கோர் சாரி
லெற்படு குமர கோட்ட மென்றொரா லயமுண் டன்றே.

(இ-ள்.) புகழமைந்த இத்தகைய பழைய காஞ்சிமாநகரத்திற்கு மத்தியில் கற்பினையுடைய பர்வதராஜ புத்திரியாகிய ஸ்ரீ காமாக்ஷியம்மையார் கருணையோடு வீற்றிருந்தருளித் தவஞ்செய்கின்ற அழகிய காமக்கோட்டமென்னு மாலயத்தைப்போலவே, அக்காமக்கோட்டத்திற்கு ஒரு புறத்தில் ஒளிபொருந்திய குமரகோட்டமென்று ஒரு ஆலயமுள்ளது.—எ-று.

'சொற்படும்' என்பதற்கு, சொல்லப்பட்ட எனினுமாம். ''பொற்புறு காமக் கோட்டம் போலவே யதற்கோர் சாரி - லெற்படு குமரகோட்ட மென்றொரா லயமுண்டு'' என்பதனை :—''திசைமுகனைக் கணங்களாற் சிவபெருமான் றிருமுன்னர்ச் செலுத்தி யுள்ளப் - பசையினிரு முதுகுரவ ரடிவணங்கி விடைகொண்டு பழனக் காஞ்சி - வசைகடந்த நகரெய்தி யுலகாணித் தடமேல்சார் மாகா ளப்பா - லிசைவி ளங்கு தேவசே னாபதீச் சரவிலிங்க மிருத்திப் போற்றி.'' எனவருங் காஞ்சிப்புராணத்தானு முணர்க. (கoச)

ஆவதோர் குமர கோட்ட மதனிடை யரன்கண் வந்து
தூவுடை யெஃக மொன்றாற் சூர்முத றொலையச் செற்றுத்
தேவர்வெஞ் சிறையை மாற்றிச் சேண்மக பதிக்கு நல்கி
மேவிய குமர மூர்த்தி வியத்தக வுறையு மாதோ.

(இ-ள்.) அத்தன்மையாகிய குமரகோட்டத்தில், சிவபெருமானது நெற்றிக் கண்ணினிடத்து (அனற்பொறி யுருவமாக) அவதரித்துத் தூய்மைபொருந்திய வேற்படையினால் சூரபதும னழியும்படி கொன்று, (அச்சூரனாலடைந்திருந்த) தேவர்களது கொடிய சிறையைநீக்கிச் சொர்க்கலோகத்தை இந்திரனுக்குக் கொடுத்து எழுந்தருளிய குமாரக்கடவுள் சிறப்போடு வீற்றிருந்தருளினார்.—எ-று.

சூர்முதல்-சூரனாகிய முதல்வன்; இருபெயரொட்டு. சேண் என்பது ஆகு பெயராய் விண்ணுலகத்தை யுணர்த்திற்று. (௧௦௫)

மேவருங் கூடன் மேலை வெற்பினி லலைவாய் தன்னி
லாவினன் குடியி னல்லே ரகந்தனிற் றணிகை யாதிப்
பூவுல குள்ள வெற்பிற் பொற்புறு மேனை வைப்பிற்
கோவில்கொண் டருளி வைகுங் குமரகோட் டத்து மேயோன்.

(இ-ள்.) அடைதற்கரிய மதுராபுரிக்கு மேற்றிசையிலுள்ள திருப்பரங் குன்றத்திலும், திருச்சீரலைவாயிலும், திருவாவினன்குடியிலும், நல்ல திருவேரகத்திலும், திருத்தணிகை முதலாகிய நிலவுலகத்துள்ள மலைகளிலும், அழகுபொருந்திய மற்றவிடங்களிலும் இந்நகரத்துக் குமரகோட்டத்து வீற்றிருந்தருளும் குமாரக்கடவுள் திருக்கோயில் கொண்டெழுந்தருளி யிருப்பார்.—எ-று.

'மேவருங் கூடன் மேலை வெற்பு' என்றது திருப்பரங்குன்றை. இதனை:— "மாடமலி மறுகிற் கூடற் குடவயி - னிருஞ்சேற் றகல்வயல் விரிந்துவா யவிழ்ந்த - முட்டாட் டாமரைத் துஞ்சி வைகறைக் - கட்கமழ் நெய்த லூதி யெற்படக் - கண் போன் மலர்ந்த காமர் சுனைமல - ரஞ்சிறை வண்டி னரிக்கண மொலிக்குங் - குன்றமர்ந் துறைதலு முரியன்" எனவருந் திருமுருகாற்றுப்படையானு முணர்க. அலைவாய் - என்றது திருச்செந்திற்பதி. ஆவினன்குடி - என்பது பழனி; இனிச் சித்தன் வாழ்வென்று சொல்லுகின்றவூர் முற்காலத்து ஆவினன்குடி யெனப் பெயர்பெற்ற தென்றுமாம். இதனை :—" நல்லம்பர் நல்ல குடியுடைத்துச் சித்தன்வாழ் - வில்லந் தொறுமூன் றெரியுடைத்து—நல்லரவப்-பாட்டுடைத்துச் சோமன் வழிவந்த பாண்டியநின் - னாட்டுடைத்து நல்ல தமிழ்." என்னும் ஔவையா ரருமைத்திருவாக்கா னுணர்க. ஏரகம்-மலைநாட்டகத்துள்ளது. தணிகையாதிப் பூவுலகுள்ள வெற்பு-என்றது குன்றுதோறாடல். பொற்புறு மேனைவைப்பு - என்றது பழமுதிர்சோலை முதலிய திருப்பதிகளை. (௧௦௬)

வச்சிர மெடுத்த செம்மல் வைகிய துறக்கந் தன்னி
லச்சுதன் பதத்துக் கப்பா லானதன் பதத்தில் விண்ணோர்
மெச்சுறு கந்த வெற்பில் வீற்றிருந் தருளு மாபோற்
கச்சியிற் குமர கோட்டங் காதலித் தமருங் கந்தன்.

(இ-ள்.) வச்சிராயுதத்தை யேந்திய தேவேந்திரன் வாழ்கின்ற சுவர்க்கலோகத்திலும் விஷ்ணுலோகத்திற்கு மேலுள்ள தமது கந்தலோகத்திலும், தேவர்கள் புகழ்ந்து கூறுகின்ற கந்தகிரியிலும் எழுந்தருளி யிருப்பதுபோல எமது கந்தப்பெருமான்

காஞ்சிமாநகரத்துள்ள குமரகோட்டமென்னு மாலயத்திலும் விரும்பி வீற்றிருந்தருளு வார்.—எ-று.

ஸ்கந்தலோகம் அரிபிரமேந்திராதியர் பதங்களுக்கு மேலுள்ளதென்பார், 'அச் சுதன் பதத்துக் கப்பா லானதன் பதத்தில்' என்று கூறினர். குமாரக்கடவுள் விண் ணுலகத்திலும் ஸ்கந்தலோகத்திலும் கந்தகிரியிலும் எழுந்தருளியிருத்தல்போலக் காஞ் சியிற் குமரகோட்டத்தும் விரும்பி வீற்றிருந்தருளுவ ரென்க. (க0எ)

ஈண்டுள தரணி முற்று மெல்லைதீர் வான வைப்பு
மாண்டகை மகவான் சீரு மம்புயன் முதலோர் வாழ்வு
மாண்டிடல் பிறத்த லின்றி மன்னிய வீடும் போற்றி
வேண்டினர் வேண்டி யாங்கு வேலவன் புரிந்து மேவும்.

(இ-ள்.) இவ்விடத்துள்ள உலக முழுமையும், அளவில்லாத விண்ணுலக வாழ்க்கையும், ஆண்தன்மையையுடைய இந்திரனது செல்வமும், பிரமன் முதலியவர் களது வாழ்க்கையும், இறத்தலும் பிறத்தலுமின்றி நிலைபெற்றுள்ள மோக்ஷவீடும் தம்மைத் துதித்து வேண்டுகின்றவர்கள் வேண்டிய வண்ணமே வேற்படையையு டைய குமாரக்கடவுள் அவர்களுக்குக் கொடுத்துக்கொண் டெழுந்தருளியிருப்பார்.

ஆண்டகை - அன்மொழித்தொகை. புண்ணியப்பயனை நுகர்ந்து அவை யொழிந்தபின் மீண்டும் பிறத்தற்கேதுவாயுள்ள போகபதவிசளைப் போலாது மீளா முத்தியைத் தருவதாகலின், 'மாண்டிடல் பிறத்தலின்றிமன்னியவீடும்' என்று கூறி னர். (க0அ)

கொண்டலை யளக்கு நொச்சிக் குமரகோட் டத்துச் செவ்வேள்
கண்டிகை வடமுந் தூநீர்க் கரகமுங் கரத்தி லேந்திப்
பண்டையி லயனை மாற்றிப் படைத்தருள் வேடந் தாங்கி
யண்டர்க ளெவரும் போற்ற வருள்புரிந் தமர்ந்தா னன்றே.

(இ-ள்.) மேகமண்டலத்தை யளாவிய மதிலாற் சூழப்பட்ட குமரகோட்ட த்திலெழுந்தருளிய கந்தப்பெருமான் செபமாலையையும், தூய்மையாகிய நீரினையு டைய கமண்டலத்தையுந் திருக்கரத்தில் தாங்கி, முன்னாளில் பிரமனைச் சிறையிலி ட்டு (உலகத்தைச்) சிருஷ்டிசெய்கின்ற திருவேடங்கொண்டு தேவர்களனைவருந் துதி க்க அவர்களுக்குத் திருவருள் புரிந்து வீற்றிருந்தருளினர்.—எ-று.

மேகமண்டலத்தளவு முயர்ந்தோங்கிய மதிலென்பார், 'கொண்டலையளக்கு நொச்சி' என்று கூறினர். வேள் என்பது முருகக்கடவுளுக்கும் மன்மதனுக்கும் பெய ராகலின் ஈண்டு வேறுபிரித்தற்கு, 'செவ்வேள்' என்றார். 'கண்டிகை வடமுந் தூநீ ர்க் கரகமுங்கையிலேந்தி' என்பதனை.—"புள்ளிமான் றோலுடுக்கை முஞ்சிநாணணா ப்பொலிய வக்க மாலை - தெள்ளுநீர்க் குண்டிகையுங் கரத்தொளிரத் திருக்குமர கோட்ட மென்னு-முள்ளியோர் பிறப்பறுக்கு மாச்சிரமத் தினிதிருந்தா னுறுவர் போ ற்ற - வள்ளியா ரிணைக்களப மணிக்கலச முலைதிளைக்கும் வாகைத் தோளான்." என வருங் காஞ்சிப்புராணத்தானுணர்க. பண்டையி லயனை மாற்றிப் படைத்தருளினமை- பிரமனைப் பிரணவப் பொருள் வினவி, அவனது உணராது மயங்கியபோது சிறை யிடுவித்து அவனது சிருட்டித் தொழிலைப் புரிந்தமையை. (க0க)

ஆயதோர் காஞ்சி மூதூ ரதனிடை யம்பு யத்தின்
மேயவன் றனது புந்தி விமலமாம் பொருட்டான் மேனாண்
மாயவன் கமட மாகி வழிபடு தலத்தின் முக்க
ணாயகன் றனையர்ச் சித்து நாமக ளுடனாங் குற்றான்.

(இ-ள்.) அத்தன்மையாகிய பழைய அந்தக்காஞ்சிமாநகரத்தினிடத்து, தாமரைமலரில் வசிக்கும் பிரமன் தனது புத்தியானது பரிசுத்தமடையும் வண்ணம் முன்னாளில் திருமால் ஆமைவடிவங்கொண்டு பூசனைசெய்த கச்சபாலயத்தில் திரிலோசனனாகிய சிவபெருமானையருச்சனைபுரிந்து கலைமகளோடு அங்குவசித்திருந்தான்.

மாயவன்கமடமாகி வழிபடுதலம்-கச்சபாலயம். அம்புயத்தின்மேயவன்முக்கணனையகன்றனை யர்ச்சித்து நாமமாளுடனுங்குற்றான், என்பதனை:— "போற்றுசீரவ் விலிங்கத்தினைப்போற்றினோயாவரு-மாற்றரும்வீடுபேறெய்துவர் நான்முகன் வாணியோ - டாற்றலானுயிடை மாதவமாற்றி யவ்வங்கண - னூற்றமாரருளினாற் படைத்திடுக் தலைமைபெற்றோங்கினான்." என்னுங் காஞ்சிப்புராணத்தானுணர்க. (ககo)

உற்றிடு கின்ற நாளி லுலகினில் லறத்தை யாற்றி
நற்றவம் பலவும் போற்றி நன்னியமுனிவ ரெல்லா
மற்றவை யெய்திக் கஞ்ச மலர்மிசை யிருந்த வையன்
பொற்றிரு வடியைத் தாழ்ந்து போற்றினர் புகல லுற்றார்.

(இ-ள்.) அவ்வாறு வசிக்கின்ற நாள்களில் இவ்வுலகத்தில் இல்லறத்தை நடத்தி நல்ல தவங்கள் பலவற்றைச் செய்துவந்த முனிவரர்களனைவரும் அக்கச்சபாலயத்தை யடைந்து பதுமாசனத்திருந்த பிரமனது அழகிய திருவடியை வணங்கித்துதித்துச் சொல்லுகின்றார்கள்.—எ-று.

இல்லறத்தை யாற்றுதலாவது— "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கலானென்றாங் - கைம்புலத்தா றோம்ப றலை" என்னுந் திருக்குறட்படி ஐவகையினரையு முபசரித்துப் பாதுகாத்தல்.

"தவமே நெறியாகுந் தவமே சிவனார் தமைக்காட்டுந்-தவமே துறக்கமடைவிக்குந் தவமே நரனைத் தேவாக்குந் - தவமே யலாரி திசைக்கிறைவர் சார்ங்கனயனு மாக்குவிக்குந் - தவமே கிடைப்பிற் கிடையாததுண்டோவென்று சாற்றினனால்." என்றபடி தவஞ்சிறந்ததாகலின், 'நற்றவம்' என்றார். பலவும் என்றது சாந்திராயணமுதலிய விரதங்களை. (ககக)

அத்தமீக ளிந்நாள் காறு மடியமில் லறத்தை யாற்றி
யித்தல நகர மெங்கு மிருந்தன மினிமே னுங்கள்
சித்தமதொருங்க நோற்றுச் செய்கட னியற்றி வைக
மெய்த்தவ வனமதொன்றை விளம்பியே விடுத்தி யென்றார்.

(இ-ள்.) ஐயனே! கேட்பாயாக, இன்றுவரையிலும் அடியேங்கள் இல்லறநடாத்திக்கொண்டு இவ்வுலகத்துள்ள நகரங்களெங்கும் வசித்தனம்; இனிமேல் நாங்கள் மனமொடுங்கும்படி தவத்தைச் செய்வதோடு செய்யவேண்டிய நித்தியகருமங்களைச் செய்துகொண்டிருக்கும்பொருட்டு உண்மையான ஒரு தபோவனத்தைச் சொல்லியனுப்புவீராகவென்று கேட்டார்கள்.—எ-று.

அத்த - அண்மைவிளி. செய்கடன் - தவவனத்திற்செய்யவேண்டிய முறைமைகள். (ககஉ)

என்றலுந் தருப்பை யொன்றை யேழுல களித்தோன் வாங்கி
யொன்றொரு திகிரியாக்கி யொய்யென வுருட்டிப் பாரி
னின்றிதன் பின்ன ராகி யெல்லிரு மேகி யீது
நின்றிடும் வனத்தி னூடே நிலைப்பட விருத்தி ரென்றான்.

(இ-ள்.) முனிவர்களிவ்வாறு கூறுதலும் எழு உலகங்களையுஞ் சிருஷ்டித்த பிரமன் ஒரு தருப்பையை யெடுத்து ஒரு சக்கரவடிவமாகச்செய்து விரைவாக

உருட்டி, இந்நிலவுலகத்தில் இன்று இத்தருப்பையின் பின்னே நீவிர்யாவருஞ்சென்று இஃது நிற்கின்ற வனத்தில் நிலைபெற்று வசிப்பீர்களாகவென்று கூறினான்.—எ-று.

மேலேழுங் கீழேழுமாகிய இருவகையுலகு மடங்கப் பொதுப்பட, 'எழுலகு' என்று கூறினார். திகிரி = சக்கரம். (கக௩)

திருப்பாது மத்து வள்ளல் சேவடிக் கமலந் தாழா
விருப்பொடு விடைகொண் டேக விரைவினி லன்னான் விட்ட
தருப்பையி னேமி சென்றோர் தனிவனத் திறுத்த லோடு
மிருப்பிட மெமக்கீ தென்னு விருந்தன ரிருந்தா ரங்கண்.

(இ-ள்.) அழகிய தாமரைமலரில் வசிக்கின்ற பிரமனது திருவடித்தாமரையை வணங்கி விருப்பத்தோடு விடைகொண்டு (அத்தருப்பையின் பின்னே) செல்ல, அப்பிரமன் வேகமாகவிட்ட தருப்பையாலாகிய சக்கரஞ்சென்று ஒரு ஒப்பற்றவனத்தில் தங்கவும், பெரிய தவத்தினையுடைய அம்முனிவர்கள் எமக்குத் தக்க இருப்பிடம் இதுவே யாகுமென்று விரும்பி அங்கு வசித்திருந்தார்கள்.—எ-று. (கக௪)

தனிவனம் - தவஞ்செய்வதற்குத் தகுதியானவனம்.

தாமரை யண்ண லுய்த்த தருப்பையி னேமி தன்னு
ளுமைம தொன்று பெற்ற நைமிசா ரணியம் வைகுந்
தூமுனி வரர்க ளெல்லாஞ் சொல்லருந் தவத்தை யாற்றி
மாமறை நெறியி னின்று மகமொன்று புரித லுற்றார்.

(இ-ள்.) பிரமதேவன் விடுத்த தருப்பைச் சக்கரத்தினால், (அவ்வாரணியம்) நைமிசாரணியமென்னு மொருபெயரைப் பெற்றது. (அங்குச்சென்று) வசிக்கின்ற தூய்மையினையுடைய முனிவரர்களனைவரும் சொல்லுதற்கரிய பல தவங்களைச்செய்து, பெரிய வைதிகநெறியில் நின்று ஒருவேள்வி செய்யத்தொடங்கினார்கள்.—எ-று.

நேமிசம்பந்தம் நைமிசமாகலின், சக்கரம்போய்த் தங்கிய ஆரணியத்தை நைமிசாரணியம் என்று கூறினார். நேமி - சக்கரம். ஶீ - கிடத்தல்: அல்லது, ஶோ - ஒழிதல். நைமிசம் - சக்கரமோய்ந்த விடம் என்பது பொருள். மகமொன்று புரிதலுற்றார் என்றது, பதினெண் யாகங்களிற் சிறந்த சத்திரயாகத்தை. இதனை :—" சீற்றங் காம மயக்கமற வெறிந்து ஞானப் பொருடேர்ந்து - மாற்ற வரிய புலனைந்து மடக்கு மறைதேர் முனிவோர்கள் - போற்றும் பருவ மீராறு புரியு முயர்சத் திரயாக- மாற்று நைமி சாரணியத் தருள்கூர் சூத முனியடைந்தான் " என்னுங் கூர்மபுராணத் திருவிருத்தத்தா னுணர்க. (கக௫)

அகனமர் புலனோர் நான்கு மான்றமை பொருட்டா லாங்கோர்
மகவினை செய்து முற்றி வாலிதா முணர்ச்சி யெய்தி
யிகலறு முளத்த ராகி யிருந்தன ரிதனை நாடிச்
சுகனென வுணர்வு சான்ற சூதமா முனிவன் போந்தான்.

(இ-ள்.) தமக்குள்ளே பொருந்திய அந்தக்கரணங்களான்கும் அடங்கியிருக்கும் வண்ணம் அந்நைமிசாரணியத்து ஒரு வேள்வியைச் செய்துமுடித்து நின்மலவுணர்ச்சியடைந்து (காமாதி) அறுவகைப் பகைகளொழிந்த மனத்தினை யுடையவர்களாய் வசித்திருந்தார்கள். இவர்களிவ்வா றிருத்தலை விரும்பிச் சுகப்பிரமரிஷியைப்போலப் பேருணர்ச்சிவாய்ந்த சூதமாமுனிவர் அங்கு வந்தருளினார்.—எ-று.

அகனமர்புலனோர் நான்கு என்றது அந்தக்கரணத்தை. அவை, மனம்-புத்தி - சித்தம் - அகங்காரமென்பன. வாலிதாமுணர்ச்சி - பேரறிவு. பிறந்தபொழுதே

பூர்வஞானத்தோடு பிறந்தவராதலால், 'சுகனெனவுணர்வுசான்ற' என்று கூறினர். கிளிமுகத்தோடும் பிறந்தமையின் சுகன் என்றார். சுகம்=கிளி. (ககசு)

முழுதுணர் சூதன் றன்னை முனிவரர் கண்டு நேர்போய்த்
தொழுதுதனர் பெரியோ யெம்பாற் றுன்னலா லின்ன வைகல்
விழுமிது சிறந்த தென்று வியத்தகு முகமன் கூறித்
தழையொடு தருப்பை வேய்ந்த தம்பெருஞ் சாலை யுய்த்தார்.

(இ-ள்.) எல்லாப் பொருள்களையுமுணர்ந்த சூதமாமுனிவரை நைமிசாரணிய முனிவர்கள் பார்த்து எதிர்சென்று வணங்கி, தவத்திற் சிறந்த சூதமுனிவரே! தேவரீர் எம்மிடத்து வந்தருளிய காரணத்தினல் இத்தினம் மிகவுஞ் சிறப்புற்றதென்று வியக்கத்தக்க உபசாரவார்த்தைகளைக் கூறி, தழைகளாலுந் தருப்பைகளாலுங் கட்டப்பட்டுள்ள தமது பெரிய பன்னசாலைக்கு அழைத்துக்கொண்டு சென்றார்கள்.

திரிகாலஞானமுடையவராகலின் 'முழுதுணர்சூதன்' என்றார். முனிவர்களது பன்னசாலை தழைகளாலுந் தருப்பைகளாலுங் கட்டப்பட்டதாகலான், 'தழையொடு தருப்பைவேய்ந்த தம்பெருஞ்சாலை' என்று கூறினர். பன்னம்-இலை. (ககஎ)

திருக்கிளர் பீட மொன்று திகழ்தர நடுவ ணிட்டுச்
சுருக்கமில் கேள்வி சான்ற சூதனை யிருத்தி யாங்கே
யருக்கிய முதல நல்கி யவனது பாங்க ராகப்
பொருக்கென யாரும் வைகி யிஃதொன்று புகல லுற்றார்.

(இ-ள்.) சிறப்பு மிக்க ஒரு ஆசனத்தை விளங்கும்படி மத்தியிலமைத்து, நிறைந்த கல்வி கேள்விகள் நிரம்பப்பெற்றுள்ள சூதமுனிவரை அதிலெழுந்தருளச் செய்து அருக்கிய முதலிய உபசாரங்களைச் செய்து அச்சூதமுனிவருக்கருகில் அம்முனிவர்க ளனைவரும் விரைந்தடைந்து மேல்வருகின்ற ஒரு சங்கதியைச் சொல்லத்தொடங்கினர்கள்.—எ-று.

அருக்கியமுதலாவன:—அருக்கிய பாத்திய ஆசமனங்கள். (ககஅ)

முன்னொரு ஞான்று தன்னின் முளரியந் தேவன் சொல்லால்
வந்திவ ணிருந்தே மாக மற்றியாம் புரிந்த நோன்பு
தந்தது நின்னை யற்றாற் றவப்பயன் யாங்கள் பெற்றேஞ்
சிந்தையி னுவகை பூத்தேஞ் சிறந்ததிப் பிறவி யென்றார்.

(இ-ள்.) முன்பொருகாலத்தில் தாமரைமலரி லிருக்கின்ற பிரமதேவனது கட்டளையினல் இங்கடைந்து வசித்திருந்தோம்; அடியேங்கள் செய்த தவவிரதங்கள் தேவரீரை இங்குச் சேர்த்தன; அக்காரணத்தினல் யாங்கள் தவத்தின் பயனைப்பெற்றோம்; மனத்தில் பெருமகிழ் வடைந்தோம்; (யாங்களடைந்திருக்கும்) இம்மானுடப் பிறவியுஞ் சிறப்புற்றது என்று கூறினர்கள்.—எ-று.

பிறப்பாலடையவேண்டிய பயன் பெரியோர்களைத்தரிசித்து வழிபடுதலேயாகலால், 'சிறந்ததிப்பிறவியென்றார்' என்று கூறினர். (கககு)

அன்னது சூதன் கேளா வாதியம் பரனை யேத்தி
மன்னிய வேள்வி யாற்றி வாலறி வதனை யெய்தித்
துன்னிய முனிவிர் காணுந் தொல்குழு வடைத லன்றோ
வென்னிக ராயி னோருக் கிம்மையிற் பெரும்பே றென்றான்.

(இ-ள்.) சூதமுனிவர் அவ்வார்த்தையைக்கேட்டு முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமானைத் துதித்து, நிலைபெற்ற யாகங்களைச் செய்து அதனல் பேருணர்வ

டைந்து பொருந்தியிருக்கின்ற முனிவர்களே! பழமையாகிய உமது கூட்டங்களை யடைந்து வசிப்பதன்றோ? எம்போல்பவர்களுக்கு இம்மையிலடையவேண்டிய பிரயோசனம் என்று கூறினார்.—எ-று.

வேள்வியாவது பேருணர்வளித்துப் புண்ணியப்பலனை விருத்திசெய்வதாக லின், 'மன்னிய வேள்வி யாற்றி வாலுணர் வதனை யெய்தி' என்றார். இதனை :—"எச்ச மொன்றே யிருமையிறு மேலா மிமையோர்க் குவப்பாவ - தெச்ச மொன்றே மகத்தி றையா மெம்மான் விழையப் படுமதுவு - மெச்ச மொன்றே நனிசாலச் சிறந்த பொரு ளு மிருங்கரும - வெச்ச நிகர்வே றில்லையெனப் பரத்துவாச னியம்பினனால்" என் னுங் காஞ்சிப்புராணத்தா லுணர்க. (கஉ0)

அவ்வழி முனிவர்சொல்வா ரருமறை கண்ட வண்ணல்
செவ்விய மாணாக் கர்க்குட் சிறந்துமோய் திறற்சூ ராதி
வவ்விய நெடுமே வலவான் மாண்கதை தேர்வான் பன்னா
ளிவ்வொரு நசைகொண் டுள்ளே மியம்புதி யெமக்க தென்றார்.

(இ-ள்.) அதன்பின்னே முனிவர்கள் கூறுவார்கள் ; அரிய வேதங்களை யுண ர்ந்து பாகுபாடு செய்த வியாசமுனிவரரது நல்ல மாணாக்கர்களுள் சிறந்த சூதமுனிவ ரே! வலிய சூரபதுமன் முதலியோரது உயிரைவாங்கிய நீண்ட வேற்படையைத் தரி த்த ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுளுடைய மாட்சிமைபொருந்திய மான்மியத்தை யறியும் பொருட்டு அநேக நாள்களாக இவ்வொரு விருப்பத்தை யடைந்திருக்கின்றோம் ; ஆத லால், எங்களுக்கு அதனைச் சொல்வீராகவென்று கூறினார்கள்.—எ-று.

'அருமறை கண்ட வண்ணல்'—அரிய வேதங்களை நான்காகப் பாகுபாடு செய்த வியாசமுனிவர். (கஉக)

அம்மொழி சூதன் கேளா வழல்படு மெழுகே யென்னக்
கொம்மென வுருக வுள்ளங் குதூகலித் தவச மாகி
மெய்ம்மயிர் பொடிப்பத் தூநீர் விழிக்துளை யரும்ப வாசான்
பொய்ம்மையில் படிவ முன்னித் தொழுதிவை புகல லுற்றான்.

(இ-ள்.) அவ்வார்த்தையைச் சூதமுனிவர் கேட்டுத் தழலிற்பட்ட மெழுகை ப்போல மனம் விரைந்துருகத் திருவுள்ள மகிழ்ந்து பரவசப்பட்டு, தேகத்தில் மயிர்க் கூச்செறியவும் தூய்மையாகிய ஆனந்த பாஷ்பம் இருவிழிகளினின்றுஞ் சிந்தவும் தனது ஆசாரியராகிய வியாசமுனிவரரது மெய்ம்மையாகிய திருவுருவத்தைத் தியான த்து வணங்கி இவற்றைச் சொல்லத்தொடங்கினார்.—எ-று.

கொம்மென - என்பது விரைவாக என்னும் பொருளில்வந்தது. கொம் மெனல் - அநுகரணவோசை யிடைச்சொல். இதனை:— "இம்மெனல் கல்லென விழுமெனல்வல்லெனல்-பொம்மென லொல்லெனல் பொள்ளெனன்ஞெரேலெனல்- கொம்மெனல் சரேலெனல் ஞொள்ளெனல் கொல்லென - லம்மெனல் பிறவு மநு கரணவோசை" என்னும் பிங்கலந்தைச் சூத்திரத்தானுணர்க. (கஉஉ)

மன்னவன் மதலை யாசான் மாமகன் றனது மைந்தன்
பன்னுசொற் கொள்வோ னீவோன் வழிபடு பண்பின் மிக்கோ
னென்னுமிங் கிவருக் கிவ் தேனைநூ லுங்கள் போலச்
செந்நெறி யொழுகு வார்க்கே செப்புவன் புராண முற்றும்.

(இ-ள்.) அரசன் புதல்வன், ஆசாரியனது சிறந்த புதல்வன், தனது புதல் வன், தான் சொன்ன சொல்லைக்கேட்டு நடப்பவன், பொருள் கொடுப்பவன், வழி

பாடு செய்யும் நற்குண மிக்கவன் என்று கூறுமிவர்களுக்குப் போதிப்பது மற்றை இலக்கண இலக்கியக் கலைகளேயாம்; உங்களைப்போல நன்னெறியி லொழுகுந் தவ முனிவர்களுக்கே பதினெண் புராணங்களையுங் கூறுவேன்.—எ-று.

இதனை:—"தன்மக னாசான் மகனே மன்மகன்-பொருணனிகொடுப்போன் வழிபடுவோனே - யுரைகோ ளாளற் குரைப்பது நூலே" என்னுஞ் சூத்திரத்தானும், "தன்னையித்தனும் வழிபடுந் தகுதியோர்சாலப் - பொன்னளிப்பவர் தொடுத்தமற் சர மிலாப்புனிதர் - சொன்னசொற்கட வாதவர் தூகடவிர்நெஞ்சத்-தின்ன வர்க்குநூல் கொளுத்துவ தறனெனவிசைப்ப." எனவருந் திருவிளையாடற்புராணத்தானுமுணர்க. ஏனைநூல் - இலக்கண இலக்கியநூல்கள். செந்நெறி யொழுகுவோர் - வேதாகமநெறி யில் நடப்பவர்கள். (கஉ௩)

தனைநிகர் பிறரின் றுய சண்முகற் கன்பு சான்ற
முனிவிர்கா ளுரைப்போர் கேட்போர் முத்திசேர் காந்தத் துண்மை
வினவினீ ரதனை யின்னே விளம்புவன் புலன்வே றின்றி
யினிதுகேண் மின்க ளென்னு வெடுத்திவை யியம்ப லுற்றான்.

(இ-ள்.) தனக்கு ஒப்பு வேறொருவரில்லாதவராகிய ஸ்ரீ சுப்பிரமணியக்கட வுளிடத்து மெய்யன்பு நிரம்பப்பெற்ற முனிவரர்களே! உரைப்பவர்களும் அதனைக் கேட்பவர்களும் மோக்ஷத்தை யடையத்தக்க காந்தபுராணத்தின் உண்மையை நீங்கள் கேட்டீர்கள், அதனை இப்பொழுதே கூறுவேன்; ஆதலால், ஐம்புலன்களையும் வேறு விஷயத்திற் செலுத்தாது விருப்பத்தோடு கேட்பீர்களாகவென்று பின் வருவனவற் றை எடுத்துரைப்பாராயினர்.—எ-று.

தன்னிகருயர்ச்சியில்லாத் தலைவனாகலின், 'தனைநிகர் பிறரின்றுய சண் முகன்' என்றார். 'உரைப்போர் கேட்போர் முத்திசேர் காந்தம்' என்றதனால், நம் மிருதிறத்தாருக்கும் இருமைப் பயனையுந் தருமென்று கூறினாராயிற்று. புலன்வே றின்றி - ஐம்புலன்களையுஞ் செவிவழியே செலுத்தி என்க. (கஉச)

**திருநகரப்படலமுற்றிற்று.**

ஆ திருவிருத்தம் - உஎ௦.

---

# பாயிரப்படலம்.

முன்றொரு காலத்தின் மூவுல கந்தன்னில்
வந்திடு முயிர்செய்த வல்வினை யதனாலே
யந்தமின் மறையெல்லா மடிதலை தடுமாறிச்
சிந்திட முனிவோருந் தேவரு மருளுற்றார்.

(இ-ள்.) முன்பொருகாலத்தில் மூவுலகங்களிலுந் தோன்றிய ஆன்மகோடிகள் செய்த தீவினைப்பயனால் முடிவில்லாத வேதங்களனைத்தும் முதலு முடிவுந் தவறியழிய, அதனால், முனிவர்களுந் தேவர்களும் மனமயக்கங் கொண்டார்கள்.—எ-று.

முன்றொருகாலம் என்றது, ஆதிகற்பத்துத் துவாபரயுகத்தை. மூவுலகமாவன - சொர்க்கம் மத்தியம் பாதலம் என்பன. வேதங்கள் அந்தமாயிருத்தலின், அந்தமின்மறை, என்றும், முனிவர்களுந் தேவர்களும் வேதமுறைமையை யனுஷ்டிப்பவர்களாதலால், 'அடிதலை தடுமாறிச் சிந்திட முனிவோருந் தேவருமருளுற்றார்' என்றுங் கூறினர். (க)

நெற்றியில் விழிகொண்ட நிமலன தருளாலே
யற்றமின் மறையெல்லா மாதியின் வரலாலே
மற்றத னியல்பெல்லா மயலற வேநாடித்
தெற்றென வெவராலுஞ் செப்புவ தரிதாமால்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய மலரகிதராகிய சிவபெருமானது திருவருளினால் குறைவற்ற வேதங்களனைத்தும் பிரதம சிருஷ்டியில் தோன்றியதன்மையினால் அவ்வேதங்களின் முறைமையனைத்தும் மயக்கம் நீங்க விசாரித்து எத்தகையராலுந் தெளிவாகச் சொல்லுவது அருமையாகும்.—எ-று.

அநாதி மலமுத்தனென்பது குறித்து 'நிமலன்' என்றும், சிவபெருமானைப் போலவே அவர் திருவாக்காகிய வேதமும் அநாதியாகலின், 'ஆதியின்வரலாலே' என்றும், அவ்வேதம் பலபடக்கூறுதலின், 'அதனியல்பெல்லா மயலறவேநாடித் - தெற்றென வெவராலுஞ் செப்புவதரிதாம்' என்றுங்கூறினர். (உ)

ஆனதொர் பொழுதின்க ணமரரு முனிவோரு
மாநில மிசைவைகு மாக்களு மிறையுள்ள
ஞானம திலராகி நவின்மறை நெறிமாற்றித்
தீநெறி பலவாற்றிப் பனுவல்கள் சிலசெய்தார்.

(இ-ள்.) அவ்வாறு முதல் முடிவு தடுமாறி மயக்கமுற்றிருக்குங் காலத்தில் தேவர்களும் முனிவர்களும் பெரிய நிலவுலகத்தில் வாழும் மனிதர்களும் மனத்தில் சிறிதும் ஞானமில்லாதவர்களாய்ச் சொல்லப்பட்ட வேதமார்க்கத்தையொழித்து, பல தீயசமய நெறிகளை யேற்படுத்தி (வேதவிரோதமாகச்) சில நூல்களைச் செய்தார்கள்.

இறை - சிறுமை. 'இறையுள்ள ஞானமதிலராகி' என்பதற்கு, கடவுளுண்டென்னும் ஞானமில்லாதவர்களாய், எனப் பொருள்கூறுவாருமுளர். நவின்மறை

செறிமாற்றித் - திநெறிபலவாற்றிப் பறுவல்கள் சில செய்தலாவது, வேதத்திற்குப் புறம்பாகிய புறச்சமயங்களை யேற்படுத்தி அவற்றிற்கமைய நூல்களைச்செய்தல். (ரு)

அவனியி லறமெல்லா மருவினை யெனநீக்கிப்
பவநெறி யறமென்றே பற்பல ருஞ்செய்யப்
புவனம துண்டோனும் போதனு மதுகாணாச்
சிவனரு ளாலன்றித் தீர்கில திதுவென்றார்.

(இ-ள்.) உலகத்தில் தருமங்களனைத்தையும் அரிய தீவினை யென்றொழித்து பாவவழிகளை தருமமென்று கருதிப் பலருஞ் செய்துகொண்டிருக்க, அதனை, உலகத்தை யுண்ட திருமாலும் பிரமனும் பார்த்து, இது சிவபெருமான் திருவருளாலன்றி (மற்றியாவராலும்) நீங்காதென்று சிந்தித்தார்கள்.—எ-று.

வேதத்தையருளிச்செய்த சிவபெருமானே அவ்வொழுங்கின்மையை முறைப்படுத்தவேண்டியவரன்றி வேறொருவரான் முடியாதென்பது கருதி, 'புவனமதுண்டோனும் போதனுமதுகாணாச் - சிவனருளாலன்றித் தீர்கிலதிதுவென்றார்' என்று கூறினார். (சா)

வேறு.

இன்ன பான்மையை யெண்ணி யிருவரும்
பொன்னி னாடு புரந்திடு மன்னனுந்
துன்னு தேவருஞ் சுற்றினர் வந்திடக்
கன்னி பாகன் கயிலையி லேகினார்.

(இ-ள்.) இத்தன்மையைக் கருதிப் பிரம விஷ்ணுக்களிருவரும், பொன்னுலகத்தை யாளுகை செய்கின்ற இந்திரனும் பொருந்திய மற்றைத்தேவர்களுந் தம்மைச் சூழ்ந்துவர, பார்வதிபாகராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கயிலாய மலைக்குச் சென்றார்கள்.—எ-று.

பிரமவிஷ்ணுக்கள் திரிமூர்த்திகளுட் சேர்ந்தவராகலின், அவர்கள் இந்திராதிதேவர்கள் தம்மைச் சூழ்ந்துவரக் கயிலையை யடைந்தனரென்க. (கு)

அந்தில் செம்பொ னணிமணிக் கோயிலின்
முந்து கோபுர முற்கடை யிற்புகா
நந்தி தேவனை நண்பொடு கண்டுநீ
ரெந்தை யார்க்கெம் வரவிசைப் பீரென்றார்.

(இ-ள்.) அங்குச் செம்பொன்னினால் செய்யப்பட்ட அழகிய மணிகளிழைத்த ஆலயத்தின் முன்னேயுள்ள திருக்கோபுரத்தின் முதல்வாசலிற்புகுந்து திருநந்திதேவனை அன்போடு தரிசித்துத் தேவரீர் எமது வருகையைச் சிவபெருமானுக்குச் சொல்வீராகவென்று கூறினார்கள்.—எ-று.

அந்தில் - அசைநிலையுமாம். திருநந்திதேவர் இரண்டாஞ்சம்புவாகலின், 'நந்திதேவனை நண்பொடுகண்டு' என்றார். எந்தை-என்பது, எம்தந்தை என்பதன்மரூஉ.

தேவ தேவன் றிருமுன்ன ரேகியே
காவ னந்திக் கடவுள்பணிந் தெழீஇப்
பூவை வண்ணனும் போதனும் புங்கவ
ரேவ ருஞ்செறிந் தெய்தின ரீண்டென்றான்.

(இ-ள்.) திருக்கயிலையைக் காவல் பூண்டொழுகுகின்ற திருநந்திதேவர் தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் திருமுன்னே யடைந்து வணங்கி யெழுந்து, (எம

தாண்டவரோ !) திருமாலும் பிரமனும் சகல தேவர்களும் இவ்விடத்தில் நெருங்கி வந்திருக்கின்றார்களென்று கூறினார்.—எ-று.

பூவை=காயாம்பூ ; முதலாகுபெயர். புங்கவர்-உயர்ந்தோர் ; தேவர்கள்.(எ)

என்ற காலையின் யாவரையு மிவ்விடைக்
கொன்றை சூடி கொணர்கெனச் செப்பவு
நன்ற தேயென நந்தி வணங்கியே
சென்று மான்முதற் றேவரை யெய்தினான்.

(இ-ள்.) இவ்வாறு விண்ணப்பஞ் செய்தபொழுது, கொன்றைமலர் மாலையையணிந்த சிவபெருமான் அத்தேவர்களனைவரையும் இங்கழைத்து வரக்கடவையென்று கட்டளையிட்டருளவும், அவ்வாறாகுகவென்று திருநந்தி தேவர் வணங்கிச்சென்று திருமால் முதலிய தேவர்களை யடைந்தனர்.—எ-று.

கொணர்கென என்பது தொகுத்தல். நன்றதே என்பது, அவ்வாறேசெய்கின்றேனென்னும் பொருளில்வந்தது. (அ)

செம்மை போகிய சிந்தைய ரைக்கெழீஇ
யெம்மை யாளுடை யானரு ளெய்தினு
னும்மை யங்கு வரநுவன் றனினி
வம்மி னென்ன வல்லையிற் கூயினன்.

(இ-ள்.) செம்மைபொருந்திய மனத்தினையுடைய திருமால் முதலிய தேவர்களை யடைந்து, எம்மை யடிமையாகவுடைய சிவபெருமான் திருவருள் கூர்ந்து உங்களை யங்கு வரும்படி கட்டளையிட்டருளினர், ஆதலால் இனி வரக்கடவீர்களென்று விரைந்தழைத்தனர்.—எ-று.

செம்மைபோகிய சிந்தையர் - வேதவொழுக்கமாறுதலால் அதுகாரணமாக மனம்வருந்திய அரிபிரமேந்திராதியர்கள். (கூ)

விளித்த காலை விழிவழி போதநீர்
துளிக்க நின்று தொழுது கவலொரீஇக்
களிக்கு நெஞ்சினர் கண்ணுத லெந்தைமுன்
னளித்தி யாலென் றவனுட னேகினர்.

(இ-ள்.) அவ்வாறழைத்தவுடனே கண்களினின்றும்வழிகின்ற ஆனந்தபாஷ்பஞ் சிந்தநின்று வணங்கித் துன்பமொழிந்து களிப்புமிக்க மனத்தினையுடைய தேவர்கள் சிவபெருமான் திருமுன்னே (எங்களைக்கொண்டு) சேர்ப்பீராகவென்று கூறி அத்திருநந்தி தேவருடன்சென்றார்கள்.—எ-று.

செம்மைபோகிய சிந்தையரானும் சிவபெருமானது திருவருளாணையைக் கேட்டலும் நமது குறைதீரப்பெற்றோமென்று மகிழ்கூர்ந்தனராகலின், ‘கவலொரீஇக் களிக்குநெஞ்சினர்’ என்றார். (க0)

புடைக டந்திடு பூதர்கள் போற்றுமத்
தடைக டந்து தடுப்பரும் வேனிலான்
படை கடந்தவர் பாற்படு மெண்ணிலாக்
கடைக டந்துபி னண்ணலைக் கண்டனர்.

(இ-ள்.) பக்கங்களிலுள்ள பூதகணங்கள் காத்தல்செய்கின்ற அம்முதல் வாயிலைக்கடந்து, தடுத்தற்கரிய காமபாணத்தைச் செயித்த முனிவர் முதலியோர்கள்

பக்கங்களில் தங்கியிருக்கின்ற அளவற்ற வாயில்களைக் கடந்து, பின்பு சிவபெருமானைத் தரிசித்தார்கள்.—எ-று,

'தடுப்பரும்வேனிலான் படைகடந்தவர்' என்றது, முனிவர்கணங்களை. (கக)

முன்னு ரெய்தித் தொழுது முறைமுறை
சென்னி தாழ விறைஞ்சினர் சேணிடைத்
துன்னு மாதரந் தூண்டவந் தன்மினூ
முன்னு மன்பி னுததியி னாழ்ந்துளார்.

(இ-ள்.) திருமுன்னடைந்து வணங்கி வரிசைவரிசையாகத்தலைதாழும்படி வீழ்ந்து நமஸ்கரித்து, தூரத்திலேயே பொருந்திய பெருவிருப்பானது தூண்டுதலால் வந்தடைந்து, நினைத்தற்குரிய பேரன்பாகிய கடலுண் முழுகினார்கள்.—எ-று.

அஷ்டாங்க பஞ்சாங்கமாக வணங்கினரென்பார், 'முறைமுறைசென்னி தாழவிறைஞ்சினர்' என்றார். இவ்வஷ்டாங்க பஞ்சாங்க விதியை:—"வலஞ்செய்து தண்டதனை மானவிதி வழிதழுவத் - தலந்தன்னிற் பணிந்தெழுக தலைகரமற்றிருகன்னங்-நலங்குமுகவாய்புயங்க ளொடுமெட்டுந் தோயமயி-ரிலங்குசிரங் கரமுழந்தா ளொடுமைந்து மிசைந்திடவே" என்னுஞ் சிவதருமோத்திரத்தா னுணர்க. (க௨)

ஈர்க்கும் பாசத் திருவினை யின்றொடே
தீர்க்கின் றுமிவ ளொன்னுஞ் செருக்கினாற்
றார்க்கின் றூர்மலர் சோதிபொற் றுண்மிசைப்
போர்க்கின் றார்மெய்ப் பொடிப்பெனும் போர்வையே.

(இ-ள்.) வலிக்கின்ற பாசசம்பந்தமாகிய இருவினைகளையும் இன்றோடே இங்கொழிக்கின்றோமென்னுங் களிப்பினால் சிவபெருமானது அழகிய திருவடிகளில் நறுமலர்கொண்டருச்சித்தவர்களாய்ப் புளகாங்கிதமென்னும் போர்வையைப் போர்க்கின்றவர்க ளானார்கள்.—எ-று.

'ஈர்க்கும் பாசத்திருவினை' என்பதனை:—இருள்சேரிருவினையுஞ் சேராவிறைவன் - பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு" என்னுந் திருக்குறட்குப் பரிமேலழகர் கூறிய வுரைவிசேடத்தா னுணர்க. (கங)

நேய முந்த நெடும்பக னீங்கிய
தாயெ திர்ந்திடு கன்றின் றகைமையாய்த்
தூய வந்தனை யோடு தொழுமவர்
வாயின் வந்தன வந்தன போற்றினர்.

(இ-ள்.) அன்பானது செலுத்துதலால் அநேகநாள்கள் நீங்கியிருந்த தாய்ப்பசுவை யெதிர்கொண்டு சென்ற கன்றின்றன்மையைப்போல, தூய்மையாகிய போற்றுதலோடும் வணங்குகின்ற அத்திருமால்முதலிய தேவர்கள் (தங்கள்தங்கள்) வாய்களில்வந்த வந்தபடியே கூறித் துதித்தார்கள்.—எ-று.

அன்பின்மிகுதியால் இன்னவைகூறுவோமென்று சிந்தியாமற் றுதிப்பவராகலின், 'வாயின்வந்தன வந்தனபோற்றினர்' என்று கூறினார். (கச)

அன்னா லீசன் வடிவை யகந்தனி
லென்னி னெல்லையி லின்பம் பயக்குமாற்
கன்னி னேர்வரு காட்சிய ராயிடி
னென்னு மோவவர் தஞ்செய லோதவே.

(இ-ள்.) பேரருளாளராகிய சிவபெருமானது திருவுருவத்தை மனதில் நினைத்தமாத்திரத்திலேயே அளவற்ற பேரின்பத்தைத் தரும்; (அங்ஙனமாகவே, அவ்வெம்பெருமானே,) தங்கள் கண்களுக்கு எதிர்ப்பட்ட காட்சியையுடையவராயிருப்பின், அத்திருமால்முதலிய தேவர்களது அன்பின்தன்மையை யுரைப்பதற்கு, ஒருவரால் கூடுமோ? கூடாது.—எ-று.

சிவபெருமானைப் பாவனையாற் சிந்திப்போர்க்கே பரமானந்தம் விளையுமாயின், நேரில் தரிசிக்கப்பெற்றோர்களது பேரானந்தப்பெருக்கைப் பேசுதற்கரிதாமென்று கூறினாராயிற்று. (கடு)

மேலை வானவர் வேந்தொடு மெம்பிரான்
சீல மேய திருமுன்பு மேவினர்
மாலு நான்முகத் தன்னலும் வந்திரு
பாலு மாகிப் பரவின ரொன்பவே.

(இ-ள்.) சிறப்பு மிக்க தேவர்கள் தங்கள் தலைவனாகிய இந்திரனோடும் எமது சிவபெருமானது நன்மைபொருந்திய திருமுன்னே யடைந்தார்கள்; திருமாலும், நான்குமுகங்களையுடைய பிரமனும் (அவ்வெம்பெருமானது) இருபக்கங்களிலும் வந்து துதித்து நின்றார்கள்.—எ-று.

இந்திரன் தேவர்களோடு வணங்கி யெதிர்நிற்றலும், பிரமவிஷ்ணுக்கள்வணங்கித் தங்குறை கூறற்பொருட்டு இருபுடைநிற்றலுஞ் செய்தாரென்பதுகருத்து. (கசு)

வேறு.

அம்புயா சனமுடை யன்ன லாழியா
னும்பரோ டித்திற முற்றுப் போற்றுழிச்
செம்பொனேர் முடிமிசைத் திங்கள் சேர்த்திய
வெம்பிரா னருள்புரிந் தினைய கூறுவான்.

(இ-ள்.) கமலாசனனாகிய பிரமனும் சக்கரத்தையுடைய திருமாலும் இந்திராதிதேவர்களுடன் இவ்வாறடைந்து துதிசெய்தலும், செம்பொன்னைப்போலவிளங்கும் அழகிய திருமுடியில் இளம்பிறையையணிந்தருளிய எமது சிவபெருமான் திருவருள்புரிந்து இவ்வார்த்தைகளை யுரைத்தருள்வாராயினர்.—எ-று.

'செம்பொனேர்முடி மிசைத்திங்கள் சேர்த்திய வெம்பிரான்' என்றதனால், அவ்வரிபிரமேந்திராதியர்களது குறையை முடிக்கவல்ல அருட்படிவங்கொண்டருளிய பெருமானென்பது குறிப்பித்தவாறாயிற்று. (கஎ)

ஒன்றொரு குறைகளு முறாத பான்மையா
னன்றுநும் மரசிய னடந்த வோவெனக்
குன்றவில் லுடையவோர் குழகன் செப்பலு
நின்றமா லொழுதிவை நெறியிற் கூறுவான்.

(இ-ள்.) மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமான் (அத்திருமாலாதி தேவர்களை நோக்கி, ஏ தேவர்களே!) நுமதரசாட்சி ஒரு சிறிதுங் குறைவுறாத தன்மையோடு இனிது நடந்துவந்தனவோவென்று வினவியருளலும், (அப்பொழுது) அருகில்நின்ற திருமால்வணங்கிப் பின்வருவனவற்றை முறைப்படி கூறுவாராயினர்.

'ஒன்றொரு குறைகளும்' என்றது, சிறிது குறைவும் என்னும் பொருளில் வந்தது. எனு-செய்யா வென்னும் வாய்பாட்டுவினையெச்சம். (கஅ)

ஆதியி லயன்படைப் பல்ல தென்னருண்
மேதிப னடுதொழி லேனை விண்ணவ
ரேதமில் செயன்முறை யாவுங் கண்ணுத
னாதநின் னருளினா னடந்த னன்றரோ.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய எமதாண்டவரோ! முதலில் பிரமனது சிருட்டித்தொழிலும், அன்றியும், அடியேன்செய்யுந் திதித்தொழிலும், எருமைக்கடாவாகனத்தையுடைய இயமனது சங்காரத்தொழிலும், மற்றைத் தேவர்கள்செய்யுங் குற்றமற்ற தொழில் முறைகளனைத்தும் தேவரீரது திருவருளினால் இனிது நடந்து வந்தன.—எ-று.

சிருட்டி திதி சங்காரமென்னு முத்தொழிற் றலைவர்களுக்கு முதற்றலைவராயும், அவை தனதருள்வழியே நடக்கப்பெற்றவராயுமுள்ளவர் சிவபெருமானே யாகலால், 'கண்ணுதல் நாதநின்னருளினானடந்த நன்று'எனக்கூறினார். இதனை:—"தேவர் கோவறியாத தேவதேவன் செழும்பொழில்கள் பயந்து காத்தழிக்குமற்றை - மூவர் கோனாய் நின்ற முதல்வன் மூர்த்தி மூதாதை மாதாளும் பாகத்தெந்தை - யாவர்கோ னென்னையும் வந்தாண்டுகொண்டான் யாமார்க்குங் குடியல்லோம் யாதுமஞ்சோ - மேவினோ மவனடியா ரடியாரோடு மேன்மேலுங் குடைந்தாடி யாடுவோமே" என வருந் திருவாசகத்திருமுறையானு முணர்க. (கக)

கருமணி மிடறுடைக் கடவு ளின்னுநீ
யருளுவ தொன்றுள ததனைக் கூறுவ
னிருநில மேலவர் யாரு நின்றனைப்
பரமென வுணர்கிலர் மாயைப் பான்மையால்.

(இ-ள்.) கரிய நீலமணிபோலுங் கண்டத்தினையுடைய எமது பெருமானே! (அடியேங்கட்குத்) தேவரீர் இன்னுங் கிருபைசெய்தருளவேண்டுவதாகிய ஒரு குறையுள்ளது; (அஃதியாதெனின்) பெரியநிலவுலகத்துள்ளவர்க ளனைவரும் மாயா சம்பந்தத்தினால் தேவரீரைப் பரம்பொருளென்று சிறிது முணர்கின்றிலர்.—எ-று.

மாயை மயக்கஞ்செய்வதொன்றாகலான், அம்மாயா மலசகிதர்களாகிய ஆன்மாக்கள் அண்டர்களுறுதுயர் விண்டுய்தற்பொருட்டு விடபானஞ்செய்து காத்தருளிய தேவரீரைப் பரமெனச்சிறிது மதித்திலர் என்று கூறினாராயிற்று. (உ0)

நின்றன துரிமையை நிகழ்த்தி மேன்மையா
லென்றனை யயன்றனை யென்னு வார்சில
ரன்றியு நின்னுட னநேகர் தம்மையு
மொன்றென வேகினைந் துரைக்கின் றார்சிலர்.

(இ-ள்.) தேவரீருக்குரிய பதியிலக்கணங்களை யெடுத்துக்கூறி, அடியேனையும் பிரமனையும் மேலான பதிப்பொருளாகச் சிலர் நினைக்கின்றார்கள்; இதுவல்லாமலும், தேவரீரோடு (சமானியராகிய) அநேகதேவர்களையும் ஒன்றாகக்கருதிச் சிலர் கூறுகின்றார்கள்.—எ-று.

என்றனை யயன்றனை யென்னுவார்சிலர், என்றது பாஞ்சராத்திரிகளையும், பிரமவாதிகளையுமாம். பாஞ்சராத்திரிகள் தசாவதார பரனான திருமாலே கருத்தர்; மற்றையோர்கள் திருமாலினா லாக்கப்படுவோ ராதலாலவர்கள் கர்த்தாக்க ளல்லரென்று கூறுவர். இதனை:— "உந்தியாலயனையீன்று மவனைக்கொண் டுலகுண்டாக்கி - யந்தநல் லுலகழிக்க வரனையு மாக்குவித்துத் - தந்திடுஞ் சகத்தினுக்குத் திதிகர்த்தா

தானேயாகி-வந்திருந்தோற்றமீறும் நிலைமையும் பண்ணுமாயன்" என்று அவர்கள் கூற்றாகவருந் திருவிருத்தத்தாலுணர்க. இஃதற, அத்திருமாலுக்குச் சம்மதமன்மையை, "யாமெலா மவனிலையடித் தியானஞ்செய் பசுக்க-ளாமெனத்தெளி யவனருள்சேர்ந்திற்பசுவும் - பூமிசைத்தியானப்பொருளா மெனப்புனைந்து - தோமறச்சில நூல்புகலுண்மையுந் துணியாய்" எனவும், "மந்திரத்தழன் மகத்திறுக்கிறைபவன் மாவான் - சந்தமாமறைக்கிறையவன் ருமனைக்கிழவ-னிந்திராதியாமூலகிறுக்கிறையவன்ய சோமைந்தனே யெனக்கிறைய்வன் மணிமிடற்றிறையோன்" "அகிலநாயகனவற்கு மேலிறையவனில்லை - அகிலலோகமு மவன்றிரு வாணையி னடக்கு - மகிலலோகமும் படைத்தளித் தழிப்பவனவனே - யகிலநூல்களு முரைத்திடுந் துணிவிதுவாமால்" "வானமேத்தயான் வைகுந்த வாழ்வுபெற்றதுவு- ஞானநாயகன் சத்தியவுலகாண்ணியது - மேனைவிண்ணவர் தத்தமவாழ்க்கை யெய்தியது - மானுயர்த்தவனருட்குறியருச்சனைப் பயனால்" என அத்திருமால் கூற்றாகவருந் திருவிருத்தத்தா லுணர்க. இனி பிரமவாதிகள் பிரமனைக்கருத்தாவாகக் கூறுவர்; அது பிரமனுக்குடன்பாடன்மையை:—"செங்கண்மாறன்னை யென்னைத்திண்டிறன் மொய்ம்பினல்கி-யங்கண்மாஞாலங்காப்பு மளிப்பதுநல்கியாமு -முங்கள்பாலிருப்பமென்றே யுறுபொருளியற்றுநின்று - னெங்களான்முடியுஞ்செய்கை யாவதுமில்லைகண்டாய்" என்னும் பிரமன் வசனத்தா னறிக.

'அன்றியு நின்னுட னனேகர்தம்மையு-மொன்றெனவே நினைந்துரைக்கின்றார் சிலர்' என்றது, அநேகேசுரவாதிகளை; இவர்கள், வீடுமுதலிய கட்டிடங்களை அனேகர் சேர்ந்தியற்றக் காண்கின்றோம்;ஆதலால், பெரிய நிலவுலகத்தையு மநேகர் சேர்ந்தியற்றுநிற்பரெனக் கூறுவர், இதனை:—"இல்லத்தைப் பல்லோர்கூடி யியற்றுதல் கண்டாமத்தாற் - செல்லொத்த குழலாய் வையஞ் செய்தவர் பலரோயன்னர் - தொல்லைக்கு ளாதனீங்கித் துயரறன் முத்தியென்பார்-அல்லுற்ற மனத்தாரான வநேகேச வாதரன்றே" என்னுஞ் செய்யுளானறிக. (உச)

காலமுங் கருமமுங் கடந்த தோர்பொருண்
மூலமுண் டோவென மொழிகின் றார்சிலர்
மேலுமுண் டோசில விளம்ப விஞ்சையின்
பாலுறு முணர்ச்சியே பரமென் பார்சிலர்.

(இ-ள்.) காலத்தையுங் கருமத்தையுங்கடந்த மூலமாகிய ஒருபொருளுண்டோ? என்று சிலர் கூறுகின்றார்கள். மந்திரத்தினாலுண்டாகிய உணர்ச்சியே கடவுளல்லது வேறு சொல்ல இன்னஞ் சிலவுண்டோ? என்று சிலர் கூறுகின்றார்கள்.

காலமுங் கருமமுங்கடந்த தோர்பொருண் மூலமுண்டோவென மொழிகின்றார் சிலர், என்றது, காலவாதிகளையுங்கருமவாதிகளையுமாம். இவருள், காலவாதி, காலமென்பதோர் முதலின்றி, யாதுங் காரியப்படாமையால் காலமே கருத்தா வென்பன். "காலமெனுங் கடவுளினைக் கழியவுளதேதுமிலை - ஆலநிழலமர்ந்தவனு மரிபிரமாதியரெவருஞ்-சீலமுடைச் சிருட்டிமுதற் றிகழ்வனவாகச் சுழற்றத்-தூலமொடு சூக்குமமாய்த் தொடர்ந்துதொடர்ந் தேவருமால்" என்னுஞ் செய்யுளானறிக. இனி, கருமவாதி, வினையினால் பலவிதமாகி நின்றே வினையின்பலத்தை விளைவிக்குமென்று கூறுவன்.

'விஞ்சையின்பாலுறு முணர்ச்சியே பரமென்பார் சிலர்' என்றது மந்திரவாதிகளை - இவர்கள், மந்திரத்தின் வல்லபமானது தேவர்களை யேவல்கொள்ளும், சாபானுக்கிரகங்களைச் செய்யும், பிரமாதியர்களை யுயரச்செய்தது மிம்மந்திரமே யாதலால், மந்திரோபாசனையையன்றி வேறுகருத்தா வில்லையென்று கூறுவர். இதனை:—

"மந்திரத்தாலழைத்திடவே வானவரும் வந்திடுவர் - மந்திரத்தால் வசீகரணமுதல்வ லிகள் வந்தெய்தும் - மந்திரத்தாலாக்கி யழித்திடலுமாக்கியிடும்- மந்திரத்தின்வலியே காண் வானவருமானவர்தாம்" என்பதனுலுணர்க. (உஉ)

ஆற்றுறு புனல்படிந் தழுக்கு நீக்கலார்
சேற்றிடை வீழ்ந்தென மறைகள் செப்பிய
நீற்றொடு கண்டிகை நீக்கி வன்மையால்
வீற்றொரு குறிகொடு மேவு வார்சிலர்.

(இ-ள்.) ஆற்றிலுள்ள நீரில்முழுகிச் (சரீரத்திலுள்ள) அழுக்கைநீக்காமல் சேற்றில்வீழ்ந்ததுபோல,அஞ்ஞானவலியினல் வேதங்களிற் கூறப்பட்ட விபூதி ருத்திராக்ஷங்களைநீக்கி வேற்றுச்சின்னங்களைத் தரித்துகொண்டு சிலரிருக்கின்றார்கள்.

வேற்றுமதச் சின்னங்களைத் தரித்தவர்க்குப் பாசநீக்கமும் ஆத்துமஞானமு மமைவதின்மையால், 'ஆற்றுறுபுனல்படிந் தழுக்குநீக்கலார்- சேற்றிடைவீழ்ந்தென' என்று கூறினார். விபூதி ருத்திராக்ஷமணியாதவர்கட்கு ஒருபயனு மென்றென்பதனை:- "தயங்கியநீறுட றரித்திலாரெனி - னியங்கறமெத்துணை யியற்றிமுற்றினும்-பயங்கது வுதலில்ல பலவுமுற்றிய - வியங்கலில்பயிர்க்குறு காயலின்றென" எனவும், "உருத்திராக்கிரு கண்ணெனுமுருத்திரவக்கந்-தரிப்பதுண்டெனிலெவ்வுலகும்பெறத்தகுமான் - முருக்குதெய்வரு முன்னரிலார்முருங்குவரிதுநீ - யருத்திகூர்தரமேலவர்க் கேட்டுணர்ந்தறிதி" எனவும் வருஞ் செய்யுட்களா னுணர்க. நீற்றொடுகண்டிகை நீக்கி வன்மையால் - வீற்றொருகுறிகொடு மேவுவார்' என்பதனை—"எண்டிகழ்மறையீறெல்லா மியம்பும்வெண்ணீற்றுமும்மைப்- புண்டரமக்கமாலை சிவலிங்கபூசைதம்மின் - விண்டிடாவயிரங்கொண்டு இகிரியான்வெந்தபுண்ணைத் - தண்டுசெங்காழிகஞ்சக் குறிகளைத்தனுவிற்றுங்கி" என்றுஞ் செய்யுளா னுணர்க. (உங)

காமமோ டுவகையுங் களிப்பு நல்கலால்
வாமமே பொருளென மதிக்கின் றார்சிலர்
தோமிலா மூவகைத் தொழிலும் வேள்வியு
மேமமார் பொருளென வியம்பு வார்சிலர்.

(இ-ள்.) சிலர் காமத்துடன் சந்தோஷத்தையும் மயக்கத்தையுந் தருதலால் வாமசமயமே மேலானசமயமென்று மதிக்கின்றார்கள். சிலர் குற்றமற்ற முத்தொழிலும் யாகமுமே இன்பந்தரத்தக்க மெய்ப்பொருளாமென்று கூறுகின்றார்கள்.—எ-று.

'காமமொடுவகையுங் களிப்புநல்கலால் - வாமமேபொருளெனம திக்கின்றார்,என்றது வாமசமயிகளை, இவர்கள் ஸ்ரீசக்கராதியந்திரங்களில் தேவியையாவாகித்துப்பூசிப்பதும்,பூசையிலிழிகுலமாதாயினுமவள் வாயெச்சிலைப்பிரசாதமாக அருந்துதலும்,மதுவாதிகளையுண்டு மயங்கிச் சத்தியேதானாகப் பாவித்தலும் முத்தியென்றுகூறுவர். "வலைபுலை வண்ணார்செம்மார் மற்றுமிப்படியில்வந்த - குலமதிற் றையலாளைக் குறித்துநாயகிதா னென்றே-யலமர வவளையர்ச்சித்தவளொழிற் சேடம்வாங்கித் - தலையுறக் கொண்டங்குண்ண றலைவிசந் நிதியாமன்றே." என்றும், "தண்ணியசுட்கச் சமயிகாளெவ்வுருவும்- பெண்ணுருவிற்காணும் பிறப்பதெலாம்—உண்ணறவே-புத்தியுடன்முத்திப் பொருளுந்தரும்பிணமே - சத்தியிலாதவெலாந் தான்." எனவும்வருஞ் செய்யுட்களானுணர்க.

மூவகைத்தொழிலும் வேள்வியு மேமமார்பொருளென வியம்புவார்சிலர்' என்றது,பூர்வமீமாஞ்சகர்களை. இவர்கள், யசனயாசனுதி கிரியைகளும் ஆவகனீயாதி யக்கினித்திரையைக் கிரியைகளும், இவைகளைக்கொண்டு செய்யும் வேள்விகளுமே

முத்தியைத் தருமமென்று கூறுவர். " முன்பு தாருகவனத்தின் முனிவார்யாருமீசற் - கன்பிலராகிவேள்வி யளப்பிலபுரிந்துதாமே - யின்புறுமுத்திதன்னை யெய்துவாருவன் னியங்கக் - துன்புறவாளாநோற்றுத் துணிவினுலொழுகலுற்றார்." என்னுஞ் செய்யு ளா னுணர்க. " முற்றும் வேள்விய தேதரும்பர முத்தி யென்றுயர் புத்தியிற் - சற்று மெம்பெரு மானையெண்ணிலர் தாருகாவனமாதவர் " என்றார் பிறரும். (உச)

உரையிசை யாதியா மொலிகள் யாவையும்
பிரமம தேயெனப் பேசு வார்சில
ரரிதுசெய் நோன்பினு லடைந்த சித்திகள்
பொருள்பிறி திலையெனப் புகல்கின் றார்சிலர்.

(இ-ள்.) சிலர் சொல் வேதம் முதலியவற்றாலுண்டாகு மொலிகளனைத்தும் பிரமமென்று கூறுகின்றார்கள். சிலர் அருமையாக அனுஷ்டித்த விரதத்தினாலடைந்த சித்திகளே மெய்ப்பொருளன்றி வேறில்லையென்று கூறுகின்றார்கள்.—எ-று.

உரையிசையாதியா மொலிகள்யாவையும் பிரமமதேயெனப் பேசுவார்சிலர் என்றது, சத்தப்பிரமவாதிகளை - இவர்கள் ஒலியே கருத்தாவன்றி வேறுகருத்தவின் றென்றுகூறுவர். " தருமொலி பிரமம தெனச்ச மைந்திடு- மகமுறு மறிவிலி யகிலமூ லமு - மிகுதரு மொலியல தலதுவேறென - யிகபரமதுவறி யாமலோதுவான்." என் னுஞ் செய்யுளா னுணர்க.

அரிதுசெய் நோன்பினு லடைந்தசித்திகள்- பொருள்பிறி திலையெனப் புக ல்கின்றார் ' என்றது சித்தவாதிகளை - இவர்கள். அவுஷதாதிகளையுண்டு பத்தியயோ காதிகளோ டிருந்து உடலழியாமற் காத்து அணிமாதிசித்திகளை யடைந்து ஆகாயகம னாதிகள் செய்வதே முத்தியென்று கூறுவர். "கோதறுசெம்புதன்னைக் குலவியவிர தஞ்சேர்ந்து - வேதகஞ்செய்யுமாபோல் மெய்யெனுங்காயந்தன்னை-வேதகமருந்தாற் செய்து மேவுநன்முத்திசித்தி - நாதனுயிருக்கநாத னுகவேநவிலுமன்றே " என்னுஞ் செய்யுளா னுணர்க. (உரு)

பெருமைகொள் குலந்தொறும் பிறந்து செய்திடும்
விரதமுஞ் சீலமும் வினைகண் மாற்றிட
வருகலும் பிறவுமா யங்கம் விட்டுயிர்
பரவுதல் வீடெனப் பகரு வார்சிலர்.

(இ-ள்.) சிலர் சிறப்புமிக்க ஒவ்வொருகுலத்திலும்பிறந்து செய்கின்ற விர தங்களும் ஆசாரங்களும் பாவங்களையொழிக்கும் வண்ணம் காயக்கிலேசவிரதஞ்செய் தலும், மற்ற (அக்கினிப்பிரவேசாதிகளினால்,) தேகத்தையொழித்து உயிர்நீங்குதலு மே முத்தியென்று கூறுகின்றார்கள்.—எ-று.

இவர்கள் விரதவாதிக ளென்பவர்கள். மகாசங்கிராந்தி சாந்திராயன கிருஸ் ராயன விரதங்களும் அக்கினிப்பிரவேசம் பிரயாகைகட்ட மாதிகளில் மரணம்முத லியகிரியைகளுமே முத்திதருமென்று கூறுவார்கள். "விரதமேபரமாகவேதியருஞ்-சர தமாகவே சாத்திரங்காட்டினர் " என்னுந் திராவிடவேதத்தா னுணர்க. (உசு)

அறிந்தறிந் துயிர்தொறு மதுவ தாகியே
பிறந்திறந் துணர்வெலாம் பெற்று நோன்பொடு
துறந்துகொன் றிட்டன துய்த்துக் கந்தமற்
றிறந்திடன் முத்தியா மென்கின் றார்சிலர்.

(இ-ள்.) சிலர் உயிர்கடோறும் அவ்வவ்வுருவத்தைப்பெற்றுப் பிறந்து அவ்வவற்றின் குணங்களையறிந்தறிந்து பின்னரிறந்து, (தான் அவ்வச்சனனங்கடோறுங் கொண்டிருந்த) உணர்வோடுதோன்றி, விரதமுடையவனுய்த் துறவுபூண்டு கொல்லப்பட்டவைகளைத் தின்று பஞ்சகந்தங்களுமொழிந்து இறத்தலே முத்தியென்றுகூறுகின்றார்கள்.—எ-று.

'கந்தமற் றிறந்திடன் முத்தியாமென்கின்றார்' என்றது பௌத்தவாதிகளை, இவர்கள், ஒவ்வோருயிரினும் புகுந்து பிறந்து அவ்வவற்றின் குணகுணங்களை யறிந்து பஞ்சகந்தங்களுங் கெட்டு, பாடாணம்போற் கிடத்தலே முத்தியென்று கூறுவர். "பஞ்சகந்தமும் போக்கிப் பாடாணம்போலார்த- லெஞ்சாப்பிடகவியல்." என்னுஞ் செய்யுளாலுணர்க. (உஎ)

நன்னல மாதரை நண்ணு மின்பமே
யுன்னரு முத்தியென் றுட்கொள் வார்சில
ரின்னன துறைதொறு மெய்தி யாவருந்
துன்னரும் பிறவியுட் டுன்ப நீங்கலார்.

(இ-ள்.) சிலர் நல்ல அழகினையுடைய மாதர்களையடைந்து புணரும் இன்பமேநினைத்தற்கரிய முத்தியென்று சிந்தித்திருக்கின்றார்கள். இவ்வகையாகிய மார்க்கங்கடோறு மடைந்து (உலகத்தவர்கள்) அனைவரும் அடைதற்கரிய பிறவித்துன்பத்தை நீங்காதிருக்கின்றார்கள்.—எ-று.

'மாதரை நண்ணுமின்பமே யுன்னருமுத்தியென் றுட்கொள்வார்' என்றது, உலோகாயதரை; இவர்கள், காண்டலளவைக்குரிய உலகம் நித்தியமென்றும், சடமாகிய தேகமே ஆத்மாவென்றும், மாதர்களது போகமே முத்தியென்றுங் கூறுவர். "இறந்தார்பிறவா ரிலதுவானீசன் - அறம்பாவ மாயிழையார்கூடல் - சிறந்த - கலமார்சுவர்க்க நரகம்பிரித-லுலகாயதன்ற னுணர்வு" என்னுஞ் செய்யுளானுணர்க.

இறந்தன வரம்புல கெவரும் வேதநூன்
மறந்தனர் பவநெறி மல்கி நாடொறுஞ்
சிறந்தன வவையுயிர் செய்த தொல்வினை
யறிந்தரு ளையநீ யமைத்த வாயினும்.

(இ-ள்.) உலகத்தில் வரம்பு அழிந்துவிட்டன. எவர்களும் வேதசாஸ்திரங்களை மறந்துவிட்டார்கள். பாவவழிகள் நாள்தோறும் உலகத்தில் நிறைந்து சிறப்புற்றன. அவையனைத்தும் உயிர்கள்செய்த ஊழ்வினையையறிந்து கருணைநிதியாகியபெருமானே! தேவரீராலமைக்கப்பட்டனவே யாயினும்.—எ-று.

வேதங்கள் அடிதலை தடுமாறிய காரணத்தால், யாவரும் விலக்கையே விதியாகக்கொண்டு நடத்தலின், 'இறந்தனவரம்புலகு' என்றும், அவ்வேதங்கள் பலவாறு சிதைந்தொழிதலின், 'எவரும் வேதநூன் மறந்தனர்' என்றும், தீயநெறியினையே சிறந்தனவாகக்கொண்டு நடத்தலின், 'பவநெறி மல்கி நாடொறுஞ் சிறந்தன' என்றும், இவையனைத்துந் தேவரீரது கட்டளைப்படி நடக்கின்றனவேயன்றி வேறன்றாகலான் 'உயிர்செய்த தொல்வினை யறிந்தருளைய நீயமைத்த' என்றுங் கூறினார்.

இதுமுத லிரண்டுபாடல்கள் குளகம். (உக)

அங்கவர் போதமுற் றுசோ ரீஇமனச்
சங்கையு மகன்றுநின் சரண மேயுறப்
புங்கவ சிறிதருள் புரிய வேண்டுமா
லெங்கடம் பொருட்டென விறைவன் கூறுவான்.

(இ-ள்.) அவ்வுயிர்களெல்லாம் மெய்ஞ்ஞானத்தை யடைந்து அஞ்ஞானத்தையொழித்து மனச்சந்தேகமுநீங்கித் தேவரீரது திருவடிகளையே யடைய எமதாண்டவரே! அடியேங்கள்பொருட்டுச் சற்றுத் திருவருள் புரியவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்துகொள்ளச் சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுவார்.—எ-று.

போதமுறுவழி, ஆசொழிதலும் மனச்சங்கை நீங்கலும் திருவடிப்பேறெய்தலுங் கூடாமையால், 'அங்கவர் போதமுற் றாசொரீ இமனச் சங்கையு மகன்று நின் சரண மேயுற' என்றும், அவை, தேவரீரது திருவருளாலன்றி முடியாவாகலான், 'புங்கவ சிறிதருள் புரிய வேண்டும்' என்றுங்கூறினர். (கூ0)

இனிதொரு திறமதற் கிசைத்து மாருயி
ரனையவும் புரப்பவ னாத லாலவர்
வினையறு நெறிமையால் வேண்டு கிற்றிநின்
மனனுறு மெண்ணினை மறுத்தி மாசிலாய்.

(இ-ள்.) இனிமையாகிய ஒருமார்க்கத்தை அதற்காகச் சொல்லுகின்றோம்; அரிய உயிர்களனைத்தையும் இரக்ஷிப்பவனாகையால் அவ்வுயிர்களது பாவங்களை நீக்க வேண்டிய முறைமையால் நீ வேண்டிக்கொள்கின்றாய்; குற்றமற்ற திருமாலே! உன் மனதிலுள்ள எண்ணத்தை மறுக்கக்கடவாய்.—எ-று.

திதிகர்த்தாவாகலின் உலகின் மாறுதலைக் குறித்துச் சிந்திக்கின்றனை யென்பார், 'ஆருயிரனையவும் புரப்பவனாதலாலவர் வினையறுநெறிமையால் வேண்டுகிற்றி' என்று கூறினர். (கூக)

காதலி னருளுமுன் கலையின் பண்மையிற்
கோதறு மோர்கலை கொண்டு நேமிசூழ்
மேதினி யதனிடை வியாத னென்றிடு
போதக முனியெனப் போந்து வைகுதி.

(இ-ள்.) விருப்பத்துடன் திதித்தொழில்செய்கின்ற உனது கலைத்தொகுதிகளுள் குற்றமற்ற ஓர் கலையோடு கடல்சூழ்ந்த நிலவுலகத்தில் வியாசனென்று கூறும் ஞானமுனிவனாகத் தோன்றி வசிக்கக்கடவை.—எ-று.

திருமாலே! நீதிதிகர்த்தாவாகலின் நீயே வியாசனாகச்செனித்து அம் மாறுதலைத்திருத்தி யுலகைச் சீர்ப்படுத்தக்கடவையென்று கூறியருளினானென்பதுகருத்து.

போந்தவ ணிருந்தபின் புகரி லாமறை
யாய்ந்திடின் வந்திடு மவற்றை நால்வகை
வாய்ந்திட நல்கியே மரபி னோர்க்கெலா
மீந்தனை யவரகத் திருளை நீத்தியால்.

(இ-ள்.) நீ அவ்வாறு சென்று அங்குவசித்தபின்பு,குற்றமற்ற வேதங்களைச் சிந்திப்பையாயின் அவை தாமேவந்து பொருந்தும்; அவ்வேதங்களை நான்குவகையாகப் பகுத்து அவற்றையோதவேண்டிய முறைமையினை வேதியர்முதலிய மூவர்களுக்குங் கொடுத்து அவர்களது மனமயக்கத்தை யொழிக்கக்கடவை.—எ-று.

'மரபினோர்க்கெலாம்' என்றது வேதங்களுக்குரிமைபூண்டுள்ள முதன் மூன்றுவருணத்தினராயுமாம். (கூகூ)

அன்னதோர் மறையினை யறிந்து மையமா
வுன்னிய நிலையின ருள்ளந் தேறவு

மன்னைய ரல்லவர் மரபிற் றேரவு
மின்னமோர் மறையுள திதுவுங் கேண்மதி.

(இ-ள்.) அத்தகைய வேதங்களையுணர்ந்துஞ் சந்தேகமாக நினைக்கின்றவர்களது மனந்தெளியவும், (வேதமோதுதற்கு) அதிகாரிகளல்லாதவர்கள் முறையேதெளிந்துகொள்ளவும் இன்னமொரு இரகசியமிருக்கின்றது இதனையுங்கேட்கக்கடவாய்.

மன்னவரல்லவர் - வேதத்துக்கு அதிகாரிகளல்லாதவர். அவர் நான்கு வருணத்துப் பெண்களுஞ் சூத்திரருமாம். எனவே, சூத்திரர் வேதமோதுதற் கதிகாரிகளல்லரென்பது பெறப்பட்டது. ஆயினும், அவ்வேதப்பொருளாயுள்ள சிவாகமங்களையும் புராணங்களையு மோதுதற் கதிகாரமுண்டென வறிக. இதனை :—"அந்தணர்முன் மூவர்க்கு மாமறையு மாகமமுஞ்-சந்தையுற வோதுமது சால்பு" எனவும், "மற்றையவர் சைவாக மத்தை மதித்துணர்வா-ருற்றபுரா ணாதிவித மும்" எனவும் வருஞ் சைவசமய நெறியா னுணர்க. (ருச)

எற்றம தாகிய மறைக்கும் யாமுனஞ்
சாற்றிய வாகமந் தனக்கு மாங்கது
வீற்றுற வருவது மன்று மேன்மையா
லாற்றவு நமதிய லறையு நீரதே.

(இ-ள்.) உயர்வாகிய வேதத்திற்கும் எம்மால் முன்னஞ் சொல்லப்பட்ட ஆகமத்திற்கும் அவ்விரகசியமானது வேறாகவருவதுமன்று, மிக்க சிறப்போடு நமது இலக்கணத்தையே கூறுந் தன்மையுடையது.—எ-று.

வேதங்கள் ஸ்தோத்திர ரூபமாகவும், ஆகமங்கள் கிரியாரூபமாகவும், புராணங்கள் கதாரூபமாகவு மமைந்து ஒன்றற்கொன்று வேறுபாடின்றி யனைத்துமொரே பொருளைக் கூறுந்தன்மை யுண்மையால், 'மறைக்கும் யாமுனஞ் சாற்றிய வாகமந் தனக்கு மாங்கது வீற்றுற வருவது மன்று' என்று கூறினர். (ருரு)

என்பெய ரதற்கெனி லினிது தேர்ந்துளோர்
துன்பம தகற்றிடுந் தொல்பு ராணமா
மொன்பதிற் றிருவகை யுண்ட வற்றினை
யன்புடை நந்திமுன் னறியக் கூறினேம்.

(இ-ள்.) அதற்கு யாதுபெயரோவெனில் இனிமையாகத் தெளிந்தவர்களது (பிறவித்) துன்பங்களை யொழிக்கின்ற பழையபுராணம் என்பதாம். அவை பதினெட்டுவகையினையுடையன. அவற்றை நம்மிடத் தன்புடையவனாகிய நந்திக்கு முன்பு தெரியும்படி கூறியுள்ளோம்.—எ-று.

சரிதாரூபமாய்க் கேட்போர்களது மனக் கிலேசங்களை யொழித்தலின், 'இனிது தேர்ந்துளோர் துன்ப மகற்றிடுந் தொல் புராணம்' என்றார். (ருசு)

ஆதியி னந்திபா லளித்த தொன்மைசேர்
காதைகள் யாவையுங் கருணை யாலவன்
கோதற வுணர்சனற் குமாரற் கீந்தன
னீதியொ டவனிடை நிலத்திற் கேட்டியால்.

(இ-ள்.) முதலில் நந்திக்கு நாமுபதேசித்த பழைமையாகிய புராணங்களனைத்தையும் கிருபையினாலே அந்நந்தி குற்றமறவுணருஞ் சனற்குமாரமுனிவனுக்கு உபதேசித்தனன். முறைமையோடு அச்சனற்குமார முனிவனிடத்தில் நிலவுலகத்தில் நீ கேட்கக்கடவாய்.—எ-று.

" அன்ன மாவே மண்ணொடு கிளியே-யில்லிக் குடமா டெருமை நெய்யரி-யன்னர் தலையிடை கடைமா ரைக்கர்" என்று கூறு மிலக்கணப்படி முதன் மாறைக்க ரிலக்கணம் வாய்க்கப்பெற்றவ ராகலின், 'கோதற வுணர் சனற் குமாரன்' என்று கூறினர். (கஅ)

என்னலு நன்றென விரைந்து தாழ்ந்தெழீஇ
முன்னவன் விடைகொடு முளரி யான்முதற்
றுன்னிய வானவர் தொகையொ டேகியே
தன்னுல கத்தின்மால் சார்தன் மேயினான்.

(இ-ள்.) இவ்வாறு சிவபெருமா னருளிச்செய்யவும் திருமால் நல்லதென்று சம்மதித்து வணங்கியெழுந்து முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானிடத்து விடைபெற்றுக்கொண்டு பிரமன்முதலாக நெருங்கிய தேவர்கூட்டத்துடன் சென்று தனது உலகமாகிய வைகுந்தத்தை யடைந்தான்.—எ-று.

'நன்றென' என்பது, அவ்வாறே யாகுக வென்னும் பொருளில் வந்தது.()

சார்தலு மயன்றனைச் சதமக த்தனை
யார்தரு மமரரை யருளி னவ்வவர்
சேர்தரு புரந்தொறுஞ் செல்லற் கேவியே
கார்தரு மெய்யுடைக் கடவுள் வைகினன்.

(இ-ள்.) அவ்வாறு சேர்ந்தவுடனே கரிய திருமேனியையுடைய திருமால் பிரமனையும், இந்திரனையும், அருகில் நெருங்கிய தேவர்களையும் திருவருளோடும் அவ ரவர்கள் வசிக்கின்ற நகரங்கள்தோறும் போகும்படி யனுப்பிவிட்டு அங்கு வீற்றிருந் தருளினர்.—எ-று.

நூறு அசுவமேதயாகங்களைச் செய்தவர்கள் இந்திரராய்ச் சுவர்க்கபோகந் துய்ப்பரென்று கூறு முறைமையால், இந்திரனைச் 'சதமகத்தன்' என்று கூறினர். இதனை :—" நூற்றுப்பத் தடுக்கிய நாட்டத்து நூறுபல் - வேள்வி முற்றிய வென்றடு கொற்றத் - தீரிரண் டேந்திய மருப்பி னெழினடைத் - தாழ்பெருந் தடக்கை யுயர்த்த யானை - யெருத்த மேறிய திருக்கிளர் செல்வனும்" என வருந் திருமுருகாற்றுப் படையானு முணர்க. (கக)

திருவொடு மருவியோன் செறிவுற் றெங்கணும்
பரவுறு மியல்பெறு பகவ னாதலாற்
றரணியி லருளினாற் றனது சத்தியி
லொருகலை தன்னுட னுதிக்க வுன்னியே.

(இ-ள்.) இலக்ஷுமிமணாளராகிய திருமால் எங்கும் நிறைந்து வியாபகமா யுள்ள தன்மையினையுடைய கடவுளாதலால், இந்நிலவுலகத்தில் திருவருட்டன்மையி னால் தனது சத்திகளில் ஒருகலையோடு தோன்றும்படி திருவுள்ளங்கொண்டு.—எ-று

திருமாலுக்கு வியாபகமுடையா னென்னும்பொருடரும் விஷ்ணுவென்னும் பெயருடைமையால், 'திருவொடு மருவியோன் செறிவுற் றெங்கணும்-பரவுறு மியல் பெறு பகவ னாதலால்' என்று கூறினர். (சo)

பங்கயத் தவன்வழிப் பராச ரப்பெயர்த்
துங்கநன் முனிபனித் தூவ லெல்லையிற்
கங்கையி லியோசன கந்தி யோடுற
வங்கவர் தம்மிடை யனைதரித்தனன்.

(இ-ள்.) தாமரைமலரிலுள்ள பிரமனது சந்ததியில்வந்த பராசரனென்னும் பெயரையுடைய உயர்வுபொருந்திய நல்லமுனிவரர் பனித்தூவலினாலேசூரியகிரணம் மறைக்கப்பட்ட பகற்காலத்தில் கங்கைநதிக்கரையிலே பரிமளகந்தியோடுசேர,அவர்களிடத்தில் (புத்திரராக) அவதரித்தனர்.—எ-று.

பிரமனது புத்திரபாரம்பரையிற்சேர்ந்த வராகலின், 'பங்கயத்தயன் வழிப் பராசரப்பெயர்த்தூங்கநன்முனி' என்றுகூறினார். பனித்தூவலெல்லையில் = பனித்தூவலினாலே சூரியகிரணம்மறைக்கப்பட்ட பகற்காலத்தில். கங்கைக்கரையிலோடம் விடுத்திருந்த மச்சகந்தியென்னு மாதைக்கண்டு மோகங்கொண்ட பராசரமுனிவர், அம்மச்சகந்தத்தையொழித்து நன்மணமிகச்செய்து கூடினமையால் 'யோசனகந்தியோடுற'என்றுகூறினார். (சக)

மற்றவன் வதரிகா வனத்தில் வைகியே
யற்றமில் வாதரா யணனெ னும்பெயர்
பெற்றன னாகியெம் பிரான்ற னாணையாற்
கற்றிடா துணர்ந்தனன் கரையில் வேதமே.

(இ-ள்.) அவர் வதிரிகாவனத்தில் வசித்து (அதுகாரணத்தினால்) குற்றமில்லாத வாதராயணனென்னும் பெயரைப் பெற்றவராய் எமது சிவபெருமானுடைய கட்டளையினால் அளவற்ற வேதங்களனைத்தையும் ஓதாதுணர்ந்தனர்.—எ-று.

வதிரிகாவனம் - இலந்தைமரக்காடு. பதிரி = இலந்தை. இது, வதிரி என வந்தது. திருமாலின் அவதாரபுருஷரும் பூரணஞானமுடையவருமாகலின், 'அற்றமில் வாதராயணன்' என்றும், சகலவேதங்களையு மோதாதுணர்ந்தது சிவபெருமானது திருவருட்டிறனாகலின், 'எம்பிரான்றனாணையாற் கற்றிடா துணர்ந்தனன் கரையில் வேதம்' என்றுங்கூறினார். (சஉ)

மோனக முற்றிய முனிவர் மேலவன்
றானுணர் மறையெனுந் தரங்க வேலையி
லானதோர் பொருளினை யறிஞர் பெற்றிடத்
தூநெறி கொண்டநாற் றுறைசெய் தானரோ.

(இ-ள்.) மௌன நிலையில்தேர்ந்த முனிவர்கள் தலைவராகிய அவ்வாதராயணர் தாம் ஓதாதுணர்ந்த வேதமென்னும் அலைகளையுடைய சமுத்திரத்தில்பொருந்திய உண்மைப்பொருளை அறிஞர் பெற்றுய்யும்பொருட்டுத் தூய்மையாகிய மார்க்கமமைந்த நான்குவகுப்புகளாக இயற்றியருளினார்—எ-று.

வேதங்கள் பெருங்கடல்போன்று விரிந்துகிடத்தலின், 'தானுணர்மறையெனுந் தரங்கவேலை' என்றும், அவ்வேதப்பொருளை யொருவழிப்படுத்தி நான்காகப் பிரித்து உலகிற்குபகரித்தமையின், 'ஆனதோர்பொருளினையறிஞர்பெற்றிடத் தூநெறி கொண்ட நாற்றுறைசெய்தான்' என்றுங்கூறினார். (சங)

கரையறு வேதமாங் கடலை நான்கவாய்ப்
பிரிநிலை யாக்கியே நிறுவு பெற்றியாற்
புரைதவிர் முனிவரன் புகழ்வி யாதனென்
றொருபெயர் பெற்றன னுலகம் போற்றவே.

(இ-ள்.) அளவற்ற வேதங்களென்னுங் கடலை நான்காகப் பகுத்து நிலைபெறச்செய்த தன்மையினால் குற்றமற்ற அவ்வாதராயணமுனிவரர் புகழையுடைய வியாதனென்று கூறும் ஒருபெயரையும் உலகத்தார் துதிக்கும்படி பெற்றுக்கொண்டனர்.—எ-று.

வேதங்களையுணர்ந்து அந்நெறியே யொழுகுமுறைமையால், 'புரைதவிர் முனிவரன்' என்றும், அவ்வேதங்களைப்பகுத்து அதுகாரணமாகப் பெரும்புகழ் விளையப்பெற்றமையால், 'புகழ்வியாதனென் றொருபெயர்பெற்றன னுலகம்போற்ற' என்றுங் கூறினார். வதிரிகாச்சிரமத்தில் வைகினமையால், வாதராயணனென்றும், வேதங்களை நான்காகப் பாகுபாடுசெய்தமையால், வியாதனென்றுங் காரணப்பெயர் பெற்றனனென வறிக. (சச)

விரவிய மறைதெரி வியாத னுமவன்
குரவனே யாஞ்சனற் குமாரன் றன்னிடை
யிருவகை யொன்பதா மியல்பு ராணமு
மரபொடு கேட்டவை மனத்துட் கொண்டபின்.

(இ-ள்.) நிறைந்த வேதங்களனைத்தையு முணர்ந்த வியாதமுனிவரர் தமது ஆசாரியராகிய சனற்குமாரமுனிவரிடத்தில் பதினெண் புராணங்களையும் முறைமைப்படிகேட்டு அப்புராணங்களைத் தம்மனத்தில் அமைத்துத் தெளிந்தபின்பு—எ-று.

பதினெண்புராணங்களும் தாம் ஓதாதுணர்ந்த வேதப்பொருளாகவே யமைந்து கிடப்பினுந் தமக்கொரு ஆசிரியர்வேண்டுமென்பதும், அவ்வாசிரியர் சிவபெருமானது சிஷ்யபரம்பரைப்படியே வந்தவராயிருத்தல்வேண்டுமென்பதுங் கருதிச் சனற்குமாரமுனிவரிடத்து முறைப்படி கேட்டுணர்ந்தனனென்பார், 'குரவனே யாஞ்சனற் குமாரன்றன்னிடை யிருவகை யொன்பதா மியல்புராணமும் மரபொடு கேட்டவை மனத்துட்கொண்டனன்' என்றுகூறினார். (சரு)

எத்திடு சுருதிக ளிசைக்கு மாண்பொருண்
மாத்திரைப் படாவென மாசில் காட்சியர்
பார்த்துணர் பான்மையாற் பலவ கைப்படச்
சூத்திர மானவுஞ் சொற்று வைகினான்.

(இ-ள்.) யாவருந் துதிக்கின்ற வேதங்கள் சொல்லிய மாட்சிமைப்பட்ட பொருள்களனைத்தும் ஒரு அளவிலடங்காவென்று, குற்றமற்ற தோற்றத்தினையுடைய அறிஞர்கள் பார்த்துணர்ந்து கொள்ளுந் தன்மையோடு அப்பொருளைப் பலவகையான சூத்திரங்களாகவுங் கூறி வசித்தருளினார்.—எ-று.

வேதம் அநாதி மலமுத்தராகிய சிவபெருமான் றிருவாக்காயுள்ளதாகலின், அதனைப்பலரும் போற்றுதலும், மெய்ப்பொருளமைந்து கிடத்தலுமுடைமையின், 'எத்திடு சுருதிகளிசைக்குமாண்பொருள்' என்றார். வேதம் சிவபெருமான் றிருவாக்கென்பதனை:— என்சொல்கே னென்சொல்கேனென் னேழைமையிருந்தபாவம் - புன்சொலாற் பாடிப்பாடிப் புகழ்ந்துனைத் துரையாநின்றேன் - வன்சொலார் முன்செலாத மதுரையிற் சொக்கேவேத - முன்சொலா லுன்னைவாழ்த்தி யுன்னையு முணராதுன்றே" எனவரும் பரஞ்சோதிமுனிவர் திருவாக்கானுமுணர்க.

சூத்திரம்=வியாச சூத்திரம். அது, வேதாந்த சூத்திரமெனவும், பிரமமீமாஞ்சையெனவும், உத்தரமீமாஞ்சையெனவும் பெயர்பெறும். அதற்கு நீலகண்டசிவாசாரியர், சங்கராசாரியர், இராமாநுஜாசாரியர், மத்துவாசாரியர் என்னும் நால்வர் பாஷ்யங்கள்செய்தனர். சைவர்களாற்கொள்ளப்படுவது நீலகண்ட பாஷ்யம். மாயாவாதிகளாற் கொள்ளப்படுவது சங்கரபாஷ்யம். வைஷ்ணவர்களாற் கொள்ளப்படுவது இராமாநுஜ பாஷ்யம். மாத்துவர்களாற் கொள்ளப்படுவது மாத்துவபாஷ்யம். வியாசசூத்திரத்தின் மெய்ப்பொருளாயுள்ளது சைவசித்தாந்தப்பொருளாகிய நீலகண்ட பாஷ்யமேயாம். இதனை:— "தேவர்குறளுந் திருநான்மறை முடிவு - மூவர்தமிழுமுனிமொழியும் -

கோவைத் - திருவாசகமுந் திருமூலர்சொல்லு - மொருவாசகமென் றுணர்" என்னும் ஔவையா ரருமைத்திருவாக்காலுமுணர்க. இதில், முனிமொழி என்றது வியாசசூத்திரத்தை. (சசு)

மயலறு பயிலரோ வைசம் பாயனர்
சயிமினி சுமந்துவாந் தவத்தர் நால்வர்க்கும்
வியலிருக் காதியாம் வேத நான்கையு
முயர்வுறு தவத்தினன் முறையி னோதினன்.

(இ-ள்.) சிறந்த தவத்தினையுடைய வியாதமுனிவரர் மயக்கமற்ற பயிலர் - வைசம்பாயனர் - சயிமினி-சுமந்து என்றுகூறுந் தவமுனிவர்கள் நால்வர்க்கும் பெரிய இருக்குமுதலிய நான்குவேதங்களையும் முறைமைப்படி உபதேசித்தருளினர்.

'மயலறு' என்பதனை, பயிலர் - வைசம்பாயனர்-சயிமினி-சுமந்து என்னும் நால்வருக்கும் விசேடணமாகத் தனித்தனிப் பிரித்து அமைத்துக்கொள்க. இருக்காதியாம் வேதநான்காவன - இருக்கு - எசுர் - சாமம் - அதர்வணமென்பன. (சஎ)

தோல்வரு மறைகளின் சூத்தி ரத்தையு
மேல்வரு சயிமினி முதல மேதையர்
நால்வரு முணரிய நவின்று நல்கினு
னால்வரு கடவுளை யனைய தன்மையான்.

(இ-ள்.) கல்லாலவிருக்ஷத்தின்கீழ் குருமூர்த்தமா யெழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தியைப்போன்ற தன்மையையுடைய வியாதமுனிவரர் கெடுதலில்லாத வேதங்களின் சூத்திரத்தையும் மேன்மைபொருந்திய சயிமினிமுதலிய நான்குமுனிவர்களும் உணரும்படி அருளிச்செய்து உபதேசித்தருளினர்.—எ-று.

மேதையர் - பேரறிவினையுடையோர் - மேதை=பேரறிவு. உணரிய-செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். ஆல்வருகடவுள் - கல்லால விருக்ஷத்தின் கீழ்க்குருமூர்த்தமாக வெழுந்தருளிய தக்ஷிணாமூர்த்தி. (சஅ)

மெய்ம்முனி யனையவரை விளித்து நீரினி
யிம்மறை யியல்பினோ ரெவர்க்கு மீமென
வம்முறை நால்வரு மனைய வேதநூல்
செம்மையொ டளித்தனர் சிறந்து ளோர்க்கெலாம்.

(இ-ள்.) மெய்ம்மைபொருந்திய வியாதமுனிவரர் அந்நான்கு முனிவர்களையு மழைத்து இனி நீங்கள் இவ்வேதங்களை (ஓதத்தக்க) இயல்பினையுடைய யாவருக்கும் ஓதுவிக்கக்கடவீர்க ளென்று கூறியருள, அவ்வாறே அந்நான்கு முனிவர்களும் அவ்வேதங்களைச்சிறந்த பக்குவிகளனைவருக்கும் சிறப்போடு உபதேசித்தார்கள்.—எ-று.

இயல்பினோர் - வேதமோதத் தக்கபுண்ணியமும் பக்குவமும்வாய்ந்த விலக்கணமுடையோர். ஈயும் என்பது ஈம் என நின்றது. முறைப்படியோதுவித்தனரென்பார், 'செம்மையொடளித்தனர்' என்றுகூறினர். (சகூ)

அன்னதோர் முனிவர னதற்குப் பின்னரோ
பன்னருந் தொகையினுற் பதினெண் பான்மையாய்
முன்னுறு புராணநூன் முழுது முற்றிய
வின்னரு ளினிமையா லெனக்கு நல்கினன்.

(இ-ள்.) அத்தன்மையினையுடைய வியாத முனிவரர் அதன்பின்பு சொல்லுதற்கரிய தொகையினாலாகிய பதினெட்டுப் பகுப்பாகச் சிந்திக்கின்ற புராணங்கள் முழுமையும் சிறந்த திருவருட்டன்மையினால் எனக்கு உபதேசித்தருளினர்—எ-று.

'பன்னரும்' என்றது சொல்லிச் சிறப்பின்மே லிற்று. முன்னுமுதல்-கயர் வாக மதித்தல். (௫௦)

வேதமா துணர்ந்த வியாத மாமுனி
காதல னெனையக் கருணை செய்தினை
போதுறி யாவரு முணர வென்றனை
ஓதலி னுலகினி லவற்றைக் கூறினேன்.

(இ-ள்.) வேதங்களை யோதாதுணர்ந்த சிறந்தவியாதமுனிவரர் சிஷ்யனாகிய அடியேன்மீது திருவருள்சுரந்து இப்புராணங்க ளனைத்தையும் யாவருமுணரும்படி சொல்லக்கடவாயென்று கட்டளையிட்டருளினார்; ஆகையால் இந் நிலவுலகத்தில் அப் புராணங்களைச் சொல்லினேன்.—எ-று.

'காதலன்' என்பதற்கு விருப்புடைய னென்றாயினும், சிஷ்யபுத்திரனென்றாயினும் பொருள்கூறுதலாம். (௫௧)

காமரு தண்டுழாய்க் கண்ண னாகிய
மாமுனி யருளினன் மறைகள் யாவையுந்
தோமறு புராணநூற் றொகுதி யாவையு
நேமிகொ ளுலகெலா நிலவி யுற்றவே.

(இ-ள்.) அழகமைந்த குளிர்ந்த துளசிமாலையை யணிந்த திருமாலாகிய சிறந்த வேதவியாசமுனிவரது திருவருளினால் சகலவேதங்களும், குற்றமற்ற பதினெண் புராணங்களும் சமுத்திரஞ்சூழ்ந்த உலகமுழுவதும் பரவி நிலைபெற்றன.—எ-று.

'காமரு' என்பதனை, காமம் மரு என்றாயினும், காமர் உ என்றாயினும் பிரித்துப் பொருள்கொள்க. காமர்+உ எனப் பிரிக்குங்கால், உகரம் சாரியை. 'புராணநூற் றொகுதி யாவையும்' என்றதனால், இம்மகாபுராணச் சார்பாகத் தோன்றிய பதினெண் உபபுராணங்களையுங்கொள்க. அவற்றை:—"இத்தகைய புராணமூ வாறு மேனா ளிலங்குகயி லாயவரை யிறைவன் பாதப் - பத்திபுரி நந்திசனற் குமாரற் கோதப் பணிந்தவன்பால் வியாதமுனி பரிவாற் கேட்டு - மெத்தியதீ வினையோடப் பார்மேற் சால விளக்கியது போன்முனிவர் வேறு வேறு - புத்திமகிழ் வொடும்வழியே கேட்டுச் செய்த புகரிலுப புராணமூ வாறுண் டாமால்" எனவும், "சாற்றுசனற் குமாரமே நாரசிங்கந் தகுகாந்தஞ் சிவதருமந் தழைதூர் வாசம் - போற்றியநா ரதமேகா பிலமெல் லோரும் புகழுசனஞ் சவுனகமாம் பிரமாண் டஞ்சீர் - மாற்றரும்வா ருணங்காளி புராண மேத்தும் வாசிட்ட லிங்கமொடு சவுரம் பாவம் - பாற்றியபா ராசரிய மாரீசம்பார் பகர்சாம்பம் பார்க்கவமென் றவற்றின் பேராம்" எனவும் வரும் விநாயக புராணத்தா னுணர்க. (௫௨)

நம்பனுக் கொருபது நார ணற்குநான்
கம்புயத் தவற்கிரண் டலரி யங்கியா
மும்பர்வான் சுடர்களுக் கோரொன் றென்பரா
லிம்பரி னிசைக்குமப் புராணத் தெல்லையே.

(இ-ள்.) இந்நிலவுலகத்திற் புகழ்ந்துகூறும் அப்புராணத்தொகைகளில் சிவபெருமானுக்குப் பத்தும், திருமாலுக்கு நான்கும், தாமரை மலரிலுள்ள பிரமனுக்கு இரண்டும், அக்கினி சூரியன் என்று கூறுஞ் சிறந்த இருசுடர்களுக்கு ஒவ்வொன்று மென்று பெரியோர்கள் கூறுவார்கள்.—எ-று. (௫௩)

வேறு.

எதிரில் சைவமே பவிடிய மார்க்கண்ட மிலிங்க
மதிகொள் காந்தநல் வராகமே வாமன மற்சம்

புதிய கூர்மமே பிரமாண்ட மிவைசிவ புராணம்
பதும மேலவன் புராணமாம் பிரமமே பதுமம்.

(இ-ள்.) ஒப்பற்ற சைவம், பவிடியம், மார்க்கண்டம், இலிங்கம், அறிவிற் கொள்ளத்தக்க காந்தம், நல்ல வராகம், வாமனம், மச்சம், புதுமையான கூர்மம், பிரமாண்டம் என்று மிப்பத்துஞ் சிவபுராணங்களாம்; பிரமம், பதுமம் என்னுமிரண்டும் கமலாசனனாகிய பிரமனுக்குரிய புராணங்களாம்.—எ-று. (௫௪)

கருது காருட நாரதம் விண்டுபா கவதம்
மிக்க தைப்பெய ராக்கினே யம்மழற் கதையா
மிரவி தன்கதை பிரமகை வர்த்தமா மிவைதாந்
தெரியு மொன்பதிற் றிருவகைப் புராணமாந் திறனே.

(இ-ள்.) (யாவருஞ்) சிந்திக்கின்ற காருடம், நாரதம், விஷ்ணு, பாகவதம் என்று நான்கும் விஷ்ணுபுராணங்களாம் ; ஆக்கினேயம் அக்கினிபுராணமாம் ; பிரமகைவர்த்தம் சூரியபுராணமாம்; இவைகளே ஆராயத்தக்க பதினெட்டுப் புராணங்களின் விவரங்களாகும்.—எ-று. (௫௫)

இத்தி றத்தவாம் புராணங்க ளொன்பதிற் றிரண்டி
லத்த னுக்குள புராணமீ ரைந்தினி லடல்வேற்
கைத்த லத்தவன் காந்தத்து ளன்னவன் கதையை
மெய்த்தொ கைப்பட வுரைப்பனென் றேமுனி விளம்பும்.

(இ-ள்.) இத்தன்மையினவாகிய பதினெண் புராணங்களில், சிவபெருமானுக்குரிய பத்துப்புராணத்தில் வலியவேற்படையேந்திய திருக்கரத்தினையுடைய குமாரக்கடவுளது கந்தபுராணத்துள் அவ்வெம்பெருமானுடைய சரித்திரத்தை உண்மையாகச் சுருக்கிச் சொல்லுகின்றேனென்று சூதமுனிவரர் கூறுவாராயினார்.—எ-று.

சிவபெருமானுக்குரிய புராணங்கள் பத்தினுள்காந்தபுராணம் ஸ்ரீசண்முகப் பெருமான் சிறப்பினையே கூறுதற் கமைந்துள்ளதாகலின், 'அடல்வேற் கைத்தலத்தவன் காந்தத்துள்' என்றுகூறினார். (௫௬)

வேறு.

பூமிசை யிருந்த புத்தேள் புரிந்திடு புதல்வர் தம்மு
ளெமுறு தக்க னீன்ற விருந்தனிக் குமரி யான
தீமையை யகற்ற வம்மை சிந்தைசெய் திமைய மன்னன்
மாமக ளாகி நோற்று வைகினாள் வைகு நாளில்.

(இ-ள்.) தாமரைமலரில் வசிக்கின்ற பிரமன் சிருஷ்டித்த புத்திரர்களில் சிறந்த தக்ஷன்பெற்ற ஒப்பற்ற பெருமையமைந்த புத்திரியாகித் (தாக்ஷாயணியென்னும் பெயரோடு) இருந்த குற்றத்தை நீக்கிக்கொள்ளும் பொருட்டு உமாதேவியார் திருவுள்ளங்கொண்டு பர்வதராசனது சிறந்த புத்திரியாராக அவதரித்து (பார்வதியென்னும் பெயரோடு) தவஞ்செய்துகொண்டிருந்தனர்; அவ்வாறிருக்கும் நாளில்.—எ-று.

எமம் உறு, என்பது எமுறு எனத்தொகுத்தலாயிற்று. பர்வதராஜனது அருந்தவப்பயனாக வெழுந்தருளினமையின், 'மாமகளாகி,' என்றார். (௫௭)

அவுணர்க ளோடு சூர னவனிமேற் றோன்றி நோற்றுச்
சிவன்வர மளிக்கப் பெற்றுத் தேவர்யா வரையும் வென்று
புவிதனி லவரி தன்னிற் புங்கவர் புனைவன் செய்த
தவலரு மகேந்தி ரத்தில் வைகினான் றனை சூழ.

(இ-ள்.) சூரபதுமன் அசுரர்களோடு உலகத்திற்பிறந்து தவஞ்செய்து சிவ பெருமானால் கொடுக்கப்பட்ட வரத்தைப்பெற்று எல்லாத் தேவர்களையுஞ் செயித்து இந்நிலவுலகத்துள்ள கடலின் நடுவில் தேவதச்சனு லமைக்கப்பட்ட கெடுதலில்லாத மகேந்திரபுரியில் சேனைகள் சூழும்படி வாழ்ந்திருந்தனன்.—எ-று.

திருமால்முதலிய யாவருமடங்க, 'தேவர்யாவரையும்வென்று' என்றுகூறி னர். உவரி - உப்புநீரையுடையது; கடல். நால்வகையரணு நன்கமைஃப்பெற்றதென் பார், 'தவலருமகேந்திரம்' என்றுகூறினர். (௰௮)

அனையதோர் காலை வெள்ளி யடுக்கலிற் சனக னாதி
முனிவரர் தமக்குந் தொல்லை மூவகைப் பதமுங் கூறி
யினியதோர் ஞான போத மித்திற மென்று மோனத்
தனிநிலை யதனைக் காட்டித் தற்பர னிருந்தா னன்றே.

(இ-ள்.) அவ்வாறு வாழ்ந்திருக்கும் நாளில், ஸ்ரீமகாகயிலாசத்தில் சனகர் முதலிய முனிசிரேஷ்டர்களுக்குப் பழைமையாகிய சரியையாதி மூன்றுபாதங்களையு முபதேசித்து, (பின்பு) இனிமையான ஒப்பற்ற ஞானபோத மித்தகையதென்று மௌனமாகிய சிறந்த நிலைமையைக் காட்டி (உபதேசித்தவராகச்) சிவபெருமான் (தக்ஷிணாமூர்த்தமாக) வீற்றிருந்தருளினர்.—எ-று.

ஞானபோதம்-இருபெயரொட்டு. 'மோனத்தனிநிலையதனைக்காட்டி' என் பதனை:—"கல்லாலின் புடையமர்ந்து நான்மறையா றங்கமுதற் கற்ற கேள்வி - வல் லார்க ணால்வருக்கும் வாக்கிறந்த பூரணமாய் மறைக்கப் பாலாய் - எல்லாமா யல்லது மா யிருந்ததனை யிருந்தபடி யிருந்து காட்டிச் - சொல்லாமற் சொன்னவரை நினை யாம னினைந்துபவத் தொடக்கை வெல்வாம்" என்னுந் திருவிளையாடற் புராணத்தா னுணர்க. (௰௯)

வீற்றிருந் தருளு மெல்லை வெய்யசூர் முதலா வுள்ளோ
ராற்றவுந் தீங்கு செய்தே யமரர்கள் சிலரைப் பற்றிப்
போற்றிடுஞ் சிறையி னுய்ப்பப் புரந்தரன் முதலா வுள்ளோர்
மாற்றருந் துயரின் மூழ்கி மறைந்தன ராகி வைகி.

(இ-ள்.) அவ்வாறு வீற்றிருக்குங்காலத்தில், கொடிய சூரபதுமன் முதலிய அசுரர்கள் மிகவும் பொல்லாங்குகளைச் செய்து சில தேவர்களைப் பிடித்துக் காவ லமைந்த சிறையி லடைக்க இந்திரன் முதலிய தேவர்கள் நீக்குதற்கரிய துன்பத்துள் முழுகி மறைந்து வசித்து.—எ-று.

அமரர்கள் - மரித்தலில்லாதவர்கள். (௨௰)

சங்கரன் மோனத் தன்மை சதுர்முகற் குரைப்ப வன்னோன்
வெங்கணை வேளை யுய்ப்ப விழித்தவன் புரநீ றாக்கிப்
பங்கயன் முதலா வுள்ளோர் பலருமவ் விரங்கிப் போற்ற
வங்குறை மோன நீங்கி யவர்க்கருள் செய்தா னையன்.

(இ-ள்.) சிவபெருமானது மௌனநிலைமையை பிரமனுக்குச்சொல்ல, அப் பிரமன் விருப்பத்தைத்தருகின்ற புட்பபாணத்தையுடைய மன்மதனையேவ,(அவ்வெம் பெருமான் நெற்றிக்கண்ணைத்) திறந்து அம்மன்மதனது சரீரத்தைச் சாம்பலாக்கிப் பின் பிரமன்முதலிய தேவர்கள்வந்து வணங்கித்துதிக்க, சிவபெருமான் அக்கல்லாலி னிழலி லெழுந்தருளியிருந்த மோனநிலையினின்று நீங்கி அப்பிரமனாதியர்களுக்குத் திருவருள் புரிந்தருளினர்.—எ-று.

சங்கரன் - ஆன்மாக்களுக்கு இன்பநலந் தந்தருள்பவன்; 'வெங்கணை வேள்' என்பதற்கு, கொடிய புட்பபாணத்தையுடைய மன்மதன் எனப் பொருள் கூறுவாருமுளர். (௬௧)

ஏழுமுனிவர் தம்மை யோங்கலுக் கிறைவன் றன்பாற்
பேரருண் முறையாற் றூண்டிப் பெருமணம் பேசுவித்துப்
பாசறு நோன்பின் மிக்க பராபரை யன்பு தேர்ந்து
காரணி கண்டத் தெந்தை கணங்களோ டிமையம் புக்கான்.

(இ-ள்.) சப்த முனிவர்களைப் பர்வதராஜனிடத்தில் மிக்க திருவருளோடு அனுப்பித் திருமணம்பேசுவித்து உலகவாசனையற்ற தவத்திற்சிறந்த பார்வதிதேவியாரது அன்பின் தன்மையைத் தெளிந்து நீலகண்டராகிய எமது சிவபெருமான் சிவகணங்களோடும் இமையமலையை யடைந்தருளினர்.—எ-று.

ஏழு முனிவராவார்:—அத்திரி - ஆங்கீரசன் - கௌதமன் - சமதக்கினி - பாரத்துவாசன் - வசிட்டன் - விசுவாமித்திரன். அன்றியும், அகத்தியன் - ஆங்கீரசன் - கௌதமன் - காசிபன் - புலத்தியன் - மார்க்கண்டன் - வசிட்டன் என்பர். (௬௨)

புடையக லிமையந் தன்னிற் புவனங்கண் முழுது மீண்ட
வடபுவி தாழ்ந்து தென்பா லுயர்தலு மலயந் தன்னிற்
கடமுனி தன்னை யேவிக் கவுரியை மணந்து பின்ன
ரடன்மத வேளை நல்கி யநங்கனே யாகச் செய்தான்.

(இ-ள்.) இடமகன்ற இமையமலையில் எல்லா வுலகத்துள்ளவர்களும்வந்து நெருங்கினமையால், பூமியில் வடபாகந்தாழ்ந்து தென்பாகமுயரவும்,(சிவபெருமான்) அகஸ்தியமுனிவரைப் பொதியமலைக்கனுப்பி (ப்பூமியைச் சமப்படுத்திப்பின்பு)உமாதேவியாரைத் திருமணம்புரிந்து அதன்பின்பு வலிமையுள்ள மன்மதனையெழுப்பி அநங்கனாகச்செய்தருளினர்.—எ-று.

கும்பத்திற் றோன்றிய முனிவராகலின், அகஸ்தியரைக் 'கடகமுனி' என்று கூறினர். (௬௩)

மன்புனை கயிலை தன்னின் மலைமக ளோடு மீண்டு
முன்பென வமர்ந்து நாதன் முழுதுல குயிர்கட் கெல்லா
மின்பமும் புணர்ப்பு நல்கி யிமையவர் யாரும் வேண்டத்
தன்பெரு நுதற்கட் டீயாற் சரவண பவனைத் தந்தான்.

(இ-ள்.) சிவபெருமான் நிலைபெற்ற அழகினையுடைய ஸ்ரீமகாகயிலாயத்தில் பார்வதியாரோடு திரும்பிவந்து முன்போலவே யெழுந்தருளியிருந்து சர்வலோகங்களிலுமுள்ள எல்லாவுயிர்களுக்கும் போகமோக்ஷங்களைக் கொடுத்து, தேவர்களனைவரும் வந்து வேண்டிக்கொண்டமையால் தமது பெரிய நெற்றிக்கண்ணிடத்துள்ள அக்கினியினால் குமாரக்கடவுளைத் தந்தருளினர்.—எ-று.

சிவபெருமான் சனகாதியர்பொருட்டு யோகிருந்தகாலத்து உயிர்கள் போகத்தை யொருவியிருந்தன ராகலின், 'உயிர்கட்கெல்லா மின்பமும் புணர்ப்பு நல்கி' என்று கூறினர். (௬௪)

அந்தமில் விளையாட் டுள்ள வறுமுகக் கடவு டன்னைத்
தந்திடு மெல்லை யன்னோன் றுணைபந் தலைவ ராக
முந்திய விறல்சேர் மொய்ம்பன் முதலிய விலக்கத் தொன்பா
னந்திகள் கணத்தி னோரை நங்கையா லுதிப்பச் செய்தான்.

(இ-ள்.) அளவற்ற திருவிளையாடலையுடைய ஸ்ரீ சண்முகப்பெருமானைப் பெற்றருளியபொழுது அவ் வெம்பெருமானது சேனாபதிகளாக முதன்மைபொருந்திய பராக்கிரமத்தையுடைய வீரவாகுதேவர் முதலிய இலக்ஷத்தொன்பது சிவகணத்தவரை உமாதேவியாரிடமாக அவதரிக்கச் செய்தருளினர்.—எ-று.

இலக்கத்தொன்பானங்கிதன்கணத்திரோராவார்—உமாதேவியாரது திருவடிச்சிலம்பினின்று முதிர்ந்த நவமணிகளின் வடிவாகிய ஒன்பது மாதர்களிடத்தினின்றுந் தோன்றிய வீரவாகு முதலிய நவவீரர்களும், அம்மாதர்களது வியர்வினின்றுந் தோன்றிய இலக்ஷம்வீரர்களுமாம். இதனை, மேல்-துணைவர்வருபடலத்து விளங்கக்காண்க. "ஒதிறுநின்றிட முன்னரொழுந்தே யோடியசங்கரி பின்புதிரும்பிச்-சோதியிடத்திலடைந்து மடங்கல் சுமந்திடுகின்ற துலங்கணைமேவக் -கோதில் சிலம்ப துடைந்து முன் வீழுங் கொன்னவ மாமணி யன்னவள் சாயை - யேய்தலு மொன்பது மங்கையராகி யெந்தை விளித்திட வின்பொடுவந்தார்." "வித்தகமங்கைய ரெம்பெருமானை விருப்பொடுகண்டு கருப்பமதாகச்-சத்திசினந்து கருப்பயவாதே தாங்குமினென்றிட வேங்கினராங்கே - மெத்தியமேனி வியர்ப்பிலிலக்க வீரருதித்தனராரியை சொல்லாலுத்தமமாதர்கள் பின்பொருநாளி லொன்பது மைந்தரை யன்பொடுதந்தார்" என வருங் கந்தபுராணச் சுருக்கத்தாலுமுணர்க. (கரு)

அண்ணலங் குமரப் புத்தே ளலகிலா வாடல் செய்து
மண்ணுறு கடலும் வெற்பும் வானமுந் திரிபு செய்து
துண்ணெனக் குழவி யேபோற் றோன்றிட வதனை நோக்கி
விண்ணவர் யாருஞ் சூழ்ந்து வெஞ்சமர் புரிந்து நின்றார்.

(இ-ள்.) முதல்வராகிய அழகிய குமாரக்கடவுள் அளவற்ற திருவிளையாடல்களைச் செய்து நிலவுலகத்துள்ள கடலும் மலையும் வானமுமாகிய இவைகளனைத்தையும் வேறுபடுத்தி விரைவாக குழந்தையைப்போன்று விளங்க, அவ்வாறு நிற்றலைத் தேவர்களனைவருங் கண்டு சூழ்ந்துகொண்டு பெரும்போர் புரிந்தார்கள்.—எ-று.

துண்ணென என்பது, விரைவுக்குறிப்பு. (கசு)

ஆரமர் செய்து ளாரை யட்டுட னுயிரு நல்கிப்
பேருரு நிலைமை காட்டிப் பெறலருங் காட்சி நல்கி
நாரதன் மகத்திற் றோன்றி நடந்ததோர் செச்சை தன்னை
யூர்திய தாகக் கொண்டே யூர்ந்தன னொப்பி லாதான்.

(இ-ள்.) ஒப்பில்லாதவராகிய எமது முருகக்கடவுள் அரிய போர்செய்தவர்களாகிய தேவர்களைக் கொன்று, பின்பு அங்கிறந்தவர்களை யெழுப்பித் தமது விசுவரூபத்தை யவர்களுக்குக் காட்டி, பெறுதற்கரிய தம துண்மை யுருவத்தையுந் தரிசிப்பித்து, நாரதமுனிவரர் செய்த வேள்வியிற் றோன்றிவந்த ஒப்பற்ற ஆட்டுக்கடாவை வாகனமாகக்கொண்டு நடத்தியருளினர்.—எ-று.

பேருரு நிலைமையாவது, எல்லாந்தாமேயென் றுணர்த்தற்பாலதாகிய விசுவரூபம். உலகத்துயிர்களை வருத்தியழித்துத் தனக்கு ஒருவரும் நிகரின்றி யுலாவிய தென்பார், 'ஓர் செச்சை' என்று கூறினர். ஊர்தியது - என்பதில், அது - பகுதிப்பொருள் விகுதி. (கஎ)

மறைமுதற் குடிலை தன்னின் மான்பொருண் முறைக டாவி
வெறிகமழ் கமலப் புத்தேள் விடைகொடான் மயங்கக் கண்டு
சிறையிடை யவனை வைத்துச் செகமெலா மளித்துத் தாதை
குறையிரந் திடவே விட்டுக் குறுமுனிக் கதனை யீந்தான்.

22

(இ-ள்.) வேதங்களுக்கு முதற்பொருளாயுள்ள பிரணவத்தினது சிறந்த மெய்ப்பொருளின் தன்மையை வினவி, நறுமணங்கமழுந் தாமரைமலரில் வசிக்கும் பிரமன் அதற்கு விடையளிக்க வறியாதவனாய் மயங்குதலைப்பார்த்து அப்பிரமனைச் சிறையிலிட்டுச் சர்வலோகங்களையுந் தாமே சிருஷ்டித்துப் பின்பு தமது தந்தையாகிய சிவபெருமான் குறையிரத்தலினால் அப்பிரமனைச் சிறையினின்று நீக்கி, அப் பிரணவப்பொருளை அகஸ்தியமுனிவருக்கு உபதேசித்தருளினார்.—எ-று.

'மறைமுதற்குடிலை' வேதத்தின் முதற்பொருளாயுள்ள குடிலை; அன்றி, வேதத்தின் முதலிலெடுத்தோதத்தக்க குடிலை யெனினுமாம். குடிலை=பிரணவம்.

ஆவதோர் காலை யீச னறுமுகப் பரனை நோக்கி
யேவருமுடிக்க வொண்ணா திருந்தசூர் முதலோர் தம்பால்
மேவினை பொருது வென்று விரிஞ்சனை முதலாவுள்ள
தேவர்த மின்ன னீக்கிச் செல்லுதி குமர வென்றான்.

(இ-ள்.) அவ்வாறாகிய காலத்தில் சிவபெருமான் ஸ்ரீ சண்முகப்பெருமானைப் பார்த்தருளி, குமரனே! எவர்களாலும் அழிக்கமுடியாதிருந்த சூரபதுமன் முதலியவர்களிடத்துச் சென்று போர்செய்து வென்று பிரமன் முதலிய தேவர்களடைந்திருக்குந் துன்பத்தை நீக்கி வருவாயாகவென்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று.

மேவினை - முற்றெச்சம். (௬௯)

விராவிய விலக்கத் தொன்பான் வீரரை வெய்ய பூத
ரிராயிர வெள்ளந் தேரோடு பரிகற்படை மான்றேரோடு
பராபர னுதவித் தூண்டப் பன்னிரு புயத்த னேகித்
தராதலம் புக்கு வெற்பைத் தாரக னோடு செற்றான்.

(இ-ள்.) நெருங்கிக் கலந்திருக்கின்ற இலக்ஷத்தொன்பது வீரரையும், கொடுமைபொருந்திய இரண்டாயிரவெள்ளம் பூதத்தலைவர்களையும், வலிய ஆயுதங்களுடனும் குதிரை பூட்டிய தேருடனும் சிவபெருமான் கொடுத்தருளியனுப்பப் பன்னிரண்டு திருப்புயங்களையுடைய குமாரக்கடவுள் சென்று நிலவுலகத்திற் பிரவேசித்துக் கிரவுஞ்சகிரியைத் தாரகாசுரனோடும் அழித்தருளினார்.—எ-று.

பராபரன் - பரம் என்பவற்றிற்கெல்லாம் பரமாயுள்ளவன். வெற்பு-மலையுருவங்கொண்டிருந்த கிரவுஞ்சனென்னு மசுரன். (௭௦)

பூவினன் முதலா வுள்ள புங்கவர் வழிபட் டேத்தத்
தேவர்தங் கிரியின் வைகித் தென்றிசை நடந்து தாதை
மேவரு மிடங்கள் போற்றி மேதகு சேய்ஞ லண்ணி
மூவிரு முகத்தன் முக்கண் முன்னவன் படையைப் பெற்றான்.

(இ-ள்.) ஆறு திருமுகங்களையுடைய குமாரக்கடவுள் பிரமன் முதலிய தேவர்கள் வணங்கித் துதிக்கத் தேவகிரியில் எழுந்தருளியிருந்து பின் தென்றிசையாக நடந்து தமது தந்தையாராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் பல திருப்பதிகளையுந் துதித்து மேன்மைபொருந்திய திருச்சேய்ஞலூரை யடைந்து, அங்குத் திரிநேத்திரராகிய சிவபெருமானது படையாகிய பாசுபதாஸ்திரத்தைப் பெற்றருளினார்.—எ-று.

பூவினன் என்பதில் இன்-சாரியை. சேய்ஞலூர் என்றது சேய்ஞல் என்றாயிற்று; இது குமாரக்கடவுள் சிவபெருமானைப் பூசித்துப் பாசுபதாஸ்திரம் பெற்ற க்ஷேத்திரமாகலின் இப்பெயர் பெற்றது. சேய்ஞலூர் என்பது மொழியிடைப்போலி. சேய்=குமாரக்கடவுள். (௭௧)

பாசுபதப் படையைப் பெற்றுப் பராசரன் சிறார்கள் மேதக்குத்
திருவருள் புரிந்து சென்று செந்திலின் மேவிச் சூரன்
வரமொடு திருவுஞ் சீரும் வாசவன் குறையும் வாகீசர்
குரவனை வினவி யன்னோன் கூறலுங் குமரன் றேர்ந்தான்.

(இ-ள்.) சிவபெருமான் கொடுத்தருளிய அப்பாசுபதாஸ்திரத்தைப்பெற்று, பராசரமுனிவருடைய புத்திரர்கள் வந்து துதிக்க அவர்களுக்குத் திருவருள்செய்து அங்குநின்றுஞ் சென்றருளித் திருச்செந்தூரை யடைந்து, சூரபதுமன் பெற்றுள்ள வரங்களையும் அவன் செல்வங்களையும் சிறப்பையும், (அவனால்) இந்திரனடைந்திருக்குந் துன்பத்தையும் தேவகுருவாகிய பிரகஸ்பதிபகவானைக்கேட்டு, அதற்கு அவன் முறைப்படி சொல்ல, குமாரக்கடவுள் அறிந்தருளினார்.—எ-று.

*பராசரன்சிறார் - பராசரமுனிவரது சாபத்தால் மீனுருவமைந்து சரவணப் பொய்கையில் வசித்துப் பின்பு குமாரக்கடவுளுண்டதனுலொழுகிய பாலையுண்டு அச் சாப நீங்கப்பெற்றவர்களாகிய தத்தன் - அனந்தன் - நந்தி - சதுர்முகன் - பரிதிப் பாணி - தவமாலி யென்னும் ஆறு புத்திரர்கள். (எ௨)

அறத்தினை யுன்னி யைய னாடல்சேர் மொய்ம்பன் றன்னை
யுறத்தகு மரபிற் றூண்டி பொன்னலன் கருத்தை யோர்ந்து
மறத்தொடு கடலுள் வீர மகேந்திர மணுகி யேதன்
புறத்துள தானை யோராற் சூர்கிளை பொன்றச் செற்று.

(இ-ள்.) குமாரக்கடவுள் தருமநெறியைத் திருவுள்ளங்கொண்டு வீரவாகு தேவரைச் செலுத்தவேண்டிய முறைமைப்படி தூதாகச்செலுத்தி, அதனால், பகைவனாகிய சூரனது எண்ணத்தை யுணர்ந்து கோபத்துடன் கடலின்கண்ணுள்ள வீரமகேந்திர புரியையடைந்து தமக்கருகிலுள்ள சேனைவீரர்களால் சூரபதுமனுடைய சுற்றமெல்லாம் அழியும்படி கொன்றருளி.—எ-று.

ஆடல்சேர் மொய்ம்பன்=வீரவாகுதேவர். ஆடல் - வீரம். உறத்தகுமரபாவது, தூதனுப்பவேண்டிய முறைமை.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (எ௩)

சீயமா முகத்த னென்னுஞ் செருவலான் றனையு மட்டு
மாயையுந் திருவுஞ் சீரும் வரங்களும் பிறவு மாற்றி
யாயிர விருநா லண்டத் தரசனாஞ் சூரன் றன்னை
யேயெனு மளவில் வேலா லிருதுணி படுத்து நின்றான்.

(இ-ள்.) சிங்கமுகனென்னும் பெயரையுடைய அசுரனையுங் கொன்று அவ்வசுரனது மாயையையும் செல்வத்தையும் மேன்மையையும் வரங்களையும் மற்றவைகளையு மொழித்து, ஆயிரத்தெட்டு அண்டங்களுக்கு அரசனாகிய சூரபதுமனைத் தமது வேற்படையினால் அதிசீக்கிரத்தில் இரண்டு துண்டாக வெட்டி நின்றருளினார்.எ-று.

செருவலான் - செருச்செய்தலில் வல்லவன். செரு=போர். ஏயெனுமளவு என்றது, இமையளவு பொழுது என்னும் பொருளில் வந்தது. ஏ-என்பது ஓரொலிக் குறிப்பு. (எ௪)

துணிபடு சூர னோர்பால் சூட்டுவா ரணமா யோர்பால்
பிணிமுக மாகி நிற்பப் பெருந்தகை யவற்றை யூர்தி
யணிபடு துவச மாக்கி யப்பகல் செந்தில் வந்து
மணிசொரி யருவி தூங்கும் வான்பரங் குன்றஞ் சேர்ந்தான்.

(இ-ள்.) அவ்வாறு வெட்டப்பட்ட சூரபதுமன் ஒருபக்கத்தில் உச்சிக்கொண்டையையுடைய சேவலாகவும், மற்றொருபக்கத்தில் மயிலாகவு முருவங்கொண்டு நிற்க, ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுள் அவ்விரண்டையும் வாகனமாகவும் அழகிய கொடியாகவுங்கொண்டு அன்றைப்பொழுதே திருச்செந்திற்பதியையடைந்து முத்துக்களைச் சிந்துகின்ற அருவியாறெழுகப்பெற்ற சிறந்த திருப்பரங்குன்றமென்னுந் திருப்பதியையடைந்தருளினார்.—எ-று.

சேவலைத் துவசமாகவும், மயிலை வூர்தியாகவுங் கொண்டருளின ரென்க. பெருந்தகை - பண்புத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. (எ௫)

தெய்வத யானை யென்னுஞ் சீர்கெழு மடந்தை தன்னை
யவ்விடை வதுவை யாற்றி யங்ஙனஞ் சிலநாள் வைகி
மெய்விய னுலகிற் சென்று விண்ணவர்க் கரச னாக்கி
யெவ்வமின் மகுடஞ் சூட்டி யிந்திரன் றன்னை வைத்தான்.

(இ-ள்.) தெய்வயானையென்னும் பெயரையுடைய சிறப்புமிக்க தேவியாரை அங்குத் திருமணம்புரிந்தருளி அவ்விடத்தில் சிலநாள்கள் வீற்றிருந்தருளி, மெய்ம்மைபொருந்திய விண்ணுலகத்திற் கெழுந்தருளி இந்திரனை (முன்போலவே) தேவர்களுக்குத் தலைவனாகச்செய்து குற்றமற்ற மகுடாபிஷேகஞ் செய்வித்து அவனை நிலைபெறுவித்தருளினார்.—எ-று.

தெய்வதயானை=தெய்வயானை. எமது சண்முகப்பெருமான் வளர்ந்தருளிய சரவணப்பொய்கையினிடத்து அவ்வெம்பெருமானைத் தழுவவேண்டி முன்னரே யருந்தவம்புரிந்தவராகலின், 'சீர்கெழுமடந்தை' என்றும், இந்திரன் முன்னரணிந்திருந்த மகுடம் சூரபதுமனால் பங்கமுற்றழிந்தமைபோலப் பின்னுமழியாமல் என்றும் நிலைபெறுகப் புனைந்து போகந் துய்த்தற்பொருட்டுச் சூட்டப்பட்ட தாகலின், 'எவ்வமின்மகுடம்' என்றுங் கூறினார். (எசு)

சில்பக லங்கண் மேவிச் சேனையோ டணங்குந் தானு
மல்லலங் கயிலை யேகி மங்கைபங் குடைய வண்ணன்
மெல்லடி வணங்கிக் கந்த வெற்புறை நகரி னேகி
யெல்லையி லருளால் வைகித் தணிகையி லெந்தை வந்தான்.

(இ-ள்.) எமது தந்தையாராகிய குமாரக்கடவுள் சிலநாள்கள் அவ்விண்ணுலகத்தில் வீற்றிருந்தருளிப் பின்பு தமது சேனைகளுடன் தெய்வயானைநாச்சியாருந் தாமுமாக வளப்பமிக்க அழகிய திருக்கயிலையை யடைந்து பார்வதிபாகராகிய சிவபெருமானது மென்மை பொருந்திய திருவடிகளை வணங்கி அங்கு நின்றுங் கந்தவெற்பினையுடைய ஸ்கந்தலோகத்திற்கெழுந்தருளி அளவற்ற திருவருளோடும் வீற்றிருந்தருளிப் பின்பு திருத்தணிகைப்பதிக் கெழுந்தருளினார்.—எ-று.

கந்தவெற்புறைநகர் என்பதற்கு, கந்தகிரியிலிருக்குங் குமாரலோகம் எனப் பொருள் கூறினுமாம்.

சிவபெருமானுடைய திருவடிகள் கூற்றுவன் முதலியோரைக் கொன்றருளிய கொடுமையுடையனவாயிருப்பினும், ஆத்துமாக்க ளடைதற்குரிய அரும்பேறுயுள்ளதாகலின், 'மெல்லடி' என்றார். (எஎ)

சாரலி னோங்கு தெய்வத் தணிகைமால் வரையின் மீது
வீரம துடைய வேலோன் வீற்றிருந் திடலு மங்க
ணாரதன் வந்து தாழ்ந்து நவைதவி ரெயின மாதின்
சீரெழி னலத்தைக் கூற வவள்வயிற் சிந்தை வைத்தான்.

(இ-ள்.) சாரல்களினூ லுயர்ந்திருக்கின்ற தெய்வத்தன்மைபொருந்திய திருத்தணிகைமலையின்மேல் வீரத்தினையுடைய வேற்படையையேந்திய குமாரக்கடவுள் வீற்றிருந்தருளுதலும், நாரதமுனிவர் அங்கு வந்து வணங்கிக் குற்றமற்ற வேடர்மகளாகிய ஸ்ரீ வள்ளிநாச்சியாரது சிறப்பமைந்த அழகின் வளப்பத்தைப் புகழ்ந்து கூற, அவ்வம்மையாரிடத்துத் திருவுள்ளங்கொண்டருளினுர்.—எ-று.

இழிகுலத்தினராகிய வேடர்களிடத்து வளர்ந்தருளினமையாற் சிறிதுங் குற்றமுறாதவளென்பார், 'நவைதவிரெயினமாது' என்றூர். ஸ்திரீலக்ஷணம்-என்றது, மகளிரிலக்கணத்திற் சிறிதும் பழுதுறாதிருக்குந்தன்மையை. அவை :—நீண்டு நுனி பிளவுபடாமல் தழைத்து மேகம்போலக் கறுத்து நுனியில் வளைந்து இயற்கை மணம் வீசி இடைவெளியின்றி நெருங்கி மெத்தென்றிருக்குங் கூந்தலும், யானை மத்தகம்போலத் திரண்டு உயர்ந்த தலையும், பூர்வபக்ஷத்து எட்டாநாள் சந்திரன்போன்று இடையில் மயிரும் நரம்புமின்றிச் செழித்த மூன்றுவிரலளவு அகன்ற நெற்றியும், கடை சிவந்து புறத்தில் பால்போல் வெளுத்து நடுவிலுள்ள கருமணி மிகக்கறுத்து அழகமைந்து இமையில் கருமயிரமையப்பெற்ற கண்களும், வளைந்த வில்லையொத்த புருவமும், இரண்டு துளையுந் தம்மிலொத்து உருட்சியடைந்து எள்ளின்பூப்போன்ற நாசியும், வள்ளைத்தண்டுபோலத் தாழ்ந்து மடற்சுழிகள் நன்கமைந்த காதுகளும், கண்ணுடி மண்டிலம்போலச் செழித்து விளங்குங் கன்னமும், திரண்டு இருபக்கமுங் குவிந்து சிவந்து இரேகை யொழுங்காகிய இதழும், மேலுங் கீழுமாகிய இரண்டு வரிசையும் இடைவெளியின்றிப் பால்போல் வெளுத்த முப்பத்திரண்டு பற்களும், தடிப்பின்றிச் சிவந்த நாவும், வட்டமாய் இரண்டங்குல வளவினையுடைய மோவாயும், தாமரை மலர்போல மணமுடைத்தாகிப் பூரணசந்திரன் போன்ற முகமும், நான்கு விரலளவாகத் திரண்டு மூன்றுஇரேகை பொருந்திய கழுத்தும், பதினெட்டு விரலளவகன்று மயிரும் நரம்புமொழிந்து உயர்ந்த மார்பும், மயிரில்லாமல் எலும்புதோன்றுமல் தசைந்த தோள்களும், நீண்டு உருண்டு கணுக்கள் பெற்று முறையே சிறுத்த கைகளும், சிவந்து உருண்டு சரசரப்பற்ற நகமும், மிருதுவாகிச் சிவந்து இடைவெளியகன்று நடுவிலுயர்ந்து நல்ல இரேகைகள் பொருந்திய உள்ளங்கையும், கடினமாய்த் தசைந்த வட்டவடிவாய் அரும்புபோன்று இரண்டுமொத்து உயர்ந்து நெருங்கிய ஸ்தனங்களும், சிறு ரோமவரிசை பெற்றுப் பக்கத்தில் மயிர் நரம்பற்ற வயிறும், வலஞ் சுழித்து ஆழ்ந்த நாபியும், மிகவுஞ் சிறுத்த இடையும், இடையே மயிர் நரம்பற்று இருபத்துநான்கு விரலளவாகி வட்டமாய்ச் சிறுத்து யானை மத்தகமும் ஆமை முதுகும் போன்ற நிதம்பமும், மயிரொலும்பகன்று யானைத்துதிக்கைபோன்ற தொடையும், எலும்புதோன்றுமல் வட்டமாகிய முழந்தாளும், மயிர் நரம்பு தோன்றுமல் இணையொத்து உருண்டு சிறுத்த கணைக்காலும், மயிரொலும்பு தோன்றுமல் ஆமை முதுகுபோலத் திரண்ட புறவடியும், ஒழுங்காகத் திரண்டு வெண்ணகம் பொருந்திய கால்விரலும், மிருதுவும் சமமுமான உள்ளங்காலும், மாந்தளிர்போலச் சிவந்து எந்நாளும் வியர்வு தோன்றுமல் மெத்தென்றிருக்குந் திருமேனியும், பாதிரி - குவளை - தாமரை - மல்லிகை - சண்பகம் இவற்றின் மணம்போன்ற தேகமணமும், குயில் - கிளி - யாழ் இவற்றி னேசைபோன்ற சொற்களு முடைமையாம். இன்னு மிவற்றின் வகையினையும், அவ்வவ் விலக்கணங்களின் பயனையும் சாமுத்திரிக விலக்கணங் கூறுநூலில் விளங்கக் காண்க. (எஅ)

வள்ளிமால் வரையிற் போந்து மானிடைப் பிறந்த தெய்வக்
கிள்ளையை யடைந்து போற்றிக் கேடில்பல் லுருவங் காட்டிக்
கள்ளமோ டொழுகிப் பன்னுட் கவர்ந்தனன் கொணர்ந்து பின்னர்த்
தெள்ளுசீர் வேடர்நல்கத் திருமணஞ் செய்து சேர்ந்தான்.

(இ-ள்.) வள்ளிமலைக் கெழுந்தருளி, மானினிடமாக அவதரித்த தெய்வத் தன்மை பொருந்திய பசுங்கிளி போன்ற வள்ளிநாச்சியாரை யடைந்து துதித்து அழி வற்ற பல வடிவங்களைக் காட்டிப் பலநாள்கள் சரவடமாக மறைந்தொழுகி அவ்வம் மையாரைக் கவர்ந்துகொண்டுவந்து, அதன் பின்பு மிக்க சிறப்பினையுடைய வேடுவர் கள் சம்மதித்துக்கொடுக்கத் திருமணம்புரிந்து மீண்டுந் திருத்தணிகைக்கு எழுந்தரு ளினார்.—எ-று.

மான் - சிவமுனிவராகிய மான். இதன் வரலாற்றை உபதேசகாண்டத்தில் மாயன் வரம்பெறுசருக்கத்திற் காண்க. (எக)

செருத்தணி வரையில் வந்து சிலபகல் வள்ளி தன்னோ
டிருத்தியின் மேவிப் பின்ன ரவளொடுங் கந்த வெற்பின்
வரைத்தனிக் கோயில் புக்கு வானமின் பிரிவு நீக்கிக்
கருத்துற விருவ ரோடுங் கலந்துவீற் றிருந்தான் கந்தன்.

(இ-ள்.) ஸ்ரீ குமாரக்கடவுள் திருத்தணிகைமலையி லெழுந்தருளிச் சிலகா லம் வள்ளிநாச்சியாரோடு அன்புடன் வீற்றிருந்தருளி, அதன்பின்பு அவ்வள்ளிநாச்சி யாரோடும் ஸ்கந்தகிரியிலுள்ள மலைபோன்ற ஒப்பற்ற திருக்கோயிலினுள் ளெழுந்த ருளி அங்குத் தெய்வயானை நாச்சியாரது பிரிவைத் தவிர்த்துத் தமது கருத்துப் பொ ருந்த அவ்விரண்டு தேவிமார்களோடுங் கலந்து வீற்றிருந்தருளினார்.—எ-று. (அ0)

என்றிவை யனைத்துஞ் சூத னியம்பலு முனிவர் கேளாத்
துன்றிய மகிழ்வாற் சென்னி துளக்கியிங் கிதனைப் போல
வொன்றொரு கதையுங் கேளே முரைத்தனை சுருக்கி யாங்க
ணன்றிது விகலங் கேட்க நனிபெருங் காதல் கொண்டேம்.

(இ-ள்.) என்று இச்சரிதமனைத்தையுஞ் சூதமுனிவ ரருளிச்செய்யவும், நை மிசாரணியமுனிவர்கள் கேட்டு, பொருந்திய பெருங்களிப்பினால் சிரமசைத்து, (சூத முனிவரே! தேவரீர் கூறியருளிய) இச் சரிதத்தைப்போல ஒருசரிதத்தையும் நாங் கள் கேட்டதில்லை. நீர் இதனைச் சுருக்கமாக அருளிச்செய்தீர். அடியோங்கள் நன் மையமைந்த இப் புராணத்தின் விரிவைக் கேட்கும்பொருட்டு மிக்க பெருவிருப்புக் கொண்டிருக்கின்றோம்.—எ-று. (அக)

என்னலு முனிவ ராலோர் யாவரு மெடுத்துக் கூற
மன்னிய வருள்சேர் சூதன் மற்றவ ரார்வ நோக்கி
யன்னவை சுருக்க மின்றி யறைந்தன னவ்வா றோர்ந்து
தொன்னெறி வழாதி யானும் வல்லவா தொகுத்துச் சொல்வேன்.

(இ-ள்.) என்று இவ்வாறு நைமிசாரணியமுனிவர்க ளனைவரும் விண்ணப் பஞ்செய்துகொள்ளவும், நிலைபெற்ற பெருங் கருணையை யுடைய சூதமுனிவர் அம் முனிவர்களடைந்திருக்கின்ற பெருவிருப்பத்தைக்கண்டு அச்சரித்திரங்களை விரிவாக எடுத்துக் கூறியருளினார். அடியேனும் அவர் கூறிய முறைமையினையுணர்ந்து பழைய நன்முறைதவறாமல் கூடியவளையில் வரிசையாகச் சொல்லுகின்றேன்.—எ-று.

யானொன்றும் புதிதாய்ப்புனைந்துகூறாமல், வடமொழியிற்கூறியுள்ளவாறே மொழிபெயர்த்துரைப்பனென்பார், 'தொன்னெறிவழாதியானும் வல்லவா தொகுத் துச்சொல்வேன்' என்றுகூறினார். (அஉ)

## பாயிரப்படலம்

முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம் கூஉ.

கணபதி துணை.

திருச்சிற்றம்பலம்.

ஸ்ரீசண்முகபரப்பிரஹ்மணே நம:

---

முதலாவது,

# உற்பத்தி காண்டம்.

## திருக்கைலாசப்படலம்.

---

*பாச நீக்கித்தன் பாற்படு நல்லரு*
*ளீச னல்கு மியல்பென வெய்தினோர்*
*தேக மாற்றிச் சிறந்ததன் மெய்யொளி*
*வீசு கின்றது வெள்ளியங் குன்றமே.*

(இ-ள்.) அழகிய திருக்கயிலாசத்திருமலையானது சிவபெருமான் (தம்மைச் சரணடைந்த மெய்யடியார்களது) பந்தங்களை யொழித்துத் தம்மிடத்துப் பொருந்திய சிறந்த திருவருளைப் பாலித்தருளுந் தன்மைபோல, தன்னிடத்தடைந்தவர்களது தேகநிறத்தை நீக்கிச் சிறப்புமிக்க தனது மெய்ம்மைபொருந்திய பேரொளியை வீசப் பெற்றுள்ளது.—எ-று.

சிவபெருமான் தம்மையடைந்த ஆன்மாக்களின் பாசமோசனஞ்செய்து திருவருள்பாலித்தருளுந் தன்மைபோன்று அவர்வீற்றிருந்தருளும் திருக்கயிலாயத் திருமலையும் தன்னையடைந்தாரது தேகத்திலுள்ள எவ்வகை நிறங்களையுமொழித்துத் தனது வெண்ணிறத்தையே தருகின்றதென்று கூறினாராயிற்று. (௧)

*ஆறு சூடிய வாதியம் பண்ணவ*
*னேறு மூரிவெள் ளேறுமக் கண்ணுத*
*னீறு சேர்தரு கோலமு நித்தனைத்*
*தேறு மன்பர்தஞ் சிந்தையும் போன்றதே.*

(இ-ள்.) (இன்னும் அத்திருமலையானது) கங்கைநதியைத்தரித்த முதற்பெருங்கடவுளாயுள்ள அழகிய சிவபெருமான் ஊர்ந்தருளும் வலிமைபொருந்திய வெள்ளிய இடபத்தின் நிறத்தையும், அவ்வெம்பெருமானது திருவெண்ணீறணிந்த திருமேனிப்பிரகாசத்தையும், அழிவில்லாத அக்கடவுளைச் சதா சிந்தித்துணர்ந்த மெய்யடியார்களது திருவுள்ளத்தின் தன்மையையும் ஒத்துள்ளது.—எ-று.

சிவபெருமா னூர்ந்தருளுந் தருமவிடைவெண்ணிறமுடைமையால், 'ஆதியம் பண்ணவனேறு மூரிவெள்ளேறும்' என்றும், அவரது திருமேனி தழல்வண்ண முடைமையின் அத்தழலின் செந்நிறத்தைநீக்க. 'அக்கண்ணுதல் நீறுசேர்தருமேனி

யும்' என்றும், அவ்வெம் பெருமானையடைந்துய்யு மான்மாக்களது திருவுள்ளம் நிஷ்சளமுடைத்தாயிருத்தல்பற்றி 'சித்தனைத் தேறுமன்பர்தஞ் சிந்தையும்போன்றது' என்றுங்கூறினர். (௨)

மோன நன்னிலை முற்றிய பெற்றியர்
ஞான மார்பிழம் பன்ன நலத்தகா
யூனு லாய வுயிர்த்தொகை மாசொரீஇத்
தானெ லாஞ்செறிந் தென்னவுஞ் சான்றதே.

(இ-ள்.) (அத்திருமலை) சிறந்த மௌனநிலைமை முற்றப்பெற்றதன்மையையுடைய மெய்ஞ்ஞானிகளடைந்த ஞானத்திரட்சிபோன்ற சிறப்பினை யுடையதாய், உடலிற் பொருந்திச் சஞ்சரிக்கின்ற ஆன்மவர்க்கங்களனைத்தும் தமது பாசங்களை யொழித்து அவையனைத்து ஒருங்குசேர்ந்ததன்மைபோலவு மொத்துள்ளது.—எ-று.

"மோனமென்பது ஞானவரம்பு" என்றுகூறிய அருள்வாக்கியப்படி மௌனநிலைமை மெய்ஞ்ஞானமடைதற்குரிய சாதனமாயுள்ளதென்பார், 'மோனநன்னிலை முற்றிய பெற்றியர்' என்றுகூறினர். ஒரீஇ-சொல்லிசையளபெடை. தான் - வழுவமைதி. செறிந்த என்னவும் என்றது, செறிந்தென்னவும் எனத் தொகுத்தலாயிற்று.

கான மார்ந்த கடுக்கைநற் கூவிளத்
தேன வாம்பொழிற் றிண்சிக ரத்திடை
வான யாறு வருதலின் மாசிலா
ஞான நாயகன் போல நணியதே.

(இ-ள்.) (அத்திருமலையானது) வாசனை பொருந்திய கொன்றைமரங்களும் சிறந்த வில்வமரங்களும் பொருந்திய வண்டுகள் விரும்பிச் சூழ்ந்துள்ள சோலைகளமைந்த வலிய தனது சிகரத்திமேல ஆகாயகங்கை (இடைவிடாது) ஒழுகிக்கொண்டிருத்தலால், குற்றமற்ற மெய்ஞ்ஞான சொரூபராகிய சிவபெருமானைப் போன்று விளங்கியுள்ளது.—எ-று.

சிவபெருமானது திருமுடியில் கொன்றைமலரும் வில்வப்பத்திரமும் பொருந்தியிருத்தலாலும், கங்கைநீர்பெருகி யொழுகுதலானும், இத்திருக்கயிலாய மலையினும் கொன்றைமரங்களும் வில்வமரங்களும் பொருந்தியிருத்தலானும், ஆகாயகங்கை யருவியாகப்பெருகுதலானும், இத்திருமலை சிவபெருமானே டொத்திருக்கின்றதென்பார், 'மாசிலா ஞானநாயகன்போலு நணியது என்றுகூறினர். (௪)

தன்னை றுந்துள வாற்புனை தார்முடிப்
பன்னா வன்கண் படுத்திடு பாற்கடல்
கன்னு தற்குமோர் காமரு பீடமாய்
நன்னு கின்றது போனு நலத்ததே.

(இ-ள்.) நறுமணங் கமழுங் குளிர்ந்த துளபத்தால் கட்டப்பட்ட மாலையையணிந்த முடியினையுடைய திருமால் பள்ளிகொள்ளுந் திருப்பாற்கடலானது, நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானுக்கும் ஒரு அழகிய பீடமாகப் பொருந்தியுள்ள தன்மையை யொத்த சிறப்பினையுடையது.—எ-று.

திருமால் பள்ளிகொள்ளுந் திருப்பாற்கடலானது நாம் ஓர் காலத்தில் வியாக்கிரபாதர் புத்திரராகிய உபமன்னியமுனிவருண்ணுதற்குச் சிவபெருமானாற் கொடுக்கப்பட்டோமாகலின் சிவபெருமானுக்கும் ஒரு பீடமா யமைந்திருப்போமாயின் அத்தகைய துன்பத்திற் கிடமாகோமென்பது கருதி வந்திருந்ததுபோன்று விளங்கிய

தென்பார், 'கண்ணு தற்குமோர் காமரு பீடமாய் நண்ணுகின்றது போலு நலத்தது' என்று கூறினர். "கண்பிசைந் தொருசே யின்னுங் கலுழிலுந் தனைக்கொடுப்பன்- மண்பிசைந் துண்ட மாயன் மறுத்திட வலியனல்லன் - நண்பிசைந் திறைவ னுக்கே நாமிட மாவமென்று - பண்பிசைந் தலைதிரண்ட பரிசினின் றிமைக் குன்றம்" என்றார் சிவப்பிரகாசரும். (௫)

பொதியு மின்னமு தோடு பொருந்துவ
கதிரின் மிக்க களங்கமறு காட்சிய
மதிய மாயிர கோடி மணந்துதா
முதய மானது போன்றதவ் வொண்கிரி.

(இ-ள்.) அவ்வொளிபொருந்திய திருக்கயிலாசத் திருமலையானது, தம்மிடத்துப் பதிந்துள்ள இனிய அமுதத்தோடு பொருந்தியிருப்பனவும், ஒளியாற் சிறந்த களங்கமற்ற தோற்றத்தினையுடையனவுமாகிய பலகோடி சந்திரர்கள் ஒருங்குசேர்ந்து உதயமாயின தன்மையை யொத்துள்ளது.—எ-று.

அமுதம் நிரம்பப்பெற்றனவும் பேரொளி பிறங்கப்பெற்றனவும் உடற் களங்கமற்றனவுமாகிய பல்கோடி சந்திரர்கள் ஒருங்கு திரண்டுவந் தமைததுபோலுங் காட்சியை யுடையனவாய்க் குளிர்ச்சி பெற்றுத் தண்ணொளி வீசிக் களங்கமற்று விளங்குதலின், 'மதிய மாயிரகோடி மணந்து தாமுதய மானது போன்றதவ் வொண்கிரி' என்று கூறினர். (௬)

நெற்றி மேனிமிர் கண்ணு நிலாவொளிர்
பொற்ற டம்புய நான்கும் பொருந்துறப்
பெற்றெம் மானரு ளாற்பிரம் பொன்றுகைப்
பற்று நந்தி பரிவொடு காப்பது.

(இ-ள்.) எமது சிவபெருமானுடைய திருவருளினல் நெற்றியின்மீதோங்கி விளங்கும் நேத்திரமும், வெண்ணிலாவைப்போன்றுவிளங்கும் அழகிய விசாலமாகிய சதுர்ப்புஜங்களும் பொருந்தப்பெற்று ஒரு பொற்பிரம்பைத் திருக்கரத்திற்றுங்கியிருக்குந் திருநந்திதேவர் அன்புடனே காக்கப்பெற்றுள்ளது.—எ-று.

பூர்வத்தில் சிலாத னென்னு முனிவர் புத்திரப்பேறின்றி வருந்தித் திருவையாற்றையடைந்து தீர்த்தத்தில் ஸ்நானஞ்செய்து சிவபூசை முடித்துத் திருக்கோயிலைப் பிரதக்ஷிணஞ்செய்து சிவபெருமான் திருமுன்னின்று வணங்கித் திருவைந்தெழுத்தைச் செபித்துப் பஞ்சாக்கினி மத்தியில் நின்று அநேககாலந் தவஞ்செய்துகொண்டிருந்தனர். சிவபெருமான் அத்தவத்திற்கிரங்கி இடபாரூடராய்ப் பார்வதியாரோடெழுந்தருளிவந்து "முனிவனே! நீ விரும்பிய வரத்தைக் கேள்" என்ன, அவர் எம்பெருமானே! அடியேனுக்கு ஒரு சற்புத்திரனைத் தந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர். அதற்குப் பெருமான் மகிழ்ந்து சகல சற்குணங்களும் நிரம்பிய ஒரு புத்திரன் பதினறு வயதுடையவனுய் நீ செய்யும் யாகபூமியில் உழுபடையின் மூலமாக வெளிப்படுவானென்று கூறி மறைந்தருளினர். பின்னர் சிலாதமுனிவர் யாகஞ்செய்யப் பொன்னேர் பூட்டி யாகசாலையை யுழுதபோது அக்கொழுவின் மூலமாக ஒரு மாணிக்கப்பெட்டி தோன்ற, முனிவரர் அதனைத் திறந்து பார்த்தபொழுது, அதனுள்ளே நெற்றிக்கண்ணும், இளம்பிறை தவழுஞ் சடைமுடியும், நான்கு திருத்தோள்களுமாகவிளங்குஞ் சிவமூர்த்தத்தைக்கண்டு மயங்கித் தோத்திரஞ்செய்து நின்றனர். அப்பொழுது சிவபெருமான் அசரீரியாக, 'முனிவனே! அப்பெட்டியை மூடித் திற' என்று கூறியருளவும், அவ்வாறே மூடித்திறந்தபொழுது, அவ்வெம்பெருமான் ஒரு

இளங்குழவியாகி யழுதனர். முனிவரர் அக்குழந்தையையெடுத்துத் தமது பத்தினியாரிடத்துக்கொடுத்துப் பாலூட்டிவளர்த்துச் செப்பேசுவரனென்று திருப்பெயரிட்டு வளர்த்துவருங்கால், அவருக்குப் பதினாறுவயதுவர, அவரது தாய்தந்தையர் தம்புத்திரனது அற்ப ஆயுளைக்குறித்து வருந்துதலையுணர்ந்து அஞ்சாதிர்கள்; யான் அழியா வரம்பெற்று வருகின்றேனென்று தேறுதல்கூறித் திருக்கோயிலையடைந்து அயனரித்தீர்த்த மத்தியனின்று மருந்தவஞ்செய்ய, சிவபெருமான் இடபாரூடராயெழுந்தருளி, நித்தியகாயர்தந்து அவரது திருமுடிமேல் திருக்கரம்வைத்துத் தீக்ஷைபுரிந்து சாரூப்பியமளித்துத் தமது திருநாமமாகிய திருநந்திதேவர் என்று அபிஷேகத்திருநாமஞ் சாத்திக் குருசந்தானம்விளங்க வேத சிவாகமங்களைச் சனற்குமாரர்முதலிய முனிவரர்களுக்கு உபதேசிக்கக் கட்டளையிட்டருளிச் சுயசையென்னுங் கன்னிகையைத் திருமணம்புணர்த்திச் சிவகணங்களுக்குத் தலைவராயிருந்து தமது திருக்கோயிற்றிருவாயிலினின்று அதிகாரஞ்செலுத்தும்படி சுரிகையும் பிரம்புங்கொடுத்துத் திருமுடிசூட்டியருளினர். அத்திருநந்திதேவர் அவ்வதிகாரத்தைப்பெற்று ஸ்ரீகயிலாயமுதலிய சிவசந்நிதிகளில் எழுந்தருளியிருந்து அங்குத் தரிசனார்த்தமாகவரும் திருமால் பிரமன் முதலிய தேவர்களைச் சந்நதிவிலகும்படி தமது திருக்கரத்தேந்திய வேத்திரப்படை கொண்டோச்சி யெழுந்தருளியிருக்கின்றனர்; என்பதாம். இதனை—நெற்றியிற் கண்ணர் நாற்பெருந்தோளர் நீறணிமேனிய ரனேகர் - பெற்றமேற் கொண்ட தம்பிரானடியார் பிஞ்ஞகன் றன்னருள்பெறுவார் - மற்றவர்க்கெல்லாந் தலைமையாம் பணியு மலர்க்கையிற் சுரிகையும் பிரம்புங் - கற்றைவார் சடையானருளினாற்பெற்றான் காப்பதக்கயிலைமால்வரைதான்" என்னும் பெரியபுராணத்தானுணர்க. இச்சரித்திரவரலாற்றை, இலிங்கபுராணம் திருவையாற்றுப் புராணமுதலிய நூல்களில் விளங்கக் கூறியிருத்தலின் ஆண்டுக்கண்டுணர்க. (எ)

புரந்த ரன்முத லாகிய புங்கவர்
வரம்பின் மாதவர் மாசறு காட்சியர்
நிரந்த பூத கணவர் நிரந்தரம்
பரிந்து போற்றிப் பயில்வதம் மால்வரை.

(இ-ள்.) அந்தப் பெரிய திருக்கயிலாயமலையானது இந்திரன் முதலிய தேவர்களும், அளவற்ற சிறந்த முனிவர்களும், குற்றமற்ற தோற்றத்தினையுடைய சித்தர்களும், நிறைந்திருக்கின்ற பூதகணங்களுஞ் சதாகாலமும் அன்புகூர்ந்து வணங்கி வசிக்குந்தன்மையினையுடையது.—எ-று.

அத்திருக்கயிலாயத்திருமலை இந்திரன்முதலிய தேவர்கள் நிறைந்து துதிக்கப்பெற்றுள்ள தென்பதனை— "வேதநான்முகன்மால் புரந்தரன்முதலாம் விண்ணவரெண்ணிலார் மற்றுங் - காதலான்மிடைந்த முதற்பெருந் தடையாங் கதிர்மணிக் கோபுரத்துள்ளான் - பூதவேதாளப் பெருங்கணநாதர் போற்றிடப் பொதுவினின் றுடு - நாதனார் திருத்தேவனார்கோயி னாயகனந்தியெம்பெருமான்" என்னும் பெரியபுராணத்திருவிருத்தத்தானுணர்க. (அ)

மின்ன ரம்பைய ராடலும் விஞ்சையர்
கின்ன ரம்பயில் பாடலுங் கீழ்த்திசை
மன்ன னாதியர் வாழ்த்துமவ் வானவ
ரின்னி யங்களு மெங்கணு மார்ப்பது.

(இ-ள்.) (இன்னும் அத்திருமலையானது) ஒளியோடு விளங்குகின்ற அரம்பைமாதர்கள் செய்யும் நடனமும், வித்தியாதரர்கள் கின்னரத்தில் வாசிக்கின்ற பாட

லும், கீழ்த்திசைத் தலைவனாகிய இந்திரன் முதலிய தேவர்கள் செய்யும் வாழ்த்துதலும், அத்தேவர்களது இனிமையாகிய பல வாத்தியங்களும் எவ்விடங்களிலும் முழங்கப் பெற்றுள்ளது.—எ-று.

'மின்னரம்பையர்' என்பதற்கு மின்னல்போலுந் தோற்றத்தினையுடைய அரம்பையர் எனப்பொருள் கூறினுமாம். விஞ்சையர் = வித்தியாதரர். மின்னரம் - பிட்டில்போல்வது. கீழ்த்திசை மன்னனுதியர் என்றது, அஷ்டதிக்குப்பாலகர்களும் மற்றையர்களுமாம். இயம் = வாத்தியம். அரம்பையராடலும் விஞ்சையர்பாடலும் இருதிராதியர்களது வாழ்த்தொலியும் வாத்தியவொலியும் நிறைந்தொலிப்பது அத்திருமலையென்க. 'மின்னரம்பையராடல்' என்பதனை, "அரம்பையராடன் முழவுடன் மருங்கினருவிகளெதிரொதிர் முழங்க - வரம்பெறுங் காதன் மனத்துடன் றெய்வ மதுமலரிருகையுமேந்தி - நிரந்தர மிடைந்த விமான சோபான நீடுயர் வழியினாலேறிப்-புரந்தரன் முதலாங் கடவுளர்போற்றப் பொலிவதத் திருமலைப்புறம்பு" என்றும் பெரிய புராணத்தானு முணர்க. (கூ)

வேறு.

கீணி லாவுறு முலகெலா நீங்கியே கீழ்போய்ச்
சேணி லாவுறு பதமெலா முருவிமீச் சென்று
மாணி லாவுறு மண்டத்தி னடிமுடி மருவத்
தாணு வாயுல கிறுதியி னிற்பதச் சயிலம்.

(இ-ள்.) அத்திருமலையானது மகாபிரளயகாலத்தில் கீழே நிலத்துள்ள உலகங்களனைத்தையுங் கடந்து கீழ்ச்சென்றும், மேலே நிலத்துள்ள உலகங்களனைத்தையுங் கடந்து மேற்சென்றும், மாட்சிமையோடு விளங்குகின்ற பிரமாண்டத்தின் அடியும் முடியும் பொருந்த ஸ்தம்பாகாரமாய் நிற்கப்பெற்றது.—எ-று.

கீணிலாவுறுமுலகம் - கீழேழுலகம். சேணிலாவுறுபதம் - மேலேழுலகம். "அதலம் விதலம் சுதல நிதலம் - தராதலம் ரசாதலம் பாதலவுலகம் - என்றிவை கீழேழுல கெனப்படுமே" எனவும், "பூலோகம் புவலோகஞ் சுவலோக மகாலோகம் - சனலோகந் தவலோகஞ் சத்தியலோகமென - இத்திறத்தனவா மேலேழுலகே" எனவும் வரும் பிங்கலந்தைச் சூத்திரத்தானுணர்க. அத்திருக்கயிலாயத் திருமலை பாதலத்தளவு ஆழ்ந்தும், சத்தியலோகத்தளவு மேலோங்கியும் அண்டத்தினடி முடியளவும் பொருந்தியுள்ளதென்றபடி. எல்லா மழியத்தக்க சர்வசங்காரகாலத்துஞ் சிறிதுஞ் சலனமின்றி அவ்வவ் வூழிகடோறு முயர்ந்தோங்கும் பெருஞ்சிறப்பினதாகலின் 'தாணுவாயுல கிறுதியினிற்பதச்சயிலம்' என்றுகூறினர். இதனை:—"வூழிதொறூழி முற்றுமுயர் பொன்னெடித்தான்மலையைச்-சூழிசை யின்கரும்பின் சுவைநாவலவூரன் சொன்ன - வேழிசை யின்றமிழா லிசைந்தேத்திய பத்தினையு-மாழிக்கடலரையா வஞ்சையப்பர்க்கறிவிப்பதே" என்னுந் தமிழ்வேதத்தானுமுணர்க. (க0)

மாடு சூழ்தரு மேருவே யாதியாம் வரைகள்
பாடு சேரினு முலகெலா மழியினும் பரந்து
கூடு மண்டங்கள் குலையினுங் கொன்றைமெள லியன்போற்
கேடி லாமலே யமர்வது கயிலையங் கிரியே.

(இ-ள்.) அழகிய அத் திருக்கயிலாயமலையானது பக்கத்திற் சூழ்ந்துள்ள மகாமேரு முதலிய பர்வதங்கள் அழிவடைந்தாலும் உலகமனைத்து மழிந்தாலும், பரவி யொருங்குசேர்ந்துள்ள அண்டகோடிக ளழிந்தாலும் கொன்றைமலர்மாலையை யணிந்த சடைமுடியை யுடைய சிவபெருமானைப் போன்று அழிவில்லாதிருப்பது.

'மாகெழுந்தருமேரு' என்பதற்கு, பொன்னாற் சூழப்பட்டுப் பொருந்தியுள்ள மேரு எனப்பொருள் கூறினுமாம். மேருவே யாதியாம் வரைகளாவன - நிடதம்முதலிய அஷ்டகுலபருவதங்களும், மந்தரம்முதலிய மற்றப்பருவதங்களுமாம். பரந்துகூடு மண்டலங்கள் என்றது பல்லாயிரங்கோடி யண்டங்களை - இதனை:— "அண்டப்பகுதியினுண்டைப்பிறக்க - மளப்பருந் தன்மை வளப்பெருங் காட்சி- யொன்றனுக்கொன்று நின்றெழில்பகரின் - நூற்றொருகோடியின் மேற்படவிரிந்தன" எனவருந் திருவாசகத்திருமுறையாலும், "எண்ணரிய வாருயிர்களண்டமு மிப்படிதானே - யெண்ணரிய வெறுமமல வியல்பெனின் மற்றேரியலி - னெண்ணியவ னளவிடுத லென்னை யெனின் வினைவிதத்தாற் - பண்ணிடுவ னண்டவிதஞ் சிருட்டிதொறும் பலபடியால்" எனவருஞ் சிவதருமோத்திரத்தாலுமுணர்க. அநாதி நித்தியராகிய சிவபெருமான் என்று மழிவில்லா திருக்குமாப்போல, இக்கயிலையங்கிரியுஞ் சிறிதுஞ் சலனமின்றிச் சிறந்தோங்குதலின், கொன்றைவேணியன்போல் கேடிலாமலே யமர்வது கயிலையங் கிரி, என்று கூறினார்.

மேருவாதிவரைகளும் அண்டகோடிகளும் சர்வசங்காரகாலத்தில் நிலைகுலைவ தியல்பாகலின், அக்காலத்தும் இக்கயிலயங்கிரி அழிவின்றி விளங்குமென்பது கருத்து. (௧௧)

நலம்வ ருங்கலை மதியமு மிரவியு நாகர்
குலம்வ ருந்தனுக் குறையலா மற்றைய கோளு
மலம ருஞ்சுட ருடுக்களு மமரரும் பிறரும்
வலம்வ ரும்படி யிருப்பது கயிலைமால் வரையே.

(இ-ள்.) பெரிய அத் திருக்கயிலாயமலையானது நன்மைமிக்க சோடசகலைகளையுடைய சந்திரனும் சூரியனும் தேவகுலத்திற் றோன்றிய உடற்குறையினையுடைய இராகுகேதுக்க ளல்லாத மற்றைய கிரகங்களும் அசைகின்ற ஒளியினையுடைய நட்சத்திரங்களும் தேவர்களும் மற்றையர்களும் பிரதக்ஷிணஞ் செய்யும்படி விளங்கியுள்ளது.—எ-று.

அமுதகிரணனென்பார், 'நலம் வருங்கலைமதியம்' என்றும், அசுரகுலத்திற்பிறந்து தேவர்கூட்டத்தோடு அமுதுண்ணற்பொருட்டடைந்து திருமாலது சட்டுவத்தால் தலையிழப்புண்ட இராகுகேது வென்னுமிருகோள்களும் இடம்வருந்தன்மையிலவாகலான், அவைநீங்க மற்றைய கிரகங்களுமென்பார், 'நாகர் குலம்வருந்தனக்குறையலா மற்றையகோள்' என்றுங் கூறினார். பிறரும் - என்றது முனிவர் சித்தர் சிவகணநாதர் முதலியோர்களை. சந்திரசூரியர் முதலிய கிரகங்களும், நக்ஷத்திரங்களும் தேவர்களும் மற்றையர்களும் வலஞ்செய்தற்குரிய கயிலைவரையென்பது கருத்து. ()

ஏற்ற மேருவே யாதியாம் வரைகளேழ் வகையாற்
சாற்று நேமிக ளாழியங் கிரிபெருஞ் சலதி
நாற்றி சைக்கணு நொச்சிபோற் சூழ்தர நடுவண்
வீற்றி ருப்பது கயிலையா கியதனி வெற்பு.

(இ-ள்.) ஒப்பற்ற திருக்கயிலாயத் திருமலையானது தகுதியினை யுடைய மேருமுதலிய மலைகளும், எழுவகையாகச் சொல்லப்பட்ட கடல்களும், சக்கரவாளகிரியும் பெரும்புறக்கடலு மாகிய இவைகள் நான்குதிசைகளிலும் அரண்போலச் சூழ்ந்திருக்க அவற்றின் நடுவே வீற்றிருக்குந்தன்மையையுடையது.—எ-று.

'மேருவேயாதியாம்வரைகள்' என்றன - மேருவும், அதனைச்சூழ்ந்துள்ள அஷ்டகுல பருவதங்களுமாம். ஏழ்வகையாற் சாற்றுநேமிகள் - உவர்நீர்க்கடல் முத

லிய வெழுகடல்கள். ஆழியங்கிரி - சக்கரவாளகிரி. பெருஞ்சலதி - பெரும்புறக்கடல். மேருவாதிவரைகளும் எழ்கடல்களும், சக்கரவாளகிரியும், பெரும்புறக்கடலும் அரண்போற் சூழ்ந்திருப்ப நடுவிலுள்ளது கயிலைவெற்பு என்க.

மேருவேயாதியாம் வரைகள் என்பதனை :—“ நாற்றிசையில் வரைப்பரப்பு மேல்கீழ்நாலு நவின்றிடின் மேருவிற்பாதி யதற்குக்கீழ்பான் - மாற்றரிய மாலிய வான் மேல்பாற் கந்தமாதனர் தென்றிசை நிசதமேமகூட - மேற்றவிமம்வடபானிலஞ் சுவேத மியற்சிருங்கமெட்டுவரை யிவையா நீல - மேற்றிசழ் பொன்மணி கனகம்பனி யே நீலம் வெண்மை மதிகாந்தமிவை மேனிறமே ” என மேல்வரும் அண்டகோசப்படலத்தாலும், ‘ எழ்வகையாற் சாற்றநேமிகள் ’ என்பதனை :—உப்புத்தேனிக்கு வெண்டயிர் நெய்பா - லப்புக்கடலேழாகுமென்ப ’ என்னும் பிங்கலந்தைச் சூத்திரத்தாலுமுணர்க. (கங)

படியெ லாமுண்டு மேனமாய்த் தாங்கியும் பண்டோ
ரடியி னுலகப் படுத்திடு மிடந்துமுற் றருளு
நெடிய மாயனு முலகிறு மெல்லையி னிமலன்
வடிவ மேயெனக் காணுதற் கரியதவ் வரையே.

(இ-ள்.) அத் திருக்கயிலாயமலையானது உலகங்க ளனைத்தையு முண்டும், பன்றியுருவங் கொண்டு தாங்கியும், முற்காலத்தில் ஓரடிக்குள் அளந்து அடக்கியும், கீண்டு சென்றுமுள்ள நெடியோனுகிய திருமாலும் உலக மழிவுறுங்காலத்துச் சிவபெருமான் திருவுருவத்தைப்போலக் காணுதற்கரிதாயுள்ளது.—எ-று.

உலகத்தை உண்டும், தாங்கியும், ஓரடியினுலகப் படுத்தியும் இடந்துமுள்ள திருமாலினாலும் அத்திரு மலையினடியைக் காணுதற்கரிதாயின், மற்றையவரைக்குறித்துப்பேசுவதிற் பயனில்லையென்று கூறினாராயிற்று. (கச)

வே று.

அன்னதோர் கயிலை நாப்ப ணம்பொனின் சுடர்மேல் கொண்ட
நன்னெடுஞ் சிமயத் தோங்க லவைமையொரீஇ நண்ணிற் றென்னக்
கன்னியங் காப்பு மேவிக் கதிர்மணிக் கற்றை சுற்றப்
பொன்னெடுங் கோயி லொன்று பொலிவொடும் பொருந்திற் றன்றே.

(இ-ள்.) அத்தகைய ஒப்பற்ற திருக்கயிலாயத்திருமலையின் நடுவில், அழகிய பொன்னொளியை மேற்கொண்டுள்ள சிறப்புப்பொருந்திய நீண்ட மேருமலையானது களங்கமற்றுப் பொருந்தியிருக்குந்தன்மைபோலக் கெடாத காவலினையுடையதாய்பேரொளியமைந்த நவரத்தினங்களின் கிரணங்கள் சூழப் பொன்மயமாகிய பெரிய ஒரு ஆலயமானது விளக்கத்தோடும் பொருந்தியுள்ளது.—எ-று.

திருக்கயிலையாகிய வெள்ளிமலையின்மேல் பொற்கோயிலிருத்தல், பொன்மயமாகிய மேருமலைவந்து தங்கியதுபோன்றிருந்ததென்க. (கரு)

திணிகதி ராரந் தன்னிற் சிறந்தவச் சிரத்திற் செக்கர்
மணிதனின் முழுநீ லத்தின் மற்றைய வெறுக்கை தன்னிற்
பணிபட வருளாற் றுனே பலித்திடு சிகர மாதி
யணியினுக் கணியாய் மல்கு மாலயச் சூழ லெங்கும்.

(இ-ள்.) அவ்வாலயத்தமைந்துள்ள இடங்க ளனைத்திலும் மிக்க ஒளியினையுடைய முத்தினாலும் சிறந்த வச்சிரத்தாலும் செவ்வொளியினையுடைய மாணிக்கத்தாலும் உயர்ந்த நீலத்தாலும் மற்றைய பொருள்களாலும் அழகுபொருந்தச் சிவபெருமா

னது திருவருளினால் சுயம்பா யுண்டாகிய சிகரங்கள் முதலியவை அழகுக் கழகாக விளங்கும்.—எ-று.

இயற்கை யழகினை யுடைய திருக்கயிலைச் சிகர முதலியவற்றிற்கு முத்து முதலியநூ மணிக ளமைக்கப்பெற்று விளங்குதல், அழகுக் கழகு செய்ததுபோலு மமைந்து விளங்கிய தென்பது கருத்து. (கசு)

என்றுமீ றென்ப தின்றி யிருந்திடுங் கயிலை வெற்பிற்
பொன்றிகழ் நகரந் தன்னுட் பொருவிலாக் கோளு நாளுந்
துன்றிய தன்மைத் தென்னத் தூமணிக் கதிர்கள் சூழ
மன்றம ருறையு ளொன்று வனப்பொடு வைகிற் றன்றே.

(இ-ள்.) எக்காலத்து மழிவில்லாமல் நிலைபெற்றுள்ள திருக்கைலாயமலையில் பொன்மயமாக விளங்கும் ஆலயத்தினுள்ளே ஒப்பற்ற கிரகங்களும் நக்ஷத்திரங்களும் நெருங்கியிருக்குந்தன்மைபோலத் தூய்மையாகிய நவரத்தினவொளிகள் சூழும் வண்ணம் திருவோலக்க மண்டப மொன்று அழகோடு விளங்கியுள்ளது.—எ-று.

திருக்கயிலையின்மீதுள்ள திருவோலக்கமண்டபத்தில் நவமணிகள் பதித்திருத்தல், நவக்கிரகங்களும், இருபத்தேழு நக்ஷத்திரங்களு மமைந்துள்ள தன்மைபோன் றிருந்ததென்க. (கஎ)

வேறு.

சோதி சேருமத் தூமணி மண்டபத்
தாதி யான வரியணை யும்பரிற்
காத லாகுங் கவுரியொர் பாங்குற
வேத நாயகன் வீற்றிருந் தானரோ.

(இ-ள்.) ஒளிபொருந்திய இரத்தினங்க ளமைந்த அத் திருவோலக்கமண்டபத்துள் ஆசனங்களுள் முதன்மையாகிய சிங்காசனத்தில் தமது இச்சாரூபமாகிய உமாதேவியார் இடப்பாகத்தில் வீற்றிருக்க வேதநாயகராகிய சிவபெருமான் எழுந்தருளியிருந்தனர்.—எ-று.

மிருகேந்திரனாகிய சிங்காசனமென்பதும், விநாயகர் முதலியோரது ஆசனங்க ளனைத்திற்குந் தலைமைபெற்றுள்ள தென்பதுந் தோன்ற, 'ஆதியான வரியணை' என்றும், அருளே சிவசத்தி யென்பது தோன்ற, 'காதலாகுங் கவுரி' என்றுங் கூறினர். (கஅ)

பீடு கொண்ட பெருந்தவப் பெற்றியோர்
தேடு கின்ற சிறப்புடைத் தாம்புகழ்
நாடு தும்புரு நாரதர் விஞ்சையர்
பாடு கின்றனர் பாணியின் பாற்பட.

(இ-ள்.) பெருமை வாய்ந்த மிக்க தவத்தினையுடைய முனிவர்களால் சதா ஆராய்கின்ற சிறப்பினையுடைய சிவபெருமானது புகழினையே விரும்புகின்ற தும்புரு நாரதர்களும் வித்தியாதரர்களும் தாள வொத்திற் கிசையப் பாடிக்கொண்டிருக்கின்றனர்.—எ-று. (ககூ)

அதிகன் வேணியி லார்தரு கங்கையை
விதிபு ரந்தரன் விண்டுல கத்துள
நதிக ளாழ்ந்தெனத் தன்னையத் தேவல்செய்
சதியி னோர்கள் கவரிகள் வீசினர்.

(இ-ள்.) முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமானது சடைமுடியிற் பொருந்தியிருக்கின்ற கங்கை நதியைப் பிரமன் இந்திரன் திருமால்முதலிய தேவர்களுலகத்துள்ள நதிகள் வணங்குவதுபோல, அன்புடனே எவற்றெழிற் செய்யுந் தவமுடையவர்கள் வெண்சாமரைகளை வீசினார்கள்.—எ-று.

தன்னிக ருயர்ச்சி யில்லாத் தலைவனாகலின், 'அதிகன்' என்றார். சிவபெருமான் திருமுடியி லணிந்துள்ள கங்கையி னுயர்ச்சியைக் கருதிப் பிரமனாதிய ருலகத்துள்ள கங்கைகள் தாழ்ந்து வணங்குவதுபோல வெண்சாமரைகளை வீசினார்க ளென்பது கருத்து. (உ0)

சீல வட்ட முடிப்பிறை தேடுவான்
ஞால வட்டத் தெழுதரு நாகர்போ
மேலை வட்ட முகத்தரு கெங்கணு
மால வட்ட மசைத்தன ரன்பினோர்.

(இ-ள்.) தூய்மை யமைந்துள்ள வட்டமாகிய சடைமுடியிற் றங்கிய இளம் பிறையைத் தேடும்பொருட்டு உலகத்திற்கு வந்த சர்ப்பகூட்டங்களைப்போல (சிவபெருமானது) அழகிய திருமுகத்தி னருகில் எவ்விடங்களிலும் மெய்யடியார்கள் ஆலவட்டங்களை வீசினார்கள்.—எ-று.

ஆலவட்டம் தலையகன்று கால் நீண்டிருத்தல் பாம்பு படம்விரித்து நின்றுயர்ந்தோங்கி யிருத்தல்போலத் தோன்றுதலான், முடிப்பிறை தேடுவான் ஞாலவட்டத் தெழுதரு நாகர்போல் - ஆலவட்ட மசைத்தனர் என்று கூறினர். ஞாலவட்டம்-பூகோளம். வட்டம் - செப்பமாகிய முகம் என்னும் பொருளில் வந்தது. (உக)

ஆதி தன்னரு ளெய்தி யவன்றிருப்
பாத தாமரை சூடியப் பண்ணவன்
கோதி லாத திருவுருக் கொண்டுளோர்
பூத ராதியர் போற்றிமு னீண்டினார்.

(இ-ள்.) முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமானது திருவரு ளடைந்து அவரது திருவடித்தாமரைகளைச் சிரத்திற் றரித்து அவ் வெம்பெருமானது குற்றமற்ற திருவுருவத்தைப் பெற்றவர்களும் பூதகணங்கள் முதலியவர்களும் திருமுன்னே துதித்து அடைந்தார்கள்.—எ-று.

அப் பண்ணவன் கோதிலாத திருவுருக் கொண்டுளோராவார் - சிவசாருபம் பெற்றுள்ள மெய்யன்பர்கள். (உஉ)

திருக்கைலாசப் படலம்
முற்றிற்று.

---

ஆ திருவிருத்தம்-ஙளச.



# பார்ப்பதிப்படலம்.

அன்னுழி யுமையவ ளகத்து ளோர்செய
லுன்னினண் ணடுக்கமுற் றெழுந்துதா னெழீஇத்
தன்னிக ரில்லவன் றாளி றைஞ்சியே
முன்னுற நின்றிவை மொழிதன் மேயினாள்.

(இ-ள்.) அத்தருணத்தில் உமாதேவியார் தமது திருவுள்ளத்து ஒரு செய்கையைச் சிந்தித்து நடுக்கங்கொண்டு விரைந்தெழுந்து ஒப்பற்ற சிவபெருமான் திருவடிகளை வணங்கித் திருமுன்னே நின்று இவ்வார்த்தைகளைக் கூறியருள்வாராயினர்.

அன்னுழி - தொகுத்தல். உன்னினள் - முற்றெச்சம். எழீஇ-சொல்லிசையளபெடை. (க)

கற்பனை முதலிய கடந்த கண்ணுதற்
றற்பர நினையிகழ் தக்கன் றன்னிடைப்
பற்பகல் வளர்ந்தவன் பயந்த மாதெனச்
சொற்படு நாமமுஞ் சுமந்து ளேனியான்.

(இ-ள்.) கற்பனை முதலியவற்றைக் கடந்த நெற்றிக்கண்ணையுடைய எம்பெருமானே! யான் தேவரீரை நிந்தை கூறிய தக்ஷனிடத்திலே அநேகநாள்கள் வளர்ந்து அவன் பெற்ற புதல்வியென்று சொல்லப்படுகின்ற தாக்ஷாயணி யென்னும்பெயரும் அடைந்தவளாகவிருக்கின்றேன்.—எ-று.

கற்பனைமுதலியன.—கற்பனை-காரணம்-காரியம் என்பன. தற்பரன் தமக்குத்தாமே பரமாயுள்ளவர். சிறிது முள்ளன்பின்றிச் சதாநிந்தித்தலையே யியற்கைக் குணமாகக் கொண்டுள்ளவனென்பார், 'நினையிகழ்தக்கன்' என்றார். அவன் பயந்த மாதெனச் சொற்படுநாமமுஞ்சுமந்துளேன் - என்றது, அவன்மகளாயிருந்தும் அவனுடைய துர்க்குணங்களாறுத்துணையுமின்றி அவன் மகளென்னும் பெயரைமாத்திரம் பூண்டுள்ளேனென்பது கருத்து. அப்பெயர், தாக்ஷாயிணி என்பது. 'கற்பனைமுதலிய கடந்தகண்ணுதற்றற்பர' என்பதனை—"கற்பனைகடந்தசோதி கருணையே யுருவமாகி - யற்புதக்கோலநீடி யருமறைச் சிரத்தின்மேலாஞ் - சிற்பரவியோமமாகுந் திருச்சிற்றம்பலத்துணின்று - பொற்புட னடஞ்செய்கின்ற பூங்குழல் போற்றிபோற்றி" என்னும் பெரியபுராணத்தானும், "ஆரணங்கண் முடிந்தபதத் தானந்தவொளியுலகிற் - காரணங்கற்பனைகடந்த கருணைதிருவுருவாகிப் - பேரணங்கினுடனும்பெரும்பற்றப் புலியூர்சேர் - சீரணங்கு மணிமாடத் திருச்சிற்றம் பலம்போற்றி' என்னுங் கோயிற்புராணத்தானுமுணர்க. (உ)

ஆங்கதோர் பெயரையு மவன்க ணெய்திய
போங்கினன் வளர்ந்தவிவ் வுடலந் தன்னையுந்
தாங்கினன் மேலவை தரித்தற் கஞ்சினேன்
நீங்குவ னவ்வகை பணித்தி நீயென்றாள்.

(இ-ள்.) அந்த தாக்ஷாயணியென்றும் பெயரையும், நான் அத்தக்ஷனிடத்திற் சென்று வளர்ந்திருந்த இச்சரீரத்தையுஞ் சுமந்திருக்கின்றேன், இனிமேல், அப்பெயரையு முடலையுந் தரித்திருப்பதற்கு அஞ்சுகின்றேன், இனிஅவற்றைவிட்டு நீங்குகின்றேன். தேவரீரும் அவ்வண்ணமே கட்டளையிட்டருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர்.—எ-று.

தாக்ஷாயிணியென்றும் பெயரைக்கொண்டிருப்பின், அவனது கொடுமையைச்சிந்தித்தற்கு ஓர் ஞாபகக்குறிமாயிருக்குமாதலின், அப்பெயரையொழிக்கவேண்டுமென்பதும், அவனாற்பரிபாலிக்கப்பட்டு இனிது போஷித்துவந்த உடலையொழிக்கவேண்டுமென்பதுங்கருதி, 'ஆங்கதோர் பெயரையு மவன்க ணெய்தியே-யோங்கி நான்வளர்ந்தவிவ் வுடலந்தன்னையுந்-தாங்கினன்மேலவைதரித்தற்கஞ்சினேன்' என்றும், அவற்றைத்தாம் நீக்குதற்குக்கூடுமேனும், "மணம்புரிவதன்முன் குரவ ராணையினு மணவினைமுற்றியபின்ன - ரிணங்குற வருள்செய் கொழுநனாணையினு மிருப்பர்தம் வயமிலரொன்று - மணங்கனையவர்தாம்" என்றபடி சிவபெருமானது கட்டளையைக் கடந்து நடத்தல்கூடாமையால், 'நீங்குவனவ்வகை பணித்திநீயென்றாள்' என்றுங் கூறினர். (ரு)

மன்னுயி ராகிய மரபு முற்றவு
முன்னுற வருளிய முதல்வி யன்பினு
லின்னண மியம்பலு மிதனைத் தேர்ந்திடாத்
தன்னிக ரில்லதோர் தலைவன் கூறுவான்.

(இ-ள்.) நிலைபெற்ற ஆன்மவர்க்கங்களனைத்தையும் முற்பட்டுப் பெற்றருளிய முதல்வியாகிய உமாதேவியார் அன்போடு இவ்வாறு கூறியருளவும், இவ்வார்த்தைகளை ஒப்புயர்வில்லாதவராகிய சிவபெருமான் கேட்டருளி அருளிச்செய்வாராயினர்.—எ-று.

ஆன்மாக்களநாதி நித்தியமாகலின், 'மன்னுயிர்' என்றும், அவை, சராசரமென்னு மிருவகைப்பகுதியாய் எண்பத்துநான்குலக்ஷஞ் சீவபேதங்களா யடங்குதலின், 'உயிராகிய மரபு முற்றவும்' என்றும் அவ்வுயிர்த்தொகைகளைத் தனதருளாலீன்று காத்தருள்பவராகலின் 'முன்னுறவருளிய முதல்வி' என்றும், தக்ஷனாலிடப்பட்டபெயரும் அவனால் அன்பு பாராட்டி வளர்க்கப்பட்டதேகமும் பழிப்பினையுடையனவாகலி னவற்றையொழித்தலே துணிவென்று கருதிக் கூறுதலின், 'இன்னணமியம்பலும்' என்றுங் கூறினர்.

ஆன்மாக்கள் அநாதி நித்திய மென்பதனை:— "ஏக னநேக னிருள்கரும மாயையிரண்-டாகவிவை யாறுதி யில்" என்னுந் திருவருட்பயனாலும், அவை எண்பத்துநான்குலக்ஷஞ் சீவபேதங்களா யுள்ளனவென்பதை:—"ஊர்வபதினொன்றுமொன்பதுமானிட-நீர்பறவைநாற்காலோர் பப்பத்தாந்-தேரிய-பந்தமாந் தேவர் பதினாலயன்வகுத்த-அந்தமில்சீத் தாவரநாலைந்து" என்னுஞ் செய்யுளாலும், 'அவ்வுயிர்களைத் தனதருளாலீன்று காத்தருளினவரென்பதனை;— "பங்கயற்கண் ணரியபரம் பரனுருவே தனக்குரிய படிவமாகி - யிங்கயற்க ணகனுலகத்தெண்ணிறந்த சராசரங்களீன்றுந் தாழாக் - கொங்கயற்கண் மலர்க்கூந்தற்குமரி பாண்டியன் மகள்போற் கோலங்கொண்ட - வங்கயற்கணம்மையிருபாதப்போ தெப்போது மகத்துள்வைப்பாம்" எனவும், "ஒளியாலுலகின் றுயிரனைத்து மீன்போற் செவ்வியுறநோக்கி-யளியால் வளர்க்குமங்கயற்கணன்னேகன்னி யன்னமே-யளியா லிமவான் றிருமகளா யாவி யன்னமயில்பூவை - தெளியாமழலைக்கிளிவளர்த்து விளையாட்டயருஞ் செயலென்னே" எனவும் வருந் திருவிளையாடற்புராணத்தானுமுணர்க. (சு)

பத்திமை யெம்வயிற் பழுத்த பண்பினுஞ்
சத்திய நின்னிகர் சகத்தி னில்லைநீ
யித்திற முயலுத லெல்லை நீர்ந்தநின்
புத்திரர் வீடுறு பொருட்டுப் போலுமால்.

(இ-ள்.) உமையவளே! எம்மிடத்தில் நீ வைத்திருக்கும் அன்பானது முதிர்ந்திருக்குந் தன்மையினால் நின்னையொப்பவர்கள் உலகத்தொருவருமில்லை. நீ இவ்வாறாக முயற்சித்தல் அளவிறந்த நினது புத்திரர்களாகிய ஆன்மாக்கள் முத்தியடைந்துய்தற்பொருட்டேயாம்.—எ-று.

சத்தியே! நீ நம்மைப்பழித்துரைத்த தக்ஷனைக்குறித்துக் கூறியது, பின் உனது புத்திரர்களாகிய ஆன்மாக்கள் சிவநிந்தை புரிதலுடன் நினைத்தலுங் கொடிதென்று கருதி யொழிந்துய்தற்பொருட்டே யாமென்பார், 'இத்திறமுயலுதலெல்லை நீர்ந்தநின் - புத்திரர் வீடுறுபொருட்டுப் போலுமால்' என்றுகூறினார். பத்திமை-அன்பின்றன்மை. வயின் - ஏழனுருபு. (ரு)

நற்றிற மொழிது நங்கை சிந்தனை
முற்றிய வேண்டுமேன் மொழிது மேருவின்
சுற்றம தாகிய விமையத் தொல்வரைக்
கொற்றவன் புரிவனாற் கொடிய மாதவம்.

(இ-ள்.) உமையவளே! நீ இவ்வாறு கூறியது நற்காரியமே; உனது எண்ணம் முடிவுபெறவேண்டுமாயிற் சொல்லுகின்றோம், மேருமலையின் உறவாகிய பழைய இமையமலையரசன் கடூரமாகிய பெருந்தவத்தைச் செய்கின்றான்.—எ-று.

'மேருவின் சுற்றமதாகிய இமையத்தொல்வரை' என்பதற்கு, மேருவின் சுற்றுச் சார்பாகிய அஷ்டகுல பருவதங்களிற் சேர்ந்துள்ள இமையமலை எனப் பொருள் கூறினுமாம். முற்றிய-செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். எனில் என்பது, ஏல் என மரீஇயது. (சு)

ஏதவன் பெறத்தவ மியற்று மென்றியேன்
மாதுனை மகண்மையா மரபிற் போற்றியே
காதலோ டெமக்கருள் கருத்த தாகுமா
லாதலிற் குழவியா யவன்க ணெய்துநீ.

(இ-ள்.) உமையவளே! அவ்வரசன் யாது பெறக் கருதித் தவஞ்செய்கின்றானென்று வினவுவாயாயின், உன்னைப் புத்திரியாக முறைமையோடு வளர்த்து அன்புடன் எமக்கு மணஞ்செய்துகொடுக்கவேண்டுமென்னுங் கருத்தேயாகும்; ஆகையால், நீ குழந்தைவடிவாய் அவ்வரசனிடத்து அடைவாயாக.—எ-று.

சத்தியே நீயுமெம்மைப்போல் மாதாவுதரத்திற்றங்கி யோனிவாய்ப்பட்டுப் பிறக்கவறியாயாகையால் உன்னை மகண்மையாகப்போற்றி வளர்க்கக் கருதினனென்றும், நெருப்பிற் சூடுபோன் றெம்மைவிட்டு நீங்காத்தன்மையை யுணர்ந்தவனாகலான் எமக்கே மணஞ்செய்து கொடுக்கக் கருதினனென்றுங் கூறுவார், 'மாதுனை மகண்மையா மரபிற்போற்றியே - காதலோ டெமக்கருள் கருத்ததாகும்' என்று கூறினார்.

தளர்ந்துடன் மெலிவுறத் தவஞ்செய் வெற்பனை
விளஞ்சிறு குழவியா யெய்தி மற்றவ
னுளங்களி கூரவான் போதைந் தின்றனை
வளர்ந்தனை புரிதிமேன் மாசின் மாதவம்.

(இ-ள்.) தேகந் தளர்ந்து மெலியத் தவஞ்செய்கின்ற பர்வதராஜனிடத்து இளமைவாய்ந்த சிறு குழந்தைவடிவாய்ச் சென்று அவன் மனமகிழும்வண்ணம் ஐந்து வருடமளவும் வளர்ந்து பின்னர் குற்றமற்ற தவத்தினைச் செய்வாயாக.—எ-று.

சரீரமெலிய அருந்தவஞ்செய்கின்றனனென்பார், 'தளர்ந்துடன் மெலிவுறத் தவஞ்செய் வெற்பினன்' என்றும், அத்தவப்பயனாக நீசெல்லவேண்டுமென்பார், 'இளஞ்சிறுகுழவியாயெய்தி' என்றும், அவ்வாறு நீசென்று அவனுக்குக் களிப்பூட்டி ஐந்து வயதளவு வளர்ந்துபின் நம்மைக்கருதித் தவஞ்செய்யக் கடவையென்பார், 'மற்றவனுளங்களிகூர வாண்டோரைந்தின்றுணை - வளர்ந்தனை புரிதிமேன் மாசில் மாதவம்,' என்றுங்கூறினர். சரீரமெலியத் தவஞ்செய்தலை:— "மலர்தலையுலகத்துப் பலபல மாக்கண் - மக்களை மனைவியை யொக்கலை யொரீஇ - மனையும் பிறவுந் துறந்து நினைவருங் - காடுமலையும் புக்குக் கோடையிற் - கைம்மே னிமிர்த்துக் காலொன்று முடக்கி - யைவகை நெருப்பி னழுவத்தினின்று - மாரிநாளிலும் வார்பனிநாளிலு - நீரிடைமூழ்கி நெடிதுகிடந்துஞ் - சடையைப்புனைந்துந் தலையைப்பறித்து - முடையைத்துறந்து முண்ணாதுழன்றுங் - காயுங் கிழங்குங் காற்றுதிர்சருகும் - வாயுவுநீரும் வந்தனவருந்தியும் - களரிலுங் கல்லிலுங் கண்படைகொண்டுந்-தளர்வுறு மியாக்கையைத்தளர்வித்தாங்கவ - ரம்மைமுத்தியடைவதற்காகத் - தம்மைத்தாமே சாலவுமொறுப்பர்" எனவருந்திருவிடை மருதூர் மும்மணிக்கோவையானுமுணர்க. (அ)

அணங்குநீ நோற்றுழி யகிலத் துள்ளதோர்
கணங்களுந் தலைவருங் களிப்பி றேவரு
மிணங்கினர் சூழ்தர வெய்தி நின்னையா
மணம்புரிந் தேகொடு வருது மீண்டென.

(இ-ள்.) உமையவளே! நீ அவ்வாறு தவஞ்செய்கையில் உலகத்துள்ள சிவகணங்களும், பூதகணத்தலைவர்களும் அளவிறந்த தேவர்களும் நெருங்கிச் சூழ்ந்துவர, யாம் அங்கு அடைந்து நின்னைத் திருமணம்புரிந்தே இக்கயிலைக்கு அழைத்துவருகின்றேமென்று.—எ-று.

தக்ஷன் அகங்கார ரூபியாகலின் நீ அவன்பால் புத்திரியாக வளர்ந்தகாலைத் திருமணம்புரிவதன்முன்னர்க்கொணர்ந்தாம்; இப்பர்வதராசன் பேரன்புடையனாகலின் நினக்கோர் பழுதுருவண்ணம் பலருமறியத் திருமணம்புரிந்தே கொணர்துமென்பார், 'மணம்புரிந்தேகொடுவருதும்' என்றார். இணங்கினர் - முற்றெச்சம்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கூ)

கடல்விட முண்டிடு கடவு ளித்திற
நடைமுறை யருளலு நன்றெ னுமகிழ்ந்
தடியிணை வணங்கிநின் றன்பிற் போற்றியே
விடையது பெற்றனள் விமலை யேகினாள்.

(இ-ள்.) கடலிற்றோன்றிய ஆலாகலவிடத்தையுண்டருளிய சிவபெருமான் இவ்வாறு நடக்கவேண்டிய முறைமையைக் கட்டளையிட்டருளலும், உமாதேவியார் நல்லதென்று மகிழ்வடைந்து (அவரது) திருவடிகளை வணங்கித் திருமுன்னே நின்று அன்போடு துதித்து விடைபெற்றுக்கொண்டு சென்றருளினர்.—எ-று.

அரி பிரமேந்திராதியரது துயர் தீர விடபானஞ் செய்து காத்தருளிய பெருமான் உமையம்மையாரது அபீஷ்டத்தையும் நிறைவேற்றுவ னென்னுங் குறிப்பால், 'கடல்விடமுண்டிடுகடவுள்' என்றும், மேல் நடக்கவேண்டியவைகளை முறைப்படி கூறுதலின், 'இத்திற நடைமுறை யருளலும்' என்றும், அதற்கு அம்மையார் திருவு

ளமிசைந்தமையின், 'நன்றெனு மகிழ்ந்து' என்றும், அவ்விசைவுடன் விடைகொண்டு செல்லுங்கால், தொழுதுசெல்ல வேண்டுதலின், 'அடியிணை வணங்கிநின் றன்பிற் போற்றியே - விடையது பெற்றனள் விமலை யேகினுள்' என்றுங் கூறினுர் அது-பகுதிப்பொருள்விகுதி. பெற்றனள் முற்றெச்சம். (௰)

அல்லலு முவகையு மன்பு மெம்பிரா
னெல்லையி லருளுமா யீண்டி முன்செல
மெல்லிய லுமையவள் வெள்ளி வெற்பொரீஇ
வல்லையி னிமையமால் வரையிற் போயினுள்.

(இ-ள்.) துன்பமும், மகிழ்ச்சியும், அன்பும் எமது சிவபெருமானது அளவற்ற திருவருளுமாகச் சேர்ந்து முற்பட்டுச்செல்ல, சிறந்த இலக்ஷணங்களையுடைய உமாதேவியார் திருக்கயிலாயத் திருமலையினின்று நீங்கி விரைவில் பெரிய இமைய மலைக்கு எழுந்தருளினுர்.—எ-று.

சிவபெருமானைப் பிரிகின்றே மென்று வருந்தமும், பின் சிவபெருமான் தம்மைத் திருமணம்புரிந்தருள்வதாகக் கூறியதைக் குறித்து மகிழ்வும், ஆண்டும் சிவார்ச்சனையே பலிக்கப்பெற்றமையின் அன்பும், தாம் அவ் வரையனிடத்துக் குழந்தை வடிவாகச் சேறல் உயிர்கண்மாட்டுவைத்த பெருங்கருணையாகலின் அருளுங் கொண்டு சென்றனரென்பார், 'அல்லலு முவகையு மன்பு மெம்பிரா - னெல்லையி லருளுமா யீண்டி முன்செல' என்றுகூறினுர். வரை-ஆகுபெயர். (௧௧)

வள்ளியன் கடகரி வடிவின் வீழ்தரு
துள்ளியம் பனிமழைச் சோனை சூழ்தலா
லெள்ளருந் தன்மைசே ரிமைய மால்வரை
வெள்ளியங் கிரியென விளங்கு கின்றதே.

(இ-ள்.) இந்திரனுடைய மதம் பொருந்திய வெள்ளையானையின் நிறத்தைப் போல வீழ்ந்துகொண்டிருக்கும் அழகிய துளிகளையுடைய பனிமழையென்னுஞ் சோனைமாரி சூழ்ந்துகொண்டிருத்தலால், இகழ்தற்கரிய பெருந்தன்மையையுடைய பெரிய இமையமலையானது அழகிய வெள்ளிமலையாகிய திருக்கயிலையைப்போன்று பிரகாசிக்கின்றது.—எ-று.

இந்திரனது ஐராவத மென்னும் யானை வெண்ணிறமுடைத்தாயிருத்தல் போலப் பனிமழை வெண்ணிற முற்று விளங்கலானும், அவை வீழுங்கால் அவ் யானைபோலத் தடித்த துளிகளாய் வீழ்தலானும், 'வள்ளியன்கடகரி வடிவின் வீழ்தரு-துள்ளியம் பனிமழைச் சோனை' என்றும், மற்றைப் பர்வதங்கள்போற் சிறப்பொழிந்திராமல் உமாதேவியா ரவதரிக்கத்தக்க பெருஞ்சிறப் பமைந்து விளங்கலின், 'எள்ளருந் தன்மைசே ரிமைய மால்வரை' என்றும், இமயவரை பொன்னுருவா யிருப்பினும் பனித்தடிப்பான் மறைக்கப்பட்டு வெண்ணிற முற்று வெள்ளிமலை போன்று விளங்கலின், 'வெள்ளியங் கிரியென விளங்குகின்றது' என்றுங் கூறினுர். வள்ளியன் - இந்திரன். (௧௨)

என்டகு மிமையமு மிமைய மேலுறு
கொண்டலு மொன்றியே குலவு காட்சிய
தெண்டிரை மிசையெழு நஞ்சுந் தியநஞ்
சுண்டிடு மணிமிடற் றிறையு மொக்குமால்.

(இ-ள்.) (யாவரும்) மதிக்கத்தக்கஇமையமலையும், அவ்விமையமலையின்மேற் பொருந்திய மேகமும் ஒன்றுபட்டு விளங்குந் தன்மை (எதுபோலுமெனின்,) தென்

ளிய அலைகளையுடைய கடலிற் றோன்றிய விஷத்தையும், கொடிதாகிய அவ்விஷ த்தை உண்டருளிய காளகண்டராகிய சிவபெருமானையு மொத்திருக்கும்.—எ-று.

இமையமலையின்மேல் மேகங்கள் படிந்திருத்தல்,பாற்கடலி னடுவில் ஆலா கலவிடந் தங்கியிருத்தல்போலவும், சிவபெருமான் தமது விபூதியணிந்த வெண்டிரு மேனியில் விளங்க விடத்தைக் கண்டத்திலணிந்திருத்தல்போலவும் விளங்குமென்க.

நீலுறு மழைமுகி லிலகு மின்னொடு
மேலுற விளங்கிய விமைய வெற்பது
மாலவன் றிருவொடு மருவிக் கண்டுயில்
பாலுறு பன்னகப் பாயல் போன்றதே.

(இ-ள்.) நீலநிறம்பொருந்திய குளிர்ந்த மேகமானது விளங்குகின்ற மின்னலோடு தன்மேல் பொருந்த விளங்கப்பெற்ற இமையமலையானது, திருமாலானவர் திருமகளோடு பொருந்தி அறிதுயிலமர்கின்ற திருப்பாற்கடலிலுள்ள சேஷசயன த்தை யொத்துள்ளது.—எ-று.

இமைய வெற்பு திருப்பாற்கடலாகவும், அதன் சிகரம் சேஷசயனமாகவும், மேகம் திருமாலாகவும், அம் மேகத்திற் பொருந்தி விளங்கும் மின்னல் திருமாலது மார்பில் விளங்குந் திருமகளாகவும் உவமித்துக் கூறினார். (கச)

கரும்புய லார்த்துறு காட்சித் தாகியே
யிரும்பனி யிடையறு விமையப் பொன்வரை
சுரும்பின மிசையொடு துவன்றிச் சுற்றிட
வரும்பவி ழாதவெண் கமல மன்னதே.

(இ-ள்.) கரியமேகங்கள் குமுறியுலாவுகின்ற காட்சியினையுடையதாய்ப் பெரிய பனிக்கூட்டங்கள் நீங்காதிருக்கின்ற பொன்மயமாகிய இமையமலையானது, வண்டின் கூட்டங்கள் ரீங்காரம் பாடுதலுடனே நெருங்கிச் சூழ, இதழலராத வெண்டாமரைமலரை யொத்துள்ளது.—எ-று.

இமையவரையை வெண்டாமரை யரும்பாகவும், அதன்மேற் சூழ்ந்துள்ள கரிய மேகங்களை அவ்வரும்பைச் சூழும் வண்டுக ளாகவும், அம் மேக கர்ச்சனையை அவ் வண்டுகளின் ரீங்கார வோசையாகவும் உவமித்துக்கூறினமை காண்க. (கரு)

நீடிய மண்மக ணிதியின் குப்பையைப்
பாடுறு தண்ணிலாப் படாம தொன்றினால்
மூடினள் வைத்திடு முறைய தேயெனக்
கோடுயர் பனிகொள்பொற் குன்ற நின்றதே.

(இ-ள்.) நெடிய உலகமாதானவள் ஒரு பொற்குவியலைப் பெருமைபொருந்திய குளிர்ந்த சந்திரிகையை யொத்த ஒரு வெள்ளை வஸ்திரத்தினால் மூடிவைத்திருக்கின்ற தன்மையைப்போல உயர்ந்த சிகரங்களில் பனிக்கட்டிகளைக் கொண்டிருக்கின்ற இமையமலையானது நிலைபெற்றுள்ளது.—எ-று.

இமையவரை பொன்மலை யாதலால் அதனைப் பிறர் கவர்ந்து செல்வார்க ளென்று கருதி நிலமகள் அது யாவருக்குந் தெரியாவண்ணம் ஓர் வெள்ளை வஸ்திரத் தால் மூடிவைத்தாற்போன்று பனிச்சோனையால் சூழப்பட்டிருந்ததென்பது கருத்து.

பொன்னெடுங் கிரியென விண்டும் புங்கவர்
துன்னினர் சூழ்வதொன் றுன்னித் தொன்மனு

வன்னதை மறைத்தன விரதத் தாவியா
லென்னவு நின்றதா லிமையப் பொன்வரை.

(இ-ள்.) பொன்மயமாகிய நெடிய மகமேருமலையென்று இவ்விடத்திலுந் தேவர்கள் நெருங்கிச் சூழ்வார்களென்று கருதி, சுவாயம்பு மனுவானவர் இரசப்புகையினால் அப்பொன்னொளியை மறைத்துவைத்த தன்மையைப்போன்றும் நிலைபெற்றுள்ளது; பொன்மயமாகிய அவ்விமையமலை.—எ-று.

தேவர்கள் விரும்பியுறையு மேருமலைபோன் றிருப்பின், இங்கும் தேவர்களடைதற் கேதுவாயிருக்கும், அவ்வா றடையின் ஓர்கால் அவர்கண் மாற்றாராகிய அசுரர்களாற் றீங்குநேருமெனக்கருதி அம்மலைக்குத் தலைவனாகிய மனுவினால் இரசப்புகை யூட்டிவைத்தாற் போன்று பனி மூடி யிருந்ததென்க. தொன்மனு-சுவாயம்பு மனு.

குடகடல் குணகடல் கூடு றாவகை
யிடையொரு வாலிதா மேன மெய்திமே
தடைபுரி சிறப்பென விமையத் தாழ்வரை
நெடுநில வளவையு நிமிர்ந்து போயதே.

(இ-ள்.) மேற்றிசைக்கடலுங் கீழ்த்திசைக்கடலும் ஒருங்குசேராவண்ணம் நடுவில் ஒரு சுவேதவராகந்தோன்றித் தடைசெய்த சிறப்பினைப்போலத் தாழ்வரையினையுடைய இமையமலையானது நீண்ட பூமியின் (கீழ்மேல்) எல்லையளவும் நீண்டு சென்றுள்ளது.—எ-று.

முன்னம் பிரளயவெள்ளத்து மூழ்கிய பூமியைத் திருமால் சுவேதவராக ரூபங்கொண்டு தாங்கிக் காத்தமைபோல, மேற்கடலுங் கீழ்க்கடலுங் கூடாவண்ணம் பனிப்படலத்தான் மூடப்பட்ட வெள்ளிய இமையமலை நடுவி னின்று தடுத்ததென்க. (கஅ)

விண்ணவர் ததிக்கடல் கடைந்த வெண்ணெயு
ளண்ணலம் பாற்கட லமுதம் வைத்தெனக்
கண்ணகன் பெரும்பனி கவைஇய வெற்பின்மே
லுண்ணிறை புனற்றட மொன்று வைகிற்றே.

(இ-ள்.) தேவர்கள் தயிர்க்கடலைக் கடைந்தெடுத்த வெண்ணெயின் நடுவில் பெருமைபொருந்திய அழகிய திருப்பாற்கடலிற்றோன்றிய அமுதத்தை வைத்தாற்போல, மிகுதியாகப் பெரும்பனிகள் சூழப்பெற்ற அவ் விமையமலையின்மேல் உள்ளே நிறைந்துள்ள நீரோகூடிய தடாகமொன்று பொருந்தியுள்ளது.—எ-று.

தயிர்க்கடலிற் கடைந்தெடுத்த வெண்ணெயின் நடுவில் பாற்கடலிற் கடைந்தெடுத்த அமுதத்தைவைத்தாற்போல இமையமலையின் சிகரத்தில் ஒரு தடாகமிருந்ததென்க. இமையவெற்பு வெண்ணெயாகவும், அதன்மீதுள்ள தடாகம் அமுதமாகவும் உவமித்துக் கூறினமைகாண்க. இத்தடாகத்தின்பெயரைப் பத்மை யென்று கூறுவர். (கக)

அன்னதோர் தடத்திடை யசல மன்னவன்
மன்னிய கௌரிதன் மகண்மை யாகவுந்
தன்னிக ரிலாவரன் றனக்கு நல்கவு
முன்னுற வருந்தவ முயன்று வைகினான்.

(இ-ள்.) அத்தன்மையாகிய தடாகத்தில் பருவதராஜனானவன், நிலைபெற்ற உமாதேவியார் தனது புத்திரியாராகவும், (அவ்வம்மையாரை) சமானரகிதராகிய சிவ

பெருமானுக்குத் திருமணஞ் செய்துகொடுக்கவும் (வேண்டுமென்று சங்கற்பஞ் செய்துகொண்டு) முன்னமே அரிய தவத்தைச் செய்துகொண்டிருந்தான்.—எ-று.

சித்தி முத்திகளை வேண்டித் தவம்புரிதலியற்கை. அங்ஙனமின்றி உமாதேவியார் தனக்குப் புத்திரியாகவர விரும்பிப் பெருந்தவம்புரிந்தமையின், 'முன்னுற வருந்தவமுயன்றுவைகினுன்' என்றுகூறினுர். அசலம் - மலே. இலாத - என்பது ஈறு கெட்டது. (உ0)

மெய்த்தவ மியற்றிய வெற்பன் காணிய
வத்தட மலருமோ ரரவிந் தத்தின்மேற்
பைத்தவோர் குழவியின் படிவத் துற்றன
ளெத்திறத் துயிரையு மீன்ற தொன்மையாள்.

(இ-ள்.) மெய்ம்மையாகிய தவத்தைச் செய்துகொண்டிருந்த பர்வதராஜன் காணும்வண்ணம் அத்தடாகத்தில் மலர்ந்துள்ள ஒரு தாமரைமலரின்மீது சகல ஜீவகோடிகளையும் ஈன்றருளிய புராதனியாகிய உமாதேவியார் பசிய இளங்குழந்தை வடிவத்துடனெழுந்தருளியிருந்தனர்.—எ-று.

இடையூறுற்றுக்கெடாததவமாகலின், மெய்த்தவம், என்றும், இளங்குழந்தை வடிவாயமர்தலின், 'பைத்தவோர் குழவியின் படிவத்துற்றனள்' என்றும், அக்குழந்தை வடிவாயமர்ந்தவள் எல்லாவுயிர்களையு மீன்றருளிய உலக மாதாவாயுள்ள சிவசத்தியேயாகலின், 'எத்திறத்துயிரையு மீன்றதொன்மையாள்' என்றுங் கூறினுர்.

வேறு.

ஆங்கவட் கண்டு வெற்ப னடியனேன் பொருட்டா லம்மை
நீங்கினள் போலு முக்க ணிருமலன் றன்னை யென்னு
வேங்கினன் றனது நோன்புக் கிரங்கின னிவைக ளீச
னுேங்குபே ரருளே யென்னு வுவகையங் கடலுட் பட்டான்.

(இ-ள்.) பர்வதராஜன் அவ்வா றெழுந்தருளிய அம்மையாரை நோக்கி அடியேன் பொருட்டு உலகன்னையாகிய உமாதேவியார் மூன்றுகண்களையுடைய மலரகிதராகிய சிவபெருமானைவிட்டு நீங்கியருளினுர்போலு மென்று பெருமூச்சுவிட்டு, தான் செய்ததவத்திற்குஇரக்கங்கொண்டவனுய் இவையனைத்துஞ் சிவபெருமானது சிறந்த திருவருளேயாகுமென்று கருதினவனுய்ப் பேரானந்தக்கடலுள் மூழ்கினுன்.—எ-று.

நீரிற்றண்மைபோன்று சிவபெருமானுேடமர்ந்து விளங்குஞ் சிற்சத்தியார் நமது தவத்திற்கிரங்கி யெழுந்தருளினர்போலு மென்றஞ்சினனென்பார், 'ஏங்கினன்' என்றும், தனது தவவுயர்ச்சியைக்கருதி யிரங்கினனென்பார், 'தனது நோன்புக்கிரங்கினன்' என்றும், இவை பெருமான் றிருவருளேயென்றுணர்ந்து பின்னர் மகிழ்கூர்ந்தனனென்பார், 'இவைகளீச னுேங்கு பேரருளே யென்னு வுவகையங்கடலுட்பட்டான்' என்றுங்கூறினுர். (உஉ)

கண்ணுறு போத வாரி கான்றிட வுரோம ராசி
யுண்ணிக மூன்பு மிக்குப் புறந்தனி லொழுகிற் றென்ன
வண்ணன்மெய் பொடிப்பத் துள்ளி யடியனே னுய்ந்தே னென்னுத்
துண்ணெனப் பாடி யாடி யமலையைத் தொழுது நின்முன்.

(இ-ள்.) உள்ளத்தில் தோன்றிய அன்பானது அதிகரித்து புறத்திலொழுகிய தன்மையைப்போல கண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ் சிந்த, உரோமவரிசைகள் பர்வதராஜனுடையதேகத்தி லரும்பத்துடித்து அடியேன் பிழைத்தேனென்று விரைவாகத் துதித்து ஆனந்தக்கூத்தாடி உமாதேவியாரை வணங்கி நின்றனன்.—எ-று.

மெய்யன்பாற் பரவுவார்க்கு ஆனந்தக்கண்ணீர் வார்தலும், மயிர்க்கூச்செறிதல் முதலியன தோன்றலுமுண்மையால், 'கண்ணுறு போத வாரி கான்றிட' என்றும், 'உரோமராசி அண்ணன்மெய் பொடிப்ப' என்றுங்கூறினர். இதனை:—"நெக்குநெக்குள் ளுருகியுருகி நின்றுமிருந்துங் கிடந்துமெழுந்து - நக்குமழுதுந் தொழுதும் வாழ்த்தி நானாவிதத்தாற் கூத்துநவிற்றிச் - செக்கர்போலுந் திருமேனி திகழநோக்கிச் சிலிர்த்துச்சிலிர்த்துப் - புக்குநிற்ப தென்றுகொல்லோவென் பொல்லாமணியைப் புணர்ந்தே" என்னுந் திருவாசகத் திருமுறையானு முணர்க. (உ௩)

பங்கயத் தவிசின் வைகும் பராபரை தனைத்த னாது
செங்கையி னெடுத்து வல்லே சென்னிமேற் றாங்கி யேகித்
துங்கநல் லிமையத் தன்னா டொன்முறை யிருக்கை புக்கு
மங்கல மேனை யென்னு மனைவிகைக் கொடுத்தான் மாதோ.

(இ-ள்.) உயர்வுபொருந்திய சிறந்த பர்வதராஜன் தாமரைமலராகிய ஆசனத்தி லெழுந்தருளியிருக்கின்ற உமாதேவியாரைத் தனது அழகிய கைகளா லெடுத்து உச்சியில் தாங்கிச்சென்று பழைய முறைமைப்படியே தனது மாளிகையையடைந்து மங்கலகரம்பொருந்திய மேனை யென்னும் பெயரையுடைய மனைவியினது கையிற் கொடுத்தனன்.—எ-று.

செங்கை - செந்தாமரை மலர்போலுங் கை என்பது குறிப்பு. உமாதேவியாரவதரித்தருளும் மேன்மை வாய்ந்தமையின் 'துங்கநல்லிமையம்' என்றும், உலகமாதாவையே அரும்புதல்வியாகப் பெற்றவளாகலின், 'மங்கலமேனை' என்றுங்கூறினர்.

கொடுத்தலுந் தொழுது வாங்கிக் கொற்றவ விவணின் பாங்க
ரடுத்ததங் கெவனோ வென்ன வரசனு நிகழ்ந்த வெல்லா
மெடுத்துரை செய்யக் கேளா வீசன தருளோ வென்னா
வடுத்தவிர் கற்பின் மேனை மனமுற மகிழ்ச்சி கொண்டாள்.

(இ-ள்.) அவ்வாறு கொடுக்கவும், அவள் வணங்கி வாங்கிக்கொண்டு, தலைவரே! இக்குழந்தை தேவரீரிடத்து எவ்வாறு கிடைத்தது என்று கேட்டலும், பர்வதராசன் நடந்த சங்கதிகளனைத்தையு மெடுத்துச்சொல்லினன்; அதனைக்கேட்ட குற்றமற்ற கற்பினையுடைய மேனையானவள் இது சிவபெருமான்றிருவருளோவென்றுகூறி மனமகிழ்வுகொண்டனள்.—எ-று.

குழந்தையாகவந்தவள் சிவசத்தியென்று மேனைதெரிந்தவளாகலின், 'தொழுது வாங்கி' என்றும், இவ்வம்மையா ரெழுந்தருளினமை யிவ்வாறென் றுணராதவளாகலின், 'இவணின்பாங்கரடுத்ததங்கெவனோவென்ன' என்றும், பின்னதனைக் கேட்டுணர்ந்து சிவபெருமான்றிருவருளென்று கருதி நாமிவ்வம்மையாரைப் பெறாது பெற்றோமென்று மகிழ்கூர்ந்தனளாகலின், 'எடுத்துரை செய்யக்கேளா வீசனதருளோவென்னா - வடுத்தவிர் கற்பின்மேனை மனமுறமகிழ்ச்சி கொண்டாள்' என்றுங் கூறினர். (உ௪)

சுரந்தன கொங்கை பாலுந் துன்னென வொழுகிற் றெங்கும்
பரந்தன பொடிப்பின் போர்வை பராதன தருளே யுள்ள
நிரந்தன கவலை யாவு நீங்கின பவமுன் னுள்ள
கரந்தன விமையத் தன்னாள் காதலி தனக்கு மாதோ.

(இ-ள்.) பர்வதராஜபத்தினியாகிய மேனாதேவிக்குக் கொங்கைகளிற் பால் சுரந்து விளைந்தொழுகியது. உடல்முழுதும் புளகாங்கித முண்டாயின. உள்ளத்தில் உமாதேவியாரது திருவருள் நிறைந்தன. மனக்கவலையனைத்து மொழிந்தன. பூர்வ கன்மங்களனைத்து நீங்கின.—எ-று.

உமாதேவியாரைப் புத்திரியாகக் கோடலால், வாட்டெற்குப்பாலும், செ சத்தியைப் பெற்றேமென்று புளகமும், உள்ளத்தில் அச்சிற்பனாயினருளும், அரனு ற்கவலை நீக்கமும், பழவினை நீக்கமும் பெற்றனளென்க. மாது - ஓ - அசைநிலை. ()

பரிபுரந் தண்டை யம்பொற் பாடகம் பாத சாலம்
விரவிய தொடியே சங்கு வியன்மணிச் சுட்டி யார
மரிகெழு மதாணி பொற்றோ டங்கதம் பிறவுஞ் சாத்தி
வரையுறழ் தனப்பா லார்த்தி வரம்பெறு காப்பு நேர்ந்தாள்.

(இ-ள்.) காற்சிலம்பும், தண்டையும், பொன்னாலாகிய பாடகமும், பாதசர மும், நெருங்கிய கடகமும், வளையலும், பெரிய இரத்தினச்சுட்டியும், முத்துமாலையும், மரகதமிழைத்த மார்பணியும், சுவர்னகுண்டலமும், தோள்வளையும், மற்றுள்ள ஆபர ணங்களுமணிந்து, மலைபோன்ற ஸ்தனங்களிலுள்ள பாலை யூட்டிக் சிரேஷ்டம் பொ ருந்திய திருநீற்றுக்காப்பு முதலியவற்றை யணிந்தனள்.—எ-று.

பாதசாலம்-பாதசரம். அரிகெழுமதாணி - மரகதம்பதித்தமார்பின்பதக்கம். வரம் - சிரேஷ்டம். (உஎ)

வனைதரு பவளங் காலா வயிரமே மருங்கிற் கோலாப்
புனையிரும் பலகை நீலாப் புரிந்தபொற் றொட்டின் மேலா
வனையவ டன்னை யுய்த்து மங்கையிற் கொண்டுந் தன்கோன்
மனமகிழ் திறனுற் போற்றி மதியென வளர்க்க லுற்றாள்.

(இ-ள்.) அலங்கரிக்கப்பட்ட பவளங்களே கால்களாகவும், வயிரங்களே பக்கச்சட்டங்களாகவும், சித்திரத்தொழிலமைந்த நீலரத்தினமே பலகையாகவுஞ் செய்யப்பட்ட பொன்தொட்டிலின்மேல் அவ்வுமாதேவியாரைக் கிடத்தியும், அழகிய கைகளிற் றூங்கியும், தனது நாயகன் மனமகிழும்வண்ணம் பாதுகாப்புடன் சுக்கில பக்ஷத்துச் சந்திரனைப்போல வளர்த்துவந்தனள்.—எ-று.

சுக்கிலபக்ஷத்துச் சந்திரன் நாளுக்குநாள் கலைவளர்வதுபோல அம்மையா ரை நாளுக்குநாள் சிறப்பாகப் பாதுகாத்து வளர்க்கின்றமையின், 'தங்கோன் மன மகிழ்திறனுற்போற்றி மதியென வளர்க்க லுற்றாள்' என்று கூறினர். (உஅ)

மன்னுயிர் புவன மேனை மற்றுள பொருளுக் கெல்லா
மன்னையா யுதவி நாளு மவற்றினை வளர்த்து நிற்பா
டன்னையும் வளர்ப்பா ருண்டோ வளர்ந்தது சழக்கே யந்தக்
கன்னிதன் னருளி னீர்மை காட்டினள் போலு மன்றே.

(இ-ள்.) நிலைபெற்ற ஆன்மாக்களையும், உலகங்களையும், மற்றுள்ள எல் லாப்பொருள்களையும் தாயாக நின்று பெற்றுச் சதாகாலமும் அப்பொருள்களை வளர் த்து நிற்கின்ற உமாதேவியாரையும் வளர்ப்பவர்க ளொருவருளரோ? அவ்வாறு வளர் ந்தனவென்றுரைப்பது வீணேயாம். அவ் வுமாதேவியார் தமது திருவருட்டன்மை யைத் தெரிவித்தனர்போலும்.—எ-று.

எல்லா வுயிர்களையுமீன்று அருள்கூர்ந்து வளர்த்தருளும் உமாதேவியார், மேனைவளர்க்க வளர்ந்தருளுதல் அவர்கள் விருப்பங்காரணமாகவேயன்றி வேறன்றெ ன்பார், 'வளர்ந்தது சழக்கே' என்றும், அது அவர்கள்மீது வைத்துள்ள அருளின் தன்மையைப்பலரறிய வெளிப்படுத்தியதே யென்பார், 'அந்தக்கன்னி தன்னருளி னீர்மைகாட்டினள் போலுமன்றே' என்றுங் கூறினர். (உக)

இந்தவா றினையர் பாலா யெம்பெரு மாட்டி வைகி
யைந்தியாண் டகன்ற பின்றை யயன்முதற் றேவர் யார்க்குந்
தந்தையா ரருளை யுன்னித் தவமினிப் புரிவ னென்னாச்
சிந்தியா விமையத் தோங்கற் செம்மலுக் குரைக்க லுற்றாள்.

(இ-ள்.) எமது பெருமாட்டியாகிய உமாதேவியார் இவ்வாறு இவர்களிடத்திருந்து ஐந்துவருடங் கழிந்தபின்பு, பிரமன் முதலிய தேவர்களனைவருக்கும் பிதாவாகவுள்ள சிவபெருமானது திருவருளைச் சிந்தித்து இனித் தவஞ்செய்வேனென்று தமக்குள் கருதினவராய்ப் பர்வதராஜனைநோக்கி யருளிச்செய்வார்.—எ-று.

"இளஞ்சிறு குழவியா யெய்திமற்றவ-னுளங்களிகூர வாண்டோரைந் தின்றனை - வளர்ந்தனை புரிதிமேன் மாதவம்" என்பது சிவபெருமானது கட்டளையாகலான், 'அயன்முதற் றேவர்யார்க்குந் தந்தையா ரருளையுன்னி' என்று கூறினார். (கூ0)

நாற்பெருந் தடந்தோ ளண்ண லருளினை வரைந்து கொள்வா
னேற்படு வினைய வெற்பி லுவலரு மொருசார் வைப்பி
னேற்பதோர் கன்னி மாரோ டென்னைவிடுந் தருள்மோ வென்னப்
பாற்படு வியம்ப லோடும் பனிவரை யரசன் சொல்வான்.

(இ-ள்.) பெரிய நான்கு திருத்தோள்களையுடைய சிவபெருமான் சிறப்போடு திருமணஞ் செய்துகொள்ளும்பொருட்டுத் தவஞ்செய்கின்றேன்; (ஆதலால்) இம்மலையில் சொல்லுதற்கரிய ஓரிடத்தில் தகுதியாகிய தோழியர்களோடு என்னையனுப்புவீராகவென்று உமாதேவியார் கூறியருளவும் பர்வதராஜன் கூறுவான்.

எமது தவத்திற் கிசைந்தபடியொழுகி யேவற்பணிபுரியும் சிறுமியர்களென்பார், 'ஏற்பதோர் கன்னிமார்' என்று கூறினார். (கூக)

அன்னைகே ளெம்மி னீங்கி யருந்தவ மாற்றற் கொத்த
தின்னதோர் பருவ மன்று வியாண்டுமோ ரைந்தே சென்ற
நின்னுடல் பொறுதா தீண்டிந் நிலைமையைத் தவிர்தி யென்னக்
கன்னிகை நகைத்துக் கேண்மோ விஃதெனக் கழற லுற்றாள்.

(இ-ள்.) தாயே! கேட்பாயாக, நீ எங்களை விட்டுப் பிரிந்து அரிய தவஞ்செய்தற்குத் தக்க பருவ மிதுவன்று. வயதும் ஐந்துதான் ஆயிற்று. (தவஞ்செய்தற்கு) நினது திருமேனி தாங்காது. (ஆதலால்) இப்பொழுது இத்தவஞ்செய்தலினின்று நீங்குவாயாகவென்று பர்வதராஜன் கூறவும், பார்வதிதேவியார் நகைத்து இதனைக் கேட்பாயாக வென்று கூறியருளுவார்.—எ-று.

ஐந்துவயதாகிய குழந்தைப்பருவ மென்பார், 'இன்னதோர் பருவ மன்று வியாண்டுமோ ரைந்தே சென்ற' என்றும், தேகத்தில் வலிவிருப்பின் தவவுறுதி கைகூடும், அங்ஙனமின்றி இளந்திருமேனி யென்பார், 'நின்னுடல் பொறுது' என்றும், அத்தவத்தினைப் பின்னர் செய்துகொள்ளலாமென்பார், 'ஈண்டிந் நிலைமையைத் தவிர்தி' என்றும், பார்வதியார் நம்மை யிவ்வரசன் ஓர் சாமானிய விளங்குழவியாகவே மதித்துக் கூறினனென்று நகைத்தனரென்பார், 'கன்னிகைநகைத்து' என்றுங் கூறினார். (கூஉ)

ஈசனே காப்ப னல்லால் யாரையும் பிறராற் றம்மா
லாசறப் போற்ற லாகா தறுதுணி வாகு மீண்டப்

பேசிய திற னு மன்னோன் பேரருள் மறுதி யென்ன
நேசமோ டிமைபன்றிட் டன்னை நினைந்த நான் பியற்று மென்றான்.

(இ-ள்.) சிவபெருமான் காத்தருளுவரோயல்லாமல் எவர்களேயும் பிறராலா யினும் தன்னாலாயினும் குற்றமறக் காத்துக்கொள்ளுதல் முடியாது; அது நிச்சயமே; இப்பொழுது பேசிய காரியங்களும் அந்தச் சிவபெருமானது மிக்க திருவருளேயா கும், (ஆதலால், தவஞ்செய்தற்குத்) தடைசொல்லவேண்டாம் என்று கூறியருள, பர் வதராஜன் அன்புடன் சம்மதித்து, தாயே! நீ சிந்தித்த தவத்தைச் செய்வாயாகவெ ன்று கூறினன்.—எ-று.

சிவபெருமான் பேரருளுடையராகலான் அவரோ யாவரையுங் காத்தருள்வ ரன்றிப் பிறரால் கூடாதென்பார், 'ஈசனே காப்ப னல்லால் யாரையும் பிறராற் றம் மா-லாசறுப் போற்ற லாகா ததுதுணி வாகும்' என்றும், யான் கூறியது சிவபெரு மான் கட்டளையே யென்பார், 'ஈண்டுப் பேசியதிறனு மன்னோன் பேரருள்' என்றும், இதனைத் தடுப்பின் சிவாபராதமாய் முடியுமென்று கூறினரொன்பார், 'மறுதி' என் றுங்கூறினர். (கூகூ)

மன்னனு மியைந்து பின்னர் மால்வரை யொருசார் தன்னி
லன்னமென் னடையி னாளுக் கருந்தவச் சாலை யாற்றித்
தன்னுறு கிளைஞர் தம்பாற் றவத்தினால் வந்த பான்மைக்
கன்னியர் பலரைக் கூவிக் கௌரிபா லாகச் செய்தான்.

(இ-ள்.) இவ்வாறு பர்வதராஜன் சம்மதித்துப் பின்பு பெரிய இமையமலையி னொருபக்கத்தில் அன்னம்போலும் நடையினையுடைய பார்வதிதேவியாருக்கு அரிய தவச்சாலையை யமைத்து, தனது உறவினரிடத்தில் தவத்தால் வந்து பிறந்துள்ள நற் குணமமைந்த பல கன்னியர்களை யழைத்துப் பார்வதிதேவியாருடன் இருக்கச்செய் தனன்.—எ-று.

மேல் உமாதேவியார் 'எற்பதோர் கன்னி மாரோ டெனைவிடுத் தருள்' எனக் கூறியதற்கேற்பப் பர்வதராஜனும் தம்முறவினர்க்குள்ளே தன்னைப்போலத் தவஞ் செய்து பெற்றெடுத்த கன்னியரைத் துணைசேர்த்தனுப்பினனென்க. (கூச)

நீலுறு மணிதோய் மேனி நிமலையங் கிமையத் துச்சி
மேலுறு மரசன் றேவி விடையினன் மடவார் பல்லோர்
பாலுறு பணியிற் சூழப் பரமனை யுன்னி யந்தச்
சாலையை யடைந்து மிக்க தவத்தினை யிழைக்க லுற்றாள்.

(இ-ள்.) நீலரத்தினம்போலுந் திருமேனியினை யுடைய பார்வதிதேவியார் இமையமலையின்மேல் வசிக்கின்ற மேனாதேவியின் கட்டளையினால் அநேகம்பெண்கள் அருகில் ஏவற்பெண்களாகச் சூழ்ந்துவரச் சிவபெருமானைச் சிந்தித்து அந்தத் தவச்சா லையை யடைந்து சிறந்த தவத்தைச் செய்யத்தொடங்கினர்.—எ-று.

நீலரத்தினத்தை நவரத்தினங்கள் சூழ்ந்திருத்தல் போல, கௌரநிறம் பொ ருந்திய உமாதேவியாரைப் பல கன்னிப்பெண்கள் சூழ்ந்திருந்தனரொன்பது கருத்து.

தங்கிய வைக றோறுந் தாதையுந் தாயில் கற்பின்
மங்கையும் போற்றி யேக மாதுநோற் றிருந்தா ளிப்பா
லங்கவட் பிரிந்த பின்றை யரும்பெருங் கயிலை மேய
வெங்கடம் பெருமான் செய்த பரிசினை யியம்ப லுற்றேன்.

(இ-ள்.) உமாதேவியார் தவஞ்செய்யத்தொடங்கிய நாள்களிலெல்லாம் நி லந்தோறுந் தந்தையாகிய பர்வதராஜனும் கெடாத கற்பினையுடைய மேனாதேவியும் வந்து பாதுகாத்துச்செல்ல உமாதேவியார் தவஞ்செய்துகொண்டிருந்தனர். இப்பால், அவ்வுமாதேவியார் தம்மைவிட்டு நீங்கியபின்பு அருமையாகிய பெரிய திருக்கைலா யத்தி லெழுந்தருளிய எமது சிவபெருமான்செய்தருளியதன்மையைச் சொல்லத்தொ டங்குகின்றேன்.—எ-று.

சிவசத்தியே நம்பால் குழந்தையுருவாக வந்தருளினளென் றுணர்ந்தவர்க ளாதலால், தாய்தந்தையர்கள் பிரியாற்றாமையால் நாள்தோறும் வந்து போற்றிச் செல்வரென வறிக. (௩௯)

பார்ப்பதிப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪௧௦.

---

உ

முருகன் றுணை.

# மேருப்படலம்.

பன்னருஞ் சிறப்பின் மிக்க பனிவரை யரசன் றன்பாற்
கன்னியம் புதல்வி யாகிக் கௌரிநோற் றிருந்த காலைத்
துன்னிய வவுணர் சூழச் சூரபன் மாவாம் வெய்யோ
னிந்நில வரைப்பி னண்டத் திறைவனே யாகி யுற்றான்.

(இ-ள்.) சொல்லுதற்கரிய சிறப்புமிக்க பர்வதராஜனிடத்து உமாதேவியார் இளம்புதல்வியாக வெழுந்தருளித் தவஞ்செய்துகொண்டிருந்தபொழுது, நெருங்கிய அசுரர்கள் சூழும்படி சூரபதுமனென்னுங் கொடியவன் இந் நிலவுலகத்தில் (ஆயிரத் தெட்டு) அண்டங்களுக்கு அரசனாயிருந்தான்.—எ-று.

சிவசத்தியைப் புத்திரியாகவுஞ் சிவபெருமானை மருகனாகவும் பெற்ற சிறப் பினனென்பார், 'பன்னருஞ் சிறப்பின் மிக்க பனிவரை யரசன்' என்றும், சூரபது மன், ஆயிரத்தெட்டண்டங்களுக்கு மதிபனாயிருந்தும் இந்நிலவுலகத்திலேயே யரசு செய்தன னென்பார், 'சூரபன்மாவாம் வெய்யோ னிந்நில வரைப்பி னண்டத் திறை வனே யாகி யுற்றான்' என்றுங் கூறினார். (க)

மற்றது போழ்திற் றொல்லை மறைப்பொருள் வடத்தின் பாங்கர்ப்
பெற்றிடு சனக னாதி முனிவரர் பின்னும் பன்னா
ளற்றமி றவஞ்செய் தெந்தை யருளினாற் கயிலை நண்ணி
முற்றுணர் நந்தி போற்று முதனிலை வாயில் புக்கார்.

(இ-ள்.) அக்காலத்தில் புராதனமாகிய வேதப்பொருளைக் கல்லாலவிருக்ஷ நிழலில் (சிவபெருமானிடத்து) உபதேசமாகப் பெற்ற சனகர் முதலிய முனிசிரேஷ் டர்கள் பின்னும் அநேககாலம் அழியாத தவத்தைச்செய்து எமது முதல்வராகிய சிவ பெருமானது திருவருளினால் திருக்கயிலையை யடைந்து சர்வஞ்ஞராகிய திருநந்திதே வரால் காக்கப்பட்ட முதற்றிருவாயிலை யடைந்தார்கள்.—எ-று.

திருநந்திதேவர் சிவாமிசராக வெழுந்தருளியுள்ளவ ராகலின், 'முற்றுணர் நந்தி' என்று கூறினார். (உ)

நோன்மையின் முனிவ ரானோர் நுவலருங் காட்சி நந்தி
கான்முறை வணங்கி நிற்ப வனையவன் கருணை தன்னால்
வான்மலி கடவுட் கோயின் மந்திரங் கொண்டு செல்ல
நான்முகன் முதலோர்க் கெய்தா ஞானநா யகனைக் கண்டார்.

(இ-ள்.) தவவல்லமையையுடைய சனகாதிமுனிவர்கள் சொல்லுதற்கரிய தோற்றத்தினையுடைய திருநந்திதேவரது திருவடிகளை முறைப்படி வணங்கி நிற்க, அத் திருநந்திதேவர் கருணையினால் ஆகாயத்தையளாவிய திருக்கோயிலிற் கழைத்துக் கொண்டு செல்ல, பிரமன் முதலியவர்களா லடைதற்கரிய சிவபெருமானைத் தரிசித் தார்கள்.—எ-று.

சிவபோதத்தடிப்பினையுடைய பிரமனாதியர்க் கரியவ னென்பதும், சிவபோதச் சிறப்பினையுடைய மெய்யன்பர்கட் கெளியவ னென்பதுந் தோன்ற, 'நான்முகன் முதலோர்க் கெய்தா ஞானநா யகனைக் கண்டார்' என்று கூறினார். இதனை:—"அரியயனுக் கரியானை யடியவருக் கெளியானை - விரிபுனல்சூழ் திருவதிகை வீரட்டானத்தமுதைத் - தெரிவரிய பெருந்தன்மைத் திருநாவுக் கரசு மனம் - பரிவுறுசெந் தமிழ்ப்பாட்டுப் பலபாடிப் பணிசெயுநாள்." என்னுந் திருத்தொண்டர் புராணத்தானுமுணர்க. (ரு)

மொழியது தவறல் செல்ல முற்றுடல் பொடிப்புக் கொள்ள
விழிபுனல் பெருகத் தீசேர் மெழுகென வுள்ளம் விள்ள
வழகிய மறைக்கு மெட்டா வாதிநா யகனை நோக்கித்
தொழுதன ருவகை பூத்துத் துள்ளினர் துளக்க முற்றார்.

(இ-ள்.) வார்த்தைகள் தடுமாறவும், தேகமுழுதும் மயிர்க்கூச்செறியவும், கண்களில் ஆனந்தபாஷ்பந் ததும்பவும், தழலிலிட்ட மெழுகைப்போல வுள்ளமுருகவும், அழகிய வேதங்களாலு மெட்டுதற்கரிய முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமானைத்தரிசித்து வணங்கினவர்களாய் மனக்களிப்புற்று ஆனந்தக் கூத்தாடி மெய்நடுக்கமுற்றார்கள்.—எ-று.

'அழகிய மறைக்கு மெட்டா வாதிநாயகன்' என்பதனை:—"அல்லை யீதல்லை யீதென மறைகளு மன்மைச்-சொல்லி னாற்றுதித் திளைக்குமிச் சுந்தரன்"எனவும், "பூதங்க ளல்ல பொறியல்ல வேறு புலனல்ல வுள்ள மதியின் - பேதங்க ளல்ல வி வையன்றி நின்ற பிறிதல்ல வென்று பெருநூல்-வேதங் கிடந்து தடுமாறும் வஞ்ச வெளியென்ப கூடன் மறுகிற்-பாதங்க ளோவ வளையிந்த னாதி பகர்வானை யாயு மவரோ" எனவும் வருந் திருவிளையாடற்புராணத்தானு முணர்க. (சா)

மன்னவ ரமரர் யாரைவணங்கினு மவைக ளெல்லா
நண்ணிய பரமன் றாளி னாற்பெருந் தவத்தி னோருந்
தன்னளி நெறியிற் பல்காற் றாழ்ந்தன ரெழுந்து நின்று
பண்ணிசை மறைக டம்மாற் றுதித்திவை பகர்த லுற்றார்.

(இ-ள்.) நிலவுலகத்துள்ளவர் எந்தத்தேவர்களை வணங்கினாலும் அவ்வணக்கமனைத்தும்போய்ப் பொருந்தப்பெற்ற சிவபெருமானது திருவடிகளில், பெருந்தவத்தினையுடைய சனகாதி நான்கு முனிவர்களும், சிறந்த அன்பின் வழியாய்ப்பல முறை வணங்கியெழுந்து திருமுன்னின்று இரட்டைமுதலிய உச்சரிப்பிலக்கணங்களோடு ஓதத்தக்க வேதங்களால் துதித்துப் பின்வருவனவற்றை விண்ணப்பஞ்செய்கின்றார்கள்.—எ-று.

யாவர் எக்கடவுளை வழிபடினும் அவ் வழிபாட்டைச் சிவபெருமானேற்றுச் சித்திமுத்திகளைத் தந்தருள்வ ரென்பார், 'மண்ணவ ரமரர் யாரை வணங்கினு மவைக ளெல்லா நண்ணிய பரமன்' என்று கூறினர். இதனை.— "யாதொரு தெய்வங் கொண்டீ ரத்தெய்வ மாகி யாங்கே - மாதொரு பாக னார்தாம் வருவர்மற் றத்தெய்வங்கள் - வேதனை படுமிறக்கும் பிறக்குமேல் வினையுஞ் செய்யு - மாதலா லவையிலாதா னறிந்தருள் செய்வ னன்றே" என்னுஞ் சிவஞானசித்தியாரானும், "அறிவு போலடர்ந் தெழுமறி யாமையின் வலியாற் - பொறியி லாவிரு ளெப்பவும் வெகுண்டிலன் புனிதன் - மறுவில் கூற்றெலாந் தன்பெய ரொனுமறை வழக்கால் -வெறிமலர்க்குழ லுமையொடு மகிழ்ந்துவீற் றிருந்தான்" என்னுங் காஞ்சிப் புராணத்தானு முணர்க. (ரு)

இருட்பெருங் கடலுள் யாமந் தெறிமருத் திடைப்பட் டாங்குப்
பொருட்பெருங் கடலாம் வேதம் புடைதொறு மலைப்ப விந்நா
ளருட்பெருங் கடலே யெய்த்தே மமைந்தில துணர்வி யாங்கண்
மருட்பெருங் கடலி னீங்கும் வண்ணமொன் றருடி யென்றார்.

(இ-ள்.) சிறந்த அருட்கடலாயுள்ள எம்பெருமானே! அடியேங்கள் பெரிய கருங்கடலின் நடுவில், (புணைபற்றிச் செல்லுகின்றவர்கள்) இராக்காலத்தில் மோதுகின்ற சுழல்காற்றி லகப்பட்டுக்கொண்டாற்போலச் சிறந்த அர்த்தசமுத்திரமாகிய வேதமானது அவ்வப்பக்கங்கடோறு மலைக்கச்செய்ய (அதுகாரணத்தால்) இப்பொழுது சோர்வுற்றிருக்கின்றேம்; எங்களறிவு ஒருமைப்படவில்லை. (ஆதலால்) மயக்கமாகிய பெரியகடலினின்றுங் கரையேறு மொருமுறைமையினைத் திருவருள் புரிவீராக வென்று விண்ணப்பித்தார்கள்.—எ-று.

வேதத்தைக் கடலாகவும், அவற்றின் சாகைகளைச் சுழல்காற்றாகவும், அஞ்ஞானத்தை இருட்படலமாகவும் உவமித்துக் கூறினமை யுணர்க. (சு)

நவையறு தவங்க ளாற்றி நல்லருள் படைத்த தொல்லோ
ரிவைபுகன் றிடலு மன்பர்க் கெளிவருங் கருணை வள்ள
லவர்முகந் தெரிந்து நுங்க ளறிவமைந் தடங்கு மாறு
தவலருஞ் சிறப்பி னன்னூல் சாற்றுது மிருத்தி ரென்றான்.

(இ-ள்.) குற்றமற்றதவங்களைச்செய்து சிவபெருமான் திருவருளைப்பெற்ற புராதனர்களாகிய சனகாதிமுனிவர்களிவ்வாறு கூறுதலும், அடியார்களுக்கு எளிதில் காட்சிதந்தருளுங் கருணாநிதியாகிய சிவபெருமான் அம்முனிவர்களது முகத்தைநோக்கி உங்கள் அறிவானது அமைதியுடனடங்கும் வண்ணம் கெடாதசிறப்பினையுடைய ஞானசாஸ்திரத்தைக் கூறுகின்றேம் இருக்கக்கடவீர்களென்று திருவாய் மலர்ந்தருளினார்.—எறு.

சிவஞானமுதிர்ந்த மேலோ ராகலின், 'தொல்லோர்' என்றும், வேதப் பொருளாகிய சிவாகமம் சதாசிவமூர்த்தியின் திருமுகங்களிற் றோன்றின வாகலின், 'நன்னூல்' என்றுங் கூறினர். (எ)

என்றிவை யருளி யெந்தை யிணையடி தனது முன்னர்
நன்றுணர் காட்சி கொள்ளு நால்வரு மிருந்தா ரங்கட்
சென்றிடு நந்திப் புத்தேள் சிறப்புடை வதன நோக்கிக்
கொன்றையந் தொடையல் வேய்ந்த குழகனென் றியம்பு கின்றான்,

(இ-ள்.) எமது தந்தையாகிய சிவபெருமான் இவ்வாறு கூறியருளவும்(உட னே) இரண்டு திருவடிகளினெதிரில், சிறந்தபொருளையுணர்கின்ற சிவானந்தக்காட்சி யையநுபவித்தற்குரிய நான்கு முனிவர்களும் இருந்தார்கள். (அச்சமயத்தில்) அவ் விடத்திற்குவந்த திருநந்திதேவரது சிறந்ததிருமுகத்தைப்பார்த்தருளி அழகிய கொன் றைமலர்மாலையை யணிந்த சிவபெருமான் கட்டளையிட்டருளுவார்.—எ-று.

சிவபெருமா னுணர்த்தியருளும் ஞானபோதத்தை யடைதற்குரிய பரிபாக முடையவரென்பார், 'நன்றுணர் காட்சி கொள்ளு நால்வரும்' என்று கூறினர். (அ)

பூங்கணைக் கிழவ னன்றிப் புங்கவர் யார்போந் தாலு
மீங்குறத் தருதி யல்லை யீதுனக் கடைத்த தென்ன
வாங்கது புரிவ னென்னு வமலனை யிறைஞ்சி யங்க
ணீங்கியக் கணத்தி னந்தி நெறிமுதல் போற்றல் செய்தான்.

(இ-ள்.) புட்பபாணத்தையுடைய மன்மதனையன்றி மற்றையெந்தத்தேவர் கள் வந்தபோதிலும் இங்குவரும்படி விடாதிருக்கக்கடவை; இது உனக்கிட்டகட் டளையாகுமென்று கூறுதலும், திருநந்திதேவர் அவ்வாறு செய்கின்றேனென்று சிவ பெருமானைவணங்கி உடனே அங்குநின்றுஞ்சென்று முதற்றிருவாயிலைக்காவல் செய் திருந்தனர்.—எ-று.

போந்தாலும் என்பதில், புகு பகுதி. நெறிமுதல்-முதற்றிருவாயில். (கூ)

நந்திமுற் கடையைப் போற்ற ஞானநா யகனு மன்னான்
முந்துறை சனக னாதி முனிவரர் தொழுது கேட்ப
வந்தமி லாக மத்தி னரும்பத மூன்றுங் கூறப்
புந்திய தொடங்கு ஞான போதகம் போதி யென்றார்.

(இ-ள்.) திருநந்தி தேவர் முதற்றிருவாயிலைக் காவல்செய்திருக்க, ஞான முதல்வராகிய சிவபெருமான் தமக்கெதிரிலிருக்கின்ற சனகராதி முனிசிரேஷ்டர்கள் வணங்கிக்கேட்க, முடிவில்லாத சிவாகமங்களிலமைந்துள்ள அரியதிரிபதார்த்தலக்ஷ ணங்களையும் அருளிச்செய்ய, (முனிவர்கள் எம்பெருமானே! எங்கட்கு) மனோலய முண்டாகும் வண்ணம் மெய்ஞ்ஞானத்தை யுபதேசித்தருள்வீராகவென்று விண்ணப் பஞ்செய்தார்கள்.—எ-று.

ஆகமம் என்பதில் ஆ என்பது பாசம். க என்பது ஆன்மா. ம என்பது சிவம் என்னும் பொருள் மேல் நிற்றலால், திரிபதார்த்தநிச்சயமுணர்த்தும் நூல் என வும். ஆ என்பது சிவஞானம். க என்பது மோக்ஷம். ம என்பது மலநாசம் என்னும் பொருள்மேனிற்றலால் ஆன்மாக்களின் மலத்தை நாசஞ்செய்து சிவஞானத்தை யுதி ப்பித்து மோக்ஷத்தைத் தரும் நூல் எனவும் பொருள்படுமாறு காண்க. ஆகமத்தி னரு ம்பத மூன்றுவன - பதி பசு பாசம் என்பன. (க0)

என்னலு நகைத்தி யாது மெதிர்மொழி புரிந்தா னல்லன்
பன்னுவ தன்றுன் மற்றிப் பரிசினு லிருத்தல் கண்டி
ரந்நெறி யாகு மென்றே யனையவர்க் குணர்த்து மாற்று
லுன்னரும் பரத்தின் மேலோ னொருசெயல் புரித லுற்றான்

(இ-ள்.) முனிவர்களிவ்வாறு கூறுதலும் நினைத்தற்கரிய பரம்பொருளா யுள்ள சிவபெருமான் புன்சிரிப்படைந்து மறுமொழியொன்றுங் கூறாதவராய் (நீவிர் வினவிய மெய்ஞ்ஞானம்) சொல்லிக்காட்டுந் தன்மையதன்று; மற்றியாதெனின்,

இவ்வாறிருத்தலே யதின்முறைமையென்று அம்முனிவர்களுக் குணர்த்தும் வண்ணம் ஒருசெயலைச் செய்யத்தொடங்கினர்.—எ-று.

ஞானம் அனுபவ வுணர்ச்சியா லறிதற் கியலுவதேயன்றி யுரைத்தல் கூடாமையால், 'நகைத்தியாது மெதிர்மொழி புரிந்தா னல்லன்' என்று கூறினர். (௪௧)

இருவரு முணரா வள்ள லேனவெள் ளெயிறு யாமை
பிறங்கிளை யநந்த கோடி திளைத்திடு மாத்திற் சீர்கொள்
காதல மென்று சேர்த்தி மோனமுத் திரையைக் காட்டி
யொருகணஞ் செயலொன் றின்றி யோகுசெய் வாரி னுற்றான்.

(இ-ள்.) பிரமவிஷ்ணுக்களால் அறிதற்கரியவராகிய சிவபெருமான் பன்றியின் வெள்ளைக்கொம்பும் ஆமையோடும் சிரமாலைகளும் அநேகங்கோடிகளாகப்பொருந்தியுள்ள திருமார்பில் சிறப்பமைந்த ஒரு திருக்கரத்தைவைத்துச் சின்முத்திரை காட்டி ஒரு க்ஷணநேரம் யாதொரு செய்கையுமின்றி யோகஞ் செய்பவர்களைப் போலெழுந்தருளியிருந்தனர்.—எ-று.

மோனமுத்திரை - ஞானமுத்திரை. (௪௨)

இனையதோர் தன்மை காட்டி யெம்பிரா னுணர்த்தக் கண்டு
சனகனே முதலா வுள்ளோர் தவலரு ஞான போதம்
பனுவலி னளவன் றென்னும் பான்மையைத் தெரிந்து முக்கட்
புனிதன தருளாற் றத்தம் புந்தியி னொடுக்கம் பெற்றார்.

(இ-ள்.) இவ்வாறாகிய தன்மையைக்காட்டி எமது சிவபெருமான் அறிவிக்க, அதனைக்கண்ட சனகர்முதலிய தவசிரேஷ்டர்கள் கெடாத மெய்ஞ்ஞானமானது சாஸ்திரத்தினளவினதன்று என்னுந்தன்மையை யுணர்ந்து திரிநேத்திரராகிய சிவபெருமானதுதிருவருளினால் தங்கள்தங்கள் மனவொடுக்கம் பெற்றார்கள்.—எ-று.

தவல் - கெடுதல். பனுவல் - சொல். (௪௩)

தந்தமுள் ளொடுங்கல் பெற்ற தாபத கணத்தர் யாரு
முத்தொழில் புரியு மூவா முதல்வனா முக்கண் மூர்த்தி
மெய்த்தவ வடிவ முன்னி மேவினர் சூழ்ச்சி மேலோன்
சித்திரம் புணர்த்த பாவை செயலற விருக்கு மாபோல்.

(இ-ள்.) புத்தியிற் சிறந்த சித்திரிகனால் எழுதப்பட்ட பதுமையானது செயலற்றிருக்குந் தன்மைபோல, தங்கள்தங்களுடைய மனமடங்கப்பெற்ற தவமுனிவர்களாகிய நால்வரும் முத்தொழிலைச் செய்கின்ற கெடாமுதல்வராகிய சிவபெருமானது மெய்ம்மையாகிய தவவடிவத்தைச் சிந்தித்திருந்தனர்.—எ-று.

'முத்தொழில்புரியு மூவா முதல்வனா முக்கண்மூர்த்தி' என்பதனை :—"மலர்மக னாகி மூன்று வையமும் படைத்து மாலா- யலைவற நிறுத்தி முக்க ணாதியா யழித்தம் மூவர் - தலைவனாப் பரமா காச சரீரியாய் முதலீ றின்றித் - தொலைவருஞ் சோதியாமிச் சுந்தர விலிங்கந் தன்னில்" என்னுந் திருவிளையாடற்புராணத்தா னுணர்க.

தற்பர னினைய வாற்றாற் றவத்த ருணருந் தன்மை
யற்புத ஞான போத மளித்திடுங் கணம தொன்றின்
முற்படு கமலப் புத்தேள் முதலிய வமரர்க் கெல்லாம்
பற்பல யுகங்கள் சென்ற பிறர்க்கினிப் பகர்வ தென்னே.

(இ-ள்.) சிவபெருமான் இவ்வாறு முனிவர்களுணரும்வண்ணம் அற்புதமாகிய ஞானபோதத்தை உபதேசித்த க்ஷணப்பொழுதுக்குள் தலைமையாகிய பிரமன்

முதலிய தேவர்களனைவருக்கும் அநேக யுகங்களாயின. (அவ்வாறாயின்) மற்றவர்க ளைக்குறித்துப் பேசவேண்டுவ தென்னை ?.—எ-று.

சிவபெருமான் சனகாதியர் பொருட்டு ஞானபோத முணர்த்திய க்ஷணப் போது தேவர்கட்கே யநேககோடி யுகங்க ளாயின் ஏனையர்க்குச் சென்ற காலங்க ளைக் குறித்து அளவுகூற வேண்டாமென்று கூறியதாயிற்று. (கரு)

இந்திற ஞான போத மென்றுநோன் முனிவர்க் கெந்தை
கைத்தலங் கொண்டு காட்டுங் கணத்தினி லமரர்க் கெல்லா
மெத்துபல் லுகங்கள் சென்ற விழுமிய காஞ்சி தன்னி
லத்தன்மெய் குழைத்த நங்கை யவன்விழி புதைத்த நாட்போல்.

(இ-ள்.) மேன்மை பொருந்திய ஸ்ரீ காஞ்சிபுரத்தில் சிவபெருமானது திரு மேனியைத் தழுவிக் குழையச்செய்த உமாதேவியார் அவ்வெம்பெருமானது திருக்க ண்களை மூடியருளிய அக்காலத்தைப்போல, ஞானபோத மித்தன்மையதென்று புரா தனர்களாகிய முனிவர்களுக்கு எமது தந்தையாகிய சிவபெருமான் திருக்கரத்தாற் காட்டியருளிய க்ஷணநேரத்தில் எல்லாத்தேவர்களுக்கும் மிகுந்த அநேகயுகங்களா யின.—எ-று.

கைத்தலங்கொண்டு காட்டியதாவது :— சிவபெருமான் ஸ்ரீ தக்ஷிணாமூர்த்த மாய்த் தமது இடத்திருக்கரத்தை மார்பிலிருத்தி வலத்திருக்கரத்துள்ள ஐந்துவிரல்க ளுள் அங்குட்டத்தையுந் தற்சனியையு மொன்றுசேர்த்து, மற்றைய கனிட்டை-அநா மிகை-மத்திமை யென்னு மூவிரல்களையும் விரித்துச் சின்முத்திரையாகக் காட்டுத லாம். அவ்வாறு காட்டிய கணப்போது தேவர்களுக்குப் பல யுகங்களாயின வென் பது,— "கோடிவிதி மாளிற் குலாவுகம லக்கண்ண-னோடி வடவா லுறங்குமே-நாடி யே-அக்கண்ணர் சோடி யழியி லருணகிரி-நக்கனருள் சற்றே நகும்" என்னுந் திரு வாக்கின்படி அரிபிரமேந்திராதியரது அற்பவாயுளைக் கருதி யென்க. உமாதேவியார் சிவபெருமானது திருக்கண்களை மூடியஞான்றும் இதுபோலவே கணப்போது தேவ ர்கட்கு அநேகயுகங்களாயினமையின், 'விழுமிய காஞ்சி தன்னி-லத்தன்மெய் குழை த்த நங்கை யவன்விழி புதைத்த நாட்போல்' என்று கூறினர். இதனை :—"வெறிம லர்த் தளவ மூரல் விழியினை மறைத்து நீக்குஞ்-சிறுபொழு துலகுக் கெல்லா மெண் ணில்பல் லூழி சென்ற- மறைநெறி படைப்புச் செய்கை யாதிய மறுத்த வாற்று-விறைவிதன் வதன நோக்கி யேந்தலா ரருளிச் செய்வார்" என வருங் காஞ்சிப்புரா ணத்தானு முணர்க. (கசு)

காரண முதல்வன் மோனக் காட்சியா லமர ரெல்லாஞ்
சூரர மகளிர் தங்க டோணமுலைப் போக மின்றி
யாரிடர் நிலைமை தன்னை யடைந்தன ரளக்கர் சூழ்ந்த
பாரிடை யுயிருங் காமப் பற்றுவிட் டிருந்த வன்றே.

(இ-ள்.) அகிலகாரணராகிய சிவபெருமான் எழுந்தருளியிருந்த மௌனக் காட்சியினால் தேவர்களனைவரும் தேவஸ்திரீகளோடு தழுவுதலின்றி (மாதர் போகத் தைத் துறந்த) முனிவரர்களது நிலைமையையடைந்தார்கள். கடல்சூழ்ந்த இந்நிலவுல கத்துள் ஆன்மவர்க்கங்களனைத்தும் காமமாகிய தொடக்கொழிந்திருந்தன.—எ-று.

சிவபெருமான் சனகாதியர் பொருட்டு யோகமிருந்த காலத்துச் சராசரப்ப குதிகளனைத்தும் போகமொழிந்திருந்தன வென்க. ஆரிடர்-முனிவர்கள். (கஎ)

ஆரணன் றனது மைந்தர்க் கரும்பெறல் ஞான போத
மோரிறை காட்டு முன்ன ருலகெலா மொருப்பா டொன்றி
யிருடன் முயங்கு மார்வ மின்றியே யிருந்த யார்க்குங்
காரணன் சிவனே யென்கை கழறவும் வேண்டற் பாற்றோ.

(இ-ள்.) பிரமபுத்திரராகிய சனகாதி முனிவர்களுக்கு அடைதற்கரிய மெய்ஞ்ஞானபோதத்தை ஒரு க்ஷணப்பொழுதிருந்து காட்டியருளுதற்கு முன்னமே உலக முழுவதும் ஒருமைப்பாடடைந்து புணர்ச்சியில் விருப்பமற்றிருந்தன; (ஆதலால்) எத்தன்மையருக்கும் சிவபெருமானே காரணமென்பதைச் சொல்லிக் காட்டவும் வேண்டுமோ?—எ-று.

"அவனன்றியோ ரணுவுமசையாது" என்னும் அருண்மொழிப்படி சிவபெருமான் போகமொழிந்து யோகிருப்பவும் உயிர்களும் போக மொழிந்திருந்தமையின் அனைத்திற்குங் காரணராயுள்ளவர் சிவபெருமானே யென்பார், 'யார்க்குங் காரணன் சிவனே யென்கை கழறவும் வேண்டற்பாற்றோ' என்று கூறினர். (௪௮)

பிணைவிழைச் சூழ்தரத் துய்ப்பப் பெருமறை விதியி னாம
வணைவிழைச் சடங்கிற் கொண்ட வரிவைய ரோடு தேவ
ரிணைவிழைச் சியற்கை கூடா திரங்கினர் கவற்சி யெய்திப்
புணைவிழச் சலதி யாழ்ந்து புலம்புகொள் மாக்க ளேபோல்.

(இ-ள்.) தேவர்கள் புணர்ச்சிவிருப்பத்தை முன் வினையானது கூட்டுதலால், சிறந்த வேதவிதிதவறாமல் மணஞ்செய்துகொண்ட தங்கள் மனைவியர்களுடன் சயனத்திற்சேர, புணர்ச்சியினியற்கையானது தங்கட்குக் கைகூடாமையினால், கப்பல் கவிழக் கடலில் முழுகி வருந்துகிற மனிதர்களைப்போல மனக்கவலை யடைந்து வருந்தினார்கள்.—எ-று.

பிணைவிழைச்சு-புணர்ச்சியின்பம். அணைவிழ-சயனத்திற் பொருந்த. சடங்கு-வேதமுறைப்படி செய்யுங் கிரியைகள். (௪௯)

வன்முலை யணங்கி னோரும் வானவர் யாருங் காமத்
தன்மையும் புணர்ப்பு மின்றித் தளர்ந்தனர் வறிஞர் தம்பா
லின்மைகொண் டோர்கள் செல்ல விவது கூடா வெல்லைப்
புன்மையொ டிருவர் தாமும் புலம்புறு தன்மை யேபோல்.

(இ-ள்.) தரித்திரர்களிடத்து அவர்களினுந் தரித்திரர்கள் சென்றிரப்ப, அவர்களுக்குக் கொடுக்கக்கூடாமையினால் எழ்மையுடன் அவ்விருவர்களும் (ஒருவரோடொருவர் தங்கள்குறைகளைச்சொல்லித்)துக்கிக்குமாறுபோல, சூதாகெருவிபோலும் ஸ்தனங்களையுடைய தேவமாதர்களும் எல்லாத் தேவர்களும் காமவியற்கையும் புணர்ச்சியுமில்லாமல் சோர்வடைந்தார்கள்.—எ-று. (௫0)

பொற்புருக் குறையின் றுற்றும் புவனமேன் மகளிர் மைந்த
ரற்பொடு கலந்து காமத் தரும்பயன் கோட றேற்றார்
தற்பர வடிக ளூனத் தன்மைபா லவகை யீட்ட
நற்புன னிழல் பெற்று நணுகருந் தன்மை யேபோல்.

(இ-ள்.) சிவாமிசராகிய வயிரவமூர்த்தியினது ஆக்கினையினால் பைசாசகூட்டங்கள் நல்ல நீரும் நிழலும்பெற்றும் அவற்றையடைதற்கரிய தன்மையைப்போல, அழகிய உருவத்தில் குறைவில்லாதிருந்தும் உலகத்துள்ள மாதர்களும் புருடர்களும் அன்போடுகலந்து காமத்தின் அரியபயனை அநுபவியாதவர்களானார்கள்.—எ-று.

வடுகக்கடவுள் சிவமூர்த்தங்க ளிருபத்தைந்நுளுள் சேர்ந்தவராகலின், தற்ப ரவனென்' என்றார். பேய்க்கூட்டங்கள் நல்ல நிழலுநீரும் பெற்றிருந்தும் வயிரவமூர்த் தியின் ஆக்ஞையா லவற்றை யடையப்பெறுதிருக்குந் தன்மைபோல, ஆடவர்களும் மாதர்களும் எல்லாவவயவங்களு மமையப்பெற்றிருந்தும் புணர்ச்சியின்பங் கூடாத வர்களாய் நின்றார்களென்க. (உக)

பூர மாடக வெழுலே யன்ன பனிமொழி மகளிர் மைந்தர்
கூடின ரிருந்து மின்பங் கொண்டில ரிறுரர்கு ழாமு
மாடவர் குழாமும் வாட்க ணரிவையர் குழாமு மேனைப்
பேடியர் குழாமும் வெவ்வே றுற்றிடு பெற்றி யேபோல்.

(இ-ள்.) சிறுவர் கூட்டமும், புருடர்கள் கூட்டமும், வாள்போலுங்கண் களையுடைய மாதர்கள்கூட்டமும், மற்றைப்பேடியர் கூட்டமும், தனித்தனியிருக்குந் தன்மைபோல, முறுக்காணியமைந்த வீணையோசைபோலும் மெல்லிய மொழிகளை யுடைய மாதர்களும் புருடர்களுங் கலந்திருந்தும் புணர்ச்சியின்பத்தை யனுபவியாத வர்களானார்கள்.—எ-று.

மாடகம் - முறுக்காணி - சிறுவர் கூட்டமும், புருஷர் கூட்டமும், மாதர் கூட்டமும், பேடியர் கூட்டமும், தனித்தனி யிருப்பின் எவ்வாறு கலப்பற்றிருக்கு மோ அவ்வாறே ஸ்திரீ புருஷர்கள் கூடியிருந்தும் புணர்ச்சியின்ப மற்றிருந்தன ரென்க. (உஉ)

இருந்திட விரிஞ்சன் மாயோ னிருவரு மீசன் றன்பாற்
பொருந்திடு முணர்ச்சி கொண்டு முத்தியிற் புக்க சேயுந்
திருந்துசீர் வசிட்டன் சொல்லாற் சிலையெனப் பன்னா ணின்ற
வருந்ததி மாதும் போன்று ராடவர் மகளி ரெல்லாம்.

(இ-ள்.) பிரமவிஷ்ணுக்க ளிருவருங்கூட இவ்வாறிருக்க, (உலகத்துள்ள) ஸ்திரீபுருஷர்களனைவரும் சிவபெருமானிடத்திற் பொருந்தியுள்ள ஞானவுணர்வோடு முத்தியையடைந்த சுகப்பிரமரிஷியையும் திருத்தமாகிய சிறப்பினையுடைய வசிட்ட முனிவரரது கட்டளையினால் கல்லைப்போல (அசைவற) அநேககாலம் நின்ற அரு ந்ததியையும் ஒத்திருந்தார்கள்.—எ-று.

ஆடவர்கள் காமவிருப்பற்றிருந்தமையின், தோன்றும்பொழுதே பூரண ஞா னத்தோடுஅவதரித்த சுகப்பிரமரிஷியையும்,மாதர்கள் வசிட்டர் கட்டளையால்அநேக நாள் கல்லைப்போன்றசைவற்றிருந்த அருந்ததியையு மொத்திருந்தார்களென்க. (உ௩)

ஏமரு புவன மூன்று மினிதருள் கமலக் கண்ணர்
பூமட மாதர் தம்பாற் புணர்கிலர் பொருவில் வேளுங்
காமரு மகளிர் கூட்டங் கருதல னிவர்போற் சிந்தை
யாமையி னொடுங்கல் பெற்று ராசையுள் ளோர்க ளெல்லாம்.

(இ-ள்) இன்பம் பொருந்திய திரிலோகங்களையும் படைத்துக்காக்கின்ற பிரமவிஷ்ணுக்கள் (தங்கள்தேவியர்களாகிய) சரஸ்வதி இலக்ஷுமியென்னு மிரண்டு தேவியர்களோடும் புணர்ச்சியற்றவர்களானார்கள். ஒப்பற்றமன்மதனும் அழகியமாதர் கூட்டங்களைச் சிந்தியாதவனாயினான். இவர்களைப்போலக் காமவிருப்புள்ளவர்களனை வரும் (தங்கடங்கள்) மனம் ஆமைபோலடங்கப் பெற்றவர்களானார்கள்.—எ-று.

இனிதருள் கமலக்கண்ணர் பூமட மாதர்தம்பால், என்பதனை, பிரமனுக்கி யைப் பொருள்கொள்ளுங்கால், இனிமையுடன் சிருஷ்டிக்கின்ற தாமரைமலரின்க

றுள்ள பிரமன் வெண்டாமரைமலரில் வசிக்கும் சரஸ்வதியினிடத்து எனவும், திருமாலுக்கியைய்ப் பொருள்கொள்ளுங்கால், இனிமையுடன் இரக்ஷிக்கின்ற தாமரைக்கண்ணராகிய திருமால் செந்தாமரை மலரிலிருக்கும் திருமகளிடத்து எனவும் பிரித்துப் பொருள்கொள்க. அருளல் = சிருட்டித்தல்,காத்தல். இவ்வாறன்றி, 'இனிதருள்கமலக்கண்ணர் பூமடமாதர் தம்பாற் புணர்கிலர்' என்பதற்கு, இரட்சிக்கின்ற தாமரைக்கண்ணராகிய திருமாலும் பூதேவியிடத்தும் ஸ்ரீதேவியிடத்தும் கலந்திலர் எனப்பொருள் கூறுவாருமுளர். அங்ஙனங் கூறின், கமலக்கண்ணர் புணர்கிலர் எனப் பன்மை விகுதிகொடுத்துக் கூறவேண்டுவதவசியமின்றாகலின் அஃதுரையன்றென விடுக்க.

ஆமை ஐந்துறுப்பையுந் தன்னுள்ளே யடக்கிக்கொள்ளுமாறுபோல மாதராடவர்கள் தங்கள் காமவிச்சையைப் புறத்திற் செலுத்தாது அடக்கினமையின், சிந்தையாமையி னொடுங்கல் பெற்றார்' என்றார். (உச)

மண்ணகத் துயிர்கள் முற்று மாதிரத் துயிர்கண் முற்றும்
விண்ணகத் துயிர்கள் முற்றும் வெற்றகத் துயிர்கண் முற்றும்
பெண்ணகத் தாண்மை கூடுஞ் சிறுநலம் பிழைத்த ஞானக்
கண்ணகத் திறைவற் கண்டு கடைநின்ற காட்சி யார்போல்.

(இ-ள்.) ஞானநோக்கத்தால் சிவபெருமானைத் தரிசித்துத்தத்துவமுடிவில் நிற்கின்ற சிவஞானிகளைப்போல, நிலவுலகத்துள்ள உயிர்களும், அட்டதிக்கிலுள்ள உயிர்களும் விண்ணுலகத்துள்ள உயிர்களும் மற்றிடங்களிலுள்ள உயிர்களுமாகிய எல்லாவுயிர்களும் பெண்ணோடு ஆண்புணருகின்ற சிற்றின்பத்தையிழந்தன.—எ-று.

வெற்றகம் என்றது, பாதல முதலிய கீழுலகங்களை. சிறுநலம் = சிற்றின்பம். ஞானக்கண்ணினால் சிவபெருமானைத் தரிசித்துணரு மெய்ஞ்ஞானிகள் போன்று காமவின்பத்தை யொழிந்திருந்தனவென்க. (உரு)

நாகமார் சடிலத் தண்ண னற்பெருந் தவரு முய்ய
யோகுசேர் நிலைமை காட்டு மொருகணத் துயிரின் பொம்மல்
வாகைவே டானு நிற்க மையலும் புணர்ப்பு மற்ற
வாகையா லகில மெல்லா மவனென்கை தெரிந்த தன்றே.

(இ-ள்.) சர்ப்பாபரணத்தையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் சிறந்த தவத்தினையுடைய சனகாதிமுனிவர்கள் நால்வரும் உய்யும்வண்ணம் யோகத்தைச்செய்கின்ற நிலைமையைக் காட்டியருளிய ஒரு கூணநேரத்துள் வெற்றிபொருந்திய மன்மதனு முயிரோடிருந்தும், உயிர்த்தொகுதிகள் காமவிச்சையும் புணர்ச்சியுமில்லாதனவாயின. ஆகையால் உலகமுழுமைக்கும் அச்சிவபெருமானே காரணகர்த்தரென்று விளங்கியது.—எ-று.

காமவிச்சையூட்டும் மன்மதனுயிரோடிருந்தும் உயிர்கள் போகமொழிந்திருந்தமையின், எல்லாவற்றிற்குங் காரணராயுள்ளவர் சிவபெருமானே யென்பதை விளக்கியவாறு காண்க. இதனை :—எல்லா வுயிர்க்கு முயிரருணேச ரிவரசைவி - னல்லாதனவு மசையாத தென்ப தறிந்தனமே - வில்லாடன் மார னிருக்கவும் யோகம் விளைத்தவந்நாள் - புல்லா திருந்தன வெல்லா வுயிருந்தம் போகத்தையே" என்னுஞ் செய்யுளானு முணர்க. (உசு)

சிலையொடு பகழி வாடத் திருமதிக் குடைசிர் குன்ற
வலிகளர் வெய்தத் தென்றன் மறிகடற் சுறவு தூங்க

வில்புரி யாகை நீங்கி யாடன்மா மகனு மாதின்
கலவிய தொழினீங் கானெனிற் பிறர்செயல் கழறற் பாற்றோ.

(இ-ள்.) வெற்றிபொருந்திய சிறந்தமன்மதனும் தனது கரும்புவில்லுடன் புஷ்பபாணம் வாடவும், அழகிய சந்திரனாகிய குடையானது சிறப்புக்குறையவும், தென்றற்றேரானது வலிகுன்றவும், சுறாமீனாகிய கொடியானது அலைமடங்குகின்ற கடலில் தூங்கவும், உயிர்களை வருத்துகின்ற தந்தொழிலினின்று நீங்கி இரதிதேவியின் புணர்ச்சியையும் நீங்கினனென்று கூறுவோமாயின், மற்றவர்களது செய்கையைச் சொல்லவும்வேண்டுமோ?—எ-று.

மன்மதனுக்கு, அம்பு-மலரும், குடை-திங்களும்,தேர்-தென்றலும், கொடி-சுறவுமாகலின், அவை வாட, சீர் குன்ற, வலி தளர்வெய்த - தூங்க என்று கூறினர். இவற்றால் ஒரு பயனு மில்லையாயிற் றென்பது கருத்து. மன்மதனுக்குரிய சின்னங்களை—"ஆலைக் கரும்புசிலை யைங்கணைபூ நாண்சுரும்பு - மாலைக் கிளிபுரவி மாருதந் தேர்-வேலை-கடிமுரசங் கங்குல் களிறுகுயில் காளங் - கொடிமகரந் திங்கள் குடை" என்னும் இரத்தினச்சுருக்கத்தானு முணர்க. (உஎ)

சாலிகள் வளரு மெல்லை தடம்புனல் வறுமைத் தாக
வாலிது கூரல்வாங் காது வருத்தொடு மாய்வ தேபோன்
மேலவ னருளாற் போகம் வெறுத்தலிற் கருமல் கின்றி
ஞாலமன் னுயிர்கண் முற்று நாடொறுங் குறைந்த வன்றே.

(இ-ள்.) செந்நெற்பயிர்கள் வளர்ந்துவரும்பொழுது மிக்க நீர்வற்றிப்போகவும், (அப்பயிர்கள்) வெள்ளிய கதிர் வாங்காமல் வருத்தமுடனழியுமாறுபோல, சிவபெருமான் திருவருளினால் (உயிர்கள்) போகத்தை வெறுத்திருத்தலினால் கருவிருத்தியில்லாமல் உலகத்திற் பொருந்திய உயிர்களனைத்தும் நாளுக்குநாள் குறைவுற்றன.—எ-று. (உஅ)

முள்ளரை முளரிப் புத்தேள் முதற்புரி துணையே யன்றித்
தள்ளரு முயிர்கள் பின்னுந் தலைத்தலை மல்கா தற்ற
தெள்ளிதி னுலக மீன்ற தேவியின் றுகி யீசன்
வெள்ளியங் கயிலை தன்னின் மேவிய மேலை நாட்போல்.

(இ-ள்.) சர்வலோகங்களையும் சிறப்பாகப் பெற்றருளிய உமாதேவியாரில்லாது சிவபெருமான் திருக்கயிலாயத்தில் எழுந்தருளியிருந்த முற்காலத்தைப்போல முட்களையடியிலுள்ள தாமரைமலரில் வசிக்கின்ற பிரமன்முதலிற் சிருஷ்டித்த அளவேயன்றி கெடுதற்கரிய உயிர்கள் மேலுமேலும் விருத்தியடையாதிருந்தன.—எ-று.

போகமே கருவிருத்திக் காதாரமாகலின் அப்போக நீங்கவுங் கருவிருத்தியொழிந்தனவென்பார், 'தள்ளரு முயிர்கள் பின்னுந் தலைத்தலை மல்கா தற்ற' என்று கூறினர். (உக)

இம்முறை நிகழ நாத னீரிரு தவத்தி னோர்க்கு
மெய்ம்மைகொ ளுணர்ச்சி காட்டி வீற்றிருந் தருளு மெல்லை
தெம்முயல் சூரன் றிங்கு செய்தலான் மகவான் வானோர்
தம்மொடுந் துறக்கம் விட்டுச் சசியொடுந் தரணி புக்கான்.

(இ-ள்.) இவ்வாறு நிகழ, சிவபெருமான் சனகாதி நான்கு முனிவர்களுக்கும் உண்மை ஞானபோதத்தை யுபதேசித்துத் தக்ஷிணாமூர்த்தியாக வெழுந்தருளியிருந்தபொழுது பகைமையை விருத்திசெய்கின்ற சூரபதுமன் பொல்லாங்கு செய்த

மையால் இந்திரன் தேவர்களையும் சுவர்க்கத்தையும் விட்டுநீங்கி இந்திராணியுடன் இவ்வுலகத்தையடைந்தான்.—எ-று.

“தெவ்வென் மொழியே தொழிற்பெய ரற்றே - மவ்வரின் வஃகான் மவ்வு மாகும்” என்னு மிலக்கணத்தால், தெவ்+முயல் என்பது தெம்முயல் என்றாயிற்று. தெவ்-பகை. சசி-இந்திராணி. (௯௦)

மேகமூர் கடவுள் வெள்ளி வெற்பினி லேகி முக்க
ணாகநா யகனைக் காணு மெல்லையின் றாக மீண்டு
சோகமோ டம்பொன் மேருத் துன்னியே சூரன் மைந்தன்
மாகநா டழித்துச் சேயைச் சிறைசெய்த வண்ணந் தேர்ந்தான்.

(இ-ள்.) மேகவாகனனாகிய இந்திரன் திருக்கயிலாயத் திருமலையையடைந்து திரிநேத்திரராகிய சிவபெருமானைத்தரிசிப்பதற்குக் காலமல்லாமையால் திரும்பி வருத்தத்துடன் அழகிய பொன்மயமாகிய மேருமலையை யடைந்து சூரபதுமன் புத்திரனாகிய பானுகோபன் சுவர்க்கலோகத்தையழித்துச் சயந்தனைச் சிறைசெய்த சங்கதிகளைக் கேள்வியுற்றான்.—எ-று.

மன்மதன் தவிர மற்றொருவரையும் விடப்படாதென்பது சிவபெருமானது கட்டளையாகலால், இந்திரன் திருநந்திதேவரால் தடைசெய்யப்பட்டு மேருவை யடைந்தனனென்க. (௯௧)

தமனிய மேரு வெற்பிற் றன்னுள மொருப்பா டெய்த
நிமலனை யுள்ளிப் பன்னா ணெடுந்தவ முழத்த லோடு
மிமில்விடை மிசைக்கொண் டங்க ணெம்பிரா னேகக் காணூஉ
வமரர்கோன் வணங்கிப் போற்ற வினையவ னருளிச் செய்வான்.

(இ-ள்.) இந்திரன் பொன்மயமாகிய மேருமலையில் தனது மனம் ஒற்றுமைப்படும்படி சிவபெருமானைத் தியானித்து அநேககாலம் பெருந்தவஞ்செய்யவும், எமது சிவபெருமான் (அத்தவத்திற்கிரங்கி) முசுப்பினையுடைய இடபவாகனத்தின் மேலெழுந்தருளிவரக்கண்டு வணங்கித் துதிக்கச் சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (௯௨)

நொந்தனை யளப்பில் கால நோற்றனை யாற்ற றீர்ந்தா
யிந்திர நினக்கு வேண்டிற் றென்னைய தியம்பு கென்னு
வந்தமி லறிவின் மேலோ னறிகிலன் போலக் கேட்ப
வந்தனை புரிந்து போற்றி மகபதி புகல லுற்றான்.

(இ-ள்.) இந்திரனே! மனம் வருந்தினை, அநேககாலந் தவஞ்செய்தனை, வலிமை குறைந்திருக்கின்றனை; (ஆகலின்.) உனக்கு யாது வேண்டுவது; அதனைச் சொல்லக்கடவாயென்று முற்றுணர்ச்சியினையுடைய சிவபெருமான் (அவ்விந்திரனது) மனக்கருத்தை யறியாதவர்போன்று கேட்டருள, இந்திரன் வணங்கித் துதித்துக் கூறுவானாயினான்.—எ-று.

சிவபெருமான் முற்றுணர்ச்சியினரென்பதும், இந்திரனைக் கேட்டருளியதும் ஒருவிளையாடலென்பதுந் தோன்ற, ‘அந்தமிலறிவின் மேலோனறிகிலன்போலக் கேட்ப’ என்றார். (௯௩)

பன்னரும் பழிசேர் சூரன் பருவரற் படுத்திப் பின்ன
ரென்னொரு புதல்வன் றன்னை யிமையவர் பலரை வாட்டித்
தன்னகர்ச் சிறையிட் டெம்மூர் தழல்கொளீஇத் தவறு செய்தா
னன்னவன் றன்னை யட்டே யளித்திபா லெம்மை யென்ன.

(இ-ள்.) சொல்லுதற்கரிய பழிப்பினையுடைய சூரபதுமன் என்னைத் துன்பப்படுத்திப் பின்பு எனது ஒரு குமாரனாகிய சயந்தனையும், அநேக தேவர்களையும் வருத்தித் தனது மகேந்திரபுரியில் சிறையிலிட்டு எமது அமராபதி நகரத்தை நெருப்பிட்டுக் கொளுத்திக் குற்றஞ்செய்தான். அத்தகைய சூரபதுமனை யழித்து எங்களைக் காத்தருள்வீராகவென்று வேண்டிக்கொள்ள.—எ-று.

இதுமுத லிரண்டு பாடலுங் குளகம். (ருச)

மெய்ம்மைய தகன்ற தக்கன் வேள்வியி னிருந்த பாவ
நும்மிடை யிருந்த தற்றா னேதக வுழந்தீர் மேலு
னம்மிடை யொருசேய் வந்து நணுகிவெஞ் சூரைக் காதி
யிம்மென வும்மைக் காப்ப னெனப்புகன் றிறைவன் போனான்.

(இ-ள்.) சத்தியந் தவறிய தக்ஷனது யாகசாலையில் (நீங்கள்) சேர்ந்திருந்த பாவமானது உங்களிடத்துப் பொருந்தியுள்ளது; அக்காரணத்தால் வருத்தமுற்றீர்கள்; இனி வருங்காலத்தில், நம்மிடத்து ஒரு புத்திரன் றோன்றிக் கொடிய சூரபதுமனைக் கொன்று உங்களை விரைவாகக் காப்பனென்று கூறி (ச்சிவபெருமான்) மறைந்தருளினார்.— எ-று. (ருரு)

மறைந்தன னிறைவ னேக மகபதி யிரக்க மெய்திக்
குறைந்தன னுணர்வு துன்பங் கூர்ந்தனன் குமர னங்கட்
பிறந்துமைக் காப்ப னென்றே பிரானருள் புரிந்த பெற்றி
சிறந்ததன் மனத்தி னுன்னித் தேறின னுவகை செய்தான்.

(இ-ள்.) இவ்வாறு சிவபெருமான் மறைந்து செல்லவும் இந்திரன் மனவருத்தமுற்று உணர்வு குன்றி வியாகூலமடைந்தவனாய்ப் பின்னர், நம்மிடத்தில் ஒரு குமரன் தோன்றி உங்களைப் பாதுகாப்பனென்று சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளிய தன்மையினைச் சிறப்புப்பொருந்திய தன் மனத்தில் நினைத்துத் தேறுதலடைந்து சந்தோஷங்கொண்டனன்.—எ-று.

இந்திரன் சிவபெருமான் மறைந்தருளினமையினிரக்கமும்,சூரனது துன்பத்தைக்கருதி உணர்வுகுன்றுதலும், உனது துன்பநீங்கப்புத்திரனைத் தருகின்றோமென்று சிவபெருமா னருளிச்செய்த மெய்ம்மொழியால் உவகையு மடைந்தனனென்க.

மாசறு காட்சி கொண்ட மாதவர்க் கருளி யெங்கோன்
றேசுறு கயிலை யுற்றா னுமையவ ளிமையஞ் சேர்ந்தா
ளாசறு குமர னன்னார்க் கடைவதெத் தன்மை யென்னா
வாசவ னிருந்து நாடி மனமிசைக் கவலை கூர்ந்தான்.

(இ-ள்.) குற்றமற்ற காட்சியினையுடைய சனகாதிமுனிவர்களுக்கு உபதேசித்துக்கொண்டு எமது முதல்வராகிய சிவபெருமான் ஒளிபொருந்திய திருக்கயிலாயத்தி லெழுந்தருளியிருக்கின்றார். உமாதேவியார் இமையமலையை யடைந்திருக்கின்றனர்; (இவர்க ளிவ்வாறு பிரிந்திருந்தால்) குற்றமற்ற புத்திரன் அவர்களுக்குண்டாவதெப்படியென்று இந்திரன் ஆலோசித்து மனக்கவலையடைந்தான்.—எ-று.

சிவபெருமான் திருக்கயிலையினும் உமையவள் இமாசலத்திலு மிருப்பின் இவர்கள்பாற்புத்திர னெவ்வாறு தோன்றுமென இந்திரன் வருந்தினனென்க. (ருஎ)

மயர்வொடு றறக்க மன்னன் மனேவதி யென்னு மான்டை
வியனக ரெய்தி யாங்கண் வீற்றிருந் தருளும் பொன்னி
னியன்முறை மனைவி தன்பா லில்லினை யிருத்தல் செய்தாங்
கயனுறு கடிமான் கோயி லடைந்தன னமர ரோடும்.

(இ-ள்.) இந்திரன் மனக்கவலையோடு அம்மேருமலையிலுள்ள மனோவதியென்னும் பெரிய நகரத்தையடைந்து அங்கு எழுந்தருளியிருந்த குருபத்தினியாகிய தாராதேவியினிடத்தில் தன் மனைவியாகிய இந்திராணியை வைத்துவிட்டு, பிரமன் வசிக்கின்ற காவலையுடைய சிறந்த கோயிலுக்குள்ளே தேவர்களோடு சென்றனன்.

பொன்—பிரகஸ்பதி. இல் - இடவாகுபெயர். (௩௮)

இனையதோர் காலைமுக்க ணெம்பிரான் ஞான போத
முனிவரர்க் குணர்த்தி வைகு முறையினாற் படைப்பின் றுகித்
தனியொடு மேதா வைகுந் தொன்முறை யவையை நண்ணி
ப யனையவன் கழன்முன் றாழா வளப்பில வழுத்தி நின்றான்.

(இ-ள்.) இவ்வாறாகிய காலத்து மூன்று கண்களையுடைய எமது சிவபெருமான் சனகாதி முனிவர்களுக்கு ஞானோபதேசஞ் செய்துகொண்டிருந்த காரணத்தினால் பிரமன் சிருஷ்டித்தொழிலின்றி வருத்தத்துடனிருக்கின்ற பழைமையாகிய முறைமையினையுடைய சபையிற் சென்று அப்பிரமனது பாதங்களை வணங்கிப் பலவகையாகத் தோத்திரஞ்செய்து நின்றனன்.—எ-று. (௩௯)

நிற்றலு மகவான் றன்னை நீடருள் புரிந்து நோக்கிப்
பொற்றனிக் கமல மேய புங்கவர் முதல்வன் வானோர்
கொற்றவ வந்த தென்னை கூறுதி யென்ன லோடுந்
சொற்றனன் சூர பன்மன் செய்திடுந் துன்ப மெல்லாம்.

(இ-ள்.) அவ்வாறு நிற்கவும், ஒப்பற்ற அழகிய தாமரைமலரில் வசிக்கின்ற பிரமன் இந்திரனை மிக்க கிருபையோடு நோக்கி, தேவராஜனே! நீ வந்த காரணம் யாது? சொல்லக்கடவையென்று வினவுதலும், (உடனே அவ்விந்திரன்) சூரபதுமன் தனக்குச் செய்கின்ற துன்பங்களனைத்தையுங் கூறினன்.—எ-று. (௪௦)

வெய்யதோர் சூரன் செய்கை விளம்பியே முனிவர்க் கீச
னையமி லுணர்வு காட்டி யமர்வது முரைத்துத் தான்பின்
செய்யுறு தவங்கண் டன்னா னருளிய திறனுஞ் செப்பி
யுய்வதோர் பரிசு தென்னோ வும்பரும் யானு மென்றான்.

(இ-ள்.) (இந்திரன் பிரமனிடத்தில்) கொடிய சூரபதுமன் செய்த கொடுமைகளனைத்தையுங் கூறி, சனகாதிகளுக்குச் சிவபெருமான் சந்தேகமில்லாத ஞான போதத்தை யுபதேசித்துக்கொண் டெழுந்தருளியிருத்தலையுங் கூறி, தான் செய்த தவத்தைநோக்கி அவ்வெம்பெருமான் திருவாய்மலர்ந்தருளிய விஷயங்களையு முரைத்து, பின்பு யானும் தேவர்களும் கடைத்தேறும்வகை யாதென்று வினவினன். (௪௧)

என்றலு மலரோன் கேளா வெவர்க்குமே லாகு மீச
னொன்றிய வருளி னோனு முற்றவர்க் குதவு வோனு
மன்றியு முறைசெய் வோனு மாதலின் முனிபோல் வெள்ளிக்
குன்றிடை யெம்மை யாளுங் குறிப்பின்வீற் றிருந்தா னென்றே.

(இ-ள்.) இவ்வாறு இந்திரன் கூறவும் பிரமன்கேட்டு, யாவர்க்கு முதல்வராயுள்ள சிவபெருமான் திருவருளையுடையவரும், தம்மை யடைந்தவர்கட்குத் திருவருள் புரிபவரும், அன்றியும், முறைமைப்படி வினைப்போகங்களை யூட்டுபவருமாதலால் அவர் முனிவரைப்போலத் திருக்கயிலாயத் திருமலையில் நம்மை யடிமை கொள்ளுங் குறிப்புடன் தக்ஷிணாமூர்த்தியாக வெழுந்தருளி யிருந்தனர்.—எ-று.

அகிலகாரணராகிய சிவபெருமான் முனிவர்கள் போன்று யோகிருப்பதும் நம்மை யடிமைகொள்ளுதற் பொருட்டேயன்றி வேறன்றென்பது கருத்து. (சஉ)

செங்கண்மா லுநா னுந் தேடிநற் கரிதாய் நின்ற
வெங்கடம் பிராற்கு மேலா வெண்ணவோர் தேவு முண்டோ
வங்கவன் ஞான போத மறிவருக் குணர்த்தி வைக
னங்குறை முழுது மாற்று நல்லரு ளாகு மன்றே.

(இ-ள்.) சிவந்த கண்களையுடைய திருமாலும் யானும் தேடியறிதற்கரியவராய் நின்ற வெமது சிவபெருமானுக்கு மேலாக நினைப்பதற்கு ஒரு தெய்வமுமுளதோ ? (இல்லை.) அத்தகைய சிவபெருமான் ஞானபோதத்தை முனிவரர்களுக்கு உபதேசித்துக்கொண்டெழுந்தருளி யிருத்தல் நமது குற்றமுழுவது நீக்குகின்ற சிறந்த திருவருளேயாகும்.—எ-று.

தேவர் கோவறியாத தேவதேவன் செழும்பொழிகள் பயந்து காத்தழிக்கு மற்றை-மூவர்கோனாய் நின்ற முதல்வன்" என்னுந் தமிழ்வேதப்படி தன்னிகருயர்ச்சியில்லாப் பெருமானாகலின், 'எங்கடம்பிராற்கு மேலா வெண்ணவோர் தேவுமுண்டோ' என்று கூறினர். (சரு)

படர்மதி மிலைச்சுஞ் சென்னிப் பகவனா ருயிர்க ளெல்லா
மடுவதும் வருத்தந் தீர்க்கு மாறரு ளான வாபோற்
கொடியவெஞ் சூரன் றன்னைக் கொண்டெமக் கலக்கண் செய்கை
விடலரும் பவப்பே றூர்த்தி வீடருள் கருணை யன்றே.

(இ-ள்.) கலை வளர்கின்ற இளம்பிறையணிந்த திருமுடியினையுடைய சிவபெருமான் அரிய உயிர்த்தொகுதிகளைச் சங்கரித்தலும் (அவ்வுயிர்கள் பிறப்பினாலிளைத்த) வருத்தத்தை நீக்குதற்பொருட்டுக்கொண்ட திருவருளே யாவதுபோல, பொல்லாத கொடிய சூரபதுமனைக்கொண்டு நமக்கு வருத்தஞ்செய்வித்தல் நீங்காதபாபத்தைப்புசிப்பித்து முத்திதந்தருளுந் திருவருளேயாம்.—எ-று.

எண்ணரிய பிறவிகடோறும் பிறந்துபிறந்துழலு மான்மாக்களினது இளைப்பொழித்தலாகிய சங்காரகிருத்திய முழுதுஞ் சிவபெருமானது திருவருளாகலின், 'அடுவதும்வருத்தந்தீர்க்குமாரருளானவாபோல்,என்றுகூறினர். இதனை :—"நித்தசங்கார மூறக்கத்து நின்மூடம்-வைத்த சங்காரமுஞ் சாக்கிராதீதமாஞ்-சுத்த சங்காரந்தொழிலற்ற கேவல-முய்த்த சங்காரம் பரனருளுண்மையே" எனவும்,"நித்த சங்கார மிரண்டெ னிவுதல் - வைத்த சங்காரமு மாயாள் சங்காரமாஞ் - சுத்த சங்காரமனாதி தந்தோய்வித்த - லுய்த்த சங்காரஞ் சிவனருளுண்மையே"—எனவும் வருந் திருமந்திரத்தானுமுணர்க. (சச)

பெற்றிடுங் குரவ ரானோர் பிள்ளைக டம்பா னோயொன்
றுற்றிடிற் பிறரைக் கொண்டு முறுதுயர் செய்து தீர்ப்பார்
மற்றவர் தம்பா லன்போ வன்கணோ வதுபோ லெம்பாற்
பற்றிய பவங்க டீர்ப்பான் பரமனு மிவைகள் செய்தான்.

(இ-ள்.) புத்திரர்களைப்பெற்ற மாதாபிதாக்களா யுள்ளவர்கள் குழந்தைகளிடத்தில் ஒரு வியாதிவந்து பொருந்துமாயின் வயித்தியர்முதலிய அன்னியரைக்கொண்டு சத்திரமுதலிய துன்பங்களைச்செய்வித்தும் நீக்குவார்கள். (அவ்வாறுசெய்தல்) புத்திரர்களிடத்துள்ள அன்போ ? (அல்லது) பகைமையோ ? அதுபோல, நம்மிடத்திற்பொருந்தியுள்ள பாவங்களைத் தீர்க்கும்பொருட்டுச் சிவபெருமானும் இத்துன்பங்களை விளைத்தனர்.—எ-று.

பெற்றோர் தம்புத்திரர்கட்கு நேர்ந்த நோயைத் தாம்வருத்தித் தீர்ப்பதுடன் மருத்துவரைக் கொண்டும் வருத்தித் தீர்த்தல் அப்புத்திரரிடத்துள்ள அன்பாமாறு போலச் சிவபெருமான் நமது தீவினை நீங்கும்வண்ணம் குரவனால் இத்தகைய துன்பத்தைச் செய்தருளின னென்க. குரவர்-தாய் தந்தையர்கள். உறுதுயர் செய்து தீர்த்தல் - குரியால் அறுத்து உபத்திரவப்படுத்தி நீக்குதல். (சரு)

தெருமரு கின்ற நம்பாற் றீங்கெலா நீங்கு மெல்லை
யொருபிறி துறுவிற் றுரு மாதலா லுணர்வின் மேலோன்
பரிவொடு நின்பால் வந்து பரிசிவை யருளிப் போனான்
இருவினைப் பௌவ வேலை யேறினம் போலு மன்றே.

(இ-ள்.) வருத்தப்படுகின்ற நம்மிடத்திலுள்ள பாவங்களனைத்து நீங்கவேண்டியகாலம் பிறிதுண்டாயிருக்கக் கூடுமாதலால், ஞானக்கிரனாகிய சிவபெருமான் அருளோடு நின்னிடத்தெழுந்தருளி இவ்வாறு திருவாய்மலர்ந்து சென்றருளினர் (ஆதலால்) நாம் இருவினையாகிய கடலினின்றுங் கரையேறினவர்களாகின்றோம்.—எ-று.

தெருமரல்-மனமலைதல். நல்வினைதீவினைகளாகிய இருவினைகளும் பிறவிக்கேதுவாகலின், 'இருவினைப் பௌவவேலை' என்றார். பௌவவேலை - இருபெயரொட்டு. போலும் அன்று எ. அசைநிலை. (சசா)

ஆதலி னிறைவ னேமே லருள்செயு மதற்கி யாமுந்
தீதற முயலு மாறு சிறிதுள திவற்றை மாயோற்
கோதினம் வேண்டுஞ் செய்கை யொல்லையிற் செய்து மென்னா
வேதமில் கமலப் புத்தே ளிருக்கைவிட் டெழுந்தா னன்றே.

(இ-ள்.) ஆதலால் சிவபெருமானே இனிக்கிருபை செய்தருளுவர்; (ஆயினும்) அதன்பொருட்டு நாமுங் குற்றமற முயலவேண்டுவது சிறிதுளது; இவ்விஷயங்களைத் திருமாலுக்குத் தெரிவித்தே செய்யவேண்டும்; அதனை விரைவிற்செய்வோமென்று குற்றமற்ற கமலாசனனாகிய பிரமதேவன் தனது இருப்பிடத்தினின்றுமெழுந்தனன்.—எ-று. (சஎ)

வேறு.

அன்ன காலை யதுநன்று நன்றெனாத்
துன்று வானவர் சூழலொ டிந்திரன்
பின்ன ராகப் பெயர்ந்துடன் வந்திடச்
சென்னி நான்கினன் செல்லுதன் மேயினான்.

(இ-ள்.) அந்தச்சமயத்தில் அவ்வாறுசெய்வதே நன்று நன்றென்று தன்னைச் சூழ்ந்துள்ள தேவர் கூட்டத்துடன் இந்திரனானவன் உடனே புறப்பட்டுப் பின்றொடர்ந்து வரும்படி, நான்குதலைகளையுடைய பிரமன் வைகுந்தத்திற்குப் போகத் தொடங்கினான்.—எ-று.

இந்திரன் தேவர் கூட்டத்துடன் பின்றொடர்ந்துவரப் பிரமன் முன்னே சென்றன னென்க. (சஅ)

ஞாலம் யாவையு நல்கிய புங்கவன்
வாலி தாந்தன் மனோவதி நீங்குறா
மேலை வைகுந்த மென்னும் வியனக
ரால யத்தி னகன்கடை யெய்தினான்.

(இ-ள்.) எல்லாவுலகங்களையுஞ் சிருஷ்டித்த பிரமன் தூய்மையாகிய தனது மனோவதி நகரத்தினின்று நீங்கித் (தன்னுலகத்திற்கு) மேலுள்ள வைகுந்தமென்னும் பெரிய நகரத்தின்கணுள்ள கோயிலின் பெரியதலைவாயிலையடைந்தனன்.—எ-று.

வைகுந்தம் மனோவதி நகரத்திற்கு மேலுள்ளதாகலின், 'மேலை வைகுந்த மென்னும் வியனகர்' என்று கூறினார். வாலிது - தூய்மைபொருந்தியது. (சகூ)

அந்த வெல்லை யதுகண்டு நேமியுஞ்
சங்கு மேந்திய தானையங் காவலன்
செங்கண் மாயன்முன் சென்றுயின் னோருடன்
பங்க யத்தன் படர்ந்தது செப்பினான்.

(இ-ள்.) அந்தச்சமயத்தில் பிரமன்தேவர்களுடன் வருதலைநோக்கிச் சக்கரத்தையுஞ் சங்கையுமணிந்துள்ள சேனைத்தலைவனாகிய விடுவசேனன் திருமாலுக்கெதிரில்சென்று தேவர்களுடன் பிரமன்வந்த தன்மையைச்சொல்லினான்.—எ - று.

விடுவசேனன் திருமால் போன்று சங்கு சக்கரந்தரித்து வைகுந்தத்தைக் காவல்பூண்டொழுகின்றவனாகலின், 'நேமியுஞ் சங்குமேந்திய தானையங் காவலன்' என்றார். அம்-சாரியை. (ருo)

பணில மேந்திய பண்ணவ னன்னரைக்
கொணர்தி யாலெனக் கூறி விடுத்தழி
யிணையில் காவல னுய்த்திட விந்திரன்
கணமொ டேகினன் காசினி நல்கியோன்.

(இ-ள்.) பாஞ்சசன்னியமென்னுஞ்சங்கினை யேந்திய திருமால் அவர்களை யிங்கழைத்துவருவாயென்று கூறியனுப்ப, ஒப்பற்ற விடுவசேனன் அவர்களை யழைத்துக்கொண்டுசெல்ல, உலகங்களைச் சிருஷ்டித்த பிரமதேவன் இந்திராதி தேவர்களோடு சென்றனன்.—எ-று.

அன்னர் - அத்தன்மையர். ஆல் - அசைநிலை. காவற்றலைவனாகலின், 'இணையில் காவலன்' என்றார். காசினிநல்கியோன் இந்திரன்கணமொடேகினன் என்க.

பொருவின் மாமுனி புங்கவர் போற்றுதன்
னுருவு கொண்ட வுலப்பறு கண்ணர்கள்
மரபி னேத்த மணிப்பணிப் பீடமே
லரியி ருந்த வவைக்கள நண்ணினான்.

(இ-ள்.) ஒப்பற்ற சிறந்த முனிசிரேஷ்டர்கள் துதிக்கின்ற தமது சாரூபத்தைப் பெற்ற நித்தியசூரியர்கள் முறைப்படி வணங்க மணிமுடியினையுடைய சர்ப்பாசனத்தின்மேல் திருமாலெழுந்தருளியிருந்த கொலுமண்டபத்தை யடைந்தனன்.

வைகுந்தத்தில் நித்திய சூரிகளாய்த் திருமாலைச்சேவித் திருப்பவர்கள் விஷ்ணு சாருபம் பெற்றுள்ளவர்களாகலின், 'தன்னுருவு கொண்ட வுலப்பறு கண்ணார்கள்' என்று கூறினர். (ருஉ)

அன்ன மூர்தி யமருல காளுது
மன்ன னோடுமவ் வானவர் தம்மொடும்
பன்ன காசனப் பங்கயக் கண்ணவன்
பொன்னின் மாணடி போற்றி வணங்கினான்.

(இ ள்.) அன்னவாகனனாகிய பிரமன் சுவர்க்கலோகத்தை யரசாட்சிசெய்கின்ற இந்திரனுடனும் அங்குவந்ததேவர்களுடனும் சர்ப்பாசனத்திலெழுந்தருளியிரு

க்கின்ற பதுமாசனருகிய திருமாலினது பொன்மயமாகிய சிறந்த திருவடிகளைத் துதித்து வணங்கினான்.—எ-று.

அமருலகு - தொகுத்தல் விகாரம். (௫௩)

தளைய வெந்திடி நாளினை னவ்வழிக்
கருணை செய்துதன் காதல னாகிய
பிரம னுக்கொரு பீடிகை பெற்றியா
லருளி யங்க ணவனை யிருத்தினான்.

(இ-ள்.) உலகத்தை ஓரடியாக அளந்த திருவடியையுடைய திருமால் அப்பொழுது கிருபைகூர்ந்து தனது புத்திரனாகிய பிரமனுக்கு ஒரு ஆசனத்தை முறைப்படி யளித்து அதில் அப்பிரமனை யிருக்கச் செய்தனர்.—எ-று.

பிரமன் சிருட்டித்தொழிலை யுடையவனும் தனது புத்திரனுமாகலின் இந்திராதி தேவர்களினுஞ் சிறப்பப் பிரமனுக்குமாத்திர மாசனமளித்தனரென்பார். 'பிரமனுக்கொருபீடிகைபெற்றியா - லருளியங்கணவனை யிருத்தினான்' என்றார். (௫௪)

துழாய் மாமுடிக் கொண்டவ னத்துணை
யல்லி மாமல ரண்ணலை நோக்குறீஇ
யொல்லு நின்விதி யூறில தாகியே
செல்லு கின்றகொ லென்றுறுஞ் செப்புவான்.

(இ-ள்.) துளசிமாலையைச் சிறந்த திருமுடியிலணிந்த திருமால் அப்பொழுது அகவிதழையுடைய பெரிய தாமரை மலரிலிருக்கின்ற பிரமனைப்பார்த்து, பொருந்திய நினது சிருஷ்டித்தொழில் தடையின்றி நடந்துவருகின்றனவோ? வென்று வினவுதலும் பிரமன் கூறுவானாயினான்.—எ-று.

விதி=சிருட்டி. கொல்—ஐயப்பொருளில்வந்த இடைச்சொல். (௫௫)

கனக னச்சுறக் கந்திடை வந்தெழு
மனக வித்திறங் கேட்க வறிவுடைச்
சனகன் முற்படு தாபதர் நால்வரு
மெனக ருத்திடை முற்பக லெய்தினார்.

(இ-ள்.) இரணிய னஞ்சும்படி (நரசிங்கமாகத்) தூணில் தோன்றிய திருமாலே? இதனைக் கேட்பீராக; பேரறிவினையுடைய சனகன்முதலிய முனிவர்கள் நால்வரும்முன்னே என்னுடையமனத்தினின்றுந் தோன்றினார்கள்.—எ-று.

இரணியனென்னு மசுரன் உயிர்களைவருத்திக் கொடுங்கோல் செலுத்திவருகையில் அவனது புத்திரனாகத் தோன்றிய பிரகலாதன் திருமாலுக்குரிய அன்பனாய்ப்பத்தி செலுத்துவதையுணர்ந்து, அவனை வருத்த அப்பிரகலாதனுடைய வேண்டுகோளால் திருமால் தூணில் நரசிங்கவுருவங்கொண்டு தோன்றி, அவ்விரணியனது மார்பைப்பிளந் துதிரமுண்டு அழித்தனரென்பது புராணசரித்திரமாகலின், 'கனகனச்சுறக்கந்திடை வந்தெழுமனக' என்று கூறினார். சனகாதியர்கள் பிரமனது மானசபுத்திரர்களாகலின், 'சனகன் முற்படுதாபதர் நால்வரு மெனகருத்திடை முற்பகலெய்தினார்' என்றார். (௫௬)

அறிவின் மிக்க வனைவரை நோக்கியான்
பெறுவ தாமிப் பெருந்தொழி லாற்றியின்

செறிதி சொன்ன வுளத்தது கொண்டிலர்
முறுவல் செய்து மொழிந்தன ரிவ்வுரை.

(இ-ள்.) சிறந்த அறிவினையுடைய அப்புத்திரர்களை யான்பார்த்து (நீங்கள்) அடைதற்குரியசிருஷ்டியாகிய இப்பெருந்தொழிலைச் செய்துகொண்டு இவ்விடத்திலேயேயிருங்களென்றுகூற, அவ்வார்த்தையை மனத்தில் கொள்ளாதவர்களாய்நகைப்புடன் பின்வருமாறு கூறினார்கள்.—எ-று. (ருஎ)

பாச வன்சிறைப் பட்டுப் படைப்பெனப்
பேச லுற்ற பெருந்தளை பூணல
மீசன் மாணடி யெய்துது மியாமெனு
மாசில் காட்சியர் வல்விரைந் தேகினர்.

(இ-ள்.) பாசமாகிய வலிய சிறையிலகப்பட்டுக்கொண்டு சிருஷ்டியென்று சொல்லப்பட்ட பெரிய விலங்கில் அகப்படமாட்டோம்; நாங்கள் சிவபெருமானது சிறந்த திருவடிகளை யடைகின்றோமென்று கூறி, குற்றமற்ற காட்சியினையுடைய அம்முனிவர்கள்மிக்க விரைவாகச் சென்றார்கள்.—எ-று.

சிருட்டித்தொழிலால் பேரின்பங் கைகூடாமையின், 'பாசவன் சிறைப் பட்டுப் படைப்பெனப் - பேசலுற்ற பெருந்தளைபூணலம்' என்றார். (ருஅ)

மாத வத்தினை மைந்தர்க ளாற்றலு
மாதி நாயக னவ்வழி வந்துமக்
கேது வேண்டிய தென்றலு மெண்ணிலா
வேத வுண்மை விளம்புதி யாலென்றார்.

(இ-ள்.) புத்திரர்களாகிய சனகாதியர்கள் பெரிய தவத்தைச் செய்யவும், சிவபெருமான் அவ்விடத்து எழுந்தருளி உங்களுக்கு வேண்டுவது யாதென்று கேட்டருளவும்; உடனே யவர்கள் அளவற்ற வேதத்தின் மெய்ப்பொருளை யுபதேசிக்கவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.—எ-று.

வேதவுண்மையாவது—வேதத்தில்முடிவாகத்தேர்ந்த மெய்ப்பொருள். (ருக)

என்ற லோடு மிறையவன் வெள்ளியங்
குன்ற மீதுதென் கோட்டிடை நிற்புறு
மொன்றொ ரானிழ லுற்று மறையெலா
நன்று ணர்த்திட நால்வருந் தேர்ந்தனர்.

(இ-ள்.) அவர்களிவ்வாறு கூறவும், சிவபெருமான் திருக்கயிலாயத் திருமலையில் தக்ஷிணசிகரத்தில் நிற்கின்ற ஓர் கல்லாலவிருக்ஷத்தின்கீ ழெழுந்தருளியிருந்து வேதார்த்தங்களை நன்றாயுபதேசித்தருள நால்வருங் கேட்டுத்தெளிந்தார்கள். ()

முந்தை வேத முழுது முணர்த்தியே
யெந்தை யேக விருநிலம் போந்துதஞ்
சிந்தை யொன்றுந் திறனரி தாதலி
னைந்து பின்னரு நோற்றலை மேயினர்.

(இ-ள்.) முதன்மையாகிய வேதவுண்மைகளனைத்தையும் உபதேசித்து எமது சிவபெருமானெழுந்தருளினவுடன் (அம்முனிவர்கள்) பெரிய நிலவுலகத்திற்குவந்து தங்கள்மனம் ஒற்றுமைப்படுவது அரிதாயிருந்தமையால், பின்னும் வருந்தித்தவஞ்செய்தார்கள்.—எ-று. (சுக)

பின்னு மைந்தர் பெருந்தவ மாற்றியே
தொன்ன லம்பெறு தூய வுளத்தரா
யென்னை யாளுடை யீச னருளினுன்
மன்னு வெள்ளி வரையிடை யெய்தினர்.

(இ-ள்.) அப்புத்திரர்கள் மீண்டும் பெருந்தவத்தைச் செய்து பூர்வவுணர்ச்சியைப்பெற்ற தூய்மையாகிய மனமுடையவர்களாய் எம்மையடிமையாகவுடைய சிவபெருமானது திருவருளினால் நிலைபெற்ற திருக்கயிலையை யடைந்தார்கள். -எ-று.

எகல் பெற்றிடு மைந்தர்க் கினிதுளம்
பாக முற்ற பரிசுணர்ந் தெம்பிரா
னாக மத்தி னரும்பத மூன்றையு
மோகை பற்றி யுணர்வகை கூறியே.

(இ-ள்.) எமது சிவபெருமான் அங்கடைந்த சனகாதி முனிவர்களுக்கு மனம்பரிபாகமடைந்திருத்தலை யுணர்ந்து சந்தோஷத்துடன் அவர்களுணரும் வண்ணம் ஆகமத்திற்கூறும் அரியமூன்றுபதங்களையும் உபதேசித்து.—எ-று.

ஆகமத்தி னரும்பத மூன்றுவன - சரியை - கிரியை - யோகமென்பன ; பதி பசு பாசமென்னுந் திரிபதார்த்த இலக்ஷணமெனினுமாம்.

இதுமுத லிரண்டுபாடலுங்குளகம். (கரு)

கூனன் மாமதிக் கோடு மிலைச்சிய
வான நாயகன் மற்றவர் காண்டக
ஞான போத நவிலருந் தன்மையான்
மோன மேய முதற்குறி காட்டினன்.

(இ-ள்.) வளைவாகிய சிறந்த இளம்பிறையணிந்த தெய்வநாயகராகிய சிவபெருமான் அம்முனிவர்கள் காணும் வண்ணம் ஞானபோதத்தை (வாயால்) சொல்லக்கூடாமையால் மௌனமாகியசின்முத்திரைக் குறியைக் காட்டியருளினர். —எ-று.

அந்த வெல்லை யரனருள் கண்டுதம்
புந்தி யொன்றியப் புங்கவன் றாண்மலர்
சிந்தை செய்து செயலற்று வைகினர்
முந்தி யாப்புறு முந்தளை முட்டற.

(இ-ள்.) அந்தச் சமயத்தில் சிவபெருமான் திருவருளினால் உபதேசித்தருளியதையுணர்ந்து தங்கள்மனமொடுங்கித் தக்ஷிணாமூர்த்தியாகிய அவ்வெம்பெருமானது திருவடிகளைச்சிந்தித்து அநாதிதொடங்கிப் பந்திக்கப்பட்டுள்ள மூவகைப்பந்தங்களும் நீங்கத் தத்துவச்சேட்டை யொழிந்திருந்தார்கள்.—எ-று.

முந்தளைமுட்டாவது, ஆணவங்கன்மம் மாயையென்னு மும்மலக்கட்டு. ()

வேத நாயகன் மெய்த்தவர்க் கோர்கணம்
போத யோகின் பொருண்மையைக் காட்டுழி
யோத லாகு யுகம்பல சென்றன
சீத வானதி சேர்ந்தகொன் றுளினே.

(இ-ள்.) வேதமுதல்வராகிய சிவபெருமான் மெய்ம்மையாகிய தவத்தினையுடைய அச்சனகாதியர்கள்பொருட்டு ஒருக்ஷணநேரம் ஞானயோகத்தின் பொருள் நிலைமையைக் காட்டிக்கொண்டிருக்கையில் குளிர்ந்த கங்கைநதி பெருகியவந்த முற்காலத்தைப்போலச் சொல்லுதற்குரிய பல யுகங்கள் சென்றன.—எ-று. (கசு)

அன்னை தன்னை யகன்றரன் யோகிபோ
லென்ன தொன்றுசெய லின்றி யிருத்தலான்
முன்னை யாண்பெண் முயக்கம தின்மையாய்
மன்னு யிர்த்தொகை மல்கலின் றயர்ந்த.

(இ-ள்.) சிவபெருமான் உமாதேவியாரை நீங்கி யோகியைப்போல யாதொருசெயலுமின்றி யிருக்குங் காரணத்தினால் பழைய முறைமைப்படி ஆணும்பெண்ணுங் கூடுதலாகிய புணர்ச்சியில்லாமல், நிலைபெற்ற உயிர்த்தொகைகள் விருத்தியடையாதனவாயின.—எ-று.

அன்னை - உலகமாதாவாகிய உமாதேவியார். (சுஎ)

நவிற லென்னினி ஞாலம் விசும்புளா
ரிவறு காமப் புணர்ச்சிய தின்றியே
கவறல் கொண்டு கலங்கரு மெய்தினர்
தவறல் கொண்டது நல்குந் தனிச்செயல்.

(இ-ள்.) இனிச் சொல்லவேண்டுவது யாதிருக்கின்றது உலகத்திலுஞ் சுவர்க்கத்திலு முள்ளவர்க ளனைவரும் விரும்புகின்ற காமப்புணர்ச்சியில்லாமல் கவலையடைந்து கலங்கி வருந்தினார்கள், ஆதலால் (எனது) படைப்புத் தொழிலுந்தவறியது.

ஞாலம்விசும்புளார் என்பதை ஞாலத்துளார் விசும்பிலுளார் எனப்பிரித்துக்கொள்க. இவறல்-விருப்பங்கொள்ளல். (சுஅ)

நல்கல் பெற்ற தமியனு நாமகட்
புல்கல் பெற்ற புணர்ச்சியின் றகியே
பல்கல் பெற்ற வருந்தவ யோகரி
னொல்கல் பெற்றன னுண்மையி தாகுமால்.

(இ-ள்.) படைப்புத்தொழிலையுடைய அடியனும் சரஸ்வதியை யணைகின்ற புணர்ச்சியில்லாமல் மனவொற்றுமைப்பட்ட அரிய தவத்தினையுடைய யோகிகளைப்போல ஒடுங்கியிருக்கின்றேன் ; இது உண்மையாகும்.—எ-று. (சுகூ)

நிற்க விங்கிது நித்தன்வ ரத்தினா
லொற்க மில்வள னுண்டிடு வெய்யகு
ரொற்கு நித்தனு மேவலொன் றிட்டனன்
சொற்க நாட்டிற் றுயரினை நாட்டினான்.

(இ-ள்.) இஃதிவ்வாறிருக்க, சிவபெருமான் கொடுத்த வரத்தினால் கெடாத செல்வத்தைப் பெற்றிருக்கின்ற கொடிய சூரபதுமன் எனக்குந் தினந்தோறும் (பஞ்சாங்கஞ் சொல்லுதலாகிய) ஒரு வேலை யிட்டனன். இதுவன்றியும் சுவர்க்கலோகத்திற்குந் துன்பத்தினையே யமைத்தான்.—எ-று. (எ0)

தேசு நீங்குறு தேவரை யீண்டுள
வாச வன்றனை மாதிரத் தோர்களைப்
பாச னத்தொடு பற்றின ணித்தலுங்
கூச லின்றிக்குற் றேவல்கொண் டானரோ.

(இ-ள்.) ஒளிமாழ்கிக்கிடக்கின்ற தேவர்களையும் இங்கேயிருக்கின்ற இந்திரனையும், அஷ்டதிக்குப்பாலகர்களையும் சுற்றத்தினருடன் பிடித்துத் தினந்தோறும் கூச்சமில்லாமல் அடிமைகொண்டான்.—எ-று. (எக)

தேவர்கள் தங்கள் போகமொழிந்து அடிமைத்தொழில் செய்தொழுகுகின்றமையின், 'தேசு நீங்குறு தேவர்' என்றார். (எக)

நிறைபு ரிந்த நிலவினை வாளரா
மறைபு ரிந்தென வானகந் தோருட
னிறைபு ரிந்தவவ் விந்திரன் மைந்தனைச்
சிறைபு ரிந்தனன் றீத்தொழி லாற்றியே.

(இ-ள்.) கலைகள்நிறைந்த பூரணசந்திரனை ஒளிபொருந்திய இராகுவென்னும் பாம்பானது மறைத்ததுபோல தேவர்களுடன் சுவர்க்கலோகத்தை யரசாட்சிசெய்த இவ்விந்திரன் குமாரனாகிய சயந்தனையும்வருத்தப்படுத்திச்சிறையிலடைத்தனன். எ-று

'தீத்தொழிலாற்றி' என்பதற்கு, இந்திரலோகத்தை தீயிட்டுக் கொளுத்தி யெனப் பொருள் கூறினுமாம். (எ௨)

நிரந்த பல்லுயிர் தங்கட்கு நித்தலு
மரந்தை மல்க வறிகிலன் போலவே
யிருந்த னன்சிவ னென்னினிச் செய்வது
விரைந்து கூறுதி ரென்று விளம்பினான்.

(இ-ள்.) உலகில் நிறைந்த பல ஆன்மகோடிகளுக்கு எப்பொழுதுந் துன்பமதிகரித்துவரவும், சிவபெருமான் அதனை யறியாதவர் போன்றிருக்கின்றனர். (ஆதலால்) இனிச் செய்யவேண்டியதைவிரைவிற் கூறுவீராகவென்று சொல்லினான். ()

சிவபெருமான் சர்வஞ்ஞராகலி னெல்லா முணர்ந்து முணராதவர் போன்றிருந்தன ரென்பார், 'அறிகிலன்போலவே யிருந்தனன் சிவன்' என்று கூறினார். ()

அரிய தத்துவ மையைந்தின் பேதமு
மரபி னாடினர் வாலுணர் வெய்திய
திருவி னாயகன் செங்கம லந்திகழ்
பிரமன் மாமுக நோக்கினன் பேசுவான்.

(இ-ள்.) அருமையாகிய இருபத்தைந்து தத்துவபேதங்களையும் முறையே விசாரித்துணர்ந்த பாஞ்சராத்திரிகளது அறிவில் விளங்குகின்ற இலக்ஷ்மி நாயகராகிய திருமால் செந்தாமரைமலரில் விளங்கும் பிரமனது சிறந்த முகத்தை நோக்கிக் கூறுவாராயினார்.—எ-று.

தத்துவம் இருபத்தைந்தெனவும், இருபத்துநான்காந் தத்துவமாகிய குண தத்துவத்தின்மேல் இருபத்தைந்தாந்தத்துவம் வாசுதேவனென் றொருவனுள னெனவும், அவனே பரம்பொருளெனவுங் கூறுதல் பாஞ்சராத்திரமத சித்தாந்தமாகலின், 'அரிய தத்துவமையைந்தின் பேதமு மரபினாடினர் வாலுணர் வெய்திய திருவினாயகன்' என்று கூறினார். (எச)

வேறு.

ஆவிக ளனைத்து மாகி யருவமா யுருவமாகி
மூவகை யியற்கைத் தான மூலகா ரணம தாகுந்
தேவர்க டேவன் யோகின் செயன்முறை காட்டு மென்னி
லேவர்கள் காமங் கன்றித் தொன்மைபோ லிருக்கு நீரார்.

(இ-ள்.) எல்லாவுயிர்களுந் தாமே யாகியும் அருவமாகியும், உருவமாகியும், மூவகை யியல்பினையுடைய மூலகாரணராகியுமுள்ள மகாதேவராகிய சிவபெரு

மான்யோகத்தினது செய்கையின் முறைமையைத் தெரிவிப்பாராயின் காமமிக்கு முன்போலிருக்குந் தன்மையினை யுடையவர்கள் யாவர்? (ஒருவருமில்லை.)—எ-று.

"ஒன்றாகியல்லை யன்றியொன்றில்லை யாருனை யறியகிற்பாரே" என்றபடி எல்லாமா யல்லவுமா யுள்ள பெருமா னாதலின், 'ஆகிய னைத்து மாகி' என்றார். அருவம் நிஷ்களமெனவும், உருவம் சகளமெனவுங் கூறப்படும். மூவகையியற்கைத் தான மூலகாரணம் என்றது உருவம் அருவம் உருவருவம் என்னும் மூவகைப்பேதங் களை இதனை :—"சிவஞ்சத்தி நாதம்விந்து சதாசிவன் மிகழுமீச - னுவந்தரு ளுருத்தி ரன்றான் மாலய னொன்றினொன்றாய்ப்-பவந்தரு மருவநாலிங் குருவநா லுபயமொன் று - நவந்தரு பேதமேக நாதனே நடிப்பனென்பர்" என்னுஞ் சிவஞானசித்தியாரா லுணர்க. அன்றியும், சிருட்டி திதி சங்கார மென்னு முத்தொழிற்கு முதற்காரணரா யுள்ளவரெனப்பொருள் கூறினுமாம். (எ௫)

ஊழ்வினை நெறியான் முன்ன மொருபெரு வேள்வி யாற்றித்
தாழ்வினை யடைந்த தக்கன் றன்புடை யிருந்தோர் தம்பாற்
சூழ்வினை யெச்ச முற்று மருந்திய தொலைந்துத் தொல்லை
வாழ்வினை யருள நாதன் மனத்திடை நினைந்தா னன்றே.

(இ-ள்.) பூர்வகன்மத்தால் முன்பு ஒருபெரியயாகத்தைச்செய்து இழிவினை யடைந்த தக்ஷனுடன் சேர்ந்திருந்த தேவர்களைச் சூழ்ந்துள்ள பாவத்தின் சேஷங்க ளனைத்தையு முண்பித்துத் தொலைத்துப் பழைமையாகிய இன்பவாழ்வினைக் கொடுக் கும்வண்ணம் சிவபெருமான் தமது திருவுள்ளத்திற் சிந்தித்தருளினார்.—எ-று. (எசு)

சூரொடு மவுணர்க் காற்றல் புரிந்ததுஞ் சுரர்கள் யாருஞ்
சார்வருந் திறத்தா லீசன் றவத்தருக் குணர்வு காட்டி
யாருயி ரவைக்கு மின்ன லாக்கிய வாறுந் தூக்கிற்
பேரருள் முறைமை யன்றிப் பிறிதொரு செயலு மன்றால்.

(இ-ள்.) சிவபெருமான் சூரபதுமனென்னு மசுரனுக்கு மிக்கவல்லமையைக் கொடுத்ததையும், தேவர்கள் யாரும் அருகில் வராவண்ணம் முனிவர்களுக்கு ஞானோ பதேசஞ் செய்துகொண்டு அரிய உயிர்களுக்கெல்லாந் துன்பத்தை யுண்டாக்கியதை யும் ஆலோசிக்குமிடத்தில் மிகுந்த கருணையேயன்றி வேறொருவகையு மன்று.—எ-று.

முனிவருக் குணர்வு காட்டு மோனத்தை முதல்வ னீங்கிப்
பனிவரை யணங்கை மேவிற் படைப்பயன் முற்று மன்னாக்
கினியொரு குமரன் றோன்றிற் சூர்கிளை யனைத்தும் பொன்றுந்
துனிபுறு முலக மெல்லாந் தொன்மைபோ லுய்யு மாதோ.

(இ-ள்.) முதற்கடவுளாகிய சிவபெருமான் சனகாதிமுனிவர்களுக்கு ஞா னத்தைத் தெளிவிக்கின்ற மௌன நிலையினின்று நீங்கிப் பர்வதராஜ புத்திரியாகிய பார்வதிதேவியாரைத் திருமணம்புரிந்தால், பிரமனே! நினது சிருட்டித்தொழில் நிறைவேறும்; பின்னர் அவர்களுக்கு ஒரு புத்திரன் தோன்றினால், (அவனால்) சூர னது வமிசமுழுமையு மழியும்; பின்பு, வருத்தமடைந்திருக்கின்ற உலகமுழுதும் பழைமைபோலச் சீவித்திருக்கும்.—எ-று.

முன்னர் வீரபத்திரர் விநாயகர்முதலிய புத்திரர்களிருத்தலின் 'இனியொரு குமரன் றோன்றில்' என்றார். (எஅ)

அத்திற முற்று மாறென் றறைகுவ னகிலந் தன்னி
லெத்திறத் தருமால் கொள்ள வெய்திடுங் காமன் றன்னை

யுய்த்திடின் முனிவர் தங்கட் குணர்வுசெய் மோனநீங்கிச்
சத்தியை மணந்து சேயைத் தந்திடு மெந்தை யென்றான்.

(இ-ள்.) அத்தன்மை முடிவுபெறும் வண்ணம் ஒன்று கூறுகின்றேன், உலகத்திலுள்ளவர்கள் யாவரும் மயங்கும்பொருட்டுப் (புஷ்பபாணங்களைப்) பிரயோகிக்கின்ற மன்மதனையனுப்புவோமாயின், சனகாதிமுனிவர்களுக்கு ஞானவுணர்வளிக்கின்ற மௌனநிலையினின்று நீங்கிச் சிவபெருமான் உமாதேவியாரைத் திருமணம் புரிந்து புத்திரனைத் தந்தருளுவர் என்று கூறினர்.— எ-று. (எக)

பதுமனீ துரைகோ வன்ன பரிசுதேர்ந் துவகை யெய்தி
யிதுவிதே யன்முறைமைய யெந்தா யேற்றன புகன்றா யென்ன
வதுபொழு தவனை நோக்கி யச்சுத னமலன் றன்பால்
மதனனை விளித்து வேண்டி விடுத்திநீ வல்லை யென்றான்.

(இ-ள்.) கமலாசனனாகிய பிரமன் அத்தன்மையை யுணர்ந்து மனமகிழ்வடைந்து, எந்தையே! இது செய்யத்தக்கதே; தகுந்ததேயுரைத்தீர் என்று கூறவும், அப்பொழுது திருமால் அப்பிரமனைநோக்கி நீவிரைவாக மன்மதனையழைத்துச் சிவபெருமானிடத்துச் செல்லும்படி சொல்லியனுப்பக் கடவையென்று கூறினர்.—

என்னலு மலரோ னுள்ளத் திசைவுகொண் டெழுந்து மாயன்
பொன்னடி வணக்கஞ் செய்து விடைகொடு புலவ ரோடு
மன்னொடு மங்க ணீங்கி மனோவதி யதன்பாற் சென்று
தன்னக ரடைந்து கஞ்சத் தவிசின்வீற் றிருந்தா னன்றே.

(இ-ள்.) திருமால் இவ்வாறு கூறவும் பிரமன் மனப்பூர்வமாக ஒத்துக்கொண்டு எழுந்து, திருமாலினுடைய அழகிய திருவடிகளை நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு இந்திராதிதேவர்களுடனே அவ்விடத்தினின்று நீங்கி மனோவதிநகரத்தையடைந்து தனது ஆலயத்துட்புகுந்து கமலாசனத்தில் வீற்றிருந்தருளினன்-எ-று.

மேருப்படல முற்றிற்று.

ஆ. திருவிருத்தம் சகக.

---

உ

முருகன்றுணை.

---

# காமதகனப்படலம்.

---

இந்திரன் வானவ ரீட்டமொ டேகி
முந்துறு கஞ்ச முகட்டிடை யுற்றோ
னைந்திற னாகிய வாசுக வில்வேள்
வந்திடு மாறு மனத்தி னினைந்தான்.

(இ-ள்.) இந்திரனுடனும் தேவர்கள்கூட்டத்துடனும் தனது மனோவதிநகரத்திற்சென்று உயர்ந்த பதுமாசனத்தில் வீற்றிருக்கும் பிரமதேவன், ஐந்து வகையாகிய புஷ்பபாணங்களையுங் கரும்புவில்லையுமுடைய மன்மதன் வரும்படி தன் மனதில் நினைத்தனன்.—எ-று.

தேவர்கூட்டங்களுக்குத் தலைவனாகிய இந்திரனும் அவனைச்சார்ந்த தேவர்களுமுடன் செல்லச்சென்றனனென்பார், 'இந்திரன் வானவரீட்டமொடேகி' என்றும், பூவினுட் சிறந்ததாகலின், 'முந்நூறுகஞ்ச முகட்டிடை யுற்றோன்' என்றும், தாமரை முதலிய ஐவகைமலர்களையும் தனக்குரிய பாணங்களாகக் கொண்டவனாகலின், 'ஐந்திறனாகிய வாசுகவில்வேள்' என்றுங்கூறினர். ஐந்திறனாகிய வாசுகம், என்பதனை:—"சூடைகவித்த நன்கஞ்சங் கோதயுகு தப்பூ - கடியுமசோ கந்தளவு காவி - படையெடுத்து - வாங்காச் சமர்விளைக்கு மாரனுக்கெப் போதுமங்கை - நீங்காக்கணையா நினை" எனவும், அவற்றையெய்யுந் தானத்தை, "நெஞ்சிலரவிந்த நீள்சூதங்கொங்கைதனிற் - றுஞ்சும்விழியி லசோகமலர் - வஞ்சியர்தஞ்- சென்னியிலே-முல்லை நிகழ்நீலமல்குலிலே - யன்னவே ளெய்யுமியல் பாம்" எனவும், அவற்றின் குணத்தை, "நினைக்குமரவிந்த நீள்பசலைமாம்பூ - வனைத்துணவு நீக்குமசோகு-வனைத்திலுறு - முல்லை கிடைகாட்டு மாதே முழுநீலங் - கொல்லுமத னம்பின் குணம்" எனவும்வரும் வெண்பாக்களாலும், "வனசஞ் சூதமசோக முல்லை - குவளைகாமன் கொலுமைங்கணையே" எனவும், "உன்மத்த மதனமோகனஞ் சந்தாபம் - வசீகரணம் மிவை மதன்கணைச் செயலே" எனவும், "சுப்பிரயோகமும் விப்பிரயோகமுஞ் - சோகமு மோகமு மரணமு மென்றிவை - யாகுமலர்க்கணை யைந்தினவத்தை" எனவும், "அவற்றுள், சுப்பிரயோகஞ் சொல்லாநினைவும்" "விப்பிரயோகம்வெய்துயிர்த்திரங்கல்" "சோகம் வெதுப்புத் துய்ப்பன தெவிட்டல்" "மோகமழுங்கலு மொழிபல பிதற்றலும்" "மரணமயர்ப்பு மயக்கமுமாகும்" எனவும் வரும் பிங்கலந்தைச் சூத்திரத்தானு முணர்க. (க)

நினைந்திடு கின்றுழி நீனிற மாயோன்
முனைந்தரு கின்ற முரண்டகு வில்வேள்
மனந்தனி லுன்னு மலர்ப்பக வன்முன்
னினந்தரு சூழலொ டிம்மென வந்தான்.

(இ-ள்.) அவ்வாறு நினைத்தபொழுது நீலநிறத்தையுடைய திருமாலானவர் முன்பு ஈன்றருளிய வலிய கரும்புவில்லை யேந்திய மன்மதன் தன்னை மனத்தில் நினைத்த பிரமனுக்கெதிரில் தன் பரிவாரங்களுடன் விரைவாக வந்தனன்.—எ-று.

திருமாலினது மனத்தினின்றுந் தோன்றிய காரணத்தால் சித்தசனெனப் பெயர்பெற்றவனாகலின், 'நீனிறமாயோன் · முனந்தருகின்ற முரண்டகுவில்வேள்' என்று கூறினர். ஐசுவரியம்-வீரியம்-புகழ்-திரு-ஞானம்-வைராக்கியம் என்னு மாறுக்கும் பகமென்னும் பெயருண்மையால், பிரமன் இவ் வாறுகுணங்களையு முடையோனென்பது தோன்ற, 'மலர்ப்பகவன்' என்றார். 'இனந்தரு சூழலொடிம்மென வந்தான்' என்பதற்கு, பலவகை யாலோசனையோடு விரைந்துவந்தான் எனப் பொருள் கூறுவாரு முளர். இம்மெனல் - விரைவுக்குறிப்பிடைச்சொல். (உ)

மாமறை யண்ணன்முன் வந்து பராவித்
தாமரை நேர்தரு தாடொழு தென்னை
நீமன மீது நினைந்ததெ னென்னக்
காமன் வினவ வயன்கழ றுற்றான்.

(இ-ள்.) மன்மதனனவன் சிறந்த வேதங்களை யுணர்ந்த பிரமனுக்குமுன்னேயடைந்து தாமரைமலர்போன்ற பாதங்களை வணங்கித்துதித்து, என்னை நீர்மனத்தில் நினைத்தது யாதுகாரணமென்று வினவ, பிரமன் சொல்லத்தொடங்கினன். எ-று

கங்கை மிலைச்சிய கண்ணுதல் வெற்பின்
மங்கையை மேவநின் வாளிக டூவி
யாங்குறை மோன மகற்றினை யின்னே
யெங்கள் பொருட்டினி யேகுதி யென்றான்.

(இ-ள்.) (மதனனே !) கங்கைநதியை யணிந்த சிவபெருமான் பார்வதிதேவியாரைத் திருமணஞ் செய்யும்பொருட்டு உனது புஷ்பபாணங்களைப் பிரயோகித்து, திருக்கயிலாயத்தில் (முனிவர்கள்பொருட்டுக்) கொண்டிருக்கின்ற மௌனநிலையை நீக்கும்வண்ணம் எங்கள் நிமித்தமாகச் செல்லக்கடவையென்று கூறினான்.—எ-று.

உனக்குச் சம்மதமில்லையெனினும் எங்களது வேண்டுகோள் காரணமாகச் செல்லவேண்டுமென்று கூறினனென்பார், 'எங்கள் பொருட்டினியேகுதியென்றான்' என்று கூறினார். (ரு)

வேதனின் வாறு விளம்பிய கூற்றுந்
தீநுறு பொங்கழல் செய்யவள் சேயோன்
காதிடை யேநெறி யாக்கடி திற்போ
யேதமி லுள்ள மெரித்ததை யன்றே.

(இ-ள்.) பிரம னிவ்வாறு சொல்லிய வார்த்தையாகிய குற்றம் பொருந்திய கொடிய நெருப்பானது திருமகள் புத்திரனாகிய மன்மதனது காதின்வழியாக நுழைந்து சென்று குற்றமற்ற அவனுடைய மனதைச் சுட்டது.—எ-று.

பிரமன் கூறியவார்த்தை தீயின் வெம்மையினும் மிகக் கொடிதாயிருத்தலின், 'விளம்பிய கூற்றுந் தீநுறு பொங்கழல்' என்றும், மன்மதனுடைய உள்ளம் சிவசிந்தனையை யுடையதாகலின், 'ஏதமிலுள்ளம்' என்றுங் கூறினார். கூற்று-சொல். எரித்ததை என்பதில், ஐகாரம் சாரியை. (சு)

கிட்டி யரன்செயல் கேடுசெ யென்னுங்
கட்டுரை யேவரு காமனு ளெங்குஞ்
சுட்ட தெனிற்பிறை சூடிய வன்மெய்
யட்டிடு கின்றது மற்புத மாமோ.

(இ-ள்.) நீ சென்று சிவபெருமானுடைய மௌனநிலையைக் கெடுப்பாயாகவென்று சொல்லிய உறுதிமொழியே அங்குவந்த மன்மதனது மனதைச்சுடுமாயின், சந்திரசேகரராகிய சிவபெருமான் அம்மன்மதனது சரீரத்தை யெரித்தலும் ஒரு ஆச்சரியமாகுமோ?—எ-று.

சிவபெருமானது மௌன நிலையைத் தவிர்க்கக் கடவையென்று பிரமன் கூறியவார்த்தையே மன்மதனது மனதைச் சுட்டதெனின், அவ்வெம்பெருமானது நெற்றிக்கண்ணினு லெரிந்தனனென்று கூறுதல் வியப்பன்றென்று கூறியபடி. (எ)

இத்திற மாமல ரோந்த லியம்பக்
கைத்தலை கொண்டிரு கன்னமும் வல்லே
பொத்தியி னைந்து புராந்தக னாமஞ்
சித்தச வேளுரை செய்தன னம்மா.

(இ-ள்.) இவ்வாறு கமலாசனனாகிய பிரமன் கூறவும் மன்மதன் தனது இரண்டுகரங்களால் இருகாதுகளையும் விரைவாக மூடிக்கொண்டுவருந்திச் சிவநாமத்தை உச்சரித்தனன்.—எ-று.

சிவநாமத்தை யுச்சரித்தலாவது—சிவசிவ வென்று ஸ்மரித்தல். ஏங்குதல் - வருந்துதல். அம்மா - வியப்பிடைச்சொல். (௭)

ஈட்டுறு பல்பவ மெய்துவ தோர்சொற்
கேட்டன னென்று கிலேசம தாகி
வாட்டிய மென்மலர் போலணி மாழ்கிப்
பூட்டுவி லண்ணல் புகன்றிடு கின்றான்.

(இ-ள்.) நாணேறிட்ட கரும்புவில்லையுடைய முதல்வனாகிய மன்மதன் சேகரிக்கின்ற அநேக பாவங்களையடைதற்கேதுவாகிய ஒரு கொடுமொழியைக் கேட்டேனென்று மனம் வருந்தி (நெருப்பில்) வாட்டிய மெல்லிய மலரைப்போல அழகு குன்றிச் சொல்லத்தொடங்கினான்.

இவ்வொரு வார்த்தையே பிறவிக் கேதுவாகிய பல பாவங்களைத் தருமென்று வருந்தின னென்பார், 'ஈட்டுறு பல்பவ மெய்துவதோர் சொல்' என்றும், அதனைக் கேட்டலாகிய துர்ப்பாக்கியத்தைப்பெற்று வருந்தின னென்பார், 'கேட்டன னென்று கிலேசமதாகி' என்றும், அதனால் தேகமெலிவெய்தினனென்பார், 'வாட்டிய மென்மலர் போலணி மாழ்கி' என்றுங் கூறினார். (௮)

வேறு.

வன்கணா ருமா சறுகாட் சியர்பா
லன்கணுற் றிறுய் நலம் புகல்வா
ருன்கணுற் றுமினித் தகவோறு தின்னாபா
லென்கணா டிகட் கிலையோ வருளே.

(இ-ள்.) கொடியவர்களும் குற்றமற்ற நல்லறிவினையுடைய பெரியோர்களிடத்தில் அன்போடு செல்வாராயின் அவர்கள்கடைத்தேறுதற்குரிய நன்மையைக் கூறுவார்கள். அங்ஙனமாக, யான் உம்மிடத்திற்குவந்தால் இந்தத் தகாதமொழியைக் கூறினீர். என் விஷயத்தில் தேவரீருக்குக் கிருபையில்லைபோலும்.—எ-று.

கொடியவர்களாயிருப்பினும் நல்லோர்களை யடுத்தால் அவர்கள் நன்மையே கூறுவார்கள். அங்ஙனமாக, நீர் எனக்குத் தமையனாக விருந்தும், இக் கொடுமொழி கூறினீராகலி னென்னிடத்துத் தேவரீருக்குக் கிருபை யில்லைபோலு மென்று வருந்தினனென்பது கருத்து. அண் - முதனிலைத் தொழிற்பெயர். (௯)

வன்னப் புவிமங் கையைமா மலர்மேற்
பொன்னைப் பிறரைப் புணர்வுற் றிடுவான்
கன்னற் சிலைபூங் கணைகொண் டமர்செய்
தென்னத் தனைவென் றிசைகொண் டிலமே.

(இ-ள்.) (யான்) எனது தந்தையாகிய திருமாலை அழகிய நிலமகளையும், சிறந்த தாமரைமலரில் வசிக்குந் திருமகளையும் மற்றவர்களையும் புணரும் வண்ணங் கரும்புவில்லும் புஷ்பபாணமுங் கொண்டு போர்செய்து வெற்றிபெற்றுக் கீர்த்தியடைய வில்லையோ?—எ-று.

பிறரை என்றது, இராமாவதாரத்திற் சீதா பிராட்டியையும், கிருஷ்ணாவதாரத்தில், உருக்குமணி முதலிய அஷ்டமங்கையரையும் பிறமாதர்களையுமாம். (௧௦)

வெள்ளைக் கமலத் திவையமெய் யுறவுந்
தெள்ளுற் றணிசெய் தகிலோத் தமைபா

யுள்ளப் புணர்வுற் றிடவும் முனையான்
பின்னோச் சமர்செய் திசைபெற் றிலனோ.

(இ-ள்.) நீர் வெண்டாமரைமலரில் வசிக்கும் சரஸ்வதியைப்புணரவும், அழ காக ஆலோசித்துச் சிருஷ்டித்த (மகளாகிய) திலோத்தமையினிடத்தில் உள்ளப்புண ர்ச்சியுண்டாகவும், உம்மோடு யான் சிறுபோர்செய்து கீர்த்திபெறவில்லையோ?-எ-று.

நீர், அழகுகளைவற்றினுஞ் சிறிது சிறிதாக வெடுத்துச் சிருட்டித்த மகளா கிய திலோத்தமையினிடத்து முறைபிறழ்ந்து புணர்ச்சி விருப்புறும்படி மிக்க விலே சாமினை செய்தனனென்று கூறினனென்பார், 'திலோத்தமைபா லுள்ளப்புணர்வுற்றி டவும் முனையான் பின்னோச்சமர் செய்திசை பெற்றிலனோ' என்று கூறினர். (௧௧)

சீர்பெற் றிடுசெந் திருவைத் திருமான்
மார்பிற் குடியா யுறவைத் திலனோ
கார்பெற் றவிழிக் கலைமங் கையையுன்
ஏர்பெற் றிடுநா விலிருத் திலனோ

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய இலக்ஷ்மியைத் திருமாலினுடையமார்பில் நிலையாக வைக்கவில்லையோ? கரிய கண்ணினையுடைய சரஸ்வதியை உமது அழகிய நாவின்கணிருத்தவில்லையோ?—எ-று.

குடியாயுறவைத்தல் - நிலைபெறுவித்தல். சதா வேதமோதுந் திருநாவென் பார், 'ஏர்பெற்றிடுநா' என்று கூறினர். (௧௨)

தண்ணின் றகுழற் சசியன் றுணைசெய்
பெண்ணின் றவியுற் றிடுபெற் றியலால்
விண்ணின் றலைவற் குளமெய்ம் முழுதுங்
கண்ணென் றிடுபல் குறிகண் டிலனோ.

(இ-ள்.) சுவர்க்கத்தலைவனாகிய இந்திரனுக்குக் குளிர்ச்சிபொருந்திய கூந் தலையுடைய இந்திராணியினிடத்து வைத்த விருப்பமல்லாமலும் தேகமுழுமையும் கண்ணென்று சொல்லப்பட்ட பல பெண்குறிகளை யுண்டாக்கவில்லையோ?—எ-று

இந்திரன் கௌதம முனிவரது பத்தினியை விரும்பிப் புணர்ந்தமையால் அவனுக்கு உடம்பு முழுதும் யோனியாகும்படி அம்முனிவர் சபிக்கப் பின் இந்திரன் வருந்திவேண்ட,அம்முனிவர் கருணைசுரந்து அவனுக்குமாத்திரம் யோனியாகவும்,பிற ருக்குக் கண்ணாகவும் விளங்கும்படி யருள்செய்தமையின், 'விண்ணின்றலைவற்குள மெய்ம்முழுதுங்-கண்ணென்றிடுபல்குறிகண்டிலனோ' என்று கூறினனென்க. (௧௩)

விசையுற் றிடுசெங் கதிர்மே லவர்கீழ்த்
திசையுற் றவராங் கொருசே யிழைபோ
லிசையுற் றிடுபா கனிடைப் புணரா
வசையுற் றிடுபான் மைமயக் கிலனோ.

(இ-ள்.) விசையாகச் செல்லுகின்ற சூரியனாகிய மேலோனும், கீழ்த்திசைத் தலைவனாகிய இந்திரனும் ஒரு பெண்போல் வடிவங்கொண்டுவந்த சாரதியாகிய அரு ணனைப் புணர்ந்து அபகீர்த்தியடையும்வண்ணம் மயக்கவில்லையோ?—எ-று.

இதன் வரலாறு,—முன்பொருகாலத்தில் சூரியனது தேர்ப்பாகனாகிய அரு ணன் பெண்ணுருவங்கொண்டு இந்திரனது சபைக்குச் செல்ல, அப்பெண்ணை இந்தி ரன் கண்டு மோகித்துப் புணர்ந்தனன். அப்பொழுது ஒரு குழந்தை பிறந்தது. பின் அருணன் அக்குழந்தையை யெடுத்துக்கொண்டு தனது சுயரூபத்துடன் சூரியனை

வந்து காண, சூரிய னிக்குழந்தை யேதென்று வினவினன். அருணன் நடந்த வரலாற்றைக் கூறக் கேட்டு அப்பெண்ணுருவைத் தானும் பார்க்க விரும்பினன். உடனே அருணன் அவ்வடிவத்தைக்கொள்ளத் தானும் மையல்கொண்டு புணர்ந்தனன் அப்பொழுது ஒரு குழந்தை பிறந்தது. இந்திரனுக்குப் பிறந்த பிள்ளை வாலி என்றும், சூரியனுக்குப் பிறந்த பிள்ளை சுக்கிரீவனென்றும் பெயர்பெற்றன வென்பதாம். (௧௪)

கதனத் தொடுவந் தகலந் தவர்பா
லிதநட் புறுமா மதியென் கலையான்
மதனத் தொடுதே சிகன்மா தையுறப்
புதனைத் தருபான் மைபுணர்ந் திலனோ.

(இ-ள்.) வெப்பத்துடன்வந்துசேர்ந்தவர்களிடத்தில் இனிய நட்புக்கொள்ளுகின்ற மேன்மையினையுடைய சந்திரன் எனது பாணத்தினால் காமவிகாரத்துடன் குருபத்தினியைப்புணர்ந்து புதனைப்பெறும்வண்ணஞ் செய்யவில்லையோ ?—எ-று.

சந்திரன் பிரகஸ்பதிபகவானிடத்திற் கல்வி கற்கும்பொருட்டுச் சென்று அவரது மனைவியாகிய தாரையைப்புணர்ந்து புதனென்னும் புத்திரனைப் பெற்று, அப்பிரகஸ்பதியின் சாபத்தினால் க்ஷயரோகமுற்று வருந்தும்படி நிகழ்ந்தது எனது வல்லமையேயன்றி வேறன்றென்று கூறினனென்பார், 'தேசிகன் மாதை யுறப் புதனைத் தரு பான்மை புணர்த்திலனோ' என்று கூறினர். (௧௫)

முற்றே தின்மறைத் தொகைமு தறிவாற்
கற்றே தமுணர்ந் திடுகாட் சிபெறு
நற்றே வர்கள்யா வையுநா ரியர்தங்
குற்றே வல்செயும் படிகூட் டிலனோ.

(இ-ள்.) கெடாத வியல்பினையுடைய வேதங்களனைத்தையுந் தமது பேரறிவினாற் கற்றுச் சர்வமுமுணரத்தக்க ஞானத்தைப் பெற்றுள்ள நல்லதேவர்களனைவரையும் தேவமாதர்களுக்கு ஊழியஞ்செய்யும்வண்ணம் செய்யவில்லையோ ?—எ-று.

மறைதே ரும்வசிட் டன்மரீ சிமிகக்
குறிதா முனியத் திரிகோ தமனல்
லறிவா லுயர்கா சிபனு தியராந்
துறவோர் தமதாற் றலொழித் திலனோ.

(இ-ள்.) வேதங்களையுணர்ந்த வசிட்டரும், மரீசியும், மிகக் குறியவராகிய அகஸ்தியரும், அத்திரியும், கௌதமரும், சிறந்த ஞானத்தாலுயர்ந்த காசிபருமாகிய துறவிகளினது தவவல்லமையைத் தொலைக்கவில்லையோ ?— எ-று.

வசிட்டராதி மகாமுனிவர்களும் எனது வல்லமையால் தங்கள் தவவல்லமை குறைந்தனர்களாயின் மற்றையரைக் குறித்துக் கூறவேண்டா வென்பது கருத்து. ()

மன்னன் மரபுற் றிடுமா னவரைப்
பின்னா கியமும் மைகொள்பே தகரை
மின்னார் கண்மயக் கினில்விட் டிலனோ
வென்னாணைகடந் தவர்யா ருளரோ.

(இ-ள்.) நிலைபெற்ற நான்கு வகுப்பாகப் பொருந்திய மனிதர்களையும், தாழ்வாகிய மூவகைப்பேதமாகிய சாதிகளையும் மாதர்களது மயக்கத்தில் செலுத்தவில்லையோ ? (ஆகையால்) எனது ஆக்கினையைக் கடந்தவர்கள் யாரிருக்கின்றனர்.—எ-று.

நான் மரபுற்றிடுமானவராவார்—பிராமணர், க்ஷத்திரியர், வைசியர், சூத்திரர் என்பவர்கள். பின்னுகிய மும்மைகொள் பேதகர் என்றது,—அநுலோமர், பிரதிலோமர், சங்கரசாதியார் என்பவர்களே. இவருள், பிராமணன் க்ஷத்திரிய வைசிய சூத்திர சாதிப்பெண்களைக் கூடிப் பிறந்த மூன்று சாதியாரும், அரசன் வைசிய சூத்திரசாதிப் பெண்களைக் கூடிப்பிறந்த இரண்டு சாதியாரும், வைசியன் சூத்திரசாதிப் பெண்ணைக் கூடிப்பிறந்த ஒருசாதியாருமாகிய அறுவரும் அநுலோமர். இவர்களுயர்ந்தசாதியாம். பிராமணஸ்திரீயினிடத்தில் க்ஷத்திரியன் வைசியன் சூத்திரன் இம்மூவருஞ் சேர்ந்து பிறந்த மூன்று சாதியாரும், க்ஷத்திரியஸ்திரீயினிடத்தில் வைசியன் சூத்திரனிருவருங் கூடிப்பிறந்த இரண்டு சாதியாரும், வைசிய ஸ்திரீயினிடத்தில் சூத்திரன் கூடிப்பிறந்த ஒரு சாதியாருமாகிய அறுவரும் பிரதிலோமர். இவர்கள் தாழ்ந்தசாதியாம். இவ்விருதிறத்தினருங் கூடிப் பிறந்தவர்கள் சங்கரசாதியாராம். இவருள், பிராமணனுக்கு க்ஷத்திரியப் பெண்ணினிடத்திற் பிறந்தவன் சவர்ணன். வைசியப் பெண்ணினிடத்திற் பிறந்தவன் நிஷாதனன். சூத்திரப்பெண்ணினிடத்திற் பிறந்தவன் பார்சுவன், க்ஷத்திரியனுக்கு வைசிய ஸ்திரீயினிடத்திற் பிறந்தவன் மாகிஷன். சூத்திரப் பெண்ணினிடத்திற் பிறந்தவன் தௌஷந்யன். வைசியனுக்குச் சூத்திரஸ்திரீயினிடத்திற் பிறந்தவன் உக்கிரன். பிராமணஸ்திரீயினிடத்தில் க்ஷத்திரியனுக்குப் பிறந்தவன் சூதன். வைசியனுக்குப் பிறந்தவன் வைதேகன். சூத்திரனுக்குப் பிறந்தவன் சண்டாளன். க்ஷத்திரியப்பெண்ணினிடத்தில் வைசியனுக்குப் பிறந்தவன் மாகதன்-சூத்திரனுக்குப் பிறந்தவன் க்ஷத்தா. வைசியப்பெண்ணினிடத்தில் சூத்திரனுக்குப் பிறந்தவன் இரதகாரன் என வறிக. பிரதிலோமத்தானுக்கும் அநுலோமப் பெண்ணுக்கும் பிறந்தவன் விராத்தியன் எனவும், அநுலோமத்தானுக்கும் பிரதிலோமப் பெண்ணுக்கும் பிறந்தவன் அந்தராளன் எனவும் பெயர் பெறுவர் என வறிக. (சஅ)

அறைபெற் றிடுமித் திறமா னவெலா
முறைபெற் றிடுமென் னின்முடிந் திடுமோ
பிறைபெற் றிடுகின் றபெருஞ் சடையெம்
மிறைபெற் றிடுசத் தியியற் றிடுமே.

(இ-ள்.) சொல்லப்பட்ட இவ்விஷயங்களனைத்தும் முறையே பெற்றுள்ள என்னால் முடியுமோ? பிறைச்சந்திரனையணிந்த பெரிய சடைமுடியையுடைய எமது சிவபெருமான் படைத்துள்ள வல்லபமே செய்தருளும்.—எ-று.

யான் ஒருமுன்னிலைச்சுட்டேயன்றி என்னால் ஒரு செயலு மின்றென்பதும், அனைத்துஞ் சிவபெருமானது திருவருட்செயலேயென்பதும் விளங்கக் கூறினனென்பார், 'பிறைபெற் றிடுகின்ற பெருஞ்சடையெம் மிறைபெற்றிடு சத்தி யியற்றிடுமே' என்று கூறினார். (சக)

மாலே முதலா கியவா னவர்தம்
பாலே யடல்வா கைபடைப் பதலான்
மேலே நதிசூ டியமே லவன்மேற்
கோலே வினன்வென் றிடல்கூ டுமதோ.

(இ-ள்.) திருமால் முதலாகிய தேவர்களிடத்தில் வல்லமைபொருந்திய வெற்றிபெறுவதல்லாமல், திருமுடியில் கங்கைநதியையணிந்த முதல்வனாகிய சிவபெருமான்மீது பாணங்களைப்பிரயோகித்துச் செயிக்கக்கூடுமோ?—எ-று. (உ0)

ஏதா கியசிர் கொடவன் முறைசெய்
தொய்தா னவர்போ லதுவன் றனையால்

வெய்தா மழலா கியமே லவன்மே
லெய்தா லுமென்வா ளிகளெய் திடுமோ.

(இ-ள்.) அழகிய சிறப்பினையுடைய அச் சிவபெருமானை, சாமானியத் தொழிலைச் செய்கின்ற அற்ப தேவர்களைப்போலக் கருதிக் கூறினீர். கொடிய அக்கினி வடிவமாகிய அவ்வெம்பெருமானது திருமேனியில் யான் பிரயோகிக்கத் தொடங்கினும் என் அம்புகள் சென்று தாக்குமோ ?—எ-று.

சிவபெருமான் அழல்வண்ண ராகலின் எனது புஷ்பபாணம் அவ்வெம்பெருமான்மீது சென்று பயன்படாதென்று கூறினனென்பார், 'வெய்தா மழலாகிய மேலவன்மே லெய்தாலு மென்வாளிக ளெய்திடுமோ' என்று கூறினர். (உக)

கையுந் நகையுங் கதிரார் விழியு
மெய்யுந் தழலாம் விமலன் றனையா
னெய்யும் படிசென் றிடினிவ் வுயிர்கொண்
டுய்யுந் திறமு முளதோ வுரையாய்.

(இ-ள்.) திருக்கரமும், திருநகையும், ஒளிபொருந்திய திருவிழியும், திருமேனியும் அக்கினிவடிவாகப் பொருந்திய சிவபெருமானை யான் பாணப்பிரயோகஞ் செய்யும்படி செல்வேனாயின், பின், இந்தப் பிராணனோடு பிழைக்குந்தன்மையு முண்டாகுமோ ? நீர் கூறுவீராக.—எ-று.

தாருகாவனத்து முனிவர்களேவிய தழல் திருக்கரத்தும், முப்புரங்களையு மெரித்ததழல் திருநகையினும், வலக்கண் இடக்கண்களாகிய சூரியசந்திரர்களுடன் அக்கினி திருநுதலினும், இவையனைத்துமன்றி தழலே திருமேனியாகவுமுடைய பெருமானென்று கூறினனென்க. இதனை—"தீத்தானுன்கண்ணிலே தீத்தானுன்கையிலே - தீத்தானுமுன்றன் சிரிப்பிலே - தீத்தானுன்-மெய்யெலாம் புள்ளிருக்கு வேளூரா வுன்னையிந்தத் - தையலாளெப்படி சேர்ந்தாள்" என்னுஞ் செய்யுளானுமுணர்க.

பற்றோ டிகலற் றபரம் பொருளை
யெற்றோ மயல்செய் குவதீ சனையு
மற்றோ ரெனநின் னின்மதித் தனையாற்
சற்றோ வவனாற் றறவிர்த் திடவே.

(இ-ள்.) உறவும் பகையுமில்லாத சிவபெருமானை எவ்வாறு மயக்குவது ? அச்சிவபெருமானையும் மற்றவர்களைப்போல உமது மனதில் நினைத்தீர். அவரது பராக்கிரமம் நீக்குதற்கு அற்பமாயுள்ளதோ ?—எ-று.

சிவபெருமான் விருப்பு வெறுப்பற்றவ ராகலின் அவரை மற்றவர்களைப் போல மயக்குதல் கூடாதென்று கூறினனென்பது கருத்து. 'பற்றோடிகலற்ற பரம்பொருள் என்பதனை:—"வேண்டுதல் வேண்டாமையிலானடி சேர்ந்தார்க் - கியாண்டுமிடும்பையில" என்னுந் திருக்குறளானுமுணர்க. (உ௩)

சூறா வளிவை கியசூ ழலின்வா
யேறா வொருபூ ளையெதிர்ந் துளதே
னீறா டியமெய் யுடைநின் மலன்மேல்
வீறாய் வினையேன் பொரமே வுவனே.

(இ-ள்.) சுழல்காற்றுப் பொருந்திய விடத்தில் சென்று ஒரு பூளைப்பஞ்சு எதிர்க்குமாயின், விபூதி தரித்த திருமேனியினையுடைய சிவபெருமான்மேல் இறுமாப்புடன் தீவினையேனாகிய யான் போர்செய்தற்குச் செல்லுவன்.—எ-று.

29

சுழல்காற்றின்முன் பூளைப்பூவெதிர் நிற்குமாயின் யான் சிவபெருமானெதிர்நின்று போர்செய்வேனென்று கூறினனென்க. (உ௪)

ஆறுற் றிடுசெஞ் சடையண் ணலொடு
மாறுற் றவருண் டெனின்மற் றவர்தா
மூறுற் றனரல் லதுளத் துயர்கொண்
டீறுற் றனரல் லதிருந் தனர்யார்.

(இ-ள்.) கங்கைநதிதங்கிய சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானுடனே எதிர்த்தவருண்டாகில், அவர்கள் அவயவபங்கப்பட்டவர்களாகவும், அல்லது மனவருத்தத்துடன் அழிந்தவர்களாகவு மிருப்பார்களேயன்றி உயிர் பிழைத்திருந்தவர்கள் யார்.—எ-று.

சிவபெருமானோடு மாறுகொண்டவர்களில் அவயவங்கப் பட்டவர்களும் உயிர் துறந்தவர்களு மாயினர்களே யன்றி, ஒருவரும் உயிர் பெற்றுய்ந்திலரென்பது கருத்து. (உ௫)

இந்நா ரணனா தியர்யா வர்களு
மந்நா ளமலன் பணியாற் றிடவு
முன்னு மவர்சிந் தனைமொய்ந் நகையா
லொன்னார் புரமட் டதுணர்ந் திலையோ.

(இ-ள்.) இந்தத் திருமால் முதலிய யாவர்களும் அக்காலத்தில் சிவபெருமானது திருப்பணியைச் செய்தலும் அவர்கள் மனஅபிப்பிராயத்தைத் திருவுள்ளங்கொண்டருளிப் புன்னகையினால், பகைவர்களது முப்புரங்களையு மெரித்தருளினமையை நீருணரவில்லையோ?—எ-று.

திருமாலாதிதேவர்கள் வேண்டுகோளால் முப்புரங்களையு மழித்தருளியசிவபெருமானுக்கு முன்னே எனதாற்றலெவ்வளவென்று கூறினனென்க. (உ௬)

எந்தா யருளென் றொரிளங் குமரன்
வந்தா தியையேத் தவும்வை துசினக்
கொந்தா ரழல்போல் வருகூற் றுவனை
யந்தாள் கொடுதைத் ததறிந் திலையோ.

(இ-ள்.) எமது தந்தையே காத்தருள்வீராகவென்று ஒரு சிறுபிள்ளையாகிய மார்க்கண்டேயர் அடைக்கலமாகவந்து முதற்கடவுளாகிய சிவபெருமானைத் துதிக்கவும், பழிப்புரைகூறிக் கடிய கோபாக்கினியையுருக்கொண்டாற்போன்று வந்த இயமனை அழகிய திருவடிகளைக்கொண்டுதைத்தருளியதை நீர் அறிந்திலிரோ?—எ-று.

எல்லா வுயிர்களையுங் கொல்லத்தக்க இயமனை மார்க்கண்டேயர் பொருட்டு உதைத்துக்கொன்றருளிய சிவபெருமானது பராக்கிரமத்தை யறியீர்போலு மென்று கூறினனென்க. (உ௭)

முன்னைப் பகலி லுமுகுந் தனுமாய்ப்
பன்னற் கரிதா யபரம் பொருள்யா
மென்னச் சிவனெய் தியிகழ்ந் தவனைச்
சென்னித் தலைகொண் டதுதேர் கிலையோ.

(இ-ள்.) முன்பொருகாலத்தில் நீரும் திருமாலுமாகச் சொல்லுதற்கரிய பரப்பிரமம் நாமேயென்று கூறிப்பகைத்து நிற்க, அப்பொழுது சிவபெருமான் எழுந்தருளி இகழ்ந்துகூறியஉம்மை நடுத்தலை கிள்ளியதை அறியீரோ?—எ-று.

சிருஷ்டிக்கருத்தராகிய உமது தலைகளிலொன்றைக் கிள்ளிய சிவபெருமா னுடைய பராக்கிரமத்தை நீரோயறியீர்போலுமென்று கூறினனென்க. (உஅ)

அடன்மே வுசலந் தரமுத லியராய்ப்
படிமே லுளரோர் பகைமூ ளவர்தா
முடிவா ரரனோ டெமரா டிடலுங்
கெடுமா றுபுணர்த் ததுகேட் டிலையோ.

(இ-ள்.) வலிமைபொருந்திய சலந்தராசுரன் முதலியவராக உலகத்திலிரு ந்த அநேக அசுரர்கள் இறப்பவர்களாய்ச் சிவபெருமானோடு பகைகொண்டெதிர்க்க வும், அவர்களிறக்கும்வண்ணம் உபாயஞ் செய்தருளினமையை நீர் கேட்டிலீரோ?

சிவபெருமானுடன் பகைகொண்ட சலந்தராசுரனாதி வலியோர்களும் அழி வுற்றனராயின், சிறியேன் அவர்பராக்கிரமத்தின் முன் எத்தன்மையினனென்று கூறி னனென்பது கருத்து. (உக)

விடையூர் தருநின் மகன்வேள் வியிலத்
தடைய்தினர்யா வருமொப் பிலரன்
மாடெய் தியவீ ரனின்மா னமொரீஇப்
பாடெய் தியபுன் செயல்பார்த் திலையோ.

(இ-ள்.) அழிதலையடைந்த உமது புத்திரனாகிய தக்ஷனது யாகசாலையிற் சென்றவர்களனைவரும், ஒப்பற்ற சிவபெருமானிடத்திற் றோன்றிய வீரபத்திரரால் பெருமைகுலைந்து துன்பமடைந்த அற்பச்செய்கையை நீர் பார்த்திலீரோ?—எ-று.

உமது புத்திரனாகிய தக்ஷன் சிவபெருமானுக்கு விரோதமாகச்செய்த வேள் வியிலடைந்திருந்த தேவர்கள் வீரபத்திரமூர்த்தியால் அடைந்த துன்பத்தை நீரறியீர் போலுமென்றுகூறியதனால், அவன் சிறுவிதியென்னும் பெயர்பெற்றவனாகவிருந்தும் சிவபெருமானருகிருந்த வீரபத்திரராலழிவுறுவனாயின், அற்பனாகிய யான் நேரே சிவ பெருமான்மீது காமப்போர்செய்து வெற்றிபெறுதல் கூடுமோவென்று கூறினனெ ன்பது கருத்து. (ஙo)

அண்டா தவகந் தையொடா ழியின்வாய்
விண்டா னவரச் சுறமே வுவிட
முண்டா னிகழ்கங் கையையோ ரணுவிற்
கொண்டா னவன்வன் மைகுறிக் கிலையோ.

(இ-ள்.) திருமாலானவர் அஞ்சும்வண்ணம், தடுக்கப்படாத இறுமாப்புடன் கடலிற்றோன்றிய விஷத்தையுண்டருளியவரும், பரவிவந்தகங்கையை ஓரணுவைப் போல சடையிலணிந்தவருமாகிய சிவபெருமானது பராக்கிரமத்தை நீர் சிந்தித் திலீரோ?—எ-று.

உலகமுழுவதையுந் தகித்தற்குரிய கொடிய வேகத்துடன்றோன்றிய விஷத் தையுண்டும், அவ்வுலகங்களை யழிக்கவெழுந்த கங்கையை யணுவளவாகச் சடை முடியிலணிந்து முயிர்களைக் காத்தருளிய சிவபெருமானுக்கு முன்னே எளியே னெதிர் நிற்க வலியில்லையென்று கூறினனென்க. (ஙக)

தரியா வுளமால் கொடுதன் னிகழு
மரியோ டைகம்மா வையடற் புலியை
யுரியா மிசைபோர் வையுடுக் கையெனப்
பரியா வரனுற் றதுபார்த் திலையோ.

(இ-ள்.) அடக்குதற்கரிய மனமயக்கத்துடன் தன்னையிகழ்ந்த நரசிங்கத்தையும் (கயாசுரனென்னும்) யானையையும், வலியபுலியையு முரித்துப்போர்வையாகவும் ஆடையாகவுங் கொண்டு சிவபெருமானெழுந்தருளி யிருத்தலை நீர்பார்த்திலீரோ?

இரணியனையழித்த திருமாலாகிய நரசிங்கமும் கயாசுரனென்னும்யானையும் தாருகாவன முனிவர்கள்செய்த அபிசார வேள்வியிற்றோன்றியபுலியும் சிவபெருமானாலழிவுபெறுமாயின், அவ்வெம்பெருமானது பராக்கிரமத்தை யுரைப்பரிதென்பது கருத்து. அரி-என்பது ஈண்டு நரசிங்கத்தை. (சுஉ)

ஓரார் தனதுண் மையையுள் ளமிசை
யாரா யினுமாற் றவகந் தைபெறின்
வாரா வவர்தம் வலிமாற் றிடுமாற்
றோராய் கொல்பரஞ் சுடர்செய் கையதே

(இ-ள்.) தமது உண்மையை யுணராதவர்களாய் மனதினிடத்தில் மிகுந்த கர்வத்தை யாராயினுங்கொண்டால், அவர்களிடம் வந்து அவர்கள் கொண்ட இறுமாப்பை யழித்தருளுவர். இது சிவபெருமானது செய்கை. இதனை நீர் உணர்ந்திலீரோ?—எ-று.

தனதுண்மை-தமது பதித்தன்மை. 'ஓரார் தனதுண்மையை யுள்ளமிசை யாராயினு மாற்றவ கந்தைபெறின்' என்பதற்கு, நமது எளிமைத்தன்மையையுணராதவர்களாய் யாவராயினும் அவ்வெம்பெருமானது நிலையைக் கெடுக்கும்படி யகங்கரிப்பார்களாயின், எனப்பொருள் கூறினுமாம். ஓரார் - முற்றெச்சம். வாரா-செய்யாவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். கொல் ஐயவிடைச்சொல். (சுஙு)

இறுகின் றநடைப் பகலி னிலதோர்
குறைதுன் றுமிடற் றிறைகண் ணினும்வீழ்
பொறியொன் றதனாற் பொடிபட் டிடுநீ
யறிகின் றிலையோ வகிலங் களுமே.

(இ-ள்.) உலகங்களழியவேண்டிய ஊழிக்காலத்தில் அழிவில்லாத காளகண்டராகிய சிவபெருமானது திருக்கண்ணினின்றும் வீழ்ந்த ஒரு நெருப்புப்பொறியினால் அவைநீறுபட்டழியும்; இதனை நீர் அறிந்திலீரோ?—எ-று. (சுச)

இப்பெற் றியனா கியவீ சனையென்
கைப்பற் றியவிற் கொடுகந் தமலர
ரப்பிற் பொருகின் றிலனா ருயிர்மேன்
மெய்ப்பற் றிலரிச் செயல்வேண் டுவரே.

(இ-ள்.) இத்தன்மையினையுடைய சிவபெருமானை என்கையிற் பிடித்த (கரும்பு) வில்லைக்கொண்டு மணம்பெருக்கிய புஷ்பபாணங்களால் போர்செய்யமாட்டேன். அரிய உயிரினிடத்தில் உண்மையான அன்பில்லாதவர்கள் இக்காரியஞ்செய்யவிரும்புவார்கள்.—எ-று.

உயிர்ப்பற்றில்லார் செய்யத்தக்க இத்தகாத காரியத்தை யான் செய்யேனென்று கூறினனென்க. (சுரு)

மேனா ளகிலந் தருமேல் லியலா
வானா வருடன் வோயளித் தொருபாற்
றானா கவிருந் திபதற் பரனை
நானா மயல்செய் வதுநன் றிதுவே.

(இ-ள்.) முற்காலத்தில் உலகங்களைப் படைக்கும்பொருட்டுத் தம்மைவிட்டு நீங்காத திருவருளையே ஒரு பெண்ணுருவாகச் செய்து,தமது ஒரு பாகத்திலமர்த்திக்கொண்ட சிவபெருமானை அற்பனாகியயானோ? மயக்கத்தக்கவன்; இக்காரியம் நன்றாயிருக்கின்றது :—எ-று.

சிவபெருமான் உலக சிருஷ்டி காரணமாகத் தமதருளையே ஒருபெண்ணுருவாகச் செய்து தம திடப்பாகத்திற் கொண்டனரே யன்றி, ஏனையர்போலக் காமங் காரணமாகவன்றாதலின் அவரை மயக்கித் தவநிலையை மாற்றுதல் என்றால் முடியாத காரியமென்று கூறினனென்பார், 'மெல்லியலா வாணுவருடன்னை யளித்தொருபாற்றுணைகவிருத்திய தற்பரனைநானுமயல்செய்வது நன்றினியே' என்றுகூறினார்; இதனை,

> " மாயநட் போரையு மாயா மலமெனு மாதரையும்
> வீயவிட் டோட்டி வெளியே புறப்பட்டு மெய்யருளாந்
> தாயுடன் சென்றுபின் றாதையைக் கூடிப்பின் றாயைமறந்
> தேயும தேநிட்டை யென்றா னெழிற்கச்சி யேகம்பனே." — என்னும்

பட்டினத்துப்பிள்ளையார் திருவாக்கானு முணர்க. (௬௬)

வே று.

> என்னு மதனவே ளிசையா மறுத்திடலும்
> பொன்னார் கமலப் பொகுட்டுத் தலைவந்த
> மன்னுன வேதா மனக்கவலை கொண்டுசில்போ
> துன்னு நெடிதே யுயிரா வுரைக்கின்றான்.

(இ-ள்.) மன்மதன் இவ்வாறு கூறித் தான் சொல்லியகாரியத்திற்கு ஒத்துக்கொள்ளாமல் தடைசெய்யவும், பொன்மயமாகிய தாமரைப் பொகுட்டில் தோன்றிய முதல்வனாகிய பிரமன் மனவருத்தங்கொண்டு கொஞ்சநேரஞ் சிந்தித்துப் பெருமூச்சு விட்டுக்கொண்டு சொல்வானாயினன்.—எ-று. (௬௭)

> வெண்மை யறிவாற் றமைவியக்கும் விண்ணவர்பா
> லண்மை யிலனுரு மண்ணலியல் கூறினையா
> லுண்மை யிதுவா முவனைப் பொருவதுவு
> மெண்மை யதுவோ வெவர்க்கு மரிதன்றோ.

(இ-ள்.) (மதனனே !) அறிவின்மையால் தங்களையே புகழ்ந்துபேசுகின்ற தேவர்களிடத்தில் அடைதலில்லாதவராகிய சிவபெருமானது சிறப்பிலக்கணங்களை யெடுத்துக்கூறினை ; நீகூறியது உண்மையேயாம் ; சிவபெருமானிடத்துப் போர்செய்தலும் இலேசானதோ ? அது யாவர்க்கும் அரிதல்லவோ ?—எ-று. (௬௮)

வெண்மையறிவு - மூடபுத்தி.

> அன்ன பரிசே யெனினு மடைந்தோர்த
> மின்னல் கெற்று மிறையருளா லிக்கருமம்
> முன்னின் முடியு மொழிந்தோரான் முற்றுவதோ
> முன்னி னிதற்கு முதற்கா ரணநீகாண்.

(இ-ள்.) அவ்வாறாயினும் தம்மையடைந்தவர்களது துன்பத்தை யொழித்தருள்கின்ற சிவபெருமானது பெருங்கருணையால் இக்காரியம் உன்னால் முடிவுபெறும்; மற்றையர்களால் முடிவுபெறக் கூடியதோ? விசாரிக்குமிடத்தில் நீயே இதற்கு முதற்காரணமாக விருக்கின்றனை.—எ-று.

எங்கள்பொருட்டு நீ சென்று இக்காரியத்தை நிறைவேற்றுதலும் சிவபெருமானது திருவருளை யன்றி உன்னால் சிறிதும் நடவாதென்று கூறினனென்பார், 'இறையருளா லிக்கரும முன்னரின் முடியு மொழிந்தோரான் முற்றுவதோ' என்று கூறினார். (௩௯)

எல்லார் செயலு மிறைவ னியற்றுவதே
யல்லா திலையா ரதுவுமசை யாதெவையு
நில்லா தருளின்றே னீயின் றவன்பாலிற்
செல்லா யுனது செயலுமவன் செய்கையதே.

(இ-ள்.) எல்லாருடைய செயல்களையும் சிவபெருமானே செய்கின்றவரன்றி வேறில்லை. அவ்வெம்பெருமானையன்றி ஒரணுவுமசையாது. அவரது திருவருளில்லையாயின், எப்பொருளும் நிலைபெற்றிரா. உனது செய்கையும் அவரது செய்கையேயாம். (ஆதலால்) இன்று நீ அச்சிவபெருமானிடத்திற் செல்லக்கடவை.—எ-று.

அனைத்துஞ் சிவன்செயலே யன்றி வேறன்றென்பது கருத்து. (௪0)

செம்மாந்து தற்புகழுந் தேவர்குழு வும்மருள
வெம்மான் பிறன்போ லிருந்தோர் துரும்புநிறீஇ
யம்மாதன் செய்கை யனைத்துமெனக் காட்டினனே
நம்மாலு முற்றுஞ் சிலவென்கை நாணன்றோ.

(இ-ள்.) இறுமாப்புற்றுத் தம்மைப் புகழ்ந்த தேவர்கூட்டங்களும் மயங்கும் வண்ணம் சிவபெருமான் அன்னியன்போன்று ஆங்கடைந்து ஒரு துரும்பை நட்டு அனைத்துந் தமது செயலே யென்பதை விளங்கச்செய்தனர். (ஆதலால்) நம்மாலும் சில காரியங்கள் நிறைவேறுமென்று கூறுதல் வெட்கமன்றோ?—எ-று.

தருக்குற்ற தேவர்கள் பொருட்டுச் சிவபெருமான் ஒரு துரும்பை நட்டு அனைத்துந் தஞ் செயலே யென்பதை விளக்கியருளினமையின், நம்மா லொரு சிறிது முடியாதென்று கூறின னென்பது கருத்து. இதன் வரலாறு:—முன்னொருகாலத்தில் தேவர்களும் அசுரர்களும் யுத்தஞ் செய்தபொழுது தேவர்களை யசுரர்கள் வென்றார்கள். பின்பு சிவபெருமானுடைய திருவருளினால் அசுரர்களைத் தேவர்கள் வென்றார்கள். வென்றபின்பு,தேவர்களெல்லாருந் தங்கள்தங்களையேபுகழ்ந்து செருக்குற்று ஒருவரோடொருவர் பிணக்குற்றபொழுது,சிவபெருமான் ஓரியக்கவடிவங்கொண்டெழுந்தருளிவந்து அவர்க ளெதிரே ஒரு துரும்பை நட்டு இறுமாந்திருந்துகொண்டு அத்தேவர்களை நோக்கி "இத் துரும்பைத் துணிக்க வல்லவ னெவனோ அவனே அசுரர்களைவென்றவீரன்" என்றார். இந்திரன்முதலிய எட்டுத்திக்குப்பாலகர்களும், பிரமவிட்டுணுக்களும் தனித்தனியே தத்தம் படைக்கலத்தை விட்டு அத்துரும்பை யசைக்கவும் ஆற்றலில்லாதவர்களாய்ச் செருக்கழிந்து அவ் வியக்கனை நோக்கி, "நீர் யாவர்" என்றார்கள். உடனே அவ் வியக்கர் மறைந்தருளினார். உமாதேவியார் தேவர்க ளெதிரே வெளிப்பட்டு இயக்கவடிவங்கொண் டெழுந்தருளிவந்தவர் சிவபெருமானென்றுணர்த்தியருளினார் என்பதாம். இதனை.—" நிணம்புல்கு சூலம் வலமாக வேந்தி நெடுமால் விரிஞ்சன் முதலோர் - பிணம்புல்கு காட்டி நடமாட்டு கந்து பிறைவேணி வைத்த பெருமான் - கணம்புல்கு தேவர் முரணைத் தவிர்ப்ப வவர்முன்பு காம ரளிவீழ் - மணம்புல்கு தொங்க லணிதோ ளியக்க வடிவொன்று கொண்ட னுகினன்" எனவும், " அறுகித் துரும்பை யெதிர்நட்டு முன்ன ரிறுமாந்து வைகு மவனைப் - பணிலத்த னாதி யிமையோர்க ணோக்கி யிவனீ பயிற்று மிதுவென் - றுணிபுற்று வைகு மொருநீ யெவன்சொல் புகலென்று சொல்லு மொழிகேட் - டுணர்விற் சிறந்த தவர்

கண்டு கொள்ளு முவளின்ன பேச லுறுவான்" எனவும், "எவனேனு மாக வருநா னு மாது வலியின் றளக்க லுறுவேன் - றுவளாது நம்மு னடெதிர்த் துரும்பு துணிசெய்ய வல்ல னெவனோ-வவனே தயிர்ப்பி யனைவென்ற மினி யறிகென் றுனைப்ப மகவா - னிவரா வெழுந்து குலிசத்தை வீசி வறிதே யிளைத்த னனரோ." எனவும் வருங் காஞ்சிப்புராணத்தா னுமுணர்க. (௪௧)

பாடு திகழ்பாவை பல்லுயிரு மல்லனவு
மாடல்புரி விப்பா னருவுருவாய் நின்றபரா
னுடி லவனையின்றி நம்மாலொன் றுகவற்றோ
வேட விதனில்லைமை யிந்நாளு மோர்ந்திலையோ.

(இ-ள்.) பல உயிருடைப்பொருள்களும், உயிரில் பொருள்களும் பெருமை விளங்கும் பதுமைபோல்வனவாம், அவற்றை ஆட்டுவிக்கின்றவர் அருவமாகவும் உருவமாகவு மெழுந்தருளியிருக்கும் சிவபெருமானேயாகும்; விசாரிக்குமிடத்து அச்சிவபெருமானையன்றி நம்மால் ஒருகாரியமு முடியுமோ? எடா மன்மதனே! இதனுண்மையை இந்நாள்வரையிலும் நீ யுணரவில்லையோ?—எ-று.

இதனை—"ஆட்டுவித்தா லாலொருவ ராடா தாரோ யடக்குவித்தா லாரொருவ ரடங்கா தாரோ - பாட்டுவித்தா லாரொருவர் பாடா தாரோ பணிவித்தா லாலொருவர் பணியா தாரோ - யோட்டுவித்தா லாரொருவ ரோடா தாரோ யுருகுவித்தா லாரொருவ ருருகா தாரோ - காட்டுவித்தா லாரொருவர் காணு தாரோ காண்பாரார் கண்ணுதலாய் காட்டாக் காலே" என்னுந் திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரத்தானும், 'நன்னூரிற் பூட்டிய சூத்திரப் பாவைநன் னூர்தப்பினுற் - றன்னாலு மாடிச் சலித்திடுமோ வந்தத் தன்மையைப்போ - லுன்னு லியானு முலைறவதல் லான்மற் றுனைப்பிரிந்தா - லென்னாலிங் காவதுண் டோவிறை வாகச்சி யேகம்பனே" என்றும் பட்டினத்துப் பிள்ளையார் திருவாக்கானும், "ஈட்டிய தவப்பய னிலாதவர்கள் போலூ - னூட்டமுடை யாரெதிர் நடித்திடுவ னென்றாய் - காட்டவனல் போலுடல் கலந்துயிரை யெல்லா - மாட்டுமொரு நட்டுவனெம் மண்ணலென வெண்ணாய்" என்னுந் திருவாதவூரர் புராணததானு முணர்க. (௪௨)

கையம்பு பூட்டிக் கருப்புச் சிலைகோட்டி
யெய்யும் படிவழிகொண் டேகா யிறுதியிலா
வையன் றனைநீ யதுவு மவனருள்காண்
மெய்யங் கதற்கேது மேனுளே கண்டனம்யாம்.

(இ-ள்.) நீ முடிவில்லாத சிவபெருமான்மீது பாணப்பிரயோகஞ் செய்யும் பொருட்டுக் கரும்புவில்லை வளைத்துக் கையிலுள்ள புஷ்பபாணத்தைப் பூட்டிக்கொண்டு செல்லக்கடவை. இக்காரியமும் சிவபெருமானது திருவருளேயாம். இது உண்மையாகும். அதற்குக் காரணம் முன்பே யறிந்திருக்கின்றோம்.—எ-று.

சிவபெருமான் சனகாதியர்பொருட்டு யோகஞ் செய்யத்தொடங்கியகாலத்துத் திருநந்திதேவரை நோக்கி மன்மதன் வந்தால் விடவும், மற்றையர் யாவர்வரினும் விடாதிருக்கவுங் கட்டளையிட் டருளினமையின், 'மெய்யங் கதற்கேது மேனுளே கண்டனம்யாம்' என்றார். (௪௩)

ஈங்கிதுவு மன்றி யெவரேனுந் தம்மடங்காத்
தீங்கு பெறினுதவி செய்யென் றிரந்திடலு
மாங்கொருவன் செய்யா ததுமறுத்துத் தன்னுயிரைத்
தாங்க லுலக நடைதனக்குத் தக்கதுவோ.

(இ-ள்.) இதுவன்றியும், யாராயினும் தம்மால் சகிக்கமுடியாத துன்பத்தை யடையின் அவர்க்கு உதவிசெய்யும்படி யிரந்துகேட்டால், ஒருவன் அதனைச் செய்யாது மறுத்துத் தன்னுயிரைக் காத்துக்கொள்ளுதல் உலகவியற்கைக்குத் தக்கதோ?

என்றானு மோருதவி யாதொருவன் யார்க்கெனினுந்
தன்னான் முடிவதெனிற் றானே முடித்தறலை
சொன்னான் முடித்த லிடையாகுஞ் சொல்லுகினும்
பன்னாண் மறுத்துப் புரிதல்கடைப் பான்மையதே.

(இ-ள்.) யாரொருவன் யாதேனு மோருபகாரத்தை யாவர்க்காயினுந் தன்னாற்செய்யக்கூடுமாயின், (அவர்கள் கேட்பதற்குமுன்) தானே (அதனையுணர்ந்து) செய்துமுடித்தல் உத்தமம்; சொன்னபின்பு செய்துமுடித்தல் மத்திமம். சொன்னபோதினும் பலநாள்கள் மறுத்துக்கூறிப் பின்பு செய்துமுடித்தல் அதமலக்ஷணமாம். எ-று.

இதனை:—சொல்லாமலேபெரியர் சொல்லிச் சிறியர்செய்வர் - சொல்லியுஞ் செய்யார் கயவரே—நல்ல-குலாமாலை வேற்கண்ணாய் கூறுவமை நாடிற்-பலாமாவைப் பாதிரியைப் பார்." எனவும், "தண்டாம லீவது தாளாண்மை தண்டி-யடுத்தக்கா லீவது வண்மை - யடுத்தடுத்துப்-பின்சென்று லீவது காற்கூலி பின்சென்று-மீயானைச்சம்போ லறு" எனவும் வரும் ஒளவையார் திருவாக்கானு முணர்க. (௬௫)

எவ ரெனினு மிடருற் றனராகி
யோவில் குறையொன் றுளரே லதுமுடிக்கற்
காவி விடினு மறமீனை மறுத்துளரேற்
பாவ மலது பழியு மொழியாதே.

(இ-ள்.) யாவராயினும் துன்பத்தையடைந்தவராய் நீங்காத ஒரு குறையுற்றவர்களா யிருப்பின், அக்குறையை நிறைவேற்றுவதற்கு உயிரைவிட்டாலும் புண்ணியமேயாம். (அங்ஙனஞ் செய்யாது) தடைசெய்வாராயின், அதனால் பாவமேயன்றிப் பழியும் நீங்காதிருக்கும்.—எ-று. (௬௬)

உய்கை பொருளா வொருவர்க்கு மோருதவி
செய்கை யிலனேற் சிறியோன் கழித்தபகல்
வைக லதுவோ வறிதே யவன்வாழ்க்கை
பொய்கை மலர்ந்தகொட்டி போலும் பொலிந்துளதே.

(இ-ள்.) (ஒருவன்) தான் வாழ்தலையே பொருளாகக்கொண்டு யாவர்க்கும் ஒருதவியுஞ் செய்யானாயின். அவ்வற்பன் கழித்தபொழுதும் ஒரு பொழுதோ? அது வீண்பொழுதேயாம். அவனது வாழ்வும் குளத்திற்பூத்த கொட்டிமலரின் பொலிவு போல்வதேயாம்.—எ-று.

ஒருவருக்கு முதவிசெய்யாதவனுடைய குடிவாழ்க்கையானது குளத்திற் பூத்த கொட்டிமலர்போலப் பயனற்றதாகுமென்பது கருத்து. (௬௭)

அந்நா ரணனோ டமர்முற் றியமுனியைப்
பொன்னா டருளும் புலவோ ரிறையிரப்ப
வென்னாரு மென்பு விருத்திர னுக் காவுதவித்
தன்னா ருயிர்விட்ட தன்மைதனைக் கேட்டிலையோ.

(இ-ள்.) அந்தத் திருமாலுடன் போர்செய்துவென்ற ததீசிமுனிவனைப் பொன்னுலகத்தை யரசாட்சிசெய்கின்ற தேவேந்திரன்வந்து யாசிக்க, அம்முனிவர் தமது முதுகினிடத்திற்பொருந்திய எலும்பினை விருத்திராசுரன் பொருட்டுக் கொடுத்துத் தமது அருமையாகிய உயிரைவிட்ட தன்மையினை நீ கேட்கவில்லையோ?—எ-று

சுபனென்னும் அரசன்பொருட்டுப் பரிந்துவந்த திருமாலை வென்றவரா கலின், 'அந்நாரணனோ டமர்முற்றியமுனி' என்றார். புலவோ ரிறைவிரப்ப வென்னு மென்பு விருத்திரனுக் காவுதவித் தன்னு ருயிர்விட்ட தன்மையாவது,—இந்திரன் விருத்திராசுரனோடு போர்செய்து வெல்லுதற்குத் தனது வயிரப்படை பயனற்றிருந் தமையின் ததீசிமுனிவரை வணங்கி அவரது முதுகெலும்பை வேண்ட, அம்முனிவர் யோகத்தினின்று தேகத்தைப் பிரிந்து தமது முதுகெலும்பை யுதவினரென்பது புராணவரலாறு. புலவோர்-தேவர்கள். வென்-முதுகு. (௪௮)

மேலொன் றுளதோ விளம்ப வெவரெவர்க்கு
மூலந் தலைதெரியா முன்னோன் கடலெழுந்த
வாலந் தனையுண் டமரர்க் கமுதளித்த
சீலந் தனைநீ சிறிதுந் தெளிந்திலையோ.

(இ-ள்.) சொல்லுதற்கு வேறொன்றிருக்கின்றதோ? எவராலும் முதலுமுடியுங் காணப்படாதவராகிய சிவபெருமான் கடலிற்றோன்றிய ஆலாகலவிஷத்தைத் தாமுண்டருளித் தேவர்களுக்கு அமிர்தத்தைக் கொடுத்தருளிய முறைமையினை நீ சிறிதுந் தெளியவில்லையோ?—எ-று.

சிவபெருமான் தேவர்கள்பொருட்டுக் கொடியவிடத்தைத் தாமுண்டு, அமுதத்தைத் தேவர்களுக்குதவியதை நீயறியாய்போலுமென்று கூறினனென்க. (௪௯)

தேக்குஞ் சலதியிடைத் தீப்போ லெழுந்தவிடந்
தாக்கும் பொழுது தளரோ லெனவுரையா
வூக்கங் கொடுமா லொருகணநின் றெனம்மைக்
காக்கும் படிக்குக் கறுத்தசெயல் கண்டிலையோ.

(இ-ள்.) நீர்நிறைந்தகடலில் நெருப்பைப்போலத் தோன்றிய விஷமானது நம்மைக்கிட்டிவந்தபொழுது அஞ்சாதீர்களென்று கூறி மனதைரியத்துடன் திருமால் ஒருக்ஷணப்பொழுது நின்று (அவ்விடவேகத்தினின்று) நம்மைக்காக்கும் பொருட்டுத் தேகங்கறுத்த தன்மையை நீ பார்க்கவில்லையோ?—எ-று.

விடவேகத்திற் காற்றாது வருந்திய தேவர்கள்பொருட்டுத் திருமால் தனது தேகங் கறுத்தமையை நீயறியாய்போலுமென்று கூறினனென்க. (௫௰)

ஆரா யினுமொருவ ரன்பிற் றலைப்பட்டுப்
பேரா தரத்தாற் பிறர்க்குதவி செய்வாரேற்
றீராத வெந்துயரிற் சேர்தலே மாய்தலிவை
பாரார் புகழே பயனென்று கொள்வாரே.

(இ-ள்.) யாராயினு மொருவர் அன்பு பாராட்டி மிகுந்த ஆவலுடன் பிறருக்கு உதவிசெய்வார்களாயின், அதனால் நீங்காத கொடிய துன்பமுறுதலும் மரணமடைதலுமாகிய இவைகள் நேர்ந்தாலும் அவற்றைக்கருதார்கள். கீர்த்தியையே பயனாகக்கொள்வார்கள்.—எ-று.

பிறர்க் குதவிசெய்யத் தொடங்கினவர்கள் அதுகாரணமாகத் தமக்கு துன்பம் நேரினும் மரணம் நேரினும் அதனைக் கவனியாமல் புகழையே பெரும்பயனாகக் கொண்டு முயன்று செய்வரென்பது கருத்து. (௫௧)

சூரன் தனில்வலிசேர் சூரபன்ம னேவலின்யா
மாருந் துயர்கொண் டழுங்கினோ மன்னதினித்

றீரும் படிக்குச் சிவனொருசே யைத்தருவா
னேறாம் படைதொடுக்க வுன்னையாம் வேண்டினமே.

(இ-ள்.) நாங்களனைவரும் மிக்கவல்லமையையுடைய சூரபதுமனது வலியினால் பொருந்திய துன்பமுற்றுவருந்தினோம்; இனி அத்துன்பம் நீங்கும்வண்ணம் சிவபெருமான் ஒருபுத்திரனையளிக்கும்பொருட்டு ஒப்பற்ற பஞ்சபாணங்களையும் பிரயோகிக்கும்படி உன்னை யாம் வேண்டிக்கொண்டோம்.—எ-று. (௬௨)

ஆதலி னெங்க ளலக்கண் களைதற் றாம்பொருட்டுச்
சாதல் வரினுந் தவறோ புகழ்செய்வா
ரேது வரினு மெதிர்செல்வா ரெம்பணியிற்
போதியினி மாறு புகலே லெனவுரைத்தான்

(இ-ள்.) ஆகையால் எங்களது துன்பத்தை நீக்கும்பொருட்டு உனக்கு மரணநேர்ந்தாலுங் குற்றமாமோ? கீர்த்தியை விரும்பினவர்கள் எவ்வித விடையூறுகளேரினும் எதிர்ப்பட்டுச் செல்வார்கள்; ஆதலால், எங்கள் காரியநிமித்தஞ் செல்லக்கடவை; இனி தடுத்துக்கூறுதே யென்று சொல்லினன்.—எ-று.

புகழை விரும்பியவர்கள் எத்தகைய விடையூறு நேரிலும் விரைந்துசென்று அதனை முடிப்பார்களாதலால் நீ எங்கள்பொருட்டுச்சென்று உனது தொழிலைச் செய்யென்று கூறினனென்க. (௬௩)

வேறு.

பங்க யப்பொ குட்டி ருந்த பகவ னீது புகறலும்
ஐங்க ணைக்க ரத்தி றைவ னந்தை யெய்தி யாதியாம்
புங்க வற்கு மாறு கொண்டு பொருகி லேனி தன்றியே
யிங்கெ னக்க டுத்த தொன்றி யம்பு செய்வ லென்றனன்.

(இ-ள்.) கமலாசனத்திலிருந்த பிரமன் இவ்வார்த்தை கூறவும், பஞ்சபாணங்களையுடைய மன்மதன் வருத்தமுற்று, முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானுடன் பகைகொண்டு போர்செய்யமாட்டேன். இதனையன்றி, என்னாற் செய்யக்கூடிய வேறொன்றைச் சொல்வீராயின் செய்கின்றேனென்று கூறினன்.—எ-று.

எனது சாமர்த்தியஞ் சாமானியரிடத்தன்றிச் சிவபெருமானிடத்திற் பயன்படாதாகலான் அதனையொழித்து என்னாற் செய்யக்கூடிய தொன்றைக் கூறின் செய்கின்றேனென்று கூறினனென்பார், 'இங்கெனக் கடுத்த தொன் றியம்பு செய்வலென்றனன்' என்று கூறினார். (௬௪)

என்னும் வேலை யமர ரோடி ருந்த வேதன் முனிவுறா
நன்ன யந்த ழீஇ யுரைத்த நமது சொன்ம றுத்தியா
லன்ன பான்மை புரியி னுய்தி யல்ல தேனு னக்கியாந்
துன்னு சாப மிடுதும் யாது துணிவு சொல்லு கென்றனன்.

(இ-ள்.) இவ்வாறு கூறியபொழுது தேவர்களுடனிருந்த பிரமன்கோபித்து நாம் இதமாகக்கூறிய சொற்களைமறுத்தனை; நாம்சொன்னவண்ணஞ் செய்யிற்பிழைப்பாய்; இல்லையாயின், உனக்குயாங்கொடிய சாபமிடுவோம்; உனது கருத்துயாது? சொல்லக்கடவாயென்று கூறினன்.—எ-று.

சிவபெருமான்மீது பாணப்பிரயோகஞ்செய்து பிழைக்க விருப்பமோ? அல்லது, எமது சாபத்தைப்பெற்றழிய விருப்பமோ? இவ்விரண்டில் நினது கருத்து யாது கூறென்று பிரமன் கேட்டனனென்க. (௬௫)

வெய்ய சாப மிடுதுமென்று வெகுளி யான்மொ ழிந்தகேட்
டைய மேனி மதன வேள ழுங்கி வெய்து யிர்த்தினிச்
செய்ய லாவ தென்னெ னத்தெ ரிந்து சிந்தை தேற்றியே
வைய கம்ப டைத்த வண்ணல் வதன நோக்கி யுரைசெய்வான்.

(இ-ள்.) கொடிய சாபங்கொடுப்போமென்று கோபத்துடன் கூறியவார்த்தையைக் கேட்டு அழகிய சரீரத்தையுடைய மன்மதன் வருந்திப் பெருமூச்சு விட்டு, இனி யாது செய்வதென்று ஆலோசித்து மனதைத் தேற்றிக்கொண்டு உலகத்தைச் சிருஷ்டித்த பிரமனது முகத்தைப் பார்த்துக் கூறுகின்றான்.—எ-று.

பிரமனது சொற்படி நடக்கிற் சிவபெருமானாலழிவும், அதனைத் தடுப்பிற் சாபமும் நேரிடுவதாயிருக்கின்றதே இதற்கு யாது செய்வதென்று யோசித்தனனென்பார், 'செய்யலாவ தென்னெனத் தெரிந்து' என்று கூறினார். ஐய-குறிப்புப் பெயரெச்சம். மதனவேள்-இருபெயரொட்டு. (௬௬)

கேளி தொன்று ரைப்பல் வேத கேடு சூழு நினதுவாய்ச்
சூளின் மேலை யியல்ப கன்று துன்பு ழந்து படுதலிற்
காள கண்டன் முன்பு சென்று கடிய வெய்ய கணைகடூஉய்
மாளி னுஞ்சி றந்த தம்ம மற்று முய்ய லாகுமே.

(இ-ள்.) பிரமனே! யானொன்று சொல்லுகின்றேன் கேட்பாயாக, உமது வாயினின்றும் வருகின்ற கெடுதிபொருந்திய சாபத்தினால் முன்னையபெருமைகெட்டு வருந்தி யிறப்பதைப்பார்க்கிலுங் காளகண்டராகிய சிவபெருமானெதிரில் வேகமாகிய கொடிய பாணங்களைச்செலுத்தி (அதனால்) இறந்தாலுஞ் சிறப்பாகும். பின்னும் பிழைத்தலுங் கூடும்.—எ-று. (௬௭)

செற்ற நீர்மை கொள்ள லைய செஞ்ச டைப்பி ரானிடத்
திற்றை வைக லமரி யற்ற வேகு வெனி யானெனக்
கொற்ற வேளு ரைத்த லுங்கு ளிர்ந்த பூவி ருக்கைமே
லுற்ற போதன் மகிழ்சி றந்து ளங்க ளித்து மொழிகுவான்.

(இ-ள்.) ஐயனே! கோபங்கொள்ளவேண்டாம்; யான் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமானிடத்து இன்றைக்கே போர்செய்யச் செல்கின்றேனென்று வெற்றிபொருந்திய மன்மதன் சொல்லவும், குளிர்ச்சிபொருந்திய தாமரைப்பீடத்தில் வசிக்கின்ற பிரமன் மகிழ்கூர்ந்து மனக்களிப்புடன் கூறுகின்றான்.—எ-று.

கொற்றம் - வெற்றி. (௬௮)

பணிந்த சொல்ல னாகி நாம்ப ணித்த வாபு ரிந்திடத்
துணிந்த வாறு நன்று நன்று சூலி பாலி னுனைவிடாத்
தணந்தி டேந்தொ டர்ந்து பின்பு சார்து மஞ்சல் போகென
வுணர்ந்து கூறி மார வேளை யோவி லன்பொ டேவினான்.

(இ-ள்.) தாழ்ந்த சொல்லையுடையவனாய் நாம் சொல்லியவண்ணம் செய்வதற்குத் துணிந்தது மிகவும் நல்லது; சிவபெருமானிடத்து உன்னை யனுப்பிவிட்டு நாங்கள் இங்குநீங்கியிரோம்; உன்னைத் தொடர்ந்து பின்னே வருகின்றோம், நீ யஞ்சாதே; செல்லக்கடவாயென்று ஆலோசித்துக் கூறி, மன்மதனை மிகுந்த அன்புடனனுப்பினான்.—எ-று.

நாம் தனியே போகின்றோமென்று வருந்தவேண்டாம், யாமும் பின்னே வருகின்றோமென்று தைரியங்கூறி யனுப்பின னென்பார், 'தணந்திடேந் தொடர்ந்

துபின்பு சார்தூமஞ்சல் யோசெனு-வுணர்ந்துகூறி மாரவேளை யோவிலன்பொ டேவி ஞன்' என்ருர். ஒவிலன்பு-நீங்காத அன்பு. (௫௯)

ஏவு காலை மதனை வேள்வி யிறைதெ ரிந்து மைந்தயான்
றேவ ரோடு துயரு ழந்த சிறுமை பெற்ற தறிதியே
யோவில் வாழ்வு தருதி யென்னி னுமைம டந்தை தனையரன்
மேவு மாறு புரிகெ னுவி ரைந்து செல்ல நல்கினுன்.

(இ-ள்.) (பிரமன்) மன்மதனை யனுப்பிய சமையத்தில் இந்திரன் மன்மத னைப் பார்த்து, குழந்தாய்! யான் தேவர்களுடன் (சூரபதுமனுல்) வருந்தித் தாழ்வ டைந்திருத்தலை நீ யறிவாயல்லவோ? (எங்கட்குக்) கெடாத வாழ்வைக் கொடுக்க விரும்புவையாயின், சிவபெருமான் உமாதேவியாரைத் திருமணஞ் செய்யும்வண்ணம் செய்வாயென்று கூறி விரைந்துபோகும்படி யனுப்பினுன்.—எ-று.

திருமாலினவதாரமாகிய உபேந்திரன் இந்திரனுக்குத் தம்பியாகலான், அம் முறை நோக்கி மன்மதனை மைந்த! என்று கூறினனென்க. (௬0)

நல்கு றுங்க ரங்கள் கூப்பி நான்மு கத்த னுலகொரீஇ
யல்கு தன்பு ரத்து நண்ணி யவ்வி யற்கை கூறியே
யொல்கு தேவி யைத்தெ ளிந்தொ ருப்ப டுத்தி நறியதேன்
பில்கு வாளி யிட்ட தூணி பின்னி யாத்தி றுக்கினுன்.

(இ-ள்.) (இந்திரன்) விடைகொடுக்கவும், கைகளைக் கூப்பி வணங்கிப் பிர மலோகத்தைவிட்டு நீங்கிப் பொருந்திய தன்னகரத்தை யடைந்து, பிரமலோகத்தில் நடந்த விருத்தாந்தங்களைக் கூறி, அதனுல் மனம் வருந்துகின்ற இரதிதேவியைத் தெளிவித்துச் சம்மதிக்கச்செய்து, நல்லதேனெழுகுகின்ற புஷ்பபாணங்க ளிட்டிரு க்கின்ற அம்பறாத்தூணியை முதுகிலிறுக்கிக்கட்டினுன்.—எ-று.

சிவபெருமான்மீது போர்செய்து வெல்லுதல் கூடுமோவென்று வருந்தின மையின், 'ஒல்குதேவி' என்றும், மலரம்புகளாகலின், 'நறியதேன் பில்குவாளி' என் றுங் கூறினுர். (௬௧)

கயக்க ணின்ற பூவின் மிக்க காம காண்டங் கன்னல்வில்
லியக்க மான பார வில்லெ டுத்து மொய்ம்பி லேந்தியே
தயக்க முற்று லாய செய்ய தண்ணெ ளன் மாவி ளந்தளிர்
வயக்க டுங்கன் வாள மொன்று மாம ருங்கு வைத்தரோ.

(இ-ள்.) தடாகத்திலுள்ள புஷ்பங்களையும், விற்களிற் சிறந்த காமகாண்ட மென்னும் பெயராயுடைய கரும்புவில்லில் பழக்கமாகிய பெரிய வில்லையெடுத்துத் தோளிலேந்தி, விளங்குகின்ற சிவந்த குளிர்ச்சிபொருந்திய மாந்தளிராகிய வெற்றி யமைந்த கடிவாளத்தைப் பக்கத்தில் வைத்து.—எ-று.

கயக்கணின்ற பூவின்மிக்க காமகாண்டங் கன்னல்வில் லியக்கமான பார வில் என்பதை, 'கயக்கணின்றபூவில்' எனப்பிரித்து, தடாகத்திற் பொருந்திய தாம ரையாகிய மலர்வில் எனவும், 'மிக்க காமகாண்டங் கன்னல்வில்' எனப்பிரித்து, சிறந்த காமகாண்டமென்னும் பெயரையுடைய கரும்புவில் எனவும், 'இயக்கமான பாரவில்' எனப்பிரித்து, வலியமைந்த பெரிய இரும்புவில் எனவும் பொருள் கூறி, இம் மூன்று வில்லும் மன்மதனுக்குரியவெனவும், அவற்றுள், தேவர்கள்மீது மலர்வில்லைக்கொ ண்டு போர்செய்வனென்றும், மானுடர்மீது கரும்புவில்லைக்கொண்டு போர்செய்வ னென்றும், அசுரர்கள்மீது இரும்புவில்லைக்கொண்டு போர்செய்வனென்றும் பொ

ருள்கூறுவாருமுளர். மன்மதனுக்கு வாட்படை தாழம்பூவேயன்றி மாந்தளிரு முண்மையால், 'மாவிளந்தளிர் வயக்கடுங்கண் வாளமொன்றுமா மருங்குவைத்து' என்று கூறினர். காமகாண்டம்=காமன்வில். அன்றி, காமகாண்டம் என்பதற்குக் காமபாணம் எனப் பொருள் கூறுவாரு முளர்.

இதுமுதல் மூன்று பாடலுங் குளகம். (கம)

கோகி லங்க ளான வுங்கு ழாங்கொள் வேலை யானவுங்
காக ளங்கள் முரச மாய்க்க றங்க வோதம் யாவதுஞ்
சீக ரங்க ளாய சைந்து செல்ல மீன கேதன
மாக வும்ப ருலவ வெண்ம திக்கு டைநி ழற்றவே.

(இ-ள்.) குயில்களும், சமுத்திரவர்க்கங்களும், முறையே எக்காளமாகவும், முரசாகவும் முழங்கவும், அலைகள்யாவும் வெண்சாமரைகளாக அசைந்துவரவும், மீனக்கொடி ஆகாயத்தி லுலாவவும் வெள்ளிய சந்திரனாகிய குடை நிழல் செய்யவும்.-எ-று.

மன்மதனுக்குச் சவரி கமுகம்பாளை எனக் கூறுவது முண்டு. (சுரு)

பொருவில் கிள்ளை யென்னு மாக்கள் பூண்ட தென்றல் வையமே
லிரதி யோடு மேறி வேளி ருந்த தொல்லை யுலகினை
யரித கன்று குறிகள் வெய்ய வளவை யின்றி நிகழவே
பரமன் வைகு கயிலை யம்ப ருப்ப தத்தை யணுகினன்.

(இ-ள்.) ஒப்பற்ற கிளியென்று கூறுங் குதிரைகள் கட்டிய தென்றலாகிய தேரின்மீது மன்மதன் இரதிதேவியோடு ஏறித் தான் வசித்திருந்த பழைமையாகிய உலகத்தை அருமையாக நீங்கித் துர்ச்சகுனங்கள் அளவில்லாம லுண்டாகச் சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கயிலாயத் திருமலையை யடைந்தனன்.—எ-று.

மேல் மூன்று பாடல்களாற் கூறியுள்ள மன்மதனுக்குரிய சின்னங்களை.— "தொடையிலஞ்சி மஞ்சளிளஞ் சோலைபடை வீடு-படைமங் கையர்கமுகம் பாளையிடுகவரி-காளாஞ்சி மல்லிகையாங் காரிகையீர் மாரனுக்கு-வாளாமோ லைப்பூவு மால்" எனவும், "ஆலைக் கரும்புசிலை யைங்கணைபூ நாண்சுரும்பு-மாலைக் கிளிபுரவி மாருதந் தேர்-வேலை-கடிமுரசங் கங்குல் களிறுகுயில் காளங்-கொடிமகரந் திங்கள் குடை" எனவும் வரும் புகழேந்திப்புலவர் திருவாக்கா லுணர்க. (சுசு)

கயிலை கண்டு தொழுது தேரி ழிந்து காம வேடனக்
கயலின் வந்த பரிச னத்தை யவணி றுத்தி மாதுடன்
பயிலும் வில்லும் வாளி யும்ப ரித்து வல்லி யத்தினைத்
துயிலு ணர்த்து மானெ னத்து ணிந்து போதன் மேயினன்.

(இ-ள்.) மன்மதனனவன் திருக்கயிலையைத் தரிசித்து வணங்கித் தேரினின்று மிறங்கித் தன்பக்கலில் சூழ்ந்துவந்த பரிசனத்தை அவ்விடத்தில் நிறுத்தி இரதிதேவியோடு தான் பழகுகின்ற வில்லையும் அம்பையுந் தாங்கி வேங்கைப்புலியைத் துயிலெழுப்புகின்ற மானைப்போலத் துணிந்து செல்லத்தொடங்கினன்.—எ-று.(சுஎ)

கூறு லாவு மதிமி லைந்த குழகன் வைகு கயிலைமே
லேறி யேத னது கையி ருந்த கார்மு கம்வளைஇ
மாறி லேவு பூட்டி யங்கண் வைகு புள்ளு மாக்களு
மூறி லாதி ருந்த காம முன்னு வித்தன் முன்னினன்.

(இ-ள்.) அர்த்தசந்திரனையணிந்த சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கயிலாய மலையின்மீதேறித் தனது கையிலிருந்த கரும்புவில்லை வளைத்து மாறுபாடில்லாத அம்பைத் தொடுத்து, அங்கு வசிக்கின்ற பறவைகளும், மிருகங்களும் புணர்ச்சியொழிந்திருந்தகாமத்தை நினைக்கும்வண்ணம் சிந்தித்தான். —எ-று.

அவ்விணைப்பொருள்களாகிய பசுபக்ஷிகளுங்கூடக் காமமற்றிருந்த தென்பார், 'புள்ளுமாக்களு மறிவிலாதிருந்த காமம்' என்று கூறினர். (௬௬)

பொருவில் காம னின்ன தன்மை புந்தி கொண்டு மற்றவண்
விரவு புள்ளின் மீதி னும்வி லங்கின் மீதி னும்மலர்ச்
சரமெ லாம்வி டுப்ப வாதி தனது மந்தி ரத்துமுன்
னருளி னோடி ருந்த நந்தி யடிக ளன்ன கண்டனரா.

(இ-ள்.) ஒப்பற்ற மன்மதனானவன் இவ்வாறு மனத்திற்சிந்தித்து அங்குவசிக்கின்ற பறவைகளின்மீதும் மிருகங்களின்மீதும் புஷ்பபாணங்களனைத்தையுஞ்செலுத்தச் சிவபெருமானது ஆலயத்தின் முதற்றிருவாயிலில் அருளுடனெழுந்தருளியிருந்த திருநந்திதேவர் அதனைப் பார்த்தருளி.—எ-று.

இதுமுதலிரண்டு பாடலுங் குளகம். (௬௭)

கொம்மெ னச்சி னம்பு றிந்து கொடிய பூசன் மதனனார்
தம்மி யற்கை யாமி தும்மெ னாத மென்று நினைவுறா
வும்மெ னத்தெ றித்து ரப்ப வொலிகொள் புள்ளி லங்கின்மேல்
வெம்மை யிற்செ லாது மாரன் விசிகம் விண்ணி னின்றவே.

(இ-ள்.) விரைவாகக் கோபித்து, இது கொடிய போரைச்செய்யும் மன்மதனுடைய செய்கையாகும்; இது உண்மையென்று சிந்தித்து, உம்மென்றதட்ட, மன்மதனுடைய பாணங்கள், ஒலிக்கின்ற பறவைகளின்மேலும் மிருகங்களின்மேலும் வேகமாகச் செல்லாமல் அந்தரத்திலேயே நின்றன.—எ-று.

கொம்மெனல் - விரைவுக்குறிப்பு. மதனனார் என்பது விகுதிமேல்விகுதி பெற்றது. உம் என்பது, அதட்டுதலாகிய ஓரொலிக்குறிப்பு. (௬௮)

நிற்ற லோடு மவ்வி யற்கை நின்று நோக்கி நெடியவேள்
கொற்ற நீடு சூர லொன்று கொண்டு கோபு ரத்தலைத்
தெற்றி மேலி ருந்த நந்தி தேவர் காப்பு மாணையு
முற்று நோக்கி நெடிது யிர்த்து ளந்து ளங்கி விம்மினான்.

(இ-ள்.) பாணங்கள் அந்தரத்தில் நின்றவுடனே, அத்தன்மையை மன்மதன்பார்த்து வெற்றிபொருந்திய வேத்திரப்படையினைக்கையிலேந்திக் கோபுரத்தின்கணுள்ள சித்திரமேடையின்மீதெழுந்தருளி யிருக்கின்ற திருநந்திதேவரது காவலையும் அதிகாரத்தையும்நிதானித்துப்பார்த்துப்பெருமூச்சுவிட்டு மனநடுங்கி விம்மினான்.

சூரல்-பிரம்பு. திருநந்திதேவரது அதட்டுதலால் மலரம்புகளாகாயத்திலசைவற்று நிற்கவும், மன்மதன் அவரது காவலையு மாணையையுஞ் சிந்தித்து வருந்தினனென்க. (௬௯)

விம்மி நந்தி தேவர் முன்வி ரைந்து சென்று தாழ்ந்தெழூஉச்
செம்மை செய்க ருத்த னாய்த்தி கழ்ந்து போற்றெ டுத்தலு
மிம்ம லைக்கண் வந்த தென்னை யெனவ யன்பு ணர்ப்பெலா
மெய்ம்மை யாவு ரைத்த லும்வி னவி யீது ளங்கொள்வான்.

(இ-ள்.) அவ்வாறு விம்முதலடைந்து திருநந்திதேவருக்கு முன்னேவிரைந்து சென்று வணங்கி யெழுந்து, தூய்மையாகிய மனமுடையவனாய் விளங்கித் துதிக்கவும், (திருநந்திதேவர்) நீ இத்திருமலையினிடத்துவந்தது யாதுகாரணமென்று வினவியருள, (அம்மன்மதன்) பிரமனது தந்திரங்களனைத்தையும் உண்மையாக எடுத்துச் சொல்லவும் அதைக்கேட்டருளி இதனைச் சிந்திப்பாராயினர்.—எ-று. (௭௦)

வேத னாதி யான தேவர் விழும நோய கன்றிட
ஏது வால்வி டுத்து ளார்க ளிவனை யீசன் யோகுறும்
போதில் யாவர் வருகி னும்பு காது செய்தி மதனனேல்
சாத லெய்து வாய்வ ரிற்ற டுக்க லென்று வி யம்பினான்.

(இ-ள்.) இம்மன்மதனைப் பிரமன்முதலிய தேவர்கள் தங்கள் துன்பநோய் நீங்குங்காரணமாக அனுப்பியிருக்கிறார்கள்; சிவபெருமான் (சனகாதியர்பொருட்டு) ஞானயோகத்தி லெழுந்தருளியிருக்கும்பொழுது, யார்வரினும் விடாதிருக்கக்கடவை; மன்மதன் இறக்கும்வண்ணம் வருவானாயின் தடைசெய்யாதேயென்று கட்டளையிட்டருளினர்.—எ-று. (எக)

புன்மை யாம்ப சுத்த டிந்து புரையில் வேள்வி யாற்றியே
தொன்மை போலெ ழுப்பு மாறு சுருதி சொற்ற வாறுபோல்
மன்ம தன்ற னைப்ப டுத்து மாதை வேட்டு மற்றுதன்
பின்மு றைக்க ணெங்க ளெம்பி ரானி னைந்த னன்கொலாம்.

(இ-ள்.) அற்பமாகிய பசுவைக்கொன்று குற்றமற்ற யாகத்தைச்செய்து முன்போலவே (அப்பசுவை) எழுப்பும்வண்ணம் வேதங்கூறியவாறுபோல எமது சிவபெருமான் மன்மதனையழித்து உமாதேவியாரைத் திருமணம்புரிந்து: பின்னர்முறைப்படியெழுப்பும்வண்ணம் திருவுள்ளங்கொண்டனர்போலும்.—எ-று.

மன்மதனை யெரித்தல் பசுவைத் தடிதலுக்கும் சிவபெருமான் திருமணம் புரிதல் வேள்வி செய்தலுக்கும், மீண்டும் அம் மன்மதனை யெழுப்புதல் மீளவு மப்பசுவை யுயிர்ப்பித்தெழுப்புதலுக்கும் உவமித்தவாறு காண்க. (எஉ)

ஆகை யாலி தருள தேயி வன்வ ரத்து மாணையென்
றோகை யாலு ணர்ந்து வேளை நோக்கி யும்ப ராகுலம்
போகு மாறி யற்றல் செய்த பொருவி லாத கருணைசே
ரேக நாய கன்றன் முன்ன ரேகல் வேண்டு மோவென்றான்.

(இ-ள்.) ஆகையால் இது சிவபெருமான் திருவருளேயாம்; இம்மன்மதனது வருகையும் சிவபெருமான் கட்டளையேயென்று விருப்பத்துட னுணர்ந்து, மன்மதனைப்பார்த்துத் தேவர்களது துன்பநீங்கும்வண்ணஞ்செய்தருளிய ஒப்பற்ற கிருபையினையுடைய முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானுடைய திருமுன்னே நீசெல்ல வேண்டுமோவென்று வினவியருளினர்.—எ-று. (எங)

நந்தி தேவ னினைய வாறு நவில வேயு ணர்ந்துவே
ளெந்தை கேட்டி யாலி தொன்றெ னக்கொ ரீறு குறுகினு
மந்தி வேணி யண்ணல் முன்ன மணுகு மாற மைந்திவண்
வந்த னன்ன தற்கி யைந்த வகைமை நல்கு வாயென.

(இ-ள்.) திருநந்திதேவ ரிவ்வாறு வினவியருளலும், மன்மதன் அதனைக்கேட்டு, எம்பெருமானே! இஃதொன்றைக் கேட்பீராக; அடியேனுக்கோரழிவு நேர்ந்தாலும் செவ்வானம்போலுஞ் சிவந்த சடைமுடியையுடைய சிவபெருமான் திருமுன்னேயடையும்வண்ணந் துணிந்து இவ்விடத்திற்கு வந்திருக்கின்றேன்; அதற்கேற்ற தன்மையைச் செய்வீராகவென்று பிரார்த்திக்க.—எ-று.

நான் சிவபெருமான்மீது போர்செய்யத் துணிந்தே வந்திருக்கின்றேனென்று கூறினனென்பார், 'அந்தி வேணி யண்ணல் முன்ன மணுகு மாற மைந்திவண் வந்தனன்' என்றார்.

இதுமுதலிரண்டு பாடலுங் குளகம். (எச)

இகலு மன்பு மிறையு மின்றி யெவ்வு யிர்க்கு முள்ளதோர்
புகுதி நாடி முறையி னைப்பு ரிந்து சேர்ப வர்க்குமேற்
றகுதி செய்து கருணை கூர்ச யம்பு முன்பு சார்திநீயன்
மிகுதி கொண்ட மேலை வாய்தன் மேவி யேகு கென்றனன்.

(இ-ள்.) பகையுமுறவுஞ் சிறிதுமில்லாமல் சர்வான்மாக்க ளிடத்திலுமமைந் துள்ள வினைப்போகங்களையுணர்ந்து சிகைஷரக்ஷைகளைச்செய்து தம்மையடைந்தவர்க ளுக்கு மேலான முத்தியைக்கொடுத்துக் கிருபைசெய்கின்ற சிவபெருமான் திருமுன் னேயடையவேண்டின், சிறந்தமேற்குத்திருவாயிலின்வழியேசெல்லக்கடவையென்று கூறியருளினார்—எ-று. (எ௫)

என்று ளங்க ரங்கு வித்தி றைஞ்சி மார னேர்புறீஇ
நன்றி லங்கு வேத்தி ரக்கை நந்தி தேவர் விடைதரச்
சென்று மேலை வாயில் சார்ந்து தேவ தேவ னீற்றழற்
குன்ற மென்ன மோன மோடி ருந்த வெல்லை குறுகினான்.

(இ-ள்.) இவ்வாறு கூறியருளவும், மன்மதன் கைகுவித்து வணங்கி யெழு ந்து இனிதுவிளங்குகின்ற பொற்பிரம்பேந்திய திருக்கரத்தினையுடைய திருநந்திதே வர் விடைகொடுக்கப்போய் மேற்றிருவாயிலை யடைந்து, தேவர்கள் நாயகராகிய சிவ பெருமான் நீறுபூத்த நெருப்புமலையைப்போல மௌனத்துடனே முந்தி யிருக்கின்ற இடத்தை யடைந்தனன் —எ-று.

ஏர்பு - எழுச்சி. சிவபெருமானது சிவந்த திருமேனிமேல் திருவெண்ணீறு விளங்குதலின், தேவதேவனீற்றழற்குன்றமென்னமோனமோடிருந்த' என்றார். (எசு)

வே று.

ஒருதனிச் சிம்புள் வேந்த னுறைந்தது கண்ட சியக்
குருளையி னமலன் றன்னைக் கோலமால் புதல்வன் காணூ
வெருவரு முளத்த னாகி வியர்த்தமெய் பனியா வுட்கிப்
பருவர லுழந்து கொண்ட படையொடுங் கடிதில் வீழ்ந்தான்.

(இ-ள்.) ஒப்பற்ற சரபராஜ னிருத்தலைக்கண்ட சிங்கக்குட்டியைப்போல, சிவபெருமானை அழகியதிருமாலின் புதல்வனாகிய மன்மதன்பார்த்து அச்சமுற்ற மன முடையவனாய் வியர்த்து உடல் நடுக்கங்கொண்டு குன்றித் துன்பமுற்றுத் தன் கையி லேந்திய ஆயுதங்களுடன் விரைவில் வீழ்ந்தனன் —எ-று.

சிங்கம் மிருகேந்திர னென்னும் பெயருடையதாய்ப் பல மிருகங்களுக்குத் தலைமையாயிருப்பினும் சரபப்பட்சிக்குமுன்னே தனது வலி குன்றி யழியுமாறுபோல, மன்மதன் தனது பாணத்தால் யாவரையும் வெற்றிபெறினும் சிவபெருமான் திருமு ன்னே வலிகுன்றி யழுங்கி வீழ்ந்தனனென்க. (எஎ)

எழுதரு மதன மேக மிறைவனைக் கண்டே யஞ்சி
விழியிருள் மூடக் கோல வில்லிட்டு வியர்ப்பின் வாரி
மழைபட விடியார்ப் பெய்த மார்புமற் றதுவிழ் கின்ற
தொழின்முறை புதரங் காட்டத் துளங்கிவீழ்ந் திட்ட தன்றே.

(இ-ள்.) எழுதுதற்கரிய (அழகினையுடைய) மன்மதனாகிய மேகமானது சிவபெருமானைக்கண்டு பயந்து கண்ணிருள்மூடவும், அழகிய வில்லையிட்டு வியர்வை யாகிய நீர்மழைபெய்யவும், மார்பானது இடியினரவாரத்தைக் காட்டவும், அவ்விடி வீழ்கின்றதொழில்முறைமையை அக்கயிலைமலைகாட்ட நடுங்கிவிழுந்தது.—எ-று.

மேகம் மழைபெய்ய வெழுங்கால் இருள் மூடுதலும், இந்திரவில்விடுதலும், மழைபெய்தலும், இடித்தலும், மலையில் வீழ்தலுஞ் செய்யுமாறுபோல, மன்மதனும் தனது கண்ணிருள்மூடிக் கரும்புவில்லைக் கீழேவிட்டு வியர்வையாகிய மழையைப் பொழிந்து மார்பிடிக்கப்பெற்று மலையின்மீது விழுந்தமையின், அம்மன்மதனை மேகத் தோடுவமித்துக் கூறினர். பூதரம்=மலை. அது புதரம் எனக் குறுகியது. (எஅ)

அஞ்சிவிழ் குற்ற மார னறிவிலா தவச மாகத்
துஞ்சினன் கொல்லோ வென்றுத் துயருழந் தெடுத்துத் தேவி
கஞ்சநேர் கரத்திற் றாங்கிக் கடிவகை யுய்த்துத் தேற்ற
நெஞ்சமே லுணர்ச்சி கூட வினையவை நினைந்து நைவான்.

(இ-ள்.) பயந்துவிழுந்த மன்மதன் அறிவுகெட்டு மூர்ச்சையாகவும், இரதி தேவியானவள் இவனிறந்தனனோவென்று வருந்தியெடுத்துத் தாமரைமலர்போன்ற கைகளில் தாங்கிக்கொண்டு மணம்பொருந்திய பலவகை உபசாரங்களைச்செய்து தெளிவிக்கவும், அவன் மனதிலுணர்வு தோன்ற இவற்றைநினைந்து வருந்துகின்றான்.

கொல் ஓ என்பன - ஐயப்பொருளில் வந்தன. கடி-மணம். (எகூ)

முறுவலி னெயின்மூன் றட்ட முதல்வனைப் பொருதி யென்றே
நறைமல ரயனு மேனைத் தேவரு நாகர் கோனு
முறுதுய ரகல விங்க னுய்த்தனர் வினையேற் கின்னே
யிறுதிவந் தணுகிற் றுகொ லிதற்குமோ ரைய முண்டோ.

(இ-ள்.) புன்சிரிப்பினால் முப்புரங்களை யெரித்தருளிய முழுமுதற் கடவுளாகிய சிவபெருமான்மீது போர்செய்யக் கடவையென்று தேன்பொருந்திய கமலாசனனாகிய பிரமனும், மற்றைத்தேவர்களும், தேவேந்திரனும் தாங்களடைந்த துன்ப நீங்கும்படி இங்கு என்னை யனுப்பினார்கள். பாவியாகிய எனக்கு இப்பொழுதே மரணம் வந்து சம்பவித்ததுபோலும், இதற்குமொரு சந்தேகமுண்டோ?—எ-று. (அ0)

எண்டகு குணத்தின் மேலா மிறையவ னிருந்த வண்ணங்
கண்டலும் வெருவி யாவி காண்கில னவனை யென்கைக்
கொண்டதோர் கணைகள் வாகை கொள்ளுமோ வினைய பான்மை
யண்டரு மயனும் யாரு மறிகிலர் போலு மன்றே.

(இ-ள்.) தகுதியாகிய அஷ்டகுணங்களிற் சிறந்தவராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் தன்மையைப் பார்த்தவுடனே பயந்து எனதுயிரைக் காணாதவனாயினேன். அவ்வெம்பெருமானை எனது கையிலுள்ள அம்புகள் வெற்றிகொள்ளுமோ? இத்தன்மையைத் தேவர்களும் பிரமனும் மற்றையர்களும் அறியார்போலும்.—எ-று.

எண்டகுகுணங்களாவன:—தன்வயத்தனாதல், தூயவுடம்பினனாதல், இயற்கையுணர்வினனாதல், முற்றுமுணர்தல், இயல்பாகவே பாசங்களினீங்குதல், பேரருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, வரம்பிலின்பமுடைமை என்பன. இவற்றை,— "முடிவிலாற்றலை தன்வயத்தினை முற்றுணர்ச்சியை பேருருண் - மடிவிலாட்சியை தூய மேனியை மற்றியற்கையுணர்ச்சியை - படியிலாவியல் பாகநீங்கிய பாசநோயை வரம்பிலின் - புடையையுன்னடி யேங்களென்று முனக்கடைக்கல மையனே" என்னுங் காஞ்சிப்புராணத்தானு முணர்க. (அக)

தாக்கினல் வலிபெற் றுள்ள மருத்தின்முன் றனித்த தீபம்
போக்கினு னிற்ப துண்டோ வனையது போலத் தேவர்
வாக்கினுன் மனத்தா லெட்டா வள்ளன்மு னுய்த்தா ரன்னு
னோக்கினு லினிச்சில் போதி னுண்பொடி யாவன் போலாம்.

(இ-ள்.) வீசுந்தன்மையில் வலிபெற்றுள்ள வாயுவினெதிரில் ஒரு விளக்கைக் கொண்டுபோனால் அது அணையாமல் நிற்குமோ? அதுபோல, தேவர்கள் மனோவாசாமகோசரராயுள்ள சிவபெருமானுக்கு முன்னே என்னை யனுப்பினார்கள். அவ்வெம்பெருமானது பார்வையினால் இனிச் சிறுபொழுதுக்குள்ளே நுண்ணிய சாம்பலாவேன்போலும்.—எ-று.

சாக்கு - முதனிலைத்தொழிற்பெயர். மனோவாசாமகோசர ராதலின், 'வாக்கினோடு மனத்தா லெட்டாவள்ளல்' என்றார். இதனை—"மறையினாலயனான்மாலான் மனத்தினால் வாக்கான்மற்றும் - குறைவிலா வளவையாலுங் கூறொணாதாகி நின்ற- விறைவனார் கமலபாத மின்றியானறியும்படி - நிறையினார் குணத்தோர்க்கெல்லா நகையின்ன நிறுத்துமன்றே" என்னுஞ் சிவஞானசித்தியாரானு முணர்க.

ஒரு சிறுதீபம் பெருங்காற்றின்முன் அவியாது நிற்குமாயின், யான் சிவபெருமான் முன்னே நின்று போர்செய்து வெற்றிபெறுவேனென்று கூறினனென்க. ()

ஏழுற வுலகை யெல்லா மீறுசெய் முதல்வன் றன்னைப்
பூமலர் கொண்டு யானே பொருகின்றே னைகையீ தன்றே
யாமிது விதியின் செய்கை யதனையார் கடக்க வல்லார்
தாமரை முதல்வர்க் கேனுந் தள்ளருந் தகைய தன்றே.

(இ-ள்.) உலகங்களனைத்துந் துன்பமுறும்படி சங்கரிக்கின்ற முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமானைப் புஷ்பபாணத்தைக்கொண்டு யானோ? போர்செய்கின்றவன்; இதுநகைப்பல்லவோ, இது ஊழ்வலியின் சுபாவமேயாம், அதனைக்கடக்க வல்லவர்கள் யாவர்; அது தாமரைமலரிலுள்ள பிரமனுக்காயினும் நீக்குதற்கரிய தன்மை யுடையதல்லவோ?—எ-று.

சர்வசங்காரகாலத்தில் சர்வலோகங்களையு மழிக்கும் பேராற்றலையுடைய பெருமான் முன்னேசென்று யான் வெற்றிபெறுந் தரத்தனல்லே னென்றுகூறினனென்பதுகருத்து விதியின்செய்கை யதனை யார் கடக்கவல்லார். என்பதனை:-"ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று-சூழினுந் தான்முந்துறும்" என்னுந் திருக்குறளானு முணர்க. (௮௫)

ஈங்கிவை யமலன் சூழ்ச்சி யாவதோ முடிவ தோரேன்
ஆங்கியான் கிடத்த லொல்லா துன்னினை யெழுந்து வில்லும்
வாங்கினன் சரமும் பூட்டி வல்லவா றிழைப்ப னையன்
பாங்குற நின்று மேலே பட்டவா படுக வென்றான்.

(இ-ள்.) இவ்விடத்து இவை சிவபெருமானது தந்திரங்கள் யாதாய்முடியுமோ? அறியேன்; யானுறங்கியிருத்தல் கூடாது. விரைவிலெழுந்து வில்லை வளைத்துப் பாணத்தைப்பூட்டிச் சிவபெருமா னருகினின்று என்னாற்கூடியவாறு (பாணப்பிரயோகம்) செய்கின்றேன். வந்ததுவரட்டுமென்று கூறினான்.—எ-று.

சிவபெருமான் திருவிளையாடல் காரணமாக ஓர்கால் நாம் வெற்றிபெறச் செய்யவுங் கூடுமாதலால், அவரது தந்திரம் எவ்வாறு முடியுமோவென்று சிந்தித்தனனென்பார், 'ஈங்கிவை யமலன்செய்கை யாவதோ முடிவதோரேன்' என்று கூறினர். வாங்கினன்-முற்றெச்சம். 'பட்டவாபடுக' என்பதற்கு, பாய்கின்றவாறுபாய்க. எனப் பொருள்கூறலுமொன்று. (௮௬)

இன்னன பலவு முன்னி யெழுந்துமா மதவே ளிட்ட
தனுவினை யெடுத்து வாங்கித் தண்மலர் விசிகம் பூட்டி

மனைவிதன் னகலாள் செல்ல மதிக்குறை தவழ்ந்த சென்னிப்
புனிதனை தொருசார் போகிப் பொருவகை முயன்று நின்றான்.

(இ-ள்.) இவ்வாறு பலவாக நினைத்துச் சிறந்த மன்மதனெழுந்து கிடந்தபோட்ட வில்லையெடுத்து வளைத்துக் குளிர்ந்த புஷ்பபாணத்தைப்பூட்டி இரதிதேவி தன்னை பிரியாமல் தொடர்ந்துவர இளம்பிறை தவழுந் திருமுடியினையுடைய சிவபெருமானுக்கு ஒருபுறத்திற்சென்று போர்செய்யும்படி முயற்சித்து நின்றான்.—எ-று. (அ௫)

மாரவே ளிவ்வி்ற்ப மனோவதி நகரின் மேய
வாரண முதல்வன் றன்னை யமரர்கோன் றொழுது நோக்கிக்
காருறழ் கண்டன் றன்பாற் காமனை விடுத்தி யன்னான்
போரிய லுணர்வா னங்கட் போதரல் வேண்டு மென்றான்.

(இ-ள்.) மன்மதன் இங்கு இவ்வாறு நிற்க, மனோவதிப்பட்டணத்திலிருக்கின்ற பிரமனைத் தேவேந்திரன் வணங்கிப் பார்த்துக் காளகண்டராகிய சிவபெருமானிடத்து மன்மதனைச் செலுத்தினீர். அம்மன்மதன் போர்செய்யுந் தன்மையை யறியும்படி நாம் அங்குச் செல்லவேண்டுமென்று கூறினான்.—எ-று. (அ௬)

சதமக னினைய கூறத் தண்மலர்க் கடவு ளோராக்
கதுமென வெழுந்து வானோர் கணத்துட னனையன் போற்றப்
பொதிதரு கயிலை யந்தண் பொருப்பின்மே லொருசார் போகி
மதனியல் தெரிந்து முக்கண் வள்ளலை வழுத்தி நின்றார்.

(இ-ள்.) இந்திரன் இவ்வாறு கூறவும், குளிர்ந்த கமலாசனனாகிய பிரமன் அதற்குடன்பட்டு விரைந்தெழுந்து தேவர்கூட்டத்துடன் அவ்விந்திரன் துதிக்கச் சிறப்புப்பொருந்திய குளிர்ந்த திருக்கயிலைமலையி னொருபுறத்திற்சென்று மன்மதனது தன்மையை யுணர்ந்து மூன்றுகண்களையுடைய சிவபெருமானைத் துதித்து நின்றார்கள்.—எ-று.

திருக்கயிலைத் திருக்கோயிலின் நேரேசெல்லின், முன்னர் திருநந்திதேவரால் மன்மதன் தடையுற்றவாறுபோலத் தடையுறுவராகலின், ஒருபக்கத்திற் சென்றன ரென்பார், ' ஒரு சார்போகி ' என்றார். (அ௭)

எறிதரு கணிச்சிச் செங்கை யீசன்மே லிலக்க நாடுங்
குறியினர் போல நின்ற கொடுந்தொழின் மாரன் றுஞ்சு
நெறியினர்க் கச்ச முண்டோ நினைத்தது முடிப்ப னென்னா
நறுமலர் வாளி யைந்து நாதன்மேற் செல்ல விட்டான்.

(இ-ள்.) வீசுதற்குரிய மழுப்படையேந்திய சிவந்த திருக்கரத்தையுடைய சிவபெருமான்மீது இலக்குப்பார்க்கின்ற குறிப்பினர்களைப்போல நின்ற கொடிய தொழிலையுடைய மன்மதன், இறக்கத்துணிந்த முறைமையினையுடையவர்களுக்குப் பயமுண்டோ? (ஆதலால்) நினைத்ததை முடிப்பேனென்றுகூறி நறுமணங்கமழும் புஷ்பபாணங்களைந்தையும் சிவபெருமான்மீது பாயும்படி பிரயோகித்தான்.—எ-று. (அ௮)

விட்டவெம் பகழி யைந்தும் வியத்தகு விமலன் மீது
பட்டலுஞ் சிறிதே வேளைப் பார்த்தன னார்த்த லோடுங்
கட்டழல் பொதிந்த நெற்றிக் கண்ணது கடிதே காமற்
சுட்டது கயிலை முற்றுஞ் சூழ்புகை பரவிற் றன்றே.

(இ-ள்.) மன்மதன் செலுத்திய கொடிய புஷ்பபாணங்களைந்தும் புகழத்தக்க சிவபெருமான்மீது படுதலும், உடனே மன்மதனைக் கொஞ்சம் பார்த்தருளினார்.

அவ்வாறு பார்த்தவுடனே மிக்க அக்கினி பொருந்திய நெற்றிக்கண்ணானது விரைந்து அம்மன்மதனையெரித்தது; அத்திருக்கயிலை முழுதுஞ் சூழ்ந்த புகை பரவியது.—எ-று.

சனகாதியர்பொருட்டு யோகாசாரியரா யெழுந்தருளியுள்ள பெருமானென்பார், 'வியத்தருவிமலன்' என்றும், சிவபெருமான் தமது நுதல்விழியைமுற்றுந் திறப்பின், அம்மன்மதனையன்றிச் சர்வலோகங்களுஞ் சாம்பராகவுடனே யெரிந்தழியுமாதலி னவ்வாறு திறவாமல் சிறிதேதிறந்து பார்த்தனரென்பார், 'சிறிதே வேளைப்பார்த்தனன்' என்றுங் கூறினார். (௮௯)

ஆலையஞ் சிலைவே ளாக மழல்படக் கயிலை யின்க
ணலைவெம் புகையுந் தீயு மெழுதரு மியற்கை நாடின்
மாலயன் முதலோர் யாரு மதித்துழி விரைந்து பாலின்
வேலையி னடுவெ ழிய விடமெழுந் தன்மை யம்மா.

(இ-ள்.) அழகிய கரும்பு வில்லையுடைய மன்மதனது தேகமானது எரிந்து போகவும், திருக்கயிலையில் மிக்கவெவ்விய புகையுந் தீயுந்தோன்றிய தன்மையையாராயுமிடத்தில், திருமால் பிரமன் முதலிய யாவருங் கடைந்தபொழுது விரைவாகப் பாற்கடலின் நடுவில் கொடிய விஷந்தோன்றிய தன்மையை யொத்தது.—எ-று.

இதனுள், திருக்கயிலையைப் பாற்கடலாகவும், அதிற்றோன்றிய புகையை அக்கடலிற்றோன்றிய ஆலாகலவிஷமாகவும், அக்கினியை அவ்விஷச்சுவாலையாகவு முவமித்தவாறு காண்க. (௯0)

செறிந்ததீப் புகையின் மாலை செல்லலுங் குணபால் வாய்த
லுறைந்ததோர் நந்தி தேவ னெல்லையி லதனைப் பாரா
விறந்தபா டாயி னன்கொ லேகிய மதன னென்று
வறிந்தரோ வடைந்தார்க் கோதி யொருசெய லறைய லுற்றான்.

(இ-ள்.) நெருங்கிய தீப்புகையி னொழுங்குகள் மேலெழுந்துசெல்லவும் கிழக்குத்திருவாயிலில் காவல்செய்திருந்த திருநந்திதேவர் விரைவில் அதனைப்பார்த்தருளி, சென்ற மன்மதன் இறந்தழிந்தானென்று அறிந்து அங்குவந்தபிரமன் முதலியவர்களுக்குச் சொல்லிப் பின்னொருசெய்கையைக் கூறுகின்றார்.—எ-று.

தீப்புகை வரிசைவரிசையாகப் பரவிச் செல்லுதலின், 'செறிந்த தீப்புகையின் மாலை' என்றார். (௯௧)

நன்னிய வுணர்வின் மிக்கீர் நமக்கிது புகல்வ னெங்கோன்
கண்ணுத லுமிழ்ந்த செந்தீக் காமனைப் பொடித்த தன்று
வண்ணலை யெய்வ னென்று வனையவன் றுணிவிற் கூறித்
துன்னென வீண்டு வந்த செயற்கையே சுட்ட போதும்.

(இ-ள்.) நன்னறிவிற் சிறந்த தேவர்களே! யான் உங்களுக்கிதனைச் சொல்லுகின்றேன். சிவபெருமானது நெற்றிக்கண்ணினின்றும் வெளிப்பட்ட நெருப்பானது மன்மதனைச் சுட்டதன்று; சிவபெருமான்மீது (பாணம்) விடுகின்றேனென்று அவன் துணிவோடுகூறித் திடமொன்று இங்குவந்தசெய்கையே அவனைச்சுட்டுவிட்டது.

இன்னினி மகிழ்நன் றுஞ்சு மியற்கையை யிரதி நாடி
வன்னிபெய் யலங்கல் போலாய் வயிறலைத் திரங்கி யெங்கோன்
றன்னைவந் திரப்பவேளைத் தருகுவன் காண்டி ரந்த
முன்னவ னனுக்கட் காபமுறை புரியருளா லென்றான்.

(இ-ள்.) இனிமேல் தன்கணவனிறந்த செய்கையை இரதியறிந்து நெருப்பிலிட்ட பூமாலையைப்போன்று வயிற்றிலடித்துக்கொண்டு புலம்பி எமது சிவபெரு

மானை யடைந்து பிரார்த்திக்க, அவ்வெம்பெருமான் ஆன்மாக்களுக்குத்தக்க முறைமையைச்செய்கின்ற திருவருளால்(முன்போலவே) அம்மன்மதனையெழுப்பித் தந்தருளுவர் பாருங்களென்று கூறியருளினார்.—எ-று. (கூக)

ஐந்தொகை யாற்றின் மாடே யமலனை நினைந்து நோற்ற
நந்தியந் தேவ னின்ன நவிற்றலு மவற்சூழ் கின்ற
வந்தமில் கணத்தோர் கேளா வகிலமுய் பொருட்டா லெங்கோன்
புந்திகொ ளருளின் செய்கை போற்றெடுத் தனரா யுற்றார்.

(இ-ள்.) திருவையாறு என்னுந் திருப்பதியில் சிவபெருமானைச் சிந்தித்துத் தவஞ்செய்தருளிய திருநந்திதேவர் இவ்வார்த்தைகளைக் கூறவும், அவரைச் சூழ்ந்திருந்த அளவற்ற சிவகணங்கள் கேட்டு உலகமுய்யும்பொருட்டு எமது சிவபெருமான் திருவுள்ளத்திற் கொண்டுள்ள திருவருளின் செய்கையைத் துதித்துக்கொண்டிருந்தார்கள்.—எ-று.

ஐந்தொகை யாற்றின்மாடே யமலனை நினைந்துநோற்ற - நந்தியந்தேவன், என்பதன்வரலாற்றை முன்னர்க்காண்க. (கச)

வாவலங் கிள்ளை மான்றேர் மதன்புரி வினையா லன்னான்
வேவரப் புணர்த்து நோக்கி மிகைபடா தவன்சா ரான
தேவியை முடிக்கு மாற்றல் செய்தில ரிகல்பற் றின்றி
மூவரை விடுத்துத் தொன்னாள் முப்புரம் பொடித்த முன்னோன்.

(இ-ள்.) வெறுப்பு விருப்பின்றி முற்காலத்தில் மூவரைநீக்கி முப்புரத்தையெரித்தருளிய சிவபெருமான், தாவுகின்ற அழகிய கிளிகளாகிய குதிரைபூட்டிய தேரினையுடைய மன்மதன் செய்த கொடுஞ்செய்கையினால் அவன் எரியும்படி பொருந்தப்பார்த்தருளி, குற்றஞ்செய்யாது அவனருகிலிருந்த இரதியையழிக்குந் திறத்தைச் செய்தருளினாரில்லை.—எ-று.

மூவராவர்,—தாரகாக்ஷன், கமலாக்ஷன், வித்துன்மாலி யென்பவர்கள். இவர்கள் பிழைத்துய்ந்தன ரென்பதனை:—எண்ணுடை மூவரிராக்கதர்க ளெரிபிழைத்துக்- கண்ணுதலெந்தை கடைத்தலைமுனின்றதற்பி - னெண்ணிலியிந்திர ரெத்தனையோ பிரமர்களு - மண்மிசைமால்பலர் மாண்டனர்காண்டோணோக்கம்" என்னுந் திருவாசகத் திருமுறையானு முணர்க. (கரு)

கண்ணழல் சுடுத லோடுங் காமவேள் யாக்கை முற்றுஞ்
சுண்ணம தாகி விழத் துஞ்சினன் போய பின்னை
யண்ணலம் பகவன் றொல்லை யமைதியி னிருந்தா னெல்லா
மெண்ணிநின் றியற்று மெங்கோற் கினையதோ வரிது மாதோ.

(இ-ள்.) நெற்றிக் கண்ணிலுள்ள அக்கினியானது எரித்தவுடன், மன்மதன் தேகமுழுதும் நீறாகி வீழ்ந்திறந்த பின்பு, மேன்மைபொருந்திய சிவபெருமான் பழைய நிலைமையிருந்தனர்; எல்லாப் பொருள்களையும் நினைத்துச் செய்யவல்ல எமது சிவபெருமானுக்கு இஃது ஓரருமையோ?—எ-று. (கசு)

பாடுறு கணவன்செய்கை பார்த்தலு மிரதி யுள்ளங்
கூடின துயரம் விந்த கொண்டதொல் லுணர்ச்சி கண்ணி
ரோடின வியர்த்த மெய்முக் குயிர்த்தன வொடுங்கிற் றாவி
விடின ளிவளு மென்ன விரைந்துகிழ்த் தலத்தின் வீழ்ந்தாள்.

(இ-ள்.) இரதியானவள் இறந்த தன்கணவனது செய்கையைப் பார்த்தவுடன் தன்மனதில் துன்பநேர்ந்தன; தானடைந்திருந்த முன்னுணர்வுகெட்டன;

கண்ணீரொழுகின ; தேகம் வியர்த்தது; மூக்குப் பெருமூச்சுவிட்டன ; பிராணனொடுங்கியது ; இவளும் இறந்தனளென்று சொல்லும்படி விரைந்து கீழேவிழுந்தனள்.

மன்மதனிறக்கக்கண்ட இரதியானவள் துன்புற்றுச் சோர்ந்து வீழ்தலின், உணர்ச்சிமாறுதல் முதலிய குணங்களையடைந்தன ளென்க. (கஎ)

சுரிதரு குடிஞை யாற்றிற் சுழிதலைப் பட்ட மான்போற்
பருவரல் வாரி நாப்பட் படிந்துபற் றின்றிச் சோரு
மிரதிசில் பொழுதிற் பின்ன ரிறந்தவொல் லுணர்வு தன்பால்
வருதலு மடித்துச் செங்கை வயிறலைத் திரங்க லுற்றாள்.

(இ-ள்.) சுரிந்தோடுகின்ற ஆற்றிலுள்ள நீர்ச்சுழியி லகப்பட்ட மானைப் போலத் துன்பக்கடலில் மூழ்கி ஆதரவின்றி வருந்துகின்ற இரதியானவள் கொஞ்ச நேரத்திற்குள்ளே அழிந்த முன்னுணர்ச்சி தன்னிடத்துவரவும் சிவந்த கையை மடித்து வயிற்றிலடித்துக்கொண்டு புலம்பத்தொடங்கினாள்.—எ-று.

குடிஞையாறு-இருபெயரொட்டு. ஆற்றுச்சுழலி லகப்பட்ட மான் தன்னைப் பாதுகாக்க வகையறியாது வருந்து மாறுபோல, இரதியும் தன்கணவனைப்பெறுதற்கு வகையறியாது வருந்தினளென்க. (கஅ)

வேறு.

செம்பதுமை திருக்குமரா தமியேனுக் காருயிரே திருமான் மைந்தா
சம்பரனுக் கொருபகைவா கன்னல்வரிச் சிலைபிடித்த தடக்கை வீரா
வம்பவளக் குன்றனைய சிவன்விழியால் வெந்துடல மழிவுற் றாயே
யும்பர்கடம் விழியெல்லா முறங்கிற்றோ வயனாரு முவப்புற் றாரோ.

(இ-ள்.) செந்தாமரைமலரில் வசிக்குந் திருமகளது அழகிய புத்திரனே! அடியாளுக்கு அரிய உயிர்போன்றவனே! திருமாலினது குமாரனே! சம்பராசுரனுக்குப் பகைவனே! கரும்பாகிய வரிந்தவில்லைப் பிடித்த பெரிய கையினையுடைய வீரனே! அழகிய பவளமலைபோன்ற சிவபெருமானது திருவிழியால் உடம்புவெந்தழிந்தனையே! (இப்போது) தேவர்களது கண்களனைத்தும் உறக்கங்கொண்டனவோ? பிரமதேவரும் மகிழ்வடைந்தனரோ?—எ-று.

சம்பரனென்னு மசுரனையழித்துச் சம்பராரியெனப் பெயர்பெற்றவனாகலின், 'சம்பரனுக் கொருபகைவா' என்றுகூறினர். இதனை—"நம்பிகருப்புவில்நல் விசைபாடுக் - தும்பிகொளுணின் வளைத்தெதிர்தோன்றி - யம்பெனமென்மல ராந் தும்விடுத்துச் - சம்பரனுயி ரடித்தனனன்றே" எனவருங் கூர்மபுராணத்தானு முணர்க. நீ இவ்வாறு மடிந்தது தேவர்களுக்கும் பிரமனுக்குஞ் சம்மதமாயிற்றோவென்று வருந்தினளென்பார், 'உம்பர்கடம் விழியெல்லா முறங்கிற்றோ வயனாரு முவப்புற் றாரோ' என்று கூறினர். (கக)

முன்னாளிற் புரமூன்று மட்டவன்மேற் பொரப்போதன் முறையோ வென்று
சொன்னாலுங் கேட்டிலையே யமரர்பணி புரிவதுவே துணிந்திட் டாயே
யுன்னாகம் பொடியாகிப் போயினதே யிதுகண்டு முய்வா ருண்டோ
வென்னாவி யாகியநீ யிறந்தபின்னும் யான்றனியே யிருப்ப தேயோ.

(இ-ள்.) முற்காலத்தில் திரிபுரங்களையு மெரித்தருளிய சிவபெருமான்மீது போர்செய்யச் செல்லுதல் தகுதியோவென்று (யான்) சொல்லியுங் கேட்கவில்லையே, தேவர்களது வேலைச்செய்வதற்கே துணிவுகொண்டனையே, உனதுதேகம் நீறாய் எரி

ந்துபோயிற்றே, இதனைப் பார்த்தும் பிழைப்பவர்களுண்டோ ? என்னுயிராகிய நீ இறந்தபின்பும் யான் தனியே யிருப்பது தகுதியோ ?—எ-று. (௪௦௧)

*மாறுகப் பரமன்விழி நின்றாற்ற லிலதாக மற்றுன் மெய்யு*
*நீறாக வின்றெல்லா நெருப்பாகக் கவலை விண்ணோர் நெஞ்சத் தாக*
*வாறாத பெருந்துயர மெனக்காக வெங்கொளித்தா யருவா யேனுங்*
*கூறாயோ வறிதிருந்தா யென்கணவா யான்செய்த குறையுண் டோதான்.*

(இ-ள்.) நினக்குச் சிவபெருமான் விழியானது பகையாகவும், (உடனே) உனது வல்லமை கெடவும், உன்னுடம்பு நீறாகவும், இம்மலைமுழுதும் நெருப்பாகவும், தேவர்கள் மனதில் வருத்தமுண்டாகவும், எனக்கு நீங்காத பெரிய துன்பமுண்டாகவுஞ் (செய்து) நீ எங்கேயொளித்தனை; அருபியாக நின்றேனுஞ் சொல்லாயோ ? என்னுயகனே ! சும்மாவிருக்கின்றனையே, யான் செய்த குறை யேதேனுமுண்டோ ?

*உம்பர்கடம் பாலேயோ விந்திரனார் பாலேயோ வுன்னை யுய்த்த*
*செம்பதுமத் திசைமுகத்தோன் பாலேயோ வரன்யோகச் சிதைப்பனென்று*
*விம்பரிடை வல்விரைந்து வந்திடுநின் பாலேயோ வீசன் கண்ணால்*
*வெம்பொடியாய் நீயிறந்த விப்பழிதா னெவர்பாலின் மேவிற் றையோ.*

(இ-ள்.) சிவபெருமானது நேத்திரத்தினால் நீ நீறாக எரிந்திறந்த இந்தப் பழியானது தேவர்களிடத்திலேயோ? இந்திரனிடத்திலேயோ? உன்னையனுப்பிய செந்தாமரைமலரிலிருக்கின்ற பிரமனிடத்திலேயோ? சிவபெருமானது யோகத்தைக் கெடுக்கின்றேனென்று இங்கே மிக்க விரைவாகவந்த உன்னிடத்திலேயோ? ஐயோ ! யாரிடத்திற் சேர்ந்தது ? (அறியேன்.)—எ-று. (௪௦௨)

*வில்லான்முப் புரமெரித்த பரம்பொருள்யோ கந்தவிர்க்க வேண்டில் விண்ணோ, ரெல்லாரு மிறந்தனரோ வென்கணவா நீயோதா னிலக்காய் நின்றாய், கொல்லாது போலவுனைக் கொன்றனரோ யென்னுயிர்க்குங் கொலைசூழ்ந்தாரோ, பொல்லாத பேர்க்குநன்றி செய்வதுநம் முயிர்போகும் பொருட்டே யன்றோ.*

(இ-ள்.) (மேருவாகிய) வில்லினால் திரிபுரங்களை யெரித்தருளிய சிவபெருமானது யோகத்தை நீக்கவேண்டில், தேவர்க ளனைவரு மிறந்தனரோ? என்னுயகனே ! (இதற்கு) நீதானே இலக்காக விருந்தாய், (அவர்கள்) உன்னைக் கொல்லாது போலக் கொன்றார்களே, என்னுயிர்க்குங் கொலைதேடினார்களே, கொடியவர்களுக்கு உபகாரஞ்செய்தல் தமது உயிர் நீங்கும் பொருட்டல்லவோ ?—எ-று.

சிவபெருமானது யோகத்தைத் தவிர்ப்பதற்கு வேறு தேவர்க ளொருவருமில்லையோ வென்று வருந்தினளென்பார், 'விண்ணோரெல்லாரு மிறந்தனரோ' என்றும், நீ இறப்பாயென் றறிந்திருந்துந் துணிந்து உன்னை யனுப்பினார்களே யென்று துக்கித்தனளென்பார், 'கொல்லாதுபோல வுனைக் கொன்றனரோ' என்றுங்கூறினார்.

*என்னபவஞ் செய்தேனோ வென்போல்வார் தமக்கென்ன விடர்செய்தேனோ*
*முன்னையுள விதிப்பயனை யறிவேனோ விப்படியே முடிந்த தையோ*
*கன்னல்வரிச் சிலைபிடித்த காவலவோ தமியெனைக் காத்தி டாயோ*
*வன்னிவிழி யாவுடைய பெருமானை நோவதற்கு வழக்கொன் றுண்டே.*

(இ-ள்.) யான் என்ன பாவஞ் செய்தேனோ, என்போன்ற மாதர்களுக்கு யாது துன்பஞ் செய்தேனோ, முன்னைய விதிப்பயனை யானறிவேனோ, அந்தோ! எனக்கு இவ்வாறு முடிந்தது, வரிகளையுடைய கரும்புவில்லைப் பிடித்த என்து தலைவனே!

ஆதரவற்ற என்னைக் காவாயோ? அக்கினியைக் கண்ணாகவுடைய சிவபெருமானை நிந்திப்பதற்கு ஞாயமுண்டோ?—எ-று. (௧௦௪)

பொன்செய்தார் முடிகாணே னழகொழுகுந் திருமுகத்துப் பொலிவு காணேன், மின்செய்பூ ணணிதுலவும் புயங்காணே னகன்மார்பின் மேன்மை காணேன், கொன்செய்பூங் கணைகாணேன் சிலைகாணே னடல்புரி கோலங் காணேன், என்செய்வே னென்கணவா வென்னையொழித் தெவ்விடத்தே யிருக்கின் றாயே.

(இ-ள்.) பொன்னரிமாலையையணிந்த கிரீடத்தைக் கண்டிலேன், அழகொழுகுகின்ற திருமுகத்தின் பொலிவைக் கண்டிலேன், ஒளிவீசுகின்ற ஆபரணமணிந்து விளங்குந் தோள்களைக் கண்டிலேன், அகன்ற மார்பினது மேன்மையைக் கண்டிலேன், அச்சந்தருகின்ற புஷ்பபாணங்களைக் கண்டிலேன், கரும்புவில்லைக் கண்டிலேன், போர்செய்யுங் கோலத்தைக் கண்டிலேன், யாதுசெய்வேன், என் கணவனே! என்னைவிட்டு (நீமாத்திரம்) எங்கு சென்றிருக்கின்றாய்.—எ-று. (௧௦௫)

அங்காளி லழற்கடவுள் கரியாக வானவரோ டயன்மால் காணப்
பொன்னொரு மங்கலநாண் பூட்டியெனை மணஞ்செய்து புணர்ந்த காலை
யெங்காலு மினியுன்னைப் பிரியலமென் றேவாய்மை யிசைத்தாய் வேனின்
மன்னவனே மன்னவனே யெனைத்தனியே விட்டேகல் வழக்கோ சொல்லாய்.

(இ-ள்.) அக்காலத்திலே அக்கினிதேவன் சாக்ஷியாகத் தேவர்களுடன் பிரமவிஷ்ணுக்கள் காணும்படி பொன்னாலாகிய மங்கலநாணைத் தரித்து என்னைக் கலியாணஞ்செய்து புணர்ந்தகாலத்தில் இனி உன்னை எப்பொழுதும் விட்டுப் பிரியோமென்று சத்தியஞ்செய்தனை; வசந்தராஜனே, எனது மன்மதனே! என்னைத் தனியே விட்டு நீ செல்லுதல் ஞாயமோ சொல்வாயாக.—எ-று.

கரி=சாக்ஷி. 'பொன்னொருமங்கலநாண்' என்பதற்கு, சுபகரம்பொருந்திய மங்கலநாணெனப் பொருள்கூறலு மொன்று. (௧௦௬)

போவென்று விடுவிட்ட தேவரெலாம் பொடியாகிப் போன வுன்னைப்
வாவென்று கடிதெழுப்ப மாட்டாரோ நின்றாதை வலிய னன்பா
ரோவென்று நானிங்கே யரற்றிடவும் வந்திலரா லிறங்கி னாரோ
வேவென்று நின்சிரத்தில் விதித்திருந்தா லவரையெலாம் வெறுக்க லாமோ.

(இ-ள்.) நீ போகக்கடவாயென் றனுப்பிய தேவர்களனைவரும் சாம்பலாக வெரிந்த உன்னை வரக்கடவையென்று விரைந்தெழுப்ப மாட்டார்களோ? நினது தந்தையாகிய திருமால் மிக்க வல்லவரென்று கூறுவார்கள். நானிங்கு ஐயகோவென்று புலம்பவும் (அவர்) வரக்காணேன், நித்திரை செய்கின்றனரோ? எரிந்திறப்பாயென்று உன் தலையி லெழுதியிருந்தால் அவர்களனைவரையும் வெறுத்தல் கூடுமோ?

நேயமொடு மறைபயிலுந் திசைமுகனைப் புரந்தரனை நின்னைத் தந்த
மாயவனை முனிவர்களை யாவரையு நின்கணையான் மருட்டி வென்று
யாயதுபோன் மதிமுடித்த பரமனையு நினைந்திவ்வா றழிவுற் றாயே
தீயழலின் விளக்கத்திற் படுகின்ற பதங்கத்தின் செயலி தன்றே.

(இ-ள்.) அன்புடன் வேதமோதுகின்ற பிரமனையும், இந்திரனையும், உன்னைப்பெற்ற திருமாலையும் முனிவர்களையும் மற்றவர்களையும் உனது பாணத்தால் மருட்டி வெற்றிகொண்டாய்; அதுபோல, சந்திரனையணிந்த சிவபெருமானையும் நினைத்து இவ்வாறழிவுற்றனையே, சுடுகின்ற தீவிளக்கிலே விழுகின்ற விட்டிற்பறவையின் செய்கை யீதுவல்லவோ?—எ-று. (௧௦௭)

பிரமன் முதலியோரை வெற்றிகொண்டதுபோலக் கருதிச் சிவபெருமான் மீதுஞ் சென்றனை, இது சிறந்த பழமென்று கருதி விளக்கில் வீழ்ந்திறக்கும் அற்ப மாகிய விட்டிற்பூச்சியின் செய்கைபோன் றிருந்ததென்று கூறி வருந்தினளென்பது கருத்து. (௧௦௮)

தண்பனிநீர்ச் சிவிறிகொண்டு விளையாடி மலர்கொய்து தண்கா நண்ணி
எண்படும்பூம் பள்ளிமிசைச் சிறுதென்றல் கவரிகளா யினிது செல்ல
வெண்பளித நறுஞ்சாந்தச் சேறாடி யிருவருமாய் விழைந்து கூடிக்
கண்படைகொண் டமர்வாழ்வும் பொய்யாகிக் கனவுகண்ட கதையா யிற்றே.

(இ-ள்.) குளிர்ந்த பனிநீர் தோய்ந்த விசிறியைக்கொண்டு விளையாடியும், குளிர்ந்தசோலைகளிற்சென்று மலர்களைக்கொய்தும், மதிக்கத்தக்க புஷ்பசயனத்தின் மீதுமந்தமாருதமானது வெண்சாமரங்களாக இனிமையோடுவீச, வெள்ளிய கர்ப்பூரங் கலந்த நல்ல கலவைச்சாந்துபூசி நாமிருவரும் விரும்பிப்புணர்ந்து நித்திரைசெய்திருந்த வாழ்வும் பொய்யாகிச் சொப்பனங்கண்ட கதைபோலாயிற்றே.—எ-று.

எண் - முதனிலைத் தொழிற்பெயர். (௧௦௯)

மருகென்றே யவமதித்த தக்கனார் வேள்விசெற்ற வள்ள றன்னைப்
பொருகென்றே தேவரெலாம் விடுத்தாரே யவராலே பொடிபட் டாயே
எரிகின்றே னுனைப்போல வாறாத பெருந்துயரால் யானுமங்கே
வருகின்றேன் வருகின்றே னென்னுயிரே யெனப்புலம்பி வருந்து கின்றாள்.

(இ-ள்.) மருமகனென்று அவமதித்தல் செய்த தக்ஷனதுயாகத்தை யழித்த சிவபெருமான்மீது போர்செய்யக் கடவாயென்று தேவர்களுனைவரு முன்னையனுப்பினரோ; அத்தேவர்களால் சாம்பராயினையே, தணியாத பெருந்துன்பத்தினால் உன்னைப்போல நானுமெரிகின்றேன்; நீ சென்றவிடத்திற்கு (யானும்) வருகின்றேன் வருகின்றேன், என் பிராணநாயகனே! யென்று புலம்பி வருந்துகின்றவளானாள்.—எ-று.

நமது மருமகனென்னு முறைமையால் இகழ்ந்து கூறினனென் றெண்ணாமல் அவன் செய்த தீமையைக்குறித்து உடனே யழித்தருளிய பெருமானென்பதை யுணராமல் நீ சென்றெதிர்த்து எரிந்தழிந்தனை, நீ யெரிந்தழிந்ததுபோல, யானும் துயராக்கினியால் எரிந்துகொண்டிருக்கின்றேனாகலான், யானும் நீ இறந்து சென்றவிடத்திற்கு வருகின்றேனென்று கூறினளென்க. 'அவரால்' என்பதற்கு, அச்சிவபெருமானால், எனினுமாம். (௧௧௦)

காமதகனப்படலமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௧௦௯.

---

உ

முருகன்றுணை.

# மோனநீங்குபடலம்.

இரதி யின்னனம் வருந்திடத் தொன்மைபோ லெங்கோமான்
விரத மோனமோ டிருந்தது முன்னமோ விறற்காமன்
கருது முன்பொடி பட்டது கண்டனர் கலங்குற்றார்
சுருதி நன்றுணர் திசைமுகன் முதலிய சுரரெல்லாம்.

(இ-ள்.) இவ்வாறு இரதிதேவியானவள் வருந்த, எமது சிவபெருமான் முன்போலவே மௌன விரதத்தோடிருக்கவும், வேதங்களை நன்குணர்ந்த பிரமன் முதலியதேவர்களனைவரும் இதற்கு முன்னமே வலிய மன்மதன் நினைக்கு முன்னே நீறுன தன்மையைக்கண்டு மனங்கலங்கினார்கள்.—எ-று.

மன்மதன் நெற்றிக்கண்ணினு லெரிந்தழிந்ததையும், சிவபெருமான் முன் போலவே மௌனநிலையிலிருத்தலையும், பிரமனாதி தேவர்கள்கண்டு மனங்கலங்கினார்க ளென்க. (௧)

திதலை மெய்த்தொகை வன்மிகத் தொழுக்கெனச் செலக்கண்ணீர்
பதலை யொத்தன வல்லல்கூர்ந் தாற்றிடப் பகுவாய்கள்
விதலை பெற்றமெய் வியர்ப்புற வுளநனி விதிர்ப்பெய்த
மதலை யிற்றழி நாய்கர்போற் றுயர்க்கடன் மறிகின்றார்.

(இ-ள்.) ஈசல்கள் புற்றி னின்றுங் கூட்டமாய்ப் புறப்படுவதைப் போலக் கண்ணீரொழுகவும், திறந்தவாய்கள் பேரிகைபோன்றனவாய்த் துன்பமிக்குப் புலம் பவும், தேகம் நடுக்கமுற்று வியர்க்கவும், மனம் மிகவும் நடுங்கவும் (நடுக்கடலிற்) கப் பலுடைந்தபோது (அதனால் வருந்துகின்ற) வணிகர்களைப்போலத் துன்பமாகிய கடலில் விழுகின்றவர்களானார்கள்.—எ-று.

திதலை-கறையான்; அது, ஈண்டு ஈசலின்மேனின்றது. பதலை-ஒருகட்பறை. விதலை-நடுக்கம். சரக்கேற்றிச்செல்லும் மரக்கலம் நடுக்கடலிற் கவிழ்ந்தபோது அத ற்குரிய வியாபாரிகள் வருந்துமாறுபோல, வருத்தமுற்றார்களென்க. (௨)

மையு லாவரு கறைமிடற் றிறையவன் மருங்காக
வெய்யு மாரனை விடுத்தன மவனையு மிறச்செய்தான்
பொய்யி றன்னிலை தவிர்ந்திலன் றொன்மையே போலுற்றான்
ஐய கோவினிச் செய்வதென் றேவென வயர்கின்றார்.

(இ-ள்.) கருநிறம் விளங்குகின்ற காளகண்டத்தையுடைய சிவபெருமா னருகில் (புஷ்பபாணங்களை) விடுகின்ற மன்மதனை யனுப்பினோம்; அம்மன்மதனையு மிறக்கச்செய்தனர். (அவ்வாறுசெய்தும்) மெய்ம்மையாகிய தமது யோகநிலையைத் தவிர்ந்தாரில்லை; முன்போலவேயிருக்கின்றனர். ஐயோ ? இனியாது செய்வதென்று வருந்துகின்றார்கள்.—எ-று. (௩)

பூத்த ருங்கணை மாரனை விழியினுற் பொடிசெய்த
வாத்த னாற்றலைப் புணர்ப்பினு னீக்குவ தரிதன்றன்
காத்து நந்துய ரகற்றிட வேண்டுமேற் கடிதேயா
மேத்தல் செய்வதே கடனென யாவரு மிசைவுற்றார்.

(இ-ள்.) புஷ்பபாணத்தையுடைய மன்மதனை நெற்றிக்கண்ணினு லெரித் தருளிய சிவபெருமானது வல்லமையை உபாயத்தினைல் நீக்குதலரிதாகும் ; அச்சிவ பெருமான் நமது துன்பங்களையொழித்து இரக்ஷிக்கவேண்டுமாயின், நாம் விரைவா கத் துதிப்பதே முறைமையென்றுகூறித் தேவர்களனைவரும் இசைந்தார்கள்.—எ-று.

ஆத்தன்-உயிர்த்துணையாயுள்ளவன். (௪)

ஏகின மூர்பவன் முதலிய கடவுள ரெல்லோரு
மகன மர்ந்திவை யிசைந்துதொல் கயிலையி னகராப்பட்
டகல தாயபொன் னகரிடைக் கோபுரப் புறமேகித்
தொகுதி யோடெம திறைவனை யொல்லெனத் துதிக்கின்றார்.

(இ-ள்.) அன்னவாகனனாகிய பிரமன்முதலிய தேவர்களனைவரும் மனவொற்றுமையோடு இவ்வாறு செய்தற்கிசைந்து, பழைமையாகிய திருக்கயிலையின் மத்தியில் (யாவருக்கும்) அடைக்கல ஸ்தானமாயுள்ள பொன்மயமாகிய திருநகரத்தின் கோபுரவாயிலிற் கூட்டமாகச் சென்று நின்று எமது சிவபெருமானைவிளித்து துதி செய்கின்றார்கள்.—எ-று. (௬)

நஞ்ச ருந்தியு நதியினைச் சூடியு நடுநெற்றித்
துஞ்சு மெவ்வங்கனல் பரிந்தும்வெவ் வலியரைத் தொலைத்திட்டு
மஞ்ச லென்றுமுற் காத்தனை யின்றெமக் கருளாயேற்
றஞ்ச மாருளர் தாதையே யல்லது தனயர்க்கே.

(இ-ள்.) விஷத்தையுண்டும் கங்கைநதியையணிந்தும், நடுநெற்றியில் மிக்க அக்கினியைத்தாங்கியும் கொடிய வலியவர்களையழித்தும் பயப்படாதீர்களென்று முன்பெங்களைக்காத்தருளினீர். (அவ்வாறு காத்தருளிய தேவரீர்) இப்பொழுது எங்கட்குத்திருவருள் புரியீராயின், தந்தையையல்லது மைந்தர்களுக்கு ஆதரவுயாவரிருக்கின்றார்கள்.—எ-று.

விடபான முதலியவற்றைச்செய்து முன்பெங்களைக் காத்தருளினமை போல, இன்றுங்காத்தருள வேண்டுமென்பார்; 'தஞ்சமாருளர் தாதையரல்லது தனயர்க்கே' என்றார். (௬)

கோளி லன்பர்க ளிழுக்கிய புரியினுங் குணனுக்கொண்
டாளு மெம்பிரா னின்னடி யரணமென் றடைந்தேங்க
ளாளும் வெந்திறற் சூரபன் மாவினா னலிவெய்தி
மாளு கின்றதோ சிறிதுமெம் முறுதுயர் மதியாயோ.

(இ-ள்.) குற்றமற்றமெய்யடியார்கள் இழிவான காரியங்களைச் செய்யினும், அதனைக் குணமாகக்கொண்டு அடிமைகொண்டருளும் எமதாண்டவரே! தேவரீரது திருவடியில் அடைக்கலமாக வடைந்துள்ள யாங்கள் கொடுஞ்செய்கையையுடைய சூரபதுமனால் நாள்தோறும் வருத்தமுற் றிறக்கவோ? எங்களது துன்பத்தைச் சிறிதுந் திருவுள்ளங் கொண்டிலீரோ?—எ-று.

அடியார்கள் செய்தகுற்றத்தைக் குணமாகக் கொண்டருள்புரிவர், என்பதனை:—"தாதையைத் தாளற வீசிய சண்டிக்கிவ் வண்டத் தொடுமுடனே - பூதலத் தோர்கள் வணங்கப் பொற்கோயிலும் போனகமு மருளிச் - சோதி மணிமுடித் தாமமு நாமமுந் தொண்டர்க்கு நாயகமும் - பாதகத்துக்குப் பரிசுவைத் தானுக்கே பல்லாண்டு கூறுதுமே" என்னுந் திருப்பல்லாண்டானு முணர்க. (எ)

தையலைப்பிரீஇ யோகியல் காட்டிடு தனிச்செய்கை
யைய நிற்கிதோ ரிறைவரை யாகுமா லதுகாலை
நையு மெங்களுக் குகம்பல சென்றன நாமெல்லா
முய்வ தெப்படி யின்னுநீ புறக்கணித் துறுவாயேல்.

(இ-ள்.) உமாதேவியாரைப் பிரிந்து யோகநிலையைக் காட்டுகின்ற ஒப்பற்ற செய்கையையுடைய எமதாண்டவரே! தேவரீருக்கு இஃதோர் கணப்பொழுதாம்; அந்தக் கணப்பொழுதானது வருந்துகின்ற எங்களுக்கு அநேக யுகங்களாயின. இன்னும் தேவரீ ரிவ்வாறு பராமுகமாயிருப்பின் நாங்களனைவரும் பிழைத்தலெவ்வாறு.—எ-று.

தையல் - ஆகுபெயர். புறக்கணித்தல் - வேற்றுமை செய்தல். (அ)

நோற்று மாயவன் முதலினோர் யாவரு நனதாளைப்
போற்றி யர்ச்சனை புரியவித் திருவெலாம் புரிந்தாற்றாய்
தோற்ற மின்றிய வைந்தொழி லியற்றிய தொலைவிலாய்நீ
யாற்று கின்றதொர் தவமிலை யெம்பொருட் டன்றோ.

(இ-ள்.) திருமால் முதலிய யாவரும் தவஞ்செய்து தேவரீரது திருவடிகளைத் துதித்து அருச்சனைபுரிய, இச்செல்வங்க ளனைத்தையும் அருள்செய்தீர். சுயம்புவாய் நின்று பஞ்ச கிருத்தியங்களையுஞ் செய்தருளிய பழம்பொருளாயுள்ளவரே! தேவரீர் செய்தருளுந் தவமும் அடியேங்கள் பொருட்டன்றோ?—எ-று.

திருமால் முதலியோர் சிவபெருமானைப் பூசித்துச் சகல செல்வங்களையும் பெற்றன ரென்பதனை :—" வானமேத்த யான் வைகுந்த வாழ்வுபெற் றதுவு - ஞான நான்முகன் சத்திய வுலகக மெய்யது - மேனை விண்ணவர் தத்தம வாழ்க்கையெய் தியது - மாலுயர்த்தவ னருட்குறி யருச்சனைப் பயனால்" என்னுங் காஞ்சிப்புராணத் தானுமறிக. (௯)

எய்த்து நொந்திடி யெங்களைத் தளர்வுகூ ரிடர்வாளா
லிருந்த லுங்குவித் திறுதி செய்கினை நெறிதேடி
யத்த வின்னினிக் காத்தரு ளல்லதே லடுவல்லை
சித்த மென்னுளங் கவ்வா றொன்றினைச் செய்வாயே.

(இ-ள்.) எமது பெருமானே! சோர்வடைந்திருக்கும் அற்பர்களாகிய எங்களைக் குற்றமிக்க துன்பமாகிய வாளினால் காடோறும் வெட்டிப் பிளக்கின்றீர்; இனி செய்யவேண்டிய முறைமையைத் தேர்ந்து காத்தருள்வீர். அஃதன்றேல், விரைவில் எங்களை யழித்தருள்வீர். தேவரீரது திருவுள்ள மெப்படியோ, அவ்வாறே (இவ்விரண்டில்) ஒன்றைச் செய்தருள்வீர்.—எ-று.

எம்பெருமானே! எங்களது துன்பத்தை யொழித்துக் காத்தருள்வதாயினும், அல்லது அழித்தருள்வதாயினும் இவ்விரண்டி லொன்றைத் தேவரீர் திருவுள்ளப்படி விரைவில் செய்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தன ரென்க. (௧௦)

கங்கை வேணியா யம்மையை மணந்தெமைக் கடிகொள்ளத்
திங்கள் வெண்குடை மதனனை விடுத்தனந் தெளிவில்லேம்
அங்க வன்புரம் பொடித்தனை முன்புபோ லமர்ந்தாற்று
மிங்கி யாங்களின் றுறுவதோ வினிச்சிறி திரங்காயோ.

(இ-ள்.) கங்கைநதியை யணிந்த சடைமுடியை யுடைய எமது ஆண்டவரே! (தேவரீர்) உமாதேவியாரைத் திருமணம்புரிந்து எங்களைக் காத்தருளும்பொருட்டு, தெளிவற்றவர்களாகிய யாங்கள் சந்திரனாகிய வெண்குடையினையுடைய மன்மதனை யனுப்பினேம். அவனது சரீரத்தைச் சாம்பராக்கினீர். (அவ்வாறுசெய்தும்) முன்போலவே ஞானயோகத் தெழுந்தருளினீர். இங்குயாங்கள் துன்பப்படவோ? இனிச்சிறிது இரக்கங்கொள்ளீரோ?—எ-று.

தேவரீர் பார்வதியாரைத் திருமணம்புரிதற்கு எங்களது வேண்டுகோளே காரணமாகவிருக்க, அதனையுணராமல் மன்மதனை விடுத்தமை எங்களறிவீனமேயென்று கூறின ரென்பார், 'திங்கள் வெண்குடை மதனனை விடுத்தனந் தெளிவில்லேம்' என்றனர். புரம் - சரீரம். (௧௧)

ஆர முற்றின வயப்புலி முதலிய வடன்மாவின்
பேருரித் திறந் தரித்தனை சிறப்பிதி பெருவேள்வி

விர லைக்கொடு கடிந்தனை யஃதென மிகவெய்ய
சூர பன்மனைத் தொலைவுசெய் தெந்துயர் தொலைக்கென்றார்.

(இ-ள்.) கொடிய தீப்போலுங் கோபத்தையுடைய வெற்றி பொருந்திய புலி முதலிய வலிய மிருகங்களின் பெரிய தோல்முதலியவற்றை யணிந்தருளினீர். தக்ஷன்செய்த பெரிய யாகத்தை விரபத்திரரைக் கொண்டழித்தருளினீர். அதுபோல, மிகக்கொடிய சூரபதுமனையழித்து எங்களுடைய துன்பத்தை நீக்கியருளவேண்டு மென்று விண்ணப்பஞ் செய்தார்கள்.—எ-று.

தொலைக்கவென்றார் என்பது, தொலைக்கென்றார் எனத்தொகுத்தலாயிற்று.

முரற்கொள் வண்டுசூழ் சததளப் பண்ணவன் முதலோர்க
ளுருக்க ரக்கென மெய்தளர்ந் திவ்வகை யுளநொந்தே
யரற்றி யேத்தலு மவர்பவ முடிவதற் கணித்தாக
விரக்க மாயரு ணந்தியை நினைந்தன னிறையோனே.

(இ-ள்.) சப்திக்கின்ற வண்டுகள் மொய்க்கின்ற நூறிதழ்களையுடைய கமலாசனனாகிய பிரமன்முதலியதேவர்கள் உருக்கிய அரக்கைப்போல உடல்தளர்ந்து இவ்வாறுமனம் வருந்திப்புலம்பித் துதிக்கவும், அவர்களது பாவம் நீங்குதற்குச் சமீபித்தபடியால், (அப்பொழுது) சிவபெருமான் கிருபையோடு திருநந்திதேவரைச் சிந்தித்தருளினர்.—எ-று. (கரு)

எந்தை நந்தியை யுன்னலு மவனறிந் திறைவன்முன்
வந்து வந்தனை செய்துகை தொழுதலு மறைமேலோன்
கந்த மாமலர்க் கடவுளா தியர்தமைக் கடிதெம்முன்
றந்தி டென்றன னன்றெனா முதற்கடை தனில்வந்தான்.

(இ-ள்.) எமது சிவபெருமான் திருநந்திதேவரை நினைத்தருளியவுடனே அத்திருநந்திதேவரதனையறிந்து சிவபெருமான் திருமுன்னடைந்து துதித்துக் கை குவித்து வணங்கவும், வேதத்தின் முடிந்தபொருளாயுள்ள அவ்வெம்பெருமான் (அவரைப்பார்த்தருளி) நறுமணங்கமழுங் கமலாசனனாகிய பிரமன்முதலியதேவர்களை விரைவில் நமது சந்நிதியிலழைத்துவரக்கடவை யென்றருளிச்செய்ய, (அவர்) அவ்வாறே செய்கின்றேனென்று முதற்றிருவாயிலில் வந்தனர்.—எ-று.

'எந்தை நந்தி' என்பதற்கு, எந்தையாகிய திருநந்திதேவர் எனப்பொருள் கூறுதலுமொன்று. (கசு)

கணங்கள் காப்புறு முதற்கடை குறுகலுங் கண்டேத்தித்
தணங்கொள் பங்கயன் வாசவன் விண்ணவர் தாமெல்லாம்
வணங்க வெம்பிரா னுமைத்தரு கென்றனன் வறிதேனு
மணங்கு கொள்ளலிர் வம்மினோ நீவிரென் றருள்செய்தான்.

(இ-ள்.) சிவகணங்கள் காவல்செய்கின்ற முதற்றிருவாயிலில் வந்தவுடனே, குளிர்ச்சியையும் அழகையுமுடைய தாமரைமலரிலிருக்கும் பிரமனும் இந்திரனும் தேவர்களுமாகிய அனைவரும் (அத்திருநந்தி தேவரைத்) தரிசித்துத்துதித்து வணங்க, (அவர்) எமது சிவபெருமான் உங்களை யழைத்துவரக் கட்டளையிட்டருளினார் நீங்கள் சிறிதும் வருந்தாதீர்கள் ; வாருங்களென்றுஅருளிச்செய்தனர்.—எ-று.

தணங்கொள் என்பதனை, தண் - அம் - கொள் எனப்பிரித்துப் பொருள் கொள்க. (கஎ)

சிறந்த நந்திதன் இவ்வகை யுரைத்தசொற் செவிதோறும்
வார்ந்த பேரமு தாதலு முவகையின் மதர்ப்பாகிப்
பேர்ந்தொ ரார்மாற் றமு முரைத்திலர் பிரமனே முதற்றேவ
ரார்த்து நாதனைப் பாடின ராடின ரலமந்தார்.

(இ-ள்.) சிறப்பினையுடைய திருநந்திதேவர் வந்து இவ்வாறு கூறியருளிய வார்த்தைகள் செவிகள்தோறு மொழுக்கிய சிறந்த அமிர்தமொத்திருக்கவும், பிரமன் முதலியதேவர்கள் சந்தோஷத்தினால் பூரித்து மறுமொழிகூறாதவர்களாய் ஆரவாரித்துச் சிவபெருமானைத் துதித்து ஆனந்தக்கூத்தாடி அச்சமுற்றார்கள்.—எ-று. (சசு)

பெரிது நோயுழந் தருள்பவ ரின்றியே பெருங்கால
நிரய முற்றயி னோர்தங் களையெடுத் திடுநிலைத் தன்றோ
வருளி னீர்மையா லெமையரன் விளித்தன னனைவிரும்
வருதி ரென்றசொற் பங்கயன் முதலிய வானோர்க்கே.

(இ-ள்.) பிரமன்முதலிய தேவர்களுக்கு, திருவருட்டன்மையினால் சிவபெருமான் உங்களை யழைத்தருளினார்; யாவரும் வாருங்களென்று (திருநந்திதேவர் கூறிய) வார்த்தையானது, மிக்க துன்பத்தில் வருந்திக் காப்பவரின்மையால் அநேக காலம் நரகத்திற்கிடந்தவர்களை மேலெடுத்துக் காக்குந் தன்மையதன்றோ.—எ-று.

திருநந்திதேவர் பிரமனாதிதேவர்களைச் சிவபெருமா னழைத்தருளியதாகக் கூறியது, நெடுங்காலம் நரகத்திலழுந்தியிருப்போரைக் கரையிலெடுத்து காப்பது போன்றிருந்ததென்க. (சஎ)

செய்ய லாவதொன் றின்றியே மகிழ்ச்சியிற் றிளைத்தோராய்
மைய லாகிய பண்ணவர் தங்களை வல்லேகொண்
டையன் முன்னுற வுய்த்தன னிருவகை யறத்தோரு
முய்ய வெஞ்சம னுடைதரப் புவியினி லுதிக்கின்றோன்.

(இ-ள்) இருவகை யறத்தினையுடையவர்களு முய்யவும், கொடிய இயமன் தோல்வியடையவும் அவதரித்தருளுந் திருநந்திதேவர் செய்வதொன்றின்றிச் சந்தோஷத்தில் மூழ்கினவர்களாய் மயங்கியிருக்கின்ற தேவர்களை விரைவிலழைத்துக்கொண்டு சிவபெருமான் திருமுன்னே விட்டனர்.—எ-று.

இருவகை யறமாவன—இல்லறம் துறவறமென்பன. இருவகையறத்தோரு முய்ய வெஞ்சமனுடைதரப் புவியினிலுதிக்கின்றோன் பண்ணவர் தங்களை ஐயன் முன்னுறவுய்த்தனன், எனக்கூட்டுக. (சஅ)

வேறு.

வண்டுளர் கமலமேன் மதலை வாசவ
னண்டர்க ளனைவரு மன்பொ டேகியே
பண்டுயிர் முழுதருள் பரனைக் கண்களாற்
கண்டனர் வழுத்தினர் கரங்கள் கூப்பினர்.

(இ-ள்.) வண்டுதேன் முரல்கின்ற தாமரைமலரில் வசிக்கும் பிரமனும் இந்திரனும் தேவர்களுமாகிய அனைவரும் அன்புடன்சென்று, அநாதியில் ஆன்மகோடிகளை யளித்தருளிய சிவபெருமானைக் கண்களால் தரிசித்தவர்களாய்க் கைகூப்பித் துதித்தார்கள்.—எ-று.

அநாதியில் ஆன்மாக்களுக்குத் தநுகரண புவனபோகங்களைக் கொடுத்தருளிய பெருமானென்பார், 'பண்டுயிர்முழுதருள் பரன்' என்றார். இதனை:—"காரிட்ட

வாணவக் கருவறையி லறிவற்ற கண்ணிலாக் குழவியைப்போல் - கட்டுண்டிருந்த வெனமை வெளியில்விட்டு" எனவருந் தாயுமானவர் திருவாக்காறு மறிக. (கக)

விண்மதி படர்சடை வேத நாதனை
யண்மினர் வணங்கின ரரிமு னாற்றிய
வுண்மகிழ் பூசனை யொப்பப் போதநீர்
கண்மல ருடனொடு கழல்கள் சேரவே.

(இ-ள்.) ஆகாயத்தில் தவழுஞ் சந்திரனை யணிந்த சடைமுடியையுடைய சாமகண்டராகிய சிவபெருமானை யடைந்தவர்களாய், திருமால் முற்காலத்துச்செய்த மனமகிழ்வினையுடைய பூசையைப்போல, ஆனந்த பாஷ்பஞ் சிந்துகின்ற கண்களாகிய தாமரைமலர்களோடு திருவடிகள்பொருந்தும் வண்ணம் நமஸ்கரித்தார்கள்.-எ-று.

திருமால் தனது விழியைப்பிடுங்கிச் சிவபெருமான் திருவடிகளில் அருச்சித்தமையை:—" பன்னுமொரு திருப்பெயர்க்கு நறுங்கமலங் காணாமைப் பதைத்து நோக்கி - யென்னினிமேற் செயலென்று தெரிந்துணர்ந்து தனதுவிழி யிடந்துபெம் மான்-கொன்மலர்த்தாண் மிசைச்சாத்திக் களிகூர்ந்தா னுறுப்பினையுங் கொடுப்பதல் லான்-மென்மையுறத் தாங்கொண்ட விரதத்தை விடுவர்களோ கொள்கை மேலோர்" என்னுங் காஞ்சிப்புராணத்தானுமுணர்க. (உ0)

வணங்கிய பண்ணவர் வல்ல வல்லவா
பணங்கிள ரரவரைப் பரமற் போற்றலு
முணங்கிய சிந்தையி ருமது வேண்டலு
மணங்குறு நிலைமையு மறைமி னென்னவே.

(இ-ள்.) நமஸ்கரித்த தேவர்கள் தங்கள் தங்களிஷ்டப்படி படம் விளங்குகின்ற பாம்பையணிந்த இடையினையுடைய சிவபெருமானைத் துதித்தவுடனே, (அவ்வெம்பெருமான்) வருந்திய மனத்தினையுடைய தேவர்களே! உங்களது வேண்டுகோளும் துன்பமுற்றிருக்குந் தன்மையுங் கூறுவீர்களென்றருளிச்செய்ய.—எ-று.

சிவபெருமானது புகழ் அளவிடப்படாமையால் தங்களாற் கூடியவாறு புகழ்ந்தனரென்பார்,' வல்லவல்லவா பணங்கிளரரவரைப் பரமற்போற்றலும்' என்றார்.

பேருக மளப்பில பெயர்த லின்றியே
சூரன தாணையிற் றுயர்ப்பட் டாழ்ந்தனங்
காருறழ் கந்தரக் கடவு ளியலா
தாருள ரடியரே மலக்க ணீக்குவார்.

(இ-ள்.) அநேகம்பெரிய யுகங்களாக இடைவிடாமல் சூரபதுமனது கொடுங்கோன்மையினால் துன்பமுற்றுத் தாழ்வடைந்தோம், மேகம்போலுங் கரியகண்டத்தையுடைய எமதாண்டவரோ! தேவரீரையன்றி அடியேங்களுடைய துன்பத்தை நீக்கத்தக்கவர்கள் வேறு யாவரிருக்கின்றார்கள்.—எ-று. (உஉ)

ஆயவெஞ் சூரன தாவி நீக்கவோர்
சேயினை யருளுவான் சிமைய மாகிய
மீயுயர் வரையிடை மேவி நோற்றிடு
மாயையின் முதல்வியை மணத்தல் வேண்டுநீ.

(இ-ள்.) அத்தகைய கொடிய சூரனுடைய உயிரை நீக்குதற்கு ஒருபுத்திரரைத் தந்தருளும்பொருட்டு மிகப்பெரிய இமையமலையின்கணெழுந்தருளித் தவஞ்செய்கின்ற மாயாகாரணியாகிய பார்வதிதேவியாரைத் தேவரீர் திருமணஞ்செய்தருளல்வேண்டும்.—எ-று. (உக)

என்றிவை கூறிய யாரு மெம்பிரான்
மன்றலந் தாண்மலர் வணங்கிப் போற்றலு
மின்றிகழ் பசுங்கதிர் மிலைச்சும் வேணியா
னன்றென விசைந்திவை நவிறன் மேயினான்.

(இ-ள்.) என்று இவ்வாறு விண்ணப்பஞ்செய்து தேவர்களனைவரும் சிவபெருமானது நறுமணங்கமழும் அழகிய தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கித்துதிக்கவும், ஒளிவிளங்குகின்ற இளம் பிறையை யணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் நல்லதென்று திருவுள்ளமிசைந்து இவ்வாறு அருளிச் செய்வாராயினார்.—எ-று.

தண்ணொளிவீசு மிளம்பிறையென்பார், 'மின்றிகழ் பசுங்கதிர்' என்றார். ()

புங்கவர் யாவரும் பொருமல் கொள்ளலீர்
நுங்கடம் பொருட்டிலவ் வோங்கல் வைகிய
மங்கையை மணந்துநும் வருத்த நீக்குது
மிங்கினி யாவரு மேகு கென்றனன்.

(இ-ள்.) தேவர்களே! நீங்களனைவருந் துன்பமடையாதீர்கள்; உங்கள் நிமித்தமாக அவ்விமாசலத்தில் வசிக்கின்ற பார்வதியைத் திருமணம்புரிந்து உங்களது துன்பத்தை யொழிக்கின்றோம், (ஆதலால்) இனி நீங்கள் செல்லுங்களென்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று.

பொருமல் - துன்பம். ஓங்கல் - ஆகுபெயர். (உ௫)

முழுதுணர் பரனிது மொழியப் போதனுஞ்
செழுமையில் பொன்னகர்த் தேவும் யாவருந்
தொழுதனர் விடைகொடு துயரஞ் சிந்திய
விழுமிய மேருவின் மிசைக்க ணேகினார்.

(இ-ள்.) முற்றுணர்ச்சியையுடைய சிவபெருமான் இவ்வாறருளிச்செய்தவுடன், பிரமனும், பொலிவழிந்திருக்கும் பொன்னுலகத்தலைவனாகிய இந்திரனும், மற்றைத் தேவர்களும் வணங்கி விடைபெற்றுக்கொண்டு தங்கள் துன்பமொழிந்து சிறந்த மேருமலையினிடத்துச் சென்றார்கள்.—எ-று.

சூரபன்மனா லழிக்கப்பட்டுப் பொலிவழிந்திருத்தலின், 'செழுமையில் பொன்னகர்' என்றார். (உ௬)

வேறு.

அன்னார் விடைகொண் டேகியபி னதுகண் டிரதி யெம்பெருமான்
முன்னா விறைஞ்சிப் போற்றிசெய்து முறையோ முறையோ விறையோனே
பொன்னார் கமலத் தயன்முதலோர் புணர்ப்பா லெங்கோன் போந்திங்கே
யுன்னான் முடிந்தா னவன்பிழையை யுளங்கொ ளாம லருளென்றாள்.

(இ-ள்.) அத்தேவர்கள் விடைபெற்றுச்சென்றபின்பு இரதிதேவி அத்தருணம்பார்த்து எமது சிவபெருமானது திருமுன்னடைந்து வணங்கித் துதிசெய்து எமதாண்டவனே! முறையோ! முறையோ!! அழகிய தாமரைமலரில் வசிக்கும் பிரமன் முதலிய தேவர்களது தந்திரத்தினால் எனது நாயகன் இங்கு வந்து தேவரீரா லெரிந்தழிந்தான். அவன் செய்த குற்றத்தைத் திருவுள்ளங்கொள்ளாமல் எழுப்பியருளவேண்டுமென்று பிரார்த்தித்தனள்.—எ-று.

சிவபெருமான் தேவர்களது வேண்டுகோட்கிரங்கி யருள்புரிந்தமையின், நமக்கும் பெருமான் பேரருள்புரிந்தருளுவனென்று கருதி, இரதிதேவி சிவபெருமானைப் பிரார்த்தித்தனளென்க. (உ௭)

வேறு.

இனைய கூறின ளிரதிவேண் டிடுதலு மினைதீர்க்கு
புனித னல்லரு ளெய்தியே மங்கைநீ புலம்பாய்கேள்
வனைக ருங்குழற் கவுரியை மேவியாம் வரைபோதி
னுனது கேள்வனை யளிக்குதும் போதியென் றுரைசெய்தான்.

(இ-ள்.) இரதிதேவி இவ்வாறுகூறி வேண்டிக்கொள்ளவும் ஒப்பற்ற சிவபெருமான் சிறந்த கருணைகூர்ந்து, பெண்ணே! நீ புலம்பாதே; இதனைக்கேள். அலங்கரிக்கப்பட்ட கரிய கூந்தலையுடைய பார்வதியை யாம் சென்று திருமணஞ் செய்யும்பொழுது உன்னுயகனைத் தருகின்றோம், நீ செல்லக்கடவை யென்று அருளிச்செய்தனர்.—எ-று. (உஅ)

தன்னை யேதனக் கொப்பவ னிரதியைத் தளரேலென்
றின்ன வாறருள் செய்தலு மகிழ்ந்தடி யிறைஞ்சிப்போய்ப்
பொன்னின் மாலிமை யக்கிரி புகுந்தொரு புடையுற்றாள்
வன்ன மாமுகில் வரவுபார்த் துறைதரு மயிலேபோல்.

(இ-ள்.) சமானரகிதராகிய சிவபெருமான் இரதிதேவியைப் பார்த்தருளி நீ வருந்தாதேயென்று இவ்வாறு அருளிச்செய்யவும், மகிழ்கூர்ந்து (அவரது) திருவடிகளை வணங்கிச் சென்று, அழகிய பெரிய மேகத்தின் வருகையை எதிர்நோக்கி வசிக்கின்ற மயிலைப்போன்று, பொன்மயமாகிய பெரிய இமையமலையையடைந்து ஒருபுறத்தில் வசித்திருந்தனள்.—எ-று.

தன்னையேதனக் கொப்பவன் என்பதனை,—"தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லான் - மனக்கவலை மாற்ற லரிது" என்னுந் திருக்குறளானுமுணர்க. மயில் மேகத்தினது வருகையை யெதிர்நோக்கி யிருக்குமாறுபோல, இரதிதேவி சிவபெருமானது வருகையை யெதிர்நோக்கி யிருந்தனளென்க. (உக)

வேறு.

தமியளா யிரதிபோய்த் தானங் குற்றிட
வமரர்க ளாயுளா ரரந்தை தீர்க்கவு
மிமையமால் வரைமிசை யிருந்து நோற்றிடு
முமைதனை மணப்பவு முதல்வ னுன்னினன்.

(இ-ள்.) இரதிதேவி தனித்தவளாகச் சென்று இமயமலையில் வசித்திருக்க, முதற்கடவுளாகிய சிவபெருமான் தேவர்களது துன்பத்தை நீக்கவும், பெரிய இமயமலையிலிருந்து தவஞ்செய்கின்ற உமாதேவியாரைத் திருமணஞ் செய்யவுந் திருவுள்ளங்கொண்டருளினர்.—எ-று.

தமியள் - தனிமையானவள். இரதி சென்றபின்பு, சூராதியர்களால் துன்புற்றழிந்த தேவர்களது வருத்தத்தைத் தீர்க்கவும், பார்வதி தேவியாரைத் திருமணம் புரியவும் சிவபெருமான் திருவுள்ளங் கொண்டனரென்க. (௩௦)

மனந்தனி லித்திற மதித்து வானதி
புனைந்தவன் சனகனென் றுரைக்கும் புங்கவன்
சனந்தனற் சனாதனன் சனற்கு மாரனு
மினந்தரு முனிவரை யினிது நோக்கினன்.

(இ-ள்.) ஆகாயகங்கையை யணிந்த சிவபெருமான் இவ்வாறு திருவுள்ளத்திற்சிந்தித்து, சனகனென்று கூறும் முனிவர், சனந்தமுனிவர், நல்ல சனாதன முனி

வர். சனற்குமாரமுனிவர் என்னும் நான்கு முனிவரர்களையும் திருவருளுடன் பார்த்தருளினர்.—எ-று.

சனகராதி இந்நான்கு முனிவரகளும் சிவபெருமானையடைந்து மெய்ஞ் ஞானோபதேசம் பெற்றவராகலின், 'இனந்தருமுனிவர்' என்றார், இனிதுநோக்கல்- அருளோடு பார்த்தல். (௩௧)

நன்னல மைந்தர்காள் ஞான போதகந்
சொன்னடை யன்றது துயர நீங்கிய
வந்நிலை மோனமோ டிருந்து நந்தமை
யுன்னுத லேயென வுரைசெய் தோதினான்.

(இ-ள்.) மிக்க நன்மையினையுடைய சிறுவர்களே! ஞானயோகமானது சொல்லவினதன்று; அந்த ஞானமானது துன்பமொழிந்து இவ்வண்ணம் மௌன நிலையிலிருந்து நம்மைச் சிந்தித்திருத்தலேயாகு மென்று அவர்கள் தெளிந்துகொள் ளும்படி அருளிச்செய்தனர்.—எ-று.

யாவருஞ் சிவபெருமானுக்குப் புத்திரர்களே யாயினும், ஈண்டிந்நால்வர் களும் தம்மையடைந்து மெய்ஞ்ஞானோபதேசம்பெற்ற சிஷ்யபுத்திரர்களாதலின், 'நன்னலமைந்தர்காள்' என்றுவிளித்தனரென்க. ஞானபோதகம் அவாங்மானசகோசர மாகலின், 'சொன்னடையன்று' என்றார். இந்நிலை-கல்லாலின் கீழெழுந்தருளியிருக் கும் இந்த ஞானயோகமுறைமை. உன்னுதல்-தியானித்தல். (௩௨)

கட்படு மிமைத்துணை காட்சி யோகினை
நுட்பம தாகமெய் நுதலிக் காட்டினோ
னொட்பமொ டிவ்வகை யுரைப்ப வாற்றவுந்
தெட்பம தடைந்தனர் விதியின் சேயினோர்.

(இ-ள்.) கண்ணிமைப்பொழுதளவு ஞானயோகத்தை நுட்பமாக உணர்த் திக்காட்டியருளிய சிவபெருமான் சிறப்புடனிவ்வாறு திருவாய்மலர்ந்தருளவும், பிரம புத்திரர்களாகிய சனகாதி முனிவர்கள் மிகவுந்தெளிவடைந்தார்கள்.—எ-று.

தெட்பம் - தெளிவு. விதி-சிருட்டித்தொழிலையுடையவன். (௩௩)

அந்தநல் வேலையி லாற்று நோன்பினோர்
சிந்தைகொ ளன்பொடு சிவன்பொற் றாண்முறை
வந்தனை செய்துநம் மருட்கை நீங்கியே
யுய்ந்தனம் யாமென வுரைத்துப் போற்றினார்.

(இ-ள்.) அந்தச்சமையத்தில் அருமையாகச்செய்த தவத்தினையுடைய சன காதி முனிவர்கள் உள்ளன்புடன் சிவபெருமானது அழகிய திருவடிகளை முறைப் படி வணங்கி, நமது மயக்கம் நீங்கி நாம் கடைத்தேறினோமென்று சொல்லித்துதித் தார்கள்.—எ-று.

ஆற்றுநோன்பினோர் என்பதனை, நோன்பாற்றினோர் எனப்பிரித்துக் கூட் டுக. முறைவந்தனை செய்தலாவது:— விதிப்படி அஷ்டாங்க பஞ்சாங்கமாக வணங் குதலாம். (௩௪)

போற்றறு மத்துணைப் புனித னின்னினி
யேற்றிடு நிட்டையி லிருந்து விடுதி
மேற்றிக ழெம்பத மேவு வீரெனச்
சாற்றினன் விடுத்தன னற்றவத் தினோர்தமை.

(இ-ள்.) இவ்வாறு துதிசெய்யவும், அப்பொழுது சிவபெருமான் இனிமேல் இசைவாகிய நிஷ்டையிலிருந்து பந்தநீங்கி மேலாகவிளங்குகின்ற எமது திருவடியை யடையக்கடவீர்களென் றருளிச்செய்து, அத்தவமுனிவர்களைத்தங்களிடத்திற் கனுப்பியருளினர்.—எ-று.

விடுறீஇ என்பது, ஈண்டு பந்தமொழிந்து என்னும் பொருளில்வந்தது. விடு - முத்தி யென்னும் பொருளதன்று; அது முதனிலைதிரிந்த தொழிற்பெயர். உறீஇ - இன்னிசை. சாற்றினன் - முற்றெச்சம். (கரு)

மோனநீங்குபடல முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - கசுசு.

---

உ

முருகன் றுணை.

# தவங்காண்படலம்.

தீதறு முனிமைந்தர் செல்லலு மதுபோழ்தின்
மாதவ நெறிநிற்கு மலைமக ளணியன்புங்
காதலு மெனையோர்க்குங் காட்டுத லருளாகிச்
சோதனை புரிவாரிற் றுண்ணென வெழலுற்றான்.

(இ-ள்.) குற்றமற்ற முனிவர்களாகிய புத்திரர்கள் விடைபெற்றுச்செல்லவும், அப்பொழுது, சிவபெருமான் மகத்தாகிய தவநெறியில் நிற்கின்ற பார்வதிதேவியாரது ஒப்பற்ற அன்பையும் விருப்பத்தையும் யாவர்களுக்குங் காட்டியருளத் திருவுள்ளங்கொண்டு பரீக்ஷிப்பவரைப்போன்று விரைந்து எழுந்தருளத்தொடங்கினர்.—எ-று.

சிவபெருமானிடத்து ஞானோபதேசம்பெற்று பந்தமொழியப்பெற்றவராகலின், 'தீதறுமுனிமைந்தர்' என்றார். துண்ணெனல்-விரைவுக்குறிப்பு. (க)

செறிதுவ ருடையாளன் சிகையின னணிநீற்றின்
குறியின னொளிர்நூலன் குண்டிகை யசைகைய
னுறைபனி கதிர்போற்று மோலைய னுயர்கோலன்
மறைபயின் முதியோர்போல் வடிவிது கொடுபோனான்.

(இ-ள்.) நெருங்கிய காவி வஸ்திரத்தையுடையவரும், சிகையையுடையவரும், அழகிய திருவெண்ணீற்றடையாள முடையவரும், விளங்குகின்ற பூணூலை யணிந்தவரும், கமண்டலமசையுந் திருக்கரத்தையுடையவரும், மழை - பனி-வெயில் (இவைகள் தம்மேற்படாமல்) பாதுகாக்கின்ற ஓலைக்குடையினை யுடையவரும், உயர்ந்ததண்டத்தை யுடையவருமாகிய வேதமோதும் விருத்த வேதியரைப்போன்று இத்தகைய திருவுருவங்கொண்டு சென்றருளினர்.—எ-று.

சிவபெருமானுக்கு வெள்ளுடையேயன்றித் துவருடையுமுடைமையால், செறிதுவருடையாளன், என்றார். துவருடை என்றது, காவிவஸ்திரத்தை, அது சிவபெருமானுக்குண்டென்பதனை:—" காமனைமுனிந்து நெடுஞ்சடைதரித்துக் கவின்ற கல்லாடைமேற் புனைந்தி - யாமெலாம் வழுத்துந் துறவியென் றிருந்து மொருத்திதனிளமுலைச் சுவடு - தோமுறக் கொண்டா ரெனச்சிறை யிடல்போற் சுடர்மனக்

குழையுளை சம்பத் - தொமொழிப் பொருளை யடக்கியானந்த முறுநர்வா ழிடம்பலவு ளவால்'' என்னுங் காஞ்சிப்புராணத்தாலு முணர்க. 'உறை பனிகதிர்போற்று மோலையன்' என்பதற்கு, குளிர்ச்சியமைந்துள்ள சந்திரனுக் துதிக்கத்தக்க சங்ககுண்டலமுடையவர் எனப் பொருள்கூறுவாருமுளர். (௩.)

போயின ரிமையத்திற் புவனமோ டுயிர்கள்ருந்
தாய்தளர் வொடுநோற்குஞ் சாலையி னிடையாரந்
தூயவ ரிவரென்றே தோகையர் கடைகாப்போ
ராயவர் பலர்வந்தே யடிதொழு துரைசெய்வார்.

(இ-ள்.) இமையமலையிற் சென்று, சர்வலோகங்களையும் அவற்றிலுள்ள ஆன்மகோடிகளையுமீன்றருளிய உமாதேவியார் தளர்ச்சியோடு தவஞ்செய்கின்ற சாலையினிடத்துச்செல்ல, உடனே, இவர் மகாபரிசுத்தரென்றுகருதி, (கன்னிகாமடத்தின்) வாயில்காப்பவராகிய பலமாதர்கள்வந்து திருவடிகளை வணங்கிச்சொல்லுகின்றார்கள்.

சிவபெருமான் இன்னுந் திருவருள்புரிந்திலரோ யென்று வருந்தி நோற்கின்றமையின், 'தாய்தளர் வொடுநோற்குஞ் சாலை' என்றும், திருவெண்ணீறணிந்து சிவவேடமுடையவராய் வருதலின், 'தூயவரிவர்' என்றும், வாயில்காப்போர் பலருளராகலின், 'தோகையர் கடைகாப்போ ராயவர் பலர்வந்து' என்றுங்கூறினர். சாலை-இடம்.

தளர்நடை முதியீரித் தடவரை யிடைசேற
லெளிதல வடிகேள்வந் தெய்திய தெவனென்ன
வளமலை யரசன்றன் மகள்புரி தவநாடற்
குளமுட னிவண்வந்தே னுவகையி னுடனென்றான்.

(இ-ள்.) தளர்ந்தநடையினையுடைய வயோதிகரே! இப்பெரியமலையினிடத்து வருதல் சுலபமானகாரியமன்று. சுவாமிகளே! தாங்கள்வந்தடைந்தது யாதுகாரணமென்று வினவ, (சிவபெருமான்) வளவிய பர்வதராஜபுத்திரி செய்கின்ற தவத்தை விசாரிக்கவேண்டு மென்னு மெண்ணத்தால் மகிழ்வுட னிவ்விடத்திற்கு வந்தோமென்று அருளிச்செய்தார்.—எ-று.

பனிசார் மலைபாகலின் அன்னியரொருவரும் வருதற்கருமையால், 'இத்தடவரையிடை சேற லெளிதல' என்றார். எவன் என்பது, வினாவினைக்குறிப்புமுற்று. (௪)

என்றலு மினிதென்றே யிமையவ ளிடைசில்லோர்
சென்றனர் கிழவோன்றன் செயலினை யறைகாலை
யொன்றிய முதியோரே லுய்க்குதி ரிவணென்ன
நின்றவொர் பெரியோனை நேரிழை முனமுய்த்தார்.

(இ-ள்.) இவ்வாறருளிச் செய்யவும், நன்றென்று சில மாதர்கள் பார்வதிதேவியாரிடத்திற் சென்று வயோதிகப்பிராமணரது செய்கையைக் கூறியவுடனே, (அவ்வம்மையார்) பொருந்திய விருத்தராயின் இங்கழைத்துவாருங்களென்று கூறியருள, (அம்மாதர்கள்) நின்றுகொண்டிருந்த அவ்விருத்தவேதியரை பார்வதிதேவியார் திருமுன்னே யழைத்துவந்தார்கள்.—எ-று.

பாலியர்கள் வருதல் கூடாமையின், 'முதியோரேலுய்க்குதிர்' என்றார். (௫)

உய்த்தலு மிவரெந்தைக் குருபரி னெனவென்றே
பத்திமை படுபாலாற் பார்ப்பதி தொழலோடு
மெய்த்துணை யெனநின்ற விசயையொர் தவிசிட்டு
நித்தனை யுறைவித்தா ளிமலையு மயனின்றாள்.

(இ-ள்.) அவ்வாறழைத்துவந்தவுடனே, உமாதேவியார் இவர் சிவபெருமானுக்குப் பொருந்திய அன்பரென்றுகருதி பக்தியோடு வணங்கவும், மெய்ம்மையாகிய தோழியாகவிருந்த விசயையென்பவளொரு ஆசனமிட்டுச் சிவபெருமானை அதிலிருக்கச்செய்தனள்; உமாதேவியாரும் அருகில் நின்றனர்.—எ-று.

சிவனென்ன முடையரா யிருத்தலின், 'எந்தைக்குறு பரிவின ரென்றே' என்றும், சிவனடியார்களை வணங்குதல் சிவனை வணங்கலோ டொப்பன வாகலின், 'பத்திமை படிபோலாற் பார்ப்பதி தொழலோடும்' என்றும், தோழியர் பலருள்ளுஞ் சிறந்த வுயிர்த்தோழியாகலின், 'மெய்த்துணையெனநின்றவிசயை' என்றும், சிவனடியார்களடையின் அவர்களை உதாசினஞ்செய்து நீங்கியிருத்தல் கூடாமையின், 'நிமலையுமயனின்றாள்' என்றுங் கூறினார். (௬)

அப்பொழு துமைதன்னை யாதர வொடுபாராச்
செப்புத லரிதாமுன் றிருநல னழிவெய்த
மெய்ப்படு தசையொல்க மிகுதவ முயல்கின்றா
யெப்பொருள் விழைவுற்றா யெண்ணிய துரையென்றான்.

(இ-ள்.) அப்பொழுது (சிவபெருமான்) உமாதேவியாரை விருப்பத்துடன் பார்த்தருளிச் சொல்லுதற்கரிய உனது நல்லழகுகெடவும், சரீரத்திலுள்ள தசைவற்றவும் மிக்க தவஞ்செய்கின்றனை, எப்பொருளை விரும்பினை, நினைத்துள்ளதைச் சொல்லக்கடவையென்றருளிச்செய்தார்.—எ-று.

தவத்தால் அழகுந் திருமேனியும் வாடியிருத்த லியல்பாகலின், 'திருநலனழிவெய்த மெய்ப்படு தசையொல்க' என்றார். (எ)

வேறு.

முடிவி லானிவை யுரைத்தலும் விசயையை முகநோக்கிக்
கொடியி னெல்கிய நுசுப்புடை யுமையவள் குறிப்பாலே
கடிதி னீங்கிவர்க் கெதிர்மொழி யீகெனக் கண்காட்ட
வடிய னேற்கிது பணித்தன ளெனவறிந் தவள்சொல்வாள்.

(இ-ள்.) அழிவற்றவராகிய சிவபெருமான் இவ்வார்த்தைகளை யருளிச்செய்யவும், பூங்கொடிபோலுந் துவள்கின்ற இடையினையுடைய உமாதேவியார் விசயையென்பவளைப்பார்த்து, இவர்க்கு விரைவில் பதில் கூறுகவென்று குறிப்புடன் கண்சாடைசெய்யவும், (அம்மையார்) அடியேனுக்கிதனைக் கட்டளையிட்டருளினரென்றறிந்து அவ்விசயை சொல்வாளாயினள்.—எ-று.

ஈகென என்பது, தொகுத்தல்விகாரம். (அ)

மன்னு யிர்க்குயி ராகிய கண்ணுதன் மணஞ்செய்து
தன்னி டத்தினி லிருத்தினன் கொள்வதே தானுன்னிக்
கன்னி மெய்த்தவ மியற்றின ளென்றுகா தலிகூற
முன்ன வர்க்குமுன் னனவ னகைத்திவை மொழிகின்றான்.

(இ-ள்.) நிலைபெற்ற உயிர்க்குயிராக விளங்கும் சிவபெருமான் திருமணம் புரிந்து தமதிடப்பாகத்தி லமைத்துக்கொள்ளவேண்டுமென்று நினைத்து இவ்வம்மையார் மெய்ம்மையாகிய தவஞ்செய்தனளென்று விசயைகூற, முன்னைப்பழம்பொருட்கு முன்னைப்பழம்பொருளாயுள்ள சிவபெருமான் நகைசெய்து இவ்வார்த்தைகளை யருளிச்செய்கின்றார்.—எ-று.

சிவபெருமான் அநாதிநித்த சித்துருவா யுள்ளவ ராகலின், ‘முன்னவர்க்கு முன்னானவன்’ என்றார். இதனை :—“முன்னைப் பழம்பொருட்கு முன்னைப் பழம் பொருளே - பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே” என்றும், “மூப்பா னிளையவன் முன்னவன் பின்னவன் மூவுலகுங் காப்பான்” என்றும் வரும் வாதவூர டிகள் திருவாக்கானு மறிக. (௯)

புவிய ளித்தருண் முதல்வரு நாடரும் புனிதன்று
னிவட வத்தினுக் கெய்துமோ வெய்தினு மிவளையாளோ
யவன்வி ருப்பொடு மணையுமோ வுமையவ ளறியாமே
தவமி யற்றின ளெளியனோ சங்கரன் றனக்கம்மா.

(இ-ள்.) உலகத்தைப்படைத்துக்காக்குந் தலைவர்களாகிய பிரம விஷ்ணுக் களுந் தேடுதற்கரிய சிவபெருமான் இவளது தவத்திற்குப் பிரசன்னமாவரோ? அவ் வாறு ஆயினும் இவளை அவர் விருப்பத்துடன் மணம்புரிவாரோ? இதனை இவ்வுமைய வள் தெரியாமலே தவஞ்செய்தனள்; சிவபெருமான் இவளுக்கெளிதானவரோ?-எ-று.

‘புவியளித்தருண்முதல்வர்’ என்பதனை, புவியையளித்தற்றொழிலையுடைய பிரமனாகிய முதல்வனும், புவியை யருளற்றொழிலையுடைய திருமாலாகிய முதல்வ னும் எனப் பொருள்கொள்க. அளித்தல் - சிருஷ்டித்தலும், அருளல் - காத்தலுமாம். இவ் விருதொழிலையு முடைய பிரமவிஷ்ணுக்கள் முத்தொழிற்குரிய மூவரு ளிருவரா யெண்ணப்பட்டவ ராகலின், ‘முதல்வரும்’ என்றனர். உம்மை முற்றுப்பொருளது.

அல்லல் பெற்றிட நோற்றிடு பகுதியா லாம்பாலொன்
றில்லை யித்துணைப் பெறலரும் பொருளிவட் கெளிதாமோ
பல்ப கற்றன டெழினலம் வறிதுபட் டனவன்றோ
வொல்லை யித்தவம் விடுவதே கடனினி யுமைக்கென்றான்.

(இ-ள்.) வருந்தும்படி தவஞ்செய்வதனால் ஆவதொன்றுமில்லை,இத்தகைய பெறுதற்கரிய சிவபெருமான் இவளுக்கு எளிதில்கிடைப்பரோ? அநேககாலம் தன து பேரழகு வீணாயிற்றல்லவோ? இனி இவ்வுமையவள் இந்தவத்தை விடுவதேதகுதி யென்றருளிச்செய்தனர்.—எ-று.

“உணர்ந்தார்க் குணர்வரியோன் றில்லைச்சிற்றம் பலத்தொருவன்” என்ற படி சிவபெருமான் அறிவதற்கரியவராகலின், ‘இத்துணைப் பெறலரும் பொருளிவட் கெளிதாமோ’ என்று கூறினர். பால் - பிரயோசனம். (௧௧)

இந்த வாசகங் கேட்டலு மெம்பிராற் கிவரன்ப
ரந்தண் மாமுது குரவரென் றுன்னின னறியேனால்
வந்து வெம்மொழி கூறுத லெனச்சின மனங்கொண்டு
நொந்து யிர்த்துநா ணிக்கியே பொறுத்தமை நுவல்கின்றாள்.

(இ-ள்.) இவ்வார்த்தையைக் கேட்டவுடனே உமாதேவியார் எமது பெரு மானுக்கு இவர் அன்பரென்றும், அந்தணர் குலத்தினராகிய மிக்க பெரியவரென்றும், நினைத்தேன், இங்குவந்து இத்தகைய கொடுமொழி கூறுவாரென்று அறியேனென்று மனத்திற் கோபங்கொண்டு வருந்திப் பெருமூச்சுவிட்டு நாணமொழிந்து மனம் பொ றுது கூறுகின்றார்.—எ-று. (௧௨)

முடிவிலாதுறை பகவனென் வேட்கையை முடியாது
விடுவ னென்னினுந் தவத்தினை விடுவனோ மிகவின்னம்

கடிய நோன்பினை யளப்பில செய்துயிர் கழிப்பேனே
னெடிது மூத்தலின் மயங்கினை பித்தனோ நீயென்றான்.

(இ-ள்.) நித்தியராயுள்ள சிவபெருமான் எனது விருப்பத்தை நிறைவேற்றாது விடுவாராயினும் யான் தவத்தை விடுவேனோ? இன்னுங் கொடிய அநேகவிரதங்களை யனுஷ்டித்து உயிரை விடுவேன். மிகவும் வயதுசென்றமையால் மயக்கங்கொண்டனை; நீ பயித்தியக்காரனோவென்று கூறியருளினார்.—எ-று. (௧௩)

ஈட்டு மாருயிர்த் தொகையெலா மளித்தவ ளினைகூற
மீட்டு மோர்புணர்ப் புன்னியே மாதுநீ வெஃகுற்ற
நாட்ட மூன்றுடைப் பிஞ்ஞகன் வளத்திய னன்றாய்ந்து
கேட்டி லாய்கொலா முணர்த்துவ னஃதெனக் கிளக்கின்றான்.

(இ-ள்.) வினைகளைச்செய்கின்ற அரிய உயிர்க்கூட்டங்களையெல்லாம் ஈன்றருளிய உமாதேவியார் இவ்வார்த்தை கூறியருளலும், (சிவபெருமான்) பின்னுமோருபாயத்தைக் கருதி, பெண்ணே! நீ விரும்பிய திரிநேத்திரராகிய சிவபெருமானது செல்வத்தினியல்பை நன்றாய் விசாரித்துக் கேட்டிலையோ? அதனைத் தெரிவிக்கின்றேனென்று அருளிச்செய்கின்றார்.—எ-று.

வெஃகுதல் - விரும்புதல். பிஞ்ஞகன் - தலைக்கோலமுடையவன். கொல்-ஐயம். (௧௪)

ஆடை தோல்விடை யேறுவ தணிகல னரவென்பு
கேடில் வெண்டலை மாலிகை கேழலின் மருப்பின்ன
வோடு கொள்கல மூண்பலி வெய்யநஞ் சுலப்புற்றோர்
காட தேநடம் புரியிடங் கண்ணுதற் கடவுட்கே.

(இ-ள்.) சிவபெருமானுக்கு உடை-தோல்; வாகனம்-இடபம்; ஆபரணம்-பாம்பு-எலும்பு-கெடாத வெண்டலைமாலை - பன்றிக்கொம்பு இவை முதலியன; பாத்திரம்-மண்டையோடு; உணவு-பிச்சையும், கொடிய விஷமும்; நடனசாலை இறந்தவர்களுடைய சுடுகாடேயாகும்.—எ-று.

சிவபெருமான் தோல் முதலியவற்றை யணிந்த காரணங்களை மேல் வரும் தக்ஷகாண்டம் ததீசியுத்தரப்படலத்தில் விளங்கக் கூறியிருத்தலின் ஆண்டுக் காண்க. ஓடு - ஈண்டுப் பிரமகபாலத்தின்மேனின்றது. (௧௫)

வேய்ந்து கொள்வது வெள்ளெருக் கறுகுநீர் வியன்கொன்றை
பாந்த ணொச்சியே மத்தமென் றினையன பலவுண்டாற்
சாந்தம் வெண்பொடி சூலமான் மழுத்துடி தழலங்கை
யேந்து கின்றது பாரிடஞ் சூழ்படை யிறையோற்கே.

(இ-ள்.) சிவபெருமானுக்குத் தரித்துக்கொள்வது வெள்ளெருக்கு-அறுகு-கங்கை-பெரிய கொன்றை - பாம்பு - நொச்சி-ஊமத்தை என்றித்தகையன பலவுண்டு. பூசுஞ்சாந்து வெள்ளிய சாம்பற்பொடி - அழகியகையிலேந்தப்படுவன சூலம் - மான்-மழு-தமருகம்-அக்கினி என்பவை. சூழ்ந்துள்ள சேனை பூதங்களாகும்.—எ-று.

மத்தம் - ஊமத்தை. துடி - தமருகம். (௧௬)

அன்னை தாதைகேள் வடிவொடு குணங்களி லனையானுக்
கின்ன வாகிய பலவள னுண்டவை யெவையுந்தா
நின்ன வாகவோ தவம்புரிந் தெய்த்தனை நெடுந்தொல்சீர்
மன்னன் மாமகட் கியைவதே யித்துணை வழக்கென்றான்.

(இ-ள்.) தாயும் தந்தையும் பந்துவும் உருவமும் குணமும் இல்லாத அந்தச் சிவனுர்கு இத்தன்மையாகிய பல செல்வங்களுண்டு; அவையனைத்தும் உனக்கு வேண்டுமென்று கருதியோ தவஞ்செய்திளைத்தனை ; உயர்ந்த பழைமையாகிய சிறப்பினையுடைய இராஜபுத்திரிக்கு இத்தகைய சுபாவம் தகுந்ததோவென்று திருவாய்மலர்ந்தருளினுர்.—எ-று.

'அன்னை தந்தைசேர் வடிவொடு குணங்களி லனையான்' என்பதனை:— "கோயில் சுடுகாடு கொல்புலித்தோ னல்லாடை - தாயுமிலி தந்தையிலி தான்றனியன் காணேடீ" என்றுந் திருவாசகத்தாலும், "குலமி லான்குணங் குறியிலான் குறைவிலான் கொடிதாம் - புலமி லான்றனக் கென்னவோர் பற்றிலான் பொருந்து - மிலமி லான்மைந்தர் மனைவியில் லானென வனவன்சஞ் - சலமி லான்முத்தி தரும்பர சிவனெனத் தகுமே" என்றுந் தாயுமானுர் திருவாக்காலு மறிக. (கஎ)

வேறு.

புரங்கண்முன் றினையு மட்ட புங்கவ னினையகூற
வரங்கண்மிக தகைய வெற்பின் மடமயில் கேட்ட லோடுங்
கரங்களாற் செவிகள் பொத்திக் கன்றுத லுமம் போற்றி
யிரங்கிவெஞ் சினத்த ளாகி யிடருழந் திவைய சொல்வாள்.

(இ-ள்.) முப்புரங்களையுமெரித்தருளிய சிவபெருமானிவ்வா றருளிச்செய்யவும், மிக்கசிறப்பினையுடைய பார்வதிதேவியார்கேட்டவுடனே, கைகளால் செவிகளை மூடிக்கொண்டு சிவசிவ வென்று இரக்கத்துடன் துதித்து மிகுந்த கோபங்கொண்டவராய் வருந்தி இவ்வாறு கூறுகின்றுர்.—எ-று. (கஅ)

கேட்டியா லந்தணுள கேடிலா வெம்பி ரான்றன்
மாட்டொரு சிறிது மன்பு மனத்திடை நிகழ்ந்த தில்லை
காட்டுறு புள்ளின் குழல் கவருவான் புதன்மேற் கொண்ட
வேட்டுவ னியல்போன் மேலோன் வேடநீ கொண்ட தன்மை.

(இ-ள்.) வேதியனே! கேட்பாயாக, அழிவற்ற எமது சிவபெருமானிடத்தில் அன்பு சிறிதும் உன் மனத்தில் தோன்றவில்லை. சிவவேடத்தை நீதரித்திருப்பது (எதுபோலுமெனின்,) வனத்திலுள்ள பறவைக்கூட்டங்களைப் பிடிக்கும்பொருட்டுப் புற்களைத் தன்மேற் போட்டிருக்கும் வேடனுடைய தன்மைபோலாகும்.—எ-று.

மாட்டு - எழனுருபு. புதல் - புல். (ககூ)

நேசமி லாது தக்க னிமலனை யிழித்து நின்போற்
பேசிய திறனு மன்னுன் பெற்றதுங் கேட்டி லாயோ
யீசனை யிங்கு னென்முு னிகழ்ந்தனை யிந்நாள் காறு
மாசறு மறைக ளோது மாய்ந்தில போலு மன்றே.

(இ-ள்.) உன்னைப்போல அன்பில்லாமல் தக்ஷன் சிவபெருமானை இழிவாகப் பேசியதையும், அப்படி பேசியதனுல் அவனடைந்த பயனையும் நீ கேட்கவில்லையோ? இங்கு எனக்கு எதிரில் சிவபெருமானை யிகழ்ந்துகூறினுய், இதுவனாயில் குற்றமற்ற எந்தவேதங்களையு மாராய்ந்தறிந்திலைபோலும்.—எ-று.

தக்ஷன் அன்பின்றிச் சிவபெருமானை இகழ்ந்துகூறி யடைந்த துன்பத்தை இப்போ திகழ்ந்துகூறிய நீயு மடையவேண்டி வருமென்று குறிப்பித்தன ரென்பார், 'தக்க னிமலனை யிழித்து நின்போற் பேசிய திறனு மன்னுன் பெற்றதுங் கேட்டிலாயோ' என்றும், வேதவாராய்ச்சி யிருப்பின் இவ்வாறு கூறுயென்பார், 'மாசறு மறைக ளோது மாய்ந்தில போலும்' என்றுங் கூறினுர். (உ0)

முறைபடு சுருதி யெல்லா மொழியினு மதுவே சார்வா
வுறுகில ராகிப் பொல்லா வொழுக்கமே கொண்டு முக்க
ணிறைவனை யிகழ்ந்து முத்தி யெய்திடா தழல முன்னாள்
மறையவர் பெற்ற சாப நின்னையு மயக்கு றாதோ.

(இ-ள்.) முறையாகப் பொருந்திய வேதங்களனைத்தும் ஒலிலும் அவ்வேத முறையினைச் சார்பாகக்கொண் டொழுகாதவர்களாய்த் தீயவொழுக்கத்தைக் கைக்கொண்டு சிவபெருமானையிகழ்ந்து முத்தியடையாமலுழலும்வண்ணம் முற்காலத்தில் மறையவர்கள் பெற்றிருக்கும் சாபமானது உன்னையும் மயக்காது விடுமோ?.—எ-று.

'முத்தி யெய்திடா துழல முன்னாண் மறையவர் பெற்றசாபம்' என்பதன் வரலாற்றை மேல் ததீசிப்படலத்திலும், சூதசங்கிதை முதலிய நூல்களிலுங்காண்க.

தாதையாய்த் தம்மை நல்கித் தந்தொழிற் குரிய னாகி
யாதியாய்த் தங்கட் கின்றி யமைவுறாச் சிவனை நீங்கி
யேதிலார் பக்க மாகி யில்லொழுக் கிறந்தார் போலும்
வேதியர் முறையே செய்தாய் வெறுப்பதெ னின்னை யானே.

(இ-ள்.) பிதாவாகவிருந்து தங்களைப் பெற்றுத் தங்கள் தொழிலுக்குரிமை யுடையவராய் முதல்வராகித் தங்களுக்கு இன்றியமையாதவராயுள்ள சிவபெருமானை விட்டு அன்னியராகிய பிரமாதி தேவர்கள் பக்ஷத்திற் சேர்ந்து இல்லொழுக்கங் கெட்டவர்களைப்போன்றுள்ள அந்தணர்களது முறைமையினையேநீயுஞ் செய்தனை; (இதற்காக) நின்னை யான் வெறுப்பதேன்.—எ-று.

சிவசின்னந் தரித்துச் சிவபெருமானை தூஷிக்கும் வேதியர்கள், தங்கணவனைவிட்டொழிந்து அன்னியபுருஷர்களோ டின்பமனுபவிக்குங் கற்பில் மாதரை யொப்பாவரென்பது கருத்து. (உஉ)

ஆயினு மறையோர் தம்மி னருமறை முறையே வேடந்
தூயன தாங்கி யெங்கோன் றொண்டுசெய் வோரு முண்டா
னீயவர் தன்மைத் தாயு நித்தனை யிகழ்ந்தா யென்னிற்
றீயவ ருனைப்போ லில்லை யவுணர்தந் திறத்து மாதோ.

(இ-ள்.) ஆயினும், பிராமணர்களுக்குள் வேதவிதிப்படி பரிசுத்தமாகிய சிவவேடந் தரித்து எமது சிவபெருமானுக்குத் தொண்டுசெய்பவர்களுமுண்டு, நீஅவர்களைப்போன்றிருந்தும் சிவபெருமானைப் பழித்தனை; அதனால் அசுரர்களிலும் உன்னைப்போன்ற கொடியவர்களில்லை.—எ-று.

புறச்சமயச் சின்னந் தரித்தோர் சிவதூஷணஞ் செய்த வியற்கை, நீ அங்ஙனமின்றிச் சிவசின்னங்களைத்தரித்தே சிவபெருமானைத்தூஷிக்கின்றனையாகலான், உன்னைப்போலும் வஞ்சகர்கள், கபடமாயாசொரூபர்களாகிய அசுரர்களிலும் ஒருவருமிலரென்று கூறின னென்க. (உங)

வேண்டுதல் வேண்டி டாமை யில்லதோர் விமலன்றன்னை
யீண்டுநீ யிகழ்ந்த வெல்லாம் யாரையு மளிக்கு மன்பு
பூண்டிடு குறிகா ணற்றாற் புகழ்ச்சியா மன்றி முக்க
ணாண்டகை யியற்கை யெல்லா மார்கொலோ வறிய கிற்பார்.

(இ-ள்,) விருப்புவெறுப்பற்ற சிவபெருமானைக்குறித்து இங்கு நீ யிகழ்ந்து கூறியவை யனைத்தும் யாவரையுங் காக்கின்றதற்காக அன்புபூண்டிருக்குங் குறிப்பே யாகும்; அதனால் புகழேயுள்ளது; இதுவன்றியும் மூன்றுகண்களையுடைய சிவபெருமானது இயற்கைக்குணங்களனைத்தும் அறியத்தக்கவர் யாவர்.—எ-று.

‘வேண்டுதல் வேண்டாமை யில்லதோர் விமலன்’ என்பதனை—“வேண்டுதல் வேண்டாமை யிலானடி சேர்ந்தார்க் - கியாண்டு மிடும்பையில” என்னுந் திருக்குறளானுமறிக. சிவபெருமா னணிந்துகொள்ளுஞ் சாமானியப்பொருளாக நீ யிகழ்ந்து கூறியவை யனைத்தும், ஆன்மகோடிகளைக் காத்தருளுங் காருண்ணிய முடையா னென்பதை யுணர்த்துதற்குரிய வடையாளமாமென்பார், ‘யாரையுமளிக்குமன்பு பூண்டிடுகுறிகாண்’ என்றும், அவற்றால், எம்பெருமானுக்குச் சிறிதும் பழிப்புறாதென்பார், ‘அற்றூற்புகழ்ச்சியாம்’ என்றும், சிவபெருமானது காருண்ணியவிலக்கணங்களைத் தாந் திருமால் முதலிய தேவர்களாலும் வேதங்களாலு மளவிட்டுரைத்த லருமையாயின், சாமானியனாகிய உன்னாலறியக்கூடுமோ வென்று குறிப்பிப்பார், ‘முக்கணண்டகை யியற்கையெல்லா மார்கொலோ வறியகிற்பார்’ என்றுங் கூறினர். (உச)

போதனை முதலா வுள்ள புங்கவர் வழிபட் டேத்த
ஏதமி லிறைமை யாற்ற லியாவையும் புரிந்த நாதன்
காதலும் வெறுப்பு மின்றிக் கருணைசெய் நிலைமை யேகாண்
பேதைநீ யிகழ்ச்சி யேபோற் பேசிய தன்மை யெல்லாம்.

(இ-ள்.) பேதையே நின்னால் இகழ்ச்சிபோலக் கூறம்பட்டவை அனைத்தும் பிரமன் முதலிய தேவர்கள் வழிபாடுசெய்து துதிக்க, குற்றமற்ற முதன்மை வல்லமைமுதலிய வெவற்றையும் கொடுத்தருளிய சிவபெருமான் விருப்பு வெறுப் பின்றித் திருவருள் புரியுந்தன்மையேயாகும்.—எ-று.

இவ்வாறு நீ இகழ்ந்துகூறியவை யனைத்தினையுஞ் சிவபெருமான் கொண்டருளினமை பிரமாதிதேவர்களதுவேண்டுகோட்கிரங்கி யவர்கட்கருள்செய்யக் கொண்டகோலமேயன்றித் தமக்கென விரும்பித் தரித்திலவென்று கூறினவென்க. (உரு)

இம்முறை மறைக ளாதி யிசைத்தன வினைய வெல்லாஞ்
செம்மைகொ ளுணர்வி னன்றோர் தெளிகுவ ரிறையை யெள்ளும்
வெம்மைகொள் குணத்தாய் நிற்கு விளம்பொணா விளம்பிற் பாவம்
பொய்ம்மறை வேடத் தோடும் போதிநீ புறத்தி லென்றான்.

(இ-ள்.) இவ்வாறே வேதமுதலியகலைகள் கூறுகின்றன. இவையனைத்தும் நல்லுணர்ச்சியையுடைய மேலோர்களறிவார்கள். சிவபெருமானைப் பழித்துக்கூறும் தீக்குணத்தையுடையோய்! (இவைகளை) நினக்குரைத்தல் தகாது; கூறினும் பாவமாம். பொய்யமறைத்துவந்த வேஷத்துடனே நீ வெளியே போகக்கடவையென்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று.

இவ்வாறு பதிவாக்காகிய வேதங் கூறுமென்பார், ‘இம்முறை மறைகளாதி யிசைத்தன’ என்றும், இவ்விரகசியத்தினை மெய்ஞ்ஞானிகளே நன்குணரத்தக்கவர்களென்பார், ‘இனையவெல்லாஞ் செம்மைகொ ளுணர்வினன்றோர் தெளிகுவர்’ என்றும், இதனைத் தீயவர்கட் குணர்த்தின் அவர்கள் மனந்தெளிந்து தேறாமையின், அதனால் பாவமாதலையா லுனக்குணர்த்துதல் கூடாதென்பார், ‘வெம்மைகொள் குணத்தாய்நிற்கு விளம்பொணா விளம்பிற் பாவம்’ என்றும், “தீயாரைக் காண்பதுவுந் தீதே” என்றபடி உன் முகத்தைப் பார்த்தலும் மிகக்கொடியதாகலின், நீ வெளியேபோய்விடென்று சினந்துரைத்தன னென்பார், ‘பொய்ம்மறைவேடத்தோடும் போதிநீ புறத்தி லென்றான்’ என்றுங் கூறினர். (உசு)

அறத்தினைப் புரிவா னிவ்வா றறைதரு மணங்கே யிங்குன்
திறத்தினி லார்வஞ் செய்து சென்றவன் செயல்கே ளாது

புறத்திடைப் போதியென்றி புரைவிறோ புருந்த பான்மை
மறைச்சடங் கியற்றி நின்னை வரைந்திடற் காகு மென்முன்.

(இ-ள்.) முப்பத்திரண்டு தருமங்களையுஞ் செய்தருளிய உமாதேவியாரிவ் வாறு கூறியருளவும், (சிவபெருமான்) பெண்ணே! இவ்விடத்தில் உன்விஷயத்தி லாசைகொண்டுவந்த எனது வார்த்தையைக்கேளாமல் வெளியிற்போவென்று கூறி னாய்; இது சரியோ? யான்வந்த தன்மை வைதிக சடங்குகளைச் செய்து உன்னை மணம்புரியும்பொருட்டேயாகுமென் றருளிச்செய்தார்.—எ-று.

சிவபெருமான் நான் உன்னைத் திருமணஞ் செய்துகொள்ளும்படி இங்கு வந்திருக்க நீ போவென்றுரைத்தல் தகுதியோ வென்று கூறினரென்க. இங்கு என் பது முதனிலீண்டது. சடங்கு - கிரியை. (உஎ)

வஞ்சக முதல்வன் சொற்ற வாசக மிறைவி கேளா
வஞ்செவி பொத்தி யாற்று தழுங்கிமெய் பதைப்ப விம்மி
யெஞ்சலின் முதியோன் போகா னேகுவன் யானே யென்னாப்
பஞ்சடி சேப்ப வாண்டோர் பாங்கரிற் படர்த லுற்றாள்.

(இ-ள்.) கபடவேடங்கொண்டுவந்த சிவபெருமானருளிச்செய்த வார்த்தை களைப்பார்வதி தேவியார் கேட்டருளி, அழகிய செவிகளை மூடிச்சகிக்காமல் வருந்தி, தேகம்பதைப்ப விம்முதலடைந்து நிறைந்த (வயதினையுடைய) இப்பெருங்கிழவன் போகமாட்டான்; யானேபோகின்றேனென்று கூறினவராய், செம்பஞ்சின் குழம் பூட்டிய திருவடிகள் சிவக்கும்படி அம்மலையினொரு புறத்திற்சென்றனர்.—எ-று.

பஞ்சடி என்பதற்கு, பஞ்சுபோலும் மென்மைத்தன்மையை யுடைய பாதம் எனப் பொருள்கூறலு மொன்று. (உஅ)

படர்ந்தனள் போத லோடும் பனிபடு மிமையம் வைகு
மடந்தைதன் னியற்கை நோக்கி வரம்பிலா வருண்மீ தூர
வடைந்தறொல் பனவக் கோல மகன்றுமால் விடைமேல் கொண்டு
தொடர்ந்துபல் கணங்கள் போற்றத் தோன்றினன் றொலைவிலாதோன்.

(இ-ள்.) (இவ்வாறு) நடந்துசெல்லவும், பனிக்கட்டிகள் பொருந்திய இமா சலத்திலெழுந்தருளியிருக்கும் உமாதேவியாரது தவவுறுதியைப்பார்த்து, அழிவற்ற சிவபெருமான் அளவற்ற கருணைமிகுதியாகவந்த பிராமணவேடத்தி னின்று நீங்கி திருமாலாகிய இடபவாகனத்தெழுந்தருளி அநேக சிவகணங்கள் சூழ்ந்து துதிக்கக் காட்சிகொடுத்தருளினர்.—எ-று.

படர்ந்தனள் - முற்றெச்சம். பனிபடும் என்பதற்கு, குளிர்ச்சி பொருந்திய எனப் பொருள்கூறலு மொன்று. மால்விடை என்பதற்கு, பெரிய இடபம் எனப் பொருள்கூறினுமாம். (உகூ)

தொலைவறு பகவன் வான்மீத் தோன்றலுந் துளங்கி நாணி
மலைமகள் கண்டு பல்கால் வணங்கியஞ் சலியாற் போற்றி
யலகிலா வுணர்வா லெட்டா வாதிநின் மாயை தேறேன்
புலனிலாச் சிறியே னின்னை யிகழ்ந்தவா பொறுத்தி யென்றாள்.

(இ-ள்.) கெடுதலில்லாத சிவபெருமான் ஆகாயத்தில் காட்சிதந்தருளவும் உமாதேவியார் தரிசித்து நடுங்கி வெட்கமுற்று அஞ்சலியஸ்தராய்ப் பலமுறைவணங் கித் துதித்து அளவற்ற பேருணர்ச்சியினுல் எட்டுதற்கரிய பெருமானே! தேவரீ

ருடைய மாயாவிலாசத்தை அறியேன். அறிவில்லாத சிறியேனாகிய யான் தேவரீரை இகழ்ந்தவைகளைப் பொறுத்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தனர்.—எ-று. (கூ0)

நற்றவ மடந்தை கேண்மோ நம்மிடத் தன்பா னீமுன்
சொற்றன யாவு மீண்டே துதித்தன போலக் கொண்டாங்
குற்றமுண் டாயி னன்றே பொறுப்பது கொடிய நோன்பான்
மற்றினி வருந்த லீண் மணஞ்செய வருது மென்றான்.

(இ-ள்.) நல்லதவத்தினையுடைய மாதே! கேட்பாயாக; நம்மிடத்துப்பொருந்திய அன்பினாலே நீ முன்பு கூறியவார்த்தைகளனைத்தும் இவ்விடத்துத் துதிசெய்தனபோல அங்கீகரித்தோம்; (நீகூறியவற்றிற்) குற்றமிருப்பினன்றோ? யாம் பொறுத்தல்வேண்டும். இனிகொடிய தவத்தினால் வருந்தாதே, நாளைக்கு மணஞ்செய்யும் பொருட்டு வருகின்றோமென்றருளிச்செய்தார்.—எ-று.

நீ அன்புருவாயிருத் துரைத்தமையின் அவை துதித்தனவோ டொப்பனவே யன்றி வேறுகாவென்று மகிழ்கூர்ந்தன ரென்பார் 'துதித்தன போலக் கொண்டாம்' என்றும், குற்றமுண்டாயிற் பொறுத்தலே யன்றிக் குணத்தைப் பொறுத்தலெங்ஙனமென்பார், 'குற்றமுண்டாயினன்றே பொறுப்பது' என்றும், செய்தற்கரிய பெருந்தவமென்பார், 'கொடிய நோன்பு' என்றுங் கூறினர். (கூக)

நிறந்தநின் வதுவை முற்றச் செல்லுது மென்று தொல்லோன்
மறைந்தனன் போத லோடு மலைமக ளுள்ளந் தன்னி
னிறைந்திடு மகிழ்ச்சி கொண்டு நித்தனை நினைந்து போற்றி
யுறைந்தன ளிதனை வேந்தற் குரைத்திடச் சிலவர் போனார்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய உனது கலியாணம் நிறைவேறும்பொருட்டு வருகின்றோமென்று, புராதனராகிய சிவபெருமான் மறைந்தெழுந்தருளவும், பார்வதிதேவியார் தமதுள்ளத்தில் பூரணசந்தோஷங்கொண்டு சிவபெருமானைச் சிந்தித்துத் துதித்து வசித்திருந்தனர். இந்தச்சங்கதியைப் பர்வதராஜனுக்குக்கூறும்படி சிலதோழியர்கள் சென்றார்கள்.—எ-று. (கூஉ)

அண்ணல்வந் தருளிச் செய்கை யரசனுக் குரைத்த லோடு
முண்ணிக ழயர்ச்சி நீங்கி யொல்லைதன் னில்லி னோடு
நண்ணின னுமையைக் கொண்டு நலங்கொடன் னகரத் துய்த்தான்
கண்ணுத லிறைவ னங்கட் செய்தன கழற லுற்றேன்.

(இ-ள்.) சிவபெருமானெழுந்தருளி (உமாதேவியாருக்குத்) திருவருள்செய்துசென்ற சங்கதியைப் பர்வதராஜனுக்குச்சொல்லவும், அவன் மனத்திலுள்ள சஞ்சலமொழிந்து விரைவாகத் தனது தேவியுடன் (கன்னிகாமாடத்தை) அடைந்து, உமாதேவியாரை யழைத்துக்கொண்டு நன்மைமிக்க தனது மாளிகையிற்சேர்த்தனன். இனி, நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் அவ்விடத்துச் செய்தவைகளைச் சொல்லத்தொடங்கினேன்.—எ-று.

உமாதேவியார் பெண்பா லாதலின், அவரையழைத்துவருதற்குத் தான் தந்தையாயிருப்பினுங் கூடாதாகலின், தனது மனைவியை யழைத்துச் சென்றன னென்பார், 'தன்னில்லினோடு நண்ணின னுமையைக் கொண்டு நலங்கொடன் நகரத் துய்த்தான்' என்று கூறினர். (கூகூ)

தவங்காண்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-கககக.

---

௳
முருகன்றுணை.

# மணம்பேசுபடலம்.

பொருடரு மலைக்கொடி புரியு நோன்புகண்
டருடனை நல்கிய வாதி நாயகன்
றெருடரு கயிலையிற் சேர்வுற் றேழ்வகை
யிருடிக டங்களை யிதயத் துன்னினான்.

(இ-ள்.) சகல செல்வங்களையுந் தருகின்ற பர்வதராஜ புத்திரியாகிய உமா தேவியார் செய்த தவத்தைப்பார்த்துத் திருவருள்புரிந்தருளிய முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் மெய்ஞ்ஞானத்தைத் தருகின்ற திருக்கயிலையை யடைந்து சப்த முனிவர்களையுந் திருவுள்ளத்தில் நினைத்தருளினர்.—எ-று.

பொருள் - பொன் நவமணி முதலியனவாம்; அன்றி, மலைபடுதிரவியம் எனப் பொருள்கூறினும் பொருந்தும். தன்னை யடைந்த ஆன்மாக்களது அஞ்ஞானத்தைத் தவிர்த்து மெய்ஞ்ஞானத்தைத் தந்தருளுந் தன்மையுடைமையால், 'தெருடரு கயிலை' என்றார். (௧)

நினைதலுங் கண்ணுத னிமல னேழ்பெரு
முனிவரு மன்னதை முன்னி யுள்வெரீஇப்
பனிவரு மெய்யொடு படர்ந்து வல்லையி
லனையனை யிறைஞ்சிநின் றறைதன் மேயினர்.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் நினைந்தருளலும், சிறந்த சப்தமுனிவர்களும் அதனைச் சிந்தித்து மனத்திலச்சங்கொண்டு நடுக்கமுற்ற தேகத்தோடும் விரைவாகச் சென்று சிவபெருமானை நமஸ்கரித்து நின்று சொல்லத் தொடங்கினார்கள்.—எ-று.

முனிவர்கள் பலருள்ளுஞ் சிறந்த மகாமுனிவராகலின், 'எழ்பெரு முனிவரும்' என்றும், பிரமவிஷ்ணுவேந்திராதி தேவர்கள் பலரிருக்க நம்மைச் சிவபெருமான் சிந்தித்தருளினமை யாது காரணமோ வென்று மனமஞ்சி யுடனடுங்கி வந்தார்களென்பார், 'உள்வெரீஇப் பனிவரு மெய்யொடுபடர்ந்து' என்றுங் கூறினர். (௨)

பங்கயன் மான்முதற் பகரும் பண்ணவ
ருங்குன தேவலுக் குரிய ராயுற
வெங்களை யுன்னினை யாங்கள் செய்தவ
மங்கவர் தவத்தினு மதிகம் போலுமால்.

(இ-ள்) கமலாசனனாகியபிரமன் விஷ்ணு முதலாகச் சொல்லப்பட்ட தேவர்கள் இவ்விடத்துத் தேவரீரது ஏவலுக்கு உரியவர்களாயிருக்க எங்களைநினைத்தருளினீர்; அடியேங்கள் செய்த தவமானது அவர்கள் செய்த தவத்தைப்பார்க்கிலு மதிகம்போலும்.—எ-று.

தேவரீரது ஏவல் செய்வதற்குத் தவங் காரணமாதலின், அத்தவத்தில் யாங்கள்தாமோ சிறந்துள்ளோமென்று பிரார்த்தித்தனரென்க. (௩)

எந்தையெம் பெருமநீ யெம்மை வம்மென
முந்துறு கருணையின் முன்னிற் றுதலி
னுய்ந்தன மடியமே முடைய தீப்பவஞ்
சிந்தின மினியொரு தீதுண் டாகுமோ.

(இ-ள்.) எங்கள் தந்தையாகிய எமதாண்டவரே! தேவரீர் அடியேங்களை வாருங்களென்று முற்பட்ட கிருபையினால் நினைத்தருளியது; ஆகையால் அடியேங்கள் பிழைத்தனம்; எங்களிடத்துள்ள கொடிய பாவங்களை யொழித்தோம்; இனி யெங்கட் கொருதீங்கு சேருமோ?—எ-று.

முந்துறுகருணை - அதிகரித்தெழுந்த பெருங்கருணை. (ரு)

ஒருதலை யைந்தொழி லுலப்பு றுவகை
புரிதரு பகவநம் புன்மை நீக்குவான்
கருணையொ டுன்னினை கடிதிற் செய்பணி
யருளுதி யென்றன ராற்று நோன்பினோர்.

(இ-ள்.) அருமையாகச் செய்யுந் தவத்தினையுடைய சப்தமுனிவர்களும், ஒரேகாலத்தில் பஞ்சகிருத்தியங்களுங் கெடுதலடையாவண்ணஞ் செய்தருளுகின்ற வெம்பெருமானே! எங்களது பாவத்தை நீக்கும்பொருட்டுக் கிருபையோடு நினைத்தருளினீர்; இனி யாங்கள் விரைவில் செய்யவேண்டிய எவலைக் கட்டளையிட்டருளவேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.—எ-று.

சிருட்டி முதலிய பஞ்சகிருத்தியங்களையும், பிரமன் முதலிய பஞ்சமூர்த்திகளாக நின்று ஏககாலத்திற் செய்தருளுகின்றவர் சிவபெருமானொருவரே யாகலான், 'ஒருதலை யைந்தொழி லுலப்புறுவகை புரிதரு பகவ' என்றார். இதனை—"ஐந்தொழிலுமெனதிவைக ளாகுஞ் சிருட்டிமுத லானமுத் தொழில் சடத்து - மறிவிடத் தோரிரண் டெய்வினைக் கீடா யவற்றையுயி ரறியாமை யான் - முந்திவரு தன்னையும் பிறனையுங் கருதினி முதிர்விழைவு வெகுளி மருவி - முன்னுசுக துன்பங்கள் மன்னியிருவினைமேவி மூடப் பிறப்பி லாழும் - பந்தமுறு முயிர்சுதந் தரமிலி சடம்பாச மானகருவிகள் முழுதுமே - பகருமற் றவைநடத் திடுமொருவ னிவை பகுத்துன் சுதந்தரமறச் - சிந்தலைசெய் பந்தமறும்" எனவருஞ் சிதம்பரசுவாமிகள் திருவாக்கானுமறிக.

வேறு.

அமலனம் முனிவர் மாற்றங் கேட்டன னவரை நோக்கி
யிமையமே லிறைவன் றன்பா லேகியே யெமக்கிவ் வைகை
யுமைதனை வதுவை நீரா லுதவுவான் வினவி வல்லே
நமதுமுன் வம்மி னென்று நன்றருள் புரிந்தா னன்றே.

(இ-ள்.) சிவபெருமான் அம்முனிவர்களது வார்த்தையைக் கேட்டவுடனே அவர்களைப்பார்த்தருளி, (நீங்கள்) பர்வதராஜனிடத்திற்சென்று இன்றைப்பொழுதே எமக்கு உமையவளைக் கலியாணமுறைமையால் கொடுக்கும்படி வினவி, விரைவில் நமக்குமுன்னே வாருங்களென்று நன்மையோடு திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று.

நன்றருள் புரிதல் - கிருபையோடு கட்டளையிடுதல். (சு)

நாயக னருளக் கேளா நன்றென விறைஞ்சி யேகி
யேயதொன் முனிவர் யாரு மிமையமே லிறைமு னண்ணா
வாயவன் மனைவி யோடு மடைந்தெதிர் கொண்டு தாழ்ந்து
நேயமோ டருச்சித் தேத்தி நின்றிது புகலு கின்றான்,

(இ-ள்.) இவ்வாறு சிவபெருமானருளிச்செய்யக்கேட்டு நல்லதென்று வணங்கிச் சென்று பழைமைபொருந்திய சப்தமுனிவர்களும், பர்வதராஜனுக்கு முன்னேயடைந்தவுடனே, அப்பர்வதராஜன் தன்மனைவியாகிய மேனையோடும்வந்து எதிர்கொண்டுவணங்கி அன்புடன் அருச்சித்துத் துதித்து நின்று இவ்வார்த்தைகளைச் சொல்லுகின்றான்.—எ-று. (எ)

படியறு நுந்தா ளிண்டுப் படுதலா லிமைய மேருத்
தடவரை யதனிற் றூய்தாய்த் தலைமையும் பெற்ற தன்றே
கொடியவென் பவமு மின்னே நீங்கின நீவி ரெல்லா
மடியனேன் றன்பால் வந்த நிமித்தமென் னதையு மென்றான்.

(இ-ள்.) ஒப்பற்ற உங்களுடைய திருவடிகள் இங்குப்பட்டமையினால் இவ்விமையமலையானது மேருவாகிய பெரிய மலையைப்பார்க்கிலும் பரிசுத்தமாகிய முதன்மையையுமடைந்தது. மிகுதியாகிய எனது பாவங்களும் இப்பொழுதே நீங்கிவிட்டன. அது நிற்க, நீங்களனைவரும் அடியேனிடத்து வந்தருளிய காரியம் யாது? அதனைச் சொல்வீர்களாக வென்று பிரார்த்தித்தனன்.—எ-று.

படி - ஒப்பு. மேருமலையில் தேவர்கள் முதலியோ ரிருத்தலா லுயர்ச்சியும் அவ்வ டவர்க ளின்மையால் தாழ்வு முற்றிருந்த இவ் விமையமானது, அத் தேவர்கள் முதலியோரினுஞ் சிறந்த நீங்கள் இங்கெழுந்தருளப்பெற்றமையால் தூய்மையும் முதன்மையு மடைந்ததென்று கூறினனென்பார், 'இமையமேருத் தடவரையதனிற் றூய் தாய் தலைமையும் பெற்றது' என்றும், உங்களைத் தரிசிக்கப்பெற்றமையின் எனது தீவினையு மொழிந்ததென்று கூறினனென்பார், 'கொடியவென் பவமு மின்னே நீங்கின' என்றுங் கூறினார். (அ)

அங்கது வினவு மெல்லை யருந்தவ ரகில மீன்ற
மங்கையை வதுவை செய்வான் மன்னுயிர்க் குயிராய் நின்ற
சங்கர னினைந்துன் றன்னொடு சாற்றுதற் கெம்மை யுய்த்தா
னிங்கிதெம் வரலா றென்ன விசைவுகொண் டிறைவன் சொல்வான்.

(இ-ள்.) அவ்விடத்தில் அவ்வார்த்தையைக் கேட்டபொழுது, அருமையாகிய தவத்தினையுடைய முனிவர்கள் (கூறுவார்கள்) உலகமாதாவாகிய உமாதேவியாரைத் திருமணம்புரியும்பொருட்டு, நிலைபெற்ற உயிர்க்குயிராக விளங்கும் சிவபெருமான் திருவுள்ளங்கொண்டு உன்னுடன் சொல்லும்படி எங்களையனுப்பியருளினார். இங்குயாங்கள் வந்தவிஷய மிதுதானென்று கூறவும், அதற்குச் சம்மதித்துப் பர்வதராஜன் சொல்லுகின்றான்.—எ-று.

'மன்னுயிர்க் குயிராய் நின்ற சங்கரன்' என்பதனை—"விறகிற் றீயினன் பாலிற் படுநெய்போன் - மறைய நின்றுளன் மாமணிச் சோதியான் - வுறவுக் கோனட்டுணர்வுக் கயிற்றினன் - முறுக வாங்கிக் கடையமுன் னிற்பனே" என்னுந் திருநாவுக்கரசுசுவாமிகள் தேவாரத்தானு முணர்க. (கூ)

துன்னிய வுயிர்கள் யாவுந் தொல்லுல கனைத்து மீன்ற
கன்னிகை யுமையா டன்னைக் கடிமண முறையி னல்கி
யென்னையு மடிமை யாக விகுவ னிறைவற் கென்ன
மன்னவ னயலே நின்ற மனைவியி துரைக்க லுற்றாள்.

(இ-ள்.) நிலைபெற்ற எல்லா வுயிர்களையும், புராதனமாகிய சர்வலோகங்களையும் பெற்றருளிய கன்னிகையாகிய உமாதேவியாரைச் சிவபெருமானுக்குத் திருக்

கலியாண முறைமைப்படி கொடுத்தருளி என்னையும் அடிமையாகக் கொடுத்தருளு வேனென்று கூறியவுடனே, அவ்வரசனருகில்நின்ற மனைவியாகிய மேனைதேவி இவ் வார்த்தை சொல்லத்தொடங்கினாள்.—எ-று.

சர்வலோகங்களையு மீன்றுங் கன்னிப்பருவங் கழியா துள்ளவளென்பார், 'துன்னிய வுயிர்கள் யாவுந் தொல்லுல கனைத்து மீன்ற கன்னிகை யுமையாள்' என் றார். கடிமணம்-இருபெய ரொட்டு. உலகமாதாவாகிய உமாதேவியாரைத் திருமணஞ் செய்விப்பதுடன் யானும் அவ்வெமது சிவபெருமானுக்கடிமையாவே னென்று கூறி னனென்பார், 'கடிமண முறையி னல்கி யென்னையு மடிமையாக வீகுவ னிறைவற் கென்ன' என்று கூறினார். (௪௦)

மலரயன் புதல்வன் றன்னோர் மடந்தையை மணத்தி னல்க
வலைபுனற் சடிலத் தண்ண லவன்றலை கொண்டா னென்பர்
நிலைமையங் கதனை யுன்னி நெஞ்சக மஞ்சு மெங்கள்
குலமக டனைய வற்குக் கொடுத்திட லெவனோ வென்றாள்.

(இ-ள்.) தாமரைமலரில் வசிக்கும் பிரமனது புத்திரனாகிய தக்ஷன் தனது ஒப்பற்றபுத்திரியைத் திருமணஞ்செய்துகொடுக்க, அலைகின்ற கங்கைநதியையணிந்த சடைமுடியினையுடைய சிவபெருமான் அந்தத்தக்ஷனதுதலையையறுத்தனனென்று கூறு வார்கள். அத்தன்மையாகிய நிலைமையைநினைத்து மனத்தி லச்சங்கொண்டுள்ள எங்க ளது குலமகளை அந்தச் சிவபெருமானுக்குக் (கலியாணஞ்செய்து) கொடுப்பது எப் படி என்று கூறினாள்.—எ-று.

சிவபெருமான் தனக்குப் பெண்ணைக்கொடுத்த தக்ஷனது தலையை யறுத்த னனென்று நேரிற்கண்டவர்கள் கூறுவரொன் றுரைத்தன ளென்பார், 'மலரயன் புத ல்வன் றன்னோர் மடந்தையை மணத்தி னல்க - வலைபுனற் சடிலத் தண்ண லவன் றலை கொய்தா னென்பர்' என்றும், அதனை நினைக்குமிடத்தில் நமக்கு மத்தகைய கதிதானே வருமென் றஞ்சுகின்றோமென் றறைந்தன ளென்பார். 'நிலைமையங் கத னை யுன்னி நெஞ்சகமஞ்சு மெங்கள்' என்றுங் கூறினார். (௪௧)

என்றலு மவளை நோக்கி யெழுமுனி வோருஞ் சொல்வா
ரொன்றுநீ யிரங்கல் வாழி யொப்பிலா முதல்வன் செய்கை
நன்றுமீ தோர்ந் திலையாற் றக்க னலத்தகு மவியை மாற்றி
யன்றுதன் னிகழ்த லாலே யவன்றலை முடிவு செய்தான்.

(இ-ள்.) இவ்வாறு கூறவும் அம்மேனையைப்பார்த்துச் சப்தமுனிவர்களுங் கூறுவார்கள்; (மேனைதேவியே!) நீ சிறிதும் வருந்தவேண்டாம். ஒப்பற்ற சிவபெரு மானது செய்கையை நன்றாக உணர்ந்திலை. தக்ஷனென்பவன் நன்மைமிக்க அவிர்ப்பாக த்தைநீக்கி அந்நாளில் சிவபெருமானையிகழ்ந்து கூறியதனால் அவனது தலையையறுத் தருளினார்.—எ-று.

வாழி - அசைநிலை. (௪௨)

அடைந்துளோர்க் கருளு மாறு மல்லவர் தமக்குத் தண்டம்
படுத்தினை தெரிந்து கூட்டும் பான்மையும் பரமன் செய்கை
மடந்தைநீத் தன்மையாரு மனப்படுத் துணர்வ ரீதே
திடம்பட வுணர்தி வேறு சிந்தனை செய்யே லென்றார்.

(இ-ள்.) தம்மை யடைந்தவர்களுக்குத் திருவருள் புரிதலும், அடையாத வர்களுக்குத் தண்டனையைத் தக்கவாறு செய்து தன்னருளிற் சேர்க்குந்தன்மையும்

சிவபெருமானது செய்கையாம். மேனையே! இந்தத்தன்மையை எவர்களும் மனத்தி லாலோசித்துணர்வார்கள். இதனையே நீ உறுதியாக உணரக்கடவை; வேறொன்றுஞ் சிந்தியாதே யென்று கூறினார்கள்.—எ-று.

சிவபெருமான்தம்மை யடைந்தவர்களுக்கு அருளும், அடையாது விரோதித்தவர்களுக்குத் தண்டனையும் புரிந்தருள்பவராகலின், தம்மை விரோதித்த தக்கனைத் தண்டித் தருளின ரென்று கூறின ரென்க. (கங)

வேறு.

இயலுறு முனிவோர்க ளிவைமொழி தலுமோரா
மயலறு வரையண்ணல் வாய்மையி தெனலோடு
மயலுறு மனைமேனை யஞ்சின ளமலன்றன்
செயலிது வுணராதே செப்பின னிவையென்றே.

(இ-ள்.) தவவிலக்கணம் வாய்ந்த ஏழு முனிவர்களும் இவ்வார்த்தைகளைக் கூறியவுடனே, அதனையுணர்ந்து மயக்கமற்ற பர்வதராஜன் இது உண்மையேயென்று கூறவும், உடனே அவனருகில் நின்ற பத்தினியாகிய மேனாதேவியானவள் சிவபெருமானது இச்செய்கைகளை யுணராமல், யானிவ்வாறு கூறினேனென்று அச்சங்கொண்டனள்.—எ-று. (கச)

உன்னலி னொடுமேனை யுவர்மல ரடிதாழூஉப்
பெண்ணறி வெவையேனும் பேதைமை வழியன்றோ
வண்ணற னருணீர்மை யறுவது மறிகில்லேன்
புண்ணிய முனிவீரென் புன்மொழி பொறுமென்றாள்.

(இ-ள்.) மனவருத்தத்துடன் மேனாதேவியானவள் அம் முனிவர்களது தாமரைமலர்போன்ற பாதங்களை வணங்கி, பெண்ணறிவானது எத்தன்மையவாயினும் அறியாமையின்வழிப்பட்டதல்லவோ? ஆதலால், சிவபெருமானது காருண்ணியவிலக்கணத்தை அணுவளவும் அறியேன். புண்ணியசொரூபராகிய முனிவர்களே! எனது அற்பமாகிய வார்த்தையை மன்னித்தருள்வீராகவென்று வேண்டினாள்.—எ-று.

'பெண்ணறி வெவையேனும் பேதைமை வழியன்றோ' என்பதனை:—"பேதைமை யென்பது மாதர்க் கணிகலம்" என்னும் ஔவைப் பிராட்டியா ரருள்வாக்கானும், "நுண்ணறி வுடைய ராகி நூலொடு பழகி னாலும் - பெண்ணறி வென்ப தெல்லாம் பேதைமைத் தாத லாலுன் - கண்ணறி வுடைமைக் கேற்ற காரிய முரைத்தாய் மான - மெண்ணறி வுடையோர்க் கெல்லா மிழுக்குடைத் தன்றோ வீதால்" என்னுந் திருவிளையாடற்புராணத்தானு மறிக. (கரு)

பணிவுட னிவைமேனை பகர்தலு மவடன்பாற்
கனிதமி லருள்செய்யக் காவல னதுகாணா
வினைதவிர் முனிவீர்கா ளிவளுரை கருதன்மின்
மணமிய லிறையோனை வரமொழி குதிரென்றான்.

(இ-ள்.) வணக்கத்துடன் இவ்வார்த்தைகளை மேனாதேவி கூறவும், (முனிவர்கள்) அவளிடத்தில் எண்ணிறந்த கிருபைசெய்யப், பர்வதராஜன் அதனைப்பார்த்து ஒப்பற்ற முனிவர்களே! (நீங்கள்) இவளது வார்த்தையைச் சிந்தியாதீர்கள். திருமணஞ் செய்தற்குத் திருவுளங்கொண்டு சிவபெருமானை இவ்விடத்திற்கு வரும்படி சொல்லுங்களென்று கூறினான்.—எ-று. (கசா)

பனிபடு வரையன்னான் பகர்மொழி யதுகேளா
மனமிக மகிழ்வாகி மற்றவர் தமையங்க
ணினிமையொ டுறநல்கி யெழுவரு மவணீங்கித்
தனைநிகர் பிறிதில்லாத் தண்கயி லையில்வந்தார்.

(இ-ள்.) பனிக்கட்டிகளையுடைய இமையபர்வதராஜன் கூறிய வார்த்தையைக் கேட்டு, மிக்க மனமகிழ்வடைந்து அவர்களை இனிமையோடு வாழும்படி யாசிர்வதித்துச்சப்தமுனிவர்களும் அவ்விடத்தினின்றுநீங்கித் தனக்கு ஒப்பு வேறொன்றில்லாததாகிய குளிர்ந்த திருக்கயிலாயத்தை யடைந்தார்கள்.—எ-று. (கஎ)

வந்தெழு முனிவோரு மாநக ரிடைசாரா
நந்திதன் முறையுய்ப்ப நாதனை நணுகுற்றே
யந்தமி லளியோடு மவனடி தொழுதேத்தி
யெந்தையை யிதுகேளென் றியாவது முரைசெய்தார்.

(இ-ள்.) எழு முனிவர்களும் வந்து சிறந்த ஆலயத்தைச்சேர்ந்து திருநந்திதேவர் முறைமைப்படி யுள்ளேயனுப்பச் சிவபெருமானை யடைந்து அளவற்ற அன்புடன் அவ்வெம்பெருமானது திருவடிகளை வணங்கித் துதித்து, எமது தந்தையாகிய சிவபெருமானை (நோக்கி) இதனைக் கேட்டருள்வீராகவென்று எல்லாவற்றையுங் கூறினார்கள்.—எ-று. (கஅ)

வரைமிசை யரசாள்வோன் மணவினை யிசைவெல்லா
முரைசெய வருள்செய்தே யும்பரின் முனிகாணீர்
புரிதரு செயலாற்றப் போகுதி ரெனலோடு
மரனடி தொழுதேத்தி யவர்பத மணுகுற்றார்.

(இ-ள்.) இமையமலையி லரசாட்சிசெய்யும் பர்வதராஜன் திருமணக் காரியத்திற்கு இசைந்தவை யனைத்தையும் விண்ணப்பஞ்செய்ய, அவர்களுக்குத் திருவருள் புரிந்து தவலோகத்தில் வசிக்கின்ற முனிவர்களே! நீங்கள் செய்கின்ற தவத்தொழிலைச்செய்யும் பொருட்டுச் செல்லுங்களென்று அருளிச்செய்யவும், உடனே சிவபெருமானது திருவடிகளை வணங்கித்துதித்துத் தங்கள் பதவியை யடைந்தார்கள்.—எ-று.

வரை-ஆகுபெயர். 'உம்பரின் முனிவீர்காள்' என்பதற்கு, தவவுயர்ச்சியினையுடைய முனிவர்களே எனப் பொருள்கூறலு மொன்று. (கசு)

வேறு.

எங்குறை தீர்ந்ததென் றெழுத வத்தருந்
தங்கடம் பதத்திடைத் தலைப்பின் றெய்தினு
ரிங்கிது நிற்றிட விமைய மேலிறை
யங்கினிச் செய்தவா றறியக் கூறுவாம்.

(இ-ள்.) எங்கள் குறை நீங்கியதென்று எழு முனிவர்களும் அவரவர்களுக்குரிய ஸ்தானங்களில் நீங்காமற்சென்றார்கள். இஃது இவ்வாறிருக்க, இமையபர்வதராஜன் அங்குச் செய்தவைகளைத் தெரியும்படி சொல்லுகின்றோம்.—எ-று.

குறை - தாங்கள் செய்யவேண்டிய தொண்டு. தண்பு - பிரிவு. (உ0)

மணம்பேசுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஅக.

---

உ

முருகன்றுணை.

# வரைபுனை படலம்.

கன்றுத லுமைதவங் கண்டு நின்னையா
மன்னவர் புகழ்வகை மணத்து மென்றதும்
விண்ணெழு முனிவரின் வினவி விட்டது
மெண்ணினன் மகிழ்ந்தன னிமையத் தண்ணலே.

(இ-ள்.) நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் உமாதேவியாரது தவத்தை நோக்கி, உன்னை யாம் உலகத்துள்ளவர்கள் புகழும்படி விவாகஞ் செய்துகொள்ளுகின்றேமென்றுகூறியதையும், தவலோகவாசிகளாகிய எழு முனிவர்கள்மூலமாகக் கேட்டனுப்பியதையும் பர்வதராஜன் நினைத்து மகிழ்வடைந்தனன்.-எ-று.

விண் - என்றது, தவலோகத்தை. (௧)

கணிதமி லுயிரெலாங் கலந்து மற்றவை
யுணர்வுதொ திருந்தவற் கொருதன் கன்னியை
மணமுறை புரிதிற மதித்துத் தேவர்தம்
பணிபுரி தச்சனைப் பரிவொ டுன்னினன்.

(இ-ள்.) அளவற்ற சீவராசிகள் தோறுங் கலந்து, அச் சீவராசிகளி னுணர்வுக்குணர்வா யெழுந்தருளிய சிவபெருமானுக்கு ஒப்பற்ற தனது புத்திரியை முறைப்படி கலியாணஞ் செய்துகொடுக்கவேண்டிய கிரமங்களை யுத்தேசித்து, தேவர்களுக்கு வேண்டிய தொழிலைச் செய்கின்ற தேவதச்சனை அன்புடன் நினைத்தனன்.—எ-று.

தேவர்தம்பணிபுரி தச்சன் - விசுவகன்மன். (உ)

உன்னிய போதினி லும்பர் கம்மியன்
மன்னவ னெதிருற வந்து கைதொழு
தென்னைகொல் கருதினை யாது செய்பணி
யன்னதை மொழிகென வறைதன் மேயினன்.

(இ-ள்.) அவ்வாறு நினைத்தபொழுது தேவதச்சன் பர்வதராஜனெதிரில் வந்து வணங்கி, நீர் யாது கருதி என்னை யழைத்தீர். யான் செய்யவேண்டிய வேலை யாது? அதனைக் கூறுவீராக வென்று கேட்க, (பர்வதராஜன்) சொல்லத்தொடங்கினன்.—எ-று.

கொல் - அசைநிலை. மொழிகென என்பது, தொகுத்தல் விகாரம். (௩)

என்னையாள் கன்றுத லிறைவற் கியான்பெறு
மன்னையா முமைதனை யளிப்ப னிவ்வணாக்
கன்னிமா நகரெலாங் கவின்சி றந்திடப்
பொன்னினு டாமெனப் புனைதி யாலென்றான்.

(இ-ள்.) என்னை யடிமைகொண்டருளிய நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானுக்கு யான்பெற்ற லோகமாதாவாகிய உமாதேவியாரைத் திருமணஞ்செய்து

கொடுக்கின்றேன். ஆதலால், இம்மலையிலுள்ள கெடாதபெரிய நகரமுழுவதையும் அழகு சிறக்கும்படி பொன்னுலகத்தைப்போல அலங்கரிப்பாயாகவென்று கூறினன்.

அப்பொழு தத்தினி லடுக்கன் மேலையோன்
செப்பிய வாசகஞ் செவிக்கொண் டுள்ளமேன்
மெய்ப்பெரு மகிழ்ச்சியை மேவி யந்நக
ரொப்பனை செய்திட வுன்னி னனரோ.

(இ-ள்.) அந்தச்சமயத்தில் பர்வதராஜன்சொல்லிய வசனங்களை (த்தேவதச்சன்) கேட்டு மனத்தில் மெய்ம்மையாகிய பெருமகிழ்வடைந்து அந்நகரத்தையலங்கரிக்கும்படி (தன்மனத்தில்) நினைத்தனன்.—எ-று.

அப்பொழுதத்தினில் என்பதில், அத்துச்சாரியை. ஒப்பனை-அலங்காரம். ()

நீடுறு தருநிரை நிமிருங் கால்களாய்ப்
பாடுறு கழிகளாய்ப் பாம்பும் பல்பனை
மூடுற வதன்மிசை முகில்க ளெங்கணும்
பீடுறு பந்தர்போற் பிறங்கும் வெற்பின்மேல்.

(இ-ள்.) நீண்ட மரவரிசைகளே உயர்ந்த கால்களாகவும், பரவிய பலகிளைகள் பெரிய கழிகளாகவும் அதன்மேல் மேகமெங்கும் மூடிக்கொள்ள, அதனால் பெருமைபொருந்திய பந்தலிட்டதுபோல விளங்குகின்ற அவ்விமயமலையின்மேல்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (சு)

மலையுறழ் கோபுர மன்றஞ் சூளிகை
நிலைகெழு செய்யதேர் நிழற்று மண்டபம்
பலவுட னறுமலர்ப் பந்த ரன்னவை
தொலைவறு மாவணந் தோறு நல்கினன்.

(இ-ள்.) மலையையொத்த கோபுரங்களையும், சபைகளையும், செய்குன்றுகளையும், நிலையாகவிளங்குகின்ற செவ்விய தேர்களையும், நிழலைச்செய்கின்ற பலமண்டபங்களையும், நறுமணம்பொருந்திய பூப்பந்தர்களையும், இவைபோன்ற பிறவற்றையுங் கெடாத வீதிகடோறுஞ் செய்தமைத்தனன்.—எ-று.

சூளிகை - செய்குன்று. நிலைகெழுசெய்யதேர் என்பதற்கு, பரப்பினையுடைய சிறந்ததேர் எனப் பொருள்கூறலு மொன்று. ஆவணம் - வீதி. (எ)

நீக்கமில் கதலிகை நெடிய கேதன
மேக்குயர் காவண மிசைத்தந் துள்ளிடை
யாக்குறு கம்பல மணிசெய் தாயிடைத்
தூக்கினன் கவரியுஞ் சுடர்கொள் மாலையும்.

(இ-ள்.) நெருக்கமாகிய துகிற்கொடிகளையும் பெருங்கொடிகளையும் மிகவுமுயர்ந்துள்ள பந்தல்களின்மீதமைத்து, அப்பந்தலினுள்ளே பின்னப்பட்ட மேற்கட்டியினாலலங்கரித்து, அதனிடையில் சாமரைகளையும் விளங்குகின்ற மாலைகளையுந் தொங்கவிட்டனன்.—எ-று.

மேக்கு-உயர்ச்சி. ஆயிடை என்பது, சுட்டுநீண்டு யகரவுடம்படுமெய் பெற்றது. மேற்கட்டி-விதானம். (அ)

குரகத முகம்புரை குலைக டூங்கிய
மரகத வொளிபடு வாழை பூகநன்
விரைகெழு தன்மையி னிறுவிப் பூந்துணர்
விரைகெழு தோரணம் விசும்பி னுற்றினன்.

(இ-ள்.) குதிரைமுகம்போன்ற குலைகள் தொங்குகின்ற மரகதம்போலொளிவீசும் வாழைமரங்களையும், கமுகமரங்களையும், நல்லவரிசையாக விளங்கும்படி நிறுத்திப் பூங்கொத்துக்களின் மணம் வீசுகின்ற தோரணங்களை ஆகாயத்தில் தொங்கும்படி கட்டினான்.—எ-று. (௯)

ஒண்ணிதி யியக்கர்கோ னுறையு ளானதும்
விண்ணவர் தொழுதிட வீற்றி ருந்திடு
மண்ணறன் கோயிலு மாக வீதிக
ளெண்ணருந் திருவுற வெழில்ப டுத்தினான்.

(இ-ள்.) சிறந்த செல்வத்தினையுடைய குபேரனது மாளிகையும், தேவர்கள் வணங்கும்படி வீற்றிருக்கின்ற இந்திரனது மாளிகையும்போல, அவ்வீதிகளை அளவற்ற அழகுபொருந்தும்படி அலங்கரித்தனன்.—எ-று.

பலவகைப்பெருஞ் செல்வமுடையவனாகலின், 'ஒண்ணிதி யியக்கர்கோன்' என்றும், தேவலோகம் போகபூமியாதலின், 'விண்ணவர் தொழுதிட வீற்றிருந்திடு மண்ணறன் கோயிலுமாக' என்றுங்கூறினர். (௧0)

ஒருபுறத் தினையினி யுமைக்கு நல்குவோ
னிருபுறத் தினும்வரு மெண்ணி றேவருந்
தருபுறப் பொருளெலாஞ் சாரச் சாலைக
டிரிபுறத் திரிபுறச் செய்த மைத்தனன்.

(இ-ள்.) தமது ஒருபாகத்தை இனி உமாதேவியாருக்குக் கொடுத்தருளும் சிவபெருமானது இருபுறத்தினுஞ் சூழ்ந்துவருகின்ற அளவற்ற தேவர்களுங்கொண்டு வருகின்றமற்றைப்பொருள்களனைத்தும்வந்து பொருந்தும்படி இருப்பிடங்களை வேறுவேறாகச் செய்தமைத்தனன்.—எ-று. (௧௧)

ஆயிரப் பத்தென வறையும் யோசனை
போயதோ ரளவையிற் புரிசை யொன்றினைக்
கோயிலி னொருபுடை குயிற்றிக் கோபுரம்
வாயில்க ணான்கினு மரபி னல்கினான்.

(இ-ள்.) பதினாயிரமென்று சொல்லப்பட்ட யோசனைதூரஞ்செல்லத்தக்க சுற்றளவினையுடையதாய் ஒருமதிலை அரண்மனையினொருபுறத்தில் அமைத்து நான்கு வாயில்களிலுங்கோபுரங்களை முறைப்படியுண்டாக்கினான்.—எ-று.

ஆயிரப்பத்து - பதினாயிரம். கோயில் என்றது, இராசமாளிகையை. (௧௨)

அங்கத னடுவுற வகன்ப ரப்பினின்
மங்கல மணஞ்செய வதுவைச் சாலையைச்
செங்கன கத்தினாற் றிகழச் செய்தனன்
கங்கையஞ் சடையினான் கயிலைக் கோயில்போல்.

(இ-ள்.) அதன் நடுவில் மிகுந்த விசாலமாய் மங்கலகரமான திருமணஞ் செய்யும்பொருட்டுக் கலியாண மண்டபத்தைச் சிவந்த சாம்பூநதப் பொன்னினால் கங்கைநதியையணிந்த அழகிய சடைமுடியினையுடைய சிவபெருமானது திருக்கயிலையின்கணுள்ள திருக்கோயிலைப்போல விளங்க வமைத்தனன்.—எ-று.

செங்கனகம் என்றது, நால்வகைப்பொன்னிற் சிறந்த சாம்பூநதப்பொன்னினை. நால்வகைப்பொன்னாவன - ஆடகம்-கிளிச்சிறை-சாதரூபம்-சாம்பூநதம் என்

பன. சாம்பூநதப்பொன் சிறந்ததென்பதனை.— "பூவிற்குத்தாமரையே பொன்னிற்குச் சாம்பூநதம்" என்னுந் திருவள்ளுவமாலையா லுணர்க. (௧௩)

சாலையி னிலத்திடைச் சந்த மான்மத
மேலுறு நாவிநீர் விரவிப் பூசியே
கோலமென் மலர்கடூய்க் குழுமும் வானவர்க்
கேலுறு பலதவி சிருப்பச் செய்தனன்.

(இ-ள்.) திருமணச்சாலையின் பூமியில், சந்தனமும், புழுகும், மேன்மை பொருந்திய சவ்வாதுமாகிய இவைகளைப்பனிநீரிற்கலந்து மெழுகி அழகிய மெல்லிய மலர்களைத்தூவி, அங்குவருகின்ற தேவர்களுக்குத் தகுதியாகிய பல ஆசனங்களை யிருக்கும்படியமைத்தனன்.—எ-று.

ஏலுறுபல தவிசு - அவ்வத்தேவர்களது உயர்வு தாழ்வுக்கேற்ற பலவகை ஆசனங்கள். (௧௪)

வானவின் மணிமுகில் வனச மாமலர்
நீனிறம் விரிதரு நெய்தல் சண்பக
மேனைய நிறங்களா லெண்ணில் வேதிகை
யானவை புரிந்தன னயனு நாணவே.

(இ-ள்.) இந்திரவில், கரியமேகம், சிறந்ததாமரைமலர், நீல நிறம் விரிந்த கருநெய்தல்மலர், சண்பகமலர் முதலியவற்றின் நிறங்களாலும் மற்றுள்ள நிறங்களாலும் அளவற்ற மேடைகளைப் பிரமனும் வெட்கும்படி செய்தனன்.—எ-று.

மணி - கருமை. நீலநிறம் எனற்பாலது, நீனிறம் எனக் கடைக்குறையாய் நின்றது. பிரமன் சிருஷ்டிக் கருத்தாவாயிருந்தும், இதுகாறு மிதுபோலச்சிருஷ்டிக்க அறியாமையால், 'எண்ணில் வேதிகை யானவை புரிந்தன னயனுநாண' என்றார். ()

கண்ணடி பூந்தொடை கவரி பஃறுகின்
மண்ணிய செழுமணி மாலை தூங்குறப்
பண்ணுறு வித்தனன் பரமன் பால்வரும்
விண்ணவர் விழியெலாம் விருந்து கொள்ளவே.

(இ-ள்.) சிவபெருமானுடன் வருகின்ற தேவர்களது கண்களனைத்தையும் விருந்துகொள்ளும்படி, கண்ணாடியும், பூமாலையும், சாமரையும் பலவகை வஸ்திரங்களும், சாணைதீர்ந்த செழிய இரத்தினமாலைகளும் தொங்கும்படி அலங்கரித்தனன்.

கண்ணாடி எனற்பாலது, கண்ணடி எனத்தொடை நோக்கி நின்றது. செழுமணிமாலை என்பதற்கு, மாணிக்கமாலை எனப்பொருள் கூறினுமாம். விண்ணவர் விழியெலாம் விருந்துகொள்ளப் பண்ணுறு வித்தனன் எனக் கூட்டுக. விழியெலாம் விருந்து கொள்ளல் - விழிகளைத் தன் வயப்படுத்துதல். (௧௬)

தேவரு முனிவருந் திருவ னார்களும்
பாவையி னுயிருறு பண்பி னெய்தியே
மேவரு கவரிதார் வீணை யேந்தியே
யேவலர் தொழின்முறை யியற்ற நல்கினன்.

(இ-ள்.) தேவர்களும் முனிவர்களும் திருமகளை யொத்த மாதர்களுமாகிய உருவங்களைப் பிரதிமையில் உயிருள்ளனவென்று கூறும்வண்ண மமைத்து, கிடைத்தற்கரிய சாமரங்களையும், மாலைகளையும், வீணைகளையுமேந்தி ஊழியக்காரரது தொழின்முறையைச்செய்யும்படி உண்டாக்கினான்.—எ-று. (௧௭)

பெய்வளிய லாரெனப் பிறங்கும் பாவைக
டன்றுமை முதலிய தாக்கித் தவ்டியல்
பன்றெடு களிநடம் பயிலு வித்தனன்
வின்னவ ரரம்பையர் யாரும் வெஃகவே.

(இ-ள்.) தேவரம்பையர்கள் யாவரும் விரும்பும்படி அழகிய மாதர்களைப் போல விளங்குகின்ற பதுமைகள் மத்தளமுதலியவைகளை யடித்துக்கொண்டு வீணையிற்பொருந்திய இசையுடன் களிப்பைத்தருகின்ற நடனத்தைச்செய்யும்படி யமைப்பித்தனன்.—எ-று. (சஅ)

நெருங்கிய கிளிமயி னேமி தண்புறுப்
பொருங்கரி யரிபரி பொருநர் வானுளோ
ரொருங்குடன் மணிகளா லோவி யப்பட
வருங்கடி யிருக்கையு ளமர நல்கினன்.

(இ-ள்.) நெருங்கிய கிளிகளும், மயில்களும், சக்கரவாகங்களும், குளிர்ந்த புறுக்களும், போர் செய்யும் யானைகளும், சிங்கங்களும், குதிரைகளும், போர்வீரர்களும், தேவர்களும் ஒரோவரிசையாக இரத்தினங்களால் சித்திரமாகப் பொருந்த அருமையாகிய திருக்கலியாணமண்டபத்திற் றங்கும்படி செய்தனன்.—எ-று.

கடியிருக்கை - திருக்கலியாண மண்டபம். (சகூ)

குறைதவிர் நிலைமையாற் குயிற்றுஞ் சாலையு
ளிறைதரு மிந்திர நீலத் தாலொரு
திறலரி யணையினைச் சிறப்பிற் செய்தன
னிறைவனு மிறைவியு மினிது மேவவே.

(இ-ள்.) குறைவற்ற நல்ல நிலைமையோடு செய்யப்பட்ட திருக்கலியாண மண்டபத்தில் சிவபெருமானும் உமாதேவியாரும் மகிழ்ந்து வீற்றிருக்கும்பொருட்டு ஒளிநிறைந்த இந்திரநீலரத்தினத்தினல் ஒப்பற்ற வலிய சிங்காசனத்தைச் சிறப்புடன் அமைத்தனன்.—எ-று.

'நிறைதரு மிந்திரநீலம்' என்பதற்கு, இந்திரநீல முழுமணி எனப் பொருள் கூறினுமாம். (உ௦)

குண்டமும் வேதிகை வகையுங் கோதில்சீர்
மண்டல மானதும் வகுத்து வேள்செய்
பண்டம தானதும் படுத்திப் பன்னவ
ரெண்டொகை மங்கல மிருத்தி னரோ.

(இ-ள்.) யாககுண்டமும், பலவகைப்பட்ட வேதிகைகளும், குற்றமற்ற சிறப்பினையுடைய மண்டலமும்வகுத்து, யாகஞ் செய்தற்குரிய பொருள்களும் ஏற்படுத்தித் தேவர்களது அஷ்டமங்கலங்களையுமமைத்தனன்.—எ-று.

வேள்விசெய்பண்டம் என்றது, மணவேள்விக்குரிய சாமக்கிரியைகளை. தேவர்களது அஷ்டமங்கலங்களாவன :—கண்ணடி, பூரணகும்பம், இடபம், இரட்டைச்சாமரம், ஸ்ரீவற்சம், சுவஸ்திகம், சங்கம், தீபம் என்பனவாம். (உக)

கவ்வடெறு கதிர்மதிக் காந்தங் காஞ்சன
வொண்டுகிர் நித்தில மொளிறு வச்சிர
முவ்டக வெயின்மணி முதல்வெ றுக்கையான்
மண்டப மெண்ணில மருங்கி னல்கினன்.

(இ-ள்.) கண்களைத் தெறிக்கச்செய்கின்ற ஒளிபொருந்திய சந்திரகாந்தமும், பொன்னும், ஒள்ளிய பவளமும், முத்தும், விளங்குகின்ற வயிரமும், ஒளிபொருந்திய பதுமராகமும் முதலிய பொருள்களால் அநேக மண்டபங்களைப் பக்கத்திலமைத்தனன்.—எ-று.

கதிர்மதிக்காந்தம் என்பதற்கு, சூரியகாந்தமும் சந்திரகாந்தமும் எனப் பொருள் கூறுவாருமுளர். (உஉ.)

காவிகள் மலர்தரு கயங்க ளோர்பல
வோவறு முறற்பல வோடை யோர்பல
பூவியல் வாரிசப் பொய்கை யோர்பல
வாவிக ளோர்பல மருங்கி லாக்கினான்.

(இ-ள்.) நீலோற்பலங்கள் மலர்கின்ற பல தடாகங்களையும், கெடுதலற்ற செங்கழுநீர் மலரையுடைய பல ஓடைகளையும், அழகிய தாமரைமலர்களையுடைய பல பொய்கைகளையும், வேறு பல வாவிகளையும் பக்கங்களி லமைத்தனன்.—எ-று.

ஓ-என்பது, ஓரெழுத்தொருமொழியாகியதொழிற்பெயர் இதனை:—"ஓவற விமைக்குஞ்சேண் விளங்கவிரொளி" எனவருந் திருமுருகாற்றுப் படைக்கு நச்சினார்க்கினியார் கூறிய வுரைவிசேடத்தானறிக. (உ௩)

பாசடை மரகதம் பளிங்கு வச்சிரங்
காசறு நன்மணி கனக மன்னதாற்
றேசுறு நளிமலர் செறிந்த பூந்தடம்
வாசவன் கண்டுள மருளத் தந்தனன்.

(இ-ன்.) மரகதத்தினால் பச்சிலைகளும், படிகமும், வயிரமும், குற்றமற்ற நல்லமாணிக்கமும், சுவர்னமுமாகிய இவைகளால் ஒளிபொருந்தியகுளிர்ந்த மலர்கள் நெருங்கிய பூம்பொய்கைகளை இந்திரனுங் கண்டு மனமயங்கும்படி யமைத்தனன்.

குற்றந்தீரக் கடைந்தெடுக்கப்பட்ட மாணிக்க மென்பார், 'காசறுநன்மணி' என்றார். நளி - குளிர்ச்சி. வாசவன்கண்டுள மருளலாவது,—நமது போகபூமியிலும் இத்தகைய சிறப்பில்லையே யென்று மயங்குதல். (உ௪)

கற்பகஞ் சந்தகில் கதலி பூகமே
பொற்புறு வருக்கைமாப் புன்னை யாதிய
பற்பல மணிகளாற் படுத்தி யன்னவை
நற்பயன் வழங்கவு நல்கி னானரோ.

(இ-ன்.) கற்பகம், சந்தனம், அகில், வாழை, கமுகு, அழகுபொருந்திய பலா, மா, புன்னை முதலிய விருக்ஷங்களைப் பற்பல இரத்தினங்களாலமைத்து, அவைகள் நல்ல பலனைக்கொடுக்கவுஞ் செய்தனன்.—எ-று.

நற்பயன் வழங்கவு நல்குதலாவது - அவைகள் காய்கனி முதலிய பலன்களைத்தருவனபோலப் பூத்துக்காய்த்துப் பழுத்திருக்கும்படி செய்தமைத்தல். (உ௫)

இன்னவா றளப்பில விமைய வர்க்கெலா
முன்னுறு கம்மியன் முன்னிச் செய்தலும்
பொன்னிய லிமகிரிப் புரத்து மேவிய
மன்னவன் கண்டவை மகிழ்ச்சி யெய்தினான்.

(இ-ள்.) இவ்வாறு தேவர்களனைவருக்கும் நினைவிற்பொருந்திய தேவதச்சனானவன் கருதிச்செய்யவும், பொன்மயமாகிய இமையகிரியிலுள்ள நகரத்தில் வசிக்கின்ற பர்வதராஜன் அவைகளைப்பார்த்து மகிழ்வடைந்தனன்.—எ-று.

'இமையவர்க்கெலா முன்னுறுமகம்மியன்' என்பதற்கு, தேவர்களனைவருக்கும் முதன்மையாகப்பொருந்திய தேவதச்சன் எனப்பொருள் கூறினுமாம், 'இமகிரிப்புரம்' என்றது, இமையகிரியில் பர்வதராஜன் வசிக்கின்ற இராஜதானியாகிய ஔஷதிப்பிரஸ்தமென்னும் நகரத்தை. (உசு)

சீதர னயன்முதற் றேவர் மாத்தொகை
மாதவ முனிவரர் மடந்தை மாரொடு
காதலி னுமைமணங் காண வந்திடத்
• தூதரை யெங்கணுந் தூண்டி னனரோ.

(இ-ள்.) திருமால் பிரமன் முதலிய தேவர்களினது பெரிய கூட்டங்களும், மகத்தாகிய தவத்தினையுடைய முனிசிரேஷ்டர்களும் தங்கள்தங்கள் பத்தினிமாருடன்விருப்பத்தோடு உமாதேவியாரது திருமணத்தைத் தரிசிக்கும்படி வரும்பொருட்டுத் தூதுவர்களை எவ்விடத்திலு மனுப்பினான்.—எ-று.

சீதரன் - திருமகளை மார்பிற் றரித்தவன். (உஎ)

ஒற்றர்தம் முரைதெரிந் தும்பர் யாவருங்
குற்றமின் முனிவருங் குன்ற வில்லினாற்
பற்றலர் புரமடு பரமற் போற்றியே
மற்றவன் றன்னொடு வருது மென்றனர்.

(இ-ள்.) தூதுவர்களது வார்த்தையைக் கேட்டறிந்து தேவர்களனைவரும், குற்றமற்ற முனிவர்களும் மேருவாகிய வில்லினால் பகைவர்களது முப்புரங்களையுமழித்தருளிய சிவபெருமானைத் துதித்து, (யாங்களும்) அவ்வெம்பெருமானுடன் வருகின்றோமென்று கூறினார்கள்.—எ-று.

மற்று - அசைநிலை. (உஅ)

வெற்றிகொள் வயப்புலி மிசையு யர்த்திடுங்
கொற்றவை யாமளை குழீஇய காளிகள்
சுற்றுறு மெழுநதி யிமையத் தொல்கிரி
யுற்றனர் தொழுதன ருமைமு னண்ணினர்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய சிங்கத்தைக் கொடியாக வுயர்த்திய துர்க்கையும், யாமளையும், கூட்டமாகிய காளிகளும், உலகத்தைச் சூழ்ந்துள்ள சப்தநதிகளும் பழைமையாகிய இமையமலையை யடைந்து வணங்கினவர்களாய் உமாதேவியார் திருமுன்னே யடைந்தார்கள்.—எ-று.

வயபபுலி-சிங்கம். எழுநதிகளாவன:—கங்கை, யமுனை, சரச்சுவதி, நருமதை, காவேரி, குமரி, கோதாவரி என்பன. (உகூ)

செந்திரு நாமகள் சீர்பெ றுஞ்சசி
பந்தமி ருபத பன்னி யாயுளா
ரந்தமி லணங்கினர் யாரு மவ்வரை
வந்தன ரவரவர் மகிழ்ந யோவலால்.

(இ-ள்.) இலக்ஷுமியும், சரஸ்வதியும், சிறப்புப்பொருந்திய இந்திராணியும், பற்றற்ற ரிஷிபத்தினியர்களாயுள்ளவர்களும், முடிவில்லாத தேவமாதர்களுமாகிய

36

அனைவரும் தங்கள்தங்கள் புருஷர்களது கட்டளையினால் அவ்விமையமலையை யடைந்தார்கள்.—எ-று.

அஷ்ட ஐசுவரியங்களைத் தருதலுடைமையால், 'செந்திரு' என்றும், கல்வியைத் தருதலுடைமையால், 'நாமகள்' என்றும், போகங்களை யனுபவித்தலுடைமையால், 'சீர்பெருஞ்சசி' என்றும், பந்தமொழிந்த முனிபத்தினிகளாதலால், 'பந்தமிருபத பன்னியாவுளார்' என்றும், பலராதலால், 'அந்தமிலணங்கினர்' என்றும், இவர்களனைவரும் மாதர்கள் வர்க்கத்திற் சேர்ந்தவர்க ளாதலின், தத்தங்கணவர்கள் சொற்படி நடக்கவேண்டுதலால், 'வந்தனரவரவர் மகிழ்நரேவலால்' என்றுங் கூறினார்.(௯௦)

பங்கய மிசைவரு பாவை யேமுத
லங்கையர் யாவரு நற்ற வத்தினா
லங்கமொன் றுறுதரு மம்மை தாடொழா
மங்கல வதுவையின் வனப்புச் செய்தனர்.

(இ-ள்.) தாமரைமலரில் வசிக்குந் திருமகள் முதலாகிய மாதர்களனைவரும், நல்ல தவத்தைச் செய்தமையினால் திருமேனி வருந்தி யெழுந்தருளியிருக்கின்ற உமாதேவியாரது திருவடிகளை வணங்கி, மங்கலகரமாகிய திருமணத்திற்கு வேண்டிய சிறப்பைச் செய்தார்கள்.—எ-று.

பாவை - உவமையாகுபெயர். (௯௧)

நெறிதரு தவத்துரு நீக்கிக் காமருக்
குறையுள தாகிய வுமைதன் மெய்யினைக்
குறைதவிர் நிலைமையிற் கோலஞ் செய்தன
ரிறைவனை வழிபடு மியல்பி னாரென.

(இ-ள்.) நல்லொழுக்கத்தையுடைய தவவடிவத்தை நீக்கி அழகுக்கிருப்பிடமாகிய உமாதேவியாரது திருமேனியைக் குறைவில்லாவண்ணம் தங்கள் நாயகனை வணங்குகின்ற தன்மையினையுடையவர்களைப் போலச் சிங்காரித்தார்கள்.—எ-று.

கற்புடையமாதர்கள் தங் கணவரிடத்துப் பேரன்புடையவர்களாய் அவர்களுக்கு வேண்டுவனவற்றை நிரம்பச் செய்யுமாறுபோல மனப்பூர்வகமாகச் சிறப்ப அலங்கரித்தமையின், 'இறைவனைவழிபடுமியல்பினாரென கோலஞ்செய்தனர்' என்றார்.

மேதகு பொலஞ்சுடர் மேரு மந்தர
மாதிய வாகிய வலகில் சுற்றமு
மோதருங் கடல்களு முரக வேந்தரு
மாதிர யானையும் பிறவும் வந்தவே.

(இ-ள்.) உயர்வுபொருந்திய பொன்னொளியினையுடைய மேருமலை, மந்தரமலைமுதலிய அளவில்லாத பந்துக்களும் சொல்லுதற்கரிய சமுத்திரங்களும், நாகராஜர்களும், அஷ்டதிக்கியானைகளும் மற்றவைகளும் வந்தன.—எ-று.

ஆயிரத்தெட்டு மாற்றுடையதாய்த் தேவர்கள் தரிப்பதற்கே யுரியதாய் விளக்குதல்பற்றி, 'மேதகு பொலஞ்சுடர்மேரு' என்றும், பிறரால் அகலங்கள வாழங்கவிவ்வளவினவென் றளத்தற் கருமைநோக்கி, 'ஓதருங்கடல்களும்' என்றுங்கூறினார். மேருமந்தர மாதியவாகிய வலகில் சுற்றமும் என்றது, அஷ்டகுலாசலங்களை. அவை-மேரு - மாலியவான் - கந்தமாதனம் - ஏமகூடம்-நீலம் - சுவேதம்-நிடதம் - சிருங்கம் என்பன. ஓதருங்கடல்க ளாவன - உவர்நீர்க்கடல்,நன்னீர்க்கடல்-பாற்கடல் - தயிர்க்கடல்-நெய்க்கடல் - கருப்பஞ்சாற்றுக்கடல் - தேன்கடல் என்பன. உரகவேந்தர்கள்-

வாசுகி-அனந்தன்-தக்ஷன்-சங்கபாலன் -குளிகன்-பதுமன்-மகாபதுமன் - கார்க்கோடன் என்பவர்கள். மாதிரயானைகள், ஐராவதம் - புண்டரீகம் - வாமனம்-குமுதம் - அஞ்சனம் - புட்பதந்தம் - சார்வபௌமம் - சுப்ரதீபம் என்பன. (௯௩)

வேறு.

ஈங்கிது காலை தன்னி லிமகிரி புரக்கு மன்னன்
பாங்குறு தமர்க ளோடும் பரிவொடுஞ் சென்று வெள்ளி
யோங்கலி னந்தி யுய்ப்ப வுயிர்க்குயி ரான வண்ணல்
பூங்கழல் வணங்கி நின்றாங் கிவையன புகல லுற்றான்.

(இ-ள்.) இவ்விடத்து இவ்வாறு வந்துகொண்டிருக்குஞ்சமயத்தில் இமையபர்வதராஜன் நெருங்கியபந்துக்களுடன் அன்போடு திருக்கயிலாயமலையையடைந்து, திருநந்திதேவரனுப்ப (உள்ளேசென்று) உயிர்க்குயிராகிய சிவபெருமானது தாமரைமலர்போன்ற திருவடிகளைவணங்கி நின்று அவ்விடத்தில் இவ்வாறுவிண்ணப்பஞ்செய்யத்தொடங்கினான்—எ-று.

"எவ்வுயிரும் பராபரன் சந்நிதியதாகும்" என்றபடி எல்லாவுயிர்களையுந் தமக்காலயமாகக்கொண் டெழுந்தருளியிருக்கின்ற பெருமானாகலின், 'உயிர்க்குயிராய வண்ணல்' என்றார். (௯௪)

ஆதியி னுலக மெல்லா மளித்திடு மன்னை தன்னைக்
காதலின் வதுவை செய்யக் கருதினை கணித நூலோ
ரோதுபங் குனியின் றிங்க ளுத்தர மின்றே யாகு
மீதுநன் முகூர்த்த மெந்தா யிமையமேல் வருதி யென்றான்.

(இ-ள்.) எம்பெருமானே! முதலில் சர்வலோகங்களையும் பெற்றருளிய லோகமாதாவாகிய பார்வதிதேவியாரைத் தேவரீர் விருப்பத்துடன் திருமணம் புரியத் திருவுள்ளங்கொண்டருளினீர்; ஆதலால், சோதிடசாஸ்திரிகளால் சொல்லப்பட்ட பங்குனிமாதத்து உத்திரநக்ஷத்திரம் இன்றைத்தினமேயாம். இது நல்லமுகூர்த்தம். ஆகையால், இமயமலைக்குத் தேவரீர் வந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான்.

இலளிதாவதாரத்தில் சர்வலோகங்களையுந் திரிமூர்த்திகளையும் படைத்தருளினமை கருதி, 'ஆதியினுலகமெல்லா மளித்தருளன்னை' என்றார். (௯௫)

அல்லுறழ் கண்டத் தெந்தை யரசனை நோக்கி யின்னே
யெல்லையில் கணங்கள் சூழ விமையமேல் வருது முன்னாஞ்
செல்லுதி யென்ற லோடுந் திருவடி வணங்கிப் போற்றி
வல்லையின் மீண்டு போய்த்தன் வளநக ரிருக்கை புக்கான்.

(இ-ள்.) இருள்போன்ற கரிய கண்டத்தினையுடைய சிவபெருமான் பர்வதராஜனைப் பார்த்தருளி, இப்பொழுதே அளவில்லாத கணங்கள்சூழும்படி இமயமலைக்கு வருகின்றோம். நீ முன்னேபோகக்கடவையென்று அருளிச்செய்யும், (அவ்வரசன் சிவபெருமானது) திருவடிகளை வணங்கித் துதித்து விரைவாகத் திரும்பிச் சென்று தனது வளப்பம் பொருந்திய நகரத்திலுள்ள அரண்மனையை யடைந்தனன்.—எ-று.

திருமகள் விலாசந் தங்கப்பெற்றுள்ள தாகலான், 'வளநகரிருக்கை' என்றுகூறினார். (௯௬)

வரைபுனைபடல முற்றிற்று.

ஆ திருவிருவிருத்தம்-எ௨௫.

---

௧.

முருகன்றுணை.

# கணங்கள் செல்படலம்.

அந்த வேலையிற் கயிலையி லெம்பி ரானருளா
னந்தி தேவனை விளித்துநம் மணச்செய லுடை
முந்து சீருடை யுருத்திர கணங்கண்மால் முதலோ
ரிந்தி ராதியர் யாரையுந் தருதியென் றிசைத்தான்.

(இ-ள்.) அந்தச்சமயத்தில் திருக்கயிலாயத்தில் எமது சிவபெருமான் காருண்ணியத்தினுல் திருநந்திதேவரை யழைத்து நமது திருமணச்செய்கையைக் காணும்பொருட்டு முதன்மையாகிய சிறப்பினையுடைய உருத்திரகணங்கள் திருமால்முதலியவர்கள் இந்திராதியர்கள் யாவரையும் வரவழைக்கக் கடவையென்று கட்டளையிட்டருளினுர்.—எ-று.

உருத்திரர்கள், சிவசாரூபமும், சிவஞானமும் பெற்றுள்ளவர்களாதலாலும், திருமால்முதலியோர் உலக பாலகர்களாதலாலும், இந்திராதியர்கள் போகரூபிகளாதலாலும் இவர்களை முறைப்படவமைத்து, 'முந்து சீருடை யுருத்திர கணங்கண்மான் முதலோ ரிந்திராதியர் யாரையும்' என்று கூறினுர். (க)

இன்ன லின்பமின் றுகிய பரமனீ துரைப்ப
நன்ன யப்புட னிசைந்துபின் னந்தியம் பெருமா
னன்னர் யாவரு மணப்பொருட் டுற்றிட வகத்து
ளுன்னல் செய்தன னவரெலா மவ்வகை யுணர்ந்தார்.

(இ-ள்.) துன்பமு மின்பமு மில்லாதவராகிய சிவபெருமான் இவ்வாறு அருளிச்செய்ய,திருநந்திதேவர் நல்லவிருப்பத்துட னேற்றுக்கொண்டு,பின்பு அவர்களனைவரும் திருக்கல்யாண நிமித்தம் வரும்படி தமது திருவுள்ளத்தில் சிந்தித்தருளினுர். அவ்வுருத்திரகணங்கள் முதலியவர்களும் அவற்றை யுணர்ந்தார்கள்.—எ-று.

நன்னயப்பு - பெருவிருப்பு என்னும் பொருளில் வந்தது. திருநந்திதேவர் சர்வவியாபகத்தன்மையைப் பெற்றுள்ளவ ராகலின், திருமணத்திற்கு வரவேண்டுமென்று அவர் சிந்தித்த மாத்திரத்தே அதனை யாவரு முணர்ந்தன ரெனவறிக. (உ)

உலக முய்ந்திட வெம்பிரான் மணம்புரி யுண்மை
புலன தாதலு மவனருண் முறையினைப் போற்றி
மலியும் விம்மிதம் பத்திமை பெருமித மகிழ்ச்சி
பலவு முந்திடக் கயிலையை முன்னியே படர்வார்.

(இ-ள்.) உலகத்துள்ளவர்கள் பிழைக்கும் வண்ணம் எமது சிவபெருமான் திருமணஞ் செய்துகொள்ளு முண்மையானது தங்களறிவிற்றோன்றவும், அவ்வெம்பெருமானது திருவருள்முறைமையைத் துதித்து மிக்க ஆச்சரியமும், அன்பும்,பெருமிதமும், மகிழ்ச்சியுமாகிய பலவுந் தங்களைச் செலுத்தத் திருக்கயிலாயத்தைச் சிந்தித்துக்கொண்டு வருகின்முர்கள்.—எ-று.

சூரபதுமனது துன்பத்தினின்று நீங்கி உலக மீடேறுதற்பொருட்டுத் திருமணம் புரிந்தருள்கின்றமையின், 'உலக முய்ந்திட' என்றும், அத்திருமணத்தினுக்

குரியகாலத்தைத் தங்கள் மனத்தி லியல்பாக விளங்கச்செய்தமையின், சிவபெருமா
னது திருவருளுக்கு நாம் உரியராயினோமென்று விம்மிதமும், திருமணத்தைத் தரி
சிக்கவேண்டுமென்னு மன்பும், சிவகடாக்ஷத்தாற் சிறந்தவர்களாயினோ மென்னும் பெ
ருமிதமும், இது காரணத்தால் பிறப்பிறப்பொழிந்து பேரின்புறுவோமென்னுந் துணி
வால் மகிழ்ச்சியு மடைந்தன வென்க. (௫)

பாலத் தீப்பொழி விழியுடைப் பஞ்சவத் திரனே
மூலத் தீப்புரை விடைப்பெருங் கேதுவே முதலாஞ்
சூலத் தீக்கரத் தாயிர கோடியோர் சூழக்
காலத் தீப்பெய ருருத்திரன் வந்தனன் கடிதில்.

(இ-ள்.) நெற்றியிலக்கினியைக் கக்குகின்ற கண்ணினையுடைய பஞ்சான
னன், மூலாக்கினியையொத்த இடபகேதுமுதலிய நெருப்பைக்கக்குகின்ற சூலத்தை
யேந்திய கரத்தினையுடைய ஆயிரங்கோடியர்கள் சூழும்படி காலாக்கினி யுருத்திரர்
விரைந்து வந்தனர்.—எ-று.

உருத்திரகணங்களுக்கு நெற்றிக்கண் முதலிய சிவச்சின்னங்கள் பொலி
ந்து விளங்குதலால், 'பாலத் தீப்பொழி விழியுடைப் பஞ்சவத் திரனே-மூலத்தீப்பு
ரை விடைப்பெருங் கேதுவே முதலாஞ்-சூலத்தீக்கரத் தாயிரகோடியோர்' என்றனர்.
பஞ்சானனன் இடபகேதுமுதலிய பல்லாயிரங்கோடி யுருத்திரகணங்கள் சேவிக்கப்
பெ[illegible] காலாக்கினியுருத்திரர், உருத்திரர்களுக்குத் தலைவரும் திரிமூர்த்திகளுட்
சிரோ[illegible]ரும், சங்காரகருத்தரும், காபாலீசன் முதல் விலக்ஷண னீருகவுள்ள நூறு
உருத்திரர்களது புவனங்களுக்குமே லிருக்குங் காலாக்கினி புவனத்தி லிருப்பவரு
மாகலான், முறைபற்றி அவரை முதற்கண்ணே விரைவில் வந்தனரென்பார், 'காலத்
தீப்பெய ருருத்திரன் வந்தனன் கடிதில்' என்றனர். இதனை, "அஞ்சு கோடியோ
சனைபுகைந் திருமடங்கழன்றவர் தமைப் போலீ-ரைஞ்சு தீயுருத் திரர்புடை யுடுத்தவ
ரழற்கணுற் பூதங்க-ளஞ்சு நூறுருத் திரரண்டத் துச்சிய ரரியயன் முதற்றேவ-ரஞ்சு
மாணையு மாற்றலும் படைத்தவ ரடுகுறட் படைவீரர்" என்னுந் திருவிளையாடற் புரா
ணத்தானும், "அண்டகடா கக்கன முண் டொருகோடி யதனடியுட்- கண்டிடுகா லா
ங்கி யுருத்திரர்க்குக் கனகமனை- யுண்டதற்குன் னதங்கோடி யோசனையீ ரைங்கோடி-
மண்டியமெய்த் தழற்கொழுந்தைங் கோடியுறும் வளர்புகையும்" என்னுஞ் சிவதரு
மோத்திரத்தானு மறிக. காபாலீசன் முதல் விலக்ஷண னீருகவுள்ள நூறு ருத்திரர்க
ளாவார், காபாலீசன்-அசன் புத்தன்-வச்சிரதேகன்-பிரமத்தனன்-விபூதி -அவ்வியன்-
சாத்தா - பிநாகி - திரிசோதியன் - உருத்திரன் - உதாசனன் - பிங்கலன் - காதகன்-
அயன் - சுவலன் - தகனன் - வெப்புரு - பிரமாந்தகன் - க்ஷயாந்தகன் - யாமியன்-மிரு
த்தியு - அரன் - தாதா - விதாதா - கத்திரு - காலன் - தன்மன் - சங்யோத்தா-வியோ
க்கிருதன் - நிருதி - மாரணன் - அரந்தா - குரூரதிருஷ்டி - பயாந்தகன் - ஊர்த்துவ
காயன் - விரூபாக்ஷன் - தூமிரு - லோகிதன்- தெங்கிட்டிருணன் - பெலன்- அதிபெ
லன் - பாசாஸ்தன் - மாபெலன் - சுவேதா - ஜெயபத்திரன் - தீர்க்கவாகு - ஜெலாந்
தகன் - வடவாமுகன் - தீமான் - சீக்கிரன் - லகு - வாயுவேகன் - தீக்ஷணன்-சூக்கு
மன் - க்ஷயாந்தகன் - பஞ்சாந்தகன் - பஞ்சசிகன் - கபர்த்தி - மேகவாகனன் - நிதி
சன் - ரூபவான் - தன்னியன் - சௌமியன் - சௌமியதேகன் - பிரமத்தனன் - சுப்
பிரகடன் - பிரகாசன் - இலக்குமிவரன் - சோமேசன் - வியாத்தியாதிபன் - ஞானபு
கன் - சருவன் - வேதபாரகன் - மாத்திருவிருத்தன் - பிங்கலாக்ஷன் - பூதபாலன் -
பெலிப்பிரியன் - சர்வவித்தியாதிபன் - தாதா அனந்தன் - பாலகன் - வீரன் - பா

தானாதிபதி - விபு - இடபத்துவசன் - உக்கிரன் - சுப்பிரன் - உலோகிதன் - சருவன் - சம்பு - விபு - கௌணத்தியசுதன் - திரியக்ஷன் - திரிதேசகவாதகன் - சன்வாகன் - விவாகன். - நபன் - லிபக. விலக்ஷணன் என்பவர்களாம். (ச)

சுழல ழற்றிடு சூறையும் வடவையுந் தொலைய
முழுது யிர்த்தொகை யலமர வுயிர்க்குமொய்ம் புடையோ
ரெழுப திற்றிரு கோடிபா ரிடத்தொகை யீண்ட
மழுவ லத்தின னுயகூர் மாண்டனும் வந்தான்.

(இ-ள்.) சுழல்கின்ற சூறைக்காற்றும் வடவாமுகாக்கினியும் விலகவும், உயிர்க்கூட்டங்கள் முழுமையும் வருந்தவும் சுவாசம்விடுகின்ற வலிமையுடையவர்களாகிய எழுபத்திரண்டுகோடி பூதகணங்கள் சூழ்ந்துவர வலக்கரத்தில் மழுப்படையேந்திய கூஷ்மாண்ட உருத்திரரும் வந்தனர்.— எ-று.

காலாக்கினி யுருத்திரபுவனத்திற்கு மேலேயுள்ள கூஷ்மாண்ட புவனத்திலே பொன்மயமான திவ்வியாலயத்திலே நரகாதிபராகிய கூஷ்மாண்டருத்திரர் நரகவாசிகளைத் தண்டிப்பவர்களும், எப்போதுஞ் சுழலும்விழியினை யுடைவர்களும், ஊர்த்துவசுவாசமுடையவர்களும், உக்கிர வடிவுள்ளவர்களு மாகிய எழுபத்திரண்டுகோடி பூதகணங்களால் எப்போதுஞ் சேவிக்கப்பெற்றவ ராகலானும் சிவரூபமே இவரது ரூபமாகலானும், 'பாரிடத்தொகையீண்ட - மழுவலத்தினனுயகூர் மாண்டனும் வந்தான்' என்று கூறினர். இதனை :—"புத்தி யட்டகர் நாலிரு கோடிமேற் புகப்பெய்த நரகங்கள் - பத்தி ரட்டியுங் காப்பவர் பாரிடப் படையுடைக் கூர்மாண்டர்-சத்தியச் சிவ பாஞ் சுட ருதவிய சதவுருத் திரரன்னு-ருய்த்த ளித்தவீ ரைம்பது கோடிய ருருத்திர கணநாதர்" என்னுந் திருவிளையாடற் புராணத்தானும், "மேலயபாற் கனகபுரி வீற்றிருப்பர் கூர்மாண்டர் - காலவழ லிரவியுருக் காளமுக மழுவுங்கை - கோலமுறு வட்டவிழி கொண்டுடைய ரவர்தம்மைப்- போலுமுருத் திரர்பலரும் புடையடைவர் போற்றிசைத்தே" என்னுஞ் சிவதருமோத்திரத்தானு முணர்க. (ரு)

நீடு பாதலத் துறைபவர் நெற்றியங் கண்ணர்
பீடு தங்கிய பல்வகை நிறத்தவர் பெரியர்
கோடி கோடியா முருத்திர கணத்தவர் குழுவோ
டாட கேசனு முருத்திரன் கயிலையி லடைந்தான்.

(இ-ள்.) நீண்ட பாதாளலோகத்தில் வசிப்பவர்களும், நெற்றியில் அழகிய கண்ணுடையவர்களும், பெருமைபொருந்திய பலவகை நிறத்தினை யுடையவர்களும், பெரியவர்களுமாகிய கோடாகோடி உருத்திரகணத்தினர் கூட்டத்துடன் ஆடகேசவுருத்திரர் திருக்கயிலையையடைந்தனர்.—எ-று.

கூஷ்மாண்டருத்திர புவனத்திற்கு மேலுள்ள ஆடகேசுரபுவனத்தில் பலநிறமும் நுதல்விழியுமுள்ளவர்களாய்ச் சிறந்ததம்மையொத்த வடிவினையுடைய உருத்திரர்களும், அசுரநாகாதியர்களும் வணங்க ஆடகேசருத்திர ரெழுந்தருளியிருப்ப ராகலானும், தாஞ் செல்லுமிடங்களெவற்றினுஞ் சிறந்த திருக்கயிலைமலைக் கெழுந்தருளிச் சிவதரிசனஞ் செய்யப்போகின்றவ ராகலானும், 'உருத்திரகணத்தவர்குழுவோ-டாடகேசனு முருத்திரன் கயிலையி லடைந்தான்' என்றனர். இதனை—"அதன்மேலே நவலக்க மாடகநா யகர்புரிதான் - புதுமைதிகழ் மனைபொன்னால் யோசனையா யிரம்புகவிற் - சுதமுடைய தயித்தியர்கள் கட்டரவர் வெட்டரக்கர் - விதிமுறையிற் பதம்பணிய வீற்றிருப்பா ராடகரே" என்னுஞ் சிவதருமோத்திரத்தா னறிக. (சு)

கோர மிக்குயர் நூறுபத் தாயிர கோடி
சார தத்தொகை சூழ்தரச் சதுர்முகன் முதலோர்
ராரு மச்சுறச் சரபமாய் வந்தருள் புரிந்த
வீர பத்திர வுருத்திரன் வந்தனன் விரைவில்.

(இ-ள்.) மிகுந்த கோரத்தினையுடைய பத்துலக்ஷங்கோடி பூதகணங்கள் சூழ்ந்துவர, பிரமன்முதலிய தேவர்க ளஞ்சும்படி சரபவடிவங்கொண்டு வந்து (நரசிங்கத்தைக்கிழித்து) அருள்புரிந்த வீரபத்திரவுருத்திரர் வந்தருளினர்.—எ-று.

வீரபத்திரவுருத்திரர் நரசிங்காவதாரத்திற் கருவங்கொண்ட திருமாலையடக்கச் சரபாவதாரஞ் செய்தவராகலான், 'சரபமாய் வந்தருள்புரிந்த - வீரபத்திரவுருத்திரன்' என்று கூறினர். இதனை—"விரித்த வாயல கொடுக்குறக் கடித்ததன் மெய்த்தோ - லுரித்து வாங்கியச் சரபமென் றுருத்தவோ ருருவம்- பிரித்து மீண்டனன் வீர பத் திரனெனும் பெயரோன்-சிரித்து முப்புர மெரித்தவன் றன்னுழைச் சென்றான்" என்னும் உபதேசகாண்டத்தானும், "நன்னு லிரண்டு திருவடியு நனிநீள் வாலு முக மிரண்டுங் - கொன்னார் சிறகு முருத்திரமுங் கொடும்பே ரார்ப்பு மெதிர்தோற்றிச் - செந்நீர் பருகிச் செருக்குநர மடங்க லாவி செகுத்துரிகொண்-டொன்னார் குலங்கண் முழுதழிக்கு முடையான் சரபத் திருவுருவம்" என்னுங் காஞ்சிப்புராணத்தானு முணர்க. (எ)

விண்டு தாங்குறு முலகுயிர் முழுதுமோர் விரலிற்
கொண்டு தாங்குறு குறட்படை கோடிநூ றீண்டப்
பண்டு தாங்கலந் தரியர னிருவரும் பயந்த
செண்டு தாங்குகைம் மேலையோன் மால்வரை சென்றான்.

(இ-ள்.) விஷ்ணுவினால் தாங்கப்பட்ட உலகங்களையு முயிர்களையு மொரு விரலில்எடுத்துத் தாங்கக்கூடிய நூறுகோடிபூதப்படைகள்சூழ்ந்துவர, முற்காலத்தில் திருமாலுஞ் சிவபெருமானுங் கலந்து பெற்ற செண்டேந்திய கையினையுடைய மகாசாத்தர் பெரிய திருக்கயிலைமலையை யடைந்தனர்.—எ-று.

திருமா லருமையாகத் தாங்கும் புவனங்களைச்சிவபூதங்கள் மிகவிலாசானே தாங்குந் தன்மையினையுடையனவென்பதை விளக்க, "விண்டு தாங்குறு முலகுயிர் முழுதுமோர் விரலிற் - கொண்டு தாங்குறு குறட்படை" என்றார். அரியுமரனுங் கலந்தபோதுண்டானவர் அரியரபுத்திரனென்பதைக் குறிப்பிக்கவும், சிவவீரியத்தி னுதித்தமையால் உருத்திரரேயென்று விளக்கவும் உருத்திரர்கூட்டத்துடனமைத்து,"பண்டு தாங்கலந் தரியர னிருவரும் பயந்த-செண்டு தாங்குகைம் மேலையோன்"என்றனர்.

முந்தை நான்முகன் விதிபெறான் மயங்கலு முக்கட்
டந்தை யேவலா லாங்கவ னெற்றியந் தலத்தின்
வந்து தோன்றிநல் லருள்செய்து வானுணர் வளித்த
வைந்து மாறுமா முருத்திரர் தாமும்வந் தடைந்தார்.

(இ-ள்.) முற்காலத்திற் பிரமனானவன் சிருஷ்டித்தொழில் கைகூடாமல் மயக்கமடையவும், மூன்றுகண்களையுடைய சிவபெருமானது கட்டளையால் அவ்விடத்தில் அப்பிரமனது நெற்றியில்வந்து தோன்றிச் சிறந்ததிருவருள்புரிந்து நல்லறிவைக் கொடுத்தருளிய ஏகாதசருத்திரர்களும் வந்தடைந்தனர்.—எ-று.

ஏகாதசருத்திரர்க ளாவார், மாதேவன் - அரன் - உருத்திரன் - சங்கரன் - நீலலோகிதன் - ஈசானன் - விசயன் - வீமதேவன் - பவோற்பவன் - காபாலி - சௌமியன் என்பவர்கள். (அ)

இந்நி றத்தரா முருத்திர ரல்லதை யேனை
மெத்து பல்புவ னங்களு மளித்தவன் மேவி
நித்த னன்புறு முருத்திர கணங்களு நெறிசேர்
புத்தி யட்டக முதல்வரும் வந்தனர் பொருப்பில்.

(இ-ள்.) இத்தன்மையராகிய உருத்திரர்களல்லாமல் மற்றை மிகுதியாகவுள்ள பல புவனங்களைக் காத்து அவ்விடத்திற் பொருந்திச் சிவபெருமானது அருளைப் பெற்ற உருத்திரகணங்களும், முறைமையினையுடைய புத்தியஷ்டக முதல்வர்களும் அத்திருமலையில் வந்தார்கள்.—எ-று.

எல்லாப் புவனங்களையும் உருத்திரர்களே பரிபாலிக்கின்றவர்களாகலான், 'ஏனை-மெத்து பல்புவ னங்களு மளித்தவன் மேவி-நித்த னன்புறு முருத்திர கணங்களும்' என்று கூறினர். புத்திதத்துவத்திலுள்ள பைசாசம்-ராக்ஷசம்-யாக்ஷம்-காந்தருவம்-மாகேந்திரம்-சௌமியம்-பிராசேசுவரம்-பிராமம் என்னும் எட்டுச் சூக்கும புவனங்களினது தலைவர்களாகிய அநந்தன் - சூக்ஷுமன் - சிவோத்தமன் - ஏகாக்ஷன் - ஏகருத்திரன்-திரிமூர்த்தி-ஸ்ரீகண்டன்-சிகண்டி என்னு முருத்திரர்களைக் குறிப்பிக்க, 'நெறிசேர் புத்தி யட்டக முதல்வரும் வந்தனர்' என்று கூறினர். மெத்துபல் புவனங்கள் என்றது இருநூற்றிருபத்துநான்கு புவனங்களை; அவை வருமாறு—அநாசிருதை - அநாதை-அநந்தை-வியோமரூபிநி-வியாபிநி-ஊர்த்துவகை-மோசிகை-ரோசிகை - தீபிகை-இந்திகை-சாந்தியாதிதை-சாந்தி-வித்தை-பிரதிஷ்டை-நிவிர்த்தி - சதாசிவை-சிகண்டி-ஸ்ரீகண்ட-திரிமூர்த்தி-ஏகருத்திர-ஏகநேத்திர - சிவோத்தம - சூக்ஷும - அநந்த - மனோன்மனி-சர்வபூததமனி-பலப்பிரமதனி-பலவிகரணி-கலவிகரணி-காளி - ரௌத்திரி-ஜேஷ்டா-வாமை - அங்குஷ்ட - மாத்ரவீசான-ஏகேக்ஷண-ஏகபிங்கல-உத்பவ - பவ-வாமதேவ-மகத்யுதி-சிகேத-ஏகவீர-பஞ்சாந்தக - சூர-பிங்க - ஜோதி - சம்வர்த்த - குரோத-ஏகசிவ-அநந்த-அஜ-உமாபதி-பிரசண்ட-ஏகவீர - ஈசான - பவேச - உக்கிர - பீம-வாம-ஸ்ரீகண்ட-ஔம-கௌமார-வைஷ்ணவ-பிராம-பைரவ-கிருத-அகிருத- ப்ராஜேச-சௌமிய-ஐந்திர-காந்தர்வ-யக்ஷ-ராக்ஷச-பைசாச-ஸ்தலேஸ்வர - ஸ்தூலேஸ்வர-சங்குகன்ன-காலஞ்சர-மண்டலேசுவர-மாகோட-துவிரண்ட-சகலண்ட- ஸ்தாணு-சுவர்ணாக்ஷ-பத்திரகர்ண-கோகர்ண-மகாலய-அவிமுக்த-ருத்ரகோடி-வஸ்திரபாத- பீமேசுவர-மகேந்திர-அட்டகாச-விமலேச-நகல-நாகல-குருக்ஷேத்ர-கயா-பயிரவ-கேதார - மகாகாள-மத்தியமேச-ஆம்ராதக-ஜலபேச-ஸ்ரீசைல-அரிச்சந்திர-லகுளீச - பராபூதி-டிண்டி-முண்டி-ஆஷாட-புஷ்கர-நைமிச-பிரபாச-அமரேச - பத்ரகாளி - வீரபத்திர-த்ரிலோசன-விப்சுநப-விவாஹ - சம்வாஹ-திரிதசேச-திரியக்ஷ-கணாத்யக்ஷ-விபு - சம்பு-தம்ஷ்ட்ரி-வஜ்ர-பணீந்திர-உதும்பரேச-கிரசன - ம்ருதாசன - குரோதன - அநந்த-விருஷதர - விருஷ - பலிப்பிரிய - பூதபால - ஜேஷ்ட - சர்வ - சுரேச - வேதபாரக - ஞானபுக்கு - சர்வஞ்ஞ - ஈச - வித்தியாதிப - பிரகாமத - பிரசாதக-ஸ்ரீத்ருக்-ரத்நருக்-லக்ஷுமித்ருக் - ஜடாதர - சௌமியதேக - தன்ய-ரூபவான்-நிதீச-மேகவாகன - கபர்த்தீ-பஞ்சசிக - பஞ்சாந்தக - க்ஷயாந்தக-தீக்ஷண-சூக்ஷும - வாயுவேக-லகு - சீக்கிர - சுநாத-மேகநாத-ஜலாந்தக - தீர்க்கபாகு - ஜெயபத்திர - சுவேத - மஹாபல - பாசஹஸ்த - அதிபல - பல - தம்ஷ்ட்ரி - லோகித - தூம்ரக - விரூபாக்ஷ - ஊர்த்துவசேம-பயாநக - குரூரதிருஷ்டி - ஹந்தரு - மாரண - நிருதி - தர்மபதி - தர்ம - வியோத்ரு - சம்யோத்ரு - கர்த்ரு - விதாத்ரு - தாத்ரு - ஹாமிருத்யு - யாமிய - க்ஷயாந்தக-பஸ்மாந்தக - பப்ரு - தகந - ஜ்வலன - ஹாகாதக - பிங்கள - சுதாசன - அக்நிருத்ர-த்ரிதசாதிப - பிநாகி - சாஸ்த்ரு - அவ்யய-விபூதி - பிரமரத்ன - வஜ்ரதேக - புத்த -

அஜ - காபாலீச - ரௌத்திர - வைஷ்ணவ - பிரம்ம - ஹாடக - கூஷ்மாண்ட - காலாக்கினி என்பனவாம். (௧௦)

தொட்ட தெண்கடல் யாவையுந் தூளினு மூர்க்கு
மெட்டு நூறெனுங் கோடிபா ரிடத்தொகை யீண்டக்
கட்டு செஞ்சடைப் பவர்முத லாகவே கழறு
மட்ட மூர்த்திக டாங்களு மொருங்குட னடைந்தார்.

(இ-ள்.) சகரர்களால் தோண்டப்பட்ட தெள்ளிய கடல்களனைத்தையும் (தங்கள்பாத) தூளிகளினால் தூர்க்கின்ற எண்ணூறுகோடி பூதகணங்கள் நெருங்கிச் சூழ்ந்துவர, கட்டப்பட்ட சிவந்த சடைமுடியையுடைய பவர்முதலாகச் சொல்லப்பட்ட அஷ்டமூர்த்திகளும் ஒருமிக்க உடனே வந்தார்கள்.—எ-று.

அஷ்டமூர்த்திகளாவார் - பவர் - சருவர் - ஈசானர் - பசுபதி - பீமர் - மகாதேவர் - உக்கிரர் - உருத்திரர், என்பவர்களாம். இவர்களும் உருத்திரர்களாதலால் உருத்திர வரிசையிலமைத்துக்கூறினர். இதனை—"எய்து நாமமென் னெனிற் பவன் சருவனீசானன் - வைதிகந்தரு பசுபதி பீமன்மாதேவ - னெய்திளம்பிறை யுக்கிர னுருத்திர னென்ப - மைதிகழ்ந்தொளிர் கண்டனெண் வடிவமும் வகுப்பாம்" என்றுங் கூர்மபுராணத்தா னறிக. (௧௧)

ஏறு கொண்டிடு தெழிப்பின ரெம்பிரான் விழிநீர்
நாறு கொண்டுள கலத்தொடு பொடியணி நலத்தோர்
நூறு கொண்டிடு கோடிபூ தத்தொடு நொடிப்பின்
வீறு கொண்டகுண் டோதரன் போந்தனன் வெற்பில்

(இ-ள்.) உயர்ந்த கர்ச்சனையை யுடையவர்களும், எமது சிவபெருமானுடைய கண்ணீரையே நாற்றாகக்கொண்டுள்ள ருத்திராக்ஷத்துடன் திருவெண்ணீற்றை யணிந்த நன்மையை யுடையவர்களுமாகிய நூறுகோடி பூதங்களுடன் விரைவாகப் பராக்கிரமம் பொருந்திய குண்டோதரர் திருக்கயிலைமலைக்கு வந்தனர்.—எ-று.

'ஏறுகொண்டிடுதெழிப்பினர்' என்பதற்கு, ஆண்சிங்கம்போலுங் கர்ச்சனையை யுடையவர்கள் எனப் பொருள் கூறினுமாம்.

இதுகாறும் உருத்திரகணங்களின் வருகையை முறையே கூறிப் பின்பு கணத்தலைவர்களின் வருகையைக் கூறுவான் புகுந்தவர், அக்கணத் தலைவர்களுள் குண்டோதரர் மிகச்சிறந்தவரும், சிவபெருமான்முன்பு சங்கீதம்பாடல்-குடைபிடித்தல்-அவ்வெம்பெருமா னிடபத்தெழுந்தருளும்பொழுது முதுகு வளைந்து கொடுத்தல் முதலிய திருத்தொண்டு செய்தலில் அனுக்கருமாதலாலும், அடிக்கடி ஸ்ரீகண்டபரமேசுரரது ஸ்ரீபாதப்பரிசமுடையவராதலானும் அவரது வருகையை முதற்கண்வைத்து அவரது மேன்மைதோன்ற, 'வீறுகொண்ட குண்டோதரன்' என்று கூறினர். இதனை—"பாட்டின்பொரு ளாயவன் பாரிட வீரன்பாடல் - கேட்டின்ப மெய்திக் கணங்கட்குக் கிழமைநல்கி - மோட்டின் புனன்மண் முறைசெய்திருந் தானளகக் - காட்டின் புறம்போய் மடங்குங்கயற் கண்ணியோடும்" எனவும், "குடையெடுக்குமிக் குறியதாட் குறட்கொரு பிடிசோ-றிடுமி னப்புறஞ் சோறுமாலெனத்தொழு தெல்லா - முடைய நாயகி போயினள் குறியனு முடனே-நடைத ளர்ந்துகண் புகைந்துவாய் புலர்ந்திட நடந்தான்" எனவும் "செங்கண் மாலய னிந்திரன் முதற்பெருந் தேவர்க்கும் யாவர்க்கு-மங்க லந்தரு கடைக்கணு யகனொரு மங்கலம் புனைந்தான்போல்-சங்கை கொண்டிடும் போதரன் முதுகின்மேல் சரணம்வைத் தெதிர்போந்த - துங்க மால்விடை மேற்கொடு நடந்தனன் சுரர்கள்பூ மழைதூர்த்தார்" எனவும் வருந் திரு

விளையாடற்புராணத்தாலும், "பொற்றாள் - வன்மைபெற்ற குண்டோதரன் மொய்ம் பிடைவைத்துச் - சின்மயத்தனி மால்விடையேறினன் சிவனே" என மேல்வருமாற் றானுமறிக. (கஉ)

அண்டம் யாவையு முயிர்த்தொகை யனைத்தையு மழித்துப்
பண்டு போலவே தந்திட வல்லதோர் பரிசு
கொண்ட சாரதர் நூற்றிரு கோடியோர் சூழக்
கண்ட கன்னனும் பிருங்கியும் வந்தனர் கயிலை.

(இ-ள்.) சகல அண்டங்களையும் அவற்றிலுள்ள உயிர்க்கூட்டங்க ளனைத்தையும் அழித்து முன்போலவே செய்யத்தக்க தன்மையையுடைய இருநூறுகோடி பூதங்கள் சூழ்ந்துவர, கண்டாகன்னரும் பிருங்கியுமாகிய இருவரும் திருக்கயிலாயத்திற்குவந்தார்கள்.—எ-று.

பூதகணங்கள் உலகங்களனைத்தையு மழித்துப் படைக்குமாற்றல் பெற்றுள்ளனவென்பார், 'ஓர்பரிசுகொண்ட சாரதர்' என்று கூறினார். இதனை—"நீடு தேவர் நிலைகளும் வேண்டிடி - னூடு மைம்பெரும் பூதமு நாட்டுவ - கோடிகோடி குறட்சிறு பூதங்கள்-பாடி. யாடும் பரப்பது பாங்கெலாம்" என்றுந் திருத்தொண்டர்புராணத்தானறிக. 'நூற்றிருகோடி' என்பதற்கு நூற்றிரண்டுகோடி யெனினுமாம். (கரு)

ஆனனங்களோ ராயிர மீராயிர மங்கை
மேனி வந்தபொன் மால்வரை புரைநிற மேவித்
தானை வீரர்நூற் றைம்பது கோடியோர் சாரப்
பானு கம்பனுந் தலைவனொண் கயிலையிற் படர்ந்தான்.

(இ-ள்.) ஆயிரம் முகங்களும் இரண்டாயிரங் கைகளும், மேலோங்கிய பெரிய மேருமலையை யொத்த நிறத்தையுமடைந்து, நூற்றைம்பதுகோடி சேனைவீரர்கள் நெருங்கிவரப் பானுகம்பனென்னுஞ் சிவகணத்தலைவரும் ஒளிபொருந்திய திருக்கயிலைக்கு வந்தனர்.—எ-று. (கச)

தங்கள் சீர்த்தியே மதித்திடு கடவுளர் தலையும்
பங்கி யாகிய கேசமும் படைகளும் பறித்துத்
துங்க மெய்திய கணங்கள்பல் கோடியோர் சூழச்
சங்கு கன்னன்வந் திறுத்தனன் றடவரை தன்னில்.

(இ-ள்.) தங்கள் கீர்த்திகளையே (பெரிதாகப்) புகழ்ந்துபேசுகின்ற தேவர்களது தலைகளையும் புறமயிராகிய சிகையையும், ஆயுதங்களையும் பிடுங்கி, அதனால் உயர்வடைந்திருக்கின்ற பலகோடி கணங்கள் சூழ்ந்துவரப் பெரிய திருக்கயிலைமலையில் சங்குகன்னர் வந்து சேர்ந்தனர்.—எ-று.

சிவகணநாதர்கள் நற்புகழ்ச்சியையுடைய தேவர்களது சிரங்களையுஞ் சிகைகளையு மறுத்துத் தண்டித்து நல்வழிப்படுத்துவோராதலால், 'தங்கள் சீர்த்தியே மதித்திடு கடவுளர் தலையும் - பங்கி யாகிய கேசமும் படைகளும் பறித்துத் - துங்க மெய்திய கணங்கள்' என்றார். (கசு)

காள கண்டனுந் தண்டியு நீலனுங் கரனும்
வாள்வ யம்பெறு விச்சுவ மாலியு மற்று
மாளி மொய்ம்பின ராயபல் பூதரு மனந்த
நீளி ருங்கடற் றானையோ டணைந்தனர் நெறியால்.

(இ-ள்.) காளகண்டனும், தண்டியும், நீலனும், கரனும், வாட்போரில் வெற்றிபெற்றுள்ள விச்சுவமாலியும், பின்னும் யாளிபோன்ற வல்லமையுடையவர்களா

ய பல பூதர்களும் அனேக மிகப்பெரிய சேனாசமுத்திரத்துடன் முறைப்படி வந்தார்கள்.—எ-று.

காளகண்டன் முதலிய கணங்கள் அநந்த பூத சைனியங்களோடு வரினும், மரியாதையோடு வந்தனவென்பதைக் குறிப்பிப்பார், 'அணைந்தனர் நெறியால்' என்று கூறினார். (௧௬)

கூற்றின் மொய்ம்பினைக் கடந்திடு சாரதக் குழுவோர்
நூற்று முப்பது கோடியோர் சூழ்ந்திட நொய்தின்
மாற்ற லார்புர மட்டவன் றுணையடி வழிபட்
டேற்ற மிக்கவீ சானனக் கயிலையி லிறுத்தான்.

(இ-ள்.) இயமனுடைய வல்லமையைச் செயித்தவர்களாகிய பூதகணங்கள் நூற்றுமுப்பதுகோடியர்கள் சூழ்ந்துவர, விரைவாகச் சத்துருக்களது முப்புரங்களையு யழித்தருளிய திருவடிகளைத் தொழுது மிக்க மேன்மையையடைந்த ஈசானரும் அத்திருக்கயிலைமலையில்வந்து சேர்ந்தனர்.—எ-று.

அஷ்டதிக்குப்பாலகருட் சிறந்தவரும், சிவசாரூபியுமாதலால், 'ஏற்ற மிக்க வீசானன்' என்று கூறினார். (௧௭)

எகின மாகிய மாலயன் வாசவ னிமையோர்
புகலு மாதிரங் காவலர் கதிர்மதி புறக்கோண்
மிகைய தாரகை யன்னைகள் வசுக்கள்வே றுள்ளார்
மகிழும் விஞ்சையர் முனிவரர் யாவரும் வந்தார்.

(இ-ள்.) அன்னவடிவங்கொண்ட திருமாலும், பிரமனும், இந்திரனும், தேவர்களும், புகழ்ந்துகூறுந் திக்குப்பாலகர்களும், சூரியசந்திரர்களும், மற்றைக் கிரகங்களும், மிகுதியாகிய நக்ஷத்திரங்களும், சப்தமாதாக்களும் அஷ்டவசுக்களும் மற்றுள்ளவர்களும், மகிழ்வினையுடைய வித்தியாதரர்களும், முனிசிரேஷ்டர்களுமாகிய அனைவரும் வந்தார்கள்.—எ-று.

வேதங்களைச் சிவபெருமானது திருவருளால் பலர் பலமுறைகளில் விளக்கினர்; அவர்களைப்போலத் திருமாலு மொருகாலத்தில் வேதங்களை வெளிப்படுத்தற் பொருட்டு அன்னப்பறவை யுருவெய்தின னென்பார், 'எகின மாகிய மால்' என்று கூறினார். 'மிகையதாரகை' என்றது, அசுவினி முதலிய இருபத்தேழு நக்ஷத்திரங்களை; தூமாதிகிரகங்க ளெனினுமாம். அன்னைகளாவார், பிராமி - மகேசுவரி - கௌமாரி - வைஷ்ணவி - வராகி - இந்திராணி - சாமுண்டி என்பவர்கள். வசுக்கள் என்றது அஷ்டவசுக்களை; இவர்கள், அனலன் - அனிலன் - ஆபச்சைவன் - சோமன் - தரன் - துருவன் - பிரத்தியூசன் - பிரபாசன் என்பவர்கள். (௧௮)

வாலி தாகிய மறைகளா கமங்கண்மந் திரங்கண்
ஞால மாதிய பூதங்க ளுலகங்க ணகர்கள்
கால மானவை யேனைய பொருளெலாங் கடவுட்
கோல மெய்திவந் திறுத்தன கயிலையிற் குறுகி.

(இ-ள்.) தூய்மையாகிய வேதங்களும், ஆகமங்களும், மந்திரங்களும், பிருதிவி முதலிய பூதங்களும், உலகங்களும், நகரங்களும், காலங்களும், மற்றுள்ள எல்லாப்பொருள்களும் தேவரூபங்கொண்டு திருக்கயிலாயத்திருமலையில் சேர்ந்துவந்திருந்தன.—எ-று.

ஆன்மாக்களை நல்வழிப்படுத்தி இரக்ஷிக்கும்பொருட்டே கடவுள் நின்மலமான வேதத்தை யருளிச்செய்தமையாலும், அவ்வேதம் முற்றிலுஞ் சிவபெருமானது புக

மையே உண்மையாக உரைப்பதனாலும் 'வாலிதாகிய மறைகள்' என்றார்; அவை - இருக்கு - எசுர் - சாமம் - அதர்வண மென்பன. ஆகமங்கள், காமிகம் - யோகசம் - சிந்தியம் - காரணம்-அசிதம் - தீப்தம் - சூக்குமம் - சகச்சிரம் - அஞ்சுமான் - சுப்பிரபேதம் - விசயம் - நிச்சுவாசம்-சுவாயம்புவம் - அனலம் - வீரம் - ரௌரவம்-மகுடம்-விமலம் - சந்திரஞானம் - முகவிம்பம்-புரோற்கீதம்-இலலிதம் - சித்தம் - சந்தானம்-சர்வோக்தம்- பாரமேசுவரம் -கிரணம்-வாதுளம் என்னும் இருபத்தெட்டுமாம்-ஆகமம் என்பதில், ஆ - என்பது ஞானம், க-என்பது மோக்ஷம், ம - என்பது மலநாசம் என்னும் பொருள்மேனிற்றலால் ஆன்மாக்களது மலத்தை நாசஞ்செய்து ஞானத்தை யுதிப்பித்து மோக்ஷத்தைக் கொடுக்கு நூல் எனவும், ஆ - என்பது பாசம், க - என்பது ஆன்மா, ம - என்பது சிவம் என்னும் பொருள் மேனிற்றலால் திரிபதார்த்த நிச்சயமுணர்த்தும் நூல்எனவும் பொருள்படுமாறு காண்க. மந்திரங்களென்பன - சுவாஹா - படு - வுஷட் - உம்பட் - நம - ஸ்வதா - உம் முதலிய பல்லவங்களையுடைய சப்தகோடி. மஹா மந்திரங்களேயாம். ஞாலமாதிய பூதங்களென்றது, அவற்றினதி தெய்வங்களை. உலகங்கள் - நகர்கள் என்றதுமவ்வாறே. (௧௯)

இந்த வாற்றினாற் கயிலையில் யாவரும் யாவும்
வந்த தன்மையை நோக்கிய யாற்றவு மகிழ்ந்து
நந்தி யுள்புகுந் தமலனுக் கித்திற நவில
முந்தை யன்னவர் யாரையுந் தருகென மொழிந்தான்.

(இ-ள்.) இவ்வாறாகத் திருக்கயிலாயத்தில் யாவர்களும் யாவையும் வந்தடைந்த தன்மையைப் பார்த்தருளி மிகவு மகிழ்வடைந்து திருநந்திதேவர் உள்ளே புகுந்து சிவபெருமானுக்கு இவர்கள் வந்த தன்மையை விண்ணப்பஞ் செய்ய, முதற் பெருங்கடவுளாகிய சிவபெருமான் அவர்களனைவரையு மிங்கழைத்துவருவாயாகவென்று கட்டளையிட்டருளினார்.—எ-று.

உயர்திணை யஃறிணை யென்னும் இருபகுதியும் வந்தமையால், 'யாவரும் யாவும்' என்றுகூறினார். (௨௦)

புராரி யித்திற மொழிதலுஞ் சிலாதனார் புதல்வ
னொராய்மு தற்கடை குறுகிய யுருத்திர கணங்கள்
முராரி யாதிபாம் விண்ணவர் முனிவரெல் லோரும்
விராவு நீர்மையிற் சென்றிடக் கோயிலுள் விடுத்தான்.

(இ-ள்.) திரிபுரதகனராகிய சிவபெருமான் இவ்வாறு அருளிச்செய்யவும், சிலாதமுனிவர் புத்திரராகிய திருநந்திதேவர் அவ்விடத்தினின்று நீங்கி முதற்றிருவாயிலையடைந்து, உருத்திரகணங்களையும், திருமால்முதலிய தேவர்களையும், முனிவர்முதலிய அனைவரையும், (ஒருவர்பின்னொருவராகத்) தொடர்ந்துசெல்லும் வண்ணந் திருக்கோயிலினுள்ளே விட்டருளினார்.—எ-று.

சிலாதனார்-சிலையை அதஞ்செய்தவனென்னுங் காரணத்தினால் வந்தபெயர். சிலை - மலை. அதம் - அழிவு. இதன்வரலாறு - முன்பொருகாலத்தில், திருமறைக்காடென்னுந் திருப்பதியில் வேதியர் குலத்தில் ஒரு சற்புத்திரர் அவதரித்து ஐந்துவயதாக வளர்ந்துவருங் காலத்தில், தம் வீட்டிற்கு ஒரு அந்தணர் அன்னபிக்ஷைக்குவந்தனர். அப்பொழுது இவர் அறியாத்தன்மையால், அவ்வேதியருடைய பிக்ஷான்னத்தில் ஒரு சிறு கல்லைப்போட்டனர். அவர் அதனை யுணராமல் பிக்ஷையேற்றுச்சென்று அந்தச் சிறு கல்லுடன் அவ்வன்னத்தை யுண்டு விட்டனர். பின்னர், இவர் தக்கவயதளவு வளர்ந்து சாஸ்திரவாராய்ச்சி செய்து, பெருந்தவமியற்றி அதுகாரணத்தால்

கோரதபசியென்னும் பெயர்பெற்று, அஷ்டமாசித்திகளிலும் வல்லவராய், அவற்றின் வல்லமையால் இயமபுரத்தைப்பார்க்க விருப்புற்றுச்சென்று அங்குள்ள பல தண்டனைகளையும் பார்த்துவருகையில் அங்கோர் பெரிய மலைக்கல்லிருக்கக்கண்டு அங்குள்ள தண்டத்தலைவர்களைநோக்கி இப்பெரும் பாறையின் வரலாறென்னையென்று வினவ அவர்கள் ஐயரே! உலகத்தில் கோரதபசியென்னுமொரு மகாபாபியானவன் பிக்ஷையேற்கவந்த ஒரு அந்தணன் அன்னத்திற் கல்லையெறிந்தனன். அதனையறியாத அவ்வந்தணன் அதனைப் புசித்தனன். அக்கல்லே இங்குப்பெருமலையாக வளர்ந்து வருகின்றது. அக்கோரதபசி, பின் இறந்து இங்கடைந்தபின்பு இதனை யுண்ணும்படி நேரிடும் என்றுகூற, அதனைக்கேட்ட அந்தக் கோரதவசி தாம் இளமைப்பருவத்தி லறியாமையாற்செய்த அந்நீச்செய்கையை நினைத்து அவ்வாபத்தினின்று நீங்கக்கருதி அவர்களைநோக்கி, இச்செய்கை செய்தவன் இதினின்றுந் தப்பித்துக்கொள்ளு முறைமையுளதோவென்று வினவ, அவர்கள் அவன் இவ்வளவினதாகிய ஒரு மலையைப் பூமியிலே கரைத்து உண்பானாயின், இஃது கரைந்துவிடுமென்றனர். உடனே அவர் பல வேடிக்கைகளைப்பார்த்துப் பின்பு உலகத்தில் தமது ஊரையடைந்து ஒரு பெருமலையை குறிப்பிட்டு வைத்துக்கொண்டு நாளாவர்த்தியில் அதனை யிடித்துப் பொடியாக்கி நீரிற்கரைத்து உண்டு அம்மலையை யழித்தனர். அதனால், இயமபுரத்தில் இவர்க்காக வளர்ந்திருந்த அம்மலையுங் கரைந்தொழிந்தது, இது காரணத்தால் இவருக்குச் சிலாதர் என்னும் பெயராயிற்று என்பதாம். சிலாதனார் என்பது விகுதிமேல் விகுதி பெற்றது. சிலாதரர் என்பதும் நூல் வழக்கு. திருநந்திதேவர் இம்முனிவருக்குப் புத்திரராய் யாகசாலையிற் கொழுமுனை மூலமாகப் பொற்பெட்டியி னின்றும் வெளிப்பட்டமையால், 'சிலாதனார் புதல்வன்' என்று கூறினார். இதனை—"அன்னநன் மகவு தந்தன மென்ன வைம்முகக் கடவுளாண் டகலப்-பன்னருஞ் சிறப்பிற் சிலாதனுண் மகிழ்ந்து பழிப்பறு மகமினி தியற்றிக்-கொன்னுனிக் கொழுவாய் நடந்தநீள் சாலிற் குருகுபேர்க் குன்றற வெறிந்த-பொன்னெயிற் கரத்த முருகுறழ் சாயற் புதல்வனல் லெழிலொடு முதித்தான்" என்னுங் கூர்மபுராணத்தா னறிக. திருநந்திதேவர் சிலாதமுனிவருக்குப் புத்திரராகத் தோன்றிய முறைமையால் சைலாதி என்னும் பெயர் பெற்றனரென்க. திருமால் நரகாசுரனது மந்திரியாகிய முரனென்னு மசுரனைக் கொன்றவராகலின் 'முராரி' என்றார். சிவசந்நிதியில் அவரவர்க ளுயர்வுதாழ்வுக்குந் தக்கவாறு கிரமப்படி சென்று சேவிக்க வேண்டுவது முறைமையாதலால், 'திருநந்திதேவர்முன்னர் உருத்திரர்களையும், பின்னர் சிவகணங்களையும், அதன் பின்னர் மாலயனாதியரையும் உள்ளே விட்டனனென்பார் 'உருத்திரகணங்கள்-முராரியாதியாம் விண்ணவர் முனிவரெல்லோரும் - விராவு நீர்மையிற் சென்றிடக் கோயிலுள் விடுத்தான்' என்று கூறினார். (உக)

விடுத்த காலையி லரியணை மீமிசை விளங்கிக்
கடுத்த யங்கிய கண்டன்வீற் றிருப்பது காணூஉ
வடுத்த வன்புடன் யாவரு மிறைஞ்சியே யவன்சீ
ரெடுத்து நீடநின் றேத்தியே யணுகின ரிமைப்பில்.

(இ-ள்.) அவ்வாறு உள்ளேவிட்டருளியபொழுது, சிங்காசனத்தினுச்சியில் காளகண்டராகிய சிவபெருமான் விளக்கமுற்றெழுந்தருளி யிருத்தலைப் பார்த்து நெருங்கிய பேரன்போடு யாவரும் வணங்கி அவ்வெம்பெருமானது புகழையெடுத்து, தூரத்தில்நின்று துதித்துக்கொண்டு விரைவில் சமீபத்திற் சென்றார்கள்.—எ-று.

சிவபெருமானது நித்தியத்துவத்தையும் மற்றையர்களது அநித்தியத்துவத்தையும் விளக்க, 'கடுத்தயங்கிய கண்டன் வீற்றிருப்பது காணூஉ' என்றார். (உஉ)

நீண்ட சீருருத் திரர்தமை நிறைந்தபல் கணத்தை
யீண்டு தேவரை முனிவரை வீற்றுவீற் றிசையா
வாண்டு தன்விரற் சுட்டியே யாதிநா யகற்குக்
காண்டல் செய்துநின் றேத்தினன் வேத்திரக் கரத்தோன்.

(இ-ள்.) மிக்க சிறப்பினையுடைய உருத்திரர்களையும், அங்கு நிறைந்துள்ள பல சிவகணங்களையும், நெருங்கியதேவர்களையும், முனிவர்களையும் வெவ்வேறாக எடுத்துக்கூறி, அங்குத் தமது திருவிரலைக்கொண்டு சுட்டி முதல்வனாகிய சிவபெருமானுக்குக்காண்பித்துப் பொற்பிரம்பினையேந்திய திருக்கரத்தினையுடைய திருநந்திதேவர் நின்று துதித்தனர்.—எ-று.

திருநந்திதேவர் சிவபெருமானது சந்நிதியில் வந்து சேவித்து நிற்பவர்களை முறைப்படி காட்டினரென்பார், 'நீண்ட சீருருத் திரர்தமை நிறைந்தபல் கணத்தை-யீண்டு தேவரை முனிவரை வீற்று வீற்றிசையா' என்று கூறினார். (௨௩)

ஆர ழற்றிய ரண்ணல்கூர் மாண்டனா டகத்தோன்
வீர பத்திரன் முதலுருத் திரகண மேத்தப்
பாரி டத்தவர் யாவரு மெம்பிரான் பாங்கிற்
சேர முற்றுநின் றேத்தினர் பணிந்தசிந் தையராய்.

(இ-ள்.) காலாக்கினியுருத்திரர், கூஷ்மாண்டர், ஆடகேசர், வீரபத்திரர் முதலிய உருத்திரகணங்கள் துதிக்க, பூதகணங்களனைவரும் எமது சிவபெருமானருகில் நெருங்கிநின்று பணிந்த சிந்தையுடையவர்களாய்த் துதித்தார்கள்.—எ-று.

சிவகணநாதர்கள் சிவபோத மொழிந்தவர்களாகலின், 'ஏத்தினர் பணிந்த சிந்தையராய்' என்றார். (௨௪)

அன்ன காலையி னான்முக னெம்பிரா னணிவா
னுன்னி யேமுடி முதலிய பல்கல னுதவிப்
பொன்னி னியன்றோர் பீடிகை யிற்கொடு போந்து
முன்ன ராகவைத் திறைஞ்சியே யித்திற மொழிவான்.

(இ-ள்.) அப்பொழுது பிரமதேவன் எமது சிவபெருமானணிந்துகொள்ள வேண்டுமென்று சிந்தித்து மகுடமுதலிய பல ஆபரணங்களைச்செய்து பொன்னினாற் செய்யப்பட்ட ஓர் பீடத்தின்மீது வைத்தெடுத்துக்கொண்டுவந்து திருமுன்னேவைத்து வணங்கி, இவ்வாறு கூறுகின்றனன்.—எ-று. (௨௫)

ஐய கேளுனக் கில்லையாற் பற்றிக லடியே
முய்யு மாறிவண் மணஞ்செய வுன்னினை யுன்பால்
மையல் மாசுணப் பணியெலா மாற்றிமற் றிந்தச்
செய்ய பேரணி யணிந்தரு ளென்று செப்பினனே.

(இ-ள்.) ஆண்டவரே! தேவரீருக்கு விருப்பு வெறுப்புக்கிடையாது; (அவ்வாறாயினும்) அடியேங்களுய்யும் வண்ணம் இங்குத் திருமணம் புரிந்தருளுவதற்குத் திருவுள்ளங்கொண்டருளினீர், (ஆதலால்) தேவரீரது திருமேனியிலணிந்துள்ள மயக்கத்தைத்தருகின்ற சர்ப்பாபரணங்களையெல்லாம் நீக்கி, இந்தப்பெரிய செவ்விய ஆபரணங்களை யணிந்துகொள்ளவேண்டுமென்று பிரார்த்தித்தனன்.—எ-று. (௨௬)

பங்க யாசனன் குறையிரந் திணையன பகர
வங்கண் மூரல்செய் தன்புட னியைத் திடலா
லிங்கு நாமிவை யணிந்தென மகிழ்ந்தன மென்னாச்
செங்கை யாலணி கலத்தினைத் தொட்டருள் செய்தான்.

(இ-ள்.) கமலாசனனாகிய பிரமதேவன் மிகவும் வேண்டி யிவ்வாறுகூறு தலும், (சிவபெருமான்) அவ்விடத்துப்புன்னகைகொண்டு நீ அன்போடு கொடுத்தமை யால் நாம் இவற்றை தரித்துக்கொண்டாற்போல மகிழ்வடைந்தோமென்று கூறியரு ளிச், செவ்விய திருக்கரங்களால் அழகிய அவ்வாபரணங்களைத் தொட்டருளினர். ()

பிரம னன்புநான் டிவ்வகை யருள்செய்த பின்ன
ரொருதன் மெய்யணி பணிகளே யணிகளா யுறுவான்
றிருவு ளங்கொள வவ்வகை யாகிய செகத்தை
யருள்பு ரிந்திடு பராபரற் கிச்செய லரிதோ.

(இ-ள்.) பிரமனது அன்பைநோக்கி இவ்வாறு திருவருள் செய்தபின்பு ஒப் பற்ற தமது திருமேனியிலணிந்துள்ள சர்ப்பங்களே ஆபரணங்களாக விளங்கும்படி திருவுள்ளத்திற் சிந்தித்தருளவும் அவ்வாறேயாயின; உலகத்தைப்படைத்துக் காத் தழிக்கின்ற பரம்பொருளாகிய சிவபெருமானுக்கு இச்செய்கை ஒ ரருமையோ?

கண்டி யாவரு மற்புத மடைந்துகை தொழலும்
வண்டு லாங்குழற் கவுரிபா லேகுவான் மனத்திற்
கொண்டு பாங்குறை தலைவருக் குணர்த்தியே குறிப்பாற்
பண்டு மாலயற் கரியவ னெழுந்தனன் படர.

(இ-ள்.) யாவரும் அதனைப்பார்த்து அற்புதமடைந்து கைகூப்பிவணங்கவும் வண்டுகள் மொய்க்கின்ற கூந்தலையுடைய உமாதேவியாரிடத்திற்குச் செல்லும்பொ ருட்டுத் திருவுள்ளங்கொண்டு அருகிலிருந்த தலைவர்களுக்குக் குறிப்பினாலுணர்த்தி, முற்காலத்தில் பிரம விஷ்ணுக்களுக் கரியவராகிய சிவபெருமான் செல்லும்படிக்கு எழுந்தருளினர்.—எ-று.

கௌரி - கௌரவண்ண முடையவள். அல்லது, கிரிராஜபுத்திரி எனினு மாம். கௌரம் - பொன்போன்றவண்ணம். (உக)

கணங்கள்செல்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-எ௰௪.

---

உ

முருகன்றுணை.

---

# திருக்கல்யாணப்படலம்.

நாற்ற டம்புயக் கண்ணுத னந்தியம் பெருமான்
போற்றி முன்செல வமரரு முனிவரும் புகழ
வேற்ற தும்புரு நாரதர் விஞ்சையர் யாரும்
பாற்றி யக்கமு நீழலு மாமெனப் பாட.

(இ-ள்.) விசாலமாகிய நான்கு திருத்தோள்களையுடைய நெற்றிக்கண்ண ராகிய நந்தியெம்பெருமான் துதித்துக்கொண்டு முன்னேசெல்லவும், தேவர்களும் மு னிவர்களும் புகழவும், தகுதியாகிய தும்புரு நாரதர் வித்தியாதரர் முதலிய அனைவ ரும் பருந்தின் இயக்கமும் நிழலு மொக்குமென்று சொல்லும்படி பாடவும்.—எ-று.

தும்புருநாரதர் வித்தியாதரர் முதலியவர்கள் நரப்புக்கருவியாகிய யாழின் சுதியோடு தங்கள் மிடற்றோசையை யமைத்துப் பாடுகின்றவர்களாகலானும், இசைக்

ருச் சுதி தாயாகலானும் அச்சுதி இல்லாவிடத்து இசைநயந்தராவாகலானும் சுதியோடு பாடினரென்பதைக் குறிப்பிக்க, 'பாற்றியக்கமும் நிழலுமாமெனப் பாட' என்று கூறினார். "பருந்தொடு நிழல் சென்றன்ன வியலிசைப்பயன் றுய்ப்பாரும்" என்றார் பிறரும்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧)

தொன்ம றைத்தொகை யாகம முதலிய துதிப்பப்
பொன்மை பெற்றதன் கோநகர் நீங்கிய பொற்றாள்
வன்மை பெற்றகுண் டோதரன் மொய்ம்பிடை வைத்துச்
சின்ம யத்தனி மால்விடை யேறினன் சிவனே.

(இ-ள்.) புகழப்பட்ட நான்குவேதங்களும் இருபத்தெட்டுச் சிவாகமமுதலியவைகளுந் துதிக்கும்படி பொன்மயமாகிய தமது திருக்கோயிலினின்றும் நீங்கி அழகிய திருவடிகளை வலிமைபொருந்திய குண்டோதரனது தோளில்வைத்து, மெய்ஞ்ஞானவடிவமாகிய ஒப்பற்ற பெரியஇடபத்தின்மீதுசிவபெருமானெழுந்தருளினர்.-எ-று.

தருமம் தேஜோருபமாக விளங்குவதாகலான், சின்மயத்தனிமால்விடை' என்று கூறினார். (௨)

விடையின் மீமிசைத் தோன்றிய வெம்பிரான் விளங்கப்
புடையின் வந்தவ ரல்லது திருநகர்ப் புறத்துக்
கடையி னின்றவர் யாவருங் கண்டுகண் களிபா
வடைய வெவபனிந் தேத்தின ரளக்கரி னார்த்தார்.

(இ-ள்.) இடபவாகனத்தின்மீதெழுந்தருளி எமது சிவபெருமான் காட்சிகொடுத்தருளவும், அதனைத்தம்மருகில்வந்தவர்களேயன்றி அழகிய அந்நகரத்தின் வெளியில் தூரத்தில்நின்றவர்களனைவருந் தரிசித்துக் கண்களிப்படைந்து ஒருமிக்கவணங்கித் துதித்துக் கடல்போல ஆரவாரித்தார்கள்.—எ-று.

சிவபெருமானைத் திருக்கோயிலுட் சென்று தரிசித்தவர்களன்றி எஞ்சிநின்ற மற்றையர்கள் தங்களுக்குச் சிவதெரிசனங் கிட்டுமோ? கிட்டாதோ வென்று மனத்திற்கொண்டிருந்த கவற்சி நீங்க, இடபவாகனத்துக் காட்சி கொடுத்தமையால் தங்கள் மனக்குறைநீங்கத் தரிசித்துப் பெருங்களிகூர்ந்தன ரென்பார், 'அளக்கரினார்த்தார்' என்றார். (௩)

நந்தி மேல்கொண்டு நந்திமே வருதலு நந்தித்
தந்தி மாமுகத் தவுணர்கோ னலமரத் தடிந்தோ
னைந்து நாற்றெழு கோடிபூ தப்படை யனுக
வந்து வந்தனை செய்துமுன் போயினன் மாதோ.

(இ-ள்.) சிவபெருமான் இடபவாகனத்தின் மீதெழுந்தருளிவரவும், கஜமுகாசுரன் தனது வலிகுன்றி மயங்கும்படி கொன்றருளிய விநாயகக்கடவுள் ஐந்நூற்றெழுகோடி பூதப்படைகள் நெருங்கும்படி எதிர்கொண்டு வந்துவணங்கி முன்னே சென்றருளினார்.—எ-று.

நந்தி - இடபம் - சிவபெருமான். (௪)

கதிருஞ் சோமனுங் கவிகையுஞ் சிகரங் காது
முதிர யன்னல்சாந் தாற்றியு மும்பர்தங் கோமான்
புதிய கால்செயும் வட்டமு மெடுத்தனர் புடைபோய்
முதிரு மார்வமோ டப்பணி புரிந்தனர் முறையால்.

(இ-ள்.) சூரிய சந்திரர்கள் குடையும், அலைகளை வீசுகின்ற சமுத்திரராஜ னாகிய வருணன் விசிறியும், இதேவேந்திரன் புதிய காற்றைத்தருகின்ற ஆலவட்டமு மெடுத்தவர்களாய்ப் பக்கத்திற்சென்று மிகுந்த அன்புடன் முறைப்படி அந்தப்பணி விடைகளைச் செய்தார்கள்.—எ-று.

கதிர் - ஆகுபெயர். குடைபிடித்தல், ஆலவட்டம் வீசுதல் முதலிய வூழியங் கள் ஒருவருக்கொருவர் செய்யுமிடத்து அதிகார முறைமையாற் செய்யினும் அழுக் காறுடன்செய்வர்; ஈண்டுச் சிவபெருமானுக்கு இத்திருப்பணியைச் செய்யத்தொடங் கிய வித்தேவர்கள் அங்ஙனமின்றிப் பேரன்புடன் செய்தனர்களென்பது தோன்ற, 'முதிருமார்வமோடப்பணிபுரிந்தனர் முறையால்' என்று கூறினார். (௬)

பேரி கொக்கரை சல்லிகை கரடிகை பீலி
சாரி கைத்துடி தண்ணுமை குடமுழாத் தடாரி
போரி யற்படு காகளம் வயிர்முதற் புகலுஞ்
சீரி யத்தொகை யியம்பினர் பாரிடத் திறலோர்.

(இ-ள்.) பேரிகை - வலம்புரிச்சங்கு - சல்லரி - கரடிகை - பீலி - சாரி கை - உடுக்கை - மத்தளம்-குடமுழா - தடாரி - போரினிடத்திற் பொருந்திய எக்கா ளம், முதலாகச் சொல்லப்பட்ட சிறந்த வாத்தியத்தொகைக ளனைத்தையும் பூதவீரர் கள் வாசித்தார்கள்.—எ-று.

சிவபெருமான் திருமணக்கோலங்கொண் டெழுந்தருளுகின்றவ ராகலால், யாவரும் மங்கலவாத்தியங்களையே முழக்கினார்களென்பதை யுணர்த்த, 'சீரியத்தொ கையியம்பினர்' என்றார். அவ்வியத்தின் தொகையினை.—"பேரிகை படக மிடக் கை யுடுக்கை - சீர்மிகு மத்தளஞ் சல்லிகை கரடிகை - திமிலை குடமுழாத் தக்கை கணப்பறை - தமருகந் தண்ணுமை தாவிறடாரி - அந்தரி முழவொடு சந்திரவளையம்- மொந்தை முரசே கண்விடு தூம்பு - நிசாளந்துடுமை சிறுபறையடக்க - மாசிறகுணிச் சம் விரலேறுபாகம் - தொக்கவுபாங்கந் துடிபெரும்பறையென - மிக்கநூலோர் விரி த்துரைத்தனரோ" என்பதனாலறிக. (௬)

அந்த ணேவலா லுருத்திரர் குழுவுமா லயனு
மெய்த்த வம்புரி முனிவரு மேலையின் னவரு
மொய்த்த தேரொடு மானமாப் புள்ளிவை முதலாந்
தத்த மூர்திமேல் கொண்டனர் செய்பணி தவாதோர்.

(இ-ள்.) சிவபெருமானது கட்டளையால் உருத்திரக்கூட்டங்களும் திருமா லும் பிரமனும், உண்மையான தவத்தைச் செய்கின்ற முனிவர்களும், மற்றைத்தேவர் களும் தாங்கள்தாங்கள் செய்துகொண்டிருக்கும் பணிவிடைகளில் தவறுதவர்களாய் நெருங்கிய இரதம் - விமானம் - விலங்கு - பறவை முதலிய அவரவர்களது வாகனங் களிலேறிக்கொண்டார்கள்.—எ-று.

சிவபெருமானுடன் எத்தகையோர்க்கும் வாகனத்திலிவர்ந்து செல்லுதற்கு அதிகாரமும் விருப்புமில்லாதிருப்பினும் அவ்வெம்பெருமானது கட்டளைப்படி யொ ழுகவேண்டுதலின், அவரவர்கள் வாகனங்களிலேறின ரென்பதையுணர்த்த, 'செய் பணிதவாதோர்' என்றார். (எ).

தாழ்ந்து தன்பணி புரியுமத் தலைவருந் தவத்தாற்
காழ்ந்த நெஞ்சுடைப் பூதரு மேனைய கணமுஞ்
சூழ்ந்து சென்றிடக் கயிலையை யகன்றுதொல் லுலகம்
வாழ்ந்தி டும்படி யேகின னிமையமால் வரைமேல்.

(இ-ள்.) வணங்கித்தங்கள் பணிவிடைகளைச் செய்கின்றவர்களாகிய அத்தலைவர்களும் தவத்திறல் நிடங்கொண்டிருக்கின்ற மனத்தினையுடைய பூதர்களும், மற்றைச்சிவகணங்களுஞ் சூழ்ந்து செல்லத் திருக்கயிலையினின்று நீங்கிப் பழைமையாகிய நிலவுலகத்துள்ள ஆன்மாக்கள்வாழும்படி பெரிய இமையமலைக்கு எழுந்தருளினார்.—எ-று.

சிவபெருமானது திருவடிப்பற்றின்றி வேறொன்றினும் பற்றில்லாதவர்களென்பது தோன்ற, 'தாழ்ந்த நெஞ்சுடைப்பூதர்' என்றனர் (அ)

வார்ப்பெ ரும்பணை யாதிய வரம்பில்பல் லியத்தி
னார்ப்பு மெங்கணு மெள்ளிடை யின்றியே யகல்வான்
றூர்ப்பி னீண்டிய தானையி னோதையுஞ் சுரர்க
ளார்ப்பும் வாழ்த்தொலி யரவமும் புணரியுண் டெழுமால்.

(இ-ள்.) வாரிறுக்கிய பெரியமுரசுமுதலிய அளவற்ற பலவாத்தியங்களினாரவாரமும்,எவ்விடங்களினு மிடைவெளியில்லாது அகன்ற ஆகாயத்தைத் தூர்க்கும்படி நெருங்கிச்சென்ற சேனைகளினோசையும், தேவர்களது ஆரவாரமும், மங்கலவாழ்த்தொலியும் கடலொலியையடக்கி மேலோங்கிச்சென்றன.—எ-று.

பூதர்கள் முதலியோர் பூமியின் வழியாகச் செல்லாது ஆகாய வழியாகச் சென்றமையின்,அவ்வாகாயத்தி லுண்டாகிய நெருக்கத்தைக் குறிப்பிப்பார், 'அகல்வான் றூர்ப்பினீண்டியதானை' என்று கூறினார். (க)

வேறு.

அனைய தன்மையி லாதியம் பண்ணவன்
பனிகொள் வெற்பிற் படரவம் மன்னவ
னினிய கேளொ டெதிர்கொடு தாழ்ந்துதன்
புனித மாநக ரிற்கொடு போயினான்.

(இ-ள்.) அவ்வாறாகிய தன்மையோடு முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் இமையமலைக் கெழுந்தருளவும், அந்தப்பர்வதராஜன் இனிய சுற்றத்தினருடன் வந்து எதிர்கொண்டு வணங்கித்தனது பரிசுத்தமாகிய சிறந்தநகரத்திற்கு அழைத்துக் கொண்டு சென்றனன்.—எ-று.

அரசர்களுக்குரிய கேளாவார் ஐம்பெருங்குழுவு மெண்பேராயமுமாகலின், 'மன்னவனினியகேளொடெதிர்கொடுதாழ்ந்து' என்று கூறினார். ஐம்பெருங்குழுவு மெண்பேராயமு மென்றதனை,—"அமைச்சர் புரோகிதர் சேனாபதியர் - தவாத்தொழிற்றூதுவர்சாரணமென்றிவர்-பார்த்திபர்கைம்பெருங்குழுவெனப்படுமே" எனவும், "காரணத்தியலவர் கருமவிதிகள் கனகச்சுற்றங் கடைகாப்பாளர் - நகரமாந்தர் நளிபடைத்தலைவர் - யானைவீரரிவுளிமறவ - ரினையரெண்பேராயமென்ப" எனவும், "சாந்துபூக்கச்சாடைபாக்கிலைகஞ்சுகநெ - யாய்ந்த விவரெண்ம ராயத்தோர் - வேந்தர்க்கு - மாசனம்பார்ப் பார்மருத்தர் வாழ்நிமித்த ரோடமைச்ச - ராசிலவைக் களத்தவாந்து" எனவும் வருஞ்செய்யுட்களானறிக. (க0)

போத லோடும் புனிதன் வரத்தினைக்
காத லாற்கண்டு கண்களிப் பாகியே
யாத மெய்த்திசின் றஞ்சலித் தேத்தியே
வீதி யாவும் விழாவயர்ந் திட்டவே.

(இ-ள்.) அவ்வாறு செல்லவும், சிவபெருமானது வருகையை அன்புடன் தரிசித்துக் கண்களிப்படைந்து விருப்புற்று எதிரில் நின்று அஞ்சலித்துத் துதித்து வீதிகளனைத்திலுந் திருவிழாக் கொண்டாடப்பட்டன.—எ-று.

ஆதம் - விருப்பம். (கக)

மிண்டி நின்றிடும் வீதியின் மாதரா
ரண்டர் நாயக னற்புதப் பேருருக்
கண்டு தாழ்ந்து கரைதவிர் காதலாந்
தெண்டி ரைப்படிந் தார்செயல் வேறிலார்.

(இ-ள்.) வீதிகளில் நெருங்கிநிற்கின்ற மாதர்கள், தேவர்கள்நாயகராகிய சிவபெருமானுடைய அற்புதமமைந்த சிறந்ததிருவுருவத்தைத்தரிசித்துவணங்கி வேறு செயலில்லாதவர்களாய் எல்லையில்லாத ஆசையாகிய கடலில் மூழ்கினார்கள்.—எ-று.

சிவபெருமானைக் கண்டவுடனே காமமிகுச் செயலற்றார்க ளென்பார் 'காதலாந்தெண்டிரைப் படிந்தார் செயல்வேறிலார்' என்று கூறினார். (கஉ)

நிறைத்த பூண்களு நேர்ந்தபொன் னுடையு
நறைத்த சாந்தமு நாண்மலர்க் கண்ணியும்
பிறைத்தி ருச்சடைப் பிஞ்ஞகன் பேரெழின்
மறைத்த தென்று மனந்தளர் வார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள், திருமேனி நிறையத் தரித்துள்ள ஆபரணங்களும் மிருதுவான பீதாம்பரங்களும், மணம்பொருந்திய கலவைச்சாந்தும், புதியமலர்மாலைகளும், இளம்பிறையணிந்த அழகிய சடைமுடியையுடைய சிவபெருமானது பேரழகை மறைத்தனவென்று மனத்தளர்ச்சியடைவார்கள்.—எ-று.

இயற்கையாகவே பேரழகினையுடைய சிவபெருமானது திருமேனியினவயவங்களுக்கு, இயற்கையழகில்லார்க்கு அழகைத்தரும்படியணிகின்ற பூண் - ஆடை - சாந்தம் - மலர்முதலியன மிகையாகலின் அவை அவ்வெம்பெருமானது திருவுருவத்தை மறைத்தனவென்று வருந்தினர்களென்பார், 'பேரெழின் - மறைத்ததென்று மனந்தளர்வார்' என்றார். (கங)

உய்பு மாறெ னுவர்தமைக் காண்டலும்
வெய்ய காமக் கனல்சுட வேவுறுந்
தைய லார்க டனுவுறு நீறுகொ
லைய ராகத் தணிந்ததென் பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள், நாம் பிழைப்பது எவ்வண்ணம்; இவரைத்தரிசித்தவுடனே வெவ்விய காமாக்கினியானது சுட, அதனால் (உடலம்) வேவப்பட்ட மாதர்களினது உடம்பிலுண்டாகிய நீறுதானோ? இவர் தமது திருமேனியிலணிந்துள்ளதென்று கூறுவார்கள்.—எ-று.

காமமிகுதியினால் தங்களுடலம் வெந்துபோவதுபோல் காணப்பட்டமாதர்கள், முன்னம் இவர் பலமாதர்களை காமாக்கினியாற் சுட்டெரித்த சாம்பலைத்தானோ திருவெண்ணீறாகத் தரித்திருக்கின்றனரென்று தாங்கொண்டுள்ள மிக்கமோகத்தாலுரைத்தனரென்க. (கச)

எழாலை யன்னசொ லேந்திழை மாதரார்
குழாம கன்று குழகனைச் சேர்தலுங்
கழாலு கின்றபல் காழுடை மேகலை
விழாதி றைஞ்சினர் மெல்லிய லார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள், வீணையிசைபோன்ற சொற்களையும் உயர்ந்த ஆபரணங்களையு முடையமாதர்களது கூட்டத்தினின்று நீங்கிச் சிவபெருமானையடைந்தவுடனே, கழலுகின்ற பலவயிரமணிகளிழைத்த மேகலாபரணங்கள் கீழேவிழாமல் வணங்கினார்கள்.—எ-று.

மேகலை - எண்கோவைமணி. இதனை—"எண்கோவை மேகலை காஞ்சி யெழு கோவை - பன்கோள் கலாபமிரு பத்தொன்று - கண்கொள் - பருமம் பதினாங்கு முப்பத்திரண்டு -விரிசிகை யென்றுணரற் பாற்று" என்னுஞ் செய்யுளானறிக. (௧௫)

அல்லி சேர்தரு மம்புய மீமிசை
வல்லி யன்னவர் வான்றுகில் சோர்வுறு
மெல்ல வீழ்தலு மின்னிடை யார்க்கெலா
மில்லை யோதுகி லென்றுரைப் பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள், அகவிதழையுடைய தாமரைமலரில் வசிக்குந் திருமகளை யொத்த மாதர்களது பெரியவஸ்திரங்கள் நழுவி மெல்லவிழுதலும், அதைக் கண்டு மின்போன்ற இடையினையுடைய மாதர்களனைவருக்கும் வஸ்திரம் இல்லையோ வென்று கூறுவார்கள்.—எ-று.

காமமயக்கத்தினால் துகிலிழந்த மாதர்கள் தங்களிடையிலாடை யில்லாதிருத்தலை யுணராது பிறமாதர்கள் வஸ்திரமிழந்திருத்தலை நோக்கி வியந்து கூறினரென்பார், 'மெல்லியலார்க்கெலா மில்லையோதுகி லென்றுரைப்பார்' என்றார். (௧௬)

வாசம் வீழ்தலும் வந்துவந் தில்லிடைத்
தூசு சேர்ந்தில மென்றொர் துகில்புனைந்
தாசை யோடுசென் றன்னதும் விட்டிடை
யூசல் போன்றன ரொண்டொடி மார்சிலர்.

(இ-ள்.) ஒள்ளிய வளையலையணிந்த சிலமாதர்கள், ஆடையவிழ்ந்துவிழவும், திரும்பி வீட்டிற்கு வந்து வந்து நாம் ஆடையணிந்து சென்றிலமென்று கூறி, ஓராடையை யணிந்துகொண்டு விருப்பத்துடன்சென்று, அதனையும் நழுவவிட்டு, பின்னுஞ்சென்று உடுத்திவருவதால், ஊஞ்சல்போலத் தெருவிற்கும் வீட்டிற்குமாய்த் திரிந்துகொண்டிருந்தார்கள்.—எ-று.

காமவெறி யேறினமையால் துகிலிழந்தமையை யுணராது பன்முறை வீட்டிற்குச் சென்று வஸ்திரமணிந்து, வீட்டிற்குந் தெருவிற்குமாக உழலுகின்றமையால், 'ஊசல்போன்றன ரொண்டொடிமாரெலாம்' என்றார். வாசம்=ஆடை. (௧௭)

மாண்ட சாயன் மடந்தைய ரேதனை
வேண்டி மால்கொடு வீடுநம் வேலையி
லீண்டு போற்றுகெனவுமென் னாததோ
வாண்ட கைக்கிய லாகுமென் பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள், மாட்சிமையாகிய சாயலையுடைய மாதர்களே தன்னை விரும்பி மயக்கங்கொண்டழியுந் தருணத்தில், இவ்விடத்தில் காக்கவேண்டுமென்று வேண்டிக்கொள்ளவும், அதனை சற்றுங் கவனியாதிருத்தல் தானோ? ஆண்டன்மையையுடையவர்களுக்குச் சுபாவம் என்று கூறுவார்கள்.—எ-று.

உலகத்தில் ஆடவர் மாதர்கள்மீது விருப்புற்றுழலுதலியற்கை. அங்ஙனமின்றி, மாதர்களே தேவரீர்மீது விருப்புற்றுச்சென்றுங் கருணைசெய்யா திருத்தல் உமதுபெருந்தன்மைக்கழகோவென்று கூறிவருந்தினரென்க. (௧௮

கரும்பு நேர்மொழிக் காரிகை மாதரார்
விரும்பி வேண்டவு மேவலர் போலுமா
லரும்பொன் மேனியெம் மண்ணலுக் குள்ளமு
மிரும்பு கொல்லென் றியம்பிடு வார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள், கரும்புபோலும் இனியசொற்களையுடைய அழகியமாதர்கள் விருப்புற்று வேண்டிக்கொள்ளவும் அகலவின்றிலர், அரிய பொன்போன்ற திருமேனியையுடைய எமது சிவபெருமானுக்கு மனமும் இரும்போ? என்று கூறுவார்கள்.—எ-று.

'மேவலர்போலும்' என்றதற்கு, பகைவர் போன்றிருக்கின்றனர் எனப் பொருள்கூறினுமாம். செம்பொன் கரும்பொன்னென்னுமிரண்டில் செம்பொன்னைத் தமது திருமேனியாகக்கொண்டு,கரும்பொன்னாகிய இரும்பைத் தம்மனமாகக்கொண்டனரோ? வென்று வருந்தினரென்க. இம்மாதர்களது காமவிகாரத்தை நோக்கிச் சிறிது மிரங்காமைகருதி 'இரும்புகொல்லென் றியம்பிடுவார்' என்று கூறினர். (௪௯)

நெருக்கு பூண்முலை நேரிழை யார்க்குமால்
பெருக்கி னாரவர் பேதுற லோர்கிலா
ருரைப்ப தென்கொ லுயிர்க்குயி ராகியே
யிருக்கு மிங்கிவ ரென் றுரைப் பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள்,ஆன்மாக்க ளனைத்திற்கும் பரமான்மாவாகவிளங்கும் இச் சிவபெருமான் நெருக்கமாகிய ஆபரணங்களையணிந்த ஸ்தனங்களையுடையமாதர்களுக்கு ஆசையை அதிகரிக்கச்செய்தனர்; அம்மாதர்கள் வருந்துதலை அறிந்திலர்; யாது சொல்வது என்று கூறுவார்கள்.—எ-று.

உயிர்க்குயிராயுள்ள விக்கடவுள் எங்கள் வருத்தத்தைச் சிறிதுமுணர்ந்தாரில்லை; இஃதென்ன வியப்பென்று வருந்தினரென்க. (௫0)

திருகு வார்சடைச் செய்யனை நோக்கிநின்
றுருகு வார்சில ருள்ளுற வெம்பியே
கருகு வார்சிலர் காதலி மாரொடும்
பெருகு காதலைப் பேசுகின் றார்சிலர்.

(இ-ள்.) சிலர் முறுக்காகிய நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமானைத் தரிசித்துநின்று மனமுருகுவார்கள்,சிலர் (காமம்விளைய அது காரணமாக) உள்ளத்திற் பொருந்த வெதும்பிக் கருகுவார்கள். சிலர் தோழிகளிடத்தில் தமக்கு மிகுதியாக உண்டாகின்ற ஆசையைப்பற்றிச் சொல்லிக் கொள்ளுகின்றார்கள்.—எ-று.

திருகு-முறுக்கு. கருகுதல்-காமத்தா லுடல் வெதும்பிப் பொலிவு மாறியிருத்தல். காதலிமார்-உயிர்த்தோழியர்கள். (௫௧)

வேறு ளார்மெய் விளர்ப்பினை நோக்கியே
யீறி லாரை யிவரணைந் தார்கொலோ
நீறு மெய்யி னிலவிய தென்றவர்ச்
சீறி யேயிகல் செய்திடு வார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள்அன்னியமாதர்களது உடலில் (காமத்தாலுண்டாகிய) வெண்ணிறத்தைப்பார்த்து, அழிவற்றவராகிய சிவபெருமானை இவர்க ளணைந்தார்களோ? இவர்களுடம்பில் விபூதி தங்கியிருக்கின்றதென்று அவர்களைக்கோபித்துச் சண்டையிடுவார்கள்.—எ-று.

காமத்திறு நூடல் வெளுத்திருத்தலை நோக்கி இவர்கள் சிவபெருமானை யனைந்தனர்போறும்; அதனுற்றான் இவர்கள் தேகத்தில் விபூதி படியப் பெற்றிருக் கிறதென்று அவர்களைச் சினந்து பகைப்பரென்க. (உஉ)

கட்டு செஞ்சடைக் கான்மிசை யூர்தர
விட்ட வெண்மதி மெல்லிய லார்தமைச்
சுட்ட தம்ம சுமப்பதென் னீரெனுக்
கிட்டி நின்று கிளத்திடு வார்சிலர்.

(இ-ள்.) சில மாதர்கள், கட்டப்பட்ட சிவந்தசடையாகிய காட்டினிடத்தி னுலாவும்படிவிட்ட வெள்ளிய சந்திரன் மாதர்களைத் தகித்துவிட்டது, இச்சந்திரனை நீ ரெவ்வாறுதாங்குகின்றீர் என்று அருகிலடைந்து கூறுவார்கள்.—எ-று.

சந்திரன் தூரத்திலிருந்தே எங்களுடம்பைச்சுடுகின்றது; அங்ஙனமாகவும், தேவரீ ரதனைத் திருமுடியில் தரித்திருப்பது தகுதியோ? வென்று வருந்தினரென்க. காமங்கொண்டவர்களுக்குச் சந்திரனொளி கூடாதென்பதை—“கந்தங் கமழ்மென் குழலீ ரிதுவென் கலைவாண் மதியங் கனல்வா னெனை” எனவருந் திருத்தொண்டர் புராணத்தா னறிக. (உங)

கஞ்ச மேலைய னாதிக் கடவுளர்
தஞ்ச மென்று சரண்புக வுண்டதோர்
நஞ்சின் வெய்யகொ னங்கையர் கொங்கைமேற்
றுஞ்ச கின்ற துயிலதென் பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள், தாமரைமலரில் வசிக்கும் பிரமன் முதலியதேவர்கள் அடைக்கலம் புகுந்தகாலத்து உண்டருளிய ஒப்பற்ற விஷத்தைப்பார்க்கிலும் மாத ர்களது கொங்கைகளின்மீது தூங்குகின்ற தூக்கமானது கொடியதோ? என்று கூறு வார்கள்.—எ-று.

பிரமனாதிதேவர்களுய்யும்பொருட்டு உண்டருளியவிடத்தினும், மாதர்களது ஸ்தனங்களைத் தழுவிக் காமநோயைத் தவிர்த்தல் கொடியதோவென்று வருந்தினரெ ன்பார், ‘நஞ்சின் வெய்யகொ னங்கையர் கொங்கைமேற்- றுஞ்சு கின்ற துயில தெ ன்பார்’ என்று கூறினார். (உச)

பின்ன ருள்ள பெருந்தொழி லாற்றுவான்
றுன்னு வீரெனிற் றொல்குழு வாடவர்
நன்ன லத்தொடு நண்ணமின் னுழையே
யின்னல் செய்வதெ னென்றுரைப் பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள் ஊழிக்காலத்துள்ள சங்காரத்தொழிலைச் செய்வத ற்கு வருகின்றவராயின் கூட்டமாக வருகின்ற புருஷர்கள் சுகத்தோடிருக்கப் பெண் களையே வருத்துவது யாதுகாரணமென்று கூறுவார்கள்.—எ-று.

தேவரீர் திருமணம்புரிந்தருளச் செல்லுதல் உயிர்களுக் கருள்செய்தற்பொ ருட்டேயன்றி வேறன்றாகலான், அவ்வுயிர்களுள் ஆண்பாலார் திருமணத்தைத் தரிசி த்தற்பொருட்டுச் சுகமுற்றிருக்கப் பெண்பாலாராகிய வெங்கள் காமநோயைத் தவிர்க் காது செல்லுதல் தகுதியோவென்று வருந்திக் கூறினரென்பார், ‘தொல்குழு வாட வர்-நன்னலத்தொடு நண்ணமின் னுழையே-யின்னல் செய்வதெ னென்றுரைப்பார்’ என்று கூறினார். (உரு)

சாற்றி யிங்கினி யாவதென் றையன்மீ
தேற்றின் மேவின ரெம்மை மணந்திட

மாற்றி லாத மலைமகள் போலயா
நோற்றி லோமென நொந்துயிர்ப் பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள், மாதர்களே! இவ்விடத்துச்சொல்லி ஆகவேண்டியது யாது? இடபவாகனத்தி லெழுந்தருளி வருகின்றவர் எம்மை மணஞ்செய்யும்பொருட்டு, மாறுபாடில்லாத பார்வதி தேவியாரைப்போல யாம் தவஞ்செய்திலோமென்று வருந்திப் பெருமூச்சுவிடுவார்கள்.—எ-று.

பார்வதியாரைப்போன்று நாமுந் தவஞ்செய்திருப்போமாயின் இவரை மணத்தல் கூடும்; நமக்கு அஃதில்லாமையின், நாமிவ்வாறு வருந்துவதிற் பயனில்லையென்று தம்மிற்றாமே வருந்தி யுயிர்த்தனரென்க. (உசு)

தேவ ருய்யத் திருமணஞ் செய்திட
மேவு கின்றவர் மெல்லியன் மங்கைய
ராவி கொள்ள வமைந்தன ரித்திற
மேவர் செய்வ ரெனவுரைப் பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள், தேவர்களுய்யும்படி திருமணஞ்செய்தற்கு எழுந்தருளுகின்ற சிவபெருமான் மெல்லிய தன்மையையுடைய மாதர்களது உயிரை வாங்குதற்கு ஏற்பட்டிருக்கின்றார். இவ்வாறு யாவர் செய்வார்களென்று கூறுவார்கள்.—எ-று.

வலியமைந்த தேவர்களுய்தற்பொருட்டுத் திருமணஞ்செய்யச்சென்ற விவர் மெல்லிய தன்மையையுடைய மாதர்களது உயிர் நீங்கும்படி வருத்திச்செல்கின்றனர். வலியோரைத் தடிதலும் மெலியோரைப் பாதுகாத்தலும் முறைமையாகவிருக்க, இவரதற்கு மாறாகச் செய்கின்றனர்; இது தகுதியோவென்று வருந்தினரென்பார், 'இத்திற மேவர்செய்வரெனவுரைப்பார்' என்று கூறினார். (உஎ)

மையல் வேழம் வயப்புலி போல்வரும்
வெய்யர் தம்மை மெலிவிப்ப தன்றியே
நொய்ய மான்புரை நோக்கியர்க் குந்துயர்
செய்வு மோவெனச் செப்புகின் றார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள்,மதமயக்கத்தையுடைய யானைபோன்றும் வெற்றிபொருந்திய சிங்கம்போன்றும் வருகின்ற துஷ்டர்களை வருத்துவதல்லாமல், மிருதுவான மான்போலுங் கண்களையுடையமாதர்களுக்கும் (சிவபெருமான்) துன்பஞ்செய்தருளுவரோவென்றுகூறுவார்கள்.—எ-று.

யானையுஞ் சிங்கமும் மதமும் வெற்றியு முள்ளன வாகலான், அவற்றைப் போன்று வருங் கொடிய வீரர்களை வருத்துதல் தக்கதேயன்றி, அற்பமாகிய மான் போன்ற மாதர்களை வருத்துதல் தகுதியோவென்று வருந்தினரென்க. (உஅ)

நங்கள் கொற்றவ னற்றவத் தாற்பெறு
மங்கை பாலின் மணப்பொருட் டேகின
ரிங்கெ மக்கினி மைத்திறஞ் செய்கலார்
சங்க ரர்க்குத் தகாதிதென் பார்சிலர்.

(இ-ள்.) சிலமாதர்கள், நமது பர்வதராஜன்செய்த நல்லதவத்தினால் பெற்ற உமாதேவியாரிடத்தில் திருமணத்தின்பொருட்டுச் சென்றருளினர்; இங்கு எனக்கு ஒரு நன்மையுஞ் செய்திலர். இது சங்கரர் என்னும் பெயரினை யுடைய சிவபெருமானுக்குத் தகுதியோ? வென்று கூறுவார்கள்.—எ-று.

யாவருக்குஞ் சுகத்தையருள்பவனென்னும் பொருள்பட, சங்கரனென்னும் பெயர் பெற்றனர். அவ்வாறு பெற்றுந் தேவர்கள் முதலியோர்க்கு இன்பத்தையும், மாதர்களுக்குத் துன்பத்தையுந் தருதலால் இவர்க்கிச்செய்கை தகாதென்றுகூறி வருந்தினரென்க. (உ௯)

பேதை மீரவர் பேரிளம் பெண்மையோ
ராதி யந்தத் தணங்கின ரின்னணம்
வீதி தோறும் விரவியத் தாருக
மாத ராரினு மாதர்பெற் றாரரோ.

(இ-ள்.) பேதையர்முதல் பேரிளம்பெண் ணீறாகவுள்ள மாதர்கள் இவ்வாறு வீதிகடோறு நெருங்கி, அந்தத் தாருகாவன மாதர்களைப்பார்க்கிலும் மிகுந்த மயக்கத்தை யடைந்தார்கள்.—எ-று.

'பேதை மீரவர் பேரிளம் பெண்மையோ ராதி யந்தத் தணங்கினர்' என்றது, பேதை-பெதும்பை-மங்கை-மடந்தை-அரிவை-தெரிவை-பேரிளம்பெண் என்னும் எழுவகைப்பருவ மாதர்களை. இப்பருவம் அவரவர்களுக்குரிய வயதினளவால் வருவன. ஐந்துமுதல் எழுவயதளவும் பேதை. எட்டுமுதல் பதினொருவயதளவும் பெதும்பை. பன்னிரண்டுமுதல் பதின்மூன்றுவயதளவும் மங்கை. பதினான்குமுதல் பத்தொன்பதுவயதளவும் மடந்தை. இருபதுமுதல் இருபத்தைந்துவயதளவும் அரிவை. இருபத்தாறுமுதல் முப்பத்தொருவயதளவும் தெரிவை. முப்பத்திரண்டுமுதல் நாற்பதுவயதளவும் பேரிளம்பெண் என்பனவாம். இதனை—" பகருங்கா லைந்தேழ் பதினொன்று பன்மூன்-றகலாத பத்தொன்பா னையைந்-திகலாத - முப்பத்தொன் றீரிருபான் பேதை முதலோர்க்குச் - செப்புவராண் டெல்லைத் திறம்" என்னும் வச்சணந்திமாலையா னறிக. (௩0)

பண்டை வேதன் பதத்தினும் பேரெழில்
கொண்டு நின்றவக் கோநகர் வீதியி
னண்டம் வெஃக வணிபடுத் திட்டவை
கண்டு போந்தனன் கண்ணுத லண்ணலே.

(இ-ள்.) பழைமையாகிய பிரமனது பதவியைப்பார்க்கிலும் மிக்க அழகினையுடைய அந்நகரத்து இராஜ வீதியில் உலகத்தார்விருப்புறும்படி யலங்கரித்துள்ளவைகளை நெற்றிக்கண்ணராகிய சிவபெருமான் நோக்கிச் சென்றருளினர்.—எ-று. (௩௧)

செய்ய தான செழுங்கம லாசனத்
தையல் காமுறத் தக்கன வீதிகள்
பைய நீங்கிப் பராபரை யாகிய
வையை கோயி லணித்தெனு நண்ணினான்.

(இ-ள்.) செழுமையாகிய செந்தாமரை மலரில் வாழுந் திருமகள் விரும்பத்தக்கனவாகிய வீதிகளை மெதுவாகக்கடந்து பராபரையாகிய பார்வதி தேவியார் வீற்றிருந்தருளும் அரண்மனைக்கருகில் சென்றருளினர்.—எ-று.

வீதிகளனைத்தும் பெருஞ்சிறப்பினவா யலங்கரிக்கப் பெற்றிருக்கின்றமையின், 'செய்ய தான செழுங்கம லாசனத் தையல் காமுறத் தக்கன வீதிகள்' என்றார்.

வேந்த னேவலின் வேதங்க ளின்றுகா
ருய்ந்து நாடற் கரியவெம் மண்ணான்முன்
பூந்த டம்புனல் பூரித்த பல்குட
மேந்தி வந்தனர் மாதவ ரெண்ணிலார்.

(இ-ள்.) வேதங்களால் இன்று வரையிலுந் தேடியறியப்படாதவராகிய எமது சிவபெருமான் திருமுன்னே பர்வதராஜனுடைய கட்டளையினால் அளவற்ற பெரிய தவமுனிவர்கள் அழகிய தடாகநீரினால் நிறைக்கப்பெற்ற பூரணகும்பங்களை யே ந்திவந்தார்கள்.—எ-று.

'வேதங்க ளின்றுகாறுய்ந்து நாடற் கரியவெம் மண்ணல்' என்பதனை— "நின்னுன் மொழிந்தமறை நின்னடிகள் வந்தித்தும் - பன்னு ளருச்சித்தும் பாதந் தலைச்சுமந்து - முன்னுமம் வாசித்து முன்னையறி யேனென்று- சொன்னு லடியேனை ன் சோதனைத்தோ னின்னியல்பே" என்னுந் திருவிளையாடற் புராணத்தா னறிக. ()

இருவ கைப்படு மெண்வகை மங்கலப்
பொருண்மை முற்றவும் பூவையர் பற்பல
வரிசை யிற்கொடு வந்தெதி ரெய்தினு
ரரிய யற்கரி தாகிய வண்ணன்முன்.

(இ-ள்.) இருவகைப்பட்ட அஷ்டமங்கலப்பொருள்க ளனைத்தையும் பிரம விஷ்ணுக்களுக் கரியவராகிய சிவபெருமானுக்கு முன்னே மாதர்கள் பற்பல வரிசை யாகக் கொண்டு வந்தடைந்தார்கள்.—எ-று.

'இருவகைப்படு மெண்வகை மங்கலம்' என்றது, இருவகையாகப் பொருந் திய அஷ்டமங்கலங்களை. அவை, கண்ணுடி-இடபம்-தீபம்-சீவற்சம்-இரட்டைச்சா மரம்-சங்கம்-சுவஸ்திகம்-பூரணகும்பம் என்பன. மற்றொருவகை, கொடி-முரசு-கண் ணுடி-குடம்-மணி-தீபம்-அங்குசம்-கவரி என்பன. இவற்றை—" வேள்விச் சாலையும் வேதியுங் குண்டமு மேகலை யொடுதொன்னூற் - கேள்விச் சார்வினுற் கண்டுகண் ணடிவிடை கிளர்சுடர் சீவற்ச - நீள்விற் சாமரம் வலம்புரி சுவத்திக நிறைகுட மென வெட்டு-வாள்விட் டோங்குமங் கலத்தொழில் செய்பொறி வகையினு னிருமித்தார்" எனவும், "கொடிமுர சாடி யம்பொற் குடமணி நெய்யிற் பூத்த - கடிமல ரனைய தீப மங்குசங் கவரி யென்னும் - படிவமங் கலங்க ளெட்டும் பரித்துநேர் பதுமக் கொம் பர் - வடிவினர் வந்து காட்ட மாளிகை மருங்கிற் செல்வான்" எனவும் வருந் திருவி ளையாடற் புராணத்தா னறிக. (௬௪)

அறுகு நிம்ப மடிசி லரிசனஞ்
சிறுகு மையவி செம்பஞ்சின் வித்திவை
குறுகு தண்புனற் கொள்கல மேந்தியே
மறுகில் வந்தனர் மங்கைய ரெண்ணிலார்.

(இ-ள்.) அறுகு-வேம்பு-சோறு-மஞ்சள்- சிறுவெண்கடுகு-செஞ்சின்வித்து ஆகிய இவைகளுடன் குளிர்ந்த நன்னீரையுடைய நிறைகுடம் முதலியவற்றை யேந்தி அளவற்ற மாதர்கள் வீதியில் வந்தார்கள்.—எ-று.

ஐயவி - சிறுவெண்கடுகு. அறுகுமுதலியனவும் மங்கலப்பொருள்க ளாத லின், அவற்றையு மாதர்களேந்திவந்தன ரென்க. (௬௫)

நெருக்கு பூண்முலை நேரிழை யாரவர்
பொருக்கெ னுவெதிர் போந்துயிர் யாவினு
மிருக்கு மாதி யிறைவனை யேத்தியே
தருக்கொ டேநின்று தந்தொழி லாற்றினர்.

(இ-ள்.) நெருக்கமாகிய ஆபரணங்களையணிந்த ஸ்தனங்களையுடைய மாத ர்கள் விரைவாக எதிரில் வந்து சர்வான்மாக்களுள்ளும்(உயிர்க்குயிராய்) எழுந்தருளி

யிருக்கின்ற முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானைத் துதித்து மகிழ்வுடன் நின்று தங்கள் தங்கள் பணிவிடைகளைச் செய்தார்கள்.—எ-று.

சாமுத்திரிக விலக்கணம் பூரணமாக நிரம்பப்பெற்ற உத்தமமாதர்க ளென்பார், 'நெருக்குபூண்முலை நேரிழையாரவர்' என்றார். அவர்- பகுதிப்பொருள் விகுதி.

எங்க ணாதனை திருற வெண்ணிலா
மங்கை மார்சுடர் மன்னிய தட்டைகள்
செங்கை யிற்கொடு சென்று வலன்வயி னி
யங்கண் மும்முறை யன்பொடு சுற்றினார்.

(இ-ள்.) எமது சிவபெருமான் திருமுன்னே அநேக மாதர்கள் தீபத்தட்டுகளைச் சிவந்த கரங்களிலேந்திச்சென்று, அங்கு அன்புடனே வலமாக மும்முறை பிரதக்ஷிணஞ்செய்தார்கள்.—எ-று.

சிவபெருமான் உலகத்திற்கு இன்பமளித்தற் பொருட்டே திருமணஞ்செய்கின்றமையின், மாதர்கள் அவ்வெம்பெருமானை புத்திசாமத்திற்குரிய வலப்பிரதக்ஷிணஞ்செய்தன ரென்க. தட்டை என்பதில், ஐகாரம் சாரியை. (௬எ)

ஆன காலை யருமணச் சாலைமுன்
ஞான நாயக னட்பொடு நண்ணியே
வானு லாய மழவிடை நீங்கினான்
யான மீதினின் றியாரு மிழிந்திட.

(இ-ள்.) அவ்வாறாகியபொழுது அரிய திருமணப்பந்தலுக்கெதிரில் ஞானமுதல்வராகிய சிவபெருமான் விருப்பத்தோடு சென்று, யாவரும் தங்கள்தங்கள் வாகனங்களினின்று மிறங்கும்படி, விண்ணிலுலாவுகின்ற இளமையாகிய இடபத்தினின்று மிறங்கியருளினார்.—எ-று.

சிவபெருமானெழுந்தருளி வந்த இடபம், ககனமார்க்கமாக வந்தமைநோக்கி, 'வானுலாய மழவிடை' என்றுகூறினார். யானம் - வாகனம். (௬அ)

விடையி ழிந்தழி மேனைவின் னாட்டவர்
மடமின் னாரொடு வந்து பராபர
னடிகண் மீதினி லான்பொழி பால்கொடு
கடிதி னாட்டினள் கைதொழு தேகினாள்.

(இ-ள்.) இடபத்தினின்று மிறங்கியபொழுது மேனையானவள் மடப்பந்தங்கிய தேவமாதர்களுடன் வந்து சிவபெருமானது திருவடிகளில் காமதேனுவினால் பொழியப்பட்ட பாலைக்கொண்டு விரைவில் அபிஷேகித்து வணங்கிச் சென்றனள்.

மணமகனாக வெழுந்தருளிய சிவபெருமானைச் சாமானியரைப்போன்று தாமசப்படுத்துவது முறைமையன்றாகலான், விரைந்து திருவடியை விளக்கினளென்பார், 'கடிதினாட்டினள்' என்றார். (௬௯)

நாத னவ்வழி நந்திக ளுய்த்திடும்
பாது கைக்கட் பதமலர் சேர்த்தியே
போதன் மாதவன் பொற்கரந் தந்திடக்
கோதின் மாமணக் கோயிலு ளெய்தினான்.

(இ-ள்.) சிவபெருமான் அப்பொழுது திருநந்திதேவரால் வைக்கப்பட்ட பாதுகைகளில் திருவடித்தாமரையைவைத்து, பிரமவிஷ்ணுக்கள் அழகிய கைலாகு கொடுக்கக் குற்றமற்ற திருமணப்பந்தலுக்குள் எழுந்தருளினார்.—எ-று.

திருமணச்சாலையானது சர்வமங்களங்களும் நிரம்பப்பெற்றுள்ள தென்பார், கோதின்மாமணக் கோயில்'என்றார். (௪0)

வேறு.

பல்லிய மியம்ப வானோர் பரவவிஞ் சையர்கள் பாட
வொல்லெனக் கணங்க ளார்ப்ப வுருத்திரர் யாருஞ் சூழ
மெல்லெனச் செல்லு மண்ணல் விரிஞ்சனு மாலும் வேண்ட
மல்லலங் கோயி லுள்ள வனப்பெலா நோக்க லுற்றான்.

(இ-ள்.) பலவகைவாத்தியங்கள் வாசிக்கவும், தேவர்கள் துதிக்கவும், வித்தியாதரர்கள் பாடவும், சிவகணங்கள் ஒல்லென்று ஆரவாரிக்கவும், உருத்திரர்களனைவருஞ் சூழ்ந்துவரவும் மிருதுவாகச் சென்றருள்கின்ற சிவபெருமான் பிரமவிஷ்ணுக்கள் வேண்டிக்கொண்டமையால், சிறப்புமிக்க அத்திருக்கலியாண மண்டபத்திலுள்ள அழகனைத்தையும் பார்த்தருளத் தொடங்கினார்.—எ-று.

தமக்கென்று ஒருவிருப்பும் வெறுப்பு மில்லாதவராகலின், பிரமவிஷ்ணுக்களின் வேண்டுகோளால் திருமணச்சாலையின் பொலிவைப்பார்த்தருளத் தொடங்கினா ரென்க. (௪க)

உலாவுறு சுரும்பு மூசா வொண்மலர்ச் சோலை வாவி
நிலாவுறழ் புனல்சே ரோடை நெடுந்தட நிறம்வே றாகிக்
குலாவுமண் டபங்க ளின்ன கொண்டியல் வனப்புக் காட்டிச்
சிலாதனன் மதலை கூறச் சென்றுசென் றிறைவன் கண்டான்.

(இ-ள்.) சஞ்சரிக்கின்ற வண்டுகள் மொய்க்காத வளப்பமிக்க மலர்ச்சோலைகளையும், தடாகங்களையும், வெண்ணிலவை யொத்த நீர்நிறைந்த ஓடைகளையும், பெரிய குளங்களையும், நிறம் வெவ்வேறாக விளங்குகின்ற மண்டபங்களையும், இவை போன்ற பிறவற்றையுங்கொண்டு விளங்குகின்ற அழகுகளனைத்தையுங் காட்டிச்சிலாதமுனிவர் புத்திரராகிய திருநந்திதேவர் கூற, அவற்றை முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமான் சென்று பார்த்தருளினார்.—எ-று.

'உலாவுறு சுரும்புமூசா வொண்மலர்ச்சோலை' என்றது, சண்பகச்சோலையை. "வண்டுபடாதலர் சம்பகமேயெனமாதேவி" என்றார் பிறரும். வாவி - ஓடை- தடம் என்னு மூன்றும் நீர்நிலைகளே யெனினும், வாவியென்பது சிறுகுளத்தையும், ஓடையென்பது சிறிதுதூரம் நீரோட்டத்தினைப்பொருந்தியுள்ள மடுவையும், தடம் என்பது நாற்புறமு மோரளவினதாகிய பெருங்குளத்தையு முணர்த்துதலின், 'வாவி-நிலாவுறழ் புனல்சேரோடை நெடுந்தடம்' என்று கூறினார். 'நிறம்வேறாகிக் குலாவு மண்டபங்கள்' என்பன, பலவகை இரத்தினங்களா லமைக்கப்பட்ட பல நிறங்களையுடைய மண்டபங்களை. (௪உ)

கண்டனுந் தம்போற் றங்கள் காமர்வின் னகரந்தானு
மண்டல வனைப்பின் வந்து வைகிய தாங்கொ லென்னு
வண்டர்கள் வாவி கேணி யகன்புனல் குடைந்துங் காமர்
தண்டலை யாடல் செய்துந் தலைத்தலை திரிதந் துற்றார்.

(இ-ள்.) அவ்வாறு பார்த்தருளவும், தேவர்கள் தங்களைப்போலத் தங்களது அழகிய பொன்னகரமும், இந்நிலவுலகத்தில் வந்துதங்கியதுபோலு மென்று, தடாகங்களிலுங் கிணறுகளிலுமுள்ள விசாலமாகிய நீரில் மூழ்கியும், அழகியசோலைகளிற் சென்று விளையாடியும் நாலுவிடங்களிலு முலாவினார்கள்.—எ-று.

விசுவகன்மன் விண்ணுலகத்தினுஞ் சிறப்ப வலங்கரித்தமையின், அதனை நோக்கிய தேவர்கள் தமது விண்ணுலகமும் தம்போல் திருமணங் காணவந்ததோ வென்று வியப்புற்று அங்குள்ள வாவிசோலைமுதலிய விடங்களில் களிப்புற்றுலாவினரென்க. (௬௩)

நந்தியந் தேவு காட்ட நல்வனப் பனைத்து நோக்கிக்
கந்தமென் போது வேய்ந்த கடிமலாச் சாலை தன்னி
னிந்திர நீலத் திட்ட வெழினலத் தவிசி னும்பர்
வந்துவீற் றிருந்தா னெல்லா மறைகட்கு மறையாய் நின்றான்.

(இ-ள்.) திருநந்திதேவர் காட்டியருளவும், எல்லாவேதங்களாலுங்காணுதற்கரியவராய் நின்றருளிய சிவபெருமான், நல்ல அலங்காரங்களனைத்தையும் பார்த்தருளி, மணம்பொருந்திய மெல்லிய மாலைகள் கட்டப்பட்டுள்ள திருமணப்பந்தலில் இந்திர நீலரத்தினத்தினால் செய்யப்பட்ட அழகிய நல்ல ஆசனத்தின்மீது வந்து வீற்றிருந்தருளினார்.—எ-று.

இந்திரநீலரத்தின மென்பது, விசுவரூபனைக்கொன்ற இந்திரன் அப்பழியை நீக்கிக்கொள்ளும்பொருட்டுச்செய்த அசுவமேதயாகத்தி லுண்டாகிய நறியபுகையானது அவ்வேள்விப் பரியினது இமையாவிழிகளி னுழைந்து கலக்கியபோது அதன் கண்ணினின்றும் வடிந்த பீளைசிதறியவிடத்தில் தோன்றிய மணியேயாம். இதனை:—
"முந்திய விந்திரநீலம் விச்சுவரூபனை மகவான்முடித்த நாளி- னந்தியபழிதவிர்ப்பான் புரியுமகப் பரிமதத்தி னறியதூம- முந்தியரும் பரியிமையா நாட்டநுழைந் தளிசேற்றி னொழுகும்பீளை - சிந்தியமா றிடைப்படுமொன் றிந்திரவின் னீலமெனத் திகழுநீலம்" என்னுந் திருவிளையாடற் புராணத்தா னறிக. (௬௪)

வீற்றிருந் தருளு மெல்லை வீரபத் திரன்றீப் பேரோ
னாற்றல்கொள் கூர்மாண் டேச னாடக னைய னேனோர்
போற்றிசெ யயனே மாலே புரந்தரன் முனிவர் தேவ
ரேற்றிடு தவிசு தோறு மிருந்தன ரிறைவற் சூழ.

(இ-ள்.) அவ்வாறு வீற்றிருந்தருளிய பொழுது, வீரபத்திரர் காலக்கினிருத்திரர், வல்லமைபொருந்திய கூஷ்மாண்டருத்திரர், ஆடகேசருத்திரர் மகா சாத்தா முதலியோர்களும், துதிக்கப்பட்ட பிரமன் திருமால் இந்திரன் முனிவர்கள் தேவர்கள் முதலியவர்களும் அவரவர்களுக்குத் தக்க ஆசனங்களில் சிவபெருமானைச் சூழ்ந்திருந்தார்கள்.—எ-று.

அவரவர்களது தன்மைக்குத்தக்க ஆசனத்திலிருந்தன ரென்பார், 'ஏற்றிடு தவிசுதோறு மிருந்தனர்' என்று கூறினார். (௬௫)

வேறு.

அமையப்படு மப்பொழு தத்தினி லாதி யண்ணல்
விமலத்திரு மாமணங் காணுற மேலை யண்டச்
சுமையுற்றிடு மெப்புவ னத்தருந் தொக்க நீரா
லிமையச்சயி லந்துளங் குற்ற திடுக்க ணெய்தி.

(இ-ள்.) இவ்வாறமைந்துள்ள அச்சமயத்தில் முதற்கடவுளாகிய சிவபெருமானது திருக்கலியாண மகோற்சவத்தைத் தரிசிக்கும்பொருட்டு, மற்றைய அண்டங்களிலுள்ள எல்லாப்புவனத்தி லுள்ளவர்களும் வந்து நெருங்கினமையால் இமையமலையானது வருந்தி நடுங்கியது.—எ-று.

'அப்பொழுதத்தினில்' என்பதில், அத்து-சாரியை. சிவபெருமான் புரிந்தருளுந் திருமணம் மற்றையர்புரியும் மணத்தினைப்போலப் பாச சம்பந்தமுடையதன்றாகலின், 'விமலத்திருமாமணம்' என்று கூறினார். (சக)

பொன்பா லிமையந் தளங்குற் றுழிப் போற்று சேடன்
றன்பா லவனி யெனலாந் துலைத்தட்டி ரண்டின்
வன்பால தான வடபா லதுதாழ மற்றைத்
தென்பால தாற்ற வுயர்ந்திட்டது தேவ ருட்க.

(இ-ள்.) பொற்பகுதிகளையுடைய இமையமலை நடுங்கியபொழுது, புகழத்தக்க ஆதிசேஷனிடத்துள்ள பூமியென்று கூறு மிரண்டு தராசுத்தட்டுகளில் கனத்தினையுடைய வடபக்கந்தாழவும், மற்றைத் தென்பக்கமானது தேவர்களஞ்சும்படி மிகவுமுயர்ந்தது.—எ-று.

பொன்னே யுருவமாகவுடைய மேருமலையினின்றும் வேறு பிரித்தற்பொருட்டு, 'பொன்பாலிமையம்' என்றும், தென்றிசையினும் வடதிசை பர்வதவிசேஷங்களை மிகுதியாகவுள்ள தாகலான், 'வன்பாலதான வடபால்' என்றுங் கூறினார். ()

ஓங்குற் றதுதென் புவியாதலு மும்ப ரெல்லா
மேங்குற் றனர்மண் ணுலகோர்க ளிடுக்க ணுற்றுத்
தீங்குற் றனவோ வெமக்கென்று தியக்க முற்றார்
பாங்குற் றிடுதொன் முனிவோரும் பரிய லுற்றார்.

(இ-ள்.) பூமியின் தென்பாகமுயரவும்,தேவர்களனைவரும் ஏக்கமடைந்தார்கள்; நிலவுலகத்துள்ளவர்கள் வருந்தி நமக்குத் தீங்குநேர்ந்தனவோவென்று மயங்கினார்கள்; அருகிலுள்ள பழைமையாகிய முனிவர்களும் வருந்தினார்கள்.—எ-று.

உலகிற் கழிவுநேருங்காலத்தில் பூகம்பமுதலிய உற்பாதங்களுண்டாவது சுபாவமாதலால், இப்போதுண்டாகிய பூமியினுயர்வு தாழ்வு நமக்கு நாசத்தை விளைக்குங் கொல் என்று வருந்தினரென்பார், 'தீங்குற்றனவோ வெமக்கென்று தியக்கமுற்றார்' என்று கூறினார். (சஅ)

இன்னோ ரெவருஞ் சிவனேயென் றிரங்க லோடு
முன்னோனு மன்ன செயல்கண்டு முறுவ லெய்தி
யன்னோர் குறைநீத் திடநந்தியை நோக்கி யாழி
தன்னோர் கரத்திற் செறித்தானைத் தருதி யென்றான்.

(இ-ள்.) இவர்களனைவரும் சிவனே! யென்று (ஓலமிட்டு) இரங்கவும், முதற்கடவுளாகிய சிவபெருமானும் அதனை நோக்கிப் புன்னகைகொண்டருளி அவர்களதுகுறையை நீக்கும்பொருட்டுத் திருநந்திதேவனைப் பார்த்தருளி, கடலை ஓர்கரத்திலடக்கிய அகத்தியனை அழைத்துக்கொண்டு வரக்கடவையென்று கட்டளையிட்டருளினார்.—எ-று.

பிறரால் செய்தற்கரிய காரியத்தைச் செய்து முடிப்பவர் அகஸ்தியமுனிவரே யாகலால், அவரைத் தருதியென்று சிவபெருமானருளிச் செய்தனரென்க. (சகூ)

என்றா னதுகாலையி னந்தி யிறைஞ்சி யேகிக்
குன்றாத கும்ப முனிவன்றனைக் கூவ வங்கட்
சென்றா னவனைக் கொடுபோய்ச்சிவன் முன்ன ருய்ப்ப
மன்றார் கழல்கள் பணிந்தான் மலயத்து வள்ளல்.

(இ-ள்.) இவ்வாறு சிவபெருமான் கட்டளை யிட்டருளியபொழுது திருநந்திதேவர் நமஸ்கரித்துச்சென்று, குறையாத (தவத்தினையுடைய) அகத்தியமுனிவரை

யழைக்க, அவர் அங்குச்சென்றனர். திருநந்திதேவர் அவரையழைத்துச் சென்று சிவ பெருமான் திருமுன்னே விடவும், அகத்தியமுனிவர் திருச்சிற்றம்பலத்தில் திருநடனஞ்செய்தருளும் சிவபெருமானது திருவடிகளை வணங்கினர்.—எ-று.

பொதியமலையில் விற்றிருந்து நிலவுலகத்தில் செந்தமிழ் மாரியைப் பெய்த பெருங்கருணையாள ராகலின், 'மலையத்துவள்ளல்' என்று கூறினர். (௰)

தாழுந் தவத்தோன் றனைக்கண் ணுதற் சாமி நோக்கித்
தாழுங் குறியோ யிவண்யாவருஞ் சார்த லாலே
தாழும் புவிதக் கிணைமுத்தரஞ் சால வோங்கத்
தாழுஞ் சுவர்க்க நிலனுந் நனிதாழு மன்றே.

(இ-ள்.) தம்மை வணங்கிய அகத்தியமுனிவரை நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமான் பார்த்தருளி, வணங்குகின்ற முனிவனே! இவ்விடத்தில் யாவரும் வந்தமையால் தாழப்பட்ட உலகமானது தென்பக்க மிகவுமுயர, வடபக்கந் தாழ்ந்திருக்கின்றது; ஆதலால் சுவர்க்கலோகமும் மிகவுந் தாழும்.—எ-று.

புவிதக்கிணைஞ் சாலவோங்க உத்தரந்தாழும் எனக் கூட்டுக. (௧௧)

தெருமந் தழறுந் தளைமன்னுயிர் செய்த தொல்லைக்
கருமந் தனைவிட் டயர்வெய்திக் கலங்குகின்ற
பெருமந் தரமே முதலாய பிறங்கல் யாவு
மருமந்த மேரு வரையுந்தவ றுருகு மம்மா.

(இ-ள்.) மயங்கித் திரிகின்ற உலகத்துள்ள ஆன்மாக்கள், தாம்செய்த பழைய கன்மங்களை விட்டுச் சோர்ந்து கலங்குகின்றன. இனி பெரிய மந்தர முதலிய மலைகளும், அரிய மருந்தையொத்த மேருமலையும் நிலை தவறும்.—எ-று.

அருமருந்தன்ன என்பது, அருமந்த எனமரீஇயது. அம்மா- வியப்பிடைச் சொல். (௧௨)

ஆனுன் முனிகே ளொருநீயிவ் வசல நீங்கித்
தேனுர் மருத வளமேயதென் னுடு நண்ணி
வானுர் பொதிய மலைமேவுதி வைய மெல்லா
மேனு ளெனவே நிகராகி விளங்கு மென்றான்.

(இ-ள்.) அவ்வாறாயின் முனிவனே! கேட்கக்கடவை; ஒப்பற்ற நீ இவ் விமயமலையினின்று நீங்கித் தேன்பொருந்திய வயல்வளங்களையுடைய தென்னாட்டை யடைந்து ஆகாயத்தையளாவிய பொதியமலையை யடையக்கடவை, (நீ அவ்வாறு செய்யின்) உலகமனைத்தும் முன்போலவே சமமுற்று விளங்குமென்று அருளிச்செய்தனர்—எ-று.

ஐந்திணைகளுள் ளொன்றாகிய மருதநில வளப்பமே தென்னாட்டில் மிகுதியாகவுடைமையால், 'தேனூர்மருத வளமேய தென்னாடு' என்று கூறினர். மருதம்- வயலும் வயல்சார்ந்தவிடமும்; இம் மருதநிலத்தின் வகையினை—"இந்திரனூரன் பைந்தார்மகிழ்நன் - செழுதகுகற்பிற் கிழத்திமனைவி - உழவருழத்தியர் கடையர் கடைச்சியர் - மழலைவண்டான மகன்றினரை - யன்னம்போதா நன்னிறக்கம்புள் - குருகுதாரா வெருமைநீர்நாய் - பெருகியசிறப்பிற் பேரூர்மூதூர் - யாறு மனைக்கிணை நிலஞ்சிதாமரை - நாறிதழ்க்கழுநீர் நறுமலர்க்குவளை-காஞ்சிவஞ்சி பூஞ்சினைமருதஞ்- செந்நெல்வெண்ணெ லந்நெலரிகிணை - மன்றன்முழவ மருதயாழ்மருத - மன்றணி விழாக்கோள் வயற்களைகட்ட - லரிதல்கடாவிட லகன்குளங்குடைதல் - வருபுனலாடன் மருதக்கருப்பொருளே" என்னும் அகப்பொருட் சூத்திரத்தானறிக. (௧௩)

பிறையொன்று வேணிப் பரனிங்கிது பேச மேலோ
மறையொன்று தீஞ்சொற் றமிழ்மாமுனி யச்ச மெய்தி
குறையொன் றியான்செய் துளதோகொடி யேனை யீண்டே
யுறையென் றிலசே ணிடைச்செல்ல வுரைத்தி யெந்தாய்.

(இ-ள்.) இளம்பிறை தங்கிய சடைமுடியையுடைய சிவபெருமான் இவ்வி டத்தில் இதனை யருளிச்செய்யவும், இனிமையாகச் சொல்லப்பட்ட தமிழ்ச்சொற்க ளையுடைய மகத்தாகிய அகத்தியமுனிவர் அச்சமடைந்து,எமது பிதாவே! அடியேன் யாதேனு மொரு குறை செய்திருக்கின்றேனோ? கொடியேனாகிய அடியேனை இங்கே யிருவென்று அருளிச்செய்யவில்லை; நெடுந்தூரத்திற் செல்லும்படி சட்டளையிட் டருளினீர்.—எ-று.

சிவபெருமானா லருளிச்செய்யப்பட்ட வடமொழி வேதத்தைப்போலவே, திருஞானசம்பந்தப்பிள்ளையார் முதலிய ஆசாரியர்களா லருளிச்செய்யப்பட்ட தேவாரதிருவாசகங்களாகிய செந்தமிழ்வேதத்தை யுடைமையால், 'மறையொன்று' என்றும், மற்றைய பாஷைகளைப்போலன்றிக் கேட்போர்க் கினிமை பயத்தலுடைமை யால், 'தீஞ்சொற்றமிழ்' என்றுங் கூறினர். (௩௪)

என்னக் குறிய முனிவன்றனை யெந்தை நோக்கி
யுன்னைப் பொருவு முனிவோ ருலகத்தி லுண்டோ
வன்னத் தவனு முனைநேர்கில னாத லானீ
முன்னிற் றெவையுந் தவறின்றி முடித்தி மன்னோ.

(இ-ள்.) என்றிவ்வாறு கூறவும், அகத்தியமுனிவரை எமது சிவபெருமான் பார்த்தருளி, உன்னையொத்த முனிவர்கள் உலகத்திலிருக்கின்றார்களோ? அன்னவா கனத்தையுடைய பிரமனும் உனக்குஒப்பாகான்; ஆகையால், நீ நினைத்தவைக ளனை த்தையுந் தவறாமல் முடிப்பாய்.—எ-று.

சிருஷ்டிக்கர்த்தனாகிய பிரமனும் நின்போற் பெருந்தவமுடைய னல்லனென் பார், 'அன்னத்தவனு முனைநேர்கிலன்' என்று கூறினர். (௩௫)

வேறுற்றிடு தொன்முனி வோர்களின் விண்ணு ளோரி
னீறுற்றிடு மோவிது செய்கை யெவர்க்கு மேலாம்
பேறுற்ற நின்னான் முடிவாகும் பெயரு கென்று
கூறுற் றிடலு முனியீது குறித்து ரைப்பான்.

(இ-ள்.) வேறாகப்பொருந்திய பழைய முனிவர்களாலும், தேவர்களாலும் இதனைச்செய்தல் முடியுமோ? யாவரினுஞ் சிறந்த பேறுபெற்றுள்ள உன்னால் முடி வாகும்; ஆதலால், போகக்கடவையென்று அருளிச்செய்யவும், அகத்தியமுனிவர் இத னைச் சுட்டிக்கூறுகின்றார்.—எ-று.

சிவோகம் பாவனைத் திறத்திற்சிறந்துள்ளோரில் நீயே முதன்மைபெற்று ள்ளவனென்பார், 'எவர்க்குமேலாம் பேறுற்றநின்னால்' என்று கூறினர். (௩௬)

வான்செய்த மேனி நெடுமான் மகவேள்வி மன்னன்
றேன்செய்த கஞ்சத் தயனிற்கவிச் செய்கை தீயேன்
றான்செய் திடவே பணித்திட்டனை தன்மை யீதே
னான்செய் ததுவே தவம்போலு நலத்த தெந்தாய்.

(இ-ள்.) மேகம்போலு நிறத்தினையுடைய திருமாலும் யாகத்தலைவனாகிய இந்திரனும், தேன்பொருந்திய கமலாசனனாகிய பிரமனும் நிற்க, இச்செய்கையைக்

கொடியேனுகிய அடியேன் செய்யும்படி கட்டளையிட்டருளினீர்; இவ்வாருயின், எமது பெருமானே! அடியேன்செய்த தவந்தானே நன்மையினையுடையது.—எ-று.

ஈங்கிப் பணியை யளித்தா யெனி லெந்தை யுன்றன்
பாங்குற்ற புத்தேள் மணக்காட்சி பணிந்தி டாம
னீங்கற் கரி தாங் கவல்கின்றதென் னெஞ்ச மென்ன
வோங்கற் கயிலைத் தனிநாயக னோது மற்றுன்.

(இ-ள்.) இவ்விடத்தில் இப்பணிவிடையைக் கட்டளையிட்டருளுவீராயின், எமது ஆண்டவரோ! தேவரீரிடத்துப்பொருந்திய தெய்வத் திருமணக்காட்சியைத் தரிசிக்காமல் நீங்குதற் கருமையாகும்; ஆதலால் அடியேன் மனம்வருந்துகின்றது என்று பிரார்த்திக்க, உயர்ந்தோங்குகின்ற திருக்கயிலாயத் திருமலையில் வீற்றிருந்தருளும் ஒப்பற்ற சிவபெருமான் அருளிச்செய்கின்றார்.—எ-று.

புத்தேள் மணக்காட்சி என்றது, தேவவுருவத்தோ டெழுந்தருளித் திருமணம்புரிந் தருளுகின்ற காட்சியை. பிரளயந்தோறு முயர்ந்தோங்குந் தன்மையுடைமையால், 'ஓங்கற்கயிலை' என்றார். இதனை:—"புரந்த ராதிவானவர்பதம்போதுறை புத்தேள் - பரந்த வான்பதஞ்சக்கரப் படையுடைப் பகவன் - வரந்த வாதுவாழ் பதமெலா நிலைகெட வருநா-ளுரந்த வாதுநின் றூழிதோ றோங்குமவ் வோங்கல்" என்னுந் திருவிளையாடற் புராணத்தாலு மறிக. (௫௮)

வேறு.

சிந்தைய தழுங்க லின்றித் தென்மலைச் சேறி யங்கண்
வந்துநம் வதுவைக் காட்சி வழங்குது மகிழ்ந்து காண்டி
நந்தமை யுன்னி யாங்கே நாள்சில விருத்தி பின்னர்
முந்தையி லெமது பாங்கர் வருதியான் முனிவ வென்றான்.

(இ-ள்.) முனிவனே! மனம்வருந்தாமல் பொதியமலைக்குச் செல்லக்கடவை, யாம் அங்கெழுந்தருளி நமது திருமணக்காட்சியைத் தெரிசிப்பிக்கின்றோம், அங்குவிருப்புற்றுத் தரிசிக்கக்கடவை, ஆதலால் நம்மைச் சிந்தித்து அங்குச்சிலகாலம் வசிக்கக்கடவை; பின்பு முன்போலவே எம்மிடத்து வரக்கடவை யென்று திருவாய் மலர்ந்தருளினர்.—எ-று. (௫௯)

என்றிவை யமலன் செப்ப விசைதரு புலத்த னாகி
மன்றமர் கழல்க டம்மைப் பன்முறை வணக்கஞ் செய்து
நின்றுகை தொழுது போற்றி நெடிதுயிர்த் தரிதி னீங்கித்
தென்றிசை யெல்லை நோக்கிச் சிறுமுனி கடிது போனான்.

(இ-ள்) இவ்வாறு சிவபெருமான் அருளிச்செய்யவும், அகஸ்தியர் சம்மதங்கொண்ட மனத்தினையுடையவராய், கனகசபையில் ஆனந்தத் தாண்டவஞ்செய்தருளும் (அவ்வெம்பெருமானது) திருவடிகளைப் பலதரம்வணங்கிநின்று கைகூப்பித் துதித்துப்பெருமூச்சுவிட்டு, (அவ்விடத்தினின்றும்) அருமையாக நீங்கித் தெற்குத்திசையின் எல்லையைநோக்கி விரைந்துசென்றனர்.—எ-று.

சிவபெருமானது திருமணக்காட்சியைத் தரிசிப்பதைவிட்டுநீங்குதற்கு மனமிசையாதிருப்பினும் சிவபெருமானது கட்டளையைக் கடத்தல் கூடாமையால், 'அரிதினீங்கி' என்றும், நமது திருமணக்காட்சியை மலயாசலத்தில் தெரிசிப்பிக்கின்றோமென்று அருளிச்செய்தமையால், 'கடிதுபோனன்' என்றுங் கூறினர். (௬௦)

கிற்புறு மாயை வல்ல கிரவுஞ்ச வரையும் விந்த
வெற்பதும் வன்மை சிந்த வில்வல னுடுவா தாவி

கற்பனை யகன்று மாயக் காவிரி நீந்தத் தோடு
முற்பகல் படர்ந்த தென்ன முனிவரன் றென்பாற் போனான்.

(இ-ள்.) பந்திக்கப்பட்ட மாயையில் சிறந்த கிரவுஞ்சமலையும் விந்தமலையும் வலியிழக்கவும், வில்வலனும் வாதாவியும் தாங்கள் செய்யும் வஞ்சனை யழிந்து இறக்கவும், காவிரிதீர்த்தத்துடனே முற்காலத்துச் சென்றமைபோல முனிசிரேஷ்டராகிய அகஸ்தியர் தென்றிசைநோக்கிச் சென்றனர்.—எ-று.

மாயா வல்லபத்தினை யுடைய அசுரனே மலைவடிமாக வமைந்தமையின், 'கிற்புறுமாயைவல்ல கிரவுஞ்சவரை' என்று கூறினார். கிரவுஞ்சம்-விந்தம்-வில்வலன் வாதாவி-காவிரி இவைகளின் சரிதங்கள் மேல் அசுரகாண்டத்தில் கூறப்படுதலின் ஆண்டுக் கண்டுணர்க. (௬௧)

மறைபுகல் வேள்வி யாற்று மாவலி வலிகொள் காட்சிக்
குறியவன் றுணையாய் மற்றோர் குறளுமுண் டாங்கொ லென்று
நெறியெதி ரவுணர் தம்மு ளொருசிலர் நில்லா தோடச்
சிறுமுனி வான நீந்திச் சிமையமா மலயம் புக்கான்.

(இ-ள்.) வேதத்திற்கூறும் யாகத்தைச்செய்த மாவலிச் சக்கிரவர்த்தியினது வல்லமையையடக்கத்தக்க தோற்றத்தினையுடைய வாமனனுக்குத்துணையாக வேறொரு வாமனனு முளனோவென்று வழியிலெதிர்ப்பட்ட அவுணர்களில் சிலர் முன்னிற்காமலோடும்படி அகஸ்தியமுனிவரர் ஆகாயவழியாகக் கொடுமுடிகளையுடைய பொதிய மலையை யடைந்தனர்.—எ-று.

அசுரனாகிய மாவலியை யழித்த வாமனனைப்போல அகத்தியமுனிவருங் குறியவராகலான், இவரைக்கண்ட அசுரர்கள், இவர் அவ்வாமனனுக்குத் துணைவரோ வென்று அஞ்சியோடினரென்க. (௬௨)

முண்டகன் வலிகொண் டுற்ற மூவெயி லழிப்பான் முன்னி
யண்டரும் புவன முற்று மாகிய கொடிஞ்சி மான்றேர்
பண்டொரு பதத்தா லூன்றிப் பாதலத் திட்ட வண்ணல்
கொண்டதொல் லுருவ முன்னிக் குறுமுனி யங்க ணுற்றான்.

(இ-ள்) பிரமனது வல்லமையாகிய வரத்தைப்பெற்றுள்ள முப்புரங்களையு மழிக்கும்பொருட்டுத் திருவுள்ளங்கொண்டு,தேவர்களும் உலகமுழுதுமாகிய மேற்றட்டினையுடைய குதிரை பூட்டிய இரதத்தை முற்காலத்தில் ஒரு திருவடியினா லூன்றிப் பாதலத்திலிட்டருளிய சிவபெருமா னடைந்துள்ள பழைமையாகிய திருவுருவத்தைத் தியானித்து அகஸ்திய முனிவரர் அங்கு வசித்திருந்தனர்.—எ-று.

அகஸ்தியமுனிவர் தாம் மிகக் குறியவராயிருப்பினுந் தமது இதயத்தில் சிவபெருமானது திரிபுரசங்காரத் திருவுருவத்தைத் தியானித்துச் சென்றனரென்றமையால், குறிய முனிவரது திருவுள்ளத்தில் மேருமலையை வில்லாகக்கொள்ளத்தக்க பெரிய திருவுருவந் தியானரூபமாக வமையப்பெற்றதனால்,பூமிசம மாதற்கேதுவாயிற்றென்று குறிப்பித்ததாயிற்று. அத்திருவுருவத் தன்மையை,—"பொருப்புச் சிலையில் வாசுகிநாண் பூட்டி யரிகோல் வளியீர்க்கு - நெருப்புக் கூராம் படைதொடுத்துப் பிரமவலவ னெமெறைமா - விருப்பிற் செலுத்து நிலத்தேர்மே னின்று தெவ்வூர் வெந்தவிய - வருப்புக் குறுவெண் ணகைமுகிழ்த்த வந்தணாளன் றிருவுருவம்"—என்னுங் காஞ்சிப்புராணத்தா னறிக. (௬௩)

பொதியம தென்னும் வெற்பிற் புனிதமா முனிவன் வைகத்
துதியுறு வடபாற் றென்பாற் புவனியோர் துலைபோ லொப்ப
வருபொழு துயிர்க ளானோ ரனங்கொரீஇ யரனை யேத்தி
மதிமகிழ்ந் தமர்ந்தார் தொல்லை வதுவையின் செய்கை சொல்வாம்.

(இ-ள்.) பொதியமென்னும் பெயரையுடைய மலையில் தூய்மையாகிய சிறந்த அகஸ்தியமுனிவரர் தங்கியிருக்கவும், துதிக்கப்பட்ட வடபூமியுந் தென்பூமியும் ஒரு தராசுபோலச் சரியாக நிற்க, அச்சமயத்தில் உயிர்களனைத்துந் துன்பநீங்கிச் சிவபெருமானைத் துதித்து மனமகிழ்ந்திருந்தார்கள். இனி, முற்கூறிய திருமணத்தின் சிறப்பைச் சொல்லுவோம்.—எ-று.

சர்வலோக காரணராகிய சிவபெருமான் பிரத்தியக்ஷரூபமாக வெழுந்தருளியிருக்கப்பெற்ற திருக்கயிலாயத் திருமலை முதலியவற்றை யுடைமையால், ' துதியுறு வடபால் ' என்று கூறினர். (௬௪)

கதுமென மலயந் தன்னிற் கடமுனி சேற லோடு
முதுமைகொ ளிமையம் புக்க முனிவருஞ் சுரருந் தேர்ந்து
மதிமலி சடையெம் மண்ணல் வரம்பில்பே ரருளு மன்னோன்
பதமுறை வழிபட் டோர்தம் பான்மையும் பரவ லுற்றார்.

(இ-ள்.) விரைவாகப் பொதியமலையில் அகஸ்தியமுனிவர் சேர்ந்தவுடனே, பழைமையாகிய இமையமலையில் வந்திருக்கின்ற முனிவர்களுந் தேவர்களு முணர்ந்து, இளம்பிறை விளங்குஞ் சடைமுடியையுடைய எமது சிவபெருமானது எல்லையில்லாத பெருங்கருணையையும் அவ்வெம்பெருமானது திருவடிகளை முறையாக வழிபட்டவர்களது தன்மையையுந் துதிக்கத்தொடங்கினார்கள்.—எ-று.

அகத்தியமுனிவர் பொதியமலைக் கெழுந்தருளுதலால், பூமி சமமானதைக் கண்ட முனிவர்கள் முதலியோர் இத்தகைய மிகுந்த வல்லபமானது சிவார்ச்சனையின் பெரும்பேற்றினாலேயே அம்முனிவர்க்குண்டாயிற் றென்பதை யுணர்ந்து, சிவபெருமானது திருவருட்டன்மையையும், அவரருளைப்பெற்ற மெய்யன்பர்களின் தன்மையையும் வியந்து துதிக்கத்தொடங்கினார்க ளென்க. (௬௫)

அங்கது பொழுது தன்னி லரசன திசைவா லெங்கள்
சங்கரி யையை காப்பச் சசியென்பா ளடைப்பை யேந்தக்
கங்கைகள் கவரி வீசக் காளிகள் கவிகை பற்றப்
பங்கய மான்கை பற்றிப் பாரதி பரவ வந்தாள்.

(இ-ள்.) அங்கு அந்தச் சமயத்தில் பர்வதராஜனது கட்டளையினால் எமது உமாதேவியார் துர்க்கையானவள் காவல் செய்யவும், இந்திராணி அடைப்பை யேந்தவும், கங்கைகள் சாமரை வீசவும், காளிகள் குடைபிடிக்கவும், இலக்ஷுமியினது திருக்கரத்தைப்பிடித்துக்கொண்டு சரஸ்வதி துதிக்கும்படி யெழுந்தருளி வந்தனர்.—எ-று.

துர்க்கை பராக்கிரமமுடையவளாகலால், ' ஐயை காப்ப ' என்றும், இந்திராணி போகரூபியாகலால், போகப்பொருளாகிய அடப்பையேந்தினளென்பார், ' சசியென்பாளடைப்பையேந்த ' என்றும், கங்கைகள் வெண்ணிற முடையவர்களாகலால், அந்நிறத்தையுடைய கவரி வீசினரென்பார், ' கங்கைகள் கவரிவீச ' என்றும், காளி துர்க்கையினேவலாளியாகலால், ' காளிகள் கவிகைபற்ற ' என்றும், திருமகள் திதிக்கர்த்தாவின் மனைவியாகலால், ' பங்கய மான்கைபற்றி ' என்றும், கலைமகள் வாக்கின் செல்வியாகலால், ' பாரதி பரவவந்தாள் ' என்றுங்கூறினர். (௬௬)

வந்திடு முலகை யீன்றாள் வருமவையஞ் சாலை நண்ணி
யந்தமொ டாதி யில்லா வடிகளை வணங்க முன்னோன்
முந்துறு தவிசின் றன்பான் முற்றிழை யிருத்தி யென்ன
விந்திரை முதலோர் யாரு மேத்திட விருந்தா ளன்றே.

(இ-ள்.) இவ்வாறுவந்த சர்வலோகங்களையும் பெற்றருளிய உமாதேவியார் அழகிய திருமணப்பந்தலை யடைந்து முடிவுமுதலு மில்லாதவராகிய சிவபெருமானது திருவடிகளைவணங்கவும், முழுமுதற்கடவுளாகிய சிவபெருமான் உயர்வுபொருந்திய சிங்காசனத்தில் பார்வதியே! நீ இருப்பாயாகவென் றருளிச் செய்யவும், அவ்வம்மையார் திருமகள்முதலிய யாவருந் துதிக்கும்படி எழுந்தருளியிருந்தனர்.—எ-று.

'முந்துறு தவிசு' என்பதற்கு, முன்னே யிடப்பட்டுள்ள தவிசு எனப்பொருள் கூறினுமமையும். முற்றிழை - அன்மொழித் தொகைப்பெயர்; அது, அண்மைவிளி பெற்று இயல்பாய் நின்றது. (௬எ)

இருந்திடு மெல்லை தன்னி லேலவார் குழலி யென்னுங்
கருந்தடங் கண்ணி னாளைக் கண்ணுதற் பராப ரற்கு
விரைந்தருள் செய்ய வுன்னி வேந்தன திசைவான் மேனை
பெருந்தடம் புனலுஞ் சந்து மலர்களும் பிறவுந் தந்தாள்.

(இ-ள்.) இவ்வா றெழுந்தருளியிருந்த சமயத்தில் ஏலவார் குழலியென்னுந் திருநாமத்தையுடைய கரிய நெடியகண்களமைந்த உமாதேவியாரை நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானுக்கு விரைவாகக்கொடுக்கும்படி நினைத்துப் பர்வதராஜனுடைய சம்மதத்தினால் மேனையானவள் மிகுதியாகிய நன்னீரையும், சந்தனத்தையும், மலர்களையும், மற்ற உபகரணங்களையுங் கொண்டுவந்தனள்.—எ-று.

உமாதேவியார் முன்பு தக்ஷனிடத்துப் புத்திரியாக வளர்ந்திருந்தபொழுது அவன் அவ்வம்மையாரைச் சிவபெருமானுக்குத் திருமணஞ்செய்து கொடுக்கத்தொடங்கி முடிவதன்முன்னே மறைந்தருளினர்; ஆதலால் இப்பொழுதும்அதுபோல் மறைந்தருளப்போகின்றனரென்றுகருதி விரைந்துதிருக்கல்யாணஞ்செய்து முடிக்கத்தொடங்கின னென்பார், 'விரைந்தருள் செய்யவுன்னி' என்று கூறினர். (௬அ)

தருதலு மிமையத் தன்னை றாழ்ந்தன னிருந்து தேவி
சிரகநீர் விடுப்ப வாதி திருவடி விளக்கிச் சாந்தம்
விரைமலர் புனைந்து நின்ற வியன்கடன் பலவுஞ் செய்து
பொருவரு மகிழ்ச்சி யோடு பூசனை புரிந்தான் மாதோ.

(இ-ள்.) கொண்டுவந்தவுடனே பர்வதராஜன் வணங்கினவனாகவிருந்து, தனது மனைவியாகிய மேனை கமண்டலநீரைவார்க்கச் சிவபெருமானது திருவடிகளை விளக்கிச் சந்தனத்தையும் மணம்பொருந்தியமலர்களையுந்தரித்து, மற்றைய சிறந்தபல கடைமைகளையுஞ் செய்து ஒப்பற்ற மனக்களிப்புடன் பூசனைசெய்தனன்.—எ-று.

"பாதாளமேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்" என்றபடி எத்தகையோராலுங் காண்டற்கரிய திருவடியைப் பிரத்தியக்ஷத்திற் கையினாற்றொட்டுப் பூசிக்கத்தக்க பெரும்பேறெய்தினமென்று மகிழ்கூர்ந்தனனென்பார், 'ஆதி திருவடிவிளக்கிச் சாந்தம் - விரைமலர் புனைந்துநின்ற வியன்கடன் பலவுஞ்செய்து - பொருவரு மகிழ்ச்சியோடு பூசனை புரிந்தான்' என்று கூறினர். (௬௯)

பூசனை புரிந்த பின்னர்ப் புவனமீன் றாடன் கையைப்
பாசம தகன்ற தொல்சீர்ப் பரஞ்சுடர் கரத்துள் வைத்து

நேசமோ டளித்தே னென்று நெடுமறை மநுக்கள் கூறி
வாசநல் லுதக முய்த்தான் மருகனென் றவனை யுன்னி.

(இ-ள்.) அவ்வாறு பூசைசெய்தபின்பு சர்வலோகங்களையும் பெற்றருளிய உமாதேவியாரது திருக்கரங்களை இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிய பழைமையாகிய சிறப்பினையுடைய சிவபெருமானது திருக்கரத்தில் வைத்து அவரை மருகனென்றுகருதி, (எமதாண்டவரே! எனது புத்திரியாகிய உமாதேவியாரைத்) தேவரீருக்கு அன்புடன்கொடுத்தேனென்று சிறந்த வேதமந்திரங்களை யோதி நறுமணங் கமழும் நல்ல நீரைவிட்டனன்.—எ-று.

சிவபெருமான் யார் யார் எவ்வெவ்வகையாக நினைக்கின்றார்களோ? அவ்வாறே யெழுந்தருளிப் பேரருள் புரிகின்றவராகலின், அவ்வெம்பெருமானை மருமகனென்றுகருதி உமாதேவியாரைத் தத்தஞ்செய்து கொடுத்தனனென்பார், 'வாசநல் லுதகமுய்த்தான் மருகனென்றவனையுன்னி' என்று கூறினார். (எ0)

எங்குள பொருளுங் கோளு மீதலுந் தானே யாகுஞ்
சங்கர னுலக மெல்லாந் தந்திடுங் கன்னி தன்னை
மங்கல முறையாற் கொண்டான் மலைமகன் கொடுப்ப வென்றா
லங்கவ னருளி னீர்மை யாரறிந் துரைக்கற் பாலார்.

(இ-ள்.) எவ்விடத்துள்ள பொருள்களும், அவற்றைப் பெறுதலும், கொடுத்தலுந் தாமாகவேயுள்ள சிவபெருமான் சர்வலோகங்களையு மீன்றருளிய உமாதேவியாரைப் பர்வதராஜன் கொடுக்கத் திருமணமுறைப்படி பெற்றுக்கொண்டனராயின், அவ்வெம்பெருமானது திருவருளின் தன்மையை யாவர் தெரிந்துகூற வல்லவர்கள்.

இதனால், ஈவோன்-ஏற்போன்-ஈயும்பொருள்களாகியவனைத்துந் தாமே யாகவுடைய சிவபெருமான், பர்வதராஜன் உமாதேவியாரைத் திருமணஞ்செய்துகொடுக்கப்பெற்றுக் கொண்டனரென்பது ஓரருள் விளையாடலென்று குறிப்பித்ததாயிற்று. இதனை :—"உடுப்பானும் பாலன முண்பானு முய்வித் தொருவர்தம்மைக் - கெடுப்பானு மேதென்று கேள்விசெய் வானுங் கெதியடங்கக்-கொடுப்பானுந் தேகியென் றேற்பானு மேற்பக் கொடாமனின்று-தடுப்பானு நீயல்லை யோதில்லை யானந்தத் தாண்டவனே" என்னும் பட்டணத்துப்பிள்ளையார் திருவாக்கானறிக. (எக)

ஆனதோ ரமையந் தன்னி லாடின ரமரர் மாதர்
கானம திசைத்தார் சித்தர் கந்தரு வத்த ரானோ
ரேனைய விருவர் தாமு மேழிசைக் கீதஞ் செய்தார்
வானவர் முனிவர் யாரு மறைகளை யறைய லுற்றார்.

(இ-ள்.) அந்தச்சமயத்தில் அரம்பை மாதர்கள் நடனஞ்செய்தார்கள்; சித்தர்களுங் கந்தருவர்களுங் கானம்பாடினார்கள்; மற்றைத் தும்புருநாரதர்கள் சப்தசுரங்களையுடைய கீதங்களை (வீணையில்) வாசித்தார்கள், தேவர்கள் முனிவர்கள்முதலிய யாவரும் வேதாத்தியயனஞ் செய்யத்தொடங்கினார்கள்.—எ-று.

தேவமாதர்கள் நாடகக் கணிகையர்களாதலால் 'ஆடினர்' என்றும், சித்தகந்தருவர்கள் இசைத்திறம் வல்லவர்களாதலால், 'கானமதிசைத்தார்' என்றும், தும்புரு நாரதர்கள் வீணைவல்லவர்களாதலால், 'ஏழிசைக் கீதஞ்செய்தார்' என்றும், தேவர்கள் முனிவர்கள் வைதிகர்களாதலால், 'மறைகளை யறையலுற்றார்' என்றுங் கூறினார். (எஉ)

அல்லியங் கமலந் தன்னி லரிவையும் புண்ட ரீக
வல்லியு மற்று ளோரு மங்கலம் பாட லுற்றார்
சல்லரி திமிலை காளந் தண்ணுமை சங்க மாதிப்
பல்லிய மியம்பிச் சூழ்ந்து பாரிடத் தொகையோ ரார்த்தார்.

(இ-ள்.) அகவிதழையுடைய அழகிய செந்தாமரைமலரில் வசிக்கும் இலக்ஷுமியும், வெண்டாமரைமலரில்வசிக்குஞ் சரஸ்வதியும், மற்றைய மாதர்களும் மங்கலவாழ்த்துப்பாடத்தொடங்கினார்கள்; பூதகணங்கள் சல்லரி, திமிலை-எக்காளம், மத்தளம், சங்கம் முதலிய பல வாத்தியங்களை வாசித்துச் சூழ்ந்து ஆரவாரித்தார்கள்.

திருமகள் கலைமகளென்னு மிருவரும் செந்தாமரை வெண்டாமரைகளில் வசிப்பவர்களாதலால், 'அல்லியங்கமலந்தன்னி லரிவையும் புண்டரீகவல்லியும்' என்று கூறினார். (௭௩)

அதுபொழு திமையத் தண்ண லாபொழிந் திட்ட தீம்பால்
கதலிமாப் பலவின் றீய கனிவகை நெய்தே னாதி
மதுரமாஞ் சுவையின் வர்க்கம் வரம்பில வீற்று வீற்று
நிதிகொள்பா சனத்தி லிட்டு நிருமலன் முன்ன ருய்த்தான்.

(இ-ள்.) அப்பொழுது பர்வதராஜன் காமதேனு பொழிந்த மதுரமாகிய பாலும், வாழை - மா - பலா இவைகளில் தித்திப்பாகிய பழவகைகளும், நெய்-தேன்முதலிய மதுரமாகிய சுவைவகைகளும் அளவில்லனவாக வெவ்வேறாகிய இரத்தினபாண்டங்களில் வைத்துச் சிவபெருமானுக்கு முன்னே கொண்டுவந்தான்.—எ-று.

கதலி மா பலவு என்னு மிம்மூன்றும் மற்றைக்கனிகளுட் சிறந்தனவாய் முக்கனி என ஆன்றோர்களால் தொகுக்கப்பட்டமையின், அவை இன்றியமையாதன வென்பார், 'கதலி மா பலவின்றீய கனிவகை' என்று கூறினார். 'மதுரமாஞ்சுவையின் வர்க்கம்' எனக்கூறியதனால், அறுசுவைப் பண்டங்களையுங் கொள்ள; அவை, கைப்பு-தித்திப்பு-புளிப்பு-உவர்ப்பு-துவர்ப்பு-கார்ப்பு என்பன. (௭௪)

மறைநெறி யினைய வெல்லா மலைமக னுய்த்து மற்றெம்
மிறையிவை நுகர்தல் வேண்டு மெனத்தொழ வினிதே யென்னாக்
கறைமிடற் றணிந்த மேலோன் கரத்தினா லவற்றைத் தொட்டாங்
குறுபெருங் கருணை செய்தே யுவந்தனங் கோடி யென்றான்.

(இ-ள்.) வேதவிதிப்படி இவைகளனைத்தையும் பர்வதராஜன் கொண்டுவந்துவைத்து, எமது ஆண்டவரே! இவற்றைப் புசித்தருளல் வேண்டுமென்று பிரார்த்திக்கவும், நல்லதென்று, ஆலாகலவிஷத்தைக் கண்டத்திலணிந்தருளிய சிவபெருமான்தமது திருக்கரத்தினால் அவற்றைத் தொட்டு மிக்க திருவருள்புரிந்து நாம் மகிழ்கூர்ந்தோம், இவற்றை நீ எடுத்துக்கொள்ளக் கடவையென் றருளிச்செய்தனர்.

சிவபெருமான் பசி பிணி மூப்பில்லாதவராகையாலும் பாவனாப்பிரியராகையாலும் பர்வதராஜன் முக்கனி முதலியவற்றைக் கொணர்ந்து உண்ணும்படி பிரார்த்திக்க அவற்றைத் தமது திருக்கரத்தால் ஸ்பரிசித்து எற்றனரென்க. (௭௫)

தொன்மைகொ ளருளி னீராற் றுய்த்தன வாகத் தொட்ட
பின்மல வுணவை மன்னா னேயமோ டங்கன் மாற்றி
யின்மலர் கந்தந் தீர்த்த மிவற்றொடு மொருசா ருய்ப்ப
நன்மகிழ் வோடு வேதா நாயகற் குரைக்க லுற்றான்.

(இ-ள்.) பழைமையாகிய திருவருட்டன்மையினால் நிவேதனமாகத் திருக்கரத்தினால் தொட்டருளிய நின்மலமாகிய பிரசாதத்தைப் பர்வதராஜன் அன்புடனே அவ்விடத்தினின்று நீக்கி, நல்லமலரும், சந்தனமும், தீர்த்தமுமாகிய இவைகளுடன் ஓரிடத்திற் சேர்த்தவுடனே, சிறந்த மகிழ்ச்சியோடு பிரமன் சிவபெருமானிடத்தில் விண்ணப்பஞ் செய்யத்தொடங்கினான்.—எ-று.

சிவபெருமான் திருவருள்கூர்ந்து திருக்கரத்தால் ஸ்பரிசித்தமையின், அவை பரிசுத்த மடைந்தனவென்பார், 'தொன்மைகொ ளருளினீராற் றுய்த்தனவாகத்தொட்ட - நின்மல வுணவு' என்று கூறினார். (௭௬)

படங்கிளர் சேடன் றாங்கும் பார்விசும் புறையு நீரா
ரடங்கலு மணஞ்செய் போதத் தவ்வவர்க் கடுத்த தாற்றி
நடந்திடு மொழுக்க மெந்தை நடத்திடல் வேண்டு மன்றற்
சடங்கினி யுளது முற்றத் தண்ணளி புரிதி யென்றான்.

(இ-ள்.) படம் விளங்குகின்ற ஆதிசேடனால் தாங்கப்பட்ட உலகத்திலும், சுவர்க்கத்திலும் வசிக்கின்றவர்க ளனைவருங் கலியாணஞ் செய்துகொள்ளும்பொழுது அவரவர்களுக்கேற்ற கிரியைகளைச்செய்து நடக்கின்ற முறைமையை எமது பெருமானே ! நடத்தியருளல் வேண்டும் ; திருமணச்சடங்காக இனி யுள்ளனவற்றை நிறைவேற்றும்படி சிறந்த திருவருள்புரிய வேண்டுமென்று பிரார்த்தித்தனன்.—எ-று.

உலகம், சுவர்க்கம் மத்தியம் பாதலம் என்று மூன்றுவகையாயிருக்க, ஈண்டுப் பாதலத்தை நீக்கி, 'படங்கிளர் சேடன் றாங்கும் பார் விசும் புறையு நீரார்' என இருதிறத்தினராக் கூறியது, பாதலவாசிகளாகிய நாகர்கள் தேவர்களது வகுப்பிற் சேர்ந்தவர்களாகலாலும் மனிதர்கள் அவரின் வேறானவர்களாகலானு மிவ்வாறு கூறினரென்க. (௭௭)

என்னலு முறுவல் செய்தே யிறையருள் புரிய வேதன்
வன்னியு மதற்கு வேண்டும் பொருள்களு மரபிற் றந்து
பொன்னொடு புகரு மேனை முனிவரும் புடையிற் சூழத்
தன்னிக ரில்லா மன்றற் சடங்கெலா மியற்றல் செய்தான்.

(இ-ள்.) இவ்வாறு கூறியவுடனே, புன்னகைபுரிந்து சிவபெருமான் திருவருள் புரியவும், பிரமனானவன் அக்கினியும் அதற்குவேண்டிய சாமக்கிரியைகளும் முறைப்படி யமைத்து தேவகுருவாகிய பிரகஸ்பதியும் அசுரகுருவாகிய சுக்கிரனும் முனிவர்களும் பக்கங்களிற்சூழ, தனக்கொப்பிலாத திருமணச்சடங்குக ளனைத்தையுஞ் செய்யத்தொடங்கினான்.—எ-று.

அக்கினியின் மூலமாகக் கடவுளை யாராதிப்போர் அவ்வக்கினியை அரணியிற் கடைந்தெடுத்துச் சேர்த்தலும், சிருக்கு, சருவம், முதலியவைகளை அத்திமுதலிய பால்மரங்களிற்செய்து கொள்ளலும், தருப்பை முதலியவற்றைச் சுத்த பூமியினின்றுஞ் சேகரித்தலும், தானே யுலர்ந்து வீழ்ந்திருக்குஞ் சமித்துக்களைச்சேர்த்தலும், பவ்வியுண்ணுஞ் சாமானிய பசுக்களின் ஆஜ்யத்தை யொழித்துச் சுத்த பசுக்களின் ஆஜ்யத்தைக் கொள்ளுதலும் முறைமையாதலால், 'வன்னியுமதற்குவேண்டும் பொருள்களு மரபிற்றந்து' என்றும், பொன்னும் புகரும் தேவகுருவும் அசுரகுருவு மாதலாலும், முனிவர்கள் உலகினர்க்கு வைதிக முதல்வர்களாதலானும் முறைப்படி வைத்து, 'பொன்னொடு புகருமேனை முனிவரும் புடையிற் சூழ' என்றுங் கூறினார்.

அந்தணர் கரண மெல்லா மாற்றியே முடிந்த பின்னர்த்
தந்தையுந் தாயு மாகி யுலகெலாந் தந்தோர் தம்மை

முந்துற வயனும் பின்னர் முகுந்தனு மதற்குப் பின்ன
ரிந்திரன் முனிவர் வானோ ரியாவரு மிறைஞ்ச லுற்றார்

(இ-ள்.) பிராமணர்களது சடங்குகளனைத்தையுஞ் செய்து நிறைவேற்றிய பின்பு, தந்தை தாயாகவிருந்து சர்வலோகங்களையு மீன்றருளிய சிவபெருமானையும் உமாதேவியாரையும், முதலில் பிரமனும், பின்பு விஷ்ணுவும், அதன்பின்பு இந்திரன், முனிவர்கள், தேவர்கள், முதலிய யாவரும் வணங்கத்தொடங்கினார்கள்.—எ-று.

சிவபெருமான் தேவர்களுள்ளே சிறந்த பிராமணராதலால் அவரது திருமணத்திலும் பிராமணக்கிரியைகளையே செய்துமுடித்தல் முறைமையாதல்பற்றி, 'அந்தணர்கரண மெல்லாமாற்றி' என்றும், சர்வலோகங்களிலும் ஆசாரியர்களாயிருந்து அக்கினி காரியமுதலியவற்றைச் செய்கின்றவர்களைச் சடங்குநடத்திக் கொண்டவர்கள் வணங்குவது முறைமையாயினும், மாதாபிதாக்களைப் புத்திரர்களே தொழுதல் முறைமையாதல்பற்றி ஆசாரியனாயிருந்து அக்கினிகாரிய நடத்திய பிரமன் முதலியோர் வணங்கினரென்பார், ' தந்தையுந் தாயுமாகி யுலகெலாந் தந்தோர்தம்மை முந்துறவயனும் * * * * யாவரு மிறைஞ்சலுற்றார்' என்றுங்கூறினர். தேவர்களுக்குள்ளே சிவபெருமான் பிராமணரென்பதனை— " பிராமணனீயே கடவுளர்தம்முட் பிஞ்ஞகாவேனையர்தம்முட்-பிராமணன்யானே பிராமணன்றனக்குப் பிராமணன்கதியுனையிகழ்வோன் - பிராமணனல்லன் றன்குலதெய்வம் விண்டுபின் னென்றனைத் தொழுமப்- பிராமணற்கிரண்டும் பயப்படாநிரயம்புகுவனென் றுயர்மறைபேசும்" என்னுங் காஞ்சிப்புராணத்தா னறிக. (எக)

அரனுட னுமையா டன்னை யாங்கவர் பணிதலோடு
முருகெழு நிலையுட் கொண்ட வுருத்திரத் தலைவ ரேனோர்
பரிசனர் கணங்கள் யாரும் பணிந்தன ரதன்பின் னாகக்
கிரியுறை யிறைவன் மைந்தன் கேளொடு வணக்கஞ் செய்தான்.

(இ-ள்.) சிவபெருமானுடன் உமாதேவியாரை அங்கு அவர்கள் வணங்கினவுடனே, அழகுமிக்க தன்மைபொருந்திய உருத்திரத்தலைவர்களும், மற்றையர்களும், பரிசனர்களும், சிவகணங்களுமாகிய அனைவரும் வணங்கினார்கள். அதன்பின்பு, அம்மலையில் வசிக்கும் பர்வதராஜன் தனது புத்திர பந்துக்களுடன் வணங்கினான்.

'உருகெழு நிலையுட்கொண்ட உருத்திரத்தலைவர்' என்பதற்கு, அஞ்சத்தக்க நிலைமையைப் பெற்றுள்ள உருத்திரத்தலைவர்கள், எனவும், சிவபெருமானது உருவமாக விளங்குகின்ற நிலைமையைக்கொண்டுள்ள உருத்திரத்தலைவர்கள் எனவும் பொருள் கூறினுமாம். திருமணத்திற்குவந்தவர்க ளனைவரும் முன்னே வணங்கின பின்பு, பர்வதராஜன் வணங்கவேண்டுவது முறைமையாதலால், ' அதன் பின்னாகக் கிரியுறை யிறைவன்மைந்தன் கேளொடு வணக்கஞ் செய்தான் 'என்று கூறினர். (அ0)

தமதுமுன் பணிகின் றோர்க டமக்கெலா மீசன் றானு
முமையுநல் லருளைச் செய்ய வோர்ந்திது பதமென் றுன்னி
யிமகிரி புரந்த வண்ண லீண்டுறை நீரர்க் கெல்லா
மமலன துணவு மற்று மளிப்பனென் றகத்துட் கொண்டான்.

(இ-ள்.) தமது திருமுன்னே வணங்குகின்றவர்க ளனைவருக்கும் பார்வதி பரமேஸ்வரர்கள் நல்ல திருவருளைச்செய்யவும், அதனையுணர்ந்து இது தக்க சமயமென்று கருதிப் பர்வதராஜன் இங்கு வசிக்கின்ற நற்குணமுடையவர்களனைவருக்கும் சிவப்பிரசாத முதலியவற்றைக் கொடுப்பேனென்று தனது மனதிற் சிந்தித்தான்.

இங்கு வந்தவர்களனைவரும் சிவபெருமானைச்சேவித்துத் திருவருள்பெற்ற சமையமே நாம் விருந்துசெய்வதற்குத் தக்க சமையமென்று கருதினனென்பார், 'ஈண்டுறை நீரர்ச்செல்லா-மமலனதுணவுமற்று மளிப்பனென் றகத்துட்கொண்டான்' என்று கூறினர். (அக)

ஆய்ந்திடு மறைகள் போற்று மாதிதன் றீர்த்தம் போது
சாந்தமோ டளிக டம்மைச் சதுர்முகன் முதல்வா னோர்க்கும்
வாய்ந்திடு முனிவர் யார்க்கு மற்றுளார் தமக்கு மன்ன
வீந்திட வற்றை யன்றே ரியாவரு மணிந்துட் கொண்டார்

(இ-ள்.) ஆராய்ச்சிசெய்கின்ற வேதங்களால் துதிக்கப்பட்ட சிவபெருமானதுபாததீர்த்தம், மலர், சந்தனம், இவைகளுடன் நைவேத்தியங்களைப் பிரமாதிதேவர்களுக்கும் நிலைபெற்ற எல்லா முனிவர்களுக்கும், மற்றையர்களுக்கும் பர்வதராஜன் கொடுக்க, அவற்றை அவர்களனைவரும் அணிந்து உட்கொண்டார்கள்.—எ-று.

சந்தனம் மலர்முதலியவற்றை யணிந்தும், தீர்த்தம் அவிமுதலியவற்றை யுட்கொண்டும் மகிழ்ந்தனரென்பார், 'அணிந்துட்கொண்டார்' என்று கூறினர். (அஉ)

ஆலமா மிடற்றோற் கான வமலமாம் பொருளை யேற்றுச்
சீலமோ டணிந்துட் கொண்டு சிந்தையுண் மகிழ்ந்து நந்த
மூலமாம் வினைகட் கின்றே முடிபொருங் குற்ற தென்றார்
மேலவ ரன்று பெற்ற வியப்பினை விளம்ப லாமோ.

(இ-ள்.) விஷந்தங்கிய கண்டத்தினையுடைய சிவபெருமானுக்குப் பிரீதியாகிய நின்மலப் பொருள்களைப்பெற்று முறைப்படியணிந்து உட்கொண்டு மனமகிழ்ந்து, நமது முன்னைய வினைகளுக்கு இன்றைப்பொழுதே ஒருங்கே அழிவுநேர்ந்ததென்று கூறினார்கள்; உயர்வினையுடைய அவர்கள் அன்று அடைந்த மகிழ்ச்சியைச் சொல்லுதல் கூடுமோ?—எ-று.

சிவப்பிரசாதம் பெற்றவர்கள் பாவத்தினின்று நீங்கிப் பரிசுத்தமடைதல் நிச்சயமென்று மகிழ்கூர்ந்தனரென்பார், 'மகிழ்ந்துநந்தம் மூலமாம்வினைகட் கின்றே முடிபொருங்குற்றது' என்று கூறினர். (அ௩)

அனையதோர் காலை தன்னி லமலமாம் பொருள்க டம்மைப்
பனிவரை யிறைவன் றானும் பன்னியுந் தமரு ளாரு
மெனையவரு மருந்தி மேற்கொண் டெல்லையி லின்ப முற்றார்
வினைவலி யொருவி மேலாம் வீடுபே றடைந்து ளார்போல்.

(இ-ள்.) அவ்வாறாகிய பொழுது, நின்மலமாகிய அந்தப்பொருள்களைப் பர்வதராஜனும் அவன் பத்தினியாகிய மேனையும், உறவினராயுள்ளவர்களும், மற்றையர்களும் உட்கொண்டும், மேலணிந்தும், இருவினைகளினது வலியினின்று நீங்கிமேலாகிய முத்தியின்ப மடைந்தவர்கள்போல அளவற்ற பேரின்பமடைந்தார்கள்.—எ-று.

இன்பங்களனைத்திலுஞ் சிறந்தது முத்தியின்பமே யாகலான் அத்தகைய பேரின்பமடைந்தன ரென்பார், 'அருந்திமேற்கொண்டு வீடுபேறடைந்துளார்போல் எல்லையி லின்பமுற்றார்' என்றார். (அச)

தன்னுறு கணவன் றுஞ்சத் தாபத நிலைய ளாகி
யின்னலை யடைந்தங் குற்ற விரதியவ் வெல்லை வந்து
மன்னுயிர் முழுது மீன்ற மங்கையை மணந்த வள்ளல்
பொன்னடி வணங்கித் தீயேன் புன்கணைத் தவிர்த்தி யென்றாள்.

(இ-ள்.) தனக்குரிய நாயகனிறக்கவும், அதனால் விதவாவிரதம்பூண்டு துன்பத்தையடைந்து அங்கு உமிழ்திருந்த இரதியானவள் அந்தச் சமயத்தில் வந்து நிலைபெற்ற உயிர்களனைத்தையும் பெற்றருளிய உமாதேவியாரைத் திருமணம்புரிந்தருளிய சிவபெருமானது அழகிய திருவடிகளைவணங்கி (எமது ஆண்டவரோ !) கொடியவளாகிய எனதுதுன்பத்தை நீக்கியருள்வீராகவென்று பிரார்த்தித்தனள்.—எ-று.

அவ்வெல்லைவந்து என்பதற்கு, அவ்விடத்தில் வந்து எனப்பொருள் கூறினுமாம். (அ௫)

சீருறு கணவ னில்லாள் செப்பிய மாற்றங் கேளா
வாருயிர் முழுது நின்றே யனைத்தையு முணர்ந்து கூட்டும்
பேரரு ளுடைய நாதன் பேதுறன் மடந்தை யென்னு
மாரன்வந் துதிக்கும் வண்ண மனத்திடை நினைந்தா னன்றே.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய புருஷனற்றவளாகிய இரதியானவள் சொல்லிய வசனத்தைக்கேட்டு, அரிய எல்லாவுயிர்களிடோறு மெழுந்தருளியிருந்து, அவ்வுயிர்களினது ஊழனைத்தையும் உணர்ந்தூட்டுகின்ற பேரருள் வள்ளலாகிய சிவபெருமான், பெண்ணே ! நீ துன்பமடையாதே யென்றருளிச்செய்து, மன்மதன் வந்து தோன்றும்படி தமது திருவுள்ளத்திற் சிந்தித்தருளினார்.—எ-று.

அவ்வவ் வான்மாக்களது வினைப்போகங்களை யுணர்ந்தூட்டுபவர் சிவபெருமா னொருவரேயாகலான், மன்மதனது தோற்றக்கேடுகளையு முணர்ந்து அவன்முன்போல் உருக்கொண்டெழுமாறு திருவுள்ளங்கொண் டருளினரென்க. (அசு)

நினைதரு மெல்லை தன்னி னெடியமான் முதலா வுள்ள
வனைவரு மருட்கை யெய்த வழுங்கிய விரதி நோக்கி
மனமகிழ் சிறந்து கார்காண் மஞ்ஞையிற் களிப்ப வங்கட்
குனிசிலை கொண்ட மாரன் கொம்மெனத் தோன்றி னானே.

(இ-ள்.) அவ்வாறு சிந்தித்தருளிய பொழுது, திருமால் முதலிய யாவரும் மருட்சிகொள்ளவும், வருத்தமுற்றிருந்த இரதியானவள் பார்த்து மனமகிழ்வு கூர்ந்து மேகத்தைக்கண்ட மயில்போலக் களிப்படையவும் வளைத்த கரும்பு வில்லையுடைய மன்மதன் அங்கு விரைவாகத் தோன்றினான்.—எ-று.

மேகம் கருநிறங்கொண்டு இந்திரவில்லிட்டு ஜலவருஷம் பெய்வதுபோல, மன்மதன் கருநிறமும் வளைத்தவில்லும் பாணவருஷம்பெய்தலு முடையவனாகலான், அவனை மேகமாகவும், மேகத்தைக் கண்டவுடன் மயில் மகிழ்கூர்ந்து நடிப்பதுபோல, அம் மயில்போலுஞ் சாயலையுடைய இரதிதேவி மன்மதனைக்கண்டு மகிழ்வடைந்தமையால், அவளை மயிலாகவும் உவமித்துக் கூறினர். (அஎ)

முன்பொடு தோன்று மாரன் முதல்வியோ டிருந்த நாதன்
பொன்புனை கமலத் தாண்முன் போந்தனன் றாழ்ந்து போற்றி
யென்பிழை பொறுத்தி யென்ன யாமுனை முனியி னன்றோ
பின்பது தணிவ துள்ளம் பேதுறன் மைந்த வென்றான்.

(இ-ள்.) வலிமையோடு தோன்றிய மன்மதன் உமாதேவியாருடன் வீற்றிருந்தருளிய சிவபெருமானது பொற்கழலணிந்த தாமரை மலர்போன்ற திருவடிகளின் முன்னேயடைந்து வணங்கித்துதித்து, (எம்பெருமானே !) அடியேன்செய்த குற்றத்தை மன்னித்தருள்வீராகவென்றுபிரார்த்திக்க, (சிவபெருமான்) யாம் உன்னைக்கோபித்தாலன்றோ ? பின்னை அக்கோபந் தணியவேண்டுவது, குழந்தாய் ! நீமனங்கலங்காதே யென்றருளிச்செய்தனர்.—எ-று.

சிவபெருமான் மன்மதனை யெரித்தமை நெற்றிக்கண்ணைத் திறந்தமாத்திர மேயன்றி, ஒரு தொழிலாகக் கருதியன்றாகலின் 'யாமுனை முனியினன்றே பின்பது தணிவது' என்று கூறினார்.

முன்பொடு என்பதற்கு, பெருமையோடு எனப் பொருள் கூறினுமாம். (அஅ)

எரிபுனை நமது நோக்கா லிறந்தநின் னுடல நீறாய்
விரைவொடு போயிற் றன்றே வேண்டின ளிரதி யன்னாட்
குருவமா யிருந்தி யேனை யும்பரோ டிம்பர்க் கெல்லா
மருவிலை யாகி யுன்ற னரசியல் புரிதி யென்றான்.

(இ-ள்.) அக்கினியை யுட்கொண்டுள்ள நமதுபார்வையினால் எரிந்தழிந்த நினது சரீரமானது உடனே சாம்பராய்ப் போயிற்றல்லவோ? (ஆயினும்) இரதிதேவி வேண்டிக்கொண்டமையால் அவளுக்குமாத்திரம் உருவமா யிருக்கக்கடவை; மற்றைத் தேவர்கள்முதலியயாவரிடத்திலும் அருவமாயிருந்து உனது அரசாட்சியை நடத்தக்கடவையென்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று.

நின்மனைவியாகிய இரதிக்கு இன்பமூட்ட வேண்டுதலின், அவளுக்குருவமாகவும், மற்றையருக் கருவமாகவு மிருக்கக்கடவையென்று சிவபெருமானருள்செய்தனனொன்க. (அக)

செய்வினை முறையா லீசன் சித்தசற் கினைய கூறி
யவ்வவ னரசுஞ் சீரு மாணையும் வலியு நல்கி
மைவிழி யிரதி யோடு மன்னுதொல் புரத்துச் செல்ல
மெய்விடை யுதவ வன்னோர் விரைந்துடன் றொழுது போனார்.

(இ-ள்.) தாம் முன்புசெய்தருளிய தொழிலின் முறைமைக் கேற்றபடி மன்மதனுக் கிவ்வாறருளிச்செய்து, அம் மன்மதனது அரசாட்சியும், மேன்மையும், ஆக்கினையும், வல்லமையுமாகிய இவைகளைக் கொடுத்தருளி, மைதீட்டிய கண்களையுடைய இரதிதேவியுடனே நிலைபெற்ற தங்கள் பழைமையாகிய நகரத்திற்குச் செல்லும்படி மெய்ம்மையாகிய கட்டளையிட்டருள, அவ்விரதிதேவியும் மன்மதனும் விரைவாகவணங்கிச் சென்றார்கள்.—எ-று.

சித்தசன் - (திருமாலினது) சித்தத்திற் பிறந்தவன். (௯0)

இரதியு மதனு மேக விந்திர நீலத் திட்ட
வரியணை யிருந்த நாத னம்மையொ டிழிந்து தன்னேர்
திருவுரு வுடைய மேலோர் தேவர்மா முனிவ ரேனோர்
பரவினர் செல்லப் பூதர் பல்லியந் தெழிப்பச் சென்றான்.

(இ-ள்.) இரதிதேவியும் மன்மதனுஞ் சென்றவுடனே, இந்திரநீல சிங்காசனத்தில் வீற்றிருந்தருளிய சிவபெருமான் உமாதேவியாருடன் கீழேயிறங்கி யருளி, தமது சாருபத்தையடைந்த உருத்திரர்களாகிய மேலோர்களும், தேவர்களும், பெரிய முனிவர்களும், மற்றையர்களும் வணங்கிச் சூழ்ந்து செல்லவும், பூதர்கள் பல வாத்தியங்களை முழக்கிவரவுஞ் சென்றருளினார்.—எ-று. (௯க)

மன்னுயிர்க் குயிராய் நின்றோன் மால்விடை யேறி மாதைத்
தன்னொரு பாங்கிற் கொண்டு தழீஇக்கொடு நடத்தி வானோர்
தொன்னிலை யமைந்து செல்லத் துவன்றியே கணங்கள் சுற்றப்
பொன்னிய லிமையந் தீர்ந்து வெள்ளியம் பொருப்பில் வந்தான்.

(இ-ள்.) நிலைபெற்ற உயிர்க்குயிராக வெழுந்தருளிய சிவபெருமான் பெரிய இடபத்தின் மீதெழுந்தருளி உமாதேவியாரைத் தமது ஒருபுறத்தில் வைத்துத் தழு

விக்கொண்டு நடத்தியருளி, தேவர்கள் தங்கள் தங்களது பழைமையாகிய வாகனங் களிலூர்ந்துவரவும், பூதகணங்கள்நெருங்கிச் சூழ்ந்துவரவும், பொன்மயமாகிய இமைய மலையினின்று நீங்கி அழகிய வெள்ளிமலையாகிய திருக்கயிலையை யடைந்தருளி னர்.—எ-று. (௩௨)

அன்னதோர் காலை மாலை யயனைவெம் பரசை வேள்வி
மன்னனை யமரர் தம்மை முனிவரை மாத ரார்க
ளென்னவர் தமையுந் தத்த மிடந்தொறு மேகும் வண்ண
முன்னுற விடுத்தா னென்ப முதலுமு முடிவு மில்லான்.

(இ-ள்.) அவ்வாறாகியசமயத்தில் முதலும் முடிவுமில்லாதவராகிய சிவபெரு மான் திருமாலையும் பிரமனையும், பர்வதராஜனையும், யாகாதிபதியாகிய இந்திரனை யும் தேவர்களையும் முனிவர்களையும், மாதர்களையும் மற்றியாவர்களையுந் தங்கள்தங்க ளிடங்கடோறுஞ் செல்லும்படி முன்னேயனுப்பியருளினர்.—எ-று. (௩௩)

அடுகன லவன்கூர் மாண்ட ரூடாக ளையன் சிம்புள்
வடிவின ருதி யான வரம்பிலா வுருத்தி ரர்க்கும்
கடகரி முகத்தி னற்குங் கணங்களிற் றலைமை யோர்க்கும்
விடையினை யுதவி யையன் வியன்பெருங் கோயில் புக்கான்.

(இ-ள்.) சிவபெருமானுனவர் சங்காரத்தொழிலையுடைய காலாக்கினியுருத் திரர், கூஷ்மாண்டர், ஆடகேசர், ஐயனார், சிம்புள் வடிவங்கொண்டருளிய வீரபத்திரர் முதலிய அளவில்லாத உருத்திரர்களுக்கும், மதம்பொழிகின்ற யானைமுகத்தை யுடைய விநாயகக்கடவுளுக்கும் சிவகணத் தலைவர்களுக்கும் (தங்கள் தங்களிடத்திற் குச் சொல்லும்படி) விடைகொடுத்தருளி, விசாலமாகிய சிறந்த தமது திருக்கோயிலை யடைந்தருளினர்.—எ-று.

சிவகணத்தலைவர்களுக்கு விடைகொடுத்ததே சிவகணங்களுக்கும் விடை கொடுத்ததாகலால், 'கணங்களிற் றலைமையோர்க்கும் விடையினையுதவி' என்றார்.

ஏறெனுங் கடவுண் மீதி னிம்மென விழிந்து தன்னோர்
கூறுடை முதல்வி யோடுங் கோநகர் நடுவ ணெய்தி
யாறணி சடையெம் மண்ண லரியணைப் பீட மீதில்
வீறொடு தொன்மை யேபோல் வீற்றிருந் தருளி னானே.

(இ-ள்.) விடைத்தேவரதுமுதுகினின்றும் விரைந்து இறங்கியருளி, கங்கை நதியையணிந்த சடைமுடியையுடைய எமது சிவபெருமான், தமது ஒரு பாகத்தி லுள்ள உமாதேவியாரோடும் திருக்கோயிலின் மத்தியிற்சென்று சிங்காசனத்தின் மீது மேன்மையுடன் பழைமைபோலவே வீற்றிருந்தருளினர்.—எ-று.

தருமதேவதையே சிவபெருமானுக்கு இடபமாகவந்தமையின், 'ஏறெனுங் கடவுள்' என்று கூறினர். (௩௫)

அன்பினர்க் கெளிவந் தள்ள வாதியம் பரமன் மாது
தன்புடை யாகச் சீயத் தவிசின்வீற் றிருந்த லோடுந்
துன்பகன் றிருபா லாகித் துவன்றிய வுயிர்க ளெல்லா
மினபொடு போக மாற்றி யினிதமர் வுற்ற வன்றே.

(இ-ள்.) மெய்யன்பர்களுக்கு எளிதாகக் காட்சிகொடுத்தருள்கின்ற முதற் பெருங்கடவுளாகிய சிவபெருமான் உமாதேவியார் தமது ஒருபக்கத்தி லெழுந்தருளி யிருக்கும்படி சிங்காதனத்தில் வீற்றிருந்தருளவும், (உலகத்தில் ஆண் பெண்ணென்

னும்) இரண்டு பகுதியாகப் பொருந்தியுள்ள ஆன்மாக்களனைத்தும் துன்பமொழிந்து இன்பத்துடன் போகங்களை யனுபவித்துக்கொண்டு இனிமையாக வாழ்ந்திருந்தன.

'அன்பினர்க் கெளிவந்துற்ற வாநியம்பரமன்,' என்பதனை:—"அடியார்க் கெளியன்சிற்றம்பலவன்கொற்றங்-குடியார்க்கெழுதிய கைச்சீட்டுப்-படியின்மிசைப்-பெற்றான்சாம் பானுக்குப் பேதமறத் தீக்கைசெய்து - முத்திகொடுக்கமுறை" என்னுந் திருவாக்கானறிக.

'இருபாலாகித் துவன்றிய வுயிர்கள், என்பதற்கு, உயர்திணை அஃறிணை யென்று மிருபாலாகப் பொருந்திய வுயிர்கள் எனவும்,சரம்-அசரம் என்னு மிருபாலாகப் பொருந்திய வுயிர்கள் எனவும் பொருள் கூறினுமாம். (௬௬)

திருக்கல்யாணப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் அ௧௦.

---

உ

முருகன்றுணை.

---

# திருவவதாரப்படலம்.

பற்பல வினைய வாற்றாற் படர்தலும் பின்னோர் வைகன்
முற்படு மயன்மால் வேள்வி முதலவன் றிசைகாப் பாளர்
சொற்படு முனிவர் வானோர் யாவருந் தொல்லை மேரு
வெற்பினிற் குழுமிச் சூரான் மிகமெலிந் திரங்கிச் சொல்வார்.

(இ-ள்.) இவ்வாறு அனேககாலஞ் செல்லவும், பின்பு ஒருநாள் முதன்மை பொருந்திய பிரமன் திருமால் இந்திரன் திக்குப்பாலகர்கள் புகழ்ச்சியையுடைய முனிவர்கள் தேவர்கள் முதலிய யாவர்களும் பழைமையாகிய மேருமலையிற் கூட்டமாகச்சேர்ந்து சூரபதுமனால் மிகவுந்தளர்ந்து வருந்திச்சொல்லுவார்கள்.—எ-று.

திசைகாப்பாளர் என்றது, இந்திரன் நீங்கலாகவுள்ளவர்களை. (௧)

உலகினை யவுணர்க் கீந்தே யோகிபோல் வைகி நம்பான்
மெலிவினைப் படுத்தி யாம்போய் வேண்டலு மிரக்க மெய்தி
மலைமக டன்னை வேட்டான் மைந்தனைத் தந்து நம்மைத்
தலையளி புரியான் வாளா விருப்பதென் றானு வானோன்.

(இ-ள்.) சிவபெருமானனவர் உலகத்தை யசுரர்களுக்குக் கொடுத்து யோகியைப்போன் றெழுந்தருளியிருந்து நம்மிடத்துத் துன்பத்தை விளைத்து நாம்சென்று வேண்டிக்கொள்ளவும், திருவுள்ளமிரங்கிப் பர்வதராஜ புத்திரியாகிய உமாதேவியாரைத்திருமணம் புரிந்தருளினார்; பின்பு புத்திரனைப்பெற்று நமக்கு முதன்மையாகிய திருவருள் புரியாதவராய்ச் சும்மாவிருத்தல் யாதுகாரணம்.—எ-று.

அகிலாண்டசராசரங்களைத் தம்முட்டாங்கி யுயர்ந்தோங்கி நிற்கும் பெருமானையென்பார், 'தானு' என்று கூறினார். இதனை—"பிறப்போ டிறப்பு மிலனாகிப் பிரமன் மாயன் முதலெவர்க்குஞ்-சிறப்பா லுயர்ந்த கலியாணனாகித் தோன்றின்றியே-யறத்தோரறிய வுறைவனால் யாவுமேவியாதலினா-லுறத்தா னுணர்ந்தோர் தானுவென வுணர்ந்தே நாளுமுரைப்பரால்" என்னும் வாயுசங்கிதையானறிக. (௨)

இவறலு மிகலு மின்றி யார்க்குமோர் பெற்றித் தாகி
யவரவர் வினைக ளூடி யதற்படு பொருளை நல்குஞ்
சிவனையாம் வெறுத்தல் குற்றஞ் சிறந்தநோன் பியற்றி டாதே
தவறுசெய் தனமென் றெம்மை நோவதே தக்க தென்றார்.

(இ-ள்.) உறவும் பகையுமில்லாமல் எவர்களுக்கும் ஓரேதன்மையராய் அவ ரவர்களுடைய நல்வினை தீவினைகளை யாராய்ந்து அவ்வினைக்கியைந்த பயனைத்தரு கின்ற சிவபெருமானை நாம் வெறுத்துக்கொள்வது குற்றமேயாம், சிறப்புமிக்க தவத் தைச் செய்யாமல் குற்றஞ்செய்தோமென்று நம்மை நொந்துகொள்வதே தகுதியாகு மென்றார்கள்.—எ-று.

இவறல் - ஆசை. (௩)

ஆயினு மவன்றாள் போற்றி யடையினன் கனைத்து மாகுந்
தீயன வகலு மீது திண்ணமா மதனா லின்னுங்
காய்கதிர் மதிசூழ் கின்ற கயிலையங் கிரியின் முக்க
ணாயகற் கிதனைக் கூற நாமெலாம் போது மென்றார்.

(இ-ள்.) ஆயினும், அச்சிவபெருமானது திருவடிகளைத் துதித்துச் சரண மாக வடைந்தால் நன்மைகளனைத்துஞ்சேரும், தீமைகளொழியும்; இது சத்தியமா கும்; அதனால் இன்னும், வெயிலை எரிக்கின்ற சூரியசந்திரர்கள் வலம்வருகின்ற திருக் கயிலாயத் திருமலையில் திரிநேத்திரராகிய சிவபெருமானுக்கு இதனை விண்ணப்பஞ் செய்யும்படி நாமனைவரும் போவோமென்று சொன்னார்கள்—எ-று. (௪)

போதர விசைந்த காலைப் பொன்னலர் கமலப் புத்தேள்
மேதகு பரமன் செய்கை வினவியே யேகல் வேண்டுந்
தூதுவ னொருவன் றன்னைத் தூண்டிமுன் னறிது மென்றே
யூதையங் கடவு டன்னை நோக்கியீ துரைக்க லுற்றான்.

(இ-ள்.) அவ்வாறு போகும்படி யாவரும் இசைந்தபொழுது, பொன்மய மாக மலர்கின்ற கமலாசனனாகிய பிரமன் மேன்மையமைந்த சிவபெருமானது செய் கையை விசாரித்தறிந்தே பின்புசெல்லவேண்டும், ஆதலால் ஒரு தூதுவனை முன்னே அனுப்பித் தெரிந்துகொள்ளுவோமென்று, வாயுதேவனைப்பார்த்து இவ்வார்த்தையை ச்சொல்லத்தொடங்கினான்.—எ-று.

தேவதேவராகலின், 'மேதகுபரமன்' என்றும், சிவசந்நிதானத்திற்குச் சமய மறியாது செல்லின், தீங்கு நேருமாகலின், 'தூதுவனொருவன்றன்னைத் தூண்டிமுன் னறிதும்' என்றுங்கூறினர். (௫)

வடவரை யதனின் மூன்று மான்குவ டெறிந்து வெளவி
யுடல்சின வரவ முட்க வுததியி லுய்த்த மைந்த
படர்மதி மிலைச்சுஞ் சென்னிப் பண்ணவன் செயலை வெள்ளிக்
கடிவரை நகரத் தெய்திக் கண்டனை மீடி யென்றான்.

(இ-ள்.) மேருமலையில் மாட்சிமைப்பட்ட மூன்றுசிகரங்களைச் சாடிப்பி டுங்கி, பகைக்கின்ற கோபத்தினையுடைய ஆதிசேஷன் தன்வலிகுன்றும்படி சமுத்தி ரத்தில் வீசிய வலியோனே! கலைவளர்கின்ற இளம்பிறையணிந்த சிரத்தினையுடைய சிவபெருமானது செய்கையைக் காவலையுடைய வெள்ளிமலையிலுள்ள திருநகரத்திற் சென்று பார்த்துவரக்கடவை யென்று கூறினான்.—எ-று.

முன்பொருகாலத்தில் வல்லமையைக் குறித்து ஆதிசேடனுக்கும் வாயுவுக்குந் தருக்கநேர்ந்து, ஆதிசேடன் மேருமலையையசையவொட்டாது தனதுபணாமுடிகளால்

பொத்தி யழுத்தியபொழுது, வாயுமிகுதியாக மோதியடித்து அம்மலையின் மூன்று சிகரங்களைப் பெயர்த்தெறிந்தனன் என்பதாம். இதனை :—“ வந்துவாயுவும் வந்துவந்தறைந்தனன் வரையை-முந்திவேரறப் பறித்தனன் கொடுமுடி மூன்றை - யந்தமூன்றையுங்கொடு நமன்றிசையினிலடையே சிந்தினான்றலமூன்றிலே விழுந்தனசிகரம்” எனவருஞ்செவ்வந்திப் புராணத்தானறிக. தூதுசெல்வோர் தயிரியமும் வன்மையுமுடையோராயிருக்கவேண்டுதலின், ‘ மைந்த ’ என்றார். (௬)

பல்லிதழ் வனச மேலோ னிவையன பகர நோன்றாள்
வில்லுடை மதனை வெவ்வே விழித்திடு கடவுண் முன்னஞ்
செல்லுவ தரிது செல்லிற் றீமைய பயக்கு மென்பா
லொல்லுவ தன்றிச் செய்கை யுள்ளமும் வெருவு மென்றான்.

(இ-ள்.) பல இதழ்களை யுடைய தாமரைமலரில் வசிக்கும் பிரமன் இவ்வார்த்தைகளைக்கூறியவுடன், வலிய அடியினையுடைய கரும்புவில்லையேந்திய மன்மதனைப்பார்த்தெரித்தழித்தருளிய சிவபெருமானுக்கு முன்னே யான் செல்லுதலருமையாகும், அவ்வாறு செல்லின் தீமையேயுண்டாகும். இக்காரியம் என்னால்முடிவதன்று. (இதனை நினைத்தால்) மனமும் நடுங்குமென்று கூறினான்.—எ-று.

பிரமன் வீற்றிருக்கும் தாமரை மலர் சகஸ்திரதளங்களை யுடையதாகலின், ‘ பல்லிதழ் ’ என்றும், சிவபெருமானது பராக்கிரமத்தன்மையை மன்மதன் முன்னிலையாக அறிந்துள்ளவனாகலின், தான்செல்லுதலேயன்றித் தனதுள்ளமுஞ் செல்லுதற்கஞ்சுமென்று நடுங்கியுரைத்தன னென்பார், ‘ஒல்லுவதன்றிச் செய்கையுள்ளமும் வெருவுமென்றான் ’ என்றுங் கூறினார். (௭)

கூற்றிது நிகழ்ந்த வேலைக் கோகனு கத்து மேலோன்
காற்றினுக் கரசை நோக்கிக் கம்பலை கொள்ளேல் யாண்டு
மாற்றலொ டுலாவல் செய்யு மொருவனை நீயே யன்றி
வீற்றொரு தேவ ருண்டோ மேலிது புரிதற் பாலோர்.

(இ-ள்.) இவ்வாறு கூறியபொழுது, தாமரைமலர்மேல் வசிக்கின்ற பிரமதேவன் வாயுதேவனைப்பார்த்து, நீ நடுக்கங்கொள்ளாதே; எவ்விடத்திலும் வலிமையோடு உலாவுகின்ற ஒப்பற்ற நீயேயல்லாமல் உன்னையன்றி இதனைச்செய்யவல்லவர்கள் வேறொருதேவர்களிருக்கின்றார்களோ ?—எ-று.

கூற்று = வார்த்தை. (௮)

உற்றுழி யுதவி செய்வோ ருலப்புறா தெவையு மீவோ
ரற்றமி றவத்தா றுற்றோ ரமர்புரி வீர ராவோர்
மற்றொரு பொருளும் வெஃகார் வருத்தமு மோரா ராவி
யிற்றிட வரினு மென்னா ரினிதென மகிழ்வ ரன்றே.

(இ-ள்.) ஆபத்து வந்தவிடத்து உதவுகின்றவர்களும், தடையின்றி எந்தப் பொருளையும் கொடுக்கின்றவர்களும், கெடுதலில்லாத தவநெறியிலடைந்தவர்களும், போர்செய்கின்ற சுத்தவீரர்களுமாகிய இவர்கள் வேறொருபொருளையும் விரும்பார்கள் ; (அதனாலுண்டாகின்ற) வருத்தத்தையுஞ் சிந்தியார்கள்; உயிர் போகும்படி நேர்ந்தாலும் அதனை நினையார்கள் ; நன்றென்று மகிழ்வடைவார்கள்.—எ-று.

இதனை —“ மெய்வருத்தம் பாரார் பசிநோக்கார் கண்டுஞ்சா - ரெவ்வெவர் தீமையு மேற்கொள்ளார் - செவ்வி - யருமையும் பாரா ரவமதிப்புங் கொள்ளார் - கருமமே கண்ணாயினார்” என்பதனானறிக. (௯)

ஆதலி னெங்கட் கெல்லா மாற்றிடு முதவிக் காகப்
போதியா லைய வென்று புகழ்ச்சியா லிவ்வாய பல்வே
றேதிடு பொருண்மை கூற விசைந்தன னெழுந்து தீயின்
காதலன் விடைகொண் டேகிக் கயிலைமால் வரையிற் சென்றான்.

(இ-ள்.) ஆகலால் எங்களனைவருக்குஞ் செய்கின்ற உபகாரத்திற்காக ஐயனே! நீ போகக்கடவையென்று புகழ்ச்சியாக இவ்வாறாகிய அநேக எதுக்களையுடைத்தாகிய விஷயங்களை யெடுத்துச் சொல்ல, அதற்கு ஒப்புக்கொண்டவனாய், அக்கினிக்குத்தோழனாகிய வாயுதேவன் விடைபெற்றுச்சென்று பெரிய திருக்கயிலாயமலையிற் சேர்ந்தனன்.—எ-று.

'பல்வேறேதிடுபொருண்மை' என்றது, அவ்வாயுவினது பராக்கிரமங்களைக்குறித்துக் கூறிய சரிதங்களை. (௧0)

குன்றதன் புடையில் வீழுங் குரைபுன லாற்றி னாடி
மன்றலங் காமர் காவின் மலர்மன மளாவி வாரித்
தென்றியா யசைந்து மெல்லச் சினகரம் புகுத மெல்லை
நின்றதோர் நந்தி காணூஉ வுரப்பின னெடிது சீறி.

(இ-ள்.) அம்மலையினருகில் வீழ்கின்ற சப்திக்கும் நீரையுடைய காணுறுகளில் மூழ்கி, நறுமணங்கமழும் அழகிய சோலையிலுள்ள மலர்களின் வாசனையிற் கலந்து வாரிக்கொண்டு, சிறுதென்றலாக அசைந்து, மிருதுவாக ஆலயத்தில் பிரவேசிக்குஞ்சமயத்தில், அங்குக் காவல்செய்திருந்த திருநந்திதேவர் பார்த்தருளி மிகவுங் கோபித்து அதட்டியருளினார்.—எ-று.

திருக்கயிலைத் திருக்கோயிலி னுள்ளே பிரவேசிக்கும்போது யாவரும் தம்மை வணங்கி விடைபெற்று உட்செல்லும் முறைமைக்கு மாறாகச் சென்றமையின், பெருஞ்சீற்றங் கொண் டதட்டின னென்பார், 'நின்றதோர் நந்திகாணூஉ வுரப்பின னெடிது சீறி' என்று கூறினார். (௧௧)

பொற்பிரம் பொன்று பற்றிப் பொலன்முதற் கடையைப் போற்றி
நிற்புறு மாணை வள்ள னெடுஞ்சினத் துரப்ப லோடுங்
கற்பொழி யெழிலி கான்ற கனையொலி கேட்ட பாம்பின்
முற்படர் கின்ற காலோன் மொய்ம் பிலன் வெருவி வீழ்ந்தான்.

(இ-ள்.) பொன்மயமாகிய ஒரு பிரம்பைத் திருக்கரத்திற் பிடித்து அழகிய முதற்றிருவாயிலைக் காவல்செய்து நிற்கின்ற அதிகாரநந்திதேவரானவர் மிகுந்த கோபத்துடன் அதட்டவும், கல்மழையைப் பொழிகின்ற மேகத்தினால் முழக்கப்பட்ட பேரொலியைக்கேட்ட பாம்பைப்போல, முன்னே செல்கின்ற வாயுதேவன் தனது வலி குன்றி நடுங்கி மூர்ச்சித்துவீழ்ந்தனன்.—எ-று.

எழுவகை மேகங்களுள் கன்மழையைப்பெய்கின்ற காளமுகியென்னுமேகத்தின் இடி மிக்க வுரப்பினையுடையதாகலான், அவ்விடியோசையைக்கேட்ட பாம்பு நடுங்குமாறுபோல நடுங்கினனென்பார், 'கற்பொழி யெழிலி கான்ற கனையொலி கேட்ட பாம்பின் - முற்படர் கின்ற காலோன் மொய்ம்பிலன் வெருவி வீழ்ந்தான்' என்று கூறினார். எழுவகை மேகங்களையும் அவைபெய்யு மழைகளையும், "சம்வர்த்த மாவர்த்தம் புட்கலா வர்த்தஞ் - சங்காரிதந் துரோணங் காளமுகி - நீலவருண மேழ் மேகப் பெயரே" எனவும், "மணிநீர் பொன்பூ மண்கற் றீயென்-றெழுவகை மேகம் பொழிமாரி யேழே" எனவும் வரும் பிங்கலந்தைச் சூத்திரங்களா னறிக. (௧உ)

வேறு.

ஒல்லென விழ்வுறு முயிர்ப்பின் காவல
னெல்லையி லச்சமொ டிரங்கி யேயெழீஇத்
தொல்லையி னுருக்கொடு தோன்றி நந்திதன்
மல்லலங் கழல்களை வணங்கிக் கூறுவான்.

(இ-ள்.) விரைவாக மூர்ச்சித்து வீழ்ந்த வாயுதேவன் அளவற்ற அச்சத்துடன் வருந்தியெழுந்து பழைய வுருவத்தைக்கொண்டு தோன்றி அத்திருநந்திதேவரது செப்புப்பொருந்திய அழகிய திருவடிகளை நமஸ்கரித்துச் சொல்லுகின்றான்.—எ-று.

தொல்லையினுரு ஆவது, தனதுபழைமையாகியசொந்தவுருவம். திருநந்திதேவர் சிவசாரூப்பியமுடையவராகலின் அவரது திருவடிகளை, 'மல்லலங்கழல்' என்றார்.

மாலயன் மகபதி வானு ளோரெலா
மாலமர் கடவுளை யடைதன் முன்னிநீ
காலைய தறிந்தனை கடிது செல்கென
மேலுரை செய்தனர் வினையி னேனுடன்.

(இ-ள்.) திருமால், பிரமன், இந்திரன், தேவர்கள் முதலிய அனைவரும், கல்லாலவிருக்ஷத்தின்கீழெழுந்தருளிய சிவபெருமானை அடையும்படி நினைத்து, நீ சமயமறிந்து விரைவில் வரக்கடவாயென்று தீவினையையுடைய என்னிடத்து முன்னே சொன்னார்கள்.—எ-று.

ஆலமர் கடவுள் - கல்லாலவிருக்ஷத்தின்கீழ் தக்ஷிணாமூர்த்தியாக வெழுந்தருளிய சிவபெருமான். இதனை :—" கல்லானிழன்மலை-வில்லாரருளிய-பொல்லாரிணைமலர்-நல்லார்புனைவரே" என்னுஞ் சிவஞானபோதக் காப்புச் செய்யுளானறிக. காலையது என்பதில் அது-பகுதிப்பொருள்விகுதி. செல்கென-தொகுத்தல் விகாரம். (கச)

கறுத்திடு மிடறுடைக் கடவு ளாடலைக்
குறிக்கரி தஞ்சுவல் குறுக வென்றியான்
மறுத்தன னவையர்தம் வருத்தங் கூறியே
யொறுத்தெனை விடுத்தன ருடைய வன்மையால்.

(இ-ள்.) நீலகண்டத்தினையுடைய சிவபெருமானது திருவிளையாடலை அளவிட்டுரைத்த லருமையாகும், ஆதலால் யான்போகப் பயப்படுகின்றேனென்று தடுத்தேன் ; பின்னும், அவர்கள் தங்கள் வருத்தத்தைச் சொல்லித் தங்கள் வல்லமையினால் என்னை வெறுத்துக்கொண்டு அனுப்பினார்கள்.—எ-று.

பிரமவிஷ்ணுக்களது நிர்ப்பந்தத்தினால் வந்ததேயன்றி யானே வந்ததன்றென்று கூறினனென்பார், 'தம்வருத்தங் கூறியே யொறுத்தெனை விடுத்தன ருடையவன்மையால்' என்று கூறினார். (கரு)

ஆதலி னடியனே னஞ்சி யஞ்சியே
மேதகு தென்றியாய் மெல்ல வந்தன
னோதிட நினைந்தில னுனக்கு மற்றிது
பேதமை யுணர்வினேன் பிழைபொ றுத்திநீ.

(இ-ள்.) ஆகையால், அடியேன் பயந்து பயந்து மேன்மைபொருந்திய சிறுதென்றலாக மெல்லென வந்தேன்; இதனைத் தேவரீருக்கு முதலிற் சொல்லவேண்டுமென்று நினையாது போனேன்; தேவரீர் மூடபுத்தியையுடைய அடியேனது குற்றத்தை மன்னித்தருளல்வேண்டும்.—எ-று.

வாடை முதலிய பலவகைக் காற்றினுள்ளே சிறுதென்றற்காற்று உயிர்களு க்குச் சுகத்தைத் தரத்தக்கதாகலின், 'மேதகு தென்றியாய்' என்ருர். (கசு)

தானவர் தொழுவரு தகையில் சூரனுன்
மானம தொருவியே வருந்தற் றேய்ந்தனன்
றனைநான் றுணர்கிலே னறிவு மாழ்கினே
னேனைய தேவரு மினைய ரேயரோ.

(இ-ள்.) அசுரர்களால் வணங்கப்பட்ட தகுதியில்லாத சூரபதுமனுல் மானங்கெட்டு வருந்தி யொடுங்கினேன்; ஆதலால், செய்யவேண்டியவற்றை யுணராதவனுயிருக்கின்றேன்; புத்தி கெட்டேன்; மற்றைத் தேவர்களும் இத்தன்மையர்களே.

சூரபதுமனது நகரமுதலியவற்றுள்ள குப்பைகளை யொதுக்கிச் சுத்தஞ் செய்தலாகிய இழிதொழிலைச் செய்துவருந்தினேனென்று கூறினனென்பார், 'தகையில் சூரனுல் மானம தொருவியே வருத்துற் றேய்ந்தனன்' என்ருர். (கஎ)

அறைதரு கணத்தரு ளாதி யாகிய
விறைவநின் முனிவினுக் கிலக்குற் றூரிலை
சிறியவென் பொருட்டினுற் சீற்றங் கோடியோ
பொறைபுரிந் தருளெனப் போற்றி வேண்டினுன்.

(இ-ள்.) (புகழ்ந்து) சொல்லப்பட்ட சிவகணங்களில் முதல்வராகிய நந்தியெம்பெருமானே? தேவரீரது கோபத்திற்கு இலக்காக நின்றவர்களொருவருமில்லை; அற்பனுகிய அடியேன் பொருட்டுக் கோபங்கொள்ளலாகுமோ? மன்னித்தருள்வீராகவென்று துதித்து வேண்டிக்கொண்டனன்.—எ-று.

எத்தகைய சிறந்தோரும் தேவரீரது கோபத்திற்கு முன்னில்லாராயின் சிறியேன் அக்கோபத்தின் முன்னே நிற்றற்கு எவ்வளவினனென்று தாழ்ந்து கூறினனென்பது கருத்து. (கஅ)

ஆண்டகை நந்தியெம் மடிக ளவ்வழி
மூண்டெழு தன்பெரு முனிவு தீர்ந்தியா
மீண்டுநின் னுயிர்தனை யீது நிற்கலை
மீண்டனை போகென விடைதந் தேவினுன்.

(இ-ள்.) ஆண் தன்மையை யுடைய நந்தியெம்பெருமான் அப்பொழுது மிகுந்தெழுகின்ற தமது கோபத்தன்மை யொழிந்து, நாம் இவ்விடத்தில் உனது உயிரைக்கொடுத்தோம் ; நிற்காதே; திரும்பிப் போகக்கடவாயென்று விடைகொடுத்தனுப்பினுர்.—எ-று.

நீ செய்த விது முதற்குற்றமாகலானும், அதுவுந் தேவர்களது கட்டாயமென்று கூறியதனுலும் உன்னை மன்னித்தோமென்று கூறினரென்பார், 'ஈண்டு நின்னுயிர்தனை யீதுநிற்கலை-மீண்டனை போகென விடைதந் தேவினுன்' என்று கூறினுர்.

சீரிய நந்தியந் தேவ னேவலு
மாருத னவனடி வணங்கி வல்லையி
னேரறு கயிலையி னீங்கி னீடுபொன்
மேருவில் விண்ணவர் குழுவை மேவினுன்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய எமது திருநந்திதேவர் விடைகொடுத்தனுப்புதலும், வாயுதேவன் அவரது திருவடிகளை வணங்கி, விரைவாக ஒப்பற்ற திருக்கயி

லையினின்று நீங்கிப் பொன்மயமாகிய மேருமலையி னிடத்துள்ள தேவர்கள் கூட்டத்தை யடைந்தனன்.—எ-று.

ஒப்புயர்வில்லாச் சிவபெருமா னெழுந்தருளப் பெற்றுள்ளதாகலின், 'நேருறு கயிலை' என்று கூறினர். (உ0)

மேவரு காலினுன் விரிஞ்சன் மாயவன்
பூவடி வந்தனை புரிந்து நந்திதன்
காவலின் வன்மையு நிகழ்ந்த காரியம்
யாவது முறைபட வியம்பி னனரோ.

(இ-ள்.) அவ்வாறு சென்ற வாயுதேவன் பிரம விஷ்ணுக்களுடைய தாமரைமலர்போன்ற திருவடிகளில் நமஸ்காரஞ்செய்து, திருநந்திதேவரது காவலின் திறமும், அங்கு நிகழ்ந்த காரியங்களனைத்தும் முறைமையாகச் சொல்லினன்.—எ-று.

தான் சென்றதுமுதல் பின்பு மீண்டுவந்தவரையிலும் நிகழ்ந்தவைகளை-வரிசையாகக் கூறினனென்பார், 'நிகழ்ந்த காரியம் யாவது முறைபட வியம்பினன்' என்று கூறினர். (உக)

காற்றுரை வினவியே கமலக் கண்ணனு
நாற்றிசை முகத்தனு நாகர் செம்மலுஞ்
சாற்றருந் துன்பினர் தம்மி லோர்ந்திடாத்
தேற்றமொ டின்னன செப்பன் மேயினர்.

(இ-ள்.) வாயுதேவனது வார்த்தைகளைக் கேட்டு, தாமரைக்கண்ணராகிய திருமாலும், சதுர்முகங்களையுடைய பிரமனும், தேவர்கள் தலைவனாகிய இந்திரனும் சொல்லுதற்கரிய துன்பமுடையவர்களாய்த் தங்களுக்குள்ளே ஆலோசித்துத் தெளிவாக இவ்வார்த்தைகளைச் சொல்லத்தொடங்கினர்கள்.—எ-று. (உஉ)

எந்தைதன் செய்கைதேர்ந் தேகு நீயென
வெந்திறன் மருத்தினை விடுத்து மாங்கவ
னந்திதன் றனையா னடுக்க முற்றிவண்
வந்தன னச்சுறு மனத்த னாகியே.

(இ-ள்.) சிவபெருமானது செய்கையையுணர்ந்து நீ வரக்கடவையென்று கொடிய வல்லமையை யுடைய வாயுவை யனுப்பினோம்; அவன் திருநந்திதேவரது அதிகாரத்தினால் நடுக்கங்கொண்டு, அச்சமுற்ற மனமுடையவனாகி இவ்விடத்திற்கு வந்தனன்.—எ-று.

எம் தந்தை என்பது, எந்தை என மரீஇயது. (உங)

மன்னிய கயிலைமால் வரையின் யாமெலா
மின்னினி யேகியே யீசன் றன்முனர்
முன்னருங் காலமோ டுற்ற நங்குறை
பன்னுத லுறுதியெனப் பலருங் கூறினர்.

(இ-ள்.) நிலைபெற்ற பெரிய திருக்கயிலாயத்தில் நாமனைவரும் இப்பொழுதே சென்று சிவபெருமான் திருமுன்னே நினைத்தற்கரிய அனேக காலமாக அடைந்துள்ள நமது குறைகளை முறையிட்டுக்கொள்வதே உறுதியென்று பலருஞ் சொல்லிக்கொண்டார்கள்.—எ-று.

இனி யினி என்பது, இன்னினி என்றாயிற்று. (உச)

இவ்வகை யவரெலா மிசைந்து செம்பொலின்
மெய்வரை நீங்கியே வெள்ளி வெற்பினிற்
றெய்வதக் கோயின்முன் சென்று நந்தியை
யவ்விடை தொழுதிவை யறைதன் மேயினார்.

(இ-ள்.) இவ்வாறு அவர்களனைவருஞ் சம்மதித்துச் செம்பொன் மயமாகிய மேருமலையை விட்டுத் திருக்கயிலாயத்திலுள்ள தெய்வத்தன்மைபொருந்திய திருக்கோயிலின் முன்னே சென்று அங்குத் திருநந்திதேவரை வணங்கி இவற்றைச் சொல்லத் தொடங்கினார்கள்.—எ-று. (உ௫)

வேறு.

நந்தியந் தேவுகே ணெங்கள்பாற் றுன்பெலாஞ்
சிந்தைசெய் திடுதிபத் தேவதே வற்கியாம்
வந்தவா றுரைதியே வல்லைநீ யெமையவன்
முந்துறக் காட்டெனா முகமனோ டுரைசெய்தார்.

(இ-ள்.) நந்தி யெம்பெருமானே அடியேங்களிடத் துண்டாகிய துன்பங்களனைத்தையுங் கேட்டுத் திருவுள்ளங் கொண்டருள்வீராக; தேவரீர் அந்தத் தேவதேவராகிய சிவபெருமானுக்கு நாங்கள்வந்த சங்கதியை விண்ணப்பஞ்செய்து, விரைவாக எங்களை அவ்வெம்பெருமான் திருமுன்னே அழைத்துக்கொண்டுபோகவேண்டுமென்று உபசாரத்துடன் பிரார்த்தித்தார்கள்.—எ-று.

நாங்கள் சூரபதுமனால் படுந்துன்பம் பெரிதாகலின் தேவரீர் அதனைத் திருவுள்ளங் கொண்டருள வேண்டுமென்று வேண்டினரென்பார், 'நங்கள்பாற் றுன்பெலாஞ் சிந்தை செய்திடுதி நீ' என்று கூறினர். (உ௬)

மற்றிவா றுரைசெயும் வானவத் தொகையினை
நிற்றிரா லென்றவ ணிறுவியே யுறையுள்போய்க்
கற்றைவார் சடைமுடிக் கண்ணுதற் கடவுடன்
பொற்றடந் தாள்களைத் தொழுதனன் புகலுவான்.

(இ-ள்.) இவ்வாறு கூறிய தேவர் கூட்டங்களை நில்லுங்களென்று அவ்விடத்தில் நிறுத்திவிட்டு உள்ளே சென்று, கூட்டமாகிய நீண்ட சடைமுடியையுடைய நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானது பொன்மயமாகிய பெரிய திருவடிகளை வணங்கிக் கூறுகின்றார்.—எ-று. (உ௭)

அன்னலே யுனதுபொன் னடிகளைக் காணிய
விண்ணுளோர் யாவரும் வேந்தன்மா லயனொடு
நண்ணினா ரென்றலு நந்தியைத் தெரிகுறீஇத்
தண்ணிலா வேணியான் றருதியென் றருள்செய்தான்.

(இ-ள்.) எம்பெருமானே! தேவரீரது பொன்மயமாகிய திருவடிகளைத் தரிசிக்கும்பொருட்டுத் தேவர்களனைவரும் இந்திரன் திருமால் பிரமன் முதலியவர்களோடு வந்திருக்கின்றார்களென்று கூறவும், குளிர்ந்த இளம்பிறையையணிந்த சிவபெருமான் அத்திருநந்திதேவரைப் பார்த்தருளி அவர்களை யழைத்துவரக்கடவையென்று கட்டளையிட்டருளினார்.—எ-று. (உ௮)

அருள்புரிந் திடுதலு மாதியம் பண்ணவன்
றிருமலர்த் தாள்களைச் சென்னியிற் சூடியே
விரைவுடன் மீண்டுறு வேதன்மா லாதியாஞ்
சுரரெலாம் வம்மெனத் தூயவன் கூவினான்.

(இ-ள்.) முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் இவ்வாறு கட்டளையிட்டருளவும், அவரது அழகிய தாமரைமலர்போன்ற திருவடிகளைச் சிரசாகவகித்து மலரிராகிய திருநந்திதேவர் விரைவாகத் திரும்பிவந்து, பிரமவிஷ்ணுக்கள் முதலிய தேவர்களனைவரும் வரக்கடவீர்களென் றழைத்தருளினர்.—எ-று.

யாவுமழிந்துபோகுஞ் சர்வசங்கார காலத்துச் சேஷித்து நிற்கும் பெருமானாகலின், 'ஆதியம் பண்ணவன்' என்றார். வம்மின் என்றது, வம் என நின்றது. ()

கூவியே யருட்டலுங் கொண்டல்மே ரொலியினாற்
றாவிலா மகிழ்வுறுஞ் சாதகந் தன்மையாய்ப்
பூவினு யகன்முதற் புகலும்வா னவரொலாந்
தேவதே வன்முனஞ் செல்லுதன் மேயினார்.

(இ-ள்.) இவ்வா றழைத்தருளியவுடனே, மேகத்தினது பேரோசையினால் கெடாத களிப்படைகின்ற சாதகப்பறவையின் தன்மையைப்போல, கமலாசனனாகிய பிரமன் முதலாகச் சொல்லப்பட்ட தேவர்களனைவரும் தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் திருமுன்னே போகத் தொடங்கினார்கள்.—எ-று.

மேகத்தொனியைக் கேட்ட சாதகப்பறவைகள் இனி மழைபெய்யுமென்று மகிழ்வுறுமாறுபோல, திருநந்திதேவர் மூலமாகச் சிவபெருமானது கட்டளையைக் கேட்ட மாலயனாதி தேவர்கள் இனி நங்குறை தீருமென்று மகிழ்கூர்ந்து சென்றனரென்க. சாதகப்பறவை=வானம்பாடிப்பறவை. (௩௦)

அம்மையோர் பங்குற வரியனைக் கண்ணுறா
மெம்மையா ளிறைவன்முன் னெய்தியே யாங்கவன்
செம்மைசேர் தாள்களைச் சென்னியாற் றாழ்ந்தெழீஇப்
பொய்ம்மைதீ ரன்பினா லினையவா போற்றுவார்.

(இ-ள்.) உமாதேவியார் ஒருபாகத்தி லெழுந்தருளி யிருப்பச் சிங்காசனத்தில் வீற்றிருந்தருள்கின்ற எம்மை யடிமையாகவுடைய சிவபெருமான் திருமுன்னே யடைந்து, அவ்வெம்பெருமானது சிறந்த திருவடிகளைச்சிரசினால் நமஸ்கரித்தெழுந்து மெய்யன்புடன் இவ்வாறு துதிக்கின்றார்கள்.—எ-று.

சர்வாபீஷ்டங்களையுங் கொடுத்தருளத்தக்க திருவடியாகலான், 'செம்மைசேர்தாள்கள்' என்றார். பொய்ம்மைதீரன்பு மெய்யன்பு. (௩௧)

வேறு.

நோக்கினு நழைகிலை நுவலு கின்றமேதார்
வாக்கினு மமைகிலை மதிப்ப வொண்கிலை
நீக்கரு நிலைமையி னிற்றி யெந்தைநீ
யாக்கிய மாயமீ தறிகி லேமரோ.

(இ-ள்.) பார்வைக்கு மகப்படமாட்டீர்; சொல்லப்பட்ட வாக்கிலும் அடங்கமாட்டீர்; அளவிடுதற்குங் கூடாதவரா யிருக்கின்றீர்; நீக்குதற் கருமையாகிய (வியாபக) நிலைமையில் நிற்கின்றீர்; எம்பெருமானே! தேவரீர் உண்டாக்கிய இந்த மாயாவிலாசத்தை யாங்கள் அறியோம்.—எ-று.

சூரியப்பிரகாசமானது கண்ணுள்ள சர்வான்மாக்களுக்கும் பவுதிகப் பிரபஞ்சத்திலுள்ள சகலபொருள்களையுந் தன்னையுங் காட்டி நிற்பினும், கூகைப்புள்ளுக்குக் கண்ணிருந்தும் பரிதிமண்டலத்தையும் பதார்த்த பேதங்களையும் பார்க்கக் கூடாவாறுபோல, சிவபெருமான் சர்வான்மாக்களது திரிகரணங்களுக்குள்ளும் புறம்பும்

நிறைந்து நிற்பினும் பெத்தான்மாக்களுக்கு மறைந்தும், முத்தான்மாக்களுக்கு வெளிப்பட்டும் நிற்கும் பேரிலக்கண முடையவராகலின், 'நோக்கிறு நாழையில்ல நுமைறு நின்றதோர் - வாக்கிறு மமையில்ல மதிப்ப வொண்ணில்ல - நீக்கரு நிலைமையி ஹிற்றி' என்றார். இதனை :—"பொல்லா விருளகற்றுங்கதிர் கூகையென் புட்கண்ணினுக் - கல்லா யிருந்திடு மாறொக்கு மேயறி வோருளத்தில் - வல்லா றறிவா றறியார் தமக்கு மயக்கங்கண்டா-யெல்லாம் விழிமயக் கேயிறை வாகச்சி யேகம்பனே."என்னும் பட்டணத்துப் பிள்ளையார் திருவாக்கா னறிக. (௩௨)

இருமையு மொருமையு மிரண்டு மொன்றிய
வொருமையு மன்றென வுலகம் யாவையும்
பெருமையி னியற்றிய பெரும நின்செய
லருமறை யானவு மறிதற் பாலவோ

(இ-ள்.) பேதமும், அபேதமும், பேதாபேதமும் அல்லவென்று சொல்லும்படி சர்வலோகங்களையும் மேன்மையோடு சிருஷ்டித்தருளிய எமது ஆண்டவரே! தேவரீரது திருவருட்செயலை அருமையாகிய வேதங்களும் அறியுந்தன்மை யுடையனவோ?—எ-று.

இருமை-பேதம். ஒருமை-அபேதம். இரண்டு மொன்றிய வொருமை-பேதாபேதம். சிவபெருமான் இவ்வுலகத்தோடு பேதப்பொருளாகவும், அபேதப்பொருளாகவும், பேதாபேதப் பொருளாகவும் வரையறுக்கப்பட்டவ ரன்றென்பார், 'இருமையு மொருமையு மிரண்டு மொன்றிய-வொருமையு மன்றென வுலகம் யாவையும்-பெருமையி னியற்றிய பெரும' என்றார். இதனை, "இருமையி னொருமையு மொருமை தன்பெருமையும்" என்னுந் திருஞானசம்பந்தப் பிள்ளையாரருளிய திருவெழுகூற்றிருக்கையானும், "இன்றெனக் கருளி யிருள்கடிந்துள்ளத் தெழுகின்ற ஞாயிறே போன்று-நின்ற நின்றன்மை நினைப்பற நினைந்தே னியலாற் பிறிது மற்றின்மை - சென்று சென்றணுவாய்த் தேய்ந்துதேய்ந்தொன்றுந் திருப்பெருந்துறை யுறை சிவனே - யொன்றுநீ யல்லையன்றி யொன்றில்லை யாருனை யறிய கிற்பாரோ" என்னுந் திருவாசகத் திருமுறையானும். "ஒன்றன் றிரண்டன் றுளதன் றிலதன்று-நன்றன்று தீதன்று நானன்று - நின்ற - நிலையன்று நீயன்று நின்னறிவு மன்று - தலையன் றடியன்று தான்"—என்னுந் திருக்களிற்றுப் படியா ரானுமறிக. பேதம்-இருளும் வெளியும் போல்வது. அபேதம்-பொன்னும் பணியும் போல்வது. பேதாபேதம்-சொல்லும் பொருளும்போல்வது. இதனை.—"புறச்சமயத் தவர்க்கிருளா யகச்சமயத் தொளியாய்ப் புகலளவைக் களவாகிப் பொற்பணிபோ லபேதப் - பிறப்பிலதா யிருள்வெளிபோற் பேதமுஞ் சொற்பொருள்போற் பேதாபேதமு மின்றிப் பெருநூல் சொன்ன - வறத்திறனல் விளைவதா யுடலுயிர் கண்ணருக்க னறிவொளிபோற் பிரிவரு மத்துவித மாகுஞ் - சிறப்பினதாய் வேதாந்தத் தெளிவாஞ் சைவ சித்தாந்தத் திறனிங்குத் தெரிக்க லுற்றாம்" என்னுஞ் சிவப்பிரகாசத்தா னறிக. இருமை என்பதற்கு, சிவசத்திகள் எனவும், ஒருமை என்பதற்கு, சிவம் எனவும், இரண்டுமொன்றிய வொருமை என்பதற்கு அர்த்தநாரீசுரமெனவுங் கூறினுமாம். (௩௩)

உருவொடு தொழில்பெய ரொன்று மின்றியே
பரவிய நீயவை பரித்து நிற்பது
விரவிய வுயிர்க்கெலாம் வீடு தந்திடுங்
கருணைய தேயலாற் கருமம் யாவதே.

(இ-ள்.) நாமரூபவியாபாரங்கள் ஒன்றுமில்லாமல் சர்வவியாபகமாக நிறைந்திருக்கின்ற தேவரீர் அந்த நாமரூப வியாபாரங்களைக் கொண்டு நிற்பது உலகத்திற்

பரவியுள்ள எல்லாவுயிர்களுக்கும் முத்தியைத்தந்தருளுகின்ற திருவருளேயல்லாமல், வேறே யெந்தக்காரிய மிருக்கின்றது ?—எ-று.

நிஷ்கள ரூபியாயுள்ள சிவபெருமான் சகளத் திருவுருவங் கொண்டருளிய தன்மை ஆன்மாக்கள் வீடு பெற்றுய்தற்பொருட்டே யென்பார், 'உருவொடு தொழில் பெயரொன்று மின்றியே-பரவிய நீயவை பரித்து நிற்பது - விரவிய வுயிர்க்கெலாம் வீடு தந்திடவெ - கருணையதே' என்று கூறினர். இதனை—" உருவருள் குணங்களோடு முணர்வரு ளுருவிற் றோன்றலுங் - கருமமு மருள்பரன்றன் கரசர ணாதி சாங்கந் - தரு மருளு பாங்கமெல்லாந் தானரு டனக்கொன் றின்றி - யருளுரு வுயிருக் கென்றே யாக்குவ னசிந்த னன்றே" என்னுஞ் சிவஞானசித்தியா ரானறிக. (௩௪)

அவ்வுயிர் யாவுநின் னருளி லாவழிச்
செய்வினை புரிகில சிறிது மாதலால்
வெவ்விய நயப்பொடு வெறுப்பி லாதநீ
யெவ்வகை யோவுல கியற்றுந் தன்மையே.

(இ-ள்.) அந்த வுயிர்களனைத்தும் தேவரீரது திருவருளில்லா விடத்துத் தாஞ் செய்தற்குரிய யாதொரு தொழிலையுஞ் சிறிதுஞ் செய்யமாட்டா ; ஆதலால் மிக்க விருப்பத்துடனே வெறுப்புமற்ற தேவரீர் உலகத்தை நடாத்துந் தன்மை எவ்வண்ணமோ?.—எ-று.

சிவபெருமானது திருவரு ளில்லாவிடத்துச் சர்வான்மாக்களுஞ் செயலற்றுக் கிடக்குமென்பார், 'அவ்வுயிர் யாவு நின்னருளிலாவழிச் - செய்வினை புரிகில' என்றார். " எல்லா வுயிர்க்கு முயிரரு ணேச ரிவரசைவி - னல்லா தணுவு மசையாத தென்ப தறிந்தனமே - வில்லாடன் மார னிருக்கவும் யோகம் விளைத்த வந்நாள் - புல்லா திருந்தன வெல்லா வுயிருந்தம் போகத்தையே" என்பதனா னறிக. (௩௫)

முன்னநின் முன்னென மொழிநு மேயெனிற்
பின்னநின் பின்னுமாப் பேச நிற்றியா
லென்னவை யேயெனி லொழிந்த தல்லையோ
வென்னென நின்னையா மேத்து கின்றதே.

(இ-ள்.) முன்னைப் பழம்பொருட்கு முன்னைப்பழம்பொருளா யுள்ளவரென்று சொல்லுவோ மென்னின், பின்னுக்குப் பின்ன யுள்ளவரென்று சொல்லும்படி யெழுந்தருளி யிருக்கின்றீர்; அவ்விரண்டுதா னென்போமாயின், மற்றவைக ளல்லாதவரோ? யாங்கள் தேவரீரை யாதென்றுதுதிப்பது ?—எ-று.

இதனை :—" முன்னைப் பழம் பொருட்கு முன்னைப் பழம் பொருளே-பின்னைப் புதுமைக்கும் பேர்த்துமப் பெற்றியனே" என்றும், " மூப்பானிளையவன் முன்னவன் பின்னவன் முப்புரங்கள்-வீப்பான் வியன்றில்லை யானரு ளால்விரி நீருலகங்-காப்பான் பிரியக் கருதுகின்றார் நமர்கார்க் கயற்கட் - பூப்பா னலமொளி ரும்புரி தாழ்குழற் பூங்கொடியே" என்றும் வரும் ஸ்ரீ மாணிக்கவாசக சுவாமிகள் திருவாக்கானறிக. (௩௬)

புல்லிய புரம்பொடித் ததுவுங் காமனை
யொல்லென வெரித்தது முனக்குச் சீர்த்தியோ
வெல்லையில் விதிமுத லெனைத்து மீண்டுநின்
னல்லரு ளாணையே நடாத்து மென்கையால்.

(இ-ள்.) அளவில்லாத சிருஷ்டிமுதலிய அனைத்தையுந் தேவரீரது நல்ல திருவருட்சத்தியே இங்குச்செய்தருளுமென்று கூறுமுறைமையால், அற்பமாகிய திரி

புரத்தை நகைத்தெரித்தருளியதும், மன்மதனை விழிவில் விழித்தெரித்தருளியதும் தேவரீருக்குக் கீர்த்தியோ ?.—எ-று.

சூரிய சந்நிதானத்தில் சகல தொழிலுந் தானே நடத்தல்போலச் சிவபெருமான் நிர்விகாரியாயிருக்கவும் அவரது சந்நிதியில் சிருஷ்டி முதலிய சகல காரியங்களுந் தானே நடக்குமென்பார், 'எல்லையில் விதிமுத லெனைத்து மீண்டு பின்-னல்லருளானையே நடாத்தும்' என்று கூறினார் இதனை :—" கந்தமல ரயன்படைக்கு முலகமெல்லாங் கண்ணனளித் திடுமரனே யெங் கடவு டானே - யந்தமுற வழித்திடுவ னுகலாலே யயனரியு மவனதுய ரதிகா ரத்து - வந்தமுறை தந்தொழிலே மன்னுவிப்பனெல்லாம் வருவிப்பன் விகாரங்கண் மருவான் வானின் - முந்திரவி யெதிர்முளரி யலர்வுறுமொன் றலர்வான் முகையாமொன் றொன்றுலரு முறையி னுமே" என்னுஞ் சிவப்பிரகாசத்தாலும், " பூவண்ணம் பூவின் மணம்போல மெய்போத வின்ப - மாவண்ண மெய்கொண்ட வன்றன்வலி யாணை தாங்கி - மூவண்ண றன்சந்நிதி முத்தொழில் செய்ய வாளா - மேவண்ண லன்னான் விளையாட்டின் வினையை வெல்வாம்"என்னுந் திருவிளையாடற் புராணத்தானு மறிக. (௩௭)

எங்களை முன்னரே யியல்பி னீந்தனை
யெங்களை யிவ்வர சியற்று வித்தனை
யெங்களொ டொருவனென் றிருத்தி நின்செய
லெங்களி னறிவரி தென்று போற்றினார்.

(இ-ள்.) அடியேங்களை முற்காலத்திலேயே படைத்தருளினீர், அடியேங்களை இவ்வரசாட்சியைச் செய்யும்படி யருள்செய்தீர். எங்களில் ஒருவராகவு மெழுந்தருளியிருக்கின்றீர் ; (அவ்வாறிருப்பினும்) தேவரீரது திருவருட்செயலை எங்களால் அறிதற்கருமையாகும் என்று துதிசெய்தார்கள்.—எ-று.

அரிபிரமேந்திராதிதேவர்கள் சிவபெருமானால் படைக்கப்பட்டவர்களென்பார், 'எங்களை முன்னரே யியல்பி னீந்தனை' என்றும் இவர்கள் தற்சுதந்தரர்களாய்ச் சிருட்டியாதி தொழில்களைச் செய்பவரன்றென்பார், 'எங்களையிவ்வரசியற்றுவித்தனை' என்றும், உபசாரமாத்திரத்தானே திரிமூர்த்தி சமானத்துவங் கூறுவதன்றி உண்மையில் திரிமூர்த்திபரரேயாவரென்பார், 'எங்களொ டொருவனென் றிருத்தி' என்றும், தேவரீரது முடிவிலாற்ற லுடைமையாகிய பேரருட்டிறத்தை யெம்மாலறிதற்கரிதென்பார், 'நின்செய லெங்களி னறிவரிது' என்றுங் கூறினார்.—" செங்கண்மா றன்னை யென்னைத் திண்டிறன் மொய்ம்பி னல்கி - யங்கண்மா ஞாலங் காப்பு மளிப்பது முதவி யாமு-முங்கள்பா லிருத்து மென்றெம் முயிருணின் றியற்று நின்று-னெங்களான் முடியுஞ் செய்கை யாவது மில்லை கண்டாய்" என்னுந் தக்ஷகாண்டத்தானும், " வான மேத்தயான் வைகுந்த வாழ்வு பெற்றதுவு - ஞான நான்முகன் சத்தியவுலக நண்ணியது - மேனை வானவர் தத்தம வாழ்க்கை யெய்தியது-மானு யர்த்தவனருட்குறி யருச்சனைப் பயனால்" என்னுங் காஞ்சிப்புராணத்தானும், " எம்மொடு மொருவ னாகியோர் கிரியை யியற்றுவான் போலவு மியற்றும் - பொம்மல தடைந்த வுயிர்தொறு மலரிற் பொருந்திய விரையெனப் பொருந்துஞ்-செம்மைகொ ளவனே மறைமுதற் கலைக டெரிந்தெமக் குணர்த்தலாற் றெளிந்தே - மம்மர்கொள் மனத்துப் பேதையா யினையோ வவனையெம் போலநீ மதித்தாய்" என்னுங் கந்தபுராணச் சுருக்கத்தானும், " தேவரி லொருவ னென்பார் திருவுருச் சிவனைத் தேவர் - மூவராய் நின்ற தோரார் முதலுறுப் பாதி மாத - ராவது முணரா ராதி யரியயற் கறிய வொண்ணு -

மேவுறு நிலையு மோரா ரதநுரு விளைவு மோரார்'' என்றுஞ் சிவஞான சித்தியாராலு மறிக. (௩௮)

வேறு.

"அவ்வகை யமர ரெல்லா மன்புசெய் தேத்து மெல்லை
மைமரு மிடற்றுப் புத்தேள் மற்றவர் வதன நோக்கி
நொவ்வுற லெய்திச் சிந்தை நுணங்கினீர் நுங்கட் கின்னே
யெவ்வர மெனினு மீதும் வேண்டிய திசைத்தி ரென்றான்.

(இ-ள்.) அவ்வாறு தேவர்களனைவரும் அன்புசெய்து துதிக்கும்பொழுது கருநிறம்விளங்கும் கண்டத்தினையுடைய சிவபெருமான் அத்தேவர்களது முகங்களைப்பார்த்தருளி, நீங்கள்வருத்தத்தால் மனத்தளர்ச்சியடைந்திருக்கின்றீர்கள். உங்கட்கு இப்பொழுது எந்தவரம் வேண்டுமாயினும் தருகின்றோம், வேண்டியதைச்சொல்லுங்களென்றருளிச்செய்தனர்.—எ-று. (௩௯)

என்றலு மமரர் சொல்வார் யாமெலா மிந்நாள் காறும்
வென்றிற லவுணர் தம்மால் வருந்தின மதனை நீங்கி
நன்றிகொ டொல்லை யாக்க நண்ணுவா னாக நின்பா
லொன்றொரு வரம்வேண் டுற்று மதனியல் புரைத்து மன்றே.

(இ-ள்.) இவ்வாறு சிவபெருமான் அருளிச்செய்யவும், தேவர்கள் விண்ணப்பஞ்செய்வார்கள், நாங்களிதுவரையிலும் கொடிய வலிமையையுடைய அசுரர்களால் வருத்தமுற்றோம்; அவ்வருத்தத்தையொழித்து நன்மைமிக்க பழையசெல்வத்தையடையும்பொருட்டுத் தேவரிடத்து நிலைபெற்ற ஒருவரத்தைவேண்டுகின்றோம், அவ்வரத்தின்றன்மையையும் விண்ணப்பஞ் செய்கின்றோம்.—எ-று.

பூர்வம் விசனமற்றநுபவித்த செல்வமாகலின், 'நன்றிகொ டொல்லை யாக்கம்' என்றார். (௪௦)

மும்மையி னுயிர்கள் பெற்ற முகிழ்முலைக் கன்னி யாகு
மம்மையை மணந்த தன்மை யாங்கவ ளிடமா யிங்கோர்
செம்மலை யளித்தற் கன்றே தீவினைக் கடற்பட் டுள்ள
வெம்மையா ளுவதற் கேதுக் காட்டிய வியற்கை யல்லால்.

(இ-ள்.) மூன்றுவகையாகவுள்ள ஆன்மாக்களைப் பெற்றருளிய அரும்பு போன்ற ஸ்தனங்களையுடைய கன்னிகையாகிய உமாதேவியாரைத் திருமணஞ்செய்தருளிய தன்மை, அவ்வுமாதேவியாரிடத்தினின்றும் ஒருபுத்திரரையளித்தற்கன்றோ? அதுவும், தீவினையாகிய கடலிலகப்பட்டுள்ள அடியேங்களை யாட்கொள்ளுதற்குக் காரணங்காட்டிய தன்மையேயன்றிவேறில்லை.—எ-று.

மும்மையி னுயிர்க ளாவார்,—விஞ்ஞானகலர், பிரளயாகலர், சகலர் என்பவர்கள். இவருள், விஞ்ஞானகலர் ஆணவ மென்னு மொருமல முடையவர்களும், பிரளயாகலர் ஆணவ கன்ம மென்னு மிருமல முடையவர்களும், சகலர் ஆணவ கன்ம மாயை யென்னு மும்மல முடையவர்களுமாம். இவர்களுக்குச் சிவபெருமா னருள்புரியுங்கால், விஞ்ஞானகலர்க்கு அறிவுவடிவாக வுள்ளேநின் றருள்புரிந்தும், பிரளயாகலர்க்கு மான்மழுசதுர்ப்புஜமூர்த்தியாய்நின் றனுக்கிரகித்தும், சகலர்க்கு ஆசாரியராக வெழுந்தருளித் திருவருள்புரிந்துங் காத்தருள்வரென வறிக. இதனை,—"உரைதருமிப் பசுவர்க்க முணரின் மூன்று முயருமிவிஞ் ஞானகலர் பிரளயாகலர் சகலர் - நிரையின் மல மலங்கன்ம மலங்கன்ம மாயை நிற்குமுத லிருவர்க்கு நிராதார மாகிக் - கரையில ருட் பான்ஞா சத்திநிபா தத்தாற் சழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்ம வொப்பிற் -

றளையிலா சான்மூர்த்தி யாதார மாகித் தரித்தொழிப்பன் மலஞ்சாருஞ்சூக்கா சத்திபிபா தத்தால்" என்னுஞ் சிவஞானசித்தியாரா னறிக. (௪௩)

ஆதியு நடுவு மீறு மருவமு முருவு மொப்பு
மேதுவும் வரவும் போக்கு மின்பமுந் துன்பு மின்றி
வேதமுங் கடந்து நின்ற விமலவொர் குமரன் றன்னை
நீதரல் வேண்டு நின்பா னின்னையே நிகர்க்க வென்றார்.

(இ-ள்.) ஆதிமத்தியாந்தமும் அருவமும் உருவமும் ஒப்பும் எதுவும் வரவும் போக்கும் இன்பமும் துன்பமுமில்லாமல் வேதங்களையுங் கடந்துநின்ற மலரகிதராகிய எமது ஆண்டவரோ! ஒரு புத்திரனைத் தேவரீருக்கொப்பாக (உமாதேவியாரிடத்திலன்றித்) தேவரீரிடத்திலேயே யளித்தருளல் வேண்டுமென்று விண்ணப்பித்தார்கள்.—எ-று.

இதனை—" ஆதியுமந்தமுமில்லா வரும்பெருஞ்சோதி" என்றும், "சிவனுருவருவுமல்லன் சித்தினோடசித்துமல்லன்" என்றும், தன்னிகருயர்ச்சி யில்லான் காப்பியத்தலைவனாக' என்றும், "காரணங்கற்பனைகடந்தகருணை திருவுருவாகி" என்றும், "போக்கும் வரவும் புணர்வுமிலாப் புண்ணியனே" என்றும், "இன்பமுந் துன்பமுமில்லானே" என்றும், வேதங்க ளையாவெனவோங்கி யாழ்ந்தகன்ற நுண்ணியனே" என்றும் வரும் பிரமாணங்களானறிக. (௪௪)

வந்திக்கு மலரோ னாதி வானவ ருரைத்தல் கேளாப்
புந்திக்கு ளிடர்செய் யற்க புதல்வனைத் தருது மென்னா
வந்திக்கு நிகர்மெய் யண்ணா லருள்புரிந் தறிஞ ராயோர்
சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுக மாறுங் கொண்டான்.

(இ-ள்.) துதிக்கின்ற பிரமன் முதலிய தேவர்கள் விண்ணப்பஞ் செய்து கொண்டதைக் கேட்டருளி, நீங்கள் மனதில் வருத்தங்கொள்ளாதீர்கள்; ஒரு புத்திரனைத் தந்தருளுகின்றோமென்றருளிச்செய்து, செவ்வானம்போலுந் திருமேனியையுடைய சிவபெருமான் திருவருள்புரிந்து மெய்ஞ்ஞானிகளால் தியானஞ்செய்யப்பட்ட தமது புராதனமாகிய ஆறுதிருமுகங்களையுங் கொண்டருளினர்.—எ-று.

சிவபெருமான்கொண்டருளிய ஆறுதிருமுகங்களும் மெய்ஞ்ஞானிகள் சதா தமதுள்ளத்தில் சிந்திக்கப்பெற்றுள்ளதேயன்றி, ஈண்டு நவீனமாகக்கொண்டுள்ளதன்றென்பார், 'அறிஞராயோர் - சிந்திக்குந் தனது தொல்லைத் திருமுக மாறுங் கொண்டான்' என்று கூறினர். ஆறு திருமுகங்களாவன :—ஈசானம் - தற்புருடம் - வாமனம் - அகோரம் - சத்தியோசாதம் - அதோமுகம் என்பன. இதனை :—" பூங்கயிலை வெற்பிற் புனைமலர்ப்பூங் கோதையிடப் - பாங்குறையு முக்கட் பரஞ்சோதி - யாங்கொருநாள் - வெந்தகுவர்க் காற்றாத விண்ணோர் முறைக்கிரங்கி-யைந்து முகத்தோடதோமுகமுந் - தந்து - திருமுகங்க ளாறாகிச் செந்தழற்கண்ணாறு - மொருமுகமாய்த் தீப்பொறியாறுய்ப்ப" எனவருங் குமரகுருபர சுவாமிகள் திருவாக்கானறிக. (௪௫)

நிற்புறு மமரர் யாரு நெஞ்சுறாண் ணென்ன நீடு
மற்புத ரீர ராகி யருண்முறை யுன்னிப் போற்றச்
சிற்பரன் றான்கொண் டுள்ள திருமுக மாறு தன்னிற்
பொற்புறு நுதற்கண் டோறும் புலிங்கமொன் றொன்று தந்தான்.

(இ-ள்.) திருமுன்னேநின்ற தேவர்களனைவரும் மனந்திடுக்கிட்டு மிக்க ஆச்சரியமடைந்தவர்களாய்த் திருவருண் முறையையை நினைந்துத் துதிக்கவும், சிவ

பெருமான் தாம்கொண்டருளிய ஆறு திருமுகங்களில் அழகிய நெற்றிக்கண்கள்தோறும் ஒவ்வொரு தீப்பொறிகளை யளித்தருளினர்.—எ-று.

ஆறு திருமுகங்களினும் ஆறு நெற்றிக்கண்ணுடைமையின், அந்நெற்றிக்கண்களினின்றும் ஆறு தீப்பொறி யுண்டாயின வென்க. (சச)

அவ்வேலை யாறு மாக லுசமுக நுதற்கண் மாட்டே
மூவிரு பொறிக டோன்றி முளரியான் முதலா வுள்ளோ
ரெவரு மணுகல் செல்லா வெவ்வழ லுருவா யெங்கும்
பூவுல கண்ட முற்றும் பொள்ளெனப் பரவி யன்றே.

(இ-ள்.) அவ்வாறாகிய சமையத்தில் சிவபெருமானது ஆறுதிருமுகங்களிலுள்ள நெற்றிக்கண்களினிடத்தில் ஆறு தீப்பொறிகள்தோன்றி பதுமாசனனாகிய பிரமன் முதலிய யாவரும் அடையக்கூடாத அளவற்ற வெப்பமுடையதாய் நிலவுலகமும் தேவலோகமுமாகிய எவ்விடங்களிலும் விரைவாகப்பரவின.—எ-று.

'அண்டமுற்றும்' என்பதற்கு, பிரமாண்ட முழுதும் எனப்பொருள் கூறினுமாம். (சரு)

மாதண்டங் குலவு நேமி வால்வளை வயிர வொள்வாள்
கோதண்டம் பரித்தோன் வேதாக் குறித்துணர் வரிய சோதி
வேதண்டம் பரவிற் றென்ன மேதினி சூழ்ந்து விண்போய்
மூதண்டங் காறுஞ் சென்ற முதல்வன்கண் ணுதலிற் செந்தீ.

(இ-ள்.) சிவபெருமானது நெற்றிக்கண்ணிற் றோன்றிய நெருப்புப்பொறிகள், பெரிய தண்டு விளங்குகின்ற சக்கரம், வெள்ளிய சங்கு, வயிரம்பொருந்திய ஒள்ளியவாள், கோதண்டம் என்னும் பஞ்சாயுதங்களையும் ஏந்திய திருமாலும், பிரமனும் தேடியறிதற்கரிய சோதிமலையானது பரவியதுபோல, உலகத்திற்பரவி விண்ணுலகிற் சென்று பிரமாண்டம்வரையிலுஞ்சென்றன.—எ-று.

சோதிவேதண்டம் என்றது, பிரமவிஷ்ணுக்க ளிருவரும் தாமேபரம்பொருளென்று ஒருவரோடொருவர் வாதிட்டுப் பெரும்போர் புரியுங்கால், அவர்கள் மத்தியில் அக்கினிஸ்தம்பமாக வெழுந்தருளிய ஸ்ரீ அருணாசலத்தை. இதனை:—" பிரமனரியென்றிருவருந்தம் பேதைமையாற்-பரமமியாம்பரம மென்றவர்கள்பதைப்பொடுங்க-வரனா ரழலுருவா யங்கே யளவிறந்து - பரமாகி நின்றவா தோணோக்க மாடாமோ" என்னுந் திருவாசகத்தானறிக. (சசு)

வேறு.

மங்கையோர் பங்குடை வள்ள லேந்திய
செங்கன லூழியிற் செறிவ தாமென
வங்கவன் விழிபொழி யனலம் யாவையு
மெங்குள வுலகமு மீண்ட லுற்றவே.

(இ-ள்.) உமாதேவியாரை இடப்பாகத்திலுடைய சிவபெருமான் (திருக்கரத்தில்) ஏந்திய சிவந்த அக்கினியானது பிரளயகாலத்தில் (உலகமுழுதும்) வியாபிப்பதுபோல, அச்சிவபெருமானது நெற்றிக்கண்கள்பொழிந்த தீப்பொறிகளனைத்தும் எல்லா வுலகங்களிலுஞ் செல்லத்தொடங்கின.—எ-று.

மகாசங்காரகாலத்தில் சிவபெருமான் திருக்கரத்திலேந்திய அக்கினியே யுலகமெங்கும் பரவி யழிப்பதாகலின் 'மங்கையோர் பங்குடை வள்ள லேந்திய-செங்கன லூழியிற் செறிவ தாமென' என்றார். இதனை—" சாற்றியிடு மங்கியிலே சங்கா

ரம்" என்னும் உண்மைவிளக்கத்தாலும், "தோற்றுபு நின்றவத் தொல்லுல கடங்கலு-மாற்றுவ தாரழ லமைத்ததோர் கரமே" என்னுஞ் சிதம்பர மும்மணிக்கோவையாலு மறிக. (எ)

ஆங்கனந் தழலெழ வகில முற்றுமா
யோங்கிய கால்களு மலைவுற் றோய்ந்தன
வாங்கிய திரைக்கடல் வறந்த தாயிடைத்
தீங்கனல் வடவையுஞ் செருக்கு நீங்கிற்றால்.

(இ-ள்.) அவ்வாறு நெருப்புப்பொறிக ளுண்டாகவும், உலகமுழுதும் வியாபித்துள்ள வாயுக்களும் வலிகுன்றி யோய்ந்தன. உலகத்தை வளைந்து மோதுகின்ற அலைகளையுடைய கடலும் வற்றியது. அக்கடலிலுள்ள கொடிய தீயினையுடைய வடவாமுகாக்கினியுந் தன்செருக்கொழிந்தது.—எ-று.

தீயின் காதலன், என்னும் பெயரைப் பெற்றுள்ள வாயுக்களும் இத்தீப்பொறியின் வேகத்திற்கஞ்சி யொடுங்கிய தெனவறிக. (அ)

பக்கன பாரகம் பதலை முற்றுற
நெக்கன பணிகள்மெய் நெளிந்து நீங்கிய
திக்கய மரற்றியே தியக்கமுற்றன
தொக்கன வுயிர்த்தொகை துளக்க முற்றவே.

(இ-ள்.) பூமியினிடங்கள் பிளவுபட்டன. அஷ்டகுலபர்வதங்களும் நெக்குவிட்டன. (பூமியைத்தாங்குகின்ற) அஷ்டநாகங்களும் உடல்நெளிந்து நீங்கின. அஷ்டதிக்கியானைகள்வீரிட்டுத்தியங்கின. நெருங்கிய உயிர்க்கூட்டங்கள்நடுக்கமெய்தின.

காரண மில்லவன் கண்ணிற் கான்றதீப்
பேரருள் புரிந்திடப் பிறந்த பான்மையா
லோருயிர் தன்னையு மொழிவு செய்தில
வாரையு மெவற்றையு மச்சஞ் செய்தவே.

(இ-ள்.) தனக்கோர் காரணமில்லாதவராகிய சிவபெருமானது திருக்கண்களினின்றும் வெளிப்பட்ட தீப்பொறிகள் (உயிர்களை) இரக்ஷித்தருளும் பொருட்டு உண்டாகிய தன்மையினால், ஒருயிரையும் நாசஞ்செய்யவில்லை; (ஆயினும்) எல்லாரையும் எல்லாவற்றையும் நடுக்கஞ்செய்தன.—எ-று.

காரணமில்லவன் - சுயம்பாக வுள்ளவன். தீயானது உயிர்களை வருத்துவது முறைமையாயினும், இத்தீப்பொறி எல்லாம் வல்ல இறைவனால் உலக ரக்ஷணார்த்தந் தோற்றுவிக்கப் பட்டமையால், அவை யெவ்வுயிர்களையும் வருத்தா தொழிந்தன வென்க. (௯௰)

அன்னதன் வெம்மைகண் டமலன் பாங்குறை
கன்னியும் வியர்த்தனள் கலங்கி யேயெழீஇப்
பொன்னடி நூபுரம் புலம்பித் தாக்குறத்
தன்னதோ ருறையுளைச் சார வோடினாள்.

(இ-ள்.) அத்தீப்பொறியின் வெப்பத்தைப்பார்த்துச் சிவபெருமானருகிலெழுந்தருளிய உமாதேவியாரும் வியர்த்தவராய் மனங் கலக்கமுற்றெழுந்து அழகியதிருவடியிலணிந்த பொற்சிலம்புகள் சப்தித்து ஒன்றோடொன்று தாக்கும்படி தமது அந்தப்புரத்தைச் சேருதற்கு ஓடியருளினார்.—எ-று.

சிவபெருமானது நெற்றிக்கண்ணி னின்றுந் தோன்றிய தீப்பொறியைக்கண்டு அச்சிவ பரஞ்சுடரின் வேறாகாத உமாதேவியாரும் கலங்கி வியர்த்தனராயின், மற்றையவரைக் குறித்துக் கூறவேண்டா வென்பது கருத்து. (௫௧)

முண்டக முதியமா முன்னர் நின்றுள
வண்டர்கள் யாருமவ் வழல்கண் டஞ்சியே
விண்டனர் தலைத்தலை வெருவி யோடினார்
பண்டெழு விடத்தினாற் பட்ட பான்மைபோல்.

(இ-ள்.) சிவபெருமான் திருமுன்னே நின்றுகொண்டிருந்த பிரமன்முதலாகிய தேவர்களனைவரும், அந்தத்தீப்பொறிகளைப் பார்த்துப்பயந்து, முற்காலத்துத் தோன்றிய ஆலகாலவிஷத்தினால் துன்பமடைந்த தன்மையைபோலப் பிரிந்து வெவ்வேறாக நீங்கிப் பயந்தோடினார்கள்.—எ-று.

இறவா மருந்தாகிய அமுதம் பெறக்கருதித் திருப்பாற்கடலைக் கடைந்த தேவர்கள் அதற்குப் பிரதிகூலமாக விடந்தோன்றப்பெற்று வருந்திய தன்மைபோல, சூராதிகளா லடைந்த துன்பமொழிக்கும்பொருட்டுப் புத்திரனைக்குறித்துப் பிரார்த்தித்த தேவர்கள் அதற்குப் பிரதிகூலமாகத் தீப்பொறி தோன்றப்பெற்று வருந்தினமையின், 'அழல்கண் டஞ்சியே - விண்டனர் தலைத்தலை வெருவி யோடினார் - பண்டெழு விடத்தினாற் பட்டபான்மை போல்' என்று கூறினார். (௫௨)

நீங்கன லடர்தலுஞ் செம்பொற் கோயிலின்
யாங்கணு மாகிய பிரிந்த பண்ணவர்
வீங்கிய வுயிர்ப்பொடு மீண்டு மெந்தைதன்
பாங்கரில் வந்தனர் பரிவு நெஞ்சினார்.

(இ-ள்.) வெப்பம்பொருந்திய அந்த நெருப்புப்பொறிகள் எங்கும் பரவியவளவில், செம்பொன்மயமாகிய திருக்கோயிலின் எவ்விடங்களிலும் விலகியோடியதேவர்கள் வருந்திய மனத்தினை யுடையவர்களாய்ப் பெருமூச்சுடன் பின்னும் எமது சிவபெருமானருகில் வந்து சேர்ந்தார்கள்.—எ-று.

தீங்கனல் - மெலித்தல் விகாரம். (௫௩)

வலைத்தலை மானென வன்னி சூழ்ந்துழித்
தலைத்தலை பிரிந்துளோர் நம்மின் மீள்குறு
நலத்தரு கண்ணுத லுழைச் சேர்ந்தனர்
கலத்தலை யகன்றிடாக் காகம் போலவே.

(இ-ள்.) நெருப்புப்பொறி சூழ்ந்துகொண்டபொழுது வலையிலகப்பட்ட மானைப்போல வெவ்வேறாக ஓடினதேவர்கள் தங்களுக்குள்ளேதிரும்பி, மரக்கலத்தின் சிகரத்தைவிட்டுநீங்காத காகத்தைப்போல, நன்மைமிக்க நெற்றிக்கண்ணராகியசிவபெருமானை யடைந்தார்கள்.—எ-று.

வலையி லகப்பட்ட மான் எவ்விடத்துச் சுழன்றோடினும் அவ்வலைக்குள்ளேயே கிடந்தலைய வேண்டுவது போலத் தீப்பொறிக்குள் ளகப்பட்ட தேவர்கள் விலகிச் செல்வதற்கு வேறிடங் காணாமையின், 'வலைத்தலை மானென' என்றும், மரக்கலத்திற் றங்கிய காக்கைகள் எங்குப் பறந்தோடினும் தாம் தங்குதற்கு வேறிடங் காணாது பின்னும் அம்மரக்கலத்திலேயே வந்து சேர்வதுபோலச் சிவசந்நிதானத்தி னின்றும் பயந்தோடிய தேவர்கள் தங்கட்கு வேறாதரவுகாணாது, பின்னும் அச்சிவபெருமானையே சரணமாக வந்தடைதலின், 'நலத்தரு கண்ணுத லுழைச் சேர்ந்தனர் - கலத்தலை யகன்றிடாக் காகம் போலவே' என்றுங் கூறினார். (௫௪)

தோற்றிய நுதல்விழிச் சுடரின் சூழ்ச்சியுங்
காற்றல ராகிய யடைந்த வானவர்
நாற்றடம் புயமுடை ஞான நாயகற்
போற்றிசெய் திவையன புகல்வ ராயினார்.

(இ-ள்.) நெற்றிக் கண்ணினின்றுந் தோன்றிய நெருப்புப் பொறிகள் பரவியதற்காகச் சகிக்காதவர்களாய்ச்சரணடைந்த தேவர்கள் பெரிய நான்கு திருத்தோள்களையுடைய ஞானமுதல்வராகிய சிவபெருமானைத்துதித்து இவ்வாறுவிண்ணப்பஞ்செய்கின்றவர்களானார்கள்.—எ-று. (௬௫)

வெந்திற லவுணரை வீட்டு தற்கொரு
மைந்தனை யருள்கென வந்து வேண்டினே
மந்தமி லழலினை யருடல் செய்தனை
யெந்தையே யெங்ஙனம் யாங்க ளுய்வதே.

(இ-ள்.) கொடியவல்லமையையுடைய அசுரர்களை அழிக்கும்பொருட்டு ஒரு புத்திரனைத் தந்தருளவேண்டுமென்று வந்து பிரார்த்தித்துக்கொண்டோம்; தேவரீர் முடிவில்லாத அக்கினியை அளித்தருளினீர்; எம்பெருமானே! அடியேங்கள் எவ்வாறுபிழைப்பது.—எ-று. (௬௬)

பங்குறை யுமையவள் பாணி யின்வரு
கங்கையெவ் வுலகமுங் கலந்த தாமென
விங்குநின் னுதல்விழி யிருந்து நீங்கிய
பொங்கழ லெங்கணும் பொள்ளென் றீண்டிய.

(இ-ள்.) தேவரீரது இடப்பாகத்திற் பொருந்திய உமாதேவியாரது திருக்கரத்தினின்றுந் தோன்றிய கங்கையானது எந்த வுலகத்திலும் வியாபித்ததுபோல, இவ்விடத்தில் உமது நெற்றிக்கண்ணினின்றும் வெளிப்பட்ட மிகுந்த நெருப்புப் பொறிகள் எவ்விடத்திலும் விரைந்து பரவின.—எ-று.

பங்குறையுமையவள்பாணியின்வருகங்கை' என்பதன் வரலாற்றைத் தக்ஷகாண்டத்துக்கூறுதலின், ஆண்டுக் காண்க. (௬௭)

கற்றையஞ் சுடர்பொழி கனல்க ளின்றொகை
சுற்றியெவ் வுலகமுந் துவன்ற லுற்றவான்
மற்றொரு கணத்தவை மாற்றி டாயெனின்
முற்றுயிர்த் தொகையையு முடிவு செய்யுமால்.

(இ-ள்.) கூட்டமாகிய அழகிய சுடரைப்பொழிகின்ற நெருப்பின்றொகுதிகள் எவ்வுலகத்திலுஞ் சூழ்ந்து நெருங்கத்தொடங்கின; அவற்றை ஒரு கணப்பொழுதிற்குள்ளே நீக்காதிருப்பீராயின், அவை உயிர்க்கூட்டங்களனைத்தையும் நாசஞ்செய்துவிடும்.—எ-று. (௬௮)

விஞ்சிய பேரழல் வெம்மை யாற்றலா
தஞ்சின மிரிந்தயா மைய நின்னிரு
செஞ்சர ணடைந்தனந் தெரியி னீயலாற்
றஞ்சம துளதுகொ லெம்மைத் தாங்கவே.

(இ-ள்.) எமது ஆண்டவரே! அதிகரித்துவருகின்ற பெரிய அக்கினியின் வெப்பத்தைச் சகிக்கமுடியாமல் பயந்து கலங்கோடிய அடியோங்கள் தேவரீரது இரண்டு திருவடிகளை அபயமாக வடைந்தோம், ஆலோசிக்குமிடத்தில் எங்களைக்காத்தருளுதற்குத் தேவரீரையன்றி வேறே ஆதரவு உண்டோ?—எ-று. (௬௯)

கலக்குறு மனத்தினெம் வருத்த முற்றவு
முலக்குற நீக்குதி யொல்லை யெம்மிடை
யலக்கண தியற்றுதி யாயி னன்னதை
விலக்குறு நீரினர் வேறி யாவரோ.

(இ-ள்.) கலக்கமுற்றிருக்கின்ற மனத்தினையுடைய அடியேங்களது துன்பங்கள் முழுவதுங் கெடும்படி நீக்கியருளுந்தேவரீர் விரைவாக எங்களிடத்தில் துன்பத்தைச் செய்தருளுவீராயின், அதனை நீக்குந்தன்மையினையுடையவர்கள் வேறியாரிருக்கின்றார்கள்.—எ-று. (௪௰)

நிறைமுடிப் பணிமிசை நிலவும் வானமு
மிறைமுடிக் கின்றவிவ் வெரியை நீக்கியே
பிறைமுடிக் கொண்டிடு பெரும வெம்முறைக்
குறைமுடித் தருளெனக் கூறி வேண்டினார்.

(இ-ள்.) இளம்பிறையைத் திருமுடியி லணிந்தருளிய எம்பெருமானே! நிறைந்தமுடியினையுடைய ஆதிசேஷன்மீதிருக்கின்ற நிலவுலகத்தையும் விண்ணுலகத்தையும் கணப்பொழுதில் நாசஞ் செய்கின்ற இந்த நெருப்பைவிலக்கி, எங்களுடைய குறையை முடித்தருளவேண்டுமென்று சொல்லி வேண்டிக்கொண்டார்கள்.—எ-று.

உலகத்தைத் தாங்கும் ஆதிசேட னென்னும் பாம்பானது ஆயிரம் பணாமுடிகளையுடையதாகலான், 'நிறைமுடிப்பணி' என்றார். (௪௧)

அஞ்சலி னவர்புக ழண்ண லாதியோ
ரஞ்சலி செய்திவை யறைந்து வேண்டலு
மஞ்சலி லஞ்சடை யணிந்த நாயக
னஞ்சலென் றுகை யமைத்துக் கூறினான்.

(இ-ள்.) பாஞ்சராத்திரிகளால் புகழப்பட்ட திருமால் முதலிய தேவர்கள் கைகுவித்து வணங்கி இவற்றை விண்ணப்பஞ்செய்து வேண்டிக்கொள்ளவும், அழகிய கங்கைநதியைச் சடைமுடியிலணிந்த சிவபெருமான் அபயாஸ்தமளித்து (நீங்கள்) அஞ்சாதீர்களென்று அருளிச்செய்தனர்.—எ-று.

திருமால் ஐந்திராத்திரியிற் செய்துமுடித்த ஆகமத்தைக் கடைப்பிடித் தொழுகுவோராதலால், 'அஞ்சலினவர்' என்றார். நாரதமுனிவர் ஐந்திராத்திரியிற் செய்த ஆகமத்தை யனுசரித் தொழுகுவோ ரெனினுமாம். (௪௨)

பொன்மலை வில்லினான் புதிதின் வந்திடு
தன்முக மைந்தையுங் கரந்து தாவில்சீர்
நன்முக மொன்றொடு நண்ணி யத்துணைத்
தொன்மையி னியற்கையாய்த் தோன்றி வைகினான்.

(இ-ள்.) மேருமலையாகிய வில்லினையேந்திய சிவபெருமான் புதிதாகத்தோன்றிய தமது ஐந்து திருமுகங்களையு மறைத்துக் கெடாத சிறப்பினையுடைய நல்ல ஒரு திருமுகத்துடன் பொருந்தி அவ்விடத்திற் பழைய முறைமைப்படியே எழுந்தருளியிருந்தனர்.—எ-று. (௪௩)

தன்னரு ளிலைமையாற் சண்மு கத்திடை
நன்னுதல் விழிகளி னல்கு தீப்பொறி
யிந்நில வரைப்புவா னீண்ட லுற்றவை
முன்னுற வரும்வகை முதல்வன் முன்னினான்.

(இ-ள்.) சிவபெருமான் தமது திருவருண்முறைமையினால் ஆறு திருமுகங்களினிடத்துள்ள நல்ல நெற்றிக்கண்களினின்றுந் தோற்றுவித்தருளிய நெருப்புப் பொறிகளாய் இந்நிலவுலகத்திலும் விண்ணுலகத்திலும் வியாபித்திருந்தவைகளைத் தமது திருமுன்னே வரும்படி சிந்தித்தருளினார்.—எ-று. (௧௫)

அந்தியம் பெருநிறத் தமல னவ்வகை
சிந்தைகொண் டிடுவழிச் செறிந்த பேரழன்
முந்தையின் வெம்பொறி மூவி ரண்டவாய்
வந்துமுன் குறுகலு மகிழ்ந்து நோக்கினான்.

(இ-ள்.) செவ்வானம்போலும் பெரிய திருமேனிப் பிரகாசத்தையுடைய சிவபெருமான் அவ்வாறு சிந்தித்தருளியவுடனே எவ்விடத்தும் நிறைந்திருந்த அந்தப் பெரிய நெருப்பானது, முன்போலவே வெவ்விய ஆறு பொறிகளாய் வந்து தமது திருமுன்னே யடையவும், சிவபெருமான் அவற்றை மகிழ்வோடு பார்த்தருளினார்.

ஆதகு காலையி லமரர் தங்களு
ளோதகு செயலிலா வுலவைத் தேவையு
மூதகு தீயையு முகத்தை நோக்குறா
மேதகு கருணையால் விமலன் கூறுவான்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமையத்தில் தேவர்களில் நீங்காத செயலற்றிருக்கின்ற வாயுதேவனையும், முதிர்ந்த தகுதியினையுடைய அக்கினிதேவனையும் முகத்தைப் பார்த்தருளி மிக்க பெருங்கருணையோடு சிவபெருமான் திருவாய்மலர்ந்தருளுவார்.—எ-று.

ஓ-ஓரெழுத்தொரு மொழியாகிய தொழிற்பெயர். இதனை.—"ஓவற விமைக்குஞ் சேண்விளங் கவிரொளி" எனவருந் திருமுருகாற்றுப் படைக்கு நச்சினார்க்கினியர் கூறியவுரை விசேடத்தா னறிக. (௧௬)

நீங்களிச் சுடர்களை நெறியிற் றாங்கியே
வீங்குநீர்க் கங்கையில் விடுத்தி ரன்னவை
யாங்கவள் சரவண மமர வுய்க்குமா
லீங்கிது நம்பணி யென்றி யம்பினார்.

(இ-ள்.) நீங்களிருவரும் இந்த நெருப்புப்பொறிகளை முறைமையாகச் சுமந்து சென்று மிகுந்த நீரினையுடைய கங்கைநதியில் விடக்கடவீர்கள்; அவற்றை அக்கங்கையானவள் சரவணப்பொய்கையிற் பொருந்தும்வண்ணங்கொண்டுபோய்ச் சேர்ப்பாள்; இது உங்கள் தொழிலாகுமென்று அருளிச்செய்தனர்.—எ-று.

கங்கைநதி நீருருவா யிருப்பினும் அவ்வச்சமயங்க டோறும் பெண்ணுருவெடுத்தலான், 'ஆங்கவள்' எனப் பெண்பாலாகக் கூறினார். (௧௭)

கூற்றுயி ருண்டதாட் குழக னிவ்வகை
சாற்றிய துணர்தலுந் தாழ்ந்து மும்முறை
போற்றினர் நடுங்கினர் புலம்பு நெஞ்சினர்
காற்றொடு கனலிவை கழறன் மேயினார்.

(இ-ள்.) (மார்க்கண்டேயர் பொருட்டு) இயமனது உயிரை வாங்கிய திருவடியினையுடைய சிவபெருமான் இவ்வாறு அருளிச்செய்தமையைக் கேட்டவுடனே, வாயுதேவனும் அக்கினிதேவனும் மூன்றுதரந் தாழ்ந்து வணங்கி நடுங்கிப் புலம்புகின்ற மனமுடையவர்களாய் இவற்றைச் சொல்லத்தொடங்கினார்கள்.—எ-று. (௧௮)

ஒருநொடி யளவையி னுலகம் யாவுமாய்ப்
பொருவிய வித்திறல் பெரும நின்னுடைத்
திருவரு ளின்மையாற் றிறுகிற் றாதலா
லரிதரி தடியமோ மாற்ற லாகுமோ.

(இ-ள்.) எமது பெருமானே! ஒரு க்ஷணப்பொழுதாக்குள்ளே உலகமெங்குமாகப் பரவுகின்ற இந்த அக்கினியானது, தேவரீரது திருவருட்டன்மையால் குறுகியது; ஆதலால், இது அடியேங்களால் தாங்குதல் முடியுமோ? இது மிகவும் அருமையாகும்.—எ-று.

முன்னரே தீப்பொறியின் வெம்மைக் காற்றாது நெடுந்தூரம் ஓடி யலுத்து வந்தவர்களாதலால் அப்பொறியைச் சுமந்து செல்லுதற்கு மிகவும் நடுங்கினார்க ளென்பார், ' அரிதரி தடியமோ மாற்ற லாகுமோ ' என்று கூறினர். (சுகூ)

ஈற்றினை யுலகினுக் கிறைக்கு நின்கணே
தோற்றிய கனலினைச் சுமத்தற் கோர்கண
மாற்றலை யுடையரோ வனசி கேள்வனு
நாற்றிசை முகமுடை நளினத் தேவுமே.

(இ-ள்.) உலகத்திற்குச் சங்காரத்தொழிலைச்செய்கின்ற தேவரீரிடத்திலே தோன்றிய இவ்வக்கினியைச் சுமந்து செல்லுதற்கு, பூமிதேவி கணவனாகிய திருமாலும், நான்குமுகங்களையுடைய கமலாசனனாகிய பிரமனும் ஒருக்ஷணப்பொழுதேனும் வல்லமையுடையவர்களாவரோ?—எ-று. (எ0)

பண்டெழு விடத்தினிற் பரந்த தீச்சுடர்
கண்டுறு நின்றிலங் கவலுற் றோடினம்
மண்டவும் வெருவுறு மவற்றை யாந்தலைக்
கொண்டன மேகுதல் கூடற் பாலதோ.

(இ-ள்.) முற்காலத்துக்(கடலில்) தோன்றிய விடத்தைப்போன்று பரவிய நெருப்புப்பொறிகளைப் பார்த்தவுடனே நில்லாமல் மனம் வருந்தி யோடினோம்; அவற்றினருகிற் செல்லுதற்கும் அஞ்சுகின்றோம்; அத்தகைய பொறிகளை யாங்கள் தலையிற் சுமந்து செல்லுதல் முடியுந்தன்மையதோ?—எ-று. (எக)

அப்பெருங் கனலினை யடைதற் குன்னினும்
வெப்புறு மெமதுளம் வியர்க்கும் யாக்கையு
மெப்பரி சேந்துவம் யாங்க ளென்றலுந்
துப்புறழ் படர்சடைப் பகவன் சொல்லுவான்.

(இ-ள்.) அந்தப் பெரிதாகிய தீப்பொறிகளை நெருங்குதற்கு நினைத்தாலும் எங்கள் மனம் வெதும்புகின்றது; தேகமும் வியர்க்கின்றது; ஆதலால், அடியேங்கள் அதனை எவ்வாறு சுமந்து செல்லுவோம் என்று விண்ணப்பஞ்செய்யவும், பவளம் போலும் படர்ந்த சடைமுடியினையுடைய சிவபெருமான் அருளிச்செய்வார்.—எ-று.

ஒன்றொரு கொடியினி னுலக முற்றுமாய்த்
துன்றிய விச்சுடர் சுமந்து கங்கையிற்
சென்றிட நுங்கள்பாற் றிண்மை யெய்துக
வென்றரு ளென்றென விசைந்து போற்றினர்.

(இ-ள்.) ஒரு க்ஷணநேரத்திற்குள் உலகமுழுவதும் வியாபித்த இந்நெருப்புப்பொறிகளைத் தாங்கிக்கொண்டு கங்கைநதியிற் செல்லும்பொருட்டு உங்களிடத்து

வலிமையுண்டாகக்கடவது என்றருளிச்செய்யவும், அவர்கள் அவ்வாறே யாருகவென்று சம்மதித்துத் துதித்தார்கள்.—எ-று. (எங)

மற்றது தெரிதலு மால யன்முதற்
சொற்றிடு மமார்க டுளக்க நீங்குறா
விற்றது கொல்லெமை தின்ன லின்றென
வுற்றன ருவகையை யுடலம் விம்மினர்.

(இ-ள்.) அந்தச்சங்கதி தெரிந்தவுடனே திருமால் பிரமன் முதலாகச் சொல்லப்பட்ட தேவர்கள் நடுக்கமொழிந்து எங்களது துன்பம் இன்றோடே யொழிந்ததென்று சந்தோஷமடைந்தவர்களாய்த் தேகம் பூரித்தார்கள்.—எ-று. (எச)

ஆங்கன மவர்தமை யாதி நோக்கியித்
தீங்கனல் சரவணஞ் செறிந்தொர் செம்மலா
யோங்குபு சூர்கிளைக் கொழிவு செய்யுமா
லீங்கினி யாவரு மேகு வீரென்றான்.

(இ-ள்.) அப்பொழுது அத்தேவர்களைச் சிவபெருமான் பார்த்தருளி, இந்தத் தீப்பொறிகள் சரவணப்பொய்கையையடைந்து ஒரு குழந்தையாகத் தோன்றிச் சூரனது வமிசத்திற்கு நாசத்தை யுண்டுபண்ணும்; ஆதலால், இனி நீங்கள் யாவரும் இவ்விடத்தினின்றுஞ் செல்லக்கடவீர்களென்று திருவாய்மலர்ந்தருளினர்.—எ-று.

இறையவ னினையன வியம்ப வுய்ந்தனங்
குறையில மினியெனக் கூறிக் கஞ்சமே
லுறைபவ னுதியா மும்ப ரன்னவ
னறைகழ லடிதொழு தங்க ணிங்கினர்.

(இ-ள்.) சிவபெருமான் இவைகளைத் திருவாய்மலர்ந்தருளுதலும் தாமரைமலரில் வசிக்கும் பிரமன்முதலாகிய தேவர்கள் நாங்கள் பிழைத்தோம், இனி யொருகுறையு மில்லோமென்று கூறி, அவ்வெம்பெருமானது சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த திருவடிகளை வணங்கி அவ்விடத்தினின்று நீங்கினர்கள்.—எ-று.

சிவபெருமானது கட்டளைப்படி யொழுகின் தடையின்றி யின்ப முண்டாகுமெனத் துணிந்தவர்க ளென்பார், 'உய்ந்தனங் குறையில மினிஎனக்கூறி' என்று கூறினர். (எரு)

முன்னுற மாருதன் முதல்வன் றாள்களை
வன்னியந் தேவொடு வணங்கி யேயெழீஇ
யன்னவ னருளினாற் சுடர்க ளாறையுஞ்
சென்னியின் மேற்கொடு சேறன் மேயினான்.

(இ-ள்.) முதலில் வாயுதேவன் அக்கினிதேவனோடுகூட முதற்கடவுளாகிய சிவபெருமானது திருவடிகளை வணங்கி யெழுந்து அவ்வெம்பெருமானது திருவருளினால் ஆறு நெருப்புப்பொறிகளையுந் தனது தலையிற் சுமந்துகொண்டு செல்லத் தொடங்கினான்.—எ-று. (எஎ)

அரனுறு கடிநக ரதனைத் தீர்ந்தொரா
யெரிகெழு சுடர்முடி யேந்தி மாருதன்
வருதலு மயன்முதல் வானு ளோரெலாங்
கருதரு மகிழ்வொடு கண்டு கூறுவார்.

(இ-ள்.) சிவபெருமான் வீற்றிருந்தருளுங் காவலையுடைய திருநகரத்தை நீங்கிச்சென்று, சுவாலையிருந்த அவ்வக்கினியைத் தலையிற் சுமந்துகொண்டு வாயு தேவன் வரவும், பிரமன்முதலிய தேவர்களனைவரும் சொல்லுதற்கரிய மகிழ்ச்சியுடன் பார்த்துக்கூறுகின்றார்கள்.—எ-று. (எஅ)

செந்தழன் மேனியன் றீயின் வண்ணமாத்
தந்தனன் குமரனைத் தனது கண்ணினு
ளுய்ந்திட யாமெலா முலகின் முன்னரே
வந்திடு வீரனு மதலை மானவே.

(இ-ள்.) சிவந்த அக்கினிவடிவினராகிய சிவபெருமான், நாமனைவரும் உய்யும்பொருட்டு உலகத்தில் முன்பு அவதரித்தருளிய வீரபத்திரராகிய புதல்வரையொப்பாகத் தமது நெற்றிக்கண்ணினிடமாகத் தீயுருவமாய்ப் புதல்வரைத் தந்தருளினர்.

சிவபெருமான் அக்கினி வடிவின ராதலால் தமது புதல்வரையும் அவ்வக்கினி வடிவமாகவே தந்தருளின ரென்பார், 'செந்தழன் மேனியன் றீயின் வண்ணமாத் தந்தனன் குமரனை' என்றும், முன்னஞ் சிவபெருமானிடத்துத் தோன்றிய வீரபத்திரரும் அவ்வக்கினி வடிவமாகவே யுதித்தமையின், 'முன்னரே வந்திடு வீரனு மதலை மானவே' என்றுங் கூறினர். வீரபத்திரர் தோன்றினமையை :—"புவனகோடிகளுந் தீக்கும் புராரிவெஞ் சீற்றத் தீயிற் - கவைபடு சூல வைவேற் காய்சின வீரன் றோன்றி - துவரிதழ்க் கவிவாய்த் தீஞ்சொற் றோகையோர் பங்கன் றாளி - லுவகை யின் வணங்கிச் சூழ்போந் தினையன வுரைக்க லுற்றான்" என்னுங் கூர்மபுராணத்தா னறிக. (எக)

தொன்னிலை யாம்பெறச் சூரன் பாடுற
வின்னமுஞ் சில்பக லிருத்த லாலரன்
றன்னிகர் திருமகன் சரவ ணத்திடை
மன்னுபு குழவியாய் வளர நல்கினான்.

(இ-ள்.) நாமனைவரும், முன்னிருந்தசெல்வத்தைப் பெறவும், சூரபதுமன் அழிவடையவும் இன்னுஞ்சிலகாலம் நீங்கவேண்டியிருப்பதால்,சிவபெருமான் தம்மையொத்த சிறந்தபுதல்வர் சரவணப்பொய்கையிற் பொருந்திக் குழந்தையாக வளரும்படி தந்தருளினர்.—எ-று.

பாடு - அழிவு. (அ0)

போற்றலர் புரமடு புனித நாயக
னாற்றிடு செய்கைக ளருளி னீர்மையா
லேற்றதோர் சான்றிவ னெரியைத் தந்ததுஞ்
சாற்றருங் கருணையிற் றலைமை யானதே.

(இ-ள்.) பகைவர்களது முப்புரங்களையு மெரித்தருளிய மலரகிதராகிய சிவபெருமான் செய்தருளுந் தொழில்களனைத்துந் திருவருளின் தன்மையாலாகும்;இதற்குத் தகுதியாகிய ஒரு சாக்ஷி, இங்கு நெருப்புப் பொறிகளைத் தந்தருளியதும் சொல்லுதற்கரிய தலைமையாகிய கருணையேயாம்.—எ-று.

சிவபெருமானது சகல செய்கைகளும் உயிர்களின்மீது வைத்த கருணையாதலால், இத்தீப்பொறிகளைத் தந்தருளினமையும் அவரது திருவருட்டன்மையே யென்றுணர்த்தன ரென்பார், 'எரியைத்தந்ததுஞ் - சாற்றருங்கருணையிற்றலைமை யானதே' என்று கூறினர். (அக)

என்றிவை பற்பல வியம்பி யின்னினிப்
பொன்றின ரவுணர்கள் புலம்பு நங்குறை
நன்றிவண் முடிந்தது நாமு மந்நடுஞ்
சென்றிடு வாமெனச் செப்பி னாரரோ.

(இ-ள்.) என்று இவ்வாறு பற்பலவாகச் சொல்லிக்கொண்டு, இனிமேல் அசுரர்கள் நாசமானார்கள்; வருந்துகின்ற நமது குறையும் இவ்விடத்து நன்குசமுடிந்தது; நாமும் அந்தச் சரவணப்பொய்கையிற்சென்று சேர்வோமென்று சொல்லிக்கொண்டார்கள்.—எ-று.

இனி அசுரர்க ளிறத்தல் சரதமாகலின் நமது குறையுந் தீரப்பெறுவோமென்று துணிவு கூர்ந்தவர்களாகலின், மேல் நிகழ்வதை நிகழ்ந்ததாகவே கருதித் துணிந்துரைத்தன ரென்பார், 'பொன்றினரவுணர்கள் புலம்புநங்குறை - நன்றிவண் முடிந்தது' என்றுகூறினார். (அஉ)

உருப்பம தாகிய வொளிறு தீஞ்சுடர்
தரிப்பதோர் மருத்துவன் றம்முன் சென்றிடத்
திருப்பயின் மான்முதற் றேவர் வெள்ளியம்
பருப்பத மொருவியே படர்தன் மேயினார்.

(இ-ள்.) வெப்பமுடையதாகிய விளங்குகின்ற நெருப்புப்பொறிகளைத் தாங்கிச்செல்லும் ஒப்பற்ற வாயுதேவன் தங்களுக்கு முன்னேசெல்ல, திருமகள்தலைவனாகிய திருமால்முதலியதேவர்கள் திருக்கயிலாய மலையினின்று நீங்கிச் செல்லத் தொடங்கினார்கள்.—எ-று. (அங)

இறத்தலுங் கன்னலொன் றெரியின் றீஞ்சுடர்
பொறுத்திட லரிதெனப் புலம்பிக் காலினோன்
மறுத்தவிர் பிறைமுடி வரத னாணையாற்
றிறற்படு வன்னிதன் சென்னி சேர்த்தினான்.

(இ-ள்.) ஒருநாழிகைப்பொழுது கழிந்தமாத்திரத்தில் வாயுதேவன் வெவ்விய நெருப்புப்பொறிகளைச் சுமத்தற்கரிதென்று வருந்திக் களங்கமற்ற இளம்பிறையை யணிந்த சிவபெருமானது கட்டளையினால், வலிமைபொருந்திய அக்கினிதேவனுடைய தலையில் சேர்த்தனன்.—எ-று. (அச)

சேர்த்தலு மொருபதந் தீயின் பண்ணவன்
வேர்த்துடல் புழுங்குற மெலிவிற் றாங்கியே
பேர்த்தொரு பதமிடப் பெறாது வல்லைபோ
யார்த்திடு கங்கையி னகத்துய்த் தானரோ.

(இ-ள்.) அவ்வாறு சேர்த்தவளவில் அக்கினிதேவன் ஒருநாழிகைப்பொழுதில் தேகம் வியர்த்துப் புழுக்கங்கொள்ள வருத்தத்துடன் சுமந்துகொண்டுசென்று, பின்பு ஒரு அடிகூட எடுத்துவைக்க முடியாமல் விரைவாகச்சென்று ஒலிக்கின்ற கங்கைநதியிலிட்டனன்.—எ-று.

பதம் - நாழிகை, பாதம். (அரு)

கூர்சுடர்ப் பண்ணவன் கொடுவந் துய்த்திடு
மார்சுடர்த் தொகுதிவந் தடைய மூவெயி
லூர்சுடச் சிவந்தகண் ணொருவன் றுப்புறழ்
வார்சடைக் கரந்தென வறந்த கங்கைநீர்.

(இ-ள்.) மிக்க சுடரினையுடைய அக்கினிதேவன் கொண்டுவந்து செலுத்திய அருமையாகிய நெருப்புப்பொறிகள் வந்து பொருந்தியவுடனே, அக்கங்கைநீரானது முப்புரங்களை யழிக்கும்பொருட்டுச் சிவந்த கண்ணினை யுடைய ஒப்பற்ற சிவபெருமானது நீண்ட சடையில் முன்பு மறைந்ததுபோல வற்றியது.—எ-று. (அசு)

அரனருண் முறையினை யறிந்து கங்கைதன்
சிரமிசை யேந்தியே சென்றோர் கன்னலிற்
சரவண மெனுந்தடந் தன்னிற் சேர்த்தனள்
மரையிதழ் மாயிடை மல்குற் றுலென.

(இ-ள்.) சிவபெருமானது திருவருண் முறைமையை யுணர்ந்து கங்கையானவள் தன் சிரத்தில் தாங்கிக்கொண்டு சென்று ஒரு நாழிகையில் சரவணமென்னும் பெயரையுடையபொய்கையில் அங்குத்தாமரைமலர்கள் நிறைந்திருப்பதுபோல விளங்கும்படி சேர்த்தனள்.—எ-று.

மரை - தாமரை என்பதன் முதற்குறை. (அஎ)

அவையின் காலும்வெந் தரிய யன்முதற்
றேவர்க ளுவகையாற் றெரிந்து சூழ்ந்தனர்
மேவர வரியதாம் விளைவு நாடியே
காவல்கொ ளிரப்புடைக் காதலோரென.

(இ-ள்.) திருமால் பிரமன்முதலிய தேவர்கள் அவ்விடம் வரையிலும் வந்து சந்தோஷத்தினால் அறிந்து, பலன் கைகூடுதற்குச்சமீபித்ததாகவுள்ள விளைவின்பக்குவத்தையுணர்ந்து ஆசையோடு காக்கின்ற தரித்திரர்களைப்போலச் சூழ்ந்து காத்திருந்தார்கள்.—எ-று. (அஅ)

ஆரணன் விண்ணக மச்சு தன்புவி
வாரணன் முதலிய மாதி ரத்துளோர்
ஏரண வமரர்க ளெண்டிக் காகியே
சீரணி சரவணஞ் சேர்ந்து போற்றினர்.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய சரவணப்பொய்கையை யடைந்து, பிரமன் ஆகாயத்திலும், திருமால் பூமியிலும், இந்திரன் முதலிய அஷ்டதிக்குப்பாலகர்களும் அழகுபொருந்திய தேவர்களும் அஷ்டதிக்குகளிலுமாக அடைந்திருந்துக் காவல் செய்திருந்தார்கள்.—எ-று. (அகூ)

வேறு.

கங்கையு மோல்கப் புக்க கடுங்கனற் கடவுட் சோதி
யங்கிரு மூன்று முன்ன ரம்மைவா ழிமையச் சாரற்
றங்கிய கமலம் பூத்த சரவணம் புகலு முக்கட்
புங்கவ னருளாற் றொன்மை போன்றது வறந்த லின்றி.

(இ-ள்.) கங்கைநதியும் வற்றும்படிசேர்ந்த கடுமையாகிய வெப்பத்தினையும் தெய்வத்தன்மையினையும் ஒளியினையுமுடைய ஆறுபொறிகளும் முன்பு உமாதேவியார் எழுந்தருளியிருந்த இமையமலைச்சாரலிற் பொருந்திய தாமரைமலர்கள் மலர்ந்துள்ள சரவணப்பொய்கையிற் சென்றுசேர்தலும், மூன்று கண்களையுடைய சிவபெருமானது திருவருளினால், (அக்கங்கைநதியானது) வற்றாமல் முன்போலிருந்தது. (கூ0)

விண்ணிடை யிழிந்த காலின் மேவரு கனலிற் றோன்றும்
வண்ணவொண் கமலஞ் செய்ய முளரியை மாற தாகத்

தன்னளி யோடு நல்கித் தரித்தெனச் சரவ ணப்பேர்க்
கன்னகன் பொய்கை யீசன் கட்டழன் மிசைக்கொண் டன்றே

(இ-ள்.) ஆகாயத்தினின்றுந்தோன்றிய வாயுவில் உற்பத்தியாகிய அக்கினி யிலே உண்டாகிய அழகிய வெள்ளிய நீரானது சிவந்த அக்கினியை (அத்தோற்றத்தி ற்கு) விரோதமாகத் தண்ணிய கிருபையோடு முண்டாக்கித் தன்னிடத்தில் வைத்துக் கொண்டதன்மையைப்போலச் சரவணமென்னும்பெயரினையுடைய இடமகன்ற தடா கமானது சிவபெருமானுடைய நெற்றிக்கண்ணிற்றோன்றிய நெருப்புப்பொறிகளைத் தன்மேல் தரித்துக்கொண்டது.—எ-று.

தத்துவத் தோற்றத்தில் ஆகாயத்தின்கண் வாயுவும்,வாயுவில் தேயுவும், தேயு வில்அப்புவும், அப்புவில் பிருதிவுந் தோன்றுதல் முறைமை ; ஆகவே, ஈண்டுச் சரவ ணப்பொய்கை நீரில் சிவபெருமானது நெற்றிக்கண்ணிற் றோன்றிய அக்கினிப்பொறி கள் தங்கியிருத்தல், அத்தத்துவத் தோற்றத்திற்கு மாறாக அப்புவில் தேயுதோன்றிய தன்மைபோன்றிருந்த தென்க. (கக)

அருவமு முருவு மாகி யநாதியாய்ப் பலவா யொன்றாய்ப்
பிரமமாய் நின்ற சோதிப் பிழம்பதோர் மேனி யாகக்
கருணைகூர் முகங்க ளாறுங் கரங்கள்பன் னிரண்டுங் கொண்டே
யொருதிரு முருகன் வந்தாங் குதித்தன னுலக முய்ய.

(இ-ள்.) அருவமாகவும் உருவமாகவும், அநாதியாகவும் பலவாகவும் ஒன்றா கவும் பிரமமாகவு மிருக்கின்ற சோதிப்பிழம்பாகிய சிவபெருமான் ஒரு திருமேனியா கச் சகளீகரித்துக் கருணைபொருந்திய ஆறுதிருமுகங்களையும் பன்னிரண்டு திருக்கர ங்களையுங் கொண்டு உலகத்தார் கடைத்தேறும்பொருட்டு ஒப்பற்ற அழகிய முருகக் கடவுளாக வந்து அவதரித்தருளினார்.—எ-று.

அருவமுதலிய பதி யிலக்கணங்களையுடைய சோதிப்பிழம்பாகிய சிவபெரு மானே சூராதியரை யழித்து அரிபிர மேந்திராதி எல்லா வுயிர்களையுங் காத்தருளுதற் பொருட்டு ஆறு திருமுகமும், பன்னிரண்டு திருக்கரங்களையுங் கொண்டு சரவணப் பொய்கையிற் றோன்றி யருளின னென்க. (கஉ)

தோன்றல்வந் திடலும் விண்பாற் றுந்துபி கறங்க லுற்ற
வான்றதொன் மறைக ளெல்லா மார்த்தன வயனு மாலும்
வான்றிகழ் மகத்தின் றேவு முனிவரு மலர்க டூவி
யேன்றெமை யருளு கென்றே யேத்திசை யெடுத்துச் சூழ்ந்தார்.

(இ-ள்.) இவ்வாறு முருகக்கடவுள் அவதரித்தருளவும், ஆகாயத்தில் தேவ துந்துபிகள் முழங்கின ; விசாலித்த பழைமையாகிய வேதங்களனைத்து மாரவாரித் தன ; பிரமனும் விஷ்ணுவும் சுவர்க்கத்தில் விளங்குகின்ற யாககருத்தாவாகிய இந்தி ரனும் முனிவரர்களும் மலர்களை யிறைத்து எம்மை யடிமையாக வேற்றுக் காத்தரு ள்வீராகவென்று துதித்துக்கொண்டு சூழ்ந்தார்கள்.—எ-று. (கங)

ஏவர்தம் பாலு மின்றி யெல்லையி ரமலற் குள்ள
மூவிரு குணனுஞ் சேய்க்கு முகங்களாய் வந்த தென்னப்
பூவியல் சரவ ணத்தண் பொய்கையில் வைகு மைய
னுவிக ளருளு மாற்று லறுமுகங் கொண்டா னன்றே.

(இ-ள்.) வேறே யாவரிடத்து மில்லாமல், அழிவற்றவராகிய சிவபெருமானி டத்துப் பொருந்திய ஆறுகுணங்களும் இத்திருக்குமாரருக்கு ஆறு முகங்களாக வந்த

ரென்று சொல்லும்படி, புஷ்பங்கள் பொருந்திய குளிர்ந்த சரவணப்பொய்கையில் எழுந்தருளிய முருகக்கடவுள் ஆன்மாக்களை இரட்சித்தருளும்பொருட்டு ஆறு திருமுகங்களை யடைந்தருளினர்.—எ-று.

அமலற்குள்ள மூவிரு குணங்களாவன :—சர்வஞ்ஞத்துவம் - சர்வேச்சுரத்துவம் சர்வஞ்ஞ நிருத்துவம். சர்வாந்தரியாமித்துவம்-சர்வகற்பிதத்துவம் சர்வசத்தித்துவம் என்பவைகள். அன்றி, தன்வயத்தனாதல் - முதலிலனாதல் உடம்பில னாதல்-எல்லா நலமுளனாதல்-எங்கும்வியாபகனாதல்-எவற்றிற்குங்காரணனாதல் எனவுமாம். அன்றியும், இச்சை-ஞானம்-கிரியை-ஆதி - பரை-குண்டலி என்னும் ஆறுசத்திகளும் ஆறுமுகங்களாக வந்தனவெனக் கூறுதலுமொன்று இதனை :—அண்ட கோடிகளுடன் றந்தவுடல் யாவையு மரியமறைமுதல கலேயு - மக்கரமு மெய்ப்பதமு மைங்கலேயு மந்திரமு மானபத கதியும்வாக்கு - மண்டி யுண்டாகவரு குண்டலியொ டைஞ் சத்தி மாமுகமெனப்படைத்த-வள்ளிநாயகன்'' எனவரும் அருள்வாக்கானறிக. (௧௪)

மல்லலம் புவனத் துள்ள மன்னுயிர்க் கணங்கட் கெல்லா
மொல்லேயின் மகிழ்ச்சி யெய்தி யுவகையின் குறிப்புண் டான
தொல்லேயி லவுண னாகுஞ் சூரனே முதலா வுள்ள
வெல்லவர் தமக்கு மாயு மிருங்குறிப் புற்ற வந்நாள்.

(இ-ள்.) அக்காலத்தில் வளப்பமிக்க அழகிய உலகத்திலுள்ள நிலைபெற்ற உயிர்க்கூட்டங்களுக்கெல்லாம் விரைவாக மகிழ்ச்சியுண்டாகி (இனி யடையவேண்டுவதாகிய) சந்தோஷக்குறிப்புண்டாயின. பழைமைபொருந்திய அசுரனாகிய சூரபதுமன் முதலிய அனைவருக்குஞ் சாவுக்குரிய பெரிய குறிப்புகளுண்டாயின.—எ-று.

நிமித்தங்களெல்லாம் உயிர்களுக்கு வரப்போகின்ற நன்மை தீமைகளைப் பகுத்துக் காட்டுகின்ற முறைமைப்படி, ஸ்ரீகுமாரக்கடவுளது திருவவதார விசேஷத்தால் திருமால் முதலிய தேவர்களுக்கு நன்னிமித்தமும்,அசுராதியர்களுக்குத் துன்னிமித்தமுந் தோன்றின வென்க. நன்னிமித்தம் வலத்தோள் துடித்தல் முதலியன. துன்னிமித்தம் - இடத்தோள் துடித்தல் முதலியன. (௧௫)

மறைகளின் முடிவால் வாக்கான் மனத்தினு லளக்கொ ணுமை
யிறைவுடன் யாண்டு மாகி நின்றிடு நிமல மூர்த்தி
யறுமுக வுருவாய்த் தோன்றி யருளொடு சரவ ணத்தின்
வெறிகமழ் கமலப் போதின் வீற்றிருந் தருளி னுனே.

(இ-ள்.) வேதங்களின் முடிவினாலும், வாக்கினாலும், மனத்தினாலும் அளவிட முடியாமல் எவ்விடத்தும் பூரணமாக விளங்கிநிற்கின்ற மலரகிதராகிய சிவபெருமான் கருணையுடன் சண்முகரூபமாகத்தோன்றியருளிச் சரவணப்பொய்கையில் நறுமணங்கமழுந் தாமரைமலரில் வீற்றிருந்தருளினர்.—எ-று.

சிவபெருமான் மனோவாசாமகோசரராகவும் பரிபூரணராக வும்விளங்குதலால், 'மறைகளின் முடிவால் வாக்கான் மனத்தினு லளக்கொ ணுமை - யிறைவுடன் யாண்டு மாகி நின்றிடு நிமல மூர்த்தி' என்றார். இதனை :—மறையினு லயனுன் மாலான் மனத்தினல் வாக்கான் மற்றுங்-குறைவிலா வளவை யாலுங் கூறெணு தாகி நின்ற - விறைவனர்'' என்னுஞ் சிவஞானசித்தியாரா னறிக. (௧௬)

பாங்குறு தருக்சூழ் காலாப் பஃறலைழச் சினைமென் கொம்பர்
நீங்கறப் புடைபோய் வானி னிரந்தன பந்த ராகத்

தூங்கிய பழமுங் காயுந் துணர்களு மகத்துட் டுன்ன
வாங்குத நடுவட் பொய்கை யணிநிழ லமர்ந்தா னையன்.

(இ-ள்.) பக்கங்களிற்பொருந்திய விருக்ஷங்கள் சூழ்ந்துள்ள கால்களாகவும், பலவாகிய தழைகளையுடைய கிளைகளிலுள்ள மெல்லியகொம்புகளாய் இடைவிடாமல் பக்கங்களிற்சென்று ஆகாயத்தில் பரவியுள்ளவைகளே பந்தலாகவும், தொங்குகின்ற பழங்களுங் காய்களும் பூங்கொத்துக்களும் உள்ளிடத்திற் பொருந்த அதன் நடுவிலுள்ள சரவணப்பொய்கையின் அழகிய நிழலில் முருகக்கடவுள் எழுந்தருளியிருந்தனர்.

முடிபொறா தசையு நாகர் முதியகால் பலகை வையந்
தொடர்கரை மரனே மேல்வானந் தூங்குபன் னுணர் தெள்ளீர்த்
தடமலர்ப்பாய லாகச் சரவண மஞ்ச மீதி
லடைதரு மைந்தன் மென்கா லசைப்பவீற் றிருந்தா னன்றே.

(இ-ள்.) (பூமியைச்சுமத்தற்கு) முடிபொறாமல் அசைகின்ற சர்ப்பங்களே முதிர்ந்த கால்களாகவும், பூமியே பலகையாகவும், கரையில் பொருந்திய மரங்களே மேல் கட்டப்பட்டுள்ள மேற்கட்டியாகவும், தெளிவாகிய நீர்த்தடாகமானது புஷ்ப சயனமாகவுமுள்ள சரவணமென்னுங் கட்டிலில் எழுந்தருளிய குமாரக்கடவுள் மெல்லிய தென்றற்காற்று அசைக்கும்படி வீற்றிருந்தருளினர்.—எ-று. (௧௮)

என்பெரு நாகர் சேட னேந்தெழி லரிமா னாசந்
தன்பொலி புனற்பூம் பொய்கை தவிசுரு வாக நாள்கோள்
விண்படர் விதான மாக வேலையந் தலைவன் காலை
யொன்பக லாடி காட்ட வுமைமக னங்க ணுற்றான்.

(இ-ள்.) பெரிய அஷ்டமாநாகங்களும் ஆதிசேஷனும் தாங்குகின்ற அழகிய சிங்கங்களாகவும், குளிர்ந்த நீரையுடைய அழகிய சரவணப்பொய்கையானது ஆசனமாகவும், நக்ஷத்திரங்களுங் கிரகங்களும் மேலே படர்ந்த விதானமாகவும் (விளங்கிய சிங்காசனத்தில்) கடற்றலைவனாகிய வருணதேவன் உதயகாலத்தில் சூரியனாகிய கண்ணாடியைக் காட்டும்வண்ணம் பார்வதி புத்திரராகிய முருகக்கடவுள் அங்கு எழுந்தருளியிருந்தார்.—எ-று.

திருப்பள்ளியெழுச்சியின்போது மங்கலகரமாகக் கண்ணாடியைக் காட்ட வேண்டுவது முறைமையாகலான், வருணராசன் சூரியனாகிய கண்ணாடியைக்காட்டினனென்க. (௧௯)

தரணியி னடுவண் வைகுஞ் சரவணப் பொய்கை தன்னில்
விரைசெறி கமலப் போதில் வீற்றிருந் தருளுஞ் செவ்வேள்
பெருவடி வமைந்த மாயன் பிறங்கிய மனத்திற் றண்ணெனன்
றெரிசுடர் விளக்கத் துச்சி யிருந்திடு மீசன் போன்றான்.

(இ-ள்.) பூமியின் மத்தியிற் பொருந்திய சரவணப்பொய்கையில் நறுமணங்கமழுந் தாமரைமலரின்கண் வீற்றிருந்தருளிய முருகக்கடவுள், பெரிய திரிவிக்கிரமாவதாரங்கொண்ட விஷ்ணுவினது விளங்குகின்ற இருதயகமலத்தில் குளிர்ச்சியாக சுவாலிக்கின்ற ஞானதீபத்தின் சிகரத்தில் எழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானை யொத்திருந்தனர்.—எ-று.

இதில், பூமியே திருமாலாகவும், அப் பூமியின் நடுவிற் பொருந்திய சரவணப்பொய்கையே அவரது இதயமாகவும், அப்பொய்கையில் மலர்ந்துள்ள தாமரைமலரே அவரது இதயத்திற் பொருந்திய ஞானதீபமாகவும், அம் மலரி லெழுந்தருளிய

குமாரக்கடவுளே அந்த ஞானதிபத்திருச்சியிற் பொருந்திய சிவபெருமானாகவும் உவமித்துக்கூறினமையுணர்க. (௧௦௦)

பொருந்தலை நடுவ ணாகிப் பிறங்கிய சரவ ணத்தி
விருந்தனிக் கமல மொன்றிற் குமரவே ளிருந்த பான்மை
திருந்துநல் லண்டப் புத்தேள் சிந்தையாம் புண்ட ரீக
புரந்தனில் விரும்பித் தாதை வைகிய வியற்கை போலும்

(இ-ள்.) பெரிய நிலவுலகத்தின் மத்தியில் விளங்குகின்ற சரவணப்பொய்கையில் ஒப்பற்ற பெரிய ஒரு தாமரைமலரில் முருகக்கடவு ளெழுந்தருளியிருந்த தன்மை, சிறந்த விராட்புருஷனது இருதயமாகிய புண்டரீகபுரத்தில் தமது பிதாவாகிய சிவபெருமான் விரும்பி வீற்றிருந்தருளிய தன்மையை யொத்திருக்கும்.-எ-று.

'திருந்துநல் லண்டப் புத்தேள் சிந்தையாம் புண்டரீக புரம்' என்றது, ஸ்ரீ சிதம்பரத்தை. இதனை:—"திருவளா ரூரூர் மூலந் திருவானைக் காவே நாபி-மருவளர் பொழில்சூ ழண்ணா மலைமணி பூர நீவி - திருவருங் கண்ட மன்ற மிதயமாம்" என்னுந் திருவிளையாடற்புராணத்தானும், "விண்டலமே போற்றும் விராட்புருட னிதய - புண்டரிக மான புலியூரோ" என்னும் புலியூர்வெண்பாவானு மறிக. (௧௦௧)

பாசிலை பரவித் துள்ளி படுவன வுடுவைப் பாக
வீசுசை லலங்கா ராக வேறுசூழ் கமல மெல்லா
மாசறு பகலோ ராக வைற்றிடை மலர்ந்த கஞ்சந்
தேசுடை யிரவி யாகச் சிவனெனச் சேயங் குற்றான்.

(இ-ள்.) பச்சிலைகளில் நீர்த்துளிகள் சிந்திப் பரவியிருத்தல் நக்ஷத்திரமண்டலமாகவும், அசைகின்ற கொடிப்பாசிகள்மேகமண்டலமாகவும், அவற்றிற்குவேறாகச் சூழ்ந்திருக்கின்ற தாமரைமலர்கள் சூரியர்களாகவும், அவற்றின் மத்தியில் மலர்ந்திருக்கின்ற தாமரைமலரானது ஒளிபொருந்திய சூரியனாகவும், (அச்சூரியமண்டலத்தி லெழுந்தருளியிருக்கின்ற) சிவபெருமானைப்போல முருகக்கடவுள் அத்தாமரைமலரி லெழுந்தருளியிருந்தார்.—எ-று.

துளி என்பது துள்ளி என விகாரம்பெற்றது. (௧௦௨)

மாலய னெழிலி மேலோன் வானவ ரேனோர் யாரும்
பாலுற மரனு மாவும் பறவையும் பிறவுஞ் சூழ
வேலுறு குமரன் கஞ்சத் திருந்தது பரம னாதிக்
காலயி னுயிர்க ளல்கிக் கமலமே லிருத்தல் போலும்.

(இ-ள்.) திருமாலும், பிரமனும், மேகவாகனனாகிய இந்திரனும், தேவர்களும், மற்றை யாவர்களும் பக்கத்திற் பொருந்தவும், விருக்ஷங்களும், மிருகங்களும், பறவைகளும்,மற்றவைகளுஞ் சூழவும், தகுதியாகிய முருகக்கடவுள் தாமரைமலரிலெழுந்தருளியிருந்ததன்மை, சிவபெருமான் பிரதமசிருஷ்டியில் உயிர்களைச் சிருஷ்டித்துத் தாமரைமலரில் வீற்றிருந்தருளிய தன்மையை யொத்திருக்கும்.—எ-று.

குமாரக்கடவுள் சராசரங்களாகிய எல்லா வுயிர்வர்க்கங்களுந் தம்மைச் சூழும்படி தாமரைமலர்மேலெழுந்தருளியிருத்தல், சிவபெருமான் பிரதமசிருஷ்டியிலே எல்லாவுயிர்களையும் படைத்துப்பதும பீடத்தெழுந்தருளியிருந்ததன்மைபோன்றிருந்ததென்க. (௧௦௩)

சலங்கிளர் தரங்கத் தெய்வச் சரவணக் கமலப் போதி
னலங்கிளர் குமரன் சேர்த லுன்முகத் திறைமேல் விட்டிப்

புலங்கிளா ருயிர்க ளைல்கப் பொருந்துநற் பகலின் முன்ன
மிலங்கெழிற் பதும பீடத் தேறிய வியற்கை போலும்.

(இ-ள்.) நீரோடு விளங்குகின்ற அலைகளையுடைய தெய்வத்தன்மைபொருந்திய சரவணப்பொய்கையில் தாமரைமலரின்மேல் நன்மைமிக்க குமாரக்கடவுள் எழுந்தருளியிருத்தல், பிரமனைச் சிறையிலிட்டு அறிவினையுடைய உயிர்களைச் சிருட்டிக்கும்பொருட்டு எழுந்தருளியிருக்கவேண்டிய நல்ல தினத்திற்கு முன்னமே விளங்குகின்ற அழகிய கமலாசனத்தி லெழுந்தருளியிருந்ததன்மையை யொக்கும்.—எ-று.

புலங்கிளருயிர்கள்—ஓரறிவுமுதல் ஐயறிவீறாகவுள்ள உயிர்கள்; அவை :—" புன்மரமுதலவுற்றறியுமோரறிவுயிர் " " மூரணந்தாதிநாவறிவொடீரறிவுயிர் " " சிதலெறும்பாதிமூக்கறிவின் மூவறிவுயிர் " " தும்பிவண்டாதிகண்ணறிவினாலறிவுயிர் " " வானவர்மக்கணரகர்விலங்குபுள்-ளாதிசெவியறிவோ டையறி வுயிரோ " என்றும் நன்னூற் சூத்திரங்களானறிக. (௩௦௪)

முண்டக மொன்றில் வைகு முருகனைச் சுற்றிச் செங்கேழ்
வண்டுளர் கமலக் காடு வான்புனற் றடத்தி னிற்ற
லண்டர்கள் முதல்வ வோர்பா லன்றியெம் மெல்லாம் பீடங்
கொண்டருள் முறையி னென்று நோற்றிடுங் கொள்கைத் தன்றே.

(இ-ள்.) ஒரு தாமரைமலரிலெழுந்தருளியிருக்கின்ற முருகக்கடவுளைச் சூழ்ந்து வண்டுகள் மொய்க்கின்ற தாமரைமலர்க் காடானது சிறந்த நீரையுடைய சரவணப்பொய்கையிலிருத்தல், (எதுபோலுமெனின்,) தேவர்கள் தலைவராகிய எமதாண்டவரே ! தேவரீர் ஓரிடத்திலிருத்தலைவிட்டு முறைப்படி எங்களையெல்லாம் ஆசனமாகக் கொண்டருளுமென்று தவஞ்செய்யுந்தன்மைபோன் றுள்ளது.—எ-று.

அணங்குசெய் தோற்றத் துப்பி னயிர்சுடர்க் குமரற் சூழ
மணங்கிளர் கமலக் காடு மலர்ந்தன வவனைச் சேர்வான்
றணங்கெழு புனலிற் புக்குந் தபனன்மே னாட்டஞ் சேர்த்தி
நுணங்கிடை மடவார் பல்லோர் நோற்றவ ணிற்றல் போலும்.

.(இ-ள்.) அழகைச் செய்கின்ற தோற்றத்தினையுடைய பவளம்போன்று விளங்குகின்ற ஒளியினையுடைய குமாரக்கடவுளைச் சுற்றிலும் நறுமணங்கமழுந் தாமரைமலர்க்காடு வளர்ந்திருத்தல் (எதுபோலுமெனின்,) துவளுகின்ற இடையினையுடைய பலமாதர்கள் அக்கடவுளை யணையும்பொருட்டுக் குளிர்ச்சியும் அழகுமிக்க நீரில் புகுந்து சூரியன்மேல் விழிகளைச்செலுத்தி அங்குத் தவஞ்செய்து நிற்பதை யொத்திருக்கும்.—எ-று.

தணங்கெழுபுனல் - தண் அம் கெழு புனல் எனப்பிரிக்க. (௩௦௬)

ஒண்ணகை யுயிர்க்குஞ் சங்க மொருசில கமலம் வைகத்
தண்ணறு நறவைப் பல்லோர் டாமரை பரித்துச் சூழ்த
லண்ணலம் பொய்கை தற்சே ரறுமுகப் பிள்ளை துய்ப்ப
வெண்ணெயுஞ் சங்குஞ் சூழ விட்டது போலு மன்றே.

(இ-ள்.) ஒள்ளிய பிரகாசத்தை வீசுகின்ற ஒப்பற்ற சில சங்குகள் தாமரைமலரில் சேர்ந்திருக்க, குளிர்ச்சிபொருந்திய தேனினைப் பல தாள்களையுடைய தாமரைகள் தாங்கிநிற்பது, (எதுபோலுமெனின்,) பெருமைமிக்க அழகிய சரவணப்பொய்கையானது தன்னிடத்தடைந்துள்ள ஆறு திருமுகங்களையுடைய குமாரக்கட

வுள் உண்ணும்பொருட்டு, எண்ணெயையுஞ் சங்கையுஞ் சூழவைத்திருப்பதையொத்திருக்கும்.—எ-று.

தடாகத்தில் சங்கும், மலர்களில் தேனும்பொருந்தியிருத்தல் குமாரக்கடவுளாகிய குழந்தைக்கு ஊட்டுவதற்குப் பாலடைச்சங்கும் எண்ணெயுஞ்சூழவைத்திருத்தல் போன்றிருந்தனவென்க. (௧0௭)

ஆரமும் வனசத் தோடு மணிமக ரந்தச் சேறும்
பேரியம் பூந்தண் டேனு முறைமுறை வீசிக் கையாற்
சேரவே கொண்டு மேலோன் றிருவடி திளைப்ப வுய்த்தல்
வாரியந் தடாக மன்பால் வழிபடும் வண்மை போலும்.

(இ-ள்.) முத்துக்களும் தாமரையிதழ்களும் அழகியமகரந்தக்குழம்பும் நறுமணங்கமழும் அழகிய மலரிலுள்ள குளிர்ந்ததேனும் வரிசை வரிசையாக அலையாகிய கரங்களால் ஒருசேரக்கொண்டு முருகக்கடவுளது திருவடிகளில் பொருந்தும்படி சேர்த்தல், (எதுபோலுமெனின்) நீரையுடைய அழகிய சரவணப்பொய்கையானது அன்புடன் பூசனைசெய்யுந்தன்மையை யொத்திருக்கும்.—எ-று.

வாரி - நீர். (௧0௮)

பங்கயச் செம்மற் போது பதனழிந் தவிழ்ந்து பாங்க
ரங்குள விலைமேல் வீழ வவைபுறத் தசைபு நீர்மை
சங்கரன் குமாற் சூழச் சரவணம் பசம்பூந் தட்டிற்
றுங்கநல் விளக்க மாட்டித் திரைக்கையாற் சுலவல் போலும்.

(இ-ள்.) தாமரையினது பழம்பூவானது பதனழிந்து கட்டுவிட்டு அருகிலுள்ள இலையின்மீது விழ, அவைகள் வெளியிலசைந்துகொண் டிருக்குந்தன்மை, (எதுபோலுமெனின்) சரவணப்பொய்கையானது சிவகுமாரராகிய முருகக்கடவுளைச் சூழப் பசியபூந்தட்டில் உயர்வாகிய நல்லதீபங்களையேற்றி அலைகளாகிய கைகளால் சுற்றுதலையொத்திருக்கும்.—எ-று.

செம்மற்போது - பழம்பூ. (௧0௯)

காசுறழ் பதுமப் போது களாசிய தாக மீச்செல்
பாசடை கவிகை யாகப் பலநனை விளக்க மாக
வீசிகள் கவரி யாக மிழற்றுபுள் ளியம தாக
மாசறு பொய்கை செய்க்கு வளம்பட வொழுகிற் றன்றே.

(இ-ள்.) மாணிக்கம்போன்ற தாமரைமலர் காளாஞ்சியாகவும், மேலேயுயர்ந்த பச்சிலைகள் குடைகளாகவும், பல அரும்புகள் தீபங்களாகவும், அலைகள் சாமரங்களாகவும். சப்திக்கின்ற பறவைகள் வாத்தியமாகவுங்கொண்டு குற்றமற்ற சரவணப்பொய்கையானது குமாரக்கடவுளுக்குச் செவ்வையாக உபசரித்தது.—எ-று.

சிறந்த நிலைமையினையுடையவர்கட் குபசாரஞ் செய்வோர், காளாஞ்சியேந்தல் - குடைபிடித்தல் முதலிய வுபசாரங்களைச் செய்வது முறைமையாதல் பற்றி, இச்சரவணப்பொய்கையும் குமாரக்கடவுளுக்குப் பதுமப்போது முதலியவற்றா லுபசரித்ததென்க. களாசி - காளாஞ்சி. (௧௧0)

அழனிவந் தன்ன கஞ்சத் தகன்றடத் திரைக ளுப்ப
லூழிபட ராது சூழ்வோங் குலவுவ தானை நீரால்
விழுமிய குமரன் பொய்கை வெளியுறு தமர ரிட்ட
வெழினிகள் புடையே மென்கா லெறிதலி னிரட்டல் போலும்.

(இ-ள்.) அக்கினியானது மேலோங்கியதுபோன்ற தாமரைமலரையுடைய அகன்ற தடாகத்தினது அலைகள் வஸ்திரத்தின் தன்மையாக நடுவிற் செல்லாது சூழ்ந்து உலாவுதல், (எதுபோலுமெனின்) மேன்மைபொருந்தியகுமாரக்கடவுள் தடாகத்தில் தெரியாதிருக்கும்படி தேவர்களா லிடப்பட்ட திரைச்சீலைகள் பக்கங்களில் மெல்லிய காற்றுவீசுதலினால் அசைதலை யொத்திருக்கும்.—எ-று. (௧௧௧)

கொன்படை சேவ லாகு மெனவொரோர் கோடி யீசன்
றன்பெருங் குமாரற் சூழ்த் தடத்தினின் மிழற்ற லெந்தை
பொன்பிறழ் பதுமன் செய்கை புரியுநா ளூர்தி யாவ
லென்புடை யிருத்தி யென்றே தமித்தமி யிரத்தல் போலும்.

(இ-ள்.) பெருமைபொருந்திய ஒருகோடி அன்னங்கள் சிவபெருமானது பெருமையமைந்த திருக்குமாரரைச்சூழ்ந்துகொண்டு தடாகத்தில் சப்தித்தல், (எது போலுமெனின்) எமது பிதாவே! தேவரீர் பொன்போல் விளங்குகின்ற தாமரை மலரிலிருக்கின்ற பிரமனது சிருட்டித் தொழிலைச் செய்யுங்காலத்தில் அடியேன் வாகனமாகவிருப்பேன், ஆதலால், என்மீது எழுந்தருளுவீரென்று தனித்தனியே பிரார்த்தித்தலையொத்திருக்கும்.—எ-று. (௧௧௨)

வளஞ்செறி யினைய பாலால் வான்சர வணமாம் பொய்கைத்
தளஞ்செறி பதும மொன்றிற் சராசரம் யாவும் காப்பா
னுளஞ்செறி கருணை யெய்தி யொப்பிலாக் குமர மூர்த்தி
யிளஞ்சிறு மதலை போல வினிதுவீற் றிருந்தான் மன்னோ.

(இ-ள்.) வளப்பமிக்க இத்தன்மையினவாகப் பெரிய சரவணமென்னும் பொய்கையில் இதழ்கள் நெருங்கிய ஒரு தாமரைமலரில் சராசரங்களனைத்தையுங் காத்தருளும்பொருட்டுத் திருவுள்ளத்தில் மிக்க கருணைகூர்ந்து ஒப்பற்ற குமாரக்கடவுள் மிகவும் இளங்குழந்தையைப்போல இனிமையோடு வீற்றிருந்தருளினர்.—எ-று.

தீர்த்திகைக் கங்கை தன்னிற் றிகழ்சர வணத்தில் வந்த
மூர்த்திகைக் குழவி யேபோன் முதற்புரி யாட னோக்கி
யார்த்திகை யுறாத வுள்ளத் தரிமுத லமரர் யாருங் ய
கார்த்திகைத் தெரிவை மாரை விளித்திவை கழற லுற்றார்.

(இ-ள்.) கங்கைநதியில் விளங்குகின்றசரவணப்பொய்கையினிடத்து அவதரித்த குமாரக்கடவுள் கைக்குழந்தையைப்போல முதலிற் செய்த திருவிளையாடலைப் பார்த்து விருப்பநீங்காத வுள்ளத்தினையுடைய திருமால் முதலிய தேவர்களனைவரும் கார்த்திகைப்பெண்களை யழைத்து இவைகளைச் சொல்லத்தொடங்கினார்கள்.—எ-று.

தீர்த்திகை - தீர்த்தத்தை யுடையது. குமாரக்கடவுள் பின்னரும் அநேக திருவிளையாடல்களைச் செய்யப்போகின்றவராகலின், இவ்விளையாட்டை, 'முதற்புரியாடல்' என்றார். (௧௧௪)

சாற்றருஞ் சரவ ணத்திற் சண்முகத் தொருவ னாகி
வீற்றிருந் தருளு கின்ற விமலனோர் குழவி போலத்
தோற்றின னவனுக் குங்க டோமுலை யமுத மூட்டிப்
போற்றுதிர் நாளு மென்ன நன்றெனப் புகன்று வந்தார்.

(இ-ள்.) சொல்லுதற்கரிய சரவணப்பொய்கையில் ஆறுமுகங்களையுடைய ஒருவராக எழுந்தருளியிருக்கின்ற கடவுள் ஒரு குழந்தைபோலக் காணப்படுகின்றார், அவருக்கு உங்களுடைய இரண்டு முலைகளினின்றும் வருகின்ற பாலை யுண்பித்து

நாள்தோறும் பாதுகாக்கக்கடவீர்களென்றுகூற, அவர்கள் அவ்வாறே செய்கின்றோமென்று கூறி (அச்சரவணப்பொய்கையினிடத்து) வந்தார்கள்.—எ-று. (௧௧௫)

மறுவறு மார லாகு மாதர்மூ விருவர் தாமு
நிறைதரு சரவ ணத்தி னிமலனை யடைந்து போற்ற
வுறுநர்க டமக்கு வேண்டிற் றுதவுவோ னாத லாலே
யறுமுக னொருவன் வேறா யறுகுழ வுருவங் கொண்டான்.

(இ-ள்.) குற்றமற்ற கார்த்திகைகளாகிய ஆறு பெண்களும், நீர் நிறைந்த சரவணப்பொய்கையில் எழுந்தருளியிருக்கின்ற குமாரக்கடவுளையடைந்து துதிக்கவும், ஆறு திருமுகங்களையுடைய ஒப்பற்ற குமாரக்கடவுள் தம்மையடைந்தவர்களுக்கு வேண்டியவைகளை யளித்தருளுகின்றவராதலால், (முன்பிருந்த வடிவத்தைவிட்டு) வெவ்வேறாக ஆறுகுழந்தைவடிவங் கொண்டருளினார்.—எ-று.

கார்த்திகைமாதர்கள் ஆறுருவமுடையவர்களாகலின், 'ஆரலாகுமாதர்மூவிருவர்' என்றும், வேண்டுவோர் வேண்டியாங்கருளும் பெருமானாகலின், 'உறுநர்கடமக்கு வேண்டிற்றுதவுவோன்' என்றுங் கூறினார். (௧௧௬)

ஆறுரு வாத லோடு மறுவரு மகிழ்ந்து வேறு
வேறுதா மெடுத்துத் தத்தம் வியத்தகு துணைமென் கொங்கை
யூறுபா லமுத மன்னோற் குதவுறு முறுவல் செய்து
மாறிலா வருளா லாற்ற வருந்தினன் போல வுண்டான்.

(இ-ள்.) அவ்வாறு ஆறுகுழந்தைகளாகவும் கார்த்திகைப்பெண்கள் அறுவரும் மகிழ்வடைந்து அவரவர்கள் ஒவ்வொருகுழந்தைகளையெடுத்துத் தங்கள்தங்களுடைய புகழத்தக்க மெல்லிய ஸ்தனங்களில் சுரக்கின்ற பாலமுதத்தை அக்குமாரக்கடவுளுக்கு உண்பிக்கவும், புன்னகைகொண்டு நீங்காத கருணையினால் மிகவும் வருந்தினவனைப்போல உண்டருளினார்.—எ-று. (௧௧௭)

உண்டபி னறுவ ராகு மொருபெரு முதல்வன் றன்னைத்
தண்டழை பொதுளு நீபத் தண்ணிழற் பொய்கை தன்னில்
வண்டயி லுறாத கஞ்ச மாமலர்ப் பள்ளி சேர்த்திக்
கண்டுயில் செய்வித் தேத்தக் கருணையா லிவைய செய்வான்.

(இ-ள்.) அவ்வாறு உண்டருளியபின்பு, ஆறு வடிவங்களாக விருக்கின்ற ஒப்பற்ற பெரிய குமாரக்கடவுளைக் குளிர்ந்த தழைகள்நெருங்கிய கடம்பவிருக்ஷத்தின் குளிர்ந்த நிழலையுடைய சரவணப்பொய்கையில் வண்டுகள் தேனையுண்ணாத சிறந்த தாமரைமலராகிய சயனத்திற் கிடத்தித் துயிலச்செய்து துதிக்க (அக்குமாரக்கடவுள்) கிருபையோடு இவைகளைச் செய்தருளுவாராயினார்.—எ-று.

வண்டயிலுறாதகஞ்சம் - வண்டுகள் தேனையுண்டு எச்சிற்படுத்தாத தாமரை மலர்; அதாவது, புதுமலர் என்றபடி. (௧௧௮)

துயிலவோ ருருவந் துஞ்சித் துண்ணென வெழுந்து மென்சொற்
பயிலவோ ருருவம் யாய்தன் பயோதரம் பவள வாய்வைத்
தயிலவோ ருருவ நக்காங் கமரவோ ருருவ மாட
வியலவோ ருருவம் வாளா விரங்கவோ ருருவஞ் செய்தான்.

(இ-ள்.) ஒருருவந் தூங்கவும், ஒருருவந் தூங்கி விரைந்தெழுந்து மெல்லிய மழலைச்சொற்களைப் பேசவும், ஒருருவம் தாய்முலையைத் தனது பவளம்போன்ற சிவ

ந்த வாயில்வைத்துப் பாலுண்ணவும், ஒருருவஞ் சிரித்துக்கொண்டிருக்கவும், ஒருருவம் விளையாடவும், ஒருருவம் வீணாக அழுதுகொண்டிருக்கவுஞ் செய்தருளினார்.

ஒருருத் தவழ மெல்ல வோருருத் தளர்ந்து செல்ல
வோருரு நிற்றல் செல்லா தொய்யென வெழுந்து வீழ
வோருரு விருக்கப் பொய்கை யோருரு வுழக்கிச் சூழ
வோருத் தாய்கண் வைக வொருவனே புரித லுற்றான்.

(இ-ள்.) ஒருருவமானது மெல்லத்தவழவும், ஒருருவந் தளர்ந்துசெல்லவும், ஒருருவம் நிற்கமுடியாமல் விரைவிலெழுந்து விழவும், ஒருருவம் வாளா விருக்கவும், ஒருருவம்அத்தடாகத்தைக்கலக்கிச்சூழ்ந்துவரவும், ஒருருவந் தாயினிடத்திலிருக்கவும் ஒரு குமாரக்கடவுளே செய்தருளினார்.—எ-று. (௧௨௦)

ஆடவோ ருருவஞ் செங்கை யறையவோ ருருவ நின்று
பாடவோ ருருவ நாடிப் பார்க்கவோ ருருவ மாங்க
ணோடவோ ருருவ மோர்பா லொளிக்கவோ ருருவம் யாண்டுந்
தேடவோ ருருவ மாகச் சிவன்மகன் புரித லுற்றான்.

(இ-ள்.) ஒருருவம் ஆடல்செய்யவும், ஒருருவஞ் சிவந்த கைகளைக்கொட்டவும், ஒருருவம் நின்றுபாடவும், ஒருருவம் விரும்பிப்பார்க்கவும், ஒருருவம் அங்கு ஓடவும், ஒருருவம் ஓரிடத்தி லொளிக்கவும், ஒருருவம் எங்குந் தேடவுமாகச் சிவகுமாரராகிய முருகக்கடவுள் செய்தருளினார்.—எ-று. (௧௨௧)

இத்திற மிருமூன் றான யாக்கையுங் கணம தொன்றிற்
பத்துநூ றாய பேதப் படும்வகை பரமாய் நின்ற
வுத்தம குமரன் றானெவ் வுயிர்தொறு மாட லேபோல்
வித்தக விளையாட் டின்ன மாயையால் விரைந்து செய்தான்.

(இ-ள்.) இவ்வாறு ஆறு திருவுருவங்களும் ஒரு க்ஷணநேரத்திற்குள் ஆயிரம் பேதமாகும்படி பரம்பொருளாகநின்ற உத்தமராகிய குமாரக்கடவுள் தாம் எல்லா வுயிர்களிலுமிருந்து விளையாடுதலைப்போல, இத்தகைய ஞானமயமாகிய திருவிளையாடலைத் தமது மாயையினால் விரைந்து செய்தருளினார்.—எ-று. (௧௨௨)

சிற்பர னாகி வந்த செய்யவே ளாடற் றன்மை
பற்பல திறமு நாடிப் பங்கயத் தயனு மாலுஞ்
சொற்படு மகத்தின் றேவு முனிவருஞ் சுரரும் யாரு
மற்புத மகிழ்ச்சி கொண்டாங் கின்னவா றறைத லுற்றார்.

(இ-ள்.) ஞானசொரூபியாக வெழுந்தருளிய குமாரக்கடவுளது திருவிளையாடலாகிய பலவகையினையும் விரும்பிப் பார்த்து, கமலாசனனாகிய பிரமனும் திருமாலும் சொல்லப்பட்ட மகபதியாகிய இந்திரனும் முனிவரர்களுந் தேவர்களுமாகிய அனைவரும் ஆச்சரியகரமான சந்தோஷத்தையடைந்து இவைகளைச் சொல்லத்தொடங்கினார்கள்.—எ-று. (௧௨௩)

சேயிவ னொருவ னேபல் சிறுருக் கொண்டு நம்மு
னேயெனு மளவை தன்னி லெண்ணில்பே தத்த னாகு
மாயினிக் குமர னாட லறிவரி தெமக்கு மெல்லா
மாயமு மியற்ற வல்லன் வரம்பிலா வறிவன் மாதோ.

(இ-ள்.) இவ்வொருகுழந்தையே பலகுழந்தைவடிவத்தையடைந்து நமக்கு முன்னே க்ஷணநேரத்திற்குள்ளே அளவற்றபேதங்களை யுடையவராகின்றார்; இதனை

ஆலோசிக்குமிடத்தில், நம்மாலும் இப்புதல்வரது திருவிளையாடலை அறிதற்கருமையாகும். இவர் எல்லாமாயங்களையுஞ் செய்ய வல்லவர்; அளவற்ற ஞானத்தினை யுடையவர்.—எ-று. (௧௨௪)

கைப்பயில் குழவி போலக் காட்டிய கடவுள் செய்யு
மிப்பெரு மாயை போல யாவரும் புரிதற் றேற்றார்
செப்பியென் வேறி யாமுஞ் செய்ததொன் றில்லை யன்றா
லொப்பறு பரனே யாமென் றுரைசெய்து தொழுது நின்றார்.

(இ-ள்.) கையிற்பழகுகின்ற சிறுகுழந்தையைப் போல உருவங்கொண்டிருக்கின்ற இக்கடவுள் செய்கின்ற இந்தப்பெரிய மாயையைப்போல யாவருஞ் செய்யமாட்டார்கள், அதனைச் சொல்லியாவதென்ன? வேறே நாமும் செய்ததொன்றுமில்லை; ஆதலால், இக்குழந்தை வடிவாயுள்ளவர் ஒப்பற்ற சிவபெருமானே யாகுமென்றுகூறி வணங்கி நின்றார்கள்.—எ-று. (௧௨௫)

அழலெனு மீன வர்க்கத் தறுவருங் குமர னுடன்
முழுவது நோக்கி நோக்கி முதிருமற் புதமீ தெய்திக்
குழவிக ளென்றே யுள்ளங் கோடல்விட் டகலா தஞ்சி
வழிபடு கடவு ளோரிற் போற்றினர் மனங்கொ ளன்பால்.

(இ-ள்.) நக்ஷத்திரவர்க்கத்திற் சேர்ந்த கார்த்திகைகளாகிய ஆறுபெண்களும் குமாரக்கடவுளது திருவிளையாடல்களனைத்தையும் பார்த்துப்பார்த்து மிகுந்த ஆச்சரியமடைந்து தமதுள்ளத்திற் குழந்தைகளாகச் சிந்தித்தலையொழித்து, நீங்காமல் அச்சங்கொண்டு தாங்கள்வழிபடுகின்ற தெய்வத்தைப்போல மனத்திற்பொருந்திய அன்பினால் துதித்தார்கள்.—எ-று.

அழல் - கார்த்திகை. திருமால் முதலியோர் பாலூட்டும்படி யேவியகாலத்துக் குழந்தைகளாகக்கருதிப் பாலூட்டிவந்தவர்கள் குமாரக்கடவுளது திருவிளையாடலைநோக்கி ஆச்சரியமுற்றவர்களாய் இக்குழந்தைகள் சிவஸ்வருபமேயென்றுகருதி வழிபட்டனர்க ளென்பார், 'வழிபடுகடவுளோரிற் போற்றினர் மனங்கொளன்பால்' என்றார். (௧௨௬)

அம்புய முறமுஞ் செங்கே ழறுமுகம் படைத்த கோல
நம்பிதன் வரவு தன்னை நவின்றன மினிமே லங்க
ளெம்பெரு முதல்வி தன்பா லிலக்கத்தொன் பதின்மர் செவ்வே
டம்பிய ராகி வந்த தன்மையை விளம்ப லுற்றாம்.

(இ-ள்.) தாமரைமலர்போன்ற சிவந்தவொளியினையுடைய ஆறு திருமுகங்களைப்படைத்த அழகியமுருகக்கடவுளது திருவவதார மான்மியத்தைக் கூறினோம், இனி திருக்கயிலாயத்தில் எமது பெருமாட்டியாகிய உமாதேவியாரிடத்தில் இலக்ஷத்தொன்பது வீரர்கள் முருகக்கடவுளுக்குத் தம்பியர்களாய் அவதரித்த தன்மையைச் சொல்லுகின்றோம்.—எ-று. (௧௨௭)

திருவவதாரப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் ௧௨௭.

---

௯.

முருகன்றுணை.

# சரவணபவர் வருபடலம்.

நஞ்ச யின்றவ னெற்றிநாட் டத்தினு னல்கு
வெஞ்சு டர்ப்பொறி வெம்மையை யாற்றலள் விமலை
செஞ்சி லம்படி தாக்கலி னவமணி சிதற
வஞ்சி யோடின ளித்திற முணர்ந்தன ளகத்துள்.

(இ-ள்.) ஆலாகலவிஷத்தை யுண்டருளிய சிவபெருமான் நெற்றிக்கண்ணி னுளளித்தருளிய வெவ்விய நெருப்புப்பொறிகளின் வெப்பத்தைச் சகிக்கமுடியாமல் உமாதேவியார், செவ்விய திருவடிச்சிலம்புகள் ஒன்றோடொன்று தாக்குதலினால் நவரத்தினங்கள் சிந்தும்படி அச்சமுற்று ஓடினவராய்த் தமது திருவுள்ளத்தில் இவ்வாறு சிந்திப்பாராயினார்.—எ-று. (௧)

மாய வன்முத லமரர்க ளீசனை வணங்கி
நீயொர் மைந்தனைத் தருகென நெற்றிநாட் டத்தா
லாய வன்சுட ருதவியோர் மதலையா யமர்வா
னேயி னுன்சர வணத்தெனத் தெரிந்தன ளிறைவி.

(இ-ள்.) திருமால் முதலிய தேவர்கள் சிவபெருமானை வணங்கித் தேவரீர் ஒரு புதல்வனைத் தந்தருளவேண்டுமென்று பிரார்த்திக்க, அச்சிவபெருமான் நெற்றிக் கண்ணினிடமாக நெருப்புப்பொறிகளை யுண்டாக்கிக் குழந்தையாயிருக்கும்பொருட்டுச் சரவணப்பொய்கைக் கனுப்பியருளினாரென்று உமாதேவியார் தமது திருவுள்ளத்திலுணர்ந்தருளினார்.—எ-று. (௨)

அன்ன தற்பின ருமையவ ளெனதுபா லமலன்
றன்ன ருட்பெறு மதலைதோன் றுவகை தடுத்த
பொன்ன கர்க்கிறை விரிஞ்சன்மான் முதலபுத் தேளிர்
பன்னி யர்க்கெலாம் புதல்வரின் றுகெனப் பகர்ந்தாள்.

(இ-ள்.) அதன்பின்பு உமாதேவியார், என்னிடத்துச் சிவபெருமானது திருவருளைப்பெற்ற புதல்வன் தோன்றுதபடி தடைசெய்த தேவேந்திரன் பிரமன் திருமால் முதலிய தேவர்களது மனைவிமார்களுக்கெல்லாம் புத்திரசந்தான மில்லாமற் போகக்கடவதென்று சபித்தனர்.—எ-று. (௩)

இமைய மாமக ளித்திறம் புகன்று மீண்டேகிச்
சமயம் யாவைவு நிறுவிய கண்ணுதற் றலைவ
னமல மாந்திரு முன்னர்வந் தரிக்குமுன் னரிதாங்
கமல மாரடி கண்டனள் பணிந்துகண் களித்தாள்.

(இ-ள்.) பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியார் இவ்வாறு சபித்துத் திரும்பிவந்து எல்லாச்சமயங்களையும் நிலைபெறுவித்த நெற்றிக்கண்ணையுடைய சிவபெருமானது தூய்மையாகிய திருமுன்னே யடைந்து முன்பு திருமாலினால் காணுதற்கரிதா

யிருந்த தாமரைமலர்போன்ற திருவடிகளைத் தரிசித்து வணங்கிக் கண்களிப்படைந் தருளினார்.—எ-று. (ரு)

உம்பர் யாவருங் குறையிரந் திடலுமீ யுதவுஞ்
சொற்பொ றிக்கொகை யாற்றலும் வெம்மையுந் தெரிந்து
வெம்பி முற்றுடல் பதைப்புற வகன்றிவண் மீண்டே
னெம்பெ ருந்தகை யவ்வழ னிக்கலா லென்றாள்.

(இ-ள்.) தேவர்களனைவருந் தங்கள் குறைகூறி வேண்டிக்கொள்ளவும், தேவரீர் கொடுத்தருளிய நெருப்புப்பொறியினது வன்மையையும் உஷ்ணத்தையுமறிந்து, தேகமுழுதும் வெதும்பித்துடிக்கச் சென்று, எம்பெருமானே! தேவரீர் அவ்வக்கினிப் பொறிகளை இவ்விடத்தினின்று நீக்கினமையால் திரும்பி இங்கு வந்தேனென்று கூறியருளினார்.—எ-று. (௬)

கன்னி யிங்ஙனம் பகர்தலுங் கருணைசெய் தருளித்
தன்னி டத்தினி லிருத்தின னிருந்திடு தையன்
முன்ன மோடலிற் சிதறுநூ புரமணி முழுது
மென்னை யாளுடை நாயகன் முன்னிலங் கினவால்.

(இ-ள்.) உமாதேவியார் இவ்வாறு கூறியருளவும், (சிவபெருமான்) திருவருள்புரிந்து தமதிடப்பாகத்திலிருத்தினர்; அவ்வாறிருந்தருளிய உமாதேவியார் முன்பு ஓடினமையால் திருவடிச்சிலம்பினின்றுஞ் சிதறிய இரத்தினங்களெல்லாம் என்னையடிமையாகவுடைய சிவபெருமான் திருமுன்னே விளங்கின.—எ-று. (௬)

துளிரின் மெல்லடிப் பரிபுர மாயின தணந்து
மிளிரு மந்நவ மணிகளி னுணையால் விமலை
யொளிரு நல்லுருத் தோன்றின வைம்முகத் தொருவன்
றெளிரு முச்சுட ரகத்திடை யமர்ந்திடுஞ் செயல்போல்.

(இ-ள்.) ஐந்து திருமுகங்களையுடைய சிவபெருமான் ஒளிபொருந்திய சோமசூரியாக்கினிகளின் மத்தியி லெழுந்தருளியிருக்குந் தன்மையைப்போல, துளிரைப் பார்க்கிலும் மென்மையாகிய திருவடியிலணிந்த சிலம்பினின்று நீங்கி விளங்குகின்ற அந்த நவரத்தினங்களில் சிவாக்கினையினால் உமாதேவியாரது விளங்குகின்ற நல்ல சாயை தோன்றின.—எ-று. (எ)

எவ்வி லாநவ மணிகளி னுமையுரு வெனைத்துங்
கவ்வி னாற்றெரிந் தருளினால் வம்மெனக் கழற
வவ்வா லோர்வகை மணிக்கொரு சத்திக ளாக
நவ்வி னார்நவ சத்திக ளமரர்நற் றவத்தால்.

(இ-ள்.) அளவிடப்படாத நவமணிகளில் உமாதேவியாரது திருவுருவங்களனைத்தையுஞ் சிவபெருமான் திருவிழிகளாற் பார்த்தருளிக் கருணையுடன் வாருங்களென்று திருவாய்மலர்ந்தருளியவுடன் தேவர்களது நல்ல தவத்தினால் ஒவ்வொரு இரத்தினத்திற்கு ஒவ்வொரு சத்திகளாக ஒன்பது சத்திகள் தோன்றினார்கள்.—எ-று.

பருப்ப தக்கொடி புரைநவ சத்திகள் பரமன்
றிருப்ப தத்திடை வணங்கிநின் றவனிடைச் சிந்தை
விருப்பம் வைத்தலு முனிவர்த மகளிர்போல் விரைவிற்
கருப்ப முற்றனர் யாவது முமையவள் கண்டாள்.

(இ-ள்.) பர்வதராஜ புத்திரியாகிய உமாதேவியாரையொத்த நவசத்திகளும் சிவபெருமானது திருவடிகளில் வணங்கியெதிரில் நின்று, அவரிடத்துச் சிந்தையில் விருப்பங்கொள்ளவும், (தாருகாவனத்திலிருந்த) ரிஷிபத்தினிகளைப் போல விரைவாகக்கருப்பமடைந்தார்கள்; இவையனைத்தையும் உமாதேவியார் பார்த்தருளினர்.

தாருகாவனத்து ரிஷபத்தினிகள், பிக்ஷாடனத் திருவுருவங்கொண்டு சென்றருளிய சிவபெருமானது திருமேனிப் பொலிவைக்கண்டவுடனே காமங்கொண்டு அதனால் கருப்பமடைந்த தன்மையைப்போல், இந்நவசத்தியர்களும் சிவபெருமானை வணங்கி அவ்வெம்பெருமான்மீது காமவிச்சையாகத் தங்களுள்ளத்தைச் செலுத்தி அநுகாரணமாகக் கருப்பங்கொண்டமையின், 'முனிவர்தமகளிர்போல் விரைவிற் கருப முற்றனர்' என்று கூறினர். (௯)

முனமம்பு ரிந்துல களித்தவ ளனையர்பான் முதிருஞ்
சினமம்பு ரிந்திவ ணைமக்குமா றுகிய திறத்தாற்
கனமம்பு ரிந்தவிக் கருப்பமோ டிருத்திர் பல்கால
மினம்பு ரிந்தநீர் யாவரு மென்றுரு ளிசைத்தாள்.

(இ-ள்.) முன்னமே உலகத்தைப்படைத்துக் காக்கின்ற உமாதேவியார் அந்த நவசத்திகளிடத்தில் மிக்ககோபங்கொண்டு நீங்கள் இவ்விடத்தில் எனக்கு விரோதிகளாகிய தன்மையினால் கனமாகிய இந்தக் கருப்பத்துடன் கூட்டமாகிய நீங்களனைவரும் அனேககால மிருக்கக்கடவீர்களென்று சபித்தனர்.—எ-று. (௧0)

ஆவ தெல்லையி னடுக்கமுற் றுஞ்சிமெய யங்கன்
மேவு மாதர்மெய் வியர்த்தன ரவ்வியர்ப் பதனிற்
றேவ தேவன தருளினாற் றினகரத் திரள்போ
லோவி லாவிறல் வீரர்க ளிலக்கர்வந் துதித்தார்.

(இ-ள்.) அவ்வாறாகியசமையத்தில் அங்குப்பொருந்திய நவசத்திகள் நடுங்கிப் பயந்து உடல் வியர்த்தார்கள்; அந்த வியர்வையில் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானது திருவருளினால் சூரியக்கூட்டங்களைப்போலக் கெடாத வலிமையினையுடைய இலக்ஷம் வீரர்கள் வந்துதோன்றினார்கள்.—எ-று.

சூரபதுமனது சேனாவீரர்களை மிகத்திரணமாகக்கருதிப் போர்செய்து வெல்லத்தக்க பேராற்றலுடையவர்களாகலின், 'ஓவிலா விறல் வீரர்கள்' என்று கூறினர்.

வடுத்த னைப்பொருங் கண்ணினர் வியர்ப்பினில் வந்தாங்
கடுத்த மானவ ரோரிலக் கத்தரு மசனி
கடுத்த சொல்லினர் பொற்றுகி லுடையினர் கரத்தி
லெடுத்த வாளினர் பலகைய ராகிமீண் டினரால்.

(இ-ள்.) மாவடுவைப்போலுங் கண்களையுடைய நவசத்திகளினது வியர்வையில் வந்து தோன்றிய இலக்ஷம் வீரர்களும் இடிமுழக்கம் போன்ற சொல்லினையுடையவர்களாயும், பொன்னுடையினை யணிந்தவர்களாயும், கையில் கத்தி கேடகங்களையேந்தியவர்களாயும் வந்து நெருங்கினார்கள்.—எ-று. (௧௨)

அனையர் யாவரு மீசனை யடைந்தன ரன்புற்
றினிய வாகிய வமலனு மங்களை யேத்தி
வனைக ருங்கழல் வணங்கிமுன் னிற்றலு மற்றப்
புனித நாயக னவர்தமை நோக்கியே புகல்வான்.

(இ-ள்.) அவர்களனைவரும் சிவபெருமானை யடைந்தவர்களாய் அன்புகொண்டு இனிமையாகிய அவ்வெம்பெருமானது திருநாமங்களைத்துதித்து, அலங்கரிக்கப்

பட்ட பெரியவீரக்கழலையணிந்த திருவடிகளை வணங்கித் திருமுன்னே நிற்கவும், உடனே மன்றாடுதலாகிய அவ்வெமது சிவபெருமான் அவ்வீரர்களைப் பார்த்து அருளிச்செய்கின்றார்.-எ-று. (கரு)

மைந்தர் கேண்மினோ நீவிர்கள் யாவரும் வயத்தா
லிந்தி ராதியர் பகைவரை யடுவதற் கெமது
கந்த வேள்படை யாகுதி ரென்னவே கழறி
முந்து பேரருள் புரிந்தனன் யாவர்க்கு முதல்வன்.

(இ-ள்.) மைந்தர்களே! கேளுங்கள்; நீங்களனைவரும் வெற்றியோடு இந்திரன் முதலிய தேவர்களது பகைவர்களாகிய அசுரர்களைக் கொல்லும்பொருட்டு எமது புதல்வனாகிய கந்தவேளினது சேனைகளாகவிருக்கக்கடவீர்களென்று அருளிச்செய்து யாவருக்கும் முதல்வராகிய சிவபெருமான் மிக்க திருவருள் செய்தருளினார்.—எ-று.

இன்ப நீருட னிவைபருள் புரிதலு மிலக்க
நன்பெ ருந்திறன் மைந்தர்க ளாயினோர் நாளு
மன்பு மேதகு பரிசன ராகியே யமலன்
முன்பு நீங்கலா தொழுகினர் செய்பணி முறையால்.

(இ-ள்.) மகிழ்வாகிய தன்மையுடன் இவைகளை யருளிச்செய்யவும், நன்மையாகிய மிக்க வல்லமையையுடைய இலக்ஷம் வீரர்களும், நாள்தோறும் அன்பு மிகுந்த பரிசனங்களாய்ச் செய்கின்ற பணிவிடையின் முறைப்படி சிவபெருமான் திருமுன்னே நின்று நீங்காமலிருந்தார்கள்.—எ-று. (கக)

மாற்ற ருஞ்சினத் தம்மைமுன் கொடுமொழி வழங்கத்
தோற்று நன்மணி யுருவமாந் தோகையர் துளங்கிப்
போற்றி வந்தனை செய்துபின் னவள்பணி புரிந்தே
யாற்று தொல்கருப் பத்துடன் பற்பக லமர்ந்தார்.

(இ-ள்.) நீக்குதற்கரிய கோபத்தினால் உமாதேவியார் முன்பு சாபமிடவும், தாங்கள் தோன்றிய நல்ல மணியின் நிறமாகவேயுள்ள மாதர்கள் நடுக்கங்கொண்டு துதித்து வணங்கிப்பின்பு, அவ்வுமாதேவியாருக்குப் பணிவிடை செய்துகொண்டே சுமந்திருந்த பழைமையாகிய கருப்பத்துடன் அநேககாலம் வசித்திருந்தார்கள். (கசு)

இகலு மாமணி மகளிர்தங் கருவினு ளிறைவற்
புகழு நந்திபங் கணத்தவர் குழவியாய்ப் போந்து
நிகரில் காளைய ராகிவீற் றிருந்தனர் நெறிசேர்
சுகனெ னும்படி பரமனை முன்னியே தொழுது.

(இ-ள்.) ஒன்றோடொன்று மாறுபட்ட (நிறத்தினையுடைய) பெரியநவமணி மாதர்களது கருப்பத்தில் சிவபெருமானைத் துதிக்கின்ற நந்திகணத்தவர்கள்குழந்தைகளாகவந்து ஒப்பற்றவாலிபர்களாய், ஞானநெறியை யடைந்த சுகப்பிரம ரிஷியைப் போலச் சிவபெருமானைத் தியானித்துத் தொழுதுவீற்றிருந்தார்கள்.—எ-று.

தொழுது வீற்றிருந்தனர், எனக்கூட்டுக. சுகப்பிரமமுனிவர் மாதாவினது கருப்பத்திற்றங்கியிருந்த காலத்தும் நீங்காத சிவ சிந்தனையுடையவராய் வசித்திருந்து அச்சிந்தனை மாறாமலே உலகத்தில் அவதரித்த தன்மையைப்போல, இவ்வீரர்களும் சிவத்தியானத்துடன் அவ்வன்னையர்களது கருப்பத்தில்வசித்திருத்தலின், 'நிகரில் காளையராகி வீற்றிருந்தனர் நெறிசேர் சுகனெனும்படி பரமனை முன்னியேதொழுது' என்றார். (கஎ)

அரத வங்களிற் றோன்றிய மங்கைய ரகட்டிற்
கருவின் வந்திடு மாடவ ரிசிவைக் கருதிப்
புரியும் யோகுட னிருத்தலி னுற்றரும் பொறையாய்ப்
பரம தாதனு முமையுடன் பரமனைப் பணிந்தார்.

(இ-ள்.) நவரத்தினங்களிற் றோன்றிய நவசத்திகளினது வயிற்றிலுள்ள கருப்பத்தில் வந்திருக்கின்ற வீரர்கள் சிவபெருமானைத் தியானித்துச் செய்கின்ற யோகத்துடனிருத்தலினால் சுமக்கமுடியாத பளுவாய்ப் பாரமாகவிருக்கவும் (அந்நவ சத்தியர்கள்) உமாதேவியாருடன் சிவபெருமானை வணங்கினார்கள்.—எ-று. (௧௮)

இருவர் தம்மையும் பணிந்தவ ரின்றுகா றினைய
கருவி னொந்தன மின்னினி யாம்பரிக் கல்லே
மருள்பு ரிந்திடு மென்றலு மாதியங் கடவுள்
பரிவி னுமையை திருமுக நோக்கியே பகர்வான்.

(இ-ள்.) அச்சிவசத்திகளை வணங்கிய நவசத்தியர்கள், இன்றுவரையிலும் இந்தக்கருப்பத்தினால் வருந்தினோம்; இனியாங்கள் சுமக்கவலியில்லோம்; ஆதலால், திருவருள் செய்வீர்களாகவென்று வேண்டிக்கொள்ளவும், முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் அன்புடன் உமாதேவியாரது திருமுகத்தை நோக்கி அருளிச்செய்கின்றார்.—எ-று. (௧௯)

ஏல வார்குழற் கவுரிநின் செய்யதா ளிடையிற்
சால நூபுரத் துதித்தவ ருனதுசா பத்தாற்
சூலி னுன்மிக மெலிந்தனர் பற்பகல் சுமந்தார்
பால னைப்பெற வினியருள் புரிகெனப் பணித்தான்.

(இ-ள்.) மயிர்ச்சாந்தணிந்த நீண்ட கூந்தலையுடைய பார்வதியே! உனது சிவந்த பாதங்களிலணிந்த சிலம்பினின்றுந்தோன்றிய இம்மாதர்கள் உனதுசாபத்தை யேற்றுக் கருப்பத்தினால் மிகவும் வருந்தினவர்களாய், அநேகநாள்கள் அக்கருப்பத்தைத் தாங்கினார்கள்; இனி, (அவர்கள்) புதல்வர்களைப் பெறும்படி அருளிச்செய்வாயாகவென்று கூறியருளினார்.—எ-று.

மெலிந்தனர் என்பது முற்றெச்சம். (௨௦)

இறைவ னிங்கிது பணித்தலு நன்றென விசையா
முறுவல் செய்துமை மாதரை நோக்கிமெய்ம் பினரைப்
பெறுதி ராலினி யென்றலு மவர்வயிற் பெயரா
துறையும் யோகுடை வீரர்க ளித்திற முணர்ந்தார்.

(இ-ள்.) சிவபெருமான் இவ்விடத்து இதனையருளிச் செய்யவும், உமாதேவியார் நல்லதென்று சம்மதித்து நகைபுரிந்து, அம்மாதர்களைப்பார்த்தருளி, இனி, வீரர்களைப்பெறக்கடவீர்களென்று கூறியருளவும், அம்மாதர்களது கருப்பத்தில் நீங்காது வசிக்கின்ற யோகத்தினையுடைய வீரர்கள் இத்தன்மையை யுணர்ந்தார்கள்.—எ-று.

மறத்த லில்லதோ ருணர்வுடை வீரர்கண் மற்றித்
திறத்தை நாடியே யோகுவிட் டுளமகிழ் சிறப்ப
விறத்த னீங்கிய பரம்பொரு ளருண்முறை யிறைஞ்சிப்
பிறத்த லுன்னியே முயன்றன ராயிடைப் பெயர்வார்.

(இ-ள்.) மறத்தலில்லாத உணர்வினையுடையவீரர்கள் இத்தன்மையையுணர்ந்து யோகத்தினின்றுநீங்கி மனமகிழ்வுண்டாக நாசரகிதராகிய சிவபெருமானது திரு

வருண்முறைமையைச்சிந்தித்துவணங்கிப் பிறக்கும்படிநினைத்துமுயற்சித்தவர்களாய் அர்கருப்பத்தினின்றும் நீங்குகின்றவர்களானூர்கள்.—எ-று. (௨௨)

பரிபு ரந்தனின் முன்வரு மங்கையர் பனாதன்
கருணை கொண்டசொற் கேட்டலுங் கவற்சியை யகன்று
விரைவின் மேலவர் பதம்பணிந் தேத்தியே விடைகொண்
டொருவி மைந்தரை யளித்தனர் யாவரு மொருசார்.

(இ-ள்.) திருவடிச்சிலம்பினின்று முன்னே தோன்றிய நவமாதர்கள் உமாதேவியாரது கருணைபொருந்திய வார்த்தையைக் கேட்டவுடன் மனவருத்தத்தையொழிந்து, விரைவாக அச் சிவசத்திகளது திருவடிகளை வணங்கித் துதித்து விடை பெற்றுக்கொண்டு யாவரும் ஒருபக்கமாகச் சென்று புதல்வர்களைப் பெற்றூர்கள்.—எ-று.

நந்தி தன்கண முதல்வர்க ளாகியே நவியோர்
பந்த நீங்கியே சனித்தன ரொன்றிலாப் பதின்ம
ரெந்தை யாரருள் பெயர்கொடே யிருநில வரைப்பிற்
சுந்த ரன்விடை முகத்தவன் றேன்றிய வாபோல்.

(இ-ள்.) நந்திகணத்தலைவர்களாக வந்திருந்த அவ்வீரர்கள், எமது சிவபெருமான் அருளிய திருநாமத்தைக்கொண்டே பெரிய நிலவுலகத்தில், ஸ்ரீசுந்தரமூர்த்திஞம் இடபமுகத்தினையுடைய திருநந்திதேவரும் அவதரித்ததன்மையைப்போல, நவவீரர்களும் பந்தமொழிந்தே அவதரித்தார்கள்.—எ-று.

கமலினி அநிந்திதையார் என்னுஞ் சேடியர்கள் காரணமாக ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளும், சிலதரமுனிவரது வேண்டுகோள் காரணமாகத் திருநந்திதேவரும், தங்கட்கு முன்னிருந்த சுந்தரன் நந்தியென்னுந் திருநாமங்களைக்கொண்டே பாசபந்தங்களொழிந்தவர்களாய் உலகுயிர்களுக்குத் திருவருள்புரியுங் காரணமாக அவதரித்தருளிய தன்மைபோல, இந்நவவீரர்களும் தாங்கள் முன்பு பெற்றிருந்த திருநாமங்களுடன் பந்தங்களொழிந்தே அவதரித்தமையின், 'பந்த நீங்கியே சனித்தன ரொன்றிலாப் பதின்ம - ரெந்தையா ரருள்பெயர் கொடே யிருநில வரைப்பிற் - சுந்தரன் விடைமுகத் தவன் றேன்றிய வாபோல்' என்று கூறினர். 'சுந்தரன் விடைமுகத்தவன்' என்பதற்கு, சுந்தரனுகிய விடைமுகத்தவன் என இருபெயரொட்டுப் பண்புத்தொகையாகக் கொண்டு பொருள் கூறினுமாம். (௨௪)

பேர வாகுவை யுடையவ னிளவல்பே ரருளாற்
சூர வாகுலம் வானவர் பெறுவகை தொலைப்பா
னேர வாகுறுஞ் செம்மணிப் பாவைதன் னிடத்தில்
வீர வாகுவந் துதித்தன னுலகெலாம் வியப்ப.

(இ-ள்.) பெரிய பெருச்சாளி வாகனத்தை யுடைய விநாயகமூர்த்திக்கு இளையவராகிய முருகக்கடவுளது மிக்க திருவருளினுல் சூரபதுமன் முதலியவர்களாலுண்டாகின்ற துன்பங்களைத் தேவர்க ளடையாவண்ண நீக்கும்பொருட்டு மிக்க அழகினையுடைய மாணிக்கவல்லியினிடத்தில் உலகமனைத்தும் அதிசயிக்கும்படி வீரவாகுத்தேவர் வந்து அவதரித்தனர்.—எ-று.

பேர, ஏர என்பன குறிப்புப் பெயரெச்சங்கள். (௨௫)

விரள வல்லியார் தந்திரு ரரிவியன் படையாங்
கரள வல்லிரு ளகற்றுவா னெழுந்தவெண் கதிர்போற்

திரள வல்லிணை யணையபூண் முலையுடைத் தெய்வத்
தரள வல்லியாற் றோன்றினன் வீரகே சரியே.

(இ-ள்.) சங்கிலிபூட்டாத யானைமுகத்தினையுடைய தாரகன், சூரபதுமன், சிங்கமுகன் என்னு மிவர்களது சேனைகளாகிய விஷம்போன்ற வலிய இருளை நீக்கும்படி தோன்றிய வெள்ளிய சந்திரனைப்போல, திரட்சியாகிய சூதாடுகருவியினையொத்த ஆபரணமணிந்த முலையினையுடைய தெய்வத்தன்மையமைந்த முத்துவல்லியினிடத்து வீரகேசரி யவதரித்தனர்.—எ-று. விரளம்-நீக்கம், நெகிழ்வு. (உ௭)

மக்கள் வானவர்க் கருந்துயர் புரியும்வல் லவுணர்
தொக்க வீரமா மகேந்திரப் பெருவளந் தொலையச்
செக்கர் நூபுரப் புட்பரா கத்தியாற் சிறப்பாற்
றக்க வீரமா மகேந்திரன் வந்தவ தரித்தான்.

(இ-ள்.) மனிதர்களுக்குந் தேவர்களுக்குங் கொடிய துன்பத்தைச்செய்கின்ற வலிய அசுரர்கள் நிறைந்த வீரமாமகேந்திரபுரத்திலுள்ள பெருஞ்செல்வங்க ளழியும்படி, சிவந்த சிலம்பிற்றோன்றிய புஷ்பராகவல்லியினிடத்துத் தகுந்த சிறப்பினையுடைய வீரமாமகேந்திரர் வந்து அவதரித்தனர்.—எ-று. (உ௮)

ஆத வத்தனிக் கடவுளும் வடவையா ரழலுஞ்
சீத ளப்புது மதியமும் வெள்குறத் திகழ்கோ
மேத கத்தமர் பாவைபால் விண்ணவர் புரியு
மாத வத்தினால் வீரமா மகேச்சுரன் வந்தான்.

(இ-ள்.) ஒப்பற்ற சூரியதேவனும், அரிய வடவாமுகாக்கினியும், குளிர்ச்சியைத்தருகின்ற புதுமையாகிய சந்திரனும் நாணும்படி விளங்குகின்ற கோமேதகவல்லியினிடத்தில் தேவர்கள்செய்த பெரிய தபோபலத்தினால் வீரமாமகேச்சுரர் அவதரித்தனர்.—எ-று.

சூரியன்-வடவை, சந்திரன் இவைகளின் நிறம் கோமேதகத்திற்குரியன வென்க. (உ௯)

தான மாநிலத் தேவர்கண் மகிழ்வுறத் தகுவ
ரான பேரொலா முடிவுற வறந்தலை யெடுப்பக்
கானல் சேர்வயி ரேரிய மின்னிடைக் கழற்கான்
மான வீரமா புரந்தர னென்பவன் வந்தான்.

(இ-ள்.) பெரிய சொர்க்கலோகவாசிகளாகிய தேவர்கள் மகிழ்ச்சியடையவும், அசுரர்களாயுள்ளவர்களெல்லாம் நாசமடையவும், தருமந்தழைத்தோங்கவும் ஒளிபொருந்திய வயிரேரியவல்லியினிடத்தில் பெருமை பொருந்திய வீரமாபுரந்தரர் அவதரித்தனர்.—எ-று. (௩௰)

சூர ராக்கமுந் துணைவர்தம் மாக்கமுஞ் சூழுந்
தீர ராக்கமும் வானவ ரேக்கமுஞ் சிதைய
வார ராக்கமழ் கொன்றைவே ணியனரு ளதனால்
வீர ராக்கதன் வந்தனன் வயிரமெல் லியல்பால்.

(இ-ள்.) சூரனது செல்வமும், அவன்தம்பியர்களது செல்வமும், அவனைச்சூழ்ந்திருக்கின்ற வீரர்களாகிய அசுரர்களது செல்வமும், தேவர்களது துன்பமுமொழியும்படி, நீண்ட பாம்புடன் நறுமணங்கமழுங் கொன்றைமலர் மாலையையுமணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது திருவருளினால் வயிரவல்லியினிடத்தில் வீரராக்கதர் அவதரித்தனர்.—எ-று. (௩௰)

கரக தத்தனி மால்வரை யெடுத்தொரு கணைந்திற்
புரக தத்தினை யிழைத்தவ னருளினாற் புணரிக்
குரக தத்திடைப் பைங்கனல் கொம்மென வெழல்போன்
மரக தத்தியால் வீரமார்த் தாண்டன் வந்தனனே.

(இ-ள்.) கறித்தலையுடைய ஒப்பற்ற பெரிய மேருமலையைத் திருக்கரத்தில் (வில்லாக) எடுத்து முப்புரத்தை நாசஞ்செய்த சிவபெருமானது திருவருளினால், சமுத்திரத்திலுள்ள வடவாமுகாக்கினியில் பசிய நெருப்பானது விரைவாகத் தோன்றிய தன்மைபோல மரகதவல்லியினிடத்தில் வீரமார்த்தாண்டர் அவதரித்தனர்.—எ-று.

கதம்-கறித்தல். புரம் ஊதம் என்பது, புரகதம் என்றாயிற்று. (௫௧)

மையன் மாக்கரி வாம்பரி விரவிய மணித்தேர்
வெய்ய தானவர் பஃறொகை யிமைப்பினில் விளிய
மொய்ம்பி னார்த்தடு மானவன் பவளமா மொழிப்பேர்த்
ஐய றன்மையின் வலியவீ ராந்தகன் சனித்தான்.

(இ-ள்.) மதமயக்கத்தையுடைய பெரிய யானைகளும், தாவுகின்ற குதிரைகளும், மணிகள் கட்டிய இரதங்களும், கொடிய அசுரர்களாகிய பல கூட்டங்களும் இமைப்பொழுதில் நாசமாகும்படி வன்மையோடு ஆரவாரித்துக் கொல்லுகின்ற வீரனாகிய வலிய வீராந்தகர் பவளவல்லியினிடத்து அவதரித்தனர்.—எ-று. (௫௨)

கந்து தித்திடு வியனர மடங்கலுங் கடலின்
முந்து தித்திடு மாலமும் வடவையு முரணை
நந்து தித்தநற் களமணிப் பாவைநற் றவத்தால்
வந்து தித்தனன் வீரதீ ரப்பெயர் வலியோன்.

(இ-ள்.) தூணில் தோன்றிய பெரிய நரசிங்கமும் முற்காலத்திற் கடலிற் றோன்றிய ஆலாகலவிஷமும், வடவாமுகாக்கினியும் மாறுகொள்ளும்படி நம்மால் துதிக்கப்பட்ட (சிவபெருமானது) நல்ல காளகண்டம்போன்ற இந்திரநீலவல்லியினது சிறந்த தவத்தினால் வீரதீரனென்னும்பெயரினையுடைய வீரர் வந்து அவதரித்தனர்.

மணி - இந்திரநீலமணி. (௫௩)

இந்த வீரரோன் பதின்மரு மீசன தருளாற்
றந்த மன்னையர் நிறங்கொடே பொலந்துகி றுங்கி
வந்து பற்பகல் வளர்தரு முறுப்பொடு மடவா
ருந்தி யின்வழி நான்முகத் தன்னைல்போ லுதித்தார்.

(இ-ள்.) இந்த ஒன்பது வீரர்களும் சிவபெருமானது திருவருளினால் தங்கள் தங்களுடைய தாய்மார்களது நிறத்துடன் பொன்னுடையை யணிந்து, பல நாள்கள் வளர்ந்த அவயவத்துடன் அம்மாதர்களுடைய நாபியின்வழியே நான்கு முகங்களை யுடைய பிரமனைப்போல வந்து அவதரித்தார்கள்.—எ-று.

'தந்த மன்னையர் நிறங்கொடு' என்றதனால், மாணிக்கவல்லியினிடமாகத் தோன்றிய வீரவாகுத்தேவர் செந்தாமரைமலரின் நிறமும், முத்துவல்லியினிடமாகத் தோன்றிய வீரகேசரி பாலின் நிறமும், புருடராகவல்லியினிடமாகத் தோன்றிய வீரமாமகேந்திரர் பொன்னின் நிறமும், கோமேதகவல்லியினிடமாகத்தோன்றிய வீரமாமகேச்சுரர் மஞ்சளுஞ் சிவப்புங் கலந்தாலொத்த நிறமும், வயிடூரியவல்லியினிடமாகத் தோன்றிய வீரமாபுரந்தரர் மயிலின் கழுத்துப்போன்ற நிறமும், வயிரவல்லியினிடமாகத் தோன்றிய வீரராக்கதர் இந்திரவில்லின் நிறமும், மரகதவல்லியினிடமாகத் தோன்றிய வீரமார்த்தாண்டர் பச்சைக்கிளியின் நிறமும், பவளவல்லியினிடமாகத்

தோன்றிய வீராந்தகர் முருக்கம்பூவின் நிறமும், இந்திரநீலவல்லியினிடமாகத் தோன்றிய வீரதீரர் காயாம்பூவின் நிறமும் பெற்றுள்ளவர்களென வறிக.

திருமாலினது நாபிக்கமலத்தின்வழியே தோன்றிய பிரமனைப்போல, இந் நவவீரர்களும் நவசத்தியர்களது நாபியின்வழியாகவே தோன்றினமையின், 'மடவார் நாபியின்வழிநான்முகத்தண்ணல்போலுதித்தார்' என்று கூறினர். (௩௪)

வேறு.

உதிதருமத் திறல்வீர ரியாவருமே லம்மையுட னுறைந்த நாதன்
பதமலர்கள் பணிந்தெழுது மவர்க்கண்டு பார்ப்பதியைப் பரிவா னோக்கி
மதியுடையர் திறலுடையர் மானவருங் கலத்தினர்நம் மைந்த ரின்னோர்
புதியரலர் நந்திகணிக் கணைந்தவரென் றுன்சுருதிப் பொருளாய் நின்றான்.

(இ-ள்.) இவ்வாறு அவதரித்த அந்த வன்மையினையுடைய நவவீரர்களும் சிங்காசனத்தில் உமாதேவியாரோ டெழுந்தருளிய சிவபெருமானது திருவடித்தாமரைகளை வணங்கி யெழுந்திருத்தலும், வேதப்பொருளாயுள்ளசிவபெருமான் அவ்வீரர்களைப்பார்த்து உமாதேவியாரை அன்புடன் நோக்கியருளி, புத்திசாலிகளும், வலிமையுடையவர்களும், மானத்தையே ஆபரணமாக வுடையவர்களுமாகிய இவர்கள் நமது புதல்வர்கள்; புதிதானவர்களல்லர்; நந்திகணத்திற் சேர்ந்தவர்கள் என்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (௩௫)

தேவியது கேட்டுமைந்தர்க் கருள்புரிய வவர்க்கெல்லாஞ் சிவன்வெவ் வேறு
தாவில்சுடர் வாளுதவி வியர்ப்பில்வரு மோரிலக்கந் தனய ரோடு
நீவிர்களு மொன்றிருங்கட் கிறையவனு கியசேயை நீங்க லின்றி
யேவலவன் பணித்தனசெய் தொழுகுதிரென் றனவரு மிசைந்து தாழ்ந்தார்.

(இ-ள்.) உமாதேவியார் அதனைக் கேட்டருளி, புதல்வர்களாகிய அந்தநவவீரர்களுக்குத் திருவருள்புரியவும், உடனே சிவபெருமான் அவர்க ளனைவருக்கும் வெவ்வேறாகக் கெடாத ஒளிபொருந்திய வாளாயுதத்தைக்கொடுத்தருளி வியர்வையிற் றோன்றிய இலக்ஷம்பிள்ளைகளுடன் நீங்களுஞ் சேர்ந்திருந்து உங்கட்கு முதல்வனாகிய கந்தவேளைப் பிரியாமல் அவனிடுகின்ற ஏவலைச் செய்துகொண்டிருங்களென்று திருவாய்மலர்ந்தருளினர்; அவர்களும் அதற்கிசைந்து வணங்கினார்கள்.—எ-று. (௩௬)

ஒன்பானு மிலக்கத்தோ ரோரிலக்கத் தோர்தம்மோ டொன்றிப் புல்லி
யன்பாகி யெம்பெருமான் சினகரத்தை யகலாம லங்கண் வைக
மென்பானல் புரையும்விழிச் சத்திகளொன் பதின்மர்களும் விமலக் கன்னி
தன்பாலை யிகவாம லவள்பணித்த தொழில்புரிந்து சார்த லுற்றார்.

(இ-ள்.) நவவீரர்கள் இலக்ஷம் வீரர்களோடு சேர்ந்து தழுவிச் சினேகித்து அன்புடன் எமது சிவபெருமானது திருக்கோயிலை விட்டு நீங்காமல் அங்கு வசித்திருக்க, (அவர்களைப் பெற்ற) மெல்லிய நீலோற்பல மலர்போன்ற கண்களையுடைய நவசத்தியர்கள் நின்மலையாகிய உமாதேவியாரை விட்டு நீங்காமல் அவ்வம்மையாரிட்ட பணிவிடைகளைச் செய்துகொண்டு வசித்திருந்தார்கள்.—எ-று. (௩௭)

துணைவர்வருபடல முற்றிற்று.

ஆக திருவிருத்தம்-௧௦௪௪.

உ

முருகன் துணை.

# சரவணப் படலம்.

ஏற்ற மானவை இருஞ்செழி பதின்மரோ டிலக்கர்
தோற்ற மெய்திய தன்மையை யித்துணை சொற்றாம்
மாற்றல் சேர்புனற் சரவணத் தடத்தினி லமர்வர்
போற்ற வைகினோன் கயிலையிற் புகுந்தமை புகல்வாம்.

(இ-ள்.) உயர்வுபொருந்திய நவவீரர்களும் இலக்கம் வீரர்களும் அவதரித்த தன்மையை இதுவரையிற் கூறினோம். இனி சிறப்புப்பொருந்திய நீரையுடைய சரவணப்பொய்கையில் கார்த்திகைமாதர்கள் பாதுகாக்கும்படி யெழுந்தருளியிருந்த குமாரக்கடவுள் திருக்கயிலாயத்தை யடைந்ததன்மையைக் கூறுவோம்.—எ-று. (க)

கருப்ப மிக்குளார் காணுறாத் தாவில்சீர் வெள்ளிப்
பொருப்பி லுற்றிடு பரம்பொருள் கருணையாற் பொறைகூர்
கருப்ப மற்றுயிர் முழுவதுந் தந்திடுங் கன்னிப்
பருப்பதங் கொடிக் கவ்வழி யினையன பகர்வான்.

(இ-ள்.) மிக்க அகங்கார முடையவர்களால் காணப்படாத கெடாத சிறப்பினையுடைய வெள்ளிமலையில் எழுந்தருளி யிருக்கின்ற பரம்பொருளாகிய சிவபெருமான் கமையாகிய கருப்பமில்லாமல் காருண்ணியத்தினால் எல்லா வுயிர்களையும் பெற்றருளிய கன்னிகையாகிய பார்வதி தேவியாரைப்பார்த்தருளி அப்பொழுது இவ்வார்த்தைகளை யருளிச் செய்வாராயினர்.—எ-று. (உ)

பொம்ம லுற்றிடு நான்முக னாதியோர் புந்தி
விம்ம லற்றிட முந்துநம் விழியிடைத் தோன்றிச்
செம்ம லர்ப்பெருஞ் சரவணத் திருந்தநின் சேயை
யிம்ம லைக்கணே யுய்க்குதும் வருகென விசைத்தான்.

(இ-ள்.) (உமையவளே!) மிகுதியாகப் பொருந்திய பிரமன் முதலியவர்களது மனவருத்தநீங்கும் வண்ணம் முன்பு நமது விழியினிடத்திற்றோன்றிச் செவ்விய மலர்களையுடைய பெரிய சரவணப்பொய்கையில் வளர்ந்திருக்கின்ற உனது புதல்வனை இம்மலையினிடத்து அழைத்துக்கொண்டு வருவோம், ஆதலால் நீவரக்கடவை யென்று அருளிச் செய்தனர்.—எ-று. (௩)

வேறு.

செம்புலி யதளினன் செப்பிற் றேர்தலு
மம்பிகை யுவகையோ டன்பு கொண்டெழீஇ
நம்பெரு மதலையை நாங்கொண் டேகுது
மெம்பெரு முதல்வரி யெழுதி யாலென்றாள்.

(இ-ள்.) சிவந்த புலித்தோலை யாடையாகவுடைய சிவபெருமான் இவ்வாறு அருளிச்செய்ததனைக் கேட்டருளவும் உடனே உமாதேவியார் மகிழ்வு மன்புங் கொண்

டெழுந்து எமது சிறந்த 'முதல்வரோ! நமது பெருமைதங்கிய புதல்வனை நாமழைத்துக் கொண்டு வருவோம், நீர் வருவீராகவென்று அருளிச்செய்தனர். எ-று. (ரு)

கொம்மைவெம் முலையினுற் குறிப டுத்திய
வம்மையி துரைத்தலு மருளி னுமெழா
மைம்மலி மிடறுடை வான நாயக
னிம்மென விடையொடு மேற வேறினான்.

(இ-ள்.) குவிவாகிய விருப்பந்தரத்தக்க ஸ்தனங்களால் தழும்பு படுத்திய உமாதேவியார் இதனை யருளிச்செய்தவுடனே காளகண்டராகிய சிவபெருமான் அருளுடன்எழுந்து அவ்வம்மையாருடன் விரைவாக இடபவாகனத்திலேறியருளினர்.எ-று.

கொம்மை வெம்முலையினுற் குறிபடுத்தியதாவது, ஸ்ரீ காஞ்சிபுரத்தில் கம்பாநதிப் பெருக்கைக் கண்டஞ்சிச் சிவலிங்கப்பெருமானைத் தழுவி முலைச்சுவடும் வளைச் சுவடுஞ் செய்தருளினமையை. (௬)

நந்தியி னெருத்தமே னங்கையா ளொடு
நந்திவந் திடுதலு நாக மேலுளார்
நந்திய வினைத்தொகை நந்திற் றென்றிடா
நந்திதன் கணத்தொடு நண்ணிப் போற்றினர்.

(இ-ள்.) இடபத்தின் பிடரியில் உமாதேவியாரோடு சிவபெருமான் எழுந்தருளிவரவும்,சுவர்க்கலோக வாசிகளாகிய தேவர்கள் நமது கொடிய தீவினைத்தொகைகளனைத்தும் அழிந்தனவென்று கூறிக்கொண்டு திருநந்திதேவரது கணங்களுடன் அடைந்து துதித்தார்கள்.—எ-று.

நந்திய எனற்பாலது, நந்திய எனக்குறுக்கல் விகாரம் பெற்றது. (௭)

அந்தமில் விடத்தினை யடக்கு கையுடைச்
சுந்தர னாதியாந் தொல்க ணத்தினோ
ரெந்தைத னுருவுகொண் டிருந்த மேலவர்
வந்திரு மருங்குமாய் வழுத்தி யீண்டினர்.

(இ-ள்.) முடிவில்லாத ஆலாகலவிஷத்தை யடக்கிய திருக்கரத்தினையுடைய ஆலாலசுந்தரர் முதலிய பழைய சிவகணங்களும், சிவசாரூபங் கொண்டிருந்த பெரியோர்களு மடைந்து இருபக்கங்களிலுந் துதித்து நெருங்கினார்கள்.—எ-று.

'அந்தமில் விடத்தினை யடக்குகையுடைச்சுந்தரன்' என்பதன் வரலாற்றை மேல் தக்ஷகாண்டம் ததிசி யுத்தரப்படலத்திற் காண்க. (௭)

ஆன்முக நந்தியெம் மடிக ளுய்த்திடத்
தேன்முக நறுமலர் சிதறிச் செங்கையாற்
கான்முறை வணங்கியே கமலக் கண்ணவ
னான்முகன் மகபதி பிறரு நண்ணினர்.

(இ-ள்.) இடபமுகத்தினையுடைய திருநந்திதேவர் அருகிற் செலுத்துதலும், கமலக்கண்ணனாகிய திருமாலும் பிரமனும் இந்திரனும் மற்றைத் தேவர்களும் தேன் பொருந்திய நல்ல மலர்களைச்சிந்திச் செவ்விய கரங்களால் திருவடிகளை முறைமைப்படி வணங்கிக் கொண்டுவந்தார்கள்.—எ-று. (அ)

சல்லரி வயிர்துடி தடாரி சச்சரி
கல்லெலன விரங்குறு காடி காகளந்

சொல்லுறழ் பேரிகை திமிலை யாதியாம்
பல்லிய மியம்பின பாரி டங்களே.

(இ-ள்.) சல்லரியும், ஊதுகொம்பும், உடுக்கும், தடாரியும், சச்சரியும், கல்லென்றுமுழங்குகின்றகரடிகையும், எக்காளமும், மேகம்போலு முழக்கத்தினையுடைய பேரிகையும், திமிலையு முதலாகிய பல வாத்தியங்களைப் பூதகணங்கள் வாசித்தன.

கல் என்பது ஒலிக்குறிப்பு. (௯)

வேறு.

வேத நான்குங் குடிலையும் வேறுள
பேத மாய கலைகளும் பேரிசை
நாத மோடு நணுகின விஞ்சையர்
கீதம் யாவு மிசைத்துக் கெழுமினர்.

(இ-ள்.) நான்கு வேதங்களும் பிரணவமும், மற்றைய வேறுபாட்டினையுடைய கலைகளும் மிகுந்த நாதத்துடன் வந்தன, வித்தியாதரர்கள் சங்கீதங்களனைத்தையும் பாடிக்கொண்டு நெருங்கினார்கள்.—எ-று.

வேதம் குடிலை கலைகள் என்பன, அவற்றின் அதிதேவதைகளை. (௧0)

வள்ளல் வேணியின் மாமதி யிவ்வடியே
பிள்ளை வெண்பிறை யைப்படர் பேரராக்
கொள்ளு மென்று குறித்தது போற்றல்போல்
வெள்ளி வெண்குடை வெய்யவ ரேந்தினர்.

(இ-ள்.) சிவபெருமானது சடைமுடியிலுள்ள இளமைபொருந்திய வெண்பிறையினை, படர்ந்துசெல்லுகின்ற பெரும்பாம்புகள் பிடித்துக்கொள்ளுமென்று நினைத்துப் பூரணச்சந்திரன்வந்து அவ் வெண்பிறையினைப்பாதுகாத்தல்போல வெள்ளியாலாகிய வெண்குடையினைச் சூரியர்கள் தாங்கினார்கள்.—எ-று. (௧௧)

சகர னென்னுந் தலைவர்க டம்வழிப்
பகிர தப்பெயர்ப் பார்த்திவன் வேண்டலும்
நிகரி லோனரு ளீத்தந் தொழுக்கெனப்
புகரில் சாமரம் பூதர்கள் வீசினர்.

(இ-ள்.) சகரராஜாக்களது பரம்பரையிற் றோன்றிய பகிரதனென்னும் பெயரையுடைய அரசன் வேண்டிக்கொள்ளவும், அதனால் ஒப்பற்ற சிவபெருமான் கொடுத்தருளிய கங்கையாற்றினொழுக்கைப்போல, பூதகணங்கள் குற்றமற்ற சாமரைகளை வீசினார்கள்.—எ-று.

சாமரம் வெண்ணிறமுடைமையின் கங்கைநதிபோலவும், அவற்றை வீசுதல் அக்கங்கையினொழுக்குப்போலவுந் தோன்றின வென்க. பகிரதனது பிரயத்தினத்தாற் கங்கைநதி உலகில் வந்தமையின், 'பகிரதப்பெயர்ப்பார்த்திபன் வேண்டலும் நிகரிலோ னருளீத்தம்' என்றார். (௧௨)

சீறு மால்கரி சீயம் வயப்புலி
யேறு பூட்கை யிரலையெண் கேமுதல்
வேறு கொண்ட வியன்முகச் சாரதர்
நூறு கோடியர் நொய்தெனச் சுற்றினர்.

(இ-ள்.) சீறுகின்ற மதமயக்கத்தையுடைய யானையும், சிங்கமும், வெற்றி பொருந்திய புலியும், இடபமும், யாளியும், மானும், கரடியும் இவை முதலாகச்சொல்

லப்பட்ட வேறுபாட்டினையுடைய பெரிய முகங்களைக்கொண்ட நூறுகோடி பூதர்கள் விரைவாகச் சூழ்ந்தார்கள்.—எ-று. (௧௩)

இமிழு டைப்பல வேற்றிருங் கேதனந்
திமில விண்புன லக்கிச் சிதறுவ
வமல னைத்தொழு தாற்றுமெய் யன்பினுற்
கமல முய்த்திடுங் காட்சியர் போன்றவே.

(இ-ள்.) முசுப்பினையுடைய பல பெரிய இடபக்கொடிகள் பேரொலிபொருந்திய ஆகாயகங்கையிற் படிந்து நீரைச் சிதறுந்தன்மை (எதுபோலுமெனின்,) சிவபெருமானைத்துதித்துச் செய்கின்ற மெய்யன்பினால் அருக்கியநீரைச் சிந்துகின்ற அன்பர்களையொத்திருந்தன.—எ-று.

திமிலம்-பேரொலி. கேதனம் காட்சியர் போன்ற வென்க. (௧௪)

அன்ன காலை யகிலமு மீன்றருள்
கன்னி தன்னொடு காமர்வெள் ளேற்றின்மேன்
மன்னி வைகு மதிமுடி வானவன்
றன்ன தாலயத் தைத்தணந் தேகினான்.

(இ-ள்.) அந்தச்சமையத்தில் சர்வலோகங்களையும் பெற்றருளிய உமாதேவியாரோடு அழகிய வெள்ளிய இடபத்தின்மேல் வீற்றிருந்தருளிய சந்திரசேகரராகிய சிவபெருமான் தமது திருக்கோயிலைவிட்டுச் சென்றருளினார்.—எ-று. (௧௫)

வேறு.

தன்ன தாலய நீங்கியே கயிலையைத் தணந்து
பொன்னி னீடிய விமையமால் வரைப்புறத் தேகி
யன்ன மாடுறுஞ் சரவணப் பொய்கையை யடைந்தா
னென்னை யாளுடை நாயக னிறைவியுந் தானும்.

(இ-ள்.) என்னை யடிமையாகவுடைய சிவபெருமான் உமாதேவியாருந் தாமுமாகத் தமது திருக்கோயிலினின்றும் புறப்பட்டுத் திருக்கயிலாயத்தினின்று நீங்கிப் பொன்னினாலுயர்ந்திருக்கின்ற பெரிய இமையமலையினருகிற் சென்று அன்னப்பறவைகள் விளையாடுகின்ற சரவணப்பொய்கையை யடைந்தருளினார்.—எ-று. (௧௬)

பிறையு லாஞ்சடைத் தேவனு மவன்றனைப் பிரியா
துறையு மாதுமோ ரறுவகை யுருவுகொண் டுற்ற
சிறுவ னீர்மையை நோக்கியே திருவருள் செய்து
நிறையும் வான்புனற் பொய்கையங் கரையிடை நின்றார்.

(இ-ள்.) இளம்பிறை தவழுஞ் சடைமுடியினையுடைய சிவபெருமானும் அவ்வெம்பெருமானை விட்டு நீங்காதிருக்கின்ற உமாதேவியாரும் ஒப்பற்ற ஆறு திருவுருவங்களைக் கொண்டிருக்கின்ற குமாரக்கடவுளது தன்மையைப் பார்த்துத் திருவருள் புரிந்து நிறைந்த மிக்க நீரையுடைய சரவணப்பொய்கையின் கரையினிடத்து நின்றார்கள்.—எ-று. (௧௭)

முண்ட கச்சர வணந்தனின் மூவிரு வடிவங்
கொண்டு லாவிவீற் றிருந்திடு மொருபெருங் குமர
னண்டர் நாயகன் றன்றுட னகிலமீன் றாளைக்
கண்டு மாமுக மலர்ந்தனன் றனதுளங் களித்தான்.

(இ-ள்.) தாமரை மலர்களையுடைய சரவணப்பொய்கையில் ஆறுதிருவுருவங் களோடு முலாவியெழுந்தருளியிருக்கின்ற ஒப்பற்ற பெரிய குமாரக்கடவுள் தேவர்கள் நாயகராகிய சிவபெருமானுடன் சர்வலோகங்களையு மீன்றருளிய உமாதேவியாரையும் பார்த்தருளி, சிறந்த திருமுகமலர்ந்து திருவுள்ளங் களித்தனர்.—எ-று.
மலர்ந்தனன் - முற்றெச்சம். (கஅ)

அந்த வேலையிற் கவுரியை நோக்கியெம் மைய
னிந்த நின்மகன் றனைக்கொடு வருகென வியம்பச்
சுந்த ரங்கெழு விடையினுந் துண்ணென விழிந்து
சிந்தை கொண்டபே ராதரந் தன்னொடுஞ் சென்றாள்.

(இ-ள்.) அந்தச் சமயத்தில் உமாதேவியாரை எமது சிவபெருமான் பார்த்தருளி இதோ விருக்கின்ற உனது புத்திரனைக் கொண்டுவரக்கடவை யென்றருளிச் செய்யவும், (உடனே உமாதேவியார்) அழகுமிக்க இடபத்தினின்றும் விரைவாக இறங்கி மனத்திற் பொருந்திய மிகுந்த அன்புடன் சென்றருளினார்.—எ-று. (க௯)

சரவ ணந்தனிற் றனதுசே யாறுருத் தனையு
மிருக ரங்களா லன்புட னெடுத்தனள் புல்லித்
திருமு கங்களா றாறுபன் னிருபுயஞ் சேர்ந்த
வுருவ மொன்றெனச் செய்தன ளுலகமீன் றுடையாள்.

(இ-ள்.) எல்லாவுலகங்களையு மீன்றருளிய உமாதேவியார் சரவணப்பொய்கையில் சென்று தமது திருக்குமாரரது ஆறு திருவுருவங்களையும் தமது இரண்டு திருக்கரங்களால் அன்புடன் எடுத்தணைத்து ஆறு திருமுகமும் பன்னிரண்டு திருப்புயமுமுடைய ஒரு திருவுருவமாகச் செய்தருளினார்.—எ-று. (உ௦)

எந்தை சத்திக ளுயிரெலா மொடுங்குறு மெல்லை
முந்து போலவொன் றாகியே கூடிய முறைபோ
லந்தமில்லதோ ராறுரு வடிவுமொன் றாகிக்
கந்த னென்றுபேர் பெற்றனன் கவுரிதன் குமரன்.

(இ-ள்.) எல்லா வுயிர்களும் ஒடுங்குங்காலத்தில் எமது தந்தையாகிய சிவபெருமானது அநந்த சத்திகளும் முன்போல ஒன்றாகச் சேருந்தன்மைபோல, முடிவில்லாத ஆறுதிருவுருவங்களு மொன்றாகி, உமாதேவி புத்திரராகிய குமாரக்கடவுள் ஸ்கந்தர் என்னுந் திருநாமத்தைப் பெற்றருளினர்.—எ-று. (உக)

முன்பு புல்லிய குமரவேன் முடிதொறு முயிர்த்து
மின்பி றங்கிய புறந்தனை நீவலும் விமலை
தன்பெ ருந்தனஞ் சுரந்துபால் சொரிந்தன தலையா
மன்பெ னப்படு கின்றதித் தன்மையே யன்றோ.

(இ-ள்.) முன்பு தழுவியணைக்கப்பட்ட குமாரக்கடவுளது முடிகள்தோறும் உச்சிமோந்து மின்போல் ஒளிவிளங்குகின்ற அவரது முதுகினைத் தடவுதலும், உமாதேவியாரது பெரிய ஸ்தனங்கள் பாலைச்சுரந்து சொரிந்தன; இஃதன்றோ? தலைமையாகிய அன்பென்று சொல்லப்படுவது.—எ-று. (உஉ)

ஆதி நாயகன் கருணைபோ யமலமாய்ப் பரம
போத நீரதா யிருந்ததன் கொங்கையிற் பொழிபா
லேதி லாததோர் குருமணி வள்ளமீ தேற்றுக்
காதன் மாமகற் கன்பினா லருத்தினள் கவுரி.

(இ-ள்.) முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானது கருணையாகியும், நின்மலமாகியும், பரமஞானகுணமாகியுமுள்ள தமது ஸ்தனங்களினின்று மொழுகுகின்ற பாலை உமாதேவியார் குற்றமற்ற ஒரு மாணிக்கக்கிண்ணத்திலேந்தி விருப்பமிக்க தமது சிறந்த புதல்வருக்கு அன்புடன் உண்பித்தருளினார்.—எ-று. (உ௩)

கொங்கை யூறுபா லருந்திய குமரனைக் கொடுசென்
றெங்க ணாயகன் முன்னரோ டிறைஞ்சவித் திடலு
மங்கை யாலவன் றனையெடுத் தாலமே லணைத்துப்
பொங்கு பேரரு ளிற்மையா லிருத்தினன் புடையில்.

(இ-ள்.) தமது ஸ்தனங்களினின்றுஞ் சுரந்த பாலை யுண்பித்துக் குமாரக்கடவுளை எடுத்துக்கொண்டு சென்று எமது சிவபெருமான் திருமுன்னே வணங்கச்செய்யவும், (அவ்வெம்பெருமான்) அக்குமாரக்கடவுளை அழகிய திருக்கரத்தாலெடுத்து மார்பிலணைத்து மிக்க திருவருட்டன்மையினால் தமதருகில் வைத்தருளினார்.—எ-று. ()

அருத்தி தந்திடு குமரவே ளொருபுடை யமரப்
பெருத்த மன்னுயிர் யாவையு முன்னரோ பெற்ற
வொருத்தி தன்னையுங் கையினு லொய்யென வாங்கி
யிருத்தி னன்றன திடந்தனி லெம்மையா ளிறைவன்.

(இ-ள்.) விருப்பத்தைத் தருகின்ற குமாரக்கடவுள்ஒருபுறத்தி லிருந்தருளவும், மிக்க உயிர்களனைத்தையும் முன்னமே பெற்றருளிய உமாதேவியாரையும் கைலாகு கொடுத்து விரைவாக எடுத்து எம்மையடிமையாகவுடைய சிவபெருமான் தமதிடப்பாகத்தில் வைத்தருளினார்.—எ-று. (உ௫)

ஏல வார்குழ லிறைவிக்கு மெம்பிரான் றனக்கும்
பால னாகிய குமரவே ணடுவுறும் பான்மை
ஞால மேலுறு மிரவொடு பகலுக்கு நடுவாய்
மாலை யானதொன் றழிவின்றி வைகுமா றொக்கும்.

(இ-ள்.) மயிர்ச்சாந்தணிந்த கூந்தலையுடைய உமாதேவியாருக்கும் எமது சிவபெருமானுக்குந் திருக்குமாரராகிய சுப்பிரமணிக்கடவுள் அவ்விருவர் மத்தியிலெழுந்தருளியிருக்குந்தன்மை (எதுபோலுமெனின்,) உலகத்திற் பொருந்திய இராப்பகலென்னு மிரண்டிற்கு நடுவில் மாலையாகிய ஒரு பொழுது அழிவில்லாமல் தங்கியிருத்தலை யொத்திருக்கும்.—எ-று.

உமாதேவியாரை இரவாகவும், சிவபெருமானைப் பகலாகவும், குமாரக்கடவுளை இவற்றிடையிற் பொருந்திய மாலைக்காலமாகவு முவமித்தவாறு காண்க. (உ௬)

வேறு.

விடையுற்றிடு பரமற்குமவ் விமலைக்கும் விறற்சே
யிடையுற்றது கண்டாரயன் மகவான்முத லிமையோர்
கடையுற்றிடு கடலாமெனக் கல்லென்றிரைத் தணுகாப்
புடையுற்றன ரெதிருற்றனர் புறனுற்றனர் புகழ்வார்.

(இ-ள்.) வலிமைதங்கிய குமாரக்கடவுள் இடபவாகனத்தி லெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானுக்கும் உமாதேவியாருக்கும் மத்தியி லெழுந்தருளியிருத்தலைப் பிரமேந்திராதி தேவர்கள் பார்த்தவர்களாய்ப் பிரளயகாலத்துண்டாகுங் கடலினோசையைப்போலக் கல்லென்று ஆரவாரித்துக்கொண்டு நெருங்கி, அருகிலும் எதிரிலும் புறத்திலுஞ் சூழ்ந்து துதிக்கின்றார்கள்.—எ-று. (உ௭)

காமாரிதன் விழிதந்திடு கழிகாதல வொழியாத்
தோமாரியல் புனைகிய சூரன்கொடுந் தொழிலால்
யாமாரினு மிழுக்குற்றன மெமையாளினி யென்றுப்
பூமாரிகள் பொழிந்தார்பணிந் தெழுந்தாசிகள் புகன்றார்.

(இ-ள்.) சிவபெருமானுடைய நுதல்விழிகள் தந்தருளிய சிறந்த குமாரக்கட வுளே! கெடாத குற்றம்பொருந்திய இயல்பினையுடைய சூரபதுமனது கொடுஞ்செய் கையினால் அடியேங்கள் யாவரினும் இழிந்தவர்களாயினோம்; இனி எங்களை யாட் கொள்வீராகவென்று புஷ்பவருஷம் பொழிந்து நமஸ்கரித்தெழுந்து ஆசி மொழிகளைக் கூறினார்கள்.—எ-று. (௨௮)

வாரற்புத முறவீங்கிய வன்னத்தன முருந்தின்
மூரற்பவ ளச்சேயிதழ் முழுமாமதி வதனத்
தாரற்பெயர் மடமங்கைய ரதுகாலையி லரன்முன்
பேரற்பொடு பணிந்தேகியமுப் பெருந்தண்ணளி புரிந்தான்.

(இ-ள்.) கச்சானது அற்புத முறும்படி பருத்திருக்கின்ற அழகியகொங்கை களையும், மயிலிறகினடியை யொத்த பற்களையும், பவளம்போன்ற சிவந்த இதழையும், பூரணச்சந்திரன்போன்ற முகத்தினையுமுடைய கார்த்திகைப் பெண்கள் அந்தச் சம யத்தில் சிவபெருமான் திருமுன்னே பேரன்புடன் வணங்கி நிற்க, (சிவபெருமான்) மிகக்குவிந்த திருவருள் புரிந்தருளினார்.—எ-று. (௨௯)

கந்தன்றனை நீர்போற்றிய கடனாலிவ னுங்கண்
மைந்தன்னெனும் பெயராகுக மகிழ்வாலெவ ரேனு
நுந்தம்பக லிடையின்னவ னோன்றாள்வழி படுவோர்
தந்தங்குறை முடித்தேபரந் தனைநல்குவ மென்றான்.

(இ-ள்.) (நமது குழந்தையாகிய) இக்கந்தனை நீங்கள் பாதுகாத்த முறைமை யினால் இவன் உங்கள் மைந்தன் என்னும் பொருள்பட (கார்த்திகேயன் என்று) பெ யர் வழங்கக்கடவது; யாவராயினும் மகிழ்வுடன் உங்களுக்குரிய தினமாகிய கார்த்தி கையில் இந்தக் கந்தனது வலிய பாதங்களை யுபாசிக்கின்றவர்களது குறைகளை நிறை வேற்றி முத்தியையுங் கொடுப்போமென்று அருளிச்செய்தனர்.—எ-று. (௩0)

என்றுவருள் புரிகின்றுழி யிமையத்தவள் சேயைத்
தன்றாரு ளொடுசென்றெதிர் தழுவித்தனத் திழிபால்
பொன்றூர்மலி வள்ளத்துமுன் பூரித்தருத் திடவே
யன்றவ்முலை யமுதுக்கவை யாறெத்தொழு கினவே.

(இ-ள்.) என்றிவ்வாறு திருவருள் புரியும்பொழுது, உமாதேவியார் குமா ரக்கடவுளைத் தமது பேரருளோடுஞ்சென்று எதிரில் தழுவி ஸ்தனங்களினின்று மொழுகுகின்ற பாலினைப்பொன்மயமாகிய மாணிக்கக் கிண்ணத்தில்முன்பு நிறைத்து ஊட்டவும், அவ்வுமாதேவியாரது முலைப்பாலிற் சிந்தியதுளிகள் ஆறுபோன்று ஒழுகி யோடின.—எ-று. (௩௧)

வானோர்சுர நதிபோற்சர வணத்துடவை புகலுந்
தூநான்மறை கரைகண்டவன் முதல்வந்திடு துனிவ
ராறுவரு சிறுவோர்தமை யளித்தோன்சபித் திடலான்
மீனுயவன் வதிகின்றவர் புகும்பாலினை மிசைந்தார்.

(இ-ள்.) ஆகாயத்திற் பொருந்திய தேவகங்கையைப் போல அப்பாலின் பெருக்குச் சரவணப்பொய்கையில் பிரவேசிக்கவும், தூய்மையாகிய நான்கு வேதங்களையுங் கரைகண்ட வியாசமுனிவருக்கு முன்னே பிறந்த தமையன்மார்களாகிய நீங்காத ஆறு புத்திரர்களையும் பெற்ற தந்தையாகிய பராசரமுனிவரர் சபித்தமையினால் மீனுருவங்கொண்டு அத்தடாகத்தில் வசிக்கின்றவர்கள் அங்குப் பிரவேசித்த அப்பாலினை யுண்டார்கள்.—எ-று. (௯௨)

கயிலைக்கிறை யவள்மெய்த்தன கலசத்திழி முதுபா
லயிலுற்றிடு பொழுதத்தினி லறனிற்புடை பெயரு
மயிலைத்தனு வொருவித்தவ வடிவுற்றெழு தருவார்
துயிலுற்றுணர் பவரொத்தனர் மயலற்றிடு தொடர்பால்.

(இ-ள்.) திருக்கயிலாயத்திற்கு முதல்வியாகிய உமாதேவியாரது மெய்ம்மை பொருந்திய ஸ்தனங்களாகிய கலசத்தினின்று மொழுகிய பாலினை உண்டபொழுது, நீரிலுலாவுகின்ற மீனுருவினின்று நீங்கித் தவவடிவமடைந்து எழுந்த அப்பராசர புத்திரர்கள், அஞ்ஞானம் நீங்கிய காரணத்தினால், நித்திரைசெய்து விழித்தவர்களை யொத்தார்கள்.—எ-று. (௯௩)

அன்னாரறு வருமாயெழுந் தகன்பொய்கைவிட் டமலன்
முன்னாய்வணங் கினர்போற்றலு முனிமைந்தர்கள் பரங்கோ
டென்னாவரை பெறுகுன்றிடை யிருந்தேதவம் புரிமின்
சின்னாண்மிசை யிவன்வந்தருள் செயுமென்றருள் செய்தான்.

(இ-ள்.) அந்த ஆறு சிறுவர்களும் பெரிய அத்தடாகத்தினின்றும் வெளிப்பட்டுச் சிவபெருமான் திருமுன்னே யடைந்து வணங்கித் துதிக்கவும், (அவ்வெம்பெருமான்) முனிமைந்தர்களே! திருப்பரங்குன்றமென்று கூறும் மலையினிடத்திருந்து தவத்தைச் செய்யுங்கள், சில காலத்திற்குப் பின்பு இந்தக்கந்தன் வந்து உங்களுக்கு அருள்புரிவான் என்று திருவாய்மலர்ந்தருளினார்.—எ-று. (௯௪)

நன்றாமெனத் தொழுதன்னவர் நாதன்விடை பெற்றே
சென்றாருடு மடவாரொடு திருமாலயன் முதலா
நின்றார்தமக் கருள்செய்தவர் நிலயம்புக வருளிப்
பொன்றாழ்சடை யினன்வெள்ளியம் பொருப்பின்றலை புக்கான்.

(இ-ள்.) அம்முனி புத்திரர்கள் அவ்வாறே நல்லதென்று வணங்கிச் சிவபெருமானிடத்து விடைபெற்றுச் சென்றார்கள். பின்பு, கார்த்திகைப் பெண்களுடன் திருமால் பிரமன்முதலாகநின்றவர்களுக்கெல்லாம் திருவருள் புரிந்து அவரவர்க ளிருப்பிடத்திற்குச் செல்லும்படி கட்டளையிட்டருளிப் பொன்னிறமாகத் தாழ்ந்து விளங்குஞ் சடைமுடியினையுடைய சிவபெருமான் திருக்கயிலாய மலையினிடத்து எழுந்தருளினார்.—எ-று. (௯௫)

அடையார்புர மெரிசெய்திடு மமலன்கயி லையிற்போய்
விடையூர்தியி னிழிந்தேதனி விறற்சேயொடும் வெற்பின்
மடவாளொடு நடவாப்பொலன் மாமந்திரத் தலைவயி
னிடையாரரி யணைமீமிசை யிருந்தானருள் புரிந்தே.

(இ-ள்.) பகைவர்களது முப்புரங்களையு மெரித்தருளிய சிவபெருமான் திருக்கயிலை மலையிற்சென்று இடபவாகனத்தினின்று மிறங்கி ஒப்பற்ற வெற்றியினையுடைய குமாரக்கடவுளுடனும் பார்வதி தேவியாருடனும் நடந்து, அழகிய பெரிய திரு

க்கோயிலினிடத்துள்ள சிங்காசனத்தின்மீது (அங்குள்ளவர்கட்குத்) திருவருள் புரிந் தெழுந்தருளி யிருந்தனர்.—எ-று. (௬௬)

சேயோனெனு முன்றோன்றனைச் சிலம்பின்வரு மொன்பான்
மாயோருந வியமைந்தரு மற்றுள்ளவி லக்கந்
தூயோர்களுந் தொழுதேமலர் தூவிப்பணிந் தேத்தி
யாயோர்தம துயிரேயென வவனைச்சூழ்ந் தணைந்தார்.

(இ-ள்.) சேய் என்னுந் திருநாமத்தினையுடைய முதல்வராகிய குமாரக்கடவுளை உமாதேவியாரது திருவடிச் சிலம்பிற்றோன்றியவொன்பது சத்திகளாற் பெறப்பட்ட நவவீரர்களும் மற்றுள்ள தூய்மைபொருந்திய இலக்ஷம் வீரர்களும் வணங்கிப் புஷ்பங்களைச் சிந்தித் தாழ்ந்து துதித்து அவர்கள் தங்களுயிரைப்போல அக்குமாரக் கடவுளைக்குறிச் சூழ்ந்திருந்தார்கள்.—எ-று.

ஒன்பான் மாயோர் - நவசத்திகள். (௬௭)

சரவணப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம் - ௧௦௫௧.

---

௨

முருகன்றுணை.

# திருவிளையாட்டுப்படலம்.

அனந்தாம நாகவுமை யம்மையொடு வெம்மா
னனந்தலையில் வைகிய நலங்கொள்குமரேச
னினங்கொடு தொடர்ந்தவிளை யாரொடு மெழுந்தே
மனங்கொளரு ளின்மைதனி னாடலை மதித்தான்.

(இ-ள்.) பின்பு உமாதேவியாருக்கும் சிவபெருமானுக்கும் நடுவில் எழுந்தருளியிருந்த நன்மை பொருந்திய குமாரக்கடவுள் கூட்டமாகத் தம்மைப் பின்றொடர்ந்துவந்த தம்பியர்களாகிய இலக்ஷத்தொன்பது வீரர்களுடன் எழுந்து அருள் பொருந்திய திருவுள்ளத்திற்கிசைந்தபடி திருவிளையாடல் புரிதற்குத் திருவுள்ளங்கொண்டருளினார்.—எ-று. (௧)

தட்டைமெருகி ழுங்கழல் சதங்கைகள் சிலம்பக்
கட்டழகு மேயவரை ஞாண்மணி கறங்க
வட்டமணி குண்டல மதாணிநுதல் வீர
பட்டிகைமி ளக்குமர னாடல்பயில் கின்றான்.

(இ-ள்.) தண்டையும், சிலம்பும், அழகிய வீரக்கழலும், சிறுசதங்கைகளும் சப்திக்கவும், பேரழகினையுடைய கிங்கிணிச்சதங்கை யொலிக்கவும், வட்டமாகிய அழகிய இரத்தினகுண்டலமும் மதாணியும் நெற்றியிலணிந்த வீரப்பட்டிகையும் பிரகாசிக்கவும் குமாரக்கடவுள் திருவிளையாடல் செய்தருள்வாராயினர்.—எ-று.

தண்டையென்பது, தட்டை என வலித்தல் விகாரம் பெற்றது. அரைஞாண் - கிங்கிணி. (௨)

மன்றுதொறு லாவுமலர் வாவிதொ றுலாவுந்
துன்றுசிறு தென்றறவழ் சோலைதொ றுலாவு
மென்றுமுலை வாதுலவும் யாறுதொ றுலாவுங்
குன்றுதொறு லாவுமுறை யுங்குமர வேளே.

(இ-ள்.) குமாரக்கடவுள் மன்றுகள்தோறு முலாவுவார்; மலர்கள் பொருந்திய தடாகங்கள்றோறு முலாவுவார்; நெருங்கிய சிறு தென்றற்காற்றுலாவுகின்ற சோலைகள்தோறு முலாவுவார்; எப்பொழுதுங் கெடாமல் பாய்கின்ற நீரினையுடைய நதிகள்தோறு முலாவுவார்; மலைகள்தோறு முலாவுவார்; அம்மலைகள்தோறு மெழுந்தருளியுமிருப்பார்.—எ-று. (௩)

குளத்தி னுலவுந்நதி குறைந்திடு துருத்திக்
கிளத்தி னுலவுந்நிரைகொள் கந்துடை நிலத்தாங்
களத்தி னுலவும்பனவர் சாலையுல வும்மென்
றுளத்தி னுலவுஞ்சிவ னுமைக்கினிய மைந்தன்.

(இ-ள்.) என துள்ளத்தி லுலாவுகின்ற சிவசத்திகளது இனிய திருக்குமாரராகிய முருகக்கடவுள் குளங்களிலுலாவுவார்; ஆற்றிடைக்குறையாகிய நிலங்களி லுலாவுவார்; பசுக்கள் தங்கி யுராய்கின்ற ஆத்தீண்டு குற்றிகளையுடைய இடங்களி லுலாவுவார்; முனிவர்களது பன்னகசாலைகளி லுலாவுவார்.—எ-று.

துருத்தி - ஆற்றிடைக்குறை. கந்து - ஆதீண்டுகுற்றி. (௪)

இந்துமுடி முன்னவ னிடந்தொறு முலாவுந்
தந்தையுடன் யாயமர் தலங்களி னுலாவுங்
கந்தமலர் நீபமுறை கண்டொறு முலாவுஞ்
செந்தமிழ் வடாதுகலை சேர்ந்துழி யுலாவும்.

(இ-ள்.) சந்திரசேகரராகிய சிவபெருமா னெழுந்தருளி யிருக்கின்ற க்ஷேத்திரங்கள்தோறு முலாவுவார்; சிவபெருமானு முமாதேவியாரு மெழுந்தருளியிருக்கு மிடங்கள்தோறு முலாவுவார்; மணம்பொருந்திய மலர்களையுடைய கடம்பவிருக்ஷங்களிருக்கு மிடங்களிலுலாவுவார்; செந்தமிழும் வடகலையுஞ் சேர்ந்துவழங்குமிடங்களி லுலாவுவார்.—எ-று. (௫)

மண்ணிடை யுலாவுநெடு மாதிர முலாவு
மெண்ணிடை யுறாதகட லெங்கணு முலாவும்
விண்ணிடை யுலாவுமதி வெய்யவ னுடுக்கோள்
கண்ணிடை யுலாவுமிறை கண்ணில்வரு மண்ணல்.

(இ-ள்.) சிவபெருமானது திருக்கண்களினின்றுந் தோன்றிய குமாரக்கடவுள் மண்ணுலகத்தி லுலாவுவார்; பெரிய திக்குகள்தோறு முலாவுவார்; அளவிடப்படாத கடல்களெங்கு முலாவுவார்; வானத்திலுலாவுவார்; சந்திரன் சூரியன் நக்ஷத்திரம் கிரகங்கள் முதலியவை வசிக்கு மிடங்களி லுலாவுவார்.—எ-று. (௬)

கந்தருவர் சித்தர்கரு டத்தொகைய ரேனோர்
தந்தமுல காதிய தலந்தொறு முலாவு
மிந்திர னிருந்ததொல் லிடந்தனி னுலாவு
முந்துதவர் வைகுமுல கந்தொறு முலாவும்.

(இ-ள்.) கந்தருவர்களும் சித்தர்களும் கருடர்களும் மற்றையர்களும் வசிக்கின்ற தங்கள்தங்கள் உலகமுதலிய விடங்களிலுலாவுவார்; இந்திரன் வாழ்ந்திருந்த பழைய சுவர்க்கத்தி லுலாவுவார்; உயர்ந்த தவசிகள் வசிக்கு முலகத்தி லுலாவுவார்.

48

அங்கமல நான்முக னரும்பத முலாவு
மங்கல நிறைந்ததிரு மால்பத முலாவு
மெங்கள்பெரு மாட்டித னிரும்பத முலாவுந்
திங்கண்முடி மேற்புனை சிவன்பத முலாவும்.

(இ-ள்.) அழகிய கமலாசனனாகிய பிரமனது அரிய பதத்தி லுலாவுவார்; மங்கலகரம் நிறைந்த திருமால் பதத்திலுலாவுவார்; எமது பெருமாட்டியாகியசிவசத்தியின் பதத்தி லுலாவுவார், சந்திரனைத் திருமுடியிலணிந்த சிவபெருமானது பதத்தி லுலாவுவார்.—எ-று. (அ)

இப்புவியி லண்டநிரை யெங்கனு முலாவு
மப்புமழ லாதிவளி யண்டமு முலாவு
மொப்பில்புவ னங்கள்பிற வுள்ளவு முலாவுஞ்
செப்பரிய வோர்பரசி வன்றனது மைந்தன்.

(இ-ள்.) சொல்லுதற்கரிய ஒப்பற்ற சிவபெருமானது திருப்புதல்வராகிய குமாரக்கடவுள் இந்தப் பிருதிவியண்ட வரிசைகளிலெல்லாமுலாவுவார்; அப்பு-தேயு-வாயு-ஆகாயமாகிய இவற்றி னண்டங்களி லுலாவுவார்; மற்றுள்ள ஒப்பற்ற புவனங்களிலு முலாவுவார்.—எ-று. (௯)

வேறு.

இருமுவகை வடிவுக்கொடு மீளையோனெனத் திரியு
மொருமாமுக மொடுசென்றிடு முயர்காளையி னுலவும்
பெருமாமறை யவரோவென முனிவோரெனப் பெயருந்
தெரிவார்களை மறவீரரிற் றிரிதந்திடுஞ் செவ்வேள்.

(இ-ள்.) குமாரக்கடவுள் ஆறு திருமுகங்களோடு பாலசுப்பிரமணியராகவுலாவுவார்; ஒரு அழகிய திருமுகத்துடன் செல்லுவார்; உயர்ந்த வாலிபனைப்போல உலாவுவார்; பெரிய வேதங்களை யோதுகின்ற வேதியர்களைப் போலவும் முனிவர்களைப் போலவும் உலாவுவார்; நீண்ட பாணங்களைக்கொண்டு இலக்குப் பார்க்கின்ற கொடிய வீரர்களைப்போலத் திரிவார்.—எ-று. (௧௦)

காலிற்செலும் பரியிற்செலுங் கரியிற்செலுங் கடுந்தேர்
மேலிற்செலுந் தனியாளியின் மிசையிற்செலுந் தகரின்
பாலிற்செலு மானத்திடை பரிவிற்செலும் விண்ணின்
மாலிற்செலும் பொருசூரொடு மலையச்செலும் வலியோன்.

(இ-ள்.) எதிர்த்த சூரபதுமனுடன் போர்செய்யும்படி சென்றருளும் பராக்கிரமத்தையுடைய குமாரக்கடவுள் காலால் நடந்துலாவுவார்; குதிரைமீதேறி யுலாவுவார்; யானைமீதேறி யுலாவுவார்; வேகமாக வோடுகின்ற தேர்மீதேறி யுலாவுவார்; ஒப்பற்ற யாளியின்மீதேறி யுலாவுவார்; ஆட்டின்மேலேறி யுலாவுவார்; விமானத்தின்மேல் விருப்பத்துடன் ஏறியுலாவுவார்; ஆகாயத்தின்க ணுள்ள மேகங்களி லேறியுலாவுவார்.—எ-று.

விமானம் என்பது, மானம் என முதற்குறையாயிற்று. (௧௧)

பாடின்படு மலியார்த்திடும் பனிமென்குழ லிசைக்குங்
கோடங்கொலி புரிவித்திடுங் குரல்வீணைகள் பயிலு
மீடொன்றிய சிறுபல்லிய மெறியும்மெவ ரெவரு
நாடிப்படி பாடுங்களி நடனஞ்செயு முருகன்.

(இ-ள்.) முருகக்கடவுள் ஓசையினிதாகிய ஒலிக்கின்ற மணிகளை முழக்கு வார்; மூங்கிலினு லமைந்த மெல்லிய புள்ளாங்குழலை யூதுவார்; சங்கவாத்தியத்தை யூதுவார்; குரல்முதலிய சப்த சுரங்களையுடைய வீணைகளை வாசிப்பார்; சடாகப்பொருந்திய சிறு பறைகளை வாசிப்பார்; யாவர்களும் விரும்பும்படி பாடுவார்; களிப்பைத் தருகின்ற நடனத்தைச் செய்வார்.—எ-று.

பாடின்படுமணி - ஓசையினிதாகிய ஒலிக்கின்றமணி. பாடு-ஓசை. இதனை, "பாடின்படுமணி யிரட்டவொருகை" என்னுந் திருமுருகாற்றுப் படைக்கு நச்சினார்க்கினியர் கூறிய வுரையானறிக. (௪௨)

இன்னனபல வுருவங்கொடி யாண்டுங்குமரேசன்
னன்னயமொ டாடுற்றுழி யனைநாடினள் வியவா
முன்னையுல கீனாயின் றழிவின் றுறை முதல்வன்
பொன்னேர்கழ லிணைதாழ்ந்தனள் போற்றிப்புகல் கின்றாள்.

(இ-ள்.) இவ்வாருகப் பல வுருவங்களைக்கொண்டு எவ்விடங்களிலுங் குமாரக்கடவுள் மிகுந்த விருப்பத்துடன் திருவிளையாடல் செய்யும்பொழுது, முன்னமே சர்வலோகங்களையு மீன்றருளிய உமாதேவியார் பார்த்து மிகவும் ஆச்சரியமடைந்து, அழிவற்று விளங்குகின்ற சிவபெருமானது பொன்போலு மிரண்டு திருவடிகளையும் வணங்கித் துதித்துக் கூறுகின்றார்.—எ-று. (௪௩)

கூடுற்றநங் குமரன்சிறு குழவிப்பரு வத்தே
யாடற்றொழி லெனக்கற்புத மாகும்மவன் போல்வார்
நேடிற்பிற ரிலமாயையி னின்னேர்தரு மன்னோன்
பீடுற்றிடு நெறிதன்னையெம் பெருமான்மொழி கென்றாள்.

(இ-ள்.) எமது பெருமானே! நம்மிடத்துத் தோன்றிய நமது குமாரன் சிறிய குழந்தைப்பருவத்தில் விளையாடுகின்றதொழில் எனக்கு மிகவும் ஆச்சரியமாக விருக்கின்றது; விசாரிக்குமிடத்தில் மாயாவித்தையில் அவனைப் போன்றவர்கள் வேறொருவருமில்லை; தேவரீரை யொத்த அக்குமாரனது சிறப்புமிக்க தன்மைகளனைத்தையுங் கூறியருள வேண்டுமென்று பிரார்த்தித்தனர்.—எ-று. (௪௪)

அல்லார்குழ லவளின்னண மறியார்களின் வினவ
வொல்லார்புர மடுகண்ணுத லுன்றன்மக னியல்பை
யெல்லாவுயிர் களுமுய்ந்திட வெமைநீகட வினையா
னல்லாயிது கேண்மோவென வருளாலிவை நவில்வான்.

(இ-ள்.) இருள்போலுங் கரிய கூந்தலையுடைய உமாதேவியார் அறியாதவர்கள் போல இவ்வாறு வினவுதலும், பகைவர்களது முப்புரங்களையு மெரித்தழித்தருளிய நெற்றிக்கண்ணராகிய சிவபெருமான் பார்வதியே! உனது புத்திரனுடைய தன்மையைச் சர்வான்மாக்களுமுய்யும்வண்ணம் நீ எம்மைவினவினுய், இதனைக்கேட்பாயாகவென்று கருணையுடன் இவற்றை யருளிச்செய்கின்றார்.—எ-று. (௪௫)

வேறு.

ஈங்கன நமது கண்ணி னெய்திய குமரன் கங்கை
தாங்கினள் கொண்டு சென்று சரவணத் திடுத லாலே
காங்கேய னெனப்பேர் பெற்றான் காமர்பூஞ் சரவ ணத்தின்
பாங்கரில் வருத லாலே சரவண பவனென் றுளான்.

(இ-ள்.) இவ்விடத்தில் நமது கண்ணிற்றோன்றிய குமரன், கங்கையானவள் சுமந்துகொண்டுபோய்ச் சரவணப்பொய்கையில் சேர்த்த காரணத்தினால் காங்கேயன் என்னும் பெயரைப்பெற்றனன் ; அழகு மிக்க பொலிவினையுடைய சரவணப் பொய்கையில் குழந்தையாகத் தோன்றினமையால் சரவணபவன் என்னும் பெயரைப் பெற்றனன்.—எ-று. (கசு)

தாயென வாரல் போந்து தனங்கொள்பா லருந்த லாலே
சேயமீதார் கார்த்தி கேய னென்றொரு தொல்பேர் பெற்ருன்
ஏயவன் வடிவ மாறுந் திரட்டியீ ரொன்ருச் செய்தா
லாயத ஞலே கந்த ஞமெனு நாமம் பெற்ருன்.

(இ-ள்.) கார்த்திகை மாதர்கள் தாய்மார்களாக வந்து தங்கள் ஸ்தனங்களிற் பொருந்திய பாலையூட்டிய காரணத்தினால், சிறப்புப்பொருந்திய கார்த்திகேயன் என்று கூறும் பழைமையாகிய பெயரைப் பெற்றனன். அக்குழந்தையினது ஆறு உருவங்களையும் நீ ஒன்ருகத்திரட்டிச்சேர்த்தனை, அந்தக்காரணத்தினால் கந்தன் என்னும் பெயரைப் பெற்றனன்.—எ-று. (கஎ)

நன்முக மிருமூன் றுண்டா னமக்கவை தாமே கந்தன்
றன்முக மாகி யுற்ற தாரகப் பிரம மாகி
முன்மொழி கின்ற நந்த மூவிரண் டெழுத்து மொன்ரு
யுன்மக ஞமத் தோரா றெழுத்தென வுற்ற வன்றே.

(இ-ள்.) நமக்குச் சிறந்த ஆறுமுகங்களுண்டு ; அந்த ஆறுமுகங்களுமே இந்தக் கந்தனது முகங்களாகப் பொருந்தின. தாரகப் பிரமஸ்வ ரூபமாய் முதன்மையாகச் சொல்லப்பட்ட நமது சடாக்ஷரங்களும் ஒன்ருகச்சேர்ந்து இவ்வுனது குமாரனது பெயரின் ஒப்பற்ற ஆறெழுத்தாகப் பொருந்தின.—எ-று.

நந்தமூவிரண்டெழுத்தும் என்றது, பிரணவத்தோடு கூடிய ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தை. உன்மகஞமத்தோரா றெழுத்தென்றது, குமாரக்கடவுளது ஸ்ரீசடாக்ஷரமந்திரத்தை. (கஅ)

ஆதலி னமது சத்தி யறுமுக னவனும் யாமும்
பேதக மன்ரு னம்போற் பிரிவில னியாண்டு நின்ரு
னேதமில் குழவி போல்வா னியாவையு முணர்ந்தான் சீரும்
போதமு மழிவில் வீடும் போற்றினர்க் கருள வல்லான்.

(இ-ள்.) ஆதலால் இந்தச் சண்முகன் நமது சத்தியேயாம். அவனுக்கும் எமக்கும் வேறுபாடில்லை. நம்மைப் போலவே சர்வ பரிபூரணஞக விருக்கின்ருன். குற்றமற்ற குழந்தையை யொப்பான் ; முற்றுணர்ச்சியையுடையவன் ; தன்னைத் துதிப்பவர்களுக்குச் செல்வத்தையும் ஞானத்தையும் அழிவற்ற முத்தியையு மளிக்கத்தக்கவன்.—எ-று.

பேதகம்.- வேறுபாடு. (ககூ)

மேலினி யினைய செவ்வேள் விரிஞ்சனைச் சுருதிக் கெல்லா
மூலம தாகி நின்ற மொழிப்பொருள் வினவி யன்னான்
மாலுறச் சென்னி தாக்கி வன்சிறைப் படுத்தித் தானே
ஞாலமன் னுயிரை யெல்லா நல்கியே நன்றும் பன்ஞள்.

(இ-ள்.) இனி, அந்தக் குமாரன் பிரமனை வேதங்களுக்கெல்லா மூலமாக வுள்ள பிரணவத்தின் பொருளைக் கேட்டு அவன் மயங்கும் வண்ணந் தலையிற்குட்டிக்

கொடிய சிறையிலிட்டுத் தானே உலகத்துள்ள நிலைபெற்ற உயிர்களனைத்தையுஞ் சிருஷ்டித்துக்கொண்டு அநேககால மிருப்பான்.—எ-று. (௨௦)

தாரகன் றன்னைச் சீயத் தடம்பெரு முகத்தி னானைச்
சூரபன் மாவை யேனை யவுணரைத் தொலைவு செய்தே
யாரணன் மகவா னேனை யமரர்க ளிடுக்க ணீக்கிப்
பேரருள் புரிவ னின்சேய் பின்னர்நீ காண்டி யென்றான்.

(இ-ள்.) உனது புதல்வனாகிய அந்தக் கந்தன் தாரகாசுரனையும், பெரிய சிங்கமுகாசுரனையும், சூரபன்மனையும் மற்றைய அசுரர்களையுஞ் சங்கரித்துப் பிரமேந்திராதிதேவர்களது துன்பங்களையொழித்து மிக்க கிருபைசெய்வான்; அதனைப் பின்பு நீ பார்ப்பாயாக வென்றருளிச் செய்தனர்.—எ-று. (௨௧)

என்றலு மிளையோன் செய்கை யெம்பெரு மாட்டி கேளா
நன்றென மகிழ்ச்சி கொண்டு நணுகுறு முலக மெல்லாஞ்
சென்றரு ளாடல் செய்யுந் திருந்தகு குமரன் பின்ன
ரொன்றொரு விளையாட் டுள்ளத் துன்னியே புரித லுற்றான்.

(இ-ள்.) இவ்வாறு சிவபெருமா னருளிச்செய்பவும், அக்குமாரக்கடவுளது செய்கையை எமது தாயாகிய உமாதேவியார் கேட்டருளி நன்றென்று மகிழ்வடைந்திருக்கவும், எல்லா வுலகங்களிலுஞ் சென்று அருள்விளையாடல் புரிந்தருளுஞ் சிறப்பு மிக்க குமாரக்கடவுள் பின்பு நிலைபெற்ற ஒரு திருவிளையாடலைத் திருவுள்ளத்திற் சிந்தித்துச் செய்யத் தொடங்கினார்.—எ-று. (௨௨)

குலகிரி யனைத்து மோர்பாற் கூட்டிடு மவற்றைப் பின்னர்த்
தலைதடு மாற்ற மாகத் தரையிடை நிறுவு மெல்லா
வலைகட லனைத்து மொன்றா வாக்குறு மாழி வெற்பைப்
பிலனுற வழுத்துங் கங்கைப் பெருநதி யடைக்கு மன்றே.

(இ-ள்.) அஷ்டகுல பர்வதங்களையும் ஒரு இடத்தில் ஒன்றாகக் கூட்டுவார்; பின்பு அப் பர்வதங்களை இடமாறுதலாகப் பூமியில் வைப்பார்; அலைகின்ற எல்லாக் கடல்களையும் ஒன்றாகச்சேர்ப்பார்; சக்கரவாளகிரியைப் பாதலத்திற் செல்ல அழுத்துவார்; பெரிய கங்காநதியையடைப்பார்.—எ-று. (௨௩)

இருள்கெழு பிலத்துள் வைகு மெண்டொகைப் பணியும் பற்றிப்
பொருள்கெழு மேரு வாதி யடுக்கலிற் பூட்டி வீக்கி
யருள்கெழு குமர வள்ள லாவிகட் கூறின் றாக
வுருள்கெழு சிறுதே ராக்கொண் டொல்லென வுருட்டிச் செல்லும்.

(இ-ள்.) இருள் நிறைந்த பாதலலோகத்தில் வசிக்கின்ற அஷ்டமா நாகங்களையும் பிடித்துப் பொன்னாக விளங்குகின்ற மேரு முதலாகிய மலைகளிற் கட்டியிறுக்கி, கருணாநிதியாகிய குமாரக்கடவுள் உயிர்களுக்கு ஒரு துன்பமுமில்லாமல், உருளை மிக்க சிறுதேராகக் கொண்டு விரைந்து உருட்டி விளையாடுவார்.—எ-று. (௨௪)

ஆசையங் கரிக டம்மை யங்கைகொண் டொன்றோ டொன்று
பூசல்செய் விக்கும் வானிற் போந்திடுங் கங்கை நீராற்
காய்சின வடவை மாற்றுங் கவின்சிறைக் கலுழ னோடு
வாசுகி தன்னைப் பற்றி மாறிகல் விளைக்கு மன்றே.

(இ-ள்.) அஷ்டதிக்கியானைகளைத் தமது அழகிய திருக்கரத்திற் பிடித்து ஒன்றோடொன்று போர்செய்ய மூட்டுவிப்பார், ஆகாயத்திற் செல்லுகின்ற கங்காநதி

சீற்றல் மிக்க கொடுமையினையுடைய வடவாமுகாக்கினியைத் தணிப்பார்; அழகிய சிறகினையுடைய கருடனுடன் வாசுகியென்னு நாகத்தைப் பிடித்துப் பகைமையாகப் போர்விளைவிப்பார்.—எ-று. (உ௫)

பாதல நிலயத் துள்ள புயங்கரைப் படியிற் சேர்த்திப்
பூதல கிரிக ளெல்லாம் புகுந்திடப் பிலத்தி னுய்க்கு
மாதவ முதல்வன் றன்னை யவிர்மதிப் பதத்தி லோச்சுஞ்
சீதள மதியை வெய்யோன் செல்நெறிப் படுத்துச் செல்லும்.

(இ-ள்.) பாதலலோகத்துள்ள சர்ப்பங்களைப் பூமியிற் கொண்டுவந்து சேர்த்து நிலவுலகத்துள்ள மலைகளனைத்தும் பாதலத்திற் செல்லும்படி செய்வார். சூரியனை விளங்குகின்ற சந்திரபதத்தில் எடுத்தெறிவார்; குளிர்ச்சிபொருந்திய சந்திரனைச் சூரியன் செல்லுகின்ற மார்க்கத்தில் போட்டுச் செல்லுவார்.—எ-று. (உசு)

எண்டிசை புரந்த தேவ ரிருந்தநீள் பதங்க ளெல்லாம்
பண்டுள திறந்து நீங்கப் பறித்தனன் பிறழ வைக்குங்
கொண்டலி னிருந்த மின்னின் குழுவுட னுருமும் பற்றி
வண்டின முறாத செங்கண் மாலைசெய் தணியு மன்றே.

(இ-ள்.) எட்டுத்திக்குகளையும் பாதுகாக்கின்ற அஷ்டதிக்குப் பாலகர்கள் இருந்திருந்த பழமையாகிய பதவிகளனைத்தையும், முன்னிருந்த தன்மையினின்று நீங்கப் பிடுங்கி மாற்றிவைப்பார். மேகத்தினிடத்திருந்த மின்னற்கூட்டங்களுடன் இடிகளையும் பிடித்து வண்டினங்கள் மொய்க்கப்பெறாத செவ்விய குளிர்ந்த மாலையாகச் சமைத்து அணிந்துகொள்ளுவார்.—எ-று.

மின்னினைக் கயிறாகவும், இடியை மலராகவுங் கொண்டு மாலை செய்து தரிப்பரென்க. (உஎ)

வெய்யவர் மதிகோ ளேனோர் விண்படர் விமானந் தேர்கள்
மொய்யுறப் பிணித்த பாச முழுவதுந் துருவ னென்போன்
கையுறு மவற்றில் வேண்டுங் கயிற்றினை யிடைக்க ணீர்ந்து
வையகந் திசைமிச் செல்ல வானியில் விடுக்கு மைந்தன்.

(இ-ள்.) குமாரக்கடவுள் ஆகாயத்திற் செல்லுகின்ற சூரியர்கள் சந்திரன் கிரகங்கள் முதலியவர்களது விமானங்களுந் தேர்களும் நெருங்கக்கட்டிய கயிறுகளனைத்தும் துருவனது கையிற் பொருந்தியிருப்பனவற்றுள், தமக்குவேண்டிய கயிற்றை இடையில் அறுத்து, உலகத்திற்குந் திக்குகளுக்கும் மேலேசெல்லும்படி காற்றாடியைப்போல விடுவார்.—எ-று.

வானி - துகிற்கொடி, ஈண்டுக் காற்றாடி யென்னும் பொருளில் நின்றது.()

வடித்தவிர் விசும்பிற் செல்லும் வார்சிலை யிரண்டும் பற்றி
யுடுத்திரள் பலகோ ளின்ன வுண்டையாக் கொண்டு வானோர்
முடித்தலை புரந்தோள் கண்ட முகம்படக் குறியா வெய்தே
யடற்றனு விஞ்சை காட்டு மாறிரு தடந்தோ ளண்ணல்.

(இ-ள்.) பன்னிரண்டு திருத்தோள்களையுடைய ஸ்ரீ சண்முகக்கடவுள் குற்றமற்ற ஆகாயத்திற் செல்லுகின்ற நீண்ட விற்களிரண்டையும் பிடித்து நக்ஷத்திரக் கூட்டங்களையும் பலகிரகங்களையும் இவைபோல்வனவற்றையும் உருண்டையாகக்கொண்டு தேவர்களது முடி-தலை-மார்பு-தோள்-கழுத்து-முகம் இவைகளிற் பொருந்தக் குறியாகப் பிரயோகித்து வலிய வில்வித்தையைக் காட்டுவார்.—எ-று.

வார்சிலை யிரண்டும் என்றது, தநுசிராசியாகிய வில்லும், இந்திர வில்லு மென வறிக. (உ.க.)

இத்திற முலகந் தன்னி லிம்பரோ டும்ப ரஞ்சிச்
சித்தமெய் தளர்த லன்றிச் சிதைவுறா வகைமை நேர்ந்து
வித்தக வெண்ணி லாடல் வியப்பொடு புரிந்தா னாதி
முத்தர்தம் விழியி னன்றி முன்னுறா நிமல மூர்த்தி.

(இ-ள்.) சீவன்முத்தர்களது ஞானநோக்கத்தின்முன்னேயன்றி (மற்றையர்களது ஊனநோக்கத்தின்) முன்னே பொருந்துதலில்லாத நின்மலராகிய முருகக்கடவுள், இவ்வாறு உலகத்தில், இந்நிலவுலகத்தவருடன் தேவர்களும் அச்சங்கொண்டு மனமும் உடலும் நடுங்குதலேயன்றி அழியாதிருக்குந் தன்மையைத் தேர்ந்து, ஞானமயமாகிய அளவற்ற திருவிளையாடல்களை ஆச்சரியமாகச் செய்தருளினார்.—எ-று.

ஆதிமுத்தர் - சீவன்முத்தர்கள். (௩0)

ஆயது காலை ஞாலத் தவுணர்க ளதனை நோக்கி
யேயிது செய்தார் யாரே யென்றுவிம் மிதரா யெங்க
ணாயகன் வடிவந் தன்னை நனிபெரும் பவத்துட் டங்குந்
தீயவ ராத லாலே கண்டிலர் திகைக்க முற்றார்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமையத்தில் உலகத்திலுள்ள அசுரர்கள் அதனைப் பார்த்து, ஏ! இது செய்தவர்கள் யாவரென்று ஆச்சரியமுற்றவர்களாய், மிக்கபெரும் பாவத்திற்பொருந்திய கொடியவர்களாதலால் எமது முதல்வராகிய குமாரக்கடவுளது திருவுருவத்தைக் காணாது மயங்கினார்கள்.—எ-று. (௩௧)

சிலபகல் பின்னும் வைகுந் திறத்திய லாயுள் கொண்டே
யுலகினி லவுணர் யாரு முறைதலி னவர்க்குத் தன்மெய்
நிலைமைகாட் டாது செவ்வே ளிலாவுற நேடி யன்னோர்
மலரயன் றெரியா வண்ணல் மாயமே யீதெ யென்றார்.

(இ-ள்.) அவ்வசுரர்கள் அனைவரும் பின்னுஞ் சிலகாலம் வசிக்குந் தன்மையினையுடைய வாழ்நாளைப்பெற்று உலகத்தில் வசித்திருக்கவேண்டுதலின், குமாரக்கடவுள் அவ்வசுரர்களுக்குத் தமது திருவுருவத்தின் தன்மையைக் காட்டாமல் விளையாடல் செய்தருளவும், அவ்வசுரர்கள் தேடிப்பார்த்து (ஒன்றுங் காணாதவர்களாய்) இது பிரமனால் காணப்படாதவராகிய சிவபெருமானது மாயாலீலையே யென்று கருதினார்கள்.—எ-று. (௩௨)

ஆயதோர் குமரன் செய்கை யவனியின் மாக்கள் காணாத்
தீயன முறைபால் வெங்கோல் செலுத்திய வவுண ரெல்லா
மாய்வது திண்ணம் போலு மற்றதற் கேது வாக
வேயின விம்மி தங்கொ லிதுவென வெருவ லுற்றார்.

(இ-ள்.) அவ்வாறாகியகுமாரக்கடவுளது திருவிளையாடலை உலகத்திலுள்ள மனிதர்கள்பார்த்து, தீமையாகக் கொடுங்கோல் செலுத்திய அசுரர்களனைவரும் அழிந்துபோவது உண்மைபோலும், அதற்குக் காரணமாகப் பொருந்திய விம்மிதமோ இவ்வாறு காணப்படுவதுதென்று நடுக்கமுற்றார்கள்.—எ-று.

தீங்கு நேருங்காலத்து அதற்கறிகுறியாக முன்னர்துன்னிமித்தந் தோன்றுதல் முறைமையாகலின், இந்த விம்மிதங்களைக்கண்ட மனிதர்கள் இது அசுரர்கள்

அழிவதற்கு முன்னே அறிகுறியாகக் காணப்படுந் துன்னிமித்தம்போலுமென்று நடுங்கினவென்க. (கங)

புவனியின் மாக்க ளின்ன புகறலுந் திசைகாப் பாளர்
தலைவனே மதிய மேனோர் சண்முகன் செய்கை நாடி
யவனுரு வதனைக் காணு ரவுணர்தம் வினையு மன்று
லெவரிது செய்தார் கொல்லென் றிரங்கினர் யாருங் கூடி.

(இ-ள்.) உலகத்திலுள்ள மனிதர்கள் இவ்வாறு கூறவும், திக்குப்பாலகர்களும் சூரியனும் சந்திரனும் மற்றவர்களு மொருங்குசேர்ந்து குமாரக்கடவுளது செய்கையை நோக்கி, அவரது திருவுருவத்தைக் காணுதவர்களாய் இது அசுரர்களது செய்கையுமல்ல; வேறு யார் செய்திருக்கலாமென்று வருந்தினார்கள்.—எ-று. (கச)

தெருளுறு மனைய தேவர் தேவர்கோன் சிலவ ரோடு
மேருவி லிருந்தான் போதும் வேதனு மங்கண் வைகு
மாருமங் கவர்பா லேகி யறைகுது மென்று தேறிச்
சூர்கோன் றனக்கு மஞ்சித் துயரொடு பெயர்த லுற்றார்.

(இ-ள்.) இவ்வாறு ஆராய்ச்சி செய்துகொண்டிருந்த அந்தத்தேவர்கள் இந்திரன் சில தேவர்களுடன் மேருமலையி லிருக்கின்றான்; பிரமனும் அவ்விடத்திலேயே யிருக்கின்றான்; நாமனைவரும் அங்கு அவர்களிடத்திற்சென்று சொல்லிக்கொள்வோமென்று துணிந்து, சூரபன்மனுக்கும் பயந்து வருத்தத்துடன் செல்லத்தொடங்கினார்கள்.—எ-று. (கரு)

வடவரை யும்பர் தன்னில் வானவ ராஞோ ரேகி
யடைதரு கின்ற காலை யாறுமா முகங்கொண் டுள்ள
கடவுள்செய் யாடல் நோக்கி யவனுருக் காணு ரைகி
யிடருறு மனத்தி னோடு மிருந்தவிந் திரனைக் கண்டார்.

(இ-ள்.) மேருமலையின் மேல் தேவர்கள் சென்றுசேர்ந்தபொழுது, ஆறு திருமுகங்களையுடைய குமாரக்கடவுள் செய்தருளுகின்ற திருவிளையாடலைப்பார்த்து அவரது திருவுருவத்தைக் காணுதவனாய்த் துன்பம்பொருந்திய மனத்துடனிருந்த இந்திரனைக்கண்டார்கள்.—எ-று. (கசு)

அரிதிரு முன்ன ரெய்தி யடிதொழு தங்கண் வைகி
விரிகட லுலகின் வானின் மேவுதொன் னிலைமை யாவுந்
திரிபுற வெவரோ செய்தார் தெரிந்தில மவரை யீது
புரிகல ரவுணர் போதும் புகுந்தவிப் புணர்ப்பென் னென்றார்.

(இ-ள்.) இந்திரன் திருமுன்னேயடைந்து பாதங்களைவணங்கி அவ்விடத்திலிருந்து, பரவிய கடல் சூழ்ந்த நிலவுலகத்திலும் ஆகாயத்திலும் பொருந்தியுள்ள பழைய நிலைமைகளனைத்தும் மாறுபடும் வண்ணஞ் செய்தவர்கள் யாவரோ? அவரை யறியோம்; அசுரர்கள் இவ்வாறு செய்யார்கள்; (அங்ஙனமாக) இது தோன்றிய காரணம் வேறியாதென்று வினவினார்கள்.—எ-று.

அரி - இந்திரன். (கஎ)

வானவ ரிறைவ னன்னோர் மாற்றமங் கதனைக் கேளா
யானுமிப் பரிசு நாடி யிருந்தன னிறையுந் தேறே
னதனை யுணர வேண்டி வனைவரு மேகி யம்பொன்
மேனிகொள் கமலத் தோனை வினவுது மெழுதி ரென்றான்.

(இ-ள்.) தேவர்கள் தலைவனாகிய இந்திரன் அத்தேவர்கள் கூறியவார்த்தையைக்கேட்டு யானும் இதனையே யாராய்ந்து கொண்டிருந்தேன்; இதனைச் சிறிதுந் தெளியேன்; அவ்வாறாகிய விதனை அறியவேண்டின் யாவருஞ்சென்று அழகிய பொன்போலும் வடிவத்தினையுடைய பிரமனைக்கேட்போம் எழுந்திருங்களென்று கூறினான்.—எ-று. (௩௮)

எழுதிரென் றுரைத்த லோடு மிந்திரன் முதலா வுள்ளோர்
விழியிடைத் தெரிய வன்னோர் மெய்த்தவம் புரிந்த நீரா
லழிவற வுலகி லாடு மறுமுகன் வதன மொன்றிற்
குழவிய தென்ன வன்ன குன்றிடைத் தோன்றி னானால்.

(இ-ள்.) எழுந்திருங்களென்று கூறவும், இந்திரன் முதலானவர்களது கண்களில் தெரியும்படி அவர்கள் உண்மையான தவத்தைச்செய்துள்ள தன்மையினால், சிறிது மழியாதிருக்கும் வண்ணம் உலகத்தில் திருவிளையாடல் செய்கின்ற ஸ்ரீசண்முகபெருமான் ஒருதிருமுகத்துடன் குழந்தையைப்போல அம்மேருமலையில் எழுந்தருளினார்.—எ-று. (௩௯)

வாட்டமொ டமரர் கொண்ட மயக்கறத் தனது செய்கை
காட்டிய வந்தோன் மேருக் கனவரை யசைத்துக் கஞ்சத்
தோட்டிதழ் கொய்து சிந்துந் துணையென வுயர்ந்த செம்பொற்
கோட்டினைப் பறித்து வீசிக் குலவினன் குழவி யேபோல்.

(இ-ள்.) மனவாட்டத்துடன் தேவர்கள் கொண்டிருந்த மயக்க நீங்கும் பொருட்டுத் தமது செய்கையைக் காட்டும்படி யெழுந்தருளிய குமாரக்கடவுள் பெரிய மேருமலையை யசைத்துத் தாமரைப்பூவி னிதழ்களைக் கிள்ளியெறியுந் தன்மையைப் போல, உயர்ந்த செம்பொன் மயமான சிகரத்தைப் பிடுங்கியெறிந்து குழந்தையைப் போல விளங்கினார்.—எ-று. (௪0)

தோன்றிய குமரன் றன்னைச் சுரபதி சுரரா யுள்ளோ
ரான்றதோர் திசைகாப் பாள ரனைவருந் தெரிகுற் றன்றோ
வான்றரை திரிபு செய்தோன் மற்றிவ னாகு மென்னாக்
கான்றிரி யரியை நேரும் விலங்கெனக் கலங்கிச் சொல்வார்.

(இ-ள்.) அவ்வா றெழுந்தருளிய குமாரக்கடவுளை இந்திரனும் தேவர்களும் பெரிய திக்குப்பாலகர்களுமாகிய அனைவரும்பார்த்து, ஐயோ? விண்ணுலகத்தையும் மண்ணுலகத்தையும் மாறுபடுத்தினவன் இவனே யாகுமென்று காட்டிலுலாவுகின்ற சிங்கத்தைக்கண்ட மிருகங்களைப்போல மனங்கலங்கிக் கூறுகின்றார்கள்.—எ-று.

ஆன்ற - அகன்ற என்பதன்மரூஉ. (௪௧)

வேறு.

நொய்தாங் குழவி யெனக்கொள்கில நோன்மை நாடின்
வெய்தா மவுணக் குழுவோரினும் வெய்யன் யாரு
மெய்தாத மாய முளனாலிவன் றன்னை வெம்போர்
செய்தாடல் கொள்வ மிவனென்று தெரிந்து சூழ்ந்தார்.

(இ-ள்.) இவனைச் சிறுகுழந்தையென்று கொள்ளோம்; இவனது பராக்கிரமத்தை விசாரிக்குமிடத்தில் கொடிய அசுரர் கூட்டங்களிலும் மிகக்கொடியவன்; யாவராலுமடைதற்கரிய மாயவித்தையில் தேர்ந்தவன்; ஆதலால், இங்கு இவனைக் கொடிய போர்செய்து வெற்றிபெறுவோமென்றுணர்ந்து ஆலோசித்தார்கள்.—எ-று.

ருழுற்ற வெல்லை யிமையோர்க்கிறை தொல்லை நாளிற்
காழுற்ற தந்த மறமேவகிவெண் காட்டி லீசன்
கேழுற்ற தாளர்ச் சனைசெய்து கிடைத்து வைகும்
வேழுத்தை யன்ன வருவந்தது மேரு வின்பால்.

(இ-ள்.) ஆலோசித்தபொழுது, தேவேந்திரனானவன் முற்காலத்தில் (பானுகோபனால்) வயிரம்பொருந்திய தந்தங்கள் ஒடியவும் திருவெண்காட்டிற்சென்று சிவபெருமானது ஒளிபொருந்திய திருவடிகளைப்பூசித்து (அத்தந்தங்களைப்) பெற்றிருக்கின்ற தனது வெள்ளையானையைச் சிந்திக்கவும், அவ்வெள்ளையானை மேருமலையினிடத்து வந்தது.—எ-று. (௪௩)

தந்தங்கள் பெற்று வருகின்ற தனிக்க ளிற்றின்
கந்தந் தனிற்போந் தடல்வச்சிரங் காமபொள்வாள்
குந்தஞ் சிலைகொண் டிகல்வெஞ்சமர்க் கோல மெய்தி
மைந்தன் றனைவா னவரொடும் வளைந்து கொண்டான்.

(இ-ள்.) தந்தங்களைப் பெற்றுவந்த ஒப்பற்ற வெள்ளையானையின் பிடரியிலேறிக்கொண்டு வலிய வச்சிராயுதம், அழகுபொருந்திய வொள்ளியவாள், எறியீட்டி, வில் இவைகளையேந்தி வெவ்விய போர்க்கோலங்கொண்டு குமாரக்கடவுளைத்தேவர்களுடன் சூழ்ந்துகொண்டான்.—எ-று.

கந்தம் - பிடரி. (௪௪)

வன்னிச் சுடர்கால் விசையோடு மரீஇய பாங்கிற்
பன்னற் படுகுன் றவைசூழ்தரு பான்மை யேபோ
லுன்னற் கரிய குமரேசனை யும்பர் கோனு
மின்னற் படுவா னவரும்மிகல் செய்ய வுற்றார்.

(இ-ள்.) தீப்பொறியானது காற்றுவேகத்துடன் பொருந்தி யிருக்குமிடத்தில் பஞ்சுமலைகள் அதனைச்சூழ்ந்துகொண்ட தன்மையைப்போல, நினைத்தற்கரிய குமாரக்கடவுளுடன் தேவேந்திரனும் துன்பமடைந்திருக்கின்ற தேவர்களும் போர்செய்ய வடைந்தார்கள்.—எ-று.

குமாரக்கடவுளைத் தீச்சுடராகவும், தேவர்களைப் பஞ்சுமலையாகவும் உவமித்தவாறு காண்க. பன்னல் - பஞ்சு. (௪௫)

தண்ணார் கமலத் துணைமாதரைத் தன்னி ரண்டு
கண்ணா வுடைய வுமையாடரு கந்தன் வானோர்
நண்ணா ரெனச்சூழ் வதுநோக்கி நகைத்தி யாது
மெண்ணாது முன்போற் றனதாட லிழைத்த வேலை.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய செந்தாமரை வெண்டாமரை மலர்களில் வசிக்கின்ற இலக்ஷுமி சரஸ்வதிகளை இரண்டு கண்களாகவுடைய உமாதேவியார் பெற்றருளிய குமாரக்கடவுள் தம்மைத் தேவர்கள் பகைவர்களைப்போலச் சூழ்ந்துகொண்ட தன்மையைப் பார்த்து நகைத்தருளி எதனையு மிலக்ஷியஞ்செய்யாமல் முன்புபோலத் தமது திருவிளையாடலைச்செய்துகொண்டிருந்த சமையத்தில்.—எ-று.

'தண்ணார்கமலத் துணைமாதரைத் தன்னிரண்டு - கண்ணா வுடைய வுமையாள்' என்பதனை:—"திருமகள் வலக்கண் வாக்கின் சேயிழை யிடக்கண் ஞானப்-பெருமக ளுதரக ளாகப் பெற்றவான் செல்வங் கல்வி - யருமைவீ டளிப்பாள் யாவ ளவளுயிர்த் துணைவன்காண - வொருமுலை மறைந்து நாணி யொசிந்தபூங் கொம்பி னின்றாள்"—என்னுந் திருவிளையாடற்புராணத்தாலும், "காவெனப் பெயரிய கலைமகளை

முந்தைஞான்றுநின் கண்ணெனப் புரந்தாய் - மாவெனப்பெயருடையமற் றெனையு மலர்ந்த நின்விழி போற்புரிந் தருளி - யேவெனப்பிறழ் தடங்கணாய் காமங் கண்ணி யாம் பெயரெய்துவை யென்னாப் - பூவெனப்பயி லணைமிசைக் கிழத்தி போற்பிசை த்தலு மெதிரொழுந்தருளி" என்னுங் காஞ்சிப்புராணத்தாறு மறிக.

இருமுத லிரண்பெடலுங் குளகம். (சசு)

எட்டே யொருபான் படைதம்மு ளெறிவ வெல்லாந்
தொட்டே கடவுட் படைதன்னுடுந் தூர்த்த லோடு
மட்டேறு போதிற் படுகின்றுழி வச்சி ரத்தை
விட்டே நெழித்தான் குமரன்மிசை வேள்வி வேந்தன்.

(இ - ள்.) யாகாதிபதியாகிய இந்திரன் குமாரக்கடவுள்மீது பதினெண்படைகளுள் எறியவேண்டிய ஆயுதங்களைப் பிரயோகித்தபின்பு தேவாஸ்திரங்களைச் செலுத்தவும், அவைகள் தேன் நிறைந்த புஷ்பங்களைப்போன்று பட்டபொழுது வச்சிராயுதத்தைப் பிரயோகித்துக் கர்ச்சித்தனன். — எ - று. (சஎ)

வயிரந் தனிவெம் படைபெற்றைதன் மார்பு நண்ணி
யயிரிற் றுகளாய் விரிவாக வதனை நோக்கித்
துயரத் தழுங்க விமையோரிறை தொல்லை வேழஞ்
செயிருற் றியம்பி முருகேசன்முன் சென்ற தன்றே.

(இ - ள்.) ஒப்பற்ற கொடிய வச்சிராயுதமானது எமது குமாரக்கடவுளது மார்பிற்பட்டு மணற்பொடிபோலத் தூளாக வழிய, அதனை இந்திரன்பார்த்துத் துன்பமடையவும், உடனே பழைமையாகிய வெள்ளையானை கோபங்கொண்டு பிளிறிட்டுக் குமாரக்கடவுள் திருமுன்னே சென்றது. — எ - று.

அயிர் - நுண்மணல். (சஅ)

செல்லுங் கரிகண் டுமையாண்மகன் சிந்தை யாலோர்
வில்லுங் கணைகள் பலவும் விரைவோடு நல்கி
யொலலென் றிடநா ணொலிசெய்துயர் சாபம் வாங்கி
யெல்லொன்று கோலொன் றதனெற்றிபு ளேக வுய்த்தான்.

(இ - ள்.) பார்வதி புத்திரராகிய குமாரக்கடவுள் அவ்வாறுவந்த வெள்ளையானையைப் பார்த்தருளித் தமது மனத்தினால் ஒரு வில்லையும் அநேகபாணங்களையும் விரைவாக உண்டாக்கி உயர்ந்த அவ்வில்லைவளைத்து ஒல்லென்று நாணொலியெழுப்பி ஒளிபொருந்திய ஒருபாணத்தை அதன் நெற்றியிற்செல்லும்படி பிரயோகித்தருளினார். — எ - று. (சகூ)

அக்கா லயில்வேள் செலுத்துங்கணை யண்டர் தம்மின்
மிக்கா னயிரா வதநெற்றியுண் மேவி வல்லே
புக்காவி கொண்டு புறம்போதப் புலம்பி வீழா
மைக்கார் முகிலச் சுறவேயது மாண்ட தன்றே.

(இ - ள்.) அப்பொழுது குமாரக்கடவுள் செலுத்திய பாணமானது தேவேந்திரனது ஐராவதத்தின் நெற்றியில்தாக்கி விரைந்து உள்ளே நுழைந்து சென்று உயிரைவாங்கிக்கொண்டு புறத்திற்செல்ல, கரியமேகங்களஞ்சும்படி புலம்பி வீழ்ந்து அவ்வியானை யிறந்தது. — எ - று.

'மைக்கார் முகில்' என்பதற்கு மிகக் கரியமேகம்போலு நிறத்தினையுடைய இந்திரன் எனப்பொருள் கூறினுமாம். (ருo)

தன்னேர் களிறு மடிவெய்தலுந் தான வேந்த
னென்னே யெனவே யிரங்கா வயல்போகி நின்று
மின்னே நிகர்தன் சிலைதன்னை வெகுண்டு வாங்க
முன்னோன் மதலை யொருகோலவன் மொய்ம்பி லெய்தான்.

(இ-ள்.) தனது ஒப்பற்ற வெள்ளையானையானது இறக்கவும், தேவேந்திரன் ஐயோ? வென்று இரக்கமுற்று அயலிற்சென்றுநின்று, மின்போன்று விளங்குகின்ற தனது வில்லைக் கோபித்து வளைக்க, சிவகுமாரராகிய முருகக்கடவுள் ஒருபாணத்தை அவ்விந்திரனது மார்பில் பிரயோகித்தனர்.—எ-று. (௫௧)

கோலொன்று விண்ணோர்க் கிறைமேற்குமரேச னெய்ப்ப
மாலொன்று நெஞ்சன் வருந்திப்பெரு வன்மை சிந்திக்
காலொன்று சாபத் தொழிவித்தனன் கையி லுற்ற
வேலொன் றதனைக் கடிதேகுகன் மீது விட்டான்.

(இ-ள்.) தேவர்கள் தலைவனாகிய இந்திரன்மீது குமாரக்கடவுள் ஒருபாணத்தைப் பிரயோகித்தவுடன், மயக்கம்பொருந்திய மனத்தினையுடைய அவ்விந்திரன் வருந்தி மிக்கவலியிழந்து காலிற்பொருந்தி விளங்குகின்ற விற்றொழிலைவிட்டுத் தனது கையிற்பொருந்திய ஒரு வேற்படையை விரைவாகக் குமாரக்கடவுள் மீது பிரயோகித்தனன்.—எ-று. (௫௨)

குந்தப் படையோர் சிறுபுற்படு கொள்கை யேபோல்
வந்துற் றிடலுற் புதமெய்தினர் மற்றை வானோர்
கந்தக் கடவுள் சிலையிற்கணை யொன்று பூட்டித்
தந்திக் கிறைவன் றடம்பொன்முடி தள்ளி யார்த்தான்.

(இ-ள்.) அவ்வேற்படையானது ஒரு சிறிய புல்லானது தாக்குகின்ற தன்மையைப்போல வந்து பொருந்துதலும், அதனைக்கண்ட மற்றைத்தேவர்கள் அதிசயமடைந்தார்கள்; உடனே, குமாரக்கடவுள் வில்லில் ஒருபாணத்தைப் பூட்டி ஐராவதத்தலைவனாகிய இந்திரனது பெரியபொற்கிரீடத்தைக் கீழேதள்ளியாரவாரித்தனர்.

துவசந் தனையோர் கணைகொண்டு துணித்து மார்பிற்
கவசந் தனையோர் கணையாற்றுகள் கண்டு விண்ணோ
னவசம் படவேழ் கணைதூண்டின னாழி வேண்டிச்
சிவசங் கரவென் றரிபோற்றிய செம்மன் மைந்தன்.

(இ-ள்.) திருமால் சக்கராயுதம் பெறவேண்டிச் சிவனே! சங்கரனே! என்று துதிக்கப்பெற்ற சிவபெருமானது திருக்குமாரராகிய முருகக்கடவுள், அவ்விந்திரனது கொடியை ஒரு பாணத்தினாலறுத்து, அவன்மார்பிலணிந்த கவசத்தை ஒரு பாணத்தினால் தூளாக்கி, அவ்விந்திரன் மூர்ச்சிக்கும்படி ஏழுபாணங்களைப் பிரயோகித்தனர்.—எ-று.

'ஆழிவேண்டிச்-சிவசங்கரவென் றரிபோற்றிய செம்மல்' என்பதன்வரலாறு:—முன்பொருகாலத்தில் குபன் என்னு மரசன் பொருட்டுத் திருமால் ததீசிமுனிவர்மீது தமது சக்கரத்தைவிடுத்து அவரது வயிரயாக்கையில் தாக்கிக் கூர்மழுங்கிப் பயனற்றதாகவும், அத்திருமால் வேறுசக்கரம்பெறவேண்டிப் பாசுபதவிரதம்பூண்டு சிவலிங்கப் பிரதிஷ்டைசெய்து நாள்தோறும் ஆயிரந் தாமரைமலர்களைக் கொண்டு அருச்சனைசெய்துவர, சிவபெருமான் அவரது அன்பினுறுதியை யுணர்த்தவேண்டி அவற்றில் ஒருமலரை மறைத்தருளினர். அதனை யுணர்ந்த திருமால் தமது விரதங்கெ

டாதபடி அம்மலருக்குப் பதிலாகத் தமது கண்ணைத்தோண்டி யருச்சிக்கச் சிவபெருமான் பிரத்தியக்ஷமாய், அவர் விரும்பிய சக்கரத்தையும், மற்றும் வேண்டியவரங்களையு முதவிக் கமலாக்ஷனென்னும் பெயரையுங் கொடுத்தருளின தொன்பதாம்; இதனை:— "திகழுமாலவ னுயிரமலரா லேத்துவானொரு நீண்மலர் குறையப் - புகழி னாலவன் கண்ணிடந் திடலும் புரிந்து சக்கரங் கொடுத்தல்கண் டடியேன் - நிகழ நின்றிருப் பாதங்கள் பரவித் தேவதேவநின் றிறம்பல பிதற்றி - யகழும் வல்வினைக் கஞ்சிவந் தடைந்தே னவடுதுறை யாதியம்மானே" என்னும் ஆளுடைய நம்பிகளருளிச் செய்த தேவாரத்தா லு மறிக. (ருச)

திங்கா ளியவோ ரெழுவாளியுஞ் செல்ல மார்பி
னங்கார மிக்க மகவா னயர்வாகி வீழ்ந்தா
னோங்கார மேலைப் பொருண்மைந்தனை யும்ப ரேனோர்
பாங்காய் வளைந்து பொருதார்படு கின்ற தோரார்.

(இ-ள்.) கொரமாகிய எழுபாணங்களும் மார்பிற்பட்டவுடன் மிக்க அகங்காரத்தினையுடைய இந்திரன் மூர்ச்சித்து விழுந்தனன்; உடனே உயர்ந்த பிரணவப் பொருளாகிய சிவபெருமானது புத்திரராகிய குமாரக்கடவுளைத் தேவர்களும் மற்றையர்களும் பின்வருவதை யுணராதவர்களாய் அருகிற்சூழ்ந்துநின்று போர்செய்தார்கள்.

இவ்வா றமரர் பொருமெல்லையி லீசன் மைந்தன்
கைவார் சிலையைக் குனித்தேகணை நான்கு தூண்டி
மெய்வா ரிதிகட் கிறைவன்றனை வீட்டி மற்று
மைவா ளியினாற் சமனாற்ற லடக்கி னானால்.

(இ-ள்.) இவ்வாறு போர்செய்கின்ற சமையத்தில் சிவகுமாரராகிய முருகக்கடவுள் தமது திருக்கரத்திற்பொருந்திய நீண்டவில்லை வளைத்து நான்கு பாணங்களைப்பிரயோகித்து மெய்ம்மைபொருந்திய சமுத்திரராஜனாகிய வருணனது தேகத்தையழித்து, பின்னும் ஐந்துபாணங்களால் இயமனது வன்மையை யடக்கினார்.—எ-று.

ஓரம் பதனான் மதிதன்னையு மொன்றி ரண்டு
கூரம் பதனாற் கதிர்தன்னையுங் கோதின் மைந்த
னீரம் பதனா லனிலத்தையு மேவு மூன்றால்
வீரம் பகர்ந்த கனலோனையும் வீட்டி நின்றான்.

(இ-ள்.) குற்றமற்றக் குமாரக்கடவுள் ஒரு பாணத்தினால் சந்திரனையும், கூர்மைபொருந்திய இரண்டு பாணத்தினால் சூரியனையும், இரண்டுபாணத்தினால் வாயுவையும், மூன்றுபாணத்தினால் வீரத்தைக்கூறிய அக்கினியையும் அழித்துநின்றருளினார்.—எ-று.

'ஒன்றிரண்டு கூரம்பு' என்பதற்கு, கூரிய மூன்று பாணம் எனப் பொருள் கூறுவாருமுளர். ஏ - அம்பு. (ருஎ)

நின்றா ரெவருங் குமரேச னிலைமை நோக்கி
யின்றா ரையுமற் றிவனேயடு மென்று தேறி
யொன்றான சிம்புள் விறல்கண்டரி யுட்கி யோடிச்
சென்றா லெனவே யிரிந்தோடினர் சிந்தை விம்மி.

(இ-ள்.) நின்றவர்களனைவரும் குமாரக்கடவுளது தன்மையைப் பார்த்து இன்று இவனே அனைவரையுங் கொன்றுவிடுவானென்று துணிந்து, ஒரு சிம்புட்பற

வையின் வலிமையைக்கண்டு சிங்கம் நடுங்கியோடினாற்போல மனம்புழுங்கி விலகியோடினார்கள்.—எ-று. (௫௮)

ஓடுந் சுரர்க டிறநோக்கி யுதிக்கும் வெய்யோ
னீடுங் கதிர்க ளிலவைத் துரக் கின்ற தேபோ
லாடுங் குமர னவரைத் துரந் தண்டர் முன்னர்
வீடுங் களத்தி னிடையே தனி மேவி நின்றான்.

(இ-ள்.) அவ்வாறோடிய தேவர்களது தன்மையைப்பார்த்து ஆகாயத்திலுதிக்கின்ற சூரியனது நீண்டகிரணங்கள் நிலாவையோட்டுவதுபோல, திருவிளையாடல் செய்தருளுகின்ற குமாரக்கடவுள் அவர்களைத்துரத்திவிட்டு, தேவர்கள்முன்னர் இறந்துகிடக்கின்ற போர்க்களத்தில் வந்து தனிமையாக நின்றருளினார்.—எ-று. (௫௯)

ஒல்லா தவரிற் பொருதேசில வும்பர் வீழ
நில்லா துடைந்து சிலதேவர்க ளேங்க நேரில்
வில்லா ளியாகித் தனிநின்ற விசாகன் மேனா
ளெல்லா ரையுமட் டுலவுந்தனி யீச னொத்தான்.

(இ-ள்.) பகைவர்களைப்போன்று போர்செய்து சிலதேவர்க ளிறக்கவும், எதிரில் நில்லாமல் தோற்றுச் சிலதேவர்களோடவும், ஒப்பற்ற வில்லினையுடையவராகத்தனியே நின்றருளிய குமாரக்கடவுள் சர்வசங்கார காலத்தில் எல்லா வுயிர்களையு மழித்துலாவுகின்ற ஒப்பற்ற காலாக்கினிருத்திரனை யொத்தனர்.—எ-று. (௬௦)

வேறு.

சுரர்கள் யாருந் தொலைந்திட வென்றுதா
னொருவ னாகி யுமைமகன் மேவுழி
யருளி னாரத னச்செயல் கண்டுவான்
குருவை யெய்திப் புகுந்தன கூறினான்.

(இ-ள்.) பார்வதிபுத்திரராகிய முருகக்கடவுள் தேவர்களனைவரும் அழியும்படி செய்து, தனித்துலாவுகின்ற சமையத்தில், அருளினையுடைய நாரதமுனிவர் அந்தச் செய்கையைப் பார்த்துப் பிரகஸ்பதிபகவானை யடைந்து நடந்த காரியங்களை யுரைத்தனர்.—எ-று. (௬௧)

நற்ற வம்புரி நாரதன் கூற்றினை
யற்ற மில்லுணர் வந்தனன் கேட்டெழீஇ
யிற்ற தேகொ லிமையவர் வாழ்வெனச்
சொற்று வல்லை துயருழந் தேகினான்.

(இ-ள்.) நல்லதவத்தைச்செய்கின்ற நாரதமுனிவர் சொல்லியவார்த்தையைக் குறைவற்ற பேரறிவினையுடைய பிரகஸ்பதிபகவான் கேட்டெழுந்து, தேவர்களது வாழ்வினைத்துமழிந்ததே யென்று துன்பமடைந்து சொல்லிக்கொண்டு விரைந்து சென்றனன்.—எ-று. (௬௨)

ஆத பன்மதி யண்டர் தமக்கிறை
மாதி ரத்தவர் மால்கரி தன்னுடன்
சாதல் கொண்ட சமர்க்களந் தன்னிடைப்
போதன் மேயினன் பொன்னெனும் பேரினான்.

(இ-ள்.) வியாழபகவான், சூரியனும் சந்திரனும் இந்திரனும் திக்குப்பாலகர்களும் மதமயக்கத்தையுடைய ஐராவதமென்னும் யானையுடன் இறந்து கிடக்கின்ற போர்க்களத்திற் சென்றனன்.—எ-று. (௬௩)

ஆவி யின்றி யவர்மரி குற்றது
தேவ ராசான் றெரிந்து படருறத்
தாவி லேர்கெழு சண்முக னவ்விடை
மேவி யாடும் வியப்பினை நோக்கினன்.

(இ-ள்.) உயிர்நீங்கி அவர்களிறந்து கிடக்கின்ற தன்மையைத் தேவகுருவாகிய பிரகஸ்பதிபகவான் பார்த்து வருத்தமுற்று, கெடாத அழகுமிக்க குமாரக்கடவுள் அவ்விடத்திற் பொருந்தி விளையாடுகின்ற அதிசயத்தைப் பார்த்தனன்.—எ-று. (௬௪)

முழுது ணர்ந்திடு மொய்சுடர்ப் பொன்னவ
னெழுதொ ணாத வெழினலந் தாங்கியோர்
குழவி தன்னுருக் கொண்ட குமரனைத்
தொழுது நின்று துதித்திது சொல்லுவான்.

(இ-ள்.) எல்லாவற்றையுமுணர்ந்த நெருங்கியகிரணங்களையுடைய வியாழபகவான் எழுதுதற்கரிய சிறந்த பேரழகைப்பெற்று ஒரு குழந்தைத் திருவுருவங்கொண்டுள்ள முருகக்கடவுளை வணங்கிநின்று துதித்து இதனை விண்ணப்பஞ் செய்கின்றனன்.—எ-று. (௬௫).

வே று.

கரியரி முகத்தினன் கடிய சூரனென்
றுரைபெறு தானவ ரொறுப்ப வல்கலும்
பருவர லுழந்துதன் பதிவிட் டிப்பெரு
வரையிடை மகபதி மறைந்து வைகினன்.

(இ-ள்.) (எம்பெருமானே!) யானைமுகத்தினையுடைய தாரகன்-சிங்கமுகன்-கொடிய சூரபன்மனென்று கூறும் அசுரர்கள் வருத்துதலால், இந்திரன் நாள்தோறுந் துன்பமடைந்து தனது சுவர்க்கலோகத்தைவிட்டு இந்தப் பெரிய மேருமலையினிடத்து மறைந்து வசிக்கின்றான்.—எ-று. (௬௬)

அன்னவ னின்னடி யடைந்து நிற்கொடே
துன்னலர் தமதுயிர் தொலைத்துத் தொன்மைபோற்
றன்னர செய்தவுந் தலைவ னாகவு
முன்னினன் பிறிதுவே றென்று முன்னலான்.

(இ-ள்.) அவ்விந்திரன் தேவரீரது திருவடிகளைச் சரணாகவடைந்து தேவரீரைக்கொண்டே, அப்பகை யசுரர்களது உயிரை வாங்கிப்பின்பு பழைமைபோலத் தனது அரசாட்சியையடையவும் (தேவர்களுக்குத்) தலைவனாகவிருக்கவுஞ் சிந்தித்திருக்கின்றான்; வேறொன்றையும் நினைந்தானில்லை.—எ-று. (௬௭)

பற்பக லருந்தவம் பயின்று வாடினன்
றற்பர சரவணத் தடத்திற் போந்தவுன்
னுற்பவ நோக்கியே யுவகை பூத்தனன்
சொற்படு துயரெலாந் தொலைத்து ளானென.

(இ-ள்.) அநேககாலம் அருமையாகிய தவத்தைச்செய்து வாடினன், பரம்பொருளாகிய எமது ஆண்டவரே! சரவணப்பொய்கையிற் றோன்றிய தேவரீரது திருவவதாரத்தைப் பார்த்து, சொல்லப்பட்ட தனது துன்பங்களனைத்தையும் நீக்கினவனைப்போலச் சந்தோஷமடைந்தான்.—எ-று. (௬௮)

கோடலு மராத்தொடு குரவுஞ் செச்சையுஞ்
சூடிய குமரநின் றொழும்பு செய்திட

நேடுறு மிந்திர னீயித் தன்மையி
னாடல்செய் திடுவதை யறிகி லானரோ.

(இ-ள்.) காந்தளும், கடம்பும், குராவும், வெட்சியுமாகிய மலர்களைத் தரித்தருளிய குமாரக்கடவுளே! தேவரீருக்கு ஊழியஞ் செய்யும்படி நினைத்திருந்த இந்திரன் தேவரீர் இவ்வாறுதிருவிளையாடல் செய்துகொண்டிருப்பதை யுணர்ந்தானில்லை.

நாரணன் முதலினோர் நாடிக் காணுறா
வாரண முதல்வனு முமையு மன்னவர்
சீரரு ளடைந்தனர் சிலரு மல்லதை
யாருன தாடலை யறியு நீரினோர்.

(இ-ள்.) திருமால் முதலிய தேவர்களால் தேடிக்காணப்படாத வேதமுதல்வராகிய சிவபெருமானும், பார்வதிதேவியாரும், அவர்களது சிறந்த திருவருளைப்பெற்ற சிலருமே யன்றித் தேவரீரது திருவிளையாடலின் சிறப்பினை யுணரத்தக்க தன்மையை யுடையவர்கள் வேறு யாவர்?—எ-று. (௭௦)

பற்றிய தொடர்பையு முயிரை யும்பகுத்
திற்றென வுணர்கில மேதந் தீர்கிலஞ்
சிற்றுணர் வுடையதோர் சிறியம் யாமெலா
முற்றுன தாடலை யுணர வல்லமோ.

(இ-ள்.) (அநாதிதொட்டுச்) சம்பந்தப்பட்டுள்ள பாசத்தையும் உயிரையும் பிரித்து இன்ன தன்மையதென்று அறியோம்; குற்றத்தினின்று நீங்காதவர்களும் சிற்றறிவினையுடைய சிறியர்களுமாகிய யாங்கள் தேவரீரது திருவிளையாடலின் றன்மையை யுணர்ந்தறிய வல்லோமோ?—எ-று. (௭௧)

ஆதலால் வானவர்க் கரச னுற்றவு
மோதிதா னின்மையா லுன்ற னாடலைத்
தீதென வுன்னிவெஞ் செருவி ழைத்தன
னீதிசேர் தண்டமே நீபு ரிந்தனை.

(இ-ள்.) ஆதலால் தேவேந்திரன் மிகவும் அறிவின்மையினால் தேவரீரது திருவிளையாடலைக் குற்றமென்று கருதிக் கொடியபோர் செய்தனன்; அதற்குத்தேவரீர் ஞாயமான தண்டனையையே செய்தருளினீர்.—எ-று.

ஓதி - அறிவு. (௭௨)

மற்றுள தேவரு மலைந்து தம்முயி
ரற்றன ரவர்களு மறிவி லாமையாற்
பெற்றிடுங் குரவரோ பிழைத்த மைந்தரைச்
செற்றிடி னெவரருள் செய்யற் பாலினோர்.

(இ-ள்.) நல்லறிவின்மையினால் மற்றைத்தேவர்களும் போர்செய்து தங்கள் பிராணனை யிழந்தார்கள், (எம்பெருமானே!) பெற்றதாய்தந்தையர்களே குற்றஞ்செய்த தங்கள் மைந்தர்களைக் கொன்றால் அருள்செய்யத்தக்கவர்கள் வேறியாவர்.—எ-று.

சின்மய மாகிய செம்மல் சிம்புளாம்
பொன்மயி சிறையுடைப் புள்ளி னாயகன்
வன்மைகொள் விலங்கினை மாற்ற லல்லது
மின்மினி தனையடல் விசய மாகுமோ.

(இ-ள்.) மெய்ஞ்ஞான சொருபராகவுள்ள எமது ஆண்டவரே! சரபமென்று சொல்லப்பட்ட பொன்மயமான சிறகினையுடைய பறவைவேந்தன், வலிமை

பொருந்திய சிங்கத்தை யழிப்பதேயன்றி மின்மினிப் பூச்சியைக் கொல்லுதல் வெற்றி யாகுமோ?—எ-று.

சிம்புட்பறவை சிங்கத்தைக் கொல்லுவதன்றி அற்பமாகிய மின்மினிப்பூச்சியைக் கொல்லுதல் தகுதியன்று; அங்ஙனமாக, சிம்புட்பறவை போல்பவராகிய தேவரீர் அசுரர்களாகிய சிங்கத்தைக் கொல்வதன்றி, மின்மினிப்பூச்சி போல்பவர்களாகிய இத்தேவர்களைக் கொல்லுதல் தகுதியோவென்று கூறினனென்பது கருத்து.

'சின்மயமாகிய செம்மல்' என்பதற்கு, வீரபத்திரர் எனவும், 'வன்மைகொள் விலங்கு' என்பதற்கு, நரசிங்கம் எனவும் பொருள்கொண்டு, செம்மலாகிய புள்ளினாயகன் வன்மைகொள் விலங்கினை மாற்றலல்லது எனக் கூட்டிப் பொருள் கூறுவாருமுளர். (எச)

ஒறுத்திடு மவுணர்க ளொழிய வேரொடு
மறுத்தருு ளுனார்விலா வளிய ருன்னடி
மறத்தலி லன்பினர் மற்றின் னோர்பிழை
பொறுத்தருள் கருணையாற் புணரி போன்றுளாய்.

(இ-ள்.) கிருபைக்கடலாகவுள்ள எம்பெருமானே! வருத்துகின்ற அசுரர்கள் அழியும்படி அடியோடு களைந்தருள்வீராக; அவிவேகிகளாகிய ஏழைத்தேவர்கள் தேவரீரது திருவடியை மறவாத அன்பர்களாகும்; ஆதலால் இவர்கள் செய்த குற்றத்தைப் பொறுத்தருளல் வேண்டும்.—எ-று.

அளவிட்டுரைத்தற்கரிய பெருங்கருணை வள்ளலென்பார், 'கருணையாற் புணரிபோன்றுளாய்' என்று கூறினர். (எரு)

பரமுற வணிகரைப் பரித்துப் பல்வளந்
தருகலங் கவிழ்ந்திடச் சாய்த்து மற்றவ
ரொருதலை விளிதல்போ லுன்னிற் பெற்றிடுந்
திருவினர் பொருதுனைச் செருவிற் றுஞ்சினர்.

(இ-ள்.) பாரமாக வியாபாரிகளைத் தாங்கிப் பல வளங்களைத் தருகின்ற கப்பல் கவிழும்படி சாய்த்து, அவ்வியாபாரிகள் ஓரிடத்திலேயே இறப்பதைப்போல, தேவரீரால் அடையவேண்டிய செல்வத்தினையுடைய தேவர்கள் (அறியாமையினால்) தேவரீருடன் போர்செய்து அப்போர்க்களத்திலிறந்தார்கள்.—எ-று.

வணிகர்கள் தாங்க ளாதரவாகக் கொண்டிருந்த மரக்கலத்தைக்கவிழ்த்து ஒருங்கே கடலில் வீழ்ந்தழிவதுபோலத் தேவரீரையே ஆதரவாகக்கொண்டிருந்த தேவர்கள் தங்களறியாமையால் விரோதித்துப் போர்செய் தழிந்தனரென்று கூறினனென்க. (எசு)

தொழுதகு நின்னடித் தொண்ட ராற்றிய
பிழையது கொள்ளலை பெரும சிந்தையு
ளழிதரு மிவையவ ரறிவு பெற்றிவ
ணெழுவகை யருளென விறைஞ்சிக் கூறினன்.

(இ-ள்.) எம்பெருமானே! தொழத்தக்க தேவரீரது திருவடித்தொண்டர்களாகிய தேவர்கள் செய்த குற்றத்தைச் சிந்தித்தல் வேண்டாம்; மனதில் வருந்துகின்றவர்களாகிய இத்தேவர்கள் இங்கு நல்லறிவடைந்து உயிர்பெற்றெழும்படி திருவருள் செய்யவேண்டுமென்று வணங்கி யுரைத்தான்.—எ-று.

பிழையது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. (எஎ)

பொன்னவ னின்னன புகன்று வேண்டிட
முன்னவர் முன்னவன் முறுவல் செய்துவான்
மன்னவ னாதியர் மால்களிற் றொடு
மன்னிலை யெழும்வகை யருள்செய் தானரோ.

(இ-ள்.) பிரகஸ்பதிபகவான் இவ்வாறு கூறி வேண்டிக்கொள்ளவும், அநாதிகாரணராகிய குமாரக்கடவுள் புன்னகைகொண்டருளி, இந்திரன் முதலிய தேவர்கள் மதமயக்கத்தையுடைய வெள்ளையானையுடன் அப்பொழுது உயிர்பெற்றெழும்படி திருவருள்புரிந்தனர்.—எ-று. (எஅ)

வேறு.

அந்தியின் வனப்புடைய மெய்க்குக னெழுப்புதலு மன்ன பொழுதே
யிந்திரனு மாதிர வரைப்பினரும் வானவரும் யாவரு மெழாஅச்
சிந்தைதனின் மெய்யுணர்வு மீதா னுதலு முன்புரி செயற்கை யுணராக்
கந்தனொடு கொல்சமர் புரிந்தனமெ னாவுள்ளினர் கலங்கி யெவரும்.

(இ-ள்.) செவ்வானம்போலும் அழகிய திருமேனியையுடைய குமாரக்கடவுள் எழுப்புதலும், அப்பொழுதே இந்திரனும் திக்குப்பாலகர்களும் தேவர்களுமாகிய எல்லாருமெழுந்து மனத்தில் மெய்யுணர்ச்சியுண்டாகவும் முன்பு தாங்கள் செய்த செய்கையையுணர்ந்து முருகக்கடவுளுடன் தானோ? நாம் போர்செய்தோம் என்று கலக்கங்கொண்டு யாவரும் நினைத்தார்கள்.—எ-று. (எக)

கலங்கின ரிரங்கினர் கலுழ்ந்தனர் புலர்ந்தனர் கவன்றன ருள
மலங்கினர் விடந்தனை யயின்றவ ரெனும்படி மயர்ந்தன ரெரிசே
ருலங்கென வலைந்தன ரொடுங்கினர் நடுங்கின ருரந்தனை யிழந்
திலங்கெழின் முகம்பொலி விகந்தனர் பொருந்தமை யிகழ்ந்தனர்களே.

(இ-ள்.) தேவர்கள் கலங்கினார்கள்; இரங்கினார்கள்; அழுதார்கள்; வாடினார்கள்; கவலையுடைந்தார்கள்; மனமயங்கினார்கள்; விஷத்தையுண்டவர்களைப்போலச் சோர்ந்து நெருப்பிற் சேர்ந்த கொசுவைப்போல அலைந்தார்கள்; ஒடுங்கினார்கள்; நடுங்கினார்கள்; வலிமை யிழந்து விளங்குகின்ற அழகினையுடைய முகப்பொலிவிழந்தார்கள்; போர் செய்த தங்களைத்தாங்களே யிகழ்ந்தார்கள்.—எ-று. (அ0)

துஞ்சியெழு மன்னவர்க ளேழுலகு முன்னுதவு சுந்த ரிதரு
மஞ்சனரு ளோடுவிளை யாடுவது காண்டலும் வணங்கி யனையான்
செஞ்சர ணிரண்டினையு முச்சிகொடு மொய்யினர் சிறந்த லர்துணைக்
கஞ்சமல ரிற்பல நிறங்கொளளி யின்றொகை கவைஇய தெனவே.

(இ-ள்.) இறந்து பின் உயிர்பெற்றெழுந்த அத்தேவர்கள் ஏழுலகங்களையும் முன்பு பெற்றருளிய உமாதேவியாரது திருக்குமாரராகிய முருகக்கடவுள் கருணையுடன் திருவிளையாடல் செய்தருளுவதைப் பார்த்தவுடனே வணங்கி, சிறப்புற்று மலர்ந்த இரண்டு தாமரைமலர்களில் பல நிறங்களையுடைய வண்டின்கூட்டங்கள் மொய்த்திருக்குந் தன்மையைப்போல, அக்குமாரக்கடவுளது செவ்விய இரண்டு திருவடிகளையும் முடியிற் சூடி மொய்த்தார்கள்.—எ-று. (அக)

கந்தநம வைந்துமுகர் தந்தமுரு கேசநம கங்கை யுமைதன்
மைந்தநம பன்னிரு புயத்தநம நீபமலர் மாலை புனையுந்
தந்தைநம வாறுமுக வாதிநம சோதிநம தற்ப ரமதா
மெந்தைநம வென்றுமிளை யோய்நமகு மாரநம வென்று தொழுதார்.

(இ-ள்.) கந்தப்பெருமானே! நமஸ்காரம்; ஐந்து திருமுகங்களையுடைய சிவபெருமான் தந்தருளிய முருகேசனே! நமஸ்காரம்; கங்கைக்கும் உமாதேவியாருக்கும் புதல்வரே! நமஸ்காரம்; பன்னிரண்டு திருப்புயங்களையுடைய பெருமானே! நமஸ்காரம்; கடப்பமலர்மாலையைத் தரித்த தந்தையே! நமஸ்காரம்; சண்முகங்களையுடைய முதல்வரே! நமஸ்காரம்; சோதிரூபமாயுள்ளவரே! நமஸ்காரம்; தற்பரம் பொருளாகிய எந்தையே! நமஸ்காரம்; என்றும் பாலரூபியாயுள்ளவரே! நமஸ்காரம்; குமாரக்கடவுளே! நமஸ்காரம் என்று துதித்தார்கள்.—எ-று.

தற்பரம் - தானே பரமாயுள்ளது; தனக்கு மேலிட்ட பரம் இல்லாததென்பது பொருள். (அ௨)

பொருந்துதலை யன்புட னெழுந்தவர்க ளிவ்வகை புகழ்ந்து மனமே
லரந்தைகொடு மெய்ந்நடு நடுங்குதலு மன்னதை யறிந்து குமரன்
வருந்தலிர் வருந்தலி ரெனக்கருணை செய்திடலு மற்ற வர்கடாம்
பெருந்துயரு மச்சமு மகன்றுதொழு தேயினைய பேசி னர்களால்.

(இ-ள்.) உயிர்பெற்றெழுந்த தேவர்கள் முதன்மை பொருந்திய பேரன்புடன் இவ்வாறு துதித்து மனத்தில் துன்பங்கொண்டு தேகம் நடுநடுங்குதலும், அதனைக் குமாரக்கடவுளறிந்து வருந்தாதீர்கள்; வருந்தாதீர்களென்று திருவருள் புரியவும், அத்தேவர்கள் மிக்க துன்பமும் அச்சமு மொழிந்து வணங்கி இவற்றைக் கூறுகின்றார்கள்.—எ-று.

தலையன்பு - முதன்மையாகிய அன்பு; பேரன்பு என்பது பொருள். (அ௩)

ஆயவமு தத்தினொடு நஞ்சளவி யுண்குநரை யவ்வி டமலாற்
றூயவமு தோவுயிர் தொலைக்குமது போலுனது தொல்ல ருளினு
லேயதிரு வெய்திட விருந்தனமுன் னோடமரி யற்றி யததா
னீயெமை முடித்திலை யன்னதவ றெம்முயிரை நீக்கி யதரோ.

(இ-ள்.) இனிமையாகிய அமுதத்துடன் விஷத்தைக்கலந் துண்பவர்களை அவ்விஷத்தையன்றித் தூய்மையாகிய அமுதமோ உயிரை நீக்குவது; (அதுபோல) தேவரீரது பழைமையாகிய திருவருளினால் பொருந்திய செல்வத்தை யடையும்படியிருந்தோம்; உம்முடன் போர்செய்ததனால் தேவரீர் எங்களைக் கொன்றருளவில்லை; அப்போர்செய்த குற்றமே யெங்களுயிரை நீக்கியது.—எ-று.

அமுதத்தையும் விஷத்தையுங் கலந்துண்டவர்கள் இறத்தல், அவ்விஷத்தினாலேயேயன்றி அமுதத்தினாலன்று; அதுபோலத் தேவரீரோ டெதிர்த்துப் போர் செய்த அடியேங்களிறந்தமை எங்கள் குற்றமேயன்றித் தேவரீர் எங்களை யழித்திலீர் என்பது கருத்து. (அ௪)

பண்டுபர மன்றனை யிகழ்ந்தவன் மகத்திலிடு பாக மதியா
முண்டபவ மின்னமு முடிந்தில வதன்றியு முனைப்பொ ருதுநேர்
கொண்டிகல் புரிந்தன மாப்பில்பவம் வந்தகுமரேச வெமைநீ
தண்டமுறை செய்தவை தொலைத்தனை யுளத்துடைய தண்ண ளியினால்.

(இ-ள்.) குமாரக்கடவுளே! முற்காலத்தில் சிவபெருமானை இகழ்ந்த தக்ஷனது வேள்வியிற் கொடுத்த அவிப்பாகத்தை யுண்ட பாவம் இன்னும் நீங்கவில்லை; அஃதன்றியும், தேவரீரை யெதிர்த்துப் போர்செய்தோம், அதனால் அநேக பாவங்களுண்டாயின. எங்களைத் தேவரீர் திருவுள்ளத்திற் பொருந்திய கருணையினால் முறையே தண்டித்து அப்பாவங்களைத் தொலைத்தருளினீர்.—எ-று.

தேவரீர் எங்களது பாவ நீங்கும்பொருட்டு மறக்கருணைபுரிந்து அப்பாவத்தை யொழித்தருளினிரென்று கூறினரென்க. (அரு)

அதனி னெமக்கடிகள் செய்தவரு ளுக்குதிக ராற்று வதுாகா
னேதுளது மற்றெமை யுனக்கடிய ராகவிவ ணிது மெனினு
மாதிபர மாகிய வுனக்கடியம் யாம்புதி தளிப்ப தெவனோ
தாதையர் பெறாச்சிறுவர் தங்களை யவர்க்கருள்கை தக்க பரிசோ.

(இ-ள்.) ஆதலால் எங்களுக்குத் தேவரீர் செய்த திருவருளுக் கொப்பாக (அடியேங்கள்) செய்வதற்கு யாதிருக்கின்றது; எங்களைத் தேவரீருக்கடிமையாகக் கொள்ளப்போ மென்றாலும், முதன்மையாகிய பரம்பொருளாயுள்ள தேவரீருக்கு முன்னமே யாங்க ளடியோங்கள், இப்பொழுது நூதனமான எதனை யடிமையாக்கப் போகின்றோம். அன்றியும், தந்தையர்கள் பெற்றுக்கொள்ளும்படி மைந்தர்கள் தங்களை அத்தந்தையர்களுக்குக்கொடுத்தல் தகுதியாகுமோ.—எ-று.

பதிப்பொருளாகிய தேவரீர் எங்களை அநாதியே யடிமையாகக்கொண்டுள்ளவராகலின், இப்போது புதிதாக அடிமைப்படுத்துதல் யாங்ஙனமென்று கூறினரென்பார், 'மற்றெமை யுனக்கடியராகவிவணிதுமெனினு - மாதி பரமாகிய வுனக்கடியம் யாம் புதிதளிப்ப தெவனோ' என்றுகூறினர். இதனை:—" இரும்புநேர்நெஞ்சகக்கள்வனுறுமுனையிடைவிட்டுகின்றதன்றோ - வென்றுநீயன்றுநானுன்னடிமையல்லவோ " எனவருந் தாயுமானவர் திருவாக்கானறிக. (அக)

அன்னதெளி வின்றெளிவில் பேதையடி யேம்பிழை யனைத்து முளமே
யுன்னலை பொறுத்திடென வேகுமர வேளவை யுணர்ந்து நமைநீர்
முன்னமொரு சேயென நினைந்துபொரு தீர்நமது மொய்ம்பு முயர்வு
மின்னுமுண ரும்படி தெரித்துமென வோருருவ மெய்தி னனரோ.

(இ-ள்.) அவ்வாறாயினும், தெளிவில்லாத பேதைகளாகிய அடியேங்களது பிழைகளனைத்தையுந் திருவுள்ளத்திற் கருதாமல் மன்னித்தருளவேண்டுமென்று வேண்டுதலும், குமாரக்கடவுள் அதனையுணர்ந்து நீங்கள் நம்மை முன்னம் ஒருகுழந்தையாக நினைத்துப் போர்செய்தீர்கள், நமது வலிமையையும் உயர்வையும் நீங்களின்னு முணரும்படி தெரிவிக்கின்றோமென்று ஒரு திருவுருவத்தை யடைந்தருளினர்.

சிறியவர்கள் செய்த குற்றத்தைப் பெரியவர்கள் பொறுத்தருளவேண்டுவது முறைமையென்று குறித்துவணங்கினரென்பார், பேதையடியேம்பிழையனைத்துமுளமே யுன்னலைபொறுத்தி, என்று கூறினர். " பிழைத்தவைபொறுக்கையெல்லாம் பெரியவர் கடமைபோற்றி " என்னுந் தமிழ்வேதத்தானறிக. (அஎ)

எண்டிசையு மீரேழு திறத்துலகு மெண்கிரியு மேழு கடலுந்
தெண்டிரையு நேமிவரை யும்பிறவும் வேறுதிரி பாகியுளசி
ரண்டநிரை யானவு மனைத்துயிரு மெப்பொருளு மாகி யயனும்
விண்டுமர னுஞ்செறிய வோருருவு கொண்டனன் விறற்குமரனே.

(இ-ள்.) வெற்றிபொருந்திய குமாரக்கடவுள் அஷ்டதிக்குகளும், பதினாலுலகமும், அஷ்டகுலபர்வதங்களும், சப்தசமுத்திரங்களும் பெரும்புறக்கடலும் சக்கரவாளகிரியும் மற்றும் வேறு திரிபாகவுள்ள சிறந்த அண்டவரிசைகளும் சகலவுயிர்களும் சகல பொருள்களுமாகிப் பிரம விஷ்ணு ருத்திரர்களென்று மூவர்களுந் தமதுருவிற் பொருந்த ஒரு திருவுருவத்தைக் கொண்டருளினர்.—எ-று.

இவ்வுருவம் பாரமேசுவரரூப மெனவும், விசுவரூபமெனவும் பெயர்பெறும்.

மண்ணளவு பாதலமெ லாந்தரணை மாதிர வரைப்பு திருதோள்
விண்ணளவெ லாமுடிகள் பேரொளியெ லாநயன மெய்ங்கரு மெலாம்
பண்ணளவு வேதமணி வாயுணர்வெ லாஞ்செவிகள் பக்க மயன்மா
லெண்ணளவு சிந்தையுமை யைந்தொழிலு நல்லுயிரு மீச னுயிரே.

(இ-ள்.) மண்முதல் பாதலம் வரையிலுந் திருவடிகளும், திக்கெல்லைகள் பெரிய தோள்களும், ஆகாயவெல்லை யனைத்துந் திருமுடிகளும், பெரிய வொளிப்பொருள்களெல்லாம் திருவிழிகளும், மத்தியப்பிரதேசங்களெல்லாம் திருமேனியும், பண்ணமைந்த வேதங்கள் அழகிய வாய்களும், உணர்வனைத்துஞ் செவிகளும், பிரமவிஷ்ணுக்கள் பக்கங்களும், உமாதேவியார் நினைக்கின்ற மனமும், பஞ்சகிருத்தியங்களைச் செய்யும் சிவபெருமான் உயிரும்.—எ-று.

பேரொளியெலாம், என்றது சோமசூரியாக்கினிகளை.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௮௯)

ஆனதொரு பேருருவு கொண்டுகும ரேசனுற வண்டர் பதியு
மேனையரு மற்புதமி தற்புதமி தென்றுதொழு தெல்ல வருமாய்
வானமிசை நோக்கினர்கள் மெய்வடிவம் யாவையும் வனப்பு முணரார்
சாலுவள வாவரிது கண்டனர் புகழ்ந்தினைய சாற்றி னர்களால்.

(இ-ள்.) இவ்வாறாகிய ஒரு பெரிய திருவுருவத்தைக்கொண்டு குமாரக்கடவுள் நின்றருளவும், தேவேந்திரனும் மற்றைத்தேவர்களும் இது ஆச்சரியம் ஆச்சரியமென்று எல்லோருமாகத்தொழுது வானத்திற் பார்த்துத்திருவுருவத்தின்வடிவத்தையும் அழகையும் முற்றிலும் அறியாதவர்களாய்க் கஷ்டத்துடன் முழந்தாளளவாகக் கண்டு புகழ்ந்து இவ்வாறு சொல்லுகின்றார்கள்.—எ-று. (௯௦)

வேறு.

சேணலம் வந்த சோதிச் சிற்பர முதல்வ வெம்முன்
மாணல முறநீ கொண்ட வான்பெருங் கோலந் தன்னைக்
காணல மடியேங் காணக் காட்டிடல் வேண்டு மென்ன
நீணலங் கொண்டு நின்ற நெடுந்தகை யதனைக் கேளா.

(இ-ள்.) ஆகாயமனைத்துஞ் சுழல்கின்ற சோதிருபமாகவுள்ள ஞானமுதல்வரே! மாட்சிமையாகிய நன்மைபொருந்த எங்களுக்குமுன்னே தேவரீர் கொண்டருளிய சிறந்த பெரிய திருக்கோலப்பொலிவை யறியோம், அடியேங்கள் நன்றாய்ப் பார்க்கும்படி காட்டியருளல் வேண்டுமென்று பிரார்த்திக்கவும் விசுவரூபங்கொண்டு நின்றருளிய குமாரக்கடவுள் அவ்வசனத்தைக்கேட்டு.—எ-று.

நீணலம் - சிறப்புமிக்க நீண்ட திருவுருவும்.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௯௧)

கருணைசெய் தொளிகண் மிக்க கண்ணவர்க் கருளிச் செவ்வே
யருணமார் பரிதிப் புத்தே ளநந்தகோ டிகள்சேர்ந் தென்னத்
தருணவில் வீசி நின்ற தனதுரு முற்றுங் காட்ட
விரணிய வரைக்க ணின்ற விந்திரன் முதலோர் கண்டார்.

(இ-ள்.) குமாரக்கடவுள் திருவருள்சுரந்து மிகுந்த ஒளிபொருந்திய ஞானக்கண்ணை அவர்களுக்குக்கொடுத்து, செந்நிறமமைந்த அநேககோடி சூரியர்கள் ஒன்றாய்ச்சேர்ந்து நின்றதன்மைபோல, இளம்பிரகாசத்தோ டெழுந்தருளி நின்ற தமது

திருவுருவ முழுவதையுங்காட்டி யருளவும், பொன்மயமாகிய மேருமலையில் நின்ற இந்திரன்முதலிய தேவர்கள் தரிசித்தார்கள்.—எ-று.

'ஒளிகண்மிக்க கண்ணவர்க்கருளி' என்றது, மாமிசநேத்திரமன்றித் திவ்வியநேத்திரங் கொடுத்தருளினமையை. தருணம் - இளமை. (௧௨)

அடிமுதன் முடியின் காறு மறுமுக னுருவ மெல்லாங்
கடிதவ னருளா னோக்கிக் களிப்பிலா வண்ட முற்று
முடிவறு முயிர்கள் யாவு மூவருந் தேவர் யாரும்
வடிவினி லிருப்பக் கண்டு வணங்கியே வழுத்திச் சொல்வார்.

(இ-ள்.) பாதாதிகேச பரியந்தம் ஸ்ரீ சண்முகக்கடவுளது திருவுருவமனைத்தையும் விரைவாக அவரது திருவருளால் தரிசித்து, அளவில்லாத எல்லா அண்டங்களும் அழிவற்ற ஆன்மகோடிகளும் திரிமூர்த்திகளும் மற்றைத்தேவர்களும் தமது திருமேனியிற்றங்கி யிருத்தலைக்கண்டு வணங்கித்துதித்துச் சொல்லுகின்றார்கள்.—எ-று.

திருவருளின்றித் தரிசித்தல் கூடாமையின், 'அறுமுகனுருவமெல்லாங் கடிதவனருளானோக்கி'என்று கூறினார். இதனை—" அவனருளாலே யவன்றாள்வணங்கி" என்னுந் திருவாசகத் திருமுறையா னறிக. (௧௩)

அம்புவி முதலாம் பல்பே ரண்டமு மங்கங் குள்ள
வம்பரு முயிர்கள் யாவு முயிரலாப் பொருளு மாலுஞ்
செம்பது மத்தி னோனுஞ் சிவனொடுஞ் செறிதல் கண்டோ
மெம்பெரு மானின் மெய்யோ வகிலமு மிருப்ப தம்மா.

(இ-ள்.) பிருதிவி முதலாகக்கொண்டுள்ள பல பெரிய அண்டங்களும், அவ்வவ்விடங்களிற் பொருந்திய தேவர்களும், எல்லாவுயிர்களும், உயிரல்லாத சடப்பொருள்களும், திருமாலும் செந்தாமரையிலுள்ள பிரமனும் சிவபெருமானுடன் பொருந்தி யிருத்தலைப்பார்த்தோம்; ஆதலால், எமது பெருமானே ! தேவரீரது திருவுருவமோ ? எவ்விடங்களிலும் நிறைந்துள்ளது.—எ-று. (௧௪).

அறிகில மிந்நாள் காறு மகிலமு நீயே யாகி
யுறைதரு தன்மை நீவந் துணர்த்தலி னுணர்ந்தா மன்றே
பிறவொரு பொருளுங் காணெம் பெருமநின் வடிவ மன்றிச்
சிறியமியா முனது தோற்றந் தெரிந்திட வல்ல மோதான்.

(இ-ள்.) அதனை இந்நாள்வரையிலு மறியோம், அனைத்துந் தேவரீரோயாகிப் பொருந்தியுள்ள தன்மையைத் தேவரீரெழுந்தருளி யுணர்த்தியதனால் உணர்ந்தோம்; எம்பெருமானே ! தேவரீரது திருவுருவமேயன்றி வேறொரு பொருளையுங்கண்டிலோம்; சிறியோர்களாகிய யாங்கள் உமது தோற்றத்தை யுணரவல்லமோ ?-எ-று.

'நீவந்துணர்த்தலி னுணர்ந்தாமன்றே' என்பதனை—"அறிவித்தாலன்றியறியாவுளங்கள்" என்னும் அருள்வாக்கா னறிக. (௧௫)

முண்டக னொருவன் அஞ்ச முராரிபே ருருவாய் நேமிக்
கண்டுயி லகந்தை நீங்கக் கண்ணுதற் பகவ னெல்லா
வண்டமு மலிப்பூ ணார மாகவே யாங்கொர் மேனி
கொண்டன னென்னுந் தன்மை குமரநின் வடிவிற் கண்டேம்.

(இ-ள்.) ஒரு பிரமன் அழியவும், திருமால் பேருருவங்கொண்டு திருப்பாற்கடலில் தூங்கிய செருக்கொழியும் பொருட்டு நெற்றிக்கண்ணராகிய சிவபெருமான் சகல அண்டங்களும் அழகிய பூணாரமாகும்படி அப்பொழுது ஒரு திருமேனி கொண்

டருளின வென்று கூறுந்தன்மையை, குமாரக்கடவுளே! தேவரீரது திருவுருவத்திற் கண்டோம்.—எ-று. (௯௬)

நாரணன் மலரோன் பன்னா ளுடைவுந் தெரிவின் றகிப்
பேரழ லுருவாய் நின்ற பிரான்றிரு வடிவே போலு
நீருரு வுற்ற தம்மா தெளிகில ரவரு மெந்தை
யாரரு ளெய்தி னம்போ லடிமுடி தெரிந்தி டாரோ.

(இ-ள்.) திருமாலும் பிரமனும் அநேககாலந்தேடியுங் காணப்படாமல் பெரிய அழல்வடிவமாகநின்றருளிய சிவபெருமானது திருவுருவத்தைப்போலவே தேவரீரது சிறந்த திருவுருவம் விளங்கியது. பிரம விஷ்ணுக்களும் இந்த வுருவத்தை யுணர மாட்டார்கள்; எமது ஆண்டவரது திருவருளைப்பெற்றிருந்தால் நம்மைப்போல அவர்களும் அடியையு முடியையு மறியமாட்டார்களோ? (அறிவார்கள்.)—எ-று. (௯௭)

அரியொடு கமலத் தேவு மாடல்செய் தகிலந் தன்னை
யொருவரை யொருவர் நுங்கி யுந்தியான் முகத்தா னல்கி
யிருவரு மிகலு மெல்லை யெடுத்தபே ருருநீ கொண்ட
திருவுரு விதனுக் காற்றச் சிறியன போலு மன்றே.

(இ-ள்.) திருமாலும் பிரமனும் போர்புரிந்து உலகத்துடனொருவரை யொருவர் விழுங்கி, உந்தியினாலும் முகத்தினாலும் பெற்று இருவர்களும் போர்செய்தவிடத்து (சிவபெருமான்) எடுத்த பெரிய திருவுருவம் தேவரீர் கொண்டருளிய இத் திருவுருவத்திற்கு மிகச் சிறியவைபோலும்.—எ-று. (௯௮)

ஆகையா லெம்பி ரானீ யருவுரு வாகி நின்ற
வேகநா யகனே யாகு மெமதுமா தவத்தா லெங்கள்
சோகமா னவற்றை நீக்கிச் சூர்முத றடிந்தே யெம்மை
நாகமே லிருத்து மாற்றா னண்ணினை குமர னேபோல்.

(இ-ள்.) ஆதலால், எமதுபெருமானே! தேவரீர் அருவமாகவும் உருவமாகவு மெழுந்தருளிய முழுமுதற் கடவுளேயாகும், நாங்கள்செய்த பெரிய தவத்தினால் எங்களது துன்பங்களையொழித்துச் சூரபன்மனைக்கொன்று எங்களைச்சொர்க்கத்தில் வாழ வைக்கும்பொருட்டுக் குழந்தை வடிவத்துடன் எழுந்தருளினீர்.—எ-று.

அருவம், உருவம், அருவுருவம் என்பன பதியிலக்கணமாகலின், 'எம்பிரானீயருவுருவாகிநின்ற வேகநாயகனேயாகும்' என்று கூறினர். (௯௯)

எவ்வுரு வினுக்கு மாங்கோ ரிடனதா யுற்ற வுன்றன்
செவ்வுரு வதனைக் கண்டு சிறந்தன மறம்பா வத்தி
னவ்வுரு வத்தின் றப்பு மகலுது மின்னும் யாங்கள்
வெவ்வுரு வத்திற் செல்லேம் வீடுபே றடைது மன்றே.

(இ-ள்.) எல்லா உருவங்களுக்கும் வாசஸ்தானமாயுள்ள தேவரீரது செவ்விய திருவுருவத்தைக்கண்டு சிறப்படைந்தோம்; புண்ணியபாவ வடிவங்களாயுள்ள இருவினைகளாகிய வலியினின்று நீங்குகின்றோம்; இன்னும் அடியேங்கள் கொடிய பிறவியிற்செல்லோம்; முத்திப்பேறடைவோம்.—எ-று. (௬00)

இனையன வழுத்திக் கூறி யிலங்கெழிற் குமர மூர்த்தி
தனதுபே ருருவை நோக்கிச் சதமகன் முதலா வுள்ளோர்
தினகரன் மலர்ச்சி கண்ட சில்லுணர் வுயிர்க ளென்ன
மனமிக வெருவக் கண்க ளலமர மயங்கிச் சொல்வார்.

(இ-ள்.) இந்திரன்முதலிய தேவர்கள் இவ்வாறு துதித்துக்கூறி விளங்குகின்ற அழகினையுடைய குமாரக்கடவுளது பெரிய விசுவரூபத்தைத் தரிசித்து, சூரியனொளியைப்பார்த்த அற்பவுணர்ச்சியையுடைய உயிர்களைப்போலத் தங்கள் மனம் மிக நடுங்கவும் கண்கள் சுழலவும் மயக்கமுற்றுக் கூறுவார்கள்.—எ-று. (௧௦௧)

எல்லையி லொளியிற் றன்றா லெந்தைநின் னுருவ மின்னு
மொல்லுவ தன்றாற் காண வொளியிழந் தலந்த கண்க
ளெல்லரும் பெருமை நோக்கி யஞ்சுது மடிய முய்யத்
தொல்லையி னுருவங் கொண்டு தோன்றியே யளித்தி யென்றார்.

(இ-ள்.) எமது ஆண்டவரே! தேவரீரது திருவுருவம் அளவில்லாதபேரொளியைப்பெற்றுள்ளது, அதனைக்காணத்தக்கதன்று; கண்கள் ஒளிமாழ்கிக்கெட்டன. அன்றியும், தேவரீரது பெரிய திருவுருவத்தைக்கண்டு அஞ்சுகின்றோம்; அடியேங்களுய்யும்படி பழைய திருவுருவத்தைக்கொண்டு எழுந்தருளி யெங்களைக் காத்தருள்வீராகவென்று பிரார்த்தித்தார்கள்.—எ-று. (௧௦௨)

என்றிவை புகன்று வேண்ட வெம்பிரா னருளால் வான்போய்
நின்றபே ருருவந் தன்னை நீத்தறு முகத்தோ னாகித்
தொன்றுள வடிவத் தோடு தோன்றலுந் தொழுது போற்றிக்
குன்றிருஞ் சிறைக ளீர்ந்த கொற்றவன் கூற லுற்றான்.

(இ-ள்.) என்று இவ்வார்த்தைகளையுரைத்து வேண்டிக்கொள்ளவும், எமது குமாரக்கடவுள், கிருபையுடன் ஆகாயமளாவிச்சென்று நின்ற விசுவரூபத்தையொழித்து ஆறு திருமுகங்களையுடையவராய்ப் பழைய திருவுருவத்துடனெழுந்தருளவும், மலைகளினது பெரிய சிறகுகளையரிந்த இந்திரன் வணங்கித் துதித்துச் சொல்லத் தொடங்கினான்.—எ-று. (௧௦௩)

தொன்னிலை தவாது வைகுஞ் சூரனே முதலா வுள்ள
வொன்னல ருயிரை மாற்றி யும்பரும் யானும் பாங்கர்
மன்னிநின் றேவல் செய்ய வானுயர் துறக்க நண்ணி
யென்னர சியற்றி யெந்தா யிருத்தியென் குறையி தென்றான்.

(இ-ள்.) எமது தந்தையே! தனது பழைய நிலைமையினின்று நீங்காதிருக்கின்ற சூரபன்மன் முதலியவர்களுடைய உயிரை நீக்கித் தேவர்களும் யானும் அருகில் நின்று ஏவல் செய்யும்படி வானத்தில் உயர்ந்துள்ள சொர்க்கலோகத்தை யடைந்து எனது அரசாட்சியைச்செய்து இருந்தருள்வீராக; இதுவே என் வேண்டுகோளென்று கூறினான்.—எ-று. (௧௦௪)

இகமொடு பரமும் வீடு மேத்தினர்க் குலப்பு றாம
லகனம ரருளா லல்கு மறுமுகத் தவற்குத் தன்சீர்
மகபதி யளிப்பான் சொற்ற வாசகஞ் சுடரோன் றங்கிப்
பகவனுக் கொருவ னல்கப் பராவிய போலு மாதோ.

(இ-ள்.) தம்மைத் துதிக்கின்ற அன்பர்களுக்கு இம்மை மறுமை வீடு என்னு மூன்றையும் திருவுள்ளத்திற் பொருந்திய கருணையினால் கொடுத்தருளுகின்ற குமாரக்கடவுளுக்கு இந்திரன் தனது செல்வத்தைக் கொடுக்கின்றேனென்று கூறிய வார்த்தையானது (எதுபோலுமெனின்) ஒருவன் அக்கினிதேவனுக்கு ஒரு தீப்பொறியைக் கொடுப்பதாகப் பிரார்த்தித்துத் துதித்த தன்மையை யொக்கும்.—எ-று.

யானவர் கோனை நோக்கி வறிதுற நகைத்துச் செவ்வே
யினமக் களித்த தொல்பிர் நினக்குநா மளித்து நீவிர்
சேனைக ளாக நாமே சேனையந் தலைவ னாகித்
தானவர் கிளையை யெல்லாம் வீட்டுதுந் தளரேல் லென்றான்.

(இ-ள்.) குமாரக்கடவுள் தேவேந்திரனைப்பார்த்து வறிதாகப் புன்னகை புரிந்தருளி, நீ நமக்குக்கொடுத்த பழைமையாகிய உனது செல்வத்தை நாம் உனக்குக் கொடுத்தோம்; நீங்கள் சேனைகளாக நாமேசேனாதிபதியாய் அசுரர்களது வமிசங்க ளனைத்தையும் நாசஞ்செய்கின்றோம்; நீவருந்தாதே யென்றருளிச்செய்தார்.—எ-று.

கோடலங் கண்ணி வேய்ந்த குமரவே ளினைய கூற
வாடியல் கடவுள் வெள்ளை யடற்களிற் றண்ணல் கேளா
வீடுறு வறுனா லெல்லாம் வியன்முடி திருவி னோடுஞ்
சூடின னென்னப் போற்றிச் சுரரொடு மகிழ்ச்சி கொண்டான்.

(இ-ள்.) அழகிய காந்தள் மலர்மாலையையணிந்த முருகக்கடவுள் இவ்வார்த்தைகளை யருளிச்செய்யவும், போர்த்தொழிலையுடைய வலிய ஐராவதத்தலைவனாகிய தேவேந்திரன்கேட்டு, அசுரர்களனைவரு மழியத் தனது செல்வத்துடன் பெரிய மகுடத்தையு மணிந்தவனைப்போன்று துதித்துத் தேவர்களுடன் பெருமகிழ்வடைந்தனன்.

அறுமுகத் தேவை நோக்கி யமரர்கோ னிந்த வண்டத்
துறைதரு வரைக ளேமி யுலகுயிர் பிறவு நின்னான்
முறைபிறழ்ந் தனவா லிந்நாண் முன்புபோ லவற்றை யெல்லா
நிறுவுதி யென்ன லோடு நகைத்திவை நிகழ்த்த லுற்றான்.

(இ-ள்.) தேவேந்திரன் ஆறுதிருமுகங்களையுடைய குமாரக்கடவுளைப்பார்த்து இந்த அண்டத்திலுள்ள மலைகளும், கடல்களும், உலகுயிர்களும் மற்றவைகளும் இப்பொழுது தேவரீரால் முறை பிறழ்ந்தன; அவற்றை முன்போலவே அமைத்தருள்வீராகவென்று பிரார்த்திக்கவும் (முருகக்கடவுள்) புன்னகைபுரிந்து இவற்றை யருளிச் செய்யத்தொடங்கினார்.—எ-று. (௧0அ)

இன்னதோ ரண்டந் தன்னி லெம்மில்வே றுற்ற வெல்லாந்
தொன்னெறி யாக வென்றோர் தூமொழி குமரன் கூற
முன்னுறு பெற்றித் தான முறையிறந் திருந்த தெல்லா
மந்நிலை யெவரு நோக்கி யற்புத மடைந்து நின்றார்.

(இ-ள்.) இவ்வண்டத்தில் எம்மால் வேறுபட்டவைக ளனைத்து முன்போலவே யாகுகவென்று ஒரு தூய்மையாகிய வார்த்தையினைக் குமாரக்கடவு ளருளிச்செய்தவுடனே முறைமாறிக் கிடைந்தவைகளெல்லாம் முன்பு இருந்தவண்ணமேயாயின; யாவரும் அத்தன்மையைப்பார்த்து ஆச்சரியமடைந்து நின்றார்கள்.—எ-று.

வேறு

நிற்கு மெல்லையி னிலத்திடை யாகிப்
பொற்கெ னத்திகழ் பொருப்பிடை மேவுஞ்
சிற்கு ணக்குரிசில் சேவடி தாழூஉச்
சொற்க நாடுள சுரேச னுரைப்பான்.

(இ-ள்.) அவ்வாறு ஆச்சரியமடைந்து நிற்கும்பொழுது, இந்நிலவுலகத்திறுள்ளதாய்ப் பொன்போல் விளங்குகின்ற மேருமலையின்கண் எழுந்தருளிய சிற்குணரா

கிய முருகக்கடவுளது திருவடிகளைவணங்கி விண்ணுலகத்தலைவனாகிய தேவேந்திரன் கூறுவான்.—எ-று.

சுரேசன் - சுரர்களுக்கு ஈசன். (௧௧௦)

ஆண்ட கைப்பகவ வாரண மெய்ந்நூல்
பூண்ட நின்னடிகள் பூசனை யாற்ற
வேண்டு கின்றனம்வினை யேமது செய்ய
யீண்டு நின்னருளை யீகுதி யென்றான்.

(இ-ள்.) வீரத்தன்மைபொருந்திய எமது கடவுளே! வேதங்களென்னும் மெய்ம்மையாகிய நூல்களால் தாங்கப்பெற்ற தேவரீரது திருவடிகளை அருச்சனை செய்யும்படி விரும்புகின்றோம்; தீவினையையுடையவர்களாகிய அடியேங்கள் அதனைச் செய்யும்பொருட்டு இப்பொழுது தேவரீர் திருவருள் செய்தருள வேண்டுமென்று பிரார்த்தித்தான்,—எ-று.

பூண்ட என்பதற்கு, அடைந்துதுதிக்கின்ற எனப்பொருள் கூறலுமொன்று.

என்ன ஆங்குக னிசைந்து நடந்தே
பொன்னி னுயர் பொருப்பினை நீங்கித்
தன்ன தொல்கயிலை சார்ந்திடு ஞாங்கர்
மன்னி நின்றதொரு மால்வரை புக்கான்.

(இ-ள்.) என்று இவ்வாறு கூறவும்; முருகக்கடவுள் அதற்குத் திருவுள்ளமிசைந்து பொன்னினால் உயர்வடைந்திருக்கின்ற மேருமலையை நீங்கிச் சென்று தமது ஒள்ளிய திருக்கயிலாசத்திற் கருகில் பொருந்தியுள்ள வொரு பெரிய மலையை யடைந்தருளினர்.—எ-று. (௧௧௨)

குன்றி றுஞ்சிறை குறைத்தவ னேனோ
ரொன்றி யேதொழு துவப்புள மெய்தி
யென்று நல்லிளைய னாகிய வெங்கோன்
பின்றொ டர்ந்தனர் பிறங்கலில் வந்தார்.

(இ-ள்.) மலைகளின் பெரிய சிறகுகளை யறுத்த தேவேந்திரனும் மற்றையர்களும் அடைந்து வணங்கி மனத்திற் களிப்படைந்து, எப்பொழுதும் மிக்க இளையவராகிய எமது முருகக்கடவுளுக்குப்பின்றொடர்ந்தவர்களாய் அம்மலையினிடத்தில் வந்தார்கள்.—எ-று. (௧௧௩)

சூரல் பம்புதுறு கன்முழை கொண்ட
சாரல் வெற்பினிடை சண்முகன் மேவ
யாரும் விண்ணவ ரவன்கழ றன்னைச்
சீரி தர்ச்சனை செயற்கு முயன்றார்.

(இ-ள்.) ஸ்ரீ சண்முகப்பெருமான் பிரப்பங்காடு நெருங்கிய துறுகற்களையுடைய குகைகளோடு கூடிய சாரலமைந்த மலையினிடத்தெழுந்தருளவும், தேவர்களனைவரும் அவ்வெம்பெருமானது திருவடிகளைச் சிறப்புப்பொருந்திய அருச்சனை செய்தற்கு முயற்சிசெய்தார்கள்.—எ-று.

விண்ணவராரும், எனக் கூட்டுக. (௧௧௪)

அந்த வேலையம ரர்க்கிறை தங்கள்
முந்து கம்மியனை முன்னுற வுன்னான்
வந்து கைதொழுது மந்திர மொன்று
நந்த மாநகரி னல்கிவ னென்றான்.

(இ-ள்.) அந்தச்சமயத்தில் தேவர்கள் தலைவனாகிய இந்திரன் தங்களது முதன்மையாகிய விசுவகன்மனை நினைத்தவுடனே அவன்வந்து கைகூப்பிவணங்கவும், உயது சொர்க்கத்தைப்போல ஒரு ஆலயத்தை இங்குச் சிருட்டிக்கக்கடவை யென்று கூறினான்.—எ-று. (௧௧௫)

அருக்கர் தந்தொகை யனைத்தையு மொன்றா
வுருக்கி யாற்றியென வொண்மணி தன்றாற்
றிருக்கி ளர்ந்தலவு செய்யதொர் கோயில்
பெருக்கெ னப்புனைவர் கோன்புரி குற்றான்.

(இ-ள்.) அவ்விசுவகன்மனானவன் சூரியர்கூட்டங்க ளனைத்தையு மொன்றாக வுருக்கிச்செய்ததுபோல ஒளிபொருந்திய நவரத்தினங்களால் அழகுமிக்கு விளங்குகின்ற சிறந்த ஒரு திருக்கோயிலை விரைவாகச் செய்தனன்.—எ-று.

'அருக்கர் தந்தொகை' என்றது பன்னிரண்டு சூரியர்களை. அவர்கள்:—தாத்துரு, சக்கரன், அரியமன், மித்திரன், வருணன், அஞ்சுமான், இரணியன், பகவான், திவச்சுவான், பூடன், சவித்திரு, துவட்டன், என்பவர்கள். (௧௧௬)

குடங்கள் போன்மகு டங்கெழு வுற்ற
விடங்கொள் கோபுர விருக்கையி னுப்பண்
கடங்க லூழ்ந்திடு கரிக்குரு குண்ணு
மடங்கல் கொண்டதொர் மணித்தவி சிந்தான்.

(இ-ள்.) கும்பம்போலச் சிகரங்கள் விளங்கப்பெற்ற விசாலமாகிய கோபுரத்தினையுடைய அத்திருக்கோயிலின் மத்தியில், மதத்தைச்சிந்துகின்ற யானையின் மூளையை யுண்ணுகின்ற சிங்கங்களால் சுமக்கப்பட்ட ஒரு ஆசனத்தைச் சிருஷ்டி செய்தனன்.—எ-று.

குருகு - யானையின் தலை மூளை. (௧௧௭)

ஈந்த வெல்லைதனி லிந்திர னேவப்
போந்து வானெறி புகுநதிடு தூநீர்
சாந்த மாமலர் தழற்புகை யாதி
யாய்ந்து தந்தனர்க ளண்டர்கள் பல்லோர்.

(இ-ள்.) அவ்வாறு செய்தமைத்தவுடனே, தேவேந்திரனது ஏவலினால் பல தேவர்கள் சென்று விண்ணிற் செல்லுகின்ற பரிசுத்தமான ஆகாயகங்கையும், சந்தனமும், சிறந்த மலர்களும், தூபதீபாதிகளுமாகிய இவைகளை ஆராய்ந்துகொண்டு வந்தார்கள்.—எ-று. (௧௧௮)

வேறு.

அன்ன காலையி லண்டர்கள் மேலையோன்
சென்னி யாறுடைத் தேவனை வந்தியா
வுன்ன தாளருச் சித்திடா முய்ந்திட
விந்நி கேதன மேகுதி நீயென்றான்.

(இ-ள்.) அந்தச்சமயத்தில் தேவர்கள் தலைவனாகிய இந்திரனானவன், ஆறு திருமுகங்களையுடைய குமாரக்கடவுளை வணங்கி நாங்கள் தேவரீரது திருவடிகளை அருச்சித்துய்யும்படி தேவரீர் இத்திருக்கோயிலுள்ளெழுந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான்.—எ-று.

நிகேதனம் - தேவாலயம். (௧௧௯)

கூற்ற மன்ன நாட் கொண்டிலின் றென்றெலாம்
போற்ற மந்திரம் புக்குத னந்தலை
யேற்ற ரித்தொகை யேந்தெழிற் பீடமேல்
வீற்றி ருந்தனன் வேதத்தின் மேலையோன்.

(இ-ள்.) வேதத்தின் முடிந்த பொருளாகிய முருகக்கடவுள் அவ்வார்த்தையைத் திருவுள்ளத்தமைத்துத் தேவர்களனைவருந் துதிக்கும்படி அவ்வாலயத்துள்ளே யெழுந்தருளி, கவின் உயரமாக இட்டிருக்கின்ற சிங்கங்களால் சுமக்கப்பட்ட பீடத்தின்மேல் வீற்றிருந்தருளினார்.—எ-று. (௪௨௦)

ஆன காலை யமரர்கள் வாசவன்
ஞான நாயக நாங்க ளுனக்கொரு
தானை யாகுந் தலைவனை நீயென
வான நீத்தத்து மஞ்சன மாட்டினார்.

(இ-ள்.) அந்தச் சமயத்தில் தேவர்களும் இந்திரனும், ஞானநாயகரே! அடியோங்கள் தேவரீருக்கொரு சேனையாகவிருக்கின்றோம்; தேவரீரே சேனாபதியாகுமென்று ஆகாய கங்கையினால் அபிஷேகம் செய்தார்கள்.—எ-று.

தலைவனை என்பதில் ஐகாரம் சாரியை. (௪௨௧)

நொதுமல் பெற்றிடு நுண்டுகில் சூழ்ந்தனர்
முதிய சந்த முதலமட் டித்தனர்
கதிரு நன்பொற் கலன்வகை சாத்தினர்
மதும லர்த்தொகை மாலிகை சூட்டினார்.

(இ-ள்.) மிருதுவாகிய மெல்லிய வஸ்திரத்தைச் சாத்தினார்கள். முதிர்ந்த சந்தன முதலிய கலவைப்பொருள்களைப்பூசினார்கள்; ஒளிவிளங்குகின்ற நல்லபொன்னாபரணவகைகளைத் தரித்தார்கள்; தேன்பொருந்திய மலர்த்தொகுதிகளாற் கட்டப்பட்ட மாலையைச் சூட்டினார்கள்.—எ-று.

நொதுமல்-நொய்மை. முதல என்றது, சந்தன முதலிய வாசனைத்திரவியங்களை. கதிரும் - பெயரெச்சம். (௧௨௨)

ஐவ கைப்படு மாவியும் பாளித
மெய்வி ளக்கமும் வேறுள பான்மையு
மெவ்வெ வர்க்கு மிறைவர்க்கு நல்கியே
செவ்வி தர்ச்சனை செய்தன ரன்பவே.

(இ-ள்.) பஞ்சதூபங்களும் கர்ப்பூர தீபமும், மற்றுள்ள பொருள்களும் யாவர்களுக்கு முதல்வராயுள்ள முருகக்கடவுளுக்குச் சமர்ப்பித்துச் சிறப்பாகிய முறைமையோடும் அருச்சித்தார்கள்.—எ-று.

'ஐவகைப்படு மாவி' என்றது, நறுமணங்கமழும் பொருட்டுப் பொடித்துத் தூபமிடுகின்ற ஐவகை விரைப்பொருள்களை; அவை:—கோட்டம், துருக்கம், தகரம், அகில், சந்தனம் என்பன. "கோட்டந் துருக்கந் தகரமகிலாரம் - ஓட்டிய வைந்தும் விரை"—என்பதனாலறிக. (௧௨௩)

புரந்த ரன்முதற் புங்கவர் தம்முளத்
தரந்தை நீங்க வருச்சனை செய்துபின்
பரிந்து தாழ்ந்து பரவலு மாயிடைக்
கரந்து வள்ளல் கயிலையிற் போயினான்.

(இ-ள்.) இந்திரன் முதலிய தேவர்கள் தமதுள்ளத்திற் பொருந்திய துன்பம் நீங்கும் வண்ணம் அருச்சனை புரிந்து பின்பு அன்புடன் வணங்கித்துதிக்கவும், அருள் வள்ளலாகியகுமாரக்கடவுள் அவ்விடத்தினின்று மறைந்து திருக்கயிலாயத்திற்குச் சென்றருளினர்.—எ-று. (௧௨௪)

வெற்பின் மிக்குயர் வெள்ளியம் பொற்றறையிற்
நிற்ப ரன்மறைந் தேகலுந் தேவரும்
பொற்பின் மேதகு பொன்னக ரண்ணலு
மற்பு தத்துட னவ்வரை நீங்கினர்.

(இ-ள்.) ஞானசொரூபராகிய முருகக்கடவுள் மலைகளிற் சிறந்துள்ள வெள்ளியங்கிரியில் அந்தர்த்தானமாய்ச் சென்றருளினவுடனே, தேவர்களும் அழகுமிகுந்த சுவர்க்கத்தலைவனாகிய இந்திரனும் ஆச்சரியத்துடன் அம்மலையினின்று நீங்கினார்கள்.—எ-று. (௧௨௫)

ஈசன் மைந்த னிளைய விமையவர்
பூசை செய்யப் பொருந்தலி னவ்வரை
மாசில் கந்த வரையென யாவரும்
பேச வாங்கொர் பெயரினைப் பெற்றதே.

(இ-ள்.) சிவகுமாரராகிய முருகக்கடவுளைத் தேவர்களனைவருஞ் சேர்ந்து பூசித்தற்கிடமாயிருந்தமையால் அம்மலையானது குற்றமற்ற கந்தகிரியென்று யாவருந்துதிக்கும்படி அவ்விடத்து ஒரு பெயரைப்பெற்றது.—எ-று. (௧௨௬)

ஆன கந்த வடுக்கலைத் தீர்ந்துபோய்
வான மன்னன் மனோவதி நண்ணினு
னேனை வானவர் யாவரு மவ்வவர்
தான மெய்தினர் தொன்மையிற்றங்கினர்.

(இ-ள்.) விண்ணுலகத் தலைவனாகிய தேவேந்திரன் அவ்வாறாகிய கந்தகிரியை நீங்கிச்சென்று மனோவதிநகரத்தை யடைந்தனன்; மற்றைத் தேவர்களனைவரும் தங்கள் தங்களிடத்தை யடைந்து முன்போலிருந்தார்கள்.—எ-று. (௧௨௭)

உயவ லூர்திகொண் டொய்யென முன்னரோ
கயிலை யங்கிரி யேகிய கந்தவேள்
பயிலும் வீரரும் பாரிட மள்ளரு
மயலின் மேவர வாயிடை வைகினன்.

(இ-ள்.) தமது திருவுள்ளத்தையே வாகனமாகக் கொண்டு முன்னமே விரைவாகத் திருக்கயிலாயத்திற் கெழுந்தருளிய முருகக்கடவுள், தம்மைச் சூழ்ந்துலாவுகின்ற நவவீரர்களும் பூதகணங்களும் தமக்கு அருகில் பொருந்த அங்கு எழுந்தருளியிருந்தனர்.—எ-று.

உயவல் - நினைத்தல். (௧௨௮)

திருவிளையாட்டுப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௧௧௭௧.

---

உ

முருகன்றுணை.

## தகரேறுபடலம்.

சூரன்முத லோருயிர் கொள்ளக்கவரு செவ்வே
ளாருமகிழ் வெள்ளியச லத்தினமர் போழ்தின்
மேருவி லுடைப்பரன் விரும்பவகி லத்தே
நாரதனொர் வேள்வியை நடாத்திட லுற்றான்.

(இ-ள்.) சூரபன்மன் முதலிய அசுரர்களது உயிரை நீக்கும்படி யவதரித்தருளிய முருகக்கடவுள் எவர்களும் விரும்புகின்ற திருக்கயிலாய மலையின்கண் ணெழுந்தருளியிருக்கும் நாள்களில், மேருமலையை வில்லாகவுடைய சிவபெருமான் விருப்பங்கொள்ளும்படி, நாரதமுனிவர் இந்நிலவுலகத்தில் ஒரு யாகஞ் செய்யத்தொடங்கினர்.

மாமுனி வருந்தரு மாநில வரைப்பிற்
றோமறு தவத்துயர் தொல்லை மறையோரு
மேமமொடு சூழ்தர வியற்றிய மகத்திற்
றிமிசை யெழுந்ததொரு செக்கர்புரை செச்சை.

(இ-ள்.) சிறந்த முனிவர்களும் தேவர்களும் இந்தப் பெரிய உலகத்தில் குற்றமற்ற தவத்திற் சிறந்துள்ள வேதியர்களும் மகிழ்வாகச் சூழ்ந்திருக்கும்படி செய்த யாகத்தில், அவ்வியாகாக்கினியினின்றுஞ் செவ்வானம்போலுஞ் நிறத்தினையுடைய ஒரு ஆட்டுக்கடாவானது தோன்றியது.—எ-று. (உ)

அங்கிதனில் வந்ததக ரற்றமகந் தன்னி
லங்கனினை மேபலவு நாளுமடு கின்று
ரிங்கிவரை யானடுவ னென்றிசைவு கொண்டே
வெங்கனலை யேந்துபரி மீதெழுதல் போலும்.

(இ-ள்.) யாகாக்கினியி னின்றுந் தோன்றிய ஆட்டுக்கடாவானது (எவ்வாறிருந்ததெனின்,) உலகத்திற்செய்யப்பட்ட யாகங்களில் (இவர்கள்) நம்மினங்களாகிய பல ஆடுகளையெப்பொழுதுங்கொல்லுகின்றார்கள்; ஆதலால், யான் இங்கு இவர்களைக்கொல்வேனென்று துணிவுகொண்டு கொடிதாகிய அக்கினியைச் சுமக்கின்றவாகனமாகிய ஆட்டுக்கடாவானது மேலெழுந்து வந்தது போன்றிருந்தது.—எ-று.

அக்கினிதேவனுக்கு ஆட்டுக்கடாவாகனமாகலின், 'வெங்கனலை யேந்துபரி' என்று கூறினார். (ங)

மாருதமு மூழிதனில் வன்னியும் விசும்பிற்
பேருமுரு மேறுமொரு பேருருவு கொண்டே
வருவது போல்விரைவு மத்தொளியு மார்ப்புஞ்
சேரவெழு மேடமது செப்பகினைத் தன்றே.

(இ-ள்.) வாயுவும், பிரளயகாலாக்கினியும் மேகத்தினின்றும் பெயர்ந்து விழுகின்ற இடியேறும் ஒரு பெரியவுருவத்தைக்கொண்டு வருவதைப்போல, வேகமும் செ

ந்நிறமும், கர்ச்சனையுந் தோன்றும்படி யெழுந்த ஆடானது (உயிர்களைக்) கொலைசெய்யுந் தொழிலை நினைத்தது.—எ-று.

அத்தொளி - செவ்வொளி, அத்து - செம்மை. (ரு)

கல்லென மணித்தொகை களத்திடை தூங்கச்
சில்லரிபெய் கிங்கிணி சிலம்படி புலம்ப
வல்லைவரு கின்றதகர் கண்டுமகத் துள்ளோரா
ரெல்லைவரு மச்சமொ டிரிந்தன ரகன்றே.

(இ-ள்.) மணித்தொகுதிகள் கலீலென்று சப்தித்துக்கொண்டு கழுத்தில் தொங்கவும், சிறுபருக்கைக்கற்கள் இடப்பட்ட கிங்கிணியும், சிலம்பும் கால்களிற் சப்திக்கவும் விரைவாக வருகின்ற ஆட்டுக்கடாவைப் பார்த்து அந்தயாகசாலையிலிருந்தவர்களனைவரும் பயத்துடன் விலகி ஓடிப்போனார்கள்.—எ-று. (௬)

இரிந்தவர்கள் யாவரையு மிப்புவியும் வானுந்
துரந்துசிலர் வீழ்ந்துதொலை வாகநனி தாக்கிப்
பரந்தகரை மால்வரை பராகமெழ வோடித்
திரிந்துயிர் வருந்தவடல் செய்ததது செயிர்த்தே.

(இ-ள்.) அவ்வாறு ஓடினவர்களனைவரையும் இந்நில வுலகத்திலும் விண்ணுலகத்திலுந் துரத்திச் சிலர் வீழ்ந்திறக்கும் வண்ணம் நன்றாய்முட்டி, விசாலமாகிய பூமியிலும் பெரியமலைகளிலுந் துகளெழும்பும்படி யோடித்திரிந்து கோபித்து உயிர்கள் வருந்தும்படி கொலைசெய்தது.—எ-று.

செயிர்த்து அடல்செய்தது என்க. (கூ)

எட்டுள திசைக்கரி யிரிந்தலறி யேங்கக்
கிட்டியெதிர் தாக்குமதி கேழ்கிளரு மானத்
தட்டிரவி தேரொடு தகர்ந்துமுரி வாக
முட்டுமவர் தம்பரியை மொய்ம்பினொடு பாயும்.

(இ-ள்.) அஷ்டதிக்கு யானைகளும் விலகியலறி யேக்கமுறும்படி நெருங்கியெதிரில் மோதும்; சந்திரனது நன்னிறம் விளங்கும் விமானத்தின் தட்டானது சூரியனது தேருடன் உடைந்து முரிந்துபோகும்படி முட்டும், அவர்களது விமானத்திலுந் தேரிலுங் கட்டியுள்ள குதிரைகளை வலிவுடன் பாயும்.—எ-று.

எட்டுளதிசைகரியாவன.—ஐராவதம், புண்டரீகம், வாமனம், குமுதம், அஞ்சனம், புட்பதந்தம், சாருவபூமம், சுப்பிரதீபம் என்பன. இவை முறையே கிழக்காதி எட்டுத்திக்கிலு முள்ள யானைகள். (எ)

இனையவகை யாற்றகரி யாண்டுமுலை வுற்றே
சினமொடுயிர் கட்கிறுதி செய்துபெயர் காலை
முனிவர்களு நாரதனு மொய்ம்புமிகு வானோ
ரனைவர்களு மோடின ரருங்கயிலை புக்கார்.

(இ-ள்.) இவ்வாறாக அவ்வாட்டுக்கடாவானது எவ்விடங்களிலும் உலாவிக் கோபத்துடன் உயிர்களுக்கு அழிவையுண்டாக்கிச் செல்லுகின்ற சமையத்தில், முனிவரர்களும், நாரதரும் வலிமை மிக்கதேவர்களனைவரும் ஓடினவர்களாய் அரியதிருக்கயிலாயத்தை யடைந்தார்கள்.—எ-று. (அ)

ஊறுபுக வன்னவ ருலைந்துகயி லைக்க
ணேறிவரு காலையி லிலக்குமுட னென்பான்

விஃறிறல் வீரரொடு மேவியுல வுற்றே
யாறுமுக வண்ணலவ்வி ளையாடலது கண்டார்.

(இ-ள்.) (யாகத்திற்கு) விக்கின முண்டாகவும், அவர்களனைவரும் நடுக்கமடைந்து திருக்கயிலாயமலையில் வழிவருகின்ற பொழுது, மிக்கவல்லமையையுடைய இலக்ஷத்தொன்பது வீரர்களுடன் கூடியுலாவிக்கொண்டு ஸ்ரீசண்முகக்கடவுள் விளையாடுதலைக் கண்டார்கள்.—எ-று. (௯)

ஈசனிடை நண்ணுதுமி லிங்குமுரு கேச
னாசையொடு நந்துயர நீக்கவெதிர் வந்தா
னாசிறுவ னல்லனிவ னண்டர்பல ரோடும்
வாசவனை வென்றுயிரை மாற்றியெழு வித்தான்.

(இ-ள்.) (இதன்பொருட்டுச்) சிவபெருமானிடத்துச் செல்வோம், இங்கு முருகக்கடவுள் விருப்பத்துடன் நமது துன்பங்களை நீக்கியருளும் பொருட்டு எதிரில் வந்தருளினார்; ஆ, இவர் சிறுவரல்லர்; தேவர்கள் பலருடன் இந்திரனையும் வென்று அவர்களுயிரை நீக்கிப்பின்பு உயிர்கொடுத்தெழுப்பியருளினார்.—எ-று.

ஆ - என்பது, வியப்புக்குறிப்பிடைச்சொல். (௧௦)

எங்குறை முடித்திட லிவற்கெளிது நாமிப்
இங்கவரொ டுற்றது புகன்றிடுது மென்னாத்
தங்களி லுணர்ந்துசுரர் தாபதர்கள் யாரு
மங்கவன்மு னேகின ரருந்துதிகள் செய்தே.

(இ-ள்.) நமது குறைகளை நீக்குதல் இம்முருகக்கடவுளுக்கு எளிதாகும்; ஆதலால், நாம் இவருடன் நடந்த சங்கதியை விண்ணப்பஞ் செய்துகொள்வோமென்று, தேவர்களும் முனிவர்களனைவரும் தங்களுக்குள்ளே யுணர்ந்து, அருமையாகிய தோத்திரங்களைச் செய்து அவ்வெம்பெருமானுக்கு முன்னே சென்றார்கள்.—எ-று.

வந்துபுகழ் வானவரு மாமுனிவர் தாமுந்
தந்திமுக வற்கிளவ றன்னடி வணங்கக்
கந்தனவர் கொண்டதுயர் கண்டுமிக நீவிர்
நொந்தனிர் புகுந்தது நுவன்றிடுதி ரென்றான்.

(இ-ள்.) புகழையுடைய தேவர்களும் சிறந்த முனிவர்களும் திருமுன்னே யடைந்து விநாயகமூர்த்திக் கிளையவராகிய முருகக்கடவுளது திருவடிகளை வணங்குதலும், அம்முருகக்கடவுள் அவர்களடைந்துள்ள துன்பத்தைப் பார்த்தருளி நீங்கள் மிகவும் வருந்தினீர்கள்; நடந்த சங்கதியை (முறையே) சொல்லக்கடவீர்களென்று வினவியருளினார்.—எ-று. (௧௨)

கேட்டியினி யோய்மறை யுரைத்தமொரு வேள்வி
வேட்டனமி யாங்களது வேலையிடை தன்னின்
மாட்டுகன லூடொரு மறித்தகரெ ழுந்தே
யீட்டமுறு மெம்மையட வெண்ணியதை யன்றே.

(இ-ள்.) குமாரக்கடவுளே! தேவரீர் கேட்டருள்வீராக; அடியேங்கள் வேதத்திற் சொல்லப்பட்ட ஒரு யாகத்தைச் செய்தனம், அச்சமயத்தில் சுவாலிக்கின்ற அந்த யாகாக்கினியில் ஒரு ஆட்டுக்கடாவானது தோன்றிக் கூட்டமாகவிருந்த எங்களைக் கொல்ல நினைத்தது.—எ-று.

மாட்டுதல் - நன்றாக எரித்தல். மறித்தகர் - இருபெயரொட்டு. எண்ணியவை என்பதில், ஐகாரம் சாரியை. (௧௩)

ஆடெழு கிளர்ச்சியை யறிந்துமகம் விட்டே
யோடியிவ ணுற்றன முருக்குது தரங்கே
சாடியது சிற்சிலவர் தம்மையத னாலே
வீடியத ளப்பிலுயிர் விண்ணினொடு மண்மேல்.

(இ-ள்.) ஆடானது தோன்றிய தன்மையை யுணர்ந்து, யாகத்தை விட்டு விரைந்தோடி இங்கு அடைந்தனம், அந்த ஆடு கோபித்துச் சிலரைத் துரத்திக் கொன்றது; அதனால், விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலும் அநேக உயிர்களழிந்தன.-எ-று.

விண்ணினொடு மண்மேல் அளப்பிலுயிர் வீடியது எனக் கூட்டுக. (௧௪)

நீலவிட மன்றிது நிறங்குலவு செக்கர்க்
கோலவிட மேயுருவு கொண்டதய மேபோ
லோலமிட வெங்குமுல வுற்றது யிரெல்லாங்
காலமுடி வெய்துமொரு கன்னன்முடி முன்னம்.

(இ-ள்.) இது கருநிறம்பொருந்திய விஷமன்று, செவ்வானம்போலும் நிறம் விளங்குகின்ற வடிவினையுடைய விஷமே ஆட்டுக்கடாவைப்போல் உருவுகொண்டு வந்தது; (யாவரும்) ஓலமிடும்படி எவ்விடத்தும் முலாவுகின்றது; (அவ்வாட்டினால்) ஒருநாழிகைப் பொழுதாவதற்குள்ளே எல்லாவுயிர்களும் உயிர்விட்டிறக்கும்.—எ-று.

காலமுடிவெய்தும் என்றது, அகாலமிருத்துவினால் இறக்கும் என்றபடி.

சீற்றமொ டுயிர்க்கிறுதி செய்துலவு மேடத்
தாற்றலை யடக்கியெம தச்சமு மகற்றி
யேற்றகுறை வேள்வியையு மீறுபுரி வித்தே
போற்றுதி யெனத்தொழுது போற்றிசெயும் வேலை.

(இ-ள்.) கோபத்துடன் உயிர்களுக் கழிவுசெய்து உலாவுகின்ற அவ்வாட்டினுடைய வல்லமையை யடக்கி, யாங்க ளடைந்திருக்கின்ற அச்சத்தையு மொழித்து, நேர்ந்த யாகக் குறைவினையும் நிறைவேற்றி எங்களைக் காத்தருள்வீராக வென்று வணங்கித்துதிக்கும்பொழுது.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௬)

எஞ்சுமவர் தம்மையினி யோன்பரிவி னோக்கி
யஞ்சல்விடு மின்களென வங்கைய தமைத்தே
தஞ்சமென வேபரவு தன்பரிச னத்துள்
மஞ்சுபெறு மேனிவிறல் வாகுவொடு சொல்வான்.

(இ-ள்.) மனம் வருந்தியிருக்கின்ற நாரதமுனிவர் முதலியவர்களை முருகக்கடவுள் அன்புடன் பார்த்து நீங்கள் அஞ்சாதிர்களென்று அபயாஸ்தங்கொடுத்தருளி, ஆதரவாகச் சூழ்ந்து துதிக்கின்ற தமது பரிசனவீரர்களுள் அழகு பொருந்திய திருமேனியினையுடைய வலிய வீரவாகுத்தேவருடன் அருளிச்செய்கின்றார்.—எ-று.

மஞ்சு-அழகு. அன்றி, பராக்கிரமம் எனினுமாம். (௧௭)

மண்டுகனல் வந்திவர் மகந்தனை யழித்தே
யண்டமொடு பாருலவி யாருயிர்க டம்மை
யுண்டுதிரி செச்சைதனை யொல்லைகுறு குற்றே
கொண்டணைதி யென்றுமை குமாரனுரை செய்தான்.

(இ-ள்.) பற்றியெரிகின்ற யாகாக்கினியிற்பிறந்து இவர்களது யாகத்தையழித்து விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலுமுலாவி அரிய உயிர்களைக் கொலைசெய்து நிற்கின்ற அந்தச் செம்மறியாட்டை விரைவாகச்சென்று கொண்டுவரக்கடவையென்று பார்வதிபுத்திரராகிய முருகக்கடவுள் கட்டளையிட்டருளினார்.—எ-று. (கஅ)

வேறு.

குன்றெழு கதிர்போன் மேனிக் குமரவே ளினைய கூற
மன்றலந் தடந்தோள் வீர வாகுவாந் தனிப்பேர் பெற்றோ
னென்றனை யிசைந்து கந்த னெய்மலர்ப் பாதம் போற்றிச்
சென்றனன் கயிலை நீங்கிச் சினத்தகர் தேட லுற்றான்.

(இ-ள்.) உதயகிரியிலுதயமாகின்ற இளஞ்சூரியன் போன்ற திருமேனிப் பிரகாசத்தையுடைய முருகக்கடவுள் இவ்வாறு கட்டளையிட்டருளவும், நறுமணங்கமழும் (மலர்மாலையையணிந்த) பெரிய திருத்தோள்களையுடைய வீரவாகுத்தேவர் என்னும் ஒப்பற்றதிருப்பெயரைப்பெற்றவர் அவ்வாறேசெய்கின்றேனென்று இசைவுற்று அக்கந்தப்பெருமானது அன்றலர்ந்த புதிய தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கித்திருக்கயிலையினின்று நீங்கிச்சென்று கோபத்துடனுலாவுகின்ற அவ்வாட்டுக் கடாவைத் தேடுவாராயினார்.—எ-று. (கசு)

மண்டல கோடி சூழு மாநில முற்று நாடிக்
கண்டில னும்பச் சென்றேழ் பிலத்தினுங் காண கில்லா
னண்டர்தம் பதங்க ளோடி யயன்பத முன்ன தாகத்
தண்டளிர்ச் செக்கர் மேனித் தகர்செலுந் தன்மை கண்டான்.

(இ-ள்.) வட்டமாகிய சமுத்திரஞ்சூழ்ந்த பெரிய நிலவுலகமுழுதுந் தேடிக் காணாதவராய் ஏழ்பாதாளங்களிலுஞ் சென்று தேடிக்காணாமல், தேவர்கள் வசிக்கின்ற சொர்க்காதிலோகங்களிலுந்தேடிப் பின்பு பிரமபதத்துக்கெதிரில் குளிர்ந்த செந்தளிர்போன்ற மேனியையுடைய ஆட்டுக்கடாவானது செல்லுகின்ற தன்மையைப் பார்த்தருளினார்.—எ-று. (உ0)

ஆடலந் தொழின்மேற் கொண்டே யனைவரு மிரியச் செல்லு
மேடமஞ் சுறவே யார்த்து விரைந்துபோய் வீர வாகு
கோடலை பற்றி யீர்த்துக் கொண்டுபோய்க் கயிலை நண்ணி
யேடுறு நீபத் தண்டா ரிளையவன் முன்ன ருய்த்தான்.

(இ-ள்.) யாவர்களும் அஞ்சியோடும்வண்ணம் போர்த்தொழிலை மேற்கொண்டு செல்லுகின்ற அவ்வாடானது நடுங்கும்படி வீரவாகுத்தேவர் ஆரவாரித்து விரைந்துசென்று அதன் கொம்புகளைப் பிடித்திழுத்துக்கொண்டு மீண்டு திருக்கயிலையையடைந்து இதழ்களமைந்த கடப்பமலர்மாலையையணிந்த முருகக்கடவுள் திருமுன்னே கொண்டுவந்து சேர்த்தனர்.—எ-று. (உக)

உய்த்தனன் வணங்கி நிற்ப வுளமகிழ்ந் தருளித் தேவர்
மெய்த்தவர் தொகையை நோக்கி மேழக மேவிற் றெம்பா
லெய்த்தினி வருந்து கில்லீர் யாருநீர் புவனி யேகி
முத்தழல் கொடுமுன் செய்த வேள்வியை முடித்தி ரென்றான்.

(இ-ள்.) அவ்வாறு கொண்டுவந்து சேர்த்து நமஸ்கரித்து நிற்கவும், முருகக்கடவுள் திருவுள்ள மகிழ்கூர்ந்து, தேவர் கூட்டங்களையும் முனிவர் கூட்டங்களையும் பார்த்தருளி எம்மிடத்து இவ்வாட்டுக்கடாவந்து சேர்ந்தது. இனி நீங்கள் சோர்

ந்து வருந்தாதீர்கள், நீங்க ளனைவரும் நிலவுலகத்திற் சென்று, பிரியாக்கினியைக் கொண்டு முன்பு செய்த யாகத்தை நிறைவேற்றுங்கள் என்று அருளிச்செய்தனர்.

முத்தழலாவன :—ஆவகனீயம், காருகபத்தியம், தக்கணாக்கினி என்பன; இவற்றுள், ஆவகனீயம் என்பது நாற்சதுரமாய் யாகசாலையின் வடக்கில் வைக்கப்படுவது. காருகபத்தியம் முச்சதுரமாய் அதன் தெற்கில் வைக்கப்படுவது. தக்கணாக்கினி அதற்குத் தெற்கில் பிதிரர்களுக்குப் பலி ஓமமுதலியவைகளைச் செய்வதற்கு வைக்கப்படுவது. (உஉ)

ஏர்தரு குமரப் புத்தே ளிவ்வகை யிசைப்ப வன்னோர்
கார்தரு கண்டத் தெந்தை காதல மேவள்வித் தீயிற்
சேர்தரு தகரி னேற்றைச் சிறியரோ முய்யு மாற்று
லூர்திய தாகக் கொண்டே யூர்ந்திடல் வேண்டு மென்றார்.

(இ-ள்.) அழகுபொருந்திய குமாரக்கடவுள் இவ்வாறு அருளிச்செய்யவும், அவர்கள் (அக்கடவுளைப் பார்த்துக்) காளகண்டராகிய எமது சிவபெருமானது புதல்வரே! யாகாக்கினியில் தோன்றிய ஆட்டுக்கடாவை அடியேங்க ளுய்யும்பொருட்டு(த்தேவரீர்) வாகனமாகக்கொண்டு நடத்தியருளல்வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்து கொண்டார்கள்.—எ-று. (உ௩)

என்னலுந் தகரை யற்றே யானமாக் கொள்வம் பாரமேன்
முன்னிய மகத்தை நீவிர் முடித்திரென் றருள யார்க்கு
நன்னய மாடல் செய்யு நாரதன் முதலோர் யாரு
மன்னவோர் குமர னெந்தை யடிபணிந் தருளாற் போந்தார்.

(இ-ள்.) இவ்வாறு விண்ணப்பஞ் செய்து கொள்ளவும், (முருகக்கடவுள்) அவ்வாட்டினை அவ்வாறே வாகனமாகக் கொள்ளுகின்றோம்; நிலவுலகத்தில் நீங்கள் செய்யக்கருதிய யாகத்தை நிறைவேற்றுங்களென்று கூறியருளவும், யாவருக்கும் நல்வார்த்தையினையே கூறுகின்ற நாரதர் முதலிய யாவர்களும் அவ்வெமது முருகக்கடவுளது திருவடிகளை வணங்கித் திருவருளோடு சென்றார்கள்.—எ-று. (உச)

நவையில்சீர் முனிவர் தேவர் நயப்பநா ரதனென் றுள்ளோன்
புவிதனில் வந்து முற்றப் புரிந்தனன் முன்னர் வேள்வி
யவர்புரி தவத்தி னரா லன்றுதொட் டமல மூர்த்தி
யுவகையா லனைய மேட மூர்ந்தன னூர்தி யாக.

(இ-ள்.) குற்றமற்ற சிறப்பினையுடைய முனிவர்களுந் தேவர்களும் விரும்பும் வண்ணம் நாரதனென்னும் பெயரையுடைய முனிவரர் இந்நிலவுலகத்திற்கு வந்து முன்செய்த யாகமானது நிறைவேறும்படி செய்துமுடித்தனர். அந்நாரதர் முதலியவர்கள்செய்த தவத்தினால் அந்நாள் தொடங்கி மலரகிதராகிய முருகக்கடவுள் சந்தோஷத்துடன் அவ்வாட்டுக்கடாவை வாகனமாக நடத்தியருளினர்.—எ-று. (உரு)

தகரோறுபடல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - கஉ0ச.

---

௭.

முருகன்றுணை.

# அயனைச்சிறைபுரிபடலம்.

மேடமூர்ந்தி யாகவைப்பின் விண்ணுமண்ணு முருகவே
ளாடல்செய் துலாவிவெள்ளி யசலமீதி லமர்தரு
நீடுநாளி லொருபகற்க ணெறிகொள்வேதன் முதலினோர்
நாடியீச னடிவணங்க வவ்வரைக்க ணண்ணினார்.

(இ-ள்.) முருகக்கடவுள் (நாரதமுனிவரது யாகத்தில் தோன்றிய) ஆட்டுக் கடாவினை விண்ணுலகத்திலும் மண்ணுலகத்திலும் நடாத்தித்திருவிளையாடல்செய்து கொண்டு உலாவித் திருக்கயிலாயமலையி லெழுந்தருளியிருக்கும் நாள்களில், ஒருநாள் நல்லொழுக்கமமைந்த பிரமன் முதலியவர்கள் சிவபெருமானது திருவடிகளைத் தரிசித்து வணங்கும் பொருட்டு அம்மலையினிடத்து வந்தார்கள்.—எ-று. (௧)

எறுநியா னெனுஞ்செருக் கிகந்துதன் னுணர்ந்துளார்
மறுநிகொண்ட செய்கைதாங்கி மரபின்முத்தி வழிதரு
மறுநியீச னடிவணங்கி யருளடைந்து மற்றவன்
றுறுதுமன்ற நீங்கிவாயில் சாருகின்ற வேலையில்.

(இ-ள்.) யான் எனது என்னும் அகங்கார மமகாரங்களாகிய இருமாப் பினின்று நீங்கித் தன்னையறிந்துள்ள மெய்ஞ்ஞானியர்களது அந்தக் கரணநிலை செயலனைத்தையும் தம்மதாகக்கொண்டுநின்று முறையேமுத்தியைத் தந்தருளுகின்ற அநாதி நித்தியராகிய சிவபெருமானது திருவடிகளை வணங்கித் திருவருள் பெற்று, அவ்வெம்பெருமா னெழுந்தருளியிருக்கின்ற திருவோலக்க மண்டபத்தினின்று நீங் கித் திருக்கோபுரவாயிலை யடைகின்ற சமையத்தில்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௨)

ஒன்பதோடி லக்கமான வனிகவீர ருண்மகிழ்ந்
தன்பினோடு சூழ்ந்துபோற்ற வமலனம்பொ னாலய
முன்புநீடு கோபுரத்துன் முழுமணித் தலத்தின்மே
லின்பொடாடி வைகினா னிராறுதோள் படைத்துளான்.

(இ-ள்.) பன்னிரண்டு திருத்தோள்களையுடைய குமாரக்கடவுள் இலக்ஷத் தொன்பது சேனாவீரர்கள் மனமகிழ்ந்து அன்புடனே சூழ்ந்துவணங்கும்படி சிவபெ ருமானது அழகிய பொன்மயமான திருக்கோயிலினெதிரிலுள்ள உயர்ந்த கோபுரத்தி ல்பெரியமணிகள் இழைக்கப்பட்டுள்ள மேடையின்மீது மகிழ்வுடன் திருவிளையாடல் செய்துகொண்டிருந்தனர்.—எ-று.

முழுமணி-தொளையிடப்படாத பெரியமாணிக்கம். (௩)

அங்கண்வைகு முருகனம்ப னடிவணங்கி வந்திடும்
புங்கவர்க்கு ளாதியாய போதினானை நோக்குறா
விங்குநம்முன் வருதியா லெனாவிளிப்ப வேகியே
பங்கயாச னத்தினான் பணிந்திடாது தொழுதலும்.

(இ-ள்.) அவ்விடத்தில் எழுந்தருளியிருக்கின்ற முருகக்கடவுள் சிவபெருமானது திருவடிகளை வணங்கிவருகின்ற தேவர்களுக்குள் தலைவனாகிய பிரமனைப்பார்த்தருளி, இங்கு நமக்கு முன்னேவரக்கடவையென் றழைத்தருள, பிரமன்சென்று சாஷ்டாங்கநமஸ்காரஞ் செய்யாமல் சமவந்தனஞ்செய்யவும்.—எ-று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (௫)

ஆதிதேவ னருளுமைந்த னவனுளத்தை நோக்கிய
போதனை யிருக்கெனப் புகன்றிருத்தி வைகலு
மேதுநீ புரிந்திடு மியற்கையென்ன நான்முக
னாதனாணை யாலனைத்து நான்படைப்ப னென்றனன்.

(இ-ள்.) முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் பெற்றருளிய முருகக்கடவுள் பிரமனது மனக்கருத்தையுணர்ந்து, பிரமனே! இருக்கக்கடவையென்றுகூறி யிருக்கச்செய்து, தினந்தோறும் நீ யாதுதொழில் செய்கின்றவன் என்று வினவியருள, உடனே பிரமன் நான் சிவபெருமானது கட்டளையினால் எல்லாவற்றையுஞ் சிருஷ்டிப்பேனென்று கூறினான்.—எ-று. (௬)

வேறு.

முருக வேளது கேட்டன முறுவல்செய் தருளித்
தரணி வானுயிர் முழுவதுந் தருதியே யென்னிற்
சுருதி யாவையும் போகுமோ மொழிகெனத் தொல்சீர்ப்
பிரம னென்பவ னித்திறம் பேசுத லுற்றான்.

(இ-ள்.) முருகக்கடவுள் அதனைக்கேட்டருளியவுடன் புன்னகைபுரிந்தருளி, நீ மண்ணுலகத்தும் விண்ணுலகத்துமுள்ள உயிர்களனைத்தையுஞ் சிருஷ்டிக்கின்றவனாயின் வேதங்களனைத்துந் தெரியுமோ? கூறக்கடவையென்று வினவியருளவும், பழைமையாகிய சிறப்பினையுடைய பிரமன் இவ்வாறுகூறத் தொடங்கினான்.—எ-று.

ஐய கேளனை யாதிகா லந்தனி லளித்த
மைபு லாவரு களத்தின னளப்பிலா மறைகள்
செய்ய வாகமம் பற்பல புரிந்ததிற் சிலயா
னுய்யு மாறருள் செய்தன னவையுணர்ந் துடையேன்.

(இ-ள்.) ஐயனே! கேட்டருள்வீராக; அடியேனைப் பூர்வத்தில் படைத்தருளிய கருநிறம்விளங்குங் கண்டத்தினையுடைய சிவபெருமான் அளவற்றவேதங்களையும் சிறந்த சிவாகமங்களையும் அநேகமாக அருளிச்செய்து, அவற்றுள் சிலவற்றை அடியேனுய்யும்பொருட்டு உபதேசித்தருளினார்; அவற்றையுணர்ந்துள்ளேன்.—எ-று. ()

என்று நான்முக னிசைத்தலு மவற்றினு ளிருக்கா
மொன்று நீவிளம் புதியென முருகவே ளுரைப்ப
நன்றெ னுமறை யெவற்றிற்கு மாதியி னவில்வா
னின்ற தோர்தனி மொழியைமுன் னோதின னெறியால்.

(இ-ள்.) என்றிவ்வாறு பிரமன் கூறவும், முருகக்கடவுள் அவ்வேதங்களுள் இருக்குவேதமென்று கூறும் ஒன்றினை நீ சொல்லக்கடவை என்றருளிச்செய்யவும், அப்பிரமன் நல்லதென்று எல்லாவேதங்களுக்கும் முதலிற்கூறும் வண்ணம் பொருந்திய பிரணவத்தை முறைமைப்படி முதலெடுத்துக் கூறினான்.—எ-று. (௮)

தாம ரைத்தலை யிருந்தவன் குடிலைமுன் சாற்றி
மாம றைத்தலை யெடுத்தனன் பகர்தலும் வரம்பில்

காமர் பெற்றுடைக் குமரவே ளிற்றிமுன் கழறு
மோமெ னப்படு மொழிப்பொரு ளியம்புகென் றுரைத்தான்.

(இ-ள்.) தாமரைமலரில் வசிக்கின்ற பிரமன் பிரணவத்தை முதலில்கூறிப் பின்பு சிறந்தவேதத்தின் அடியையெடுத்துச் சொல்லவும், அளவற்ற பேரழகினையுடைய குமாரக்கடவுள் (அதனைப்பார்த்தருளி) நிற்கக்கடவை; நீ முதலிற்கூறிய ஓம் என்று சொல்லப்பட்ட மொழியின் பொருளை யுரைக்கடவையென்று கட்டளையிட்டருளினார்.—எ-று. (௯)

முகத்தி லொன்றதா யவ்வெழுத் துடையதோர் முருக
னகைத்து முன்னெழுத் தினுக்குரை பொருளென நவில
மிகைத்த கண்களை விழித்தனன் வெள்கினன் விக்கித்
திகைத்தி ருந்தனன் கண்டில னப்பொருட் டிறனே.

(இ-ள்.) தமது திருமுகங்களி லொன்றாக அவ்வோங்காராக்ஷரத்தினையுடைய முருகக்கடவுள் நகைத்தருளி, அம் முதலெழுத்தின்பொருளை யுரைக்கக்கடவையென்றருளிச் செய்யவும், (பிரமன்) அப்பொருளின் தன்மையை யுணராதவனாய் மிகுதியாகிய தனது கண்களை விழித்து வெட்கங்கொண்டு விக்கித் திகைப்புற்றிருந்தனன்.—எ-று.

‘முகத்திலொன்றதா வவ்வெழுத்துடையதோர் முருகன்’ என்பதனை :— “ஓமெனப்படுங் குடிலையே யொப்பிலா முருகன்-மாமுகத்து ளொன்றும்” என மேல் மகேந்திரகாண்டத்து வருமாற்றானறிக. (௧௦)

ஈசன் மேவரு பீடமா யேனையோர் தோற்றும்
வாச மாயெலா வெழுத்திற்கு மறைகட்கு முதலாய்க்
காசி தன்னிடை முடிபவர்க் கெம்பிரான் கழறு
மாசி றாரகப் பிரமமா மதன்பய னாய்ந்தான்.

(இ-ள்.) சிவபெருமா னெழுந்தருளியிருக்கின்ற பீடமாகியும் மற்றையர்கள் தோற்றுதற்குரிய வாசஸ்தானமாகியும் எல்லா எழுத்துக்களுக்கும் வேதங்களுக்கும் முன்னுள்ளதாகியும் காசிப்பதியிலிறப்பவர்களுக்கு எமது சிவபெருமானுபதேசிக்கின்றகுற்றமற்ற தாரகப்பிரமமாகியும்விளங்கும் அந்தப்பிரணவாக்ஷரத்தின் பொருளை ஆராய்ச்சிசெய்தனன்.—எ-று. (௧௧)

தெருள தாகிய குடிலையைச் செப்புத லன்றிப்
பொருள றிந்தில னென்செய்வான் கண்ணுதற் புனித
னருளி னாலது முன்னரோ பெற்றில னதனான்
மருளு கின்றனன் யாரதன் பொருளினை வகுப்பார்.

(இ-ள்.) ஞானரூபமாகிய பிரணவத்தைச் சொல்லுதலன்றி அதன்பொருளை யுணர்ந்திலன்; யாதுசெய்வன்; நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானது திருவருளினால் அதனை முன்னமே யறிந்தானில்லை; ஆதலால், மயங்குகின்றனன்; அதன்பொருளைச் சொல்லவல்லவர்கள் யாவர்? (ஒருவருமில்லை.)—எ-று. (௧௨)

நான்ம றைக்கெலா மாதியு மந்தமுஞ் சொல்லு
மோமெ னப்படு மோரெழுத் துண்மையை யுணரான்
மாம லர்ப்பெருங் கடவுளு மயங்கினா னென்று
றாமினிச் சில வறிந்தன மென்பது நகையே.

(இ-ள்.) பரிசுத்தம்பொருந்திய எல்லாவேதங்களுக்கும் முதலிலும் முடிவிலும் ஒத்தப்படுவதாகிய ஓம் என்றுசொல்லப்பட்ட ஓரெழுத்தின் உண்மைப்பொருளையுணராதவனாய், சிறந்த தாமரைமலரிலிருக்கின்ற பெருங்கடவுளாகிய பிரமதேவனுமயக்கமுற்றனனாயின், இனி அதன்பொருளை நாம் கொஞ்சந் தெரிந்திருக்கின்றோமென்று கூறுதலும் நகையேயாகும்.—எ-று. (௧௩)

எட்டொ ணாதவக் குடிலையிற் பயனிவைத் தென்றே
கட்டு ரைத்திலன் மயங்கலு மிதன்பொருள் கருதாய்
சிட்டி செய்வதித் தன்மைய தோவெனாச் செவ்வேள்
குட்டி னாய னான்குமா முடிகளுங் குலுங்க.

(இ-ள்.) (பசுஞானத்தினால்) அறிதற்கரிதாகிய அந்தப்பிரணவத்தின் பொருளினை இத்தன்மையினதென்று சொல்லவறியாது மயங்கிநிற்கவும், முருகக்கடவுள் பிரமனைப் பார்த்தருளி, நீ இதன்பொருளையுணர்ந்திலை; இவ்வாறு தானோ நீ சிருஷ்டிசெய்வதென்று அவனதுநான்குமுடிகளுங் குலுங்கும்படி குட்டியருளினார்.—எ-று.

மறைபு ரிந்திடுஞ் சிவனருண் மதலைமா மலர்மே
லுறைபு ரிந்தவன் வீழ்தரப் பதத்தினா லுதைத்து
நிறைபு ரிந்திடு பரிசன ரைக்கொடே நிகளச்
சிறைபு ரிந்திடு வித்தனன் கந்தமாஞ் சிலம்பில்.

(இ-ள்.) வேதங்களையருளிச்செய்த சிவபெருமானது திருப்புதல்வராகிய முருகக்கடவுள் சிறந்த தாமரைமலரில் வசிக்கின்ற பிரமன்கீழே விழும்படி திருவடியினாலுதைத்தருளித் தம்மைச்சூழ்ந்திருக்கின்ற பரிசனர்களைக்கொண்டு கந்தமாதனபருவதத்தில் விலங்கிட்டுச் சிறைசெய்வித்தருளினார்.—எ-று.

நிகளம் - விலங்கு. (௧௫)

அல்லி மாமலர்ப் பண்ணவன் றனையருஞ் சிறையில்
வல்லி பூட்டுவித் தியாவையும் புரிதர வல்லோ
னெல்லை தீர்தரு கந்தமால் வரைதனி லேகிப்
பல்லு யிர்த்தொகை படைப்பது நினைந்தனன் பரிவால்.

(இ-ள்.) அகவிதழ்களையுடைய சிறந்த தாமரைமலரிலிருக்கின்ற பிரமனை அரிய சிறையில் விலங்கிடுவித்து, எல்லாக்கிருத்தியங்களையுஞ் செய்யவல்லவராகிய முருகக்கடவுள் தமது பெருங்கருணையினால், அளவற்ற (உயர்ச்சியினையுடைய) கந்தமாதனபருவதத்தை யடைந்து பல வுயிர்க்கூட்டங்களையுஞ் சிருஷ்டிக்கும்பொருட்டுத் திருவுள்ளங்கொண் டருளினார்.—எ-று. (௧௬)

ஒருக ரந்தனிற் கண்டிகை வடம்பரித் தொருதன்
கரத லந்தனிற் குண்டிகை தரித்திரு கரங்கள்
வரத மோடப யந்தரப் பரம்பொருண் மகனோர்
திருமு கங்கொடு சதுர்முகன் போல்விதி செய்தான்.

(இ-ள்.) சிவபெருமானது திருப்புதல்வராகிய முருகக்கடவுள் ஒருதிருக்கரத்தில் ருத்திராக்ஷ ஜெபமாலிகையைத் தாங்கியும், மற்றொரு திருக்கரத்தில் கமண்டலத்தைத் தாங்கியும், மற்றிரண்டு திருக்கரங்களை அபயவரதங்களாக வமைத்துக்கொண்டும் ஒருதிருமுகத்துடன், சதுர்முகனாகிய பிரமனைப்போலச் சிருஷ்டித்தொழில்புரிந்தருளினார்.—எ-று. (௧௭)

உயிரி னுக்குயி ராகியே பரஞ்சுட ரொளியாய்
வியன்ம றைத்தொகைக் கிறைதாய் விதிமுத லானாக்குஞ்

ரெயலி லுக்கெலா மாதியாய் வைகிய செல்வ
னயனை யப்படைக் கின்றது மற்புத மாமோ.

(இ-ள்.) உயிர்க்குயிராகியும், பரஞ்சுடரொளியாகியும், பெரியவேதங்களின் முடிவிலுள்ளதாகியும், சிருஷ்டிமுதலிய தொழில்களனைத்திற்கும் முற்பட்டதாகியுமுள்ள பரம்பொருளாகிய முருகக்கடவுள் பிரமனைப்போலச் சிருஷ்டிசெய்வதும் ஒரு ஆச்சரியமோ?—எ-று.

விதிமுதலுரைக்குஞ் செயல் என்றது, பஞ்சகிருத்தியங்களை; அவை - சிருஷ்டி, திதி, சங்காரம், திரோபவம், அநுக்கிரகம் என்பன. (௧௮)

தண்ணொ ளம்புயத் தவிசினோன் சிறையுறத் தானே
யெண்ணி லாவுயிர்த் தொகையளித் தறுமுக னிருந்தா
னண்ணா லக்கிறை முதலினோர் வந்தவன் றமர
ருன்னா டெங்கிய தொழுதுதம் பதங்களி லுற்றார்.

(இ-ள்.) குளிர்ச்சிபொருந்திய தாமரைமலரிலிருக்கின்றபிரமதேவன்சிறையிலிருக்க, ஆறு திருமுகங்களையுடைய குமாரக்கடவுள் அளவில்லாத உயிர்த்தொகைகளைச் சிருஷ்டிசெய்திருந்தருளினர். பெருமைபொருந்திய பிரமதேவனுடன் சூழ்ந்துவந்த தேவர்கள் மனமகிழ்ச்சிகொண்டு வணங்கித் தத்தம்பதங்களி லடைந்தார்கள். ()

அயனைச்சிறைபுரிபடல முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-௧௨௨௬.

---

உ

முருகன்றுணை.

---

# அயனைச்சிறைநீக்கு படலம்.

ஆல மாமிடற் றண்ணல்சே யித்திற மளப்பில்
காலம் யாவையு மளித்தன னிருந்தலுங் கரியோ
னாலு மாமுக னுவளக நீக்குவா னாடிச்
சீல வானவர் முனிவரைச் சிந்தனை செய்தான்.

(இ-ள்.) விஷந்தங்கிய சிறந்த கண்டத்தினையுடைய சிவபெருமானது திருப்புதல்வராகிய முருகக்கடவுள் இவ்வாறு அநேககாலங்களாக எல்லாவற்றையுஞ் சிருஷ்டிசெய்துகொண் டிருக்கவும், திருமால் பிரமதேவனது சிறையினைநீக்குதற்கு விரும்பி நல்லொழுக்கமமைந்த தேவர்களையும், முனிவர்களையுந் தமது திருவுள்ளத்திற் சிந்தித்தருளினர்.—எ-று. (௧)

உவனகம்-சிறை.

பேத ரத்தனிப் பண்ணவன் சிந்தனை தேறி
யாத பத்திரர் பரிமுகர் வசுக்களன் னையர்க
ளேத மற்றிடும் விஞ்சைய ருரகரோ டியக்கர்
மாதி ரத்தவர் யாவரும் விரைந்துடன் வந்தார்.

(இ-ள்.) ஒப்பற்ற திருமாலினது எண்ணத்தையுணர்ந்து, சூரியர்களும், அசுவினிதேவர்களும், வசுக்களும், சப்தமாதாக்களும், குற்றமற்ற வித்தியாதரர்களும், கரு

டர்களும், இயக்கர்களும், திக்குப்பாலகர்களும் ஆகிய யாவர்களும் உடனே விரைந்து வந்தார்கள்.—எ-று. (ட)

மதியு மேனைய கோள்களுங் கணங்களும் வான்றோய்
பொதிய மேயவ னுதியாம் பொருவின்மா தவரும்
விதிபு ரிந்திடு பிரமரோன் பதின்மரும் வியன்பா
ரதனை யேந்திய சேடனு முரகரு மடைந்தார்.

(இ-ள்.) சந்திரனும், மற்றையகிரகங்களும், கணங்களும், மேகங்கள் தவழும் பொதியமலையி லெழுந்தருளியிருக்கின்ற அகஸ்தியர்முதலிய நவமுனிவர்களும், பிரம புத்திரர்களாகிய நவப்பிரமாக்களும், பெரிய உலகத்தைச் சுமக்கின்ற ஆதிசேடனும், மற்றைய நாகர்களும் வந்தார்கள்.—எ-று.

வான்றோய் என்பதற்கு, ஆகாயத்தையளாவிய எனவும், விதிபுரிந்திடு பிரம ரோன்பதின்மர் என்பதற்கு, சிருட்டித்தொழிலைச்செய்கின்ற நவப்பிரமாக்கள் எனவும் பொருள்கூறினுமாம். (ரு)

இன்ன தன்மையி லமரரு முனிவரு மெய்த
வன்னவர் தம்மொடுஞ் செங்கண்மால் கயிலையை யடைந்து
முன்னர் வைகிய நந்திகண் முறையினுய்த் திடப்போய்த்
தன்னை யேதனக் கொப்பவன் பொற்கழ றொழுந்தான்.

(இ-ள்.) இவ்வாறு தேவர்களும் முனிவர்களும் வந்துசேர்ந்தவுடனே திரு மால் அவர்களுடன் திருக்கயிலையையடைந்து, முதற்றிருவாயிலி னெழுந்தருளியிருக் கின்ற திருநந்திதேவர் முறைமைப்படி யுள்ளே யனுப்பச் சென்று, தமக்குத்தாமே யொத்தவராகிய சிவபெருமானது பொன்மயமாகியதிருவடிகளைவணங்கினர்.—எ-று.

பொற்றி ருப்பத மிறைஞ்சியே மறைமுறை போற்றி
நிற்ற லுஞ்சிவ னருள்கொடே நோக்குறீஇ நீவி
ரெற்றை வைகலு மில்லதோர் தளர்வொடு மெம்பா
லுற்ற தென்கொலோ வென்றலு மாலிவை யுரைப்பான்.

(இ-ள்.) பொன்மயமாகிய திருவடிகளைவணங்கி வேதமுறைமைப்படி துதி த்து நிற்கவும், சிவபெருமான் திருவருளோடு பார்த்தருளி, நீங்கள் எக்காலத்தும் அ டையாததாகிய துன்பத்துடன் எம்மிடத்தடைந்தது யாதுகாரணம் என்று வினவியரு ளலும், திருமால் இவ்வார்த்தைகளை யுரைப்பாராயினர்.—எ-று. (சு)

வேறு.

இறைவ நின்மக னீண்டுறு போதனை
மறைமு தற்பத வான்பொருள் கேட்டலு
மறிகி லானுற வன்னவன் றன்னைமுன்
சிறைபு ரிந்தனன் சிட்டியுஞ் செய்கின்றான்.

(இ-ள்.) முதற்பெருங்கடவுளாகிய எமதாண்டவரே! தேவரீரது புதல்வ ராகிய குமாரக்கடவுள் இங்குவந்த பிரமனை வேதத்தின்முதற்பதமாயுள்ள ஓங்காரத் தின் சிறந்தபொருளை வினவுதலும், அவன் அதன்பொருளையுணராது மயங்க, அந்தப் பிரமனை முன்னே சிறையிலிட்டருளினர்; பின்பு சிருஷ்டித்தொழிலுஞ் செய்தருளு கின்றனர்.—எ-று. (எ)

கந்த வேளெனக் கஞ்சனு மையநின்
மைந்த னுமவன் வல்லினை யூழிநூ

லந்த மில்பக லாச்சிறைப் பட்டுள
னொந்து வாடின னோவுழந் தானரோ.

(இ-ள்.) எமது ஆண்டவரே! குமாரக்கடவுளைப்போலப் பிரமனும் தேவரீரது புதல்வனேயாகும்; ஆதலால் அவன் தனது பொல்லாததீவினையினால் அளவற்றகாலம் கொடிதாகிய சிறையிலகப்பட்டு மனம்வருந்தி வாடித் துன்புறுகின்றனன்.

அக்க மற்ற வயன்றன் சிறையினை
நீக்கு கென்று நிமலனை வேண்டலுந்
தேக்கு மன்பிற் சிலாதனற் செம்மலை
நோக்கி யொன்று நவிலுதன் மேயினான்.

(இ-ள்.) (தேவரீரது திருவருட்) செல்வமற்றவனாகிய பிரமனடைந்திருக்கின்ற சிறையினைநீக்கியருள்வீராக வென்று மலரகிதராகிய சிவபெருமானை வேண்டிக்கொள்ளவும், (சிவபெருமான்) மிக்க அன்பினையுடைய சிலாதமுனிவரது நல்லபுத்திரராகிய திருநந்திதேவனைப் பார்த்தருளி ஒருவார்த்தையருளிச் செய்வாராயினர்.—எ-று.

குண்டிகைச் செங்கையி னானைக் குமரவே
ளிடுவித் தான்சிறை யென்றன ராண்டுநீ
கடிதிற் சென்றுநங் கட்டுரை கூறியே
விடுவித் தேயிவண் மீள்கெனச் சாற்றினான்.

(இ-ள்.) (இவர்கள்) கமண்டலத்தையேந்திய கையினையுடைய பிரமனை நமது சுப்பிரமணியன் சிறையிடுவித்தனனென்று கூறினார்கள்; ஆதலால் நீ அங்கு விரைவிற்சென்று நமது உறுதிமொழியைக்கூறி அவனை விடுவித்து இங்கு வரக்கடவையென்று அருளிச்செய்தனர்.—எ-று. (௯)

எந்தை யன்ன திசைத்தலு நன்றெனா
நந்தி யக்கண நாதனைத் தாழ்ந்துபோ
யந்த மற்ற வடற்கணஞ் சூழ்தரக்
கந்த வெற்பிற் கடிநக ரெய்தினான்.

(இ-ள்.) எமது முதல்வராகிய சிவபெருமான் அவ்வாறு கட்டளையிட்டருளவும், திருநந்திதேவர் அப்பொழுதே நன்றென்றுகூறிச் சிவபெருமானை வணங்கிச்சென்று, கெடாத வலிமையினையுடைய சிவகணங்கள் தம்மைச் சூழும்படி கந்தமாதனகிரியிலுள்ள காவலையுடைய நகரத்தை யடைந்தருளினார்.—எ-று. (௧௦)

எழுமு டைத்தனி யேற்று முகத்தினா
னாறுமு கத்த னமர்ந்த நிகேதனங்
குறுகி மற்றவன் கோல மலர்ப்பத
முறைத னிற்பணிந் தேத்தி மொழிகுவான்.

(இ-ள்.) வலிமைபொருந்திய ஒப்பற்ற இடபமுகத்தினையுடைய திருநந்திதேவர் ஸ்ரீசண்முகப்பெருமானெழுந்தருளியிருக்கின்ற ஆலயத்துக்குட்சென்று, அவரது அழகிய தாமரைமலர்போன்ற திருவடிகளை முறைப்படிவணங்கித் துதித்துச் சொல்லத்தொடங்கினார்.—எ-று. (௧௧)

கடிகொள் பங்கயன் காப்பினை யெம்பிரான்
விடுதல் கூறி விடுத்தன னிங்கெனைத்
தடைப டாதவன் றன்சிறை நீக்குதி
குடிலை யன்னவன் கூறற் கெளியதோ.

(இ-ள்.) எமது சிவபெருமான் இவ்விடத்தில் அடியேனை நறுமணங்கமழுந் தாமரைமலரிலிருக்கின்ற பிரமனது சிறையை விடுவிக்கும்படி கட்டளையிட்டனுப்பியருளினர்; பிரணவப்பொருள் அந்தப்பிரமனாற்சொல்லக்கூடியதோ? ஆதலால் அப்பிரமனது சிறையைத் தடையில்லாமல் நீக்கியருளக்கடவீர்.—எ-று. (கஉ)

என்னு முன்ன மிளையவன் சீறியே
யன்ன வூர்தி யருஞ்சிறை நீக்கல
நின்னை யுஞ்சிறை யிட்டுவ னிற்றியே
உன்னி யேகுதி யொல்லையி லென்றனன்.

(இ-ள்.) என்றிவ்வாறு திருநந்திதேவர் கூறுவதற்குமுன்னே முருகக்கடவுள் கோபங்கொண்டருளி, அன்னவாகனனாகிய பிரமனது கொடியசிறையை நீக்கமாட்டேன். நீ இங்கு நிற்பையாயின், உன்னையுஞ்சிறையிலிடுவேன்; ஆதலால் இதனைச்சிந்தித்து விரைந்து செல்லக்கடவையென்று கூறியருளினர்.—எ-று. (கந)

வேறு தொன்றும் விளம்பில னஞ்சியே
யாறு மாமுகத் தண்ணலை வந்தியா
மாறி லாவெள்ளி மால்வரை சென்றன
னேறு போன்முக மெய்திய நந்தியே.

(இ-ள்.) இடபம்போலுந் திருமுகத்தினையுடைய திருநந்திதேவர் பயங்கொண்டு அதற்குப் பதில்வார்த்தை யொன்றுஞ்சொல்லாதவராய், ஆறு திருமுகங்களையுடைய முருகக்கடவுளைத் துதித்து மாறுபாடில்லாத பெரிய திருக்கயிலாயமலையை யடைந்தருளினர்.—எ-று. (கச)

மைதி கழ்ந்த மணிமிடற் றண்ணன்முன்
வெய்தெ னச்சென்று மேவி யவன்பதங்
கைதொ ழூஉநின்று கந்தன் மொழிந்திடுஞ்
செய்தி செப்பச் சிறுநகை யெய்தினன்.

(இ-ள்.) (அவ்வாறடைந்து) கருநிறம்விளங்குங் காளகண்டத்தினை யுடைய சிவபெருமான் திருமுன்னே விரைவாகச்சென்றுசேர்ந்து, அவ் வெம்பெருமானது திருவடிகளைக் கைகூப்பி வணங்கி, குமாரக்கடவுள் கூறியருளிய சங்கதிகளை யுரைத்தருளவும் (சிவபெருமான்) புன்னகைகொண் டருளினர்.—எ-று. (கரு)

கெழுத கைச்சுடர்க் கேசரிப் பீடமேல்
விழுமி தூற்ற விமலன் விரைந்தெழீஇ
யழகு டைத்தன தாலய நீங்கியே
மழவி டைத்தனி மால்வரை யேறினன்.

(இ-ள்.) மிக்க பேரொளியினையுடைய சிங்காசனத்தின்மேல் சிறப்புடன் வீற்றிருந்தருளுஞ் சிவபெருமான் விரைந்தெழுந்தருளி அழகுபொருந்திய தமது திருக்கோயிலின்புறத்திற் சென்று, ஒப்பற்ற பெரியமலைபோன்ற இடபவாகனத்தின்மீது எழுந்தருளினர்.—எ-று. (கசு)

முன்னர் வந்த முகில்புரை வண்ணனுங்
கின்ன ரம்பயில் கேசர ராதியோர்
நன்னர் கொண்டிடு நாகரு நற்றவ
ரென்ன ருந்தொழு தெந்தைபின் னேகினர்.

(இ-ள்.) முன்னே வந்திருக்கின்ற மேகவண்ணராகிய திருமாலும், கின்னரமென்னும் வாத்தியத்தினை வாசிக்கின்ற வித்தியாதரர்முதலியவர்களும், நன்மைமிக்க நாகர்களும், நல்ல தவமுனிவர்களனைவரும் எமது சிவபெருமானுக்குப் பின்னே நமஸ்கரித்துக்கொண்டு சென்றார்கள்.—எ-று. (௧௭)

படைகொள் கையினர் பன்னிறக் காழக
வுடையர் தீயி னுருகெழு சென்னிய
ரிடிகொள் சொல்லின ரெண்ணரும் பூதர்கள்
புடையின் மண்டினர் போற்றுதல் மேயினார்.

(இ-ள்.) ஆயுதங்களையேந்திய கையினையுடையவர்களும், பல நிறங்களையுடைய வஸ்திரங்களை யணிந்தவர்களும், தீப்போலு முருவமமைந்த தலைமயிரையுடையவர்களும், இடிமுழக்கம்போன்ற சொல்லினையுடையவர்களுமாகிய அளவற்ற பூதகணங்கள் அருகில் நெருங்கித் துதிக்கின்றவர்களானார்கள்.—எ-று.
காழகம்-வஸ்திரம். (௧௮)

இனைய காலை யினையவர் தம்மொடும்
வனிதை பாகியன் மால்விடை யூர்ந்தனனாய்ப்
புனித வெள்ளியம் பொற்றை தணந்துபோய்த்
தனது மைந்தன் றடவரை யெய்தினான்.

(இ-ள்.) இவ்வாறாகிய சமயத்தில், இவர்களனைவருடனும் பார்வதிபாகராகிய சிவபெருமான் பெரிய இடபவாகனத்திலெழுந்தருளிப் பரிசுத்தமாகிய வெள்ளிமலையை நீங்கிச்சென்று தமது திருப்புதல்வராகியமுருகக்கடவு ளெழுந்தருளியிருக்கின்ற பெரிய கந்தமாதனகிரியை யடைந்தருளினார்.—எ-று. (௧௯)

சாற்ற ருந்திறற் சண்முக வெம்பிரான்
வீற்றி ருந்த வியனகர் முன்னுறீஇ
ஏற்றி னின்று மிழிந்தவின் றேறெலாம்
போற்ற முக்கட் புனிதனுட் போயினான்.

(இ-ள்.) மூன்றுகண்களையுடைய சிவபெருமான் சொல்லுதற்கரிய வல்லமையமைந்த ஸ்ரீ சண்முகப்பெருமான் வீற்றிருந்தருளிய திருக்கோயிலின்முன்னே சென்றருளி இடபவாகனத்தினின்று மிறங்கித் தேவர்க ளனைவருந் துதிக்கும்படி உள்ளே பிரவேசித்தருளினார்.—எ-று. (௨0)

அந்தி போலு மவிர்சடைப் பண்ணவன்
கந்தன் முன்னர்க் கருணையொ டேகலு
மெந்தை வந்தன னென்றெழுந் தாங்கவன்
வந்து நேர்கொண் டடிகள் வணங்கியே.

(இ-ள்.) செவ்வானம்போன்று விளங்குகின்ற சடைமுடியினையுடைய சிவபெருமான், கந்தக்கடவுளது திருமுன்னே பெருங்கருணையோடு சென்றருளவும், அக்கடவுள் எமதுதந்தையாகிய சிவபெருமான் வந்தருளினாரென்று எழுந்து எதிரிலடைந்து அவரது திருவடிகளை வணங்கி.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௨௧)

பெருந்த கன்மணிப் பீடிகை மீமிசை
யிருத்தி நாதனை யேழுல கின்றிடு
மொருத்தி மைந்த வுயிர்க்குயி ராகிய
கருத்த நீவந்த காரியம் யாதென்றான்.

(இ-ள்.) பெரிதாகிய நமது இரத்தின சிங்காசனத்தின்மீது சிவபெருமானை எழுந்தருளுவித்து, சப்தலோகங்களையு மீன்றருளிய பார்வதிபுதல்வராகிய முருகக்கடவுள் (அவ்வெம்பெருமானைப் பார்த்து) உயிர்க்குயிராகிய எமது கர்த்தரே! தேவரீர் இங்கெழுந்தருளியது யாதுகாரணமென்று வினவியருளினார்.—எ-று. (௨௨)

மட்டு லாவு மலரய னைச்சிறை
யிட்டு வைத்தனை யாமது நீக்குவான்
சுட்டி வந்தன மாற்சுரர் தம்முடன்
விட்டி டையவென் றெந்தை விளம்பினான்.

(இ-ள்.) (அதற்குச்சிவபெருமான்) தேன்பொருந்திய தாமரைமலரில் வசிக்கின்ற பிரமனைச் சிறையிலிட்டுவைத்தனையாம்; அச்சிறையைநீக்கக்கருதித் தேவர்களுடன் இங்குவந்தனம்; ஐயனே! அந்தச் சிறையை நீக்கிவிடக்கடவாயென்று எமது முதல்வராகிய சிவபெருமான் அருளிச்செய்தனர்.—எ-று. (௨௩)

நாட்ட மூன்றுடை நாயக னிவ்வகை
யிட்டு மன்பொ டிசைத்திடு மின்சொலைக்
கேட்ட காலையிற் கேழ்கிளர் சென்னிமேற்
சூட்டு மௌலி துளக்கினன் சொல்லுவான்.

(இ-ள்.) மூன்றுகண்களையுடைய சிவபெருமான் இவ்வாறு பொருந்தியபேரன்புடன் கூறியருளிய இனியமொழியைக் (முருகக்கடவுள்) கேட்டபொழுது, பேரொளிவிளங்குஞ்சென்னியில்தரித்த திருமுடியையசைத்துக் கூறியருளுவார்.—எ-று.

உறுதி யாகிய வோரெழுத் தின்பய
னறிகி லாதவ னுயிர்கள் வைகலும்
பெறுவ னென்பது பேதைமை யாங்கவன்
மறைகள் வல்லது மற்றது போலுமால்.

(இ-ள்.) (ஆன்மாக்களுக்கு) உறுதியைத்தருவதாகிய ஓங்காரவெழுத்தின் பொருளை யுணராதவனாகிய அப்பிரமன் சதாகாலமும் உயிர்களைச் சிருஷ்டிக்கின்றானென்று கூறுவது அறியாமையேயாம். அவன் வேதங்களையுணர்ந்தானென்பதும் அதுபோலவேயாம்.—எ-று. (௨௫)

அழகி தையநின் னாரருள் வேதமுன்
மொழிய நின்ற முதலெழுத் தோர்கிலா
னிழிவில் பூசை யியற்றறு நல்கிய
தொழில்பு ரிந்து சுமந்தினை யோர்பரம்.

(இ-ள்.) ஐயனே! இஃது நன்றாகவிருக்கின்றது; தேவரீரது திருவருள்மயமாகிய வேதத்தின்முதலிற் சொல்லும்படி நின்ற முதலெழுத்தின்பயனை யுணர்ந்தானில்லை. (அவ்வாறாகிய அப்பிரமன்) குற்றமற்ற பூசனையைச்செய்யவும் சிருஷ்டித்தொழிலைக்கொடுத்து ஒரு சுமையை யவனுக்குச் சுமத்தியருளினீர்.—எ-று. (௨௬)

ஆவி முற்று மகிலமு நல்கியே
மேவு கின்ற வியன்செயல் கோடலாற்
றாவில் கஞ்சத் தவிசுறை நான்முக
னேவர் தம்மையு மெண்ணலன் யாவதும்.

(இ-ள்.) எல்லாவுயிர்களையும் எல்லாப்பொருள்களையும் சிருஷ்டித்துக்கொண்டிருக்கின்ற உயர்ந்ததொழிலைக் கைக்கொண்டிருத்தலால், கெடுதலில்லாத கமலாசனனாகிய பிரமன் யாரையும் எதனையும் மதித்திலன்.—எ-று. (௨௭)

நின்னை வந்தனை செய்யினு நித்தலுந்
தன்ன கந்தை தவிர்கில னாதலா
லன்ன வன்ற னருஞ்சிறை நீக்கல
னென்ன மைந்த னியம்பிய வேலையே.

(இ-ள்.) தேவரீரை எப்பொழுதுந் துதித்தாலும், தனது அகங்காரத்தை நீங்கிலன்; ஆகையால், அந்தப்பிரமனது அரியசிறையினைநீக்கமாட்டேனென்று முருகக்கடவுள் கூறியருளிய பொழுது.—எ-று.

இதுமுதலிரண்டுபாடலுங் குளகம். (உஅ)

வேறு.

மைந்தநின் செய்கை யென்னே மலரயன் சிறைவி டென்று
நந்திதம் பணியா லேகி நவின்றதுங் கொள்ளாய் நாமும்
வந்துரைத் திடினுங் கேளாய் மறுத்தெதிர் மொழிந்தா யென்னாக்
கந்தனை வெகுள்வான் போலக் கழறினன் கருணை வள்ளல்.

(இ-ள்.) கருணாநிதியாகிய சிவபெருமான் (முருகக்கடவுளைப்பார்த்து) மைந்தனே! உனதுசெய்கையாது? பிரமனது சிறையைநீக்கக்கடவையென்று நமதுகட்டளையினால் நந்திவந்து சொன்னதனையும் ஏற்றுக்கொள்ளவில்லை; நாம் வந்துசொல்லியுங் கேட்கவில்லை, தடுத்து எதிர்மொழிகூறினாய் என்று கந்தப்பெருமானைக் கோபிப்பவனைப்போலக் கூறியருளினார்.—எ-று. (உகூ)

அத்தனை யியல்பு நோக்கி யறுமுகக் கமல வைய
னித்தநின் கருணை யாகிற் றிசைமுகத் தொருவன் றன்னை
யத்திறச் சிறையி னீக்கி யொல்லையிற் றருவ னென்னாப்
பத்தியி னிறைஞ்சிக் கூறப் பராபரன் கருணை செய்தான்.

(இ-ள்.) (அப்பொழுது) ஆறுதிருமுகங்களையுடைய மலரகிதராகிய முருகக்கடவுள் சிவபெருமானது திருவுள்ளத்தினை யுணர்ந்து, ஐயனே! தேவரீரது திருவுள்ளம் இங்கு இவ்வாறிருப்பின், நான்கு முகங்களையுடைய பிரமனை இட்டிருக்கின்ற சிறையினின்றுநீக்கி விரைவில்விடுவேனென்று அன்புடன்வணங்கி யுரைத்தருளவும், பரம்பொருளாகிய சிவபெருமான் கருணைசெய்தருளினர்.—எ-று. (௩0)

நன்சிறை யெகின மேன நாடுவா னருளை நல்கத்
தன்சிறை நின்றோர் தம்மைச் சண்முகக் கடவு ணோக்கி
முன்சிறை யொன்றிற் செங்கேழ் முண்டகத் தயனை வைத்த
வன்சிறை நீக்கி நம்முன் வல்லைதந் திடுதி ரென்றான்.

(இ-ள்.) நல்ல சிறகினையுடைய அன்னமும் பன்றியும் (திருமுடியையுந் திருவடியையுந்) தேடும்படி யெழுந்தருளிய சிவபெருமான் கிருபைசெய்தருளவும், தமக்கருகில் நிற்கின்றவர்களை ஸ்ரீசண்முகப்பெருமான் பார்த்தருளி, முன்னொருபக்கத்தில் செந்நிறம்பொருந்திய கமலாசனனாகிய பிரமனை இட்டிருக்கின்ற வலியசிறையினைநீக்கி நமக்குமுன்னே விரைவாகக் கொண்டுவாருங்களென்று கூறியருளினர். ()

என்றலுஞ் சார தர்க்குட் சிலவர்க ளேகி யங்க
ணொன்றொரு பூழை தன்னு ளொடுங்கின னுறையும் வேதா
வனதனை விடுத்தல் செய்தா மற்றவன் றனைக்கொண் டேகிக்
குன்றதொ டாடல் செய்யுங் குமரவேள் முன்ன ருய்த்தார்.

(இ-ள்.) இவ்வாறு கட்டளையிட்டருளவும் பூதர்களுள் சிலர்சென்று, அவ்விடத்து ஒருகுகையில் ஒடுங்கியிருக்கின்ற பிரமனது வலிய விலங்கைத்தறித்து அப்

பிரமனை யழைத்துக்கொண்டுவந்து, குன்றுகடோறுந் திருவிளையாடல் புரிந்தருளுகி ன்ற குமாரக்கடவுள் திருமுன்னேவிட்டார்கள்.—எ-று.

பூழை-குழகை. (கூஉ)

உய்த்தலுங் கமலத் தண்ணா லொண்கரம் பற்றிச் செவ்வே
ளத்தன்முன் விடுத்த லோடு மாங்கவன் பரமன் றன்னை
மெய்த்தரு மன்பாற் றாழ்ந்து வெள்கினை னிற்ப நோக்கி
யெய்த்தனை போலும் பன்னா ளிருஞ்சிறை யெய்தி யென்றான்.

(இ-ள்.) அவ்வாறு திருமுன்னே கொண்டுவந்துவிடவும் முருகக்கடவுள் கமலாசனனாகிய பிரமனது அழகிய கையைப்பிடித்துச் சிவபெருமானுக்கு முன்னே விடவும், அந்தப்பிரமன் சிவபெருமானை மெய்யன்போடு வணங்கி வெட்கமடைந்து நிற்றலும், (சிவபெருமான் அப்பிரமனைப்) பார்த்து அநேககாலம் பெரியசிறையிலகப் பட்டு நீ வருந்தினை போலும் என்றுகூறி யருளினர்.—எ-று. (கூங)

நாதனித் தன்மை கூறி நல்லருள் புரித லோடும்
போதினை யனைய வன்றன் புதல்வனாற் றியவித் தண்ட
மேதமன் றுணர்வு நல்கி யானெனு மகந்தை வீட்டித்
தீதுசெய் வினைகள் மாற்றிச் செய்ததூ புனித மென்றான்.

(இ-ள்.) சிவபெருமான் இவ்வாறு அருளிச்செய்து சிறந்த திருவருள்புரிய வும், பிரமன் எமது ஆண்டவரே! தேவரீரது திருக்குமாரராகியகந்தப்பெருமான்செ ய்த இந்தத்தண்டனை குற்றமுடையதன்று; நல்லுணர்வளித்து யான்என்னு மகங்கார த்தை யொழித்துத் துன்பத்தைச் செய்கின்ற தீவினைகளை நீக்கிப் பரிசுத்தஞ்செய் தது என்று கூறினன்.—எ-று. (கூச)

அப்பொழு தயனை முக்க ணாதியம் பரமன் காணூஉ
முப்புவ னத்தின் மேவு முழுதுயிர்த் தொகைக்கு மேற்ற
துப்புர வதனை நன்று தூக்கினை தொன்மை யேபோ
லிப்பக லொட்டு நீயே யிந்தனை யிருத்தி யென்றான்.

(இ-ள்.) அப்பொழுது மூன்றுகண்களையுடைய சிவபெருமான் பிரமனைப் பார்த்தருளி மூன்றுலகங்களிலும் வசிக்கின்ற உயிர்க்கூட்டங்களனைத்திற்கும், தகுந்த உறுதியை நன்றாகவிளக்கிக் காட்டினை; இனி, இன்றுதொடங்கி முன்போல நீயே (உலகுயிர்களைச்) சிருஷ்டித்துக்கொண்டு வசிக்கக் கடவையென்று அருளிச் செய்த னர்.—எ-று. (கூரு)

அருளுரு வாகு மீச னயற்கிது புகன்ற பின்னர்
முருகவேள் முகத்தை நோக்கி முறுவல்செய் தருளை நல்கி
வருதியா லைய வென்று மலர்க்கையுய்த் தவனைப் பற்றித்
திருமணிக் குறங்கின் மீது சிறந்துவீற் றிருப்பச் செய்தான்.

(இ-ள்.) திருவரு ளுருவமாகவுள்ள சிவபெருமான் பிரமனுக்கு இவ்வார்த் தைகளை யருளிச்செய்தபின்பு முருகக்கடவுளது திருமுகத்தைப்பார்த்து நகைத்துத் திருவருள் புரிந்து, ஐயனே! வருகவென்று தாமரை மலர்போன்ற திருக்கரத்தை நீட்டி அவரை யெடுத்து மேன்மைபொருந்திய தமது அழகிய தொடையின்மேல் சிறப் புடன் வீற்றிருக்கும்படி செய்தருளினர்.—எ-று. (கூசா)

காமரு குமரன் சென்னி கதுமென வுயிர்த்துச் செக்கர்த்
தாமரை புரையுங் கையாற் றழுவியே யயனுந் தேற்று

வோமென வுரைக்குஞ் சொல்லி னுறுபொரு ளுனக்குப் போமோ
போமெனி லதனை யின்னே புகலென விறைவன் சொற்றான்.

(இ-ள்.) அழகு மிக்க முருகக்கடவுளது உச்சியை விரைந்து மோந்து செந்தாமரை மலர்போன்ற திருக்கரத்தினால் தழுவி, பிரமனாலும் தெளியப்படாத ஓம் என்று கூறுஞ் சொல்லினது மெய்ப்பொருள் உனக்குத் தெரியுமோ? தெரியுமாயின், அதனை இப்பொழுதே சொல்லக்கடவை யென்று சிவபெருமான் அருளிச்செய்தனர்.

முற்றொருங் குணரு மாதி முதல்வகே ளுலக மெல்லாம்
பெற்றிடு மவட்கு நீமுன் பிறருண ராத வாற்றாற்
சொற்றிடா வினைய மூலத் தொல்பொருள் யாருங் கேட்ப
விற்றென வியம்ப லாமோ மறையினு விரைப்ப தல்லால்.

(இ-ள்.) முற்றுணர்ச்சியை யுடைய முதற்பெருங் கடவுளாகிய எந்தையே! கேட்டருள்வீராக, சர்வலோகங்களையும் பெற்றருளிய உமாதேவியாருக்குத் தேவரீர் முன்பு அயலாரறியாவண்ணம் உரைத்தருளிய இவ்வாறாகிய பழைய இரகசியார்த்தத்தை இரகசியமாகக் கூறுவதன்றி யாவருங் கேட்கும்படி இத்தன்மையதென்று கூறுதல் கூடுமோ?—எ-று. (௩௮)

என்றலு நகைத்து மைந்த வெமக்கருள் மறையி னென்னாத்
தன்றிருச் செவியை நல்கச் சண்முகன் குடிலை யென்னு
மொன்றொரு பதத்தி னுண்மை யுரைத்தன னுரைத்தல் கேளா
நன்றருள் புரிந்தா னென்ப ஞானநா யகனு மன்னால்.

(இ-ள்.) என்றிவ்வாறு அருளிச் செய்யவும், ஞானமுதல்வராகிய சிவபெருமான் மைந்தனே! அதனை எமக்கு மறைவாகவே கூறக்கடவை யென்று தமது சிறந்த திருச்செவியைச் சாய்த்துக் கொடுத்தருளவும், சண்முகப்பெருமான் குடிலை யென்று கூறும் ஒப்பற்ற மொழியின் உண்மைப்பொருளை அருளிச்செய்தனர்; அவ்வாறருளிச் செய்தலை (அவ்வெம்பெருமான்) கேட்டருளிச் சிறந்த திருவருள் புரிந்தனர்.

அன்னதோ ரைய மாற்றி யகமகிழ் வெய்தி யங்கட்
டன்னிளங் குமரன் றன்னைத் தலைமைபோ டிருப்ப நல்கி
யென்னையா ளுடைய நாதன் யாவரும் போற்றிச் செல்லத்
தொன்னிலை யமைந்து போந்து தொல்பெருங் கயிலை வந்தான்.

(இ-ள்.) அவ்வாறாகிய சந்தேகத்தை யொழித்துத் திருவுள்ள மகிழ்ந்து அங்குத் தமது இளைய திருக்குமாரராகிய முருகக்கடவுளை முதன்மை பெற்றிருக்கும்படி திருவருள்புரிந்து, எம்மை யடிமையாகவுடைய சிவபெருமான் யாவருந் துதித்துச் சூழ்ந்து வரும்படி முன்போல் இடபவாகனத்தி லெழுந்தருளிச் சென்று பழைமையாகிய பெரிய திருக்கயிலாயத்தை யடைந்தருளினர்.—எ-று. (௪௦)

முன்புறு மயன்மா றேவர் முனிவரை விடுத்து முன்னோன்
றன்பெருங் கோயில் புக்கான் றவிர்சிறக் கந்த வெற்பிற்
பொன்புனை தவிசி னேறிப் புடைதனில் வயவர் போற்ற
வின்பொடு குமர மூர்த்தி யினிதுவீற் றிருந்தா னன்றே.

(இ-ள்.) முன்னே நெருக்கிவருகின்ற பிரமன் திருமால் தேவர்கள் முனிவர்கள் முதலியவர்களைத் தத்தம் இடங்களுக்குச் செல்லவிடுத்துச் சிவபெருமான் தமது பெரிய திருக்கோயிலை யடைந்தருளினர். பின்னர் முருகக்கடவுள் கெடாத சிறப்பினையுடைய கந்தமாதன பருவதத்தில் பொன்னினா லலங்கரிக்கப்பட்ட ஆசனத்தி லெழு

தருளித் தமக்கருகில்வீரர்கள் போற்றும்படிப்பேரின்புடன் இனிமையோடு வீற்றிருந்தருளினர்.—எ-று. (சக)

ஆங்கு றுங் குமரப் புத்தேள் அருமறைக் கரசி யாகி
யோங்குமெய்ப் பொருட்கு மேலா மோரெழுத் துரையி னுண்மை
நீங்கற வணங்கிக் கேட்பச் சிறுமுனிக் குரைசெய் மற்றும்
பாங்குறு மிறைவ னூலும் பரிவினு லுணர்த்தி னானால்.

(இ-ள்.) அந்தக் கந்தமாதனபருவதத்தி லெழுந்தருளியிருக்கின்ற முருகக் கடவுள், அரியவேதங்களுக்குமுதன்மையாய் உயர்ந்த எல்லாப் பொருள்களுக்கும் மேலானதாகிய ஓம் என்னும் ஓரெழுத்தினது உண்மைப்பொருளைக் குற்றமற வணங்கிக்கேட்க, அகஸ்திய முனிவருக்கு உபதேசித்துச் சிறப்புப்பொருந்திய மற்றைப் பதிநூல்களையும் அன்புடன் உபதேசித்தருளினர்.—எ-று. (சஉ)

அயனைச் சிறைநீக்குபடல முற்றிற்று.

ஆ திருவிருத்தம்-க,உகூ.

---

உ

முருகன் றுணை.

---

# விடைபெறு படலம்.

சல்லே யன்னதின் மாலருள் கன்னிய ரிருவர்
சொல்ல ரும்பெரு வனப்பினர் சுந்தரி யமுத
வல்லி யென்றிடும் பெயரினர் கந்தவேள் வரைத்தோள்
புல்லு மாசையாற் சரவணத் தருந்தவம் புரிந்தார்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமையத்தில் திருமால் பெற்ற இரண்டு பெண்கள் சொல்லுதற்கரிய பேரழகினை யுடையவர்களும், சுந்தரி அமுதவல்லி யென்று கூறும் பெயரினை யுடையவர்களுமாகிய இவர்கள் முருகக்கடவுளது மலைபோன்ற தோள்களைத் தழுவவேண்டுமென்னும் விருப்பத்தினால் சரவணப்பொய்கையில் அருமையாகிய தவத்தைச் செய்தார்கள்.—எ-று. (க)

என்னை யாளுடை மூவிரு முகத்தவ னிரண்டு
கன்னி மாருமா யொன்றிநோற் றிடுவது கருத்தி
லுன்னி யேயெழீஇக் கந்தமால் வரையினை யொருவி
யன்னை தோன்றிய விமகிரிச் சாரலை யடைந்தான்.

(இ-ள்.) என்னை யடிமையாகவுடைய ஸ்ரீ சண்முகக்கடவுள், இரண்டு பெண்களுஞ் சேர்ந்து தவஞ்செய்திருத்தலைத் தமது திருவுள்ளத்திற் சிந்தித்து எழுந்தருளிப் பெரிய கந்தமாதன பருவதத்தினின்று நீங்கித் தமது அன்னையாராகிய உமாதேவியார் திருவவதாரஞ் செய்த இமயமலைச்சாரலை யடைந்தருளினர்.—எ-று. (உ)

பொருவில் சீருடை யிமையமால் வரைக்கொரு புடையாஞ்
சரவ ணந்தனிற் போதலுந் தவம்புரி மடவா

இருவ ரும்பெரி தஞ்சிய பணிந்துநின் றேத்த
வரம ளிப்பதென் கூறுதி ரென்றனன் வள்ளல்.

(இ-ள்.) ஒப்பற்ற சிறப்பினையுடைய பெரிய இமயமலையினோர் புறத்திலுள்ள சரவணப்பொய்கையை யடைந்தருளவும், அங்குத் தவஞ்செய்துகொண்டிருந்த இரண்டு பெண்களும் மிகவும் அச்சமுற்று வணங்கிநின்று துதிக்க முருகக்கடவுள் உங்கட்கு என்ன வரம்வேண்டும் கூறுங்களென்று அருளிச்செய்தனர்.—எ-று. (௩)

மங்கை மார்தொழு செம்மலீ வதுவையான் மருவ
விங்கி யாந்தவம் புரிந்தனங் கருணைசெய் யென்ன
வங்கவ் வாசகங் கேட்டலு மாறுமா முகத்துத்
துங்க நாயக னவர்தமை நோக்கியே சொல்வான்.

(இ-ள்.) அந்தப் பெண்கள் வணங்கி அடியேங்களைத் தேவரீர் திருமணஞ்செய்து கூடும்படி நாங்கள் இங்குத் தவஞ்செய்தனம், ஆதலால் திருவருள் புரியவேண்டுமென்று விண்ணப்பஞ்செய்யவும், அங்கு அவ்வார்த்தைகளைக்கேட்டவுடன் ஆறு திருமுகங்களையுடைய பரிசுத்தராகிய முருகக்கடவுள் அவர்களை நோக்கி யருளிச்செய்கின்றார்.—எ-று. (௪)

முந்து மின்னமு தக்கொடி மூவுல கேத்து
மிந்தி ரன்மக ளாகியே வளர்ந்தனை யிருத்தி
சுந்த ரிப்பெய ரிளையவ டொல்புவி தன்னி
லந்தண் மாமுனி புதல்வியாய் வேடர்பா லமர்தி.

(இ-ள்.) மூத்தவளாகிய இனிய அமுதவல்லியே! நீ மூன்றுலகத்தாருந் துதிக்கின்ற இந்திரன் மகளாகி வளர்ந்துகொண்டிருக்கக் கடவை; இளையவளாகிய சுந்தரியே! நீ பழமையாகிய நிலவுலகத்தில் சிறந்த சாந்த குணத்தினையுடைய சிவமுனிவனது புத்திரியாக (ப்பிறந்து) வேடர்களிடத்தி லிருக்கக்கடவை.—எ-று. (௫)

நன்று நீவிர்கள் வளர்ந்திடு காலையா நண்ணி
மன்ற னீர்மையா லுங்களை மேவுது மனத்தி
லொன்று மெண்ணலீர் செல்லுமென் றெம்பிரா னுரைப்ப
நின்ற கன்னியர் கைதொழு தேகினர் நெறியால்.

(இ-ள்.) நீங்கள் சிறப்போடு வளர்ந்துகொண்டிருக்குங் காலத்தில் யாம் அங்குவந்து திருமணமுறைப்படி உங்களைச் சேருவோம்; நீங்கள் மனத்தில் சிறிதுஞ் சிந்தித்து வருந்தாதீர்கள்; போகக்கடவீர்களென்று எமது முருகக்கடவுள் அருளிச்செய்ய, அங்கு எதிரில்நின்ற அக்கன்னியர்கள் முறைப்படி கைகூப்பி வணங்கிச் சென்றார்கள்.—எ-று. (௬)

ஏகு மெல்லையி லமுதமா மென்கொடி யென்பாள்
பாக சாதனன் முன்னமோர் குழவியாய்ப் படர்ந்து
மாக மன்னநின் னுடன்வரு முபேந்திரன் மகள்யா
னாகை யாலெனைப் போற்றுதி தந்தையென் றடைந்தாள்.

(இ-ள்.) அவ்வாறு செல்லும்பொழுது மெல்லிய அமுதவல்லி யென்பவள் இந்திரனுக்கு எதிரில் ஒருகுழந்தையாகச்சென்று சுவர்க்காதிபதியே!நான்உன்னுடன் பிறந்த உபேந்திரனுக்குப் புத்திரி; ஆகையால், தந்தையே! என்னைப் பாதுகாக்கக் கடவையென்று சேர்ந்தனள்.—எ-று. (௭)

பொன்னின் மேருவி லிருந்தவன் புதல்வியை நோக்கி
யென்னை யின்றயா யிங்ஙனம் வருகென விசைத்துத்

தன்ன தாகிய தனிப்பெருங் களிற்றினைத் தனது
முன்ன ராகவே விளித்தன னிந்திர மொழிவான்.

(இ-ள்.) பொன்மயமாகிய மேருமலையிலிருக்கின்ற இந்திரன் அந்தப்புதல்வி யைப் பார்த்து, என்னைப் பெற்றதாயே! நீ இங்கே வருகவென்று கூறித் தனது ஒப் பற்ற பெரிய ஐராவதமென்னும் யானையைத் தனக்கு எதிரில் அழைத்து இவ்வாறு கூறுவான்.—எ-று. (அ)

இந்த மங்கைநந் திருமக ளாருமீங் கிவளைப்
புந்தி யன்பொடு போற்றுதி யிவ்வையவள் பொருட்டா
லந்த மில்சிறப் பெய்துமே யென்றலு மவளைக்
கந்த மேற்கொடு நன்றெனப் போயது களிறு.

(இ-ள்.) இந்தப் பெண்குழந்தை நமது சிறந்த புதல்வியாகும், ஆதலால் இங் கே இக்குழந்தையை மனத்திற் பொருந்திய பேரன்புடன் பாதுகாக்கக்கடவை; இக் குழந்தையின் நிமித்தமாகப் பின்னர் முடிவில்லாத சிறப்புண்டாகுமென்று கூறவும், அந்த ஐராவத மென்னும் யானையானது அவ்வாறே நல்லதென்று அக்குழந்தையைத் தனது பிடரியின்மேல் வைத்துக்கொண்டு சென்றது.—எ-று. (கூ)

கொவ்வை போலிதழ்க் கன்னியை மனோவதி கொடுபோ
யவ்வி யானையே போற்றிய தன்மையகா ரணத்தாற்
றெய்வ யானையென் றொருபெய ரெய்தியே சிறிது
நொவ்வு றாதுவிற் றிருந்தனள் குமரனை நுவன்றே.

(இ-ள்.) கொவ்வைக் கனிபோலும் இதழையுடைய அந்தப் பெண்குழந் தையை மனோவதி நகரத்திற்குக்கொண்டு சென்று அந்த வெள்ளையானையே பாதுகா த்தது; அந்தக் காரணத்தினால் தெய்வயானை யென்றுகூறும் ஒரு பெயரைப் பெற்றுச் சிறிதும் வருந்துதலில்லாமல் முருகக்கடவுளைத் துதித்துக்கொண்டு வசித்திருந்தனள்.

பெருமை கொண்டிடு தெண்டிரைப் பாற்கடல் பெற்றுத்
திரும டந்தையை யன்புடன் வளர்த்திடுந் திறம்போற்
பொருவில் சீருடை யடலயி ராவதம் போற்ற
வரிசை தன்னுட னிருந்தன டெய்வத மடந்தை.

(இ-ள்.) மேன்மைபொருந்திய தெளிவாகிய அலைகளையுடைய திருப்பாற் கடலானது இலக்ஷ்மியைப் பெற்று அன்புடன் வளர்த்த தன்மையைப்போல ஒப்ப ற்ற சிறப்பினையுடைய வலிய ஐராவதமென்னும் வெள்ளை யானையானது பாதுகாத்த லால்,தெய்வயானை யென்னும் அப்பெண் முறைமைப்படிவளர்ந்திருந்தனள்.—எ-று.

முற்று ணர்ந்திடு சுந்தரி யென்பவள் முருகன்
சொற்ற தன்மையை யுளங்கொடு தொண்டைநன் னாட்டி
னுற்ற வள்ளிபஞ் சிலம்பினை நோக்கியாங் குறைபு
நற்ற வச்சிவ முனிமக ளாகவே நடந்தாள்.

(இ-ள்.) எல்லாவற்றையுமுணர்ந்த சுந்தரியென்னும் பெண்ணானவள், முரு க்கடவுள் அருளிச்செய்த தன்மையைத் திருவுள்ளத்திற் சிந்தித்து, சிறந்த தொண் டைநாட்டிலுள்ள வள்ளிமலையை நோக்கி அங்கு வசித்திருக்கின்ற நல்ல தவத்தினை யுடைய சிவமுனிவருக்குப் புதல்வியாகும்பொருட்டுச் சென்றனள்.—எ-று. (௧௨)

இந்த வண்ணமிவ் விருவர்க்கும் வரந்தனை யீந்து
கந்த மால்வரை யேகியே கருணையோ டிருந்தான்

தந்தை யில்லதோர் தலைவனைத் தாதையாய்ப் பெற்று
முந்து பற்பக லுலகெலாம் படைத்தவர் முதல்வன்.

(இ-ள்.) இவ்வண்ணமாக இவ்விரண்டு பெண்களுக்கும் வரத்தைக்கொடுத்து, தமக்கொரு தந்தையில்லாதவராகிய சிவபெருமானைத் தமக்குத் தந்தையாகப் பெற்று முன்னே யநேககாலம் எல்லா வுலகங்களையும் படைத்தருளிய ஸ்ரீ சுப்பிரமணியக்கடவுள் கந்தமாதன பருவதத்தை யடைந்து பெருங்கருணையுடன் வீற்றிருந்தருளினார்.—எ-று. (௧௩)

வேறு.

இத்திறஞ் சிலபக லிருந்து பன்னிரு
கைத்தல முடையவன் கயிலை மேவுறை
யத்தனோ டன்னைதன் னடிப ணிந்திடச்
சித்தம துன்னின னருளின் செய்கையால்.

(இ-ள்.) இவ்வாறு சிலகாலம் வசித்திருந்தருளி, பன்னிரண்டு திருக்கரங்களையுடைய குமாரக்கடவுள் திருக்கயிலாயத்தில் வீற்றிருந்தருளும் தமது தந்தை தாயர்களது திருவடிகளை வணங்கும்பொருட்டுத் திருவருட் செய்கையினால் திருவுள்ளங் கொண்டனர்.—எ-று. (௧௪)

எள்ளருந் தவிசினின் றிழிந்து வீரரா
யுள்ளுறும் பரிசன ரொருங்கு சென்றிடக்
கொள்ளையந் சாரதர் குழாமும் பாற்பட
வள்ளலங் கொருவியே வல்லை யேகினான்.

(இ-ள்.) இகழ்தலில்லாத சிங்காசனத்தினின்று மிறங்கி வீரர்களாகப் பொருந்திய பரிசனர்கள் சூழ்ந்துடன் வர, கூட்டங்களாகவுள்ள பூதகணங்களும் அருகில் நெருங்கிவர, குமாரக்கடவுள் அக்கந்த மாதன பருவதத்தினின்றும் விரைந்து சென்றருளினார்.—எ-று.

சிறந்த முழுமணிகளா லிழைக்கப்பட்ட சிங்காசனமாதலின், 'எள்ளருந் தவிசு' என்று கூறினார். (௧௫)

ஏயென வெள்ளிவெற் பெய்தி யாங்குளனங்
கோயிலி னவைக்களங் குறுகிக் கந்தவே
டாயொடு தந்தையைத் தாழ்ந்து போற்றியே
யாயவர் நடுவுற வருளின் வைகினான்.

(இ-ள்.) கந்தப்பெருமான் விரைவாகத் திருக்கயிலாயத் திருமலையை யடைந்து அங்குள்ள திருக்கோயிலின் சபாமண்டபத்தில் சேர்ந்து தமது தாய் தந்தையர்களாகிய சிவசத்திகளை வணங்கித் துதித்து அவ்விருவர்களின் மத்தியில் திருவருளோடு எழுந்தருளி யிருந்தனர்.—எ-று.

ஏ என்பது விரைவுக்குறிப்பு. (௧௬)

அண்ணலங் குமரவே ளங்கண் வைகலும்
விண்ணவர் மகபதி மேலை நான்முக
னெண்ணிகழ் தங்குறை யுரைத்து நான்முகன்
கண்ணனை முன்கொடு கயிலை யெய்தினார்.

(இ-ள்.) பெருமைபொருந்திய அழகிய குமாரக்கடவுள் அங்கு வசித்தருளுதலும் தேவர்களும் இந்திரனும் முன்னர் அநேககாலமாகத் தங்கள் மனத்திற்பொருந்

திய குறைகளை முறையிட்டுப் பிரமனையுந் திருமாலையும் முன்னே யழைத்துக்கொண்டு திருக்கயிலைமலையை யடைந்தார்கள்.—எ-று.

மேலைநான்முதல் என்றது, சூரபன்மன் அரசாட்சி பெற்ற காலந்தொடங்கி என்றபடி. (கஎ)

அடைதரு மலர்தலை யமல னாலய
நடைமுறை போற்றிடு நந்தி நின்மெனாத்
தடைவினை புரிதலுந் தளர்ந்து பற்பக
னெடிதுறு துயரொடு நிற்றன் மேயினார்.

(இ-ள்.) அவ்வாறடைந்த திருமால் முதலிய தேவர்களை, சிவபெருமானது திருக்கோயிற்றிருவாயிலை முறைப்படிக் காவல் செய்கின்ற திருநந்திதேவர் நில்லுங்களென்று தடைசெய்யவும், அவர்கள் தளர்ச்சியடைந்து அநேக நாள்கள் மிகுதியாகப் பொருந்திய துன்பத்துடன் நின்றார்கள்.—எ-று.

நில்லும் என்றது, நின்ம் எனவந்தது. (கஅ)

அளவறு பற்பக லங்க னின்றுளார்
வளனுறு சிலாதனன் மதலை முன்புதம்
முளமலி யின்னலை யுரைத்துப் போற்றலுந்
தளர்வினி விடுமினென் றிதனைச் சாற்றினான்.

(இ-ள்.) அளவில்லாத அநேககாலம் அங்கு நின்றுகொண்டிருந்த திருமால் முதலிய தேவர்கள் சிறப்புமிக்க சிலாதமுனிவர் புத்திரராகிய திருநந்திதேவருக்கு முன்னே தங்களுள்ளத்திற் பொருந்திய துன்பத்தை விண்ணப்பஞ்செய்து துதிக்கவும், அவர் நீங்கள் இனி துன்பத்தை விடுங்களென்று இவ் வார்த்தையை யருளிச்செய்கின்றார்.—எ-று. (கக)

தங்குறை நெடும்புனற் சடில மேன்மதி
யங்குறை வைத்திடு மாதி முன்போய்
நுங்குறை புகன்றவ ணுய்ப்ப னுய்ப்பனு
லிங்குறை வீரென வியம்பிப் போயினான்.

(இ-ள்.) உயர்வுபொருந்திய பெரிய கங்காநதியைத்தரித்த சடைமுடியின் மேல் இளம்பிறையையணிந்த சிவபெருமான் திருமுன்னே யடைந்து உங்கள் குறைகளை விண்ணப்பஞ்செய்து அங்கு எளிதாக உங்களைச் சேர்ப்பேன்; ஆதலால், இவ்விடத்திலேயே யிருக்கக்கடவீர்களென்று கூறிச் சென்றருளினார்.—எ-று.

உறை-உயர்வு. அன்றி, நீர்த்துளிகள்பொருந்திய எனப் பொருள் கூறலுமொன்று. மதியங்குறை என்பதனை, குறைமதியம் என மாற்றிப் பொருளுரைக்கப்பட்டது. நொய்து-எளிது. (உ0)

போயின நந்தியெம் புனிதன் கன்னுதற்
றாயனை வணங்கினன் றொழுது வாசவன்
மாயவ னான்முகன் வானு ளோரெலாங்
கோயிலின் முதற்கடை குறுகி னாரென்றான்.

(இ-ள்.) மலரகிதராகிய திருநந்திதேவர் உள்ளே சென்று, நெற்றிக்கண்ணராகிய சிவபெருமானைச் சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து, (எமதாண்டவரே!) இந்திரன் திருமால் பிரமன் தேவர்கள் முதலிய வனைவரும் திருக்கோயிலின் முதற்றிருவாயிலை யடைந்திருக்கின்றார்களென்று விண்ணப்பஞ் செய்தனர்.—எ-று. (உக)

அருளுடை யெம்பிரா னனையர் யாரையுந்
தருதிநம் முன்னெனச் சார வென்றலும்
விரைவொடு மீண்டனன் மேலை யோர்களை
வருகென வருளினன் மாசில் காட்சியான்.

(இ-ள்.) பேரருள் வள்ளலாகிய சிவபெருமான் அவர்களனைவரும் நம்மெதிரில் வரும்படியழைத்துக்கொண்டு வரக்கடவையென்று கட்டளையிட்டருளவும், குற்றமற்ற காட்சியினையுடைய திருநந்திதேவர் விரைவாகத் திரும்பிவந்து திருமால் முதலிய தேவர்களை நீங்கள் வரக்கடவீர்களென்று அருளிச்செய்தனர்.—எ-று. (௨௨)

விடைமுக னுரைத்தசொல் வினவி யாவருங்
கடிதினி லெய்திய கருணை வாரிதி
யடிமுறை வணங்கின ரதற்குள் வாசவ
னிடருறு மனத்தின னினைய கூறுவான்.

(இ-ள்.) இடபமுகத்தினையுடைய திருநந்திதேவர் உரைத்தருளிய வார்த்தையை யாவர்களுங்கேட்டு விரைந்துசென்று கிருபைக்கடலாகிய சிவபெருமானது திருவடிகளில் முறைமைப்படி வணங்கினார்கள்; அதற்குள்ளே இந்திரனானவன் துன்பம் பொருந்திய மனத்தினையுடையவனாய் இவ்வார்த்தைகளை விண்ணப்பஞ் செய்கின்றான்.—எ-று.

முறை வணங்கலாவது,—அஷ்டாங்க பஞ்சாங்கமாக வணங்குதல். (௨௩)

பரிந்துல கருள்புரி பரையொ டொன்றியே
யிருந்தருண் முதல்வகே ளெண்ணி லாவுக
மருந்திறற் சூர்முத லவுணர் தங்களால்
வருந்தின மொடுங்கினம் வன்மை யின்றியே.

(இ-ள்.) உலகங்களை விரும்பிப் பெற்றருளிய உமாதேவியாரோடு பொருந்தி வீற்றிருந்தருளும் எமது ஆண்டவரே! கேட்டருள்வீராக, அளவற்றயுகங்களாக மிக்கவலிமையினையுடைய சூரபன்மன் முதலிய அசுரர்களால் வலிகுறைந்து வருந்தியொடுங்கினோம்.—எ-று.

'அருள்புரி' என்பதற்கு, முப்பத்திரண்டு தருமங்களையுஞ் செய்து பாதுகாத்தருளிய எனப்பொருள் கூறினுமாம். அடைந்தவர் குறையினை நீக்கிப் பேரருள் புரியுங் கருணையாளரென்பார், 'பரிந்துலகருள்புரி பரையொ டொன்றியே-யிருந்தருண் முதல்வ' என்றார். (௨௪)

அந்தமி லழகுடை யரம்பை மாதரு
மைந்தனு மளப்பிலா வானு ளோர்களும்
வெந்தொழி லவுணர்கள் வேந்தன் மேவிய
சிந்துவி னகரிடைச் சிறைக்கண் வைகினர்.

(இ-ள்.) முடிவில்லாத பேரழகினையுடைய அரம்பை மாதர்களும், என் புத்திரனாகிய சயந்தனும், அளவற்றதேவர்களும், கொடுந்தொழிலையுடைய அசுரர்கள் தலைவனாகிய சூரபன்மன் வசிக்கின்ற கடலிற்பொருந்திய மகேந்திரபுரியில் சிறையிலிருக்கின்றார்கள்.—எ-று. (௨௫)

இழிந்திடு மவுணரா லியாதொர் காலமு
மொழிந்திட லின்றியே யுறைந்த சீரொடு
மழிந்ததென் கடிநக ரதனை யானிவண்
மொழிந்திடல் வேண்டுமோ வுணர்தி முற்றுநீ.

(இ-ள்.) எக்காலத்தும் அழிவில்லாமல் பொருந்திச் சிறப்புடனிருந்த வென து காவலையுடைய அமராவதி நகரமானது, இழிவு பொருந்திய அசுரர்களால் அழி வுற்றது; இவ்வாறழிந்த தன்மையைத் தேவரீர் முற்றுணர்ச்சியை யுடையவராத லால், அடியேன் இங்கு விண்ணப்பித்தல் வேண்டுமோ? (வேண்டுவதில்லை.)—எ-று.

முன்னுற யான்றவ முயன்று செய்துழித்
துன்னியி நங்கமுற்றோர் தோன்ற லெய்துவா
னன்னவ னைக்கொடே யவுணர்ச் செற்றுநும்
மின்னலை யகற்றுது மென்றி யெந்தைநீ.

(இ-ள்.) எம்பெருமானே! முன்பு அடியேன் தவத்தைமுயற்சித்துச்செய்த பொழுது அங்குத் தேவரெழுந்தருளி நம்மிடத்து ஒரு புதல்வன் தோன்றுவான்; அப்புதல்வனைக் கொண்டு அசுரர்களையழித்து நீங்களடைந்திருக்கின்ற துன்பத்தை யொழிக்கின்றோம் என்று அருளிச்செய்தீர்.—எ-று. (௨௭)

அப்படிக் குமரனு மவத ரித்துள
னிப்பகல் காறுமெம் மின்ன றீர்த்திலை
முப்புவ னந்தொழு முதல்வ நீயரேந்
துப்புறு பவப்பயன் றுலைந்த தில்லையோ.

(இ-ள்.) அவ்வாறே புதல்வரும் அவதரித்தனர்; (அவர் அவதரித்தும்,) இந்நாள்வரையிலும் எங்களது துன்பத்தை யொழித்தீரில்லை; மூன்றுலகத்தாரும் வண ங்குகின்ற முதற்பெருங் கடவுளாகிய எம்பெருமானே! கொடியவர்களாகிய எங்களது வலிய தீவினைப்பயன் இன்னும் ஒழியவில்லையோ?—எ-று. (௨௮)

சூருடை வன்மையைத் தொலைக்கத் தக்கதோர்
பேருடை யாரிலை பின்னை யானினி
யாரொடு கூறுவ னாரை நோகுவ
னீருடை முடியினோய் நினது முன்னலால்.

(இ-ள்.) சூரபன்மனது பராக்கிரமத்தை யொழிக்கத்தக்க தன்மையையு டையவர்கள் வேறொருவருமில்லை; கங்கைநதியையணிந்த சடைமுடியையுடைய எமதாண்டவரோ! தேவரீரது சந்நிதியிலல்லாமல் பின்னை யாருடன் சொல்லுவேன்; யாரை நொந்துகொள்ளுவேன்.—எ-று. (௨௯)

சீகர மறிகடற் சென்று நவ்விசேர்
காகம தென்னவுன் கயிலை யன்றியே
யேகவோ ரிடமிலை யெமக்கு நீயலாற்
சோகம தகற்றிடுந் துணைவ ரில்லையே.

(இ-ள்.) அலைகள்மடங்குகின்ற கடலிற்சென்று கப்பலையடைந்தகாகத்தை ப்போலத் தேவரீரது திருக்கயிலையை யன்றி அடைக்கலமாகச் செல்லுதற்கு வேறோ ரிடமுமில்லை; அடியேங்களுக்குத் தேவரீரை யன்றித் துன்பத்தை யொழிக்கத்தக்க துணையாயுள்ளவர்கள் ஒருவருமில்லை.—எ-று.

நவ்வி-கப்பல். 'கலத்தலை யகன்றிடாக் காகம்போலவே' என்றார்முன்னும்.

ஏற்றெழு வன்னிமே லினிது துஞ்சலாந்
தோற்றிட வெவ்விட மெனினுந் துய்க்கலா
மாற்றல ரலைத்திட வந்த வெந்துய
ராற்றரி தாற்றரி தலமிப் புன்மையே.

(இ-ள்.) மிகுதியாகப் பற்றியெரிகின்ற நெருப்பின்மேல் இனிமையோடு தூங்கலாம், கடலிற்றோன்றிய கொடிய ஆலாகல விஷமெனினும் உண்டுவிடலாம், பகையசுரர்கள் வருத்த அதனாலடைந்த கொடியதுன்பத்தைச் சகித்தலரிது, இவ்விழிந்த காரியத்தைச் சகிக்கமாட்டாதவர்களா யிருக்கின்றேம்.—எ-று.

வன்னிமேல் துஞ்சுதலினும், விடத்தைத் துய்த்தலினும் சூராதியரா லுண்டாகுந் தீங்கு மிகக் கொடிய தென்பார், 'ஆற்றரி தாற்றரி தலமிப் புன்மையே' என்று கூறினார். (௬௧)

தீதினை யகற்றவுந் திருவை நல்கவுந்
தாதைய ரல்லது தனையர்க் காருளா
ராதலி னெமையினி யளித்தி யாலெனா
வோதினன் வணங்கினா னும்பர் வேந்தனே.

(இ-ள்.) துன்பத்தை யொழிக்கவும் செல்வத்தைத் தரவும் தந்தையர்களே யன்றிப் புதல்வர்களுக்கு வேறு யாரிருக்கின்றார்கள்; ஆதலால் அடியேங்களை இனிக் காத்தருள்வீராகவென்று தேவேந்திரன் முறையிட்டு வணங்கினான்.—எ-று. (௬௨)

அப்பொழு தரியய னைய வெய்யசூர்
துப்புட னுலகுயிர்த் தொகையை வாட்டுதல்
செப்பரி தின்னினிச் சிறிதுந் தாழ்க்கலை
யிப்பொழு தருள்கென வியம்பி வேண்டினார்.

(இ-ள்.) அந்தச் சமையத்தில் திருமாலும் பிரமனும் (சிவபெருமானை நோக்கி) ஐயனே! கொடிய சூரபன்மன் வலிமையோடும் உலகத்திலுள்ள உயிர்க்கூட்டங்களை வருத்துதல் சொல்லுதற்கரிதாகும், இனிமேல் சிறிதுங் காலதாமசஞ் செய்யவேண்டாம், இப்பொழுதே திருவருள் செய்வீராகவென்று கூறிவேண்டிக் கொண்டார்கள்.—எ-று. (௬௩)

இகபர முதவுவோ னிவற்றைக் கேட்டலு
மிகவரு ளெய்தியே விடுமி னீரினி
யகமெலி வுறலென வருளி யாங்கமர்
குகன்முக நோக்கியே யினைய கூறுவான்.

(இ-ள்.) (ஆன்மாக்களுக்கு) இம்மை மறுமைப் பயன்களை யளித்தருள்பவராகிய சிவபெருமான் இவ்வார்த்தைகளைக் கேட்டருளுதலும், மிக்க திருவருள்கூர்ந்து இனி நீங்கள் மனம் வருந்துதலை யொழிந்திருங்களென்று அருளிச்செய்து, அங்கெழுந்தருளியிருக்கின்ற முருகக்கடவுளது திருமுகத்தைப் பார்த்தருளி இவ்வார்த்தைகளை யருளிச்செய்கின்றார்.—எ-று.

சிவபெருமானே ஆன்மாக்களுக்கு இம்மை மறுமைப்பயன்களை யளித்தருள்பவ ராகலின், 'இகபர முதவுவோன்' என்று கூறினார். "பந்தம்விடு தரும் பரமன்" என்றார் ஸ்ரீ சேக்கிழார்பெருமானும். (௬௪)

வேறு.

பாரினை யலைத்துப் பல்லுயிர் தமக்கும் பருவரல் செய்துவிண் ணவர்த
மூரினை முருக்கித் தீமையே யியற்றி யுலப்புறு வன்மைகொண் டுற்ற
சூரினை யவுணர் குழுவொடுந் தடிந்து சுருதியி னெறிநிறீஇ மகவான்
பேரர சளித்துச் சுரர்துய ரகற்றிப் பெயர்தியென் றனனெந்தை பெருமான்.

(இ-ள்.) எமது தந்தையாகிய சிவபெருமான் (குமர!) நீ உலகத்தை வருத்திப் பலவுயிர்களுக்குந் துன்பத்தைச் செய்து தேவர்களது சுவர்க்கலோகத்தை யழித்

துக் கொடுமையினையே செய்து கெடாத வலிமையடைந்திருக்கின்ற சூரபன்மனை அசுரர்கூட்டங்களுடன் கொன்று, வேதவொழுக்கத்தை நிலைநிறுத்தி, இந்திரனது பெரிய அரசாட்சியைக்கொடுத்துத் தேவர்களது துன்பத்தை யொழித்து மீண்டுவரக் கடவை யென்றருளிச்செய்தனர்.—எ-று. (௩௫)

அருந்திகொள் குமர னிவ்வையசொல் வினவி யப்பணி புரிகுவ னென்னப்
புரந்தினை யட்ட கண்ணுதல் பின்னர்ப் பொள்ளென வுள்ளமேற் பதினோ
ருருத்திரர் தமையு முன்னலு மன்னோ ருற்றிட வினன் கையிற் படையா
யிருத்திரென் றவரைப் பலபடை யாக்கி யிந்தனை யெம்பிரான் கரத்தில்.

(இ-ள்.) அன்புபொருந்திய குமாரக்கடவுள் இவ்வார்த்தையைக் கேட்டருளி அக்காரியத்தைச் செய்கின்றேனென்று கூறியருளவும், முப்புரங்களையு மெரித்தருளிய நெற்றிக்கண்ணவராகிய சிவபெருமான் அதன்பின்பு விரைவாகத் தமதுள்ளத்தில் பதினோருருத்திரர்களையும் நினைத்தருளுதலும் உடனே அவ்வுருத்திரர்கள் வந்துசேர, (சிவபெருமான் அவர்களைநோக்கி, நீவிர்) இந்தக் குமரனது கையில் ஆயுதமாக விருங்களென்று அவர்களைப் பல ஆயுதங்களாகச்செய்து எமது கந்தப்பெருமானுடைய திருக்கரத்தில் கொடுத்தருளினர்.—எ-று.

பதினோருருத்திரராவார் :—மகாதேவன், அரன், உருத்திரன், சங்கரன், நீலலோகிதன், ஈசானன், விசயன், வீமதேவன், பவோற்பவன், காபாலி, சௌமியன் என்பவர்கள். (௩௬)

பொன்றிகழ் சடிலத் தவ்வை றன் பெயரும் பொருவிலா வுருவமுந் தொன்னு
ளான்றுபெற் றுடைய வுருத்திர களர்த் தோர் நவிலருந் தோமரங்கொடிவாள்
வன்றிறற் குலிசம் பகழியங் குசமு மணிமலர்ப் பங்கயந் தண்டம்
வென்றியின் மழுவு மாகிவீற் றிருந்தார் விறன்மிகு மறுமுகன் கரத்தில்.

(இ-ள்.) பொன்மயமாக விளங்குகின்ற சடைமுடியினையுடைய சிவபெருமானது திருப்பெயரையும், ஒப்பற்ற அவரது திருவுருவத்தையும் முன்னாளில் சிறப்பாகப் பெற்றிருக்கின்ற பதினோருருத்திரர்களும் சொல்லுதற்கரிய தோமரம், கொடி, வாள், மிக்க வலிமைபெற்ற வச்சிரம், அம்பு, அங்குசம், மணி, கமலம், தண்டம், வெற்றிபொருந்திய வில், மழு என்னும் ஆயுதத்திருவுருவங்களைக் கொண்டு, வலிமைமிக்க ஸ்ரீ சண்முகப்பெருமானது திருக்கரத்தில் சேர்ந்திருந்தார்கள்.—எ-று.

தோமரம்-எறியீட்டி. மணி-கண்டாமணி. பங்கயம்-தாமரைவடிவினதாகிய ஒருவகையாயுதம். மழு-பரசு. (௩௭)

ஆயதற் பின்ன ரேவின்மூ தண்டத் தைம்பெரும் பூதமு மடுவ
தேயபல் லுயிரு மொருதலை முடிப்ப தேவர்மேல் விடுக்கினு மவர்தம்
மாயிருந் திறலும் வரங்களுஞ் சிந்தி மன்னுயி ருண்பதெப் படைக்கு
நாயக மாவ தொருதனிச் சுடர்வே லல்கியே மதலைகைக் கொடுத்தான்.

(இ-ள்.) அதன்பின்பு, பிரயோகித்தால் பழைமையாகிய பல வண்டங்களிலுள்ள பெரிய பஞ்சபூதங்களையு மழிக்கத்தக்கதும், நிலைபெற்ற எல்லா வுயிர்களையும் ஒருங்கே நாசஞ்செய்யத்தக்கதும், எத்தகைய வலியவர்கள் மீது விடுத்தாலும் அவர்களது மிகுந்த பராக்கிரமத்தையும் வரங்களையுங்கெடுத்து அவர்களிடத்துப்பொருந்திய உயிரை யுண்ணத்தக்கதும், எவ்வகை யாயுதங்களுக்கும் முதன்மையாகவுள்ளதுமாகிய ஒப்பற்று விளங்குகின்ற ஒருவேலாயுதத்தைப்படைத்துக் குமாரக்கடவுளது திருக்கரத்திற் கொடுத்தருளினர்.—எ-று. (௩௮)

அன்னதற் பின்ன ரெம்பிரான் றன்பா லாகியின் றேவின புரிந்து
மன்னிய விலக்கத் தொன்பது வகைந்தா மைந்தரை நோக்கியே யெவர்க்கு
முன்னவ னாகிக் குமரனோ டேகி முடிக்குதி ரவுணரை யென்னாத்
துன்னுபல் படையு முதவியே சேய்க்குத் துணைப்படை யாகவே கொடுத்தான்.

(இ-ள்.) அதன்பின்பு எமது கந்தப்பெருமானுக்கருகில் சூழ்ந்துநின்று ஏவற்றொழிலைச்செய்து வசித்திருந்த இலக்ஷத்தொன்பது வீரர்களையும் பார்த்தருளி, யாவருக்கு முதல்வனாகிய இந்தக் கந்தனுடன் சென்று அசுரர்களை யழிக்கக்கடவீர்களென்று வலிபொருந்திய பல ஆயுதங்களையுங் கொடுத்து அவர்களைத் தமது திருப்புதல்வராகிய முருகக்கடவுளுக்குத் துணைப்படையாகத் தந்தருளினார்.—எ-று. (௩௯)

நாயக னதற்பி னண்டவா பரனை நந்தியுக் கிரனொடு சண்டன்
காலெரி விழியன் சிங்கனே முதலாங் கணப்பெருந் தலைவரை நோக்கி
யாயிர விரட்டி பூதவெள் ளத்தோ டறுமுகன் சேனையாய்ச் சென்மி
னீயிரென் றருளி யவர்தமைக் குகற்கு நெடும்படைத் தலைவரா வளித்தான்.

(இ-ள்.) அதன்பின்பு சிவபெருமான் அண்டாபரணன், நந்தி, உக்கிரன், சண்டன், பற்றி யெரிகின்ற தீக்கண்ணன், சிங்கன் முதலாகிய பெரிய கணத்தலைவர்களைப் பார்த்தருளி நீங்கள் இரண்டாயிரம் வெள்ளம் பூதர்களுடன் நமது சண்முகனுக்குப் படைத்துணையாகச் செல்லுங்களென்று கட்டளையிட்டருளி அவர்களைக் கந்தப்பெருமானுக்குச் சிறந்த படைத்தலைவர்களாகத் தந்தருளினார்.—எ-று. (௪0)

ஐம்பெரும் பூத வன்மையு மங்க ணமர்தரும் பொருள்களின் வலியுஞ்
செம்பது மத்தோ னாதியா மமரர் திண்மையுங் கொண்டதோர் செழுந்தேர்
வெம்பரி யிலக்கம் பூண்டது மனத்தின் விரைந்துமுன் செல்வதொன் றதனை
யெம்பெரு முதல்வன் சிந்தையா லுதவி யேறுவான் மைந்தனுக் களித்தான்.

(இ-ள்.) பெரிய பஞ்சபூதங்களின்வலிமையையும், அப்பஞ்சபூதங்களினிடத்துப் பொருந்தியுள்ள பொருள்களினதுவலிமையையும், செந்தாமரையில் வசிக்கின்ற பிரமன் முதலிய தேவர்களது வல்லமையையும் பெற்றுள்ளதும், வெவ்விய இலக்ஷங் குதிரைகள் பூட்டப்பட்டுள்ளதும், மனவேகத்திலும் விரைந்து முன் செல்லத்தக்கதுமாகிய ஒரு சிறந்த இரதத்தை எமது முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் மனத்தினாற் படைத்து அதில் ஏறும்படி தமது திருப்புதல்வராகிய குமாரக்கடவுளுக்குக் கொடுத்தருளினார்.—எ-று.

ஐம்பெரும்பூதம்-பிருதிவி முதலியன. (௪௧)

இவ்வகை யெல்லாம் விரைவுட னுதவி யேகுதி நீயெனக் குமரன்
மைவிழி யுமையோ டிறைவனைத் தொழுது வலங்கொடே மும்முறை வணங்கிச்
செவ்விதி னெழுந்து புகழ்ந்தன னிற்பத் திருவுளத் துவகையாற் றழுவிக்
கைவருகவானுய்த்துச்சிமேலுயிர்த்துக்கருணைசெய்தமலைகைக்கொடுத்தான்

(இ-ள்.) இவ்வண்ணம் எல்லாப் பொருள்களையும் விரைவாகப் படைத்துக் கொடுத்து நீ (போர்க்குச்) செல்லக்கடவை யென்றருளிச் செய்யவும், உடனே முருகப்பெருமான் மைதீட்டிய கண்களையுடைய உமாதேவியாருடன் சிவபெருமானைத் தொழுது மூன்றுதரம் பிரதக்ஷிணஞ்செய்து நமஸ்கரித்து நன்றாகவெழுந்து துதித்து நிற்கவும், (சிவபெருமான்) தமது திருவுள்ளத்தில் பொருந்திய மகிழ்வுடன் திருக்கரத்தினால் தழுவி யெடுத்துத் துடையின்மேல்வைத்து உச்சிமோந்து திருவருள்புரிந்து பார்வதி தேவியாரது திருக்கரத்திற் கொடுத்தருளினார்.—எ-று. (௪௨)

கொடுத்தலும் வாயின்மைத் தருளிறைற் புல்லிக் குமாரவேள் சென்னி
மோந் துன்பா, லடுத்திடு மிலக்கத் தொன்பது வகையோ ரணிகமாய்ச் சூழ்
ந்திடப் போந்து, கடக்கரு மாற்ற லவுணர்தங் கிளையைக் காதியிக் கடவுளர்
குறையை, முடித்தனை வருதி யென்றருள் புரிந்தாண் மூவிரு சமயத்தின்
முதல்வி.

(இ-ள்.) அவ்வாறு கொடுத்தருளுதலும், அறுவகைச்சமயங்களுக்குந் தலைவி
யாகிய உமாதேவியார் குமாரக்கடவுளைத் தமதருகில்வைத்து திருவருளுடன் அணைத்து
உச்சிமோந்து உன்னருகிற் சூழ்ந்துள்ள இலக்ஷத்தொன்பதுவீரர்களும் சேனைகளாகச்
சூழும்படி சென்று, பிறரால் வெல்லுதற்கரிய வல்லமையையுடைய அசுரர்கூட்டங்
களையழித்து இந்தத்தேவர்களது மனக்குறையை யொழித்து வரக்கடவையென்று
அனுக்கிரகஞ் செய்தனர்.—எ-று.

அரியயனுதி யனைவரையும் வென்ற வீரர்க ளாகலான், 'கடக்கரு மாற்ற
லவுணர்' என்று கூறினர். மூவிரு சமயம் என்பதனை முன்னர்க் காண்க. (சாரு)

அம்மையித் திறத்தா லருள்புரிந் திடலு மறுமுகன் செழுமெதழீஇ
யனையோர், தம்விடை கொலண்டு படர்ந்தனன் றனைத் தலைவரா மிலக்கமே
லொன்பான், மெய்ம்மைகொள் வீரர் யாவருங் கணங்கள் வியன்பெருந் தலை
வரு மிருவர், செம்மல ரடிகள் மும்முறை யிறைஞ்சிச் சேரவே விடைகொடு
சென்றார்.

(இ-ள்.) உமாதேவியார் இவ்வாறு திருவருள் புரியவும் ஸ்ரீ சண்முகக்கட
வுள் நமஸ்கரித்தெழுந்து அத்தாய்தந்தையர்களிடத்து விடைபெற்றுச் சென்றருளி
னர். சேனைத்தலைவர்களாகிய மெய்ம்மைபொருந்திய இலக்ஷத்தொன்பது வீரர்களும்,
பெரிய கணத்தலைவர்களும், அச்சிவசத்திகளினது செந்தாமரை மலர்போலுந் திருவ
டிகளில் மூன்றுதரம் நமஸ்கரித்து விடைபெற்றுக்கொண்டு குமாரக்கடவுளுடன் செ
ன்றார்கள்.—எ-று. (சச)

நின்றிடு மயன்மான் மகபதி யெந்தாய் நீயெமை யளித்தனை நெஞ்சத்
தொன்றொரு குறையு மில்லையா லிந்நா ளுய்ந்தன முய்ந்தன மென்று
பொன்றிகழ் மேனி யுமையுட னிறைவன் பொன்னடி பணிந்தெழ றமக்கு
நன்றிசெய் குமரன் றன்னுட னீரு நடமென விடையது புரிந்தான்.

(இ-ள்.) அங்கு எதிரில் நின்றுகொண்டிருந்த பிரமனும் திருமாலும் இந்திர
னும் எமது ஆண்டரோ! தேவரீர் எங்களைப் பாதுகாத்தருளினீர்; எங்கள் மனத்தில்
இனி ஒரு குறையுமில்லை; இந்நாளில் பிழைத்தோம் பிழைத்தோமென்று பொன்
போல் விளங்குந் திருமேனியினையுடைய உமாதேவியாருடன் சிவபெருமானது அழ
கிய திருவடிகளை வணங்கி யெழுதலும், (அவ்வெம்பெருமான் அவர்களை நோக்கி)
உங்களுக்கு உதவிசெய்யச்சென்ற நமது கந்தனுடனே நீங்களுஞ் செல்லக்கடவீர்க
ளென்று விடைகொடுத்தருளினர்.—எ-று. (சரு)

விடைபெறுபடலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-க,௬௪௦.

---

# படையெழு படலம்.

கன்றுயுகள் விடைபெற் றரியயன் மகவான் கடவுளர் தம்மொடு கடிதி
னன்னலங் குமரன் றன்னொடு சென்றே யயல்வரு மருத்தினை நோக்கித்
தன்னளி புரியு மறுமுகத் தெந்தை தனிப்பெருந் தேர்மிசை நீபோய்ப்
பண்ணொடு முட்கோன் மத்திகை பிடித்துப் பாகனாய்த் தூண்டெனப் பணித்தான்

(இ-ள்.) சிவபெருமானது உத்தரவைப் பெற்றுக்கொண்டு திருமாலானவர் பிரமன் இந்திரன் தேவர்கள் முதலியவர்களோடு விரைந்து பெருமை பொருந்திய அழகிய முருகக்கடவுளுடன் சென்று அருகில் வருகின்ற வாயுதேவனைப் பார்த்து, சிறந்த திருவருள்புரிகின்ற ஸ்ரீ சண்முகப்பெருமானது ஒப்பற்ற பெரிய இரதத்தின் மேல் நீ சென்று குதிரைக் கடிவாளத்தையும் முட்கோல் மத்திகையையும் பிடித்துக் கொண்டு சாரதியாய்த் தேரை நடத்தக்கடவை யென்று கட்டளையிட்டனர்.—எ-று.

பண் - குதிரைக் கல்லணை; ஈண்டுக்கடிவாளமென்னும் பொருளில் நின்றது. முட்கோல் - முள்ளைத் தலையிலுடைய கோல். மத்திகை - குதிரைச்சம்மட்டி; இஃது இக்காலத்துச் சாட்டியென வழங்கும். (க)

மன்புரி திருமா லினையன பணிப்ப மாருத னிசைந்தனன் செல்லும்
பொன்பொலி தேரின் மிசைப்பாய்ந்து பொருக்கென மருத்தவர் நாற்பா
னொன்பது சிறந்தார் புடைவரத் தூண்டி யுவகையோ டறுமுகத் தொருவன்
முன்புற வுய்த்துத் தொழுதுமற் றிதன்மேன் முருகநீ வருகென மொழிந்தான்.

(இ-ள்.) காத்தற்றொழிலைச்செய்கின்ற திருமால் இவ்வாறு கூறவும், அதற்கு வாயுதேவன் சம்மதித்து ஆகாயவழியாகச் செல்லுகின்ற பொன்மயமாக விளங்கும் இரதத்தின்மேல் விரைவாகத்தாவி நாற்பத்தொன்பது வாயுக்களுந் தன்னைச் சூழ்ந்து வர, இரதத்தைச் சந்தோஷத்துடன் நடத்திக்கொண்டு ஸ்ரீ சண்முகப்பெருமான் திருமுன்னே கொண்டுவந்து நிறுத்தி வணங்கி, முருகப்பெருமானே! தேவரீர் இந்த இரதத்தின்மீது எழுந்தருளவேண்டுமென்று விண்ணப்பஞ் செய்தான்.—எ-று. (உ)

மாருத னினைய புகன்றுகை தொழுது மற்றவன் செயற்கையை நோக்கிப்
பேரருள் புரிந்து கதிரிளம் பரிதி பிறங்குசீ ருதயமால் வரைமேற்
சேருவ தென்னக் குமரவே ளனைய செழுமணி யிரதமேற் செல்லச்
சூரினி யிறந்தா னென்றுவா சவனுஞ் சுரர்களு மார்த்தனர் துள்ளி.

(இ-ள்.) வாயுதேவன் இவ்வாறு விண்ணப்பஞ்செய்து கைகூப்பி வணங்கவும், முருகக்கடவுள் அவ்வாயுதேவனது தொழிலைப்பார்த்துத் திருவருள் புரிந்து கிரணங்களையுடைய பால சூரியன் சிறப்புப் பொருந்திய பெரிய உதயகிரியில் எழுந்தருளுவதுபோலச் செழிய மணிகள் பதித்த இரதத்தின்மீது எழுந்தருளுதலும், இந்திரனும் தேவர்களும் இனி சூரபன்மன் இறந்தானென்று கூறித் துள்ளி ஆரவாரித்தார்கள்.—எ-று. (௩)

வே று.

ஓங்கு தேர்மிசைக் குமரவேள் மேவலு முவப்பா
லாங்க வன்றன தருள்பெறுந் திறலினோ ரணுகிப்
பாங்கர் நண்ணினர் முனிவருந் தேவர்கள் பலரு
நீங்க லின்றியே யவர்புடை சூழ்ந்தனர் நெறியால்.

(இ-ள்.) உயர்ந்த இரதத்தின்மேல் கந்தப்பெருமான் எழுந்தருளுதலும், சந்தோஷத்துடன் அவ்வெம்பெருமானது திருவருளைப்பெற்றுள்ள வீரர்கள் வந்து அருகிற் சேர்ந்தார்கள்; முனிவர்களும் பல தேவர்களும் நீங்குதலில்லாமல் முறைப்படி அவர்கள் பக்கங்களில் சூழ்ந்தார்கள்.—எ-று. (ச)

இனந்த னோடவர் முருகனை யடைதலு மிருநீர்
புனைந்த சென்னியன் கயிலையி லிருந்தவெம் பூத
ரனந்த வெள்ளத்தி லிராயிர மாகும்வெள் ளத்தர்
வனைந்த வார்கழற் றலைவர்தம் முறைகொடு வந்தார்.

(இ-ள்.) அவ்வீரர்கள் தங்களினத்துடன் முருகக்கடவுளையடையவும், பெரிய கங்கைநதியைத்தரித்த திருமுடியினையுடைய சிவபெருமானது திருக்கயிலாயத்தில்தங்கியிருந்த அநேகவெள்ளம்பூதர்களில் இரண்டாயிரம்வெள்ளம் பூதர்கள் வீரகண்டாமணியையணிந்த காலினையுடைய தங்கள் தலைவர்களது உத்தரவின்படி வந்தார்கள்.—எ-று. (ரு)

எழுவி யன்கதை நேமிவெஞ் சூலம்வா ளெறிகோல்
மழுமு தற்படை யாவையு மேந்திய வலியோர்
நிழன்ம திப்பிறை ஞெலிந்தென நிலாவுமி ழெயிற்ற
ரழலு குத்திடும் விழியின ரசனியி னறைவார்.

(இ-ள்.) எழுத்தண்டமும், பெரிய கதையும், சக்கரமும், கொடிய சூலமும், வாளும், எறியீட்டியும், மழுப்படையும் முதலிய ஆயுதங்களனைத்தையுந் தாங்கிய வீரர்களும், சாயையினையுடைய இளம்பிறையைக் கடைந்துவைத்தாற்போல ஒளிவீசுகின்ற கோரைப்பற்களையுடையவர்களும், நெருப்புப்பொறி சிந்துங் கண்களையுடையவர்களும், இடிமுழக்கம்போலப் பேசுகின்றவர்களும்.—எ-று.

இதுமுதல் ஆறுபாடலுங் குளகம். (சு)

நெடியர் சிந்தினர் குறியினை ரைம்பெரு நிறனும்
வடிவில் வீற்றுவீற் றெய்தினர் வார்சடைக் கற்றை
முடியர் குஞ்சியர் பலவத னத்தரோர் முகத்தர்
கொடிய ரென்னினு மடைந்தவர்க் கருள்புரி குணத்தோர்.

(இ-ள்.) மிகவுயர்ந்தவர்களும், மிகத்தாழ்ந்தவர்களும், சமவடிவினர்களும், பெரிய பஞ்சவர்ணங்களும் வரிசை வரிசையாகத் தமதுருவத்திற் பொருந்தினவர்களும், நீண்ட கற்றையாகிய சடைமுடியை யுடையவர்களும், தலைமயிரை யுடையவர்களும், பல முகங்களை யுடையவர்களும், ஒரு முகத்தினை யுடையவர்களும் கொடியவர்களாயிருந்தாலுந் தம்மைச் சரணமாக வடைந்தவர்களுக்குக் கிருபை செய்கின்ற குணமுடையவர்களும்.—எ-று.

ஐம்பெருநிறனுவன - வெண்மை, கருமை, செம்மை, பொன்மை, பசுமை என்பன. (எ)

நீறு கண்டிகை புனைதரும் யாக்கையர் நெடுநஞ்
சேறு கண்டனை யன்றிமற் றெவரையு மெண்ணார்
மாறு கொண்டவ ருயிர்ப்பலி நுங்குவோர் மறலி
வீறு கொண்டதொல் படைதனைப் படுத்திடு மேலோர்.

(இ-ள்.) விபூதி ருத்திராக்ஷங்களைத் தரித்த தேகத்தையுடையவர்களும், மிகக்கொடிய விஷம்பொருந்திய கண்டத்தினையுடைய சிவபெருமானை யன்றி வேறெவரையும் (தம்மனத்திற்) சிந்தியாதவர்களும், பகைகொண்டவர்களது உயிரைப் பலியாக வுண்ணுகின்றவர்களும், இயமனது மேன்மைபொருந்திய பழைய சேனைகளை யழிக்கத்தக்க மேலோர்களும்.—எ-று. (௮)

அண்டம் யாவையு மாண்டுறை யுயிர்த்தொகை யனைத்து
முண்டு மிழ்ந்திட வல்லவ ரன்றியு முதராச்
சண்ட வங்கியா லடுபவ ரட்டவை தம்மைப்
பண்டு போற்சிவ னருளினால் வல்லையிற் படைப்போர்.

(இ-ள்.) சகல அண்டங்களையும், அவ்வண்டங்களில் வசிக்கின்ற உயிர்க்கூட்டங்களையும் உண்டு பின்பு உமிழவல்லவர்களும், இவரன்றியும் கொடிய உதராக்கினியினால் (எவற்றையும்) கொல்லவல்லவர்களும், அப்படிக் கொன்றவைகளைச் சிவகடாக்ஷத்தினால் முன்போல் விரைவில் படைக்கவல்லவர்களும்.—எ-று. (௯)

முன்னை வைகலி னிறந்திடு மிந்திரன் முதலோர்
தெவ்வர் மாலைகந் தரத்தினி லுரத்தினிற் சிரத்திற்
கன்ன மீதினிற் கரத்தினின் மருங்கினிற் கழலிற்
பொன்னின் மாமணிக் கலனொடும் விரவினர் புனைவார்.

(இ-ள்.) சென்ற கற்பத்தில் இறந்த இந்திராதியர்களது தலைமாலைகளைக் கழுத்திலும், மார்பிலும், தலையிலும், செவிகளிலும், கைகளிலும், இடையிலும் பாதங்களிலும் பொன்னினாலாகிய இரத்தினாபரணங்களுடன்கலந்து தரிக்கின்றவர்களும்.

இந்த வண்ணமாஞ் சாரதப் படையின ரீண்டித்
தந்தம் வெஞ்சமர்த் தலைவர்க ளோடுசெண் முகன்பால்
வந்து கைதொழு தேத்தியே யிறுதி சேர்வைக
லந்த மில்புன லண்டம துடைந்தென வார்த்தார்.

(இ-ள்.) இவ்வாறாகிய தன்மையினையுடைய பூதப்படைவீரர்கள் நெருங்கித் தங்கள் தங்களது வெவ்விய போர்த்தலைவர்களுடன் ஸ்ரீ சண்முகக் கடவுளிடத்திலடைந்து கைகூப்பி வணங்கித்துதித்துச் சர்வசங்காரகாலத்தில் முடிவில்லாத அப்புவண்டம் உடைந்தாற்போல ஆரவாரித்தார்கள்.—எ-று. (௧௧)

ஆர்த்த சாரத ரெந்தைபா லாயின ரதுகாற்
பேர்த்து மாயவ ரிடித்தெனப் பூதரிற் பெரியோர்
வார்த்த யங்கிய தண்ணுமை திமிலைவான் படகஞ்
சீர்த்த காகள முதலிய வியம்பினர் சிலரே.

(இ-ள்.) இவ்வண்ணம்ஆரவாரித்த பூதர்கள் எமது முருகக்கடவுளருகில்வந்துசேர்ந்தார்கள்; அப்பொழுது பின்னும் அவர்கள் இடியிடித்தாற்போலப் பூதகணங்களிற் சிலர் வாருடன் விளங்குகின்ற மத்தளம், பம்பை, பெரிய பேரிகை, சிறப்புப் பொருந்திய எக்காளம் முதலிய வாத்தியங்களை முழக்கினார்கள்.—எ-று. (௧௨)

ஆன காலையி லறுமுகத் தமுதநத் தொருவன்
வான ளாவிய புணரிகள் சூழ்ந்திட வயங்கும்
பானு நாயகன் வந்தெனப் பாரிடா மிடத்துச்
சேனை சூழ்தரக் கயிலைநீத் தவனிமேற் சென்றான்.

(இ-ள்.) அந்தச்சமையத்தில் ஆறுதிருமுகங்களையுடைய குமாரக்கடவுள் அதனை யுணர்ந்து மேகங்கள் பொருந்திய கடல்கள் சூழ்ந்துவர (நடுவில்) விளங்குகின்ற சூரியன்வந்தாற்போல, பூதச்சேனைகள் பரவிச் சூழ்ந்துவரும்படி திருக்கயிலாயத்தினின்று நீங்கி நிலவுலகத்தில் வந்தருளினார்.—எ-று. (௧௩)

கொள்ளை வெஞ்சினச் சாரத ரிராயிரங் குனித்த
வெள்ளம் வந்திடக் கந்தவே ளவனிமேன் மேவக்
கள்ள வான்படை யவுணர்கள் கலந்துசூழ்ந் தென்னப்
பொள்ளெ னத்துக ளெழுந்தது வளைந்தது புவியை.

(இ-ள்.) மிகுதியாகிய வெவ்வியகோபத்தினை யுடைய இரண்டாயிரம்வெள்ளம் பூதகணங்கள் சூழ்ந்துவரும்படி முருகக்கடவுள் நிலவுலகத்தில் வந்தருளுதலும், வஞ்சகத்தினையுடைய பெரிய அசுரப்படைகள் கலந்து சூழ்ந்துகொண்டாற்போலப் பூமியினின்றும் விரைவாகப்புழுதிகள் கிளம்பி உலகத்தை மூடிக்கொண்டன.—எ-று.

கொள்ளை - மிகுதி. (௧௪)

எழுத ருந்துகள் மாதிர வரைப்பெலா மேகி
யொழியும் வான்பதஞ் சென்றதா லங்கவை யுறுதல்
குழுவின் மல்கிய சாரத ரார்ப்புமுன் குறுகி
மொழிதல் போன்றன விண்ணுளோ ரிமைப்பில்கண் மூட.

(இ-ள்.) பூமியினின்றுங்கிளம்பிய புழுதிகள் திக்குகடோறும்பரவி, இஃதொழிந்த விண்ணுலகத்துஞ் சென்றன; தேவர்கள் தங்களது இமைத்தலில்லாத கண்களைமூடிக்கொள்ளும்படி அப்புழுதிகள் அவ்விண்ணுலகத்திற்செல்லுதல் (எதுபோலுமெனின்) மிகுந்த கூட்டமாகிய பூதர்களது ஆரவாரத்தை முன்னேசென்று கூறுதலையொத்திருந்தன.—எ-று. (௧௫)

கழிய டைத்திடு நேமிகள் பலவொடு ககன
வழிய டைத்திடு பூழியு மொலியுமன் னுயிர்கள்
விழிய டைத்தன நாசியை யடைத்தன விளம்பு
மொழிய டைத்தன வடைத்தன கேள்வியின் மூலம்.

(இ-ள்.) கழிகளையுடைய பலகடல்களையும், ஆகாயவழியையும் மூடிக்கொள்ளுகின்ற புழுதியும், சேனைகளாலுண்டாகு மொலியும், நிலைபெற்ற உயிர்களது விழிகளை மூடின; நாசியையடைத்தன; சொல்லுகின்ற வார்த்தைகளைத் தடுத்தன; செவிகளையடைத்தன.—எ-று.

கேள்வியின்மூலம் - கேட்டற் கேதுவாயுள்ள செவி. (௧௬)

பேரி டங்களாந் தனுவுடைப் பூதர்கள் பெயரப்
பாரி டங்கடா மிடம்பெறு வாதலிற் பல்லோர்
காரிடங் கொளும் வான்வழிச் சென்றனர் கண்டோ
ரோரி டங்களும் வெள்ளிடை யிலதென வுரைப்ப.

(இ-ள்.) மிகப்பெரிதாகிய சரீரத்தினையுடைய பூதர்கள் செல்லுதற்குப் பூமி இடம்போதாமையினால், பார்த்தவர்கள் எவ்விடங்களிலும் வெள்ளிடையின்

றென்று கூறும்வண்ணம் அநேக பூதர்கள் மேகங்கள் தங்கிய ஆகாய வழியே சென்றனர்.—எ-று. (௬௭)

அவனி வானெலாம் பூழியான் மறைத்தது மதனைச்
சிவன்ம கன்றன தொளியினு லகற்றினன் செல்வான்
கவன வாம்பரி யிரதமேற் பனிபடுங் காலைத்
தவன நாயக னதுதடிந் திதருகன் மையைப்போல்.

(இ-ள்.) வேகமாகச் செல்லுகின்ற குதிரைகள் பூட்டிய தேரின்மீதேறிவருகின்ற சூரியன் பனிக்காலத்தில் அந்தப்பனியை நீக்கிச்செல்லுந் தன்மைபோல, பூமியும் ஆகாயமுமாகிய எல்லாவிடங்களும் புழுதியினால் மறையவும், அம்மறைப்பினைச் சிவகுமாரராகிய குமாரக்கடவுள் தமது திருமேனிப் பிரகாசத்தினால் நீக்கிக்கொண்டு சென்றருளினர்.—எ-று.

தவனநாயகன் - சூரியன். (௬௮)

படையெழுபடலமுற்றிற்று.

ஆ. திருவிருத்தம் - ௧,௬௨௮.

---

உ

முருகன்றுணை.

---

# தாரகன்வதைப்படலம்.

வெம்மை தீர்ந்திடு மப்பெரு நெறியிடை விரைந்து
செம்மை சேர்தரு குமரவேள் படையொடு செல்ல
வம்ம சேர்ந்தது தாரகற் குறையுளா யடைந்தோர்
தம்மை வாட்டியே யமர்கிர வுஞ்சமாஞ் சைலம்.

(இ-ள்.) குளிர்ச்சியாகப்பொருந்திய அந்தப் பெரியவழியில், சேனைத்தொகுதிகளுடன் விரைவாகச் செம்மை பொருந்திய குமாரக்கடவுள் சென்றருளவும், தாரகாசுரனுக்கு வாசஸ்தானமாய் அங்கு அடைந்தவர்களை வருத்திக்கொண்டிருக்கின்ற கிரவுஞ்சமென்னும் பெயரினையுடைய மலையானது காணப்பட்டது.—எ-று. (௧)

விண்டு லாய்நிமிர் கிரவுஞ்ச கிரியினை விண்ணோர்
கண்டு ளம்பதை பதைத்தனர் மகபதி கலக்கங்
கொண்டு நின்றன னாரத னணுகியே குமரன்
புண்ட ரிகமேர் பதந்தொழு தின்னன புகல்வான்.

(இ-ள்.) மேகங்கள் தவழப்பெற்று உயர்ந்தோங்கியுள்ள கிரவுஞ்சமலையைத் தேவர்கள்பார்த்து மிகவும் மனம் பதைத்தார்கள்; இந்திரன் கலக்கமுற்று நின்றனன்; (அப்பொழுது,) நாரதமுனிவர் சென்று முருகக்கடவுளது தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி இவ்வார்த்தைகளை யுவாப்பாராயினர்.—எ-று.

விண்லொய் நிமிர் என்பதற்கு, மூங்கில்கள் பொருந்தி யுயர்ந்தோங்கிய எனப் பொருள் கூறலுமொன்று. (௨)

தூய நான்மறை யந்தணர் முனிவரிச் சுரத்திற்
போய வெல்லையி னெறிபதாய் வரவரப் புணர்த்து

மாய்வு செய் தூயின் குறுமுனி சூளினின் வழிவா
யேய தொல்பெயர்க் கிரவுஞ்ச மால்வரை யிதுகாண்.

(இ-ள்.) (எம்பெருமானே!) தூய்மையாகிய நான்கு வேதங்களையு முணர்ந்த வேதியர்களும், முனிவர்முதலியவர்களும் இக்காட்டின்வழியே செல்லும்பொழுது, வழியாகநின்று வரவா வழியை நெருக்கி அவர்களை யழித்து, பின்பு அகஸ்தியமுனிவரது சாபத்தினால் இவ்வுருவமாகப் பொருந்திய பழைய கிரவுஞ்சமென்னும் பெயரையுடைய பெரிய மலை யிதுவேயாகும்.—எ-று. (௩)

மால்வரை என்பதற்கு, மயக்கத்தைச் செய்கின்ற மலை எனப் பொருள் கூறினும் பொருந்தும்.

நேரி லிக்கிரிக் கொருபுடை மாயமா நகரிற்
சூரொ னப்படு மவுணனுக் கிளவலாந் துணைவன்
போரி லச்சுத னேமியை யணியதாப் புனைந்தோன்
றூர கப்பெயர் வெய்யவன் வைகினன் சயத்தால்.

(இ-ள்.) ஒப்பற்ற இந்தக் கிரவுஞ்சமலையினொருபுறத்திலுள்ள பெரிய மாய நகரத்தில் சூரபன்மனென்று கூறும் அசுரனுக்கு இளைய சகோதரனும், போர்க்களத்தில் திருமாலினது சக்கரத்தை ஆபரணமாகத் தரித்தவனுமாகிய தாரகனென்று கூறுங் கொடியவன் இங்கு வெற்றியோடு வசிக்கின்றனன்.—எ-று. (௪)

இன்ன வன்றனை யடுதியே லெளிதுகா ணிவையோன்
முன்ன வன்றனை வென்றிட லெனமுனி மொழிய
மின்னு தண்சுடர் வேலவ னவற்றினை வினவி
யன்ன வன்றனை முடிக்குது மிவணென வறைந்தான்.

(இ-ள்.) ஆதலால், இந்தத் தாரகாசுரனைக் கொன்றருளுவீராயின், இவன் தமையனாகிய சூரபன்மனை வெல்லுதல் மிக விலேசாகும் என்று நாரதமுனிவர் கூறவும், குளிர்ந்த ஒளிவீசுகின்ற வேற்படையினை யேந்திய குமாரக்கடவுள் அவ்வார்த்தைகளைக் கேட்டருளி இவ்விடத்து அந்தத் தாரகாசுரனை யழிக்கின்றோமென்று கூறியருளினார்.—எ-று.

காண் என்பது அசைநிலை. (௫)

வே று.

சிறந்திடு முருகவே ளினைய செப்பலு
நிறைந்திடு மமரரு மிறையு நெஞ்சினி
லுறைந்திடு கவலொரீஇ யுவகை யெய்தினு
ரிறந்தனன் றூரக னின்றே டேயென.

(இ-ள்.) சிறப்புப்பொருந்திய முருகக்கடவுள் இவ்வாறு கூறியருளவும் இன்றோடே தாரகாசுரன் அழிந்தானென்று நெருங்கிவந்துள்ள தேவர்களும் இந்திரனும் தங்கள் மனத்திற் பொருந்திய துன்ப நீங்கிச் சந்தோஷமடைந்தார்கள்.—எ-று.

இந்திராதியர்களது மனத்தில் நெடுநாளாகத் தங்கியிருத்தலின், நெஞ்சினிலுறைந்திடுகவல்' என்று கூறினர். (௬)

ஐயர்கள் பெருமகிழ் வடைய வாதிரு
கையுடை முருகனக் காலை தன்புடை
மெய்பரு வெய்திய வீர வாகுவாந்
துய்யனை நோக்கியே யினைய சொல்லுவான்.

(இ-ள்.) தேவர்கள் பெருமகிழ்வடையும்படி பன்னிரண்டு திருக்கரங்களையுடைய ஸ்ரீ சண்முகப்பெருமான் அந்தச்சமையத்தில் தம்மிடத்து மெய்ம்மையாகிய திருவருளைப்பெற்றுள்ள பரிசுத்தராகிய வீரவாகுதேவனைப் பார்த்தருளி இவ்வார்த்தைகளை யருளிச்செய்கின்றார்.—எ-று. (எ)

உற்றவக் கிரிகிர வுஞ்ச மாகுமான்
மற்றதி னொருபுடை மாய நொச்சியுட்
செற்றிய வவுணர்தஞ் சேனை தன்னுடன்
அற்றமி றாரக னமர்தன் மேயினான்.

(இ-ள்.) எதிரில் பொருந்திய அம்மலையானது கிரவுஞ்சமலையாகும்; அம்மலையினொருபுறத்துள்ள மாயாநகரத்தில் நெருங்கியிருக்கின்ற அசுரப்படைகளுடன் கெடுதலில்லாத தாரகாசுரன் வசிக்கின்றான்.—எ-று.

செற்றுதல் - நெருக்குதல். (அ)

ஏயநின் றுணைவர்க ளிலக்கத் தெண்மர்க
ளாயிர வெள்ளமா மடல்கொள் பூதர்கள்
சாய்வறு தலைவர்க டம்மொ டேகியே
நீயவன் பதியினை வளைத்தி நேரிலாய்.

(இ-ள்.) ஒப்பற்ற வீரவாகுவே! பொருந்திய உன் தம்பியர்களாகிய இலக்கத்தெட்டுவீரர்களையும், வல்லமை பொருந்திய ஆயிரம் வெள்ளம் பூதர்களையும், அழிவில்லாத சேனைத்தலைவர்களையும் அழைத்துக்கொண்டு சென்று நீ அவ்வசுரனது நகரத்தைச் சூழக்கடவாய்.—எ-று. (கூ)

தடுத்தெதிர் மலைந்திடு மவுணர் தானையைப்
படுத்தனை தாரகப் பதகனெய்துமே
லடுத்தம ரியற்றுதி யரிய தேலியா
முடித்திட வருகுது முந்துபோ வென்றான்.

(இ-ள்.) உன்னைத்தடுத்து எதிர்த்துப்போர்செய்கின்ற அசுரப்படைகளைக் கொன்று, பாவியாகிய தாரகாசுரன் வருவானாயின் அவனுடனெதிர்த்துப் போர் செய்யக்கடவை; (நீ அவனைக் கொல்லுதல்) அரிதாயின், யாம் அவனைக்கொல்லுதற்கு வருகின்றோம்; ஆதலால், நீ முன்னே செல்லக்கடவையென்று கூறியருளினார்.—எ-று.

நலமிகு குமரவே ணவில வின்னணம்
வலமிகு சிறப்புடை வாகு நன்றெனாத்
தலைமிசை கூப்பிய கரத்தன் றாழ்ந்துமுன்
னிலமிசை யிறைஞ்சின னேர்ந்து நிற்பவே.

(இ-ள்.) நன்மைமிகுந்த முருகக்கடவுள் இவ்வாறு அருளிச்செய்யவும், சிறப்புப்பொருந்திய வீரவாகுத்தேவர் அவ்வாறே நன்றென்று கூறித் தலையின்மேற் குவித்த கரத்தினையுடையவராய் வணங்கித் திருமுன்னே சாஷ்டாங்கமாக நமஸ்கரித்தெழுந்து நிற்கவும்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (கக)

ஏந்தலந் துணைவரா மிலக்கத் தெண்மரை
யாய்ந்திடு பூதரை யாதி நோக்கியே
வாய்ந்திடு பெருந்திறல் வாகு தன்னுடன்
போந்திடு மவுணரைப் பொரவென் றேவினான்.

(இ-ள்.) முதல்வராகிய முருகக்கடவுள், வீரவாகுத்தேவரது தம்பியர்களாகிய இலக்ஷத்தெட்டு வீரர்களையும் ஆராய்ந்தெடுக்கப்பட்ட பூதர்களையும் பார்த்தருளி, நீங்கள் அசுரர்களை யழிக்கும்பொருட்டு மிக்க வல்லமை பொருந்திய வீரவாகுவினுடன் செல்லுங்களென்று கட்டளையிட்டனுப்பியருளினர்.—எ-று. (௪௨)

எவரு மனையவர் யாரு மெம்பிரான்
பூவடி வணங்கியே போகற் குன்னலும்
மாவியு ளாவியா மமலன் பாங்குறுந்
தேவர்கள் கம்மியற் கிதனைச் செப்புவான்.

(இ-ள்.) அவ்வாறு கட்டளையிட்டனுப்புதலும் அவர்களனைவரும் எமது பெருமானாகிய முருகக்கடவுளது தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கிச் செல்லுதற்கு நினைத்தவுடனே, உயிர்க்குயிராகிய அவ் வெமது முருகப்பெருமான் தமக்கருகிலிருக்கின்ற தேவதச்சனைப்பார்த்து இதனை அருளிச்செய்கின்றார்.—எ-று.(௪௩)

மேதகு பெருந்திறல் வீரவாகுவை
யாதியர் தமக்கெலா மளிக்கும் பான்மையா
லேதமி லாதபல் லிரத நல்கெனு
வோதின னுலகெலா முதவுந் தொன்மையோன்.

(இ-ள்.) மிகச்சிறந்த பராக்கிரமத்தினையுடைய வீரவாகுமுதலியவர்களனைவருக்குங் கொடுக்குந்தன்மையாகக் குற்றமற்ற பலஇரதங்களை யுண்டாக்கக்கடவையென்று, சர்வலோகங்களையும் சிருஷ்டிக்கத்தக்க புராதனராகிய முருகக்கடவுள் அருளிச்செய்தனர்.—எ-று.

வீரவாகுவை என்பதில் ஐகாரம் சாரியை. (௪௪)

அத்திறங் கேட்டதோ ரமரர் கம்மிய
னொத்தமீதார் மாத்திரை யொடுங்கு முன்னரோ
சித்திர வயப்பரி சியங் கூளிக
ளித்திறம் பூண்டபல் லிரத நல்கினன்.

(இ-ள்.) (முருகக்கடவுள் இவ்வாறுகூறியருளவும்,) அவ்வார்த்தையைக்கேட்ட தேவதச்சனவன் ஒருமாத்திரைப்பொழுதுக்குள்ளே அழகும் வெற்றியும்பொருந்திய குதிரைகளையும் சிங்கங்களையும், பேய்களையும், பூட்டப்பட்ட பலஇரதங்களை யுண்டாக்கினன்.—எ-று. (௪௫)

வேறு.

அன்ன தேர்த்தொகை யதனை யெம்பிரான்
மின்னு காலவேல் வீர வாகுவும்
பின்ன ரெண்மரும் பிறருஞ் சாரத
மன்ன ரும்பெற வழங்கி னனரோ.

(இ-ள்.) அவ்வாறாகிய தேர்க்கூட்டங்களை எமது முருகக்கடவுள் ஒளிவிளங்குகின்ற இயமன்போலுங் (கொடுமைவாய்ந்த) வேற்படையினை யேந்திய வீரவாகுத்தேவரும், அவர்தம்பியராகிய எட்டுவீரர்களும் இலக்ஷம் வீரர்களும் பூதசேனாதிபர்களும் பெற்றுக்கொள்ளும்படி கொடுத்தருளினர்.—எ-று. (௪௬)

பாகர் தூண்டிடப் படருந் தேர்கண்மேல்
வாகை சேர்தரும் வாகு வேமுத
லாகி னோரடைந் தம்பொன் மால்வரைத்
தோகை மைந்தனைத் தொழுது போற்றினர்.

(இ-ள்.) பாகர்கள் தூண்டச் செல்லுகின்ற இரதங்களின்மேல் வீரவாகுத்தேவர் முதலாயுள்ளவர்கள் ஏறிவந்து, அழகிய பெரிய பர்வதராஜ புத்திரியாகிய உமாதேவியாரது திருப்புதல்வராகிய முருகக்கடவுளைவணங்கித் துதித்தார்கள்.-எ-று.

தோகை - உவமையாகுபெயர். (௧௭)

தொழுது வள்ளலைச் சூழ்ந்து மும்முறை
விழுமி தாகிய விடைபெற் றேகினார்
பழுதி லிந்திரர் பத்து நூறெனக்
குழுமிப் பாரிடங் குலவிச் செல்லவே.

(இ-ள்.) முருகக்கடவுளை வணங்கி மூன்றுதரம் பிரதக்ஷணஞ் செய்து சிறப்புமிக்க விடைபெற்றுக்கொண்டு குற்றமற்ற ஆயிரம்வெள்ளமென்று கூறும் பூதங்களாகச் சேர்ந்து மிகுந்த சந்தோஷத்துடன் தம்மைத்தொடர்ந்து செல்லும்படி சென்றார்கள்.—எ-று. (௧௮)

பாய பூதர்நம் படைக்கு வேந்தரா
யேயி னோர்க்குமி லக்கத் தெண்மராய்
மேயி னோர்க்கெலாம் வீர வாகுவோர்
நாய கப்பெறீஇ நடுவட் போயினான்.

(இ-ள்.) பரவிவருகின்ற பூதர்களுக்குத் தலைவர்களாய்ப் பொருந்தியவர்களுக்கும்மேன்மையமைந்த இலக்ஷத்தெட்டு வீரர்களுக்கும் வீரவாகுத்தேவர் ஒப்பற்ற முதன்மைத்தன்மையை யடைந்து (அவர்களுக்கு) நடுவில் சென்றனர்.—எ-று. (௧௯)

அமர்வி ளைக்கமுந் தவனை யேவியே
தமர வேலையிற் றானை சூழ்தர
இமைய வர்க்கிறை யேனை யோர்தொழக்
குமர வேள்கடைக் கூழை யேகினான்.

(இ-ள்.) போர்செய்யும்பொருட்டு அவ்வீரவாகுத்தேவனை முன்னேயனுப்பிவிட்டு, ஒலிபொருந்திய சமுத்திரம்போலச் சேனைகள் தம்மைச் சூழ்ந்துவரவும், இந்திரனும் மற்றையர்களும் வணங்கிவரவும், முருகக்கடவுள் கடைப்படையின் பின்னே சென்றருளினர்.—எ-று.

கடைக்கூழை - பின்னணியாகச்செல்லும் படைவகுப்பு. (௨௦)

வேறு.

பிற்பட வெம்பிரான் பெயர வேவலான்
முற்படு வீரனை முயங்கிப் பாரிடச்
சொற்படை படர்வன தூமந் தன்னொடு
சிற்பர னகையழல் புரத்துச் சென்றபோல்.

(இ-ள்.) புகையினுடன் சிவபெருமானது புன்னகையின் அக்கினியானது திரிபுரத்தின்மீதுசென்ற தன்மையைப்போல எமது முருகக்கடவுள் பின்னேசெல்லவும், அவரது கட்டளையினால் முன்னே செல்லுகின்ற வீரவாகுத்தேவருடன் கலந்து புகழமைந்த பூதப்படைகள் சென்றன.—எ-று.

பூதப்படைகள் முன்னணியிற் செல்லக் குமாரக்கடவுள் பின்னணியிற்செல்லுதல், சிவபெருமான் திரிபுரமெரித்தருளிய காலத்தில் அவரது நகைத்தழல் பின்னும் அத்தழற்புகை முன்னுஞ் சென்றாற்போன் றிருந்த தென்க. (௨௧)

அரிநிரை பூண்டதேர் அலகை பூண்டதேர்
பரிநிரை பூண்டதேர் படைக்கு ளோருழை
விரிகடல் வரைப்பினின் மேக ராசியுங்
கிரியுறழ் கலங்களுங் கெழுமிச் செல்வபோல்.

(இ-ள்.) நீர் பரந்த கடலினிடத்தில் மேகக் கூட்டங்களும், மலைபோன்ற பெரிய மரக்கலங்களுங் கூடிச் செல்லுதல்போல, சிங்கவரிசைகள் பூட்டிய இரதங்களும், பேய்கள் பூட்டிய இரதங்களும், குதிரை வரிசைகள்பூட்டிய இரதங்களுஞ் சேனைகளுக்குள்ளே கலந்து செல்கின்றன.—எ-று. (உஉ)

இடையக லிரதமோ டிரதந் தாக்கிய
படையொடு படைவகை செறிந்த பல்வகைக்
கொடியொடு கொடிநிரை நுழைந்த கூளிய
ரடுசமர் பயின்றிடு மமைதி போலவே.

(இ-ள்.) பூதங்கள் நெருங்கிப் போர்செய்யுந் தன்மைபோல, விசாலமாகிய இரதங்களுடன் இரதங்கள்தாக்கின. ஆயுதவகைகளுடன் ஆயுதவகைகள்நெருங்கின. பலவகையான கொடிகளுடன் கொடிகள் நெருங்கின.—எ-று. (உ௩)

சங்கொடு பணைதுடி தடாரி காகளம்
பங்கமி றண்ணுமை யாதிப் பல்லிய
மெங்கணு மியம்பின வெழுந்து பூழிபோய்ச்
செங்கம லத்தவன் பதத்தைச் செம்மிற்றே.

(இ-ள்.) சங்கு, முரசு, உடுக்கு, பேரிகை, எக்காளம், குற்றமற்ற மத்தளமுதலாகிய வாத்தியங்கள் எவ்விடத்திலு முழங்கின. புழுதிகள் கிளம்பிச் சென்று செந்தாமரை மலரில் வசிக்கின்ற பிரமனது சத்தியலோகத்தை மூடியது.—எ-று செம்முதல் - மூடுதல். (உச)

சாற்றுமிவ் வியல்புறத் தானை வீரருஞ்
சீற்றவெம் பூதருஞ் செல்ல வாகையான்
கோற்றொழி லகற்றிய கோட்டு மாமுகன்
போற்றிய மாயமா புரியைச் சேர்ந்தனன்.

(இ-ள்.) சொல்லப்பட்ட இவ்வாறாகியதன்மை பொருந்தும்படி சேனாவீரர்களும்கோபத்தினையுடைய வெவ்விய பூதர்களும் தம்மைச் சூழ்ந்துவர, வீரவாகுத்தேவர் கொடுங்கோன்மையினையுடைய யானைமுகத்தைக்கொண்ட தாரகாசுரன் அரசு செய்கின்ற பெரிய மாயாநகரத்தை யடைந்தனர்.—எ-று.

கோற்றொழிலகற்றல் - செங்கோன்மையை யொழித்தல். [கொடுங்கோல் செலுத்துதல் என்றபடி.] (உ௫)

வேறு.

சேர்ந்திடு மெல்லை பூதர் சேனைபோய் நகரம் புக்கு
நேர்ந்திடு மவுண ரோடு நின்றமர் விளைத்து நின்று
ரோர்ந்தன ரதனைத் தூத ரோடித்தங் கோயில் புக்குச்
சார்ந்திடு திருவில் வைகுந் தாரகற் றொழுது சொல்வார்.

(இ-ள்.) அவ்வாறு சேர்ந்தபொழுது, பூதச்சேனைகள் நகரத்தினுள்ளே பிரவேசித்து எதிர்த்த அசுரர்களுடன் நின்று போர்செய்தார்கள். இதனைத் தூதுவர்கள

ந்து அரண்மனையிலோடிச்சென்று நிலைபெற்ற பெருஞ்செல்வத்துடன் வசிக்கின்ற தாரகாசுரனை வணங்கிச் சொல்லுகின்றார்கள்.—எ-று. (௨௬)

எந்தைநற் றிருகே ளாய்மு னிமையவர் தொகையை யிட்ட
வெந்துயர்ச் சிறையை நீக்க விரிசடைக் கடவுள் மைந்தன்
கந்தனென் றொருவன் வந்தா னவுணரைக் கடக்கு மென்று
வந்தர நெறிசெல் விண்ணோ ரறைந்திடக் கேட்டு மன்றே.

(இ-ள்.) எம்பெருமானே! இதனைக் கேட்பீராக, உமது தமையன் மிகுந்த துன்பமடையும்படி தேவர்களை யடைத்து வைத்திருக்கின்ற சிறையை நீக்கும்பொருட்டு விரிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது புதல்வனும் கந்தனென்னும் பெயரினையுடையவனுமாகிய ஒருவன் வந்தனன்; அவன் அசுரர்களைச் செயிப்பானென்று ஆகாயவழியாகச் செல்லுகின்ற தேவர்கள் சொல்லக்கேட்டோம்.—எ-று. (௨௭)

என்னிவர் மாற்ற மென்று யாந்தெரி குற்றே மாக
வன்னவ ரியம்பி யாங்கே யாயிரத் திரட்டி யென்னப்
பன்னுறு பூத வெள்ளம் படர்ந்திடக் குமரன் போந்தான்
முன்னுறு தூசி நந்த முதுநக ரலைத்த தென்றார்.

(இ-ள்.) இத்தேவர்கள் இவ்வாறு கூறுகின்றதென்னவென்று நாங்கள் ஆலோசித் திருந்தோம்; அவர்கள் சொன்னவண்ணமே, இரண்டாயிரம் வெள்ளம் பூதங்கள் தன்னைச் சூழ்ந்து வரும்படி கந்தன் வந்தனன்; அவனுக்கு முன்னே வந்த தூசிப்படையானது நமது பழைமைபொருந்திய மாயாநகரத்தை யழித்தது என்று கூறினார்கள்.—எ-று.

தூசி - கொடிப்படை. (௨௮)

என்றலும் வடவைத் தீயி னெய்ம்முது மளக்கர் வீழ்ந்
துன்றிய வெழுச்சி மானத் தன்னெனச் செற்றந் தூண்ட
மின்றிக ழரிமா னேற்று வியன்றவி சிருக்கை நீங்கிக்
குன்றுறழ் மகுட மண்ட கோளகை தொடவெ ழுந்தான்.

(இ-ள்.) என்று இவ்வாறு கூறவும் (அத்தாரகாசுரன்) வடவாமுகாக்கினியில் நெய்க்கடல் போய் வீழ, அதனாலுண்டாகிய தீயின் சுவாலையொப்பாகத் திடமொன்று கோபமதிகரிக்க, மின்போல் விளங்குகின்ற ஆண்சிங்கங்களால் தாங்கப்பட்ட ஆசனத்தினின்று நீங்கி, மலைபோன்ற பெரியகிரீடமானது அண்டகோளத்தை முட்டும்படி யெழுந்தனன்.—எ-று. (௨௯)

எழுந்துதன் மருங்கு நின்ற வொற்றரை நோக்கி யிந்தச்
செழுந்திரு நகர்மேல் வந்த சேனையை முளிபுற் கானிற்
கொழுந்தழல் புகுந்த தென்னக் கொல்வனந் தானை முற்று
முழுந்துருள் கின்ற முன்ன ரொல்லைதந் திடுதி ரென்றான்.

(இ-ள்.) அவ்வாறெழுந்து தனக்கருகில்நின்ற தூதர்களைப் பார்த்து, இந்தச் செழுமைபொருந்திய அழகிய மாயாநகரத்தின்மேல் போர்செய்யவந்தசேனைகளை உலர்ந்த புற்களையுடைய காட்டில் மிக்க அக்கினியானது பிரவேசித்த தன்மையைப் போலக் கொல்லுவேன்; நமது சேனைகளனைத்தையும் உழுந்து உருளுங்காலத்திற்கு முன்னே விரைவாக அழைக்கக்கடவீர்களென்று கூறினான்.—எ-று.

முளிபுல் - உலர்ந்தபுல். (௩௦)

வேறு.

அன்னபணி முறைபுரிவா னொற்றவர்கள் போயிடலு மவுண னின்ற
கொன்னுறுமிவற் பரிசனரைக் கொடுவருதி ரதமெனக் கூற லோடு
முன்னமொரு நொடியளவையிற் றந்திடலு மதனிடையிய மொய்ம்பிற் புக்குப்
பின்னர்வரு மமைச்சர்கடந் தொகைபரவ மதர்ப்பினொடு பெயர்த லுற்றான்.

(இ-ள்.) தூதுவர்கள் அவ்வேலையை முறைப்படிசெய்யும்படி செல்லுதலும், தாரகாசுரன், தனக்கெதிரில் நின்ற அச்சத்தைத்தருகின்ற வேலினையேந்திய பரிசனர்களைப்பார்த்து இரதத்தைக் கொண்டுவாருங்களென்று கூறவும், (அவ்வீரர்கள்) அவ்வாறே ஒரு நொடிப்பொழுதுக்குள்ளே (இரதத்தைக்) கொண்டுவந்து நிறுத்தவும் அவ்விரதத்தின்மேல் பராக்கிரமத்துடனேறி தனக்குப்பின்னே வருகின்ற மந்திரிக்கூட்டங்கள் துதிக்க வீரத்துடன் செல்லத்தொடங்கினான்.—எ-று. (௯௧)

யிடுவான் போலுமினித் தாரகனென் றவன்சீர்த்தி விரைவில் வந்து
கூடியே புரள்வதுவு மாற்றுவதுங் காப்பதுமாங் கொள்கைத் தென்ன
நீடுசா மரத்தொகுதி பலவிரட்ட வெள்ளொலிய னிமிர்ந்து வீசப்
பீடுசேர் தவளமதிக் குடைநிழற்ற வலம்புரிகள் பெரிது மார்ப்ப.

(இ-ள்.) இனி, தாரகாசுரன் இறந்துவிடுவானென்று அவன் கீர்த்தியானது விரைவாக வந்து சேர்ந்து புரள்வதும் அழுவதும் தடுப்பதுமாகிய தன்மையைப்போல நீண்ட பல சாமரைக்கூட்டங்களை வீசவும், வெள்ளைவஸ்திரங்களை விரித்து வீசவும், பெருமைபொருந்திய வெள்ளிய சந்திரவட்டக்குடை நிழலைச்செய்யவும், வலம்புரிச்சங்குகள் மிகுதியாகச் சப்திக்கவும்.—எ-று.

ஒலியல் - சீலை.

இதுமுதல் ஆறுபாடலுங் குளகம். (௯௨)

ஈமத்தே நடம்புரியுங் கண்ணுதலோ னெடாதசிலை யென்ன மாலோன்
மாமத்தே யெனக்கிடந்த முழுவயிரத் தண்டமொன்று வயிரக் கண்டைத்
தாமத்தோர் பெறுகின்ற மடங்கல்பல வீர்த்துவருஞ் சகடத் தின்காற்
சேமத்தேர் மிசைப்போத வேனையபல் படைக்கலமுஞ் செறிந்து நண்ண.

(இ-ள்.) மசானத்தின்கண் திருநடனஞ்செய்யுஞ் சிவபெருமான் எடுக்காத மலையைப்போலவும், திருமாலினது பெரிய மத்தைப்போலவும் இருந்த ஒரு வச்சிரத் தண்டத்தை வயிரமணிமாலைகளினது அழகுபொருந்திய அநேக சிங்கங்களிழுத்து வருகின்ற வலிய சக்கரங்களையுடைய சேமத்தேரின்மேல் வரவும், மற்றைய பல ஆயுதங்களும் நெருங்கிவரவும்.—எ-று.

கண்ணுதலோன் எடுத்த சிலையாகிய மேருமலையைப்போல இத்தண்டமும் மிகப் பருத்துள்ளதாகலின், இதனைக் 'கண்ணுதலோ னெடாத சிலையென்ன' என்று கூறினர். எடாத சிலை - எடுக்காதவில் லெனினுமாம். மாலோன் மாமத்து- திருமால் பாற்கடல்கடைந்தபோது மத்தாகநாட்டிய மந்தரமலை. சேமத்தேர் - தனக்குக் காவலாகப் பொருந்தியுள்ள தேர். (௯௩)

ஒற்றர்கூ வியவேலை யேற்றெழுந்த வவுணர்கட லொருங்கு செல்லக்
கொற்றமால் கரிபரிதே ரினத்தினொடு வந்நீண்டக் குழவித் திங்கட்
கற்றைவார் சடைக்கடவுள் வாங்கியபொன் மால்வரையைக் காவலாகச்
சுற்றுமால் வரையென்னப் படைத்தலைவர் பஃறேரிற் றுவன்றிச் சூழ.

(இ-ள்.) தூதுவர்கள் அழைத்த பொழுது எதிர்த்துவந்த அசுரர்களாகிய சேனைக்கடல் நெருங்கிவரவும், வெற்றிபொருந்திய மதமயக்கத்தினையுடைய யானை

களுங் குதிரைகளுந் தேர்க்கூட்டத்துடன் வந்து பொருந்தவும், இளம்பிறை யணிந்த கற்றையாகிய நீண்டசடைமுடியை யுடைய சிவபெருமான் (வில்லாக)வளைத்தருளிய பெரிய மேருமலையைக் காவலாகச் சூழ்ந்திருக்கின்ற பெரிய மலைகளைப்போலச் சேனைத்தலைவர்கள் பலதேர்களில் நெருங்கிச்சூழவும்.—எ-று.

பொன்மால்வரையைக் காவலாகச் சுற்று மால்வரை - அஷ்டகுல பர்வதங்களும் பிறவுமாம். (௬௪)

மொய்ம்பமர்செய் கோலமொடு முப்புரமே லடைந்தருளு முக்கண் மூர்த்தி, பையரவின் றலைத்துஞ்சுங் கணைதூண்ட மூண்டழல் பதக ரானோர், மெய்ப்புடை முழுது நுங்கித் தலைக்கொள்ளப் பெருந்தூம மிசைக்கொண் டென்னச், செய்யமுடி யவுணர்பெருங் கடலினிடை யெழும்பூழி சேட்சென் றோங்க.

(இ-ள்.) நெருங்கிய போர்க்கோலங்கொண்டு திரிபுரத்தின்மீது சென்றருளிய முக்கண்ணராகிய சிவபெருமான் படம்பொருந்திய சேஷசயனத்தில் நித்திரை செய்கின்ற திருமாலாகிய பாணத்தைப் பிரயோகித்தலும், அதுகாரணத்தினாலுண்டாகிய அக்கினியானது பாவிகளாகிய திரிபுராதியர்களது தேகமனைத்தையும் விழுங்கி யதிகரிக்க அதன்பெரும்புகையானது மிகுதியாக மேலே கிளம்பிய தன்மைபோலச் செவ்விய கிரீடத்தையணிந்த அசுரர்களாகிய பெரிய கடலினிடத்துத் தோன்றிய புழுதிகள் ஆகாயமளவுஞ் சென்றோங்கவும்.—எ-று.

சிவபெருமான் திரிபுரமழிக்கச்சென் றருளிய பொழுது திருமால் பாணமாகவமைதலின், 'பையரவின் றலைத்துஞ்சுங் கணை' என்றார். (௬௫)

கார்க்குன்ற மன்னதிறற் கரிமீதும் பரிமீதுங் கடிதிற் றாவுந்
தேர்க்குன்ற மதன்மீதும் வயவர்கடங் கரங்களினுஞ் செறிப தாகை
யார்க்கின்ற துயர்ந்தோங்கி யசைகின்ற தெம்மருங்கு மம்பொ னாட்டிற்
றூர்க்கின்ற பூழியினைத் துடைக்கின்ற பரிசேபோற் றுவன்றித் தோன்ற.

(இ-ள்.) கரிய மலைபோலும் வல்லமையையுடைய யானைகளின்மேலும், குதிரைகளின்மேலும், விரைவாக வோட்டுகின்ற மலைபோன்ற இரதங்களின்மேலும், வீரர்களது கைகளிலும் நெருங்கியிருக்கின்ற கொடிகள் (காற்றினால்) உயர்ந்து ஓங்கி ஒலியுடன் அசைந்துகொண்டிருத்தல் (எதுபோலுமெனின்,) அழகிய பொன்மயமாகிய சொர்க்கலோகத்தில் எவ்விடங்களிலும் அடைக்கின்ற புழுதியைத் துடைக்குந் தன்மையைப்போலப் பொருந்தி விளங்கவும்.—எ-று. (௬௬)

வாகையுள பல்லியமு மியம்பத்தன் னகர்நீங்கி மன்னர் மன்ன
னேகியதோர் படிநோக்கி யுவரிமிசைக் கங்கைகள்வந் தெய்து மாபோற்
சாகையுள பன்மரமும் பல்படையுங் குன்றுகளுந் தடக்கை யேந்திச்
சேகுடைய பெருஞ்சிற்றப் பூதர்படை யார்த்தெதிர்ந்து சென்ற தன்றே.

(இ-ள்.) வெற்றி பொருந்திய பல வாத்தியங்களு மொலிக்கும்படி தனது நகரத்தைவிட்டு நீங்கி அரசர்க்கரசனாகிய தாரகாசுரன் சென்றதன்மையைப் பார்த்து, சமுத்திரத்தினிடத்துப் பல நதிகள் வந்து பொருந்துந்தன்மைபோல கிளைகள் பொருந்திய பல விருக்ஷங்களையும், பல ஆயுதங்களையும், பல மலைகளையும் பெரிய கைகளில் தாங்கிக்கொண்டு, வீரத்தையும் பெருங்கோபத்தினையுமுடைய பூதகணப்படைகள் ஆரவாரித்துக்கொண்டு எதிரில் சென்றன.—எ-று. (௬௭)

எல்லோருந் தொழுதகைய குமரனடி யிணைவழுத்தி யிகல்வெம் பூதர்
கல்லோடு மரனோடுங் கதையோடுங் கணிச்சியொடுங் கழுமுள் விசு

வில்லொடுங் கணையொடும் வேலொடு நேமியொடு மிக்க வெல்லா
மல்லொடும் புரையுமனத் தவுணர்படை யெதிர்பெரு சியமர்செய் திட்டார்.

(இ-ள்.) யாவர்களும் வணங்கத்தக்க முருகக்கடவுளது இரண்டு திருவடிகளை வணங்கிப் பகைக்கின்ற கொடிய பூதவீரர்கள், சக்கரங்களையும், மரங்களையும், தண்டங்களையும், கோடாரிகளையும், கழுமுட்களையும் வீசுதலும், இருள்போன்று விளங்கும் வஞ்சகமனத்தினையுடைய அசுரப்படைகள், விற்களையும் அம்புகளையும் வேற்படைகளையும் சக்கரங்களையும் சிறந்த மற்றெல்லா ஆயுதங்களையும் பிரயோகித்துப் போர்செய்தார்கள்.—எ-று. (௩அ)

வேறு.

என்னுறு படைக ளிவ்வா றெதிர்தழீஇ யடரும் வேலை
விண்ணுறு பூழி யென்னும் விரிதரு புகைமீச் செல்ல
மண்ணுறு குருதி யான வன்னியை மாற்று வார்போற்
கண்ணுறு மிமையோர் கண்கள் கடிப்புனல் கான்ற வன்றே.

(இ-ள்.) மதிக்கத்தக்க சேனைவீரர்கள் இவ்வாறு ஒருவரோடொருவ ரெதிர்த்துப் போர்செய்யும்பொழுது, ஆகாயமளவாகக் கிளம்பிய புழுதியென்னும் மிகுந்த புகையானது மேலுயர்ந்தோங்க, உலகத்திற்பொருந்திய உதிரமென்னும் அக்கினியைத்தணிப்பவர்களைப்போல (அப்போரைப்) பார்த்துநின்ற தேவர்களது கண்களில் மிகுந்த நீரானது பெருக்கெடுத்தன.—எ-று. (௩௯)

இரிந்திட லின்றி நேர்வந் தேற்றமர் புரித லாலே
சொரிந்திடு குருதி பொங்கத் தோளொடு சென்னி துள்ளச்
சரிந்திடுங் குடர்கள் சிந்தத் தானவர் பல்லோர் மாயப்
பொருந்திறல் வயத்தான் மேலாம் பூதருஞ் சிலவர் பட்டார்.

(இ-ள்.) தோற்றோடுத லில்லாமல் நேரில்வந்து எதிர்த்துப் போர்செய்த தன்மையினால் ஒழுகுகின்ற உதிரமானது பெருக்கெடுக்கவும், தோள்களுந் தலைகளுந் துடிக்கவும், சரிந்த குடல்கள் சிந்தவுமாகப் பலஅசுரர்களிறக்க, போர்செய்யும் வலிய வெற்றியிற் சிறந்தவர்களாகிய சில பூதர்களும் இறந்தார்கள்.—எ-று. (௪௦)

தேருடைத் தெறிந்து பாய்மாத் திறத்தினைச் சிதைத்து நீக்கி
யாருடைத் திகிரிச் செல்வி யங்கையா லெடுத்துச் சுற்றிப்
போருடைத் திறலோர் தம்பாற் பொம்மென நடாத்தும் பொற்பாற்
காருடைப் பூதர் சில்லோர் கண்ணனே போன்று ரன்றே.

(இ-ள்.) இரதங்களை உடைத்து எறிந்து, குதிரைகளின் வலிமையைக் கெடுத்தொழித்து, அச்சாணியையுடைய தேர்ச்சக்கரங்களை அழகிய கைகளால் எடுத்துச் சுழற்றிப் போர்த்தொழிலில் வல்லவர்களாகிய அசுரர்களிடத்து விரைவாகச் செலுத்துஞ் சிறப்பினால், கருநிறத்தினையுடைய சில பூதர்கள் திருமாலை யொத்திருந்தார்கள்.—எ-று.

தேராகவும் குதிரையாகவும் வடிவங்கொண்டுவந்த அசுரர்களையழித்தும், தேர்ச்சக்கரத்தைக்கொண்டு போர் செய்தும் வெற்றிகொண்டவர் கண்ணபிரானாதலால், 'காருடைப் பூதர் சில்லோர்கண்ணனேபோன்றார்.' என்றுகூறினார். (௪௧)

தேர்பரித் தெழுந்து மண்ணிற் செல்லுறுப் பவளச் செங்காற்
கார்பரித் தன்ன தோகைக் கவனவாம் புரவி யீட்டம்
போர்பரித் தொழுகு சீற்றப் பூதர்கள் புடைத்துச் சிந்திப்
பார்பரித் திடவே செய்தார் படிமக ளிடும்பை தீர்ப்பார்.

(இ-ள்.) இரதங்களைச் சுமந்துகொண்டெழுந்து ஆகாயத்திற்செல்லுகின்ற பவனம்போலுஞ் சிவந்த கால்களையும் மேகத்தைச் சுமந்தது போலுங் கரிய சிறகுகளையும் வேகத்தினையுமுடைய குதிரைக்கூட்டங்களைப் போராக்கொண்டு செல்லுகின்ற கோபத்தினையுடைய பூதவீரர்கள் பூமிதேவியினது (சுமையாகிய) துன்பத்தை யொழிக்கின்றவர்களாய் அடித்துச் சிதறிப் பூமியில் விழும்படி செய்தார்கள்.—எ-று.

வாலுடைக் களிற்றி னீட்டம் வாரிய கரத்தா லெற்றிக்
காலுடைத் திகிரித் திண்டேர் கழல்களா லுருட்டிக் காமர்
பாலுடைப் புரவித் தானை பதங்களா லுழக்கிச் சென்றார்
வேலுடைத் தடக்கை யண்ணல் விடுத்தருள் வீர வீரர்.

(இ-ள்.) வேற்படையையேந்திய பெரிய திருக்கரங்களையுடைய முருகக்கடவுள் விடுத்தருளிய வீராதிவீரர்களாகிய பூதர்கள் வாலையுடைய யானைக்கூட்டங்களைத் தங்கள் கைகளால் வாரி மோதியும், வர்க்காலமைந்த சக்கரங்களையுடைய வலிய இரதங்களைத் தங்கள் கால்களால் உருட்டியும், அழகினைத் தம்மிடத்திலுடைய குதிரைச்சேனையைக் கால்களால் கலக்கியும் சென்றார்கள்.—எ-று. (௪௩)

வாருறு புரசை பூண்ட வன்களிற் றொருத்தல் யாவுஞ்
சோருறு நிலைய வாகித் துஞ்சிய தொகுதி சூழப்
பேருறு குருதி நீத்தம் பிறங்குமுற் கதிரோ னாக
காருற வூர்கோ ளீண்டுங் காட்சியை யொத்த தன்றே.

(இ-ள்.) நீண்ட கழுத்தணிகயிற்றினையுடைய வலிய ஆண்யானைகளனைத்தும், துன்பமிக்க தன்மையினவாய் இறந்துகிடக்கின்ற தொகுதியைச்சூழ்ந்து அதிகரித்துள்ள உதிரப்பிரவாகமானது (எதுபோலுமெனின்,) விளங்குகின்ற உஷ்ணமாகிய கிரணத்தினையுடைய சூரியன் தோன்றாமல் மேகங்கள் மூடிக்கொள்ள அதனைச் சூழ்ந்து பரிவேடமானது தோன்றுகின்ற காட்சியை யொத்திருந்தது.—எ-று.

பேர் - முதனிலைத்தொழிற்பெயர். (௪௪)

கண்ணெதிர் நின்று போர்செய் கார்கெழு மவுணர்ப் பற்றித்
துண்ணெனப் பூதர் வீசத் துளங்கிய கலன்க ளோடும்
விண்ணிடை யிறந்து நொய்தின் வீழ்வது விசும்பிற் றப்பி
மண்ணிடை மின்னு வோடும் வருமுகில் போன்ற தன்றே.

(இ-ள்.) கண்ணுக்கெதிரில்நின்று போர்செய்கின்ற கருநிறமமைந்த அசுரர்களைப்பிடித்துப் பூதவீரர்கள் விரைவாகவெடுத்து வீசவும், அவர்கள் அசைகின்ற ஆபரணங்களோடும் ஆகாயத்தினின்று நீங்கி விரைவாகக் கீழே விழுகின்ற தன்மை (எதுபோலுமெனின்) ஆகாயத்தினின்றுந் தவறி நிலவுலகத்தில் மின்னலுடனே வருகின்ற மேகத்தினை யொத்திருந்தது.—எ-று. (௪௫)

ஆயிர வெள்ள மாகுங் கணவரு மாங்க ணுள்ள
பாயிருங் குன்ற மெல்லாம் பன்முறை பறித்து வீசி
மாயிருந் தகுவர் தானை வரம்பில படுத்து நின்றார்
ஓவென வுலகைச் சிந்து மிறுதிநா ளெழிலி போல்வார்.

(இ-ள்.) கணப்பொழுதிற்குள்ளே யுலகத்தையழிக்கத்தக்க ஊழிக்காலத்தில் தோன்றும் மேகங்களை யொத்தவர்களாகிய ஆயிரம்வெள்ளம் பூதவீரர்களும் அங்குள்ள விசாலமாகிய பெருமலைகளனைத்தையும் பலமுறைபிடுங்கியெறிந்து மிகப் பெரிய அவுணச்சேனைகள் பலவற்றையழித்துநின்றார்கள்.—எ-று.

ஊழிக்காலத்து மேகம் உலகமழியும்பொருட்டு விடாமழை பொழிந்து போலப் பூதவீரர்கள் பெருமலைகளைப் பிடுங்கி வீசி யசுரப்படைகளை யழித்தலின், 'எயென வுலகைச் சிந்து மிறுதிநா ளெழிலி போல்வார்' என்று கூறினார். (௪௬)

நிணங்கவர் ஞமலி யோர்சார் ஞெரேலெனக் குரைப்பப் புள்ளின்
கணங்களு மலகை தானுங் கறங்கிடக் ககனத் தோங்கிப்
பிணங்களி னடுக்க லீண்டிப் பேரமர் விலக்கி யார்க்கு
மணங்குறு நிலைய வாகி மடுத்தன நடுவ ணம்மா.

(இ-ள்.) மாமிசங்களைக் கவ்வுகின்ற நாய்கள் ஒரு பக்கத்தில் விரைந்து குரைக்கவும், பறவைக்கூட்டங்களும் பேய்களும் சப்திக்கவும், மத்தியில்பிணமலைகள் ஆகாயத்தளவாக வுயர்ந்து நெருங்கிப் பெரிய போரைத் தடுத்து யாவர்களுக்குந் துன்பந்தருந்தன்மையினவாகப் பொருந்தின.—என்-று. (௪௭)

தரைத்தடஞ் சிலைய தாகத் தறுகண்வெம் பூத ராயோர்
வரைத்துணை யன்ன தாளே வலிகெழு குழவி யாகத்
திரைதவழ் குருதி நீராத் தீர்ந்திடு நிறமிலோர் யாக்கை
யரைத்தென நடப்ப வேற்றா ரவுணரு மடுபோர் செய்வார்.

(இ-ள்.) பெரிய பூமியே அம்மியாகவும், அஞ்சாமையை யுடைய கொடிய பூதவீரர்களது மலைகளையொத்த கால்களே வலிமைமிக்க குழவியாகவும், புரண்டோடுகின்ற உதிரமே நீராகவும் உயிர்நீங்கிய அவுணவீரர்களது தேகத்தை அரைத்தாற்போல நடக்கவும், எதிர்த்தவர்களாகிய அசுரர்களும் கொல்லுகின்ற போர் செய்தார்கள்.—என்-று. (௪௮)

தத்துறு புரவித் திண்டேர்த் தானவர் நிகளத் தந்தி
பத்துநா றொன்றில் வீழப் பழுமரப் பணைகொண் டெற்றி
முத்தலை யெஃகம் வீசி முசலத்திற் புடைத்து மொய்ம்பாற்
குத்திநின் றுழக்கிப் பாய்ந்து கொன்றனர் பூத வீரர்.

(இ-ள்.) தாவிச் செல்லுகின்ற குதிரைபூட்டிய தேரினையுடைய அவுணவீரர்களது சங்கிலி பூட்டப்பட்ட ஆயிரம் யானைகள் ஒருமிக்க விழும்படி ஆலமரத்தின் கிளைகளைக்கொண்டடித்தும், முத்தலைச்சூலங்களை யெறிந்தும், இருப்புலக்கையினா லிடித்தும் தோள்களால் குத்தி நின்று கலக்கிப்பாய்ந்தும் பூதவீரர்கள் கொன்றார்கள்.

விழுந்தன படிவம் யாண்டும் விரிந்தன கவந்த மேன்மே
லெழுந்தன குருதித் தாரை யீர்த்தன நீத்த மாக
வழுந்திய விறந்தோர் யாக்கை யார்த்தன பறவை செய்ய
கொழுந்தசை மிசைந்து நின்று குரவையாட் டயர்ந்த கூளி.

(இ-ள்.) இறந்து விழுந்தனவாகிய உடம்புகள் எங்கும் பரவிக் கிடந்தன. கவந்தங்கள் கிளம்பிக் கிளம்பிக்குதித்தன. உதிரப்பெருக்குகள் இறந்து அழுந்திக்கிடந்தவர்களது சரீரத்தைப்பெருவெள்ளமாகி இழுத்தன. பறவைகள் இரைச்சலிட்டன. பேய்கள் சிவந்த கொழுவிய தசைகளையுண்டு நின்று கைகோத்தாடின.—என்-று. (௫௰)

கண்டன னினைய தன்மை தாரகன் கடிய சீற்றங்
கொண்டனன் வையம் நீங்கிக் குவலய மிசைக்குப் புறத்துந்
தண்டமொன் றெடுத்துப் பூதப் படையினந் தனையில் வீட்டி
யண்டமுங் குலுங்க வார்த்திட் டடிகளா லுழக்கிச் சென்றான்.

(இ-ள்.) தாரகாசுரன் இவ்வாறாகிய தன்மையைப் பார்த்துக் கொடிய கோபத்தை யடைந்து இரதத்தினின்று நீங்கிப் பூமியில் குதித்து ஒரு தண்டாயுதத்தைக் கையிலெடுத்துப் பூதச்சேனைகளைப் பூமியில்விழும்படிகொன்று அண்டமுங் குலுங்கும்படி யாரவாரித்துக் கால்களா லுதைத்துக்கொண்டுசென்றனன்.—எ-று. (௬௪)

அல்லெனப் பட்டமேனி யவுணர்கட் கரசன் கையிற்
கல்லெனப் பட்ட தண்டாற் புடைத்தலுங் காங்கள் சென்னி
பல்லெனப் பட்ட சிந்திப் பாய்புன லொழுக்கிற் சாய்ந்த
புல்லெனப் பட்ட தம்மா பூதர்தஞ் சேனை யெல்லாம்.

(இ-ள்.) இருள்போலுங் கரிய தேகத்தினையுடைய அவுணராஜனாகிய தாரகன்தனது கையிலுள்ள 'மலைபோன்ற தண்டாயுதத்தினால் அடிக்கவும் கொடிய பூதப்படைக ளனைத்தும், கைகளும் தலைகளும், பற்களும் இழந்து வேகமாயோடுகின்ற நீரோட்டத்தி னெதிரி லகப்பட்டுச் சாய்ந்த புல்லைப் போன்றன.—எ-று. (௬௫)

பிடித்திடு வயிரத் தண்டம் பெருங் கடற் பூத வெள்ள
முடித்திடல் புகழோ வன்றாற் றாரக மொய்ம்பின் மேலோ
னடித்திடின் காலை கீண்ட தம்புவி யடிப்பா னோங்கி
யெடுத்திடுங் காலை கீண்ட தெண்டிசை யண்டச் சூழல்.

(இ-ள்.) பராக்கிரமத்தையுடைய தாரகாசுரன் கையில் பிடித்துள்ள வயிரத்தண்டமானது பெரிய கடல்போன்ற பூதச்சேனைகளை யழித்தல் அதற்கொரு புகழாகுமோ? அவ்வசுரன் அடிக்கும்பொழுது பூமி பிளந்தது, அடிக்கும்படி ஓங்கி யெடுக்கும்பொழுது அண்டகோளத்தின் எட்டுத் திக்குகளும் பிளந்தன.—எ-று. (௬௬)

தாரிடங் கொண்ட மார்பத் தாரகன் வயிரத் தண்டம்
போரிடங் கொண்டோர் சென்னி புயமுரங் கரங்கள் சிந்திக்
காருடங் கண்ட பாந்தட் கணமெனத் துடிப்ப விட்டுப்
பாரிடந் தன்னை யெல்லாம் பாரிட மாக்கிற் றம்மா.

(இ-ள்.) மாலையையணிந்த மார்பினையுடைய தாரகாசுரன் ஏந்திய வயிரத்தண்டமானது (எதிர்த்துப்) போர்செய்தவர்களது புயம் மார்பு கரம் முதலியவைகளைச் சிதறிக் கருடனைக் கண்ட சர்ப்பக்கூட்டங்களைப் போலத் துடிக்கும்படி கொன்று பூதச்சேனைகளைப் பூமியில் தள்ளியது.—எ-று. (௬௭)

அன்றரி விடுத்த வாழி யாரமா வணிந்த தீயோன்
கொன்றன னனிக மென்னுங் கொள்கையு மவன்மேற் செல்லும்
வன்றிற மம்பா லில்லா வண்ணமு மதித்து நோக்கி
நின்றிலர் பூதர் வேந்தர் நெஞ்சழிந் துடைந்து போனார்.

(இ-ள்.) முற்காலத்தில் திருமால் விட்ட சக்கரத்தை ஆரமாகவணிந்த கொடியவனாகிய தாரகன் சேனைகளனைத்தையுங் கொன்ற தன்மையும், அவன்மீது எதிர்த்து நின்று போர்செய்தற்குத் தங்களுக்குச் சத்தியில்லாமையும் ஆலோசித்துப் பார்த்துப் பூதகணத்தலைவர்கள் எதிர்த்து நிற்கமாட்டாதவர்களாய் மனவலி கெட்டுத் தோற்றுப்போனார்கள்.—எ-று. (௬௮)

திண்கண நிரையின் வேந்தர் சிந்துழிச் சீற்றந் தூண்ட
வெண்கண மாகி யுள்ள விலக்கருஞ் சிலகா லூன்றி
மண்கனை முழவம் விம்ம வயிரெழுந் திசைப்ப வாங்கி
பொன்கனை மாரி தூவி யவுணனை யொல்லை சூழ்ந்தார்.

(இ-ள்.) வல்லமைபொருந்திய பூதசேனைத்தலைவர்கள் தோற்றோடும் பொழுது கோபமதிகரிக்க மதிக்கத்தக்க கூட்டமாயிருந்த இலக்ஷம் வீரர்களும் விற்களைக் கால்களில் மாட்டிவளைத்து மத்தளமுதலிய வாத்தியங்கள் முழங்கவும், ஊதுகொம்புகள் சப்திக்கவும் சிறந்த பாணவருஷங்களைப் பிரயோகித்துத் தாரகாசுரனைச் சூழ்ந்து கொண்டார்கள்.—எ-று. (௬௬)

சூழ்ந்தனர் துரந்த வாளி தோன்றுநத் தவுணன் யாக்கை
மீமாழ்ந்தில ஆறாகேவும் புரைர்த்தில புன்மை யாகித்
தாழ்ந்திடு நிரப்பின் மேலோ னொருமகன் றம்மை தாங்கி
வாழ்ந்தவர் தமக்குச் சொல்லுஞ் சொல்லென வறிது மீண்ட.

(இ-ள்.) இலக்ஷம் வீரர்களும் சூழ்ந்து கொண்டு பிரயோகித்தபாணங்கள் யானைமுகத்தினையுடைய தாரகாசுரனது சரீரத்தைப் பிளக்காமலும்யாதொரு இடையூறு செய்யாமலும் இழிவுபொருந்தித் தாழ்வடைந்துள்ள தரித்திரத்திற் சிறந்த ஒருவன் மேன்மைபெற்றுச் செல்வத்துடன் வாழ்கின்றவர்களிடத்தில் சென்று சொல்லுகின்ற சொற்களைப்போலப் பிரயோசனமற்றுத்திரும்பின.—எ-று. (௬௭)

தரைபடப் புகழ்வைத் துள்ள தாரகன் றடமார் பத்தைப்
புரைபடச் செய்தி டாது பொள்ளெனப் பட்டு மீண்டு
நிரைபடத் திறலோ ருய்த்த நெடுங்கணை யான வெல்லாம்
வரைபடச் சிதறுங் கல்லின் மாரிபோ லான வன்றே.

(இ-ள்.) நிலவுலகத்தில் தனது புகழை நிலைநிறுத்திய தாரகாசுரனது பெரிய மார்பினைத்துளைபடுத்தாமல் வரிசையாக வீரர்களால் விடப்பட்ட பெரிய பாணங்களெல்லாம் விரைவிற்பட்டுத்திரும்பி மலையில்பட்டுச் சிதறுகின்ற கல்மழைபோலாயின.—எ-று. (௬௮)

விடுகணை மாரி யாவு மீண்டிட வெகுண்டு விண்ணோர்
படைமுறை வழங்கி நிற்பப் பதகன்மே லவைக ளெய்தா
வுடையதம் வலியுஞ்சிந்தி யொல்லென மறிந்து செல்லக்
கடவுள ரதனை நோக்கிக் கரங்குலைத் திரங்க லுற்றார்.

(இ-ள்.) வீரர்கள் விடுகின்ற பாணவருஷங்களனைத்தும் திரும்பிவிடவும், இலக்ஷம் வீரர்களுங் கோபங்கொண்டு தேவாஸ்திரங்களை வரிசையாக விட்டார்கள், பாவியாகிய தாரகாசுரன்மேல் அப்பாணங்கள் சென்றுபட்டுத் தமது வலிகெட்டு விரைவில் திரும்பிச்செல்லவும், அதனைக்கண்ட தேவர்கள் தங்கள் கரங்களை விரித்து விசனமடைந்தார்கள்.—எ-று. (௬௯)

மற்றது காலை தன்னில் வலியினன் வயிரத் தண்டஞ்
சுற்றினன் றற்சூழ் கின்ற சுடர்மணிக் கடுமான் றேர்க
ளெற்றினன் புழைக்கை நீட்டி யிலக்கர்தந் தொகையும் வாரிப்
பொற்றனு வோடும் வீழப் புணரியின் மீது விட்டான்.

(இ-ள்.) அந்தச் சமயத்தில், வலிமைபொருந்திய தாரகாசுரன் வச்சிரதண்டத்தைச் சுழற்றித்தனக்குச் சுற்றிலுமுள்ள ஒளிபொருந்திய இரத்தினங்களிழைக்கப்பட்டதாய் வேகமாயோடுகின்ற குதிரைகள் பூட்டிய இரதங்களை யுடைத்தனன். பின்பு துதிக்கையை நீட்டி இலக்ஷம் வீரர்களையும் வாரி அவர்களது அழகியவிற்களுடன் சமுத்திரத்தில் விழும்படி வீசியெறிந்தனன்.—எ-று. (௭0)

துளும்பிய வளக்கர் தன்னிற் சூழுற நின்ற தெங்கின்
வளம்படு பழுக்காய் வர்க்க மாருத மெறியச் சிந்திக்

குளம்படு தன்மை யென்ன வீழ்தரு கொற்ற வீர
ரிளம்பிறை புரையும் வில்லோ டெழுந்தொரு புடையிற் போனார்.

(இ-ள்.) கரையிற் சூழ்ந்து நிற்கின்ற தென்னமரத்தினது வளப்பம் பொருந்திய பழுத்த தேங்காய்க் கூட்டங்கள் காற்றுவீசுதலால் தெறித்துக் குளத்தில் விழுகின்ற தன்மையைப்போல, அலைவீசுகின்ற கடலில் விழுந்த வெற்றிபொருந்திய வீரர்கள் இளம்பிறையையொத்தவிற்களுடன் கரையேறி யொருபுறஞ்சென்றார்கள்.—எ-று. (கக)

கொற்றவி லாளன் வீர கேசரி யதனை நோக்கிச்
செற்றமோ டேகிச் செவ்வேள் சேவடி மனத்துட் கொண்டு
பற்றிய தனுவை வாங்கிப் பகழி நூ றுய்த்துத் தீயோன்
பொற்றட மவுலி தள்ளிப் புணரியு நாண வார்த்தான்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வில்வீரனாகிய வீரகேசரி அதனைப்பார்த்துக் கோபத்துடன் சென்று குமாரக்கடவுளது திருவடிகளை மனதில் தியானித்துக்கொண்டு தமது கையிற்பிடித்த வில்லை வளைத்து நூறுபாணங்களைவிட்டுக் கொடியவனாகிய தாரகனது பொன்னாலாகிய பெரிய மகுடத்தை வீழ்த்திக் கடலொலியும் பின்னிடும்படிக் கர்ச்சித்தான்.—எ-று. (கஉ)

ஆர்த்திடு மோதை கேளா வண்டர்க ளவனை மீது
தூர்த்தனர் மலரின் மாரி தொன்முக னதனைக் காணா
வேர்த்தனன் வெகுண்டு முற்றான் வீரகே சரிமே லங்கைத்
தார்த்தடந் தண்ட முய்த்துத் தனதுமான் றேரிற் சென்றான்.

(இ-ள்.) அவ்வாறுகர்ச்சித்த ஆரவாரத்தைக்கேட்டு தேவர்கள் அவ்வீரகேசரியின்மீது புஷ்பவருஷஞ்செய்தார்கள்; அதனைத்தாரகாசுரன்பார்த்து உடல்வேர்த்து வெட்கமுற்றவனாய் வீரகேசரியின்மீது தனது கையிலிருந்த மாலையணிந்த பெரிய வச்சிரதண்டத்தைவிட்டுக் குதிரைகள்பூட்டிய தனது தேரின்மீது போய் ஏறிக்கொண்டான்.—எ-று. (கங)

வேறு.

சென்றொர் மாமுடி புனைவுழித் தண்டமத் திறலோன்
மன்றல் மார்பகம் படுதலும் வீழ்ந்தனன் மயங்கி
வென்றி மொய்ம்புடை யண்ணலை யதுகண்டு வெகுண்டு
குன்ற மன்னதோட் டாரக னொடுபொரக் குறித்தான்.

(இ-ள்.) தாரகன் போய் ஓர் பெரிய மகுடத்தை யணிந்துகொள்ளும்பொழுது அவன்விடுத்த வச்சிரதண்டமானது அவ்வீரகேசரியின் மணம்பொருந்திய மார்பிற்படுதலும் மயங்கி வீழ்ந்தனன். அப்படி மயங்கி வீழ்ந்ததனை வீரவாகுத்தேவர் பார்த்துக் கோபங்கொண்டு மலைபோன்ற தோளினையுடைய தாரகனுடன் போர்செய்தற்கு நினைத்தார்.—எ-று. (கச)

வேறு.

குறித்தேதிறற் புயனாகக் கொடியோனெதிர் குறுகி
வெறித்தேன்மலர்த் தொடைதூங்குதன் விறற்கார்முகங் குனியாப்
பொறித்தீயுறு கனல்வாளிகள் பொழிந்தேயவன் புரத்திற்
செறித்தேயுற வலித்தானொரு சிலைதாங்குநர் தலைவன்.

(இ-ள்.) வீரவாகுத்தேவர் போர்செய்யக் கருதிக் கொடியவனாகிய தாரகாசுரனுக்கு எதிரிலடைந்து மணம் பொருந்திய தேன்நிறைந்த மலர்மாலை தொங்குகின்ற தமது வலிய வில்லை வளைத்து அக்கினியாஸ்திரங்களைப் பூட்டிப் பிரயோகித்து

அத்தாரகனது தேகத்தில் தைக்கும்படி செலுத்திநிற்கவும் அசுவாரூருகிய தாரகன் ஒருவில்லையெடுத்து வளைத்தனன்.—எ-று. (௬௫)

பொழிந்தான்சர மழையுந்தமன் புயமேலது பொழுதின்
விழிந்தான்சிலை யயர்ந்தான்கணை யீரெழுதொட் டடியா
வழிந்தாயென வெதிர்ந்தாயிதற் கையமிலை யென்று
மொழிந்தாயொரு சூலத்தினை மொய்ம்பிற்செல வுய்த்தான்.

(இ-ள்.) வீரவாகுத்தேவரது சரீரத்தில் தாக்கும்படி பாணவருஷங்களைப் பிரயோகித்தான். அப்பொழுது வீரவாகுத்தேவர் தாரகாசுரனது வில்லைப் பதினான்கு பாணங்களைவிட்டு ஒடிக்கவும் (அத்தாரகன்) நீ என்னோடு எதிர்த்தமையால் அழிந்தனை, இதற்குச் சந்தேகமில்லையென்று கூறி ஒரு சூலத்தை யெடுத்து வலிவோடும் வீரவாகுத்தேவர்மீது தாக்கும்படி விடுத்தனன்.—எ-று. (௬௬)

பொருமூவிலை வேலங்கவன் பொன்மார்புறப் பொருமிப்
பெருமோகமொ டேநின்றிடப் பின்னங்கது காணா
வருமேறென வதிர்தாரக னுடனேயவன் றுணையாய்
வருமூவரு மொருநால்வரு மாறுற்றம ரிழைத்தார்.

(இ-ள்.) போர் செய்தற்குரிய திரிசூலமானது அவ்வீரவாகுத்தேவரது மார்பிற் பட்டவுடனே (அவர்) விம்முதலுற்று மிகுந்தமயக்கத்துடன்நிற்கவும், பின்பு அதனைப் பார்த்து இடியேறுபோலக் கர்ச்சித்து நின்ற தாரகாசுரனோடு அவ்வீரவாகுத்தேவருக்குத் தம்பியர்களாயுள்ள எழு வீரர்களும் பகைத்துப் போர்செய்தார்கள்.—எ-று.

அமர்செய்திடு மெழுவீரரு மவுணன்றனக் குடையக்
குமரன்பதந் தலைக்கொண்டிடுங் கோமானது காணா
வெமர்மற்றிவ ரெல்லோர்களு மிரிந்தார்பொரு தென்னாச்
சமர்முற்றிட வருதாரகத் தகுவன்முன மடைந்தான்.

(இ-ள்.) அவ்வாறு போர்செய்த வெழு வீரர்களும் தாரகாசுரனுக்குத் தோற்கவும், குமாரக்கடவுளது திருவடிகளைச் சிரசிற்கொண்டு வணங்குகின்ற வீரவாகுத்தேவர் அதனைப்பார்த்துப் போர்செய்து எம்மவர்களாயுள்ள இவர்களெல்லாம் தோல்வியுற்றார்களென்று நினைத்துப் போர்முடியும்படி எதிர்த்துத் தாரகாசுரனுக்கு முன்னே சென்றனர்.—எ-று. (௬௮)

ஒருகார்முக மிருகால்வளை வுறவேகுனித் துகுதே
னருகாதொழு கியதன்மையி னவிர்நாணொலி யெடுப்பத்
திருகாநெடு வரையானவுந் தெருமந்தன வவுணா
ரிருகாதையு நனிபொத்தின ரேங்குற்றன ரிரிவார்.

(இ-ள்.) ஒப்பற்ற வில்லினை இருநுனிகளும் வளையும்படி வளைத்து, இடைவிடாது தேனொழுகுகின்ற தன்மையைப்போல விளங்குகின்ற நாணொலி யுண்டாக்கவும், மாறுபடாத பெரிய மலைகளும் சுழன்றன. அசுரர்கள் இரண்டு காதுகளையும் மிகவும் பொத்திக்கொண்டு ஏக்கமுற்றவர்களாக வோடினார்கள்.—எ-று. (௬௯)

நாண்கொண்டிடு மொலிகேட்டலு நடுங்காவெரு வுற்றார்
பூண்கொண்டிடு சிலைவாங்கலு மகிழ்வுற்றிடு புலவோர்
சேண்கொண்டிடு முகில்வேண்டின ரதுவந்திடச் சிறந்தே
மால்கொண்டத னுருமுச்செல மயங்கித்தளர் வுறும்போல்.

(இ-ள்.) வானத்தி லுலாவுகின்ற மேகத்தின்வரவை விரும்பினவர்கள் அம்மேகம் வந்தவுடன் சந்தோஷித்துப் பின்பு அதனது மாட்சிமைபொருந்திய இடியொலிதோன்ற மயக்கமுற்று வருந்துவதைப்போல வீரவாகுத்தேவரது பூண்கட்டியுள்ள வில்லை வளைக்கவும், அதனை நோக்கி மகிழ்ச்சியடைந்த தேவர்கள் அவ்வின்னாணியிற்பொருந்திய சத்தத்தைக் கேட்டவுடனே நடுங்கிப் பயந்தார்கள்.—எ-று. (எ௦)

வேறு.

மேதா வியர்கள் பரவுந்திறல் வீரவாகு
மாதாரு வன்ன சிலைதன்னை வளைத்து வாகைத்
தாதார் பிணையல் புனைதாரகன் றன்னை நோக்கித்
தீதா மழல்போல் வெகுண்டீது செப்பு கின்றான்.

(இ-ள்) விவேகிகள் புகழ்கின்ற சாமர்த்தியத்தினையுடைய வீரவாகுத்தேவர் பெரியமரம்போன்றவில்லைவளைத்து மகரந்தம்பொருந்திய வெற்றிமாலையணிந்துள்ள தாரகனைப் பார்த்து கொடிய அக்கினியைப்போலக் கோபித்து இதனைக் கூறுகின்றார்.—எ-று. (எக)

பொன்றா வலிகொண் டமராடிய பூதர் தம்மை
வன்றாழ் சிலைகொண் டடுவீரரை வன்மை தன்னால்
வென்றா மெனவுன் னினைபோலும் விரைந்து நின்னைக்
கொன்றாவி யுண்ப னெனலுங்கொடி யோனு ரைப்பான்.

(இ-ள்.) கெடாத வலிமையைப்பெற்றுப் போர்செய்த பூதங்களையும் பலம்பொருந்திய வளைந்த வில்லினையுடைய வீரர்களையும் உனது பராக்கிரமத்தினால் செயித்தோமென்று நினைத்தனைபோலும்; உன்னை விரைவாகக் கொன்று உனதுயிரை யுண்பேனென்று (வீரவாகுத் தேவர்) கூறவும், கொடியவனாகிய தாரகாசுரன் சொல்லுவானாயினான்.—எ-று. (எஉ)

மாயன் றனைவென் றவனேமியை மாசில் கண்டத்
தேயும் படியே புனைந்தேன்வலி யெண்ணா றாதே
நீயிங் கடுவா மெனக்கூறினை நீடு மாற்றஞ்
சீயந் தனையு நரிவெல்வது திண்ண மாமோ.

(இ-ள்.) திருமாலைவென்று அவன்விடுத்த சக்கரத்தைக் குற்றமற்ற கண்டத்திற் பொருந்தும்படி அணிந்தவனாகிய எனது வல்லமையைச் சிறிதும் எண்ணாமல் நீ இங்கு என்னைக்கொல்வேனென்று வீரங்கூறினை. ஒருநரியானது சிங்கத்தைச் செயிப்பது உறுதியாகுமோ (ஆகாது).—எ-று. (எ௩)

சாருங் குறள்வெம் படையாவையுஞ் சாய்ந்த வீர
ராருந் தொலைவுற் றனர்நீயு மயர்ந்து நின்றாய்
வீரம் புகல்வாய் விளிகின்ற விளக்க நேர்வாய்
பாரென் வலியா லுனதாவி படுப்ப னென்றான்.

(இ-ள்.) போர்செய்யும்படிவந்த கொடிய பூதப்படைகளனைத்து மழிந்தன. வீரர்களனைவருந் தொலைந்தார்கள். நீயும் சோர்ந்துநின்றனை. சௌரியம் பேசுகின்றவனே! நீ அவிகின்ற தீபத்தையொப்பாய்; எனது வல்லமையினால் உனதுயிரைக்கொன்றுவிடுவேன் பார் என்று கூறினான்.—எ-று. (எ௪)

என்னுந் துணையிற் சரமாயிர மேந்த லுய்ப்பத்
தன்னங் கையிலோர் சிலைவாங்கினன் றாரகப்பேர்

மன்னன் கடிது கணையாயிர மாறு தூண்டிச்
சின்னம் புரிந்து கணைநூறு செலுத்தி னானால்.

(இ-ள்.) என்று சொன்ன பொழுதில், வீரவாகுத்தேவர் ஆயிரம் பாணங்களைப் பிரயோகிக்க, தாரகாசுரன் தனது கையில் ஒருவில்லையெடுத்து அதற்கு மாறாக ஆயிரம்பாணங்களை விரைவாகப்பிரயோகித்து (அவர்விடுத்த) பாணங்களையழித்துப் பின்பு நூறு பாணங்களைப் பிரயோகித்தான்.—எ-று. (எ௫)

எவ்வக் கொடியோன் றொடுவாளியை யேந்தல் காணூஉ
அவ்வக் கணைகள் விடுத்தேயவை முற்று மாற்றக்
கைவிற் கொருவ னிவனாகுமிக் காளை தன்னைத்
தெய்வப் படையான் முடிப்பேனெனச் சிந்தை செய்தான்.

(இ-ள்.) குற்றம்பொருந்திய கொடியவனாகிய தாரகாசுரன் பிரயோகித்த பாணங்களை வீரவாகுத்தேவர் பார்த்து அததற்குரிய பாணங்களை விடுத்து அப்பாணங்களனைத்தையுமழிக்கவும், (தாரகாசுரனானவன்) கையிற்பொருந்திய விற்போருக்கு ஒப்பற்றவனாயுள்ள இவ்வீரனைத் தேவாஸ்திரங்களால் கொல்லுவே னென்று தன்மனத்தி லெண்ணினான்.—எ-று. (எ௬)

வேறு.

வெங்கனற்படை தாரகன்விட வீரவாகு வெகுண்டுபின்
செங்கனற்படை யேவியன்னது சிந்தவேவரு ணப்படை
யங்கணுய்த்திட வவுணர்கோமக னடுபுனற்கிறை படையினைத்
துங்கமுற்றிய வீரனுய்த்தது துண்டமாம்வகை கண்டனன்.

(இ-ள்.) தாரகாசுரன் கொடிய அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகிக்க வீரவாகுத்தேவர் தாமுங் கோபித்துப் பின்பு செவ்விய அக்கினியாஸ்திரத்தைப் பிரயோகித்து அதனையழிக்கவும், அசுரராஜனாகிய தாரகன் வருணாஸ்திரத்தைப் பிரயோகிக்க உடனே உயர்வுபொருந்திய வீரவாகுத்தேவர் வருணாஸ்திரத்தை விடுத்து அதனைத் துண்டித்தனர்.—எ-று. (எஎ)

இரவிதன்படை யவுணன்விட்டன னிவனுமப்படை யேவியே
விரைவிலன்னது தொலைவுகண்டனன் வீரமேதகு தாரக
னுரமிகுந்தனி யூதைவெம்படை யுந்தினனது கந்தவே
ளருண்மிகுந்தனி யடியன்மாற்றின னனையதொல்படை தனைவிடா.

(இ-ள்.) தாரகாசுரன் சூரியாஸ்திரத்தைப்பிரயோகித்தனன், வீரவாகுத்தேவரும் அந்தச் சூரியாஸ்திரத்தையே பிரயோகித்து அந்தப் பாணத்தை விரைவிலழித்தனர். உடனே வீரம் பொருந்திய தாரகன் மிகுந்த வல்லமையையுடைய ஒப்பற்ற வாயுவாஸ்திரத்தைப் பிரயோகித்தான், அந்த வாயுவாஸ்திரத்தையே முருகக்கடவுளது திருவருள் நிரம்பப்பெற்ற ஒப்பற்ற மெய்யன்பராகிய வீரவாகுத் தேவர் விட்டு அழித்தனர்.—எ-று. (எ௮)

அனிலவெம்படை வீற்றழிந்திட வவுணர்கோமக னம்புயன்
றனதுதொல்படை யேவினனது தணிவில்செற்றமொ டேகலும்
வனைகருங்கழல் வீரவாகுவு மற்றவன்படை தூண்டியே
நினையுமுன்னது தொலைவுசெய்தன னிகரில்வானவர் புகழவே.

(இ-ள்.) கொடிய வாயுவாஸ்திரமானது வலிகெடும்படி தாரகாசுரன் பழைமையாகிய பிரமாஸ்திரத்தைப் பிரயோகித்தான். அந்தப் பிரமாஸ்திரமானது மிகுந்த

கோபத்துடன்வரவும், பெரிய வீரக்கழலேயணிந்த வீரவாகுத் தேவரும்ஒப்பற்ற தேவர்கள் புகழும்படி அந்தப் பிரமாஸ்திரத்தையே விட்டு நினைக்கு முன்னமே அதனை யழித்தனர்.—எ-று. (எசு)

ஆயதன்மைகள் கண்டுதாரக னற்புதத்தின னாகியே
மேயவானவர் படைகள்யாவையும் வீரன்மற்றிவன் வென்றனன்
மாயநீர்மையி னிங்கிவன்றிறல் வன்மைகொள்ளுது மினியெனுத்
தீயபுந்தியி லிவ்வாறு தெரிந்துசிந்தனை செய்துமேல்.

(இ-ள்.) தாரகாசுரன் அவ்வாறாகிய தன்மையைப்பார்த்து ஆச்சரியமடைந்தவனாய் நம்மிடத்திற் பொருந்திய தேவாஸ்திரங்களை யெல்லாம் வீரனாகிய இவன் செயித்து விட்டனன்; ஆதலால் இனி மாயவித்தையினால் இவ்விடத்தில் இவனது வலிய பராக்கிரமத்தை யழிப்போமென்று தனது கொடியமனத்தில் இவ்வாறுணர்ந்து சிந்தித்துப் பின்பு.—எ-று.

இதுமுதல் மூன்று பாடலுங் குளகம். (அ0)

தொல்லைமாயையின் விஞ்சைதன்னை நவின்றுளங்கொடு துன்னெனு
மல்லன்மேவரு தாரகாசுரன் வடிவமெண்ணில தாங்கியே
யெல்லைதீர்தரு படைவழங்கின னெங்குமாகி யிருட்குழா
மொல்லைவந்து பரந்தபோலவ னொருவனின்றமர் புரியவே.

(இ-ள்.) வளப்பமிக்க தாரகாசுரன் பழைமையாகிய மாயைக்குரிய மந்திரத்தை மனத்தில் செபித்து விரைவாக அளவற்ற வடிவங்களைக் கொண்டு இருட்கூட்டங்கள் விரைந்துவந்து எவ்விடத்தும் பரவிய தன்மையைப்போல் அளவற்ற பாணங்களைவிட்டுத் தானொருவனே நின்று போர்செய்யவும்.—எ-று. (அக)

கண்டுமற்றது வானுளோர்கள் கலங்கியேங்கினர் முன்னரே
விண்டுநீளிடை நின்றபூதர் வெருண்டுபின்னரு மோடினர்
மண்டுபேரமர் செய்தயர்ந்திடு மானவீரரு மச்சமேல்
கொண்டுநின்றனர் முறுவல்செய்தனர் குணலையிட்டன ரவுணரே.

(இ-ள்.) அதனைத் தேவர்கள் பார்த்து மனங்கலங்கி வருந்தினார்கள்; முன்னமே விலகியோடி நெடுந்தூரத்தில் நின்ற பூதர்கள் பின்னும் வெருண்டு ஓடினார்கள். நெருங்கிய பெரும்போர்செய்து சோர்ந்திருக்கின்ற பெருமைபொருந்திய எட்டுவீரர்களும் அச்சங்கொண்டு நின்றார்கள். (இதனைப் பார்த்த) அவுணர்கள் சிரித்துக் குணலைக்கூத்தாடினார்கள்.—எ-று.

குணலை என்பது ஒருவகைக் கூத்து. (அஉ)

வேறு.

தார கப்பெய ரவுணர்கோன் மாயையின் சமரு
மாரு மச்சுறு கின்றது மாடன்மொய்ம் புடையோன்
பேர முற்பொறி கதுவுற நோக்கியே பிறங்கும்
வீர பத்திர னெடும்படை யெடுத்தனன் விடுவான்.

(இ-ள்.) தாரகனென்னும் பெயருடைய அசுரராஜனது மாயப்போரும், அப்போரைநோக்கி யாரும் அஞ்சுகின்றதுமாகிய தன்மையை, வீரவாகுத்தேவர் தமது கண்களில் மிகுந்த தீப்பொறியுண்டாகப் பார்த்து அவன்மீது பிரயோகிக்கும்படி விளங்குகின்ற பெரிய வீரபத்திராஸ்திரத்தையெடுத்தனர்.—எ-று. (அங)

துங்க வக்கிரச் சிம்புள்மாப் படையினைத் தூயோன்
செங்கை பற்றலு மன்னது தாரகன் செயலா
லங்க ணின்றிடு மாயைகண் டச்சமுற் றழுங்கிப்
பொங்கு பானுமுன் னிருளென முடிந்தது பொழுதே.

(இ-ள்.) வீரவாகுத்தேவர் மிகுந்த உக்கிரத்தையுடைய (வீரபத்திராஸ்திரமாகிய) சரபாஸ்திரத்தைத் தமதுகையிலெடுக்கவும்,அத்தன்மையை தாரகாசுரனது செய்கையினால் அங்குப்பொருந்தியிருந்த மாயையானது கண்டு அச்சங்கொண்டு வருந்தி, மிகுந்த (கிரணங்களையுடைய) சூரியனைக்கண்ட இருள்போல உடனே யழிந்தது. (௰)

தன்பு ணர்ப்புறு மாயைதா னுடையுதலுந் தமியாய்
முன்பு நின்றிடுதார் தாரகன் மொய்ம்புளான் றன்னைப்
பின்பு மாயையிற் படுத்தமவார் சூழ்ச்சியைப் பிடித்து
மின்பொ லிந்ததன் றேரைவிட் டோடினன் விரைவில்.

(இ-ள்.) தனது செய்கையினாலுண்டாகிய மாயையானது அழியவும் தனியனாக முன்னே நின்ற தாரகாசுரன் பின்பு, வீரவாகுத்தேவரைத் தனது மாயைக்குள்ளாக்கும்பொருட்டு ஒரு உபாயத்தைக் கருதி விரைவாக மின்போல் விளங்குகின்ற தனது இரதத்தைவிட்டு ஓடிப்போயினன்.—எ-று. (அரு)

தார கன்றொலைந் தோடலுந் தனக்கிணை யில்லோன்
போர ழிந்துவென் னிட்டவன் றன்மிசைப் புத்தேள்
வீர வெம்படை விடுப்பது வீரமன் றென்னாச்
சீரி தாகிய தூணியு ளன்னதைச் செறித்தான்.

(இ-ள்.) தாரகாசுரன் நீங்கியோடவும், தமக்கொருவரு மிணையில்லாதவராகிய வீரவாகுத்தேவர் போரில் தோற்றுப் புறங்கொடுத்தோடினவன்மீது வலிமைபொருந்திய வீரபத்திராஸ்திரத்தைப் பிரயோகிப்பது வீரமல்லவென்று கருதி அதனைச் சிறப்புப் பொருந்திய அம்பறாத்தூணியில் வைத்தனர்.—எ-று. (அசு)

அற்ற போர்வலித் தாரகன் பின்விரைந் தணுகிப்
பற்றி நாண்கொடு புயந்தனைப் பிணித்தெனைப் பணித்த
கொற்ற வேலன்மு னுய்க்குவன் யானெனக் குறித்து
மற்ற வன்றனைத் தொடர்ந்தன னெடுந்திறல் வாகு.

(இ-ள்.) மிக்க வல்லமையையுடைய வீரவாகுத்தேவர் போரில் வலியற்றவனாகிய தாரகாசுரன் பின்னே விரைவாகச் சென்று அவனைப்பிடித்து வில்நாணினைக் கொண்டு அவனது புயத்தைக் கட்டி என்னை யனுப்பியருளிய வெற்றிபொருந்திய முருகப்பெருமான் முன்னே கொண்டுபோய்ச் சேர்ப்பேனென்று நினைத்து அவனை பின்றொடர்ந்து சென்றனர்.—எ-று. (அஎ)

வேழ மாமுகற் கிளவலை யுன்னியே வீர
னூழி மால்கட லாமென வார்த்துவை தணுகச்
சூழு மாயையி னிருக்கையாந் தொல்கிர வுஞ்சப்
பாழி யொன்றுசென் றொளித்தனன் றாரகப் பதகன்.

(இ-ள்.) வீரவாகுத்தேவர் விநாயகமூர்த்திக்கு இளையவராகிய முருகக்கடவுளைச் சிந்தித்துக்கொண்டு வட்டமாகிய பெரிய கடலைப்போல ஆரவாரித்து வைது கொண்டு அவன்பின்னே செல்லவும், சூழ்ந்துள்ள மாயையின் வாசஸ்தானமாகிய பழைய கிரவுஞ்சகிரியின் ஒரு குகையில் பாவியாகிய தாரகாசுரன் ஓடியொளித்தனன்

முன்ன மாங்கவன் போகிய பூழையுள் முடுகிப்
பொன்னின் வாகையந் தோளுடை யாண்டகை புகலு
மன்ன தோர்வரை யகமெலா மாயிரங் கதிரின்
மன்ன னேகுறு விருளிலம் போன்றுவை கியதே.

(இ-ள்.) முன்னே தாரகாசுரன்ஒடியொளித்தகுகைக்குள்ளே பொன்போல் விளங்குகின்ற வெற்றிபொருந்திய தோட்களையுடைய வீரவாகுத்தேவர் விரைவாகச் செல்லவும், தாம் சென்ற அம்மலையினிடங்களெல்லாம் சூரியப்பிரகாசமில்லாத இருளுலகம் போன்றிருந்தன.—எ-று. (அகூ)

நீளு மாவிருள் படர்தலுஞ் சில்லிடை நெறியாற்
றூளி னெற்றியே படர்ந்தனன் றூரகற் காணு
றாளி மொய்ம்புடை மேலையோ வடுக்கலின் புணர்ப்பான்
மீளு கின்றதோர் நெறியையுங் கண்டிலன் வெகுண்டான்.

(இ-ள்.) மிகப் பெரிய விருளானது பரவியிருந்தமையால் சிலவிடங்களில் காலினால் தடவிக்கொண்டு வழிபிடித்துச்சென்று தாரகாசுரனைக் காணுதவராய், அம்மலையின் வஞ்சனையினால் திரும்பிவரும் வழியையுங் காணுமல் யாளிபோலும் பராக்கிரமத்தினையுடைய வீரவாகுத்தேவர் கோபமடைந்தனர்.—எ-று. (கூ0)

செற்ற மிக்கவன் மாயையிவ் வரையெனச் சிந்தித்
துற்ற காலையி லவுணனு கியகிர வுஞ்சப்
பொற்றை யன்னது கண்டுமோ கத்துயில் புரிந்து
மற்ற வன்றன துணர்வினை மையல்செய் ததுவே.

(இ-ள்.) மிகுந்த கோபத்தினையுடைய வீரவாகுத்தேவர் இம்மலை மாயாரூபமாயுள்ளதென்று நினைத்துக்கொண்டு நின்றபொழுது, அசுரனுகிய அந்தக் கிரவுஞ்சமலையானது அவ்வாறு நிற்றலையுணர்ந்து மயக்கத்தைத்தருகின்ற நித்திரையையுண்டாக்கி அவ்வீரவாகுத்தேவரது அறிவினை மயக்கியது.—எ-று. (கூக)

இயலி சைத்தமிழ் முனிவர னிசைத்தகு ளிசைவால்
வியலு டைத்திறல் வாகுவை யவ்வரை மிகவு
மயலு டைப்பெரு மாயம தியற்றலு மயங்கித்
துயில லுற்றனன் றொல்லையி லுணர்வெலாந் துறந்தே.

(இ-ள்.) முத்தமிழாசிரியராகிய அகஸ்தியமுனிவரரிட்ட சாபசம்பந்தத்தினால் அந்தக் கிரவுஞ்சமலையானது பெருமையிற் சிறந்த வீரவாகுத்தேவருக்குமிகுந்த மயக்கத்தையுண்டாக்கவும், அவர் உடனே பழைமையாகப் பொருந்திய தமது அறிவினைத்தையு மிழந்து தூங்கினர்.—எ-று.

"இயலி சைத்தமிழ் முனிவர னிசைத்தகுள்" என்பதன் வரலாற்றை மேல் அசுரகாண்டம் கிரவுஞ்சப்படலத்திற் காண்க. (கூஉ)

அம்ம லைக்கணே முன்னவ னுறங்கலு மனைய
செம்ம லுக்கிளை யோரிரு நால்வருஞ் சிறந்த
தம்மி னத்தரோ ரிலக்கருஞ் சாரதர் பலரும்
விம்ம லுற்றனர் சிறையிலாப் பறவையின் மெலிந்தார்.

(இ-ள்.) அந்தக் கிரவுஞ்சமலையினிடத்தில் தங்களுக்கு மூத்தவராகிய வீரவாகுத்தேவர் தூங்குதலும், அவருக்கிளையவர்களாகிய எட்டு வீரர்களும் சிறப்புப்பொருந்திய தமது கூட்டத்தினராகிய இலக்ஷம் வீரர்களும், பல பூதர்களும் துன்பமுற்றவர்களாய்ச் சிறகில்லாத பறவையைப்போல வருந்தினர்கள்.—எ-று. (கூரு)

உடைந்து போயின தாரகன் றன்னைநம் முரவோன்
றொடர்ந்து சென்றனன் மீண்டில னவனொடுந் துன்னி
யடைந்து வெற்பினிற் போர்புரி வான்கொலோ வங்கட்
படர்ந்து நாடுறும் யாமுமென் றெண்ணினர் பலரும்.

(இ-ள்.) அவ்வீரர்கள் பலரும், முன்புதோற்றோடிய தாரகாசுரனை நமது தலைவராகிய வீரவாகுத்தேவர் பின்றொடர்ந்து சென்றனர்; இன்னுந்திரும்பிவரவில்லை; அங்குச்சென்று மலைக்குள்ளே போர்செய்கின்றனரோ? நாமும் அங்குச் சென்று பார்ப்போம் என்றுகூறி யாலோசித்தார்கள்.—எ-று. (கச)

எண்ணி யேயிசைந் திளையரோ ரெண்மரு மிலக்க
நண்ணும் வீரரும் பாரிடந் தன்னுறு யகரு
மண்ணல் வான்படை யேந்தியே யாயிடை யகன்று
விண்ணு லாவுறு கிரவுஞ்ச மெய்தினர் விரைவில்.

(இ-ள்.) இவ்வாறு ஆலோசித்து அங்குச் செல்வதற்கு இசைந்து தம்பியர்களாகிய எட்டுவீரர்களும், இலக்ஷம் வீரர்களும் பூதசேனைத்தலைவர்களும் சிறந்த தேவாஸ்திரங்களைத் தாங்கிக்கொண்டு அப்போர்க்களத்தி னின்று நீங்கிவிரைவாக மேகங்கள் தவழுகின்ற கிரவுஞ்சகிரியை யடைந்தார்கள்.—எ-று.

விண்ணுலாவுறுஎன்பதற்கு,ஆகாயத்தையளாவியஎனப்பொருள்கூறினுமாம்.

ஆய வெற்பினில் வீரவா குப்பெய ரடலோன்
போய பூழையுள் மற்றவர் யாவரும் புகலுந்
தீய தொல்வரை முன்னவற் கிழைத்திடு திறம்போன்
மாய மெண்ணில புரிதலு மயங்கியே வதிந்தார்.

(இ-ள்.) அந்தக் கிரவுஞ்சகிரியில் வல்லமைபொருந்திய வீரவாகுத்தேவர் சென்ற குகையினுள்ளே இவர்களனைவரும் பிரவேசிக்கவும், உடனே பழைமையாகியகொடிய அக்கிரவுஞ்சகிரியானது வீரவாகுத் தேவருக்குச் செய்த தன்மையைப் போலவே அநேக மாயைகளைச் செய்யவும், அதனால் அவர்களனைவரும்மயங்கி அவ்விடத்திலேயே யிருந்தார்கள்.—எ-று. (கசு)

வெற்றி வீரவா குப்பெய ரண்ணலும் வீரர்
மற்றி யாவரு மயங்கலுந் தாரகன் வாரா
வுற்று நோக்கிநம் மாயையா லிவரெலா மொருங்கே
யிற்று ளாரென மகிழ்ந்துமால் வரைமிசை யெழுந்தான்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வீரவாகுத்தேவரென்னும் முதல்வரும் மற்றையவீரர்களும் மயக்க முற்றிருக்கவும், தாரகாசுரன் வந்து அதனை உற்றுப்பார்த்து இவர்களனைவரும் நமது மாயையினால் ஒருமிக்க இறந்தார்களென்று தனக்குள் நினைத்து மகிழ்வுற்றுப்பெரிய அந்தக் கிரவுஞ்சமலையின்மீது தோன்றினான்.—எ-று. (கஎ)

அண்ட மீமிசை நின்றவா னவர்களிவ் வனைத்துங்
கண்டு கட்புனல் பனிவர வரற்றியே கலங்கிக்
கொண்ட துன்பொடு பதைபதைத் தோடினர் கூளித்
தண்டம் யாவையும் வெருவின தலைவரின் மையினால்.

(இ-ள்.) வானத்தின்மீது நின்றுகொண்டிருந்த தேவர்கள் இவையனைத்தையும் பார்த்துக் கண்களில் நீரொழுகும்படி யழுது மனங்கலங்கி மிகுந்த துன்பத்துடன் துடிதுடித்து ஓடினார்கள். தங்களுக்குத் தலைவர்க ளில்லாமையினால் பூதப்படைகளனைத்தும் அச்சமடைந்தன.—எ-று. (கஅ)

மலையின் மீமிசை யெழுதரு தாரகன் மற்றோர்
தலைமை யாகிய விரதமேல் கொண்டுதா னவர்கள்
பலரும் வந்துவந் தார்த்தனர் சூழ்தரப் பைம்பொற்
சிலைய தொன்றினை வாங்கியே செருநிலஞ் சென்றான்.

(இ-ள்.) கிரவுஞ்சமலையின்மீது தோன்றிய தாரகாசுரன் பின்பு ஒரு பெரிய இரதத்தின்மீதேறிக்கொண்டு அநேக அசுரர்கள் மிக்க ஆரவாரத்துடன் தன்னைச்சூழ்ந்து வரும்படிப் பசிய பொன்மயமான ஒருவில்லைவளைத்துப் போர்க்களத்திற்குச் சென்றனன்.—எ-று. (௯௯)

நீடு தன்சிலை நாணொலி கொண்டுநீள் சரங்கள்
கோடி கோடிமற் றொருதொடை யாகவே கொளுவி
யாடல் சேர்தரு பூதர்மேற் பொழிதலு மலமந்
தோட லுற்றனர் திசையினும் விண்ணினு முலைந்தே.

(இ-ள்.) நீண்ட தனது வில்லை நாணொலிகாட்டி நீண்ட கோடாகோடி பாணங்களைப்பூட்டி வெற்றிபொருந்திய பூதவீரர்கள்மீது ஒரேமுறையாகப் பிரயோகிக்கவும், (அப்பூதர்கள்) வலிகுன்றி எட்டுத்திக்குகளிலும் வானத்திலும் அலைந்தோடத் தொடங்கினார்கள்.—எ-று. (௧00)

ஆன காலையி னாரத னிவையகண் டழுங்கி
மேனி துண்ணென வியர்ப்புற வழிக்கொடு விரைந்து
போன விண்ணவர் தம்மொடு சென்றுபுத் தேளிர்
சேனை காவல னின்றதோர் கடைக்கூழை சேர்ந்தான்.

(இ-ள்.) அந்தச் சமையத்தில் நாரதமுனிவர் இவை யனைத்தையும் பார்த்து வருத்தமுற்றுத் தமது தேகத்தில் திடீரென்று வியர்வையுண்டாகும்படி நடந்து தமக்கு முன்னமே விரைவில் சென்ற தேவர்களுடன் கலந்து போய்த் தேவசேனாதிபராகிய ஸ்ரீசண்முகப்பெருமா னெழுந்தருளியிருக்கின்ற கடைப்படையை யடைந்தனர்.

அரிது மாதவம் புரிதரு நாரத னடலின்
விரவு மாயிரம் பூதவெள் ளத்தொடு மேவுங்
கருணை சேரறு முகத்தனைக் கண்டுகண் களித்துச்
சுரர்க ளோடுபோ யிறைஞ்சியே யினையன சொல்வான்.

(இ-ள்.) அருமையாகிய பெரிய தவத்தைச் செய்கின்ற நாரதமுனிவர் பலம்பொருந்திய ஆயிரம் வெள்ளம் பூதர்களுட னெழுந்தருளியிருக்கின்ற கருணாநிதியாகிய ஸ்ரீ சண்முகப்பெருமானைத் தரிசித்துக் கண்களிகூர்ந்து தேவர்களுடன் சென்று வணங்கி இவ்வார்த்தைகளைக் கூறுகின்றனர்.—எ-று. (௧0௨)

ஐய நின்படை வீரர்கள் பெருஞ்சம ராடி
வெய்ய தானவர் தானைகள் வரவர வீட்டிச்
செய்ய மந்திரித் தலைவரை யமைச்சரைச் செற்றுப்
பொய்யின் மொய்ம்புடைத் தாரகன் றன்னொடும் பொருதார்.

(இ-ள்.) ஐயனே! தேவரீரது படைவீரர்கள் பெரும்போர் புரிந்து மேலுமேலு மெதிர்த்துவந்த கொடிய அசுரப்படைகளைக் கொன்று, சிறந்த தலைமைபொருந்திய மந்திரிகளையும் அமைச்சர்களையு மழித்து உண்மையான வல்லமையை யுடைய தாரகாசுரனுடனும் எதிர்த்துப் போர்செய்தார்கள்.—எ-று. (௧0௩)

தலைக்க ணாகிய வீரனுந் தம்பியர் பிறரு
மிலக்க வீரரும் பாரிடத் தலைவர்கள் யாரும்
புலைக்கொ டுந்தொழிற் றாரகன் றன்னொடும் பொரத்தன்
மலைக்க ணுய்த்தன னவர்தமைச் சூழ்ச்சியின் வலியால்.

(இ-ள்.) முதன்மையாகச் சென்ற வீரவாகுத்தேவரும் அவரது தம்பியர்களும் இலக்ஷம்வீரர்களும் பூதகணத்தலைவர்களும் மற்றையர்களும் கொடுமையாகிய புலைத்தொழிலினையுடைய தாரகாசுரனோடு போர்செய்யவும், அவன் தனது மாயையின் வல்லமையினால் அவர்களைத் தனது கிரவுஞ்சமலையில் சேர்த்தனன்.—எ-று. ()

உய்த்த காலையி லவுணனு கியகிர வுஞ்ச
மெத்து மாயைக ளனையவர்க் கிழைத்தலும் வெருவிப்
பித்த ராமென மயங்கினர் போலுமாற் பின்ன
ரித்தி றந்தனை யுணர்ந்தனன் றாரக னென்போன்.

(இ-ள்.) அவ்வாறு சேர்த்தபொழுது அசுரனாகியகிரவுஞ்ச மலையானது மிகுந்த மாயைகளை அவர்களிடத்திற் செய்யவும், அவர்கள் பயந்து பித்தர்களைப்போல மயங்கினார்கள். பின்பு, தாரகாசுரன் இத்தன்மையையுணர்ந்தனன்.—எ-று. (௧௦௬)

தெரிந்து தாரகன் மகிழ்வொடு பறந்தலை சென்று
துரந்து நம்பெருந் தானையைக் கணைமழை சொரிய
முரிந்து போயின நிகழ்ச்சியீ துயிர்த்தொகை முற்று
மிருந்த நாயக வறிதியே யாவையு மென்றான்.

(இ-ள்.) தாரகாசுரன் இதனையறிந்து மகிழ்ச்சியோடும் போர்க்களத்தையடைந்து நமதுபெரிய சேனைகளைத்துரத்திப் பாணவருஷங்களைப் பிரயோகித்தலும் நமது சேனைகள்தோற்றோடின. இதுநடந்தசங்கதி. எவ்விடங்களிலும் நிறைந்துள்ள எமதாண்டவரே! தேவரீர் இவையனைத்தும்அறிவீரன்றோ? என்று கூறினார்.—எ-று.

என்ற காலையி னாரத னுள்ளமு மிமையோர்
நின்று தாமயர் கின்றது மமரர்கோ னெஞ்சிற்
றுன்று சோகமு நான்முக னாதியோர் துயரு
மொன்ற நோக்கியே யறுமுகப் பண்ணவ னுரைப்பான்.

(இ-ள்.) இவ்வாறு கூறியபொழுது, ஸ்ரீ சண்முகக்கடவுள் நாரதமுனிவரது மனத்தையும் தேவர்கள் எதிரில் நின்று சோர்ந்திருத்தலையும், தேவேந்திரனது மனத்திற்பொருந்தியுள்ள வருத்தத்தையும், பிரமனாதியர்களது துன்பத்தையும் பொருந்தப்பார்த்து உரைத்தருள்வாராயினர்.—எ-று. (௧௦௭)

வேறு.

ஆருமிது கேண்மினம ராடுகள னேகித்
தாரகனை வேல்கொடு தடிந்தவுணர் வைகு
மோரரண மானகிர வுஞ்சகிரி செற்றே
வீரர்தமை யோரிறையின் மீட்டிடுவ னென்றான்.

(இ-ள்.) நாம் உரைப்பதனை நீங்களனைவருங் கேளுங்கள், போர்க்களத்திற்குச்சென்று வேலாயுதத்தைக்கொண்டு தாரகாசுரனைக்கொன்று,அசுரர்கள் வசிக்கின்றகாவலையுடையதாகிய கிரவுஞ்சத்தையும் அழித்து, ஒரு கணப்பொழுதுக் குள்ளே நமது வீரர்களையும் மீட்போம் என்று அருளிச்செய்தனர்.—எ-று. (௧௦௮)

எந்தையிவை கூறுதலும் யாருமவை தேர்ந்து
சிந்தைபுரி கின்றதுயர் செற்றுமுடி வில்லா
அந்தமில் மகிழ்ச்சியுட னாடியிசை பாடிக்
கந்தனடி வந்தனை புரிந்தனர் களிப்பால்.

(இ-ள்.) எமது தந்தையாகிய முருகக்கடவுள் இவ்வார்த்தைகளை யருளிச் செய்யவும், அவற்றை யாவர்களு முணர்ந்து தங்கள் மனத்திற் பொருந்திய துன்பங்களை யொழித்து, கெடாத பெருங்களிப்பினுல் முடிவில்லாத மகிழ்வோடும் ஆனந்தக் கூத்தாடியும் இசைகளைப்பாடியும் அவ்வெமது முருகக்கடவுளது திருவடிகளைவணங்கினார்கள்.—எ-று. (க0கூ)

கந்தமுரு கேசனது காலைமுது பாகாய்
வந்தவொரு வந்தினை மகிழ்ச்சியொடு நோக்கிச்
சிந்தைதனின் முந்துமுவகை தேரதனை வல்லே
யுந்துதி விரைந்தென வுரைத்தருள லோடும்.

(இ-ள்.) அப்பொழுது முருகக்கடவுள் பெரிய சாரதியாக வந்துள்ள வாயுதேவனை யன்புடன் பார்த்தருளி நீ மனோவேகத்திலும் அதிவேகமாகச் செல்லும்படி இரதத்தை விரைந்தோட்டக் கடவையென்று கட்டளையிட்டருளுதலும்.—எ-று.

இதுமுத லிரண்டு பாடலுங் குளகம். (கக0)

என்னவினி தென்றுதொழு தேழெழுவ கைத்தாந்
தன்னினம தாகியவர் தாங்கள்புடை போதக்
கொன்னுனைய தாமுளவு கோல்கயிறு பற்றித்
துன்னுபரி மானிரைக டூண்டிமிக வார்த்தான்.

(இ-ள்.) முருகக்கடவுள் இவ்வாறருளிச்செய்யவும், வாயுதேவன் அவ்வாறே நல்லதென்று நமஸ்கரித்துத்தனது அம்சங்களாயுள்ள நாற்பத்தொன்பதுவாயுக்களும் தன்னைச்சூழ்ந்துவரும்படிக்கூர்மையாகியசாட்டியினையும், கயிற்றினையுங் கையிற்பிடித்துக்கொண்டு, நெருக்கமாகக் கட்டியுள்ள குதிரைகளைத் தட்டியோட்டி மிகுதியும் ஆரவாரித்தான்.—எ-று. (ககக)

வேறு.

ஆன காலைதனி லண்டமும் வையந்
தானு மங்குள தடங்கிரி யாவு
மேனை மாகடலு மெண்டிசை யுள்ள
மான வேழமு நடுங்கின மன்றே.

(இ-ள்.) அந்தச் சமையத்தில் அண்டமும், உலகமும், அங்குள்ள பெரிய மலைகளும், மற்றைப் பெரிய கடல்களும் எட்டுத்திக்குகளிலுமுள்ள பெரிய அஷ்டகஜங்களும் நடுங்கின.—எ-று.

ஏனைமா கடல் என்றது, சப்த சமுத்திரங்களும் பெரும்புறக்கடலுமாம். ()

வாவு கின்றபல மாநிரை தூண்டத்
தேவர் தங்கள்சிறை தீரிய செல்வோன்
மேவு தொல்லிரதம் விண்ணெறி கொண்டே
யேவ ரும்புகழ வேகிய தன்றே.

(இ-ள்.) தாவிச்செல்கின்ற பல குதிரைகளை யோட்டவும், தேவர்களது சிறையினை நீக்கும்பொருட்டுச் சென்றருளும் முருகக்கடவுள் எழுந்தருளிய பழைமையாகிய இரதமானது ஆகாயவழியாய் யாவர்களுந் துதிக்கும்படிச் சென்றது.

ஆதி யங்குமர னவ்வழி பொற்றேர்
மீது செல்லுதலும் விண்முகில் பல்வே
றோது மவ்வணமுட னுற்றென வானிற்
பூத சேனைபுடை போயின வன்றே.

(இ-ள்.) முதல்வராகிய முருகக்கடவுள் பொன்மயமாகிய இரதத்தின்மேல் ஆகாயவழியாகச் சென்றருளுதலும், அவ்வாகாயத்திலுள்ள மேகங்கள் பலவகையாகிய நிறங்களுடன்சென்றாற்போல ஆகாயத்தில் பூதப்படைகள் அவரருகில் சூழ்ந்து சென்றன.—எ-று. (சுகச)

போர ழிந்துபுற கிட்டெதிர் பூத
ராரு நேர்ந்துதொழு தாற்றலொ டெய்த
நார ணன்றனது நன்மரு காவோன்
றூர கன்றிகழ் சமர்க்கள முற்றான்.

(இ-ள்.) போரில்தோற்றுப்புறங்கொடுத்துத் தமக்கெதிரில்வந்தபூதர்களனைவரும் எதிரிலடைந்து வணங்கி வல்லமையுடன் பின்றொடர்ந்து வர, திருமால்மருகராகிய முருகக்கடவுள் தாரகாசுரன் நிற்கின்ற போர்க்களத்தை யடைந்தருளினார்.

கவன மோடுபடர் காலினு முந்திச்
சிவன்ம கன்றனது சேனைய தானோ
ருவரி யாமெனவு றுந்திற நோக்கி
யவுணர் தானையை யணிந்தெதிர் சென்றார்.

(இ-ள்.) சிவகுமாரராகிய முருகக்கடவுளது சேனவீரர்களா யுள்ளவர்கள் விரைந்து செல்லுகின்ற வாயுவைப்பார்க்கிலும் விரைவாகக் கடலைப்போல வருகின்ற தன்மையைப்பார்த்து, அசுரர்கள் தங்களுடையசேனைகளை அணிவகுத்துக்கொண்டு எதிரில் சென்றார்கள்.—எ-று. (சுகசு)

சகந்து திக்கவரு சாரதர் தாமு
மகந்தை யுற்றவவு ணத்தொகை யோரு
மிகந்த வன்மையொ டெதிர்ந்திக லெய்தி
வெகுண்டு பேரமர் விளைத்திட லுற்றார்.

(இ-ள்.) உலகத்தார் துதிக்கும்படி வந்த பூதர்களும், அகங்காரம் பொருந்திய அசுரர்கூட்டங்களும் மிகுந்த பராக்கிரமத்துடன் எதிர்த்துப் பகைகொண்டு கோபித்துப் பெரும்போர் செய்தார்கள்.—எ-று.

இகத்தல்-அளவுகடத்தல். (சுகஎ)

கரங்கொ ணேமிகள் கணிச்சிக டீவாய்ச்
சரங்க ளாதியன தானவர் விட்டா
ருரங்கொண் மால்வரைக ளோங்குமெ ழுக்கண்
மரங்கள் விட்டனர் மறங்கெழு பூதர்.

(இ-ள்.) அசுரர்கள் தங்கள்கைகளிலேந்திய சக்கரங்களையும், மழுக்களையும், தீயமைந்த வாயினையுடைய பாணமுதலியவைகளையும் விட்டார்கள்; கொடுமைமிக்க பூதவீரர்கள் பலம்பொருந்திய பெரியமலைகளையும் உயர்ந்த எழுக்களையும் விருக்ஷங்களையும் விட்டார்கள்.—எ-று. (சுகஅ)

முரிந்த தேர்நிரை முடிந்தன மாக்க
ளெரிந்த தானவர் நெடுந்தலை சோரி
சொரிந்த பூதர்மெய் துணிந்தன வானிற்
றிரிந்த பாறுகள் செறிந்தன வன்றே.

(இ-ள்.) இரதவரிசைகள் முரிந்தன; குதிரைகளிறந்தன; அசுரர்களது பெரிய தலைகள் நொறுங்கின; உதிரப்பெருக்குக ளொழுகின; பூதவீரர்களது உடல்களறுபட்டன; ஆகாயத்திற் பருந்துகள் நெருங்கிப்பறந்தன.—எ-று. (கசக)

நிறங்கொள் செங்குருதி நீத்தம தாகிக்
கறங்கி யோடின கவந்தமோர் கோடி
மறங்கொ டாடவெ வயின்ரொறு மாகிப்
பிறங்கு கின்றன பிணங்கெழு குன்றம்.

(இ-ள்.) செந்நிறம் பொருந்திய உதிரங்கள் வெள்ளமாக இரைச்சலிட்டோடின; ஒருகோடிக் கவந்தங்கள் வீராவேசங்கொண்டு ஆடின; பக்கங்களிலெல்லாம் பிணமலைகள் விளங்கின.—எ-று. (கஉ0)

அனைய வாறிவ ரருஞ்சம ராற்றப்
புனையல் வாகையுள பூதர்க டம்மால்
வினையம் வல்லவுணர் வெவ்வலி சிந்தி
யினைத லோடுமிரி குற்றன ரன்றே.

(இ-ள்.) அவ்வாறு இவ்விருதிறத்து வீரர்களும் அருமையாகிய போரைச் செய்யவும், வெற்றிமாலையையணிந்த பூதவீரர்களால் வஞ்சனையில் மிகுந்த அசுரர்கள் கொடிய வல்லமையனைத்து மொழிந்து வருத்தத்துடன் ஓடினார்கள்.—எ-று. (கஉக)

தன்ப டைத்தொலைவு தாரக னோக்கிக்
கொன்ப டைத்தருனி விற்குனி வித்தே
மின்ப டைத்தபல வெங்கணை தூவி
வன்ப டைக்கலாம் வருந்த நடந்தான்.

(இ-ள்.) தாரகாசுரன் தனது சேனைகள் தோற்றோடிய தன்மையைப் பார்த்து வலிமைபொருந்திய வில்லைவளைத்து ஒளிபொருந்திய பலபாணங்களைப் பிரயோகித்து வன்மைமிக்க பூதகணங்கள் வருத்தப்படும்படி சென்றனன்.-எ-று. (கஉஉ)

நடந்தெ திர்ந்தகண நாதரை யெல்லாந்
தொடர்ந்து பல்கணை சொரிந்து துரந்தே
யிடந்தி கழ்ந்தவிமை யத்திறை நல்கு
மடந்தை தந்ததிரு மைந்தன்மு னுற்றான்.

(இ-ள்.) பூமியில் நடந்து எதிர்த்துப் போர்செய்கின்ற பூதகணத்தலைவர்களனைவரையும் பின்றொடர்ந்துசென்று பல பாணங்களை விட்டுத் துரத்தி, விசாலமாகிய பர்வதராஜபுத்திரியாகிய உமாதேவியாரது திருப்புதல்வராகிய முருகக்கடவுளுக்கு முன்னே வந்தனன்.—எ-று. (கஉங)

உற்ற காலைதனி லொற்றரை நோக்கிச்
சற்று நீதியறு தாரக வெய்யோன்
செற்ற மென்னுமழல் சிந்தையின் மூள
மற்றி வன்கொலரன் மாமக னென்றான்.

(இ-ள்.) அவ்வாறுவந்தபொழுது நீதியென்பது சிறிதுமில்லாதவனாகிய அத்தாரகனென்னுங்கொடியவன் தனது தூதுவர்களைப் பார்த்துக் கோபாக்கினியானது மனத்தில் அதிகரிக்க, இவன்தானோ சிவன்குமாரனென்று வினவினான்.—எ-று.

என்ன லோங்குமர னிங்கிவ னேயா
மன்ன வென்றடலு மற்றவ னேறாங்

துன்னு தேர்கடிது நூண்டி யெவர்க்கு
முன்ன வன்மதலை முன்னுற வந்தான்.

(இ-ள்.) தாரகன் இவ்வாறுவினவுதலும், (அத்தூதுவர்கள்) அரசனே! இவன்தான் குமரன் என்று கூறவும், தாரகாசுரன் தான் ஏறிவருகின்ற இரதத்தை விரைவாகநடத்திக்கொண்டு எத்தகையோர்க்கும் முதல்வராகிய சிவபெருமானது திருப்புதல்வராகிய முருகக்கடவுளுக்கு முன்னே வந்தவன்.—எ-று. (கஉரு)

வேறு.

முழுமதி யன்ன வாறு முகங்களு முந்நான் காகும்
விழிகளி னருளும் வேலும் வேறுள படையின் சீரு
மழகிய கரமீ ராறு மணிமணித் தண்டை யார்க்குஞ்
செழுமல ரடியுங் கண்டா னவன்றவஞ் செப்பற் பாற்றோ.

(இ-ள்.) பூரணச்சந்திரன் போன்ற ஆறு திருமுகங்களையும், பன்னிரண்டு திருக்கண்களிலும் விளங்குகின்ற கருணையையும், வேலாயுதத்தையும், மற்றைய ஆயுதங்களின் சிறப்பையும், அழகியபன்னிரண்டு திருக்கரங்களையும், அழகிய இரத்தினங்களிழைத்த தண்டைகள் முழங்குகின்ற சிறந்த தாமரைமலர்போன்ற திருவடிகளையும் பார்த்தனன்; ஆதலால், அந்தத் தாரகனது தவத்தின் மேன்மை ஒருவரால் புகழ்ந்து சொல்லத்தக்க தன்மையை யுடையதோ?—எ-று. (கஉசு)

தற்பம துடைய சிந்தைத் தாரக னினைய வாற்றாற்
சிற்பர மூர்த்தி கொண்ட திருவுரு வனைத்து நோக்கி
யற்புத மெய்தி நம்மே லமர்செய வந்தா னென்றாற்
கற்பனை கடந்த வாதிக் கடவுளே யிவன்கொ லென்றான்.

(இ-ள்.) அகங்காரம் பொருந்திய மனத்தினையுடைய தாரகாசுரன் இவ்வண்ணம் ஞானமுதல்வராகிய முருகக்கடவுள் கொண்டருளிய திருவுருவனைத்தையும் பார்த்து ஆச்சரியமடைந்து இவன் நம்மீது போர்செய்யும்படிவந்தனனென்றால் கற்பனைதீதாகிய முதற்கடவுள் இவன்தானோவென்று சிந்தித்தான்.—எ-று. (கஉஎ)

இந்தவா றுன்னிப் பின்னர் யார்க்குமே லாகு மீசன்
றந்தபேர் வரமும் வீரத் தன்மையும் வன்மைப் பாடு
முந்துதாம் பெற்ற சீரு முழுவது நினைந்து சீறிக்
கந்தவே டன்னை நோக்கி யினையன கழற லுற்றான்.

(இ-ள்.) முதலில் இவ்வண்ணம் நினைத்துப் பின்பு யாவர்க்கும் மேலாகிய சிவபெருமான் கொடுத்தருளிய வரமும், வீரமும், வல்லமையும், முன்னமே தானடைந்திருக்கின்ற செல்வமும் மற்றுமுள்ளவைகளையு மெண்ணிக் கோபங்கொண்டு முருகக்கடவுளைப் பார்த்து இவ்வார்த்தைகளைக் கூறத் தொடங்கினான்.—எ-று. ()

நாரணன் றனக்கு மற்றை நான்முகன் றனக்கும் வெள்ளை
வாரணன் றனக்கு மல்லான் மதிமுடி யமல னுக்குந்
தாரணி தனிலெ மக்குஞ் சமரினை யிழைப்ப விங்கோர்
காரண மில்லை மைந்தா வந்ததென் கழறு கென்றான்.

(இ-ள்.) சிறுவனே! திருமாலுக்கும், நான்குமுகங்களையுடைய பிரமனுக்கும், வெள்ளை யானையையுடைய இந்திரனுக்குமேயல்லாமல், உலகத்தில் சந்திரசேகரராகிய சிவபெருமானுக்கும் எங்களுக்கும் போர்செய்யும்படி இங்கு ஒருகாரணமுமில்லை. (அப்படியிருக்க)நீவந்தகாரணம்யாது? சொல்லக்கடவையென்றுவினவினான்.

அறவினை புரிந்தே யார்க்கு மருளொடு தண்டஞ் செய்யு
மிறையவ னருகு மீச விமையவர் தம்மை நீங்கள்
சிறையிடை வைத்த தன்மை திருவுளங் கொண்டு நுந்தம்
விறலொடு வன்மை சிந்த விடுத்தன னெம்மை யென்றான்.

(இ-ள்.) (அதற்கு முருகக்கடவுள் அத்தாரகனை நோக்கி) நீதியை நடத்தி யாவர்க்கும் அருளையும் தண்டத்தையுஞ் செய்கின்ற முதல்வராகிய சிவபெருமான் நீங்கள் தேவர்களைச் சிறையில்வைத்திருக்கின்ற தன்மையைத் திருவுள்ளங்கொண்டு உங்களுடைய வெற்றியையும் வல்லமையையும் அழிக்கும்பொருட்டு எம்மை யனுப்பி யருளினர் என்று கூறியருளினர்.—எ-று. (௧௬0)

வேறு.

கூரிய வேற்படைக் குமர நாயகன்
பேரரு ளில்லமையா லினைய பேசலும்
போரினை யிழைத்திடும் பூட்கை மாமுகத்
தாரக னென்பவன் சாற்றன் மேயினான்.

(இ-ள்.) கூர்மையாகிய வேலாயுதத்தை யேந்திய குமாரக்கடவுள் பெருங் கருணையுடன் இவ்வாறு அருளிச்செய்யவும், போர்செய்யத்தக்க யானை முகத்தினையு லடைய தாரகாசுரன் சொல்லத்தொடங்கினான்.—எ-று. (௧௬௧)

செந்திருத் திகழுமார் புடைய செங்கணான்
சுந்தரக் கலுழன்மேற் றோன்றிப் போர்செய்தே
யந்தரக் கதிர்புரை யாழி யுய்த்ததென்
கந்தரத் தணிந்தது காண்கி லாய்கொலோ.

(இ-ள்.) செல்விய இலக்ஷுமிவிளங்குகின்ற மார்பினையுடைய திருமால்அழ கிய கருடன்மீது ஏறிவந்து என்னுடன் போர்செய்து ஆகாயத்தி லுலாவுகின்ற சூரிய னைப்போன்ற தனதுசக்கரம் விட்டதை யான் என் கழுத்தி லணிந்துகொண்டிருப்ப தை நீ பார்க்கவில்லையோ?—எ-று. (௧௬௨)

இன்றுகா றெம்முட னிகலிப் போர்செயச்
சென்றுளார் யாவருஞ் சிறிது போழ்தினுட்
பொன்றுவா ரிரிந்தனர் போவ ரல்லது
வென்றுளா ரிலையது வினவ லாய்கொலோ.

(இ-ள்.) இன்று வரையிலும் எம்முடன் பகைத்துப் போர்செய்ய வந்தவர் கள் யாவரும் சற்று நாழிகைக்குள்ளே இறப்பார்கள்; அன்றித் தோற்பார்களேயல்ல து; எம்மை வென்றவர்களேகிடையாது; இதனை நீகேட்டதில்லையோ?—எ-று.(௧௬௩)

முட்டிவெஞ் சமரினை முயல முன்னநீ
விட்டிடு தலைவரை வென்று வெற்பினிற்
பட்டிட வியற்றினன் பலக ணங்களை
யட்டன னவற்றினை யறிந்தி லாய்கொலோ.

(இ-ள்.) எதிர்த்துக் கொடும்போர் செய்யும்பொருட்டு முன்னம் நீ யனுப் பிய தலைவர்களை நான் வெற்றிகொண்டு மலையில் இறக்கும்படி செய்தேன்; அன்றி யும், அநேக கணங்களையுங் கொன்றேன்; அவற்றை நீ யறியவில்லையோ?—எ-று.

ஆகையா லெம்முட னமரி யற்றியே
சோகம தடையலை சூல பாணிபா

லேகுதி பாலநீ யென்று கூறலும்
வாகையங் குமரவேள் மரபிற் கூறுவான்.

(இ-ள்.) ஆதலால் எம்முடன் போர்செய்து மூர்ச்சிக்கவேண்டாம், சிறுவனே! நீ (உனது தந்தையாகிய) சிவபெருமானிடத்திற்குச் செல்லக்கடவை யென்று கூறவும், வெற்றியினையுடைய அழகிய குமாரக்கடவுள் முறைப்படி அருளிச்செய்கின்றார்.—எ-று. (௧௬௫)

தாரணி மறையவன் றதீசி தன்மிசை
நாரணன் விடுத்ததோர் நலங்கொ ளாழிதன்
கூரினை யிழந்துபோய்க் குலாலன் சக்கர
நீர்மைய தானது வினவ லாய்கொனீ.

(இ-ள்.) மாலையையணிந்த வேதியனாகிய ததீசியின்மேல் திருமால் விட்ட நன்மைபொருந்திய சக்கரமானது தனது கூர்மழுங்கிக்கெட்டுக் குலாலன் சக்கரம் போலப் பயனற்றொழிந்ததன்மையை நீ கேட்டதில்லையோ?—எ-று. (௧௬௬)

சூற்புயன் மேனியான் றுங்கச் செங்கையின்
பாற்படு திகிரிபோற் பழியிற் றுஞ்சுமோ
வேற்புறு படைக்கெலா மிறைவ னாகுநம்
வேற்படை நின்னுயிர் விரைவி னுண்ணுமால்.

(இ-ள்.) தகுதியாகிய ஆயுதங்களுக்கெல்லாம் அரசாயுள்ள நமது வேலாயுதமானது சூல்கொண்ட கரிய மேகம்போலும் நிறத்தினையுடைய திருமாலினது உயர்வாகிய செவ்விய கரத்திற்பொருந்திய சக்கரத்தைப்போலப் பழிப்புக்கிடமா யழியுமோ? உனது உயிரை விரைவில் உண்டுவிடும்.—எ-று. (௧௬௭)

உங்கள்பே ராற்றலிவ் வுலகை வென்றன
விங்குநாம் வருதலு மிமைப்பின் மாய்ந்தன
வங்கண்மா ஞாலமுண் டமரு மாரிருள்
பொங்குபே ரொளிவர விளிந்து போனபோல்.

(இ-ள்.) அழகிய இடமகன்ற பெரிய உலகத்தை விழுங்கிப் பொருந்தியிருந்த அரிய இருளானது மிகுந்த பேரொளியினையுடைய சூரியன் உதயமானவுடனே கெட்டொழிந்த தன்மைபோல, (இதுவனையில்) உங்கள் சாமர்த்தியங்கள் இவ்வுலகத்தை வென்றன; (இப்பொழுது) நாம் இங்கு வருதலும் கணப்பொழுதிற்குள்ளே அழிந்தன.—எ-று. (௧௬௮)

ஈட்டிய மாயைக ளெவையுந் தன்வழிக்
காட்டிய கிரியையுங் கள்வ நின்னையுந்
தீட்டிய வேல்கொடு செற்றுச் சேனையை
மீட்டிடு கின்றனன் விரைவி னுலென்றான்.

(இ-ள்.) வஞ்சகனே! எல்லா மாயைகளையுஞ் செய்து தன் வழியாகவே உலகத்திற் காட்டிய கிரவுஞ்ச மலையையும், உன்னையும் கூர்மைபொருந்திய வேலைக்கொண்டு கொன்று விரைவினில் சேனைகளை மீட்கின்றோம் என்றருளிச் செய்தனர்.

என்றலுஞ் சீறியே யிகலித் தாரகன்
குன்றுறழ் தன்சிலை குனியக் கோட்டியே
மின்றிகழ் நாணொலி யெடுப்ப விண்மிசைச்
சென்றிடு மமரருந் தியக்க மெய்தினார்.

(இ-ள்) முருகக்கடவுள் இவ்வாறு அருளிச் செய்யவும், தாரகாசுரன் பகைத்துக் கோபித்து, மலையை யொத்த தனது வில்லை வளைத்து மின்போன்ற நாணொலி காட்டவும், ஆகாயத்திற் செல்லுகின்ற தேவர்களும் மயக்கமுற்றார்கள்.—எ-று.

விண்மிசைச் சென்றிடு மமரருந் தியக்கமுற்றனர் என்றதனால் மண்மிசை வாழும் மற்றையர்களும் மயங்கித் துன்புற்றன ரென்று கூறியதாயிற்று. (௪௬0)

எய்திய காலையி லெந்தை கந்தவேள்
கைதனி லிருந்தமே நார் கார்முகந்தனை
மொய்தனில் வாங்கிநாண் முழக்கஞ் செய்தலும்
மைதென வுலகெலா மழுங்கிற் றென்பவே.

(இ-ள்.) இவ்வாறு நாணொலி காட்டிய சமையத்தில் எமது தந்தையாகிய கந்தப்பெருமான் தமது திருக்கரத்திலேந்திய ஒரு வில்லை வல்லமையோடு வளைத்து நாணொலி காட்டவும் உலகமனைத்தும் விரைவாக வருந்தின. —எ-று. (௪௬௧)

நாரியின் பேரொலி நாதன் கோடலும்
மாரனன் முதலினோர் தாமு மஞ்சினார்
பேருல கெங்கணும் பேதுற் றேங்கின
தாரக முதல்வனுந் தலைதுள க்கினான்.

(இ-ள்.) முருகக்கடவுள் மிகுந்த நாணோசையைக் காட்டுதலும், பிரமன் முதலியதேவர்களும் அஞ்சினார்கள்; பெரிய உலகமுழுதும் நடுங்கி யேக்கமுற்றன; தாரகாசுரனும் தன் தலையை யசைத்தனன்.—எ-று. (௪௬௨)

துளக்கிய தாரக சூரன் கைத்தலங்
கொளற்குரி வில்லுமிழ் கொள்கைத் தாலென
வளக்கதிர் நுனைகெழு வயிர வான்கணை
யளக்கரு மெண்ணில வார்த்துத் தூண்டினான்.

(இ-ள்.) அவ்வாறு தலையை யசைத்த தாரகாசுரன் தன் கையினிடத்திற் கொள்ளுதற்குரிய வில்லானது கக்குகின்ற தன்மையைப்போல் வளப்பமிக்க ஒளியோடு கூடிய கூர்மையினையுடைய வயிரம்பொருந்திய அளவில்லாத அநேக பாணங்களை ஆரவாரித்து விட்டனன்.—எ-று. (௪௬௩)

ஆயதோர் காலையி லாறு மாமுகன்
மீயுயர் சிலைதனின் விரைவி லாயிரஞ்
சாயகந் தூண்டியே தார காசுர
னேயின பகழிக ளியாவுஞ் சிந்தினான்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமையத்தில் ஸ்ரீசண்முகக்கடவுள் மிகவும் உயர்ந்த தமது வில்லில் விரைவாக ஆயிரம் பாணங்களைத் தொடுத்துவிட்டுத் தாரகாசுரன் விட்டபாணங்க ளனைத்தையும் அழித்தனர்.—எ-று. (௪௬௪)

சிந்திய காலையிற் செயிர்த்துத் தாரக
னுந்தினன் பின்னரு மொராயி ரங்கணை
கந்தனு மனையது கண்டு வல்லையி
னைந்திரு பகழிதொட் டவற்றை நீக்கினான்.

(இ-ள்.) அவ்வாறு அழித்தபொழுது தாரகாசுரன் கோபங்கொண்டு பின்னும் ஆயிரம் பாணங்களை விட்டனன்; அதனைக் குமாரக்கடவுள்பார்த்து விரைவாகப் பத்துப் பாணங்களைவிட்டு அவைகளை விலக்கினார்.—எ-று. (௪௬௫)

மீட்டுமத் தாரகன் விசிகம் வெஞ்சிலை
பூட்டிய வாங்கலும் புராரி காதல
னீட்டமொ டொருகணை யேவி யாங்கவன்
றோட்டுணை வில்லினைத் துண்ட மாக்கினான்.

(இ-ள்.) பின்னும் அந்தத் தாரகன் கொடிய வில்லில் பூட்டிப் பிரயோகிக்கும்படிப் பாணங்களை யெடுக்கவும் சிவகுமாரராகிய முருகக்கடவுள் வலிவோடும் ஒரு பாணத்தைவிட்டு அவன் தோளோடு சம்பந்தமான வில்லை வெட்டியெறிந்தனர். ()

வேறு.

அங்கோர் சிலையைக் குனித்தானது காலை தன்னி
லெங்கோ முதல்வ னொருபாணியி னேந்து வில்லிற்
செங்கோல் வகையா யிரம்பூட்டினன் செல்ல வுய்த்தான்
வெங்கோ னடாத்தி வருதாரக வெய்யன் மீதில்.

(இ-ள்.) அப்பொழுது, தாரகாசுரன் வேறொரு வில்லை யெடுத்துவளைத்தனன்; அத்தருணத்தில் எமது முதல்வராகிய முருகக்கடவுள் ஒரு திருக்கரத்திற்பிடித்திருக்கின்ற வில்லில் செவ்விய ஆயிரம் பாணங்களைத் தொடுத்துக் கொடுங்கோல் செலுத்தி வந்த தாரகாசுரன்மேல் தாக்கும்படி விடுத்தனர்.—எ-று. (கசஎ)

சேரார் பரவுந் திறல்வேலவன் செய்கை நோக்கித்
தாரார் முடித்தா ரகவீரன் றனது வில்லி
லோரா யிரம்வா ளிகள்பூட்டின னெல்லை யுய்த்து
நேராய் விரவுங் கணையாவையு நீறு செய்தான்.

(இ-ள்.) சத்துருக்கள் வணங்குகின்ற வீரம்பொருந்திய குமாரக்கடவுளினது செய்கையைப் பார்த்து மாலையை யணிந்த தாரகாசுரன் தனது வில்லில் ஆயிரம் பாணங்களைத் தொடுத்துப் பிரயோகித்து எதிரில் நெருங்கிவந்த பாணங்களனைத்தையும் நீறாக்கினான்.—எ-று. (கசஅ)

வெய்யா னநந்தங் கணைதூண்ட விமல னல்குந்
துய்யா னவைக ளறுத்துக் கணைகோடி தூண்டி
மையா ரவுணர் புகழ்தாரக மான வேழ
மெய்யாகும் வண்ணஞ் செறித்தானவன் யாக்கை யெங்கும்.

(இ-ள்.) கொடியவனாகிய தாரகாசுரன் அநேக பாணங்களை விடவும், சிவகுமாரராகிய முருகக்கடவுள் அதனைக்கண்டித்துக் கோடாகோடி பாணங்களைவிட்டுக் கருநிறம்பொருந்திய அசுரர்கள் புகழ்கின்ற தாரகனாகியயானையானது முள்ளம்பன்றியாகும் வண்ணம் உடல் முழுவதும் பாணங்களால் நிரப்பியருளினார்.—எ-று.

தாரகாசுரனாகிய யானையின்மேல் குமாரக்கடவுள் பிரயோகித்தபாணங்கள் தைத்திருத்தல் முள்ளம்பன்றியினுடம்பில் முட்சிறகிருத்தல் போன்றிருந்ததென்பார், 'தாரகமானவேழ மெய்யாகும் வண்ணஞ் செறித்தானவன்யாக்கையெங்கும்' என்று கூறினார். எய்-முள்ளம்பன்றி. (கசக)

ஒருகோடி வாளி யுடலோடு முருத்து நீச
னிருகோடி வாளி விடவன்னதை யேவி னீக்கி
முருகோ டியதா ரகமோசன் முகங்கொள் கையும்
பொருகோடும் வீழ விடுத்தானிரு புங்க வாளி.

(இ-ள்.) ஒரு கோடிபாணங்கள் தன்னுடம்பில் படதேலும், நீசனாகிய தாரகாசுரன் கோபித்து இரண்டுகோடி பாணங்களைப் பிரயோகிக்க, அவற்றை முருகக்கட

வுள் தமது பாணத்தினால் அழித்து நறுமணங்கமழும் மாலையை யணிந்த தாரகாசுரனது முகத்திற் பொருந்திய துதிக்கையும், போர்செய்தற்குரிய தந்தங்களும் அற்று விழும்படி இரண்டு பாணங்களை விட்டருளினர்.—எ-று. (கஙo)

வந்தங் கிரண்டு சரமும்பட மாயை மைந்தன்
றந்தங்கள் கையோ டறலோடுந் தளர்ச்சி யெய்தி
முந்தூங் கணையா யிரந்தன்னை முனிந்து தூண்டிக்
கந்தன் றடந்தேர்ந் துவசந்துகள் கண்டு நின்றான்.

(இ-ள்.) அவ்விரண்டு பாணங்களும் வந்துபடுதலால், மாயையின் புதல்வனாகிய தாரகாசுரனது தந்தங்கள் துதிக்கையுடன் அற்றுவிழவும், அவன்வருந்தி உயர்ந்த ஆயிரம் பாணங்களைக் கோபத்துடன் விட்டுக் கந்தப்பெருமானது இரதத்திற் கட்டியிருந்த கொடியைத் துகளாக்கினான்.—எ-று. (சஙக)

மல்லற் கொடியிற் றுகண்டு மறங்கொள் வெய்யோன்
வில்லைக் கணைநான் கிரண்டா னிலமீது வீட்டித்
தொல்லைக் கனலின் கணையாயிரந் தூண்டி யன்னோன்
செல்லுற்ற தின்றேர் பரிபாகொடு சிந்தி நின்றான்.

(இ-ள்.) (முருகக்கடவுள்) தமது சிறந்த கொடியானது அறுபட்டமையை யுணர்ந்து வீரம்பொருந்திய தாரகாசுரனது வில்லினை எட்டுப் பாணங்களாலறுத்துப் பூமியில் தள்ளிப் பழமையாகிய ஆயிரம் அக்கினியாஸ்திரங்களை விட்டு அவன் ஏறிச் செல்லுகின்ற இரதம் குதிரை சாரதியென்னு மூன்றையும் அழித்தருளினர்.—எ-று.()

வேறங் கொருதேர் மிசையேறியோர் வில்லை வாங்கி
நூறைந் திருதி விசிகந்தனை நொய்தி னேவி
மாறின்றி வைகும் பரமன்வடி வான செவ்வே
ளேறுந் தடந்தேர் வலவன்புயத் தெய்த வுய்த்தான்.

(இ-ள்.) (உடனே தாரகன்) வேறொரு இரதத்தின்மேலேறி ஒரு வில்லை வளைத்து ஆயிரம் அக்கினியாஸ்திரங்களை விரைவாகச் செலுத்தி நாசரகிதராக வெழுந்தருளியிருக்கின்ற சிவபெருமானது திருவுருவமாகிய முருகக்கடவுள் ஏறிநடத்துகின்ற பெரிய தேர்ப்பாகனாகிய வாயுதேவனது தோள்களில் படும்படி விட்டனன்.—எ-று.

வென்றோர் புகழுங் குமரன்வியன் றேர்க டாவிச்
சென்றோன் வருத்தந் தெரிந்தாயிரந் தீய வாளி
வன்றோன் முகத்தா ரகனெற்றியுண் மன்ன வுய்ப்பப்
பொன்றேய் தனது தடந்தேரிற் புலம்பி வீழ்ந்தான்.

(இ-ள்.) (பஞ்சேந்திரங்களைச்) செயித்த பெரியோர்கள் புகழ்கின்ற முருகக்கடவுள், தமதுதேரைச்செலுத்துகின்ற சாரதியின் துன்பத்தையுணர்ந்து கொடிய ஆயிரம் பாணங்களை வலிய யானைமுகத்தினையுடைய தாரகாசுரனது நெற்றியில் தாக்கும்படி விட்டருளுதலும், (அவன்) பொன்மயமாகிய தனது பெரிய இரதத்தில் புலம்பிக்கொண்டு வீழ்ந்தனன்.—எ-று. (சஙச)

வீழுற் றிடலும் விழுசெம்புனல் வெள்ள மிக்கே
தாழுற்ற பாரிற் புகுந்தேபுடை சார்த லுற்ற
பாழிக் கடலிற் பரிமாமுகம் பட்ட செந்தீச்
சூழிக் களிற்றின் வதனத்தினுந் தோன்று மென்ன.

(இ-ள்.) பெரிய சமுத்திரத்திலுள்ள வடவையாகியகுதிரைமுகத்திற்பொருந்திய தீயானது முகபடாமணிந்த யானையின் முகத்திலுந் தோன்றுமென்று சொல்லும்படி (தாரகாசுரன் தேரின்மேல் புலம்பி) விழ்தலும், அவன்முகத்தினின்று மொழுகுகின்ற உதிர வெள்ளமானது மிகுந்து தாழ்ந்த பூமியிலே விழுந்து பக்கங்களில் ஓடத்தொடங்கின.—எ-று. (௧௫௫)

மன்னாகியதா ரகனங்கண் மயங்கி விழ
வென்னுன் றனது படைவீர ரதனை நோக்கிக்
கொன்னூர் சினங்கொண் டடுபோரைக் குறித்து நம்பன்
முன்னா ளுதவுந் திறன்மைந்தனைச் சூழ்ந்து கொண்டார்.

(இ-ள்.) அசுரர்கள் தலைவனாகிய தாரகாசுரன் அவ்விடத்தில் மயங்கி விழவும், அவனது சேனைவீரர்கள் அதனைப் பார்த்து அச்சந்தரத்தக்க மிகுந்த கோபங்கொண்டு போர்செய்யக்கருதி, பூர்வத்தில் சிவபெருமான் பெற்றருளிய வெற்றிபொருந்திய குமாரக்கடவுளைச் சூழ்ந்துகொண்டார்கள்.—எ-று. (௧௫௬)

சூலந் திகிரிப் படைதோமரந் தூய பிண்டி
பாலஞ் சுடர்வே லெழுநாஞ்சில் பகழி தண்ட
மாலங் கனையங் குலிசாயுத மாதி யாக
வேலும் படைகள் பொழிந்தார்த்தன ரெங்கு மீண்டி.

(இ-ள்.) அவர்களெவ்விடங்களிலுஞ் சூழ்ந்துகொண்டு சூலம், சக்கரம், தோமரம், நல்ல பிண்டிபாலம், ஒளி பொருந்திய வேல், எழு, கலப்பை, அம்பு, தண்டம், மழு, வளைதடி, வச்சிராயுதம் முதலியனவாகப் பொருந்திய ஆயுதங்களைப் பிரயோகித்து ஆரவாரித்தார்கள்.—எ-று. (௧௫௭)

கறுத்தா னவர்தஞ் செயல்கண்டுதன் கார்மு கத்தை
நிறுத்தா வளையாக் கணைமாமழை நீட வுய்த்து
மறுத்தா னுடைய கொடுந்தானவர் வாகை சிந்தி
யறுத்தான் விடுதொல்படை யாவையு மாடல் வேலோன்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வேற்படையை யேந்திய குமாரக்கடவுள் கறுவுதலையுடைய அவ்வசுரர்களது செய்கையை நோக்கித் தமதுவில்லையெடுத்து நிறுத்தி வளைத்துப் பாணவருஷங்களை மிகுதியாகப் பெய்து, குற்றம் பொருந்திய கொடிய அசுரர்களது வெற்றியையொழித்து அவர்கள் விடுகின்ற பழைமையாகிய ஆயுதங்களனைத்தையும் விலக்கியறுத்தருளினர்.—எ-று.

கார்முகம் - வில். (௧௫௮)

வெய்தாகிய திங்கணை மாரி விசாகன் மீட்டும்
பெய்தா னவுணர் முடிதன்னைப் பிறங்கு மார்பைத்
துய்தா னுறும்வா யினையங்கையைத் தோளைத் தாளைக்
கொய்தான் குருதிக் கடலெங்கணுங் கொண்ட தன்றே.

(இ-ள்.) பின்னும் முருகக்கடவுள் கொரேமாகிய பாணவருஷங்களைப் பெய்து அசுரர்களது முடிகளையும், விளங்குகின்ற மார்புகளையும், உணவு கொள்கின்ற வாய்களையும், அழகிய கைகளையும், தோள்களையும், கால்களையும் அறுத்தெறிந்தனர்; அதனால் எவ்விடங்களிலும் உதிரமானது கடல்போலத் தேங்கியது.—எ-று.

விசாகன் - விசாகநக்ஷத்திரத்தி லவதரித்தவர். துய் - உணவு. (௧௫௯)

60

வில்லோர் பரவுந் திறல்வேலவன் வெய்ய கோலா
லல்லோ டியதீ மனத்தானவ ராயி னோரிற்
பல்லோ ரிறந்தார் குருதிக் கடல்பாய்ந்து நீந்திச்
சில்லோர் கடந்த முயிர்கொண்டு சிதைந்து போனார்.

(இ-ள்.) வில்வீரர்கள் புகழுகின்ற வெற்றியினையுடைய முருகக்கடவுளி னது கொடிய பாணங்களால் இருளும் பின்னிடத்தக்க கொடிய மனத்தினையுடைய அசுரர்களில் அனேகர் இறந்தனர்; சிலர் உதிரக்கடலிற் பாய்ந்துநீந்தித் தங்கள் தங்க ளுயிரைக்கொண்டு தவறியோடினார்கள்.—எ-று.

மிக்க வஞ்சக நெஞ்சமுடையவ ரென்பார், 'அல்லோடிய தீமனத்தானவர்' என்று கூறினார். (கசுo)

மைக்கார் சிவந்த தெனுந்தாரகன் மைய னீங்கி
யக்காலை தன்னி லெழுந்தே யயல்போற்றி நின்ற
தொக்கார் தமையாரையுங் காண்கிலன் றுன்ப மெய்தி
நக்கா னவர்தஞ் செயல்கண்டு நவிற லுற்றான்.

(இ-ள்.) கரியமேகமானது சிவந்ததென்று சொல்லும்படி உதிரவெள்ளத் தில் முழ்கிக்கிடந்த தாரகாசுரன் அப்பொழுது மயக்கந் தெளிந்தெழுந்து தனதுபக்கத் தில் தன்னைப் புகழ்ந்து நெருங்கி நின்றவர்கள் யாரையுங் காணாதவனாய் வருத்தங் கொண்டு அவர்களது செய்கையைநோக்கிச் சிரித்துக்கூறுகின்றனன்.—எ-று. (கசுக)

வேறு.

செய்யவார்சடை யீசனல்கிய சிறுவனிங்கொரு வன்பொரக்
கையிழந்துமு கத்திலாடு கவின்கொள்கோடுமி ழந்தனன்
மையலெய்திவி ழுந்தனன்பொரும் வலியதானையு மாண்டன
வையவிங்கொரு தமியனின்றன னழகிதாலென தாண்மையே.

(இ-ள்.) சிவந்த நீண்ட சடைமுடியையுடைய சிவபெருமான்பெற்ற சிறுவ னாகிய இவனொருவன் போர்செய்தலால் எனது துதிக்கையினை யிழந்து முகத்திற் பொருந்தி யிருந்த அழகிய தந்தங்களையுமிழந்தேன்; மயக்கமுற்றுவிழுந்தேன்; போர் செய்த வலிய சேனைகளும் அழிந்தன; ஐயோ? இங்கு நான் ஒருவனே நின்றேன்; எனது வீரம் நன்றாயிருக்கின்றது.—எ-று. (கசுஉ)

தாவில்வெஞ்சிலை வன்மைகொண்டு சரங்களெண்ணில தூண்டியே
மேவலானிவ னுயிர்குடிப்பதும் வெல்லுகின்றது மரியதாற்
றேவர்மாப்படை தொடுவனிங்கினி யென்றுசிந்தனை செய்துபி
னேவரும்புகழ் தாரகாசுர னின்னசெய்கை யியற்றினான்.

(இ-ள்.) கெடாத கொடிய வில்லின் வல்லமையைக் கொண்டு அநேகபா ணங்களைவிட்டுப் பகைவனாகிய இவனது உயிரை வாங்குவதும், வெற்றி பெறுவதும் அருமையாகும்; ஆதலால், இனிப் பெரிய தேவாஸ்திரங்களை விடுவேனென்று சிந்தி த்துப் பின்பு யாவர்களும் புகழ்கின்றதாரகாசுரன் இச்செய்கையைச் செய்தனன். ()

வேறு.

அடலரி நான்முக னாதி வானவப்
படையினை யாவையும் பவஞ்செய் தாரகன்
விடவிட வந்தவை வெருவி மேலையோன்
புடைதனி லொடுங்கியே போற்றி நின்றவே.

(இ-ள்.) பாவத்தொழிலைச் செய்கின்ற தாரகாசுரன் வலிமைபொருந்திய திருமால் பிரமன்முதலிய தேவர்களது பாணங்களைவரிசைவரிசையாகப் பிரயோகிக்கவும், அவ்வாறு விடப்பட்டுவருகின்ற பாணங்கள் அச்சத்துடன்சென்று முருகக்கடவுளினருகில் வணங்கி யொடுங்கி நின்றன.—எ-று. (கசுச)

செங்கண்மா லயன்முதற் றேவர் மாப்படை
துங்கமோ டேகியே துளங்கி வெஞுடைப்
புங்கவன் பாங்கரிற் போற்றி நிற்றலு
மங்கது கண்டன னவுணர் மன்னவன்.

(இ-ள்.) அரிப்பிரமேந்திராதி தேவர்களது பெரிய ஆயுதங்கள் மேன்மையோடு சென்று நடுங்கி வேற்படையை யேந்திய முருகக்கடவுளருகில் துதித்து நிற்கவும், அசுரர்கள் தலைவனாகிய தாரகன் அதனைப் பார்த்தனன்.—எ-று. (கசுரு)

ஒருவின னகந்தையை யுள்ள மோரிறை
வெருவினன் விம்மித மிகவு மெய்தினு
னெரிகலுழ் விழியின னிவனை வென்றிட
லரியது போலுமென் றகத்தி லுன்னினுன்.

(இ-ள்.) நெருப்புப்பொறி பறக்கின்ற கண்களையுடைய தாரகாசுரன் அகங்காரத்தை யொழிந்தனன்; ஒரு க்ஷணநேரம் மனம் நடுங்கினுன், மிகவும் ஆச்சரியமடைந்தனன்; பின்பு, இந்தச்சிறுவனை வெல்லுதல் அருமையாகுமென்று தன் மனதில் நினைத்தனன்.—எ-று.

குமாரக்கடவுளால் தனது வலி குன்றுதலின், 'ஒருவினனகந்தையை' என்றும், அப்பெரும்போரில் தனக்காற்றக் கூடாமையால், 'உள்ளமோரிறைவெருவினன்' என்றும், தான்விடுகின்ற பெரிய தேவாஸ்திரங்களனைத்துஞ் சிறிதும் பயனற்று ஒடுங்கி நிற்றலின், 'விம்மித மிகவு மெய்தினுன்' என்றும், இக்குமரன் உருவிற் சிறியனும் உரத்திற் பெரியனுமாக விருத்தலின் இவன் பரப்பிரம சொரூபியேயாமாகலின் இவனைவெல்லுதல் முடியாதகாரியமென்று மனத்தெளிவு பிறந்தமையின்,'இவனை வென்றிட லரியதுபோலுமென் றகத்தி லுன்னினுன்'என்றுங்கூறினுர்.

பாங்கரின் மாதுடைப் பரமன் றொல்படை
யீங்கினி விடுதுமென் றெண்ணி யப்படை
வாங்கின னருச்சனை மனத்தி னுற்றின
னோங்கிருஞ் சினமுட னெல்லை யேவினுன்.

(இ-ள்.) பார்வதி பாகராகிய சிவபெருமானது பழைமையாகிய பாசுபதாஸ்திரத்தை இனி இவ்விடத்து விடுவோமென்று நினைத்து அந்த அஸ்திரத்தை யெடுத்து மானத பூசைசெய்து பொங்குகின்ற மிகுந்த கோபத்துடன் விரைவாகப் பிரயோகஞ்செய்தனன்.—எ-று. (கசுஎ)

சங்கரன் றொல்படை தறுக ணுலமும்
புங்கவர் படைகளும் பூத ராசியு
மங்கத நிரைகளு மளப்பில் சூலமும்
வெங்கன லீட்டமும் விதித்துச் சென்றதே.

(இ-ள்.) பெரிய பாசுபதாஸ்திரமானது அஞ்சாமையினையுடைய மழுப்படையையும்,தேவாஸ்திரங்களையும், பூதக்கூட்டங்களையும்,சர்ப்பவரிசைகளையும், அளவற்ற சூலங்களையும், வெவ்விய அக்கினிக் கூட்டங்களையுஞ் சிருஷ்டித்துக்கொண்டு சென்றது.—எ-று. (கசுஅ)

கலைகுலாம் பிறைமுடிக் கடவுள் மாப்படை
யலகிலா வுயிர்களு மண்டம் யாவையு
முலைகுறா தலமர வுருத்துச் சேறலு
மிலைகுலா மயிலுடை யெந்தை நோக்கினன்.

(இ-ள்.) கலைகள் விளங்கும் இளம்பிறையை யணிந்த சடைமுடியினையுடைய சிவபெருமானது பாசுபதாஸ்திரமானது அளவற்ற உயிர்களும் எல்லா அண்டங்களுங் கெடாது மயங்கும் வண்ணங் கோபித்துச் செல்லுதலும், அதனை அச்சவடிவாகிய வேற்படையினை யேந்திய எமது முருகக்கடவுள் பார்த்தருளினர்.—எ-று. ()

கந்தவே ளதனையது கண்டு தந்தையைச்
சிந்தையி னுன்னியோர் செங்கை நீட்டியே
யந்தவெம் படையினை யருளிற் பற்றினன்
றந்தவன் வாங்கிய தன்மை யென்னவே.

(இ-ள்.) அதனை எமது கந்தப்பெருமான் பார்த்தருளித் தமதுபிதாவாகிய சிவபெருமானைத் திருவுள்ளத்திற் சிந்தித்து, வெவ்விய அந்தப் பாசுபதாஸ்திரத்தைக் கொடுத்தவன் (மீளவும்) வாங்கிக்கொண்ட தன்மையைப்போலத் தமது ஒரு திருக்கரத்தைநீட்டித் திருவருளுடன் அதனைப் பிடித்துக்கொண்டனர்.—எ-று. (கஎ0)

நெற்றியில் விழியுடை நிமலன் காதலன்
பற்றிய படையினைப் பாணி சேர்த்தினன்
மற்றது தாரக வலியன் கண்ணுறீஇ
யிற்றது நந்திரு வினியென் றேங்கினன்.

(இ-ள்.) நெற்றிக் கண்ணையுடைய சிவபெருமானது திருப்புதல்வராகிய முருகக்கடவுள் தாம் பிடித்த பாசுபதாஸ்திரத்தைத் தமது ஆயுத வரிசைகளில் சேர்த்தருளினர். வலிமைபொருந்திய தாரகாசுரன் அதனைப் பார்த்து இனி நமது செல்வமானது அழிந்ததென்றெண்ணி ஏக்கங் கொண்டனன்.—எ-று.

பாணி - ஆயுதம். (கஎக)

தேவர்க டேவனார் தெய்வத் தொல்படை
யேவின னதனையு மெதிர்ந்து பற்றினன்
மூவிரு முகமுடை முதல்வன் வன்மையை
நாவினி லொருவரா னவிலற் பாலதோ.

(இ-ள்.) நான் தேவதேவராகிய சிவபெருமானது தெய்வத்தன்மை பொருந்திய பெரிய பாசுபதாஸ்திரத்தை விட்டேன்; அதனையுங் கையால் எதிர்ந்து பிடித்தனன், ஆதலால் ஆறுமுகங்களையுடைய இம்முதல்வனது பராக்கிரமத்தை (இன்ன தன்மையதென்று) ஒருவர் நாவினால் சொல்லுந் தன்மையதோ? (அன்று).—எ-று. ()

ஆயினு மரன்மக னறத்தின் போரலாற்
றீயதோர் கைதவச் செருவ துன்னலான்
மாயைக ளாற்றியே மறைந்து நின்றுநா
னேயென வியற்றுவ னமரென் றெண்ணினன்.

(இ-ள்.) ஆயினும், இச்சிவகுமாரன் தருமவழியேயுள்ள போரையல்லாமல், கொடிதாகிய வஞ்சகப்போரைச் செய்யநினையான், ஆதலால் நான் மறைந்து நின்று மாயைகளைச் செய்து விரைவிற் போர்செய்கின்றேனென்று நினைத்தனன்.—எ-று. ()

கையறு மிவ்வகை கருத்தி லுன்னியே
பொய்யென வேகிர வஞ்ச வெற்பின்முன்

கவயமொ டேகிநீ வல்ல மாயைகள்
செய்குதி செய்குதி யென்று செப்பினான்.

(இ-ள்.) கைம்முகனாகிய தாரகாசுரன் இவ்வாறு தன் மனத்தில் நினைத்து விரைவாகத் தேருடனே கிரவுஞ்சமலையி னெதிரிற்சென்று (அதனைப்பார்த்து) நீ தகுந்த மாயைகளைச்செய்யக்கடவை செய்யக்கடவை யென்று கூறினான்.—எ-று. (கஎ௪)

வே று.

செப்பிய விறுவரை கிரவுஞ்சந் திகழ்வுறு மாயையி னிகழ்வுன்னி
முப்புர வகைபல வெனநிற்ப முரணுறு தாரக முதல்வன்று
னப்புர நிருதர்க ளெனநின்று னகல்வரை பலபல முகிலாக
வொப்பறு சூரன திளையோனு முருமென வவையிடை யுலவுற்றான்.

(இ-ள்.) இவ்வாறு சொல்லி முடிவதற்கு முன்னே கிரவுஞ்சமலையானது விளங்குகின்ற மாயையின் தன்மையை நினைத்துப் பல திரிபுரங்கள்போன்று நிற்கவும், வலிமைபொருந்திய தாரகாசுரன் அந்தத் திரிபுராதியர்களைப்போல நின்றனன்; பெரிய அம்மலையானது அநேக மேகங்களாக வரவும், ஒப்பற்ற சூரபன்மன் தம்பியாகிய தாரகாசுரனும் அம்மேகத்தினிடத்தில் இடிகளைப்போல உலாவினான்.—எ-று. (கஎ௫)

வேலைக ளுருவினை வரைகொள்ள விசயம துடையதொ ரசுரேசன்
காலம திறுதியி னுலகுண்ணுங் கனலொலி யனலிக ளெனநின்றான்
சீலமின் முதுகிரி நெடுநேமித் திருவரை சூழ்தரு மிருளாக
மால்கரி முகமுள வவுணன்றான் வரையறு பாரிட நிரையானான்.

(இ-ள்.) அந்தக்கிரவுஞ்சமலையானது பல கடல்களினுருவத்தைக் கொள்ளவும், வெற்றிபொருந்திய தாரகாசுரன் ஊழிமுடிவில் உலகத்தை யழிக்கின்ற ஒலிபொருந்திய பிரளயாக்கினியைப்போல நின்றனன்; ஒழுக்கமற்ற பழைய அம்மலையானது பெரிய அழகிய சக்கரவாளகிரியைச் சூழ்ந்துள்ள இருளாக வரவும், பெரிய யானைமுகத்தினையுடைய தாரகாசுரன் அளவற்ற பூதக்கூட்டங்களாயினான்.—எ-று.

மால்கரி என்பதற்கு,மதமயக்கம் பொருந்திய யானை எனப் பொருள்கூறலுமொன்று. (கஎ௬)

இந்திரன் முதலுள சுரர்வைகு மெழுட னொருதிசை வேழம்போ
லந்தநெ டுங்கிரி வரலோடு மருகினி லுறுகுல கிரியாகித்
தந்தியின் முகமுள வவுணன்றான் சடசட முதிரொலி யுடன்வந்தான்
முந்திய தந்தம துருமாறி முறைமுறை நின்றதொர் திறனேபோல்.

(இ-ள்.) பூர்வத்திலுள்ள தங்கள் தங்களுருவத்தை மாற்றிக்கொண்டு முறைமுறையாகவந்து நின்ற தன்மையைப்போல அந்தப்பெரிய கிரவுஞ்சமலையானது இந்திரன்முதலாகிய தேவர்கள் வசிக்கின்ற எட்டுத்திக்குகளிலுமுள்ள யானைகளைப்போல வரவும், யானைமுகத்தையுடைய தாரகாசுரன் அவற்றினருகிலுள்ள அஷ்டகுல பருவதங்களாய்ச் சடசடத்த பேரொலியுடன் வந்தனன்.—எ-று. (கஎஎ)

வாயுவி னுருவென மலைசெல்ல மதகரி முகமுள பதகன்றான்
றீயுவி னுருவென வரலுற்றான் றிரியவு நெடுவரை விரைவோடுங்
காய்கன லுகுவெஞ்கி ழிகளாகிக் ககனம திடையுற மிடைகாலை
யாயிர கோடிவெய் யவரேபோ லலமர லுற்றன னறமில்லான்.

(இ-ள்.) கிரவுஞ்சமலையானது காற்றுருவங் கொண்டுவரவும், மதம்பொருந்திய யானை முகத்தினையுடைய தாரகாசுரன் நெருப்புருவங் கொண்டுவந்தனன்; மீண்

டும் விரைவாக அம்மலையானது மிக்க தீப்பொறிகளைச் சிந்துகின்ற ஞெகிழிகளாய் ஆகாயத்தில் நெருங்கினபொழுது, பாவியாகிய தாரகன் ஆயிரங்கோடி சூரியர்களைப் போலச் சுழன்றனன்.—எ-று.

ஞெகிழி - நெருப்புறு கொள்ளி. (௧௭௮)

அவ்வகை தாரகன் வரையொடு மளவறு மாயையின் வடிவெய்தி
எவ்விடை யுஞ்செறி தரலோடு மெம்பெரு மானவ னிவைகாணூஉத்
தெவ்வலி கொண்டுறு மிவனுயிர் சிந்துவ னென்றுள மிசைகொண்டே
கைவரு வேற்படை தனைநோக்கி யினையன சிலமொழி கழறுற்றான்.

(இ-ள்.) அவ்விதமாகத் தாரகாசுரன் கிரவுஞ்சமலையுடன் கலந்து அளவற்ற மாயாரூபங்களை யடைந்து எவ்விடங்களிலும் நெருங்கி நிற்கவும் அதனை எமது முருகக்கடவுள் பார்த்து, போரில் வலிமைபெற்றுள்ள இவ்வசுரனது உயிரை அழிக்கின்றேனென்று திருவுள்ளத்திற் சிந்தித்துத் தமது திருக்கரத்திற்பொருந்திய வேலாயுதத்தை நோக்கி இவ்வாறு சிலவார்த்தைகளை யருளிச்செய்வாராயினார்.—எ-று.

பெருமானவன் என்பதில், அவன் பகுதிப்பொருள் விகுதி. (௧௭௯)

தாரக னென்பதொர் பேரோனைச் சஞ்சல முறுகிர வுஞ்சத்தை
யோரிறை செல்லுமு னுடல்கீறி யுள்ளுறுயி ருண்டு புறத்தேகிப்
பாரிடர் தம்மை யிலக்கத்தொன் பதின்மர்க ளாகவு ரைக்கின்ற
வீரரை மீட்டிவண் வருகென்றே வேற்படை தன்னை விடுத்திட்டான்.

(இ-ள்.) தாரகனென்னும் பெயரையுடைய அசுரனையும், துன்பமிக்க கிரவுஞ்சமலையையும் ஓர் கணநேரத்திற்குள்ளே உடலைப் பிளந்து உள்ளே யிருக்கும் உயிரை யுண்டு, புறத்தில்வந்து பூதர்களையும் இலக்ஷத்தொன்பது வீரர்களையும் மீட்டுக்கொண்டு இங்கு வரக்கடவையென்று வேலாயுதத்தை விடுத்தருளினார்.—எ-று. (௧௮௦)

சேயவன் விட்டிடு தனிவைவேல் செருமுய றாரகன் வரையோடு
மாயிடை செய்த புணர்ப்பெல்லா மகிலமு மழிதரு பொழுதின்கண்
மாயையி னாகிய வுலகெங்கு மலிதரு முயிர்களு மதிசூடுந்
தூயவன் விழியழல் சுடுமாபோற் றுவன்றென வட்டது சுரர்போற்ற.

(இ-ள்.) சர்வசங்கார காலத்தில் மாயையினா லுண்டாகிய உலகங்களையும், அவ்வுலகில் நிறைந்த உயிர்களையுஞ் சந்திரசேகரராகிய சிவபெருமானது நேத்திராக்கினியானது தகிக்குந் தன்மைபோல, முயற்சித்துப் பொருகின்ற தாரகாசுரன் கிரவுஞ்சமலையுடன் கலந்து அவ்விடத்திற்செய்த மாயைகளனைத்தையும் முருகக்கடவுள் விடுத்தருளிய ஒப்பற்ற கூரியவேலாயுதமானது தேவர்கள் துதிக்கும்படி விரைவாக அழித்தது.—எ-று. (௧௮௧)

வேறு.

அரண்டரு கழற்கா லைய னறுமுகத் தெழுந்த சீற்றந்
திரண்டொரு வடிவின் வேறாய்ச் சென்றதே யெனவு நான்கு
முரண்டரு தடந்தோ ளண்ணன் முத்தலை படைத்த சூல
மிரண்டொரு படையாய் வந்த தென்னவு மேகிற் றவ்வேல்.

(இ-ள்.) அழகுபொருந்திய வீரக்கழலையணிந்த முருகக்கடவுளினது ஆறு திருமுகங்களினின்றுந் தோன்றிய கோபமானவை ஒரு வடிவமாகத் திரண்டு அவரிடத்தினின்று நீங்கிச் சென்ற தன்மைபோலவும், வலிமைபொருந்திய நான்கு பெரிய திருத்தோள்களையுடைய சிவபெருமானது இரண்டு முத்தலைச்சூலம் ஒரு ஆயுதமாக வடிவெடுத்துவந்த தன்மைபோலவும் அவ்வேற்படை சென்றது.—எ-று

அரண் - அழகு. சிவபெருமானுக்கு எட்டுத் திருத்தோள்களென்று நூல்களிற் கூறியிருக்க, ஈண்டு 'நான்கு முரண்டரு தடந்தோளண்ணல்' என்றது நூல் வழக்குப்போலும். (௧அ௨)

முடித்திட லரிய மாய மூரிநீர்க் கடலை வற்றக்
குடித்திடு கின்ற செவ்வேற் கூற்றம்வந் திடுத லோடுந்
தடித்திடு மெயிற்றுப் பேழ்வாய்த் தாரக னிதனைப் பற்றி
யொடித்திடு கிற்பே னென்னா வொல்லென வுருத்து வந்தான்.

(இ-ள்.) (பிறரால்) அழித்தற்கரிய வலிய மாயாசமுத்திரத்தை வற்றும்படி குடிக்கின்ற சிவந்த வேற்படையாகிய இயமன் வருதலும், தடித்த பற்களமைந்த பிளப்பாகிய வாயினையுடைய தாரகாசுரனானவன் இவ்வேலைப் பிடித்து ஒடித்துவிடுவேனென்று கோபத்துடன் விரைந்து வந்தனன்.—எ-று. (௧அ௩)

அச்சமோர் சிறிதுமில்லா வவுணர்கோ னவனைன் மேற்செ
னச்சர வென்னச் சீறி நணுகலு மவன்மார் பென்னும்
வச்சிர வரையின் மீது வானுரு மேறுற் றென்னச்
செச்சையந் தெரியல் வீரன் செலுத்தும்வேல் பட்ட தன்றே.

(இ-ள்.) சிறிதும் அச்சமில்லாத தாரகாசுரனானவன் கருடன்மீது எதிர்த்துச்செல்லுகின்ற விஷம்பொருந்திய பாம்பைப்போலச் சீறிக்கொண்டுசெல்லவும், அழகிய வெட்சிமலர்மாலையை யணிந்த முருகக்கடவுள் விட்டருளிய வேற்படையானது அவ்வசுரனது மார்பென்று கூறும், வயிரமலையின்மீது பெரிய இடியேறு விழுந்தாற்போலத்தாக்கியது.—எ-று.

செச்சை - வெட்சிமலர். இடியேறு - ஆண்இடி. (௧அ௪)

தாரகன் மார்ப மென்னுந் தடம்பெரு வரையைக் கீண்டு
சீரிய கிரவுஞ் சத்திற் சேர்ந்துபட் டுருவிச் சென்று
வீரமும் புகழுங் கொண்டு விளங்கிய தென்ன வங்கட்
சோரியுந் துகளு மாடித் துண்ணென மீண்ட தன்றே.

(இ-ள்.) (அவ்வேற்படையானது) தாரகாசுரனது மார்பென்று கூறும் மிகப்பெரிய மலையைப் பிளந்து, சிறந்த கிரவுஞ்சமலையிற் சென்று தாக்கி ஊடுருவிச் சென்று, வீரத்தையும் புகழையும் பெற்றுவிளங்கிய தன்மையைப்போல, அவ்விடத்திலேயே (தாரகனது) உதிரத்திலும், (கிரவுஞ்சமலையினது) புழுதியிலுங்கலந்து விரைவாகத் திரும்பியது.—எ-று. (௧அ௫)

மீண்டிடு சீற்ற வைவேல் வெற்பினுட் டுஞ்சு கின்ற
வாண்டகை வீரர் தம்மை யாயிடை யெழுப்பி வான்போய்
மாண்டகு கங்கை தோய்ந்து வாலிய வடிவா யையன்
றாண்டிய கரத்தில் வந்து தொன்மைபோ லிருந்த தம்மா.

(இ-ள்.) அவ்வாறு திரும்பிவருகிற கோபத்தினையுடைய கூரிய வேற்படையானது அம்மலையில் (மயக்கத்தால்) தூங்கிக்கொண்டிருந்த ஆண்தன்மையையுடைய வீரர்களை அங்கு எழுப்பிவிட்டு, பின்பு ஆகாயத்திற் சென்று மாட்சிமை பொருந்திய கங்கையில் முழுகித்தூய்மையாகிய வடிவத்துடன் முருகக்கடவுள் விட்டருளிய திருக்கரத்தில் வந்து முன்போலவே யிருந்தது.—எ-று. (௧அ௬)

தண்டம தியற்றுங் கூர்வே லூரக வவுணன் மார்பும்
பண்டுள வரையும் பட்டுப் பறிந்தபே ரோசை கேளா

விண்டது ஞால மென்பார் வெடித்தது மேரு வென்பா
ரண்டமு முடைந்த தென்பா ராயின ரகிலத் துள்ளோர்.

(இ-ள்.) (துஷ்டர்களைத்)தண்டிக்கின்ற கூரிய வேலாயுதமானது தாரகாசுரனது மார்பிலும் பழைமையாகிய கிரவுஞ்சகிரியிலும் பட்டு ஊடுருவிச்சென்ற பேரோசையை உலகத்திலுள்ளவர்கள்கேட்டுப் பூமிபிளந்தது; மேருவெடித்தது; என்று கூறுவார்கள். இஃதன்றியும் அண்டமே யுடைந்ததென்றுங் கூறுவாராயினர்.—எ-று. ()

வடித்ததை யன்ன கூர்வேன் மார்பையு டறுத்துச் செல்லத்
துடித்திடு கின்ற யாக்கைத் தாரக னநந்த கோடி
யிடித்தொகை யென்ன வார்த்திட் டிம்மென வெழுந்து துள்ளிப்
படித்தலந் தன்னில் வீழ்ந்து பதைபதைத் தாவி விட்டான்.

(இ-ள்.) புதிதாய் வடித்ததுபோன்றுள்ள கூரிய வேலாயுதமானது பருத்த உடம்பினையுடைய தாரகனது மார்பைப்பிளந்துகொண்டு செல்லவும், அவன் அநேகங்கோடி இடிக்கூட்டங்களிடித்தாற்போல இரைச்சலிட்டு விரைந்து எழுந்து துள்ளிப்பூமியில் விழுந்து பதைபதைத்து உயிரைவிட்டனன்.—எ-று (கஅஅ)

தடவரை யனைய மொய்ம்பிற் றாரகன் வேலாற் பட்டுப்
புடவியில் வீழா நின்றான் பொள்ளென வானிற் றுள்ளிக்
கடலுடைந் தென்ன வார்க்குங் காலையிற் கலக்க மெய்தி
யுடுகண முதிர்ந்த தஞ்சி யோடின னிரவி யென்போன்.

(இ-ள்.) பெரிய மலைபோன்ற தோளினையுடைய தாரகாசுரன் வேலாயுதத்தாற்பிளக்கப்பட்டுப் பூமியில் விழுகின்றவன் விரைவாக ஆகாயத்திற் கிளம்பி ஆரவாரிக்கும்பொழுது நக்ஷத்திரக்கூட்டங்கள் நடுக்கமுற்று உதிர்ந்தன; சூரியனும் அஞ்சியோடினான்.—எ-று. (கஅகூ)

தளர்ந்திட லில்லா வீரத் தாரகன் பட்டு வானிற்
கிளர்ந்தனன் வீழ வெல்லைக் கீழுறு பிலமும் பாரும்
பிளந்தன வரைகள் யாவும் பிதிர்ந்தன வதிர்ந்த தண்ட
முளங்கெடு மாறி யோலிட் டோடின திசையில் யானை.

(இ-ள்.) சோர்வில்லாத பராக்கிரமத்தினை யுடைய தாரகாசுரன் இறந்து ஆகாயத்திற்கிளம்பி விழும்பொழுது அடியிலுள்ள பாதலமும் பூமியும்பிளந்தன; மலைகளனைத்துமுதிர்ந்தன; அண்டம் அதிர்ந்தன; அஷ்டதிக்குயானைகள் மனங்கலங்கியோலமிட்டோடின.—எ-று. (ககூ0)

தண்ணளி சிறிது மில்லாத் தாரகன் கிளர்ந்து வான்போய்
மண்ணிடை மறிந்த தன்மை வன்சிறை யிழந்த நாளிற்
றிண்ணிய மேரு வின்னுஞ் செல்லலாங் கொல்லென் றுன்னி
விண்ணிடை யெழுந்து வல்லே வீழ்ந்தமை போலு மன்றே.

(இ-ள்.) இரக்கமென்பது சிறிதுமில்லாத தாரகாசுரன்ஆகாயத்திற் கிளம்பிப் பூமியில் திரும்பவும் விழுந்ததன்மை (எதுபோலுமெனின்) பெரிய மேருமலையானது வலிய சிறகுகளையிழந்த காலத்தில் நாம் இன்னமும் மேலேபறக்கக்கூடுமென்று நினைத்து வானத்திற்கிளம்பி விரைந்து வீழ்ந்ததை யொக்கும்.—எ-று. (ககூக)

வெற்றிய தாருங் கூர்வேல் வெற்பினை யட்ட காலைச்
செற்றிய பூழி யிட்டஞ் சிதறிய பொறிக ளெங்கும்
பற்றிய புகையும் வந்து பரந்தன கரந்த தண்டம்
வற்றிய கடல்கள் வானிற் கங்கையும் வறந்த தன்றே.

(இ-ள்.) வெற்றிபொருந்திய கூரிய வேலாயுதமானது கிரவுஞ்ச மலையை யழித்தபொழுது நெருங்கிய புழுதிக்கூட்டங்கள் சிதறின; தீப்பொறிக ளெவ்விடத்திலும் பற்றிக்கொண்டன; புகைகளும் வந்து பரவின; அண்டமானது மறைந்தது; சமுத்திரங்கள் வற்றின; ஆகாய கங்கையும் வற்றியது.—எ-று. (கககூ.)

சிறந்திடு மாய வெற்பைத் திருக்கைவேல் பொடித்த காலைப்
பிறந்திடு கின்ற தீயைத் தீயெனப் பேச லாமோ
வறிந்தவர் தெரியிற் குன்ற மவுணனா கையினுன் மெய்யி
னுறைந்திடு குருதி துள்ளி யுகுத்தவா றுகு மன்றே.

(இ-ள்.) மாயையிற் சிறந்த கிரவுஞ்சமலையை (முருகக் கடவுளது) திருக்கரத்திற் பொருந்திய வேலாயுதமானது பொடியாக்கியபொழுது அங்குத்தோன்றிய நெருப்பினை நெருப்பென்று கூறலாமோ? இதனை யுணர்ந்தவர்கள் ஆராயுமிடத்தில் கிரவுஞ்சமலை ஒரு அசுரனுகையால் அதின் உடம்பிற்பொருந்திய உதிரமானது துள்ளிச்சிதறியதன்மையாகும்.—எ-று.

கிரவுஞ்சமலையின்மீது முருகக்கடவுள் விடுத்த வேற்படை தாக்கியபோதுண்டாகியதீ செந்நிறமுடைத்தாயிருத்தலின், அதுகிரவுஞ்சனுகிய அசுரனது உதிரமேயாமென்றுகூற விளங்கினமையின், 'மெய்யி னுறைந்திடுகுருதி துள்ளியுகுத்தவாறுகு மன்றே' என்று கூறினர். (ககரு)

யானுற்ற குன்றந் தன்னை யெறிந்தன னென்று செவ்வே
டானுற்ற நதியை வந்து தடிந்ததே யென்ன வெற்பி
னூனுற்ற நெடுவேல் பாய வுதித்திடும் பொறியி னீட்டம்
வானுற்ற கங்கை புக்கு வறந்திடு வித்த தன்றே.

(இ-ள்.) யான் வசித்திருந்த கிரவுஞ்சமலையைப் பிளந்தனனென்று முருகக்கடவுள் வசித்திருந்த கங்கைநதியை யடைந்து அதனையழித்த தன்மையைப்போல அம்மலையினிடத்து மாமிசந்தங்கிய நெடிய வேலாயுதமானது பாய்தலால், அதிற்றோன்றியதீப்பொறிக் கூட்டங்கள்ஆகாயகங்கையிற்புகுந்துவற்றச்செய்தது.—எ-று

தீப்பொறிகள் விண்ணிற்சென்று ஆகாய கங்கையைத் தூர்த்தல், நாம் வசித்த மலையை முருகக்கடவுள் தமது வேலைக்கொண்டழித்தமையால் அவர் வசித்திருந்த கங்கையை நாம் தூர்ப்போமென்று சென்று அதனை வற்றச்செய்தாற்போன்றிருந்ததென்க. (ககச)

திறனுடை நெடுவே லட்ட சிலம்பினிற் சிதறித் தோன்றும்
பொறிகளுந் துகளு மார்ப்பும் பொள்ளெனச் செறிந்த தன்மை
மறிகடன் முழுது மங்கண் வடவையு மடைந்தொன் றாகி
யிறுதியி னுலகங் கொள்ள வெழுந்தது போறு மாதோ.

(இ-ள்.) வலிமை பொருந்திய நீண்ட வேலாயுதத்தினுல்பிளக்கப்பட்டகிரவுஞ்சமலையினின்றுஞ் சிதறித்தோன்றுகின்ற தீப்பொறிகளும் துகள்களும் ஆரவாரமும் எங்கும் விரைவாக நெருங்கியதன்மை(எதுபோலுமெனின்,) அலைமடங்குகின்ற கடல்களனைத்தும் வடவாமுகாக்கினியும் ஒன்றாகக்கூடிச் சர்வசங்காரகாலத்தில் உலகத்தையழிக்க வெழுந்ததுபோன்றிருந்தது—எ-று.

பொறிகள் வடவையாகவும், துகள்கள் கடலாகவும், ஆர்ப்பு ஊழிக்காலத்துண்டாம் பேரொலியாகவு முவமித்துக் கூறினமையுணர்க. (ககசு)

தந்தியின் வதனங் கொண்ட தாரக வவுணன் மார்பிற்
சிந்துறு குருதிச் செந்நீர் திரைபொரு தலைத்து வீசி

யந்தமி ளித்த மாகி யயிற்படை யட்ட குன்றில்
வந்திடு பூழை புக்கு மறிகடன் மடுந்த தன்றே.

(இ-ள்.) யானைமுகத்தையுடைய தாரகாசுரனது மார்பில் ஒழுகின்ற உதிர வெள்ளமானது அலைகளை மோதியடித்துவீசி அளவற்ற பெருவெள்ளமாய் வேலாயுதமானது அழித்த கிரவுஞ்சமலையில் உண்டாகிய துவாரத்தின் வழியாகப் பிரவேசித்து அலைமடங்குகின்ற கடலில் போய் விழுந்தது.—எ-று.

பூழை-துவாரம். (௧௯௬)

விட்டவேன் மீண்டு கந்த வேள்கரத் திருப்பத் தீயோன்
பட்டதும் வெற்பு மாய்ந்த பான்மையு மவுணர் யாருங்
கெட்டது நோக்கி மாலுங் கேழ்கிளர் கமலத் தேவு
முட்டிலா மகத்தின் வேந்து முனிவருஞ் சுரரு மார்த்தார்.

(இ-ள்.) முருகக்கடவுள் விட்டருளிய வேற்படையானது திரும்பிவந்து அவரது திருக்கரத்திலிருக்கவும், கொடியவனாகிய தாரகாசுரன் இறந்ததன்மையும் கிரவுஞ்சகிரி யழிந்ததன்மையும் அசுரர்களனைவரும் அழிந்ததன்மையும் பார்த்துத் திருமாலும் நன்னிறம் விளங்குங் கமலாசனனாகிய பிரமனும் கெடுதலில்லாத இந்திரனும் முனிவர்களும் தேவர்களும் ஆரவாரித்தார்கள்.—எ-று. (௧௯௭)

ஆடினர் குமரற் போற்றி யங்கைக ளுச்சி மீது
சூடினர் தண்பூ மாரி தூர்த்தன ரவனைச் சூழ்ந்து
பாடினர் தொழுது முன்னம் பன்முறை பணிந்து நின்றார்
மீடிய வுவகை யென்னு நெடுங்கட லாழு மீரார்.

(இ-ள்.) மிகுந்த சந்தோஷமென்னும் பெரிய கடலில் மூழ்கிய தன்மையினையுடைய திருமால் முதலிய தேவர்கள் குமாரக்கடவுளைத் துதித்து ஆனந்தக்கூத்தாடினார்கள்; அழகிய கைகளைச் சிரமேற்குவித்து வணங்கினார்கள்; குளிர்ந்த கற்பக மலர்மாரி பெய்தார்கள், அவ்வெம்பெருமானைப் பிரதக்ஷிணஞ்செய்து பாடினார்கள்; திருமுன்னே தொழுது பலதரம் நமஸ்கரித்து நின்றார்கள்.—எ-று. (௧௯௮)

ஆங்கது காலை தன்னி லளப்பிலா மாயை வல்ல
வோங்கலை திறப்ப வங்க ணுறங்கிய வீர ரெல்லாந்
தீங்குறு மைய னீங்கிக் கதுமெனச் சென்று செவ்வேள்
பூங்கழல் வணங்கி நின்று போற்றியே புடையி னின்றார்.

(இ-ள்.) அந்தச்சமையத்தில் அளவற்ற மாயா வல்லபத்தினையுடைய கிரவுஞ்சமலையானது அழிதலும், அவ்விடத்தில் உறக்கங்கொண்டிருந்த வீரர்களனைவரும் தீமைபொருந்திய மயக்கமொழிந்து விரைவாகச் சென்று முருகக்கடவுளது அழகிய திருவடிகளை நமஸ்கரித்துத் திருமுன்னின்று துதித்து அருகில் நின்றார்கள்.—எ-று.

வாருறு கழற்கால் வீர வாகுவே முதலா வுள்ள
வீரர்க டம்மை யெல்லாம் வேலுடைக் கடவு ணோக்கித்
தாரகன் வரையுட் பட்டுத் தகுமுணர் வின்றி நீவி
ராருநொந் தீர்கள் போலு மாயையூ டழுந்தி யென்றான்.

(இ-ள்.) வாரமைந்த வீரக்கழலையணிந்த கால்களையுடைய வீரவாகுத்தேவர் முதலிய வீரர்களனைவரையும் வேற்படையை யேந்திய முருகக்கடவுள் பார்த்தருளி, தாரகாசுரனது கிரவுஞ்சமலையிலகப்பட்டு அவனது மாயையில் முழுகி உணர்ச்சியற்று நீங்களனைவரும் வருந்தினீர்கள்போலும் என்று கூறியருளினார்.—எ-று.

தாரகன்வரை - தாரகாசுரனது ஆட்சிக்குட்பட்டமலை. (௨௦௦)

செய்யவ னினைய வாறு சீரருள் புரிய வீர
ரையநின் னருளுண் டாக வடியமு றடைவ துண்டோ
மையலோ டுறங்கு வார்போன் மருவுமின் புற்ற தன்றி
வெய்யதோர் கிரிமா யத்தான் மெலிந்தில மிறையு மென்றார்.

(இ-ள்.) இவ்வாறு முருகக்கடவுள் சிறந்த திருவருள் புரியவும், அந்த வீரர்கள், ஐயனே! தேவரீரது திருவருளிருக்க அடியேங்கள் துன்பமடைவதுண்டோ? (நாங்கள்) மயக்கத்துடன் தூங்குகின்றவர்களைப் போலப் பொருந்திய இன்பமடைந்ததேயன்றிக் கொடிய கிரவுஞ்சகிரியின் மாயையினால் சிறிதும் வருந்திலோமில்லையென்று கூறினார்கள்.—எ-று. (உ0௪)

என்றலும் வீர மொய்ம்பி னோற்றலை விளித்துச் செவ்வேள்
வென்றிகொள் சூரன் பின்னோன் விட்டிடத் தான்முற் கொண்ட
வன்றிறற் படையின் வேந்தை மற்றவன் கரத்தி னல்கி
நன்றிது போற்று கென்றே நவின்றுநல் லருள்பு ரிந்தான்.

(இ-ள்.) என்றிவ்வாறுகூறவும், ஸ்ரீசுப்பிரமணியக்கடவுள் வீரவாகுத்தேவரையழைத்து, வெற்றிபொருந்திய சூரபன்மன் தம்பியாகிய தாரகாசுரன் பிரயோகிக்க, அதனைத் தாம் முன்பு திருக்கரத்திற் பிடித்தருளிய மிக்க வலிமையினையுடைய ஆயுதங்களில் முதன்மைபொருந்திய பாசுபதாஸ்திரத்தை அவ்வீரவாகுத்தேவரதுதிருக்கரத்திற் கொடுத்தருளி, இதனை நன்றாகப்பாதுகாக்கக் கடவையென்று கூறிச் சிறந்த திருவருள் புரிந்தனர்.—எ-று.

படையின்வேந்து - பாசுபதாஸ்திரம். (உ0௫)

தாரகன் போரிற் றுஞ்சுஞ் சாரதர் தம்மை யெல்லா
மாருநீ ரொழுதி ரென்னு வவரெலா மெழவே செய்து
பாரிட வனிகஞ் சூழப் பன்னவர் பரவல் செய்யச்
சீரிய வயவ ரீண்டச் செருநில மகன்றான் செவ்வேள்.

(இ-ள்.) தாரகாசுரன் செய்த போரிலிறந்த பூதர்களனைவரையும் நீங்களெல்லாருமெழுந்திருமென்று அருளிச்செய்து அவர்க ளனைவருமெழுந்திருக்கச்செய்து பூதப்படைகள் சூழ்ந்து வரவும், முனிவர்கள் துதிக்கவும், சிறந்த வீரர்கள் நெருங்கி வரவும் முருகக்கடவுள் போர்க்களத்தை விட்டு நீங்கினர்.—எ-று. (உ0௬)

தாரகன் வதைப்படல முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - கஙரு௧.

---

உ

முருகன்றுணை.

# தேவகிரிப் படலம்.

மாகவந் தங்கள் கூளி வாய்ப்பறை மிழற்ற வாடு
மாகவந் தங்குரு மெல்லை யகன்றுசெங் கதிர்வே லண்ணல்
சோகவந் தங்கொண் டுள்ள சுரருட னனிகஞ் சுற்றி
யேகவந் தங்க ணின்ற விமகிரி யெல்லை நீர்ந்தான்.

(இ-ள்.) செவ்வொளி பரந்த வேற்படையினையுடைய குமாரக்கடவுள் பேய்கள் வாய்ப்பறையடிக்கும்படிப் பெரிய கவந்தங்களாடுகின்ற போர்க்களத்தின் எல்லையைவிட்டு நீங்கித் துன்பத்தின் முடிவைப் பெற்றுள்ள தேவர்களும் படைவீரர்களுஞ் சூழ்ந்து செல்லச்சென்று, அவ்வழியிற்பொருந்திய இமையமலையின் எல்லையைவிட்டு நீங்கியருளினார்.—எ-று. (க)

அரியயன் மகத்தின் றேவ னமரர்க ளிலக்கத் தொன்பான்
பொருதிறல் வயவ ரேனைப் பூதர்கள் யாரும் போற்றத்
திருகெழு வேலோன் றென்பாற் செவ்விதி னடந்து மேல்பா
லிரவியி னிரவி செல்ல விமையவர் சயிலஞ் சேர்ந்தான்.

(இ-ள்.) திருமாலும், பிரமனும், இந்திரனும், தேவர்களும், போர்செய்யத்தக்க வீரத்தினையுடைய இலக்ஷத்தொன்பது வீரர்களும், மற்றைப் பூதர்களனைவருந் துதிக்கும்படி அழகிய பெரிய வேற்படையை யேந்திய குமாரக்கடவுள் சிறப்புடன் தென்றிசைநோக்கி நடந்தருளிச் சூரியன் அஸ்தமனகிரியில் செல்லுஞ் சமையத்தில் தேவகிரியை யடைந்தருளினார்.—எ-று.

மேல்பாலிரவி-அஸ்தமனகிரி. (உ)

ஒப்பறு சூர்பின் றோனை யொருவன்வே லட்ட தன்மை
யிப்புற வுலகி னுள்ளார் யாவரு முணர்வ ரின்னே
யப்புற வுலகி னுள்ளா ரறிந்திட யானே சென்று
செப்புவ னென்பான் போலச் செங்கதிர் மறைந்து போனான்.

(இ-ள்.) ஒப்பற்ற சூரபன்மன் தம்பியாகிய தாரகாசுரனை முருகக்கடவுளது வேற்படையானது அழித்ததன்மையை இந்தப்புறத்திலுள்ள உலகத்தவர்கள் யாவருமறிவார்கள், இதனை, இப்பொழுதே அந்தப்புறத்திலுள்ள உலகத்தவர்கள் அறியும்படி யானேசென்று கூறுவேனென்று சென்றவனைப்போலச் செவ்விய கிரணங்களையுடைய சூரியன் அஸ்தமித்தனன்.—எ-று. (ங)

பானுவென் றொருத்தன் மேலோன் பகற்பொழு தெலாங்கைக் கொண்டா
னேனைய மதியப் புத்தே ளிரவினுக் கரச னானா
னினிவற் றிடையே சென்று நன்னுவ னென்று செந்தீ
வானவன் போந்த தென்ன வந்தது மாலைச் செக்கர்.

(இ-ள்.) சூரியனென்று சொல்லப்பட்டபெரியோனானவன் பகற்கால முழுமையுந் தான் கைக்கொண்டனன். மற்றையசந்திரனானவன் இராக்காலத்திற்குத்தலை

வனுயினன்; ஆதலால் யான் இவ்விருபொழுதிற்கும் நடுவில்சென்று (அரசனுகப்)பொருந்துவேனென்று சிவந்த அக்கினிதேவன் சென்றதுபோல மாலைகாலத்துச் செவ்வானந்தோன்றியது.—எ-று. (ரு)

வம்பவிழ் குமுத மெல்லா மலர்ந்திடு மாலை தன்னில்
வெம்படை பயிலத் தோன்றும் வேளுக்குந் தான்முன் வந்த
வம்புதி முரச மாயிற் றாகையாற் றானும் வெற்றிக்
கொம்பென விளங்கிற் றென்ன வெழுந்தது குழவித் திங்கள்.

(இ-ள்.) நறுமணம் விரிந்த அல்லிமலர்களனைத்தும் மலர்கின்ற மாலைக்காலத்தில் வெவ்விய ஆயுதப்பயிற்சியைச் செய்யும்பொருட்டுத் தோன்றிய மன்மதனுக்கு, (சந்திரன்) தான் முன்னேபிறந்த கடலானது முரசாக வமைந்தது; ஆகையால், அச்சந்திரனும் வெற்றிபொருந்திய ஊதுகொம்பாகவிளங்கினுற்போல இளம்பிறை உதையமாயிற்று.—எ-று. (கு)

எற்றெதிர் மலைந்து நின்ற விகலுடை யவுணர் தம்மேற்
காற்றெனத் தேர்க டாவிக் கடுஞ்சமர் புரிந்த வெய்யோன்
மாற்றருஞ் செம்பொன் மார்பில் வச்சிரப் பதக்க மிற்று
மேற்றிசை வீழ்ந்த தென்ன விளம்பிறை விளங்கிற் றன்றே.

(இ-ள்.) எதிர்த்துப் போர்செய்து நின்ற (மாந்தேகர் என்னும்) அசுரர்கள் மீது வாயுவேகமாகத்தேரைச் செலுத்திக் கொடும்போர்செய்த சூரியன் உயர்ந்தமாற்றினையுடைய செம்பொன்மயமாகிய மார்பிலணிந்திருந்த வயிரப்பதக்கம் அறுபட்டு மேற்றிசையில் வீழ்ந்தாற்போல இளம்பிறையானது விளங்கினது.—எ-று.

சூரியனுதயமாகிவரும்போதும் மீண்டும் அஸ்தமிக்கும்போதும் மாந்தேகர் என்னும் அசுரர்கள் எதிர்க்க அவர்களுடன்போர்செய்து செல்லுவனென்பது புராண வரலாருகலின், 'எற்றெதிர் மலைந்து நின்ற விகலுடைய வுணர்தம்மேற் - காற்றெனத் தேர்கடாவிக்கடுஞ் சமர்புரிந்த வெய்யோன்' என்று கூறினர். மாற்றரும் என்பதற்கு, நீக்குதற்கரிய எனப்பொருள் கூறினுமாம். (கூ)

கானத்தி னேன மொத்த கனையிருட் சூழன் மற்றவ்
வேனத்தி னெயிற்றை யொத்த திளம்பிறை யதனைப் பூண்ட
கோனொத்த தண்ட மந்தக் கூரெயி றுகுத்த முத்தந்
தானொத்து விளங்கு கின்ற தாரகா கணங்க ளெல்லாம்.

(இ-ள்.) நெருங்கிய இருளின் சூழ்ச்சியானது காட்டுப்பன்றியையொத்தது; இளம்பிறையானது அப்பன்றியின் கோரைப்பல்லை யொத்தது; ஆகாயமானது அப்பன்றிக் கொம்பையணிந்த சிவபெருமானையொத்தது ; நக்ஷத்திரங்களனைத்தும் அப்பன்றிக்கொம்பு சிந்திய முத்துக்களையொத்து விளங்கின.—எ-று. (எ)

அல்லிது போந்த காலை யாரமா மாலை யென்னக்
கல்லென வருவி தூங்குங் கடவுள்வெற் பொருசா ரெய்தி
மெல்லிதழ் வனசத் தேவும் விண்டுவும் விண்ணின் றேவும்
பல்லிமை யோருஞ் செவ்வேள் பதமுறை தொழுது சொல்வார்.

(இ-ள்.) இத்தன்மையாகிய இராக்காலம் வந்தவுடனே பெரிய முத்துமாலையைப்போலக் கல்லென்னும் ஒசையுடன் அருவியொழுகுகின்ற தேவகிரியின் ஒருபுறத்திற்சென்று மெல்லியஇதழ்களையுடைய கமலாசனனுகிய பிரமனும், திருமாலும், இந்திரனும், பலதேவர்களும் முருகக்கடவுளினது திருவடிகளை முறைப்படி வணங்கி விண்ணப்பஞ் செய்கின்றார்கள்.—எ-று. (அ)

வெங்கணை யுடைய சூரன் வருத்திட வின்னாள் காறும்
புன்கணை யுழந்தே மண்ணல் பொருப்பொடு முடியச் செற்று
மன்கமை வழிபா டாற்ற வுன்னின மின்ன வெற்பின்
றன்கணே யிருத்தல் வேண்டுந் தருதியிவ் வரமதென்றார்.

(இ-ள்.) கொடுமையினையே யுடைய சூரபன்மன் தம்பியாகிய தாரகாசுரன் துன்பஞ்செய்தலால் இதுவரையிலும் துன்பத்தையே யடைந்திருந்தனம்; தேவரீர் அந்தத்தாரகன் கிரவுஞ்சமலையுடன் அழியும்படி கொன்றருளினீர்; ஆதலால் (அடியேங்கள்) தேவரீரைப் பூசைசெய்தற்கு விருப்பங்கொண்டோம்; தேவரீர் இந்த மலையினிடத்தே யெழுந்தருளியிருத்தல்வேண்டும்; இந்த வரத்தை எங்கட்குக் கொடுத்தருள்வீராகவென்று பிரார்த்தித்தார்கள்.—எ-று. (௯)

பசைந்திடு மார்வங் கொண்ட பண்ணவ ரினைய தன்மை
யிசைந்தனர் வேண்டு மெல்லை யெஃகுடை யண்ண லங்க
ணசைந்திடு தன்மை யுன்னி யருள்செய வதுகண் டன்னோர்
தசைந்துமெய் பொடிப்பத் துள்ளித் தணப்பில்பேருவகை பூத்தார்.

(இ-ள்.) மிகுந்த விருப்பங்கொண்டுள்ள தேவர்கள் இத்தன்மையான காரியத்திற்கு ஒருங்குசேர்ந்து வேண்டிக்கொண்ட சமையத்தில் வேற்படையையுடைய முருகக்கடவுள் தாம் அங்கு எழுந்தருளியிருக்குந் தன்மையை விரும்பித் திருவருள் புரியவும், அதனைத் தேவர்கள்பார்த்து உடல்பூரித்து உரோமாஞ்சிதங்கொள்ளக் குதித்துக் கெடாத பெருமகிழ்வடைந்தார்கள்.—எ-று. (௧௦)

ஒண்ணிலை வழிழும் வேலோ னொலிகழற் றானை யோடுங்
கண்ணனை முதலா வுள்ள கடவுளர் குழுவி னோடும்
பண்ணவர் கிரிமேற் சென்று பாங்கரிற் றொழுது போந்த
விண்ணவர் புனைவன் றன்னை விளித்திவை புகல லுற்றான்.

(இ-ள்.) ஒள்ளிய பிரகாசத்தைவீசுகின்ற வேற்படையையேந்திய முருகக்கடவுள் சப்திக்கின்ற வீரக்கழலையணிந்த சேனைகளுடனும், திருமால் முதலிய தேவர் கூட்டத்துடனும் தேவகிரியின்மீது சென்றருளித் தமக்கருகில் தொழுதுகொண்டு வந்த தேவதச்சனை யழைத்து இவ்வார்த்தைகளை யருளிச்செய்வாராயினர்.—எ-று.

புகலுறுஞ் சூழ்ச்சி மிக்கோய் புங்கவ ராபு ளோருந்
தொகலுறு கணர்கள் யாருந் துணைவரும் யாமு மேவ
வகலுறு மினைய வெற்பி னருங்கடி நகர மொன்றை
விகலம தின்றி யின்னே விதித்தியால் விரைவி னென்றான்.

(இ-ள்.) சொல்லப்பட்ட தந்திரத்தில் வல்ல தேவதச்சனே! தேவர்களும், கூட்டமான கணங்களும், துணைவர்களாகிய இலக்ஷத்தொன்பது வீரர்களும், யாமும் சஞ்சரித்த விசாலமான இம்மலையினிடத்து மிகுந்த காவலையுடைய ஒரு நகரத்தை [illegible]யதாக இப்பொழுதே விரைவில் செய்யக்கடவையென்று திருவாய் மலர்ந்தருளினார்.—எ-று.

விகலமது என்பதில் அது பகுதிப்பொருள் விகுதி. விகலம்-குறைபாடு. ()

வேறு.

சூழுங்கல் வேட்டுவக் கோதைப ராடலுங்
கழங்கு நோக்கிக் களிப்பவன் மற்றிது

வழங்கு மெல்லே வருப்பமெனன் றன்னவன்
றழங்கு நூபுரத் தாள்பணிந் தேகினுன்.

(இ-ள்.) மாலையையணிந்த வேடுவமாதர்கள் செய்யும் விளையாட்டினையும், அம்மனைக்காயாடுதலையும் பார்த்து மகிழ்கின்ற முருகக்கடவுள் இவ்வாறு கட்டளையிட்டவுடனே (தேவதச்சன்) அம்முருகக்கடவுளினது சப்திக்கின்ற சிலம்பையணிந்த திருவடிகளை வணங்கி அவ்வாறே செய்கின்றேனென்று கூறிச்சென்றனன்.—எ-று.

குழங்கல்-மாலைவிசேடம். "குழங்கன் மாலை மல்லுப் பூத்தகன்ற மார்பீர்" என்பதனுனறிக. (௧௩)

மகர தோரணம் வாரியின் மல்கிய
சிகர மாளிகை செம்பொனின் சூளிகை
நிகரில் பற்பல ஞெள்ளல்க ளீண்டிய
நகர மொன்றினை யாயிடை நல்கினுன்.

(இ-ள்.) மகரதோரணங்கள் கட்டிய மிகுந்த பலவாயில்களும், சிகரங்கள் பொருந்திய மாளிகைகளும், செம்பொன் மயமான மண்டபங்களும், ஒப்பற்ற அநேக வீதிகளும் நெருங்கிய ஒருநகரத்தை அங்கு உண்டாக்கினுன்.—எ-று.

வாரி-வாயில். ஞெள்ளல்கள் - வீதிகள். (௧௪)

அவ்வ ரைக்க ணகன்பெரு நொச்சியுட்
கைவல் வித்தகக் கம்மியர் மேலவ
னெவ்வெ வர்க்கு மிறைவ னிருந்திடத்
தெய்வ தக்குல மொன்றுசெய் தானரோ.

(இ-ள்.) கைத்தொழிலிற் சிறந்த தேவதச்சனுனவன் அம்மலையினிடத்தில் விசாலமாகிய பெரிய மதிலுக்குள்ளே யாவர்க்கு முதல்வராகிய முருகக்கடவுள் எழுந்தருளியிருக்கும்பொருட்டு ஒரு திருக்கோயிலை யுண்டாக்கினுன்.—எ-று. (௧௫)

மாற்ற ரும்பொன் வரையுண் மணிக்கிரி
தோற்றி யென்னச் சுடர்கெழு மாழையி
னேற்ற கோட்டத் திழைத்தனன் கேசரி
யாற்று கின்ற வரதனப் பீடிகை.

(இ-ள்.) உயர்ந்த மாற்றினையுடைய பொன்மயமாகிய மேருமலையினுள்ளே மாணிக்க மலைதோன்றிய தன்மைபோல, ஒளிவிளங்குகின்ற பொன்னினுல் அமைத்த ஆலயத்திற்குள்ளே இரத்தின சிங்காசனத்தை யுண்டாக்கினுன்.—எ-று. (௧௬)

இனைய தன்மைபு மேனவு நல்கியே
மனுவின் றுதை வருதலு மள்ளர்த
மனிக மோடு மமரர்க டம்மொடு
முனையின் வேற்படை மொய்ம்பனங் கேகினுன்.

(இ-ள்.) இத்தன்மையானவைகளையும் மற்றும் வேண்டியவைகளையு முண்டாக்கி மனுவின் தந்தையாகிய தேவதச்சன் திரும்பிவரவும், வீரர்களாகிய சேனைகளுடனும்தேவர்கூட்டங்களுடனும் கூரியவேற்படையினையேந்திய முருகக்கடவுள் அங்குச்சென்றருளினுர்.—எ-று. (௧௭)

அறுமு கத்தவ னங்க ரேகியே
துறும லுற்றிடுந் தொல் பெருந் தானையை

யிறுதி யற்ற விருக்கைகொ ளாலயை
நிறுவ லுற்று நிகேதனத் தெய்தினான்.

(இ-ள்.) ஆறு திருமுகங்களையுடைய முருகக்கடவுள் அந்நகரத்துட்சென்று நெருங்கியுள்ள பழைய பெரிய சேனைகளை அளவற்ற மாளிகை வரிசைகளையுடைய பெரியவீதிகளில் நிறுத்தித் தாம் ஆலயத்தினுள்ளே சென்றருளினார்.—எ-று. (கஅ)

இரதம் விட்டங் கிழிந்துபொற் பாதுகை
சரணம் வைத்துத் தனைப்பரும் வீரருஞ்
சுரரு முற்றுடன் சூழ்தரத் துங்கவே
லொருவன் மற்றவ் வுறையுளி னேகினான்.

(இ-ள்.) உயர்ந்த வேற்படையினையேந்திய முருகக்கடவுள் இரதத்தினின்றுங் கீழேயிறங்கிப் பொன்மயமாகிய பாதுகைகளில் திருவடியைவைத்துக் கெடுதலில்லாத வீரர்களும் தேவர்களும் தம்முடன் நெருங்கிச்சூழ்ந்துவர அவ்வாலயத்தினுள்ளே சென்றருளினார்.—எ-று.

ஒப்புயர்வில்லாப் பெருமானாகலின், 'துங்கவேலொருவன்' என்றுகூறினார்.

ஊறில் வெய்யவர் யாரு மொரோவழிச்
சேற லெய்திச் செறிந்தென வில்விடு
மாறில் செஞ்சுடர் மாமணிப் பீடமே
லேறி வைகினன் யாரினும் மேலையோன்.

(இ-ள்.) யாவர்களினுஞ் சிறந்தவராகிய முருகக்கடவுள் குற்றமற்ற பன்னிரண்டு சூரியர்களும் ஓரிடத்திற்குவந்து நெருங்கியிருந்த தன்மையைப்போல ஒளிவீசுகின்ற மாறுபாடில்லாத செவ்வொளியினையுடைய பெரிய இரத்தினப்பீடத்தின்மீதேறி யெழுந்தருளியிருந்தனர்.—எ-று. (உ0)

பொழுது மற்றதிற் பூவின னாதியா
விழுமை பெற்றிடும் விண்ணவர் யாவருங்
குழும லுற்றுக் குமரனை யவ்விடை
வழிப டத்தம் மனத்திடை யுன்னினார்.

(இ-ள்.) அந்தச்சமையத்தில் பிரமன்முதலாகிய சிறப்புப்பொருந்திய தேவர்களனைவரும் ஒருங்குகூடி முருகக்கடவுளை அவ்விடத்தில் ஆராதிக்கும்பொருட்டுத் தம்மனத்தில் நினைத்தார்கள்.—எ-று.

விழுமை - உயர்வாகிய தன்மை. (உக)

புங்க வன்விழி பொத்திய வம்மைதன்
செங்கை தன்னிற் சிறப்பொடு தோன்றிய
கங்கை தன்னைக் கடவுள ருன்னலும்
மங்கல் வந்ததை யப்பெரு மாநதி.

(இ-ள்.) சிவபெருமானது திருவிழிகளை மூடியருளிய உமாதேவியாரது அழகிய திருக்கரத்தில் சிறப்பாகத் தோன்றிய கங்காதேவியைத் தேவர்கள் நினைக்கவும், உடனே அவ்விடத்தில் அந்தப் பெரிய கங்கைநதியானது வந்தது.—எ-று.

"அம்மைதன் செங்கை தன்னிற் சிறப்பொடு தோன்றிய கங்கை," என்பதன் வரலாற்றைமேல் தக்ஷகாண்டத்தில்கூறியிருத்தலின், ஆண்டுக்காண்க. வந்ததை என்பதில் ஐகாரம் சாரியை.

சோதி மான்கலன் றூயன பொற்றுகில்
போது சாந்தம் புகைமணி பூஞ்சுட
ராதியாக வருச்சனைக் கேற்பன
வேறு மாயிடை யெய்துவித் தாரரோ.

(இ-ள்.) ஒளி பொருந்திய சிறந்தஆபரணங்களையும், தூய்மையாகிய பீதாம்பரங்களையும்,புஷ்பம் சந்தனம் தூபம் மணி அழகிய தீபம் முதலிய அருச்சனைக்கு வேண்டிய யாவற்றையும் அவ்விடத்திற்கு அழைப்பித்தார்கள்.—எ-று. (௨௫)

அண்டர் தொல்லை யமுத மிருந்திய
குண்ட முற்ற குடங்கள் கொணர்ந்திடா
மண்டு தெண்புனல் வானதி தன்னிடை
மொண்டு கொண்டனர் வேத நவின்றுளார்.

(இ-ள்.) தேவர்கள் பழைமையான அமிர்தத்தை வைத்திருந்த ஆழமான குடங்களைக் கொண்டுவந்து, அங்குப் பொருந்தியுள்ள தெளிவாகிய நீரையுடைய ஆகாயகங்கையினிடத்தில் வேதங்களையோதி முகந்தெடுத்துக்கொண்டார்கள்.-எ-று.

'அண்டர் தொல்லையமுதம்' என்பதற்கு பழைய தேவாமுதம் எனப் பொருள் கூறலுமொன்று. (௨௪)

அந்த வெல்லை யயன்முதற் றேவரு
முந்து கின்ற முனிவருஞ் சண்முகத்
தெந்தை பாங்க ரீண்டி யவன்பெயர்
மந்தி ரங்கொடு மஞ்சன மாட்டினார்.

(இ-ள்.) அந்தச்சமையத்தில் பிரமன் முதலிய தேவர்களும், உயர்வுபொருந்திய முனிவர்களும் எமது தந்தையாகிய முருகக்கடவுளருகில் நெருங்கி அவரது திருநாமமாகிய சடாக்ஷர மந்திரத்தை யுச்சரித்துக்கொண்டு அபிஷேகஞ் செய்தார்கள். ()

வெய்ய வேற்படை விண்ணவற் கின்னண
மைய மஞ்சன மாட்டிமுன் சூழ்ந்திடுந்
துய்ய பொன்னந் துகிலினை நீக்கியே
நொய்ய பஃறுகி னாதனஞ் சாத்தினார்.

(இ-ள்.) கொடுமையமைந்த வேற்படையினையேந்திய முருகக்கடவுளுக்கு இவ்வண்ணமாக அழகியதிருமஞ்சனஞ்செய்வித்து,முன்புதரித்திருந்த தூய்மையாகிய அழகியபொன்னாடையைக்களைந்து மிருதுவாகிய பல வஸ்திரங்களைப் புதிதாகத் தரித்தார்கள். எ-று. (௨௬)

வீற்றோர் சீய வியன்றவி சின்மிசை
யேற்றி வேலை யிருத்தி யவன்பெயர்
சாற்றி மாமலர் சாத்தித் தருவிடைத்
தோற்று பூவின் றொடையலுஞ் சூட்டினார்.

(இ-ள்.) முருகக்கடவுளை வேறொரு பெரிய சிங்காசனத்தின்மேல் எழுந்தருளச்செய்து அவரது திருநாமங்களையோதிச் சிறந்தமலர்களைக்கொண்டு அருச்சித்துக் கற்பகத்தருவில் தோன்றிய கற்பகமலர் மாலையைத்தரித்தார்கள்.—எ-று. (௨௭)

செய்ய சந்தனத் தேய்வைமுன் கொட்டின
னைய பாளித மப்பினர் நாவியுந்

தூய்ய மானமுந் துன்னமட் டித்தனர்
மெய்யெ லாமணி மேவரச் சாத்தினர்.

(இ-ள்.) அரைத்த செஞ்சந்தனத்தை முன்னே பூசினார்கள்; அழகிய பச்சைக்கர்ப்பூரங்களை யப்பினார்கள்; புனுகுந் தூய்மையாகிய கஸ்தூரியும்பொருந்தப் பூசினார்கள்; திருமேனிமுழுவதும் ஆபரணங்களால் அலங்கரித்தார்கள்.—எ-று. (௨௮)

சந்து காரகி றன்னொண் கருப்புரந்
குந்து ருக்கமொண் குக்குலு வப்புகை
செந்த முற்சுடர் சீர்மணி யார்ப்பொடு
தந்து பற்றித் தலைத்தலை சுற்றினர்.

(இ-ள்.) சந்தனம், கரிய அகில், பச்சைக்கர்ப்பூரம், குந்துருக்கம், ஒள்ளிய குங்கிலியம் இவைகளாலாகிய தூபங்களையும், செவ்வொளியினையுடைய தீபத்தையும் சிறந்த மணியோசையுடன் எடுத்தேந்தி அவ்வவ்விடங்களில் சுற்றினார்கள்.—எ-று.

இத்தி றத்தவு மேனவு மெஃகவேற்
கைத்த லத்தனுக் கடவுட்கு நல்கிய
பத்தி மைத்திற னாற்பணிந் தேத்தினர்
சித்தி சங்கற்பஞ் செய்திடுஞ் செய்கையோர்.

(இ-ள்.) தங்களுக்கு இஷ்டசித்தியுண்டாகக் கருதிச் சங்கற்பஞ் செய்துகொண்டதேவர்கள் இவைகளையும் மற்றைப்பொருள்களையும் கூரிய வேற்படையினை யேந்திய முருகக்கடவுளுக்குச் செய்து அன்புடன் வணங்கித் துதித்தார்கள்.—எ-று.

தேவு கொண்ட சிலம்பினிற் பன்னவ
ரேவ ருங்குழீஇ யின்னணம் பூசனை
யாவ தாற்ற வதுகொண் டமர்ந்தனன்
மூவி ரண்டு முகனுடை மொய்ம்பினோன்.

(இ-ள்.) தேவகிரியில் தேவர்களனைவரும் ஒருங்குசேர்ந்து இவ்வாறு பூசனையைச் செய்யவும் ஆறு திருமுகங்களையுடைய சுத்தவீரராகிய ஸ்ரீசுப்பிரமணியகக்கடவுள் அப்பூசையை யேற்றுக்கொண் டெழுந்தருளியிருந்தனர்.—எ-று. (௩௧)

அமரர் வெற்பி லயிற்படை யேந்திய
விமல னுற்றது சொற்றன மேலினிச்
சமரி டைப்படு தாரகன் றந்திடு
குமர னுற்றது மற்றதுங் கூறுகேம்.

(இ-ள்.) வேற்படையினையேந்திய முருகக்கடவுள் தேவகிரியில் எழுந்தருளியதன்மையை இதுவரையில் சொன்னோம், இனி, போர்க்களத்தில் இறந்த தாரகாசுரன் பெற்ற புத்திரனாகிய அசுரேந்திரன் வந்த தன்மையினையும் மற்றவைகளையுங் கூறுவோம்.—எ-று. (௩௨)

தேவகிரிப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-௪௫௩.

---

உ

முருகன்றுணை.

# அசுரேந்திரன் மகேந்திரஞ்செல் படலம்.

எந்தை குமர னெறிந்ததனி வேற்படையாற்
றந்தி முகமுடைய தாரகன்றான் பட்டதனை
முந்துசில தூதர் மொழிய வவன்றேவி
யந்தமிலாக் கற்பிற் சவுரி யலக்கணுற்றாள்.

(இ-ள்.) எமது தந்தையாகிய முருகக்கடவுள் விட்டருளிய ஒப்பற்ற வேலாயுதத்தினால் யானைமுகத்தினையுடைய தாரகாசுரன் இறந்த தன்மையை முன்னே சில தூதுவர்கள் போய்ச் சொல்லுதலும், அவன் மனைவியாகிய அழிவற்ற கற்பினையுடைய சவுரியென்பவள் (அதனைக்கேட்டு) விசனமடைந்தனள்.—எ-று. (க)

வாழ்ந்த துணைவியர்கண் மற்றுள்ளோ ரெல்லோருஞ்
சூழ்ந்து பதைத்திரங்கத் துன்பத் துடனேகி
யாழ்ந்த கடல்படியு மம்மென் மயிலென்ன
வீழ்ந்து கணவன் மிசையே புலம்புறுவாள்.

(இ-ள்.) தன்னுடன் வாழ்ந்திருந்த துணைவியர்களும் மற்றுள்ள அனைவர்களும் சூழ்ந்து பதைத்து வருந்தத் துன்பத்துடன் சென்று, ஆழமான கடலில் மூழ்குகின்ற அழகிய மெல்லிய (சிறகினையுடைய) மயிலைப்போலத் தனது நாயகன்மீது விழுந்து புலம்புவாளாயினாள்.—எ-று. (உ)

சங்குற் றிடுசெங்கைத் தண்டுளவோன் றன்பதமா
மங்குற் றனையன் றயன்பதஞ்செல் வாயன்று
கங்கைச் சடையான் கயிலையிற்சென் றாயல்லா
லெங்குற் றனையெள் ளிறைவனருள் பெற்றாயே.

(இ-ள்.) (பாஞ்சசன்னிய மென்னுஞ்) சங்கைத்தரித்த கரத்தினையும், குளிர்ந்த துளபமாலையையணிந்த(மார்பினையுமுடைய) திருமாலினது பதவியாகிய அந்த வைகுந்தத்திற்குச் சென்றாயல்லை. பிரமபதவிக்குச் செல்கின்றவனல்லை. கங்கைநதியையணிந்த சிவபெருமானது ஸ்ரீகயிலாயபதவிக்குச் சென்றனையேயன்றி வேறு எங்குச் சென்றனை; அச்சிவபெருமானது திருவருளைப் பெற்றிருக்கின்ற என் பிராணநாயகனே!—எ-று. (ங)

உந்துதனி யாழி யுனக்கணியாத் தந்தோனு
மிந்திரனு மேனை யிமையவர்க ளெல்லோரு
மந்தகனுந் தாமு மனைவர்களு மின்றன்றோ
சிந்தைதனி லுள்ள கவலையெலாந் தீர்ந்தனரே.

(இ-ள்.) (சத்துருக்கள்மீது) விடுகின்ற ஒப்பற்ற சக்கரத்தை உனக்கு ஆபரணமாகக் கொடுத்த திருமாலும், இந்திரனும், மற்றை யெல்லாத்தேவர்களும் இயமனும் மற்றுள்ளவர்களும் தங்கள் தங்கள் மனத்திலுள்ள துன்பங்களனைத்தும் இன்றல்லவோ நீங்கினார்கள்.—எ-று. (ச)

பொன்னகமோர் யாரும் புலம்புற் றிடவுனார்
மன்னவரோ டென்பால் வரும்பவனி காணுதேன்
றுன்னு பறவையினஞ் சூழுத் துயிலுமுன்னை
யின்ன பரிசேயோ காண்பேனு லெம்பெருமான்.

(இ-ள்.) பொன்னுலகத்திலுள்ள தேவர்களனைவரும் துன்பத்தையடையும் வண்ணம் அசுரராஜாக்களுடன் என்னிடத்திற்கு வருகின்ற பவனியைக் காணுதவளாகிய யான் நெருங்கியபறவைக்கூட்டங்கள் சூழும்படித் தூங்குகின்ற உன்னை எம்பெருமானே! இத்தன்மையாகவோ காண்பேன்.—எ-று.

துயிலல், ஈண்டு இறந்து கிடத்தல். (ரு)

புல்லா திருந்தனையான் புல்லுவது கண்டுமது
பல்லோருங் காணிற் பழியென் றொழிந்தாயேன்
மல்லாருந் தோளாய் மயக்குற்றேற் கோருரையுஞ்
சொல்லாய் வறிதே துயின்றாய் துனியுண்டோ.

(இ-ள்.) யான் உன்னைத் தழுவுவது பார்த்தும் நீ என்னைத் தழுவாதிருக்கின்றனை; அப்படித் தழுவுவது பலருங் காணில் பழியாகுமென்று நீங்குவாயானல், மற்போரமைந்த தோட்களையுடைய என் பிராணநாயகனே! மயங்கியிருக்கின்ற எனக்கு ஒரு வார்த்தையுஞ் சொல்லுகின்றிலை; சும்மா தூங்குகின்றனை; என்மீது ஏதேனும் வருத்தமுண்டோ?—எ-று.

துனி யென்றது, ஊடலை. (சு)

மையோ டிறமு மணிமிடற்றோன் றந்தவரை
மெய்யா மெனவே வியந்திருந்தே னிந்நாளும்
பொய்யாய் விளைந்ததுவோ பொன்றினையா லென்றுணைவா
வையோ விதற்கோ வருந்தவமுன் செய்தாயே.

(இ-ள்.) யான் இதுவரையிலும், இருளையொத்த நீலகண்டத்தினையுடைய சிவபெருமான் கொடுத்த வரமானது உண்மையானதென்று வியப்புற்றிருந்தேன். அவ்வரம் பொய்யாக விளைந்ததோ? என்னுயகனே; நீ இறந்தனை, ஐயோ! இதற்குத் தானோ? நீ முன்பு அரிய தவத்தைச் செய்தனை.—எ-று. (எ)

தன்னோ டிணையின்றித் தானே தலையான
முன்னோ னருள்புரிந்த முன்னோ னிளவல்வரி
னென்னோ வவனோ டெதிர்ந்தா யிறந்தனையே
யன்னோ விதிவலியை யாரோ கடந்தாரோ.

(இ-ள்.) தமக்கொருவருமொப்பின்றித் தாமே முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமான் பெற்றருளிய விநாயக மூர்த்திக்குத் தம்பியாகிய கந்தன் போர்செய்ய வந்தால் அவனுடன் என் எதிர்த்தனை; இறந்தாயே! ஐயோ! விதியின் வல்லமையை யார் கடந்தார்கள்.—எ-று.

தன்னிகருயர்ச்சியில்லாத் தன்மையனுகலின், 'தன்னோடிணையின்றித் தானே தலையான முன்னோன்' என்றார். முன்னோனிளவல் - மூத்தபிள்ளையாராகிய விநாயகமூர்த்திக்குத் தம்பியாராகிய முருகக்கடவுள். (அ)

சந்தார் தடம்புயத்துத் தானவர்க டற்சூழ
வந்தார் கமழு மரியணைமேல் வைகியநீ

சிந்தா குலத்திற் செருநிலத்திற் றுஞ்சினையா
லெந்தாய் புகலா யிதுவுஞ் சிலகாலோ.

(இ-ள்.) சந்தனமணிந்த பெரிய புயத்தினையுடைய அசுரர்கள் தன்னைச் சூழும்படி அழகிய மாலைகள் மணம் வீசுகின்ற சிங்காசனத்தில் வீற்றிருந்த நீ (இப்பொழுது) மனவருத்தத்துடன் போர்க்களத்தில் இறந்தனை; எந்தையே! இவ்வாறு வீழ்ந்து கிடத்தலுஞ் சிலகாலமோ? நீ சொல்லக்கடவாய்.—எ-று.

தாய்போலப் பேரன்பு வைத்திருந்த கணவனாகலின், 'எந்தாய்' என்று கூறினர். (க)

வென்றிமழு வேந்தும் விமல னுனக்களித்த
தான்றும் வரத்தியல்லை யுன்னியினையாற் சூழ்ச்சியினை
யொன்று முணரா துயிருந் தொலைந்தனையே
யென்று தமியே னினியுன்னைக் காண்பதுவே.

(இ-ள்.) வெற்றிபொருந்திய மழுப்படையை யேந்திய சிவபெருமான் உனக்குக் கொடுத்தருளிய நிலைபெற்ற வரத்தின் தன்மையை நினைந்தனை, இந்தத் தந்திரத்தைச் சிறிதும் உணராமல் உயிரையும் விட்டனை; அடியேன் இனி எக்காலத்தில் உன்னைப் பார்ப்பது.—எ-று. (௧0)

வன்னி விழியுடையான் மைந்த னமர்புரிய
முன்னைவலி தோற்று முடிந்தா யெனக்கேட்டுப்
பின்னுமிருந் தேனென்னிற் பேரன் புடையோர்யா
ரென்னினியான் செய்கே னெனவே யிரங்குற்றாள்.

(இ-ள்.) அக்கினிநேத்திரத்தையுடைய சிவபெருமானது மைந்தனாகிய சுப்பிரமணியன் வந்து போர்செய்தலால், முன்னிருந்த வல்லமையையிழந்து இறந்தனையென்று சொல்லக்கேட்டுப் பின்னும் உயிர்தரித்திருந்தேனானல் (என்னை விட) மிகுந்த அன்புடையவர்கள் யாரிருக்கின்றார்கள், இனியான் யாது செய்வேன் என்றுகூறி வருத்தமுற்றனள்.—எ-று. (கக)

மற்றைத் துணைவியரும் வந்தீண்டி மன்னவனைச்
சுற்றிப் புலம்பித் துயருற் றிடும்வேலை
யற்றத் தினனாகி யாசுரத்தின் பாற்போன
கொற்றப் புதல்வன் வினவிக் குறுகினனால்.

(இ-ள்.) மற்றையமனைவியர்களும் வந்து நெருங்கித் தாரகாசுரனைச் சூழ்ந்து புலம்பித் துன்பமுற்றிருக்குஞ் சமையத்தில், ஆசுரமென்னும் நகரத்திற்குச் சென்ற வெற்றிபொருந்திய புதல்வனாகிய அசுரேந்திரன் கேள்விப்பட்டுச் சோர்வுபொருந்திய மனமுடையவனாய் வந்து சேர்ந்தனன்.—எ-று.

'அற்றத்தினனாகி' என்பதற்கு, அவ்விடத்தினின்று நீங்கினவனாய் எனப் பொருள்கூறினுமாம். அற்றம்-மறைவு, சோர்வு. ஆசுரம்-சிங்கமுகாசுரனதுநகரம்.(கஉ)

தண்டா விறல்சேருந் தன்றாதை வீந்ததனைக்
கண்டா னுயிர்த்தான் கலுழ்ந்தான் கரங்குலைத்தா
னண்டாத சோகத் தழுங்கினான் வெய்யகன
லுண்டா னெனவீழ்ந் தயர்ந்தா னுணர்ந்தனனே.

(இ-ள்.) கெடாத வல்லமைபொருந்திய தன் தந்தையாகிய தாரகன் இறந்ததைப்பார்த்துப் பெருமூச்சுவிட்டான், அழுதான், கைகளையுதறினான், அடங்காத

சோகத்தில் மூழ்கினான், கொடிய அக்கினியை யுண்டவனைப்போலப் பூமியில்விழுந்து சோர்வடைந்தான், பின்பு தெளிவடைந்தான்.—எ-று. (௧௩)

என்றுமுறா வின்ன லிடைப்பட் டவனெழுந்து
சென்றுதன தன்னை திருத்தா ளிடை விழா
வன்றலைவன் யாண்டையா றேதாயன் னேயென்று
நின்று புலம்பி நினைந்திவ்வை செய்கின்றான்.

(இ-ள்.) எக்காலத்துமடையாத துன்பத்தில் மூழ்கிய அவ் வசுரேந்திரன் எழுந்துபோய்த் தனது அன்னையாகிய சவுரியினது பாதங்களில் வீழ்ந்து, தாயே! உன் நாயகன் எங்கு சென்றனன் சொல்வாயாக வென்று நின்று புலம்பிப் பின்னர் ஆலோசித்து இவைகளைச் செய்வானாயினான்.—எ-று. (௧௪)

அன்னைமுத லோரை யகல்வித் தொருசாரிற்
றுன்றுநிரென் றேவித் தொலையாத தானவரிற்
றன்றுணையோர் தம்மாற் றழலிந் தனமுதலா
மன்னு கருவி பலவும் வருவித்தான்.

(இ-ள்.) தாய் முதலியவர்களை அவ்விடத்தினின்றும் விலக்கி, ஒருபக்கத்தில் சென்றிருங்களென்று அனுப்பிவிட்டுப் போரில் அழியாத அசுரர்களில் தனக்குதவி யுள்ளவர்களால் நெருப்பு விறகு முதலாகப் பொருந்திய பல கருவிகளையும் வரவழைத்தனன்.—எ-று. (௧௫)

வந்த பொழுதனில் வன்களத்திற் றுஞ்சுகின்ற
தந்தைதனை முன்போற் றகவுபெற வொப்பித்தோ
ரெந்திரத்தேர் மீதேற்றி யிமத் திடையுய்த்துச்
சந்தனப்பூம் பள்ளி மிசையே தருவித்தான்.

(இ-ள்.) அவைகளைக் கொண்டுவந்தபொழுது வலியபோர்க்களத்திலிறந்து கிடக்கின்ற தன் தந்தையாகிய தாரகாசுரனை முன்போல் தகுதியாகப்பொருந்தி, சக்கரத்தினையுடைய ஒரு தேரின்மீதேற்றிச், சுடலையிற்கொண்டுபோய்ச் சேர்ப்பித்துச் சந்தனக்கட்டைகளாலாகிய அழகிய சயனத்தில் கிடத்தினான்.—எ-று. (௧௬)

ஈமக் கடன்க ளியற்றித்தன் றாதைதனைத்
தாமக் கனலாற் றகனம் புரிந்திடலுங்
காமுற் றனளென் கணவனுடன் செல்வதற்குத்
தீமுற் றருதி யெனவன்னை சென்றுரைத்தாள்.

(இ-ள்.) தகனக்கிரியைகளைச் செய்து, தன் தந்தையாகிய தாரகனை ஒளி பொருந்திய அக்கினியினால் தகனஞ் செய்யவும், அவன் தாயாகிய சவுரி யென்பவள் என் கணவனுடன் நானும் இறந்துபோவதற்கு விருப்பங்கொண்டேன், ஆதலால் முன்னே அக்கினியை வளர்க்கக்கடவையென்று அவனெதிரிற்சென்று கூறினாள். ()

நற்றாய் மொழிந்ததனைக் கேட்டு நடுநடுங்கிப்
பொற்றாள் பணிந்தென்னைப் போற்றி யிருத்தியெனச்
சொற்றா னதுமறுத்துத் தோகை சுளித்துரைப்ப
வற்றாக வென்றா னசுரேந் திரனென்பான்.

(இ-ள்.) அசுரேந்திரன் தன்னைப் பெற்றதாயானவள் கூறிய வசனத்தைக் கேட்டு மிகவும் நடுங்கி தன்னன்னையின் பொன்போன்ற தாள்களைவணங்கி (தாயே!

நீ இறவாமல்) என்னைப் பாதுகாத்துக்கொண் டிருக்கக்கடவா யென்று கூறினன்; (அதற்குஅவள்) அவ்வசனத்தைத்தடுத்துக் கடிந்துரைக்கவும், அசுரேந்திரன் ஆறுதல் அப்படியே யாகட்டுமென்று கூறினன்.—எ-று. (கூ)

எனையதோர் தாயர்களும் யாமுங் கணவனுடன்
வானகம்போ யெய்த வழங்கென் றிடவிசையா
வான படியே யழலமைக்க வன்னையரா
மானனையா ரெல்லோரும் வான்கனலி னுள்புக்கார்.

(இ-ள்.) மற்றைத்தாய் மார்களும் (அசுரேந்திரனிடத்தில் சென்று) நாங்களும் கணவனுடன் சுவர்க்கஞ் சென்றடையும் பொருட்டுத் தழலை வளர்க்கக்கடவை யென்று கூறுதலும், அதற்கு அவன் சம்மதித்து அப்படியே நெருப்பைவளர்க்கவும் அவனது தாய்மார்களாயுள்ள மான்போன்ற கண்களையுடைய அசுரமாதர்க ளனைவரும் உயர்ந்த அக்கினியிற்பிரவே சித்தார்கள்.—எ-று. (கக)

புக்கதொரு காலை புலம்பியே யங்கரை
யக்கணமே நீங்கி யசுரேந் திரனென்போன்
றக்க கிளைஞர்சிலர் தற்சூழ வேயேகி
மைக்கடலுள் வைகு மகேந்திரமூ தூருற்றான்.

(இ-ள்) தனது தாய்மார்களெல்லாம் அக்கினியில் பிரவேசித்தவுடனே அசுரேந்திரன் துக்கமடைந்து அந்த மாயாபுரியைவிட்டு நீங்கித் தகுந்த பந்துக்களில் சிலர்தன்னைச் சூழ்ந்துவரச்சென்று, கரியகடலின் நடுவிலிருக்கின்ற புராதனமாகிய மகேந்திரபுரியையடைந்தனன்.—எ-று. (உ0)

வே று.

உளந்தளர் வெய்தித் தொல்லை யொளிமுக னிழந்து மேனி
தளர்ந்தனன் வறியன் போன்று தாரக முதல்வன் றந்த
விளந்தனி மைந்தன் வல்லே யேகலு மனைய நீர்மை
வளந்திகழ் தொல்லை வீர மகேந்திரத் தவுணர் கண்டார்.

(இ-ள்.) தாரகாசுரன் பெற்ற இளம்புதல்வனாகிய அசுரேந்திரன் மனத்தளர்ச்சியடைந்து தன்முகத்தில் முன்னிருந்த பொலிவுகெட்டு உடல்வாடித்தரித்திரனைப்போல விரைவாகச்செல்லுதலும், அவ்வாறு செல்லுந்தன்மையை மிக்க வளப்பத்துடன்விளங்குகின்ற பழைமையாகிய வீரமகேந்திரபுரியிலுள்ள அசுரர்கள் பார்த்தார்கள்.—எ-று. (உக)

உரங்கிள ரவுணர் காணூஉ வொய்யெனத் துளங்கி யேங்கிக்
கரங்களை விதிர்த்துக் கண்ணீர் காலெறி படர்ந்து செல்லப்
பெருங்கட லுடைந்த தேபோற் பேதுற வெய்தி யாற்ற
விரங்கியிக் குமர னுற்ற தென்கொலென் றிசைக்க லுற்றார்.

(இ-ள்.) வலிமைமிக்க அசுரர்கள் (அவ்வசுரேந்திரனைப்) பார்த்து விரைவாக நடுங்கியேக்கமுற்றுக் கைகளை விதிர்த்துக் கண்ணீரானது காலின்வழியே பரவியோட மனமயக்கங்கொண்டு பெரிய கடலுடைந்தாற்போல மனங்கலங்கி மிகுதியாக அழுது இச்சிறுவன் வந்தது என்னகாரணமென்று சொல்லத்தொடங்கினார்கள்.

வஞ்சமுங் கொலையுஞ் செய்யான் மற்றிவ னிதற்குந் தாதை
வெஞ்சினங் கொடுபோ கென்று விடுத்தனன் போலு மென்பார்
தஞ்சம தாகி யுள்ள தாரகன் கொடுமை நோக்கி
யஞ்சியே யவனை நீங்கி யடைந்தனன் கொல்லோ வென்பார்.

(இ-ள்.) இவ்வசுரேந்திரன் வஞ்சனைகளையுங் கொலைகளையுஞ் செய்யான், ஆதலால் இவனது தந்தை மிகுந்த கோபங்கொண்டு போவென்று தன்னகரத்தைவிட்டுத் துரத்திவிட்டனன்போலும் என்று கூறுவார்கள்; (வேறுசிலர்) இவனுக்காதரவாயுள்ள தாரகாசுரனது கொடுமைகளைப்பார்த்துப் பயந்து அவனைவிட்டு நீங்கிவந்தனனோ? என்று கூறுவார்கள்.—எ-று. (உரு)

சீரொடு துறக்க நீத்துத் தேவர்கோ னுருவ மாற்றிப்
பாரிடை யுழந்தா னென்பார் மற்றவன் பரனை வேண்டிப்
பேரிகல் மாயம் வன்மை பெற்றுவந் தடுபோர் செய்யத்
தாரக னிறந்தான் றொல்லோ தளர்ந்திவன் வந்தா னென்பார்.

(இ-ள்.) இந்திரன் தனது செல்வத்துடன் சொர்க்கலோகத்தை விட்டு வேற்றுருவங்கொண்டு பூமியில் உழல்கின்றானென்று கூறுவார்கள், அந்த இந்திரன் சிவபெருமானைப் பிரார்த்தித்து, மிக்க போருக்குரிய மாயத்தையும் வல்லமையையும் பெற்றுப் பின்னும் வந்து நெருங்கிய போர்செய்ய, அதுகாரணமாகத் தாரகன் இறந்தனனோ? இவன் தளர்ச்சியடைந்து வந்தனன் என்று கூறுவார்கள்—எ-று. (உச)

மாண்கிளர் தார கப்பேர் மன்னவன் பகைஞ ராற்று
மொய்ங்கிளர் சமரில் வீந்தா னென்பதற் கேது வுண்டாற்
சேண்கிளர் கிரவுஞ் சத்தின் றேரிடத் தொன்றுங்
காண்கில மவுணர் தம்மைப் பூதியே காண்டு மென்பார்.

(இ-ள்.) மாட்சிமைபொருந்திய தாரகாசுரன் சத்துருக்கள் செய்கின்ற வலிமைமிக்க போரில் இறந்தானென்பதற்குக் காரணமுண்டு; (அது யாதெனில்,) ஆகாயத்தில் விளங்குகின்ற உயர்வினுல் எவ்விடத்திலுங் காணப்பட்ட கிரவுஞ்சமலையில் அசுரர்களைக் கண்டோமில்லை, அங்குப் புழுதிகளையே கண்டோம் என்று கூறுவார்கள்.—எ-று. (உரு)

பையர வணையிற் றுஞ்சும் பகவன தாழி தன்னை
மையபொன் னணிய தாக வணிந்திடு மவுண னோடு
மொய்யமர் புரிவார் யாரே முரணொடு வெம்போர் சில்லோர்
செய்யினு மவரா லன்னோன் முடிகிலன் றிண்ண மென்பார்.

(இ-ள்.) படம்பொருந்திய சேஷசயனத்தில் நித்திரை செய்கின்ற திருமால் விடுத்த சக்கரத்தை அழகிய பொன்னாபரணமாகத் தரித்துள்ள தாரகாசுரனுடனே நெருங்கிய போர்செய்ய வல்லவர்கள் யாவர்; சிலர் பராக்கிரமத்துடனெதிர்த்துக் கொடிய போரினைச் செய்தாலும் அவர்களால் அவன்இறவான்; இது சத்தியம்என்று கூறுவார்கள்.—எ-று. (உசு)

அங்கையை யொருவன் வாளா லறுத்திடப் புலம்பி நங்கோன்
றங்கைவந் தமரர் தம்மைச் சயந்தனைச் சிறைசெய் வித்தா
ளிங்கிவன் றானுந் துன்புற் றேகுவா னின்று மற்றே
புங்கவர் தமக்கே யின்னல் புரிகுவன் போலு மென்பார்.

(இ-ள்.) நமது தலைவனாகிய சூரபன்மன் தங்கையாகிய அசமுகியினுடைய அழகிய கையை ஒருவன் வாளாலறுத்தலால், அவள் இங்கு வந்து தேவர்களையும் சயந்தனையும் சிறைசெய்வித்தனள். இங்கே இவனும் துன்பங்கொண்டு செல்கின்றான், இன்றும் அவ்வண்ணமே தேவர்களுக்குத் துன்பத்தை யுண்டாக்குவான்போலும் என்று கூறுவார்கள்.—எ-று. (உஎ)

மலிகிளர் எழிலி வண்ணன் மற்றவ னொடுபோ ராற்றா
னலியுல களித்த செம்ம லமர்த்தொழில் சிறிதுந் தேற்றான்
றணிவறு செயிர்மீக் கொண்ட தாரக னொடுபோர் செய்வி
னிணையக லீச னன்றி யாவரே வல்லரென்பார்.

(இ-ள்.) கருநிறம் விளங்கும் மேகவண்ணனாகிய திருமால் இந்தத் தாரக னுடன் எதிர்த்துப் போர்செய்யமாட்டான்; அழகிய உலகத்தைச் சிருஷ்டித்த பிரமன் போர்த்தொழில் சிறிது முணரான்; தணிவற்ற மிகுந்த கோபத்தினையுடைய தாரகனுடன் போர்செய்ய வேண்டுமாயின் ஒப்பற்ற சிவபெருமானே யல்லது வேறு யாவர் வல்லவர்கள் என்று கூறுவார்கள்.—எ-று. (உஅ)

இமையவர் கருடர் நாக ரியக்கர்கள் தருவ ரேனோர்
நமரிடு பணிக ளாற்றி நாடொறுந் திரிந்தா ரற்றாற்
சமரெதி ரிழைப்பா ரின்றித் தளர்ந்தன மிந்நாள் காறு
மமரினி யுளது போது மையமு தில்லை யென்பார்.

(இ-ள்.) தேவர்களும், கருடர்களும், நாகர்களும், இயக்கர்களும், மற்றவர்களும் நம்மவர்கள் இடுகின்ற ஏவற்றொழிலைச் செய்துகொண்டு திரிந்தார்கள், அதனால், நாம் இந்நாள்வரையிலும் எதிர்த்துப்போர்செய்பவரில்லாது வருந்தினோம்,இனி நமக்குப் போர்கிடைக்கும்போலும் இதற்குச் சந்தேகமில்லை என்று கூறுவார்கள். ()

சேயிவ னலக்க ணெய்திச் செல்லுறு பரிசா லங்க
ணாயதோர் தீங்கு போலு மையமின் றிதனை நாடி
நாயகன் விடுக்கு முன்ன நம்பெருந் தானை யோடு
மாயமா புரிகா றேகி யறிந்தனம் வருது மென்பார்.

(இ-ள்.) சிறுவனாகிய இவன் வருத்தங்கொண்டு செல்லுதலால் அவ்விடத்தில் யாதேனுந் தீங்கு நேர்ந்திருக்கக்கூடும்; இதற்குச் சந்தேகமில்லை. நாம் இதனை விசாரித்து நமது தலைவனாகிய சூரபன்மன் நம்மை அனுப்புதற்கு முன்னமே நாம் நமதுபெருஞ்சேனைகளுடன் பெரிய மாயாபுரிவரையிலுஞ்சென்று தெரிந்துகொண்டு வருவோம் என்று கூறுவார்கள்.—எ-று. (௩0)

எனைப்பல வினைய வாற்று லியாவரு மவுண ரீண்டி
மனப்படு மைத லோடும் வயின்வயி னுரையா நிற்ப
நினைப்பருந் திருமிக் குள்ள நெடுமகேந் திரத்திற் சென்று
வனைப்பெருங் கழற்காற் சூர மன்னவன் கோயில் போந்தான்.

(இ-ள்.) என்றிவ்வாறு பலவகையாக அசுரர்களனைவரும் நெருங்கிவந்து மனவருத்தத்துடன் அவ்வவ்விடங்களில்நின்றுகொண்டுசொல்லும்படி நினைத்தற்கரிய பெருஞ் செல்வத்தினையுடைய நீண்ட மகேந்திரபுரியில் சென்று பெரிய வீரக்கழலை யணிந்த கால்களையுடைய சூரபன்மனது அரண்மனையை யடைந்தனன்.—எ-று.

போந்துதா ரகன்றன் மைந்தன் பொள்ளெனப் படர்த லோடும்
வாய்ந்தபே ரவைய மன்றில் வரம்பிலா வவுணர் போற்ற
வேந்தெழி லரிக டாங்கு மெரிமணித் தவிசின் மீக்கண்
வேந்தர்கள் வேந்தன் சூரன் மேவிவீற் றிருந்தான் மாதோ.

(இ-ள்.) தாரகாசுரன் புதல்வனாகிய அசுரேந்திரன் விரைவாகவந்து உள்ளே செல்லவும், நிலைபெற்ற பெரியசபாமண்டபத்தில் அளவில்லாத அசுரர்கள் துதிக்கப்

பேரழகினையுடைய சிங்கங்களால் சுமக்கப்பட்ட ஒளிவிளங்கும் இரத்தினாசனத்தில் அரசர்க்கரசனாகிய சூரபன்மன் ஏறி வீற்றிருந்தனன்.—எ-று. (௯௨)

வீற்றிருந் தரசு போற்றும் வேந்தனை யெய்தி யன்னான்
காற்றுணை முன்னர் வீழ்ந்து கரங்களா லவற்றைப் பற்றி
யாற்றவு மாற்றல் செய்ய வவுணர்கோ னதுகண் டைய
சாற்றுதி புகுந்த தன்மை தளர்ந்தனை புலம்ப லென்றான்.

(இ-ள்.) சிங்காசனத்திலிருந்து அரசாட்சிசெய்கின்ற சூரபன்மனை யடைந்து அவனது கால்களினெதிரில்விழுந்து கைகளால் அக்காலைப்பிடித்து மிகவுங் கதறியழுதலும், அதனைச் சூரபன்மன் பார்த்து, குழந்தாய்! நடந்த தன்மையைச் சொல்லக்கடவை; நீ வருந்திப் புலம்பாதேயென்று கூறினன்.—எ-று. (௯௩)

என்றலு மைந்தன் சொல்வா னிந்திரன் புணர்ப்பா லீசன்
வன்றிறற் குமரன் பூத வயப்படை தன்னொ டேகி
யுன்றனை யிளவ றன்னை யொண்கிர வுஞ்ச மென்னுங்
குன்றொடும் வேலாற் செற்றுக் குறுகினன் புவியி லென்றான்.

(இ-ள்.) சூரபன்மன் இவ்வாறு கூறவும் அசுரேந்திரன் கூறுவான், இந்திரனது தந்திரத்தினால் சிவபெருமான் பெற்ற மிக்க வல்லமையையுடைய குமரனாகிய சண்முகன் வெற்றியமைந்த பூதப்படைகளுடன் வந்து உனது தம்பியை ஒளிபொருந்திய கிரவுஞ்சமலையுடன் தனது வேற்படையினால் அழித்துப் பூமியில் வந்தனன் என்று கூறினான்.—எ-று.

அசுரேந்திரன் தாரகனைக்குறித்துச் சொல்லுமிடத்து, என் தந்தைதன்னை யெனக் கூறின், சூரபன்மனை வேறுபிரித்துக் கூறியதுபோலத் தோன்றுமாகலானும், சூரபன்மனைப்போலவே வரத்திலுந் திறத்திலும் மாயா வஞ்சகத்திலுஞ் சிறந்தவனாகலானும், அச் சூரபன்மனுடன் சேர்த்து, 'உன்றனை யிளவறன்னை' என்றும், தாரகனைப்போலவே மாயாதந்திரத்தில் மிகச் சிறந்துள்ளதாகலின், 'ஒண்கிரவுஞ்சம்' என்றுங் கூறினர். (௯௪)

வெய்யசூ ரதனைக் கேளா விழுமிதென் றுருமி னக்குச்
சையமா மவுண னோடு தாரக வலியோன் றன்னை
மையுறழ் கண்டத் தண்ணன் மைந்தனோ வடுதல்செய்வான்
பொய்யிது வெருவன் மைந்த வுண்மையே புகறி யென்றான்.

(இ-ள்) கொடிய சூரபன்மன் அதனைக்கேட்டு நல்லதென்று இடியிடித்தாற்போலச் சிரித்துக் கிரவுஞ்சனென்னும் அசுரனுடன் பலசாலியாகிய தாரகனை இருள்போலுங் கண்டத்தினையுடைய சிவபெருமானது புதல்வனோ கொல்லுபவன். இது பொய்; மகனே! நீ பயப்படாதே சத்தியத்தைச் சொல்லக் கடவையென்று கூறினான்.—எ-று.

நாம் அழியாவரம்பெற்றிருப்பதுபோலவே நமது தம்பியாகிய தாரகனும் அழியா வரம் பெற்றவனாகலானும், தந்தை கொடுத்த வரத்தை மைந்தனழிப்பது கூடாதாகலானும் இவ் வார்த்தை நம்பக்கூடிய தன்றென்று கூறினனென்பார், 'பொய்யிது வெருவன் மைந்த வுண்மையே புகறி யென்றான்' என்று கூறினர். (௯௫)

தாதைகேள் சரத மீது தாரகத் தந்தை தன்னை
மேதகு கிரவுஞ் சத்தை வேல்கொடு பரமன் மைந்தன்
காதினன் சென்று வீமக் கடன்முறை யெந்தைக் காற்றி
மாதுயர் கொண்டு நின்பால் வந்தன னென்றான் மைந்தன்.

(இ-ள்.) (அதற்கு அசுரேந்திரன்) தந்தையே! கேட்பாயாக, இது உண்மை, என் தந்தையாகிய தாரகனையும், உயர்வுபொருந்திய கிரவுஞ்சத்தையும் சிவகுமாரனாகிய சண்முகன் தனது வேலாயுதத்தாற் கொன்று சென்றனன். நான் என் தந்தைக்குத் தகனக்கிரியைகளைச் செய்துமுடித்து மிகுந்ததுன்பத்துடன் உம்மிடத்தில்வந்தேனென்று கூறினன்.—எ-று. (சுசு)

வேறு.

தோட்டுணைவ னாமிளவ லுஞ்சினனெ னுஞ்சொற்
கேட்டலு முளந்திடை கிளர்ந்தது சினத்தீ
நாட்டமெரி கால்வபுகை நன்றுவன மூன்ட
மீட்டுபொறி சிந்துவன யாக்கையுரு ரோமம்.

(இ-ள்.) தனது புயத்துணைவனுயுள்ள இளையதம்பியாகிய தாரகன் இறந்தனனென்று சொல்லிய வசனத்தைக் கேட்டவுடன் (சூரபன்மனுக்கு) உள்ளத்திற் கோபாக்கினி கிளம்பியது; கண்கள் நெருப்புப்பொறிகளைக் கக்கின; மூக்கினின்றும் புகையுண்டாயின; சரீரத்திலுள்ள உரோமங்களெல்லாம் நெருங்கிய நெருப்புப்பொறிகளைச் சிந்தின.—எ-று. (சுஎ)

நெறித்தபுரு வத்துணைக ணெற்றிமிசை சென்ற
கறித்தன வெயிற்றினிரை கவ்வியத ரத்தைச்
செறித்தன துடித்தன தெழித்தவிதழ் செவ்வாய்
குறித்தது மனங்ககன கூடமு முடிக்க.

(இ-ள்.) நெரித்த இரண்டு புருவங்களும் நெற்றிக்குமேற் சென்றன; பல்வரிசைகள் உதட்டை மடித்துக் கடித்தன; உதடும் சிவந்தவாயும் நெருங்கித் துடித்துக் கர்ச்சித்தன; மனமானது அண்டகூடத்தை யழிக்க நினைந்தது.—எ-று. (சுஅ)

இவ்வகை சினத்தெரி யெழுந்துமிசை கொள்ள
வவ்வெரியி னாற்றலை யவித்ததது போழ்தில்
வெவ்விலைகொ டாரகன் மிசைத்தொடரு மன்பாற்
றெவ்வர்புகழ் சூரனிடை சேர்ந்ததுய ராழி.

(இ-ள்.) பகைவர்கள் புகழ்கின்ற சூரபன்மனிடத்தில் இவ்வண்ணமாகிய கோபாக்கினியானது தோன்றி யதிகரிக்கவும், அச்சமையத்தில் பாவத்தொழிலையுடைய தாரகன்மீது பொருந்தியுள்ள அன்பினால் உண்டாகிய துன்பக்கடலானது அவ்வக்கினியின் வல்லமையை யழித்தது.—எ-று. (சுகூ)

துப்புநிகர் கண்புனல் சொரிந்தநதி யேபோன்
மெய்ப்புறம் வியர்த்தமுகம் வெள்ளமவை யீண்டி
யப்புணரி யானதுய ராழியது வென்றே
செப்புபொரு ளுண்மையது தேற்றியது போலும்.

(இ-ள்.) பவளம்போற் சிவந்த கண்கள் ஆற்றைப்போல நீரைச் சொரிந்தன; உடம்பிலும் முகத்திலும் வியர்வை யுண்டாயின; அந்நீர் பெருகி அந்தக் கடலாகிய துன்பசாகரம் அதுவேயென்று கூறும் பொருளினது உண்மையைத் தெளிவித்த தன்மையையொக்கும்.—எ-று. (எ0)

பருவரலெ னும்புணரி யூடுபடி வுற்றே
யரியணை மிசைத்தவறி யம்புவியில் வீழா
வுருமென வரற்றின னுணர்ந்ததனை யஞ்சி
நரலையொடு பாரக நடுங்கியதை யன்றே.

(இ-ள்.) துன்பமென்னுங் கடலில் முழுகிச் சிங்காசனத்தினின்றுந் தவறிப் பூமியில்விழுந்து இடிபோலக் கதறியழுதனன்; அவ்வொலியைக்கேட்டுப் பயந்து கடலும் உலகமும் நடுக்கங் கொண்டது.—எ-று.

நரலை-கடல். நடுங்கியது என்பது வழுவமைதி. (சக)

கூற்றுள நடுங்கிய குலைந்தது செழுந்தீக்
காற்றுவெரு வுற்றது கதிர்க்கடவுள் சோம
னேற்றமிகு கோளொடு விரிந்தபுவி முற்று
மாற்றிய பணிக்கிறையு மஞ்சிய தலைந்தே.

(இ-ள்.) இயமன் மனநடுங்கிக்குலைந்தனன்; செழியஅக்கினியும் வாயுவும் நடுங்கின; சூரியனும் சந்திரனும் உயர்வுபொருந்திய மற்றைக் கோள்களுடன் விலகினார்கள்; உலகமுழுவதுஞ் சுமக்கின்ற ஆதிசேஷனும் நடுங்கிப் பயங்கொண்டனன்.

கூற்று என்பது, பொருளால் உயர்திணையாயினும் சொல்லால் அஃறிணையாகவிருத்தலின், 'கூற்றுள நடுங்கிய குலைந்தது' என்று கூறினார். நடுங்கிய-செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சம். (சஉ)

பாங்குறு தானவர்கள் பாசறையின் மூழ்கி
யேங்கினர் விழுந்தன ரிரங்கினர் தளர்ந்தா
ராங்கனைய போழ்துதனி லந்நகர மெல்லா
மோங்குதுயர் கொண்டெழு மோதைமலிந் தன்றே.

(இ-ள்.) பக்கங்களிலிருந்த அசுரர்கள் துன்பத்தில் முழுகி ஏக்கமுற்று விழுந்து இரங்கித் தளர்ச்சியடைந்தார்கள்; அந்தச் சமையத்தில் அந்நகரமுழுவதிலும் மிகுந்த துன்பங்கொண்டு அழுகின்ற வோசையே மிகுதியாக விருந்தது.—எ-று

பாசறை-துன்பம். மலிந்தன்றே என்றது, தொகுத்தல்விகாரம். (சங)

ஆனபொழு தத்தினி லெழுங்கனலு றுசூரன்
போனதொரு சிற்றவழல் புந்தியிடை மூள
மானமொடு நாணமட வல்லையி லெழுந்தே
தானுடைய வேவலர் தமக்கிவை யுரைப்பான்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமையத்தில் வருந்திய சூரபன்மன் முன்பு தன்னிடத்தினின்றும் விலகினின்ற கோபாக்கினியானது மீண்டும் மனத்தில் மூளவும், மானமும் நாணமுந் தன்னைவருத்த விரைவாக வெழுந்து தனது ஏவலாளர்களை நோக்கி இவ்வார்த்தைகளைக் கூறுவானாயினன்.—எ-று.

தானுடைய வேவலர்-தான் அடிமையாகக்கொண்டுள்ள ஏவலாளர். (சச)

மன்னிளவ லாருயிரை மாற்றிவரு கந்தன்
றன்வலிகல் கடந்துசய மெய்திவரல் வேண்டு
மென்னிரதம் வெம்படை யிடுங்கவசம் யாவு
முன்னுகண மொன்றின்முன முய்த்திடுதி ரென்றான்.

(இ-ள்.) நிலைபெற்ற தம்பியின் அரிய உயிரை யழித்து வருகின்ற கந்தனது வலியைக் கடந்து வெற்றிபெற்று வருதல் வேண்டும், ஆதலால் எனது தேரும் வெவ்விய ஆயுதங்களும் தரிக்கப்பட்ட கவசமுதலிய வனைத்தும் நினைக்கப்பட்ட ஒரு கணப்பொழுதிற்குள்ளே எதிரில் கொண்டுவாருங்களென்று கூறினான்.—எ-று. (சரு)

இறையிவை புகன்றிடலு மேவலர்கள் யாரு
முறையிலவை யுய்த்திடுதன் முன்னினர்கள் போனா

ரறைகழ லுடைத்தகுவ ரன்னசெய லுடிக்
குறைவிலனி கங்களொடு கொம்மென வடைந்தார்.

(இ-ள்.) சூரபன்மன் இவ்வாறு கூறியவுடனே ஏவலாளர்க ளனைவரும் முறைப்படியே அவற்றைக் கொண்டுவரும்பொருட்டுச் சென்றார்கள்; சப்திக்கின்ற வீரகண்டையையணிந்த கால்களையுடைய அசுரர்கள் அதனையுணர்ந்து குறைவற்ற சேனைகளுடன் விரைவாக வந்தார்கள்.—எ-று. (சுகூ)

ஆயசெயல் காண்டலு மமைச்சரி லமோகன்
மாயைதரு சூரனடி வந்தனை புரிந்தே
யேயதொரு மாற்றம திசைப்பலது கேண்மோ
தீயசின மெய்திட லெனுவினைய செப்பும்.

(இ-ள்.) அந்தச் செய்கையைக் கண்டவுடன் மந்திரிமார்களில் அமோக னென்பவன் மாயையின் புதல்வனாகிய சூரபன்மனது பாதங்களை வணங்கி (அரச னே?) அடியேன் தகுதியாகிய ஒருவார்த்தை கூறுகின்றேன், அதனைக் கேட்டருள வேண்டும், கொடிய கோபங்கொள்ளவேண்டாமென்று கூறி இவ்வார்த்தைகளைச் சொல்லுகின்றான்.—எ-று. (சுஎ)

வேறு.

நஞ்சுறை படைகள் கற்று நவையுறு தொன்ன லாரை
வஞ்சினத் தெறியும் வீரர் வளநக ரதனை மாற்றா
ரிஞ்சியைச் சூழ்ந்து போருக் கெய்தினு மெண்ணி யன்றி
வெஞ்சினத் தினைமேல் கொண்டு விரைந்தம ரியற்றச் செல்லார்.

(இ-ள்.) விஷம்பொருந்திய ஆயுத வித்தையில் பழகித் தோல்வியடையா மல் பகைவர்களைச் சபதத்துடன் கொல்லப்பட்ட வீரர்கள் தங்களது வளப்பம்பொ ருந்திய நகரத்தை அல்லது கோட்டையைச் சத்துருக்கள் சூழ்ந்துகொண்டு போருக் குவந்தாலும் (அரசர்களாயுள்ளவர்கள்) ஆலோசித்தன்றி மிகுந்தகோபத்தையடைந்து விரைவாக யுத்தத்திற்குச் செல்லார்கள்.—எ-று.

வஞ்சினம் - சபதம். (சுஅ)

குலத்தினை வினவி யுள்ளக் கோளினை வினவி வந்த
நிலத்தினை வினவித் தொல்லோர் நெறியினை வினவிக் கொண்ட
சலத்தினை வினவிப் போர்செய் தானையை வினவி யன்னோர்
வலத்தினை வினவி யல்லான் மற்றொன்று மனங்கொள் வாரோ.

(இ-ள்.) (பகைவர்களது) குலத்தைவிசாரித்தும், அவர்கள் மனத்தில் கொ ண்டிருக்கின்ற அபிப்பிராயத்தை விசாரித்தும், அவர்களிருக்கின்ற தேசத்தை விசாரி த்தும், முன்னோர்களது வரன்முறைகளை விசாரித்தும், பொருந்திய கோபத்தின் கா ரணத்தை விசாரித்தும், போர்செய்தற்குரிய சேனைகளின் அளவை விசாரித்தும், அ வர்களது பராக்கிரமத்தைவிசாரித்தும் அதன்பின்னேயல்லாமல் வேறொன்றையு மண த்தில் கொள்வார்களோ?—எ-று.

சலம் - கோபம். (சுகூ)

வரத்தினில் வலியி னாரோ மாயையில் வலியி னாரோ
கரத்தினிற் படைக்க லத்தின் கல்வியில் வலியி னாரோ
வுரத்தினில் வலியி னாரோ வுணர்ச்சிசே ரூக்க மான
சிரத்தினில் வலியி னாரோ வென்றிவை தேர்வ ரன்றே.

(இ-ள்.) வரத்திற் சிறந்தவர்களோ? மாயையில் வல்லவர்களோ? கையிற் பொருந்திய ஆயுத வித்தையில் தேர்ந்தவர்களோ? வல்லமையிற் சிறந்தவர்களோ? ஊக்கத்தோடு கூடிய அறிவினையுடைய மேன்மையிற் சிறந்தவர்களோ? என்று இவற்றைத் தேர்ந்துணர்வார்கள்.—எ-று. (௫0)

ஒற்றரைத் தூண்டி யன்னோ ருறுவலி யுணர்வ ரேனு
மற்றுமோ ரொற்றி னல்லா லன்னது மனத்துட் கொள்ளார்
சுற்றுறு மனிக மன்றி யொருபுடை யுவன்றிச் சூழும்
பெற்றியு முளதோ வென்று வேயொரீஇத் தேர்வர் பின்னும்.

(இ-ள்.) தூதுவர்களை யனுப்பி அப்பகைவர்களது வலிமையை யுணர்ந்தார்களாயினும், பின்னும் ஓர் தூதினாலல்லாமல் அவற்றை மனத்திற் கொள்ளார்கள்; சூழ்ந்திருக்கின்ற சேனைகளை யல்லாமல் வேறோர் புறத்தில் நெருங்கியிருந்து சமையமறிந்து சூழ்ந்துகொள்ளுகின்ற சேனைகளு முண்டோவென்று தூதுவர்களை யனுப்பி விசாரித்தலை யொழிந்து வேறு வகைகளினாலும் தேர்ந்தறிவார்கள்.—எ-று.

வேயொரீஇத் தேர்தல் - தூதுவர்களை யொழித்துத் தாம் தனியே மறைந்துசென்று உண்மையை விசாரித்துணர்தல்; இதனை—"ஒற்றிற் றெரியா சிறைப்புறத் தோர்துமெனப், பெற்றோ டுணையாத் தெரிசர்துங்—குற்ற, மறிவரிதென் றஞ்சுவதே செங்கோன்மை சென்று, முறையிடினுங் கேளாமை யன்று" என்னுங் குமரகுருபரதேசிகர் திருவாக்கா னறிக. —(௫௧)

வினையமு மெளியவை யென்று மெல்லிய வென்கை வெஃகா
ரனிகமு மனையர் தன்மை யதனையுஞ் சிறுமைத் தாக
நினைகிலர் தமக்கு மாற்றார் நேர்ந்தவ ராகின் மேலோர்
முனையுறு புலத்தி லாற்று மும்மையு முன்னிச் செய்வார்.

(இ-ள்.) போரின் ஆரம்பத்தை எப்பொழுதும் சுலபமானதென்று சொல்லுதற்கு விரும்பார்கள்; சேனைகளையும், அச்சேனைகளின் தன்மையையும் இலேசாக எண்ணமாட்டார்கள்; தம்முடன் சத்துருக்க ளெதிர்த்தார்களாயின் சிறந்த அரசர்களாயுள்ளவர்கள் போர்க்களத்திற் செய்யவேண்டிய சாமபேத தானங்களை ஆலோசித்துச்செய்வார்கள்.—எ-று. (௫௨)

மூவியன் மரபி னாலு முற்றுறு தொழிந்த காலைக்
கோவியன் மரபுக் கேற்பக் கொடுஞ்சினந் திருகிக் கொட்புற்
றேவியல் படைஞ ரோடும் படையொடு மெதிர்ந்து சுற்றி
மேவலர் பான்மை யுன்னி வெற்றிகொண் டணைவ ரன்றே.

(இ-ள்.) (பகைவர்களை வசப்படுத்துவதற்கு உபாயமாகச் சொல்லப்பட்டுள்ள சாமபேத தானமென்னும்) மூன்று வகையான முறைமைகளினாலும் முடியாது போனபொழுது, இராசாங்கத்திற்குத் தக்க முறைமைப்படி மிகுந்த கோபத்தினால் மாறுபட்டுச் சூழ்ந்து பாணங்களைப் பிரயோகிக்குந் தன்மையினையுடைய சேனைகளுடனும் ஆயுதங்களுடனும் எதிர்ந்து சூழ்ந்து பகைவர்களது தன்மையைச் சிந்தித்து வெற்றிபெற்று வருவார்கள்.—எ-று. (௫௩)

நேர்ந்திட வலியி லோரு ஞாட்பிடை நேர்தி ரென்னாச்
சேர்ந்திடும் போழ்தும் வேந்தர் செருவினைக் குறித்துச் சென்று
சார்ந்திடல் பழிய தன்றோ வெல்லினுந் தானை தூண்டிப்
பேர்ந்திடச் செய்வ ரஃதே பெறலரும் புகழ தன்றே.

(இ-ள்.) போர்செய்யத்தக்க வல்லமையில்லாதவர்களும் போரில் எதிர்க்கவ் கடவீர்களென்று அடைந்த காலத்தும், அரசர்களா யுள்ளவர்கள் போரைக் குறித்துச் சென்றடைதல் பழிப்பல்லவோ? அவர்களைச் செயிக்கவேண்டுமாயினும் தமது சேனைகளையனுப்பிப் (பகைவர்களைப்) புறங்கொடுக்கச் செய்வார்கள். அஃதே அடைதற்கரி புகழாகும்.—எ-று. (கூ)

ஈதரோ வுலகி னுள்ள விறைவர்த மியற்கை யாகு
மாதலா னின்னொப் பாரி லழிவிலா யகில மாள்வா
யேதமொன் றடையாய் வானோர் யாரையு மேவல் கொண்டாய்
போதனு நெடுமா லோனும் வைகலும் புகழ வுற்றாய்.

(இ-ள்.) உனக்கொப்பாரில்லாத கெடாதமுதல்வனே! எல்லா உலகங்களையுமரசாட்சி செய்பவனே! யாதொரு துன்பமு மில்லாதவனே! தேவர்களெல்லாவரையும் ஏவல்கொண்டவனே! பிரமனும் திருமாலும் தினந்தோறும் புகழுந் தன்மையைப் பெற்றவனே! ஆதலால் இதுவே உலகத்திலுள்ள அரசர்களுக்கு இயற்கையாகும்.

இன்னதோர் மிடல்பெற் றுள்ள விறைவநீ யளிய னாகும்
பொன்னக ரவன்சொற் கேட்டுப் பூதமே படையா வீச
னென்னலி னுதவும் பிள்ளை நேர்ந்திடி னவனை வெல்ல
வுன்னினை போதி யென்னி னுனக்கது வசைய தன்றோ.

(இ-ள்.) இத்தன்மையாகிய வலிமையைப் பெற்றுள்ள அரசனே! நீர் எளியவனாகிய இந்திரனது சொல்லைக்கேட்டுப் பூதங்களைச் சேனையாகக் கொண்டு சிவன் நேற்றுப்பெற்ற புதல்வனானவன்வந்து எதிர்த்தால் அவனை வெல்லும்பொருட்டு நினைத்துச் செல்லுவையாயின் அது உனக்கு இகழ்ச்சியல்லவோ?—எ-று.

சிவகுமாரன் மிகச் சிறுவனாகலின் அவனுடன் நீ எதிர்த்துப் போர்புரியச்செல்லுதல் பழியாகுமேயன்றிப் புகழாகாதென்று கூறினனென்பார் 'ஈசனென்னலி னுதவும் பிள்ளை நேர்ந்திடி னவனை வெல்ல வுன்னினை போதி யென்னி னுனக்கது வசைய தன்றோ' என்று கூறினர். (கூo)

மாற்றலர் வன்மை யோராய் மற்றவர் படைஞர் தங்க
ளாற்றலை யுணராய் நின்ற னரும்பெருந் தலைமை யுன்னாய்
போற்றிடு மமைச்ச ரோடும் புரிவன சூழாய் வாளா
சீற்றமங் கதுமேல் கொண்டு செல்லலுந் திறலின் பாற்றோ.

(இ-ள்.) பகைவர்களது வல்லமையை யுணர்ந்தாயில்லை; அவர்களது சேனையின் சாமர்த்தியத்தையு முணர்ந்திலை; உனது அரிய பெரிய தலைமையை நினைந்திலை; துதிக்கப்பட்ட அமைச்சர்களுடன் செய்யவேண்டுவனவற்றை யாலோசித்தாயில்லை; சும்மா மிகுந்த கோபங்கொண்டு செல்லுதலும் வீரத்தின் பாற்பட்டதோ?—எ-று.

வீரமும் வலியு மிக்கோ ராயினும் விதிவந் தெய்திற்
பாரிடை வலியி லோரும் படுத்திடப் படுவர் நின்போற்
பேருட லழியா வாற்றல் பெருமையா லிறுவா யெய்தத்
தாரகன் மழலை தேருச் சிறுவனுந் தடியப் பட்டான்.

(இ-ள்.) வீரமும் வல்லமையும் மிக்கவர்களானாலும் ஊழ்வினை வந்தடைந்தால் உலகத்தில் பலவீனர்களும் கொலைசெய்ய அதனாலிறப்பார்கள். உன்னைப்போலப் பெரிய உடம்பானது அழியாதிருக்கின்ற வலிமையைப் பெருமையால் தாரகா

சாரூர்கு மரணகாலஞ் சமீபித்தலால், அவன் மழலைவார்த்தையில் தெளியாத சிறுவ ராலுங்கொல்லப்பட்டனன்.—எ-று. (ருஅ)

கலகல மிழற்றுந் தண்டைக் கழலடிச் சிறுவன் கைம்மாத்
தலையுடை யிளவ றன்னைத் தடிந்தகதப் புகந்த தன்றால்
வலியரு மொருகா லத்தில் வன்மையை யிழப்ப ராற்ற
மெலியரு மொருகா லத்தில் வீரராய்த் திகழ்வ ரன்றே.

(இ-ள்.) கலகலவென்று சப்திக்கின்ற தண்டையை யணிந்த காலினையுடைய ஒரு சிறுவன் யானைத்தலையினையுடைய தாரகனைக் கொன்றது ஆச்சரியமல்ல; பலசாலிகளும் ஒருகாலத்தில் தங்கள் வலிமையை யிழப்பார்கள்; மிக்க மெலியவர்களும் ஒருகாலத்தில் வீரராய் விளங்குவார்கள்.—எ-று. (ருகூ)

யாருநே ரன்றி வைகு மிறைவநீ சிறுவன் றன்மேற்
போரினை முன்னி யேகல் புகழ்மைப தன்று லன்னான்
சீரொடு மதுகை யாவுந் தேர்ந்துபின் னவனிற் றீர்ந்த
வீரரைப் படையொ டேவி வெற்றிகொண் டமர்தி யென்றான்.

(இ-ள்.) தனக்கொருவரும் ஒப்பின்றி வாழ்கின்ற அரசனே! நீ அந்தச் சிறுவன்மீதுபோரைச் செய்யக்கருதிச் செல்லுதல் புகழன்று. ஆதலால், அவனது சிறப்பையும் வெற்றிமுதலியவற்றையு முணர்ந்து, இறந்த தாரகன் தவிர மற்றைய வீரர்களைச் சேனைகளுடன் அனுப்பி வெற்றிபெற்றிருக்கடவை என்று கூறினான்.—எ-று.

அறிதரு மமைச்சர் தம்மு ளமோகனித் தன்மை தேற்ற
வுறுதியீ தென்று சூர னுள்ளுறு சினத்தை நீத்து
விறல்கெழு மரிமா னேற்று விழுத்தகு தவிசி னேறிச்
செறிதரு முழைஞர் தம்முட் சிலவரை நோக்கிச் சொல்வான்.

(இ-ள்.) (அரசமுறைமைகளை) உணர்ந்த மந்திரிமார்களுள் (சிறந்த) அமோகனென்பவன் இவ்வாறு கூறித் தெளிவிக்க, உடனே சூரபன்மன் இது உறுதியான காரியமென்று தன்மனத்திலிருந்த கோபத்தை யொழித்து வலிமையோடு விளங்குகின்ற ஆண்சிங்கங்களால் சுமக்கப்பட்ட ஆசனத்திலேறியிருந்து அங்கு நெருங்கியுள்ள ஏவலாளர்களில் சிலரைப் பார்த்துக் கூறுகின்றான்.—எ-று. (சுக)

பகனெடு மயூரன் சேனன் பரிதியம் புள்ளின் பேரோன்
சுகனிவர் முதலா வுள்ள தூதரைத் தருதி ரென்னப்
புகழ்புனை சூர பன்மன் பொன்னடி யிறைஞ்சி யேத்தி
தகுவர்க டலைவர் மற்றச் சாரணர் தம்மை யுய்த்தார்.

(இ-ள்.) பகன் மயூரன் சேனன் சக்கரவாகன் சுகன் இவர்கள் முதலாயுள்ள தூதுவர்களை யழையுங்க ளென்று கூறவும், உடனே அசுரத்தலைவர்கள் கீர்த்திபொருந்திய சூரபன்மனது அழகிய பாதங்களை வணங்கித் துதித்து அந்தத் தூதுவர்களை அழைத்துக்கொண்டுவந்து விட்டார்கள்.—எ-று. (சுஉ)

சாரண ரினையர் போந்து தாண்முறை பணிந்து நிற்பச்
சூரனங் கவரை நோக்கித் துண்ணென நீவி ரேகிப்
பாரிடை வந்த கந்தன் பான்மையும் படைவெம் பூதர்
சேருறு தொகையும் யாவுந் தேர்ந்திவண் வருதி ரென்றான்.

(இ-ள்.) இவ்வாறு தூதுவர்கள் வந்து சூரபன்மனது பாதங்களை முறையே வணங்கி நிற்கவும், அவன் அவர்களைப்பார்த்து நீங்கள் விரைவாகச் சென்று பூமியில்

வருகின்ற கந்தனது தன்மையினையும் சேனைகளாகப் பொருந்திய கொடிய பூதர்களது கூட்டத்தினையும் மற்றவைகளையு முணர்ந்துகொண்டு இவ்விடத்திற்கு வரக்கடவீர்க ளென்றுகூறினான்.—எ-று. (சுந)

ஒற்றுவ ருலாந்தந் நீர்மை யுச்சிமேல் கொண்டு தங்கோன்
பொற்றடங் கழல்க டாழ்ந்து புடவியை நோக்கிச் சென்றார்
மற்றவர் போய பின்னர் மாறிலாச் சூர பன்மன்
வெற்றிகொ ளவுணர் போற்ற வீற்றிருந் தரசு செய்தான்.

(இ-ள்.) அத்தன்மைகளனைத்தையுந் தூதவருணர்ந்து தங்கள் முதல்வனாகிய சூரபன்மனது பொன்மயமாகிய (வீரக்கழலையணிந்த) பெரியபாதங்களில் வணங்கி (அவ்வார்த்தைகளைச்) சிரமேற்கொண்டு பூமியை நோக்கிச் சென்றார்கள்; அவர்கள் போனபின்பு மாறுபாடில்லாத சூரபன்மனானவன் வெற்றிபொருந்திய அசுரர்கள் துதிசெய்யும்படி வீற்றிருந்து அரசாட்சி செய்தனன்.—எ-று. (சுச)

ஏதமில் சூர பன்ம னிளவறன் முடிவு நேடி
மாதுயர் கொண்டு தேறி வைகிய தன்மை சொற்றாம்
மாதியங் கடவுள் மைந்த னமரர்தங் கிரியை நீங்கிப்
பூதல மீது வந்த நெறியினைப் புகல லுற்றாம்.

(இ-ள்.) துன்பமில்லாத சூரபன்மனானவன் தன் தம்பியாகிய தாரகனது மரணத்தைக் குறித்து, மிகுந்த துன்பமடைந்து பின்பு தெளிவடைந்த தன்மையைக் கூறினோம். இனி, முதற்பெருங்கடவுளாகிய சிவபெருமானது திருப்புதல்வராகிய முருகக்கடவுள் தேவகிரியைவிட்டுநீங்கி இந்நிலவுலகத்தில் வந்தருளியமுறைமையைக்கூறுகின்றோம்.—எ-று. (சுரு)

அசுரேந்திரன் மகேந்திரஞ் செல்படல முற்றிற்று.

ஆ. திருவிருத்தம்-க,சுஉஅ.

---

உ

முருகன்றுணை.

---

# வழிநடைப்படலம்.

குருமணி மகுட மாறுங் குழைகளுந் திருவில் வீசத்
திருமணி வரையின் மேவுந் திருக்கைவேற் பெருமா னுக்குக்
கருமணி யாழிப் புத்தேள் கையுறை யாக வாங்கோர்
பருமணி நீட்டிற் றென்னப் பானுவந் துதயஞ் செய்தான்.

(இ-ள்.) நன்னிறம் விளங்கும் நவமணிகளிழைத்த ஆறு மகுடங்களும், பன்னிரண்டு குண்டலங்களுஞ்சிறந்த பேரொளி வீசும்படி வளப்பமிக்க மணிமயமான தேவகிரியிலெழுந்தருளியிருக்கின்ற சண்முகக் கடவுளுக்கு நீலரத்தினங்களையுடைய சமுத்திரராஜன் காணிக்கையாக ஒரு பெரியமணியை நீட்டினாற்போலச் சூரியன் (கீழ்த்திசைக்கடலில்) உதயமாயினான்.—எ-று.

கீழ்க்கடலில் சூரியனுதித்தது சமுத்திரராஜன் முருகக்கடவுளுக்குக் கையுறை தந்ததுபோன்றிருந்ததென்க. (௪)

வேறு.

மங்குல் வானமேல் வெய்யவன் கதிரென வழங்குந்
தொங்கை கூப்பிய தொழுதிடு வாரெனச் செல்ல
வெங்கள் வேலவி லறுமுகன் கடவுள்வெற் பகன்று
பொங்கு தானையு மமரருஞ் சூழ்தரப் போந்தான்.

(இ-ள்.) மேகங்களுலாவுகின்ற ஆகாயத்தில் தோன்றிய சூரியன் தனது கிரணங்களென்று கூறுஞ் செய்விய கரங்களைக்குவித்து (முருகக்கடவுளை) வணங்குகின்றவனைப்போலச்செல்லுகின்ற அந்தச்சமயத்தில் முருகக்கடவுள் பெரிய சேனைக் கூட்டமுந் தேவர்களுந் தம்மைச் சூழ்ந்துவரும்படி தேவகிரியினின்று நீங்கிச் சென்றருளினார்.—எ-று. (௨)

தன்னை நீக்கிய சூழ்வுறுந் தவமுடைப் பிருங்கி
யுன்னி நாடிய மறைகளின் முடிவினை யுணரா
வென்னை யாளுடை யானிடஞ் சேர்வனென் றிமையக்
கன்னி பூசனை செய்ததோ கேதாரமுன் கண்டான்.

(இ-ள்.) தம்மைவிட்டுச் சிவபெருமானை மாத்திரம் பிரதக்ஷிணஞ் செய்த தவத்தினையுடைய பிருங்கிமுனிவரர் விசாரித்தறிந்த வேதங்களின் முடிவினை யுணர்ந்து, எம்மையாளாகவுடைய சிவபெருமானது இடப்பாகத்தை யடைவேனென்று பார்வதிதேவியார் பூசைசெய்தருளிய (மகத்துவத்தையுடைய) ஸ்ரீ கேதாரகிரியை (முருகக்கடவுள்) தமக்கு முன்னே பார்த்தருளினார்.—எ-று.

பிருங்கிமுனிவரர் உமாதேவியாரை நீக்கிச் சிவபெருமானை மாத்திரம் பிரதக்ஷிணஞ்செய்து சென்ற காரணத்தினால் நாம் சிவபெருமானை நீங்காதிருக்கும் வண்ணம் இடப்பாகம் பெறவேண்டுமெனக் கருதிப் பூசனைசெய்தமையின், 'இமையக் கன்னிபூசனைசெய்த கேதாரமுன்கண்டான்' என்று கூறினார். (௩)

பைய ராவின்மேற் கண்டுயில் பண்ணவன் றனக்குந்
தையல் பாதிய னேபரம் பொருளெனுந் தன்மை
மையன் மானுட ருணர்ந்திட மறைமுனி யெடுத்த
கைய தேயுரைத் திட்டதோர் காசியைக் கண்டான்.

(இ-ள்.) படம்பொருந்திய சேஷசயனத்தில் நித்திரைசெய்யுந் திருமாலுக்கும் பார்வதி பாகராகிய சிவபெருமானே மேலான கடவுளென்னுந் தன்மையை மயக்கத்தினையுடைய மனிதர்களுணர்ந்துகொள்ளும் பொருட்டு வியாசமுனிவர் தூக்கிய கையே தெரிவித்தருளிய ஸ்ரீகாசிப்பதியைத் தெரிசித்தருளினார்.—எ-று.

வியாசமுனிவர் விஷ்ணுவே பரப்பிரமமென்று ஸ்ரீவிசுவநாதர் சந்நிதியில் உயரத்தூக்கிய கையானது ஸ்தம்பிக்கச்செய்து, அக்காரணத்தினால் சிவபெருமானே பரம்பொருளென்று நாட்டிய மான்மியத்தால் விளங்குதலின், 'தையல் பாதியனே பரம்பொருளெனுந்தன்மை - மையன் மானுடருணர்ந்திட மறைமுனியெடுத்த - கையதேயுரைத் திட்டதோர் காசியைக்கண்டான்' என்று கூறினார். (௪)

பருப்ப தப்பெயர்ச் சிலாதனற் பாலகன் பரம
னிருப்ப வோர்வரை யாவனென் றருந்தவ மியற்றிப்

பொருப்ப தாகியே யீசனை முடியின்மேற் புனைந்த
திருப்ப ருப்பதத் தற்புதம் யாவையுந் தெரிந்தான்.

(இ-ள்.) ஸ்ரீசைலமென்னும் பெயரினையுடைய சிலாதபுத்திரராகிய திருநந்திதேவர் சிவபெருமா னெழுந்தருளி யிருப்பதற்கு யான் ஒருமலையாவேனென்று அரிய தவத்தைச்செய்து மலைவடிவங்கொண்டு சிவபெருமானைத் தமது திருமுடியின் மீது சுமக்கப்பெற்றுள்ள அழகிய மல்லிகார்ச்சுன பருவதத்தின் ஆச்சரிய மனைத்தையுந் தெரிசித்தருளினார்.—எ-று.

திருநந்திதேவர் சதாகாலமும் சிவபெருமானைச் சுமக்கும்பொருட்டு மலைவடிவங்கொண்டு தவஞ்செய்து அம்மலையின்மேல் சிவபெருமா னெழுந்தருளி யிருக்கப்பெறுதலின், 'அருந்தவமியற்றிப் பொருப்பதாகியே யீசனைமுடியின்மேற்புனைந்த திருப்பருப்பதம்' என்று கூறினார். (ரு)

அண்ட மன்னுயி ரீன்றவ ளுடன்முனி வாகித்
தொண்ட கங்கெழு சுவாமிநன் மால்வரை துறந்து
மண்டு பாதலத் தேகியே யோர்குகை வழியே
பண்டு தான்வரு வேங்கட கிரியையும் பார்த்தான்.

(இ-ள்.) அண்டங்களையும் அவ்வண்டங்களிலுள்ள உயிர்களையும் பெற்றருளிய பார்வதி தேவியாரோடு கோபித்துத் தொண்டகமென்னும் பறை முழங்குகின்ற கந்தமாதன பருவதத்தைக்கடந்து நெருங்கிய பாதலத்துட்சென்று அங்குள்ள ஒரு குகையின்வழியாய் முன்னே தாம் எழுந்தருளிவந்த திருவேங்கடகிரியையுந் தெரிசித்தருளினார்.—எ-று.

மாங்கனியை விநாயகமூர்த்திக்குத் தரும்பொருட்டு உமாதேவியார் கூறித் தடுத்த காரணத்தால் கோபித்துத் திருக்கயிலையினின்று நீங்கிப்பாதலத்துட்சென்று குகையின் வழியாகத் தாம் முன்பு வெளிப்பட்டமையின், 'ஓர் குகைவழியே பண்டுதான்வரு வேங்கடகிரி' என்று கூறினார். தொண்டகம்-குறிஞ்சிப்பறை. (சு)

சிலந்தி மாசுண மும்மதக் கரிசிவ கோசன்
மலைந்தி டுஞ்சிலை வேட்டுவன் கீரனே மடவார்
பலந்த ரும்வழி பாட்டினாற் பாட்டினாற் பரனைக்
கலந்து முத்திசேர் தென்பெருங் கயிலையுங் கண்டான்.

(இ-ள்.) சிலந்திப்பூச்சி, பாம்பு, மும்மதங்களையுடைய யானை, சிவகோசரியார், போர்செய்தற்குரிய வில்லினையுடைய வேடுவராகிய கண்ணப்பநாயனார், நக்கீரதேவர், கன்னியர் ஆகிய இவர்கள் பலத்தைக் கொடுக்கின்ற பூசனையினாலும் தோத்திரத்தினாலும் சிவபெருமானுடன் இரண்டறக்கலந்து முத்தியையடைந்த பெரிய தென் கயிலாயமாகிய திருக்காளத்திமலையைத் தெரிசித்தருளினார்.—எ-று.

பிரமதேவனை யவமதித்த மாதவனூறனென்பவன் சிலந்தி வடிவமெடுத்துக் காளத்தியப்பருக்கு வாய்நூலால் ஆலயங்கட்டிச் சாபநீங்கப்பெற்றும், சிவபெருமானுக்காபரணமாகவிருந்த காளனென்னும் சர்ப்பராஜன் மாதர்கள்பாற்கொண்ட காமங்காரணமாச் சாபமேற்றுச் சிவபூசைசெய்து அச்சாப நீங்கபெற்றும், அத்தியென்னுங்கணநாதன் உமாதேவியாரால் யானையாகும்படி நேர்ந்த சாபநீங்கும் பொருட்டுப்பூசிக்கப்பெற்றும், சிவகோசரியார் என்னுஞ் சிவவேதியர் நித்திய பூசைசெய்து பேறுபெற்றும், வில்வேடராகிய கண்ணப்ப நாயனார் ஊனமுது படைத்துத் தமது கண்ணைத்தோண்டிச் சிவபெருமானது திருக்கண்ணில் அப்பி ஆறுதினத்தில் முத்தி

பெற்றும், சுக்கிரதேவர் சிவபெருமானோடெதிர்த்து விதண்டாவாதங்கூறி ஞானப்பூங்கோதையம்மையாரது கூந்தலையிகழ்ந் துரைத்தகாரணத்தினால் கயிலைபாதி காளத்தி பாதி என்னும் அந்தாதிப் பிரபந்தம்பாடிப் பேறுபெற்றும், இரண்டு பரத்தையர் மாதர்கள் அடைந்து சிவலிங்கப்பெருமானோடயிக்கிய முற்றும் பேறுபெற்றமையின், 'பரனைக்கலந்து முத்திசேர் தென்பெருங் கயிலையுங் கண்டான்' என்று கூறினர். (எ)

கொடிய வெஞ்சினக் காளியிக் குவலய முழுது
முடிவு செய்வனென் றெழுந்தநாள் முளரியான் முதலோ
ரடைய வஞ்சுற மவள்செருக் கழிவுற வழியாக்
கடவு ளாடலால் வென்றதோர் வடவனங் கண்டான்.

(இ-ள்.) கொடிதாகிய பெருங்கோபத்தினையுடைய காளியானவள் இவ்வுலகமுழுவதையும் அழிக்கின்றேனென்று எழுந்தகாலத்தில் பிரமன் முதலியவர்களனைவரும் மிகவும் பயப்படவும், அவளது செர்வமழியும்பொருட்டு நித்தியராகிய சிவபெருமான் திருநடனத்தினால் வெற்றிபெற்றருளிய திருவாலங்காட்டைத் தெரிசித்தருளினர்.—எ-று.

சிவபெருமான் வீரகாமாளியுடனெதிர்த்து அவளது செருக்கழியும்படித் திருநடனஞ்செய்து வென்றருளினமையின், 'அழியாக்கடவுளாடலால் வென்றதோர் வடவனம்' என்று கூறினர். (அ)

அம்பு ராசிகொள் பிரளயத் திறுமழி வின்றி
யும்பர் மாலயற் குறையுளாய்க் கயிலைபோ லொன்று
மெம்பி ரான்றனி மாநிழ றன்னில்வீற் றிருக்குங்
கம்பை சூழ்தரு காஞ்சியந் திருநகர் கண்டான்.

(இ-ள்.) உலகத்தைக் கடல் மூடிக்கொள்ளுகின்ற பிரளயகாலத்திலும் அழிவில்லாமல், தேவர்கள் திருமால் பிரமன் முதலியவர்களுக் கிருப்பிடமாய்த் திருக்கயிலாயத்தை யொத்ததாய் எமது சிவபெருமான் ஒப்பற்ற மாமரநிழலில் வீற்றிருந்தருளுங் கம்பாநதிசூழ்ந்த ஸ்ரீகாஞ்சிபுரத்தைத்தெரிசித்தருளினர்.—எ-று.

வேதமே மாமரமாகவமைதலின், 'தனிமா' என்றார். (கூ)

ஏல வார்குழ லுமையவள் பூசைகொண் டிருந்த
மூல காரண மாகிய முதல்வனை லயமு
மாலும் வேதனு மமரரும் வழிபடு மற்றை
யால யங்களா யுள்ளவுங் கண்டன னையன்.

(இ-ள்.) ஏலவார்குழலாளென்னும் ஸ்ரீ காமாட்சியம்மையாரது பூசனையையேற்றிருந்தருளிய மூலகாரணராகிய திருவேகம்பநாதர் எழுந்தருளியிருக்கின்ற திருவேகம்பமென்னும் ஆலயத்தையும், திருமாலும் பிரமனும் தேவர்களும்பூசித்த மற்றைய ஆலயங்களையும் முருகக்கடவுள் தெரிசித்தருளினர்.—எ-று. (கo)

வேறு.

என்னிக ரொருவ ரில்லென் றிருவரு மிகலு மெல்லை
யன்னவர் நடுவு தோன்றி யடிமுடி தெரியா தாகி
யுன்னினர் தங்கட் கெல்லா மொல்லையின் முத்தி நல்கித்
தன்னிக ரின்றி நின்ற தழற்பெருஞ் சயிலங் கண்டான்.

(இ-ள்.) (பிரம விஷ்ணுக்களாகிய) இருவரும் எனக்குச் சமானம் ஒருவருமில்லையென்று ஒருவரோடொருவர் எதிர்த்துப் போர்செய்யுங்காலத்தில், அவர்க

ளுக்கு மத்தியில் தோன்றி அடியுமுடியுங் காணப்படாததாய், நினைப்பவர்களுக்கெல்லாம் விரைவாக முத்தியைக் கொடுத்தற்கு ஒப்பின்றி விளங்கின்ற பெரிய அக்கினிவடிவாகிய ஸ்ரீஅருணாசலத்தைத் தெரிசித்தருளினார்.—எ-று.

பிரம விஷ்ணுக்கள் தாமே பரம்பொருளென்று ஒருவரோடொருவர் எதிர்த்துப் பெரும்போர் புரிந்தகாலத்து அவர்கள் மத்தியில் சிவபெருமான் அக்கினிமலையாக வெழுந்தருளி அவர்களால் அடியு முடியுங் காணப்படாமல் விளங்கினமையின், 'அன்னவர் நடுவுதோன்றி யடிமுடி தெரியாதாகி' என்றும், நினைக்க முத்தியைத் தரும் க்ஷேத்திரமாகலின், 'உன்னினர்தங்கட்கெல்லா மொல்லையின் முத்திநல்கி' என்றுங் கூறினார். (௯௯)

மல்லணுல கிறைவன் செய்யு மணந்தனை விலக்கி யெம்மோ
டெல்லைலோர் விருத்தன் போல்வந் தாவண வோலை காட்டித்
தொன்மனை வழக்கில் வென்று சுந்தரன் றனையாட் கொள்ளும்
பெண்ணையம் புனல்சூழ்வெண்ணெய்ப்பெரும்பதிதனையுங்கண்டான்.

(இ-ள்.) இந்நிலவுலகத்தரசராகிய நரசிங்கமுனையரைய நாயனாரால் செய்விக்கப்பட்ட திருக்கல்யாணத்தைச் சிவபெருமான் ஒரு விருத்தவேதியராகவந்து தடுத்து அடிமையோலையைக்காட்டி விரைவாக வழக்கில் வென்று ஸ்ரீசுந்தரமூர்த்திசுவாமிகளைத் தடுத்தடிமைகொண்டருளிய அழகிய பெண்ணைநதிசூழ்ந்த பெரிய திருவெண்ணெய் நல்லூரென்னும் பெரிய திருப்பதியையுந் தெரிசித்தருளினார்.—எ-று.

ஆவணவோலை - அடிமையோலை. (௬0)

தூசினு லம்மை விசத் தொடையின்மேற் கிடத்தித் துஞ்சு
மாசிலா வுயிர்கட் கெல்லா மஞ்செழுத் தியல்பு கூறி
யீசனே தனது கோல மீந்திடு மியல்பா லந்தக்
காசியின் விழுமி தான முதுகுன்ற வரையுங் கண்டான்.

(இ-ள்.) இறந்துபோகின்ற குற்றமற்றவுயிர்களுக்கெல்லாம் உமாதேவியார் தமதுதிருத்துடையின்மேல் கிடத்தி உத்தரியத்தினால் வீச, சிவபெருமானே ஸ்ரீ பஞ்சாக்ஷரத்தின் முறைமையை யுபதேசித்துத் தமது சாருபத்தைக் கொடுக்கின்ற தன்மையினால் அந்தக் காசிப்பதியினுஞ் சிறந்ததாகவிளங்கும் ஸ்ரீவிருத்தாசலத்தையுந் தெரிசித்தருளினார்.—எ-று.

விருத்தாசலத் திருப்பதியில் இறக்கின்ற வுயிர்களை உமாதேவியார் தமது திருத்தொடையின்மேல் வலச்செவிமேலாகக் கிடத்தி உத்தரியத்தினால்வீச, சிவபெருமான் ஸ்ரீபஞ்சாக்ஷரோபதேசஞ்செய்து முத்தியிற் சேர்த்தலின், 'காசியின்விழுதானமுதுகுன்றவரையுங்கண்டான்' என்று கூறினார். (௬௧)

விரிகனல் வேள்வி தன்னில் வியன்றலை யரிந்து விட்டிப்
பொருவரு தவத்தை யாற்றும் பதஞ்சலி புலிக்கா லன்ன
லிருவரு முணர்வாற் காண வெல்லையி லருளா லீசன்
றிருநட வியற்கை காட்டுந் தில்லைமூ தூரைக் கண்டான்.

(இ-ள்.) தீயானது மிகுத்தெரிகின்ற வேள்வியில் பெரியதலையையரிந்து இட்டு ஒப்பற்ற தவத்தைச்செய்கின்ற பதஞ்சலி வியாக்கிரபாதர்களாகிய இரண்டு முனிவர்களும் மெய்யறிவினால் தெரிசிக்கும்படி அளவற்ற பெருங்கருணையினால் சிவபெருமான் திருநடனத்தின் இயல்பைக் காட்டியருளுகின்ற பழைமையாகிய திருத்தில்லைப்பதியைத் தெரிசித்தருளினார்.—எ-று.

பதஞ்சலி வியாக்கிரபாதர்கள் வேள்வியில் தலையரிந்திட்டுத் தவஞ்செய்து ஞானவுணர்வாற் றெரிசிக்கும்படி சிவபெருமான் ஆனந்தத்தாண்டவம் புரிந்தருளின னென்பது புராணவரலாறு. (சச)

தண்டளிர்ச் சோலைத் தில்லைத் தபனிய மன்றி லென்றுந்
தொண்டையங் கனிவாய் மாது தொழச்சுராட் புருட னுள்ளத்
தண்டரு மதிக்க வாற்று மற்புதத் தனிக்கூத் தாடல்
கண்டனன் கசிவா ருள்ளங் களிப்புற வணங்கிப் போனான்.

(இ-ள்.) குளிர்ந்த தளிர்களையுடைய சோலை சூழ்ந்த திருத்தில்லைப்பதியி லுள்ள கனகசபையில், ஆதொண்டைக்கனி போலும் அதரத்தினையுடைய சிவகாமி யம்மையார் எக்காலத்திலும் வணங்கும்படி விராட்புருடனுடைய இதயகமலத்தில் தேவர்களாலும் மதித்தற்கரிய அற்புதத் திருநடனஞ் செய்தருளுதலைத் தெரிசித்து அன்பினால் மனமகிழ்வுடன் வணங்கிச் சென்றனர்.—எ-று.

'சுராட்புருடனுள்ளத்து' என்பதனை—'திருவளராரூர்மூலந் திருவானைக் காவேநாபி - மருவளர் பொழில்சூ ழண்ணா மலைமணி பூரகிவி-திருவருங் கண்டமன்ற மிதயமாம்' எனவருந் திருவிளையாடற்புராணத்தானறிக. சுராட்புருடன் - விருட் புருடன். (சரு)

குடமுனி கரத்தி லேந்துங் குண்டிகை யிருந்து நீங்கிப்
படிதனில் வேறு வேறாய்ப் பற்பல நாமந் தாங்கிக்
கடல்கிளர்ந் தென்னச் செல்லுங் காவிரி யென்னு மாற்றின்
வடகரை மண்ணி யின்பால் வந்தனன் கருணை வள்ளல்.

(இ-ள்.) அகத்திய முனிவரர் தமது திருக்கரத்திலேந்திய கமண்டலத்தினி ன்று நீங்கி உலகத்தில் வெவ்வேறு பிரிவுகளாய்ப் பற்பலபெயர்களைக்கொண்டு கடல் புரண்டு வருவதுபோலச்செல்லுகின்றகாவிரியாற்றின் வடகரையிலுள்ள மண்ணிநதிக் கரையில் அருள்வள்ளலாகிய முருகக்கடவுள்வந்து சேர்ந்தருளினார்.—எ-று.

அரிசில் முதலிய பலநாமங்களைக்கொண்டு பிரிந்து செல்லுதலின், 'பற்பல நாமந்தாங்கி' என்று கூறினார். (சசு)

வழிநடைப்படலமுற்றிற்று.

ஆ திருவிருத்தம்-க,சுசச.

---

உ

முருகன்றுணை.

---

# குமாரபுரிப்படலம்.

அளவில் பூதவெம் படையொடு மண்ணியா றதன்கட்
குளகன் வந்துழி யெழுந்திடு பூழிவான் குறுகி
யொளிரும் வெய்யவன் கதிர்தனை மறைத்தலா லோடி
வளைநெ டுங்கடன் மூழ்குவான் புக்கென மறைந்தான்.

(இ-ள்.) முருகக்கடவுள் அளவற்ற கொடிய பூதப்படைகளுடனே மண் ணிநதிக்கரையிடத்து எழுந்தருளியபொழுது மேலெழுந்த புழுதிகள் ஆகாயத்தை

யடைந்து ஒளிவிளங்குகின்ற சூரியனது கிரணங்களை மறைத்தமையினால், அச்சூரியனானவன் ஓடி வளைவாகிய பெரியகடலில் (அப்புழுதிகளைநீக்கும்பொருட்டு) ஸ்நானஞ்செய்யச்சென்ற தன்மையைப்போல மேற்கடலில் அஸ்தமித்தனன்.—எ-று.

குளகன் - முருகக்கடவுள். 'வளைநெடுங்கடல்' என்பதற்கு, சங்குகளையுடைய பெரிய கடல் எனப் பொருள்கூறினுமாம். (க)

மறைந்த காலையிற் றோன்றிய மாலையு நிசியுங்
குறைந்த திங்கள்வந் துதித்தது தாரகை குழுமி
நிறைந்த தெழுந்தவோர் மன்னவ னிறந்துழி நீங்கா
துறைந்த வொன்னலர் யாவருந் தெரிந்தவா றெனப்ப.

(இ-ள்.) ஒரு சக்கரவர்த்தியானவன் இறந்த காலத்தில் அவனை நீங்காமல் மறைந்துவசித்திருந்த பகைவர்களனைவரும் வெளிப்பட்டு விளங்கிய தன்மையைப் போலச் சூரியன் அஸ்தமித்தபொழுது மாலைக்காலமும் இரவுந்தோன்றின; பிறைச்சந்திரன்வந்து உதித்தது; நக்ஷத்திரங்கள் நெருங்கி (ஆகாயமுழுவதும்) நிறைந்து தோன்றின.—எ-று.

குறைந்த திங்கள் - கலைகுறைந்த சந்திரன்; இளம்பிறை. (உ)

மிக்க தாருக வனத்தினை பொத்தது விசும்பிற்
றொக்க பேரிருண் மாதரொத் தனவுடுத் தோற்றஞ்
செக்க ரீசனை யொத்தெதொண் போனகஞ் செறிந்த
கைக்க பாலம தொத்தது கதிரிளம் பிறையே.

(இ-ள்.) ஆகாயத்தில் நிறைந்திருந்த பெரிய இருளானது மிகுந்த தாருகாவனத்தை யொத்திருந்தது; நக்ஷத்திரத் தோற்றங்கள் அத்தாருகாவனமாதர்களை யொத்திருந்தன; செவ்வானமானது (பிக்ஷாடனவடிவங்கொண்டு சென்ற) சிவபெருமானை யொத்திருந்தது;கிரணங்களையுடைய இளம்பிறையானது ஒள்ளிய உணவு நிறைந்த (அவரது) திருக்கரத்திலுள்ள பிரமகபாலத்தை யொத்திருந்தது.—எ-று. (௩)

நிலவு லாவிய ககனமா நீடுபாற் கடலிற்
குலவு கின்றதோர் பொருளெலாங் கொண்டுகொண் டேகி
யுலகி னல்குவான் முயலெனு மொருமக னுய்ப்பச்
செலவு கொண்டதோர் தோணிபோன் றதுசிறு திங்கள்.

(இ-ள்.) இளம்பிறையானது (ஆகாயத்திலுதித்து வருதல் எதுபோலுமெனின்,) ஒளிவிளங்குகின்ற ஆகாயமாகிய பெரிய திருப்பாற்கடலிற் பொருந்தியுள்ள பொருள்களனைத்தையும் பலமுறை யெடுத்துக்கொண்டு சென்று உலகத்திற்கு உதவும்படி முயல் என்று கூறும் ஒரு மானுமியானவன்செலுத்த அதனால் செல்கின்றதாகிய ஒரு மரக்கலத்தை யொத்திருந்தது.—எ-று.

ஆகாயத்தைப் பாற்கடலாகவும் இளம்பிறையைத் தோணியாகவும், அப்பிறையிலுள்ள முயலை அத்தோணியை யோட்டும் மானுமியாகவும் உவமித்துக்கூறினர்.

ஆன காலையி லறுமுகப் புங்கவ னமல
மேனி சேரொளி நிலவொடு கங்குலை வீட்டிப்
பானு மேவரு மெல்லெனச் செய்தலிற் பரமாம்
வான நாயகன் கயிலைபோன் றிருந்ததவ் வையம்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமையத்தில் ஆறு திருமுகங்களை யுடைய முருகக்கடவுளது நின்மலமாகிய திருமேனிப்பிரகாசமானது நிலவையும் இருளையுமொழித்து

ச்சூரியவுதயமாய் வருகின்ற பகற்காலம்போலச் செய்தமையினால், அந்தப் பூமியானது பரம்பொருளாகிய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருக்கயிலாயத்தை யொத்திருந்தது.—எ-று.

அவ்வையம் என்றது, மண்ணிநதிச் சார்பான பூமியை. (௫)

வேறு.

விசு பேரொளி விறற்குக னிவ்வா
றசின் மண்ணிநதி யகன்கரை நண்ணா
விசு ருமவனை யெய்தியு வேதாக்
கேச வன்முதல்வ ரின்ன கிளப்பார்.

(இ-ள்.) மிக்க ஒளி வீசுகின்ற வலிய குமாரக்கடவுள் இவ்விதமாகக் குற்றமற்ற பெரிய மண்ணிநதிக்கரையைச் சார்ந்த பூமியையடைந்தருளவும், பிரமன் திருமால் முதலிய தேவர்கள் சர்வேசுவரராகிய அம்முருகக்கடவுளையடைந்து இவ்வாறு விண்ணப்பஞ் செய்வார்கள்.—எ-று. (௬)

ஆண்ட விந்நதி யகன்கரை யெல்லா
மாண்ட வாலுக மலிந்தினி தாகு
நீண்ட சோலைக ளிரந்தன தோன்றி
யீண்டி யீண்டையி னிறுத்துள வன்றே.

(இ-ள்.) ஆழமாகிய இந்த மண்ணிநதியின் பெரிய கரையிடங்களனைத்தும் சிறந்த வெண்மணல்கள் நிறைந்து இனிமையாகிய நீண்ட சோலைகள் மிகுந்துள்ளன; காந்தள்மலர்கள் இங்கு மிகுதியாக நெருங்கியுள்ளன.—எ-று.

தோன்றி - காந்தள். (௭)

பிறைமு டித்திடு பெருந்தகை தான
மிறுதி யில்லன விருந்தன வற்றா
னறிய நாகுமிந் நதிக்கரை தன்னி
லிறைவ விவ்விடை யிருந்தரு ளென்றார்.

(இ-ள்.) சந்திரசேகரராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் ஆலயங்கள் அளவில்லனவாக விருக்கின்றன; அக்காரணத்தினால் நன்மைமிகுந்துள்ளதாகிய இம் மண்ணிநதிக்கரையில், எம்பெருமானே! தேவரீர் எழுந்தருளியிருத்தல் வேண்டுமென்று பிரார்த்தித்தார்கள்.—எ-று. (௮)

வனைபு மேனியயன் மான்முதல் வானோ
ரினைய செப்புதலும் யாரினு மேலோன்
வினைய மெத்தவுள விச்சுவ கன்மப்
புனைவ னுக்கிது புகன்றிடு கின்றான்.

(இ-ள்.) அலங்கரிக்கப்பட்ட தேகத்தினையுடைய பிரமன் திருமால் முதலிய தேவர்கள் இவ்வாறு விண்ணப்பஞ்செய்துகொள்ளவும், யாவரினுஞ் சிறந்தவராகிய முருகக்கடவுள் சிற்பத்தொழிலில் மிகுதியாகத் தேர்ந்துள்ள விசுவகன்மனென்னுந் தேவதச்சனைப்பார்த்து இவ்வார்த்தைகளை யருளிச்செய்கின்றார்.—எ-று. (௯)

மெய்வி தித்தொழிலில் வேத னிகர்க்குங்
கைவ லோயொரு கணம்படு முன்ன
ரிவ்வி டத்தினி லெமக்கொரு மூதூர்
செவ்வி திற்புனைவு செய்குதி யென்றான்.

(இ-ள்.) மெய்ம்மையாகிய சிருஷ்டித்தொழிலில் பிரமனையொத்திருக்கின்ற கைதேர்ந்த விசுவகன்மனே! ஒரு கணப்பொழுதிற்குள்ளே யாம் இவ்விடத்தில் தங்குவதற்கு மிக்கசிறப்பினையுடைய ஒரு நகரத்தை அழகாகப் படைக்கக்கடவை யென்று கட்டளையிட்டருளினர்.—எ-று. (௰)

என்ன லோடுமவ் விடந்தனி லெங்கோன்
றுன்னு தொல்படை சுராதிப ரோடு
மன்ன வங்கணொரு மாநகர் நெஞ்சத்
துன்னி நல்கலு முவந்தனர் யாரும்.

(இ-ள்.) என்று அருளிச்செய்யவும், அம்மண்ணியாற்றங்கரையில் எமது முதல்வராகிய முருகக்கடவுள் நிலைபெற்ற பழைய சேனைகள் இந்திராதிதேவர்கள் முதலியவர்களுடன் வீற்றிருந்தருளுதற்கு அவ்விடத்தில் ஒரு பெரியநகரத்தை மனதிற் கருதிச் சிருஷ்டிக்கவும் யாவருஞ் சந்தோஷித்தார்கள்.—எ-று.

சூரபன்மனுதியர்களால் சிறிதுஞ் சிதைவுபடாமல் வெற்றிபெறக்கூடியதாகலின், 'துன்னுதொல்படை' என்று கூறினர். (௧௧)

அப்பு ரத்தையறி வன்கடி தாற்றி
முப்பு ரத்தையடு முன்னவ னல்கு
மெய்ப்பு ரத்தவனை நோக்குபு மேலா
யிப்பு ரத்திடை யெழுந்தரு ளென்றான்.

(இ-ள்.) விசுவகன்மன் அந்நகரத்தை விரைவாகப் படைத்து, திரிபுரதகனராகிய சிவபெருமான் பெற்றருளிய மெய்ம்மையாகிய திருமேனியையுடைய முருகக்கடவுளைநோக்கி, எமதாண்டவரே! தேவரீர் இந்நகரத்தில் எழுந்தருளவேண்டுமென்று பிரார்த்தித்தான்.—எ-று.

முப்புரம்-பொன் வெள்ளி-இரும்புகளினாலாகிய மூன்று புரம். (௧௨)

என்ற லோடிர தத்தி னிழிந்தே
துன்றும் வானவர் சுராதிப ரானோர்
சென்ற பூதர்கள் செறிந்துட னேக
மன்றன் மாநகரில் வள்ளல் புகுந்தான்.

(இ-ள்.) என்றிவ்வாறு பிரார்த்திக்கவும்,முருகக்கடவுள் இரதத்தினின்று மிறங்கி நிலைபெற்ற தேவர்களும் இந்திராதியர்களும் தொடர்ந்துசென்ற பூதர்களும் தம்முடன் நெருங்கிச் சூழ்ந்துவர, மங்கலகரம் பொருந்திய பெரிய நகரத்தில் வந்து சேர்ந்தருளினர்.—எ-று.

மன்றல் என்பதற்கு, நெடுந்தெருக்களையுடைய எனினுமாம். (௧௩)

செல்லு மாமுகில் செறிந்திடு காப்பின்
மல்லன் மாநகர் வளந்தனை நோக்கி
யெல்லை யில்லறிவன் யாமுறை தற்கு
நல்ல மாநகரி தென்று நவின்றான்.

(இ-ள்.) அளவற்ற மெய்யறிவினராகிய முருகக்கடவுள் (ஆகாயத்தில்) செல்லுகின்ற மேகங்கள் நெருங்கப்பெற்ற மதில்சூழ்ந்த சிறப்புப்பொருந்திய பெரிய நகரத்தின் வளப்பத்தைப் பார்த்தருளி, இது நாம் வசிப்பதற்கு நல்ல நகரமாகுமென்று அருளிச்செய்தனர்.—எ-று.

பேரறிவினராகலின், 'எல்லையில்லறிவன்' என்று கூறினர். (௧௪)

வீர வேளிது விளம்புத லோடு
மாரும் வானவர்க ளம்மொழி கேளா
வேறொ லாமுடைய விந்நகர் சேய்ஞ
லூர தென்றுபெய ரோதின ரன்றே.

(இ-ள்.) பராக்கிரமத்தினையுடைய முருகக்கடவுள் இவ்வாறருளிச்செய்யவும், தேவர்களனைவரும் அவ்வார்த்தையைக் கேட்டு அழகனைத்தும் நிரம்பப் பெற்றுள்ள இந்த நகரத்திற்குச் சேய்ஞலூரென்று பெயர் கூறினார்கள்.—எ-று.

சேய்ஞலூர் என்பதற்கு, முருகக்கடவுளால் விரும்பப்பட்ட நல்ல ஊர் என்பது பொருள். சேய்-முருகக்கடவுள். சேய்நலூர் என்பது போலியாகவந்தது. (சரு)

ஆய காலையனி கப்படை சூழ
வேய பின்னிளைஞ ரிந்திரன் வேதா
மாய னேனையர் வழுத்திட வாண்டைக்
கோயில் செல்லுபு குமார னிருந்தான்.

(இ-ள்.) அவ்வாறாகிய சமையத்தில் முருகக்கடவுள் தம்மைச் சேனைகள் சூழும்படிச் சென்றருளியபின்பு, தம்பியர்களாகிய நவவீரர்களும் இந்திரனும் பிரமனும் திருமாலும் மற்றையர்களுந் துதிக்கும்படி அங்குள்ள ஆலயத்தில் சென்று வீற்றிருந்தருளினார்.—எ-று.

அனிகப்படை - இருபெயரொட்டு. (ருகசு)

வேறு.

பன்னிரு புயத்தொகை படைத்தகும ரேசன்
றன்னரு ளடைந்துவிதி தன்னைமுத லானோ
ரன்னவன் விடுத்திட வகன்றுபுடை யேகித்
தொன்னிலை யிருக்கைக டொறுந்தொறு மடைந்தார்.

(இ-ள்.) பிரமன் முதலிய தேவர்கள் பன்னிரண்டு திருப்புயங்களையுடைய முருகக்கடவுளது திருவருளைப்பெற்று, அவ் வெமது முருகப்பெருமான் விடைகொடுத்தனுப்ப அவ்விடத்தினின்று நீங்கி வெளியேவந்து பழைய முறைமைப்படித் தங்கள்தங்களுக்கமைத்துள்ள இடங்களில் அடைந்தார்கள்.—எ-று.

தன்னை என்பது சாரியை. அவரவர்களது உயர்வுதாழ்வுகளுக்குத் தக்கபடியே யமைக்கப்பட்டதாகலின், 'தொன்னிலையிருக்கைகள்' என்றார். (கஎ)

தானைக டமக்குரிய சாரத ரிலக்க
ரேனையர் வழுத்தவெமை யாளுடைய வள்ளல்
கோனக ரிருக்கவிடை கொண்டுசெல் குழாத்துள்
வானவர் தமக்கிறை செயற்கையை வகுப்பாம்.

(இ-ள்.) சேனைகளுக்குரிய இரண்டாயிரம்வெள்ளம் பூதர்களும், இலக்ஷம் வீரர்களும், மற்றையர்களுந் துதிக்கும்படி எம்மையடிமையாகவுடைய முருகக்கடவுள் சிறந்த திருக்கோயிலுள் வீற்றிருந்தருளுதலும், அவ் வெம்பெருமானிடத்து விடைபெற்றுச் செல்லுகின்ற கூட்டங்களில் தேவர்கள் தலைவனாகிய இந்திரனது தன்மையை இனிக் கூறுவோம்.—எ-று.

ஏனையர் என்றது நவவீரர் முதலியோர்களை. (கஅ)

வேறு.

தாங்கரும் பெருந்திறற் றூர காசுரன்
பாங்கமர் குன்றொடும் பட்ட பான்மையா
லாங்கனம் புரந்தர னவலம் யாவுறு
நீங்கின னுவகையா னிறைந்த நெஞ்சினன்.

(இ-ள்.) அடைதற்கரிய மிக்க வல்லமையினையுடைய தாரகாசுரன் அருகிலிருந்த கிரவுஞ்சமலையுடன் அழிந்ததன்மையினால் அப்பொழுது இந்திரனானவன் மகிழ்ச்சியினால் நிறைந்த மனத்தினையுடையவனாய்த் தனது துன்பங்களனைத்தும் ஒழிந்திருந்தனன்.—எ-று.

சிவபெருமானது திருவருளால் பெற்ற திறலாகலின், 'தாங்கரும் பெருந்திறல்' என்று கூறினர். உவகையால் நிறைந்த நெஞ்சினனாய் நீங்கினன் எனக் கூட்டுக. (கக)

விருந்திய லமிர்தினை விழும மில்வழி
யருந்தின னெனமன வாகந் தண்ணெனப்
புரந்தர னிருந்துழிப் புக்குத் தாழ்ந்ததால்
வரந்திகழ் சிரபுர வனத்திற் றெய்வதம்.

(இ-ள்.) புதிதாகப் பொருந்திய சிறந்த அமுதத்தைக் கஷ்டமில்லாத வழியில் உண்டவனைப்போல இந்திரன் தேகங்குளிர்ந்து சந்தோஷித்திருக்கின்ற சமயத்தில், சிறப்புமிகுந்த சீகாழிப்பதியின்வனத்திலுள்ள வனதேவதை (அங்கு அவ்விந்திரனை) அடைந்து நமஸ்கரித்தது.—எ-று.

விருந்து - புதுமை. திருப்பாற்கடலை வருந்திக் கடைந்து அரிதிற் பெற்றுண்ணுமாறு போன்றின்றி எளிதிற் கிடைப்பின் அதனாலடையும் பெருங்களிப்பினனைப்போல விருந்தன னென்பார், 'ஆகந்தண்ணெனப் புரந்தர னிருந்துழி' என்று கூறினர். (உo)

முகில்பொதி விண்ணக முதல்வன் பூண்களு
நகில்பொதி சாந்துடை நங்கை பூண்களுந்
துகில்பொதி கிழியொடு தொல்லை வைத்தவை
யகில்பொதி காட்டகத் தடிக ளுய்த்ததே.

(இ-ள்.) மேகங்கள் பொருந்திய சொர்க்காதிபதியாகிய இந்திரனது ஆபரணங்களும், கலவைச்சாந்தணிந்த ஸ்தனங்களையுடைய இந்திராணியினது ஆபரணங்களும் வஸ்திரத்திற்கட்டிய முடிப்பினுடனே முன்னாளில் வைக்கப்பட்டவைகளை அகில்விருக்ஷங்கள் பொருந்திய காட்டின்கண்ணுள்ள வனதேவதையானது கொண்டு வந்து சேர்த்தது.—எ-று.

நகில்பொதி சாந்துடை என்பது, சாந்துபொதிநகிலுடை எனமாற்றிப் பொருள் கூறப்பட்டது. (உக)

முந்துற வைத்தபின் முதல்வ கேட்டிநீ
பைந்தொடி யளைங்கொடு பரமன் காழியில்
வந்தனை நோற்றநாள் வைத்த பூணிது
தந்தனன் கொள்கெனச் சாற்றி நின்றதே.

(இ-ள்.) முன்னே கொண்டுவந்து வைத்தபின்பு, முதல்வரே! நீர் கேட்பீராக; சிவபெருமான் வீற்றிருந்தருளுஞ் சீகாழிப்பதியில் பசிய வளையலையணிந்த இந்திராணியுடனே அடைந்து நீர் தவஞ்செய்துகொண்டிருந்த காலத்தில் (என்னிடத்

தில் அலங்கலமாக) வைத்த ஆபரணமிதுவாகும்; இதனைக் கொடுத்தேன்; நீர் பெற்றுக் கொள்வீராக வென்று கூறி நின்றது.—எ-று.

வந்தனை - முற்றெச்சம். கொள்கவென என்பது, கொள்கென எனத் தொகுத்தல் விகாரம் பெற்றது. (உஉ)

நிற்புறு கின்றுழி நேமி யண்ணற்கு
முற்படு கின்றவன் முளரிப் பண்ணவன்
கிற்புறு செய்யபூண் கிழியை நோக்கினன்
கற்புடை யாள்விடுந் தூதின் காட்சிபோல்.

(இ-ள்.) அவ்வாறு கூறி நின்றபொழுது, சக்கரத்தினை யேந்திய திருமாலின் அவதாரமாகிய உபேந்திரனுக்குத் தமையனாகிய இந்திரனானவன் வனதேவதை (கொடுத்த) முடியப்பட்டுள்ள செவ்விய ஆபரண முடிப்பைக் கற்பினையுடைய இந்திராணியினால் அனுப்பப்பட்ட தூதின்து காட்சியைப்போலப் பார்த்தனன்.—எ-று.

திருமால் இந்திரனுக்குத் தம்பியாக உபேந்திரனென்னும் பெயரோடு வருதலின், 'நேமியண்ணற்கு முற்படுகின்றவன்' என்று கூறினர். முளரிப்பண்ணவன்-வனத்திலுள்ள தெய்வம். முளரி - காடு. கிற்புறுதல் - கட்டப்படுதல். செய்ய பூண்-திருத்தமாகச் செய்யப்பட்டுள்ள ஆபரணம். (உங)

எரிமணி யணிகல னிட்ட பூந்துகில்
விரிதரு பொதியினை விரலி னீக்கினன்
திருமக ளமர்தரு தெய்வத் தாமரை
வரியளி சூழ்வுற மலர்ந்த தென்னவே.

(இ-ள்.) திருமகள் வாழ்கின்ற தெய்வத்தன்மை பொருந்திய தாமரைமலரானது வரிகளையுடைய வண்டுகள் மொய்த்தலால் மலர்ந்த தன்மையைப்போல, ஒளிவிளங்குகின்ற இரத்தினாபரணங்கள் வைக்கப்பட்டுள்ள வஸ்திரமவிழ்ந்த முடிப்பினைத் தனது விரலினால்நீக்கினன்.—எ-று.

கலன் - போலி. (உச)

துன்னெனக் கிழிபதன் றொடர்பு நீக்கலு
மொன்னுதற் றனைவிபூ ணும்பர் தோன்றலுங்
கன்னுறக் கண்டவட் கருதி னனரோ
வென்னுதற் கரியதோ ரின்பந் துய்த்துளான்.

(இ-ள்.) விரைவாக அம்முடிப்பின் கட்டினை யவிழ்த்தன வுடனே ஒளிபொருந்திய நெற்றியினையுடைய இந்திராணியினது ஆபரணங்கள் மேலே தோன்றவும்; நினைத்தற்கரிதாகிய அவளது சுகத்தையனுபவித்தவனாகிய இந்திரன் (அவ்வாபரணங்களைத்) தனது கண்களால் பொருந்தப்பார்த்து அவ்விந்திராணியைத் தன்மனத்தில் நினைத்தனன்.—எ-று.

துன்னென என்பது, விரைவுக் குறிப்பு. கிழியதன் என்பதில், அது பகுதிப்பொருள் விகுதி. அரோ - அசைநிலை. உரு)

பூட்கையின் முலையுடைப் பொன்னங் கொம்பின்மேல்
வேட்கைய தாயினன் மிகவும் பற்பகல்
வாட்கையின் திருந்தது மனத்தின் முன்னிறான்
காட்கொளுங் காமநோய்க் கவலை யெய்தினன்.

(இ-ள்.) யானைக்கோடுபோலும் ஸ்தனங்களையுடைய அழகிய பொற்கொம்புபோன்ற இந்திராணியின்மேல் மிகுதியும் விருப்பமுற்றனன்; அநேககாலம் அவளுடன் கூடி வாழ்தலில்லாதிருந்த தன்மையை மனத்தில் நினைத்தனன்; அதனால் மிகுதியாகப்பொருந்திய காமநோயினால் மனவருத்தமடைந்தனன்.—எ-று.

பூட்கை-யானை; ஈண்டு ஆகுபெயராய் அதன் கோடுக்காயிற்று. வாழ்க்கை-காழ்க்கொளும் என்பன, வாட்கை-காட்கொளும் என்றாயின. காழ்-வயிரம்; ஈண்டு மிகுதியென்னும் பொருளில் வந்தது. (உக)

நெய்ம்மலி தழலென நீடிக் காமநோ
யிம்மென மிசைக்கொள விரங்கி யேங்கினான்
விம்மினன் வெதும்பினன் வெய்து யிர்த்தனன்
மைம்மலி சிந்தையன் மருட்கை யெய்தினான்.

(இ-ள்.) மயக்கம் பொருந்திய மனத்தினையுடைய இந்திரன் காமநோயானது நெய்விட்டெரிக்கு நெருப்பைப்போல அதிகரித்து விரைந்து மேற்கொள்ளவும், அதனால் இரங்கி ஏக்கங்கொண்டனன்; விம்மினான்; வெதும்பினான்; பெருமூச்செறிந்தான்; மருட்சியடைந்தான்.—எ-று. (உஎ)

பசையற வுலர்வுறு பராரைப் பிண்டியிற்
றசைமலி முழுதுட றளர்ந்து வாடினா
னிசைவரு கைவலோ னெழுது பாவைபோ
லசைவில னிருந்தன னணங்குற் றென்னவே.

(இ-ள்.) ஈரம் வற்றி யுலர்ந்த பருத்த அடியினையுடைய அசோகமரத்தைப்போலத் தசை நிறைந்துள்ள தனது சரீரமுழுவதுந் தளர்ச்சியுற்று வாட்டமடைந்தனன்; புகழமைந்த கைதேர்ந்தவனாகிய சித்திரக்காரனொருவனெழுதிய சித்திரப் பாவையைப்போலவும் தெய்வமருள் கொண்டவனைப்போலவும் அசைவற்றவனாயிருந்தனன்.—எ-று. (உஅ)

முருந்துறழெயிற்றினாண் முலைத்த டங்களிற்
பொருந்துற மூழ்கியே புணர்ந்து வைகலு
மிருந்திடு கின்றவ னிடர்ப்பட் டின்னணம்
பிரிந்திடின் வருந்துதல் பேசல் வேண்டுமோ.

(இ-ள்.) மயிலிறகினடி போலும் பற்களையுடைய இந்திராணியினது ஸ்தனங்களாகிய தடாகத்தில் பொருந்த முழுகிக்கலந்து சதாகாலமும் அனுபவித்திருந்த இந்திரன் அவ்விந்திராணி பிரிவாளாயின் இவ்வாறு துன்பமுற்று வருந்துதலைச் சொல்லவேண்டுமோ?—எ-று.

முருந்து - மயிலிறகினடி. (உகூ)

மெய்ந்நனி யலசுற விரக மீக்கொள
வின்னணஞ் சசிபொருட் டினையு நீர்மையோன்
பொன்னணி தன்னையும் புனைதல் வேண்டலன்
றன்னுழை யவர்தமை நோக்கிச் சாற்றுவான்.

(இ-ள்.) தேகம் மிகவும் வருந்தவும், காமநோய் அதிகரிக்கவும் இவ்வாறு இந்திராணியின் நிமித்தம் வருந்துந்தன்மையினையுடைய இந்திரன் பொன்னாபரணங்களையும் அணிய விரும்பாதவனாய்த் தன்னருகிலுள்ள பரிசனர்களைப் பார்த்துக் கூறுகின்றான்.—எ-று.

வேண்டலன் - முற்றெச்சம். (கூo)

இக்கிழி யொன்றினை யெந்தி முன்னம்போற்
றிக்குற விக்கிய சேமித் தங்கள்பால்
வைக்குதி ரென்றலும் வணங்கி நன்றென
வக்கண மன்னவ ரதனை யாற்றினார்.

(இ-ள்.) இந்த ஒரு முடிப்பினையெடுத்து முன்போல இறுகக்கட்டிப் பத்திரப்படுத்தி உங்களிடத்தில் வைத்திருங்களென்று கூறியவுடன், அவர்கள் அவனை வணங்கி அவ்வாறே நல்லதென்று அப்பொழுதே அதனைச்செய்தார்கள்.—எ-று.

சேமித்தல் - காவல் செய்தல். (௫௧)

அன்னதோ ரளவையி லடவிந் தேவியைக்
கொன்னுனை வச்சிரக் குலிசி னோக்குறா
நின்னுழை யளித்திட நீசெல் கென்றலு
மன்னவ னன்றென வணங்கிப் போயதே.

(இ-ள்.) அந்தச்சமயத்தில் அச்சந்தருகின்ற கூரிய வச்சிராயுதத்தையேந்திய இந்திரன் வனதேவதையைப் பார்த்து, நீ உனதிடத்தைக் காவல்செய்யும்பொருட்டுச் செல்லக்கடவையென்று கூறுதலும், உடனே அவ்வனதேவதை அரசனே ! நல்லதென்று வணங்கிச் சென்றது.—எ-று.

கொன்னுனை வச்சிரம் என்பதற்கு, கொலை செய்யத்தக்க கூர்மையினையுடைய வச்சிராயுதம் எனப்பொருள் கூறினுமாம். (௫௨)

போந்திடு காலையிற் புலோம சைப்பெய
ரேந்திழை காமநோ யெரியின் றுப்பினாற்
காந்திய வுளத்தினன் கனலும் யாக்கைய
னோய்ந்தனன் றட்பமே யுளம்வைத் தேகினான்.

(இ-ள்.) அவ்வனதேவதை சென்றவுடனே இந்திராணியின் மீதுண்டாகிய விரகதாபமென்னுந் தீயின் வன்மையினால் எரிகின்ற மனத்தினனும் வெப்பமிகுந்த தேகத்தினனுமாகிய இந்திரன் சோர்வடைந்து சீதளத்தை விரும்பி அவ்விடத்தினின்றுஞ் சென்றனன்.—எ-று.

ஏந்திழை - அன்மொழித்தொகை. துப்பு - வலிமை. (௫௩)

ஒளியிழை யுழத்திய ரொளிமென் கூந்தலி
னளியின நறவுதுய்த் தலரிற் கண்படு
நளியிருந் தண்டலை ஞாங்கர் பொங்கிய
புளினமொன் றதன்மிசை புக்கு வைகினான்.

(இ-ள்.) ஒளிவிளங்குகின்ற ஆபரணங்களை யணிந்துள்ள உழத்தியர்களது பிரகாசிக்கின்ற மெல்லிய கூந்தலினிடத்து வண்டுக்கூட்டங்கள் தேனையுண்டு மலர்களில் தூங்குகின்ற குளிர்ந்த பெரிய சோலையின் பக்கத்தில் உயர்ந்துள்ள ஒரு மணற்குன்றின்மேல் சென்றிருந்தனன்.—எ-று.

உழத்தியர் - மருதநில மாதர்கள். புளினம் - மணற்குன்று. (௫௪)

தீந்தழல் வெங்கதிர் திளைத்த வாறென
நீந்தருங் கங்குலி னிலவுத் திப்படப்
பூந்துணர் பாவிய புளினம் பொன்னகர்
வேந்தனுங் காற்றவும் வெம்மை செய்ததே.

(இ-ள்.) உஷ்ணமாகிய கிரணத்தினையுடைய சூரியனது ஒளி பட்டாற் போல், கடத்தற்கரிய அவ்விராத்திரியில் சந்திரகிரணங்களாகிய தீயானது படுதலால், பூங்கொத்துக்கள் பரவிக்கிடக்கின்ற அம்மணற்குன்றானது பொன்னுலகத்தலைவனாகிய இந்திரனுக்கு மிகவும் வெப்பத்தையுண்டாக்கியது.—எ-று.

'தீந்தழல் வெங்கதிர் திளைத்தவாறென' என்பதற்கு, கொடிய அக்கினியில் சூரியன் மூழ்கியதைப்போன்றுள்ள எனப்பொருள் கூறலுமொன்று. (ருடு)

சூற்புயன் மாறிய சுரத்திற் றெக்குறு
மாற்பரல் வரைபுரை மணலின் றிட்டையின்
பாற்படு கின்றனன் பனிம திக்கதிர்
மேற்பட வசைந்தனன் வினையம் வேறிலான்.

(இ-ள்.) சூல் கொண்ட மேகங்கள் மழைபெய்தலில்லாத பாலைவனத்திற் பொருந்தி யிருக்கின்ற பெரிய பருக்கைக்கற்களாலாகிய மலையினையொத்த அம்மணற்குன்றின்மே லிருக்கின்ற இந்திரன் குளிர்ச்சிபொருந்திய சந்திரகிரணங்கள் தன்மீது பட்டவுடன் அதனை நீக்கிக்கொள்ளத்தக்க செயலறியாதவனாய்நடுக்கங்கொண்டிருந்தான்.—எ-று.

வினையம் வேறிலானாய் அசைந்தன னென்க. (ருசு)

திங்களும் வெங்கனல் சிதறிக் காய்ந்திடத்
துங்கவேள் படையுடன் பிறவுஞ் சூழ்ந்திட
மங்கிய வுணர்ச்சியன் மயலின் வன்மையான்
புங்கவர் மன்னவன் புலம்ப லெய்தினன்.

(இ-ள்.) தேவேந்திரனானவன் சந்திரனும் கொடிய கிரணத்தை வீசியெரிக்கவும், உயர்ந்த மன்மத பாணங்களுடன் மற்றவைகளுஞ் சுற்றிக் கொள்ளவும் புத்தி மயங்கினவனாய் விரக தாபத்தின் கொடுமையால் புலம்பத்தொடங்கினான்.—எ-று.

மட்டமர் புரிகுழன் மடந்தை யென்னுட
லிட்டுயிர் வவ்வின ளிருந்த யாக்கையுஞ்
சுட்டிடு கிற்றியாற் றூய திங்களாீ
பட்டவர் தம்மையும் படுப்ப ரோவென்பான்.

(இ-ள்.) தூய்மையாகிய சந்திரனே! தேன்பொருந்திய முறுக்காகிய கூந்தலையுடைய இந்திராணியானவள் என் உடலைவிட்டு உயிரைக் கவர்ந்தனள்; நீ, அவ்வுயிரின்றிக்கிடந்த உடலையுஞ் சுடுகின்றனை; இஃதென்னை? செத்தவர்களையுங் கொல்லுவார்களோ? என்று கூறுவான்.—எ-று.

இறந்தவர்களைப் பின்னுமழித்தல் உலகிலில்லை. அங்ஙனமாக நீ என்னை வருத்துதலுனக்குத் தருமமன்றென்று கூறின னென்பார், 'பட்டவர் தம்மையும் படுப்பரோ வென்பான்' என்று கூறினார்.

இதுமுதல் ஆறுபாடல்கள் சந்திரதூஷணம். (ருஅ)

எஞ்சலி லமுதினை யார்க்கு நல்குநீ
நஞ்சினை புகுத்தினன் னலரிற் றப்பியே
யுஞ்சன னிவனுயி ரொழிப்பன் யானென
வஞ்சினம் பிடித்தியோ மதிய மேயென்பான்.

(இ-ள்.) சந்திரனே! குறையாத அமுதத்தை யாவர்களுக்குங் கொடுக்கின்ற நீ விஷத்தைச் சிந்துகின்றாய்; இவன் பகைவர்களிடத்தினின்றுந் தப்பிப்பிழை

த்திருக்கின்றான், ஆதலால் இவனது உயிரை நான் வாங்குகின்றேனென்று நீ சபதஞ் செய்துகொண்டனையோ? என்று கூறுவான்.—எ-று.

தேவர்களுக்கு அமுதத்தைக் கொடுக்கின்ற நீ, என்னை அத்தேவர்களினின்றும் வேறு பிரித்து விஷத்தைத்தருகின்றனை; இவன் பகைவர்களின்றுந் தப்பிப் பிழைத்திருக்கின்றன னாகலான் இவனைக் கொல்லவேண்டுமெனச் சபதங்கொண்டனை போலுமெனக் கூறினனென்க. (௩௯)

நிற்றலும் வருதிநீ நீடு தண்ணளி
யுற்றிட லன்றியே யொறுத்தி லாய்மதி
யற்றமின் றன்னிவந் தடுதி யாரிடைக்
கற்றனை யித்திறங் கள்வ நீயென்பான்.

(இ-ள்.) சந்திரனே! நீ தினந்தோறும் வருகின்றனை (அப்படி வரும்போதெல்லாம்) மிகுந்த குளிர்ச்சிபொருந்தி யிருப்பதன்றி நீ வருத்தினாயில்லை; இன்று சமயங்கருதி வந்து கொல்லுகின்றனை; கள்வனே! நீ இத்தன்மையை யாவரிடத்திற்கற்றுக்கொண்டனை யென்று கூறுவான்.—எ-று.

நாள்தோறுந் தண்ணளித்தருகின்ற நீ சமையங் கருதிவந்து வருத்துகின்றனை; இஃதுன் சுபாவ குணமன்றாகலான் யாவரிடத்திற் கற்றுக்கொண்டனை யென்று கூறி வருந்தினனென்க. (௪0)

பெண்ணிய லாரிடைப் பிறங்கு காமமு
முண்ணிகழ் விரகமு முனக்கு முண்டதை
யெண்ணலை யழல்சொரிந் தென்னைக் காய்தியாற்
றண்ணளி மதிக்கிது தகுவ தோவென்பான்.

(இ-ள்.) மாதர்களால் தோன்றுகின்ற காமமும், உள்ளே யுண்டாகின்ற விரகமும் உன்னிடத்திலுமுண்டு; நீ அதனையினைந்தாயில்லை; (கிரணங்களாகிய)நெருப்பைச் சிந்தி என்னைச் சுடுகின்றனை; குளிர்ந்த கிரணங்களையுடைய சந்திரனுக்கு இது தகுதியோ? என்று கூறுவான்.—எ-று.

பெண்ணியலார் - மாதர்களிலக்கணத்திற் சிறிதுங் குறைவில்லாதவர்கள். உண்ணிகழ் விரகம்-மனத்தில் தோன்றுகின்ற விரகம். (௪௧)

அரியநற் றவம்பல வாற்றி யின்றுகா
ழுரியதோ ரென்பல தூனில் யாக்கையேன்
பரிவுறச் சுடுவதிற் பயனென் பாரிலிவ்
வொருவனை விடுகென வுரைத்து வேண்டுவான்.

(இ-ள்.( அநேகம் அருமையாகிய நல்லதவங்களை இதுவரையிலுஞ் செய்து (உடம்பிற்கு) உரிய எலும்பையன்றித் தசையில்லா திருக்கின்ற என்னைவருந்தும்படி சுடுவதனால் யாது பயன்? ஆதலால், இந்நிலவுலகத்தில் இவ்வொருவனை விடுவாயாக வென்று கூறி வேண்டிக்கொள்ளுவான்.—எ-று.

விடுகென என்பது, தொகுத்தல் விகாரம். (௪௨)

அண்டமே னின்றனை யவனி வானக
மெண்டிசை யெங்கணு மெளிது காண்டியா
லொண்டொடி பொருத்தியென் னுயிர்கொண் டுற்றனள்
கண்டதுண் டோமதிக் கடவு ளியென்பான்.

(இ-ள்). சந்திரனே! நீ ஆகாயத்தினிடத்தில் நிற்கின்றனை, ஆதலால் உலகம் ஆகாயம் அஷ்டதிக்குகள் ஆகிய எவ்விடங்களையும் சுலபமாகப் பார்க்கின்றாய்; ஒள்ளிய வளையலையணிந்த ஒரு பெண்ணானவள் எனதுயிரைக்கவர்ந்து சென்றனள், நீ அவளைப்பார்த்தனையோ? என்று கூறுவான்.—எ-று. (சங)

யான்முதற் றோன்றின னெனது பின்னவன்
கான்முளை யாகிய காம நீபல
பான்மையி னெனையடல் பழிய தேயலான்
மேன்மைய தாகுமோ விளம்பு வாயென்பான்.

(இ-ள்.) மன்மதனே! யான் முன்னே பிறந்தேன், என்பின் பிறந்த தம்பியாகிய உபேந்திரனது புதல்வனாகவுள்ள நீ பல விதங்களாலும் என்னைக் கொல்லுதல் உனக்குப் பழியேயன்றி மேன்மையாகுமோ? சொல்லக்கடவை யென்று கூறுவான்.

இதுமுத லிரண்டுபாடல்கள் சந்திர தூஷணம். மன்மதி (சச)

பேரருள வனதுமெய் படுத்த கண்ணுதன்
ஒருரெலன வுதவிய நிலமை னீண்டுள
னொரேகனை மொடுங்குமு னுயிரும் வாங்குமாற்
பொரேலினி மதனநீ போகு போகென்பான்.

(இ-ள்.) மிகுந்த அழகினையுடைய உனது தேகத்தை யெரித்தருளிய சிவபெருமான் விரைந்து பெற்ற திருப்புதல்வராகிய முருகக்கடவுள் இங்கெழுந்தருளியிருக்கின்றார், ஒரு க்ஷணநேரத்துக்குள்ளே உனதுயிரையு மழித்தருளுவார்; மன்மதனே! இனி என்னோடெதிர்த்துப் போர்செய்யாதே போகக்கடவை போகக்கடவை யென்று கூறுவான்.—எ-று.

மன்மதனே! நீ என்னை வருத்துவையாயின் முன்பு உன்னை யெரித்தருளிய சிவபெருமானது திருப்புதல்வராகிய முருகக்கடவுள் இங்கிருக்கின்றனர், அவரிப்போது உன்னை யழிப்பாராதலால் நீ என்னை வருத்தாதே யென்று கூறினனென்க. (சரு)

வானுழை திரிதரு மதியம் போக்கிய
தீநுழை புண்ணில்வேல் செறித்த தென்னவேள்
கோனுழை கின்றன வதனிற் கூடளி
யீநுழை கின்றன போலு மென்கின்றான்.

(இ-ள்.) ஆகாயத்திலுலாவுகின்ற சந்திரனால் விடப்பட்ட (கிரணங்களாகிய) தீப்பட்ட புண்ணில் வேலைநுழைத்தாற்போல மன்மத பாணங்கள் புகுகின்றன; அவ்வம்பிற் பொருந்தியுள்ள வண்டுகள் (அப்புண்ணில்) ஈ நுழைவதை யொக்கும் என்று கூறுவான்.—எ-று. (சசு)

வன்றிறற் கொலைஞர்கன் மானிற் கூவிமா
னென்றறக் கவர்தல்போ லுயிரென் காலினை
யின்றது போலவர் நுள்புக் கீர்த்ததாற்
றென்றலுக் கியான்செய்த தீதுண் டோவென்பான்.

(இ-ள்.) மிக்க வல்லமையினையுடைய கொலையாளிகள் மானைப்போலக் கூச்சலிட்டு எல்லாமான்களையும் பிடித்துக்கொள்வதுபோல, பிராணனென்னும் வாயுவை இன்று அக்காற்றைப்போலவே வந்து உள்ளே நுழைந்து இழுத்தமையினால், தென்றலுக்கு யான் யாதேனுந் தீங்குசெய்ததுண்டோ? என்று கூறுவான்—எ-று.

இச்செய்யுள் தென்றலைத் தூஷித்தது. (சஎ)

வாகுலப் பரியதோர் மாதர் மாலெனு
மாகுலப் புணரியு ளழுந்தி னோரையும்
வீகுலத் தொகையினுள் விட்டி சைத்திடுங்
கோகிலப் பறவையுங் கொல்லு மோவென்பான்.

(இ-ள்.) அழகு நீங்குதலில்லாததாகிய மாதர்களது ஆசையென்கின்ற துன்பக்கடலில் வருந்துகின்றவர்களையும் பறவைக்கூட்டத்தில் வேறாகவெடுத்துச் சொல்லப்பட்ட குயிலும் சொல்லுமோ? என்று கூறுவான்.—எ-று. (சஅ)

நம்முரு வாயின னுகர் கோனெனுத்
தம்மன முன்னியே தளர்வு நீக்கில
கொம்மென வரற்றியுங் கூவ லின்றியு
மெம்முயிர் கொள்வன விருபு ளாமென்பான்.

(இ-ள்.) இந்திரன் நமதுருவத்தை யடைந்தன னென்று தங்கள் மனத்தில் நினைத்துக் குயிலுங் கோழியும் எனது தளர்ச்சியை நீக்கவில்லை. (பின்யாதுசெய்வதென்றால்,) விலாங்கொலித்தும் கூவாதொழிந்தும் எமதுயிரை வாங்குகின்றன என்று கூறுவான்.—எ-று.

இந்திரன் சூராதியர்களது துன்பத்திற்கஞ்சிக் குயிலாக உருவங்கொண்டு மறைந்து சென்றனனென்பதும், கௌதம முனிவரது பத்தினியாகிய அகலிகையைப் புணரும்பொருட்டு அர்த்தராத்திரியில் கோழிவடிவங் கொண்டு கூவினனென்பதும் புராணவரலாறு. (சகூ)

தண்டுத லின்றியே தானு நானுமாய்ப்
பண்டொரு வனிதையைப் பரிவிற் கூடினே
மண்டரு மறிகுவ ரத்தை நாட்சின
முண்டுகொல் கதிரின முதிக்கி லானென்பான்.

(இ-ள்.) தடையில்லாமல் சூரியனும் யானுமாக முற்காலத்து ஒரு பெண்ணை அன்புடன் புணர்ந்தோம்; இதனைத் தேவர்களும் அறிவார்கள். அந்நாளுண்டாகிய கோபமிருக்குமோ? இன்னுஞ் சூரியனுதிக்கவில்லையே யென்று கூறுவான்.—எ-று.

பண்டொருவனிதை யென்றது, பெண்வடிவங் கொண்ட அருணனை; சூரியனது தேர்ப்பாகனுகிய அருணன் ஒருகாலத்தில் இந்திரசபையைக் காணவிரும்பிச் சூரியனிடத்து விடைபெற்றுச் சென்றபொழுது, தான் அங்கு உள்ளே போவதற்குக் கூடாலமையால் பெண்வடிவங்கொண்டு சென்று தேவரம்பையர்களுடன் கலந்திருந்தனன்; இந்திரன் அவ்வருணனுகிய பெண்ணினழகைக் கண்டு மோகித்துப் புணர்தலும் ஒரு குழந்தை பிறந்தது; பின்னர் அருணன் சூரியனிடத்துச்சென்று நடந்த சங்கதியைக் கூறவும், சூரியன் அதனை விசாரித்து அப்பெண்வடிவெடுக்கச்செய்து தானுங் கண்டு மோகித்துப் புணர்ந்தனன், அப்பொழுது ஒருகுழந்தை பிறந்தது; அவ்விருவரில் இந்திரனுக்குப் பிறந்தவன் வாலியும், சூரியனுக்குப் பிறந்தவன் சுக்கிரீவனுமாம். (௬0)

கோழிலை மடற்பனைக் குடம்பை சேர்தரு
மாழையம் பசலைவாய் மகன்றி லென்பவை
காழக வரிசிலைக் காமன் கோடுபோ
லூழியும் விந்திடா தொலிக்கு மோவென்பான்.

(இ-ள்.) கொழுமையாகிய இலைகளையுடைய மடலமைந்த பனைமரங்களிலுள்ள கூண்டிற் பொருந்திய பொன்போன்ற அழகிய பசியவாயினையுடைய அன்றி

லென்னும் பறவையானது வயிரம்பொருந்திய வரிந்தவில்லினையேந்திய மன்மதனது வெற்றிச் சின்னத்தைப்போல யூழிக்கால மளவும் இறவாமல் சப்திக்குமோ? என்று கூறுவான்.—எ-று.

அன்றிப் பறவை நெடுநேரம் இடைவிடா தொலிக்கின்றமையின், 'யூழியும் வீந்திடா தொலிக்குமோ வென்பான்' என்று கூறினர். (ருச)

துன்னல ராகிய தொகையி னோர்தமைத்
தன்னிடை வைத்தெனைத் தளர்வு கண்டதா
லன்னது மன்றியின் றுயி கொள்ளவு
முன்னிய தோகட லுறங்க லாதென்பான்.

(இ-ள்.) சமுத்திரமானது பகைவர்களாகிய கூட்டங்களைத் தன்னிடத்தில் வைத்துக்கொண்டு என்னை வருத்தியது; அதுவுமன்றி, தூங்காமல் இன்று எனதுயிரை வாங்கவும் நினைத்ததோ? என்று கூறுவான்.—எ-று. (ருஉ)

இவ்வகை யாமினி யெல்லை முற்றவும்
வெவ்வழல் சுட்டிடும் விரக நோய்தெற
வுய்வகை யொன்றில னுயங்க லல்லது
செய்வது பிறிதிலன் றெருளில் சிந்தையான்.

(இ-ள்.) இவ்வாறு இராத்திரிமுழுவதும் கொடிய நெருப்பைப்போற் சுடுகின்ற விரகதாபமானது தன்னை வருத்துதலால், தெளிவற்ற மனத்தினையுடையவனாகிய இந்திரன் தானுய்யும்வகை சிறிதுமில்லாதவனாய் வருந்துதலேயன்றி வேறொன்றையுஞ் செய்வதற்கில்லாதவனாயினான்.—எ-று.

யாமினி - இரவு. (ருங)

வேறு.

ஆக்க மித்திற மடைவுழிப் பத்நூறா றடுத்த
நோக்க முற்றவன் சசிபொருட் டுற்றநோ யதனை
நீக்கு கின்றனன் யானென நினைந்துளா னென்ன
மாக்கள் பூண்டதேர் வெய்யவன் குணதிசை வந்தான்.

(இ-ள்.) இத்தன்மையான துன்பத் தோற்றங்களுண்டாகும்பொழுது ஆயிரங்கண்களையுடைய இந்திரன் இந்திராணியின் நிமித்தமடைந்த காமநோயினை யான் நீக்குகின்றேனென்று நினைத்து வந்தவனைப்போலக் குதிரைகள் பூட்டிய தேரினையுடைய சூரியன் கீழ்த்திசையில் உதயமாயினான்.—எ-று. (ருச)

வெம்பு தொல்லிரு ளவுணர்தங் குழுவினை வீட்டி
யும்பர் மேற்செனு மதியெனு மடங்கலை யுருத்துப்
பைம்பொன் வெஞ்சுடர்க் கரங்களா லதன்வலி படுக்குஞ்
சிம்பு ளாமெனத் தோன்றினன் செங்கதிர்க் கடவுள்.

(இ-ள்.) சிவந்த கிரணங்களையுடைய சூரியன் வெதும்புகின்ற பழைய இருளாகிய அசுரர்கூட்டங்களைக் கொன்று, வானத்திற் செல்லுகின்ற சந்திரனென்னுஞ் சிங்கத்தைக் கோபித்துப் பசிய பொன்னிறமாகிய வெவ்விய கிரணங்களென்னுங் கைகளால் அதன் வல்லமையை யடக்குகின்ற சிம்புட்பறவையைப்போல உதயமாயினான்.—எ-று.

அசுரர்கள் கருநிறமுடையவர்களாகலின் அவர்களை இருளாகவும், சிங்கம் வெண்ணிறமுடையதாகலின், அதனை மதியாகவும் உவமித்துக் கூறினர்: சிங்கத்தின்

வலிமையை யடக்குவது சிம்புளாகலின் 'அதன்வலியடக்குஞ்சிம்புளாமென' என்று கூறினார். (௯௫)

தொடர்ந்த ஞாயிறு விடுத்திடுங் கதிர்களாந் தூசி
படர்ந்த காலையி னிலவெனு மனிகமுன் பட்ட
வடைந்த மீனெனுந் துணைவரும் பொன்றின ரமர்செய்
துடைந்த மன்னரிற் போயின னுடுபதிக் கடவுள்.

(இ-ள்.) ஆகாயத்தில் உதயமாகிய சூரியன் அனுப்பிய கிரணங்களாகிய தூசிப்படைகள் பரவிச்சென்ற சமையத்தில் சந்திரிகை யென்னுஞ் சேனைகள் முன்னே யிறந்தன; சேர்ந்துவந்த நக்ஷத்திரங்களென்னுந் துணைவர்களும் இறந்தார்கள். யுத்தஞ்செய்து தோற்றோடிய அரசர்களைப்போலச் சந்திரன் (ஒளிமழுங்கிச்) சென்றனன்.—எ-று. (௯௬)

விரிந்த பல்கதி ரனிகத்தை வெய்யவன் விடுப்பத்
துரந்த சோமனை யவன்புறங் காட்டினன் றொலைந்து
கரந்து போகவும் பின்றுறச் சென்றில களத்தி
னிரிந்து ளோரையுந் தொடர்வரோ சூரர்த மினத்தோர்.

(இ-ள்.) சூரியன் தனது பரந்த பல கிரணங்களாகிய சேனைகளை யனுப்புதலும் அவைகள் சந்திரனைத்துரத்தின; அந்தச்சந்திரன் முதுகுகாட்டினவனும் வலியிழந்து மறைந்து செல்லவும், அவைகள் அவனைப் பின்றொடர்ந்து சென்றில; போர்க்களத்தில் தோற்றோடினவர்களையும் சூரர்களது கூட்டத்திலுள்ளவர்கள் பின்றொடர்ந்து செல்வார்களோ? (செல்லார்).—எ-று.

சூரர்தமினத்தோர் என்பதற்கு, வீரர்களது கூட்டத்திலுள்ளவர்கள் எனவும், சூரியனது (கிரணமாகிய) கூட்டத்திலுள்ளவர்கள் எனவும் சிலேடைப் பொருள் தோன்றுமாறு காண்க. (௯௭)

திங்க டன்குறை யுணர்த்தவாய் திறந்தெனச் செய்ய
பங்க யங்கள்போ தவிழ்ந்தன குமுதங்கள் பலவுந்
தங்க ணாயக னுடைந்தது நோக்கியே தபனற்
கங்கை கூப்பிய திறனென வொடுங்கிய வன்றே.

(இ-ள்.) சந்திரனது குறைவினைத் தெரிவிக்கும்பொருட்டு வாயைத் திறந்தாற்போலச் செந்தாமரைகள் அரும்பலர்ந்தன; அல்லிமலர்களனைத்தும் தங்கள் தலைவனாகிய சந்திரன் தோற்றோடியதைப் பார்த்துச் சூரியனுக்கு அழகிய கைகளைக் கூப்பி வணங்கிய தன்மையைப்போலக் குவிந்தன.—எ-று.

சூரியனுதயமானவுடனே தாமரைகள் மலர்தலும், அல்லிமலர்கள் கூம்புதலுஞ் செய்தனவென்பது கருத்து. (௯௮)

வனமெ ழுந்தன வசனமு மெழுந்தன வரியி
னினமெ ழுந்தன மாக்களு மெழுந்தன வெழில்சே
ரனமெ ழுந்தன புள்ளெலா மெழுந்தன வவற்றின்
மனமெ ழுந்தன வெழுந்தன மக்களின் றொகையே.

(இ-ள்.) நீர் எழுந்தொலித்தன; தாமரைகளும் மலர்ந்தன; வண்டின் கூட்டங்களெழுந்தன; மிருகங்களுமெழுந்தன; அழகுபொருந்திய அன்னப்பறவைகளெழுந்தன; மற்றைப் பறவைகளனைத்து மெழுந்தன; அவற்றின் மனங்கள் தத்தந் தொழில்களிற் சென்றன; மனிதர்களு மெழுந்தார்கள்.—எ-று.

சூரிய னுதித்தவுடனே சராசரங்களாகியயாவும் நித்திரைதெளிந்தெழுந்தன வென்க. (ருகூ)

ஞாயி றுற்றவவ் வளவையி னனந்தலை யுலகி
லேயெ னச்செறி யிருளெலா மறைந்திருந் தென்னச்
சேய ரிக்கணி தந்திடு தெளிவில்கா மத்து
மாயி ருட்டொகை யொடுங்கிய திந்திரன் மனத்துள்.

(இ-ள்.) சூரியன் உதயமாகிய சமையத்தில், மத்தியமாகிய நிலவுலகத்தில் நிறைந்திருந்த இருட்கூட்டங்களனைத்தும் விரைவில் மறைந்திருந்தாற்போலச் செவ்வரி பரந்த கண்களையுடைய இந்திராணியினால் கொடுக்கப்பட்ட தெளிவில்லாத காமமாகிய மிக்க இருட்கூட்டமானது இந்திரன் மனத்துள் ஒடுங்கியது.—எ-று.

சேயரிக்கணி தந்திடு தெளிவில் காமமாவது:—இந்திராணியின்மீதுண்டாகிய காமம். எத்தகைய மனத்தினையு மயக்குந் திறத்தினையுடைமையால், 'தெளிவில் காமம்' என்று கூறினர். (சுo)

கையி கந்துபோய்த் தன்னுயி ரலைத்தகா மத்தீப்
பைய விந்திடு பாந்தள்போற் றணிதலும் பதைப்புற்
றெய்யெ னக்கடி தெழுந்தன னகைத்துவெள் குற்று
ஐய கோவிது வருவதே யெனக்கென வறைந்தான்.

(இ-ள்.) அளவுகடந்து சென்று தனதுயிரை வருத்திய காமாக்கினியானது படமடங்கிய பாம்பைப்போலத் தணியவும், (தேவேந்திரனானவன்) மனம் பதைத்து விரைந்தெழுந்து நகைத்து வெட்கமுற்றவனாய் ஐயோ! இஃதெனக்குண்டாவதோ வென்று கூறினான்.—எ-று.

பையவிந்திடு பாந்தள் செயலற்றுக்கிடத்தல்போலச் சூரிய னுதித்தவுடன் இந்திரன் மனத்திருந்த காமாக்கினி தணிந்தமையின், 'பையவிந்திடு பாந்தள்போற் றணிதலும்' என்று கூறினர். (சுக)

தீமை யுள்ளன யாவையுந் தந்திடுஞ் சிறப்புந்
தோமில் செல்வமுங் கெடுக்குநல் லுணர்வினைத் தொலைக்கு
மேம நன்னெறி தடுத்திரு ளுய்த்திடு மிதனாற்
காம மன்றியே யொருபகை யுண்டுகொல் கருதில்.

(இ-ள்.) தீமைகளனைத்தையுங் கொடுக்கும்; சிறப்பினையுங்குற்றமற்றசெல்வத்தினையு மழிக்கும்; நல்லறிவைத் தொலைக்கும்; இன்பத்தைக் கொடுக்கின்ற புண்ணியவழியைத்தடுத்து நரகத்திற்சேர்க்கும்; இக்காரணத்தினால், விசாரிக்குமிடத்தில் காமத்தைப்பார்க்கிலும் பகையாயுள்ளது வேறொன்றுண்டோ?—எ-று.

தோம் - குற்றம். ஏமம் - இன்பம். (சுஉ)

என்ப துன்னியே யிந்திர னண்டைவைப் பிகந்து
தன்பு றந்தனிற் கடவுளர் குழுவெலாஞ் சார
வன்பொ டேபடர்ந் தறுமுக னடிகளை யடைந்து
முன்பு தாழ்ந்தன னுரோமமுஞ் செங்கையு முகிழ்ப்ப.

(இ-ள்.) என்றிவ்வாறு நினைத்து இந்திரன் அவ்விடத்தினின்று நீங்கித் தன்பின்னே தேவர்கூட்டங்களனைத்துஞ் சூழ்ந்துவர, அன்புடன் சென்று சண்முகக் கடவுளது திருவடிகளின்முன்னடைந்து மயிர்க்கூச்செறியக் கைகளைக்குவித்து வணங்கினான்.—எ-று.

ஆண்டை - ஐயீற்றுக்குற்றியலுகரம். (சுஙு)

தொழுத கையினன் கோட்டிய மெய்யினன் றுகிலத்
தெழுது பாவையி லான்றமை புலத்தின னிறைஞ்சிப்
புழுதி தோய்தரு முறுப்பினன் சுருதியின் பொருண்மை
முழுது மூறிய துதியின னாகிமுன் னின்றான்.

(இ-ள்) குவித்த கைகளையுடையவனும் தாழ்ந்து வணங்கிய தேகத்தையுடையவனும் வஸ்திரத்தெழுதிய சித்திரத்தைப்போல ஒடுங்கிய ஐம்புலனையுடையவனும், நமஸ்கரித்துப் புழுதிபடிந்த அவயவங்களையுடையவனும் வேதப்பொருள்கள் முழுவதுமமைந்த தோத்திர முடையவனுமாய் (எமது முருகக்கடவுள்) திருமுன்னே நின்றனன்.—எ-று.

ஆன்றமை புலமாவது—, அவ்வப்புலன்கள் இலயித்துள்ள அவ்வவ்விஷயங்களிலேயே சென்றமைந்திருத்தல். இதனை—" ஐந்துபேரறிவுங்கண்களேகொள்ள வளப்பருங் கரணங்களுன்குஞ்-சிந்தையேயாகக் குணமொருமூன்றுந் திருந்துசாத்துவிதமேயாக - விந்துவாழ் சடையா னடிக்கு மானந்த வெல்லையில் தனிப்பெருங் கூத்தின் - வந்தபேரின்ப வெள்ளத்துட்டிளைத்து மாறிலா மகிழ்ச்சியின் மலர்ந்தார்" என வரும் அருள்வாக்கானறிக. (௬௪)

கரிய வன்றனைச் செய்யவன் கருணைசெய் தருளி
வருதி யென்றுகூய் மறைகளும் வரம்புகாண் கில்லா
வரன தாள்களை யருச்சனை புரிதுநா மதனுக்
குரிய வாயபல் கரணமுந் தருதியென் றுரைத்தான்.

(இ-ள்.) முருகக்கடவுள் இந்திரனைக்கருணையோடுபார்த்தருளி வரக்கடவையென்று அழைத்து,வேதங்களாலும் அளவறியப்படாத சிவபெருமானதுதிருவடிகளை நாம் அருச்சனைசெய்வோம்; நீ அதற்கு வேண்டுவனவாகிய பல உபகரணங்களைச் சேகரித்துக் கொடுக்கக்கடவை யென்று அருளிச்செய்தனர்.—எ-று.

கரியவன் - இந்திரன், 'மறைகளும் வரம்புகாண்கில்லா வரன்' என்பதனை, "நின்றான் மொழிந்தமறை நின்னடிகள் வந்தித்தும் - பன்னு ளருச்சித்தும் பாதந் தலைசுமந்து - முன்னுமம் வாசித்து முன்னையறி யேனென்று - சொன்னலடியனேன் சோதனைத்தோ நின்னியல்பே" என வருந் திருவிளையாடற்புராணத்தானறிக. (௬௫)

உரைத்த வெல்லையிற் றொழுதுபோ யுழையரிற் பலரைக்
கரைத்து விற்றுவிற் றேவிய கடிமலர்க் கண்ணி
திரைத்து கிற்படா நறும்புன லவிபுகை தீபம்
விரைத்த கந்தங்க ளனைவுந் தந்தனன் விரைவில்.

(இ-ள்.) அவ்வா றருளிச்செய்தபொழுது இந்திரன் விரைவாக வணங்கிச் சென்று தனது பரிசனங்களிற் பலரையழைத்து வெவ்வேறாக அனுப்பி மணம் பொருந்திய மலர்மாலை, திரைச்சீலை, நறியநீர், நைவேத்தியம், தூபம், தீபம், வாசனைத்திரவியங்கள் முதலிய யாவற்றையும் விரைவில் கொடுத்தனன்.—எ-று.

நறும்புனலாவது - பத்துத்துவரிலும் ஐந்துவிரையிலும் முப்பத்திருவகை ஓமாலிகையிலும் ஊறிய நீர். பத்துத்துவராவன:—பூவந்தி, கடுக்காய், தான்றிக்காய், நெல்லிக்காய், கருங்காலி, நாவல், ஆல், அரசு, அத்தி, இத்தி என்பன; "பூவந்தி திரிபலை புணர்கருங்காலி-நாவலொடு நாற்பான்மரம்" ஐந்து விரையாவன—"கோட்டந் துருக்கந் தகரமகிலார-மோட்டிய வைந்தும் விரை" முப்பத்திருவகை ஓமாலிகையாவன:—இலவங்கம் பச்சிலை கச்சோலமேலந், குலவிய நாகணங்கோட்டம் - நிலவிய, நாகமதாவரிசி தக்கோல நன்னாரி, வேகமில் வெண்கோட்ட மேவுசீர்-போகாத, கத்

தூரிவேரி யிலாமிச்சங் கண்டில் வெண்ணெய், யொத்தகூ நெல்லி யுயர்தான்றி - துத்தமொடு, வண்ணக்கச்சோலமசோறுக மாஞ்சியுட, னெண்ணுஞ் சயிலேக மின் புழுகு - கண்ணுநறும், புன்னை நறுந்தாது புலியுகிர் பூஞ்சரளம், பின்னுதமாலம்பே ருவகுளம் - பன்னும், பதுமுகநுண்ணேலம் பைங்கொடுவேரி, கதிர்நகையாயோ மாலிகை". என்னு மிவையெனக்கொள்க. இதனை:—"பத்துத்துவரினு மைந்து விரையினு, முப்பத்திருவகையோமாலிகையினு - மூறிய நன்னீர்" எனவருஞ் சிலப் பதிகாரத் தொடருக்கு அடியார்க்கு நல்லார் கூறிய விசேடத்தானறிக.

வீற்று வீற்றேவுதல் - தனித்தனியே யனுப்புதல். (௬௬)

அவ்வக் காலையி லாறுமா முகனுடை யடிக
டெய்வக் கம்மியற் கொண்டொரு சினகர மியற்றிச்
சைவத் தந்திர விதியுளி நாடியே தாதை
யெவ்வெக் காலமு நிலையதோ ருருவுசெய் திட்டான்.

(இ-ள்.) அந்தச்சமையத்தில் சண்முகக்கடவுள் தேவதச்சனைக்கொண்டு ஒரு திருக்கோயில் கட்டுவித்துச் சைவாகமவிதிப்படி சிவபெருமான் எப்பொழுதுஞ் சானித்தியமாயிருக்கப்பட்ட ஒரு திருவுருவத்தை விரும்பி அமைத்தனர்.—எ-று.

சிவாலயப் பிரதிஷ்டை முதலிய கிரமங்களை யுணர்த்துவது சிவாகமங்களே யாதலின் 'சைவத்தந்திர விதியுளி' என்று கூறினர். (௬௭)

தேவு சான்மணிப் பீடத்தி லீசனைச் சேர்த்தி
யாவி னேரைந்து மமுதமும் வரிசையா லாட்டித்
தாவி லாததோர் வாலிதா மவரித்துகில் சாத்திப்
பூவின் மாலிகை செய்யசாந் தத்தொடும் புனைந்தான்.

(இ-ள்.) தெய்வத்தன்மை பொருந்திய இரத்தினாசனத்தில் சிவபெருமானை யெழுந்தருளச்செய்து பஞ்சகௌவியங்களையும் பஞ்சாமிர்தத்தையும் முறைப்படி யபிஷேகித்துக் குற்றமற்ற ஒரு வெண்மையாகிய அழகிய வஸ்திரத்தையணிந்து பூமாலை சந்தன முதலியவைகளையுஞ் சாத்தினர்.—எ-று.

பஞ்சகௌவியங்களாவன பால், தயிர், நெய், கோசலம், கோமயம் என்பன. பஞ்சாமிர்தம்-பால், நெய், தேன், சர்க்கரை, பழம்என்பன; பழம்நீக்கித் தேங்காய்த் திருகல் கூட்டி ஐந்துவகையாகக் கொள்ளுதலும், தேங்காய்த்திருகலின்பால் கூட்டி ஐந்தென்று கொள்ளுதலும், பழவர்க்கங்களுள் ஒன்று, நெய் தயிர் பால் இனம்பற்றி ஒன்று; இவ்விரண்டோடு தேன்,சர்க்கரை நீர்கூட்டி ஐந்தென்று கொள்ளுதலுமுண்டு.

மருந்தி னுற்றவுஞ் சுவையன வாலுவ நூல்போய்த்
திருந்தி னார்களும் வியப்பன திறம்பல வாகிப்
பொருந்து கின்றன நிரலமை கருனையம் புழுக்கல்
சொரிந்து பொற்கலத் தருத்தினன் மந்திரத் தொடர்பால்.

(இ-ள்.) தேவாமிர்தத்தைக்காட்டிலும் மிக்க சுவையுடையனவாய்ப் பாக சாஸ்திரத்தில் பழகித் திருந்தியுள்ளவர்களும் வியக்கத்தக்கதாய்ப் பலவிதங்களாகப் பொருந்தியுள்ளனவாய்ச் செவ்விதாகிய பொறிக்கறிகளை அழகிய அன்னத்துடன் பொற்றும்பாளத்திலமைத்து மந்திரத்தினால் நிவேதித்தனர்.—எ-று.

வாலுவநூல் - பாகசாஸ்திரம். நிரல் - ஒழுங்கு. (௬௮)

கந்தம் வெள்ளிலை பூகநற் காயிலை கலந்து
தந்து பின்முறை யருத்தினன் புகைசுடர் தலையா

வந்த பான்மைக எரியாவையும் வரிசையா லுதவி
மூந்து கைதொழுடப் போற்றினன் மும்முறை வணங்கி.

**(இ-ள்.)** பின்பு முகவாசங்களையும் வெற்றிலைப்பாக்குகளையும் கலந்துவைத்துப் **பின்பு முறை**மைப்படி நிவேதித்துத் தூப தீப முதலிய உபசாரங்களை யெல்லாம் **முறைப்படி**செய்து எதிரில்நின்று கைகூப்பி மும்முறை வணங்கித்துதித்தனர்.

**முகவாசம்** ஐந்து, அவை - தக்கோலம், ஏலம், இலவங்கம், கர்ப்பூரம், சாதிக்காய் **என்பன**; இதனை—"தக்கோலமேலந் தகைசாலிலவங்கங்-கர்ப்பூரஞ் சாதியோடைந்து" **என்பதனானறிக**. (௭0)

வேறு.

இருவரு முணர்கிலா திருந்த தாள்களைச்
சரவண மிசைவரு தனயன் பூசனை
புரிதரு முமையொரு புடையிற் சேர்தர
வருள்விடை மீமிசை யண்ணா லேறினன்.

(இ-ள்.) பிரமவிஷ்ணுக்களா லறியப்படாத திருவடிகளைச் சரவணத்துற்பவராகிய முருகக்கடவுள் பூசனைசெய்யவும், சிவபெருமான் உமாதேவியாருடன் அருள்வடிவமாகிய விடையின்மேல் எழுந்தருளினர்.—எ-று.

அருள்விடை - தருமதேவதையாகிய விடை. (௭௧)

கார்த்திகை காதலன் கறைமி டற்றுடை
மூர்த்திநல் லருள்செய முன்னி வந்தது
பார்த்தன னெழுந்தனன் பணிந்து சென்னிமேற்
சேர்த்திய கரத்தொடு சென்று போற்றினன்.

(இ-ள்.) கார்த்திகேயராகிய முருகக்கடவுள் நீலகண்டராகிய சிவபெருமான் தமக்கு நல்ல திருவருள்செய்யக்கருதி வந்தருளினமையைப்பார்த்து எழுந்து வணங்கிச் சிரமேற்குவித்த திருக்கரங்களுடன் சென்று துதித்தனர்.—எ-று.

**பார்த்தன**னெழுந்தனன் - முற்றெச்சம். (௭௨)

செயிர்ப்பறு நந்திதன் றிறத்தில் வீரரும்
வியர்ப்பினில் வந்தெழு வீர ருங்குழீஇக்
கயற்புரை கண்ணுமை கணவற் காணுறீஇ
மயிர்ப்புறம் பொடிப்புற வணங்கி யேத்தினர்.

(இ-ள்.) சாந்தமூர்த்தியாகியதிருநந்திதேவரது கணத்தலைவர்களாயிருந்தநவவீரர்களும் வியர்வையில் தோன்றிய இலக்ஷம் வீரர்களும் ஒன்றுசேர்ந்து, கயற்கெண்டைபோலுங் கண்களையுடைய பார்வதிபாகராகிய சிவபெருமானைத் தெரிசித்துத் தேகத்தில் மயிர்க்கூச்செறிய வணங்கித் துதித்தார்கள்.—எ-று. (௭௩)

முண்டகன் முதல்வரு முரண்கொள் பூதருங்
கண்டன ரனையது கரங்கள் கூப்பியே
மண்டனின் மும்முறை வணங்கி வானக
மெண்டிசை செவிடுற வேத்தன் மேயினர்.

(இ-ள்.) முண்டகன் முதலாகப்பொருந்திய பலசாலிகளாயுள்ள பூதர்களும் சிவபெருமானெழுந்தருளினமையைப்பார்த்துத் தங்கள்கைகளைக்கூப்பிப் பூமியில் மும்முறை சாஷ்டாங்கமாக நமஸ்கரித்து ஆகாயமும் எட்டுத்திக்குகளும் செவிடுபடும்படித் துதிக்கத்தொடங்கினார்கள்.—எ-று, (௭௪)

வேறு.

ஆயது காலை நன்னி லருவுரு வாகு மண்ணல்
சேயினை நோக்கி யுன்றன் வழிபடற் குவகை செய்தே
நீயிது கோடி யென்னா நிரந்தபல் புவன முற்று
மேயென முடிவு செய்யும் படைக்கலத் திறையை யீந்தான்.

(இ-ள்.) அந்தச்சமையத்தில் ரூபாரூபியாயுள்ள சிவபெருமான் தமது திருப்புதல்வராகிய முருகக்கடவுளைப்பார்த்தருளி, யாம் உனது பூசனைக்கு மகிழ்வடைந்தனம், ஆதலால் இதனை நீ பெற்றுக்கொள்ளென்று வரிசையாயுள்ள பல புவனங்களையும் க்ஷணப்பொழுதில் நாசஞ்செய்யத்தக்க ஆயுதவரசாகிய பாசுபதாஸ்திரத்தைக் கொடுத்தருளினர்.—எ-று. (எ௫)

மற்றிது நம்பாற் றோன்றும் வான்படை மாயன் வேதாப்
பெற்றுள தன்றி யாரிப் பெரும்படை பரிக்கு நீரார்
முற்றுயி ருண்ணும் வெஞ்சூர் முரட்படை தொலைப்பா னீது
பற்றுதி மைந்த வென்னாப் பராபர னருளிப் போனான்.

(இ-ள்.) இது நம்மிடத்தில் தோன்றிய பெரிய ஆயுதம்; இதனைப் பிரமவிஷ்ணுக்களும் பெற்றவரல்லர்; இப் பெரிய ஆயுதத்தைத் தாங்கத்தக்க தன்மையையுடையவர்கள் யாவர்; இது சகலவுயிர்களையும் நாசஞ்செய்யும்; ஆதலால், குமாரனே! நீ கொடிய சூரனது வலிய சேனைகளை யழிக்கும்பொருட்டு இதனை வாங்கிக்கொள்ளக்கடவை யென்று கொடுத்து மறைந்தருளினர்.—எ-று.

முற்றுயி ருண்ணும் என்பதனை வெஞ்சூர் என்பதற்கு அடைமொழியாக்கி, எல்லாவுயிர்களையு மழிக்கின்ற கொடிய சூரபன்மனது எனப் பொருள்கூறுதலுமொன்று. (எ௬)

கருணைசெய் பரமன் சேணிற் கரந்தனன் போன காலை
யருள்பெறு நெடுவே லண்ண லன்னவற் போற்றிப் பின்னை
விரவிய விலக்கத் தொன்பான் வீரரு மயனு மேனைச்
சுரர்களும் வழுத்திச் செல்லத் தூயதன் றேரிற் புக்கான்.

(இ-ள்.) தமக்குத் திருவருள்புரிந்த சிவபெருமான் வானத்தில் மறைந்து சென்றவுடனே, அவரது திருவருளைப்பெற்ற நெடிய வேலினையுடைய முருகக்கடவுள் அவ்வெம்பெருமானைத்துதித்து, பின்பு நெருங்கிய இலக்ஷத்தொன்பது வீரர்களும் பிரமன் முதலிய தேவர்களுந் தம்மைத் துதித்துக்கொண்டு உடன்வரத் தூய்மையாகிய தமது இரதத்தில் சென்று ஏறியருளினர்.—எ-று. (எஎ)

சில்லியந் தேர்மேற் செவ்வேள் சேர்தலு முலவை வேந்தன்
வல்லைதன் றமர்க ளோடும் வாம்பரி கடாவி யுய்ப்ப
வெல்லையிற் பரிதி தோன்ற வெழுதரு முயிர்க ளேபோ
லொல்லென வெழுந்த தம்மா வுருகெழு பூத வெள்ளம்.

(இ-ள்.) சக்கரங்களையுடைய அழகிய இரதத்தின்மீது முருகக்கடவுளெழுந்தருளியவுடனே வாயுதேவன் விரைவாகத் தனது பந்துக்களுடன் தாவுகின்ற குதிரைகளைத் தட்டியோட்டுதலும்; காலையில் சூரியனுதயமான வுடனே உயிர்கள் நித்திரைவிட்டெழுவதைப் போல மிகப்பெரிய வடிவினையுடைய பூதப்படைகளாகிய வெள்ளங்கள் விரைவாக எழுந்தன.—எ-று.

சில்லி - தேர்ச்சக்கரம். (எ௮)

சாரத மீந்த மெல்லாந் தரையினின் றெழுந்து சூழ்ந்து
போராலி யலிந்து போந்த புடைதனி லிலக்கத் தொன்பான்
வீரருஞ் சுரர்கள் யாரு மேவினர் வந்தார் வான்றோய்
தேர்மிசை யவர்க்கு நாப்பட் சென்றனன் குமரச் செம்மல்.

(இ-ள்.) பூதச்சேனைகளனைத்தும் போர்க்கோலங்கொண்டு ஒருங்குகூடிப் பூமியினின்றுங் கிளம்பிச் சென்றன; பக்கத்தில் இலக்ஷத்தொன்பது வீரர்களும் தேவர்களும் சூழ்ந்து வந்தனர்; அவர்களுக்கு மத்தியில் ஆகாயத்தையளாவிய இரதத்தின் மேல் முருகக்கடவுள் சென்றருளினர்.—எ-று. (எக)

மண்ணியங் கரையிற் றென்பால் வருத்தசேய் ஞல்லூர் நீங்கி
யெண்ணிய வுதவும் பொன்னி யிகந்திடை மருதி னோடு
தண்ணியன் மஞ்ஞை யாடுந் தண்டுறை பறிய லூருங்
கண்ணுத லிறைவன் முன மேனவுங் கண்டு போனான்.

(இ-ள்.) மண்ணியாற்றின் தென்புறத்திலுண்டாகிய திருச்சேய்ஞலூரினின்று நீங்கி மனோபீஷ்டங்களைத் தருகின்ற காவிரிநதியைக் கடந்து திருவிடைமருதூருடன் குளிர்ந்த தன்மையினையுடைய திருமயிலாடுதுறையினையும், திருப்பறியலூரையும், நெற்றிக்கண்ணராகிய சிவபெருமான் வீற்றிருந்தருளும் மற்றைய ஆலயங்களையுந் தரிசித்துக்கொண்டு சென்றனர்.—எ-று.

அவரவர்களது மனோபீஷ்டங்களை யுதவுகின்ற கங்கை முதலிய சப்தநதி தீர்த்தங்களில் ஒன்றாக விருத்தலின், 'எண்ணிய வுதவும் பொன்னி' என்று கூறினார். தண்ணியன் மஞ்ஞையாடுந் தண்டுறை என்பது, திருமயிலாடுதுறை; இது மாயூரம் எனவழங்குகின்றது. (அ0)

எழில்வளஞ் சுரக்குந் தொல்லை யிலஞ்சியங் கான நோக்கி
மழவிடை யிறைவன் பொற்றாள் வணங்கியே மலர்மென் பாவை
முழுதுள திருவு மென்று முடிவின்மங் கலமு மெய்த
விழுமிதி னோற்றுப் பெற்ற வியன்திரு வாரூர் கண்டான்.

(இ-ள்.) அழகிய வளப்பங்களைத்தருகின்ற பழைமையாகிய திருவிலஞ்சியங்கானத்தைத் தரிசித்து, இளமையாகிய இடபவாகனத்தையுடைய சிவபெருமானது பொன்மயமாகிய திருவடிகளை நமஸ்கரித்து, இலக்ஷுமியானவள் சகல செல்வங்களையும் என்றுமழியாதிருக்கின்ற மங்கலத்தையும் அடையும்பொருட்டு உயர்வாகிய தவத்தைச்செய்து பெற்றுக்கொண்ட மேன்மை பொருந்திய திருவாரூரைத் தரிசித்தருளினர்.—எ-று.

'மலர்மென்பாவை - முழுதுள திருவுமென்று முடிவின் மங்கலமுமெய்த - விழுமிதினோற்றுப் பெற்ற வியன் திருவாரூர்' என்பதன்வரலாறு - முன்பொருகாலத்தில் திருமாலானவர் பகைவர்களை வெல்லும்பொருட்டுக் கரத்தில் வில்லைத்தாங்கிக்கொண்டு அதனைத் தமது வலதுகாற் பெருவிரலாலும் மோவாய்க்கட்டையாலும் பற்றிக்கொண்டு நிற்கையில், பகைவர்கள் அதிற் பூட்டியிருந்த நாரியைச் செல்லுருவங்கொண்டுவந்து தறித்துவிட்டமையால், உடனே நிமிர்ந்த அவ்வில்லின் வேகத்தினால் தமது தலையறுபட்டுத் திருக்கண்ண மங்கையென்னும் பதியில் விழுந்தது; அதனைக்கண்ட திருமகள் இறந்துகிடக்கின்ற தனது நாயகனை உயிர்ப்பிக்கவேண்டித் திருவாரூரையடைந்து சிவபெருமானை நோக்கித் தவஞ்செய்து, அத்தவப்பேற்றால் சகல செல்வங்களையும் தனது நாயகனையும் பெற்று வாழ்ந்திருந்தனள் என்பது. இதனை -

"நாகமிசை நடித்தவருக் குயிர்வேண்டித் திருதவஞ்செய்நளினக் கோயில் சேருமனத் தவராகு மருவாரூர்தனை யெரித்தார் திருவாரூரோ" என்பதனானுணர்க. திருமகள் பூசித்த காரணத்தால் திருவாரூர் என்றும், கமலை என்னும் பெயரையுடைய அத்திருமகள்பூசித்த ஆலயமாதலால் கமலாலயம் என்றும்பெயர் வழங்குமாறு காண்க. (அக)

குமாரபுரிப்படலமுற்றிற்று.

ஆ-திருவிருத்தம்-க,எஉ௬.

---

உ

முருகன்றுணை.

---

# சுரம்புகுபடலம்.

---

புற்றிடங் கொண்ட புத்தேள் புரந்தரற் கருள்செய் திட்ட
நற்றலந் தன்னைச் சேர்ந்த நகரமுள் ளனவுங் காணூஉக்
கொற்றவெங் கதிர்வே லண்ணல் கொல்லுலை யழலிற் செக்கர்
பற்றிய விரும்பு போலும் பாலையங் கானத் துற்றான்.

(இ-ள்.) வெற்றிபொருந்திய வெவ்விய கிரணங்களையுடைய வேற்படையையேந்திய முருகக்கடவுள் புற்றினைத் தமக்கிடமாகக்கொண்ட ஸ்ரீ வன்மீகநாதர் தேவேந்திரனுக்குத் திருவருள்புரிந்தருளியதாகிய நல்ல திருவாரூர்த்திருப்பதியை யடுத்த க்ஷேத்திரங்களனைத்தையுந் தரிசித்து, பின்பு, கொல்லனது உலைக்களத்திலுள்ள அக்கினியினால் (காய்ச்சப்பட்டுச்) செந்நிறம் பொருந்திய இரும்புபோன்றுள்ளதாகிய பாலைநிலத்தை யடைந்தருளினார்.—எ-று.

'புற்றிடங்கொண்ட புத்தேள் புரந்தரற்கருள் செய்திட்ட-நற்றலம்' என்பதனை மேல் தக்ஷகாண்டத்திற் கூறுதலின் ஆண்டுக்கண்டுணர்க. (க)

வேறு.

ஏழு நேமியும் பெரும்புறக் கடலுமெண் டிசையுஞ்
சூழ வன்னதர லழிவின்றித் தொன்மைபோ லாகி
யாழி யுள்ளுறும் வடவையி னவற்றினைப் பருகி
யூழி தன்னினு மிருப்பதவ் வுயர்பெரும் பாலை. ய

(இ-ள்.) அவ்வுயர்ந்த பெரிய பாலைநிலமானது ஏழுகடல்களும் பெரும்புறக்கடலும் எட்டுத்திசையிலுஞ் சூழ, அவற்றாலழிவில்லாமல் முன்போலவே யமைந்து சமுத்திரத்திற் பொருந்திய வடவாமுகாக்கினியைப் போல அக்கடல்நீரையுண்டு ஊழிக்காலத்திலும் அழியாதிருப்பது.—எ-று.

ஏழுநேமி - உவர் நீர்க்கடல் முதலியன. (உ)

அண்டர் நாயக னுலகடு மகந்தனக் காகும்
பண்ட மேசெறி பல்வள மாருயிர் பசுக்கண்
மண்டு நேமிநெய் நிலங்கல மாயுற மலர்தீக்
குண்ட மாயது கள்ளிசூழ் கொடியவெம் பாலை.

(இ-ள்.) தேவர்கள் நாயகராகிய சிவபெருமான் சர்வசங்காரமாகிய யாகத்தைச் செய்வதற்கு உதவியாகிய சமித்து முதலிய பொருள்களே உலகத்தில் நெருங்கிய பல வனங்களாகவும், அரிய உயிர்களே யாகப்பசுக்களாகவும், நீர்நிறைந்த கடல்களே நெய்யாகவும், பூமியே யாகசாலையாகவும் அமைந்து நிற்க, கள்ளிமரங்கள் சூழ்ந்த மிகக்கொடிதாகிய பாலைநிலமானது யாகாக்கினியானதுபற்றி யெரிகின்ற யாககுண்டமாகவிருந்தது.—எ-று. (௩)

வன்னை வொன்சுதை மெய்புடை வரநதி கேள்வ
னன்னுறு தொல்லுல காகிய நாலையுற் றென்னத்
தன்னி லாவெழு நாத்தலை யிரண்டுடைத் தழலின்
பன்னை வற்குல காயது முதுபெரும் பாலை.

(இ-ள்.) சமுத்திரமானது அழகமைந்த வொள்ளிய வெண்ணிறமாகிய தேகத்தினை யுடைய கங்காநதித் தலைவனாகிய வருணராஜன் நிலைபெற்று வசிக்கின்ற உலகமாகவிருந்தாற்போல, பழைமையாகிய பெரிய பாலைநிலமானது உஷ்ணவடிவாகிய எழுநாவினையும் இரண்டுதலைகளையுமுடையஅக்கினிதேவன்வசிப்பதற்கு உலகமாக விருந்தது.—எ-று.

சுதை என்பதற்கு, சுண்ணச்சாந்து எனினுமாம். (௪)

உடைய தொல்குலக் கேண்மையா லவ்வனத் துறையுங்
கொடிய வன்னிபாற் சென்றதோ வெப்பமேல் கொண்டு
நடுநடுங்கிவெம் புகையுமிழ்ந் தரற்றிநா வுலர்ந்து
கடல்ப டிந்துநீர் பருகுமால் வடவையங் கனலே.

(இ-ள்.) வடவாமுகாக்கினியானது தனது பழைய குலமாயுள்ள நண்பினால் அப்பாலையின்கண் வசிக்கின்ற கொடிய தீயினிடத்திற் சென்றதோ? வெப்பமதிகரித்து நடுநடுங்கி வெவ்விய புகையை யுமிழ்ந்து இரைந்து நாவறண்டு கடலில் முழுகி நீரையுண்ணுகின்றது.—எ-று.

வடவைத் தீயானது வெப்பங்கொண்டு கடலிற் புகுந்து நீரைப் பருகுதல், இப்பாலை நிலத்துடன் கேண்மையுற்றுச் சென்றிருந்த காரணந்தான் போலுமென்று கூறியதனால், இப்பாலை நிலத்தீ அவ்வட வாக்கினியினும் மிகக் கொடியதென்று கூறியதாயிற்று. (௫)

கற்றை யங்கதிர்ப் பரிதியு மதியுமக் கானஞ்
சுற்றி யேகுவ தல்லது மிசைபுகார் சுரரு
மற்று ளார்களு மனையரோ யெழிலியு மருத்து
மெற்றை வைகலு மதன்புடை போகவு மிசையா.

(இ-ள்.) கூட்டமாகிய அழகிய கிரணங்களையுடைய சூரியனும் சந்திரனும் அப்பாலைவனத்தைச்சுற்றிச்செல்வதேயன்றி மேலேசெல்லார்கள்; தேவர்களும்மற்றுள்ளவர்களும் அவ்வாறேசெல்லார்கள்; மேகங்களும் வாயுக்களும் எக்காலத்திலும் அதனருகில் போவதற்குஞ் சம்மதியா.—எ-று. (௬)

சேனம் வெம்பணி யொண்புறு கலைமான் செந்நா
யானை யாதிக ளவ்வனத் திருக்கவு மாவி
போன தில்லையா லங்கியிற் றோன்றிய பொருள்கண்
மேனி கன்றுவ தன்றியே விளியுமோ வதனுல்.

(இ-ள்.) பருந்து, வெவ்விய பாம்பு, ஒள்ளிய புறா, கலைமான், புள்ளிமான், செந்நாய், யானைமுதலியவைகள் அந்தவனத்தில் வசித்துக்கொண் டிருக்கவும் அவை

களிறக்கவில்லை; நெருப்பிற்றோன்றிய பொருள்கள் அந்நெருப்பினால் உடல்வாடுவ தல்லது இறக்குமோ? (இறவா).—எ-று.

நெருப்பிற்றோன்றிய பொருள்கள் அந்நெருப்பினா லழியாவாறுபோல, பாலைநிலத்திற் றோன்றிய சேனம் முதலியன இறந்தில வென்க. (௭)

எல்லினி னுஞ்சுடும் பாலையங் கானிடை யெழுந்த
கன்னல் கன்புகை யழல்படு கின்றகாட் சியவே
விண்ணினி னீலமுஞ் செக்கரு மவற்றினால் வெடித்த
புண்ணு மொக்குளுங் கதிர்களு முடுக்களும் போலாம்.

(இ-ள்.) ஆகாயத்தில் நீலநிறமுஞ் செந்நிறமுங் காணுதல், நினைப்பினுஞ் சுடக்கூடிய பாலைவனத்தி லுண்டாகிய மிகுந்த புகையும் நெருப்புந்தோன்றுகின்ற காட்சியினையொக்கும்; சூரிய சந்திரர்களும் நக்ஷத்திரங்களும் அப்புகையினாலும் தீயினாலும் வெடிக்கப்பட்ட புண்ணையுங் கொப்புளத்தையு மொக்கும்.—எ-று.

ஆகாயத்தின் நீல நிறமானது பாலை நிலத்தினின்றுந் தோன்றும் புகையையும், செவ்வானமானது அப்பாலை நிலத்தீயின் சாயையையும், சூரிய சந்திரர்களும் நக்ஷத்திரங்களும் அத்தீயால் வெடித்த புண்ணையுங் கொப்புளத்தையு மொத்திருந்தன வென்க. (௮)

வேக வெய்யவன் புடையுறு தல்வன மிசைமே
போக வோரிறை யெழுந்தழல் சுட்டது போனு
மேகு தேரொரு காலிலா திழந்ததா ளிருகால்
பாகி ழந்தன னவன்கதி ரங்கிபட் டனவே.

(இ-ள்.) வேகமாகச்செல்லுகின்ற சூரியன் பக்கத்திற் செல்லாமல் அவ்வனத்தின்மேலே சென்றமையினால் ஒரு கணப்பொழுதில் அவ்வனத்தீ யெழுந்து சுட்டதினாலாக விருக்கலாம்; ஆகாயத்திலோடுகின்ற இரதமானது ஒரு சக்கரமில்லா திழந்தது; அருணனாகியதேர்ப்பாகன் இரண்டுகாலுமிழந்தனன்; அச்சூரியனது கதிர்களும் அக்கினிமயமாயின.—எ-று.

சூரியனது இரதத்திற்கு ஒற்றைச் சக்கரமென்பதும் அத்தேர்ச்சாரதியாகிய அருணனுக்குக் காலில்லையென்பதும் புராணவரலாறு. (௯)

தங்க டொல்பவ மகன்றிலா விண்ணவர் தம்மைத்
துங்க முத்தியின் பொருட்டினா லடைபவர் தொகைபோ
லங்க நொந்துதம் போலவே வெப்பமுற் றயருங்
கங்க நாடியே நீழலுக் கடைவன கலைகள்.

(இ-ள்.) தமது பழையபிறவிகளைநீக்கிக்கொள்ளாத தேவர்களைக்குறித்துத் தூய்மையாகிய முத்தியின் பொருட்டுக் கூட்டமாகச்சென் றடைகின்றவர்களைப்போல, உடல்வருந்தித் தம்மைப்போலவே வெப்பமுற்று வருந்துகின்ற பருந்தினைக் குறித்துக் கலைமான்கள் நிழலுக்குச் செல்லுகின்றன.—எ-று.

தங்கள் பிறவியை நீக்கிக்கொள்ளவறியாத தேவர்களையடைந்து தம்பிறவி நோயை நீக்கக்கருதுகின்றவர்கள் அத்தேவர்களால் ஒருபயனையுமடையா வாறுபோலப் பாலைத்தீயால் வருந்துகின்ற பருந்துக்களைக் கலைமான்கள் நிழலைக்கருதியடைந்து அவற்றால் ஒருபயனையுமடைந்திலவென்பது கருத்து. (௧௦)

கோல் வெங்கதிர் மதியிவர் வைகலுங் கொடிய
பாலை வெஞ்சுரத் தாரழல் வெம்மைபட் டனரோ

காலை தன்னினு மாலையம் பொழுதினுங் கங்குல்
வேலை தன்னினும் பிறவினும் வேலைநீர் படிவார்.

(இ-ள்.) அழகிய சூரிய சந்திரர்கள் நாள்தோறுங் கொடிய பாலைவனத்தி லுள்ள தீயினது வெம்மையை யடைந்தனர்களோ? காலையிலும் மாலையிலும் இரவிலும் மற்றைக்காலங்களிலும் கடல்நீரில் முழுகுகின்றனர்.—எ-று.

பாலை வெஞ்சுரம் - இருபெயரொட்டு. (௧௧)

தொடரும் வானவர் யாவரு மையைதா டொழுவார்
கொடிய பாலைமுன் னுணர்கிலா தறுகினர் கொல்லோ
வடிசி வந்தகம் வெம்பியே யமுதமுண் டதற்காப்
படியின் மேலென்றுஞ் செல்கிலர் விண்மிசைப் படர்வார்.

(இ-ள்.) கூட்டமாகச்செல்லுகின்ற தேவர்களனைவரும் துர்க்கையின் பாதங்களை வணங்கவேண்டியவர்களாய், இந்தக் கொடிய பாலைவனத்தின் தன்மையை முன்னமே யுணர்ந்துகொள்ளாமற் சென்றனரோ? பாதங்கள் சிவந்து மனம் வெதும்பி (அது தணியும்பொருட்டு) அமுதமுண்டு அப்பாலை நிலத்தின் கொடுமையைக்கருதிப் பூமியில் எப்பொழுதும் நடந்து செல்லாதவர்களாய் ஆகாயத்தின்வழியாகச் செல்லுகின்றனர்.—எ-று.

ஐயை - துர்க்கை. (௧௨)

ஒள்ளி தாகிய தலைமையிற் பிறந்துளோ ருலக
மெள்ளு நல்குர வெய்தலா லிழிந்தவர் கண்ணுங்
கொள்ளு மாபெரு பயன்குறித் தேகல் போற் கொடிய
கள்ளி தன்புடை நீழலுக் கொதுங்குவ கரிகள்.

(இ-ள்.) கீர்த்திபொருந்திய உயர்குடியிற் பிறந்துள்ளவர்கள் உலகத்தாரிகழ்கின்ற தரித்திரம் வருமாயின் தாழ்ந்தவர்களிடத்தும் ஒரு பிரயோசனத்தைக் கருதிச்செல்வதுபோலக் கொடியகள்ளிமரத்தின்நீழலில் யானைகளொதுங்கி நிற்கின்றன.

இரவி கம்மியன் சுட்டுறு கோல்கதி ரெரிதீ
மருவு செந்தரை பொறிமணி கொள்கலம் வறுங்கான்
கரிக ளேகரி காற்குழ றுதிக்கைநீர் கானல்
புரித ரும்பணி வெந்திடும் பணிக்குலம் போலும்.

(இ-ள்.) சூரியனே பொற்கொல்லனாகவும், அச்சூரியக்கிரணமே சுட்டுக்கோலாகவும்,பொருந்திய செம்மண் தரையே எரிகின்ற தீயாகவும், தீப்பொறிகளே மணிகளாகவும், வறிய அப்பாலைவனமே குமுட்டியாகவும்,யானைகளே கரிகளாகவும், அவ்வியானைத்துதிக்கையே காற்றைத்தருகின்ற ஊதுகுழலாகவும், கானலே நீராகவும்,வேகின்ற பாம்புகளே செய்யப்பட்ட ஆபரணமாகவும் விளங்கும்.—எ-று. (௧௪)

ஆன்ற வான்புவி நதிப்புனல் பாதல மதன்கட்
டோன்று நீத்தநீர் யாவையு மொருங்குறத் துற்றுச்
சான்ற பாலையஞ் செந்தழ லப்புன றன்னைக்
கான்ற வாறெனக் கிளர்வன வங்கிலக் கானல்.

(இ-ள்.) உயர்ந்த வானத்திலும் பூமியிலுமுள்ள ஆற்று நீர்களும் பாதலத்திற்றோன்றிய பிரவாகங்களுமாகிய எல்லாவற்றையு மொருமிக்கக்குடித்துப் பெரியபாலைவனமாகிய நெருப்பானது தான் குடித்த அந்நீரைப் பின்னுங் கக்கினதுபோலக் கானலீர் விளங்குகின்றன.—எ-று. (௧௫)

விஞ்சு கானல்வெள் ளேரியை யாறென விரும்பி
நெஞ்சி னுன்னிமே யிரலைமான் மடப்பிடி நெடுந்தாட்
குஞ்ச ரந்திரிந் தலைவன கொடியவெம் பணிகா
லஞ்சு நஞ்சினை யுவந்து நீரென நுகர்ந்தன.

(இ-ள்.) மிகுந்த கானனீராகிய வெள்ளிய பேய்த்தேரினை நதியென்று விருப்புற்று மனதில் நினைத்துக் கலைமானும் புள்ளிமானும் பெண்யானையும் பெரிய கால்களையுடைய ஆண்யானைகளும் திரிந்து அலைகின்றன; இதுவன்றியும், கொடிதாகிய வெவ்விய பாம்புகள்கக்கிய விஷத்தையும் நாய்கள் நீரினிடத்துக்கொண்ட விருப்பத்தினால் உண்ணுகின்றன.—எ-று. (கசு)

செய்ய மண்மக ளுலப்புறு-வுந்தியந் தீயாய்
வெய்ய வன்செலற் கரியவப் பாலையே வுதலான்
மொய்யில் வெம்பணி புகையழ லுமிழ்வன முரணு
மையு றுங்கொடு நஞ்சொடு கான்றசெம் மணிகள்.

(இ-ள்.) சூரியன் செல்லுதற்கரிதாகிய அப்பாலை நிலமானது செவ்விய பூமிதேவியினது கெடாத உதராக்கினிபோன்றிருத்தலால், வல்லமையில்லாத வெவ்விய பாம்புகள் கக்கிய கருமையாகிய கொடியவிஷமும் மாணிக்கங்களும் அப்பாம்புகள் புகையையும் தீயையும் உமிழ்தலையொத்திருக்கும்.—எ-று.

உந்தியந்தீ-உதராக்கினி. பாம்புகள் விஷத்தைக் கக்குதல் புகையை யுமிழ்வதுபோலவும், மாணிக்கங்களைக் கக்குதல் அழலை யுமிழ்வதுபோலவு மிருந்தனவென்க. (கஎ)

மூங்கி னஞ்சொரி முத்தமு முந்துசெம் பரலு
மளவில் பாந்தளின் மணிகளு மீண்டியே யமர்தல்
விளிவி லவ்வனத் தீச்சுடத் தனதுமெய் வெடித்தே
யுளைவு மண்மகள் மொக்குளுற் றிடுதிற னொக்கும்.

(இ-ள்.) மூங்கில்கள் சொரிந்த முத்துக்களும், உயர்ந்த செந்நிறம் பொருந்திய பருக்கைக்கற்களும், அளவற்றபாம்புகள் கக்கிய மாணிக்கங்களும், நெருங்கியிருத்தல், அழிவில்லாத பாலைவனத்தின் தீயானது சுடுதலால் தனதுதேகம் வெடித்து வருந்துகின்ற பூமிதேவியானவள் (அத்தேகத்தில்) கொப்புளத்தை யடைந்த தன்மைமையை யொத்திருக்கும்.—எ-று. (கஅ)

கள்ளி பட்டன பாலையுந் தீந்தன கரிந்து
முள்ளி பட்டன வெரிந்தன குராமர முளிந்து
கொள்ளி பட்டன காரகி லன்னதாற் கொடுந்தீப்
புள்ளி பட்டது போன்றது பாலையம் புவியே.

(இ-ள்.) கள்ளிமரங்கள் பட்டுப்போயின; பாலைமரங்களும் தீந்தன; முள்ளிச்செடிகள் கரிந்து எரிந்தன; குராமரங்கள் உலர்ந்து கொள்ளியாக எரிந்தன; கரிய அகில்மரமும் அவ்வாறேயாயிற்று; அதனல் அப்பாலை நிலமானது கொடிதாகிய தீப் புள்ளிபட்டதுபோன் றிருந்தது.—எ-று. (ககூ)

இன்ன தாகிய பாலையஞ் சுரத்திடை யிறைவன்
றன்ன தாகிய தானைக ளொடுந்தலைப் படலு
மின்னு மாமுகில் பொழிந்தபின் றண்ணளி மிக்கு
மன்னு கின்றபூங் குறிஞ்சிபோ லாயதவ் வனமே.

(இ-ள்.) இத்தன்மையாகிய பாலைவனத்தில் முருகக்கடவுள் தமது சேனைகளுடன் எழுந்தருளியபொழுது அவ்வனமானது மின்னுகின்ற பெரியமேகங்கள் மழைபொழிந்தபின்பு மிகுந்த குளிர்ச்சியுடன் பொருந்தியிருக்கின்ற அழகியகுறிஞ்சிநிலத்தைப்போல விளங்கியது.—எ-று. (உ0)

ஆற்ற ருந்திற லங்கிநன் னரசியன் முறைமை
மாற்றி யெம்பிரான் வருணற்கு வழங்கின னென்ன
வேற்ற மாகிய வெம்மைபோய் நீங்கியே யெவரும்
போற்று நீரொடு தண்ணளி பெற்றதப் புளிமே.

(இ-ள்.) எமது முருகக்கடவுள் சகித்தற்கரிய வல்லமைபொருந்திய அக்கினி தேவனது அரசாட்சியின் முறைமையைத் தவிர்த்து, வருணதேவனுக்குக் கொடுத்தருளினனென்று சொல்லும்படி அந்தப் பாலைவனமானது மிகுதியாகிய வெப்பந் தணிந்தொழிந்து யாவரும் புகழத்தக்க நீர்வளப்பத்துடன் மிக்க குளிர்ச்சியையுமடைந்தது.—எ-று. (உக)

காத னீங்கலா தலமரு மாருயிர்க் கரண
மாதி யீசன தருளினு லவனதா கியபோ
லேதி நீரிலா தழல்படு வெய்யகா னிலைபோன்
போத னாற்குளிர் கொண்டது நறுமலர்ப் பொழிலாய்.

(இ-ள்.) விஷய விருப்பத்தினின்று நீங்காது அலைந்துகொண் டிருக்கின்ற அரிய பசுகரணங்கள் முதற்பெருங் கடவுளாகிய சிவபெருமானது திருவருளினால் சிவகரணமாகிய தன்மையைப்போல, சிறிதும் நீர்வளமின்றி அக்கினிமயமாகிய கொடிய பாலைவனமானது எமது முருகக்கடவுள் எழுந்தருளுதலால், நறுமணங்கமழும் மலர்கள் நிறைந்த சோலையாய்க் குளிர்ச்சிபெற்றிருந்தது.—எ-று.

ஆன்மாக்களிடத்துச் சிவனருளடைந்தபோது பசுகரணங்கெட்டுச் சிவகரணமானவாறுபோல பாலைவனத்தில் முருகக்கடவுளடைதலால் அது வெம்மை நீங்கித் தண்மையை யடைந்ததென்க. (உஉ)

புறநெ றிக்கணே வீழ்ந்துளோர் சிவனருள் புகுங்கா
லறிவு மாற்றலுங் குறிகளும் வேறுபட் டனபோல்
வறிய செந்தழல் வெவ்வனம் வேலவன் வரலா
னறிய தண்மலர்ச் சோலையா யுவகைநல் கியதே.

(இ-ள்.) புறச்சமயங்களில் வீழ்ந்தலைகின்றவர்கள் சிவபெருமானது திருவருளுண்டாகியபொழுது தங்களது அறிவும்,வல்லமையும், செய்கையும் வேறுபட்ட தன்மையைப்போல, கொடிதாகிய செவ்விய நெருப்பினையுடைய பாலைவனமானது முருகக்கடவுள் எழுந்தருளிய காரணத்தால் நறுமணங்கமழுங் குளிர்ந்த மலர்ச்சோலையாய்க்களிப்பைத்தந்தது.—எ-று. (உங)

வேறு.

நீரறு முரம்பின் றன்மை நீங்குமச் சுரத்தின் றன்பா
லீரறு புயத்தன் செல்ல வெழில்கெழு பரங்குன் றத்திற்
பாரறு தவம்பூண் டுள்ள பராசரன் சிறார்க ளாய
வோரறு வகைமை யோரு மோதியா லதனைக் கண்டார்.

(இ-ள்.) நீர்ப்பசையற்ற பரலடுத்துயர்ந்த நிலத் தன்மையினின்று நீங்கியுள்ள அந்தப்பாலைவனத்தில் பன்னிரண்டு தோள்களையுடைய முருகக்கடவுளெழுந்

தருளியபொழுது, அழகுவிளங்குகின்ற திருப்பரங்குன்றத்தில் உலகத்தில்நிகரில்லாத தவத்தைச்செய்துகொண்டிருந்த பராசர புத்திரர்களாகிய ஆறுமுனிவர்களும் ஞான திருஷ்டியினால் அதனையறிந்தார்கள்.—எ-று. (உ௪)

தத்தனே யனந்த னந்தி சதுர்முகன் பரிதிப்பாணி
மெய்த்தவ மாலி யென்ன மேவுமூ விருவர் தாமு
மத்தன தருளை முன்னி யடுக்கலி னிருக்கை நீங்கி
யுத்தர நடவை யெய்தி யொய்யெனப் படர்த லுற்றார்.

(இ-ள்.) தத்தன், அனந்தன், நந்தி, சதுர்முகன், சக்கரபாணி, மெய்ம்மை யாகிய தவத்தினையுடைய மாலி என்று சொல்லப்பட்ட ஆறுமுனிவர்களும் சிவபெரு மானது திருவருளை நினைத்துத் திருப்பரங்குன்றத்தினின்று நீங்கி வடதிசை நோக்கி நடக்கத்தொடங்கி விரைவாகச் செல்லத்தொடங்கினார்கள்.—எ-று.

மெய்த்தவமாலி என்பதனை, மெய்ம்மையாகிய தவமாலி என ஒரு பெயரா கக் கொள்ளுதலுமாம். (உரு)

ஆர்வல ராகு மைந்த ரறுவரு மளகை நேடிப்
பார்வல்வர் தணையு மாபோற் பாலையென் றுரைக்கு மெல்லை
நேர்வரு கின்ற காலை நெடும்படை நீத்தஞ் சூழச்
சூர்வினை முடிப்பான் செல்லுந் தோன்றல்வந் தணிய னானான்.

(இ-ள்.) அன்பினையுடைய ஆறுமுனிவர்களும் தாய்ப்பறவையைத் தேடி அதன் குஞ்சுகள் வந்து அணையுந்தன்மைபோலப் பாலைவனத்திற்கு நேராக வரும் பொழுது, நெடிய சேனைவெள்ளங்கள் சூழும்படி சூரர்களது கொடுஞ் செய்கையை யொழிக்கும்பொருட்டு எழுந்தருளுகின்ற முருகக்கடவுள் வந்து சமீபித்தருளினார்.

அணிமையிற் சேயோ னன்ன வாறுமா முகமும் பன்னீ
ரிணைதவிர் புயமுங் கையு மேந்தெழிற் படையின் சீரு
மணியணி மார்புஞ் செங்கேழ் வான்றுகின் மருங்கும் பாதத்
துணையுமத் துணையிற் கண்டு தொழுதுகண் களிப்புக் கொண்டார்.

(இ-ள்.) முருகக்கடவுள் சமீபத்திற் சென்றவுடனே அவரது ஆறு திருமுக ங்களையும், ஒப்பற்ற பன்னிரண்டு திருத்தோள்களையும், திருக்கரங்களையும், அக்கரங்க ளிலேந்திய அழகிய ஆயுதங்களின் சிறப்பையும், இரத்தினாபரணங்களணிந்த திருமா ர்பையும், செந்நிறமமைந்த சிறந்த பீதாம்பரமணிந்த இடையினையும், இரண்டு திருவடி களையும் அப்பொழுது தரிசித்துக் கண்களிப்படைந்தார்கள்.—எ-று.

சேயோன் என்பதற்கு, தூரத்தில்வந்தவராகிய முருகக்கடவுள் எனப் பொ ருள்கூறலு மொன்று. (உஎ)

மூவிரு திறத்தி னோரு முற்றொருங் குணர்ந்த வள்ளல்
பூவடி வணங்கித் தேனீப் புதுநறு வருந்தி யார்த்து
மேவருந் தன்மைத் தென்ன வியப்பொடு வழுத்தி நின்று
தேவர்க டேவ வெம்பாற் றிருவருள் செய்தி யென்றார்.

(இ-ள்.) ஆறு முனிவர்களும் முற்றுணர்ச்சியினையுடைய முருகக்கடவுளது தாமரைமலர்போன்ற திருவடிகளை வணங்கி, தேனீயானது புதிய தேனை யுண்டு ரீங் காரஞ் செய்துகொண்டுவருந் தன்மையைப்போல அற்புதத்துடன் துதித்து நின்று தேவதேவராகிய எமதாண்டவரே! எங்களுக்குத் திருவருள் செய்தருள்வீராகவென்று பிரார்த்தித்தார்கள்.—எ-று. (உஅ)

என்றிவை யிருமூ வோரு மிசைத்துழி யுயிர்கட் கெல்லா
மொன்றிய வுயிரு மாகியுணர்வுமா யிருந்த மூர்த்தி

தன்றிரு மலர்த்தாள் முன்னர்த் தலையளி யோடு தாழ்ந்து
நின்றுகை தொழுதிட் டன்னோர் நிலைமையை மகவான் கூறும்.

(இ-ள்.) இவ்வாறு ஆறு முனிவர்களும் இவ்வார்த்தையை விண்ணப்பஞ் செய்து நிற்கவும், நிலைபெற்ற எல்லா வுயிர்களுக்கும் உயிரும் உணர்வுமாக வெழுந்தருளிய முருகக்கடவுளினது தாமரைமலர்போன்ற திருவடிகளின் முன்னே இந்திரன் பேரன்புடன் கைகூப்பி வணங்கிநின்று அம்முனிவர்களது வரலாற்றைக் கூறுவானாயினான்.—எ-று. (௨௯)

மறுவறு பராச ரன்றன் மதலைக ளாகு மின்னோர்
அறுவருஞ் சிறாரே யாகி யாடுறு செவ்வி தன்னில்
நிறைதரு சரவ ணத்து நெடுந்தடம் புனலிற் பாய்ந்து
முறைமுறை புக்கு மூழ்கி முகேரென வலைக்க லுற்றார்.

(இ-ள்.) இந்த ஆறு முனிவர்களும் குற்றமற்ற பராசரமுனிவரரது புதல்வர்களாம், இவர்கள் குழந்தைப்பருவமுள்ளவர்களாய் விளையாடுகின்றகாலத்தில் நீர் நிறைந்துள்ள பெரிய சரவணப்பொய்கையில் குதித்து வரிசையாக மூழ்கிமூழ்கி முகேரென்னும் பேரோசையுடன் நீரைக்கலக்கினார்கள்.—எ-று.

முகேர் என்பது, ஒலிக்குறிப்பு. (௩௦)

உலைத்தலை யுணர்ச்சி கொள்ள வுள்ளுயிர் திரியுமாபோல்
நிலைத்தலை யின்றி யார்க்கு நீந்தல்செய் குண்டு நீத்த
மலைத்தலை யடையு மெல்லை யாயிடை வதிந்த மீன்கள்
அலைத்தலை யிரிய வின்னோர் தன்மையங் கதனைக் கண்டார்.

(இ-ள்.) ஐம்புலன்கள் கெட்டவழியிற் செல்லும்பொழுது உடலினுள்ளிருக்கின்ற உயிரானது அலையுந்தன்மைபோல யாவர்க்கும் நிலைக்கக்கூடாததாய் இம்முனிவர்கள் நீந்துகின்ற ஆழமாகிய அச்சரவணப்பொய்கை இவர்களால் கலக்கப்பட்டிருந்தபொழுது, அப்பொய்கையில் சஞ்சரித்திருந்த மீன்கள் பலவிடங்களில் சிதற இம்முனி புத்திரர்கள் அத்தன்மையைப் பார்த்தார்கள்.—எ-று. (௩௧)

அங்கது தெரிந்து நின்றோ ராண்டுறு மீன்கள் பற்றித்
துங்கம துடைய கோட்டின் சூழலுய்த் துலவு மெல்லைச்
செங்கதி ருச்சி வேலைச் செய்கட னிரப்ப வுன்னிப்
பங்கமி லுன்மை பூண்ட பராசர னங்கல் வந்தான்.

(இ-ள்.) அவ்விடத்தில் அதனைப்பார்த்து நின்ற இவ்வறுவர்களும் அப்பொய்கையிலுள்ள மீன்களைப் பிடித்து உயர்ந்த கரையில்போட்டு விளையாடிக்கொண்டிருந்த சமயத்தில் சூரியன் உச்சியில் வரும்பொழுது செய்யவேண்டிய கடமைகளை நிறைவேற்றக்கருதிக் குற்றமற்ற தவவுறுதியைமேற்கொண்ட பராசரமுனிவரர் அவ்விடத்தில் வந்தனர்.—எ-று. (௩௨)

வள்ளுறை கொண்ட தெய்வ வான்சர வணத்து வந்தோன்
பிள்ளைக ளாகு மின்னோர் பிடித்தபுன் றொழிலை நோக்கித்
தள்ளருஞ் சினமேல் கொண்டு தனயர்கா ளீஙி நீண்டே
துள்ளுறு மீன மாகிச் சுலவுதி ரென்று சொற்றான்.

(இ-ள்.) வளவிய நீர் நிறைந்த சிறந்த தெய்வத்தன்மை பொருந்திய சரவணப்பொய்கையினிடத்து வந்த அப்பராசரமுனிவரர் தம்புதல்வர்களாகிய இவ்வறுவர்களும் மீனைப்பிடித்த அவ்விழிதொழிலைப் பார்த்துத் தடுத்தற்கரிய கோபங்கொண்டு,

புதல்வர்களே! நீங்கள் இவ்விடத்திலேயே துள்ளுகின்ற மீன்களாகி யலைந்துகொண் டிருங்களென்று சாபமிட்டனர்.—எ-று. (ருங)

அவ்வுரை யிறுக்கு முன்ன ரறுவரு மேனை ளாற்றும்
வெவ்வினை யூழின் பாலான் மீனுரு வாகி யஞ்சி
யெவ்வமி தகலு கின்ற தெப்பக லுரைத்தி யென்னச்
செவ்விதி னுணர்ந்து மேலைத் திருமுனி புகல லுற்றான்

(இ-ள்.) அவ்வாறு சாபங் கூறி முடிவதற்குமுன்னே ஆறு புதல்வர்களும் முன்னுளிற்செய்துள்ள தீவினைப்பயனால் மீனுருவமடைந்து பயந்து துன்பம்பொருந்திய இச்சாபம் எப்பொழுது நீங்குவது சொல்லுமென்று கேட்க, அப்பராசரமுனிவரர் நன்றாக ஆலோசித்துக் கூறத்தொடங்கினர்.—எ-று. (ருச)

இத்தடந் தன்னின் மேனு ளிரா றுதோ ளுடைய வண்ண
லத்தன தருளால் வைக வனையனை யெடுக்கு மம்மை
மெய்த்தன முருக்குந் தீம்பால் வெள்ளமா மதனை நீவிர்
துய்த்திடு மெல்லை தன்னிற் றொல்லுரு வாதி ரென்றான்.

(இ-ள்.) மேல்வருங்காலத்தில் இச்சரவணப்பொய்கையில் பன்னிரண்டு திருத்தோள்களையுடைய ஸ்ரீசண்முகக்கடவுள் சிவபெருமானது திருவருளினால் (குழந்தை வடிவாகத்)தங்கியிக்க, அக்கடவுளை யெடுக்கின்ற உமாதேவியாரது மெய்ம்மையாகிய ஸ்தனங்களினின்றுஞ் சிந்துகின்ற மதுரம்பொருந்திய பாலானது வெள்ளமாகப்பெருகும், அப்பாலை நீங்கள் உண்ணும்பொழுதில் பழைய உருவத்தையடைவீர்களென்று சாபவிமோசனங் கூறினர்.—எ-று. (ருரு)

என்றிவை முனிவன் கூறி யிரும்பகற் கடனை யாற்றிச்
சென்றன னதற்பின் மீனின் றிருவுரு வமைந்த வின்னோ
ரன்றுதொட் டளப்பில் கால மலமரு முணர்ச்சி யெய்தி
மன்றலஞ் சரவ ணத்து மாண்பெருந் தடாகத் துற்றார்.

(இ-ள்.) இவ்வார்த்தைகளைப் பராசரமுனிவர் கூறி உச்சிக்கடனை முடித்துச் சென்றனர்; அதன்பின்பு அழகிய மீனுருவத்தை யடைந்த இம்முனிவர்கள் அன்றுதொடங்கி அளவற்றகாலம் புத்திகலங்கி, மலர்மண நிறைந்த அழகிய மாட்சிமைபெற்ற பெரிய சரவணப்பொய்கையில் வசித்திருந்தார்கள்.—எ-று. (ருசு)

ஐயநீ யனைய பொய்கை யமர்தலு மவ்வை கண்டாங்
கொய்யென வெடுப்பக் கொங்கை யுகளநின் றிழிந்த தீம்பா
றுய்யதோர் தீர்த்த மாகித் துறுமலு மதனைத்துய்த்து
மையனீங் குற்றுத் தொல்லை வாலிய வடிவம் பெற்றார்.

(இ-ள்.) ஐயனே! தேவரீர் அச்சரவணப்பொய்கையி லெழுந்தருளியிருந்தபொழுது தாயாகிய உமாதேவியார் பார்த்து விரைந்தெடுத்த காலத்தில் (அவ்வம்மையாரது) இரண்டு ஸ்தனங்களினின்றும் ஒழுகிய மதுரம்பொருந்திய பாலானது பரிசுத்தமாகிய ஒரு தீர்த்தமாகிச் சென்று நெருங்கவும், இவர்கள் அப்பாலைக் குடித்து மயக்க நீங்கிப் பழைய நல்ல உருவத்தைப்பெற்றார்கள்.—எ-று. (ருஎ)

தொல்லுரு வடைந்த வின்னோர் தூமதி வேணி யண்ணா
னல்லரு ளதனால் வந்து நவையகல் பரங்குன் றத்தி
னெல்லையில் விரதம் பூண்டாங் கிருந்தன ரெந்தை யீண்டுச்
செல்லுவ துணர்ந்து போந்தா ரென்றனன் றேவர் செம்மல்.

(இ-ள்.) பழைய உருவத்தை யடைந்த இம்முனிவர்கள் தூய்மையாகிய சந்திரனையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமானது சிறந்த திருவருளினால் குற்றமற்ற திருப்பரங்குன்றத்திற்கு வந்து அளவற்ற விரதங்களை மேற்கொண்டு அவ்விடத்திலிருந்தார்கள்; எம்பெருமானே! தேவரீர் இங்கெழுந்தருளுவதை யுணர்ந்து (இப்பொழுது) வந்தார்கள் என்று தேவேந்திரன் கூறினான்.—எ-று. (௬௮)

தம்மக வுரைக்குங் கூற்றந் தாதையர் வினவு மாபோ
லெம்மக பதிசொற் கேளா வருள்செய்து பராச ரன்றன்
செம்மல்க டம்மை நோக்கிச் செயிரறு குணத்து நீவி
ரெம்மொடு செல்வி ரென்றான் யாவையு முணர்ந்த பெம்மான்.

(இ-ள்.) தமது புதல்வர்கள் சொல்லுகின்ற வசனத்தைத் தந்தையர்கள் கேட்குந் தன்மைபோல எல்லாவற்றையு முணர்ந்த முருகக்கடவுள் அவ்விந்திரன் கூறிய வார்த்தைகளைக்கேட்டுத் திருவருள் புரிந்து அப்பராசர புத்திரர்களைப்பார்த்துக் குற்றமற்ற குணத்தினையுடைய நீங்கள் எம்முடன் வாருங்களென்று கட்டளை யிட்டருளினார்.—எ-று. (௬௯)

பராசரன் மைந்த ரன்ன பான்மையை வினவிச் செவ்வேற்
கராசர ணடைந்தே மென்று கட்டுரைத் திறைஞ்சிச் செல்லச்
சராசரம் யாவுந் தந்த சண்முகன் றழல்கட் கெல்லா
மிராசதந் தன்மை யெய்து மிருஞ்சுரங் கடந்து போனான்.

(இ-ள்.) பராசரர் புதல்வர்களாகிய ஆறுமுனிவரும் அவ்வார்த்தையைக்கேட்டு,சிவந்தவேற்படையேந்திய திருக்கரத்தினையுடைய எம்பெருமானே! தேவரீரைச் சரணமாக வடைந்தோமென்று கூறி வணங்கிச் செல்ல, இயங்கியற் பொருளும் நிலையியற் பொருளுமாகிய வனைத்தையுந்தருளிய ஸ்ரீசண்முகப்பெருமான் அக்கினிகளுக்கெல்லாம் அரசத்தன்மை யடைந்துள்ள பெரிய பாலைவனத்தைக் கடந்து சென்றருளினார்.—எ-று. (௭௦)

சுரம்புகுபடலமுற்றிற்று.

திருவிருத்தம்-க,௭௬௫.

---

உ

முருகன்றுணை.

# திருச்செந்திப்படலம்.

---

சுரமது கடந்து நீங்கிச் சோதிவே லுடைய வள்ளல்
விரிபுனற் சடிலத் தண்ணன் மேவுசெங் குன்றூர் நோக்கிப்
பருமணி வயிர முத்தம் பலவளம் பிறவு மாழித்
திரையெறி யலைவா யாகுஞ் செந்திமா நகரம் புக்கான்.

(இ-ள்.) ஒளிபொருந்திய வேற்படையினை யேந்திய முருகக்கடவுள் பாலைவனத்தைக் கடந்து சென்று, பரந்த கங்கைநீரையணிந்த சடைமுடியையுடைய சிவபெருமான் வீற்றிருந்தருளுந் திருச்செங்குன்றூரைத் தரிசித்து, பருத்த மணிகளையும், வயிரங்களையும் முத்துக்களையும் பல வளங்களாகிய மற்றப்பொருள்களையுங் கடலலை

கன் வாரி மோதுகின்ற திருச்சீரலைவாயாகிய பெரிய திருச்செந்திப்பதியை யடைந்
தருளினர்.—எ-று. செந்திமாநகரம்-திருச்செந்தூர். (க)

அறுமுக னங்க ணேகி யகிலகம் மியனை நோக்கி
யிறையிலோர் சினக ரத்தை யியற்றுதி யீண்டை யென்னத்
திறனுணர் புனைவர் செம்மல் சிந்தையி னுடிக் தேவ
ருறைதிரு நகரம் வெஃக வொருதிருக் கோயில் செய்தான்.

(இ-ள்.) ஸ்ரீசண்முகப்பெருமான் திருச்செந்தூரை யடைந்து விசுவகன்ம
னைப்பார்த்து இவ்விடத்தில் விரைவாக ஒருஆலயத்தையுண்டாக்கக்கடவை யென்றரு
ளிச் செய்தனர்; அத்தன்மையை யுணர்ந்த விசுவகன்மன் மனத்தினால் நினைத்துத்
தேவர்கள் வசிக்கின்ற பொன்னுலகமும் விரும்பும் வண்ணம் ஒரு திருக்கோயிலை
யமைத்தனன்.—எ-று.

அகிலகம்மியன்-விசுவகன்மன். (உ)

பொன்னுறு மிரத நீங்கிப் புறனெலாந் தானை நண்ண
வந்நக ரதனு ளேகி யரும்பெருந் துணைவர் பூதர்
மன்னவ ரயன்மா லாதி வானவர் யாரும் போற்ற
மின்னுபொற் பீடத் தையன் வீற்றிருந் தருளி னானே.

(இ-ள்.) பொன்மயமாகிய இரதத்தினின்று மிறங்கிச் சேனைகளனைத்தும்
வெளியிலிருக்க, அவ்வாலயத்தினுள் ளெழுந்தருளி அருமையாகிய பெரியதம்பிமார்க
ளும், பூதகணத்தலைவர்களும், பிரமன் திருமால்முதலிய தேவர்களனைவருந்துதிக்கும்
படி விளங்குகின்ற பொற்பீடத்தில் எமது முருகக்கடவுள் வீற்றிருந்தருளினர்.

வேறு.

பாணிமிர் மென்குரற் பாற்படு நல்யாழ்
கானமி சைத்தனர் கந்தரு வர்தோ
ரானபல் சட்டுவ மங்கைதொ டேந்தி
வானமிர் தைச்செவி வாக்குறு மாபோல்.

(இ-ள்.) செம்மையாகிய பல அகப்பைகளைக் கைகளில் ஏந்தித் தேவாமிர்
தத்தைக் காதின்வழியே விட்டாற்போலக் கந்திருவர்கள் மிகுந்த வெண்ணிறத்தினை
யுடைய தந்திரிகள் பூட்டப்பட்டுள்ள சிறந்த யாழ்களில் பல கானங்களையமைத்துப்
பாடினார்கள்.—எ-று. (ச)

சுருதியெ லாமுணர் தூயவன் வானோர்
புரவலன் மாமுனி புங்கவர் யாரு
மருமலர் மாரி வழுத்தினர் வீசி
யிருபுடை தன்னினு மெய்தின ரீண்டி.

(இ-ள்.) சகல வேதங்களையுமுணர்ந்த பிரமன், தேவர்கள் தலைவனாகிய இந்
திரன், பெரிய முனிவர்கள், தேவர்கள் முதலிய யாவர்களும் இரண்டுபக்கங்களிலும்
நெருங்கிவந்து நறுமணங்கமழும் புஷ்பவருஷம்பொழிந்து துதித்தார்கள்.—எ-று.(ரு)

வாலிய தூயொளி வானதி யாவும்
பாலகன் மெய்யணி பார்த்தன ராடி
யேனுறு பாங்கரி னீண்டிய வாபோற்
காலினர் சாமரை கைக்கொ டசைத்தார்.

(இ-ள்.) வெண்ணிறத்தினையுடைய தூய்மையாகிய ஒளியமைந்த ஆகாய
கங்கைகளெல்லாம் முருகக்கடவுளினுடைய திருமேனியின் அழகைப் பார்த்தவர்களாகி

யமைந்த தருதியாகிய பக்கங்களில் நெருங்கி நிற்குந்தன்மையைப்போல வாயுக்கள் வெண்சாமரைகளைக் கையிற்கொண்டு விசிறினார்கள்.—எ-று. (௬)

ஒண்ணிழன் மாமதி யோரிரு வடிவா
யண்ணல் முகத்தெழி லார்ந்திட நண்ணி
விண்ணிடை நின்றென வெங்கனல் வருணன்
றண்ணிழல் வெண்குடை தாங்கினர் நின்றார்.

(இ-ள்.) ஒள்ளிய சாயையினையுடைய பெரிய சந்திரன் இரண்டுருவங் கொண்டு வந்து முருகக்கடவுளினது திருமுகத்தழகைப் பெறும்பொருட்டு ஆகாயத்தில் நின்றாற்போல அக்கினிதேவனும் வருணதேவனும் குளிர்ந்த நிழலைத் தருகின்ற வெண்குடைகளைப் பிடித்துக்கொண்டு நின்றார்கள்.—எ-று. (எ)

கட்டழல் கான்றிடு காமரு நாக
மெட்டுமல் லாதன யாவையு மீண்டி
யுட்டெளி வாற்பணி வுற்றென வால
வட்டம சைத்தனர் வானவர் பல்லோர்.

(இ-ள்.) கண்களில் தீப்பொறிகளைக் கக்குகின்ற அழகிய அஷ்டநாகங்களும், அவையல்லாத மற்றைய நாகங்களும் எல்லாம் ஒருங்குகூடித் தெளிந்த மனத்துடன் வணங்கினாற்போலப் பல தேவர்கள் ஆலவட்டங்களை வீசினார்கள்.—எ-று. (அ)

வானுயர் தோள்விறல் வாகெனு மண்ண
லூனுடை வாள்கொடு சார்ந்தய னிற்ப
வேனைய தம்பிய ரெண்ம ரிலக்க
ரானவர் போற்றி யகன்கடை நின்றார்.

(இ-ள்.) மிகவுமுயர்ந்த தோளினையுடைய வீரவாகுத்தேவர் தாம் உடைவாளைப்பிடித்து அருகில் அடைந்து நின்றுகொண்டிருக்க, மற்றைத்தம்பியர்களாகிய எட்டுவீரர்களும் இலக்கம் வீரர்களும் பெரியதலைவாயிலில் துதித்துக்கொண்டு நின்றார்கள்.—எ-று. (௯)

வேறு.

பொருந்தி யின்னவர் புறத்துற வங்க
ணிருந்த ஞானமுத லெல்லையில் காலம்
வருந்து கின்றமக வான்முக நோக்கித்
தெரிந்தி டாதவரி னின்னன செப்பும்.

(இ-ள்.) இவர்களனைவரும் புறத்தில் சூழும்படி அங்கெழுந்தருளியிருந்த ஞானமுதல்வராகிய முருகக்கடவுள் அநேககாலமாக வருந்துகின்ற இந்திரனது முகத்தைப் பார்த்தருளி ஒன்று மறியாதவரைப்போல இவ்வார்த்தைகளை யருளிச்செய்வாராயினார்.—எ-று. (௧0)

துறந்து நீதியமர் சூர்முத லானோர்
பிறந்த வாறுமவர் பேணிய நோன்பு
மிறந்த செய்யவர மெய்திய வாறுஞ்
சிறந்து பின்னரசு செய்திடு மாறும்.

(இ-ள்.) நீதிகடந்து கொடுங்கோல் செலுத்தி வாழ்கின்ற சூரபன்மன் முதலிய அசுரர்கள் பிறந்ததன்மையும், அவர்கள் விரும்பிச்செய்த தவமும், மிகுதியாகப் பெற்ற வரமும், சிறப்புற்றப்பின்பு அரசுசெய்த தன்மையும்.—எ-று.

இதுமுத லிரண்டுபாடலுங் குளகம். (௧௧)

மற்ற வெய்யவர்த மாயமு முற்கொள்
வெற்றி யும்வலியு மேன்மையு நம்பா
லிற்றை நாள்வரை யியற்றிய துன்பு
முற்று மொன்றற மொழிந்திடு கென்றான்.

(இ-ள்.) அக்கொடியவர்களது மாயமும், முன்னடைந்த வெற்றியும், வல்லமையும், மேன்மையும், அவர்கள் உங்களிடத்தில் இது வரையில் செய்த துன்பமுமாகிய எல்லாவற்றையும் விடாமல் சொல்லக்கடவை யென்று கூறியருளினார்.—எ-று.()

கோக்கு மாரனிவை கூற விசைந்தே
மீக்கொள் பொன்னுலக வேந்தய னின்ற
வாக்கின் வல்லகுர வன்றனை யன்பா
னோக்கி நீயிவை நுவன்றருள் கென்றான்.

(இ-ள்.) முதல்வராகிய முருகக்கடவுள் இவ்வாறு அருளிச் செய்தவுடனே, அதற் கிசைந்து ஏற்றுக்கொண்ட விண்ணுலகத் தலைவனாகிய இந்திரன் தன்னருகில் நின்ற வாக்கில் வல்ல தனது ஆசிரியராகிய பிரகஸ்பதிபகவானை அன்புடன் பார்த்து நீர் இதனை உரைத்தருள்வீராக வென்று கூறினான்.—எ-று.

மீக்கொள் பொன்னுலகவேந்து என்பதற்கு,மேலிடத்திற் பொருந்திய பொன்னுலகத் தலைவனாகிய இந்திரன் எனப் பொருள் கூறினுமாம். (கங)

வச்சி ரங்கொள்கரன் மற்றது செப்ப
வச்செ னக்குரவ னன்ன திசைந்தே
செச்சை மொய்ம்புடைய சேயிரு பொற்றா
ளுச்சி கொண்டுதொழு தின்ன துரைப்பான்.

(இ-ள்.) வச்சிராயுதத்தை யேந்திய கையினையுடைய இந்திரன் அவ்வாறு கூறியவுடனே வியாழபகவான் விரைவாக அதற்கிசைந்து வெட்சிமாலையை யணிந்த தோளினையுடைய முருகக்கடவுளது பொன்மயமாகிய இரண்டு திருவடிகளையுஞ் சிரமேற்கொண்டு வணங்கி இவ்வார்த்தையைக் கூறுவாராயினார்.—எ-று. (கச)

அறிதி யெப்பொருளு மாவிக டோறுஞ்
செறிதி யெங்கடுயர் சிந்துதன் முன்னிக்
குறிய சேயுருவு கொண்டனை யார்க்கு
மிறைவ நின்செயலை யாருணர் கிற்பார்.

(இ-ள்.) எவர்களுக்கும் முதல்வராகிய எந்த பெருமானே! தேவரீர் எல்லாப்பொருள்களையும் அறிவீர், உயிர்கள்தோறும் (அவ்வுயிர்க்குயிராய்) நிறைந்திருப்பீர், எங்களது துன்பத்தை நீக்குதற்கு நினைத்துச் சிறிய குழந்தையுருவத்தைக் கொண்டருளினீர், தேவரீரது திருவருட் செயலை யாவர் உணரவல்லவர்கள்.—எ-று.(கரு)

எல்லை யில்புவனம் யாவையும் யாண்டு
மொல்லு மூவரு முயிர்த்தொகை யாவுந்
தொல்லை மேனிகொடு தோன்றினை யானீ
வல்ல மாயவியன் மற்றெவர் தேர்வார்.

(இ-ள்.) தேவரீர் அளவற்ற புவனங்களும், மற்றவைகளும், எவ்விடத்தும் பொருந்தியுள்ள திரிமூர்த்திகளும், உயிர்க்கூட்டங்க ளனைத்தும் தாமேயாகவுள்ள பழைமையாகிய திருவுருவத்தைக்கொண் டெழுந்தருளினீர். தேவரீரது வல்லமையாகிய மாயாவிலக்கணத்தை வேறே யாவரறியத்தக்கவர்கள்.—எ-று. (கசு)

வெய்யர் தம்மையாய் வினவிய தன்மை
யைய வன்னதை யறிந்திட வன்றே.
கைய ரேந்துயர் களைந்துள மீதிற்
செய்ய வின்புதவு சீரரு ளாமால்.

(இ-ள்.) எமது ஆண்டவரே! அசுரர்களது தன்மைகளைத் தேவரீர் வினவியருளியது அதனைத் தெரிந்துகொள்ளும் பொருட்டன்று, வஞ்சகர்களாகிய எங்களுடைய துன்பத்தை யொழித்து மனத்தில் சிறந்த இன்பத்தைத் தருகின்ற நல்ல திருவருளேயாகும்.—எ-று. (கஎ)

ஆகையா லவுணர் தன்மைக ளெல்லாம்
போகு மெல்லைபுகல் கின்றன னென்னு
வாகை சேர்குமர வள்ளலை நோக்கி
யோகை யோடரச னோதிடு கின்றான்.

(இ-ள்.) ஆதலால், அவ்வசுரர்களது வரலாறுகளனைத்தையும் அடியேனுக்குத் தெரிந்தவரையில் கூறுகின்றேனென்று வெற்றிபொருந்திய அருள்வள்ளலாகிய முருகக்கடவுளைப்பார்த்து மிகுந்த சந்தோஷத்துடன் வியாழபகவான் சொல்லத்தொடங்கினர்.—எ-று. (கஅ)

திருச்செந்திப்படல முற்றிற்று.

ஆ திருவிருத்தம் - க,எஅரு.

---

உற்பத்திகாண்ட முற்றுப்பெற்றது.

---

கச்சியப்பசிவாசாரியர் திருவடிவாழ்க.

